# நைடதம் மூலமும் உரையும்.

## பொருளடக்கம்.

நைடதநூலாசிரியராகிய

# அதிவீரராம பாண்டியன் வரலாறு.

ஐந்தாம் வேதமாகிய மஹாபாரத இதிஹாஸத்தில் பாண்டவர் மனத்துயரை யகற்றற் பொருட்டு வியாஸ முனிவரால் பிரஸ்தாபிக்கப்பட்ட நளமஹாராஜன் சரித்திரத்தைப் பரதகண்ட முழுதுமறியும். கோவலன் கதையைக் கேட்டறிந்தார் சிலப்பதிகாரங் கற்றாராவரோ? நளன் கதையை வேறு வழிகளாற் கேட்டுணர்ந்தவரையும் நைடதவாயிலா னறிந்தவரையும் ஒரு நிலையின ரென்னலாமோ? நைடதம் புலவர்க் கௌடதம். ஔடதம் உடற்குறுதி பயத்தல் போல, நைடதம் உளத்துக் குறுதிபயக்கும்.

நைடதந் தோன்று முன்னமே நளவெண்பா புகழேந்தியா லாக்கப்பட்டிருந்தது. நளவெண்பாவின் சிறப்பை யெடுத்து இவ்விடத்துப் பிரஸங்கித்தல் அநாவசியமாகலின், "வெண்பாவிற் புகழேந்தி" யென்று புகழப்பட்ட புலவர் சிகாமணி செய்தநூல் அது என்று சொல்லுதலே அமையும்.

நைடதத்திற்கு முதனூல் வடமொழி நைஷத மென்கின்றனர். தமிழ் நைடத ஆசிரியர் வடமொழி நைஷதத்தை வாசித்தறிந்திருப்பரென்று சொல்லக்கூடுமே யன்றி இஃது அதன் மொழிபெயர்ப்பென்று சொல்ல இயலவில்லை. வடமொழி நைஷதம் இருபத்திரண்டு ஸர்க்கங்கள் கொண்டது. ஸ்ரீஹர்ஷகவி நளனை மணஞ் செய்துவைத்துக் கதையை முடித்துவிடுகின்றார். ஸ்வயம்வரத்திற்கு வந்து மீண்டு திரும்பும் தேவர்களைக் கலி வழியிற் கண்டானென்பதைத் தவிர வேறு கலி பிரஸ்தாபம் நைஷதீயசரிதத்திலில்லை. பெரும்பான்மையும் சிருங்கார மலிந்த முற்பாகத்தையே ஸ்ரீ ஹர்ஷகவி விஸ்தரித்துப் பாடினர். இந்நூலினை ஆந்திரகவி யொருவர் ஸ்ரீநாத ரென்னும் பெயரினர் சிருங்காரநைஷதமு என ஆந்திரத்தில் மொழிபெயர்த்தனர். ஆயின், வடமொழியில்

நளசரித முழுதுங் கூறும் நூலில்லையோ வெனின், உண்டு. அது நளோதய மெனப் பெயர் பெறும். மஹாபாரதமும் நள சரித்திரமுழுதுங் கூறும். பிரபலப்படாத நூல்கள் எத்தனை யோ உள?

நைடத ஆசிரியரும் தாம் செய்த ஏனை நூல்களில் விஸ் தரிப்பதுபோலத் தமக்கு முதனூல் இதுவென்று காட்டினா ரல்லர். கடவுள் வணக்கம் சொல்லியவுடனே நூலைத்தொ டங்கிவிட்டார். சிறப்புப்பாயிரம் வேறொருவர் எழுதி நூலைழு த்தது தானே. அதுவும் நிடதர்கோன் சரிதத்தைத் தமிழாற் செய்தான் என்ற மட்டிலுரைத்து நின்றது. ஆதலால், நைட தத்துக்கு முதனூலென யாதொன்றையுங் குறிப்பிட்டுக் கூறமுடியாது. பாரதம் நளவெண்பா நைஷதீயசரிதம் நளோ தயம் முதல் நூல்கள், கேள்வி, கவித்திறன் எல்லாங்கூடி நைடதந் தோன்றிற்று என்றமைவு அமைவுடைத்து.

* நளமகாராஜனால் ஆளப்பட்ட நாடு நிஷததேசமெனப் பெயர் பெறும். அளகநந்தை யென்னும் நதிக்கரையிலுள்ள அளகை அவன் ராஜதானியாயிருந்த தென்பர். அந்நாடு வட இந்தியாவில் தற்காலத்துக் குமயோன் என்று சொல்லப் படும் பாகத்துட்பட்டிருந்தது போலும். வர்ஷமலைகளி லொன்றும் நிஷதமென்னும் பெயர் பெறும்.

வடமொழியில் நைஷதீயத்தைப் போலவே தமிழிலும் நைடதம் நன்கு மதிக்கப்பட்டுளது. நைஷதீயத்திற்கு மஹா காவ்ய லக்ஷணங்கள் அமைந்திருத்தலின், அதனை மகா காவ் யங்களோடு சேர்த்துச் சொல்வர். தமிழ் நைடதமும் பெ ருங்காப்பியமென்றே போற்றப்படுகின்றது. ஸம்ஸ்க்ருத வித் வான்கள் நைஷதீயத்தின் மஹிமையை “நைஷதம் வித்வ தௌஷதம்” என்னும வசனத்தாற் குறித்தனர். தமிழ்ப்புல வரும் அதனை மொழிபெயர்த்து “நைடதம் புலவர்க்கௌட தம்” என்றனர்.

இத்துணை பெருமைத்தாகிய நூலைச்செய்து தமிழ்க் குவழங்கிய வள்ளல் யாவனென்று அறியவிரும்புவோர், “வல

*, Apte : Sanskrit-English Dictionary.

னுயர்த்த வண்ணலஞ்சேல் வான்றொடுபொற் கோட்டிமய வரையிற் றீட்டி, யலர்தலைமா நிலம்புரக்கு மதிவீர ராமனிக லரச ரேறே" என்னும் சிறப்புப்பாயிரத்தால் அதிவீரராம னென்னும் பெயரிய ஒரு மன்னவன் என்றறியக் கடவர்.

அதற்குமேல் இவன் எந்நாட்டை யாண்டவன் முதலிய வினாக்கட்கு இந்நூலில் விடையில்லை. இவனாலேயே செய்யப்பட்டதென்று சொல்லப்படும் நறுந்தொகையுள், "வெற்றிவேற்கை வீரராமன்-கொற்கையாளி குலசேகரன்புகல்-நற்றமிழ்தெரிந்த நறுந்தொகைதன்னாற் - குற்றங்களைவோர் குறைவிலாதவரே" என்று வருஞ் செய்யுளால் அவன் ஒரு பாண்டியனென எண்ண இடமுண்டு: கூர்மபுராணத்துப் பாயிரத்துள், "அடுசினக் களிற்று மானவேல் வழுதி யடலதி வீரபூ பதியே" என்றதும், காசிகண்டப் பாயிரத்துள் "அவனிபுரந் தருள்வழுதி யதிவீர ராமனிக லரச ரேறே" என்றதும் இவன் பாண்டியனே என்பதைத் தெளிவாக்குகின்றன. மற்று,

"எதிர்மலைந் தேற்ற வெஞ்சமத் தரச ரிடுதிறை கடையறாந் தறியா, மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கும் மானவேல் வழுதியர் பெருமா, னதிர் பொலங் கழற்கா லடலதி வீர னிறைபத் தெரிந்து நன் கிசைத்த, முதுதமிழ்க் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர் முத்தி வீட் டினிது வீற் றிருப்பார்"

என்னும் கூர்மபுராணக் கடைசிச் செய்யுள் அதிசயோக்தியின் பாலதாயினும் அதிவீரராமபாண்டியனை அதிவீரனென்றும் வழங்குவதுண்டென்று காட்டுகின்றது. வெற்றிவேற்கையில் வீரராம னெனப்பட்டான்.

இனிப் பன்னூற்றிரட்டு நூல்விவரணத்துள், "அதிவீரராமபாண்டியர் பாண்டியநாட்டில் தென்காசியில் செங்கோல் செலுத்திய சந்திர வம்சத்துச் சிற்றரசர்களில் ஒருவர் (இவரது சகோதரர் வரதுங்கராம பாண்டியர்)" என்றுரைக்கப் பட்டது. அது பொருத்த முடைத்தே. அதிவீரராம பாண்டியன் தென்காசியிலிருந்தவ னென்பதற்கு அவ்வூரிலும் அவ்வூர்க்கருகிலுள்ள திருக்குற்றாலத்தும் காணப்படும்

சிலாசாஸனங்களே சான்றுபகரும்.* தென்காசியில் காணப்படும் சிலா சாஸனம் அதிவீரராம பாண்டியன் அரசுரிமையைக் கைக்கொண்டது சாலிவாகன சகம் 1485 என்னும். சாஸனத்தில் பெயர் ஜடிலவர்மன் ஸ்ரீவல்லப அதிவீரராமன் எனப் பொறிக்கப்பட்டது. திரிபுவனச் சக்ரவர்த்தியென்று சேர்த்திருப்பதுமுண்டு. † கரிவலம்வந்தநல்லூரில் வரதுங்கராம பாண்டியன் பெயராற் காணப்படும் சாஸனம் சாலிவாகனசகம் 1500 என்னும் ஆண்டைக் காட்டுதலின், இருவரசர் காலமும் கிறிஸ்தாப்தம் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதி யென்று சொல்லவேண்டி யிருக்கின்றது. அதிவீரராமன் வெற்றிவேற்கையில் கொற்கையாளி எனப்பட்டானாயினும் மற்றை நூல்களில் வழுதியெனச் சிறப்பித்துக்கூறப் பட்டானாயினும் அவன்சிற்றரசனே. ‡ விஜயநகரத்தரசனுக்காக நாயக்கர் மதுரையைக் கைப்பற்றியது கி. பி. 1559 என்று தெரிதலின், அதற்குப்பின் அரசுரிமையைக் கைக்கொண்ட அதிவீரராமன் மதுரையிலிருந்து அரசுபுரிந்தானென்கை எங்ஙனம்பொருந்தும்? இன்னும், ¶ திருநெல்வேலிக்குக் கிழக்கில் எட்டு மைல் தூரத்திலுள்ள கிருஷ்ணபுரம் என்னும் ஊரிலுள்ள விஷ்ணு ஆலயத்தில் மணிகோபுரத்தின் மேலுள்ள சாஸனமொன்று மதுரைக் கிருஷ்ணப்பன் அல்லது பெரிய வீரப்பநாயக்கன் சாலிவாகனசகம் 1500-ல் பூமிதானம் கொடுத்ததாகச் செப்புகின்றது. அவ்வூரே மதுரையில் கி. பி. 1563 முதல் கி.பி. 1573 வரை ஆண்ட குமார கிருஷ்ணப்பன் ஆக்கியதென்பர் செல்லன்துரை. இதனாலெல்லாம் அதிவீரராம பாண்டியன் காலத்துப் பாண்டியர்கள் ஜமீன்தாரர்கள் அந்தஸ்துக்கு இறங்கிவிட்டார்களென்று விளங்கவில்லையா? அவ்வந்தஸ்திலிருந்தானாயினும் அதிவீரராமவழுதி தமிழ் மொழியை வளர்த்தலிலும் தமிழறிந்தோ

* Epigraphia Indica Vol VII Page 17.

† Sewell's Lists of Antiquities-I : Page 306.

‡ Sewell's Lists of Antiquities-II: Page 200.

¶ Do I: Page 310.

ரைப் போற்றலினும் மிக்க ஊக்கங்காட்டினு னென்பதிற் றடையில்லை. இதுவரை நம்மவர்க்கெட்டிய சிலாசாஸனங் களை வைத்து நோக்கின், அதிவீரராம பாண்டியனோடு பாண் டியவம்சம் முடிந்துபோகின்றதெனச் சொல்லவேண்டியிருக் கின்றது. அவன் பாண்டிய வம்சத்தவன் தானோ என ஆசங் கிப்பவரும் உண்டு. அவ்விஷயத்துட்புக வென்றால் தக்க ஆதாரங்கள் இன்னும் ஏற்படவில்லை. அதிவீரராம பாண்டி யன் காலத்துத் தமிழ்ப்புலவர் யாவரிருந்தனர் என்று சொ ல்லவும் இன்னுங்கூடவில்லை. இவ்வரசன் சகோதரனாகிய வர துங்கராம பாண்டியன் தமிழ்ப்புலவனென்பது அவன் செ ய்த பிரமோத்தரகண்டத்தா லறியக்கிடக்கின்றது. * அந் நூலை மதுரையிற்றான் அரங்கேற்றினன்போலும். இவ்வரசர் காலமாகிய பதினாறும் நூற்றாண்டிலேயே திருவிளையாடற் புராணஞ் செய்த பரஞ்சோதி முனிவரும், சேதுபுராணம் முதலிய புராணங்களைச் செய்ததுமன்றிச் சிவஞான சித் தியார்க்கு உரையும் வகுத்த நிரம்ப வழகிய தேசிகரும் திகழ்ந்தனரென்று சொல்வர். இவர்களெல்லாம் ஏக காலத் தவ ரென்றுரைத்தற்கும் தக்க ஆதாரம் கிடைக்கவில்லை. † கால்ட்வெல்துரை, அதிவீரராம பாண்டியனால் ஏவப் பட்டுப் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம்பாடி னாரென்றுசொல்வர் என்றனர். நூலகத்து, "இங்குறைந்திடும் பெரியோர் கூற" என்னைப்பட்டது. இது போதிய ஆதார மன்று. அதிவீரராம பாண்டியனுக்குக் குருவாயிருந்தவர் சுவாமி தேவரென்னும் பெயரினர், இது அம்மன்னவன் "சூழ்சுடர் ஞானத் திருவுருவமைந்த சுவாமி தேவன்பதம் பணிவாம்" எனக் கூர்மபுராணத்தும், "அருட்கடைக்க ணளி த்தாண்ட சுவாமிதேவன் றிருத்தா ளகத்துள் வைப்பாம்" எனக் காசிகண்டத்தும் கூறுதலானே தெளியப்படும். வரது ங்கராம பாண்டியனுக்குக் குருவாயிருந்தவர் வேப்பத்தூர் ஈசானதேசிகர் என்பது அவன், "நிம்பை, யீசான மாமுனிவ னிணையடியை யிறைஞ்சுவாம்" எனப் பிரமோத்தர கண்டத்

* சிறப்புப்பாயிரம். † History of Tinnevelly: Page 27.

துக் கூறுதலா னுணரப்படும். சுவாமி தேவரைக் குருவாக் கொண்டிருந்த மன்னவன் வேறொருவ னிருந்தன னென்பது வாயுசங்கிதையால் விளங்குகின்றது. "தன்னருள் பூத் தாண்டு கொண்ட சுவாமிதேவன் றிருத்தாடலை மேற்கொள் வாம்" என்பது வாயுசங்கிதை குருவணக்கச் செய்யுளின் ஈற்றடி. இவ்வொற்றுமை கொண்டு வாயு சங்கிதையும் அதி வீரராம பாண்டியனாற் செய்யப்பட்டதென்று சொல்லத்து ணிவர் சிலர். ஆயினும் அந்நூற் சிறப்புப்பாயிரம், "பரிதி வாட்டடக்கைப் பாண்டிய குலசேகரனணி பனிமலர்ப் பசுந் தார், வரகுணராமன் புவியெலா மிழற்றுமாலை வெண்கவிகை மீனவனே" என்று கூறி நூலாசிரியன் பெயர் வரகுணராம பாண்டியன் என்று உறுதிப்படுத்தலினால், அவர் துணிவு பல ஞ்செய்யாது. அதிவீரராமன் வரதுங்கராமன் என்பவரைப் போலவே அவ்விருவரோடும் நெருக்கமுடைய மன்னவ னொருவன் வரகுணராமனென விளங்கி யிருந்தானென்று ரைத்தலே பொருந்தும். இம்மூவரும் ஏககாலத்தினரென்று ரைக்கினுந் தவறில்லை. இவ்வரகுணராமனையும் ஒன்பதாம் நூற்றாண்டிற் றிகழ்ந்த வரகுண பாண்டியனையும் ஒருவ ரென எண்ணார் அறிந்தார். மாணிக்கவாசக சுவாமிகளால் திருக்கோவையாரிற் புகழப்பட்ட வரகுணபாண்டியன் அம் மாணிக்கவாசக சுவாமிகளையே சைவாசாரியரி லொருவராக் வைத்துத் தன் வாயுசங்கிதையில் துதித்தா னென்னை நகை யினை விளைக்கும்.

இத்துணையும் நாம் பார்த்தமட்டில் அதிவீரராமபாண்டி யன் நறுந்தொகை நைடதம் கூர்மபுராணம் காசிகண்டம் என்னும் நான்கு நூல்களையு மியற்றியவனென்று கண் டோம்.

கரிவலம் வந்த நல்லூர் என்னும் மறுபெயருடைய கரு வைப்பதிப் பால்வண்ண நாதர் மீது கருவை வெண்பா வந் தாதி கருவைக் கலித்துறை யந்தாதி கருவைப்பதிற்றுப் பத் தந்தாதி யென மூன்றந்தாதிகள் செய்யப்பட்டுத் தமிழ்ச் சை வரால் போற்றப்பட்டு வருகின்றன. இம்மூன்றனுள் பதிற்

றுப் பதிற்றந்தாதி பத்திச் சுவை மலிந்திருக்கும் காரணத்தால் அதனைக் குட்டித்திருவாசக மெனவும் வழங்குவர். இவ்வந் தாதிகளை யாக்கியோர் அதிவீரராமபாண்டியனென வடதமிழ் நாடெல்லாம் பகரத் திருநெல்வேலியிலுள்ள புலவரிற்பலரும் கருவைப் பதியிலுள்ளாரும் அது தவறு அவை வரதுங்க ராமபாண்டியன் செய்தன என்றறைவர். அச்சிறு நூல்களுள் நூலாசிரியன் பெயர் முதலியவற்றைப்பற்றி யொன்றுங்காண ப்படவில்லை யாகலின், இன்னான்தான் ஆசிரியன் எனத்துணி ந்துரைக்கக் கூடவில்லை.

இனித் தமிழ்நூல் விளக்க மெழுதப்புகுந்த பண்டிதர்க ளும் வேறு சிலரும் அதிவீரராமன் தலையில் இலிங்கபுராண த்தை யேற்றுவித்தனர். அது அம்மன்னவர் பெருமான் செய் தபிழை யன்று. இலிங்கபுராணத்தைச் செய்தார் குலசேகர பாண்டியரென நூன்முகப்பிற் றெளிவாகக் காட்டப்பட்டு ளது. "நீண்டநீராழி நெடுநில வளாக நிழற்றுதண் ணிழன் மதிக் கவிகைப், பாண்டிய! குலசேகரனிகல் கடந்த பரிதி வேற் றடக்கை மீனவனே" என்பது சிறப்புப்பாயிரம். "கொற்கையாளி குலசேகரன்புகல்" என்ற வாக்கியத்தையும் இச்சிறப்புப் பாயிரத்துக் குலசேகரனென்பதையும் பொரு த்தி நோக்குவதைவிட இலிங்கபுராணத்தை அதிவீரராமன் மேலேற்றுவதற்கு வேறு வழிகாணேம். குலசேகர பாண்டி யன் என்னும் பெயராற் கணக்கில்லாத பாண்டிய ரிருந்திருக் கின்றனர். ஆகலின் இந்நூலும் அதிவீர ராமனே செய்தான் என்றுரைத்தல் அநாவசியகம். அதிவீரராமனைத் தவிரப் பாண்டியருள் வேறு புலவர் இருந்தாரென்றல் பாபமா? இலிங்கபுராணஞ்செய்த குலசேகரபாண்டியர் அகோர சிவா சாரியரை வணங்குகின்றனர். அகோர சிவாசாரிய பத்ததி யென வழங்கும் நூலைச்செய்த தேசிகர் குலசேகர பாண்டி யனுக்கு குருவாயிருந்தார் போலும்.

கோக்கோக மென்னும் காமநூலைச் செய்தார் யாவரெ ன்பதும் நிச்சயித்துரைக்கத் தக்கதாயில்லை. மழவை மகாலிங் கையர் காலத்துப் பதிப்பிக்கப்பட்ட நூல் மதனநூல் என்

னும் பெயரோடு வெளியாயிருக்கின்றது. சிறப்புப்பாயிரம் செய்த மகாலிங்கையர் 'அதிவீரராம - வழுதியென்பவன் வளர்திர விடத்தின்-மொழிபெயர்த்தனன்' என்றனர். கொக்கோக மென்னும் பெயரோடேயே வெளிவந்த சுவடியிற் காணப்படும் சாற்றுக்கவிகள் அந்நூல் செய்தான் வரதுங்க ராமபாண்டியனென்னும். அந்நூல் பதிப்பிக்கும் காலத்துச்சாற்றுக்கவி தந்தாரை விட்டொழிப்போமாயினும், 'பூர்வீகம்' எனக்குறிக்கப்பட்ட கவி, "அதனைத் தமிழாற் புகன்றுன் புகழ்வழுதி, மதிவெண்குடையோன் வரதுங்க ராமனென்னு மன்னவனே" என முடிகின்றது. இவ்விரண்டு பேதப்பட்ட அபிப்பிராயங்களை வைத்துக்கொண்டு நாம் எவ்வாறு துணிவது? அதிவீரராம பாண்டியன் விடனுயிருந்தனனென்றும் வரதுங்கராமன் சிவபக்தி மிகுந்த சாதுவென்றும் ஐதிகங்கூறுதலின், அந்நூலாசிரியன் அதிவீரராமனென்றே சொல்லலாமென்று தோன்றுகிறது.

இனி அதிவீரராம பாண்டியனைப்பற்றி வழங்கும் ஐதிகங்கள் சிலவுண்டு. இவ்வரசன் காமகலா ஞானம் நிரம்பப் பெற்றவனாகலின், தன்குலத்துப் பெண்களுள் சிரமப்பட்டுத் தேடியும் ஸாமுத்ரிக லக்ஷணம் சரிவர அமையப்பெற்ற பெண்ணொருத்தி அகப்படாது வருந்திக் கடைசியில் இழிகுலப் பெண்ணொருத்தி இலக்கணங்களனைத்தும் அமைந்தவளை மணந்தனனென்பர். அவள் அழகானும் கல்வியானும் சிறந்தவளாகலின், அதிவீர ராமபாண்டியன் அவளிடத்து அன்பு மிகுதியுடையனாய் இற்போகங்களை யெய்தி வந்தான்.

சிருங்கார ரஸ மவ்வளவு மோரிடத்தமைந்த தென்னத்தக்க நைடத நூலை யியற்றுங்கால் தனக்கே அந்நூலிடத்துப் பிரியம் மீதூரலின், அதனைத் தன் தாய்மாட்டோ சகோதரனிடத்தோ காட்டினனென்பர். காட்டுதலும், இவன் அறிவு இவ்வாறு அவலமாய்ப் போகிறதே யென அவர் இரங்கினதாகவும் அது முதல் நம்மன்னவனுக்கு நூலிடத்து அசிரத்தை வந்துவிட்டது என்றுஞ் சொல்வர். மன்மதோபாலம்பனப்படலம் வரை தன் சாதுரிய மனைத்துங்காட்டிப்

பாடிய கவி பின்னர் சிரத்தை விட்டாளுகலினன்றே அந்நூல் சென்று தேய்ந்துறுதற் குற்றத்திற்கிலக்காயிற் றென்றும் பகர்வர். நைடதத்தை யரங்கேற்றக்கேட்ட புலவர் 'இது கரும்புபோன்றது' என்றனரென்று கூறுப. தென்னாட்டில் 'இது வேட்டைநாயின் வேகம்போன்றது' என்றனரென்று சொல்லுகின்றனர். வேட்டைக்கு நாய் மிக்க வேகத்தோடு புறப்பட்டுப் பின்னர் அவ்வேகங் குறைந்து வருமாகலின் அவ்வாறு உவமித்தனராம். நூலகத்து அவையடக்கம் கூறவில்லையென்று குறை கூறினார்க்கு,'யாம் வேந்தாகலின் கூறுதலமையுடைத்தன்று' என்று அதிவீரராமன் விடைபகர்ந்ததாகவும் ஒரு ஐதிகமுண்டு.

கருவையந்தாதிகளை அதிவீரராமபாண்டியனியற்றியனவென்று கொள்வோர், சிற்றின்பத்து ஆழ்ந்துவருந்திய மன்னவன் உணர்வுபெற்றுக் கருவைப்பதி யடைந்து பால்வண்ணரை வணங்கி மூன்றந்தாதிகளையும் பாடிக் கிருதார்த்தனாயினனென்ப. ஒரு தாசியால் அவ்வுணர்வு பெற்றானென்பாருமுண்டு.

அதிவீரராம பாண்டியனைவிட அவன் மனைவி யுயர்ந்த பக்குவத்தி லிருந்தனளென்றும், இவன்

> "அஞ்சலென்ற கரதலமுங் கணபணகங் கணமு
> மரைக் கிசைந்த புலியுடையு மம்புலிச் செஞ்சடையுங்
> கஞ்சமலர்ச் சேவடியுங் கனைகழலுஞ் சிலம்புங்
> கருணைபொழி திருமுகமுங் கண்களொரு மூன்று
> நஞ்சையுண்ட மணிமிடறு முந்நூலு மார்பு
> நலந்திகழ்வெண் ணீற்றொளியு மறிமானு மழுவும்
> பஞ்சடிச்சிற் றிடையுமையா ளொப்பனை பாகமுமாய்ப்
> பால்வண்ண னுளத்திருக்கப் பயமுண்டோ வெமக்கே."

எனச் சகுணமூர்த்தத்தைக் குறித்தலும், அவள்

> "ஆக்கையெனும் புழுக்குரம்பை யனைத்துந் தனையாப்பொருளை
> யருளொளியைப் பராபரத்துக் கப்புறமா மறிவை;
> நீக்கமற வுயிர்முனைக்கு மிடமறவெங் கெங்கு
> நிறைந்து நின்ற முழுமுதலை நினைவிலெழுஞ் சுடரைப்

பாக்கியங்கள் செய்தனந்தந் தவக்குறைகள் முடிக்கும்
பழவடியார் தமக்குதவும் பசுந்துணர்க் கற்பகத்தை
வாக்குமன விகற்பத்தா லளவுபடா வொன்றை
மாசற்ற வெறுவெளியை மனவெளியி லடைப்பாம்."

என நிர்க்குண ஸ்வரூபத்தைச் சுட்டின வதனால் இவ்வுண்மை புலப்படுகின்றதென்றும் சொல்வர்.

"குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டிய னீங்கில்லை" என்று குறிக்கப்பட்ட பிள்ளைப்பாண்டியன் அதிவீரராம பாண்டியனை யென்பர் சிலர். முற்காலத்துப் பெருமன்னவர் வகுப்பிற்சேராது பிற்காலத்துச் சிற்றரசரினத்துட் பட்டானுகையின் பிள்ளைப் பாண்டியனைப் பொருளும் உரைப்பர். அக்கூற்றிற்கு வேறுதாரமில்லை.

"பாண்டியிலிருவர் ஆண்டியிலிருவர்" என்ற வசனத்தால் நம் புலவர்கள் முறையே அதிவீரராம வரதுங்கராம பாண்டியர்களையும் விசாகப்பெருமாளையர் சரவணப்பெருமாளையரவர்களையும் குறித்தாரென்று சொல்வர். பாண்டியரிருவரும் சகோதரராயும் பண்டிதராயு மிருந்தமையும், வீரசைவப்புலவரிருவரும் சகோதரராயும் பிரபல வித்துவான்களாயுமிருந்தமையும் இவ்வசனம் பிறத்தற் கிடந்தந்தது. பாண்டியில் என்பது பாண்டியநாட்டில் என்று பொருள்படும். த்வங்யார்த்தத்தால் அவர் மன்னரென்பதுங் குறிக்கும். வீரசைவரைத் தென்னாட்டில் ஆண்டிகளென்றே வழங்குகின்றனர். ஜங்கமாண்டியென்ற வழக்கு முண்டு. ஆண்டியென்னும் பதம் இழிந்ததென்றுகொள்ள இடமில்லை. திருச்செந்தூர்க் கந்தக்கடவுளைக் கடற்கரையாண்டியெனச்சொல்லுதல் தென்னாட்டு வழக்கினுள்ளதே.

இனி, அதிவீரராம பாண்டியனது காலம் இதுவென முன்னரே குறித்தோமாயினும் நம்நாட்டுப் புலவருள் சிலர் கூறுங் கூற்றுக்கள் பொருந்தாவாறு காட்டல் அவசியமெனத் தோன்றுகின்றது. அபிதானகோச முடையார் அதிவீரராம பாண்டியன் விளங்கியகாலம் சாலிவாகன சகம் 738 எனச் சில சாஸனங்களால் நிச்சயிக்கப்படுகின்றது என்

றனர். அக்கற்சாஸனங்கள் ஈழநாட்டுள்ளனபோலும். நைடதவுரை நூதனப்பதிப்பொன்றில் ஹோரெஸ்ஹோமன் வில்ஸன் என்னும் யூரோப்பியர் ஒருவரெழுதிய "பாண்டியநாடு" (Kingdom of Pandya) என்னும் நூலை ஆதாரமாகக் கொண்டு அதிவீரராமபாண்டியன் காலம் பதினோராவது நூற்றுண்டெனை எழுதப்பட்டுளது. அவ் யூரோப்பியர் "தமிழ்க் கல்வியிலே பாண்டியன் என்னும் பேர்தான் ஒருபிரபலமான பெயர். கொற்கையிலிருந்து அரசாண்ட குலசேகரன் என்பவனை அரிவீரன் அல்லது அதிவீரனெனச் சொல்வதுமுண்டு. அவன் வடமொழியிலிருந்து அநேகநூல்களைத் தமிழிலே மொழிபெயர்த்தனன். கி. பி. 1051-க்குச் சமமான சாலிவாகன சகாத்தம் 973-ம் வருஷத்திலே அவன் பிரபலமுற்றிருந்தான்" என்று எழுதினராம். இந்நூலைப் பார்க்கும் பாக்கியம் பெற்றில்லாமைக்காகக் கவல்கின்றோம். இந்நூலி (Prof. Wilson : Historical Sketch of the Kingdom of Pandya) லிருந்து சில வாக்கியங்கள் எடுத்துக் காட்டும் கால்ட்வெல் துரையவர்கள் (History of Tinnevelly) அதிவீரராம பாண்டியனைப்பற்றி இது கூறுவதைக் கண்டித்திருக்க வேண்டும். * கி. பி. 1877-ல் திருநெல்வேலிக்குச் சென்ற டர்ன்புல் என்னும் பெயரிய ஸர்வெயர் கிராமவாஸிகள் அதிவீரராம பாண்டியன் கி. பி. 1099-ல் அரசாளத் தொடங்கினனென் றுரைத்ததைக் கேட்டு அவ்வாறே தனது ஞாபகக்குறிப்பில் எழுதினதைக் கால்ட் வெல்துரை கண்டித்துத் தென்காசி யாலய சிலாசாஸனம் கி.பி. 1562-ல் அரசாளத் தொடங்கினனென் றுரைப்பதைக் காட்டி யுண்மை நிறுத்தினர். வில்ஸனைப் பெரிய மனிதனாக மதித்தவர் இவ்வழுவுரையைக் கண்டியாத காரணம் புலப்படவில்லை. எனினும் நூலெழுதுவோர் இத்தகையகாலவரையறை விஷயங்களில் ஜாம்பவன் காலத்து நூல்களை யாதாரமாகக் கொண்டுவரா திருப்பராயின் நலமாம். அதிவீரராம பாண்டியன் காலத்தை நிச்சயிக்கும் சிலாசாஸனங்கள் விஷயம் முன்னரே

* Page 54.

கூறப்பட்டது. ஆதாரப் பழமையைத்தவிர வேறொரு கஷ்டமும் இதிலுளது. வில்ஸன் வாக்கியத்தை ஏனையோர் எடுத்தாளினும் ஆளலாம். நைடதவுரை நூதனப் பதிப்புக்காரர் ஆளுதல் பொருந்தாது. இவர் நைடதம் ஸ்ரீ ஹர்ஷகவியினது நைஷதீய சரித்திரத்தையே முதனூலாகக்கொண்டது என்கின்றனரன்றோ? ஸ்ரீஹர்ஷ கவி ஜயச்சந்திரனென்னும் பெயர் கொண்ட காசி யரசனால் ஆதரிக்கப்பட்டவரென்பதும் அவ்வரசன் காலத்திய தானப்பத்திரமொன்று விக்ரமசகம் 1225 என்னும் ஆண்டைக் குறிக்கின்றதென்பதும் வடநூல் வல்லார்கூற்று. விக்ரமசகம் 1225க்குச் சரியானது கி. பி. 1169. எனவே ஸ்ரீஹர்ஷ கவியின்காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பாதி யாகும். இஃதிவ்வாறாயின் அதிவீரராமபாண்டியன் பதினொராவது நூற்றாண்டினனாதலெவ்வணம்?

இன்னும் அந்நூதனப் பதிப்புக்காரர் ஸ்ரீஹர்ஷகவி சைவசித்தாந்த மதத்தினரென்றும் சிவபெருமானையே அதிதேவதையாக உடைய ஸ்ரீசிந்தாமணிமந்திரத்தை யுபாஸித்தாரென்றுங் கூறினர். ஸ்ரீஹர்ஷ கவி ஸ்மார்த்தப் பிராஹ்மணரென்றும் சங்கராத்வைத மதத்தினரென்றும் வடநூல்வல்லாருரைப்பர். ஸகலமதங்களையும் ஆராய்கின்ற நூலொன்றை இவ்வரகவி "கண்டன கண்ட காத்யம்" என்னும் பெயராற் செய்தனரென்றும், அந்நூலகத்துச் சங்கரமதத்தையே புகழ்ந்துளாரென்றும் அறிந்தோர் பகர்வர். மந்திர சாஸ்த்ரம் வல்லுநர் சிந்தாமணி மந்த்ரத்திற் கதிதேவதை திரிபுராதேவியென்றுணர்வர். வடமொழியிலுள்ள ஸ்ரீஹர்ஷகவி சரித்திரத்தும் இவர் சிந்தாமணி மந்திரத்தை யுபாஸித்தலும் திரிபுராதேவி பிரஸந்நையாகி வரமீந்தாளென் றுரைக்கப் பட்டுளது.

அதிவீரராமபாண்டியன் செய்த நூல்களுள்ளே நைடதத்தின் பெருமையை விரித்துரைக்கவேண்டியதில்லை. வெற்றிவேற்கை இளைஞரெல்லாருங் கற்கும் சிறந்தநீதிநூல். கூர்மபுராணம் வடமொழிக் கூர்மபுராணத்தின் மொழிபெயர்ப்பு. பதினென் புராணங்களுள் கூர்மபுராணம்ஒன்று. சிவபுராணங்

களுள்ளும் ஒன்றாகும். பதினெட்டில் பத்துச் சிவபுராணம். விஷ்ணுபகவான் கூர்மாவதார மெடுத்தகாலத்து நாரதாதி யோர்க்குச் சொல்லிய உபதேசம் கூர்மபுராணமாயிற்று. இத னுள் உலகந் தோன்றியது முதல் நடந்த விஷயங்களும், விசேஷமாய் இராமாயணபாரத பாகவத கதைகளும், வருணாச்சிரமதருமங்களும், சிவபூஜை, யோகம், சிராத்தம், பிராயச்சித்தம் முதலியவற்றின் இயல்பும் கூறப்பட்டன. காசிகண்டமோ மூர்த்தி ஸ்தலம் தீர்த்தமென்னு மூன்றானுஞ் சிறந்த காசிக்ஷேத்ரத்தின் சிறப்பை யெடுத்துக் கூறுவதோடு, வைதிக லௌகிகமார்க்கங்களையும் நன்கு எடுத்து விளக்குகின்றது. அளவால் கூர்மபுராணம் 3717 விருத்தங்களும், காசிகண்டம் 2525 விருத்தங்களுங் கொண்டன.

இதுகாறுங் கூறியவற்றைத் தொகுத்துரைப்போம். நைடதநூலாசிரியர் தென்பாண்டிநாட்டில் தென்காசிப் பதியிலிருந்து செங்கோல் செலுத்திய அதிவீரராமபாண்டியன். அவனிருந்த காலம் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதி. அவன் செய்த நூல்கள்: நறுந்தொகை, நைடதம், கூர்மபுராணம், காசிகண்டம் என்பன. இவன் செய்தன என்றுறுதியாகச் சொல்லத்தக்கன இந்நான்குமேயாம். நைடதம் வடமொழி நைஷதத்தை முதனூலாகக் கொண்டதன்று. வரதுங்கராமபாண்டியன் அதிவீரராமபாண்டியன் காலத்தவனே. வரகுணராமபாண்டியனும் அக்காலத்தேயே யிருந்தானென்று சொல்லுதற் கிடமுண்டு.

S. அநவரத விநாயகம் பிள்ளை, M. A., L. T.

# நளசரித்திரச்சுருக்கம்.

நள நாட்டுச் சிறப்பு.

நிடத நாட்டின்கண் மேகங்கள் சரஸ்வதியின் நிறம் போல் வெளுத்துத் தோன்றி, கடல்நீரை உண்டு பார்வதியின் நிறம்போல் கருநிறங்கொண்டு, நள மகாராஜனுடைய வேலைப்போல் மின்னி, அவனுடைய முரசம்போலக் குமுறி, கைம்மாறு கருதாத அவன் ஈகையைப்போலப் பெய்தன. அவன் நாட்டைச்சார்ந்த மேருமலையிற்பெய்த மழைவெள்ளம் பல இரத்தினங்களையும் வாரிக்கொண்டு பெருகி, பூமிதேவியின் மார்பில் அசைகின்ற இரத்தின மாலைபோல விளங்கி, யானைத்தந்தம் முதலிய பல பொருள்களையும் அடித்துக்கொண்டு கடலிற்சங்கமமாகும். கங்கையென்னும் தெய்வத்தன்மை பெற்ற அவ்வாற்று வெள்ளம் அந்நாட்டின் பல குளங்களிலும் வயல்களிலும் அமிர்தம்போலப் பாய்ந்தது. அவ்வாறு பாய்ந்த வெள்ளத்தைக் கட்டுவதினால் உண்டாகும் ஓசையும், நிலத்தை யுழுதலினாலுண்டாகும் ஓசையும், கடைசியர் கைகோத்தாடுதலினால் உண்டாகும் ஓசையும், விதைவிதைக்கின்றவர்களால் உண்டாகும் ஓசையும் மேக முழக்கத்தோடு மாறுகொண்டொலித்தன. அந்நாட்டார் முரசறைந்து யாசகரைத்தேடி, வேதியர் முதலிய பலர்க்கும் உண்டியுதவி, பின் விருந்தினரோடு உண்பர். கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுதலினால் உண்டாகும் புகையைக் குயில்கள் மேகமென்று நினைத்துப் பயத்தினால் வாடிக் கூவாதிருக்க, சோலைகளில் பலவகை வண்டுகளும் பாட, மயில்கள் களித்து ஆடும். முல்லையும் குறிஞ்சியும் மருதமும் நெய்தலும் ஒன்றற்கொன்று சமீபித்திருக்கின்றமையால் முல்லை நிலத்துள்ள இடையர்கள் ஊதுகின்ற வேய்ங்குழலின் இசையைக் கேட்டுக்கொண்டே குறிஞ்சி நிலத்துள்ள மயில்கள் தூங்கும். மருத நிலத்து வண்டுகள் பாட, நெய்தநிலத்து அன்னங்கள்

களித்து உறங்கும். கொடுமை புரிவோரும், கொலைசெய்வோரும், குறைசொல்லிப் புலம்புவோரும், மதுபானஞ் செய்வோரும் அந்நாட்டிலில்லை. கடல் படு மமுதமுதலிய பல அமுதங்களையுடைய அந்நிடதநாடு, தேவாமிர்த மொன்றையே உடைய சுவர்க்கமும் தனக்கு ஒப்பாகாது என்று சொல்லும் சிறப்புடையது. இத்தன்மையாகிய சிறப்பு வாய்ந்த அந்நிடதநாட்டின் இராஜதானி, மாதர் ஊடலினால் நீக்கிய ஆபரணங்களின் ஒளியினால் இரவென்றும் பகலென்றும் வேற்றுமை தோன்றாமல் பொன்னுலகம்போன்றுள்ளமாவிந்த நகரமென்று பெபர் பெறும்.

நகரச்சிறப்பு.

அந்நகரம் பூமியிலுள்ள ஓர் மடுவில் தோன்றிய அமராவதி நகரத்தின் பிரதிபிம்பம் என்றும், அதன் அகழி அப்பிரதிபிம்பத்தைப் பற்றாத அம்மடுவின் சுற்றிலுள்ள நீரென்றும் கண்டோர் சொல்லும் அழகுடையது. சுவர்க்கத்தை வறுமையுடையதென்று இகழ்ந்து நகைப்பதுபோன்ற பளிங்குக்கற்களால்கட்டிய பெரியமாளிகைகளையுடையது. பூலோகத்துப் பல நகரங்களையும் வென்று இனிச் சுவர்க்கத்தையும் வெல்லச் சபதங்கூறி, அதற்கறிகுறியாக நாட்டப்பட்டதுபோலும்கொடிகளை உடையது. இத்தன்மையான நகரத்தின் சக்ரவர்த்தி திரிலோகத்தாரையும் ஆதரித்துக் காக்கும் நளன் என்னும் பெயருடையவன்.

அன்னத்தைக் கண்ணுற்றது.

இவ்வரசன் ஒருநாள் சூரியனுடைய குதிரைகளும் வலியில்லனவென்று நகைப்பதுபோன்ற வெள்ளிய பற்களையுடைய குதிரையின்மேலேறி, மாதர்கள் தொடர்ந்து காண, அரசர்கள் வணங்க, தேவர்கள் மீண்டும் கடைவார் என்றஞ்சி திருப்பாற்கடல் பூமியில் வந்து தங்கினாற்போன்ற தடாகத்தை யடைந்தான். அத்தடாகத்தின் ஓர் தாமரைமலரில் தன்பெட்டையோடு தங்கியிருந்த அரசவன்னத்தை நளன் பற்றினன். பற்றவும் அவ்வன்னம் நளனை

நோக்கிப் பெருமூச்செறிந்து, வயதுசென்ற என் தாய்தந்தையர் எப்பாடு படுவரோ! முட்டையிட்ட என் மனைவி எவ்வாறு வருந்துவளோ! ஒருக்கால் இறப்பளோ! என்றும், என் இளங்குஞ்சுகள் இரைந்து சாகுமே என்றும் பதைத்துச்சோர்ந்தது. அவ்வன்னத்தின் துன்பத்தை யறிந்த நளன் ஓ அன்னமே! உன்னழகைக் காணப்பிடித்தேன். அழகு முற்றும் கண்டமையால் இனி நீ செல்லவேண்டிய இடத்துக்குச் செல்லலாம் என்று விட்டுவிட்டான்.

அன்னத்தைத் தூதுவிட்டது.

அரசன் கையினின்றும் விடுபட்ட அன்னம் தன் கூட்டத்தில் போய்ச்சேருதலும், அவ்வன்னக் கூட்டம் இது முன்னையதல்லவென்று கருதி அத்தடாகத்தைவிட்டு நீங்கின. அப்பொழுது அவ்வரசவன்னம் மீண்டும் அரசன் கையில் வந்து தங்கி, நீ என் சோர்வைக்கண்டு என்னை விட்டமையால் நீ மிகவும் கருணையுள்ளவன். உனக்கு ஓர் பிரதி உபகாரஞ்செய்ய நினைத்துளேன். அவ்வுபகாரமாவது: விதர்ப்பநாட்டரசனுடைய புத்திரியாகிய இலக்குமியை நிகர்த்த தமயந்தியைப்போலும் ஓர் மாதை நான் எங்கும் கண்டதில்லை. அவள் அழகுக்கேற்ற நாயகனை இம்மூவுலகத்துந்தேடியும் கண்டிலேன். உன்னைக்காணுதலும் அவள் நினைப்பு எனக்கு வந்தது. அவளை உனக்கு மணம்புரிவிக்க எண்ணியதேயாம். அதற்கு உன் உடன்பாட்டை யறிய விரும்புகின்றேன் என்று சொல்ல, அரசன் கேட்டு மகிழ்ந்து நகைத்து, நீ விரைந்துபோய் நீ சொல்லிய வண்ணம் மணம் பேசிமுடிப்பாயென்று அன்னத்தைத் தமயந்திபால் அனுப்பினன்.

உடனே அவ்வன்னம் உயரப்பறந்து குண்டினபுரஞ்சென்று, தோழியர்க்கு நடுவில் இருக்கின்ற தமயந்தியைச் சுற்றிவந்திறங்கியது. அவ்வாறு இறங்கிய அன்னத்தைத் தமயந்தி பற்ற முயலுதலும் அவ்வன்னம் நளன் பிடித்தால் பிடிபடுவேனேயன்றி, மற்ற எவ்வகைப்பட்டார் பிடிக்க முய

ன்றாலும் நான் அகப்படுவேனோ! நான் இந்திரனுடைய ஏவலையும் அந்நளன் ஏவலையுமே செய்வேன் என்று சொல்லிப் பின்னும் அந்நளனுடைய அழகு முதலியவற்றை வர்ணித்துக் கூறி, அவளுக்கு நளன்பால் ஆசையை யுண்டாக்கிற்று. தமயந்தி நளன்பால் ஆசைகொண்டதை அறிந்த அன்னம்: நான் தகாதவார்த்தைகளைச் சொல்லினேன், அதுவுமல்லாமல் உன் பாதங்கள் வருந்த நீ என்னைப் பின்தொடர்ந்து வரச்செய்தேன்; ஆகையால் நான் செய்த அக்குற்றத்தை நீ மறக்கும்படி நீ விரும்பியதை நிறைவேற்றுவேன், உன் எண்ணத்தைச் சொல்வாய் என்று சொல்லித் தமயந்தியின் உட்கருத்தை யறிந்து சும்மா இருந்தது. அப்பொழுது அவள் அன்னத்தை நோக்கி உன்னைக் கண்களிக்கக் காணுதலே நான் விரும்பியதென்று சொல்லி, மாதர்கள் * "தருவினறுங் கொழுநனை நல்குதி" யென்று சொல்வாருமுண்டோ என்றனள். அதைக்கேட்ட அன்னம், வேதப்பொருளைச் சூத்திரர் கேட்கப்படாததுபோலத் தருவினறுங் கொழுநனை நல்குதி என்னும் உன் மறைப்பொருளை நான் கேட்கலாகாதோ? ஓ தமயந்தி! என்னால் செய்யமுடியாத கருமமுமுண்டோ? நீ விரும்பியதைச்சொல், விரைவில் கொண்டு வருவேன் என்றது.

அப்போது அவள், இத்தமயந்தி நளன்பால் ஆசையுற்றனள் என்று நீ அறியாயா? என் விருப்பத்தை இன்னும் வெளிப்படையாகச் சொல்லவும் வேண்டுமோ என்றனள். அதைக்கேட்ட அன்னம் ஓ கன்னிகையே! நீ சொல்லிய மறைப்பொருளை நான் அறிவேனாயினும் அவற்றை நான் அரசர்க்கரசனாகிய நளராசன் முன் சொல்வது தகுதியாகுமா? நான் அவ்வெற்றியாளனுக்கு உன்பால் ஆசையை யுண்டாக்கியபின் உன்பிதா உன்னை அவனுக்கு மணஞ்செய்து

* தருவினறுங் கொழுநனை நல்குதி என்பதற்குக் கற்பகத்தருவின்து பரிமளம் பொருந்திய செழிய அரும்பைத் தா என்றும், கற்பகத் தருப்போலும் ஈகையாகிய நற்குணம் பொருந்திய கணவனைத்தா என்றும் பொருள்படுதல் அறிக.

கொடாவிட்டால் என்சொல் தவறிப்போகாதா என்றும், நான் சந்தேகிப்பதுபோலவே, பிதா எவருக்கு என்னை மணஞ்செய்து தருவாரோவென்று உனக்கும் சந்தேகமுளதென்றும் சொல்லி, இஃதொழிந்த எந்தக் கருமத்தைச் செய்யச்சொல்லினும் செய்து முடிப்பேனென்று அவள் கருத்தறியும்படிசொல்லிற்று. அதற்குத் தமயந்தி நகைத்து, நீ அவ்வாறு சந்தேகிக்கவேண்டாம்; நான் நளனுக்கு மாலையிடுவதன்றி மன்மதனேயானாலும் பிறரை மணம்புரியேன்; என்பிதா என்னைப் பிறர்க்கு அளிப்பாரானால் தீக்குளித்து, உன் வாக்கை நிலைபெறச் செய்வேன்; இதனை நம்பு; மனக் கருத்தை முகக்குறியால் அறிவதே தூதர் இலக்கணமாம்; உன்னையல்லாமல் அவ்வாறு அறியவல்லவர் எவருளர்? நீ விரைந்துசென்று என்னைக் காப்பாற்றுவாய் என்று தமயந்தி சொல்லுதலும், அன்னம் சொல்கின்றது: அந்நளனும் உன் மீது மையல்கொண்டு என்னை நின்பால் தூதனுப்பினான்; ஆகையால் மணம் முடிந்ததென்றே நினையென்று சொல்லிக் கொண்டிருக்கையில், தோழியர் தமயந்தியின் சுவடுபற்றித் தேடிக்கொண்டு வருவதை அன்னங்கண்டு, அவர்கள் சந்தேகிப்பரென்று அவ்விடம் விட்டு நளனிடம் சென்று, தமயந்தியின் மேற்கொண்ட மோகத்தினால் மூர்ச்சித்துக் கிடக்கும் அந்நளனைக்கண்டு, வேந்தே வருந்தேல், நீ நினைத்தால் முடியாத கருமமுமுளதோ? தமயந்தியைக் கண்டு அவள் சம்மதம்பெற்று வந்தேனென்று சொல்ல, நளன் புதிய அமிர்தம் உண்டவன்போல் மூர்ச்சை தெளிந்து எழுந்து, பலமுறை அன்னத்தின் வாய்மொழிகேட்டு மகிழ்ந்தனன்.

மணம்புரிந்தது.

நளன் இங்கு இவ்வாறிருக்கையில், குண்டினபுரத்தில் வீமராசன் தன்மகள் நளன்மேல் விருப்புற்றதைத் தாதியரால் அறிந்து, பல தேசத்தரசர்களுக்கும் தமயந்தியின் சுயம்வரத்தைக் குறித்த மணவோலை போக்க, பூலோகத்தரசர்களுடன், இந்திரனும், அக்கினியும், வருணனும், யமனும் தமயந்தி நளனுக்கே மாலைசூட்டுவள் என்றறிந்து, நள

னுருக்கொண்டு தமயந்தியின் சுயம்வர மாலையைப் பெறும் விருப்பினராய்க் குண்டினபுரம் வந்து சேர்ந்தனர். நளனும் வந்தனன். பின் தமயந்தியை வீமன் தாதிமாரைக் கொண்டு வரவழைக்க, அவள் வந்து நளனுருக்கொண்டு வந்திருந்த தேவர்களோடிருந்த நளனைத் தெய்வகடாக்ஷத்தால் அறிந்து அவனுக்கு மாலைசூட்டி வணங்கினள். அதன் மேல் வீமன் நல்ல முகூர்த்தத்தில் தமயந்தியை மணவரையிற்றருவித்து, நளனுக்குக் கன்னிகையைத் தாரைவார்த்துத் தருதலும், நளன் தமயந்தியைக் கைபற்றி, ஓமத்தீயைச் சுற்றிவந்து அத்தீயில் நெற்பொரியைச் சொரிந்து, தமயந்தியின் பாதங்களை அம்மியின்மேல் தூக்கிவைத்து, ஆகாயத்தில் அருந்ததியைக் காட்டினன். கௌதமன் முதலிய முனிவர்கள் ஆசீர்வதித்தனர்.

நகர்க்குமீண்டது.

நளன் தமயந்தியை அழைத்துக்கொண்டு மாவிந்த நகரம் சென்று வாழ்ந்திருக்கையில், தமயந்தி இந்திரசேனன் என்னும் ஓர் புத்திரனையும், அதன்பின் இந்திரசேனையென்னும்ஓர் புத்திரியையும் பெற்றாள். அம்மக்களின் மழலைச் சொல்லைக் கேட்டுத் தாய்தந்தையர் உவகைக் கடலில் ஆழ்ந்தனர்.

சூதாடியது.

இவ்வாறு இன்புற்றிருக்கையில், தமயந்தியை மணம் புரிய விரும்பியிருந்து அது வாய்க்காமையால் கோபங் கொண்ட கலிபுருஷன், நளனையும் தமயந்தியையும் பிடித்து வருத்த நினைத்து, புட்கரன் என்னும் ஓர் சிற்றரசன்பாற்சென்று, நீ நளனிடம்போய்ச் சூதாடினால் அவன் அரசு முழுவதும் அவ்வாட்டத்தால் வென்று தருவேனென்று கூறி ஓர் காளையுருவங்கொண்டு நிற்க, அப்புட்கரன் அதன்மேல் ஏறிக் கையில் கொடிபிடித்துக்கொண்டு நளமகாராசனைக் கண்டான். நளன் அவனை நோக்கி இக்கொடி எதைக்குறித்ததென்ன, சூதாட்டத்தில் எதிர்த்த மன்னரை வெல்லக் கருதியது என்றான். அதைக்கேட்டு நளன் சூதாட இசைந்தபோது,

மந்திரிமார் சூதாடல் அறநெறி வழுக்கன்றென்று பல நீதிகளைக்கூறித் தடுத்தும், அரசன் நான் என்னுயிர் இழப்பினும் சொன்னசொல் மறுக்கேன் என்று கூறிச் சூதாடப் புகுந்தான். அப்போது புட்கரன் தன் எற்றைப் பந்தயம் வைக்க, நளன் தன் இராச்சிய முழுவதையும் பந்தயமாக வைத்துச் சூதாடி, கலிபுருஷன் கவற்றின் வடிவாய் நின்று அநுகூலமாய் விழவும், நளன் தன் நாடு நகர முதலிய எல்லாச் செல்வங்களையும் புட்கரனுக்குத் தோற்றனன்.

நகர்நீங்கியது.

நளன் தன் இராச்சிய முற்றுந்தோற்றும், முகமலர்ச்சியுடையவனாய்த் தமயந்தியிடஞ்சென்று நேரிட்ட யாவற்றையுங் கூற, தமயந்தி வெய்துயிர்த்து வருந்தி இது ஊழ்வினையின் செயலென்று மனந்தேறினள். அப்போது நளன் மனைவியைநோக்கி நான் நகரம்விட்டுக் காட்டுக்குச் செல்லவேண்டுமாகையால் மக்களை அழைத்துக்கொண்டு நீ உன் தாய்வீடு செல்கவென்ன, தமயந்தி அன்பனே நீ கானில் கஷ்டப்பட்டு வருந்திக் காலங்கழிக்க, நான் நகரடைந்து சுகமாய் உண்டுடுத்துப் பஞ்சணையில் துயில்வது அறமாகுமாவென்று சொல்லி, நான் உன்னை விட்டுப் பிரியேன் என்றனள். அதற்கு நளன் நின்பாதங்கள் கன்றிப்போகக் கானில் நடக்க யான் கண்டு சகிப்பனோவென்ன, தமயந்தி நாமிருவரும் மக்களுடன் வீமராசன் நகரஞ்சென்று வாழலாமென்றனள். அதற்கு நளன் மாமன்வீட்டில் வாழ்வோர் பதரை ஒப்பரென்று பெரியோர் சொல்வராகையால் அங்குச் செல்லுதல் தகாதென, தமயந்தி தன் மக்களைக் கணவனாணையின்படி தேர்ப்பாகன் வசம் தன் தாய்வீட்டிற்கனுப்பித் தான் நளன் பின் சென்றனள். அவ்வாறு செல்கையில், சத்தியத்திற்கஞ்சி எங்களைக் கொடுங்கோலரசனுக்கு உட்படுத்தினையேயென்று புலம்பிக்கொண்டுவந்த நகரத்தாரை நோக்கி நளன், சூதில்தோற்ற பூமியை மறுபடியுஞ் ஜயித்தால் ஒழிய ஆள இசைதல் அரசதருமமாகாது; ஆகையால் நீங்கள் உமதரசன் ஆணைக்குட்பட்டு என் சத்தியத்தை நிறுத்துங்கள் என்று தமயந்தியுடன் காடு சென்றான்.

அவர்கள் காட்டின் வழியே போகையில் அங்கு கலி ஓரழகிய அன்னப்புள் உருக்கொண்டு வந்து தோன்ற, தமயந்தி அதைப்பிடித்துத் தரும்படி தன்கணவனைக்கேட்க, நளன் அவள் கருத்துக்கிசைந்து ஒரு துகிலையே தானுந் தமயந்தியும் உடுத்து, தமயந்தி யுடுத்திருந்த துகிலை எறிந்து பிடிக்க முயல்கையில், அவ்வன்னம் அத்துகிலைக்கொண்டு எழும்பிப் பறந்துபோயிற்று. பின் அவ்விருவரும் தங்களுக்கிருந்தவொரு துகிலோடும் செல்கையில், சூரியன் அஸ்தமிக்க, அங்குள்ள ஓர் பாழ் மண்டபத்தை யடைந்து தங்கி, தமயந்தி தன் நாயகனுக்குப் புழுதியிற் படுக்கும்படி நேர்ந்ததேயென்று வருந்தி நடுச்சாமவேளையில் தன்கணவன் கைமேல் தலைசாய்த்து உறங்கினள்.

காள்புகுந்தது.

நளன் துன்பத்தோடு புழுதியிற்படுத்திருந்த தன் மனைவியின்நிலைமையைக்கண்டு சகியாதவனாய், தன்கையினின்றும் மெல்லஅவள்தலையையெடுத்துக்கீழேவைத்து, இருவரும் உடுத்திருந்த ஒருதுகிலைத் துண்டித்துக்கொண்டு, கலியின் வசப்பட்டவனாகையால் பித்தனைப்போல அந்நள்ளிரவில் பிரிந்துபோயினன். இவன் போன சற்று நேரத்துக்கெல்லாம் தமயந்தி சிறிது நித்திரை தெளிந்து தன் கணவனைத் தடவிப்பார்க்கக் காணாமையால், கையை நெரித்து வயிற்றைப் பிசைந்து வாய்விட்டலறி, அக்கானமுற்றும் தேடித்திரிந்து சேதிநகரத்து இராசவீதியில் போகையில், துண்டிக்கப்பட்ட வஸ்திரத்தோடும் புழுதிபடிந்த சரீரத்தோடும் விரிந்த கூந்தலோடும் வருந்திய மனமுடையவளாய்ப் பித்தேறினவள்போல் போகின்ற அழகுடைய தமயந்தியைச் சேதிதேசத்தரசன் தாய் கண்டு நீ யாரென்று கேட்க, அவள் நான் தமயந்தியினுடைய தோழி, என் தலைவியாகிய அத்தமயந்தியை அவள் நாயகனாகிய நிடதநாட்டரசன் தன் பூமியைச் சூதாடித் தோற்று, காட்டிற்போய் நடுராத்திரியில் அவளைப் பிரிந்தமையால் அவனைத் தேடிக்கொண்டு இங்கு வந்தேனென, சேதி

பிரிவுற்றது.

நாட்டரசன்தாய் நீ உனதலைவியைக் காணுமளவும இங்கே தானே சுகமாயிருவென, தமயந்தி அங்குவசித்திருந்தனள்.

இவளிங்கு இவ்வாறிருக்கத் தமயந்தியைப்பிரிந்தநளன் நீக்குதற்கரிய துயரத்தோடு கானிற்செல்கையில், காட்டுத் தீயில் அகப்பட்டு வருந்துகின்ற ஓர் பாம்பு அரசனே உனக்கபயமென்னலும், நளன் முன் தான் தீச்சுடாம லிருக்கும்படி அக்கினிதேவனால் கொடுக்கப்பெற்ற வரத்தின் மகிமையால் அதனைத் தீயினின்றெடுத்துப் புறத்தேவிட, அப்பாம்பு அரசனைத்தீண்டி அவன் உருவத்தை மாற்றி, நீ எனக்குச்செய்த நன்றிக்குக் கைம்மாறாக நான் உன்னைக் கடித்து, நீ யின்னானென்று பிறரறியாதபடி செய்தேன். நீ வாகுகன் என்னும் பெயரைத் தரித்து அயோத்தி நகரத் தரசனாகிய இருதுபன்னனுக்குத் தேர்ப்பாகனாய் அமைந்து, அசுவமனமறியும் கல்வியை அவனுக்கு நீ கற்றுக்கொடுத்தால் சூதாட்டத்தில் வெல்லும் வித்தையை அவனுனக்குக் கற்பிப்பன்; பின்பு நீ தமயந்தியை யடைந்து உன் அரசுரிமையை மீண்டும் பெறுவாய்; உன்னுடைய பழைய உருவம் பெற விரும்பினால் இவ்வஸ்திரத்தை அணிந்து கொள்வாய் என்று கூறி அப்பாம்பு தன் பழைய உருவத்தை யடைந்துபோனது. அதன்பின் நளன் பத்துத் தினங்களில அயோத்திநகர மடைந்தான்.

வேற்றுருவமைந்தது.

இவர்கள் அவ்வாறிருக்க, வீமன் பிராமணர்களைப்பார்த்து என் புதல்வியையும் நளனையும் தேடிக்கொடுப்பவர்களுக்குக் கேட்ட எவற்றையும் தருவேன் என்ன, பல அந்தணர்கள் பலவிடத்திலும் தேடியுங் காணாது, திரிய சுதேவனன் என்னும் ஓரந்தணன் தமயந்தியைச் சேதிதேசத்தரசன் வீட்டிற்கண்டு தமயந்தியிவளென்று அவ்வரசனுக்குத் தெரிவிக்க, அவன் தமயந்தியைச் சிவிகையிலேற்றி வீமன்பால் விடுத்தனன். பின் தமயந்தி தன்மக்களையும் தாய்தந்தையரையும் கண்டு மனநெகிழ்ந்து, பிதாவை

வீமன் தேடவிட்டது.

நோக்கி மீண்டும் நளனைத் தேடச்செய்வாயாக என்று உரைத்தலும், அவன் தூதர்களை நாநாதிசைகளிலும் தேடும்படி செலுத்தினன்.

அவ்வாறு சென்ற தூதர்களில் ஒருவன் அயோத்தி அரசனாகிய இருதுபர்ணனுக்குச் சாரதியாகிய ஒருவன் மனைவியைப்பிரிந்து வருந்தி யிருக்கக்கண்டேன் என்ன, தமயந்தி அத்தூதனை நோக்கி நீ அயோத்திக்குச் சென்று தமயந்தி இரண்டாஞ் சுயம்வரத்தை விரும்பினள் என்று கூறினால், அவன் அத்தேர்ப்பாகனைக்கொண்டு இங்குச் சேர்வான், அதன்பின் அறியலாமென்ன, அவனும் அவ்வாறே இருதுபர்ணனுக்குச் சொல்லினன். அதைக்கேட்ட இருதுபர்ணனும் நளனைச் சாரதியாகக் கொண்டு குண்டினபுரம் வருகையில், தேரோசையைக் கேட்ட தமயந்தி இவ்வாறுவிரைந்து தேர்விடவல்லவன் நளனொருவனே என்றும், இவன் நளனல்லாவிட்டால் உயிர் விடுவேனென்றும் நிச்சயித்தவளாயிருக்க, அத்தேரும் குண்டினபுரம் வந்து சேர்ந்தது. அப்பொழுது தமயந்தி தோழியை நோக்கி, தேரை நடத்திவந்த பாகன் நளனோ என்று அறிந்துவாவென்று விடுக்க, அத்தோழிசென்று அத்தேர்ப்பாகன் நெருப்பும் நீரும் இன்றிச் சமைக்கின்ற விசேஷத்தை வந்து சொல்லக்கேட்ட தமயந்தி தன்னுயிர்க் கணவனெனத் துணிந்து தன் மக்களை அனுப்ப, அவர்களைக்கண்ட தேர்ப்பாகன் நெருப்பிலிட்ட மெழுகென உருகிக் கண்ணீர் சிந்தித் துன்புற்றான். இதைத் [தோ]தியர் தமயந்திக் கறிவிக்க, அவள் தாய்தந்தையரைக் கொண்டு நளனாகிய வாகுகனை அழைப்பித்து உமது முன்னைய நல்லுருவத்தைக் காட்டாயென்றுவேண்ட, வாகுகன் பாம்பரசன் கொடுத்த வஸ்திரத்தால் பழைய மாட்சிமைப்பட்ட உருவம் பெற்றனன். அவ்வாறு நின்ற நளனைத் தமயந்தி கைதொழுதுநிற்க இவற்றை எல்லாம் கேள்விப்பட்ட வீமன் தன் உறவினரோடு சூழ்ந்துவந்து கண்டுகளித்தனன்.

தேவியைக் கண்ணுற்றது.

நளன் வீமன் வீட்டில் ஒருமாதம் தங்கியிருந்து நால் வகைச் சேனைகளும் புடைசூழ நிடதநாடடைந்து அந்நாட்டு மதிற்புறத்துத் தங்கி, போர்செய்ய விரும் அரசுமீட்டது. பிற் போர்செய், அன்றேல் சூதாடவா என்று புட்கரன்பால் தூதனுப்ப, அவன் சூதாடச் சம்மதித்து ஆடவும் அப்புட்கரன் முன் தான் வென்ற நாடு முழுமையும் தோற்க, நளன் புட்கரனை நான் கலியின் வசப்பட்டிருந்ததனாலல் முன்னே நீ என்னை வென்றாய்; நீ என் தம்பி ஆகையால் அக்கிரமத்துக்கு உட்பட்ட உன் உயிரை உனக்குத் தந்தேன்; இனி நீ உனது பழைய நகரத்திற்குப்போய்ச் சுகமாய் வாழ்ந்திருவென்று கட்டளையிட்டனுப்பிவிட்டுத் தன்னரசைப் பெற்று நல்ல தருமங்களைச்செய்து பூமிபாரத்தைத் தாங்கிச் சுகித்திருந்தான்.

நளசரித்திரச் சுருக்கம் முற்றிற்று.

# இந்நூலின்கணுள்ள படங்களின் விவரம்.

| படம். | விவரம். | பக்கம். |
| --- | --- | --- |
| 14 | தமயந்தி நளனைக்கூடி ஓர் புத்திரனையும் புதல்வியையும் பெற்றுக் குறைவின்றிய செல்வத்தை யனுபவிக்கும் போது, சனி அரசிழந்து நின்ற புட்கரனைத் தேற்றி இடபவுருக்கொள்ள, அதிலப்புட்கரனேறி வந்து நளனோடு சூதாடி வெற்றிகொண்டமை சொல்லியபடி.... | 675 |
| 15 | சூதிற் றோல்வியடைந்த நளன் தமயந்தியின் கருத்தின்படி தேர்ப்பாகனை நோக்கித் தன் மக்களை வீமனிடம் விடுக்கச் செய்ததையும், அக்கால் தாய்தந்தையர் பிரிவையுணர்ந்த அச்சிறுவர்கள் துயரப்படவும், அதுகண்டவர்களுந் துயரப்படுதலைக்கண்ட சாரதி தேற்றி அச்சிறுவர்களோடு குண்டினபுரநோக்கிச் சென்றதையும், நளனுந் தமயந்தியும் அந்தப்புறத்தினின்றும் வெளிப்பட்டபோது அவர்கள் பிரிவுக் காற்றாது அந்த நகரத்தினர் துன்பப்பட்டமையும், அவ்விருவரையும் புட்கரன் பறைசாற்றுவித்துக் கண்டித்தமையும், நளன் தன்னைக் கண்டு வருந்திய மந்திரி முதலானோரை அறிவுறுத்தி யனுப்பினமையுஞ் சொல்லியபடி.... .. | 688 |
| 16 | நளன் தன்னகரைவிட்டு நீங்கிக் கானகநோக்கிச் செல்லும்போது சனி அன்னத்தின் வடிவுகொண்டு தோன்ற, அதுகண்டு இச்சித்த தமயந்தியின் கருத்தின்படி நளன் அவ்வன்னத்தைப் பிடிக்கத் தன் வஸ்திரத்தை வீச, அவ்வன்ன மச்சேலையைக் கொண்டுபோதலும் வருந்திச் சூரியனஸ்தமிக்கக் கண்டு இருவரும் ஓர் துகிலுடுத்தி ஓர் மண்டபத்தைச் சேர, அக்கால் தமயந்தி நளன்தேற்றத் தேறி அவன் கைமேல் தன் சிரசைவைத்து நித்திரைசெய்தமை சொல்லியபடி. ... ... | 711 |
| 17 | தமயந்தி அயர்ந்து கண்படுத்திருத்தலை நோக்கிய நளன் மிகவருந்தி நாம் பிரிந்தாலிவள் தாய்வீடடைவாளென்றெண்ணித் தம்மிருவர்க்கு மொன்றாயுள்ள வஸ்திரத்தை யறுக்கக் கருவியில்லையேயென் றாலோசிக்கும் போது, சனி வாள்போ லெதிரிற் கிடக்க அதனா லவ்வஸ்திரத்தை யரிந்து அரிதிற் பிரிந்து சென்றமையும், பின்னர் கண்விழித்தெழுந்த தமயந்தி நளனைக் காணாது அப்பாற் றேடிச் செல்லுகையில் அவள் முகத்தைச் சந்திரனென்று கருதி ஓரரவுவந்து விழுங்க, அதுகண்ட ஓர்வேட னவளை யப்பாம்பின் வாயினின்றும் விடுவித்துப் புணரத் தொடர்ந்தவளவில் அவள் முனிந்து நோக்க அவனெரிந்து சாம்பராயினமையுஞ் சொல்லியபடி. | 720 |
| 18 | தமயந்தி முனிவர்க ளாசிரமஞ்சென்று அவர்களாசிபெற்றுத் தனக்கெதிர்ப்பட்ட வணிகரைத் துணையாகக்கொ | |

இந்நூலின்கணுள்ள படங்களின்

விவரம் முற்றிற்று.

நைடதத்தின்

# படல அகராதி.



ஆக படலம் 28-க்கு (பாயிரமுள்பட) செய்யுள் 1173.

A.





விநாயகக்கடவுள் சிவன்முடியிலுள்ள பிறையைத் தமது ஒடிந்த கொம்பிற் கிணை பார்க்கல்.

உ

கடவுள் துணை.

# நைடதம்

## மூலமும் உரையும்.

நிடதம்-ஐம்பத்தாறு தேயங்களிலொன்று. இது விந்த மலைக்குச் சமீபத்தில் பயோஷ்ணி நதிதீரத்திலுள்ளது. இதனை அரசாண்டவன் நிடதன். இவனது சரித்திரத்தைச் சொல்லுதலால் இந்நூலுக்கு நைடதம் எனப்பெயராயிற்று. இந்த நிடதனுக்கு நளன் என்பது இயற்பெயர். இவன் வீரசேநன் மகன்.

---

## பாயிரம்.

[இதனால் தான் எடுத்துக்கொண்ட காவியம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு உயர்ந்தோர் வழக்கத்தின்படியே கவி கடவுள் வணக்கஞ் செய்தல் சொல்லப்படுகின்றது.]

### கடவுள் வணக்கம்.

*அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.*

தழைவிரி கடுக்கை மாலைத் தனிமுதல் சடையிற் சூடுங், குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டது குறையென் றெண்ணிப், புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கு, மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

இதன்பொருள். *தழை* - செழித்த, *விரி* - மலர்ந்த, *கடுக்கை* - கொன்றைமலர்களாலாகிய, *மாலை* - மாலையையுடைய, *தனி* - ஒப்பில்லாத, *முதல்* - பரமசிவனால், *சடையில்* - சடையின்கண், *சூடும்*-

சூடப்பட்டிருக்கிற, குழவி - குழந்தையாகிய, வெள் - வெள்ளிய, திங்கள் - சந்திரனை, இற்ற - ஒடிந்த, கோட்டது - (தன்) கொம்பி னது, குறையென்று - சேஷமென்று, எண்ணி - நினைத்து, புழை - தொளையையுடைய, நெடு - நெடிய, கரத்தால் - துதிக்கையினாலே, பற்றி - பிடித்து, பொற்பு - அழகானது, உற - பொருந்த, இணைத்து - (அதில்) பொருத்தி, நோக்கும் - பார்க்கின்ற, மழை - மழை போல்கின்ற, மதம் - மதத்தையுடைய, களிற்றின்-யானைமுகக் கடவுளுடைய, செய்ய மலர் - செந்தாமரை மலர்போலும், அடி - திருவடிகளை, சென்னி - தலைமேல், வைப்பாம் - (நாம்) சூடிக்கொள்வாம், என்றவாறு.

**கருத்து.** சிவன் முடியிலிருக்கும் பிறையைத் தனது ஒடிந்த கொம்புக் கிணைபார்க்கும் விநாயகரை நாம் வணங்குவோமென்பதாம்.

தழை, விரி என்கிற வினைத்தொகைக ளடுக்கிக் கடுக்கை யென்கிற வினைமுதற்பெயர் கொண்டன; "மூவா முதலா வுலக மொரு மூன்று மேத்த" (சீவகசிந்தாமணி - கடவுள் வாழ்த்து - க) என்பதிலே பெயரெச்ச வெதிர்மறைகளடுக்கி வினைமுதற்பெயர் கொண்டமைபோல. கடுக்கை யென்னு மரப்பெயர் அதன் சினையாகிய மலருக்காயினது முதலாகுபெயர். முதல் - பண்பாகுபெயர். இற்ற கோடு - கஜாசுரனைக் கொல்லும்பொருட் டொடிக்கப்பட்ட கொம்பு. எல்லா அவயவங்களிலு முதன்மையாகிய தலை யானைத்தலையா யிருத்தல்பற்றி விநாயகக்கடவுளை யானையென்றார். பல மலர்களிலுந் தாமரைமலர் சிறந்தமைபற்றி அது மலரெனப்பட்டது. இதனை, "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே" (நால்வர் நான்மணிமாலை - ௪0) என்பதனாலறிக. தந்தைக்கு மூத்த பிள்ளையின்மேலும் தாய்க்கு இளைய பிள்ளையின்மேலும் அன்புமிகுத லுலகியற்கையாதலாற் பரமசிவனிடத்தே விநாயகக்கடவுளுக்கு விளையாட்டுச் சொல்லப்பட்டது. இதனை, "மூத்த மகனிடத்தார்வ மீன்றெடுத்த பிதா மகற்கு முதிருமாற்றால்" (பார்க்கவ புராணமென்னும் விநாயக புராணம் - உபாசனகாண்டம் - கடவுள் வாழ்த்து-௬) என்பதனாலு மறிக. [பிறையைக் கொம்பின் குறையென்று மயங்கினமையால் மயக்கவணியாம்.] இது பெரும்பாலு முதற்சீரு நான்காஞ்சீரும் விளச்சீர்களு மற்றை நான்கு மாச்சீர்களுமாகிய வடிகளால் வந்த ஆசிரியவிருத்தம்.

# சிறப்புப்பாயிரம்.

[இதனால் ஆக்கியோன் பெயர் முதலானவை
சொல்லப்படுகின்றன.]

*அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.*

*நிலவுபொழி தனிக்கவிகை நிடதர்கோன் புகழ்ச்சரித நெடுநீர் வைப்பிற், புலவர்களி யமுதொழுகு புதுமொழி கூட் டுணைத்தமிழாற் புனைதல் செய்தான், வலனுயர்த்த வண் ணலஞ்சேல் வான்றொடுபொற் கோட்டிமய வரையிற் றீட்டி, யலர்தலைமா நிலம்புரக்கு மதிவீர ராமணிக லரச வேறே.*

இ - ள். இகல் - *பகைத்த, அரசர் - மன்னராகிய (யானைகளு க்கு), ஏறு - ஆண்சிங்கம்போல்பவனாகிய, வலன்-வெற்றியினால், உய ர்த்த - உயர்த்தப்பட்ட, அண்ணல் - பெருமை பொருந்திய, அம் - அழகிய, சேல் - மீனக்கொடியை, வான் - ஆகாசத்தை, தொடு - தீண்டுகிற, பொன் - பொன்னையுடைய, கோட்டு - சிகரத்தையுடைய, இமயவரையில் - இமயமலையினிடத்தே, தீட்டி - (தனக்குரிய வெல் லைக்கல்லாக) எழுதி, அலர் - பரந்த, தலை - இடத்தையுடைய, மா- பெரிய, நிலம் - பூமியை, புரக்கும் - காக்கின்ற, அதிவீரராமன்-அதி வீரராமனென்கிற இயற்பெயரையுடைய (பாண்டியராஜனானவன்), நிலவு - சந்திரிகையை, பொழி - பொழிகின்ற, தனி - ஒப்பற்ற, கவிகை - (முத்துக்)குடையையுடைய, நிடதர்கோன் - நளமஹாராஜ னது, புகழ் - புகழையுடைய, சரிதம் - சரித்திரமாகிய, களி - களிப் பைத் தருகின்ற, அமுது - அமிர்தத்தை, நெடுநீர் - கடலாற் சூழப் பட்ட, வைப்பில் - பூமியிலுள்ள, புலவர் - புலவரானவர், கூட்டுண- கொள்ளை கொள்ளும்படியாக, ஒழுகு-(அவ்வமிர்தம்) பெருகுகின்ற, புது மொழி - புதுக்காப்பியத்தை, தமிழால் - தமிழ் மொழியினாலே, புனைதல் செய்தான் - அலங்கரித்துப் பாடினான், எ - று.*

க - து. *அதிவீரராமபாண்டிய ராஜனானவன் நளமகா ராஜ னது சரித்திரத்தைத் தமிழினாற் பாடினா னென்பதாம்.*

*புலவரென்பது தேவர்க்கும் வித்துவான்களுக்கும் பெயர். இங் கே வான் என்றது நீலநிறமுள்ளதாகக் காணப்படு மாகாசத்தை. பின் வருவனவற்றையும் இப்படியே கொள்க. கூட்டுணற்குக் கொள்ளையிட லென்பது "நவமணி மகுடந், தேடிக் கண்டிலர் நிதி சில கண்டிலர் திகைத்து, வாடிச் சிந்தை நோயுழந் திவைமாற்றலர்*

கூட்டுண், டோடிப் போயின" (திருவிளையாடற் புராணம்-மாணிக்கம் விற்றபடலம்-க) என்பதனாலறிக. மொழியென்பது தன் காரியமாகிய காப்பியத்தையுணர்த்த, புதுவென்பது அக்காப்பியத்தை விசேடித்து நிற்கையால் இருபெயரொட் டாகுபெயரா மென்றறிக. நிலவு பொழி என்னும் விசேடணத்தால் கவிகை முத்துக்குடைக்காயிற்று. கடலினும் பெரிய நீரின்மையால் நெடுநீர் கடலை யுணர்த்திற்று.

அதிவீரராமனெனவே ஆக்கியோன்பெயரும், நிடதர்கோன் புகழ்ச்சரிதம் எனவே நூனுதலியபொருளும், அக்காரணத்தாலே தோன்றுகிற நைடதம் என்கிற வடமொழிப்பெயரே யிதற்குப் பெயரென்பதும், கூட்டுணவெனவே இந்த நூலுக்குப் பயனும் பெறப்பட்டன. தமிழாற் புனைதல் செய்தானெனவே முன்பு இது தமிழிலின்றி வடமொழியிலிருந்தெடுத்துத் தமிழின் மொழிபெயர்க்கப்பட்டதென்பது பெறப்படுகின்றது. ['நெடுநீர் வைப்பிற் புலவர்களி யமுதொழுகு' என்றதனால், விண்ணிற் புலவர்க்குக் கடலமிர்தம்போல மண்ணிற் புலவர்க்கு இச்சரித்திராமிர்த மமையுமென்னு முவமையணி தொனிக்கின்றது. 'இகலரசரேறு' என்பதில் அதிவீர ராமனிடத்தே சிங்கத் தன்மையை ஏற்றினதற்கேற்பப் பகைவரிடத்தே யானைத்தன்மையை யேற்றுமையால் ஏகதேச வுருவகவணியாம்.] இது பெரும்பாலு மீற்றுச் சீர்களிரண்டு மாச்சீர்களு மற்றை நான்குங் காய்ச்சீர்களுமாகிய வடிகளால் வந்த ஆசிரியவிருத்தம்.

---

# நாட்டுப்படலம்.

அஃதாவது நளனாலாளப்பட்ட நிடதநாட்டின் வளத்தைச் சொல்லுகிற படலம்.

[இதுமுத லிரண்டு பாட்டுகளால் மழைச்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கலித்துறை.

கருவி மாமழை கலைமக ளுருவென விளங்கி
யிருவி சும்பிடைப் படர்ந்துசென் றினமணி கொழிக்கும்
பரவை வெண்டிரை மேய்ந்துயர் பனிவரை யுயிர்த்த
வுருவ வோடரித் தடங்கணா ளுருக்கொடு மீண்ட.

NO. 1.

நாட்டுப்படலம்.

4-வது பக்கம்.



(LITHO. MEENAKSHIAMMAH, PRESS, MYLAPORE. 1905.)

நீடநாடு.

**இ - ள்.** கருவி - (உலகத்திற்குத் துணைக்) காரணமாகிய, மா - பெருமைபொருந்திய, மழை - மேகங்களானவை, கலைமகள் - சரஸ்வதியினது, உருவென - வடிவம்போல, விளங்கி - (வெண்மையாக) விளங்கி, இரு - பெரிய, விசும்பிடை - ஆகாசத்தினிடத்தே, படர்ந்து - பரந்து, சென்று - போய், இனம் - கூட்டமாகிய, மணி - இரத்தினங்களை, கொழிக்கும் - கொழிக்கின்ற, பரவை - கடலினது, வெள் - வெள்ளிய, திரை-அலைகளையுடைய (நீரை), மேய்ந்து - குடித்து, உயர் - உயர்ந்த, பனிவரை - மலையரசனால்,உயிர்த்த - (புதல்வியாகத்) தரப்பட்ட, உருவ - (காதுகளுக்கு) நேராக, ஓடு - ஓடுகின்ற, அரி - இரேகைகள் பரந்த, தடம் - விசாலமாகிய, கணாள் - கண்களையுடைய பார்வதியினது, உரு - (கரு) நிறத்தை, கொடு-பெற்று, மீண்ட - திரும்பின, எ-று.

**க - து.** மேகங்களானவை சரஸ்வதி வடிவம்போலச் சென்று கடனீரை யுண்டு பார்வதி வடிவம்போலத் திரும்பின வென்பதாம்.

முன்னுரு-வடிவு, பின்னுரு-நிறம். "உருவே யட்டையும் வடிவு நிறமும்" (இரேவணாராத்திரியர்-அகராதி சூத்திரம்) என்பதனாலறிக. ['மழை கலைமக ளுருவென விளங்கி' இதில் கலைமகளுரு உபமானம், மழை-உபமேயம், என-உருபு, விளங்கல்-பொதுத்தன்மை; இந்நான்கும் விரிந்து நிற்கையால் விரியுவமை யணியாம். 'தடங்கணாளுருக் கொடுமீண்ட' இதில் மழையாகிய உபமேயத்திலே தடங்கணாளுருவாகிய உபமானத்தின் குணத்தை யேற்றலால் பதப்பொருட் காட்சி யணியாம்.] படர்ந்து சென்று - நடந்துபோய் எனினுமாம். பரவை - தொழிலாகு பெயர். திரை - சினையாகு பெயர். இது முதல் பத்துப் பாட்டுகள் வரைக்கும் பெரும்பாலு முதற்சீரு மீற்றுச்சீரு மாச்சீர்களு மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய வடிகளால் வந்த கலித்துறைகள். (க)

அன்னங் கண்படு தண்பணை நிடதநா டளிக்கு
மன்னர் மன்னவன் மண்டமர் கடந்தவொள் வேலின்
மின்னி யாங்கவன் முரசென விண்ணிடை யதிர்ந்து [ழிந்த.
பொன்னங் குன்றின்மே லவன்கொடைபோன்மெனப் பொ

**இ-ள்.** அன்னம் - அன்னங்களானவை, கண்படு-தூங்குகின்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, பணை - கழனிகளையுடைய, நிடதநாடு - நிடத தேசத்தை, அளிக்கும் - காக்கின்ற, மன்னர் - அரசர்களுக்கு, மன்னவன் - அரசனாகிய (நளனது), மண்டு - நெருங்கிய, அமர் - போரை, கடந்த - முடித்த, ஒள் - ஒள்ளிய, வேலின் - வேல்போல,

மின்னி - மின்னுதல் செய்து, அவன் - அவனது, முரசென - முரசம் போல, விண்ணிடை - ஆகாசத்தினிடத்து, அதிர்ந்து - ஒலித்து, பொன் - பொன்னையுடைய, அம் - அழகிய, குன்றின்மேல் - இமய மலையின்மேல், அவன் - அவனது, கொடை - ஈகையை, போலும் என - ஒக்குமென்று சொல்லும்படியாக, பொழிந்த - (அம்மேகங்கள் நீரைச்) சொரிந்தன, எ - று.

க-து. அந்த மேகங்களானவை நளனது வேலைப்போல மின்னி, அவன் பேரிகையைப்போலச் சத்தித்து, அவன் கொடையைப்போல நீரைச் சொரிந்தன வென்பதாம்.

ஆங்கு - அசை. 'அன்னங் கண்படு தண்பணை நிடதநாடு' என்றமையால் அந்நாட்டின் நீர்வளத்தின் பெருமை பெறப்பட்டது. 'மன்னர் மன்னவன்' என்றமையால் சக்ரவர்த்தி யென்றதாயிற்று. வேலின் என்பதில் இன்-ஐந்தாவதனுருப்புப்பொருளது. இங்கே பொன்மலை யென்றது இமயமலையை; நிடதேசத்திற்குச் சமீபத்திற் சிறந்துள்ளது அதுவே யாதலால். பின் வரும் "கங்கை யென்றுல கேத்திய" என்னும் பாட்டில் அம்மலையிற் பிறந்துவருங் கங்கையே அந்நாட்டிற்கு நதி என்பதனாலுமறிக. [மேகத்திற்கு மின்னுதல்பற்றி வேலும், ஒலித்தல் பற்றி முரசமும், அம்மேகத்தின் பெய்தற்குக் கைம்மாறு நோக்காமை பற்றி ஈகையும் உபமானஞ் செய்யப்படுதலால் உவமையணியாம்.] ஆகவே இக்கதைக்கு நாயகனாகிய நளராசனுடைய வேன் முதலியவற்றி னுயர்வு தொனிக்கின்றது. போலும் என்பது போன்ம் எனத் திரிந்து வந்தது. (உ)

[இதுமுதல் மூன்று பாட்டுகளால் வெள்ளச் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

விலகி வில்லுமிழ் விரிகதிர் மணிபல வரன்றிப்
பொலன்முக கட்டுயர் பொன்னெடுங் குன்றின்வீ ழருவி
குலவு வெண்டிரைக் குரைகட லுடுத்தபார் மடந்தை
யலர்மு லைத்தலைத் துயல்வரு மாரமொத் துளதால்.

இ-ள். உயர்-(மலைகளில்) உயர்ந்த, நெடு - நெடிய, பொன்குன்றின் - இமயமலையின்மேல், பொலன் - அழகிய, முகட்டு - சிகரத்திலிருந்து, விலகி - இடைவிட்டு, வில் - ஒளியை, உமிழ் - வீசுகின்ற, விரி - விரிந்த, கதிர் - கிரணங்களையுடைய, பல - பலவகைப்பட்ட, மணி - முத்துக்களையும், வரன்றி - வாரிக்கொண்டு, வீழ் - வீழ்கின்ற, அருவி - வெள்ளமானது, குலவு - வளைவாகிய, வெள் - வெள்ளிய,

திரை - அலைகளையுடைய, குரை - ஒலிக்கின்ற, கடல் - கடலாகிய (ஆடையை), உடுத்த-(மருங்கிற்)சூழக்கொண்டிருக்கிற,பார்மடந்தை- பூமிதேவியினுடைய, அலர்-அடிபரந்த, முலைத்தலை-(அம்மலையாகிய) முலையினிடத்து, துயல்வரும்-புரளுகின்ற, ஆரம் - முத்துமாலையை, ஒத்துளது - ஒத்திருக்கின்றது, எ-று.

க - து. மலைவெள்ளமானது பூமிதேவியினது முலையின்மீதணிந்த முத்துமாலையை யொத்திருக்கின்றதென்பதாம்.

பலவகை முத்துக்களாவன:—குறிஞ்சிக் கருப்பொருளாகிய யானைக்கொம்பு, பன்றிப்பல், மூங்கில் இவை முதலியவற்றி லுண்டாகின்றவையாம். மணி பல - பலவகை மணிகள் எனினுமாம். பார்மடந்தை யென்றதற்கேற்பக் கடல் என்பதற்குக் கடலாகிய ஆடையென்றுரைக்கப்பட்டது. [பூமியிலே மடந்தைத் தன்மையையும், கடலிலே ஆடைத்தன்மையையும்,மலையிலே முலைத்தன்மையையும் ஆரோபித்தலாகிய உருவகம் உறுப்பாகவும், அருவியின்கண் ஆரத்தன்மையைச் சம்பாவித்தலாகிய தற்குறிப்பு உறுப்பியாகவும் வருதலால் உறுப்புறுப்பிக்கலவையணியாம்.] (௫)

வேழ வெண்மருப் பெறிந்துவெண் ணித்திலம் வரன்றிக்
காழ கிற்றுணி சந்தொடு கையரிக் கொண்டு
கோழ ரைச்செழுங் குங்குமத் தடஞ்சினை சாடி
யாழ்தி ரைக்கட லகடுகீண் டொழுகிய தன்றே.

இ - ள். வேழம் - யானைகளுடைய, வெள் - வெள்ளிய, மருப்பு - கொம்புகளை, எறிந்து - வீசிக்கொண்டும், வெள் - வெள்ளிய, நித்திலம் - முத்துக்களை, வரன்றி - வாரிக்கொண்டும், காழ் - வயிரம் பொருந்திய, அகில் - அகின்மரங்களுடைய, துணி - துண்டங்களை, சந்தொடு - சந்தனமரங்களோடு, கையரிக்கொண்டு-சேர்த்துக்கொண்டும், கோழ் - வழுவழுப்பாகிய, அரை - அரையையுடைய, செழு - செழிய, குங்குமம் - குங்கும மரங்களுடைய, தடம் - விசாலமாகிய, சினை - கிளைகளை, சாடி - முறித்துக்கொண்டும், ஆழ் - ஆழ்ந்த, திரை - அலைகளையுடைய, கடல் - கடலினது, அகடு - வயிற்றை, கீண்டு - கிழித்து, ஒழுகியது - (அவ்வெள்ளம்) சென்றது, எ - று.

க - து. அந்த வெள்ளமானது யானைத் தந்தத்தையும் முத்துக்களையும் அகிற்றருவையுஞ் சந்தனத் தருவையுங் குங்குமத்தருவையுங் கொண்டு சமுத்திரத்துட் சென்றதென்பதாம்.

அரித்தலென்பதற்குக் கையென்பது முன்னிடையாய்க் கூடி அவ்விரண்டும் ஒருசொல்லாய் நின்றன; கைகூடல், கால்சீத்தல்

என்பனபோல. மரங்களுக்குக் கோழரை, பொகுட்டரை, பொரியரை, முள்ளரை என்று சொல்லப்பட்டவற்றுள்ளே கோழரை சருச்சரையில்லாத வரையாம். பின் "கோழரை யரம்பை சாய்க்குங் குடகநாடாளும் வேந்தே" என்பதனாலுமறிக. கடலகடு - கடலின் நடுவிடம். அன்று, ஏ - அசைகள். (ச)

**கங்கை யென்றுல கேத்திய கடவுண்மா நதிவெண்**
**சங்கு சூலுளைந் தலறிய தடம்பணை தவழ்ந்து**
**கொங்கு யிர்த்தபூந் தடத்துலாய்க் குளம்பல நிரப்பி**
**யங்கண் மாநிலத் தமுதெனப் பரந்ததை யன்றே.**

இ - ள். கங்கை என்று - கங்காநதியென்று, உலகு - உயர்ந்தோரால், ஏத்திய - துதிசெய்யப்பட்ட, கடவுள் - தெய்வத்தன்மை பொருந்திய, மா - பெரிய, நதி - நதியானது, வெள் - வெள்ளிய, சங்கு - சங்குகளானவை, சூல் - சூலினாலே, உளைந்து - வருந்தி, அலறிய - இரையும்படியாக, தடம் - விசாலமாகிய, பணை - கழனிகளிலே, தவழ்ந்து - ஊர்ந்து, கொங்கு - வாசனையை, உயிர்த்த - வீசுகின்ற, பூ - மலர்களையுடைய, தடத்து - தடாகங்களில், உலாய் - திரிந்து, பல - பலவகைப்பட்ட, குளம் - குளங்களையும், நிரப்பி - நிறைத்து, அம் கண் - அழகிய இடத்தையுடைய, மா - பெரிய, நிலத்து - பூமிக்கு, அமுது என - அமிர்தமென்று சொல்லும்படியாக, பரந்தது - பரவிற்று, எ - று.

க - து. கங்காநதியானது கழனிகளையுந் தடாகங்களையுங் குளங்களையும் நிரப்பிப் பூமிக்கு அமிர்தமாகப் பரவிய தென்பதாம்.

உலகுக்கு உயர்ந்தோரென்பது "உலகமென்ப துயர்ந்தோர்மாட்டே" (திவாகரம்-மக்கட்பெயர்த்தொகுதி) என்பதனாலறிக. கங்காநதிக்குத் தெய்வத்தன்மையாவது தன்னின் மூழ்கியோரைப் பரிசுத்தராக்குதல். அலறியவென்பது செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். உயிர்த்தவென்பது காலவழுவமைதி. பலவகைக் குளமாவன: ஏரி, கயம், ஓடை, குட்டம், மடு முதலியன. [நிலத்தமுதெனவெனவே தேவருலகுக்குக் கடலமிர்தம்போ லென்னு முவமையணி தொனிக்கின்றது.] உலகேத்திய என்பதற்கு உலகத்தாரால் துதிசெய்யப்பட்ட என்றுரைப்பினு மமையும். தவழ்ந்து உலாய் நிரப்பி என்னும் வினையெச்சங்கள் பரந்தது என்னும் வினைகொண்டு முடிந்தன. கொங்கு உயிர்த்த - தேனைச் சொரிகின்ற எனினுமாம். ஐ-சாரியை, அன்று, ஏ - அசைகள். (ரு)

[இதுமுதல் ஐந்து பாட்டுகளால் வயல் வளச்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

ஒழுகு தீம்புனல் சிறைசெயு மோதையு முழுநர்
குழுவின் சும்மையு முழத்தியர் குரவையி னார்ப்புங்
கழனி வாழ்கென வான்முளை வித்துநர் கலிப்பு
மழைமு ழக்கொடு மாறுகொண் டொலித்தன மாதோ.

இ-ள். ஒழுகு - பெருகி யோடுகின்ற, தீ - மதுரம்பொருந்திய, புனல்-நீரை, சிறைசெயும்-(கரைகோலித்) தடுத்தற்கணுண்டாகின்ற, ஓதையும் - ஓசையும், உழுநர்-(ஏர்) உழுகின்றவருடைய, குழுவின் - கூட்டத்தினது, சும்மையும் - ஓசையும், உழத்தியர் - கடைசியரது, குரவையின் - குரவைக் கூத்தினது, ஆர்ப்பும் - ஓசையும், கழனி - வயல்களானவை, வாழ்கென - வாழ்கவென்று, வால் - வெள்ளிய, முளை - (நெல்லு) முளைகளை, வித்துநர் - விதைக்கின்றவருடைய, கலிப்பும் - ஓசையும், மழை - மேகத்தினது, முழக்கொடு - ஓசையுடனே, மாறுகொண்டு - பகைமைகொண்டு, ஒலித்தன - முழங்கின, எ - று.

க - து. அணை கட்டுதலா லுண்டா மோசையும், ஏருழுகின்றவ ரோசையும், கடைசியர் குரவைக்கூத்தோசையும், நெல் விதைக்கின்றவ ரோசையும், மழை முழக்கத்தோடு மாறுகொண் டொலித்தன என்பதாம்.

உழுநர்-மள்ளர். வான்முளை-மேன்மையாகிய நென்முளையெனினுமாம். வாழ்கவென்பது கடைகுறைந்தது. குரவை-கைகோத்தாடல். "குரவைக் கூத்தே கைகோத்தாடல்" (திவாகரம் - செயல்பற்றிய பெயர்த்தொகுதி) என்பதனாலறிக. [கரை கோலுதற்க ணுண்டாகிய வோசை முதலியவற்றிற்கு மழைமுழக்கத்தோடு மாறுகொள்ளுதலாகிய சம்பந்த மில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணியாம். இதனால் அவ்வொலிகள் மேக வொலியைப் போ லிருக்கின்றன வென்னு முவமையணி தொனிக்கின்றது.] (சு)

வள்ள வாய்ச்செழுங் கமலத்தில் வண்டு பாண்மிழற்று
மள்ள லங்கருஞ் சேற்றிடை யாமைகண் படுக்கும்
பள்ள நீர்ச்செழும் பணைதொறும் பணிலமுத் துயிர்க்குங்
கள்ளு லாமலர்ப் பொதும்பரிற் களிமயி லகவும்.

. இ-ள். வண்டு - வண்டுகளானவை, வள்ளம் - கிண்ணம்போன்ற, வாய் - வாயையுடைய, செழு - செழிய, கமலத்தில் - தாமரை

மலர்களிலே, பாண் - இசைகளை, மிழற்றும் - பாடிக்கொண்டிருக்கும், ஆமை - ஆமைகளானவை, அள்ளல் - குழம்பாகிய, கரு-கரிய, சேற்றிடை - சேற்றின்கண், கண் படுக்கும் - தூங்கிக்கொண்டிருக்கும், பணிலம் - சங்குகளானவை, பள்ளம் - ஆழமாகிய, நீர் - நீரையுடைய, செழு - செழிய, பணைதொறும் - கழனிகளிலெல்லாம், முத்து - முத்துக்களை, உயிர்க்கும் - ஈனும், களி - களிப்பையுடைய, மயில் - மயில்களானவை, கள் - தேனுனது, உலாம் - பெருகுகின்ற, மலர் - மலர்களையுடைய, பொதும்பரில் - சோலைகளிலே, அகவும் - ஆடிக்கொண்டிருக்கும், எ - று. அம் - சாரியை.

க - து. வண்டுகள் தாமரையிற் பாடும், ஆமைகள் சேற்றிலே நித்திரைசெய்யும், சங்குகள் கழனிகளில் முத்துக்களை ஈனும், மயில்கள் சோலைகளிலாடும் என்பதாம். (எ)

பண்ணை வாய்த்தவழ் பணிலங்க ளுயிர்த்தவெண் முத்துங்
கண்ணு டைக்கரும் பீன்றவெண் முத்தமுங் கமழுந்
தண்ணந் தாமரை சொரிந்தவெண் முத்தமுந் தயங்கி
வெண்ணி லாக்கதிர் விரித்தலிற் குமுதம்வாய் விள்ளும்.

இ - ள். பண்ணைவாய் - கழனிகளிடத்து, தவழ் - தவழ்கின்ற, பணிலங்கள் - சங்குகளால், உயிர்த்த - தரப்பட்ட, வெள் - வெள்ளிய, முத்தும் - முத்துக்களும், கண் - கணுக்களை, உடை - உடைய, கரும்பு - கரும்புகளால், ஈன்ற - தரப்பட்ட, வெள் - வெள்ளிய, முத்தமும் - முத்துக்களும், கமழும்-பரிமளிக்கின்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, அம் - அழகிய, தாமரை - தாமரை மலர்களால், சொரிந்த - தரப்பட்ட, வெள் - வெள்ளிய, முத்தமும் - முத்துக்களும், தயங்கி - விளங்கி, வெள் - வெள்ளிய, நிலா - சந்திரனது, கதிர் - கிரணத்தை, விரித்தலின் - பரப்புதலினாலே, குமுதம் - அல்லிமலர்களானவை, வாய் விள்ளும் - (சந்திரோதய மில்லாத காலத்திலும்) மலரும், எ - று.

க - து. சங்கின் முத்துக்களும், கரும்பின் முத்துக்களும், தாமரை முத்துக்களும் கிரணங்களை விரித்தலால் அல்லி மலர்கள் மலரும் என்பதாம்.

சங்கு முதலானவைகளிலே முத்துப் பிறக்குமென்பது "தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னார், கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகா, ரிந்து வுடும்புக ராமுத்த மீனு மிருபதுமே" (அரதனச்

சுருக்கம்-௬௫) என்பதனாலறிக. [முத்தாகிய வுபமேயத்திலே சந்திரனாகிய வுபமானத்தின் குணத்தை யாரோபித்தலாற் காட்சியணி.] (அ)

விழுந்த வஞ்சிறை வண்டின மிதிப்பமெல் லரும்பு
கிழிந்து வார்தரு தேறலுங் கிளர்சினைப் பலவின்
பழங்க னிந்துவீழ் தேறலும் பழனங்க டோறும்
வழிந்து பாய்தலின் வானுற வளர்வன செந்நெல்.

**இ-ள்.** விழுந்த-(மேல்) விழுந்த, அம் - அழகிய, சிறை - சிறைகளையுடைய, வண்டு - வண்டுகளின், இனம் - கூட்டங்களானவை, மிதிப்ப - துவைக்க, மெல் - மெல்லிய, அரும்பு-அரும்புகளானவை, கிழிந்து - கிழிய, வார்தரு-(அவைகளிலிருந்து) ஒழுகுகிற, தேறலும்-தேனும், கிளர் - விளங்குகின்ற, சினை - கிளைகளையுடைய, பலவின்-பலாமரங்களின், பழம் - பழங்களானவை, கனிந்து - கைய, வீழ்-(அவைகளிலிருந்து) விழுகின்ற, தேறலும்-தேனும், வழிந்து - பெருக்கெடுத்து, பழனங்கள்தோறும் - கழனிகளிலெல்லாம், பாய்தலின்-பாய்தலினாலே, வான் - ஆகாசத்தை, உற - தொடும்படி, செந்நெல்-செந்நெற் பயிர்களானவை, வளர்வன - வளரும், எ - று.

**க - து.** மலர்களின் தேனும், பலாப்பழங்களின் தேனும், கழனிகளிற் பாய்தலினாற் செந்நெல் விளைவன என்பதாம்.

கிழிய, கனிய என்பன கிழிந்து, கனிந்து எனத்திரிந்து வந்தன; "வானின்றுலகம் வழங்கி" (திருவள்ளுவர் - வான்சிறப்பு-க) என்பதில் நிற்பவென்பதுநின்றெனத்திரிந்தமைபோல. [செந்நெற் பயிருக்குந் தேறலுக்குஞ் சம்பந்த மில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தமையால் தொடர்புயர்வு நவிற்சியணி.] (௯)

கூனி ரும்பினிற் குறைத்தரி சும்மையிற் கொடுபோய்
மேனி வந்துயர் வரையெனப் போர்பல வேய்ந்து
நீனி றக்கரும் பகட்டினாற் றெழித்துவை நீத்த
தூநி றத்தநெற் பண்டியிற் பற்பலர் தொகுப்பார்.

**இ-ள்.** கூன்இரும்பினில் - அரிவாளினால், குறைத்து-அறுத்து, அரி - (அவ்வறுக்கப்பட்ட) அரிகளை, சும்மையில் - சுமைகளாக்கி, கொடு போய்-கொண்டுபோய், மேல்-மேல், நிவந்து உயர் - ஓங்கிய, வரையென - மலைகள்போலத் (தோன்ற), பல - பலவாகிய, போர் - போர்களை, வேய்ந்து - போட்டு, நீல்நிறம் - நீலநிறம் பொருந்திய, கரு - பெரிய; பகட்டினால் - கடாக்களினாலே, தெழித்து - துவைப்

பித்து, வை - வைக்கோலை, நீத்த - கழித்த, தூ - பரிசுத்தமாகிய, நிறத்த - காந்தியையுடைய, நெல் - நெற்களை, பண்டியில் - பண்டிகளாற் (கொண்டுபோய்), பற்பலர் - பலபல சாதியார்களும், தொகுப்பார் - (களஞ்சியங்களிலே) நிறைப்பார்கள், எ - று.

க - து. நெற்களை யறுத்துக் கடாக்களால் மிதிப்பித்து வைக்கோலைத் தள்ளி அந்நெற்களைப் பண்டியிற் கொண்டுபோய்க் களஞ்சியங்களிலே நிறைப்பார்கள் என்பதாம்.

கூனிரும்பு-இருபெயரொட்டாகுபெயர். நிவந்துயர்-ஒரு பொருளைக் குறித்த விருசொற்கள்; இதற்கு "ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்" (தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-எச்சவியல்-கூச) என்பது விதி. நீல் - கடைக்குறை. நீனிறக்கரும்பகடு - எருமைக்கடா.()

[இதுமுதற் பதினறு பாட்டுகளால் அந்நாட்டிலுள்ளோரது செல்வமுதலிய சிறப்புகள் சொல்லப்படுகின்றன.]

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

குரும்பைமென் முலையா ராடக் கூந்தலி னறவந் தோய்ந்த
விரும்புன லாறு பாய வெறிதிரை சுருட்டுந் தெண்ணீர்க்
கருங்கடற் புலவு நீங்கி நறுமணங் கமழு மென்றான்
முருந் துறழ் மூரலார்த மிகுதியை மொழிய லாமோ.

இ-ள். குரும்பை - தென்னம் பிஞ்சுபோன்ற, மெல் - மெல்லிய, முலையார் - முலைகளையுடைய மாதர், ஆட - முழுக, கூந்தலில்- (அவர்) தலைமயிரிலுள்ள, நறவம் சாந்தத்தோடு, தோய்ந்த - கலந்த, இரு - பெரிய, புனல்-நீரானது, ஆறு - ஆற்றினாலே (போய்), பாய - விழ, எறி - வீசுகின்ற, திரை - அலைகளை, சுருட்டும் - மடக்குகின்ற, தெள் - தெளிவுபொருந்திய, நீர் - நீரையுடைய, கரு - கரிய, கடல்- கடலினது, புலவு - புலானாற்றத்தை, நீங்கி - நீங்கச்செய்து, நறுமணம் - நல்லமணமானது, கமழும் என்றால்-(அக்கடலிடத்தே)மணக்குமென்றால், முருந்து - மயிலிறகினடியை, உறழ் - ஒத்த, மூரலார்- பற்களையுடைய அம்மாதரது, மிகுதியை - பெருக்கத்தை, மொழியலாமோ - (நான்) சொல்லலாமோ, எ - று.

க - து. மாதர்களாடிய நீரினாலே கடலானது புலால் நாற்ற நீங்கி மணம் வீசுமானால் அம்மாதர் பெருக்கத்தைச் சொல்லலாமோ வென்பதாம்.

தம் - சாரியை, ஓ - எதிர்மறை. நறவமென்னும் வாசனைப்பெயர் அதனையுடைய மயிர்ச்சாந்தத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். நீங்கி

யென்பது பிறவினைப் பொருளைத் தந்தது; "குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்" (திருவள்ளுவர்-வெஃகாமை-க) என்பதிற் பொன்றி யென்பதுபோல. [அந்நாட்டு மகளிரது செல்வ மிகுதியைச் சொல் லுதலால் வீறுகோ ளணியாம்.] இதுமுதற் பதினேழு பாட்டுகள் அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தங்கள். (கக)

பூமலி தடங்க டோறும் புனல்குடை மகளி ரீட்டங்
காமரு கழனி தோறுங் கடைசியர் குரவை யீட்டந்
தேமலர்ச் சோலை தோறுஞ் செழுங்குயிற் றொழுதி யீட்டங்
கோமறு கிடங்க டோறுங் குணில்பொரு முரசி னீட்டம்.

இ - ள். பூ - மலர்களாலே, மலி - நிறைந்த, தடங்கள்தோறும் - குளங்களிலெல்லாம், புனல் குடை - நீர் விளையாடுகின்ற, மகளிர் - மாதரது, ஈட்டம் - கூட்டமும்; காமர் - அழகிய, கழனிதோறும் - வயல்களிலெல்லாம், குரவை - கைகோத்தாடுதலையுடைய, கடைசி யர் - உழத்தியரது, ஈட்டம் - கூட்டமும்; தேம் - வாசனை பொருந் திய, மலர் - மலர்களையுடைய, சோலைதோறும் - சோலைகளிலெல் லாம், தொழுதி - ஒலித்தலையுடைய, செழு - செழிய, குயில் - குயில் களது, ஈட்டம் - கூட்டமும்; கோ-அரசரது, மறுகு-வீதிகளுடைய, இடங்கள்தோறும் - இடங்களிலெல்லாம், குணில் - குறுந்தடியால், பொரு - அடிக்கப்படுகின்ற, முரசின் - பேரிகைகளது, ஈட்டம்-கூட் டமும் (இருக்கும்), எ - று.

க - து. குளங்களெங்கு நீராடுமாதர் கூட்டங்கள், வயல்களெங் கும் உழத்தியர் கூட்டங்கள், சோலைகளெங்குங் குயிற் கூட்டங்கள், இராஜவீதிகளெங்கும் பேரிகைக் கூட்டங்கள் என்பதாம்.

காமர் உகரச்சாரியை பெற்றுக் காமரு என வந்தது. தொழுதி - புள்ளொலி. கோ - சாதியொருமை. மகளிரீட்ட முதலிய எழுவாய் கட்குப் பயனிலையாக இருக்கும் என்னும் வினை வருவிக்கப்பட்டது.()

கறுவொடு மொன்றோ டொன்று காரண மின்றிச் சீ றிப், பொறியுடைக் குறும்பூழ் தம்மிற் போர்செயப் பொரு த்து மோதை, செறிமயிர்த் தகர்க டம்மிற் றியெழத் தாக்க ஞெக்கி, யறைகழல் வீர ரார்க்கு மமலையை யவிக்கு மன்றே.

இ - ள். பொறி உடை-புள்ளிகளையுடைய, குறும்பூழ் - காடைக ளானவை, தம்மில் - தம்முள்ளே, ஒன்றோடொன்று - ஒன்றுடனொ ன்று, காரணம் இன்றி-ஏதுவில்லாமல், கறுவொடும்-கறுவுதலுடனே, சீறி - சீறிக்கொண்டு, போர் - சண்டையை, செய-செய்யும்படியாக,

பொருத்தும் - (அவற்றைக்) கூட்டுதற்கனுண்டாகின்ற, ஓதை-(சிறு வர்) ஓசையானது, செறி - நெருங்கிய, மயிர் - மயிர்களையுடைய, தகர் கள் - ஆட்டுக்கடாக்கள், தம்மில் - தம்முள்ளே, தீ - நெருப்பானது, எழ - தோன்ற, தாக்கல் - (ஒன்றையொன்று) இடித்தலை, நோக்கி - பார்த்து, அறை - ஒலிக்கின்ற, கழல் - வீரக்கழலையுடைய, வீரர் - வீரரானவர், ஆர்க்கும் - (ஆச்சரியப்பட்டு) ஒலிக்கின்ற, அமலையை - ஓசையை, அவிக்கும் - அடக்கும், எ - று.

க - து. காடைகளைச் சண்டை செய்விக்குஞ் சிறுவர்கள் சத்த மானது ஆட்டுக்கடாக்களைச் சண்டை செய்வித்துப் பார்க்கும் வீரர் சத்தத்தை யடக்கும் என்பதாம்.

அன்று,ஏ-அசைகள்.தகுதிபற்றிக் காடைச்சண்டைக்குச் சிறுவ ரென்பது வருவிக்கப்பட்டது. கழல் - வீரர்காலணி. "வீரத்தில் வீக் கியகழலே யாடவர் கான்மிசை யணிவடம்" (திவாகரம் - செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி) என்பதனுலறிக. (கரு)

**மா**தர்மென் முல்லை யீன்ற வான்முகை யனைய மூரல்
கோதறு கருனை தீம்பால் கொழுங்கனி யிவற்றி னோடு
மாதுலர் யாவ ரென்ன வதிர்குரன் முரசிற் சாற்றி
வேதியர்க் கருத்திப் பின்னர் விருந்தொடு நுகர்வர் மாதோ.

இ-ள். ஆதுலர் - யாசகர், யாவர் என்ன - யாவரென்று, அதிர் - அதிர்கின்ற, குரல் - ஓசையையுடைய, முரசின்-முரசினுலே, சாற்றி- வினவி (வருவித்து), மாதர் - அழகிய, மெல் - மெல்லிய, முல்லை - முல்லைக்கொடியினுல், ஈன்ற - தரப்பட்ட, வால் - வெள்ளிய, முகை அனைய - அரும்புகள்போலும், மூரல் - சோறும், கோதறு - குற்ற மற்ற, கருனை - பொரிக்கறியும், தீ - தித்திப்பாகிய, பால் - பாலும், கொழு - செழிய, கனி - பழமும், இவற்றினோடும் - (ஆகிய) இவற் ருேடு மற்றை யுணவுகளையும், வேதியர்க்கு - அந்தணரை, அருத்தி- (முன்னே) உண்பித்து, பின்னர் - (அதன்) பின்பு, விருந்தொடும் - (சுற்றத்தார் முதலியோரோடன்றி ) விருந்தினரோடும், நுகர்வர் - (அந்நாட்டோர்) உண்பார், எ - று.

க - து. யாசகரை வரும்படி முரசறைவித்து முன் பிராமணரை உண்ணச்செய்து பின் விருந்துடனுண்பார் என்பதாம்.

'மாதர் மென் முல்லை' என்பதற்கு மகளிர் வளர்க்கின்ற மெல் லிய முல்லைக்கொடி என்றுரைப்பினுமாம். கோது - தீந்துபோதல் முதலிய குற்றங்கள். தீம்பால் என்பதில் தீ இயற்கையடை. உம்மை யிரண்டும் எச்சம். வேதியர்க்கு - உருபுமயக்கம். மாது, ஓ - அசைகள்.

விருந்ினராவார் - பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அஃ தின்மையிற் குறியாது வந்தாரும் என இருவகையர். (கச)

முல்லையங் கோதை நல்லார் முகமதி வெயர்வு தோன்ற
வல்லிநுண் மருங்கு னோவ வால்வளை வாய்விட் டார்ப்ப
மெல்விரற் காந்தட் சேப்ப வெண்டயிர் கடையு மோதை
கொல்புலி முழக்க மென்ன வயின்றொறுங் குளிறு மாதோ.

இ - ள். முல்லை - முல்லை மலர்களைச் சூடிய, அம் - அழகிய, கோதை - கூந்தலையுடைய, நல்லார்-இடைச்சியர், முகம் மதி-(தமது) முகமாகிய சந்திரனிடத்து, வெயர்வு - வேர்வையானது, தோன்ற - உண்டாகவும், வல்லி - பூங்கொடிபோலும், நுண் - நுட்பமாகிய, மருங்குல் - இடையானது, நோவ - வருந்தவும், வால் - வெள்ளிய, வளை - சங்க வளையல்களானவை, வாய்விட்டு - ஒன்றோடொன்று தாக்குண்டு, ஆர்ப்ப - ஒலிக்கவும், மெல் - மெல்லிய, விரல் - விரல்கள், காந்தள் - காந்தண்மலர்போல, சேப்ப - சிவக்கவும், வெள் - வெள்ளிய, தயிர் - தயிரை, கடையும் - கடைதலினா லுண்டாகின்ற, ஓதை - ஓசையானது, கொல் - கொல்லுகின்ற, புலி - புலியினது, முழக்கம் என்ன - உறுமுதல்போல, வயின்றொறும் - (அவர்) வீடு தோறும், குளிறும் - ஒலிக்கும், எ - று.

க-து. இடைச்சியர் தயிர்கடையுஞ் சத்தமானது புலி முழக்கம் போல வீடுகளெங்குஞ் சத்திக்கு மென்பதாம்.

'மெல்விரல் காந்தள் சேப்ப' என்பதற்கு மெல்லிய விரல்களாகிய காந்தள் மலர் சிவக்க என்றுரைத்தலுமாம். காந்தள்-முதலாகுபெயர். வெண்டயிர் என்பதில் வெள் என்பதும், கொல்புலி யென்பதில் கொல் என்பதும் இயற்கை யடைகள். மாது, ஓ - அசைகள். [நிலை மத்திட்டுத் தயிர் கடைகின்ற இடைச்சிகளுக்கு அப்போது உண்டாகின்ற முகம் வெயர்த்தலாதியாகிய சுபாவத்தைச் சொல்லுதலாகிய தன்மை நவிற்சியணியும், கொல்புலி முழக்கமென்னக் குளிறுமென்னு முவமையணியும் சேர்ந்து வருதலால் சேர்வையணியாம்.](கரு)

பூங்கரும் புடைந்த தீஞ்சா றடுபுகை புயலென் றெண்ணி
மாங்குயிற் றொகுதி யாவும் வாய்விடா தொழிந்த மஞ்ஞை
தூங்கிசை வண்டுந் தேனுஞ் சுரும்பொடு ஞிமிறும் பாடத்
தேங்கமழ் சோலை தோறுஞ் சிறைவிரித் தாடு மாதோ.

இ—ள். உடைந்த - (ஆலையிற்) சிதைந்த, பூ - அழகிய, கரும்பு- கரும்புகளுடைய, தீ - தித்திப்பாகிய, சாறு - சாற்றை, அடு - காய்

ச்சுமிடத் தெழுகின்ற, புகை – புகையை, புயல் என்று–மேகமென்று எண்ணி – நினைத்து, மா – மாமரங்களிலுள்ள, குயில் – குயில்களுடைய, தொகுதியாவும் – கூட்டங்களெல்லாம், வாய்விடாதொழிந்த– கூவாதொழிந்தன; மஞ்ஞை – மயில்களானவை, தூங்கிசை – நாட்டிய ராகத்தை, வண்டும் – கருவண்டுகளும், தேனும் – தேன்வண்டுகளும், சுரும்பொடு – பொறி வண்டுகளுடனே, ஞிமிறும் – பொன் வண்டுகளும், பாட – பாடுதல்செய்ய, தேம் – தேனானது, கமழ் – மணக்கின்ற, சோலைதோறும் – சோலைகளிலெல்லாம், சிறை–கலாபத்தை, விரித்து – விரித்துக்கொண்டு, ஆடும் – கூத்தாடும், எ–று.

க–து. கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகையி லெழும் புகையை மேகமென்று. குயில்கள்கூவாதடங்கின. வண்டுகள் பாட மயில்கள் நடனமாடின என்பதாம்.

தேம் – வாசனை யெனினுமமையும். கலாபம்–தோகை. ஒழிந்த வென்பது முற்றெச்சமாய் வந்தது; "பாயுமாரிபோற் பகழிசிந்தினு, ராயர்மத்தெறி தயிரினுயினுர்" (சீவகசிந்தாமணி – கோவிந்தையாரிலம்பகம்-கரு) இதிற் சிந்தினரென்பது சிந்தவென்னும் பொருளைத் தந்தமைபோல. வண்டு–தேன்–சுரும்பு–ஞிமிறு இந்நான்கும் வண்டுகளின் சாதிபேதம்; "மங்கைநல்லவர் கண்ணுமனமும்போன், றெங்கு மோடி யிடறுஞ்சுரும்புகாள், வண்டுகாண்மகிழ் தேனினங்காண்மது, வுண்டுதேக்கிடு மொண்ஞிமிறீட்டங்காள்" (சீவகசிந்தாமணி – குணமாலையாரிலம்பகம்-சஉ) என்பதனாலறிக. தேன்–தேமென ஈறுதிரிந்தது. மாது, ஓ – அசைகள். மேகத்தைக் காணும்போது குயில்களுக்குத் துன்பமும் மயில்களுக்கு இன்பமும் உண்டாதல் சுபாவம். [புகையை மேகமென்று மயங்குதலினாலே மயக்கவணியாகும்.] (கரு)

அரக்கெறி குமுதச் செவ்வா யலர்முலை யந்ந லார்தந்
திருக்கிளர் கமலம் பூத்த சேயரிக் கண்ணும் வாவி
யுருக்கிளர் குவளைப் போதும் வேற்றுமை யுணரா தூற்ற
வரிச்சிறைத் தும்பி யோடு வண்டின மருளு மாதோ.

இ–ள். அரக்கு – செந்நிறத்தை, எறி – வீசுகின்ற, குமுதம் – அல்லிமலர்போலும், செ – செய்ய, வாய் – வாயையும், அலர் – அடிபரந்த, முலை–முலைகளையுமுடைய, அந்நலார்–அந்நாட்டுமாதருடைய, திரு – அழகினால், கிளர் – விளங்குகின்ற, கமலம் – தாமரைப்பூவாகிய (முகங்களிடத்து), பூத்த – மலர்ந்த, சேய் – செய்ய, அரி – இரேகைகளையுடைய, கண்ணும்–கண்களுக்கும், (கமலம்) – தாமரைமலர்க

ளுக்கு நடுவில் பூத்திருக்கும், உரு - அழகினால், கிளர்-விளங்கு கின்ற, குவளைபோதும்-நீலோற்பல மலர்களுக்கும், வாவி-குளத் தின்கண், வேற்றுமை - பேதத்தை, உணராது - அறியமாட்டாமல், உற்ற-(தேனுண்ண) அடைந்த, வரி - கீற்றுகளுள்ள, சிறை - சிறை களையுடைய, தும்பியோடு - தும்பிகளுடன், வண்டு - வண்டுகளின், இனம் - கூட்டம், மருளும் - மயங்கும், எ - று.

**க-து.** அந்நாட்டுப்பெண்களின் கண்க ளிவையென்றுங் குவளை மல ரிவையென்றும் அறியாது தும்பிகளும் வண்டுகளும் மயங்கு மென்பதாம்.

அரக்கெறி குமுதம் என்றமையால் செவ்வல்லி மலர் எனக் கொள்க. அந்நலார் என்பதனை அம் - நல்லார் எனப்பிரித்து அழகிய மாதர் என்றுரைத்தலுமாம். கமலங் குவளைக்குங் கூட்டப்பட்டது. வாவியிடத் தென்றதனால் அந்நலார் நீர்விளையாடு மகளிரெனக்கொ ள்க. மாது, ஓ-அசைகள். [அவர் முகங்களைச் சேர்ந்த கண்களுக்குந் தாமரை மலர்களைச் சேர்ந்த குவளைகளுக்கும் விசேடந் தோன்றா மையைச் சொல்லுதலாற் பொதுமை யணியாகும்.] (கஎ)

அல்லியங் கோதை மாத ரன்பொடு வளர்த்த முல்லை
மெல்லரும் பீன்ற தென்று விழாவயர் முழவி னோடு
மல்லுயர் திணிதோண் மைந்தர் மங்கையர் வதுவை யாற்றும்
பல்லிய முழக்க மார்க்கும் பரவையோ டிகலு மாதோ.

**இ-ள்.** அல்லி - அகவிதழ்களாலாகிய, அம-அழகிய, கோதை - பூமாலையையுடைய, மாதர் - மகளிரானவர், அன்பொடு - அன்பு டனே, வளர்த்த - (தம்மால்) வளர்க்கப்பட்ட, முல்லை - முல்லைக் கொடியானது, மெல் - மெல்லிய, அரும்பு - அரும்புகளை, ஈன்றது என்று - தந்ததென்று நினைத்து, விழா - (அதற்குத்) திருவிழாவை, அயர் - செய்யுமிடத்துண்டாகின்ற, முழவினோடு - வாத்தியவொலி யோடு, மல் - மற்போரில், உயர் - உயர்ந்த, திணி - வலிமைபொரு ந்திய, தோள் - தோள்களையுடைய, மைந்தர் - காளையரானவர், மங் கையர் - மங்கைப்பருவப் பெண்களை, வதுவை ஆற்றும் - விவாகஞ் செய்தற்க ணுண்டாகின்ற, பல் இயம் - பலவகை வாத்தியங்களது, முழக்கம் - ஓசையானது, ஆர்க்கும் - ஒலிக்கின்ற, பரவையோடு - கடலொலியோடு, இகலும் - பகைக்கும், எ-று.

**க-து.** முல்லை மலர்ந்ததென்று திருவிழா நடத்துகின்ற வாத்திய வோசையும், விவாக நடத்துகின்ற வாத்தியவோசையும், கடலோசை யோடு மாறுபடு மென்பதாம்.

கற்புடைய மாதருக்கு முல்லைப்பூ உரித்தாதலால் 'அன்பொடு வளர்த்த முல்லை' என்றார். இது,"முல்லை யந்தொடை யருந்ததி மூத லெழு முனிவ, ரில்ல றம்புரி துணைவியர்" (பிரபுலிங்கலீலை-கைலாய கதி-உஎ) என்பதனானு மறிக. அதற்கு விழாவாவது பருவப்பெண் ணுக்கு முதற்பூப்பிலே செய்யப்படுஞ் சிறப்பை அதன் முதற் பூப்பி லே செய்தல். [வாத்திய வோசைக்குங் கடலோசைக்கும் பகையில் லாமையிலே பகையைக் கற்பித்தமையினாலே தொடர்புயர்வு நவிற்சி யணியாகும்.] பல்லியம் என்பதனை ஒரு சொல்லாகக் கொண்டு வாத் தியம் எனினுமாம். மங்கையர் வதுவை யென்றதனால் மங்கைப்பருவ மடைதற்கு முன்னே விவாகஞ் செய்தலில்லை யென்பது பெறப் பட்டது. மாது, ஒ – அசைகள். (கஅ)

அவிரிழை சுமக்க லாற்று தந்நலார் பரிந்து நீத்த
திவளொளி மணியு முத்துஞ் சிந்திய முன்றி றோறுங்
குவிமுலைக் கயவாய்ச் செங்கட் குடம்புரை செருத்தன் மேதி
கவையடி பெயர்ப்ப மாழ்கிக் காறளர்ந் தொதுங்கு மன்றே.

இ – ள். அந்நலார்–அத்தேசத்து மாதரால், சுமக்கல் ஆற்றாது – சுமக்கமாட்டாமல், பரிந்து – வருந்தி, நீத்த – களைந்தெறியப்பட்ட, அவிர் – ஒளிசெய்கின்ற, இழை – ஆபரணங்களின், திவள் – அசை யாநின்ற, ஒளி – ஒளியையுடைய, மணியும்–பலவிதமணிகளும், முத் தும்–முத்துக்களும், சிந்திய–இறைந்து கிடக்கின்ற,முன்றில்தோறும்– வீட்டு முன்னிடந்தோறும், குவி – குவிந்த, முலை – முலைகளையும், கயம் – பெரிதாகிய, வாய் – வாயையும், செ – செய்ய, கண் – கண் களையும், குடம்புரை – குடம்போலும், செருத்தல்–மடியையுமுடைய, மேதி – எருமைகளானவை, கவை – பிளப்பையுடைய, அடி – அடி களை, பெயர்ப்ப – எடுத்துவைக்க, மாழ்கி – வருந்தி, கால் – கால்க ளானவை, தளர்ந்து – சோர்ந்து, ஒதுங்கும் – (பக்கங்களிலே) வில கும், எ–று.

க – து. பெண்கள் களைந்தெறிந்த ஆபரணங்களின் நவமணிக ளின்மேல் எருமைகள் பிளவடி வையாமல் விலகிப்போமென்பதாம்.

மேதி–எருமை; குவிமுலை முதலாகிய விசேடணங்களால் இது பெண்ணெருமையெனக்கொள்க. இல்முன் முன்றிலென நிலைமாறிப் போலியாய் வந்தது. அடி–கீழ்க்கால். தளர்ந்து என்னுஞ் சினைவினை ஒதுங்குமென்னு முதல்வினையோடு முடிந்தது. இதற்கு, "அம்முக் கிளவியுஞ் சினைவினை தோன்றிற், சினையொடு முடியா முதலொடு முடியினும், வினையோரனைய" (தொல்காப்பியம் – சொல்லதிகாரம் –

வினையியல்-கூச) என்பது விதி. அம்மணிகளு முத்துக்களுங் குளம் பின் சந்திலேறுண்டால் நோமென்றஞ்சி யொதுங்குமென்பது கருத் தாயிற்று. அன்று, ஏ - அசைகள். [செல்வ மிகுதியைச் சொல்லுத லால் வீறுகோளணியாம்.] (கக)

பொரியரைத் தேமா நெற்றிப் பூங்கனி யிழிந்த தேனும்
விரிதலை யரம்பை யீன்ற மென்பழ னுகுத்த தேனு
முருகவிழ் சுளைவாய் விண்ட முட்புறக் கனியின் றேனுங்
குருகுபாய் தடமு மியாறுங் குறைவறப் பெருகு மன்றே.

இ - ள். பொரி - பொருக்குகளோடு கூடிய, அரை-அரையை யுடைய, தே மா-தித்திப்பு மாமரத்தினது, பூ-அழகிய, கனி-பழங்க ளானவை, நெற்றி - முதிர, இழிந்த - (அவைகளிலிருந்து) ஒழுகிய, தேனும் - மதுவும்; விரி - விரிந்த, தலை - தலையையுடைய, அரம்பை- வாழைகளால், ஈன்ற - தரப்பட்ட, மெல் - மெல்லிய, பழன்-பழங்க ளால், உகுத்த - சொரியப்பட்ட, தேனும் - மதுவும்; விண்ட-வெடி த்த, முட்புறக்கனியின் - பலாப்பழங்களினுடைய, முருகு - பரிமள மானது, அவிழ் - விரிகின்ற, சுளைவாய் - சுளைவாயிலிருந்து (ஒழு கிய), தேனும் - மதுவும்; குருகு - பறவைகளானவை, பாய் - பாய் கின்ற, தடமும் - ஏரிகளிலும், யாறும் - நதிகளிலும், குறைவு அற - குறைவுதீர, பெருகும் - பெருகிப்பாயும், எ-று.

க - து. மாங்கனித்தேனும், வாழைக்கனித்தேனும்,பலாக்கனித் தேனும், ஏரிகளிலும் நதிகளிலும் பெருகும் என்பதாம்.

நெற்றி-வினையெச்சத்திரிபு. நெற்றல்-முதிர்தல். முட்புறக்கனி யென்பது முள்ளுகளைப் புறத்திலுடைய கனியாம். குறைவு - வெயி லாதிகளா லுண்டாவது. [முக்கனிகளின் சாற்றிற்கும் ஏரிநதிகளுக் குஞ் சம்பந்த மில்லாமையிலே சம்பந்தத்தைக் கற்பித்தலினாலே தொடர்புயர்வு நவிற்சியணியாம்.] அன்று, ஏ-அசைகள். (உ0)

அருமறைக் கிழவ ருள்ளத் தவாக்கெட வன்பி னல்கும்
பெருநிதிக் குப்பை யோடு பெய்புனல் பெருகி யோடி
வரிவளை யலறி யீன்ற மணியிள நிலவு காலுந்
திருவநீள் கழனி தோறுஞ் செந்நெலை வளர்க்கு மாதோ.

இ - ள். அரு - அரிய, மறை கிழவர்-வேதத்திற்குரிய பார்ப்பா ருடைய, உள்ளத்து - மனத்திலுள்ள, அவா - (பொருள்) ஆசை யானது, கெட - அழிய, அன்பின் - பத்தியினாலே, நல்கும் - கொடு க்கப்படுகின்ற, பெரு - பெரிய, நிதி - பொருள்களுடைய, குப்பை

யோடு - குவியல்களோடு, பெய் - (விதிப்படி) வார்க்கப்படுகின்ற, புனல் - நீரானது, பெருகி - பெருக்கெடுத்து, ஓடி - விரைந்துபோய், வரி - இரேகைகளையுடைய, வளை - சங்குகளால், அலறி - கூவி, ஈன்ற - தரப்பட்ட, மணி - முத்துக்களானவை, இள-இளமைபொருந்திய, நிலவு - சந்திரிகையை, காலும் - வீசுகின்ற, திரு - அழகிய, சீள் - நீண்டிருக்கின்ற, கழனிதோறும் - கழனிகளிலெல்லாம், செம்நெல்லை - செந்நெற்பயிரை, வளர்க்கும் - வளர்விக்கும், எ - று.

க - து. பார்ப்பாருக்குப் பொருட்குவியலைத் தத்தம் பண்ணு நீரானது செந்நெலை வளர்க்கும் என்பதாம்.

நிதிக்குப்பையோடு பெய்புனல் - தாரை வார்க்கும் நீர். அக்ரம் - சாரியை; மாது, ஓ - அசைகள். [ஆச்சரியப்படத் தக்கதாயும் பொய்யாகியும் இருக்கிற தானப் புகழ்ச்சியாகிய மிகுதி நவிற்சியணியானது தானநீருக்கும் பயிருக்குஞ் சம்பந்தத்தை உண்டாக்குகையாகிய தொடர்புயர்வு நவிற்சியணிக்கு அங்கமாக வருதலால் உப்புறுப்பிக்கலவை யணியாம்.] (உக)

நிலவுவெண் முத்தும் பொன்னு நீனிற மணியுஞ் சாந்துந்
தலைமயக் குற்ற வாற்றாற் றண்மதி தவழுங் கோட்டு
மலைவளம் பெரிதென் கோயான் வால்வளை பரந்து மேயு
மலைவளம் பெரிதென் கோயான் யாதென வறைவன் மாதோ.

இ - ள். நிலவு - சந்திரிகையையுடைய, வெள் - வெள்ளிய, முத்தும் - முத்துக்களும், பொன்னும்-பொன்வகைகளும், நீல் நிறம்-நீல நிறத்தையுடைய, மணியும் - மணிகளும், சாந்தும் - சந்தனக்கட்டைகளும், தலைமயக்கு உற்ற ஆற்றால்-கலந்துகிடக்குந் தன்மையால், தண் - தண்ணிய, மதி-சந்திரனால், தவழும் - உராய்ந்து செல்லப்படுகின்ற, கோடு-சிகரத்தையுடைய, மலை-மலையினது, வளம்-வளத்தை, யான் - நான், பெரிது என்கோ - அதிகமென்று சொல்லுவேனோ, வால் - வெண்மை பொருந்திய, வளை - சங்குகளானவை, பரந்து - பரவி, மேயும் - மேய்கின்ற, அலை - அலைகளையுடைய (கடலினது), வளம் - வளத்தை, யான் - நான், பெரிது என்கோ - அதிகமென்று சொல்லுவேனோ, யாது என - (இவற்றுள்ளே) எதை (அதிகம்) என்று, அறைவல் - (யான்) சொல்லுவேன், எ - று.

க - து. மலைவளத்தைப் பெரிதென்று சொல்லுவேனோ, கடல் வளத்தைப் பெரிதென்று சொல்லுவேனோ என்பதாம்.

நீலம்-நீல் எனக் கடைக்குறையாயிற்று. தலைமயக்கு-ஒருசொல். அலை - சினையாகுபெயர். அறைவன் என்று பிரித்தலுமாம். முத்து முதலியவற்றை விரவிக் கூறினாரேனும் உரிமைபற்றிக் கடலுக்கு முத்தும் நீலமணியும், மலைக்குப் பொன்னுஞ் சாந்துங் கூட்டப்படும். நீலமணி கடலிற் பிறவாதேனுங் கடலகத்துள்ள வேறு தீவிற் பிறத்தல்பற்றி அதன் வளமெனப்பட்டது. மலைக்குங் கடலுக்கும் விசேடணங்களை மிகுத்துச் சொன்னமையால் அவின் முதலிய மற்றை மலைவளங்களும், பவள முதலிய மற்றைக் கடல் வளங்களுங் கொள்ளப்படும். மாது, ஓ-அசைகள். [நானிலங்களின் முதனிலவளமுங் கடைநில வளமுங் கூறவே மற்றை நிலவளங்களுங் கூறுதேயமையும். இதில் ஐயவணியினாலே அப் பலவளங்களு மிகுந்திருக்கின்றன என்னும் பொருள் தொனிக்கின்றது.] (உஉ)

உளங்களிந் தாய ரூதும் வேயிசை செவியி னோர்ந்து
துளங்குவெள் ளருவிக் குன்றிற் றோகைகண் டுஞ்சுந் தெண் [ணீர்
வளங்கெழு மருத வேலி வண்டுதா லாட்ட நெய்த
லிளங்களிக் குமரி யன்ன மின்றுயில் கூரு மாதோ.

**இ - ள்.** ஆயர் - (முல்லை நிலத்துள்ள) இடையரால், உளம் களிந்து - மனமகிழ்ந்து, ஊதும் - ஊதப்படுகின்ற, வேய் - புள்ளாங்குழல்களுடைய, இசை - இராகத்தை, செவியின் - காதுகளினாலே, ஓர்ந்து - கேட்டு, துளங்கு - அசைகின்ற, வெள்-வெள்ளிய, அருவி- வெள்ளங்களையுடைய, குன்றில்-குறிஞ்சி நிலத்தில், தோகை-மயில்களானவை, கண்துஞ்சும் - தூங்கும்; தெள் - தெள்ளிய, நீர் - நீரினது, வளம் - வளமானது, கெழு - பொருந்திய, வேலி - வேலியையுடைய, மருதம் - மருத நிலத்தில், வண்டு - வண்டுகளானவை, தாலாட்ட - தாலாட்டிசையைப்பாட, நெய்தல் - நெய்தனிலத்தில், இள - இளமைபொருந்திய, களி-களிப்பையுடைய, குமரி அன்னம்-பெட்டை யன்னங்களானவை, இன் - இனிய, துயில் கூரும் - நித்திரை மிகும், எ - று.

**க - து.** இடையர் புள்ளாங்குழ லோசைகேட்டு மலையில் மயில்கள் நித்திரைசெய்யும்; மருதநிலத்தில் வண்டுகள் தாலாட்டிசைபாட நெய்தனிலத்தில் அன்னங்கள் நித்திரை செய்யும் என்பதாம்.

புள்ளாங்குழல் - மூங்கிலாற் செய்யப்படுதலால் வேய் என்றே கூறினர். தோகை - சினையாகுபெயர். கண்டுஞ்சும் - ஒருசொல். மாது, ஓ-அசைகள். முல்லையோடு குறிஞ்சிக்கும் மருதத்தோடு நெய்தலுக்கும் அணிமை சொல்லப்பட்டது. (உ௩)

கொடியன மகளிர் தங்கள் குழையுறுண் மருங்கே வாளா
படுகொலை புரிவ மாதர் படைநெடுங் குவளைக் கண்ணே
யடிமிசை முறையிட் டென்று மரற்றுவ சிலம்பே சூழ்ந்து
கடிமது நுகர்வ வன்னோர் கருங்குழற் காமர் வண்டே.

இ - ள். மகளிர் - மாதருடைய, குழையும்-வாடுகின்ற, நுண் - நுண்ணிய, மருங்கே - இடைகளே, கொடியன - கொடுமையுள்ளன வாம், [இங்கே, மருங்கே கொடியன என்பதற்கு, மருங்கே - இடைகளே, கொடியன - கொடிபோல்வன, என்பது கருத்தாகக்கொள்க.] (அன்னோர்)-அவருடைய, மாதர் - அழகிய, படை—வாளும், குவளை - நீலோற்பலமும்(போலும்), நெடு - நெடிய, கண்ணே - கண்களே, வாளா - வீணுக, படு - இறந்துபடுகின்ற, கொலை - கொலைத்தொழி லை, புரிவ - செய்வனவாம், [இங்கே, கண்ணே வாளாபடு கொலை புரிவ என்பதற்கு, கண்ணே - கண்களே, வாளா - காரணமில்லா மல், படு - வருந்துகின்ற, கொலை - வருத்தத்தை, புரிவ - செய்வன, என்பது கருத்தாகக்கொள்க.] சிலம்பே - நூபுரங்களே, (அன்னோர்)- அவருடைய, அடிமிசை - அடிகளின்மேல் (விழுந்து), முறையிட்டு - (தங்குறைகளை) முறையிட்டு, என்றும் - எந்நாளிலும், அரற்றுவ - புலம்புவனவாம், [இங்கே, சிலம்பே யடிமிசை முறையிட் டென்று மரற்றுவ என்பதற்கு, சிலம்பே - சிலம்புகளே, அடிமிசை - அடிக ளின்மேல், முறை - முறையாக, இட்டு - தரிக்கப்பட்டு, என்றும் - எக்காலமும், அரற்றுவ - ஒலிப்பன, என்பது கருத்தாகக்கொள்க.] அன்னோர் - அவருடைய, கரு - கரிய, குழல் - கூந்தலிலுள்ள, காமர் - அழகிய, வண்டே - வண்டுகளே, சூழ்ந்து - சூழ்ந்து, கடி - (வேதத்தினுலே) விலக்கப்பட்ட, மது - கள்ளை, நுகர்வ - குடிப்பன வாம், [இங்கே, வண்டே சூழ்ந்து கடிமது நுகர்வ என்பதற்கு, வண் டே - வண்டுகளே, சூழ்ந்து - மொய்த்து, கடி - பரிமளம் பொருந் திய, மது - (பூந்) தேனை, நுகர்வ - குடிப்பன, என்பது கருத்தாகக் கொள்க.]

க - து. அந்நாட்டு மாதர்களிலே கொடியவரும், வீணுக இறக் கும்படியான கொலைத் தொழிலைச் செய்பவரும், பிறரடிகளின்மேலே வீழ்ந்து தங்குறைகளை முறையிட்டுப் புலம்புவோரும்,வேதத்தினுலே விலக்கப்பட்ட கள்ளைக் குடிப்பவரும் இல்லை யென்பதாம்.

தம் - சாரியை; கள் - பகுதிப்பொருள் விகுதி. இடை முதலிய வைகளை அம்மனிதரிற் பிரித்தலால் ஏகாரங்க ளன்கும் பிரிநிலைகள்.

[கொடுமை முதலானவற்றை மனிதர்களி னொழித்து இடை முத லானவற்றிற் காட்டலால் ஒழித்துக்காட்டணியாம்.] (உச)

கடல்படு மமுது மல்லற் கான்படு மமுது மோங்குந்
தடவரை யமுது மொன்றித் தலைமயக் குற்ற வாற்று [லோ
லுடைதிரை யமுத மொன்றே யுடைய விண்ணாடு கொல்
நிடதநா டதற்கு நேரா நிகழ்த்தலாந் தகைமைத் தம்மா.

இ - ள். கடல் - கடலின்கண், படும் - உண்டாகிய, அமுதும் - (உப்பு முதலாகிய) அமுதமும்; மல்லல் - வளம்பொருந்திய, கான் - காட்டின்கண், படும் - உண்டாகிய, அமுதும் - (பால் முதலாகிய) அமுதமும்; ஓங்கும் - உயர்ந்த, தடம் - பெரிய, வரை - மலையின் கண், (படும்) - உண்டாகிய, அமுதும் - (தேன் முதலாகிய) அமுத மும்; ஒன்றி - பொருந்தி, தலைமயக்கு உற்ற - கலந்து கிடக்கிற, ஆற் றால் - காரணத்தால், உடை - (கரையை) உடைக்கின்ற, திரை - அலைகளையுடைய (பாற்கடலின்கண்), (படும்) - உண்டாகிய, ஒன்று அமுதமே - ஓரமிர்தத்தையே, உடைய - (தன்னிடத்தில்) உடைய, விண்நாடோ - தெய்வநாடோ, நிடத நாடதற்கு - நிடததேசத்திற்கு, நேர் ஆ - ஒப்பாக, நிகழ்த்தலாம் - சொல்லுதற்காகின்ற, தகைமைத்து - குணத்தையுடையது, எ - று.

க - து. கடலிலும் மலையிலும் காட்டிலு முண்டாகின்ற திர வியம் பொருந்தி யிருப்பதால் இந்நாட்டைப் பொன்னாட்டுக் கொப் பாகச் சொல்லலாம் என்பதாம்.

கொல் - அசை. ஓ-எதிர்மறை. அம்மா - வியப்பிடைச்சொல். அமுது உண்ணுதற்குரிய அறுசுவை யுணவுகளுக்குந் தேவ ருணவிற்குஞ் சிலேடை; "அமுதுபா றேவருண்டி யார்புனல் சுதை சுவைப்பேர்" (ஆதிப்பொருணிகண்டு) என்பதனாலறிக. [உபமேய மாகிய நிடதநாட்டிற்கு உபமானமாகிய வோரமுதமுடைய தெய்வ நாட்டினும் பல வமுதமுடைமையாகிய விசேஷத்தைச் சொல்லுத லால் வேற்றுமை யணியாம்.] (உரு)

நலனுறு குமர ரியார்க்கு நண்ணிய விருந்தோ டுண்டும்
பலகலை கேள்வி யாய்ந்தும் பகற்பொழு தினிது நீங்கு
மலர்முலை யந்ந லார்த மலத்தக மலர்த்தா ணீவிப்
புலவிக டீர்த்துஞ் சேர்ந்து நள்ளிருட் பொழுதும் போமால்.

இ - ள். நலன் - நற்குணங்களை, உறு - பொருந்திய, குமரர் யார்க்கும் - ஆடவரெல்லாருக்கும், நண்ணிய - (தம்மிடத்து) வந்த,

விருந்தோடு - விருந்தினரோடு, உண்டும் - (அறுசுவை யுண்டிகளை) யுண்ணலாலும், பல - பலவகையாகிய, கலை - கலைகளை, கேள்வி - கேள்வியினாலே, ஆய்ந்தும்-ஆராய்ச்சி செய்தலாலும், பகல்பொழுது- பகற் காலமானது, இனிது - இனியதாக, நீங்கும் - கழியும்; அலர் - அடிபரந்த, முலை - முலைகளையுடைய, அம் நலார் - அழகிய மங்கைய ருடைய, அலத்தகம் - செம்பஞ்சூட்டிய, மலர் - தாமரை மலர்போ லும், தாள் - அடிகளை, நீவி - தடவி, புலவிகள் - ஊடல்களை, தீர்த் தும் - நீக்குதலாலும், சேர்ந்தும் - (அவரைச்) சேர்தலாலும், நள் இருள் பொழுதும் - நடுவிராக்காலமும், (இனிது) - இனியதாக, போம் - கழியும், எ - று.

க - து. வாலிபர்களுக்குப் பகற்பொழுதானது விருந்துண்ணுத லாலும், கல்விப் பயிற்சியினாலும் நீங்கும்; இராப்பொழுதானது பெண்கள் பிணக்கை நீக்குதலாலும், அவர்களைச் சேர்தலாலும் நீங் கும் என்பதாம்.

தம்-சாரியை; ஆல்-அசை. உண்டு, ஆய்ந்து, தீர்த்து, சேர்ந்து இந்நான்கும் வினையெச்சத் திரிபுகள். பல கலைகளாவன: வேதவேதா ங்க முதலிய அறுபத்துநாலு கலைகளாம். இரவின் முதற்பங்கு உண வாதிகளாலும், கடைப்பங்கு நித்திரையினாலும் கழிதல்பற்றி 'நள் ளிருட்பொழுது' என்றார். (உகூ)

[இதனால் அந்நிடத தேசத்துள்ளே நளராஜனுக்கிடமாகிய மாவிந்த நகரத்தின் சிறப்பைப் புகழத் தொடங் கினமை சொல்லப்படுகின்றது.]

கொல்லுலை வேற்க ணல்லார் கொழுநரோ டூடி நீத்த
வில்லுமிழ் கலன்க ளியாவு மிளிர்சுட ரெறிக்கு மாற்றா
லெல்வியும் பகலுந் தோன்றா திமையவ ருலக மேய்க்கு
மல்லன்மா விந்த மென்னும் வளநகர் கூற லுற்றாம்.

இ - ள். கொல் - கொல்லனது, உலை - உலைக்களத்திலே (காய்ச்சப்பட்ட), வேல் - வேல்போலும், கண் - (சிவந்த) கண்களை யுடைய, நல்லார் - மாதரால், கொழுநரோடு - (தம்முடைய) கணவ ரோடு, ஊடி - பிணங்கி, நீத்த - களைந்தெறியப்பட்ட, வில் - காந் தியை, உமிழ் - வீசுகின்ற, கலன்கள் யாவும்-ஆபரணங்களெல்லாம், மிளிர் - விளங்குகின்ற, சுடர் - கிரணங்களை, எறிக்கும் - வீசுகின்ற, ஆற்றால் - காரணத்தால், எல்வியும் - இரா (இது) என்றும், பக லும் - பகல் (இது) என்றும், தோன்றாது - அறியப்படாமல், இமை யவர் - தேவரது, உலகம் - உலகத்தை, ஏய்க்கும் - ஒத்திருக்கின்ற, மல்லல்-செல்வத்தையுடைய, மாவிந்தம் என்னும் - மாவிந்தமென்று

NO.2. நகரப்படலம். 25.வது.பக்கம்.



மாவிந்த நகர

சொல்லப்படுகின்ற, நகர் - பட்டணத்தினது, வளம் - சிறப்பை, கூறல் உற்றும் - (யாம்) சொல்லத் தொடங்கினோம், எ - று.

க - து. மாதர்கள் கழற்றி யெறிந்த ஆபரணப் பிரகாசத்தினால் தெய்வலோகத்துக் கொப்பாகு மாவிந்த நகரவளப்பத்தைச் சொல்லு வாம் என்பதாம்.

'எல்லியும் பகலுந் தோன்றா திமையவ ருலக மேய்க்கும்' என் றமையால் விண்ணுலகில் இராப்பகல்க ளில்லையென்பது விளங்கும். கணவர்மேற் கோபத்தினாலே கண்கள் சிவத்தலிற் காய்ச்சப்பட்ட வேலை யுவமான மாக்கினார். [இரவும் பகலுந் தோன்றாமையை ஆப ரண காந்தியினாலே சாதிப்பதாகிய செய்யுட் குறியை அங்கமாகக் கொண்டு இமையவ ருலகமேய்க்கு மென்னு முவமை வருதலாற் கல வையணி.] (உஎ)

நாட்டுப்படலம் முற்றிற்று.

# நகரப்படலம்.

அஃதாவது நளனது இராஜதானியாகிய மாவிந்த நகரத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்ற படலம்.

[இதனால் மாவிந்த நகரத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

குடவ ளைக்குலம் வயிறுளைந் தினமணி கொழிக்கு
மடுவில் வானக ருருவுகாட் டியதுபோன் மதில்சூழ்
கடிகொண் மாநக ரந்நிழல் கதுவிடா தகன்ற
புடைகொ ணீர்நக ருடுத்தலை பொங்குபே ரகழி.

இ - ள். மதில் - மதிலை, சூழ் - சூழ்ந்த, கடி - காவலாக, கொள் - கொண்டிருக்கிற, மா - பெருமை பொருந்திய, நகர் - (முன் சொல்லப்பட்ட)மாவிந்த நகரமானது, குடம் - குடம்போலும், வளை - சங்குகளது, குலம் - குலமானது, வயிறு உளைந்து - வயிறு நொந்து, இனம் - (ஒன்றற்கொன்று) இனமாகிய, மணி-முத்துக்களை, கொழிக் கும் - சொரிதற்கிடமாகிய, மடுவில் - ஒரு தடாகத்துள், வான் நகர் - அமராவதி பட்டணத்தினால், காட்டியது - காட்டப்பட்டதாகிய, உருவு - நிழலை, போன்ம் - போலும், நகர் - அந்நகரத்தினால், உடு த்து-உடுக்கப்பட்டு, அலை - அலைகளால், பொங்கு - விளங்குகின்ற, பேர்-பெரிய, அகழி-அகழியானது, அந்நிழல் - அந்நிழலினால், கதுவி

டாது - பற்றப்படாமல், அகன்ற - நீங்கிய, புடை-சுற்றுப்பக்கத்தை, கொள் - (தனக்கிடமாகக்) கொண்ட, நீர் - நீரை, (போன்ம்) - போலும், எ - று.

க - து. மாவிந்த நகரமானது ஒரு தடாகத்துள்ளே தோன்றிய தேவ நகரம்போலு மிருந்தது. அம்மாவிந்த நகரத்தி னகழியானது அத்தடாகத்திற் றோன்றிய தேவ நகரைச் சூழ்ந்த சலத்தைப்போலு மிருந்தது. எப்படியெனில், கண்ணாடியுள்ளே முகந் தோன்றியவிடத்தில் கண்ணாடி வடிவந் தோன்றாது, அம்முகம் தோன்றாவிடத்தில் அக்கண்ணாடி வடிவந் தோன்றும்; இதுபோலவே தடாகத்துள்ளே தேவநகரந் தோன்றியவிடத்தில் சலந் தோன்றாது, அத்தேவநகரந் தோன்றாவிடத்தில் சலந் தோன்றும்; ஆகையால் தேவ நகரத்தின் பிரதிபிம்பத்தையே மாவிந்த நகரமாகவும், பிரதிபிம்பத்தைச் சூழ்ந்த சலத்தையே மாவிந்தநகரத்தி னகழியாகவுங் கொள்க என்பதாம்.

'குடவளைக்குலம் வயிறுளைந் தினமணி கொழிக்கு மடுவில்' என்றதனால் வானகரத்தின் பிரதிபிம்பமுள்ளடங்குதற்குத் தகுந்தவிசாலமுள்ள தென்பதாயிற்று. சங்குகள் முத்துக்களை மிகுதியாகத் தருதல் தோன்ற ஈனுமென்னாது 'கொழிக்கும்' என்றார். குடவளைக்குலம் வயிறுளைந்து கொழிக்குமென்றமையால் மணியென்பது முத்துக்களைக் குறித்தது. இனமணி-தொகுதியாகிய மணி யெனினுமாம். போலுமென்னுஞ் செய்யுமென் வாய்பாட்டு முற்றுவினை ஈற்றயலுகரங்கெட்டு லகரமெய் னகரமெய்யாகத் திரிந்தது. இதற்கு விதி, "அவற்றுள், செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு" (தொல்காப்பியம் - சொல்லதிகாரம்-வினையியல்-௪௧)என்னுஞ் சூத்திரவுரையிற் காண்க. போன்மென்பது புடைகொ ணீர்க்குங் கூட்டப்பட்டது. உடுத்து, கதுவிடாது என்பவை எழுதிவந்த வோலை யென்கிறவிடத்தே எழுதி யென்பதுபோலச் செயப்பாட்டு வினைப்பொருளைத் தந்தன. [அந்த மாவிந்த நகரத்தை அமராவதியின் பிரதிபிம்பமாகவும், அந்த மாவிந்த நகரைச் சூழ்ந்த வகழியை அந்நிழலைச் சூழ்ந்த நீராகவுங் குறித்தலால் தற்குறிப்பணியாகும்.] இதுமுதற் பதினேழு பாட்டுகள் கவினிலைத் துறைகள். (க)

[இதனால் அகழியின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கண்ண கன்ற பேரகழியி லுழக்கிய கரிக
டண்ணந் தாமரைத் தாளெனத் தடக்கையாற் பிலத்தி
னண்ணுஞ் சேடனை யெடுத்ததன் சுடிகையி னுறி
யுண்ணி வந்தொளிர் மணியினை யுற்கையென் றெறியும்.

இ - ள். கண் அகன்ற - இடம் பரந்த, பேர் - பெரிய, அகழியில் - அகழியின்கண், உழக்கிய - கலக்கிய, கரிகள் - யானைகள், தண் - தண்ணிய, அம் - அழகிய, தாமரை - தாமரையினுடைய, நாள் என - நாளமென்று நினைத்து, தடம் - பெரிய, கையால்-துதிக்கையினாலே, பிலத்தில் - பாதாளத்திலே, நண்ணும் - வாசஞ் செய்கின்ற, சேடனை - சேடனென்னும் பாம்பை, எடுத்து-மேலெடுத்து, அதன் - அப்பாம்பினது, சுடிகையில் - உச்சியின்கண், உள்-(அதன்) உள்ளிருந்து, நிவந்து - மேலெழும்பி, நாறி - காணப்பட்டு, ஒளிர் - விளங்குகின்ற, மணியினால் - இரத்தினத்தினாலே, உற்கை என்று - (இது) கொள்ளியென்று (அஞ்சி), எறியும் - (அதனை) வீசும், எ-று.

க - து. அகழிற் கலக்கிய யானைகள் தாமரைத்தண்டென்றுநினைந்து சேடனை யெடுத்து அதன் முடியின் மணியொளியால் கொள்ளிக்கட்டையென் றெறியும் என்பதாம். இது அகழிச்சிறப்பு.

நல்லசாதிப் பாம்பிற்கு வளருந்தோறு முள்ளிருந்து மேலெழும்பிக் கொண்டுவந்து தகுந்த பருவத்திலே யுச்சியிற் புறப்பட்டுக் காணப்படுதலால் 'உண்ணிவந் தொளிர்மணி' என்றார். மணியென்றது மாணிக்கத்தை. கரிகளென்று பன்மையாற் கூறலால் தனித்தனி யெடுத்தென்றுகொள்க. [சேடனைத் தாமரைநாளமென்றுங்கொள்ளியென்று மயங்குதலான் மயக்கவணி. யானைக்குஞ் சேடனுக்குஞ் சம்பந்தத்தைக் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சியணியினாலே அகழி பாதாளவரைக்கும் ஆழ்ந்துள்ளதென்னும் பொருள் தொனிக்கின்றது.] (உ)

[இதனாலே மதிலினது சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

ஒற்றை யாழியந் தேரவ னுயர்மதில் கடக்கப்
பெற்றி லாமையிற் பிறங்குபொற் கதவங்க டிறக்கு
மற்ற நோக்குவ னந்நலா ரியல்புற வணியக்
கற்றை வெண்மதி சாளரத் தாடியிற் காட்டும்.

இ—ள். ஒற்றை ஆழி - ஒருருளையையுடைய, அம் - அழகிய, தேரவன் - தேரையுடைய (சூரியனானவன்), உயர் - (தன்வழியின் மேலும்) உயர்ந்த, மதில் - மதிலை, கடக்க - தாண்டுதற்கு, பெற்றிலாமையின் - (வல்லமை) பெற்றிலாமையால், பிறங்கு - விளங்குகின்ற, பொன் - பொன்மயமாகிய, கதவங்கள் - (அம்மதில்வழிக்) கதவுகளை, திறக்கும் - திறக்கின்ற, அற்றம் - சமயத்தை, நோக்குவன் - பார்த்துக்கொண் டிருப்பான்; அம் நலார் - அழகிய மகளிரானவர், இயல்பு உற - திருத்தமுண்டாக, அணிய - (திலக முதலானவற்றைத்) தரித்துக்கொள்ள, கற்றை - (கிரணக்) கற்றையையுடைய, வெள் - வெள்ளிய, மதி - சந்திரனானவன், சாளரத்து - (அம்மதின்மேற்) பலகணி

யின் புறத்திருந்து, ஆடியின் – நிலைக்கண்ணாடிபோல, காட்டும் – (அவருக்குத் தன்னைக்) காட்டுவான், எ – று.

க–து. சூரியனானவன் மாவிந்தநகர மதிலைக்கடக்க மாட்டாமல் கதவுகளைத்திறக்கும் சமயம் பார்த்திருப்பான்; சந்திரனானவன் பெண்கள் திலக முதலிய பணிக ளணிந்துகொள்ளத் தன்னை நிலைக் கண்ணாடிபோலக் காட்டுவான் என்பதாம்.

நிலைக் கண்ணாடி – நிலையாக முன் வைக்கப்படுங் கண்ணாடி. பொற்கதவால் – பொற்றகட்டாற் செய்யப்பட்ட கதவு எனினுமாம். அற்றஞ் சமயமென்பது "அற்றமே மறைவுஞ் சோர்வு மவகாசந் தானுமாகும்" (ஆதிப்பொருணிகண்டு) என்பதனாலறிக. கற்றை வெண் மதி யென்றதனாற் பூரணசந்திர னெனக்கொள்க. சந்திரன் சாளரத் துள்ளே நுழைதற் கிடம்பெறாமற் புறத்தே நிற்கைபற்றி 'ஆடியிற் காட்டும்' என்றார். [சூரியனோடு மதில்வாயிலுக்குஞ் சந்திரனோடுமதிற் சாளரத்திற்குஞ் சம்பந்தஞ் சொல்லுதலால் தொடர்புயர்வு நவிற்சியணிகளாம். இதனால் அந்நகரத்து மதிலுக்கு அதிக வுயர்வு தொனிக்கிறது.] (௩)

[இதுமுதன் முப்பத்து நாலு பாட்டுகளால் வீடுகண் முதலிய வற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

மறுவி கந்தவெண் மதியென வயங்கிய பித்தி
செறியு மாடங்கள் வெண்கதிர் பரப்பிடு செவ்வி
நறவு யிர்த்தபைந் துணர்மலி கற்பக நாட்டை
வெறுவி தாமென வெண்ணகை புரிவது போலும்.

இ–ள். மறு – களங்கத்தினின்றும், இகந்த – நீங்கிய, வெள் வெள்ளிய, மதி என – சந்திரன்போல, வயங்கிய – விளங்கிய, பித்தி– (பளிக்குச்) சுவர்களானவை, செறியும் – நெருங்கிய, மாடங்கள் – மாளிகைகளானவை, வெள் – வெள்ளிய, கதிர் – கிரணங்களை, பரப்பிடு – விரிக்கின்ற, செவ்வி – அழகினாலே, நறவு – தேனை, உயிர்த்த– தருகின்ற, பை – பசிய, துணர் – பூங்கொத்துகளால், மலி – நிறைந்த, கற்பகம் – கற்பக தருக்களையுடைய, நாட்டை – சுவர்க்கலோகத்தைக் குறித்து, வெறுவிதாம் என – (இது) வறுமை யுடையதென்று, வெள் – வெள்ளிய, நகை – சிரிப்பை, புரிவது–செய்வதை, போலும்– ஒத்திருக்கும் (அந்நகரம்), எ – று.

க–து. மாடங்களானவை கிரணங்களை விரித்திட்ட வழகினாலே பொன்னகரத்தைப் பார்த்துப் புன்னகை [illegible] விருக்கின்றன என்பதாம்.

விரும்பப்படுகிற உண்டி அணி ஆடை முதலியவற்றைக் கற்பிக்கின்ற கற்பக தருவையுடைத்தாய் மற்றெல்லா வுலகங்களாலும் புகழப்படுகை தோன்றக் 'கற்பகநாடு' என்றார். அப்படியிருந்தும் அதுதன் பெருவளத்திற்குச் சிறியதாகக் காணப்படுதலால் மாவிந்தம் அதனை யிகழ்ச்சிசெய்து சிரிப்பதென்றதாயிற்று. சிரிப்பதற்குத் தெருவாயாகவு மாடவரிசைகள் பல்வரிசைகளாகவுங் கொள்க. [பளிக்கு மாடங்களின் வெள்ளொளி வீசலாகிய தரும சம்பந்தத்தினாலே மாவிந்தத்தைச் சிரிப்பதாகக் குறித்தலாற் பொருட்டற்குறிப்பணி யாகும். இதனாலே மாவிந்தத்தின் வளஞ் சுவர்க்க வளத்தினு மிகுந்துள்ளதென்பது தொனிக்கின்றது.] (௪)

வடிகொள் வெண்சுதை தீற்றிய மாடநீள் கழுத்திற்
படிய மைம்முகில் கதிர்விடு பானிலாக் குழவி
முடியின் மீதுறத் தவழ்தலான் முழுமெயும் வெள்ளைப்
பொடிய ணிந்தருள் கறைமிடற் றண்ணலைப் பொருவும்.

இ-ள். வடிகொள் – வடித்துக்கொள்ளப்பட்ட, வெள் – வெள்ளிய, சுதை – சுண்ணச்சாந்தை, தீற்றிய – பூசிய, மாடம் – மாளிகையானது, நீள் – நீட்சிபொருந்திய, கழுத்தில் – (அதன்) கண்டத்தின்கண், மை – கரிய, முகில் – மேகமானது, படிய-படிந்திருக்க, கதிர் – கிரணங்களை, விடு-வீசுகின்ற, பால் – வெண்மைபொருந்திய, நிலாக் குழவி – பிறையானது, முடியின் மீது – (அதன்) முடியின்மேலே, உற-பொருந்த, தவழ்தலால் – ஊர்தலால், முழு மெயும்-திருமேனி முழுதிலும், வெள்ளைப்பொடி – விபூதியை, அணிந்தருள் – பூசியருளிய, கறை-(நஞ்சக்) கறைபொருந்திய, மிடற்று-கண்டத்தையுடைய, (நிலாக்குழவி)-பிறையானது, (முடியின்மீது)-முடியின்மேல், (உற)-பொருந்த, (தவழ்)-ஊர்கின்ற, அண்ணலை – பரமசிவனை, பொருவும்-ஒத்திருக்கும், எ – று.

க-து. மாளிகையானது வடிவத்தில் சுண்ணச்சாந்தும் கழுத்திற் கரியமேகமும் முடியி லிளம்பிறையும் பொருந்தி யிருத்தலாற் பரமசிவனுக் கொப்பாகும் என்பதாம்.

கறைமிடறு என்பதற்கு விஷகண்டம் என்றுரைப்பினுமாம். கறை-விஷம்; கறையென்பது கருமைப் பொருளையுந் தருதலால் கறைமிடறு-நீலகண்டம் என்றலுமொன்று. நிலாக்குழவியின் மீதுறத் தவழ்தல் பரமசிவனுக்குங் கூட்டப்பட்டது. மாளிகையினது வடிவத்திற் பூசிய சுண்ணச் சாந்து பரமசிவனது வடிவத்திற்பூசிய விபூதி போலவும், அதனது கழுத்திலே படிந்த கரியமேகம் அவன் கழுத்தி

லே படிந்த நஞ்சக்கறைபோலவும், அதன் முடிமேலே தவழ்கின்ற பிறை அவன் முடிமேலே தவழ்கின்ற பிறைபோலவும் தோன்றுத லாலே அது பரமசிவனுக்கு ஒப்பாக விருக்குமென்பதாம். [இது உவமையணி. இதனால் அம்மாடங்கள் சந்திர மண்டலத்தை யளாவி யிருக்கின்றன வென்பது தொனிக்கின்றது.] (௫)

மழைக்கண் மங்கையர் பயிறர மரகத மணியி
னிழைத்த செய்குன்றின் பைங்கதிர் பொன்னிலத் தெய்தக்
குழைத்த வைந்தரு நீழலிற் குலவுமா னினங்க
டழைத்த புல்லென விரைவொடு தனித்தனி கறிக்கும்.

இ-ள். மழை - குளிர்ச்சிபொருந்திய, கண் - கண்களையுடைய, மங்கையர் - மகளிரானவர், பயில்தர - (ஏறி) விளையாடுதற்கு, மரகத மணியின் - மரகத மணிகளாலே, இழைத்த - செய்யப்பட்ட, செய் குன்றின் - விளையாட்டு மலைகளுடைய, பை - பசிய, கதிர்-கிரணங்க ளானவை, பொன்னிலத்து - பொன்னுலகத்தின்கண், எய்த-அடைய, குழைத்த - தளிர்த்த, ஐந்தரு - பஞ்சதருக்களது, நீழலில் - நிழலின் கண், குலவும் - குலவுகின்ற, ஆன் - பசுக்களுடைய, இனங்கள் - கூட்டங்களானவை, தழைத்த - செழித்த, புல் என - புல்லென்று நினைத்து, விரைவொடு - சீக்கிரமாகவோடி, தனித்தனி - ஒவ்வொன் ருக, கறிக்கும் - (அக்கிரணங்களைக்) கௌவும், எ - று.

க-து. செய்குன்றிலிழைத்த மரகதக் கிரணங்களைத் தெய்வப் பசுக்கள் புற்களென்று கடிக்கும் என்பதாம்.

'ஐந்தரு நீழலிற் குலவுமா னினங்கள்' என்ற குறிப்பால் ஆன் இனங்கள் காமதேநு வென்னும் பசுக்கூட்டங்கள் எனக்கொள்க. மற் றைமலைகள்போலப் படைப்புக்காலத் துண்டாயதன்றி விளையாடுதற் காகச் செய்யப்பட்டமையாற் 'செய்குன்று' என்றார். [மரகதமணியின் கிரணத்தைப் புல்லென்று மயங்கினமையான் மயக்கவணியாகும். இதற்கு அக்கதிருக்குந் தெய்வ லோகத்திற்குஞ் சம்பந்தத்தைக் கற் பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சியணி அங்கமாதலால் கலவை யணியாம்.] (சு)

பதும ணத்தமென் மகளிர்சா ளரத்திடைப் பொருந்து
மதியை யின்னுயிர்ப் பாங்கியர் மறைந்தனர் நோக்குங்
கதிர்கொள் வாண்முக மென்றுதங் காதலர்ப் புல்லும்
பதும மென்கர நீக்கிநீள் படைவிழி புதைப்பார்.

இ-ள். புது - புதிய, மணத்த - விவாகத்தையுடைய, மெல் - மெல்லிய, மகளிர் - மங்கையரானவர், சாளரத்திடை - (மேல் வீட்டின்) பலகணியின் புறத்து, பொருந்து - சேர்ந்த, மதியை - பூர்ண சந்திரனை, இன் - இனிய, உயிர் - உயிர்போலச் சிறந்த, பாங்கியர் - தோழியரானவர், மறைந்தனர் - மறைந்தவராகி, நோக்கும் - பார்க்கின்ற, கதிர் - கிரணத்தை, கொள் - கொண்ட, வாள் - ஒளியையுடைய, முகம் என்று - முகமென்று நினைத்து, தம் - தம்முடைய, காதலர் - நாயகரை, புல்லும் - தழுவிக்கொண் டிருக்கின்ற, பதுமம்- தாமரைமலர்போலும், மெல் - மெல்லிய, கரம் - கைகளை, நீக்கி - (அவரிலிருந்து) நீக்கி, நீள் - நீண்ட, படை - வாள்போலும், விழி - கண்களை, புதைப்பார் - மூடிக்கொள்வார், எ-று.

க-து. புதிதாக விவாகஞ் செய்துகொண்ட பெண்கள் பலகணியின் புறத்துத் தோன்றிய சந்திரனை மறைந்து பார்க்குந் தோழியர் முகமென்றெண்ணி நாயகரைத் தழுவிய கைகளால் கண்களை மூடிக் கொள்வார்கள் என்பதாம்.

மறைந்தென்னும் வினையெச்சம் முற்றாய்த் திரிந்தது. இதற்கு விதி, "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" (தொல்காப்பியம் - சொல்லதிகாரம்-எச்சவியல்-சுக) என்பதனாலறிக. இன்னுயிர்ப் பாங்கிய ரென்றதனால் அந்தப்புரச் செய்கையைப் பார்த்தற்கும் உரிமை தோன்றுகின்றது. புதுமணத்தராதலால் இன்னுயிர்ப் பாங்கியர்க்குக் கண்மூடற் கேதுவாகிய நாணஞ் சொல்லப்பட்டது. [மதியைப் பாங்கியர் முகமென்று மயங்குதலால் மயக்கவணியாம். இதனால் அம்மகளிர் முகங்கள் பூர்ணசந்திரனை நிகர்த்தனவென்பதும், அம்மாடங்கள் சந்திர மண்டலத்தளவு முயர்ந்தன வென்பதும் ஒலிக்கின்றன.] (எ)

வள்ள வாய்மலர் முகத்தியர் வதியுமே னிலையிற்
கள்ள றாமலர் நாற்றிய சுருங்கையிற் கதிர்க
ளுள்ளு றப்புகுந் துவாமதி யுடனுரிஞ் சுதலாற்
பிள்ளை வெண்மதி யாதனன் றெனப்பெரி துவக்கும்.

இ - ள். உவா - பர்வ காலத்திலே தோன்றுகின்ற, வெள் - வெள்ளிய, மதி-பூர்ண சந்திரனானவன், வள்ளம் வாய்மலர்-தாமரை மலர்போலும், முகத்தியர் - முகத்தையுடைய மாதரானவர், வதியும் - வாசஞ்செய்கின்ற, மேல் நிலையில் - மேல்வீட்டில், கள் - தேனானது, அறா - நீங்காத, மலர் - மலர்களை, நாற்றிய - தொங்கக்கட்டிய, சுருங்கையில் - நுழைவாயிலிலே, கதிர்கள் - கிரணங்களானவை, உள் - உள்ளே, உற - பாய, புகுந்து - நுழைந்து, மதி - (யாவராலும்)

மதிக்கப்படுகிற, உடல் - (தன்பெரிய) வுடம்பு, உரிஞ்சுதலால்-தேய்தலினாலே, பிள்ளையாதல் - குழந்தையாதலே, நன்றெனா - (தனக்கு) நல்லதென்று நினைத்து, பெரிது - மிகவும், உவக்கும் - (அப்பருவத்தை) விரும்புவான், எ - று.

க - து. பூரண சந்திரனானவன் மேன்மாடச் சாளர வாயிலில் நுழைந்து உடலானது தேய்தலினாலே இளம்பிறைப் பருவமே நன்றென்று மகிழ்வான் என்பதாம்.

உவாமதி - பூர்ண சந்திரன் எனினும், பிள்ளை வெண்மதி - வெண்மையாகிய பிறைச்சந்திரன் எனினும் பொருந்தும். வள்ளவாய்மலர் - கிண்ணம்போலும் வாயையுடைய மலரென்க. சுருங்கை - திட்டிவாயில்; "சுருங்கை யென்பது கரந்த கற்படையு நுழைவாயிலு மென நுவலு மிருபெயர்" (இரேவணாராத்திரியர் - அகராதி சூத்திரம்). மகிழ்தலென்னும் பொருளைத் தருகிற வுவத்தலென்பது விருப்பத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். [கலை குறைதலாகிய குற்றத்தினாலே தாராளமாகச் சுருங்கையினுள்ளே நுழையுங்குணமிருத்தல் கண்டு அக்குற்றத்தை வேண்டுதலாலே வேண்டலணியாம்.] (அ)

உருவின் மைந்தரில் வேனில்வேட் குடைகுந ரில்லை
பொருளி லார்களிற் றனதனைப் பொருவிலா ரில்லை
தெருளின் மாக்களிற் சேடனிற் றாழ்குந ரில்லை
யருளி லார்களி லைந்தரு நிகர்க்கலா ரில்லை.

இ - ள். உருவு - அழகு, இல்-(தம்மிடத்து) இல்லாத, மைந்தரில் - காளையருள், வேனில் - வசந்தகாலத்தையுடைய, வேட்கு - மன்மதனுக்கு, உடைகுநர் - தோற்பவர், இல்லை - இலர்; பொருள் - செல்வப்பொருள், இலார்களில் - (தம்மிடத்து) இல்லாதவருள், தனதனை - குபேரனை, பொருவிலார் - ஒவ்வாதவர், இல்லை - இலர்; தெருள் - கல்வியறிவு, இல் - (தம்மிடத்து) இல்லாத, மாக்களில் - மனிதருள், சேடனில் - ஆதிசேஷனில், தாழ்குநர் - குறைபவர், இல்லை - இலர்; அருள் - ஈகையானது, இலார்களில் - (தம்மிடத்து) இல்லாதவருள், ஐந்தரு - பஞ்ச தருக்களுக்கு, நிகர்க்கலார் - ஒப்பாகாதவர், இல்லை - இலர், எ - று.

க - து. அழகிலாரில் மன்மதனிற் குறைந்தவரில்லை, வறியவரில் குபேரனிற் குறைந்தவரில்லை, மூடரில் ஆதிசேடனிற் குறைந்தவரில்லை, கொடாதவரில் பஞ்சதருக்களிற் குறைந்தவரில்லை. என்பதாம்.

அந்நகரத்திலே மன்மதன்போ லழகுள்ளவர்களை அழகில்லா தவர்களென்றும், குபேரன்போலச் செல்வ முள்ளவர்களைச் செல்வ மில்லாதவர்களென்றும், ஆதிசேஷன்போலக் கல்வியுள்ளவர்களைக் கல்வி யில்லாதவர்களென்றும், பஞ்சதருக்கள்போல ஈகை யுள்ளவர் களை ஈகை யில்லாதவர்களென்றும் கொள்ளுதலால், அம் மன்மதன் முதலான பொருள்களின் மிகுந்த அழகு முதலானவை யுள்ளவர்க ளே சிறந்தவராகக் கொள்ளப்படுவ ரென்பதாயிற்று. (௯)

பளிக்கு மேனிலத் தன்பர்பாற் பயில்வுறு கலவி
திளைத்து மார்பிடைத் துயில்பவர் முகத்தில்வெண் டிங்கள்
கிளைத்த தண்கதிர் பரப்புதல் கிளர்ந்தசா ளரத்தி [ல்.
ளொளித்து வாண்முகச் செவ்வியைக் கவர்வதொத் துளதா

இ - ள். வெள் - வெள்ளிய, திங்கள் - சந்திரனனது, பளிக்கு - பளிங்கினலாகிய, மேல் நிலத்து - மேல் வீட்டினுள், அன்பர்பால் - நாயகரிடத்தில், பயில்வுறு - (நாள்தோறும்) பழகிய, கலவி - புணர்ச் சியை, திளைத்து-அனுபவித்து, மார்பிடை - (அவர்) மார்பினிடத்தே, துயில்பவர் - தூங்குகிற மகளிரது, முகத்தில் - முகத்தினிடத்தே, கிளைத்த - தழைத்த, தண் - தண்ணிய, கதிர் - கிரணங்களை, பரப்பு தல் - விரித்தலினலே, கிளர்ந்த - விளங்குகின்ற, சாளரத்தின்—பல கணியின்புறத்து, ஒளித்து - மறைந்து நின்று, வாள் - ஒளி பொருந் திய, முகம் - (அவர்) முகத்திலுள்ள, செவ்வியை - அழகை, கவர் வது - திருடுவதை, ஒத்துளது - ஒத்திருக்கும், எ - று.

க - து. மேன்மாளிகையிற் கணவருடன் புணர்ந்து அவர் மார் பின்மேல் தூங்குகிற பெண்களின் முகத்தில் சந்திரன் கிரணங்களை விரித்தல் அப்பெண்கள் முகத்தழகைத் திருடுவதை ஒத்திருக்கும் என்பதாம்.

ஆல் - அசை. பிறரிடத்துள்ள பொருளைத் திருடுதற்குச் சமயந் தூங்கும்வேளை யாதலால் 'துயில்பவர்' என்றார். [சந்திரனைக் கவர்வ தாகக் குறித்தலினலே பொருட்டற்குறிப்பணி. இதனல் முகத்துக் குச் சந்திரனிலும் அதிக காந்தியைச் சொல்லியதாகிய வேற்றுமை யணி தொனிக்கின்றது.] (க௦)

கணங்கொண் மாமணி குயிற்றியொண் கதிர்செய்மே னிலை
சுணங்கு பூத்தணி பருமிதத் துணைமுலை மகளிர் [யிற்
மணங்கொ டாமரை முகமுமொண் மதியமு மறியா
தணங்க ராமதி மருண்டுபார்த் தையுற வெய்தும்.

இ - ள். கணம் - கூட்டத்தை, கொள் - கொண்ட, மா-பெரிய, மணி - மணிகளானவை, குயிற்றி - பதிக்கப்பட்டு, ஒள் - ஒள்ளிய, கதிர் - கிரணங்களை, செய் - வீசுகின்ற, மேல் நிலையில் - மேல்வீட்டில், சுணங்கு - தேமலால், பூத்து - படர்ந்து, அணி - அலங்கரிக்கப்பட்ட, பருமிதம் - பருத்தவளவையுடைய, துணை - இரண்டாகிய, முலை - முலைகளையுடைய, மகளிர் - மாதரது, மணம் - வாசனையை, கொள் - கொண்ட, தாமரை - தாமரைமலர்போலும், முகமும்-முகத்தையும், ஒள் - ஒள்ளிய, மதியமும் - பூர்ண சந்திரனையும், அறியாது - அறியமாட்டாமல், அணங்கு - தெய்வத்தன்மை பொருந்திய, அரா - இராகுவானது, மதிமருண்டு - புத்திமயங்கி, பார்த்து - நோக்கி, ஐயுறவு - (இவற்றுள் முகம் யாதோ சந்திரன் யாதோ வென்கிற) சந்தேகத்தை, எய்தும் - அடையும், எ - று.

க - து. இராகு என்னும் பாம்பானது மேல்வீட்டில் உலாவும் பெண்கள் முகமென்றும் சந்திரன் என்றும் அறியாது சந்தேகம் அடையும் என்பதாம்.

அணங்கு - தெய்வம்; "அணங்குநோயழகு தெய்வம்" (ஆதிப் பொருணிகண்டு) என்பதனாலறிக. [ஒப்புமையினாலே முகத்திற்குஞ் சந்திரனுக்கும் விசேடந் தோன்றாததாகிய பொதுமையணி ஐயவணிக்கு அங்கமாதலாற் கலவையணி.] இதனால் அம்மேல்வீடுகள் சந்திர மண்டலத்தை யளாவி நிற்கின்றன வென்பதும், அவர் முகங்கள் பூர்ண சந்திரன்போல் விளங்குகின்றனவென்பதுந் தோன்றுகின்றன. ()

மேனி வந்தொளிர் மாடத்தின் விழுத்தக நிரைத்த
பானி லாமணித் தசும்பினிற் றண்கதிர் பரப்பக்
கான றும்புன னிறைதலுங் கதிரவன் றடந்தேர்
மானி னங்குடித் தயர்வுயிர்த் தும்பரின் வாவும்.

இ - ள். மேல் - ஆகாசத்தில், நிவந்து - உயர்ந்து, ஒளிர்-விளங்குகின்ற, மாடத்தின் - மேல்வீட்டில், விழுத்தக - சிறப்புப்பொருந்த, நிரைத்த - வரிசையாக வைக்கப்பட்ட, பால் - வெண்மை பொருந்திய, நிலாமணி - சந்திரகாந்தத்தாலாகிய, தசும்பினில் - குடங்களிலே, தண் - தண்ணிய, கதிர் - கிரணங்களை, பரப்ப - (சந்திரன்) விரிக்க, கால் - கக்கப்பட்ட, நறு - நல்ல, புனல் - நீரானது, நிறைதலும் - (அவற்றுள்ளே) நிறைதலும், கதிரவன் - சூரியனது, தடம் - விசாலமாகிய, தேர் - தேரிற் பூட்டப்பட்ட, மான் - குதிரைகளது, இனம் - கூட்டமானது, குடித்து - (அந்நீரைக்) குடித்து, அயர்வுயிர்

த்து - இளைப்பாற்றிக்கொண்டு, உம்பரில் - ஆகாசத்திலே, வாவும் - தாவிச்செல்லும், எ - று.

க - து. மேல்வீட்டில் வைக்கப்பட்ட சந்திரகாந்தக் கற்குடங்களிலே சந்திரனாற் கக்கப்பட்ட சலத்தைச் சூரியன் குதிரைகள் குடித்திளைப்பாறி நடக்கும் என்பதாம்.

நிரைத்த தசும்பாவன - சீதளோபசாரத்திற்குரிய தண்ணீர் பெறுவது கருதி வைக்கப்பட்டவையாம். அவை சந்திரன்முன் னீர்காலுதல், "சந்திர னொளியிற் றண்ணீர் கால்வது சந்திரகாந்த மெனப்பெயர் பெறுமே" (திவாகரம் பல்பொருட்டொகுதி) என்பதனாலறிக. அந்நீரைக் குடித்தவளவிலே வெயிலாலும் இழுத்தலாலும் உண்டான வருத்தந் தீர்தலாற் களிப்படைந்து தாவுமென்க. [மேனிலைக்குஞ் சூரியமண்டலத்துக்குஞ் சம்பந்தங் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி.] (கஉ)

முருகு யிர்த்தவொள் ளகிற்புகை முகிலொடு முறழக்
குருமணிச்சுடர் வெயில்விரி மாடநீள் கொடிகள்
பருதி வானவ னடவுதேர்ப் பரியினைப் புடைத்தவ்
வருண னிற்றொழில் புரிந்தவன் கரஞ்சிறி தாற்றும்.

இ - ள். முருகு - பரிமளத்தை, உயிர்த்த - தருகின்ற, ஒள் - ஒள்ளிய, அகில் - அகிற்கட்டைகளது, புகை - புகையானது, முகிலொடும் - மேகத்தோடும், உறழ் - ஒத்துத்தோன்றுகின்ற, அ-அந்த, குரு - நிறமுள்ள, மணி - மணிகளது, சுடர் - கிரணமானது, வெயில் - வெயில்போல, விரி - விரிகின்ற, மாடம் - மாளிகையினுடைய, நீள் - நீட்சிபொருந்திய, கொடிகள்-கொடிகளானவை, பருதி வானவன் - சூரியனாகிய தேவனது, நடவு - நடத்தலையுடைய, தேர் - தேரிற் பூட்டப்பட்ட, பரியினை - குதிரைகளை, புடைத்து - அடித்து, அவ்வருணனில்-அவ்வருணன்போல,தொழில்-(நடத்துகைத்)தொழிலை, புரிந்து-செய்து, அவன் - அவ்வருணனது, கரம் - கை(வருத்தத்தை), சிறிது - சற்றே, ஆற்றும் - தீர்க்கும், எ - று.

க - து. மேல்வீட்டிற்கட்டிய கொடிகளானவை சூரியன் தேரிற் பூட்டிய குதிரைகளை யடித்துச் சாரதித் தொழிலை நடத்தி அருணன் கைவருத்தத்தைத் தீர்க்கும் என்பதாம்.

அருணன் - சூரியனது தேர்ப்பாகன். இவன் காசிபன் விநதை என்னுந் தந்தைதாயர்க்குப் பிறந்தமகன். இவன் தம்பி கருடன். இந்த அருணனுக்கு அநூரு என்று வேறொரு பெயருமுண்டு. இந்தப்

பெயர்க்குக் காலில்லாதவன் என்பது பொருள். அகிற்புகை மேல் வீட் டறைகளுக்கு வாசனை யூட்டுதற்பொருட்டு மூட்டப்படுவதாம். சூரியனது தேர்ச்செலவிற்கு ஒரு கணப்போதேனு மோய்வில்லா மையாற் 'சிறிதாற்றும்'எனப்பட்டது.[அக்குதிரைகளுக்கும் இக்கொடிகளுக்குஞ் சம்பந்தங் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சி அங்கமும், உவமை அங்கியும் ஆதலாற் கலவையணியாம்.] (கரு)

வரிவ ளைக்குலக் குவையினுன் மணிகளான் மணிக
டெரித ருங்கர வலவனுல் வயின்வயிற் றிரண்ட
விரிக ருப்புர வெண்மணற் குன்றினு லொலியாற்
பொருவி லாவண மறிதிரைக் கடலினைப் பொருவும்.

இ - ள். வரி - இரேகைகளையுடைய, வளை குலம் - சங்குச்சாதிகளுடைய, குவையினுல் - இராசிகளாலும், மணிகளால் - இரத்தினங்களினுலும், மணிகள் - இரத்தினங்களை, தெரிதரும் - எண்ணுகின்ற, கரம் - கைகளாகிய, அலவனுல் - நண்டுகளாலும், வயின் வயின் - இடந்தோறும், திரண்ட - குவிந்த, விரி - விரிந்த, கருப்புரம் - கர்ப்பூரங்களாகிய, வெள் - வெள்ளிய, மணல் - மணலாலாகிய, குன்றினுல் - குவியல்களாலும், ஒலியால் - ஓசையினுலும், பொரு - ஒன்றையொன் றொத்திருக்கின்ற, இல் - மாடவரிசைகளையுடைய, ஆவணம்-கடைத்தெருவானது, மறி-மடங்குகின்ற, திரை- அலைகளையுடைய, கடலினை - சமுத்திரத்தை, பொருவும் - ஒக்கும், எ - று.

க - து. கடைத்தெருவானது கடலினை நிகர்க்கும் என்பதாம்.

மணிகளை விரல்களாலே தள்ளி யெண்ணுகிறபோது கைகள் நண்டுகள் செல்லுதல்போலத் தோன்றலாற் 'கரவலவன்' என்றார். வளையென்பதற்குக் கடலிலே சங்கென்றும்,கடைத்தெருவிலே வளையலென்றும், மணிகடெரிதருங் கரவலவ னென்பதற்குக் கடலிலே முத்துக்கள்போன்ற வடிவு தெரிகின்ற கைகளையுடைய நண்டென்றும், கடைத்தெருவிலே கரங்களிலே மணிகளை வைத்து அவற்றின் குணகுணங்களை யறிகிற அவ்வறிவில் வல்லவனென்றும் சிலேடையாகப் பொருள் கூறினும் அமையும். [இது உவமையணி.] (கசு)

திங்கள் வெண்மணி நிலத்துவா மதிச்செழுங் கதிர்க
டங்கி வீழ்புனற் பெருக்கொடு தலைப்பெய்து விசும்பிற்
கங்கை யாழ்கடற் றலைமகன் களிப்புறக் களித்துப்
பொங்கு கற்புறா லுரைத்தவை புகரற விளக்கும்.

இ - ள். விசும்பில் - ஆகாசத்திலுள்ள, கங்கை - கங்கையானவள், வெள்-வெள்ளிய, திங்கண்மணி-சந்திரகாந்தக் கற்கள் (படுத்த) நிலத்து-(மேல்வீட்டு) இடத்தே, உவா - பர்வத்திலுண்டாகிற, மதி-சந்திரனுடைய, செழு-செழிய, கதிர்கள் - கிரணங்கள், தீங்கி-தங்க, வீழ் - (அதிலிருந்து) வீழ்கின்ற, புனல் - நீரினது, பெருக்கொடு - வெள்ளத்தோடு, தலைப்பெய்து - கலந்து, ஆழ் - ஆழ்ந்த, கடல் தலைமகன் - கடலாகிய (தன்) கணவனானவன், களிப்புற - (அப்போது) களிக்க, களித்து - (தானும்) களித்து, பொங்கு - விளங்குகின்ற, கற்பு நூல் - கற்பிலக்கண நூலினால், உரைத்தவை - சொல்லப்பட்ட விதிகளை, புகர் அற - குற்றமற, விளக்கும் - விளக்குவாள், எ - று.

க - து. ஆகாய கங்கையானவள் சந்திரகாந்தக் கற்கள் பதித்த மேல்வீட்டில் சந்திர கிரணங்களால் வீழ்கின்ற வெள்ளத்தோடு கலந்து கடலாகிய கணவன் களிக்கத் தானுங் களித்துத் துணையாகச் சென்று கற்பிலக்கண விதிகளை விளக்குவாள் என்பதாம்.

உவாமதி - கலைகள் நிறைந்த சந்திரன் எனினுமாம். தலைப்பெய்து - ஒருசொல். கணவன் களிக்கும்போது உடன் களித்தலும் அவன் துயருறும்போது உடன் துயருறுதலுங் கற்பிலக்கணமாதலால் ஆகாச கங்கையும் பூரண சந்திரோதய காலத்திலே தன் கணவனாகிய சமுத்திரன் பெருகுதலாலே அப்போது அந்தச் சந்திரகிரணம்பட்டுச் சந்திரகாந்தத்திலிருந்து வீழ்கின்ற நீர்வெள்ளத்தோடு கலந்து தானும் பெருகி அக்கற்பிலக்கணத்தைப் பிறருக்குங் காட்டு மென்பதாம். தங்கியென்பது வினையெச்சத் திரிபு. இங்கே களித்தல்-முன்னையளவின் மிகுதல். [கங்கை தன் செய்கையினாலே கற்பிலக்கணமாகிய நற்பொருளைக் காட்டுதலால் நற்பொருட் காட்சியணியாம். இதற்குச் சந்திரகாந்த நீருக்குங் கங்கைக்குஞ் சம்பந்தங் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சி அங்கமாதலாற் கலவையணி. இதனாலே அந்நகரத்து வீடுகளின் மேனிலைகள் ஆகாசகங்கையின்மே லுயர்ந்திருக்கின்றமை தொனிக்கின்றது.] (கரு)

தடங்கொ டாமரைத் தனிரிய லுறையுமிந் நகர
மிடங்கொள் பூதல நகரெலாம் வென்றன மினிவா
னடங்க வெல்லுது மென்னவோர் வஞ்சின மறையாப்
படங்க ளாற்றிய போன்றுள பசியபொற் கொடிகள்.

இ - ள். பசிய - பசுமையுள்ள, பொன் - பொன் மயமாகிய, கொடிகள் - கொடிகளானவை, தடம் - விசாலத்தை, கொள்-கொண்ட

தாமரை - தாமரைப்பூவி லிருக்கின்ற, தளிர் இயல் - தளிர்போலு மெல்லிய வடிவுடைய சிதேவியானவள், உறையும் - வாசஞ் செய்கின்ற, இ நகரம் - இந்த மாவிந்த நகரமானது, இடம் - இடத்தை, கொள் - கொண்ட, பூதலம் - பூமியிலுள்ள, நகர் எலாம் - எல்லா நகரங்களையும், வென்றனம் - வென்றேம், இனி - இனிமேல், வான் - தெய்வ லோகத்தை, அடங்க - (எமக்குக்) கீழ்ப்பட, வெல்லுதும் - வெல்லுவோம், என்ன - என்று, ஓர் வஞ்சினம் - ஒரு சபதத்தை, அறையா - சொல்லி, நாற்றிய - (எழுதித்) தொங்கவிடப்பட்டனவாகிய, படங்கள் - படங்களை, போன்றுள - ஒத்திருக்கும், எ - று.

க - து. கொடிகளானவை மாவிந்த நகரம் எல்லா நகரங்களையும் வென்றேம், இனித் தேவநகரத்தை வெல்லுவோமென்று படங்களெழுதிக் கட்டியதுபோ லிருக்கின்றன என்பதாம்.

வான் அடங்க-என்பதற்கு சுவர்க்கலோக முழுதும் என்றுரைத்தலுமாம். அறையா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். எல்லா நகரங்களையும் வென்ற தன்னுயர்வுதோன்ற வென்றனம் வெல்லுதும் எனப் பன்மையாற் சொல்லியதாகக் கூறினார். தன் பகைவன் அஞ்சுவானாயின் வந்து வணங்கவும், அஞ்சிலனாயிற் போர்க் கருவிகளைக் கூட்டவுஞ் சமயமுண்டாகவேண்டி, முன்னே படமெழுதி யறிவித்தல் வெல்லக்கருதிய அரசனுக்குக் கடனாதலாற் 'படங்களுற்றிய' என்றார். [துகிற்கொடிகளை அப்படிப்பட்ட படங்களாகக் குறித்தலாலே பொருட்டற்குறிப்பணியாகும்.] (கசு)

அகனி லாமணி வட்டநீ ளரிமதர் மழைக்கண்
மகளிர் வாண்முக மதிகண்டு தீம்புனன் மல்கப்
புகரி றென்மலை நறுங்குற டுரிஞ்சுபூந் தேய்வை
பகரு மின்னுயிர்ப் பால்விரை யூட்டினர் பகர்வார்.

இ - ள். நீள் - நீண்ட, அரி - இரேகைகளையும், மதர் - செருக்கையும், மழை - குளிர்ச்சியையுமுடைய, கண் - கண்களையுடைய, மகளிர் - மாதரானவர், வட்டம் - வட்டமாகிய, அகல் - பரந்த, நிலா மணி - சந்திரகாந்தக் கல்லானது, வாள் - காந்தி பொருந்திய, முகம் மதி - (அவர்) முகமாகிய சந்திரனை, கண்டு - காணலால், தீ - மதுரமாகிய, புனல் - நீரானது, மல்க - (அதிலே) நிறைய, புகர் இல்-குற்றமில்லாத, தென்மலை - பொதியமலையி லுண்டாகிய, நறு - நல்ல, குறடு - கட்டைகளை, உரிஞ்சு - (அதனிடத்தே) தேய்த்துண்டாக்கப்பட்ட, பூ - அழகிய, தேய்வை - சந்தனத்தை, பகரும் - புகழப்படு

கின்ற, இன் - இனிய, உயிர்ப்பால் - சுவாசத்தினாலே, விரை - வாசனையை, ஊட்டினர் - ஏற்றினவராகி, பகர்வார் - விற்பார், எ - று.

க - து. உத்தமஜாதிப் பெண்களானவர்கள் சந்திரகாந்தக் கல்லில் சந்தனத்தை உரைத்துச் சுவாசத்தினால் வாசமூட்டி விற்பார்கள் என்பதாம்.

ஊட்டினர் - முற்றெச்சம். கண்டென்பது வினையெச்சத்திரிபு. அச்சந்தனம் விற்கின்ற மகளிரிடத்தே யியற்கைவாசனை சொல்லுதலால் உத்தமசாதியாரென்பது தோன்றுகின்றது. இது, "ஒண்மணம் பாடலங்குவளை, தண்ணறு முளரிமல்லிகை நறுந்தண் சண்பகம் போல்வனவாகும்" (திருவிளையாடல் - வேல்வளை சேண்டுகொடுத்தபடலம்-சஉ) என்பதனாலறிக. (கஎ)

## கலிவிருத்தம்.

நீங்கரிய கூலமணி நீண்மறுகு தோறு
மாங்குயிலின் மென்குதலை மாலைபகர் மாதர்
தேங்கமழு யிர்ப்பின்விரை சேர்த்தினர்கள் விற்குங்
கோங்கமலர் சண்பகமென் கோதையினுங் கொள்வார்.

இ-ள். நீங்கு அரிய - ஒதுங்குதற் கிடமில்லாத, மணி-நவமணிகளையுடைய, நீள் - நீட்சிபொருந்திய, கூலம் மறுகுதோறும் - கடைத்தெருவெல்லாம், மா - மாமரத்திலுள்ள, குயிலின் - குயிலிசைபோலும், மெல் - மெல்லிய, குதலை - மழலைச் சொற்களையுடைய, மாலை - மாலைகளை, பகர் - விற்கின்ற, மாதர் - மங்கையரானவர், தேம் - பரிமளமானது, கமழ் - மணக்கின்ற, உயிர்ப்பின் - சுவாசத்தால், விரை - வாசனையை, சேர்த்தினர்கள் - சேர்த்தவராய், விற்கும் - விற்கப்படுகின்ற, கோங்கமலர்-கோங்கமலர்களாலாகிய, (கோதை)-மாலையை, மெல் - மெல்லிய, சண்பகம் - சண்பக மலர்களாலாகிய, கோதையினும் - மாலையினுஞ் சிறந்ததாக, கொள்வார் - வாங்குவார், எ - று.

க - து. உத்தமசாதிப் பெண்கள் சுவாசத்தினால் வாசனையூட்டி விற்கின்ற கோங்கமலர் மாலைகளைச் சண்பகமலர் மாலைகளைப் பார்க்கிலும் சிறந்ததாகக் கொள்வார்கள் என்பதாம்.

குயில் ஏனைமரங்களினுஞ் சஞ்சரிப்பதாயினும் பெரும்பாலும் மாமரங்களில் விரும்பி வாழ்த வியற்கையாதலால் 'மாங்குயில்' என்றார். சேர்த்தினர்கள் - முற்றெச்சம். சண்பக மலரிற்றாழ்ந்த கோங்கமலர் அவர் மூச்சுக் காற்றின் பரிசத்தால் அச்சண்பகமலர் வாசனையினு மிகுந்த வாசனையைப் பெறுதலால் மிகவும் விரும்பப்படுமென்

பதாம். இதுமுதல் ஏழுபாட்டுகள் பெரும்பாலும் கடைச்சீர் மாச்சீரும் மற்றை மூன்று சீர்களும் விளங்காய்ச் சீர்களுமாகி வருகிற அளவடிக ளான்குகொண்ட கலிவிருத்தங்கள். (கஅ)

ஆடவரோ டூடியெழு மஞ்சொன்மட நல்லார்
நீடொளிய தூணின்முகங் கோட்டியெதிர் நிற்ப
வாடுமிடை யாரென மருண்டிறைவர் பாவைத்
தாடொழுது மெய்த்துனித கைப்பநகை செய்வார்.

இ - ள். ஆடவரொடு - (தம்) கணவரோடு, ஊடி - பிணங்கி, எழும் - புறப்பட்ட, அம்சொல் - அழகிய சொற்களையுடைய, மடம் - பேதைமைபொருந்திய, நல்லார் - மாதரானவர், நீடு - நீட்சிபொருந்திய, ஒளிய - காந்தியையுடைய, தூண் - (இரத்தினத்) தூணுக்கு, எதிர் - எதிராக, முகம் - முகத்தை, கோட்டி - வளைத்துக்கொண்டு, இல் - அறைவீட்டுள், நிற்ப - நிற்க, இறைவர் - அக்கணவரானவர், பாவை - (அத்தூணிலே தோன்றுகிற) பாவையை (நோக்கி), வாடும் - வாடுகின்ற, இடையார் என - இடையையுடைய அம்மாதரென்று, மருண்டு - மயங்கி, தாள் - (அப்பாவையின்) பாதங்களை, தொழுதும் - வணங்கலும், மெய் - மெய்யாகிய, துனி - அப்பிணக்கானது, தகைப்பு - தடுக்கவும், நகை செய்வார் - (அம்மாதர்) சிரிப்பார், எ - று.

க - து, மாதர்கள் கணவரோடு பிணங்கித் தூணுக்கெதிராக மறைந்திருக்க, அக்கணவர்கள் தூணிலேதோன்றும் பாவையைநோக்கி மாதர்களென்று பாதத்தை வணங்கவும் பிணக்குத் தடுக்கவும் அம்மாதர்கள் சிரிப்பார்கள் என்பதாம்.

"'நீடொளிய தூண்' என்றதனால் இரத்தினத்தூணென்பது பெறப்பட்டது. இங்கே பாவை - பிரதிபிம்பம், "கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந், திருநுதற் கில்லை யிடம்" (திருவள்ளுவர் - காதற் சிறப்புரைத்தல் - ரு) என்பதனாலறிக. 'மெய்த்துனி' காரணத்தா லுண்டாகிய புலவியீட்டம். ஊடிச்சென்ற மகளிரைத் தேடிச்சென்ற ஆடவர் அவர் இல்லுள்ளே மறைந்து நிற்ப, அவரைக் கண்டிலாது தூணிலே தோன்றுகிற அவரது சாயையைக் கண்டாரென்க. தூணில் - தூணின்கணென்றும், பாவை - பிரதிமையென்றுங் கூறுவாருமுளர். [பாவைகளை மகளிரென்று மயங்கலால் மயக்கவணி.] (கக)

வண்ணமுலை மாதர்பகர் வழியசெழுஞ் சாந்தங்
கண்ணெளிகள் பாயனரந் தங்கலந்த தென்றும்
வெண்ணகைப ரத்தல்கருப் பூரம்விர விற்றென்
றெண்ணியுந றுங்கலவை யென்றிளைஞர் கொள்வார்.

இ - ள். வண்ணம் - அழகிய, முலை-முலைகளையுடைய, மாதர்-மங்கையரால், பகர் - விற்கப்படுகின்ற, வறிய-கலப்பில்லாத, செழு-செழிய, சாந்தம் - சந்தனத்தில், கண் ஒளிகள் - (அவர்) கண்களினொளிகள், பாயல் - பாய்தலினாலே, நரந்தம் - கஸ்தூரியானது, கலந்தது என்றும் - கூட்டப்பட்டதென்றும், வெள் - வெள்ளிய, நகை - பல்லொளிகள், பரத்தல் - பாய்தலினாலே, கருப்பூரம் - பச்சைக் கர்ப்பூரமானது, விரவிற்று என்றும் - கூட்டப்பட்ட தென்றும், எண்ணி - நினைத்து, நறு - நல்ல, கலவை என்று - கூட்டுச் சாந்தமென்று, இளைஞர் - ஆடவர், கொள்வார் - (அதனை விலைக்கு) வாங்குவார், எ - று.

க - து. உத்தமசாதிப் பெண்களால் விற்கப்படுஞ் சந்தனத்தை அவர்கள் கண்ணொளிகள் பாய்தலாற் கஸ்தூரி கலந்ததென்றும், பல்லொளிகள் பாய்தலாற் பச்சைக்கருப்பூரங் கலந்ததென்றும் வாலிபர்கள் வாங்குவார்கள் என்பதாம்.

[ஒப்புமையினாலே கண்ணொளியையும் பல்லொளியையுங் கஸ்தூரியென்றும் பச்சைக் கருப்பூரமென்றும் மயங்குதலினாலே மயக்கவணியாம்.] (உ0)

பளிக்கறைபு குந்தனர்கள் பாயொளியின் வாயில்
வெளிப்படுத லின்றிமருண் மேவிநிழ னாறித்
துளக்கறுமி டத்துவிரை தோய்ந்துவரு தென்ற
றிளைத்துலவு வெள்ளிடையின் வாயிறெளி கிற்பார்.

இ - ள். பளிக்கு - பளிங்காலாகிய, அறை - அறையினுள்ளே, புகுந்தனர்கள் - நுழைந்தவர்கள், பாய் - பரந்த, ஒளியின் - ஒளியினாலே, வாயில் - வாயிலானது, வெளிப்படுதல் இன்றி-அறியப்படுதலில்லாமையால், மருள் - மயக்கத்தை, மேவி - அடைந்து, துளக்கு அறும் இடத்து - பொதியமலையிலிருந்து, விரை - (சந்தன) வாசனையில், தோய்ந்து - படிந்து, வரு - வருகின்ற, தென்றல் - தென்றலானது, நிழல்-குளிர்ச்சியோடு, நாறி - தோன்றி, திளைத்து-அசைந்து, உலவு - சஞ்சரிக்கின்ற, வெள்ளிடையின் - வெளியினாலே, வாயில்-(தாம்) வந்தவாயிலை, தெளிகிற்பார் - அறிந்துகொள்வார், எ - று.

க - து. பளிங்கறையுட் புகுந்தவர்கள் ஒளியால் வாயிலறியாது மயங்கித் தென்றலால் வாயிலறிந்தார்கள் என்பதாம்.

மலைசலியாமையால் அசலமெனப் படுதல்போலத் 'துளக்கறுமிடம்' எனப்பட்டது. துளக்கறுமிடம்-அசைவற்றவிடம் (மலை). சூழ்

ந்து நின்ற பளிக்குச் சுவரானது வாயிலினுகாசம்போலத் தன்புறத்துள்ள பொருள்களைக் காட்டி வெள்ளெனத் தோன்றி நிற்கையால் வாயில் காணாது மயங்கின ரென்பதாம். [ஒப்புமையினாலே பொதுமை யடைந்த பளிங்கிற்கும் வாயில் வெளிக்கும் தென்ற லுலாவுத லாகிய காரணத்தினால் சிறப்புத் தோன்றுதலின் சிறப்பணியாகும்.] (உக)

வில்லுமிழு மாமணிகு யிற்றிமிளிர் மாடத்
தொல்கியது கிற்கொடிக ளும்பருல கெய்திப்
பல்லவமு யிர்த்துவளர் பைந்தருவின் மேவும்
வல்லிபடர் கின்றகொழு கொம்பெனவ யங்கும்.

இ - ள். வில் - காந்தியை, உமிழும் - வீசுகிற, மா - பெருமை பொருந்திய, மணி-மணிகளானவை, குயிற்றி-பதிக்கப்பட்டு, மிளிர்-விளங்காநின்ற, மாடத்து - மாளிகைகளின் மேல், ஒல்கிய - அசைகின்ற, துகில் கொடிகள் - சீலைக் கொடிகளானவை, உம்பர் - தேடரது, உலகு - உலகத்தை, எய்தி - அடைந்து, பை தருவில் - பசிய கற்பகத் தருவின்மேல், மேவும் - அடைதற்குரிய, பல்லவம் - தளிர்களை, உயிர்த்து - ஈன்று, வளர் - வளர்கின்ற, வல்லி - கொடிகளானவை, படர்கின்ற-படர்தற்குக் காரணமா யிருக்கின்ற, கொழு கொம்பு என -கொழுகொம்புகள்போல, வயங்கும் - விளங்கும், எ - று.

க - து. மணிமாடத்திற் கட்டிய கொடிகளானவை கற்பகத்தருவின்கீழ் வளர்கொடி படருங் கொழுகொம்பென விருக்கு மென்பதாம்.

கற்பகத்தருவின் மேற்படர் கொடியைக் காமவல்லி யென்பர். கற்பகத் தருவின் கீழ் வளர்கின்ற கொடிகளை அதன்மே லேற்றுதற்கு நாட்டப்பட்ட கொழுகொம்பென்க. [அக்கொடிகளை அப்படிப்பட்ட கொழுகொம்புகளாகக் குறித்தலால் தற்குறிப்பணி. இதற்குத் தொடர்புயர்வு நவிற்சியணி அங்கம் ஆதலால் கலவையணி.] ()

திங்களுநல் லார்முகமுஞ் செவ்விதெரிக் கொண்ணு
வங்கனுமு மேனியொடு மின்பிரிக்க லாகா
மங்குறவழ் வெண்கொடியும் வானதியு மணியால்
வெங்கதிர்செய் மாடமிசை வேறறிய லாகா.

இ - ள். மணியால் - மாணிக்கங்களால், வெம் கதிர் - சூரிய கிரணத்தை, செய் - பரப்புகின்ற, மாடமிசை - மாளிகையின்மேலே,

திங்களும் - பூர்ண சந்திரனும், நல்லார் - மாதரது, முகமும் - முக மும், செவ்வி - அழகினாலே, தெரிக ஒண்ணு - வேறுபடுத்தப் படாவாம்; அம் - அழகினாலே, கலுழும் - விளங்காநின்ற, மேனி - (அவர்) சரீரமும், மின் - மின்னற்கொடியும், பிரிக்கலாகா - பிரிக்க ப்படாவாம்; மங்குல் - மேகங்களானவை, தவழ்-மேலே தவழ்கின்ற, வெண்கொடியும் - வெள்ளைக்கொடியும், வான் நதியும்-ஆகாசகங்கை யும், வேறு - வேறாக, அறியல் ஆகா - அறியப்படாவாம், எ - று.

க - து. சந்திரனும் பெண்கள் முகமும், மின்னலும் பெண்களு டைய மேனியும், வெண்கொடியும் ஆகாய கங்கையும் வடிவினால் வேறுபடுத்தப் படாவாம் என்பதாம்.

இச்செய்யுளுக்கு யாவராலுமென்னும் வினைமுதல் வருவித்துக் கொள்க. [சந்திரனோடு மாதர் முகத்துக்கும், மின்னற்கொடியோடு மாதர் சரீரத்துக்கும், ஆகாச கங்கையோடு வெள்ளைக்கொடிக்கும் ஒப் புமையினாலே விசேடந் தோன்றாமையால் பொதுமை யணியாகும்.]

சந்தநறு மென்புகை தவழ்ந்தநில மெங்கும்
பந்துபயில் கோதையர்ப சும்பொனணி யாவு
மைந்தருவி யன்சினைய ணிந்தனர தன்றோ
வந்துநனி யேற்பவர்ம கிழ்ந்திடவ ழங்கும்.

இ - ள். சந்தம் - சந்தனக் கட்டைகளது, நறு - மணமுள்ள, மெல் - மெல்லிய, புகை - புகையானது, தவழ்ந்த - படிந்த, நிலம் எங்கும் - மேல்வீடெங்கும், பந்து - பந்தாட்டத்தில், பயில் - பழகு கின்ற, கோதையர் - மாதரானவர், பசு பொன் - பசிய பொன்னா லாகிய, அணி - ஆபரணங்களையும், யாவும் - மற்றெல்லாவற்றையும், ஐந்தரு - பஞ்சதருவினுடைய, வியன் - பெரிய, சினை - கிளைகளில், அணிந்தனர் - வேய்ந்தார்; அதன்றோ - அதனாலன்றோ, வந்து - (தம் மிடத்து) வந்து, ஏற்பவர் - இரப்பவர்க்கு, மகிழ்ந்திட - மகிழும்படி, நனி - (அத்தருக்கள்) மிகுதியாக, வழங்கும் - (விரும்பப்பட்டவற் றைக்) கொடுக்கும், எ - று.

க-து. மேல்வீட்டிற் பந்து விளையாடுகின்ற பெண்கள் ஆபரண முதலியவற்றைக் கழற்றிப் பஞ்ச தருக்களில் அணிந்தனர். அதனா லல்லவோ அத்தருக்கள் இரந்தவர்களுக்கு ஈகின்றன என்பதாம்.

'யாவும்' என்றதனாலே ஆடை மாலை முதலிய வெல்லாங் கொள்க. பந்துகளைத் தாவி வீசவும் ஓடிப்பிடிக்கவும் வேண்டுதலால் அப்போது வருத்துமென்று களைந்தணிந்தாரென்க. 'அதன்றோ வழங்

கும்' என்றதனாலே செல்வப்பெருக்கின் செருக்கினால் மீட்டும் அவற்றை யெடுத்தில ரென்றதாயிற்று. [கற்பகத்தினது கொடைக்கு ஏதுவாகாத அவ்வணிமுதலியவற்றைப் பெற்றிருக்கையை ஏதுவாகக் குறித்தலாலே ஏதுத் தற்குறிப்பணியாம்.] (உச

வாய்ந்த மின்னை மடந்தைய ராக்கிவிண்
போந்தி டாமலன் றேமலர்ப் புங்கவன்
சாந்த ணிந்த தமனியக் குன்றென
வேந்து வெம்முலைப் பார மியற்றினான்.

இ - ள். மலர் - தாமரைப்பூவி லிருக்கின்ற, புங்கவன் ..... முகக் கடவுளானவன், விண் - மேகத்தின்கண், வாய்ந்த - பொருந்திய, மின்னை - மின்னற்கொடிகளை, மடந்தையர் ஆக்கி - மங்கையராக்கி, போந்திடாமல் அன்றே - (மீட்டும் அம்மேகத்தினிடத்தே) போகாதிருத்தற்கன்றே, சாந்து - சந்தனத்தை, அணிந்த - பூசிய ஏந்து - சுமக்கப்படுகின்ற, வெம் - விருப்பஞ் செய்கின்ற, பார பாரமாகிய, முலை - முலைகளை, தமனியம் குன்று என - பொன் ட யைப்போல, இயற்றினான் - (அவருக்கு) உண்டாக்கினான், எ - று.

க - து. பிரமதேவனானவன் மின்னற் கொடிகளைப் பெண்களாக்கி அம்மின்னல்களாகிய பெண்கள் மேகத்திற் செல்லாமலிருக்கப் பொன் மலைகளைப்போல நன் முலைகளைப் படைத்தான் என்பதாம்.

[புகழவேண்டிய தல்லாத மின்னலைக்கொண்டு படைத்தலைப் புகழ்தலினாலே புகழவேண்டிய அந்நகரத்து மகளிரது சரீரகாந்தி தோன்றுதலாற் காரணப் புனைவிலி புகழ்ச்சி. இது அங்கம். முலைகளின் பாரத்தை யுண்டாக்கினமைக்குப் பயனாகாத மேகத்தின்கட் போகாமையைப் பயனாகக் குறித்தலாலே பயன்றற்குறிப்பணியாகும். இது அங்கி. ஆதலாற் கலவையணி.] (இதுமுதற் பதினொரு பாட்டுகள் பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும் மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகி வருகிற அளவடிகள் நான்குகொண்ட கலிவிருத்தங்கள்.)

வெங்க திர்ச்சுடர் மேவிய தேர்ப்பரித்
தங்கு வன்குளம் பிற்றகர்ந் திட்டன
தெங்கி னொண்பழத் தெள்ளமு தத்தினாற்
பங்க மெய்து மறுகின் பரப்பெலாம்.

இ - ள். வெம் - வெவ்விய, கதிர் - கிரணங்களையுடைய; சுடர் சூரியனானவன், மேவிய - தங்கிய, தேர் - தேரிற்கட்டிய, பரி - கு

ரைகளுடைய, வல் - வலிமை, தங்கு - தங்கிய, குளம்பின் - குளம்புகளாலே, தகர்ந்திட்டன - உடைந்தனவாகிய, தெங்கின் - தென்னமரங்களுடைய, ஒள் - ஒள்ளிய, பழம்-கனிகளினது, தெள் - தெளிவு பொருந்திய, அமுதத்தினால் - நீரினாலே, மறுகின் - வீதிகளினுடைய, பரப்பெலாம் - விரிவுகளெல்லாம், பங்கம் - சேருதலை, எய்தும் - அடையும், எ - று.

க - து. சூரியனது தேரிற் பூட்டிய குதிரைகளுடைய வன்காற் குளம்பால் உடைபட்ட தேங்காய்களின் நீரினால் வீதிகள் சேறடையும் என்பதாம்.

'வெங்க திர்ச்சுடர் மேவிய தேர்ப்பரித், தங்கு வன்குளம் பிற்றகர்ந் திட்டன, தெங்கி னொண்பழம்' என்றதனால் தென்னமரங்கள் சூரியமண்டலத்தளவும் உயர்ந்திருக்கின்றன வென்பது விளங்குகின்றது. [தென்னமரத்திற்குஞ் சூரியமண்டலத்திற்குஞ் சம்பந்தத்தைக் கற்பித்தலினாலே தொடர்புயர்வு நவிற்சியணியாகும்.] (உசு)

நிலவு வெண்கதிர் நீண்மணி மாடமேற்
குலவு பாதி மதியைமென் கொம்பனார்
சிலைகொள் வாணுதல் சேர்த்திய வாடவ
ருலக மேத்து முவாமதி யென்பரால்.

இ - ள். நிலவு - நிலவைச் செய்கின்ற, வெண்கதிர் - சந்திரனுடைய, மணி - மணிகளாலாகிய, நீள் - நீண்ட, மாடமேல் - வீட்டின்மேலே, குலவு - விளங்குகின்ற, பாதி மதியை - அர்த்த சந்திரனை, மெல் - மெல்லிய, கொம்பனார் - பூங்கொம்பு போல்வாராகிய மாதர், சிலை - வில் வடிவத்தை, கொள் - கொண்ட, வாள் - ஒளி பொருந்திய, நுதல் - (தமது) நெற்றியோடு, சேர்த்திய - கூட்ட, ஆடவர் - (அதுகண்ட) நாயகரானவர், உலகம் - உயர்ந்தோரால், ஏத்தும் - துதிக்கப்படுகின்ற, உவாமதி - பூரண சந்திரன், என்பர் - என்று சொல்லுவார், எ - று.

க - து. வீட்டின்மேலிடத் துலாவிய பெண்கள் பாதிச் சந்திரனைப் பிடித்துத் தங்களுடைய நெற்றியோடு சேர்க்க அதுகண்ட கணவர்கள் பூரண சந்திரனென்று சொல்லுவார்கள் என்பதாம்.

பாதிமதி - எட்டாந் திதியிற் சந்திரன். சேர்த்தவென்னும் வினையெச்சம் சேர்த்திய வெனத் திரிந்தது. ஆடவரை வஞ்சித்துப் பரிகாசஞ் செய்தற்கு அங்ஙனஞ் செய்தாரென்க. [ஒப்புமையினாலே அந்நெற்றிக்கும் பாதிமதிக்கும் விசேஷந் தோன்றாமையால் பொதுமையணி.] (உ7)

புலவி நீக்கிப் புணர்முலை மாதர்தந்
நிலவு பூந்துகி லாடவர் நீக்கலு
நலம்வி ளைத்தனர் நாணிவெண் டிங்களின்
கலையை மெல்லக் கலையெனச் சேர்த்துவார்.

இ - ள். ஆடவர் - கணவரானவர், புலவி - பிணக்கை, நீக்கி - தீர்த்து, புணர் - நெருங்கிய, முலை - முலைகளையுடைய, மாதர் - மகளிரது, நிலவு - சந்திரிகைபோல் விளங்குகின்ற, பூ-அழகிய, துகில்- ஆடையை, நீக்கலும் - அவிழ்த்தவளவில், நாணி - வெட்கப்பட்டு, நலம் - உதவியை, விளைத்தனர் - (அவர்க்கு) உண்டாக்கினவராக, வெள் - வெள்ளிய, திங்களின் - சந்திரனது, கலையை - நிலவை, மெல் - மெல்லிய, அ கலை என - அவ்வாடையென்று நினைத்து, சேர்த்துவார் - (அவர் அரையிலே) சேர்ப்பார், எ - று.

க - து. கணவரானவர்கள் தங்கள் மாதர்கள் கலையை அவிழ்த்த மாத்திரத்தில் அம்மாதர்கள் வெட்கித் தங்கள் கலையென்று சந்திர கலையை அரையிற் சேர்ப்பார்கள் என்பதாம்.

புலவி நீங்கிய பின்னும் நாண மேலிடலால் அவிழ்க்கப்பட்ட கலையை மீட்டுஞ் சேர்த்துவா ராயினர். அது ஆடவர் செயற்குத் தடையாகாமையால் 'நலம் விளைத்தனர்' என்றார். சந்திரிகை கைக் ககப்படாததாயினும் மெல்லிய குணத்தாற் கைக்ககப்பட்டபோதும் பரிசந் தோன்றாத வாடையென்று மயங்கச் செய்தது. கலை - ஆகு பெயர். [மென்மை வெண்மை முதலிய பொதுப்பண்பி னொப்புமை யினாலே ஆடையை நிலவென்று மயங்கலால் மயக்கவணி.] (உ௲)

பொருந்து றுதனம் பூஞ்சிலம் பார்ப்பறக்
கரந்து தம்முயிர்க் காதலர் பாற்செல்வார்
திருந்து வாண்முகந் திங்களென் றந்நிலா
வருந்த வந்தபுள் ளார்த்தலர் தூற்றுமால்.

இ - ள். அனம் - அன்னங்களானவை, பொருந்துறாது - (தம் மருகில்) அடையாதிருக்க, பூ - அழகிய, சிலம்பு - சிலம்புகளது, ஆர்ப்பு - ஓசையானது, அற - நீங்கும்படியாக, கரந்து - மறைந்து, தம் உயிர் - தம்முயிர்போலும், காதலர்பால் - அன்பரிடத்து, செல் வார் - (மெள்ளச்) செல்லுகின்ற மங்கையரது, திருந்து - திருத்த மாகிய, வாள் - ஒளிபொருந்திய, முகம் - முகத்தை, திங்கள் என்று சந்திரனென்று நினைத்து, அந்நிலா - அதனது நிலவை, அருந்த

உண்ண, வந்த - வந்த, புள் - சகோரங்களானவை, ஆர்த்து - ஒலி த்து, அலர் தூற்றும் - வெளிப்படுத்தும், எ - று.

க - து. நாயகரிடத்து மறைந்து செல்கின்ற மாதர்கள் முகத் தைச் சந்திரனென்றெண்ணி அச்சந்திர கிரணங்களை உண்ணவந்த சகோரங்களானவை சத்தித்து அவரை வெளிப்படுத்தி யலர்தூற்றும் என்பதாம்.

சிலம்புகள் அன்னம்போ லொலித்தலாலே அதுகேட்டு அவ் வன்னங்கள் தம்மினமென்றுவரின் மறைந்து செல்லுதல் வெளிப்படு மென்று அச்சிலம்பொலியாமல் மெள்ள நடந்து செல்லுவாரென்க. சிலம்பு அன்னம்போ லொலிக்குமென்பது பின்னே, 'அனமென மிழ ற்றும் பரிபுரமணிந்து' என்பதனுனுமறிக. பெருநாண முடைமையாற் கணவரிடத்துங் கரந்து செல்லுவாராயினர். சகோரம் நிலவையருந்து தல், "வெண்டிங்க ணிலவுவா யிடைப்புகினுஞ் சகோரமெனு மென் புளன்றி, யுண்டிங்கு வாழுநரு முளர்கொல்லோ" (பிரபுலிங்கலீலை-மாயை கோலாகலகதி - எக) என்பதனாலறிக. [முகத்தைச் சந்திர னென்று மயங்குதலால் மயக்கவணி. இது அங்கம். மறைந்து செல் லலாகிய விரும்பப்பட்ட பொருளைக் குறித்து முயற்சி செய்ய அது வெளிப்படுதலாகிய அதன் பகைப்பொருள் கிடைத்தலால் துன்ப வணி. இது அங்கி. இவை யிரண்டும் சேர்தலாற் கலவையணியாம்.]

மலய மாதவ னுண்டமணிக் குவைக்
குலவு வார்கட னேர்சொலிற் குற்றமே
யலகில் பல்வளஞ் சேர்த்திய வாவண
முலக முண்டருண் மால்வயி றொக்குமே.

இ - ள். மலயம் - பொதியமலையி லிருக்கின்ற, மாதவன்-அகஸ் தியமுனிவனால், உண்ட - குடிக்கப்பட்ட, மணி-மணிகளது, குவை- கூட்டத்தையுடைய, குலவு - விளவாகிய, வார் - நெடிய, கடல் - கடலை, அலகு இல்-கணக்கில்லாத, பல் வளம்-பலவகையாகிய வளங் களையும், சேர்த்திய - (தன்னுள்) அடக்கிய, ஆவணம் - கடைக்கு, நேர் - ஒப்பென்று, சொலின் - சொன்னால், குற்றமே - (அப்படிச் சொல்லுதல்) குற்றமேயாம்; உலகம் - உலகத்தை, உண்டருள் - விழுங்கியருளிய, மால் - திருமாலினது, வயிறு - வயிற்றை, ஒக்கும்- (அது) ஒத்திருக்கும் (ஆதலால்), எ - று.

க - து. கடலைக் கடைக்கு ஒப்பென்று சொன்னாற் குற்றமாம்; அக்கடை திருமால் வயிற்றை ஒத்திருக்கும் என்பதாம்.

மலயம் என்ற குறிப்பால் மாதவன் என்பது அகத்தியமுனிவனை க்குறித்தது. முத்துப்பவள முதலிய கடல் வளமேயன்றி நான்கு நில வளங்களையுந் தன்னிடத்தே கொண்டிருக்கையாற் 'கடனேர்சொலிற் குற்றம்' என்றார். [பிரளயத்திலே திருமால் வயிற்றுட் சென்ற மார்க் கண்டேயரால் உலகத்துப் பொருள்களெல்லாம் காணப்பட்டன வென்பது புராணகதையாதலால், அப்படியே அக்கடையிலுங் காண ப்படுதல்பற்றி 'மால் வயிறொக்கும்' என்றார். உலக முண்டருள் மால் வயிறொக்கு மென்னும் வாக்கியத்தினாற் கடலை ஒப்புச் சொல்லுதல் கூடாமை சாதித்தலாலே செய்யுட்குறியணியாம்.] (௩௦)

நீடு மாவண நித்திலப் பந்தருட்
கேடில் கம்பலை யாலிசை கேட்கிலார்
பாடல் வண்டொடு நானம் பகர்ந்திடக்
கோடல் செய்வர் நிறைகுறை வின்றெனெ.

இ - ள். நீடும் - நீண்டிருக்கின்ற, நித்திலப் பந்தருள் - முத்துப் பந்தல்களிலுள்ள, ஆவணம் - கடைகளிலே, பாடல் - பாடுதலை யுடைய, வண்டொடு - வண்டுகளோடு, நானம் - கஸ்தூரியை, பகர்ந் திட - (நிறுத்து) விற்க, கேடில் - (எப்போதும்) நீங்காத, கம்பலை யால் - (களகளவென்னும்) ஒலியினாலே, இசை - (அப்பாடலின்) ஒலியை, கேட்கிலார் - கேட்கின்றிலருமாகி, நிறை-இந்நிறுக்கப்பட்ட பொருளிலே, குறைவு - யாதொரு குற்றமும், இன்று என - இல்லை யென்று நினைத்து, கோடல் செய்வர் - (விலைக்குக்) கொள்ளுவார் கள், எ - று.

க - து. கடைகளிலே வண்டுகளுடனே கஸ்தூரியை நிறுத்து விற்க நிறை குறையில்லையென்று கொள்ளுவார்கள் என்பதாம்.

'இசை கேட்கிலார்' என்றதனால் கருநிறத்தாலும் வாசனை விரு ப்பங்கொண்டு மொய்த்தபடி அசைவின்றிக் கிடத்தலாலும் வண்டின் வடிவத்தைப் பார்த்தறிந்திலரென்பது பெறப்பட்டது. வண்டொலி சிற்றொலியாதலிற் கடைத்தெருவின் பேரொலியுண் மறைந்ததெ ன்க. இக்காரணத்தாற் குறையுளதாகவு மின்றெனக்கருதி விலைக்குக் கொள்வாராயினர். [ஒப்புமையினாலே கஸ்தூரிக்கும் வண்டுக்கும் விசேஷந் தோன்றாமையினாலே பொதுமை யணியாகும்.] (௩௧)

குளிர்ப ளிக்குநீண் மாடங் கொடிகளான்
வெளிமு கட்டுயர் வெண்மதி தோய்வன
வொளிகொள் வெங்கதிர் வெம்மை யொழித்திட
நளிகொ டண்சுதை நக்குவ போலுமே.

இ - ள். குளிர் - குளிர்ச்சி பொருந்திய, பளிக்கு - பளிங்காலாகிய, நீள் - நீண்ட, மாடம் - மாளிகைகளானவை, வெளி - ஆகாசவெளியினது, முகட்டு - முகட்டின்கண், உயர் - உயர்ந்த, வெள்மதி - சந்திரனை, தோய்வன - தடவுவனவாகிய, கொடிகளால் - கொடிகளினாலே, ஒளி - சூரியனிலிருந்து, கொள்-(தம்மேற்)கொள்ளப்பட்ட, வெம் கதிர்-உஷ்ண கிரணத்தாலாகிய, வெம்மை - வெப்பத்தை, ஒழித்திட - நீக்கும்படியாக, நளி - பெருமையை, கொள் - கொண்ட, தண் - குளிர்ச்சி பொருந்திய, சுதை - (அச்சந்திரனிடத்துள்ள) அமுதத்தை, நக்குவ - (நாக்களினாலே) நக்குவனவற்றை, போலும் - ஒத்திருக்கும், எ - று.

க - து. மாடங்கள் சந்திரனை அளாவிய கொடிகளான் வெங்கதிர் வெம்மை நீங்கிடத் தண்கதிரை நக்குவபோன்றிருந்தன வென்பதாம்.

கொடிகள் நாக்களுக்கு உவமை. ஆகாச மத்தியத்தில் வந்தன்னன்றித் தோய்தல் கூடாமையால் 'வெளிமுகட்டுயர்' என்றார். சந்திரனிடத்தே கலைவளருந்தோறும் அமிர்தம் பெருகுமென்பது புராண சித்தாந்தம். பகல் முழுதும் வெயிலால் வருந்தியோன் இரவிலே சீதளோபசாரஞ் செய்து கொள்வானாதலின் 'மாடங்கள் வெம்மையொழித்திடச் சுதை நக்குவபோலும்' என்றார். 'கொடிகளால்' என்றதனாலும், 'நக்குவ' என்றதனாலும் நாக்களென்பது வருவிக்கப்பட்டது. [கொடிகளாலே சந்திரனைத் தோயு மாளிகைகளை அப்படி நக்குவனவாகக் குறித்தலாற் பொருட் டற்குறிப்பணி.] (கூஉ)

பத்தி மாட மணிக்கொடி பானுவின்
மெய்த்த ழும்புறத் தைவரல் வெங்கதிர்
கைத்த லங்களிற் காளிந்தி யைமடி
வைத்தி ருந்துதா லாட்டுதன் மானுமே.

இ - ள். பத்தி - ஒழுங்காயுள்ள, மாடம் - மாளிகையினது, மணிக்கொடி - நீலக்கொடியானது, பானுவின் - சூரியனது, மெய் - உடம்பிலே, தழும்பு உற-தழும்பு பொருந்த, தைவரல் - தடவுதலால், வெம் கதிர் - அச்சூரியனானவன், காளிந்தியை - காளிந்தி யென்பவளை, கைத்தலங்களின் - கைகளினாற் (பற்றி), மடி - மடியின்மேல், வைத்திருந்து - வைத்துக்கொண்டிருந்து, தாலாட்டு - தாலாட்டுகிற, தன் - தன்னை, மானும் - ஒக்கும், எ - று.

க - து. நீலக்கொடியானது சூரியனைத் தடவுதல் சூரியன் தன் மகளாகிய காளிந்தியைத் தாலாட்டுதல்போலு மிருந்தது என்பதாம்.

தாலாட்டு தன் எனப் பிரிக்காமல், தாலாட்டுதல் என ஒரு சொல்லாகக்கொண்டு தாலாட்டுவதை யென்றுரைப்பினுமாம். தைவரல் என்பதற்குத் தைவா பகுதி. மணி கருமையென்பது, "மணி நவமணியே கண்டைவனப் பொடுகருமை செம்மை" (ஆதிப்பொருணிகண்டு) என்பதனாலறிக. காளிந்தி-சூரியன் புதல்வி. 'மடிவைத் திருந்து' என்றதனால் குழந்தைப்பருவ முற்றிருந்த காளிந்தி யென்பதாயிற்று. காளிந்தி கருநிறத்தவளாதலாலே நீலக்கொடி அவள்போலத் தோன்றிற்று. தாலாட்டுதல் - தொட்டிலிலேனு மடியிலேனுங் கிடத்தி மெல்லென நாவசைத்தும் பாடியுந் தூங்கப்படுத்தலாம். [நீலக்கொடி தடவுதலாலே சூரியனைக் காளிந்தியைத் தாலாட்டுகிறவனாகக் குறித்தலாலே பொருட் டற்குறிப்பணி.] (௩௩)

யாணர் மேய விரவியை நண்பகற்
காணுந் தோறுங் கனன்று கனலுமிழ்
கோணை வெம்மணிக் கொம்மை யெயிற்புறம்
வாண னாரழல் சூழெயின் மானுமே.

இ - ள். இரவியை - சூரியனை, நண்பகல் - நடுப்பகலிலே, காணுந்தோறும் - பார்க்குந்தோறும், கனன்று - எரிந்து, கனல் - நெருப்பை, உமிழ் - சொரிகின்ற, புறம் - புறத்தையுடைய, கோணை-அழியாத, வெம்மணி - சூரியகாந்தத்தாலாகிய, யாணர் - தச்சரால், மேய-விரும்பிச் செய்யப்பட்ட, கொம்மை - வலயமாகிய, எயில் - மதிலானது, வாணன் - வாணாசுரனது, சூழ் - (சோணிதபுரத்தைச்) சூழ்ந்த, ஆர் அழல் - மிகுந்த நெருப்புமயமாகிய, எயில் - மதிலை, மானும்-ஒத்திருக்கும், எ - று.

க - து. சூரியகாந்தக் கற்களாற் செய்த மதிலானது சூரியனைக் கண்டு அக்கினி கக்கலால் வாணாசுரன் கோட்டையை ஒக்கும் என்பதாம்.

யாணர் தச்சரென்பது, "யாணரே புதுமை தச்சரெய்திய வனப்பு நன்மை" (ஆதிப்பொருணிகண்டு)என்பதனாலறிக; அழகெனினுமாம். சூரியகாந்தம் நெருப்பை யுமிழ்வது, "சூரிய வொளியிற் றீக்கால் சலாகை, சூரியகாந்த மெனப்பெயர் பெறுமே" (திவாகரம்-பலபொருட்டொகுதி) என்பதனாலறிக. [மாவிந்தத்தின் மதில் முன் சொல்லப்படுதலால் இது அரசரரண்மனை மதிலென்க. வாணாசுரன் சிவபூசையாலே நெருப்புக்கோட்டை பெற்றிருந்தானென்பது புராணகதை [இது உவமையணி.] (௩௪

உள்ள மொன்றுதங் காதல ரோதிய
கள்ள நேயக் கலவியின் வாய்மையை
வள்ள வாயமு துண்டுவ ளர்மடக்
கிள்ளை மெல்லக்கி ளத்தலு நாணுவார்.

இ - ள். உள்ளம் ஒன்று - ஒருமனப்பட்ட, தம் - தம்முடைய, காதலர் - நாயகரால், ஓதிய - சொல்லப்பட்ட, கள்ளம் - (தம்மிருவருக்குள்ளே) மறைக்கத்தக்க, நேயம் - அன்பு பொருந்திய, கலவியின் - புணர்ச்சியினுடைய, வாய்மையை - சொற்களை, வள்ளவாய் - கிண்ணத்தினிடத்தே தங்கிய, அமுது - பாலை, உண்டு - குடித்து, வளர் - வளர்கின்ற, மடம் - இளமைபொருந்திய, கிள்ளை - கிளிகள், மெல்ல - மெள்ள, கிளத்தலும் - (பிறரறியச்) சொல்லுதலும், நாணுவார் - (மங்கையர்) வெட்கப்படுவார், எ - று.

க - து. தங்கள் புருஷர்கள் சொல்லிய புணர்ச்சிச் சொற்களைக் கிளிகள் சொல்லக்கேட்டு மாதர்கள் நாண மடைவார்கள் என்பதாம்.

கள்ள நேயமாவது பிறர்க்கு வெளிப்படாமல் மறைக்கப்பட்ட அன்பு. கலவியின் வாய்மை - காமவிகார மேலிட்டுத் தம்மை மறந்து சொல்லப்பட்டவையாம். இதனாலே அங்கேயுள்ள கிளிகள் தமக்கு ஒருவர் ஒன்றைப் பலதரஞ் சொல்லி வருந்திக் கற்பிக்கவேண்டாது தாமே விரைவிற் கற்கின்றனவென்பது தோன்றுகின்றது. (கரு)

வாணி லாமணி மாடத்தொளித் தெமைக்
காணு கென்பவர் மெய்ந்நிழல் கண்ணுறீஇப்
பூணு லாமுலை யார்புல்லி யின்மையி
ணாணி நின்று நகைமுகங் கோட்டுவார்.

இ - ள். பூண் - ஆபரணங்கள், உலாம் - புரளுகின்ற, முலையார் - கொங்கையையுடைய மகளிரானவர், வாள் - காந்தி பொருந்திய, நிலாமணி - சந்திரகாந்தத்தாலாகிய, மாடத்து - வீட்டினுள்ளே, ஒளித்து - மறைந்து, எமை - எங்களை, காணுக என்பவர் - காண்பீராக என்ற கணவரது, மெய் - உடம்பினது, நிழல் - சாயையை, கண்ணுறீஇ - கண்டு, புல்லி - (அச்சாயையைத்) தழுவி, இன்மையின் - கைக்ககப்படாமையினாலே, நாணி - வெட்கப்பட்டு, நின்று - நின்று, நகை - நகையோடு கூடிய, முகம்-முகத்தை, கோட்டுவார் - வளைப்பார், எ - று.

க - து. நிலாமணிமாடத் தொளித்துக்கொண்ட கணவர்களது நிழலைக் கணவரென்று தழுவிய மாதர்கள் நாண மடைவர்கள் என்பதாம்.

காணுகவென்பது ஈறு தொகுத்தலாயிற்று. 'மகளிர் நாணி முகங் கோட்டுவார்' என்றதனால் ஒளித்தவ ராடவரென்பது பெறப்பட்டது. [நிழலைக் கணவரென்று மயங்கலால் மயக்கவணி.] (கூக)

சாந்த மூழ்கி வளர்ந்த தடமுலைக்
காந்து பன்மணி மேகலைக் காழல்கு
லேந்தி விண்ணி லியங்க லரிதெனப்
போந்த மங்கைய ரிந்நகர்ப் பொன்னனார்.

இ - ள். இ நகர்-இந்த நகரத்துள்ள, பொன் அன்னார் - சிதேவி போல்வார், சாந்தம் - சந்தனத்துள், மூழ்கி - முழுகி, வளர்ந்த - பருத்த, தடம் - மலைபோலும், முலை - முலைகளையும், காந்து - விளங்காநின்ற, பல் மணி - பல மணிகளாலாகிய, மேகலை - மேகலையின், காழ் - சரங்களையுடைய, அல்குல் - நிதம்பத்தையும், ஏந்தி - சுமந்துகொண்டு, விண்ணில் - வானத்திலே, இயங்கல் - உலாவுதல், அரிது என - (எம்மாலே) முடிவதன்றென்று நினைத்து, போந்த - இறங்கிவந்த, மங்கையர் - தெய்வ மகளிரே, எ - று.

க - து. தனத்தையுஞ் சகனத்தையுஞ் சுமந்துலாவ லரிதென்று பொன்னகர மாதர்களே இந்நகர மாதர்களாக வந்தார்கள் என்பதாம்.

காழ் - சரமென்பது, "கா ழென்ப மணியின் கோவை" (ஆதிப் பொருணிகண்டு) என்பதனாலறிக. மேகலை-எண்கோவை யுள்ளது, "எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை, பண்கொள் கலாப மிருபத்தொன்று - கண்கொள், பருமம் பதினாறு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" என்பதனாலறிக. [இப்பட்டணத்து மங்கையரை அப்பாரத்தைச் சுமந்து ஆகாசத்திலே சஞ்சரிக்க மாட்டாமல் வந்த தெய்வமகளிராகக் குறித்தலாலே பொருட் டற்குறிப்பணி.]

நளமகாராஜன் அரசாட்சி செய்திருந்தகாலங் கிரதயுகமாயிருக்க, இதுவரையிலே நாடு நகரங்களின் சிறப்புகள் பலவற்றைச் செய்யுமென் வாய்பாட்டு நிகழ்கால வெதிர்காலங்களுக்குரிய முற்று வினைகளாலும், எதிர்காலத்திற்கே யுரிய முற்றுவினைகளாலுங் கூறல்வேண்டுவ தென்னையெனின், அவ் வினைநிகழ்ச்சி அந்த யுகத்திலே நெடுங்காலம் நிகழ்ந்தனவென்னும் பொருள்படுதற்கு அங்ஙனங் கூறினாரென்க. இவர் பண்டிப் பொழிலகத்து விளையாடுவர், இவள் பண்

டிப் பொழிலகத்து விளையாடும், என்பனபோல; இவற்றிற்கு, "இறப்பே யெதிர்வே யாயிரு காலமுஞ், சிறப்பத் தோன்று மயங்குமொழிக் கிளவி, ஏனைக் காலமு மயங்குதல் வரையார்" (தொல்காப்பியம் - சொல்லதிகாரம்-வினையியல்-௰௦-௯௪) என்பன விதி. பின்னிப்படி வருவனவுமன்ன. (௩௭)

[இதுமுதல் ஐந்து பாட்டுகள் ஒருதொடர். இவ்வைந்து பாட்டுகளாலும் அந்நகரத்திருந்து உலகத்தை யாண்ட நள மஹா ராஜனுடைய வியக்கத்தக்க பலவகை நற்குணங்களுஞ் சொல்லப்படுகின்றன.]

கலிவிருத்தம்.

வளமலி யிந்நகர் மன்னர் மன்னவன்
றளையவிழ் நறுமலர்த் தண்ணந் தாரினான்
களைகணு யுலகொரு மூன்றுங் காத்தரு
ளளனெனப் பெயரிய நாம வேலினான்.

இ - ள். உலகு ஒரு மூன்றும் - (தன்னை யுச்சரிக்கின்ற) மூன்றுலகத்தாரையும், களைகணாய் - ஆதாரமாய், காத்து - (ஆபத்தினின்றும்) காத்து, அருள் - (விரும்பப்பட்டவற்றைத்) தருகின்ற, நளன் எனப் பெயரிய - நளனெனப் பெயர் பெற்ற, வளம் - செல்வத்தினாலே, மலி - நிறைந்த, இ நகர் - இம்மாவிந்த நகரத்திலுள்ள, மன்னர் மன்னவன்-அரசர்க்கு அரசனானவன், தளை அவிழ்-கட்டவிழ்ந்த, நறு - நல்ல, மலர் - மலர்களாலாகிய, தண் - குளிர்ச்சி பொருந்திய, தாரினான் - மாலையையுடையவன், நாமம்-அச்சஞ்செய்கின்ற, வேலினான் - வேற்படையை யுடையவன், எ - று.

க - து. இம் மாவிந்த நகரத்தையாளும் அரசர்க்கரசன் மூன்றுலகத்தையுங் காத்தருள்செய்யும் நளன் என்னும் பெயரையுடையவன் என்பதாம்.

அம்-சாரியை. பெயரிய மன்னவன், இந்நகர் மன்னவன், மன்னர் மன்னவன் எனக்கூட்டுக. மூன்றுலகம்-பூமியும் வானமும் பாதாளமுமாம். எவ்வுலகத்துள் யாவராயினும் நளனென்கிற பெயரையுரைக்கினும் நினைக்கினும் அவர்க்கு நினைத்தது முற்று மென்பது புராணசித்த மாதலாலே அவ்விசேஷணம் அப்பெயர்க்குக் கூறப்பட்டது. இதனை மகா பாரதத்திலும் காண்க. இதனால் அவனது மகா மகிமத்துவமாகிய தெய்வத்தன்மை விளங்குகின்றது. அவன் மாலையைக் கண்டோர் கண்களுக்குங் கருத்துக்கும் மலர்ச்சியுங் குளிர்ச்சியுஞ்செய்யும்; அதன் சிறப்புத் தோன்ற, 'தளையவிழ் நறுமலர்த் தண்ணந் தார்" என்றார்.

பகைவர்க்குச் செருக்கு விளையுந்தோறு மச்சஞ்செய்து அதனை யொழித்தலின் 'நாமவேல்' என்றார். நாமமென்பதில் அம் - சாரியை. நாம் - அச்சம் என்பது, "பேநா முருமென வரூஉங் கிளவி, யாமுறை மூன்று மச்சப் பொருள" (தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-உரிச்சொல்லியல்-௬௮) என்பதனாலறிக. இது முதல் ஐந்து பாட்டுகள் பெரும்பாலும் மூன்றாஞ்சீர் மாச்சீரும் மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகி வருகிற அளவடிகள் நான்குகொண்ட கலிவிருத்தங்கள். ()

ஒன்னலர் மணிமுடி யுரிஞ்சு தாளினான்
கன்னவி றோளினான் கமலக் கண்ணினான்
றன்னுயி ராமென வுலகிற் றங்கிய
மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்.

இ - ள். ஒன்னலர் - பகைவருடைய, மணி - நவமணிகளையுடைய, முடி-மகுடங்கள், உரிஞ்சு-தேய்தற்குக் காரணமாகிய, தாளினான்-அடிகளை யுடையவன்; கல் - மலைபோல, நவில் - செய்யப்பட்ட, தோளினான் - புயங்களையுடையவன்; கமலம் - தாமரைமலர்போலும், கண்ணினான் - நேத்திரங்களை யுடையவன்; தன் - தனது, உயிர் ஆம் என-உயிர்போல நினைத்து, உலகில்-உலகத்தின் கண்ணே, தங்கிய - பொருந்திய, மன்-நிலையுள்ள, உயிர் அனைத்தையும்-எல்லாவுயிர்களையும், புரக்கும் - காப்பாற்றுகின்ற, மாட்சியான் - பெருமையை யுடையவன், எ - று.

க - து. பகைவர் முடிபடுந் தாட்களையும், கல்லோடு பழகிய தோட்களையும், தாமரைநிகர் கண்களையு முடையவன், தன்னுயிரைப் போலு மன்னுயிரைக் காப்பவன் என்பதாம்.

'கன்னவிறோளினான்' என்பதற்கு மலையென்று சொல்லத்தகுந்த தோள்களை யுடையவன் என்றுரைத்தலுமாம். பகைவர் தம்மேற் கருணை பிறப்பிக்க வேண்டிப் பலமுறையாகத் தம்முடிகள் அவனடிகளிற்பட வணங்குதலாலே அம்முடிகளுக்குத் தேய்வு கூறப்பட்டது. அவர்கள் வணங்குதற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட ஊர்த்துவ ரேகாதிகளை யுடைய தாளென்பதுங் குறிக்கப்படுகின்றது. திண்மையும் பருமையுந் திரட்சியும் பற்றித் தோள்களுக்கு மலையும், மலர்ச்சியுங் குளிர்ச்சியுங் கண்டோரை மகிழ்வித்தலும்பற்றிக் கண்களுக்குத் தாமரைமலரும் உபமான மாக்கப்பட்டன. தூல வுடம்பழியினும் உயிரழியாது வேறுடம்புபெற்று நிற்குமாதலின் 'மன்னுயிர்'என்றார். அது பதிபசுபாச மூன்றும் நித்தியமென்கிற சைவாகமத்தா னுணர்க. 'உயி

ரணைத்தையும் என்றதனாற் பறவை விலங்கு முதலியவுங் கொள்க. இங்கே புரத்தல் - பகை பிணி முதலியவற்றாற் றுன்பம் வாராமற் காத்தல். (ருக)

பொருசிலை வேனில்வே ளனைய பொற்பின
னருவரை யாமென வகன்ற மார்பினன்
கரைபொரு முடைத்திரைக் கடலந் தானையான்
றிருகுவஞ் சனக்களி றனைய சீற்றத்தான்.

இ - ள். பொரு - போர் செய்கின்ற, சிலை - (கருப்பு) வில்லை யுடைய, வேனில் - வசந்தகாலத்திற் குரிய, வேள் அனைய - மன்மதனைப்போலும், பொற்பினன் - அழகினை யுடையவன்; அரு - அரிய, வரையாம் என - மலையைப்போலும்; அகன்ற - பரந்த, மார்பினன் - மார்பினை யுடையவன்; கரை - கரையோடும், பொரு - போர் செய்கின்ற, முடை - புலானாற்றம் பொருந்திய, திரை - அலைகளை யுடைய, கடல் - கடல்போலும், தானையான் - சேனையையுடையவன்; திருகு - மாறுபட்ட, வஞ்சனம் - கபடத்தையுடைய, களிறு அனைய - களிறுபோலும், சீற்றத்தான் - கோபத்தை யுடையவன், எ - று.

க - து. மன்மதனை நிகரழகையும், மலையைநிகர் மார்பையும், கடலைநிகர் சேனைகளையும், யானையைநிகர் கோபத்தையு முடையவன் என்பதாம்.

மன்மதனுக்கு வேனிற் காலத்திலே போர்த்தொழிற் கண்ணே யூக்கமுங் களிப்புமுண்டாதல்பற்றி அப்போது அவனுடம்பு பூரித்து அழகு சிறந்து விளங்குமாதலால் 'பொருசிலை வேனில் வேள்' என்றார். 'அருவரையாமென' என்றமையாற் பகைவர் படைக்கலங்களா லூறடையாத திட்பமுங் குறிக்கப்படுகின்றது. அளவு காணப்படாமையும் பூமி முழுதுஞ் சூழ்தலும்பற்றிச் சேனைக்குக் 'கடல்' உவமையாக்கப்பட்டது. அக்கடலலைகள்போலச் சேனையி னணிவகுப்புகள் ஒன்றன்பின் னொன்றாக வெழும்பி யிரைந்துகொண்டு பின்வாங்காது சென்று பகைவரை மோதுதலாலும், புலானாற்றம் பகைவ ரிறைச்சியு முதிரமுந் தோய்ந்த படைக்கலங்களின் மாறாமையாலும் 'கரைபொரு முடைத்திரை' என்னுமடைகள் கடலுக்குச் சேர்க்கப்பட்டன. யானைபோல மறைத்தற்குரிய காலத்தே மறைத்து வெளிப்படுத்தற் குரிய காலத்தே வெளிப்படுத்தலாற் சீற்றத்திற்கு யானை யுவமானமாக்கப்பட்டது. "பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த், துள்வேர்ப்ப ரொள்ளி யவர்" (திருவள்ளுவர்-காலமறிதல்-எ) என்பதனலறிக. யானையின்கண் அக்குண முண்டென்பது, "யானை யறிந்

தறிந்தும் பாகனையே கொல்லும்" (நாலடியார் - நட்பாராய்தல் - ௯) என்பதனாலறிக. (௪௦)

வெங்கலி யிருள்கெட வெண்ணி லாவுமிழ்
திங்களங் கவிகையான் றிகிரி யொன்றினா
லங்கண்மா நிலமுழு தளிக்கு மாற்றலான்
மங்குலி னெழுமடங் குதவும் வண்கையான்.

இ - ள். வெங்கலி - தீய வறுமையாகிய, இருள்-இருளானது, கெட - அழிய, திங்கள் - சந்திரன்போல, வெள் - வெள்ளிய, நிலா - நிலவை, உமிழ் - வீசுகின்ற, கவிகையான் - முத்துக்குடையை யுடையவன்; திகிரி ஒன்றினால் - ஏக சக்கிரத்தினாலே, அம் கண் - அழகிய இடத்தையுடைய, மா - பெரிய, நில முழுது - பூமி யனைத்தையும், அளிக்கும் - அரசாளுகின்ற, ஆற்றலான் - வல்லமையை யுடையவன்; மங்குலின் - மேகத்தினும், எழுமடங்கு - ஏழுபங்கதிகமாக, உதவும் - கொடுக்கின்ற, வள் - வளம் பொருந்திய, கையான் - கையை யுடையவன், எ - று.

க - து. உலகெல்லா மொருகுடையி லாள்பவன், மேகத்தைப் பார்க்கிலும் ஏழுபங் கதிகமாகக் கொடுக்குங் கையையுடையவன் என்பதாம்.

'நிலாவுமிழ் குடை' எனக் குடையின் விளக்கத்தைச் சொல்லுதலாலே அவனரசாட்சியின் பெருமை விளங்குதலறிக. அவ்வரசாட்சியே யாவரும் வறுமைநோய் தீர்ந்து பெருஞ் செல்வத்தராய் வாழ்தற்குக் காரணமாகையால் 'வெங்கலி யிருள்கெட வெண்ணிலாவுமிழ், திங்களங் கவிகை' என்றார். 'மா நிலமுழு தளிக்கு மாற்றலான்' என்றதனாற் பல தீவுகளையுங் கண்டங்களையும் வென்று தன்னாணையின் கீழ்ப்படுத்தி வாழுஞ் சக்கிரவர்த்தி யென்றதாயிற்று. இதனாலே பேராற்ற லுடைமையும் விளங்குகின்றது. ஏழென்பது ஒரு தொகைச் சொல்லாயினும் இங்கே பலவென்னும் பொருளதாம். மேகம் நீரொன்றையே ஒரு பருவத்திலே தரும், இவன் கைகளோ எல்லாப் பொருள்களையு மெல்லாப் பருவங்களிலுந் தருமென்றதாயிற்று. கைக்கு வளமாவது உத்தம ரேகைகள் பொருந்தி முழந்தாளளவு நீண்டிருத்தல். (௪௧)

அருளின துறையுணல் லறத்தின் வேலிசொற்
றெருளுறு கல்வியந் தெய்வ மாக்கடல்
குரைகடற் புவிபுகழ் குணக்குன் றஞ்சுட
ரெரிதவ ழலங்கல்வே லரச ரேறனான்.

இ - ள். அருளினது - கருணையினது, உறையுள் - வீடாயுள்ள வன்; நல் அறத்தின் - நல்ல தருமமாகிய (பயிரினது), வேலி - வேலி யா யுள்ளவன்; சொல் - நூல்களாலே, தெருளுறு - (பலவகைப் பொருள்களையும்) அறிந்த, கல்வி - கல்விக்கு, தெய்வம் - தெய்வத் தன்மை பொருந்திய, மா கடல் - பெரிய கடலாயுள்ளவன்; குரை - ஒலிக்கின்ற, கடல் - கடல்போல, புவி - பூமியிலுள்ளோரால், புகழ் - புகழப்படுகின்ற, குணம் - நற்குணங்களெல்லாஞ் சேர்ந்த, குன்றம்- மலையாயுள்ளவன்; சுடர் - ஒளியை யுடைய, எரி - நெருப்பானது, தவழ் - தவழ்கின்ற, அலங்கல் - மாலையை யணிந்த, வேல் - வேலை யுடைய, அரசர் - (பகை) அரசராகிய (யானைகளுக்கு), ஏறு அன்னான்- ஆண்சிங்கம் போல்பவன், எ - று.

க - து. கிருபைக்கு வீடானவன், தருமத்திற்கு வேலியானவன், கல்விக்குக் கடலானவன், குணத்திற்குக் குன்றானவன், பகை மன் னர்க்குச் சிங்கமானவன் என்பதாம்.

அருளாவது பிறவுயிர்க்கு வந்த வருத்தத்தைக் காண்கின்ற போது மனம் பொறா திரங்கலாம்; அதற்கு வீடெனவே - அது அவ னிடத்து நிலையாயிருக்கு மென்றதாயிற்று. அறமாவது - அந்தணர் முதலிய வருணத்தோரும், பிரமசாரிமுதலிய வாசிரமத்தோரும் வேத முதலியவற்றில் தத்தமக்கு விதிக்கப்பட்டவற்றைச் செய்தலும் விலக் கப்பட்டவற்றைச் செய்யாமையுமாம். 'நல்லறம்' என்று அடைகொடு த்துக் கூறலால் அது புறச்சமய நூல்களிற் கூறுந் தீய அறங்களை யொழித்து நிற்றல் காண்க. 'அறத்தின் வேலி' எனவே அவர்களை அவற்றிற் பிறழாது நடத்துவோ னென்றதாயிற்று. 'கல்வி' எனப் பொதுப்படக் கூறலால், வேதம்-௪, வேதாங்கம்-௬, மீமாமிசை-௧, தருக்கம்-௧, புராணம்-௧, தருமநூல்-௧, ஆகிய பதினான்கு வித் தைகளு மெனக்கொள்க. அக்கல்விக்குக் 'கடல்' எனவே அது யாவரா லும் உணரப்படாத ஆழமுங் கடக்கப்படாத விரிவுமுடைத்தென்ப தாம். 'குரைகடற் புவிபுகழ்' என்றதனாலே கடலி னலையொலி போ லப் புவியிலே புகழொலி யெப்போது மெழுதல் சொல்லப்பட்டது. இங்கே 'குணம்' எனப்பட்டவை இவ்வைந்து பாட்டினுஞ் சொல்லா தொழிந்த உயர்குலப் பிறப்பும், சதுரப்பாடுடைமையும், முற்புகழ்ச்சி வேண்டாமையும், ஆழ்கருத்துடைமையும் பிறவுங் கொள்ளப்படும். 'எரிதவ ழலங்கல்வே லரசர்' என்றதனால் பகையரச ரென்றதாயிற்று. அவரை அங்ஙனஞ் சிறப்பித்தமையால் இவனோடு பகைத்தற்குத் தகுதி யுடையராதல் தோன்றுகின்றது. 'புவிபுகழ் குணக்குன்று' என்றதனாற் பெருங்கீர்த்தியும், 'அரசரேறனான்' என்றதனாற் பெரும்

பிரதாபமும் விளங்குகின்றன. வளமலியென்னும் பாட்டில் மன்னர் மன்னவனென்னு மெழுவாய் நின்று அப்பாட்டுமுத லிப்பாட்டுவரையு முள்ள பயனிலைகளைத் தனித்தனி கொண்டு முடிந்தது. இவற்றாலே தெய்வத்தன்மை, பெருங்கொடை, பெருஞ்செல்வம், ஒப்பிலழகு, நிறைபுலமை, உயர்குடிப்பிறப்பு, விளக்கமுடைமை, சதுரப்பாடு, அறவழிநிற்றல் இவை முதலிய குணங்கள் சொல்லப்படுதலினாலே இவ்வரசன் உத்தம நாயகனென்பது பெறப்பட்டது. (சஉ)

நகரப்படலம் முற்றிற்று.

---

# அன்னத்தைக் கண்ணுற்ற படலம்.

*நளன் பூஞ்சோலையிற் சென்று அதன் வளத்தைக் கண்டதையும், அவ்வனத்தி னிடையிலுள்ள ஓர் தடாகத்தில் அரசவன்னத்தைப் பற்றினதையும், அதன் துயரத்தைக் கண்டு அதை விடுத்ததையும் சொல்லுகின்றது.*

[இதுமுத லோன்பது பாட்டுகளால் தமயந்தியினது காமவிருப்பத்தைச் சொல்லத்தொடங்கி, இதனுல் விரகிகளுக்குச் சொல்லப்பட்ட காட்சி முதலாகிய பத்து அவஸ்தைகளுள் காட்சியென்பது கேள்விக்கும் உபலக்ஷணமாதலால், அவள் நளமஹாராஜனுடைய உயர்வாகிய குணங்களைக் கேட்டு, அது முதலாகிய ஒன்பது அவஸ்தைகளை யடைந்து வருந்துகின்றமை பொது வகையாற் சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

*இன்ன தன்மைய னாகிய வேந்தெழிற் றிணிதோண்*
*மன்னர் மன்னவன் மாணெழில் வகைநலங் கேட்டுக்*
*கன்ன லஞ்சுவை கனிந்தசொற் றமயந்தி யென்னும்*
*பொன்னங் கொம்பனாண் மயலொடும் வைகலும் புலம்பும்.*

இ - ள். கன்னல் - சர்க்கரைபோல, அம் சுவை - மதுரச்சுவையினாலே, கனிந்த - முதிர்ந்த, சொல் - சொல்லையுடைய, தமயந்தி

NO. 3.

அன்னத்தைகண்ணுற்றபடலம்.

58-வது பக்கம்.



(நளன் அன்னத்தைக் கண்ணுற்றது.)

என்னும் - தமயந்தி யென்கிற, பொன்னம் கொம்பு அன்னாள் - கற்பகப் பூங்கொம்பு போல்பவள், இன்ன - இப்படிப்பட்ட, தன்மையன் ஆகிய - குணாதிசயங்களை யுடையவனாகிய, ஏந்து - (பூமிபாரத்தைத்) தாங்குகின்ற, எழில் - அழகும், திணி - வலிமையும் பொருந்திய, தோள் - தோள்களையுடைய, மன்னர் - அரசர்களுக்கு, மன்னவன் - அரசனாகிய நளனுடைய, மாண் - குணங்களையும், எழில்-அழகினது, வகை - வகையையும், நலம் - செல்வத்தையும், கேட்டு - (அறிந்தோர் சொல்லக்) கேட்டு, மயலொடும் - மயங்குதலோடும், வைகலும் - தினந்தோறும், புலம்பும் - புலம்புவாள், எ - று.

க - து. தமயந்தியானவள் நளனது குணாதிசயங்களைக் கேட்டு மயலுற்றுப் புலம்புவாள் என்பதாம்.

மயலொடுமென்னு மும்மை கீழ்ப்போன வேட்கை முதலாகிய ஏழவஸ்தைகளையுந் தழுவி நின்றது. அவஸ்தை பத்தாவன:—காணுதல், பெறல்வேண்டல், இடைவிடாது நினைத்தல், உடம்பு வாடல், தன்வருத்தம் பிறர்க்குச் சொல்லல், நாணத்தி னெல்லை கடத்தல், தன்னாற் காணப்படுகின்றவை யெல்லாம் அவ்விரும்பப்பட்டவை போலுதல், பித்தாதல், மூர்ச்சித்தல், இறத்தல் என்பன. இவற்றுட் காட்சி யொழிந்த வொன்பதும் "வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித, லாக்கஞ் செப்ப னாணுவரை யிறத்த, னோக்குவ வெல்லா மவையே போறன், மறத்தன் மயக்கஞ் சாக்காடென்றிச், சிறப்புடை மரபினவை களவென மொழிப" என்பதனா லறிக. வடநூலாருள் ஆக்கஞ்செப்பலையும் நோக்குவவெல்லா மவையே போறலையும் நீக்கி, ஜாக்ரமென்கிற விழி துயிலாமையும், அரதியென்கிற வேற்றுப்புல வெறுப்புங் கூட்டிப் பத்தென்பராலெனின், அவ்விரண்டும் உள்ளுதலி லடக்கிக்கொள்ளப்படுமென்க. 'கன்ன லஞ்சுவை கனிந்தசொல்' ஆவது கேட்டோரை மகிழ்விக்கும் பொருணயமமைந்த மொழியாம். ஆகவே அவளது குறைவற்ற புலமை கூறியவாறாயிற்று. வாடாமையாலு மொளியாலும் கண்டோர் கண்களிகூரச் செய்தல்பற்றிப் பொன்னங்கொம்பு உபமான மாக்கப்பட்டது. அக்கல்வி யழகுகளிற் சிறந்த தமயந்தியால் விரும்பப்படுதற்கு இப்படிப்பட்ட தோள்களே முக்கிய காரணமென்பது தோன்ற 'ஏந்தெழிற் றிணிதோள்' என்றார். கல்வியறிவுடைய மங்கையர் ஆடவரிடத்தே முன்னே குணங்களையும், அதன்பின்னே அழகையும், அதன்பின்னே அவ்விரண்டுங் கொண்டு காமவின்பத்தை யனுபவித்தற்குத் துணைக்காரணமாகிய செல்வத்தையும் விரும்புவராதலால் அம்முறையே 'மாணெழில்வகை நலங் கேட்டாள்' என்க. அழகின்வகையாவன: கைகால் கண்முதலிய

அவயவங்களி னளவையு நிறத்தையும் பற்றிய இயற்கை யழகின் கூறுபாடும், ஆடையணி முதலியவற்றாற் செய்துகொள்ளப்படுஞ் செயற்கை யழகின் கூறுபாடுமாம். மயலொடுமென்னு மும்மை மற்றெல்லா வவஸ்தைகளையுந் தழுவி நின்றது. புலம்பும் என்றது, "பல்லோர் படர்க்கை முன்னிலைத் தன்மை, யவ்வயின் மூன்று நிகழுங்காலத்துச், செய்யுமென்னும் கிளவியொடு கொள்ளா" (தொல்காப்பியம் - சொல்லதிகாரம்-வினையியல்-௩௦) இவ்விதியால் புலம்புவாள் என்றாயிற்று. இதுமுதன் மூன்று பாட்டுகள் கலிநிலைத்துறை விருத்தங்கள். (௧)

[இதனால் இடைவிடாது நினைத்தலும் அதனா லுளதாகும் விழிதுயிலாமையுஞ் சொல்லப்படுகின்றன.]

தாத ளைந்தின வண்டுகண் படுகுழற் றைய
லேத மற்றதன் னெழிற்கிணை யாமென வெண்ணி
யாத ரத்தின்வே ளாணையிற் பயிலுநெஞ் சதனைத்
தூது விட்டன டோன்றல்பாற் றுறந்தன டுயிலே.

இ - ள். இனம் - கூட்டமாகிய, வண்டு - வண்டுகளானவை, தாது - மலர்ப் பொடியை, அளைந்து - பூசிக்கொண்டு, கண் படு - தூங்குதற் கிடமாயிருக்கின்ற, குழல் - கூந்தலையுடைய, தையல் - தமயந்தியானவள், ஏதம் அற்ற-குற்றமற்ற, தன் - தனது, எழிற்கு - அழகுக்கு, இணையாம் என-(இவனழகு) தகுதியாமென்று, எண்ணி-நினைத்து, ஆதரத்தின் - ஆசையினாலே, வேள் - மன்மதனது, ஆணையில் - ஆஜ்ஞையிலே, பயிலும் - தங்காநின்ற, நெஞ்சு அதனை-(தன்) மனத்தை, தூது - தூதாக, தோன்றல்பால் - அரசனிடத்திலே, விட்டனள் - அனுப்பினவளாகி, துயிலை - நித்திரையை, துறந்தனள் - இழந்தாள், எ - று.

க - து. தமயந்தி தன் மனதை நளனிடத்துத் தூதுவிட்டனள், அதனால் நித்திரையை விட்டனள் என்பதாம்.

அழகினாலே தனக் குயர்ந்தவளே யன்றி யொப்பவ ளொருத்தியிருக்கினும் அதுவே தன்னழகுக்குக் குறைவாமென்று கொள்வளாதலால் அக்குறைவு மில்லையென்பது தோன்ற 'ஏதமற்ற தன்னெழிற்கு' எனச் சொல்லப்பட்டது. இங்கே 'இணை' யென்பது மாற்றுயர்ந்த பொன்னுக்கும் மாசில்லாத மணிக்கும்போலத் தன்னழகுக்கு மவனழகுக்கு முள்ள தகுதியாம். 'வேளாணையிற் பயிலுதல்' தன்னுரிமை கெட்டு மன்மதன் எவ்வழியிலே நடத்துகின்றனனோ

அவ்வழியிலே நடத்தல். நெஞ்சைத் தூதுவிடுதல் - நளனிடத்தே மிக்குறச் செலுத்துதலாம்; அதாவது இடைவிடாது நினைத்த லென்க. 'இனவண்டு தாதளைந்து கண்படு குழற்றையல் துயிலைத் துறந்தனள்' எனவே தன்னையடுத்த அஃறிணை யுயிர்களுக்கும் நித் திரைசெய்தற் கிடமாயுள்ளவள்தான் அதனையிழந்தனளோவென்னு மிரக்கத்தைத் தோற்றுகின்றது. தையல்-கைபுனையப்பட்டவள். (உ)

[இதுமுதன் மூன்று பாட்டுகளால் கேள்வி விருப்பஞ் சொல்லப்படுகின்றது.]

மின்னி லங்குவே னளன்பெயர் கேட்டிடும் விழைவாற்
பொன்னின் வார்கழல் விதர்ப்பர்கோன் பேரவை போந்து
மன்ன ரியாரினும் வந்தியர் நிடதனை யெடுப்ப
வன்ன வன்புகழ் கேட்டலும் புளகமுற் றயரும்.

இ - ள். மின் - மின்னல்போல, இலங்கு - விளங்காநின்ற, வேல் - வேலையுடைய, நளன் - நளமகாராஜனது, பெயர் - நாமத் தை, கேட்டிடும் - கேட்கவேண்டுமென்கிற, விழைவால் - ஆசையி னாலே, பொன்னின் - பொன்னாலாகிய, வார் - நீட்சி பொருந்திய, கழல் - வீரக்கழலையுடைய, விதர்ப்பர் கோன் - விதர்ப்ப தேசத்தா ருடைய அரசனது, பேர் அவை - பெரிய சபையின்கண், போந்து - (அவனைத் தொழுதற்குச் செல்கின்றவள்போலச்) சென்று, மன்னர் யாரினும் - அரசர் பலரினும், வந்தியர் - புகழ்வோரானவர், நிட தன் - நிடத தேசத்தரசனை, எத்து எடுப்ப - அதிகமாகப் புகழ, அன் னவன் - அப்படிப் புகழ்பெற்ற அரசனது, புகழ் - கீர்த்தியை, கேட் டலும் - கேட்டவளவிலே, புளகம்-மெய்ம்மயிர் சிலிர்த்தலை, உற்று அடைந்து, அயரும் - (தமயந்தி) வாடுவாள், எ - று.

க - து. தமயந்தி தன் பிதாவின் அவையிற் சென்று வந்தியர் நளனைப் புகழக்கேட்டு வருந்துவாள் என்பதாம்,

நளன் பெயர் கேட்பவென்னுது 'கேட்டிடும் விழைவால்' என் றதனால் போந்து என்றதற்குத் தந்தையைத் தொழச் செல்கின்ற வள்போலச் சென்றென்று பொருள் கூறப்பட்டது. நற்குலமகளிர் க்கு விவாகமளவும் தந்தையைத் தொழுதலும் விவாகத்தின்பின் கண வனைத் தொழுதலும் நித்தியவிதியாமென்க. நளன் பெயர் கேட்டிடும் விழைவினாலே வந்திய ரவனைப் புகழுஞ் சமயநோக்கிச் சென்று ளென்க. ஒரு பெரிய வரசன்முன்னே பல தேசத்தரசர் குணங்களை யும் உள்ளவாறு புகழ்ந்துரைத்தல் வந்தியர்கடனுதலால் அவர் நளன்

குணத்தை யுயர்த்திப் புகழ்ந்தாரென்க. புளகத்தால் அவன்மே லவளுக்காசை மிகுந்தமை வெளிப்படுகின்றது. புளகித்தல் - உவகைச் சுவையைப்பற்றிய விறலாம். இப்படிப்பட்டவனை எனக்குக் கணவனாகப் பெற்றிலேனென்னு முள்ளநிகழ்ச்சியே அயர்தற்குக் காரணமாதல் தோன்றுகின்றது. (ரு)

## அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

அனங்கனை யொழியா மண்ணி லாடவற் றெரிதி ரென்னக்
கனங்குழை யவரான் மன்னர்க் கோரொரு குற்றங் காட்டி
யினஞ்செய்வண் டிமிருந் தண்டார் நளனல தில்லை யென்று
மனங்களித் துரைப்பக் கேட்டு மம்மர்நோ யுழக்கு மாதோ.

இ - ள். அனங்கனை - மன்மதனை, ஒழியா - ஒழித்து, மண்ணில் - பூமியின்கண், ஆடவன் - (ஒரு) காளையை, தெரிதிர் என்ன - ஆராய்ந் தெடுங்களென்று சொல்லி, கனம் - கனம்பொருந்திய, குழையவரால் - காதணியையுடைய மகளிரால், மன்னர்க்கு-(மற்றை) அரசர்களுக்கு, ஓரொரு குற்றம் - ஒவ்வொரு குற்றத்தை, காட்டி - சொல்வித்துக்கொண்டு, இனம் செய்-கூட்டஞ் செய்கின்ற, வண்டு- வண்டுகளானவை, இமிரும் - ஒலிக்கப் பெறுகின்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, தார்-மாலையையுடைய, நளன் அலது - நளராஜனல்லாமல், இல்லை என்று - (ஒருவனும்) இல்லையென்று, மனம் - நெஞ்சத்தில், களித்து - மகிழ்ந்து, உரைப்ப - (அவர்) சொல்ல, கேட்டு - (தான் அதைக்) கேட்டு, மம்மர் - மயக்கமாகிய, நோய் - நோயிலே, உழக்கும் - (தமயந்தி) வருந்துவாள், எ - று.

க - து. நளனே அழகுள்ளவனென்று மாதர் சொல்லக்கேட்டுத் தமயந்தி வருந்துவாள் என்பதாம்.

"அ அந் நசிகுவி வருமொழிப் பொருளை, யின்மை பிறிதுமறையினுளொன் றாக்கும்" (இலக்கணக்கொத்து-ஒழியியல்-கரு) இவ்விதியால் அங்கமிலான் - அநங்கன் என்றாயிற்று. மன்மதனுக்கு அழகு நிறைந்திருந்தும் காணத்தக்க அங்க மில்லாத குறையுளதென்பது தோன்ற 'அனங்கன்' என்றும், அக்காரணத்தினாலே அவனதழகு பயன்படுவ தன்றென்பது கருதி 'ஒழியா' என்றும், விண்ணவரிற் சிறந்த மன்மதனை யொழிக்கவே தண்டாபூபிக நியாயத்தினாலே மற்றை விண்ணவரும் ஒழிக்கப்பட்டமையினால் 'மண்ணிலாடவன்' என்றும் சொல்லினாள். எல்லா வவயவங்களினழகு மொருவனுக்கே

யமைத லரிதாதலால் ஒவ்வோ ரரசனுக்கு மொவ்வொரு குற்றங் கூறி நளனிடத் தெல்லா வவயவங்களி னழகும் இருத்தல்பற்றி நளனைக் கூறி, அதனைப் பின்னும் வலியுறுத்தற்கு உளனென்னாது, 'அல தில்லை' என்றார். அவன் குணங்களைச் சொல்லும்போது, சொல்லு கின்றோர்க்கே மனமகிழ்ச்சி யுண்டாதலால் 'மனங்களித் துரைப்ப' என்றார். 'என்னக்காட்டிக் கேட்டுழக்கும்' என முடிக்க. [அனங்க னென்னும் விசேடியம் அதன் பொருளாகிய மன்மதனை விலக்குதற் குத் தகுங் கருத்தை யுட்கொண் டிருத்தலாலே கருத்தடைகொளி யணி.] இதுமுதல் ௧௧ - பாட்டுகள் அறுசீர்க்கழிநெடிலடி விருத் தங்கள். (௬)

பாளைவாய் கமுகிற் றாவிப் படுபழஞ் சிதறி வாளை, தாளதா மரையிற் றுஞ்சுந் தண்பணை நிடத நாட்டி, னீள் வளங் கேட்பாள் போலத் தூதர்பா னிருபன் சீர்கேட், டாளிமொய்ம் பினனை யெண்ணி யணிமுலை நோக்கிச் சோ ரும்.

இ - ள். பாளை - பாளைகளானவை, வாய் - பொருந்திய, கமு கில் - பாக்குமரத்தின்மேலே, தாவி - பாய்ந்து, படு - குலைகளி லுள்ள, பழம் - கனிகளை, சிதறி - உதிர்த்து, வாளை - வாளைமீன்க ளானவை, தாள - நாளத்தையுடைய, தாமரையில் - தாமரை மலர் களிலே, துஞ்சும் - தூங்கப்பெறுகின்ற, தண் - தண்ணிய, பணை - கழனிகளையுடைய, நிடதநாட்டின் - நிடததேசத்தினது, நீள்வளம் - பெரியவளத்தை, கேட்பாள்போல - கேட்பவள்போல, தூதர்பால் - (அங்கிருந்து வந்த) தூதரிடத்து, நிருபன் - அரசனது, சீர் - கீர்த்தி யை, கேட்டு - கேட்டறிந்து, ஆளி - சிங்கம்போல்பவனுடைய, மொய்ம்பு - தோள்களாகிய, இனனை - இனத்தை, எண்ணி - நினை த்து, அணி-ஆபரணங்களையுடைய, முலை-(தன்) முலைகளை, நோக்கி- பார்த்து, சோரும் - (தமயந்தியானவள்) வாடுவாள், எ - று.

க - து. தமயந்தி புகழாளரிடத்து நிடதநாட்டுவளங் கேட்பவள் போல நளன் கீர்த்தியைக்கேட்டு அவனைச் சேரத் தன் தனங்களைப் பார்த்து வருந்துவாள் என்பதாம்.

அந்நாட்டின் வளத்தைக் கேட்பாள்போல நளன் சீரைக் கேட் டலாவது - நளனை முக்கியப் பொருளாகக் காட்டாமல் அந்நாட்டை யே முக்கியப் பொருளாகக்காட்டி அதைத் தொடர்ந்துவருகிற அவ னது சீரைக் கேட்டலாம். அதைக் கேட்கும்போது மற்றை நாட்டு

வளங்களினு மிது பெரிதாதலின் அவற்றை யொழித்து இதனைக் கேட்கின்றாளென்று கொள்ளுதலால் அவளிடத்தே ஐயமுற்றில ரென்பது தோன்ற 'நீள்வளம்' என்றார். இவண் முலைகளோடு சேர் தற்கு அவன் றோள்கள் தகுதியான வினமாதலால் 'இனன்' எனப்பட் டது. பொருத்தம் பார்த்தற்குத் தோள்கள் காணப்படாமையாலுந் தன் முலைகள் காணப்படுதலாலும் அவற்றை மனத்தாலெண்ணி இவற்றைக் கண்களாலே பார்த்தா ளென்க. அவ்விரண்டற்கும் பொருத்த முண்டென் றறிதலாலே அவ்விரண்டுஞ் சேர்தலால் வரு மின்பத்தைப் பெற்றிலேனென்று வாடினா ளென்க. [நாட்டுவளங் கேட்கையாகிய கபடத்தினாலே நளன் சீர் கேட்கையாகிய தன் விரு ப்பத்தைச் சாதித்தலாலே உ-வது பிறிதினவிற்சியணி.] (ரு)

[சித்திரக்காட்சி கனவிற்காட்சி முதலியவை விரகிகளுக்கு விநோதோபாயங்க ளாகையாலே இதனாலே சித்திரக் காட்சி விருப்பம் சொல்லப்படுகின்றது.]

ஓவியத் துறைகை போய வொருவனை யுருவின் மிக்க
காவல னொருவன் மற்றோர் கன்னிநீ தீட்டு கென்னத்
தாவரு மெழிலிற் கோட்டத் தானுமந் நளனுமாக
மேவர வினிது நோக்கி மெய்ம்மயிர் பொடிக்கு மன்றே.

இ - ள். ஓவியம் - சித்திர வித்தையினது, துறை - வழியிலே, கைபோய - வல்லவனாகிய, ஒருவனை - ஒருவனைப் (பார்த்து), உரு வின் - அழகினாலே, மிக்க - (யாவரினும்) மேற்பட்ட, காவலன் ஒரு வன் - ஒரு ராஜகுமாரனையும், மற்று ஓர் - வேறொரு, கன்னி - கன் னிகையையும், நீ தீட்டுக என்ன - நீ யெழுதுக வென்று சொல்ல, தாவரும் - வருத்தஞ் சேர்தலில்லாத, எழிலில் - சித்திரச்சாலையிலே, கோட்ட - (அவ்விருவர் வடிவங்களையும் அவன்) எழுத, தானும் - (விரும்பிய) தானும், அ நளனும் ஆக - (விரும்பப்பட்ட) அந்நளராஜ னுமாக, மேவர - பொருந்த, இனிது - இனிதாக, நோக்கி - பார்த்து, மெய் - உடம்பிலுள்ள, மயிர் - மயிர்களானவை, பொடிக்கும் - சிலிர்க்கப் பெறுவாள் (தமயந்தியானவள்), எ - று.

க - து. சித்திர னெழுதிக் கொடுத்த இரு படங்களையுந் தம யந்தி பார்த்துப் புளகமடைந்தாள் என்பதாம்.

அன்று, ஏ - அசைகள். ஒருவனை யென்பது பார்த்தென்னுஞ் சொல் வருவித்து முடிக்கப்பட்டது; இது சொல்லெச்சம்: "சொல் லெ னெச்ச முன்னும் பின்னுஞ், சொல்லள வல்ல தெஞ்சுத லின்

றே'' (தொல்காப்பியம் - சொல்லதிகாரம்-எச்சவியல்-சுரு). எழில்-வண்ணம், அழகுமாம். கைபோதல்-சிறுமைபோதல், அதாவது மிக்க தேர்ச்சியடைதல். தன் சொற்குறிப்பறிந்து தன்விருப்பத்தின்படி யெழுத வேண்டலால் 'ஓவியத்துறை கைபோய வொருவன்' தெரிந்து கொள்ளப்பட்டான். மன்மதன் முதலியோரை யொழித்து நாற்றிசையினும்புகழ்பெற்றநளனென்றும் உய்த்துணர்ந்து கொள்ளுதற்குஉருவின் மிக்கவனென்னுது 'உருவின்மிக்க காவல னொருவன்' என்றும், அதுவரையி லவனேடு சம்பந்த மில்லாதவளுங் கன்னிகையுமாகிய தன்னைக் குறிப்பித்தற்கு ஒருத்தி யென்னுது 'மற்ேறார் கன்னி' என்றுங் கூறினுள். நளனையுந் தன்னையும் வெளிப்படையாகச் சொல்லாமைக்குக் காரணம் நாணமேயாம். அவ்வெழுதுதலிலே அவனுக்கு மனஊக்க முண்டாதற்பொருட்டு வேண்டிக்கோடற் பொருள்படத் தீட்டென்னுது 'தீட்டுக' என்றாள். அவ்வெழுதப்பட்டவை விபரீதப்படாமல் தன் விருப்பத்தின்படியே அமைதலால் 'தானு மந்நளனுமாக நோக்கினுள்' என்க. தன்னுருவங் காணப்பட்டு நிற்றலாலும், நளனுருவஞ் செவிப்புல வுணர்ச்சியைக்கொண்டு பார்த்தறிய வேண்டுதலாலும், முன் சொல்லப்பட்ட முறைப்படி அந்நளனுந் தானுமாக வன்றித் தானு மந்நளனுமாகக் கண்டா ளென்றார். அன்றியும் இப்பாட்டுக்கு அழகினுலே மிக்க வொருவனையு மொருத்தியையும் எழுதென்று பின்னே அவ்வுருவங்களை அழகான் மிக்கவர் தாமிருவருமேயாதலால் அவற்றைத் தாமாகக் கண்டாளெனினும் அமையும். உண்மையாகவே தாமல்லா திருந்தாலும் விநோதமாக அவற்றைத் தாமாகப் பாவித்துப் பார்த்து மகிழ்ந்தா ளென்க. மயிர் பொடித்தல்-உவகைச் சுவைபற்றிய விறலாம். (கூ)

[இதுமுத லிரண்டு பாட்டுகளால் கனவிற்காட்சி சொல்லப்படுகின்றது.]

வள்ளற்ற ரகலந் தன்னில் வனமுலை திளைக்க வெண்ணு, முள்ளத்தாள் கனவிற் காணு தொழிந்தநா ளுளதோ கங்குலள்ளிற் கூர்துயிலிற் காணு நண்பொருள் காணுங் கொல்லோ, மெள்ளத்தான் விதியாற் காட்டுஞ் செயலினை விலக்கலாமோ.

இ - ள். வள்ளல் - நளமகாராஜனது, தார் - மாலையையுடைய, அகலம் தன்னில் - மார்பின் கண்ணே, வனம் - சித்திரத்தையுடைய, முலை - முலைகளானவை, திளைக்க - அழுந்தாநிற்க, எண்ணும் - (அவனை) இடைவிடாது நினைக்கின்ற, உள்ளத்தாள் - மனத்தை

யுடைய தமயந்தியானவள், கனவில் - ஸ்வப்நத்திலே, காணாது - காணாதிருக்க, ஒழிந்த நாள் - கழிந்த நாளும், உளதோ - உண்டோ (இல்லை); காணா - (முன்)காணப்படாமல், நண் - தங்கிய, பொருள் - ஒரு பொருளை, கங்குல் - இரவினது, நள்ளில் - நடுவிலே, கூர் - செய்யப்பட்ட, துயிலில் - நித்திரையினால், காணுங்கொல் - (ஒருவன்) காண்பானோ (எனின்), விதியால் - ஊழினால், காட்டும் - (அதனைக்) காட்டுகின்ற, செயலினை - (அந்நித்திரையின்) செய்கையை, மெள்ளத்தான் - விரையாமலேனும், விலக்கலாமோ - (அசம்பவமென்று) விலக்கலாமோ (ஆகாது), எ - று.

**க - து.** தமயந்தி நளனைக் கனவிற் காணாதொழிந்த நாளில்லை, கண்ணிற்காணாத பொருள் கனவிற் காணாது; காணாத நளனைக் கனவிற் கண்டது விதிகூட்டுஞ்செயல் என்பதாம்.

இளைக்கவென்னும் வினையெச்சம் காணாதென்னு மெதிர்மறையின் முதனிலைத்தொழில் கொண்டது. முன்னே துயிலைத் துறந்தனளென்பதனோடு இங்கே பல நாள்களிலுந் துயின்றபின் வருவதாகிய கனவுகண்டாளென்றது மாறன்றோவெனின், அவனை இடைவிடாது சிந்தித்திருப்பவளுக்கு நெடுங்கால வாசனையாற் சிறிது கண்ணுறக்கம் வருவதன்றிப் பழையபடி நித்திரை செய்திலளென்க. நளனைத் தனக்கு நாயகனாக இடைவிடாது சிந்திக்கின்றவளாகிய தமயந்தியானவள் தினந்தோறுங் கனவிலே தன்னைப் புணர்கின்றவனாக அவனைக் காண்கின்றாளென்பது, ஒருபோதுங் காணப்பட்டில்லாத ஒருபொருளை இரவிலே நித்திரையினாலே காணுதல் அசம்பவமன்றோவென்கிற சங்கைக்கு, அந்த நித்திரையானது தன்னாலேயன்றி ஊழ்வலியினாலே அப்படிப்பட்ட பொருளையுங் காட்டுதலால் அதனை அசம்பவமென்னலாகாதென்றுஞ் சொல்லியதாம். இங்கே காணுதலுக்குக் கட்பொறி மாத்திரத்தாலன்றி மற்றைப் பொறிகளா லனுபவித்தலுங்கொள்க. ['விதியாற்காட்டுஞ் செயலினை விலக்கலாமோ' என்னும் பொதுப்பொருளாலே நளனைக் கண்டிலாத தமயந்தி கனவிலே அவனைக் காணுதலாகிய சிறப்புப் பொருளைச் சாதித்தலால் வேற்றுப்பொருள் வைப்பணி.]

(எ)

கட்புல னென்னுந் தூய கதவடைத் திதய மேய
வுட்புல னொடுங்க நோக்கி யுறுதுயி லென்னுந் தோழி
புட்குலஞ் சுழலும் வைவே லிறையெழிற் பொலிவு காட்டு
முட்பொதி பசுந்தாட் செய்ய முளரிபோன் முகத்தி னாட்கே.

இ – ள். தூய – (நீர்த்துளிகளைத்) தூவிய, கண்புலன் என்னும் – கண்ணிமைக ளென்கிற, கதவு – கதவுகளை, அடைத்து – சாத்திக் கொண்டு, இதயம் – நெஞ்சமாகிய (தன்வீட்டுள்), மேய – தங்கிய, உள் புலன் – மனமானது, ஒடுங்க – அடங்க, நோக்கி – (அச்சமயம்) பார்த்து, உறு – அடைந்த, துயில் என்னும் – நித்திரை யென்கிற, தோழி – பாங்கியானவள், புள் குலம் – பறவையினமானது, சுழலும் – வட்டமிடப் பெறுகின்ற, வை – கூர்மைபொருந்திய, வேல் – வேலை யுடைய, இறை – நள மஹாராஜனுகிய, எழில் – அழகினது, பொலிவு – பெருக்கத்தை, முள் – முட்களாலே, பொதி – நிறைந்த, பசு – பசிய, தாள் – தண்டையுடைய, செய்ய முளரிபோல் – செந்தா மரை மலர்போலும், முகத்திஞட்கு – முகத்தையுடைய தமயந்திக்கு, காட்டும் – காண்பிப்பாள், எ – று.

க – து. நித்திரையென்னும் பாங்கியானவள் நளனது அழகைத் தமயந்திக்குக் காட்டுவாள் என்பதாம்.

தூவுதல் வினைக்கு அவாய் நிலையாலே நீர்த் துளிக ளென்கிற செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. பிறர் தனக்கு எதிராகா திருக்கக் கதவடைத்து வீட்டுள்ளே தனித்திருந் தெண்ணுவோன் போல, மனமானது உருவங்கள் தனக்கெதிராகா திருக்கக் கட்பொறி வாயிலி னிமைக் கதவடைத்து நெஞ்சமாகிய தனதிடத்தே தங்கி நெடும்பொழு தெண்ணியதாற் சோர்ந்த தென்க. 'உட்புலனொடுங்க' என்றதனால் மற்றை மெய் வாய் மூக்குச் செவியென்னும் பொறிக ளிற் செல்லாமையும் பெறப்படுகின்றது. ஒருத்திக்கு அரிதான ஒரு மறைப் பொருளைப் பிறரறியாமற் கொணர்ந்து காட்டுந் தோழி போல நித்திரையானது தமயந்திக்கு அவள் கண்களும் அந்தக்கரண மும் அறியாமல் மறைத்து நளனைக் காட்டிய தென்பதாம். கனவிற் காட்சியறிவும் மனத்தாலன்றி யுண்டாவ தில்லையே, அப்படியிருக்க அதற்கு எவ்வாறு மறைத்துக் காட்டியதெனின்? இங்கே பொறிக ளோடு கூடிய மனத்துக்கே மறைத்ததென்று கொள்க. [எதுகைக் காகவே யன்றிப் பறிக்கப்பட்டு மலர்ச்சியும் அழகும் கெட்டுப்போகாத மலரென்பது தோன்றற்கு 'முட்பொதி பசுந்தாள்' என்று மடை கொடுக்கப்பட்டதுபோலும். [இது உருவகவணி.]. (அ)

[இதனால் நினைத்தலா லுண்டாகிய துயிலாமை சொல்லப்படுகின்றது.]

தாமரை முகங்கள் வாட்டுந் தண்பனிக் காலந் தன்னிற்
காமர்வெம் பகனீட் டித்த வண்ணமுங் கணவர்த் தீர்ந்தோ

ரேமுறு வேனிற் கால மிரவுநீட் டித்த வாறுந்
தாமமென் கூந்தற் செவ்வாய்த் துடியிடை துயர வன்றே.

இ – ள். தாமரை – தாமரை மலர்களுடைய, முகங்கள் – முகங்களை, வாட்டும் – வாடச்செய்கின்ற, தண் – தண்ணிய, பனி காலம் – பனிக்காலமானது, தன்னில் – தன்னிலே, காமர் – அழகிய, வெம்பகல் – வெவ்விய பகலை, நீட்டித்த வண்ணமும் – நீள்வித்தபடியும், கணவர் – (தம்முடைய) நாயகரினின்றும், தீர்ந்தோர் – நீங்கின மாதர், ஏம் – மையலை, உறு – அடைதற்குக் காரணமாகிய, வேனிற் காலம் – வெயிற் காலமானது, (தன்னில்) – தன்னிலே, இரவு – இரவை, நீட்டித்த ஆறும் – நீள்வித்தபடியும், தாமம் – புகைபோலும், மெல் – மெல்லிய, கூந்தல் – கூந்தலையும், செ – செய்ய, வாய் – வாயையுமுடைய, துடியிடை – தமயந்தியானவள், துயர – துன்பப் படுதற்கே யாகும், அன்றே – (இது) ஆச்சரியம், எ – று.

க–து. பனிக்காலம் பகலை நீட்டித்ததும் வேனிற்காலம் இரவை நீட்டித்ததும் தமயந்தி துயரப்படத்தான் என்பதாம்.

'துயர அன்றே' என்பதற்குத் துன்பப்படுதற்கே யல்லவா என்றுரைப்பினுமாம். துடியிடை–உவமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர், உடுக்கைபோலும் இடையையுடையவள் என்பது பொருள். தைமீ முதல்வ தொடங்கி ஆனிமீ முடிவு வரைக்கும் பகற்காலம் உஅ - நாழிகையிலிருந்து ௩உ – நாழிகை அளவாக வளர்ந்தும், இதற்கேற்க இராக்காலம் ௩உ – நாழிகையிலிருந்து உஅ – நாழிகை யளவாகத் தேய்ந்தும் வரும்; இப்படியே ஆடிமீ முதல்வ தொடங்கி மார்கழிமீ முடிவு வரைக்கும் இராக்காலம் உஅ – நாழிகையிலிருந்து ௩உ – நாழிகை யளவாக வளர்ந்தும், இதற்கேற்கப் பகற்காலம் ௩உ – நாழிகையிலிருந்து உஅ – நாழிகை யளவாகத் தேய்ந்தும் வரும்; இது சூரிய சித்தாந்த முதலிய கணித நூல்களாலும் அனுபவத்தாலும் அறியப்படும். உஅ – நாழிகைப் பகலுள்ள மார்கழியுந் தையுமாகிய முன்பனிப் பருவத்தையே 'தண்பனிக்கால மென்றார்' என்றும், உஅ – நாழிகை யிரவுள்ள ஆனியும் ஆடியும் ஆகிய முதுவேனிற் பருவத்தையே 'வேனில்' என்றாரென்றுங்கொள்க. 'தாமரை முகங்கள் வாட்டும்' என்றதனாலும், 'கணவர்த் தீர்ந்தோ ரேமுறு' என்றதனாலும் அவ்விருவகைக் காலங்களுக்குங் கொடுமையே சொல்லப்பட்ட தாயிற்று. பனிக்காலத்திலே குறைந்த பகலும் வேனிற் காலத்திலே குறைந்த இரவும் மிகுந்து தோன்றுதல் சாஸ்திரத்துக்கும் அனுபவத்திற்கும் விரோதமன்றே

வெனின்; விரகிகளுக்குக் கணப்பொழுது நெடுங்காலமா மென்பத னால் விரோத மில்லையென்க. (கூ)

[இதுமுதற் பதினெருபாட்டுகளால் நளராஜனுடைய காம விருப்பத்தைச் சொல்லத்தொடங்கி அவன் தமயந் தியி னுயர்வாகிய குணத்தைக் கேட்டமையை இதனுற் சொல்லுகிறர்.]

மணியெழு வனைய தோளார் மனவலி யகற்றுந் துத்திப்
பணவர வல்குற் செவ்வாய்ப் பைந்தொடி குண னூ லாக
வணிகிளர் சீர்த்தி முத்தங் கோத்தன னரசர் சென்னி
தணவற விளங்கு பைம்பொற் றூமரைத் தாளி னானே.

இ - ள். அரசர்-அரசருடைய, சென்னி - தலைகளிலே, தணவு அற - ஒழிவில்லாமல், விளங்கு - விளங்குகின்ற, பைம்பொன் தாமரை - பசிய பொற்றாமரை மலர்களாகிய, தாளினன் - அடிகளை யுடைய நளமஹாராஜனானவன், அரவு - பாம்பினது, துத்தி - கரும் புள்ளிகளையுடைய, பணம் - படம்போலும், அல்குல் - அரை முன் பக்கத்தையும், செ வாய் - செவ்வாயையுமுடைய, பைந்தொடி - தமயந்தியினது, மணி எழு அனைய - மணித்தூண்போலும், தோளார்- தோள்களையுடைய காளையரது, மனம் வலி-தைரியத்தை, அகற்றும் - நீக்குகின்ற, குணன் - குணமானது, நூலாக - இழையாக, அணி - (தன்) அழகினாலே, கிளர் - விளங்காநின்ற, சீர்த்தி - கீர்த்திகளா கிய, முத்தம் - முத்துகளை, கோத்தனன் - (அவ்விழையிலே) கோத் தான், எ - று.

க - து நளமகாராஜன் தமயந்தி குணமே நூலாகவும், தன் கீர்த் தியே முத்துகளாகவும் கோத்துக்கொண் டிருந்தான் என்பதாம்.

அரசர் தமது முடிகளின்மேலே பொற்றாமரை மலரைப்போல மகிழ்ந்து கொள்ளுதலால் அவர் முடிக்கு இவனடி பொற்றாமரை மல ரெனப்பட்டது. பைந்தொடிகுணன், மனவலி யகற்றுங்குணன் எனக் கூட்டுக. பைந்தொடி - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித்தொகைக் காரணப்பெயர்; பசுமையாகிய வளையலை யணிந் தவள் என்பது பொருள். 'மணியெழு வனைய தோளார்' - அரசிளங் காளையர். மனவலி யகற்றலாவது - கூற்றங் கொதித்து மேல்வரினுங் கலங்காத வவரது மனநிலையைக் கேட்கப்பட்டவளவிலே கலங்கச் செய்தலாம். 'குணம்' எனப் பொதுப்படக் கூறுதலால் அழகு முத லான பலவுங் கொள்ளப்படும். அரசனழகினு லுண்டாகிய கீர்த்திகளா

கிய முத்துகளுக்கு அவள் குணம் 'நூலாக' எனவே முத்துகளுக்கு நூல்போல அக்கீர்த்திகளுக்கு அவள் குணம் இன்றியமையாத சிறப்புடைத்தென்பது பெறப்பட்டது. கீர்த்தி முத்தங்களைக் குணநூலிற் கோத்தல் அவள் தனக்குக் கிடைக்கப்பெறின் அவள் குணத்தினாலே தன் கீர்த்தி விளங்குந் தன்மையை நினைத்தல். [குணத்திலே நூலையும் கீர்த்தியிலே முத்தையும் ஆரோபித்தலால் உருவகவணி.]

[இதுமுதல் மூன்று பாட்டுகளால் நளமகாராஜனை
வெல்லுதற் கெண்ணிய மன்மதன் செய்கை
யைக்காட்டி அவன்மே லவனுக்குண்டாகும்
விருப்பம் குறிப்பிக்கப்படுகின்றது.]

வனப்பினில் வென்ற வேந்தை வயங்கொளுங் கால மென்னுக், கனைத்துவண் டிவருங் கூந்தல் கருதிய விலக்கந் தப்பாத், தனிப்படை யாக வேறற் கெண்ணினன் றரளஞ் சிந்தக், குனிக்குமென் கரும்பான் மேரு வில்லியை வெல்லுங் கோளான்.

இ - ள். தரளம்-முத்துகளானவை, சிந்த - உதிராநிற்க, குனிக்கும் - வளைக்கப்பட்ட, மென் கரும்பால் - மெல்லிய கருப்பு வில்லினாலே, மேரு வில்லியை - மேருவை வில்லாகக்கொண்ட கடவுளையும், வெல்லும் - வென்ற, கோளான் - (பெருமையையுடைய) மன்மதனானவன், வயம் - வெற்றியை, கொளும் - கொள்ளுதற்கேற்ற, காலம் என்னு - காலம் (இதுவே) என்று, வண்டு - வண்டுகளானவை, கனைத்து - ஒலித்து, இவரும் - ஏறப்பெறுகின்ற, கூந்தல் - கூந்தலையுடைய தமயந்தியானவள், கருதிய - (தன்னாலே) குறிக்கப்பட்ட, இலக்கம் - குறியினின்றும், தப்பா - தப்பாத, தனி - ஒப்பற்ற, படை ஆக - ஆயுதமாக, வனப்பினில் - அழகினால், வென்ற - (தன்னை) வென்ற, வேந்தை - நளமஹாராஜனை, வேறற்கு - (அப்படையால்) வெல்லுதற்கு, எண்ணினன் - ஆலோசித்தான், எ - று.

க - து. மன்மதனானவன் தமயந்தியைப் படையாகக்கொண்டு நளனை வெல்ல நினைத்தான் என்பதாம்.

முன்னே மேருவில்லியால் வெல்லப்பட்டவனாயினும் பின்னே உமாதேவியை மணம்புணரச் செய்தமையினாலே 'கரும்பான் மேரு வில்லியை வெல்லுங் கோளான்' என்றார். "மாதுமை நிமித்தமாக மழுவலா னனங்களுக்கும், கோதநெஞ் சுடற்றச்சீறிக் கொண்கனே யிமைக்குமேனி, பாதிசெய் தவரைத்தண்டம் பண்ணித்தன் வசமாச்

செய்த, நாதனே யுலகுக்கெல்லா நாதனென் றேத்துவாமே" (கொக்கோகம்-பாயிரம்) என்பதனுலுமறிக. வல்லவனுக்குப் புல்லு மாயுதமென்றபடியே மன்மத னுற்றலை மெச்சியவாருயிற்று. வயங்கொளுங் காலம் என்றது கீர்த்திமுத்தங்களைக் குண நூலிற் கோத்தகாலத்தைச் சுட்டிநின்றது. வனப்பினில் வெல்லுதலாவது - அழகின் மேற்பட்டு நிற்றலாம். தமயந்தி மன்மதனுக்கு அவனுலே குறிக்கப்பட்ட அரசனுகிய குறியிலே தப்பாது சென்று தாக்கும் ஒப்பற்ற படைக்கலமாயினளென்க. தன்னை யழகில்வென்ற அரசன்மேல் உள்வயிரங் கொண்டு அவனை வெல்லுதற்கான காலமும் படைக்கலமுந் தேடிக்கொண்டிருந்து அவை கிடைக்கப் பெறுதலினுலே 'வேறற்கெண்ணினுன்' என்க. என்று - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; இது எண்ணினன் என்னும் வினைகொண்டது. [வயங்கொள்ள நினைத்தற்கு ஏதுவாகாத வனப்பினில் வென்றமையை யேதுவாகக் குறித்தலால் ஏதுத்தற்குறிப்பணி. 'கரும்பான் மேருவில்லியை வெல்லுங்கோளான்' எனக் காரணத்தினது தருமங் குறைவாயிருக்கக் காரியம் பிறத்தலைச் சொல்லுதலால் உ-வது பிறிதாராய்ச்சியணி. இவ்விரண்டுஞ் சேர்தலாலே சேர்வையணி.] (கக)

அணங்கினுக் கணங்கு செய்யு மணிகிள ரஞ்சில் லோதி,
குணங்கமழ் குருதி வைவேற் கொற்றவன் செவியுரு முன்,
மணங்கமழ் தென்றற் றேரோன் வாங்குபைங் கழைவிற்
பூட்டுங், குணஞ்செவிப் பட்ட தன்னேன் வன்மையார் குணிக்கற் பாலார்.

இ - ள். அணங்கினுக்கு - தெய்வ மகளிருக்கு, அணங்கு-வருத்தத்தை, செய்யும் - செய்கின்ற, அணி - அலங்கரித்தலாலே, கிளர் - விளங்காநின்ற, அம் - அழகிய, சில் - பொன்வட்டத் தகட்டணியையுடைய, ஓதி - கூந்தலையுடைய தமயந்தியினது, குணம் - குணமானது, கமழ் - நாறுகின்ற, குருதி - உதிரத்தையுடைய, வை - கூர்மை பொருந்திய, வேல் - வேலையுடைய, கொற்றவன் - நளமஹாராஜனது, செவி - காதிலே, உரு முன் - அடைவதன் முன்னே, மணம் - மணமானது, கமழ் - மணக்கப்பெற்ற, தென்றல் - தென்றலாகிய, தேரோன் - தேரையுடைய மன்மதனுல், வாங்கு - வளைக்கப்பட்ட, பை கழை வில் - பசிய கருப்புவில்லிலே, பூட்டும் - ஏறிடப்பட்ட, குணம் - குணமானது, செவி - (அம்மன்மதன்) காதிலே, பட்டது - அடைந்தது, அன்னேன் - அப்படிப்பட்ட மன்மதனது,

வன்மை - வல்லமையை, யார் - யாவர், குணிக்கற்பாலார் - அளவு செய்யவல்லவர், எ - று.

க - து. தமயந்தி குணதிசயமானது நளன் காதில் விழுமுன் மன்மதனானவன் விற்பூட்டும் வல்லமை யார் சொல்லவல்லார் என்பதாம்.

அணங்கு - சாதி யொருமை. "அணங்குஞ் சூருந் தெய்வப் பெண் பொதுப்பெயர்" (திவாகரம்-தெய்வப்பெயர்த் தொகுதி) என்பதனுலறிக. 'அணங்கினுக் கணங்குசெய்தல்' தன்பேரழகினுல் அவர்க்குப் பொருமை வருத்தஞ் செய்தலாம்; அல்லாமலும் அழகுக்கழகு செய்கின்ற வெனினுமாம். அணங்கு - அழகு. பொதியமலையிலுள்ள சந்தனச் சோலையிற் படிந்து பரிமளித்துக்கொண்டு வருதலால் தென்றலுக்கு 'மணங்கமழ்' என்னும் விசேடணம் கொடுக்கப்பட்டது. தமயந்தியின் குணம்-அழகு முதலிய பண்பாம். கரும்புவிற் குணம்-அதனது நாணும். "குணமென்ப கயிறும் பண்புங் கும்பம்வின் ஞணுநாம் பேர்" (ஆதிப்பொருணிகண்டு) என்பதனுலறிக. தமயந்தியின்குணம் நளன் செவியி லடைவதன்முன்னே கரும்பு வில்லின் குணம் மன்மதன் செவியி லடைந்த தென்க. நளன் செவியி லடைதலாவது - கேட்டறியப்படுதல். மன்மதன் செவியி லடைதலாவது - இடது கையால் வில்லைப்பிடித்து நின்று வலது கையால் அம்பைத் தொடுத்து நாரியை யிழுக்கும்போது அந்நாரி காதளவிற்சென்றுபடுதலாம். தமயந்தியின் குணத்தை நளன் கேட்பதற்கு முன்னே மன்மதன் அம்பெய்யத் தொடங்குதல்கூடாமையாலே செவியுறுமுன் என்பது செவியுற்றவளவி லென்னும் விரைவைக் காட்டியது. [தமயந்தியினழகை யரசன் கேட்டறிதலாகிய காரணத்துக்குமுன்னே மன்மதன் வில் வளைத்தலாகிய காரியம் பிறத்தலைச் சொல்லுதலால் மிகை யுயர்வு நவிற்சியணியாகும்.]

(கஉ)

**க**ல்வியின் றுறைகை போய காவலன் றன்னை யின்னே
வெல்குவ லென்ன நெஞ்சின் விழைவுறு கருப்பு வில்லான்
மல்லலம் புவன மூன்றும் வென்றதன் வரம்பில் சீர்த்தி
பல்கலை யென்னு மாழியி லுருத்து நின்றான்.

இ - ள். கல்வியின் - கல்வியினது, துறை - வழியில், கைபோய - வல்லவனுகிய, காவலன் தன்னை - அரசனை, இன்னே - இப்போதே, வெல்குவல் என்ன - வெல்வேனென்று, நெஞ்சில் - (தன்) மனத்தில், விழைவு உறு - ஆசைப் பெருக்கத்தைக் கொண்ட, கருப்பு வில்லான்-கருப்பு வில்லையுடைய (மன்மதனானவன்),

அம் புவனம் மூன்றும் - அழகிய உலக மூன்றையும், வென்ற - (அது வரையில்) வென்று சம்பாதிக்கப்பட்ட, தன் - தனது, மல்லல்-வளம் பொருந்திய, வரம்பு இல் - அளவில்லாத, சீர்த்தி-கீர்த்தியை, அல்கலில் - சுருங்கலில்லாத, ஐயம் என்னும் - சந்தேக மென்கின்ற, ஆழியில் - கடலுள், உகுத்து - முழுகச்செய்து, நின்றான் - (திகைத்து) நின்றான், எ - று.

க - து. நளனை வெல்ல விருப்புற்ற மன்மதனானவன் தன் கீர்த்தியைச் சந்தேகக் கடலிற் சொரிந்து மயங்கி நின்றான் என்பதாம்.

'கல்வியின்றுறை கைபோய காவலன்' எனவே வேதாகமங்களிற் சொல்லப்பட்ட விதி விலக்குகளை ஐயந்திரிபின்றி யறிந்து அவ்வறிவினாலே மனத்தைத் தன்வசப்படுத்தி நிற்பவனென்பது பெறப்பட்டது. அவனை வெல்லுதல் - அவன் மனநிலையைக் கெடுத்துக் காமத்திற் கலங்கச் செய்தல். அக்கல்வியறிவி னுயர்ந்தோனை யிப்போதே வெல்லுவேனென் றுசைகூர்தல் சாகச மாதலாலே மன்மதனுக்கு இவனை வெல்லமாட்டுவேனோ மாட்டேனோ வென்கிற வுள்ளநிகழ்ச்சி பிறந்து அதனால் இதுவரையிலே மூன்றுலகங்களையும் வென்று சம்பாதிக்கப்பட்ட கீர்த்திகளும் நிற்குமோ நீங்குமோவென்று சந்தேகித்தா னென்க. புதிதாகச் சம்பாதிக்க விரும்பிய ஊதியத்தைக் குறித்து முயன்று அதுவரையிலே சம்பாதித்து வைத்திருக்கப்பட்ட முதலையும் இழந்துபோதல் அறிவிலான் செயலாதல், "ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை, யூக்கா ரறிவுடையார்" (திருவள்ளுவர்-தெரிந்து செயல்வகை-௩) என்பதனாலறிக. [கல்வியின் றுறை கைபோய வென்னுமடை அரசன் மன்மதனுக்கு ஐயந்தரவல்லனென்னுங் கருத்தை யுட்கொள்ளுதலால் கருத்தடையணி, அங்கம்; மன்மதனுக்குச் சந்தேக மில்லாதிருக்கச் சந்தேகத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி, அங்கி; ஆதலால் உறுப்புறுப்பிக் கலவையணி.] (கரு)

[இதனால் மன்மதனுக்கு விதித்துணையாற் பூவம்பைக் கொண்டே ஆண்மை பயன்பட்டமை சொல்லப்படுகின்றது.]

தண்ணறாத் துளிக்குங் கூந்தற் றமயந்தி முலையும் போர்வே
லண்ணறன் புயமுங் கூட்டும் விதிவலி யழகிற் றம்மா
மண்ணமை முழவுத் தோளான் மனவலிக் கவச மார
னெண்மலர் வாளி யாலு முரனறப் பிளந்த தன்றே.

இ-ள். தண் - தண்ணிய, நறா - (மலர்த்) தேனை, துளிக்கும் - துளிக்கின்ற, கூந்தல் - கூந்தலையுடைய, தமயந்தி - தமயந்தியி

னது, முலையும் - முலைகளையும், போர் - போர்க்குரிய, வேல் - வேலையுடைய, அண்ணல் - நளமஹாராஜனது, புயமும் - தோள்களையும், கூட்டும் - சேர்க்கும், விதி - தெய்வத்தினது, வலி - நினைப்பானது, அழகிற்று - பயனுடைத்தாயிற்று; மண் - துடைத்தல்; அமை - அமைந்த, முழவு - மத்தளம்போலும், தோளான் - தோள்களையுடைய அவ்வரசனது, மனவலி - தைரியமாகிய, கவசம் - கவசமானது, மாரன் - மன்மதனது, ஒள் - மெல்லிய, மலர் வாளியாலும் - பூவம்பினாலும், உரன் அற - வலிகெட, பிளந்தது - கிழிந்தது, எ-று.

க-து. தமயந்தி முலைகளையும் நளனிரு தோள்களையும் சேர்க்கும் விதிவசம் வலிமையுள்ளது; நளனது தைரியமாகிய மனக்கவசமானது மன்மத பாணத்தாற் கிழிந்தது என்பதாம்.

மனவலியில் வலியென்பது தல் விகுதிகுன்றிய தொழிற்பெயர். அது நினைத்த லென்பது, "உய்த்துபோ மாறே, வலிக்குமா மாண்டார் மனம்" (நாலடியார்-யாக்கை நிலையாமை-ரு) என்பதனாலறிக. தமயந்தி முலையும் நளன் புயமுங் கூட்ட லென்றதற்கு அவளை இவனுக்கு மனைவியாகச் செய்த லென்பது பொருள். கொடிய படைக்கலங்களால் ஊறுபடாமற் காக்குங் கவசம்போல அரசனது மனவலி காமத்தினாலே ஊறுபடாமற் காத்தலாலே 'மனவலிக் கவசம்' என்றார். அது பிளத்தல் - நிலை கலங்குதல். தெய்வ சங்கற்பத்தினாலே எந்தக் காரியந்தான் முடியாதென்ற தாயிற்று. [மலர் வாளியாலுங் கவசம் பிளந்த தென்னும் விரோதம் விதிவலியாற் பிளந்த தென்றதனாலே அழிதலால் முரண்விளைந் தழிவணி. இது மனவலிக் கவசமென்னு முருவகத்தை அங்கமாகக் கொண்டு வந்தது.] (கச)

[இதனாலே முதற் கடவுளரையும் வென்ற மன்மதனுக்கு வெல்லுதற்கரிய தியாதென்று சொல்லப்படுகின்றது.]

தேங்கமழ் துளவி னானு நான்முகத் தேவு நாளுந்
தாங்கருங் காம வெம்மை தரிக்கில ராகி யன்றோ [னா
வாங்குதண் டிரையிற் றண்ணென் மலர்வயின் வதிந்தார் மன்
னீங்கரு நிழலிற் றோன்று மதனையெவ் வாறு நீங்கும்.

இ-ள். தேம் - தேனானது, கமழ் - மணக்கப்பெற்ற, துளவினானும் - துளசிமாலையையுடைய விஷ்ணுவும், நான்முகத் தேவும் - நான்கு முகங்களையுடைய பிர்மாவும், நாளும் - எந்நாளும், தாங்கரு - (யாவராலும்) தாங்குதற்கரிய, காமவெம்மை - மன்மதனாலுண்டாகிய வெப்பத்தை, தரிக்கிலராகி - பொறுக்க மாட்டாதவராகி, வாங்கு -

வளைந்த, தண் திரையில்-குளிர்ச்சிபொருந்திய பாற்கடலின்கண்ணும், தண்ணெனன் – குளிர்ச்சிபொருந்திய, மலர்வயின் – தாமரைப் பூவின் கண்ணும், வதிந்தார் அன்றே-வாசஞ்செய்கின்றாரன்றோ; மன்னன்-அரசனானவன், நீங்கரு - நீங்காத, நிழலின் - (தனது) சாயைபோல, தோன்றும் – தோன்றாநின்ற, மதனை - மன்மதனினின்றும், எவ்வாறு - எவ்வுபாயத்தினாலே, நீங்கும் - நீங்கமாட்டுவான், எ - று.

க - து. விட்டுணுவும் பிரமனும் காமக்கனலுக் காற்றாமல் கடலிலும் மலரிலு மிருக்கிறார்கள் ஆகையால், நளன் மதனைவிட் டெவ்வாறு நீங்குவான் என்பதாம்.

காமவெம்மை – நிலைமொழியீறு விகாரப்பட்டது, குமரகோட்டமென்பதுபோல. காமனாலாகிய வெப்பம் பொறாமல் அதைத் தணித்துக் கொள்ளுதற்குத் திருமால் பாற்கடலிலும், நான்முகன் தாமரைப் பூவிலும் வாசஞ் செய்கின்றா ரென்றார், படுக்கை யிடமும் ஆதனமும் ஆதல்பற்றி யென்க. முதற்கடவுளரே மன்மதனைக் கடக்கமாட்டா திருக்கையில் ஒரு மனிதனாகிய அரசன் தனது சாயைபோலத் தொடர்ந்து நிற்கின்ற அவனை யெப்படிக் கடக்க மாட்டுவ னென்றதாயிற்று. நிழல்-காந்தியுஞ் சாயையுமாமாதலின், 'நிழலிற் றோன்றும்' என்றதற்கு மன்னனது காந்திபோலும் காந்தியுடையனாகத் தோன்றுமென்பது நேர்பொருளாகவும், மன்னனது சாயைபோலத் தோன்றுமென்பது பயன்படு பொருளாகவுங் கொள்க. காந்தியென்பது, "வாமநிழல்சவி வளரொளியாகும்" (திவாகரம்-பண்புப்பெயர்த் தொகுதி) என்பதனாலறிக. உடம்பினிழலை யொருவருங் கடக்கக் கூடாமை யறிக. தாங்க அரு, நீங்கஅரு என்பதில் நிலைமொழியீறு தொகுத்தல். திரை சினையாகு பெயர். 'தேங்கமழ் துளவினானும்' என்ற குறிப்பால் திரை பாற்கடலைக் குறித்தது. வெம்மை தணித்தற் குரிமை தோன்றத் திரைக்கும் மலருக்கும் தண் என்னும் அடை கொடுக்கப்பட்டது. நான்முகத்தேவும் என்ற குறிப்பால் மலர் தாமரை மலருக்காயிற்று. மன்மதனாலே கடவுளர் படும்பாட்டைச் சொல்லவே நளன் படும்பாடு தோன்றலாலே செய்யுட் பொருட்பேறணி. காந்திபோலுங் காந்தியென்பது தொகை யுவமை, இது அங்கம்; கடக்க மாட்டாமைக்கு ஏதுவாகாத நிழலிற் றோன்றுதலை யேதுவாகக் குறித்தலால் ஏதுத் தற்குறிப்பணி, இது அங்கி; ஆதலாற் கலவையணி.] (கரு)

[இதனால் உள்ளுதலும் நாணுவரை யிறத்தலுஞ் சொல்லப்படுகின்றன.]

மானநீ ரரணஞ் சூழ்ந்த மன்னவ னுளத்தி னூடு
தூநலப் பருவ மென்னுந் தோழியன் பொழுக நல்கு

நாணமும் புழுகுங் கொட்டி நகைமணி முத்தஞ் சூட்டு
நீனிற மணிக்கட் கொங்கைக் குடத்தினா னீந்திப் புக்காள்.

இ-ள். மானம் – நாணமாகிய, நீரரணம் – அகழியினாலே, சூழ்ந்த – சூழப்பட்ட, மன்னவன் – அரசனது, உளத்தினூடு – மனத்தினுள்ளே, தூ – குற்றமற்ற, நலப்பருவம் என்னும் – மங்கைப்பருவமென்கிற, தோழி – பாங்கியினாலே, அன்பு ஒழுக – (அவன்மேல்) அன்புபெருக, நல்கு – கொடுக்கப்பட்ட, நாணமும் – கஸ்தூரியையும், புழுகும் – புழுகையும், கொட்டி – அப்பி, நகை – காந்திபொருந்திய, மணி – அழகிய, முத்தம் – முத்துவடத்தை, சூட்டும்-சூட்டப்பெற்ற, நீல்நிறமணி-நீலமணிபோலும், கண் – சூசுகத்தையுடைய, கொங்கை-முலைகளாகிய, குடத்தினால் – குடங்களினாலே, நீந்தி – (அவ்வகழியைக்) கடந்து, புக்காள் – சென்றாள், எ – று.

க – து. தமயந்தியானவள் நளனது மானமென்னு மகழியைக் கொங்கைக் குடங்களாலே நீந்தி அவனுள்ளத்துட் புகுந்தாள் என்பதாம்.

ஒரு நகரத்திலே பகைவர் புகாமற்காக்கும் அகழிபோல நாணம் அரசனுள்ளத்தே காமம் புகாமற் காத்தலாலே 'மானநீரரணம்' என்றார். "மானமும் வெள்கலும் வட்கலுஞ் சமழ்ப்பு, நாண முணர்த்து நடைய வாகும்" (திவாகரம்-பண்புப்பெயர்த் தொகுதி). புதிய காமவின்பத்தை யனுபவித்தற் குரித்தாய் முன்னும் பின்னுமுள்ள பருவங்களினைத்தினுஞ் சிறந்து நிற்கையால் மங்கைப் பருவத்தைத் 'தூநலப் பருவம்' என்றார். அது பன்னிரண் டாண்டுகளின்மேல் வருவது. அதிலே பெண்மைக்குச் சிறந்த முலைக ளரும்புதல்பற்றி அதன்மேல் அன்பு பிறத்தலால் 'அன்பொழுக' என்றார். மார்பிலே குடத்தைக்கொண்டு ஆழநீரைக் கடந்து அக்கரை சேர்வோர் போலத் தமயந்தி தன் முலைகளாலே அரசனது நாணமாகிய அகழியைக் கடந்து அவனது மனத்திலே புகுந்தாளென்க. இப்படி அவள் செயலாகக் கூறப்பட்டதாயினும் அரசன் அவளுடைய முலையழகைக் கேட்டுத் தன்னாணத்தை யிழந்து அவளை நினைத்திருந்தா னென்பது கருத்தாகக் கொள்க. உயர் வொப்பில்லாத அழகுடைய மகளிராயினும் யௌவனமுற்று முலை யரும்புதற்கு முன்னே அவரை விரும்புதல் பொருந்தாக் காமமா மாதலின், விரும்புதற்கு முலைகளினியற்கை யழகோடு செயற்கை யழகுங் காரணமாதல் தோன்ற 'நாணமும் புழுகுங் கொட்டி நகைமணி முத்தஞ் சூட்டு, நீனிற மணிக்கட் கொங்கை' என்றார். [மானம் – பருவம் – கொங்கை இம்மூன்றிலும்

நீரரணம் - தோழி - குடம் இம்மூன்றின் அபேதங்களை ஆரோபித்த லால் உருவகவணி.] (கசு)

[இதனால் துயிலாமைத் துன்பஞ் சொல்லப்படுகின்றது.]

சிறையளி குடைந்து பாடுந் தேமலர்ப் பகழி மாரி
நறைவிரி யலங்கன் மார்பிற் றிளைத்தலி னையுந் துன்பங்
கறைமதி விளங்குங் கங்குற் காலையு மணையு மல்லாற்
பிறரறி யாம லுள்ளத் தடக்கினன் பிறங்கற் றோளான்.

இ - ள். பிறங்கல் - மலைபோலும், தோளான் - தோள்களையுடைய நளமஹாராஜனானவன், சிறை - சிறைகளையுடைய, அளி - வண்டுகளானவை, குடைந்து - துளைத்து, பாடும் - பாடப்பெறுகின்ற, தேம் - பரிமளம் பொருந்திய, மலர் பகழி - பூவம்புகளது', மாரி - மழையானது, நறை - தேனையுடைய, விரி - மலர்ந்த, அலங்கல் - பூமாலையையுடைய, மார்பில் - மார்பின் கண்ணே, திளைத்தலின் - படுதலினாலே, நையும் - இளைத்தலா லுண்டாகின்ற, துன்பம் - (தனது) துன்பத்தை, கறைமதி - சந்திரனாலே, விளங்கும் - விளங்காநின்ற, கங்குல் காலையும் - இராக்காலமும், (கறைமதி) - சந்திரன்போல, (விளங்கும்) - விளங்காநின்ற, அணையும் - பாயலும், அல்லால் - அல்லாமல், பிறர் - மற்றொருவரும், அறியாமல் - அறியாதிருக்க, உள்ளத்து - (தன்) மனத்தின்கண், அடக்கினன் - மறைத்தான், எ - று.

க - து. மன்மத பாணத்தா லுண்டான துன்பத்தை நளமஹாராஜன் பிறரறியாம லடக்கினான் என்பதாம்.

வெண்மை தண்மைகளாலே மதி சயனத்திற்கு முபமானமாக்கப்பட்டது. கறை - முயற்கறை. 'மதி விளங்கும்' என்பதற்கு சந்திரன் பிரகாசிக்கிற என்றுரைத்தலுமாம். இரவும் அணையும் உணர்வில் பொருள்க ளாயினும், "உறுப்புடையதுபோ லுணர்வுடையதுபோன், மறுத்துரைப்பதுபோ னெஞ்சொடு புணர்த்துஞ், சொல்லா மரபி னவற்றொடுகெழீஇச், செய்யாமரபிற் றொழிற்படுத் தடக்கியும்" (தொல்காப்பியம் - பொருளியல்-உ) என்னும் பொருளியற் சூத்திர விதியால் உணர்தற் றன்மையை அவற்றி லேற்றினர். இதனாலே அரசன் இரவிலே அனுபவித்த துன்பத்தைத் தன்னுயிர்போற் சிறந்த நட்பாளர்க்கும் வெளிப்படுத்தில னென்பதாயிற்று. காலமுமிடமுமாகிய கங்குலில் படுக்கையிலே வருந்தினமையால் அவ்வையறிந்தனவாகக் கூறப்பட்டன. (கஎ)

[இதனால் தமயந்தியைத் தருகவென்று இரவாமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

*தளர்வொடு மெலிந்தும் வையந் தனிக்குடை நிழற்றும் பைம்பொற், கிளரொளிப் பூணன் வீமன் பாவையைக் கேட்டல் செய்யா, னளியென வுயிரை யுண்மை யறத்தினை யற விட்டாலு, மிளிவென வெண்ணி மானம் பூண்டவ ரிரப்பர் கொல்லோ.*

இ - ள். வையம் - பூமிக்கு, தனி - ஒப்பற்ற, குடை - குடையினாலே, நிழற்றும் - நிழலைத் தருகின்ற, பை பொன் - பசும் பொன்னாலாகிய, கிளர் - விளங்காநின்ற, ஒளி - ஒளியையுடைய, பூணன் - ஆபரணத்தையுடைய அரசன், தளர்வொடு - (உள்ளத்) தளர்ச்சியோடு, மெலிந்தும் - (உடம்பு) வாடியும், வீமன் - வீமராசனுடைய, பாவையை - புதல்வியாகிய தமயந்தியை, அளி என - தருகவென்று, கேட்டல் செய்யான் - (அவனை) யாசித்திலன்; இளிவு என - (ஏற்பது) இகழ்ச்சியென்று, எண்ணி-நினைத்து, மானம் - மானமாகிய (பூணை), பூண்டவர் - தரித்தவர், உயிரை - பிராணனையும், உண்மை - பின்னுள்ளதாகிய, அறத்தினை - தருமத்தையும், அற - பற்றற, விட்டாலும் - கைவிட்டாலும், இரப்பர் கொல் - இரப்பாரோ? (இரவார்), எ - று.

க - து. மானமுள்ளவர் இரவார்போல நளமஹாராஜன் வீமராஜன் மகளைக் கேளான் என்பதாம்.

தனிக்குடை நிழற்க ணிருந்து விளங்கு மவனரசாட்சியே யுலகுயிர்களெல்லாம் இன்புறுதற்குக் காரணமாதலால் 'வையந் தனிக்குடை நிழற்றும்' என்றார். பின்மெலிந் தென்றமையால் தளர்வு மனத்திற் கேற்றப்பட்டது. அளியினை யுயிரையெனப் பாடங் கூறுவாருமுண்டு; அளியும் - அறத்தினு ளடங்குமென்க. உயிர் - பஞ்சப் பிராணன்கள். பிராணன்களை யிழந்த பின்னு மழியாது நிற்றல்பற்றி 'உண்மையறம்' என்றார். பல துன்பங்களினு மிறத்தற் றுன்பமும், அதனினும் அறத்தை யிழத்தற் றுன்பமும், அதனினும் இரப்புத்துன்பமுங்கொடியனவென்று கூறியதாயிற்று. "ஆவிற்கு நீரென்றிரப்பினு நாவிற், கிரவி னிளிவந்த தில்" (திருக்குறள்-இரவச்சம்-௬) என்பதனாலும் இரத்தல் இழிவென்பதறிக. [மானம் பூண்டவ ரிரவா ரென்னும் பொதுப் பொருளால் வீமனைத் தமயந்தியைத் தருகவென்று இரவாமை சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி.] (கஅ.)

[இதனால் காமநோயை மறைக்குமாறும் அது உன்மாதத்தாலே மறைபடாமையுஞ் சொல்லப்படுகின்றன.]

*நிறங்கிளர் வயிரத் தோளா னெட்டுயிர்ப் பெறியுந் தோறும், பிறங்குதல் சிறிது மின்றி வேறொன்றான் மறைக் கும் பெட்பான், மறங்கிளர் வேற்கண் மாதி னுருவெளி வயத்த னாகிக், கறங்கினெஞ் சுழல வன்னாட் குரைப்பது கரக்க மாட்டான்.*

இ - ள். நிறம் - காந்தியினாலே, கிளர் - விளங்காநின்ற, வயிரம் - வச்சிராயுதம்போலும், தோளான் - தோள்களையுடைய அரசனானவன், நெட்டுயிர்ப்பு - பெருமூச்சை, எறியுந்தோறும் - விடும்போதெல்லாம், பிறங்குதல் - (அவற்றின் காரணமாகிய காமம்) வெளிப்படுதல், சிறிதும் - சிறிதாயினும், இன்றி - இல்லாமல், வேறு ஒன்றால் - வேறொரு காரணத்தால், மறைக்கும் - (பிறருக்கு அதனை) மறைப்பான்; மறம் - வீரத்தன்மையினால், கிளர் - விளங்கா நின்ற, வேல் - வேல்போலும், கண் - கண்களையுடைய, மாதின் - தமயந்தியினது, உருவெளி - (பிராந்தியால்) வெளியிலே தோன்றுகிற வுருவத்திற்கு, வயத்தன் ஆகி-வசப்பட்டவனாகி, கறங்கின் - காற்றாடிபோல, நெஞ்சு - மனமானது, உழல - சுழல, அன்னாட்கு - அப்பொய்யாகத் தோன்றுகிற தமயந்திக்கு, பெட்பால் - ஆசையால், உரைப்பது - சொல்வதைமாத்திரம், கரக்கமாட்டான் - மறைக்கமாட்டான், எ - று.

க - து. பிறரறியாமல் காமத்தை மறைக்கும் நளமஹாராஜன் உருவெளித்தோற்றத் தமயந்தியோடு பேசுவதை மறைக்கமாட்டான் என்பதாம்.

நெட்டுயிர்ப்பென்றது 'நெட்டுயிர்ப் பெறியுந்தோறும்' என்றதனால் அருகிலுள்ள மந்திரி முதலியோர்க்கு ஒருகாற் கொன்றாக வேறு வேறு காரணந் தோன்ற அபிநயித்து அவற்றின் காரணமாகிய காமத்தை மறைப்பா னென்க. வேறு காரணங்களாவன, பகைவர் மேற் கோபஞ்செய்கை முதலியனவாம். அப்படி மறைக்க வல்லவனாயிருந்தும் பிராந்தியினாலே தமயந்தி யுருவெளியாகக் காணப்படுந் தோறும் அவள் வசப்பட்டுத் தன்னை மறந்து நிற்கையினாலே அவளுக்குச் சொல்வதை மாத்திரம் மறைக்கமாட்டா னயினானென்க. அவளுக்குச் சொல்வதாவது: அவளழகின் சிறப்பையும், அதுபற்றித் தனக்குண்டான விருப்பத்தையும், அவ்விருப்பங் காரணமாகத் தான் படும்

வருத்தத்தையும், அவ்வருத்தத்தை யொழித்தற்கு அவளிரக்கஞ் செய்ய வேண்டுதலையுஞ் சொல்லுதலாம். [காமங் காரணமாக வுண்டாகும் பெருமூச்சுகளை வேறு காரணங்களாலே மறைத்தமையினாலே வஞ்சநவிற்சியணி.] (கக)

[இது முதலியவற்றால் தன்விருப்பங் கைகூடுதற்கு உதவி யாதுந் தெய்வவன்னத்தைக் காணுதற்குக் காரணமாகிய பொழில் விளையாட்டுச் சொல்லப்படுகின்றது.]

பொறிவழி யுள்ளம் போக்காப் புரவலன் காம நோயை
மறைசெய மறையா தாக மம்மரி னாணுட் கொள்ளா
வறைகழ லவனி வேந்தர் நெருங்குபே ரவையி னீங்கி
நறைகமழ் சோலை செல்வா னுளத்தினி னயத்தல் செய்தான்.

இ - ள். பொறி - ஐம்பொறிகளது, வழி - வழியிலே, உள்ளம் - மனத்தை, போக்கா - செலுத்தாத, புரவலன் - அரசனானவன், காம நோயை - காம வியாதியை, மறை செய - (வேறு காரணங்களால்) மறைக்க, மம்மரின் - உன்மாதத்தினாலே, மறையாதாக - (அது) மறையாமல் வெளிப்பட, நாண்-நாணத்தை, உட்கொள்ளா-உள்ளே கொண்டு, அறை-ஒலிக்கின்ற, கழல் - வீரக்கழலையுடைய, அவனி - பூமியிலுள்ள, வேந்தர் - அரசர்களானவர்கள், நெருங்கு - நெருங்கப் பெற்றிருக்கின்ற, பேர் அவையின் - பெரிய சபையினின்றும், நீங்கி - நீங்கி, நறை - தேனானது, கமழ் - மணக்கப்பெற்ற, சோலை-(தனது) சிங்கார வனத்திற்கு, செல்வான் - போகும்படியாக, உளத்தினில் - மனத்தின்கண், நயத்தல் செய்தான் - (அவன்) விரும்பினான், எ-று.

க - து. நளமஹாராஜன் காமத்தை மறைக்க அக்காமம் வெளிப்பட வெட்கங்கொண்டு சபையை விட்டு நந்தவனத்துக்குப் போக விரும்பினான் என்பதாம்.

பொறிவழி யுள்ளம்போக்காமையாவது - மனத்தை அது விரும்பியவாறு புலன்களிலே செலுத்தாது நிறுத்தலாம். கொள்ளா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இது நயத்தல் செய்தான் என்னும் வினைகொண்டது. செல்வான் என்பதில் வான்-எதிர்கால வினையெச்ச விகுதி. முன் பாட்டிலே வேறொன்றுரன் மறைக்குமென்றதனாலே காமநோயை மறைக்குமாறும், உரைப்பது கரக்கமாட்டான் என்றதனாலே அது வெளிப்படுமாறும் வகுத்துச் சொல்லப்பட்டமையால் இப்பாட்டிலே மறைசெய மறையாதாகவெனத் தொகுத்துக் கூறினார். 'அறைகழ லவனிவேந்தர் நெருங்குபேரவை' ஆத

வின் அதனகத்தே தனது காமநோய் வெளிப்படுதல் தன்னிறைமைக் குணங்களுக் கிழுக்காமென்று நாணினு னென்க. அந்நாணம் பிறர்க்கு வெளிப்படாது உள்ளேதானே யடக்கப்பட்ட தென்பது தோன்ற நாணி யென்னுது 'நாணுட்கொள்ளா' என்ருர். அந்நாணத்தால் அச்சபையினீங்கித் தனித்திருக்கவேண்டிச் சிங்காரவனத்திற் குச் செல்ல விரும்பினு னென்க. (௨0)

[இதனுல் குதிரைகொணர்க வென்றமை
சொல்லப்படுகின்றது.]

கொட்புற வுலவுந் தோறுங் குரத்தடை துகளின் குப்பை, நுட்பமா ரணுக்க ளென்னு நுவலரு மனத்தின் கூட்டங், கட்புலன் கதுவல் செல்லாக் கடுப்பினைக் கற்பான் காலைப், பெட்புறப் பிடித்தல் போலப் பிறங்குமாக் கொணர்மி னென்ருன்.

இ-ள். கொட்புற - சுழற்சி பொருந்த, உலவுந்தோறும் - சஞ்சரிக்குந்தோறும், குரத்து - குளம்புகளினின்றும், அடை-(கால்களை) அடைகின்ற, துகளின்-புழுதியினது, குப்பை - கூட்டமானது, கட்புலன் - கண்ணறிவிற்கு, கதுவல் செல்லா-பற்றுதல் கூடாத, கடுப்பினை - வேகத்தை, கற்பான் - கற்கும்பொருட்டு, காலை - கால்களை, பெட்புற - ஆசைமிக, பிடித்தல் - பிடித்தலையுடைய, நுட்பம் ஆர் - நுண்மை பொருந்திய, அணுக்கள் என்னும் - அணுக்கள் என்கிற, நுவலரும் - (எண்ணிச்) சொல்லக்கூடாத, மனத்தின் - மனங்களது, கூட்டம் - கூட்டத்தை, போல - ஒத்துத் தோன்ருநிற்க, பிறங்கு - விளங்குகின்ற, மா - குதிரையை, கொணர்மின் - கொண்டு வாருங்கள், என்ருன் - என்று சொன்னுன் (அரசன்), எ - று.

க-து. நளன் குதிரையைக் கொண்டுவா வென்ருன் என்பதாம்.

கொட்புற வுலவல் - கொள்ளிவட்டம் போன்று மண்டலித்துச் செல்லுதல். "இருவகைச் சாரியு மெதிர்ந்து வட்டமாய், வருவழி ஞெகிழிபோன் மறுகலா மொரு, துரகத மேகிலை நின்ற தோற்றமொத்,தொருவற நடத்தினு ரொருக ணத்தினே" (திருவிளையாடல்-நரிபரியாக்கியபடலம்-கக) என்பதிற் காண்க. நியாய நூலார் மதம் பற்றி மனத்தை 'அணு' என்ருர். "இன்பமுதலிய பண்புறத்தரூஉங், கருவியாம்பொறி மனமஃதுயிர்தோ, றின்றியமையாது வேண்டலிற் பலவாய், அணுவாய்நிற்கு மென்மனுர் புலவர்" (தர்க்கசங்கிரக சூத்திரம்) என்பதனுலறிக. போலுதல்-துகளின்செயல். பிறக்குதல் - குதி

ரைச்செயல். ஆசிரியனைத்தொழுது கற்கவேண்டுதல் மாணுக்கரது கடனுதலாலே 'கற்பான்காலைப் பெட்புறப் பிடித்தல்' என்ருர். [அத்துகளின் கூட்டத்தை அப்படிப்பட்ட மனக்கூட்டமாகக் குறித்தலாலே பொருட்டற்குறிப்பணி.] (உக)

[இதனுல் அக்குதிரைமேல் ஏறினது சொல்லப்படுகின்றது.]

**ப**ன்னகஞ் சுமந்த வைப்போர் தோளினிற் பரிக்கு மன்னர், மன்னனைப் பரிப்பல் யானே வருகதி ரிரவி தன்னை, யென்னைநீர் தாங்கு மாறென் றேழ்பரி யினைநக் கென்ன, மின்னெளி விரிக்கும் வெண்பற் கூந்தன்மா மேற்கொண் டானே.

இ - ள். பன்னகம் - ஆதிசேஷனுலே, சுமந்த - (ஆயிரந் தலைகளாலே) சுமக்கப்படுகின்ற, வைப்பு - பூமியை, ஓர் தோளினில் (தனது) ஒரு தோளினுலே, பரிக்கும் - தாங்குகின்ற, மன்னர் மன்னனை - அரசர்க் கரசனை, யானே - நான் தனியாக, பரிப்பல் - சுமக்க வல்லேன்; வரு - வருகின்ற, கதிர் - கிரணங்களையுடைய, இரவி தன்னை - சூரியனை, நீர் - (பலவாகிய) நீங்கள், தாங்குமாறு - தாங்குஞ் செய்கை, என்னை - எத்தன்மைத்து, என்று - என்று பழித்து, ஏழ் பரியினை - (அச்சூரியனது தேரினுடைய) ஏழு குதிரைகளைப் (பார்த்து), நக்கென்ன - சிரித்தல்போல, வெண்பல்-வெள்ளைப் பற்களது, மின் - விளங்காநின்ற, ஒளி - ஒளியை, விரிக்கும் - பரப்புகின்ற, கூந்தல் - புறமயிரையுடைய, மா - குதிரையின்மேல், மேற்கொண்டான் - (அரசன்) ஏறினுன், எ - று.

க - து. நளமஹாராஜன் அக்குதிரைமே லேறினுன் என்பதாம்.

'பன்னகஞ் சுமந்த' என்றவளவிலே ஆயிர முடிகளாற் சுமக்கப்படுதல் விளங்குதலால், அப்படிப்பட்ட பூமி பாரத்தை ஒருதோளாற் சுமக்கு மரசனை யான் றனியே சுமக்கின்றேனென்று தனது மிக்க வலிமையைக் காட்டி, அப்படிப்பட்டவ னல்லாத சூரியனை நீங்களேழாகக்கூடிச் சுமக்குமா றென்னென்றுஅச்சூரியன் குதிரைகளின் வலிமைக் குறைவைச் சொல்லுதற் பொருண்மைதோன்ற அவமதித்துச் சிரித்தல் கொள்க. பன்னகம்-காலைக்கொண்டு நடவாதது எனப் பொருள் படுவதோர் வடசொல். அரசன் ஓர் தோளிற் பரித்தலாவது-ஒரு தோள் வலியைக்கொண்டு பகைவரை வென்று காப்பாற்றுதலாம். பரித்தல்-சுமத்தலுக்குங் காத்தலுக்குஞ் சிலேடை;"பரிபரி சுமத்தல்வேகம் பாதுகாத்திடல்" இதனுலறிக. சூரியனது தேர்க்குதிரை

கள் ஏழென்னுந் தொகையினவன்றி ஏழெனப் பெயர்பெற்ற குதிரையொன்றே யென்பாரும், ஏழ்குதிரைகளுண்டு அவற்றுள் ஏழெனப் பெயர்பெற்ற தொன்றென்பாரும் உளர். நக்கலென்பது-ஈறுகெட்டது. [குதிரையின் பல்லொளி விரித்தலை அப்படிச் சிரித்தலாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாகும்.] (உஉ)

[இதனால் வனத்திற்குச் செல்லுதற் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கொய்யுளைப் பரியிற் செல்லுங் குரிசில்வாண் முகத்திற் செவ்விச், செய்யபங் கயமென் றெண்ணித் தெரிவையர் முகத்து லாய, வையரி பரந்த மைக்க ணளியினந் தொடர்ந்து வீழ, மையலங் களிற்று வேந்தர் மலரடி பரவச் சென்றான்.

இ - ள். கொய் - கொய்யப்பட்ட, உளை - கழுத்து மயிரையுடைய, பரியில் - குதிரையில், செல்லும் - போகாநின்ற, குரிசில்-அரசனது, வாள் - காந்திபொருந்திய, முகத்தில் - வதனத்தில், செவ்வி-பருவமுள்ள, செய்ய பங்கயம் என்று-செந்தாமரைப் பூவென்று, எண்ணி - (அதனை) நினைத்து, தெரிவையர்-மங்கையருடைய, முகத்து - முகங்களிலே, உலாய - உலாவுகின்ற, ஐயரி - பஞ்சவரிகள், பரந்த - பரவப்பெற்ற, மை - அஞ்சனத்தையுடைய, கண் - கண்களாகிய, அளி - வண்டுகளது, இனம் - கூட்டமானது, தொடர்ந்து-சென்று, வீழ - விழாநிற்கவும், மையலங்களிற்று - மதயானைபோலும், வேந்தர் - அரசர்களானவர்கள், மலர் - தாமரைமலர்போலும், அடி - பாதங்களை, பரவ - துதிசெய்யா நிற்கவும், சென்றான் - (அரசன்) போயினான், எ - று.

க - து. நளமஹாராஜன் அரசர்கள் வணங்கச் சோலையிற் சென்றான் என்பதாம்.

பிடரியின் மயிர்கள் ஒன்றற்கொன் றளவொத்திருப்பக் கத்தரிக்கப்படுதலாற் 'கொய்யுளை' என்றார். தெரிவையர்-உலாக்காணவந்த அந்நகரத்து மகளிரென்க. நாணுட்கொண்டு வேந்தர் நெருங்கு பேரவையி னீங்கித் தனித்திருக்க வனத்திற்குச் செல்வோனோடு வேந்தர் உடன்செல்லுதற்கு இயையுமோவெனின், மன்னர் மன்னனாதலின் வழிவிடச் சென்றாரென்க. அல்லது நளனுக்கு உயிர்போலச் சிறந்த நட்பரசரென்றுகொள்க. ['கண்ணளி யினம்' என்னும் உருவகத்தை அங்கமாகக்கொண்டு 'செய்ய பங்கய மென்றெண்ணி' என்னும் மயக்கவணி வந்தது.] (உ௩)

[இருனுல் வனஞ் சேர்ந்தமை சொல்லப்படுகின்றது.]

சுழிகொள்வாம் பரியி ழிந்து துன்னலர் மௌலி தேய்க்குங்
கழல்களிற் கழல்கள் சேர்த்த காட்சிமுன் வெருவித் தோற்ற
தழனிறத் தளிருஞ் செய்ய தாமரை மலரு மல்கி
விழைவுறு வனமென் றெண்ணி விசித்தபொற் கவசம் போ [ன்ற.

இ-ள். சுழி - சுழியை, கொள் - கொண்ட, வாம்-தாவாநின்ற, பரி - குதிரையிலிருந்து, இழிந்து - இறங்கி, துன்னலர் - பகைவரது, மௌலி - மகுடத்தை, தேய்க்கும் - தேய்க்கின்ற, கழல்களில் - அடிகளிலே, சேர்த்த - தொடுக்கப்பட்ட, கழல்கள் - செருப்புகளானவை, காட்சி - காண்கைக்கு, முன் - முன்னே, வெருவி - அஞ்சி, தோற்ற - தோற்றுப்போன, தழல் - தீயினது, நிறம் - நிறத்தையுடைய, தளிரும் - தளிர்களும், செய்ய தாமரை மலரும் - செந்தாமரை மலர்களும், மல்கி - (மீண்டும்) பெருக்கமடைந்து, விழைவுறு (அவற்றாலே தமக்கரணமாக) விரும்பப்பட்ட, வனம் என்று பொழிலென்று, நீரென்று, எண்ணி - ஆலோசித்து, விசித்த (அவ்வடிகளாற்) போர்த்துக் கொள்ளப்பட்ட, பொன் - பொன்மயமாகிய, கவசம் - கவசங்களை, போன்ற - ஒத்திருந்தன, எ - று.

க-து. கால்களிலணிந்த செருப்புக்கள் கவசங்களை ஒத்திருந்தன என்பதாம்.

சுழி - கழுத்திலுள்ளது, அதற்குத் தேவமணி யென்று பெயர். வாவும் என்பது வாம் எனத் தொகுத்தலாயிற்று. தோற்றவர் வனத்தை யடைவராதலால் அரசனடிகளுக்குத் தோற்ற தளிர்களுக்குந் தாமரை மலர்களுக்கும் வனவாசங் கூறப்பட்டது. 'தழனிறத் தளிர்' என்றதனாலே மாந்தளிர் அசோகந் தளிரென்க. தோற்றொளித்தாரோடு பொருதற்குச் செல்லல் அறநிலைப்போ ரன்றேயெனின், அவர் தோற்ற நிலையினின்று மீண்டும் பெருக்கமடைந்திருப்பராயிற் பொருதல் அறநிலைப் போரேயாம். அவற்றிற்குப் பெருக்கமாவது-நிலவளத்தாலு நீர்வளத்தாலுஞ் செழுமையு மொளியுங் கொண்டிருத்தலாம். வனம் - சோலையும் நீரும்: "வனமேநீர் மிகுதிகாடு வளர்சோலை" (ஆதிப்பொருணிகண்டு) என்பதனாலறிக. [அக்கழல்களை அப்படிப்பட்ட கவசங்களாகக் குறித்தலாலே பொருட்டற்குறிப்பணி.] (உ௪)

[இது முதலியவற்றால் வனங் காண்கின்றமை
சொல்லப்படுகின்றது.]

வயிரியர் பாடற் றீந்தேன் செவிப்புலத் தினிது மாந்திக்
கயிரவ மனைய வாயார் கவரிகா லசைப்பக் காமப்

பயிரெனப் படரு மாதர் வெள்ளடைப் பாகு நல்கச்
செயிர றுவனங் காப் பாளர் செறிவளங் காட்டக் கண்டான்.

இ-ள். வயிரியர் - பாடகரது, பாடல் - பாடலாகிய, தீந்தேன்- மதுரத்தேனை, செவிபுலத்து-செவியறிவாகிய வாயினாலே, இனிது - இனிதாக, மாந்தி - குடித்து, கயிரவம் அனைய - செவ்வல்லி மலர் போலும், வாயார் - வாயையுடைய மாதர்கள், கவரி-சாமரத்தினாலே, கால் - வாயுவை, அசைப்ப - எழுப்பவும், காமப்பயிர் என - மன்மத னது பயிர்போல, படரும் - உடன் செல்கின்ற, மாதர் - மாதரான வர், வெள் அடை - வெற்றிலைச் சுருளையும், பாகும்-பாக்குப்பிளவை யும், நல்க - கொடுக்கவும், செயிர் அறு-குற்றமற்ற, வனம்-வனத்தை, காப்பாளர் - காப்பவர், செறி - நெருங்கிய, வளம் - (சோலை) வள த்தை, காட்ட - காண்பிக்க, கண்டான்-(அரசன்) பார்த்தான், எ-று.

க-து. காவலாளர் வனவளப்பத்தைக் காட்ட நளன் கண்டான் என்பதாம்.

காமப்பயிரில் நிலைமொழியீறு கெட்டது, ஆசீவகப்பள்ளியிற் போல; அது காளையர்க்கு இன்பப் பயன் விளைவித்தற்குக் காமனால் வளர்க்கப்பட்ட பயிரென்க. வனபாலகரைக் கொண்டே வனச்சிறப்பு களை முறையிற் பார்க்க வேண்டுதலாலே 'காட்டக் கண்டான்' என்றார். (உரு)

கோங்கிள முலைக டாங்கிக் கொடியிடை நுடங்கக் கூவு
மாங்குயிற் கிளவி தன்னால் வருகென முகமன் கூறித்
தேங்கமழ் வனமான் புன்னைப் பூம்பொரி சிதறிச் செவ்வி[ன்.
தாங்குமென் றளிர்க்கை தன்னாற் கனிதரத் தகவிற் கண்டா

இ-ள். தேம் - பரிமளமானது, கமழ் - (தன்கண்)மணக்கின்ற, வனமான் - அவ்வனமாகிய மங்கையானவள், கோங்கு - கோங்கரும் புகளாகிய, இளமுலைகள் - இளமை பொருந்திய முலைகளை, தாங்கி- சுமந்து, கொடி - பூங்கொடியாகிய, இடை - இடையானது, நுட ங்க - அசைய, கூவும் - கூவுகின்ற, மா-மாமரத்திலிருக்கின்ற, குயில்- கோகிலத்தினது, கிளவிதன்னால் - இசையினாலே, வருகென - (அர சனே) வாவென்று, முகமன் - இன்சொல்லை, கூறி - சொல்லி, புன்னை - புன்னையினுடைய, பூ - மலர்களாகிய, பொரி - பொரி களை, சிதறி - இறைத்து, செவ்வி - அழகை, தாங்கு - தாங்கிய, மெல் தளிர் - மெல்லிய தளிராகிய, கை தன்னால் - கையினாலே,

கனி – பழத்தை, தர – (தனக்குக்) கொடுக்க, தகவின் – தகுதியாக, கண்டான் – (அரசன்) பார்த்தான், எ – று.

க – து. வனமென்னும்பெண் கனிகொடுக்க நளன் கண்டான் என்பதாம்.

தன்வரவைக் கண்டவளவிலே முலைகளின் பாரத்தைச் சுமந்து இடை யசையாநிற்க அன்பிற் கடையாளமாக நல்வார்த்தை சொல்லி மங்களத்தின்பொருட்டுப் பொரி யிறைத்துக் காணிக்கையாகக் கனி கொடுத்துக் காண்கிற வொரு சுமங்கலைபோல, வனமானது கோங் கரும்புகளைத்தாங்கிக் கொடியசையாநிற்பக்குயிற்சொற்களைக்காட்டிப் புன்னைப் பூக்களை யிறைத்துத் தளிரிடைத் தொங்குகிற கனியைத் தருகின்றதுபோலத் தோன்ற அரசன் காணுதற்குரிய தகுதியின் படியே கண்டானென்க. [வன முதலியவற்றில் மான் முதலியவற் றின் அபேதத்தை யாரோபித்தலாலே உருவகவணி.] (உசு)

[இதுமுதற் பத்துப் பாட்டுகளால் வனத்தின் முல்லையாதிகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

அரும்பிள நகையிற் றோன்ற வழிநறு வெயர்விற் றோன்றச், சுரும்பிமிர் முல்லை வீசுந் தென்றலாற் றுவளுந் தோற்றம், விரும்பினர்ப் புணர்ந்த மாதர் மெய்யெழில் காட் டக் கண்டு, பொருந்தலர் வணங்கும் வேலாற் கச்சமு மகி ழும் பூத்த.

இ – ள். அரும்பு – அரும்புகளின் (ஒளி), இள நகையின் – சிறு நகைபோல, தோன்ற – விளங்கவும், அழி நறு – சிதறியதேன் (துளி கள்), வெயர்வின் – வெயர்வுபோல, தோன்ற – தோன்றவும், வீசும் – எறிகின்ற, தென்றலால் – தென்காற்றால், துவளும் – அசைகின்ற, தோற்றம் – தோற்றத்தையுடைய, சுரும்பு – வண்டுகள், இமிர் – ஒலிக்கப்பெற்ற, முல்லை – முல்லைக் கொடியானது, விரும்பினர் – விரும்பிய ஆடவரை, புணர்ந்த – கூடிய, மாதர் – மாதருடைய, மெய் – வடிவங்களது, எழில் – அழகை, காட்ட – காண்பிக்க, கண்டு – (அதனைப்) பார்த்து, பொருந்தலர் – பகைவரானவர், வணங்கும் – தொழப்பெறுகின்ற, வேலாற்கு – வேலையுடைய அரசன்கண், அச்சமும் – அஞ்சுதலும், மகிழும் – மகிழ்தலும், பூத்த – உண்டாயின, எ – று.

க – து. முல்லைக் கொடியானது புணர்ந்த மாதரைப்போலுங் குறிகள் காட்ட நளனுக்கு அச்சமு மகிழும் உண்டாயின.

அரும்பு அதனெளியை யுணர்த்தலால் ஆகுபெயர். நகையின், வெயர்வின் என்பவற்றில் இன் ஐந்தாவதன் ஒப்புப் பொருளது. புணர்ந்த மங்கையர்க்கு உடனே பிறரைக் காணும்பொழுது தமது புணர்ச்சி நிகழ்ந்தமை குறிகளாலே வெளிப்படுமென்னும் நாணத்தாற் புன்சிரிப்பும், புணர்ச்சி வருத்தத்தால் வெயர்வும், உடம்பு துவளுதலும், வண்டிசைபோன்ற சொல்லிசை பிறத்தலுமுளவாமென்க. தனது காமத்தை யெழுப்புதலால் அச்சமும் தன்காதலிபோலுதலால் மகிழும் அரசன் அடைந்தனன். அச்சமு மகிழும் அகத்தியும் வருளமும் பூத்தனவென்னும் பொருளுங் குறிக்கப்படுகின்றது. [முல்லைக்கொடி தன் செய்கையினுலே புணர்ந்தமகளிர் வடிவத்தழகைக் காட்டுதலாலே நற்பொருட் காட்சியணியாகும், இதற்கு இளநகையிற் றோன்றுகை முதலிய உவமையங்கம்.] (உஎ)

விரும்பிய கணவர்க் கண்டார் மெய்புள குற்ற வென்ன,
வரும்புகண் டகத்த வாகு மாதுளை பருவத் தன்றித், தரும்
புகை யிடையிற் றோன்றுங் கனிதம யந்தி கொங்கைக், குரு
ம்பையை நிகர்ப்பப் பொன்னங் குடந்தவ முயல்வ போன்ற.

இ - ள். விரும்பிய - (தம்மால்) விரும்பப்பட்ட, கணவர் - நாயகரை, கண்டார் - கண்ட மகளிருடைய, புளகுற்ற - மயிர்க்குச்சுற்ற, மெய் என்ன - உடம்புகள்போல, அரும்பு - அரும்பிய, கண்டகத்த ஆகு - முள்ளுகளை யுடையனவாகிய, மாதுளை - மாதுளை மரங்களில், பருவத்தன்றி - பழுத்தற்குரிய காலமல்லாத காலத்திலே, தரும் - (பழுக்கத்) தரப்படுகின்ற, புகை - புகையினது, இடை - நடுவிலே, தோன்றும் - தோன்றுநின்ற, கனி - கனிகளானவை, தமயந்தி - தமயந்தியினுடைய, கொங்கை - முலைகளாகிய, குரும்பையை - குரும்பைகளை, நிகர்ப்ப - ஒப்படைய, தவம் - தவத்தை, முயல்வ - செய்கின்றனவாகிய, பொன்னங்குடம் - பொற்குடங்களை, போன்ற - ஒத்துத் தோன்றின (அரசனுக்கு), எ - று.

க - து. மாதுளங் கனிகளானவை தமயந்தி முலைகளை ஒப்புறத் தவம்பண்ணும் பொற்குடங்களை ஒத்திருந்தன என்பதாம்.

விரும்பிய கணவரைக்கண்ட மகளிர் மெய்யிற் புளகரும்பல் உவகையைப்பற்றி யுண்டாவது. புளகுறல் - மயிர் சிலிர்த்தல். மாதுளைக் குறித்தல்லாத வேறு பருவத்திலே அதிற் பயனுண்டாக்க வேண்டி ஆட்டுத்தோலூற னீர்ப்பாய்ச்சி அதன் மயிர்ப்புகை யூட்டப்படுமென்க. மாதுளங் கனிகள் தமயந்தி முலைகளின் சாரூப்பியத்தைப் பெறுதற்குப் புகைத் தீயிடைத் தலைகீழாக நின்று தவஞ் செய்யும்

பொற்குடம்போன் றிருந்தன வென்க; பெரும்பயன் வேண்டினோர் உக்கிரதவஞ் செய்வரென்க. [அம்மா துளங் கனிகளை அப்படிப்பட்ட பொற் குடங்களாகக் குறித்தலாலே தற்குறிப்பணி.] (உஅ)

தண்ணறுக் கொழிக்குஞ் செய்ய சம்பக நனைகள் வேனி, லண்ணல்பா சறைவி ளக்கம் போன்றன வவைமேல் வண்டு, நண்ணிய தூமம் போன்று நசையுநர்ச் சலபஞ் கொன்றீட், டெண்ணரும் பழிகள் போன்றுந் தனித்தனி யிருந்த மாதோ.

இ - ள். தண் - குளிர்ச்சி பொருந்திய, நறு - தேனை, கொழிக்கும் - சொரிகின்ற, செய்ய - சிவப்பாகிய, சம்பகம் - சம்பகத்தினுடைய, நனைகள் - அரும்புகளானவை, வேனில் - வசந்தகாலத்திற்குரிய, அண்ணல் - தலைவனது, பாசறை - (சோலையாகிய) படைவீட்டினுள்ளே (வைக்கப்பட்ட), விளக்கம் - தீபங்களை, போன்றன- ஒத்திருந்தன; அவை மேல் - அவ்வரும்புகளின் மேலே, வண்டு - (விழுகின்ற) வண்டுகளானவை, நண்ணிய - பொருந்திய, தூமம் - புகையை, போன்றும் - ஒத்தும், நசையுநர் - காமிகளாகிய, சலபம் - விட்டில்களை, கொன்று - கொலை செய்து, ஈட்டு - (அவ்விளக்குகளாலே) சம்பாதிக்கப்பட்ட, எண் அரு - எண்ணுதற்கரிய, பழிகள் - பாவங்களை, போன்றும் - ஒத்தும், தனித்தனி - வேறுவேறாக, இருந்த - இருந்தன (அரசனுக்கு), எ - று.

க - து. சண்பகத் தரும்புகளானவை தீபங்களை ஒத்திருந்தன; அவ்வரும்புகளின் மேல் மொய்த்த வண்டுகளானவை புகைகளையும் மன்மத பாணங்களையும் ஒத்திருந்தன என்பதாம்.

"சண்பகமும் வேங்கையும் வண்டுணு மலர்மரம்" (திவாகரம் - மரப்பெயர்த் தொகுதி) எனவிருக்கச் சண்பகத்தின்மேல் வண்டு சேர்ந்ததாகச் சொல்லிய தென்னையெனின், அதற்கு வண்டு சேர்ந்து தேனையுண்டா லிறந்துபடுமென்பதே கருத்தாதலின் மற்றை மலர் போல அதன் கண்ணுஞ் சேருமென்க. மன்மதனுக்குப் படைவீடு சோலையே யாதலின் 'வேனிலண்ணல் பாசறை' என்றார்; "தொடையிலஞ்சி மஞ்ச ளிளஞ்சோலை படைவீடு" (அரதனச்சுருக்கம்) என்பதனுலறிக. 'நசையுநர் துயரவேளீட் டெண்ணரும் பகழி போன்றும்' எனப் பாடமுமுண்டு. முதனூலோடு மாறுபட்டும் வண்டுகள் அம்புகள் போன்று அவற்றின்மே லிருத்தற் கியைபின்றி நிற்றல் காண்க. பழியைக் கரிதென்பது செய்யுள்வழக்கு. [சம்பக வரும்புகளை மன்

மதன் படைவீட்டு விளக்குகளாகவும், அவ்வரும்புகளின்மேல் மொய்த்த வண்டுகளை அவ்விளக்குகளின்மேற் றங்கிய புகைகளாகவும், அப்படிப்பட்ட பழிகளாகவுங் குறித்தலாலே தற்குறிப்பணியாகும். பழியாகக் குறித்தற்கு நகையுநர்ச் சலபமென்னும் உருவகம் அங்கம்.]

பூங்கழைக் குமர னேவாற் புலம்புகொண் டிளைவார் துன்ப
மாங்குயி லுரைப்ப மூசும் வரியளி முரல்வ வாசத்
தேங்கமழ் பொழில்வாய் விட்டுக் கேட்பது சிவணக் கூறு
மாங்கதற் கன்றி லோதை யதிசயித் தரற்றல் போன்ற.

இ - ள். பூ - அழகிய, கழை - கருப்புவில்லையுடைய, குமரன் - மன்மதனது, ஏவால் - அம்பினாலே, புலம்பு-துன்பத்தை, கொண்டு- அடைந்து, இளைவார் - இளைக்கின்றவரது, துன்பம் - துன்பத்தை, மா - மாவிலுள்ள, குயில் - குயில்கள், உரைப்ப - சொல்லாநிற்க, வரி முரல்வ - இசை பாடுவனவாகிய, மூசும் - மொய்க்கின்ற, அளி - வண்டுகளுக்கு, வாசம் - இருப்பிடமாகிய, தேம் - தேனினால், கமழ்- மணக்கின்ற, பொழில் - சோலையானது, வாய்விட்டு - உங்கொடுத்து, கேட்பது சிவண - கேட்பதுபோன் றிருக்க, கூறும் - சொல்லப்படுகின்ற, ஆங்கு - அவ்விடத்தே, அதற்கு - அச்செய்திக்கு, அன்றில் - அன்றிற் பறவைகளுடைய, ஓதை - ஒலிகளானவை, அதிசயித்து - ஆச்சரியப்பட்டு, அரற்றல்போன்ற - கூவுதல்கள் போன்றிருந்தன (அரசனுக்கு), எ - று.

க - து. காமிகள் துன்பத்தைக் குயில்கள் சொல்ல, வண்டுகள் பாடுஞ் சோலை கேட்பதுபோலுமிருந்தன; அன்றில்களின் சத்தங்கள் அதிசயித் தார்ப்பனபோலு மிருந்தன என்பதாம்.

குயிலுரைப்ப வென்றாரேனுங் குயிலினது கூவுதல் அதனை துரைத்தல்போலத் தோன்றாநிற்ப வென்பது பொருளாகக் கொள்க. ஏ - அம்பு. இடைவிடாது நிகழும் வண்டொலி இடைவிட்டு நிகழும் உங்கொடுத்தல் போலுதற்கியையுமோவெனின், அவ்வண்டினது சிற்றொலி குயிலினது பேரொலியில் இடையிடை மறைந்து அங்ஙனந் தோன்றுதலா லியையுமென்க. திட்பமில்லாத கரும்புவில்லையுடையவனம்பால் வருந்துதல் ஆச்சரியத்திற்குக் காரணமா மென்க. [அக் குயில்களைச் சொல்வனவாகவும், சோலையைக் கேட்பதாகவும், அன்றில்களி னொலிகளை அவற்றி னதிசய வொலிகளாகவுங் குறித்தலாலே தற்குறிப்பணி.] (௩௦)

வெண்மதிக் கவிகை வேந்தன் விழாவயர் வனமான் பைந்தாட், டண்மலர்க் காந்த ளங்கை மறித்தளி ததைவ

போன்ற, வொண்மலர்ப் பொதுளுந் தேமா தளிர்விர லசைத்துள் ளூறுங், கண்ணுகர் வண்டி னார்ப்பாற் காமுக ர்ச் சினப்ப போன்ற.

இ - ள். வெண்மதி - வெள்ளிய சந்திரனை, கவிகை - குடை யாகவுடைய, வேந்தன் - மன்மதனது, விழா - உற்சவத்தை, அயர் - செய்தற்கிடமாகிய, வனமான் - வனமாகிய மங்கையை, காந்தள் - காந்தள்களானவை, பை தாள் - பசிய காம்பையுடைய, தண்மலர் - தண்ணிய மலர்களாகிய, அம் கை - அழகிய கைகளாலே, மறித்து - (அச்செய்தியைக் கேளேலென்று) தடுத்து; அளி - கருணையினாலே, ததைவ போன்ற - நிறைகின்றன போன்றன; ஒள் மலர் - ஒள்ளிய மலர்களாலே, பொதுளும் - நிறைந்திருக்கின்ற, தேமா - தேமா மரங்களானவை, தளிர் - தளிராகிய, விரல் - விரலை, அசைத்து - ஆட்டி, உள்ளூறும் - உள்ளொழுகுகின்ற, கள் - தேனை, நுகர் - உண்கின்ற, வண்டின் - வண்டுகளது, ஆர்ப்பால் - ஒலியினாலே, காமுகர் - காமிகளை, சினப்ப போன்ற-(உங்காரஞ் செய்து) கோபிக் கின்றன போன்றன (அரசனுக்கு), எ - று.

க - து. காந்தள்களானவை வனமென்னும் பெண்ணை மல ரென்னுங் கரங்களாலே அக்குயில்கள் சொற்களைக் கேளாதே என்று தடுத்துக் கிருபை நிறைந்தனபோலு மிருந்தன; மாமரங்களானவை தளிரென்னும் விரலை அசைத்து வண்டுக ளார்ப்பால் காமுகரைக் கோவிப்பனபோலு மிருந்தன என்பதாம்.

மன்மதனது விழாவாவது-ஆடவரு மகளிருஞ் சென்று சோலை யின்கண்ணே பூக்கொய்தும் புனல் விளையாடியுங் காமவின்பத்தை யனுபவித்தலாம். அல்லது மன்மதனுக் கெடுப்பதோர் சிறப்பெனினு மாம். இன்னும் வெண்மதிபோலுங் கவிகையுடைய நளராசனது விழாவெனினு மமையும். முன்பாட்டில் குயில் சொல்ல வனத்தாற் கேட்கப்பட்ட செய்தி கொடிதாதலின் அவ்வனத்தை நோக்கி நீ யதைக் கேளற்க வெனக் காந்தள் மலர்க் கைகளாலே விலக்கின வென்க. அளி ததைதற்குச் சிலேடையாற் கருணை கூர்தலென்றும் வண்டுக ணிறைதலென்றும் பொருள் கொள்க. இக்காந்தள் விலக்கு தலை யிதன் முதனூலிற் சொல்லப்பட்டபடியே முன் பாட்டிலே யட க்காமல் வேறு முடிபு செய்தற்கு ஏது வென்னையெனின், அம்முத னூலு ளில்லாத அன்றிலி னதிசயித் தரற்றலை அதிலே மிகுத்துச் சொல்லியவதனு லிதனை வேறு முடிபு செய்தார்போலும். இப்பாட் டிலே காந்தளது தோற்றமும் மாவினது தோற்றமுஞ் சொல்லப்பட்

டன. [காந்தட் செடிகளை அங்ஙனந் தடுப்பனவாகவும், மாமரங்களை அப்படி வெருட்டுவனவாகவுங் குறித்தலாலே தற்குறிப்பணியாகும்.]

பொன்னிதழ்ச் சண்ப கத்திற் புரிமுறுக் கவிழத் தூங்கி
யின்னறுந் துளியி னோடு மகரந்த மிறைப்ப வூதித்
தென்னிடுங் களிகொள் வண்டு சேர்ந்தமை காம வெந்நோய்
துன்னினர்க் கின்னல் காட்டுந் தூமகே துவினைப் போன்ற.

இ - ள். புரி - கட்டினது, முறுக்கு - முறுக்கானது, அவிழ - விரிய, தூங்கி - ஆடி, இன் - இனிதாகிய, நறு - தேனினது, துளியினோடு - துளியுடனே, மகரந்தம் - மகரந்தப்பொடியை, இறைப்ப - உதிர்க்க, ஊதி - (வாயினால்) ஊதி, தென்னிடும் - இசைபாடுகின்ற, களி கொள் - களிப்பைக் கொண்ட, வண்டு - வண்டுகளானவை, பொன் - பொன்னிறம் பொருந்திய, இதழ் - இதழ்களையுடைய, சண்பகத்தில் - சண்பகப் பூக்களிலே, சேர்ந்தமை - சேர்ந்தமையால் (அம்மலர்கள்), காமம் - காமமாகிய, வெம் நோய் - வெப்ப நோயை, துன்னினர்க்கு - அடைந்தவர்க்கு, இன்னல் - (பின்வரும்) துன்பத்தை, காட்டும் - காண்பிக்கிற, தூமகேதுவினை - வான்மீனை, போன்ற - ஒத்துத் தோன்றின (அரசனுக்கு), எ - று.

க - து. வண்டுகள் சேர்ந்த சண்பக மலர்களானவை வான்மீனை ஒத்திருந்தன என்பதாம்.

வண்டுகள் சண்பகத்திலே தேனுண்ட வளவிலே இறந்துபடுமாதலால் அப்படி ஆடியூதல் மற்றை மலர்களிலென்று கொள்க. களிப்பினாலே தம் பகைமை கருதாது சேர்ந்தன வெனினு மமையுமென்பதற்குத் 'தென்னிடுங் களிகொள் வண்டு' என்றார். சேர்தல் - மாலைபோ லொன்றன்பின் னொன்றாக வந்து வீழ்தல். தூமகேது உலகத்தார்க்குப் பெருந் துன்பத்தைச் செய்தல்போல வண்டொழுங்கோடு கூடிய சண்பகமலர் காமிகளுக்குப் பெருந்துன்பத்தைச் செய்தலாலும், வண்டொழுங்கு வால்போலவுஞ் சண்பகமலர் அதனையுடைய மீன்போலவு நிற்றலாலும் 'தூமகேதுவினைப் போலும்' என்றார். தூமகேது பின்வரும் பஞ்ச முதலியவற்றிற்கு உற்பாதமாதலாற் பெருந் துன்பத்திற் கேதுவாமென்க. உற்பாதம் - முற்குறியாகிய துர்நிமித்தம். [சண்பக மலரோடு சேர்ந்த வண்டொழுங்கை அப்படிப்பட்ட தூமகேதுவாகக் குறித்தலாலே தற்குறிப்பணி.] (௬௨)

குளிர்நறுஞ் சாந்த நாறுங் கூவிளங் கனிமுள் ளோறுண்
டொளிர்வன கணிகை மாதர் வரிமுலைக் குவமை சான்ற

தளையவிழ் பாட லத்தின் கவரிணர் சம்ப ராரி
யுளைவுற விருவர் மேலு முடற்றினப் பகழி போன்ற.

இ - ள். முள் - முள்ளினாலே, ஏறுண்டு - கிழிக்கப்பட்டு, ஒளிர்வன - விளங்குகின்றவையாகிய, குளிர் - குளிர்ச்சி பொருந்திய, நறும் சாந்தம் - நல்ல சந்தனம்போல, நாறும் - மணக்கின்ற, கூவிளம் கனி - வில்வப் பழங்களானவை, கணிகை மாதர் - பரத்தையருடைய, (சாந்தம்)-சந்தனத்தினாலே, (நாறும்) - மணக்கின்ற, வரி - நகக்குறிகளையுடைய, முலைக்கு - முலைகளுக்கு, உவமை - ஒப்புமையில், சான்ற - சிறந்தன; தளை அவிழ்-கட்டவிழ்ந்த, பாடலத்தின் - பாதிரிமரங்களுடைய, கவர் - கவர்தற்குரிய, இணர் - பூங்கொத்துகளானவை, சம்பராரி - மன்மதனானவன், உளைவுற - வருந்தும்படியாக, இருவர் மேலும் - நாயக நாயகிக ளிருவர்மேலும், உடற்று - கோபித்தற்கு (வைத்திருக்கப்பட்ட), இனப்பகழி போன்ற - அம்புக்கூட்டம் போன்றன (அரசனுக்கு), எ - று.

க - து. வில்வப் பழங்களானவை வேசைகள் முலைகளை யொப்பா யிருந்தன, பாதிரி மரங்களின் பூங்கொத்துக்களானவை மன்மத பாணங்களை யொப்பா யிருந்தன என்பதாம்.

சாந்த நாறுதல் முலைக்குங் கூட்டப்பட்டது. குலமங்கையர் முலைகளுக்கு நகக்குறி விசேடித்துச் சொல்லுதல் தகுதியன்று மாதலின் 'கணிகைமாதர் வரிமுலை' என்றார். அன்றியும் அவர் பலரையும் புணர்தலின் நகக்குறி மிக்குத்தோன்று மென்க. [அவ் வில்வக்கனிகளுக்கு அப்படிப்பட்ட கணிகைமாதர் முலைகளை யுவமித்தலா லுவமையணியாகும்.] 'இனப்பகழி' என்றதற்கு அதற் கிடமாகிய அம்பறாத்தூணியென்பதும், 'இருவர்' என்றதற்கு விரும்பிய ஆடவரும் மகளிருமென்பதுங் கருத்தாகக்கொள்க. சம்பராரி - சம்பரன் என்னும் அசுரனைக் கொன்றவனாதலால், மன்மதனுக்குச் சம்பராரி எனப் பெயர் வந்தது. "கவரிதழ் சம்ப ராரி, யுளைவுற விருவர் மேலு முடற்றிணைப் பகழி போன்ற" எனப் பாடமுமுண்டு. இருபிளப்பாகிய விதழ் அதற்கின்மையாலும், இரண்டம்புகளை யொன்றாகச் சேர்த்து இருவர்மேற் செலுத்துதல் கூடாமையாலும், இதன் முதனூன் முடிபிற்கு வேறுபடுதலாலும் பொருந்தாமை யுணர்க. [அப்பாதிரிப் பூங்கொத்துகளை அவ்வம்பறாத்தூணியாகக் குறித்தலாலே தற்குறிப்பணி.] வில்வமும் பாதிரியுங் கூறப்பட்டன. (கூ)

பாசிலை யிடையிற் பூத்த பைந்துணை ரக்கத் தூய
மாசறு நிலவு காலு மதியினை விழுங்கு நாளிற்

றேசுறு கலைக ளியாவுந் தின்றுதின் றுமிழுந் துத்திக்
காசுறு சுடிகைச் செங்கட் கருநிறப் பாந்தள் போன்ற.

இ - ள். பாசிலை - பச்சிலைகளையும், இடையில் - நடுவிலே, பூத்த - மலர்ந்த, பை துணர் - குளிர்ச்சி பொருந்திய மலர்களையும் உடைய, அகத்தி - அகத்தி மரங்களானவை, தூய - பரிசுத்தமாகிய, மாசு அறு - குற்றமற்ற, நிலவு - சந்திரிகையை, காலும் - வீசுகின்ற, மதியினை - சந்திரனை, விழுங்குநாளில் - உட்கொள்ளுகிற நாளிலே, தேசு உறு-காந்தி பொருந்திய, கலைகள் யாவும் - கலைகளை யெல்லாம், தின்று தின்று - ஒவ்வொரு கலையாகத் தின்று, உமிழும் - உமிழ்ந்து கொண் டிருக்கின்ற, துத்தி - படப்புள்ளிகளையும், காசு உறு - இரத்தினம் பொருந்திய, சுடிகை - உச்சியையும், செங்கண் - செய்ய கண்களையும், கரு நிறம் - கரிய நிறத்தையும் உடைய, பாந்தள் போன்ற-பாம்பாகிய இராகு போன்றன (அரசனுக்கு), எ - று.

க - து. அகத்தி மரங்களானவை கரும்பாம்பிற் கொப்பா யிருந்தன என்பதாம்.

துணர்-மலரென்பது, "போதுவீ துணர்மலர்" (திவாகரம்-மரப் பெயர்த்தொகுதி) இதனாலறிக. 'தூயமாசறு நிலவு' என்னு மடையை அம்மலர்க்குங் கூட்டுக. மதியினை விழுங்குநாள்-அபரபக்ஷத்துப் பதினைந்து நாட்களுமென்க. அவற்றுள்ளே சந்திரனுக்குத் தினம் ஒவ்வொருகலை குறைதலை இராகுவினாலே அங்ஙனந் தின்னப்பட்டுக் குறைதலாகக் கற்பித்து அப்பொருண்மை தோன்றத் 'தின்றுதின்று' என்றார். அன்றியும் சந்திர கிரகணகால மெனினுமாம். தேவநாகமாகிய விராகுவென்பது தோன்றற்குக் 'காசுறு சுடிகைச் செங்கண்' என்னு மடை கொடுத்தார்போலும். இராகு கரிதென்பது, "இராகுக்கோள் கரும்பாம்பு" (திவாகரம்-தெய்வப்பெயர்த் தொகுதி) என்பதனாலறிக. கருமைக்கும் பசுமைக்கும் மிக்கவேற்றுமை தோன்றாமையிற் பச்சென்ற தழைகளாற் சூழப்பட்ட அகத்தி கரிய விராகு போலுதலும், அதன் மலர்கள் அவ்விராகுவால் மென்றுமிழப்பட்ட சந்திர கண்டங்கள் போலுதலுங் கொள்க. [அவ்வகத்தியை அவ்விராகுவாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம்.] (௩௪)

கலிவிருத்தம்.

விண்புகு வியன்சினைத் தருக்கண் மேவிய
தண்கனிப் பொறையினாற் றலைவ ணங்கின
தெண்கடற் கலைபுனை செல்வ மாநிலப்
பெண்கொடி தாடொழும் பெற்றி போன்றவே.

இ - ள். மேவிய - விரும்பப்பட்ட, தண் - தண்ணிய, கனி - பழங்களது, பொறையினால் - பாரத்தினாலே, தலை - தலைகள், வணங்கின - வளைந்தவையாகிய, விண் - ஆகாசத்தில், புகு - நுழைந்த, வியன் - விசாலமாகிய, சினை - கிளைகளையுடைய, தருக்கள் - மரங்களானவை, தெள் - தெள்ளிய, கடல் - கடலாகிய, கலை - ஆடையை, புனை - உடுத்த, செல்வம் - செல்வத்தையுடைய, மா - பெரிய, நிலப்பெண்கொடி - பூமிதேவியினது, தாள் - அடியை, தொழும் - வணங்காநின்ற, பெற்றி போன்ற - தன்மை யுடையன போன்றன (அரசனுக்கு), எ - று.

க - து. மரங்களானவை பூமிதேவினடியை வணங்குகின்றன போலு மிருந்தன என்பதாம்.

பெற்றியன வென்பது இறுதிநிலை கெட்டது. தம்மைப்பெற்று வளர்த்த தாயென்று வணங்குதல் கொள்க. [அவ்வணங்கிய மரங்களைப் பூமிதேவியைத் தொழுவனவாகக் குறித்தலாலே தற்குறிப் பணியாம்.] (கூ)

அளிமுர லணிமல ரசோகம் பூத்தன
தெளிவரு காரணப் பெயரின் செவ்வியா
லெளிவரு காமுகர்க் கிரங்கி வேணறுந்
தளிர்மறை யழற்கணை தரித்த போன்றவே.

இ - ள். பூத்தன - மலர்ந்தனவாகிய, அளி - வண்டுகளானவை, முரல் - ஒலிக்கப்பெற்ற, அணி - அழகு பொருந்திய, மலர் - மலர்களையுடைய, அசோகம் - அசோக மரங்களானவை, தெளிவரு - தெளியவந்த, காரணப் பெயரின் - காரணப் பெயரினது, செவ்வியால் - அழகினாலே, எளி - எளிமையோடு, வரு - (தம்மிடத்திலே) வருகின்ற, காமுகர்க்கு - காமிகளுக்கு, இரங்கி - உள்ளிரங்கி, வேள் - மன்மதனது, அழல் கணை - நெருப்பம்புகளை, நறுந்தளிர்-நல்ல தளிர்களிலே, மறை - மறைத்து, தரித்த போன்ற - தரித்திருக்கின்றவை போன்றன (அரசனுக்கு), எ - று.

க - து. அசோக மரங்களானவை அக்கினிக் கணைகளைத் தரித்தல்போலு மிருக்கின்றன என்பதாம்.

அசோகம்-சோகமில்லாததாம்; சோகமில்லாத தாகையால் எம்மையுஞ் சோக மில்லாதவ ராக்குமென்று சரண மடைகின்றாரென்க. தமக் கடைக்கல மாயினோரைக் காவாதுவிடல் மகாபாதக மாதலால் இரங்கின வென்க. அந்நெருப்பம்புகளை யஞ்சினோர்க்கு அவற்றை

வெளிப்படுத்தாம லிருக்கை காத்தற்கு உபாயமென்பது கருத்து. மலருக்குச் சொல்லப்பட்ட அளிபோல அழற்கணைக்குப் புகை குறிக்கப்படுகின்றது. அசோகமலர் அழல்போற் சிவந்து தோன்றலின் 'அழற்கணை' என்றார். மறைத்தென்பது மறையென வீறுகெட்டு நின்றது; "வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" (திருமுருகாற்றுப் படை) என்பதில் வரிந்தென்பது போல. [அசோகமென்னும் பெயர்க்கு வேறுபொருளைக் கற்பித்தலாற் பிரிநிலை நவிற்சியணியாம், இது அங்கம்; அவ்வசோகத்தை அங்ஙனந் தரித்தனவாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம், இது அங்கி.] (கசு)

[இதுமுதனான்கு பாட்டுகளால் தாழம்பூவை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

மணங்கமழ் முடவெண் டாழை மலரின்வார் நறவ மாந்திக், கணங்கொள்வண் டினமுந் தேனுங் களித்திடை வதிந்த தோற்ற, மணங்கர வசைத்தோ னீத்த வரும்பழி சுமந்த தென்ன, நிணங்கமழ் வேலான் கண்டு நெஞ்சுற விழித்துச் சொல்வான்.

இ - ள். நிணம் - (பகைவரது) கொழுப்பானது, கமழ் - நாறுதற்கிடமாகிய, வேலான் - வேலை யுடையவன், முடம் - முடமாகிய, தாழை - தாழையினது, மணம் கமழ் - மணக்கின்ற, வெள் - வெண்மை பொருந்திய, மலரின் - பூவினின்றும், வார் - ஒழுகாநின்ற, நறவம் - தேனை, மாந்தி - குடித்து, கணம் - கூட்டத்தை, கொள் - கொண்ட, வண்டு-கருவண்டுகளின், இனமும்-சாதிகளும், தேனும் - தேன் வண்டுகளும், களித்து - மகிழ்ந்து, இடை - (அதன்) நடுவில், வதிந்த-தங்கிய, தோற்றம் - தோற்றத்தை, கண்டு - பார்த்து, அணங்கர வசைத்தோன் - பரமசிவனால், நீத்த - தள்ளிவிடப்பட்ட, அரும்பழி - நீக்கக்கூடாத பழியை, சுமந்தது என்ன - (இம்மலர்) சுமந்ததென்று, நெஞ்சுற - நினைப்புண்டாக, இழித்து - இகழ்ந்து, சொல்வான் - கூறுவான், எ - று.

க - து. நளமஹாராஜன் தாழைமலரைப் பார்த்து இகழ்ந்து சொல்வான் என்பதாம்.

."கேட்குந போலவுங் கிளக்குந போலவு, மியங்குந போலவு மியற்றுந போலவு, மஃறிணை மருங்கினு மறையப் படுமே" (நன்

நூல்-பொதுவியல்-௩௪) இவ்விதியால் தாழையொடு கூறினனென்க. நான்முகன் அன்னவடிவங்கொண்டு நெருப்பு மலையாய் நின்ற பரமசிவனது திருமுடியை நெடுங்காலந் தேடிக்கண்டிலாது மீள்கையில் அம்முடியினின்றும் வீழ்கின்ற தாழம்பூவைக் கண்டு தான் கண்டானெனப் பொய்க்கரி கூறுதற்கு உடன்படுத்த அதற்கு உடன்படுதலால் அம்மலர் பரமசிவனாற் கோபித்து இன்றுமுதலெனக் காகாயென் றிகழ்ந்து தள்ளப்பட்டதென்பது புராணகதை. கரி - சாக்ஷி. சிறந்தோனுக்குப் பெரியோரால் தள்ளப்படுதலே பழிவிளைக்கு மென்பது கருத்து. [அத்தாழம்பூவை அப்பழி சுமந்ததாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம்.] (௬௭)

நாகிள வரிவண் டுண்டு நறவுகொப் புளிக்குங் கை
தாய், பாகுறு கழைவே ளெய்யிற் பறிப்பரி தாயுள் ளாவி,
யேகமெய் தளர்ந்தோர் நெஞ்ச மீர்ந்திடு முள்ளம் பென்றே
வாகையின் மதனைச் செற்றோன் வனைந்திடா திகழ்ந்த
வாறே.

இ - ள். நாகிள - இளமை பொருந்திய, வரி - இசைபாடுகின்ற, வண்டு - வண்டுகளானவை, நறவு - தேனை, உண்டு - குடித்து, கொப்புளிக்கும் - உமிழ்தற்கிடமான, கைதாய் - தாழம்பூவே, பாகு- சாறானது, உறு - பொருந்திய, கழை - கருப்புவில்லினால், வேள் - மன்மதனானவன், எய்யின் - எய்தால், பறிப்பரிதாய் - பிடுங்கப்படாததாகி, உள் - உள்ளிருந்து, ஆவி - உயிரானது, ஏக - நீங்க, மெய் - உடம்பு, தளர்ந்தோர் - தளர்ந்த விரகிகளுடைய, நெஞ்சம் - மனத்தை, ஈர்ந்திடும் - அறுக்கின்ற, முள்ளம்பென்றே - முள்ளம்பென்று (உன் கொடுமையை) நினைத்ததே, வாகை - வெற்றிபொருந்திய, வில் - வில்லையுடைய, மதனை - மன்மதனை, செற்றோன் - வென்ற பரமசிவன், வனைந்திடாது - சூடாமல், இகழ்ந்த-(உன்னை) இகழ்ந்ததற்கு, ஆறு - காரணமாம், எ - று.

க - து. தாழம்பூவே! நீ முள்ளம்பென்று சிவன் அணியாதிகழ்ந்தான் என்று நளன் சொன்னான் என்பதாம்.

நாகிள வென்பன ஒருபொருள் குறித்த விரு சொற்கள். தாழம்பூவினுடைய நடுமுட்களும் இருபுடை முட்களும் எதிரிட்டடுக்கி நிற்றலால் அதனடி நுனிகளில் யாதொன்றைப்பற்றி யிழுக்கினும் அறுக்குமாதலால் 'பறிப்பரிதாய்' என்றார். கைதை - தாழை, இது இதன் சினையாகிய பூவிற்காயினமையால் முதலாகுபெயர்.

வேள்-விருப்பம், இது விருப்பத்தை யுண்டாக்குவானாகிய மன்மதனுக் காயினமையால் கருவியாகுபெயர். 'வாகையின் மதனைச்செற்றோன்' என்றமையாலே தன் பகைவனுக்கு உபகரணமா யிருப்பதே பொறுக்கக் கூடாததா யிருக்குமாயிற் கொல்வதாயுமிருந்தாற் சொல்வானேன் என்றதாயிற்று. [கடவுளிகழ்தற்கு ஏதுவாகாத அப்படிப் பட்ட முள்ளம்பா யிருக்கையை ஏதுவாகக் குறித்தலாலே ஏதுத்தற் குறிப்பணியாம்.] (௩அ)

பசியநெட் டிலைய தாழை மடலெனு மீர்வாள் பற்றி
வசையறு காமத் தச்சன் மையலா ம் வளியி னாளு
மசைவொடு தளர்ந்து கல்வி யருந்தழை யுகுத்து நிற்கு
நசையுநர் நெஞ்சத் தாரு நடுவுறப் போழு மாதோ.

இ - ள். பசிய - பசுமை பொருந்திய, நெடு - நெடிய, இலைய- இலைகளை யுடையனவாகிய, தாழை - தாழம்பூவே, மடல் எனும் - (உன்) இதழென்கிற, ஈர்வாள் - பல்வாளை, பற்றி - பிடித்து, வசை அறு - பழியற்ற, காமத்தச்சன் - மன்மதனாகிய தச்சனானவன், மையலாம் - மயக்கமாகிய, வளியின் - காற்றினாலே, நாளும் - பலநாளும், அசைவொடு - அசைதலுடனே, தளர்ந்து - வாடி, கல்வி - கல்வி யறிவாகிய, அரு தழை - அரிய தழையை, உகுத்து - உதிர்த்து, நிற்கும் - நிற்கின்ற, நசையுநர் - காமிகளுடைய, நெஞ்சம் - மனமாகிய, தாரு - (உலர்ந்த) மரத்தை, நடு - நடுவிலே, உற - பொருந்த, போழும் - பிளப்பான், எ - று.

க - து. தாழம்பூவே! உன்னிதழென்னும் வாளாலே மன்மதனாகிய தச்சன் காமிகளுடைய நெஞ்சமாகிய மரத்தை யறுப்பான் என்று நளன் சொன்னான் என்பதாம்.

தாழை - அண்மைவிளி. காமத்தச்சனென்பதில் நிலைமொழியீறு கெட்டது. காமமேலிடுவார்க்குக் கல்வியறிவு குறையுமாதலால் 'மையலாம் வளியிற் கல்வி யருந்தழை யுகுத்து' என்றார். [மடலாதிகளிலே யீர்வாளாதிகளின் அபேதங்களை யாரோபித்தலாலே உருவக வணியாம்.] (௩௯)

விழையுந ராவி போழும் வேனிலா னிரத மூறுங்,
கழைகுழைத் தளிநா னேற்றிக் கணைமலர் தொடுக்கிற் றீந்தேன்,
மழையினிற் கரங்க ளாளும் வழுவழுத் திழுக்கா வண்ணந்,
தழைமடற் கைதாய் நின்பொற் றுதகை திமிர்த் தெய்வ வானால்.

இ - ள். விழையுநர் - விரும்பினவருடைய, ஆவி - உயிரை, போழும் - பிளக்கின்ற, வேனிலான் - மன்மதனானவன், இரதம் - சாறானது, ஊறும் - ஒழுகுகின்ற, கழை - கருப்புவில்லை, குழைத்து வளைத்து, அளி நாண் - வண்டுநாரியை, ஏற்றி - பூட்டி, மலர்கணை - பூவம்புகளை, தொடுக்கின் - எய்யும்போது, தீ - மதுரம் பொருந்திய, தேன் - தேனினது, மழையினின் - மழையினாலே, கரங்கள் - (தன்) கைகளானவை, நாளும் - தினந்தோறும், வழுவழுத்து - நழுவிநழுவி, இழுக்காவண்ணம் - தப்பிப் போகாதபடி, தழை - தழைத்த, மடல் - மடல்களையுடைய, கைதாய் - தாழம்பூவே, நின் - உனது, பொன் - பொன்னிறம் பொருந்திய, தாது - துகளை, கை - அக்கைகளிலே, திமிர்ந்து - பூசிக்கொண்டு, எய்வான் - (அவன் என்மேல்) செலுத்துகிறான், எ - று.

க - து. தாழம்பூவே! மன்மதன் கரும்புவில் வளைத்து அளிநாணேற்றி மலர்க்கணை தொடுக்கில் வழுக்காதிருக்க உன் மகரந்தங்களைத் திமிர்ந்து அக்கணை யெய்கிறான் என்று நளன் சொன்னான் என்பதாம்.

வேனிலான் - காலத்தான் வந்தபெயர். அத்தாழம்பூவில் மற்ற மலர்களினும் மிக்க தாது விளைந்திருத்தல் பற்றி அங்ஙனங் கூறப்பட்டது. (௪0)

[இதனால் முருக்கம்பூவை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

குனிசிலை வேனி லான்கைக் குருதிதோய் பிறைவா
யம்பின், றனியெழில் கவர்ந்து தோன்றித் தணந்தவர் தமை
யெஞ் ஞான்றுந், துனியுற முருக்கு கின்ற தொழிலினா
லன்றோ நின்னை, முனிவுட னுலகில் யாரு முருக்கல ரென்
கின் றாரே.

இ - ள். குனி சிலை - வளைக்கப்பட்ட கரும்பு வில்லையுடைய, வேனிலான் - வசந்தகாலத்திற்குரிய மன்மதனது, கை - கையிலிருக்கின்ற, குருதி - உதிரத்திலே, தோய் - முழுகிய, பிறைவாய் அம்பின் - பிறைவா யம்பினது, தனி - ஒப்பற்ற, எழில் - அழகை, கவர்ந்து - வெளவி, தோன்றி - விளங்கி, தணந்தவர் தமை - பிரிந்தவரை, எஞ் ஞான்றும் - எந்நாளிலும், துனி உற - துன்பத்தையடைய, முருக்குகின்ற - கொல்கின்ற, தொழிலினால் அன்றோ - செய்கையினாலன்றோ, நின்னை - (முருக்கம்பூவே) உன்னை, முனிவுடன் - வெறுப்புடனே,

உலகில் - உலகின்கண்ணே, யாரும் - எவரும், முருக்கலர் என்கின்றார் - முருக்கலரென்று சொல்லுகின்றார், எ - று.

**க - து.** முருக்கம் பூவே! கொல்லுகிற தொழிலாலல்லவோ உன்னை முருக்கலர் என்கிறார்களென்றான் நளமஹாராஜன் என்பதாம்.

பிறைவாயம்பு - அர்த்த சந்திரபாணம்; அது நிறத்திற்கு மூவமையாக்க வேண்டிக் 'குருதிதோய்' என்றார். முருக்குதல் - கொல்லுதல்; முருக்குகின்ற வலரென விரியும். விரகிகளேயன்றி மற்றையோரும் அப்பெயர் கூறுகின்றாரென்பது தோன்ற 'யாரும்' என்றார். [பிறைவாயம்பினழகைக் கவர்ந்தெனை உவமானத்தன்மையை யுவமேயத்தி லாரோபித்தலாற் காட்சி யணியாம். முருக்கல ரென்னும் பெயர்க்கு உறுப்பாற்றலான் மற்றொரு பொருளைக் கற்பித்தலாற் பிரிநிலை நவிற்சியணியாம்.] (சக)

[இதனாற் குயிற் கூக்குரல் சொல்லப்படுகின்றது.]

## கலிவிருத்தம்.

எனவிவை யெடுத்துரைத் தின்ன தன்மைய
பனிமலர்க் காவினிற் பயிலு மாங்குயில்
குனிசிலை மாரனைக் கூவக் கேட்டலு
மனநிலை தளர்வுற மதிம யங்கினான்.

**இ - ள்.** என - என்று, இவை - இவைகளை, எடுத்து - எடுத்து, உரைத்து - சொல்லி, இன்ன தன்மைய - இப்படிப்பட்ட தன்மையையுடைய, பனி - குளிர்ச்சி பொருந்திய, மலர் - மலர்களையுடைய, காவினில் - சோலையில், பயிலும் - பழகி யிருக்கின்ற, மா - மாவிலுள்ள, குயில் - குயில்களானவை, குனி - வளைக்கப்பட்ட, சிலை-வில்லையுடைய, மாரனை - மன்மதனை, கூவ - அழைக்க, கேட்டலும் - கேட்டவளவிலே, மனநிலை - தைரியமானது, தளர்வுற - சோர, மதிமயங்கினான் - (அரசன்) அறிவு கலங்கினான், எ - று.

**க - து.** குயில்களானவை மன்மதனை அழைக்க நளன் மதிமயங்கினான் என்பதாம்.

இவையென்றது கீழ்ப்போன நான்கு பாட்டுகளைச் சுட்டி நின்றது. குயில் கூவல் தன் பகைவனுகிய மாரனை யழைத்தல் போலுதலால் தைரியமிழந்து மதிமயங்கினு னென்க. மாரன் - விரகிகளைக் கொல்வோன். (சஉ)

[இதனால் அங்கே வெயில் நிலவுபோலுதல்
சொல்லப்படுகின்றது.]

வெங்கதிர் தென்றலிற் குளிர்ந்தும் வீழ்நறுத்
தங்கிய மலர்நறுந் தளிக்குண் மூழ்கியும்
பொங்குபூங் கைதைவெண் டாது பூசியுந்
திங்களிற் றோன்றலான் மகிழ்சி றந்திலான்.

இ - ள். வெங்கதிர் - சூரிய கிரணமானது, தென்றலின் - தென் காற்றால், குளிர்ந்தும் - சீதளித்தும், மலர் - மலர்களிலே, தங்கிய - பொருந்திய, நறு - தேனினுடைய, வீழ் - விழுகின்ற, நறுந்தளிக்குள் - நல்ல துளிகளுள், மூழ்கியும் - படிந்தும், பொங்கு - எழும்புகின்ற, பூ - அழகிய, கைதை - தாழை மலரது, வெள் தாது - வெள்ளைப் பொடியை, பூசியும் - திமிர்ந்தும், திங்களின் - சந்திர கிரணம் போல, தோன்றலால் - காணப்படலால், மகிழ் சிறந்திலான் - (அரசன்) களி கூர்ந்திலன், எ - று.

க - து. நளமஹாராஜன் வெயிலானது நிலவைப்போலத் தோற்றலால் மகிழ்ச்சி அடைந்திலன் என்பதாம்.

தேன்றுளிகளும் பொடியும் அத்தென்றலால் மலர்களிலிருந்து கொணரப்படுவன. திங்கள் அதன் கிரணத்தை யுணர்த்தலா லாகுபெயர். வெயிலானது தென்றலாலே குளிர்ந்தும், பனித்துளிகள்போலுந் தேன்றுளிகளோடு கலந்தும், தாழம்பூப்பொடியால் விளர்த்தும் நிலவுபோன்ற தென்க. அது மகிழ்சிறத்தற்குக் காரணமா யிருக்கவும் அரசன் விரகியாதலால் மகிழ் சிறந்திலனென்க. மகிழ்சிறந்திலானெனவே துன்பு சிறந்தானென்பது கருத்து. [உவமையணி.] (சஈ)

[இதனால் மயிற்கூத்துச் சொல்லப்படுகின்றது.]

அலையொலி முழவெழ வளியின் கம்பலை
குலவிய சுருதியாக் குயில்கள் பாண்செய
நிலவுபூந் தண்டலை யரங்கி னீடிய
கலவமா மயில்களித் தாடக் கண்டனன்.

இ - ள். அலை ஒலி - அலையி னொலியாகிய, முழவு - மத்தளவோசையானது, எழ - உண்டாகவும், அளியின் - வண்டுகளது, கம்பலை - ஒலியானது, குலவிய - கொண்டாடப்பட்ட, சுருதியா - சுருதியாகவும், குயில்கள் - குயில்களாகிய (பாடகர்), பாண் செய - இசை பாடவும், நிலவு - விளங்குகின்ற, பூ தண்டலை - பூஞ்சோலையாகிய,

அரங்கில் - சபையில், நீடிய - நீண்ட, கலவம் - கலாபத்தையுடைய, மா மயில் - பெரிய மயில்களாகிய (மகளிர்), களித்து - மகிழ்ந்து, ஆட - கூத்தாட, கண்டனன் - (அரசன்) பார்த்தான், எ - று.

க - து. மயில்களாட நளன் கண்டான் என்பதாம்.

அலையொலி முதலியவற்றை முழவொலி முதலியவாகக் கூறினமைக் கேற்பக் குயில்கள் பாடகராகவும் மயில்கள் மகளிராகவும் சொல்லப்பட்டன. தண்டலை யென்பதற்குக் குளிர்ச்சியாகிய இடத்தை யுடையது என்பது பொருள். இது பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். [அலையொலி முதலியவற்றிலே முழவொலி முதலியவற்றை யாரோபித்தலா லுருவக வணியாம்.] (சச)

[இதனல் பூவையுங் கிளியும் புகழ்கின்றமை சொல்லப்படுகின்றது.]

நஞ்சுமிழ் வேலினன் சீர்த்தி நாடொறு
மஞ்சொலார் பயிற்றலா லந்தண் காவினின்
மஞ்சரி யிடையிடை வதிந்த பூவையும்
பைஞ்சிறைக் கிள்ளையும் பாடக் கேட்டனன்.

இ - ள். நஞ்சு - நஞ்சத்தை, உமிழ் - கக்குகின்ற, வேலினன் - வேலையுடைய நளராஜனவன், சீர்த்தி - (தன்) கீர்த்தியை, நாள் தொறும் - தினந்தோறும், அம் சொலார் - அழகிய சொற்களையுடைய மகளிரானவர், பயிற்றலால் - கற்பித்தலாலே, அம் - அழகிய, தண் - தண்ணிய, காவினில் - சோலையிலே, மஞ்சரி - பூங்கொத்துகளுடைய, இடை இடை - நடுவே நடுவே, வதிந்த - தங்கிய, பூவையும் - நாகணவாய்ப் பறவைகளும், பைஞ்சிறை - பசிய சிறைகளையுடைய, கிள்ளையும் - கிளிகளும், பாட - படிக்க, கேட்டனன் - (அரசன்) கேட்டான், எ - று.

க - து. நளமஹாராஜன் தன் கீர்த்தியைப் பூவைகளும் கிளிகளும் பாடக் கேட்டான் என்பதாம்.

அரசனை மகிழ்வித்தற்பொருட்டு அவனது புகழைப் பூவைகளுக்குங் கிளிகளுக்குங் கற்பித்து அவ்வனத்தில் விட்டு வைப்பாரென்க. அப்பறவைச் சொற்களின் மதுரச்சுவைதோன்ற 'அஞ்சொலார் பயிற்றலால்' என்றார், காரணத்தின் குணங் காரியத்தினு முளதாமாதலால். (சரு)

[இதனால் தென்றலின் வரவு சொல்லப்படுகின்றது.]

தேங்கமழ் மலர்நறு வருந்திச் சீர்கெழு
தூங்கிசை யளிமுரல் சுண்ண மாடிமென்
பூங்கொடி மடந்தைய ராடப் போர்வளம்
மாங்குயி லுரைசெய வசந்த னெய்தினான்.

இ – ள். தேங்கமழ் – பரிமளிக்கின்ற, மலர் – மலர்களது, நறு – தேனை, அருந்தி – உண்டு, சீர் கெழு – சிறப்புப் பொருந்திய, தூங்கிசை – நாட்டிய ராகத்தை, அளி – வண்டுகள், முரல் – பாட, சுண்ணம் – பரிமளப் பொடியை, ஆடி – பூசிக்கொண்டு, மெல் பூங்கொடி – மெல்லிய பூங்கொடிகளாகிய, மடந்தையர் – மகளிர், ஆட – கூத்தாட, போர் வளம் – போர்க்குரிய வளத்தை, மா – மாவிலுள்ள, குயில் – குயிலாகிய (மந்திரி), உரை செய – சொல்ல, வசந்தன் – தென்றலாகிய (பகைவன்), எய்தினான் – வந்தான், எ-று.

க – து. சோலையில் தென்றற்காற்று வந்தது என்பதாம்.

முரல என்பது முரல் என ஈறு கெட்டது. போர்வளம் – கா.. தேசங்களின் சிறப்பு. அவை: இங்கே தமயந்தியை நினைக்கிற காலமும் பொழிலிடமுமாம். வசந்தன் மதுவுண்டு பரிமளப்பொடி பூசிக்கொண்டு ஆடல் பாடல்களின் மகிழ்ந்து அமைச்சரோ டெண்ணிப் போர் செய்தற்கு அரசன்கண் வந்தானென்க. இப்படி வந்தானெனவே அரசனை வெல்லுதற்கு அவனை எளியனாகக் கருதலாலே செருக்கோடு வந்தானென்பது தொனிக்கின்றது. 'பூங்கொடியாட' என்றதனாலே மெல்லியநடையும், 'நறுவருந்தி' என்றதனாலே தண்மைக் குணமும், 'சுண்ணமாடி' என்றதனாலே நறுநாற்றமும் ஆகிய தென்றலுக்குரிய மூன்று குணங்களுஞ் சொல்லப்பட்டன. (சசு)

[இதனால் அவ்வனத்திலுள்ள தடாகத்தைக்
கண்டமை சொல்லப்படுகின்றது.]

மிடைந்திரு விசும்புறை யமரர் வெற்பினாற்
கடைந்துதன் வளனெலாங் கவர்வ ராமெனக்
குடைந்துவண் டிமிர்பொழி லிடையிற் கொள்கட
லடைந்தன வாவியை யண்ண னோக்கினான்.

இ – ள். இரு விசும்பு – பெரிய விண்ணுலகத்தில், மிடைந்து – நெருங்கி, உறை – வாசஞ் செய்கின்ற, அமரர் – தேவரானவர், வெற்பினால் – (மந்தர)கிரியாகிய மத்தினாலே, கடைந்து-(இன்னும் ஒருந்து)

கடைந்து, தன் வளனெலாம்-தன் செல்வத்தையெல்லாம், கவர்வராம் என - வௌவுவாரென் றெண்ணி, குடைந்து - கிண்டி, வண்டு - வண்டுகளானவை, இமிர் - ஒலிக்கப்பெறுகின்ற, பொழில் - வனத்தினது, இடையில் - நடுவிலே, அடைந்து - அடைந்ததாகிய, கொள் - (அவ்வளங்களைக்) கொண்ட, கடலன - பாற்கடல் போல்கின்ற, வாவியை - தடாகத்தை, அண்ணல் - அரசன், நோக்கினான் - பார்த்தான், எ - று.

க - து. நளராஜன் தடாகத்தைக் கண்டான் என்பதாம்.

முற்காலத்தே தேவர்கள் கடைந்து ஐராவதாதிகளைக்கொண்டு போதலாலே மீளவும் வந்து மற்றை வளங்களையுங் கொண்டுபோயினும் போவாரென் றஞ்சியதென்க. ஒருகா லோரிடத்தே தன்வளங்களையெல்லாங் கொள்ளை கொடுத்தோன் அவ்விடம்விட்டு வேறிடத்துச் செல்வா னென்க. விசும்பு - இடவாகுபெயர். கடல் எனவும், கடைந்தெனவும் மேல் வருதலால் வெற்பு மந்தரகிரியைக் குறித்தது. கடைந்து என்றதற் கேற்ப வெற்பு மத்தாக்கி யுரைக்கப்பட்டது. அடைந்தது என்பது அடைந்து என விகாரப்பட்டு நின்றது. [அத்தடாகத்தை அப்படியஞ்சி யடைந்த கடலாகக் குறித்தலாலே தற்குறிப்பணி.] (சஎ)

[இதுமுத லேழுபாட்டுகளால் முன்பாட்டில் "வளனெலாம்" என்றவை யிவையெனச் சொல்லப்படுகின்றன.]

தூவியஞ் சிறையனந் துயிலு நாண்மலர்
வாவியுட் டாமரை வளையந் தோன்றுவ
பூவலர்க் கற்பகப் பொதும்பர் நாட்டுறை
கோவிளங் களிற்றினக் கோடு போன்றவே.

இ - ள். தூவி - இறகையும், அம் சிறை - அழகிய சிறையையுமுடைய, அனம் - அன்னங்களானவை, துயிலும் - தூங்குதற் கிடமாகிய, நாள் - அன்றுபூத்த, மலர்-மலர்களையுடைய, வாவியுள் - தடாகத்தினுள்ளே, தோன்றுவ - தோன்றுகின்றவையாகிய, தாமரை - தாமரைகளுடைய, வளையம் - தளிர்ச்சுருள்களானவை, பூ - அழகிய, அலர் - மலரையுடைய, கற்பகம் பொதும்பர் - கற்பகச் சோலையையுடைய, நாட்டு - சுவர்க்க லோகத்தின்கண், உறை - வாசஞ் செய்கின்ற, கோ - அரசனாகிய இந்திரனுடைய, இளங்களிற்று - (அதினுள்ளிருக்கிற) இளமைபொருந்திய யானைகளது, இனம் - இனத்தினுடைய, வெண்கோடு போன்ற - வெள்ளைக் கொம்புகள் போன்றிருந்தன, எ - று.

க - து. தடாகத்துள்ளே தோன்றிய தாமரை வளையங்களானவை தேவலோகத்தின் யானைகளின் கொம்புகளை ஒத்திருந்தன என்பதாம்.

வளையம், "விரித்திடுஞ் சுருளினுமம் விசியொடு வளையமாகும்" (சூடாமணி நிகண்டு - மரப்பெயர்த் தொகுதி - சுo) இதனாலறிக. இரண்டு பிரிவாகிய அச்சுருள்கள் இரட்டைத் தந்தங்கள் போலுதல் காண்க. 'பூவலர்க் கற்பகப் பொதும்பர்நாட்டுறை, கோவிளங் களிறு' இவற்றை யொருமொழியாகக் கொண்டு அதற்கு ஐராவதமெனப் பொருள் கொள்க. களிறென்னும் பொதுப்பெயர் ஐராவதமென்னுஞ் சிறப்புப் பெயர்ப் பொருளைத் தருதற்கு அவ்வடை சேர்க்கப்படுதலாலே, பல ஐராவதங்கள் நீருள்ளே மறைந்து நிற்க நீர்மேலே வெளிப்பட்டுத் தோன்றுகிற அவற்றி னிரட்டைக் கோடுகள்போலுதல் கொள்க. 'பூவலர் கற்பகப் பொதும்பர்' என்ற விசேடணத்தால் நாடு சுவர்க்க லோகத்துக் காயிற்று. ஐராவதம் என்பதற்குக் கடலிற் பிறந்தது என்பது பொருள். கடல் - பாற்கடல். இரம் - நீர். இவ்வாறன்றி இமயமலைக்குத் தென்புறத்தி லுற்பத்தியாகிச் சந்த்ரபாகாநதியோடு சங்கமமாகிற ஐராவதி யென்னும் நதியையடுத்துப் பிறந்தமையால் இந்திரன் யானைக்கு ஐராவத மென்னும் பெயருண்டாயிற்றென்றலு மொன்று. 'தாமரை முளைக டோன்றுவ' எனப் பாடங் கூறின் இதன் முதனூன் முடிபையொத்து முடியும். [அவ்வளையங்களை அக்கோடுகளாகக் குறித்தலாலே தற்குறிப்பணி, அதிலே ஓர் ஐராவதம், இதிலே பல ஐராவதங்கள் தோன்றலாலே வேற்றுமையணியாம்.] (சஅ)

ஏந்தலோ டவ்வுழி யிறுத்த வெண்ணறுங்
கூந்தன்மா நிழறடத் திடைக்கு லாவுவ
காந்தளங் கரத்தர மகளிர் காமுறு
வேந்தனற் புரவியின் வெள்ளம் போன்றவே.

இ - ள். எந்தலோடு - அரசனோடு, அவ்வுழி - அவ்விடத்தே, இறுத்த - அடைந்த, எண் அறும் - எண்ணிலாத, கூந்தல் - மயிர் நெருங்கிய, மா - குதிரைகளுடைய, தடத்திடை - தடாகத்தின்கண், குலாவுவ - தோன்றுவனவாகிய, நிழல் - சாயைகளானவை, காந்தள் - காந்தள் மலர்போலும், அம் - அழகிய, கரத்து - கைகளையுடைய, அர மகளிர் - தெய்வ மங்கையரால், காமுறு - இச்சிக்கப்படுகின்ற, வேந்தன் - இந்திரனுடைய, நல் - நல்ல, புரவியின் - குதிரைகளுடைய, வெள்ளம்போன்ற -(அதிலுள்ள) கூட்டம்போன்றன. எ - று.

க - து. தடாகத்தில் தோன்றிய குதிரைகளின் சாயலானவை இந்திரன் குதிரைகளை ஒத்திருந்தன என்பதாம்.

'காந்தளங் கரத்தர மகளிர் காமுறு, வேந்தனற் புரவி' இவற்றையும் முன் ஐராவதத்திற்குச் சொல்லப்பட்டது போல ஒருமொழியாகக்கொண்டு உச்சைசிரவமென்று பொருள்கொள்க. உச்சைசிரவம் - பாற்கடல் கடையப்பட்ட காலத்தில் அதிற் பிறந்த குதிரை. உச்சை, சிரவம் என்பதற்கு உயர்ந்த காதுள்ளது என்றும், உயர்ந்த கீர்த்தியுள்ளது என்றும் பொருள் கூறுவர் வடநூலார். குலாவுதல் - அந்நிழல்கள் அலையினாலே ஒன்றையொன்று தொடர்வனவாகத் தோன்றுதல். புரவியென்னும் பொதுப்பெயர் உச்சைசிரவ மென்னுஞ் சிறப்புப் பெயர்ப்பொருளைத் தருதற்கு அவ்வடை சேர்க்கப்பட்டது. [அந்நிழல்களை அவ்வுச்சைசிரவங்களாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. அக்கடலிலே ஓர் உச்சைசிரவம் இதிலே பல தோன்றுதலாலே வேற்றுமையணியாம். இதனாலே அரசன் குதிரைகளெல்லாம் உச்சைசிரவம்போ லிருக்கின்றனவென்பது தொனிக்கின்றது.] (சக)

வரிச்சிறைத் தும்பிக ளுழுநல் வள்ளவாய்
விரித்தவெண் டாமரை விளங்கித் தோன்றுவ
தரித்திடு களங்கமெய் தயங்கத் தண்ணெனுந்
திருக்கிளர் நிலவுமிழ் திங்கள் போன்றவே.

இ - ள். விளங்கி - பிரகாசித்து, தோன்றுவ - (தடாகத்திலே) காணப்படுகின்றவையாகிய, வரி சிறை - கீற்றுகள் பொருந்திய சிறைகளையுடைய, தும்பிகள் - வண்டுகளால், உழு - கிண்டப்படுகின்ற, நல் - நல்ல, வள்ளவாய் - கிண்ணம்போலும் வாயை, விரித்த - திறந்திருக்கின்ற, வெண்டாமரை - வெண்டாமரை மலர்களானவை, தரித்திடு - தாங்கப்பட்ட, களங்கம் - களங்கங்களானவை, மெய் - வடிவங்களிலே, தயங்க - தோன்ற, தண் எனும் - குளிர்ச்சியா யிருக்கிற, திரு - அழகினாலே, கிளர் - விளங்காநின்ற, நிலவு - சந்திரிகையை, உமிழ் - கக்குகின்ற, திங்கள் போன்ற - (அதிலுள்ள) சந்திரர்கள் போன்றிருந்தன, எ - று.

க - து. தடாகத்துத் தோன்றிய வெண்டாமரை மலர்களானவை சந்திரர்களை ஒத்திருந்தன என்பதாம்.

வண்டு களங்கமும் வெண்டாமரைமலர் சந்திரனும் போலுதல் கொள்க. தண்மையுந் திருக்கிளர் நிலவுந் தாமரைக்குமாம். [அப்படிப்பட்ட வெண்டாமரை மலர்களை அப்படிப்பட்ட சந்திரர்களாகக்

குறித்தலாலே தற்குறிப் பணியாம். இதிலும் வேற்றுமை யணி கொள்க.] (௬0)

சேயிதழ்க் குவளைமென் னனைக டெண்டிரைத்
தூயநற் றடத்திடைத் தோன்று கின்றன
மேயவர் கண்கவர் வனப்பின் மிக்கவாய்ப்
பாயொளி சிறந்தசெம் பவளம் போன்றவே.

இ-ள். தெள் திரை - தெளிவுள்ள அலைகளையுடைய, தூய - பரிசுத்தம் பொருந்திய, நல் தடத்திடை - நல்ல தடாகத்தினுள்ளே, தோன்றுகின்றன - காணப்படுகின்றவையாகிய, சேயிதழ்-சிவப்பிதழ் களையுடைய, குவளை - உற்பலங்களுடைய, மெல் - மெல்லிய, நனை கள் - அரும்புகளானவை, மேயவர் - அடைந்தவருடைய, கண் - பார்வையை, கவர் - வௌவுகின்ற, வனப்பில் - அழகில், மிக்கவாய் - மிகுந்தனவாகி, பாய் ஒளி - விரிந்த வொளியால், சிறந்த - விசேஷித்த, செம்பவளம் போன்ற - (அதிலுள்ள) செம்பவளங்கள் போன்றன, எ - று.

க - து. தடாகத்துத்தோன்றிய செங்குவளை அரும்புகளானவை பவளத்தை ஒத்திருந்தன என்பதாம்.

[அச்செங்குவளை யரும்புகளை அப்பவளங்களாகக் குறித்தலால் தற்குறிப்பணி.] (௬க)

வெண்ணிறத் தாமரை மலரும் வேரியந்
தண்கருங் குவளையுந் தடத்துட் டோன்றுவ
வெண்ணிரு கலைமதி நிலவி னீட்டமு
முண்ணில வியவிடத் தொளியும் போன்றவே.

இ-ள். தடத்துள் - தடாகத்தினுள்ளே, தோன்றுவ - தோன்றுகின்றவையாகிய, வெள் நிறம் - வெள்ளைநிறம் பொருந்திய, தாமரை மலரும் - தாமரைப் பூக்களும், வேரி - தேனையுடைய, தண் - தண்ணிய, கருங்குவளையும்-நீலோற்பல மலர்களும், உள் - (அதன்) உள்ளே, நிலவிய - விளங்குகின்ற, எண் இரு கலை - பதினாறு கலை களையுமுடைய, மதி - சந்திரனது, நிலவின் ஈட்டமும் - ஒளிச்செறிவும், விடத்து - (ஆலாகல) விஷத்தினது, ஒளியி(னீட்ட)மும்-ஒளிச் செறிவும், போன்ற - ஒத்திருந்தன, எ - று.

க - து. தடாகத்துத் தோன்றிய வெண்டாமரை மலர்களும் நீலோற்பல மலர்களும் சந்திர னொளிகளையும் விஷத்தொளிகளையும் ஒத்திருந்தன என்பதாம்.

வேரியந்தண் என்பதில் அம் - சாரியை, அழகு எனினுமாம். [வெண்டாமரை மலரைச் சந்திரனொளியாகவுங் கருங்குவளை மலரை நஞ்சொளியாகவுங் குறித்தலாலே தற்குறிப்பணியாம். தாமரை குவளைகளை வைத்த முறையே அவற்றோடு சம்பந்தமுள்ள மதியொளி நஞ்சொளிகளை வைத்தலால் நிரனிறையணி. இவை சேர்தலால் சேர்வையணி.] (௫உ)

குடவளை யினமணி கொழிக்குந் தண்புனற்
றடமெறி யலைகளி னலையுஞ் சைவலம்
படர்தரு மழற்சிகை பரப்புஞ் செந்நிற
வடவையின் புகையென வயங்கித் தோன்றின.

இ - ள். குடம் - குடம்போலும், வளை - சங்குகளானவை, இனம் - இனமாகிய, மணி - முத்துகளை, கொழிக்கும் - சொரிதற்கிடமாகிய, தண்புனல் - தண்ணீரையுடைய, தடம் - தடாகத்திலே, எறி - வீசப்படுகிற, அலைகளின் - அலைகளினாலே, அலையும் - அலைகின்ற, சைவலம் - கொடிப்பாசிகளானவை, படர்தரும் - வளர்கின்ற, அழல் - சூடுள்ள, சிகை - சுவாலைகளை, பரப்பும் - பரப்புகின்ற, செந்நிறம் - சிவப்பு நிறமாகிய, வடவையின் - (அதிலுள்ள) வடவாமுகாக்கினியினது, புகை என - தூமம்போல, வயங்கி - விளங்கி, தோன்றின - காணப்பட்டன, எ - று.

க - து. தடாகத்தி லிருக்குங் கொடிப் பாசிகளானவை வடவாமுகாக்கினியின் புகைகளைப்போலக் காணப்பட்டன என்பதாம்.

வடவை கடலுள்ளே மறைந்து அதனீரை மேற்படாம லுறுஞ்சி நிற்கின்ற ஊழித்தீயாம். [அப்படி யலைகிற பாசிகளை அப்புகைகளாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம்.] (௫௩)

குருமணி யிமைக்குநீள் கூல மேயவான்
றருநிழ லலையிடை யலைவ தண்கதி
ரருமணிப் பொலன்குவட் டணிமை நாகமால்
வரைசிறை யடிக்கொளு மாட்சி போன்றவே.

இ - ள். அலையிடை - அலைகளாலே, அலைவ - அலைகின்றவையாகிய, குரு - நிறம்பொருந்திய, மணி - மணிகளால், இமைக்கும் - விளங்குகிற, நீள் - நீளம்பொருந்திய, கூலம் - கரையின்கண், மேய - தங்கிய, வான்தரு - பெரியமரங்களுடைய, நிழல் - நிழல்களானவை, சிறை - சிறைகளை, அடிக்கொளும் - அடித்துக்கொள்ளுகின்ற, மாட்சி - அழகையும், தண் - சீதளம் பொருந்திய, கதிர் - கிர

ணங்களையு முடைய, அரு மணி - அரிய மணியையும், பொலன் - பொன்னையும், குவடு - சிகரத்தையுமுடைய, அணி - அழகிய, மைநாகம் - மைநாகமாகிய, மால்வரை - பெரிய மலையின், சிறை சிறைச்சாயையை, போன்ற - ஒத்திருந்தன, எ - று.

க - து. தடாகத்துத் தோன்றிய தருக்களின் நிழல்களானவை மைநாக பருவதங்களை ஒத்திருந்தன என்பதாம்.

முற்காலத்திலே இந்திரன் வச்சிராயுதத்தினாலே மலைகளின் சிறைகளை யறுத்தபோது மைநாகமலை கடலு ளொளித்ததென்க. அக்கரையிலுள்ள மணி நிழல்கள் அத்தரு நிழல்களோடு சேர்ந்து தோன்றுதலால் 'அருமணிப்பொலன் குவடு' என்னும் அடைகொடுக்கப்பட்டது. அடித்தென் வினையெச்ச மீறுகெட்டது. [அப்படியசைகிற நிழல்களை அப்படிப்பட்ட மைநாகங்களாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம். இதிலும் வேற்றுமை யணிகொள்க.] (ருச)

[இதனால் விரும்பப்படுபொருள் கிடைத்தற்குக் காரணமாகிய அன்னத்தைக் கண்டமை சொல்லப்படுகின்றது.]

தொலைவறு பலவள மினைய தொக்கவவ்
வலைதவழ் வாவியிற் பயிலு மாய்பெடை
கலவியின் குறிப்புரை காட்டப் பின்றொடர்
பொலனிற வன்னத்தின் பொற்பு நோக்கினான்.

இ - ள். தொலைவறு - ஒழியாத, இனைய - இத்தன்மையனவாகிய, பல வளம் - பலவித வளங்களாலும், தொக்க - நிறைந்த, அலை - அலைகளானவை, தவழ் - தவழப்பெற்ற, அ வாவியில் - அத்தடாகத்தில், பயிலும் - வாசஞ்செய்கின்ற, ஆய் - ஆராய்ந்துகொள்ளப்பட்ட, பெடை - பெட்டையானது, கலவியின் - புணர்ச்சியினது, குறிப்பு - குறிப்பை, உரை - சொல்லுகளாலே, காட்ட - காண்பிக்க, பின் - (அதன்) பின்னே, தொடர் - தொடர்கிற, பொலன் - பொன் வடிவாகிய, நிறம் - ஒளியுள்ள, அன்னத்தின் - அன்னத்தினது, பொற்பு - அழகை, நோக்கினான் - (அரசன்) பார்த்தான், எ - று.

க - து. நளராஜன் அன்னத்தைக் கண்டான் என்பதாம்.

'பொலனிறவன்னம்' என்றதனாற் பொன்னுலகத்தன்ன மென்றதயிற்று. (ருரு)

[இதனாலே பின்னே சொல்லப்படுந் துக்கத்தின் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

தண்ணறுந் தாமரை யணையிற் றங்கிய
வண்ணமோ திமந்துனி யகற்றிப் பேடையை -

விண்ணிறச் சிறகராற் றழீஇ விருப்பொடு
முண்மகிழ் கூர்தர வுவந்து புல்லிற்றே.

இ - ள். தண் - குளிர்ச்சியான, நறு - வாசனை பொருந்திய, தாமரை - தாமரைப் பூவாகிய, அணையில் - சயனத்தின்கண்ணே, தங்கிய - வாசஞ் செய்கின்ற, அண்ணல் ஓதிமம்-(அந்த) அரசவன்னமானது, துனி - ஊடலை, அகற்றி - நீக்கி, பேடையை - பெட்டையை, விண் - பொன்னுலகத்திலுள்ள, நிறம் - ஒளிபொருந்திய, சிறகரால் - சிறைகளினாலே, தழீஇ - தழுவி, விருப்பொடும் - ஆசையுடனே, உள் - (அதன்) உள்ளத்தே, மகிழ் - மகிழ்ச்சியானது, கூர்தர - மிகும்படி, உவந்து - (தானும்) மகிழ்ந்து, புல்லிற்று - புணர்ந்தது, எ - று.

க - து. அரச வன்னமானது பெட்டையன்ன மகிழத் தானு மகிழ்ந்து புணர்ந்தது என்பதாம்.

முன்பாட்டிலே கலவியின் குறிப்புரை காட்டிற்றென்ற பேடைக்கு ஊடலெப்படி யுண்டாயிற்றென்றால், நாயகனை முன்னே தம்மிடத்து விரும்பிவரச் செய்தலும் வந்தபின்பு ஊடுதலும் நாயகிக்கு இயல்பா மென்க. ஊடலில்லையாயிற் புணர்ச்சி யின்பஞ் சிறவாதாம்; "ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப் பெறின்" (திருவள்ளுவர் - ஊடலுவகை-க ௦) இதனாலறிக. (ருகூ)

[இதனால் விரும்பப்படுபொருள் கிடைத்தற்குக் காரணமாகிய அன்னத்தைக் கண்ணுற்றபிறகு அரசன் செய்ய விரும்பியது கைகூடல் காரியமுகத்தாற் சொல்லப்படுகின்றது.]

விழைவுறு கலவியின் மெலிந்தோர் தாளினின்
றெழிறிகழ் பொன்னிற வெருத்தங் கோட்டுபு
தழைவுறு சிறகரான் மூடித் தண்ணறு
வழிமலர்ச் சேக்கையி னன்னந் துஞ்சிற்றால்.

இ - ள். விழைவுறு - விரும்பப்பட்ட, கலவியின் - புணர்ச்சியால், மெலிந்து - இளைத்து, ஓர் தாளின் - ஒரு காலினால், நின்று - நின்று, எருத்தம் - பிடரியை, கோட்டுபு - வளைத்து, தழைவுறு - தழைத்த, சிறகரால் - சிறையால், மூடி - (தலையை) மறைத்துக் கொண்டு, தண் - தண்ணிய, நறு - தேனுளது, அழி - வழியப் பெற்ற, மலர் - தாமரைப் பூவாகிய, சேக்கையில் - சயனத்தில், எழில் - அழகினால், திகழ் - விளங்காநின்ற, பொன் - பொன்வடிவ

மாகிய, நிறம் - காந்தியுள்ள, அன்னம் - அவ்வன்னமானது, துஞ்சிற்று - தூங்கிற்று, எ - று.

**க - து.** அவ்வரசவன்னம் தாமரையிடத்து நித்திரைசெய்தது என்பதாம்.

['ஓர் தாளினின் றெருத்தங் கோட்டுபு சிறகரான் மூடித் துஞ்சிற்று' என்னும் பறவையின் சாதித்தன்மை சொல்லுதலாலே தன்மை நவிற்சியணி.] (நுள)

**[இதனால் அவ்வன்னத்தைப் பிடித்ததுங் காரணமும்**
**பிடித்தமையுஞ் சொல்லப்படுகின்றன.]**

சூழ்வளி யுடன்சுழல் சருகிற் றோன்றிய
ஊழ்வழி மனஞ்செல லுண்மை யன்றுகொ
றாழ்புலன் வழிமனஞ் சார வோதிமம்
பாழியந் தோளினன் கையிற் பற்றினன்.

**இ - ள்.** சூழ்வளியுடன் - அலைகாற்றுடனே, சுழல் - சுழன்று செல்கின்ற, சருகின் - சருகுபோல, ஊழ்வழி - விதியின் வழியிலே, தோன்றிய-(அதன்பயன்) உண்டாக, மனம் - (உயிர்களது) மனமானது, செலல் - செல்லுதல், உண்மையன்றுகொல் - சத்தியமன்றோ, தாழ்புலன்வழி - அற்பவிஷயமாகிய (அவ்வன்னத்தின்கண்), மனம்-மனமானது, சார - (ஊழினால்) அடைய, ஓதிமம் - அவ்வன்னத்தை, பாழி - வலிமை பொருந்திய, தோளினன் - தோள்களையுடைய நளராஜன், கையில் - கையினாலே, பற்றினன் - பிடித்தான், எ - று.

**க - து.** நளமஹாராஜன் விதியின்படி மதியுஞ்செல்ல அவ்வன்னத்தைப் பிடித்தான் என்பதாம்.

சூழ்வளி - சுழற்காற்று. சருகின் என்பதில் இன்னுருபு ஐந்தாவத னொப்புப் பொருளது. பாழியந்தோளினன் என்பதில் அம் சாரியை, அழகெனினுமாம். அவ்வன்னம் பெறுதற்கரிய பொருளாயினும் அரசனது பெருந்தன்மைக்கு அதைத் தூங்கும்போது பற்றுதல் தகாத செயலென்பது தோன்ற அதனைத் 'தாழ்புலன்' என்றும், அவனைப் 'பாழியந் தோளினன்' என்றுங் கூறினார். அற்ப காரியத்திலே தீரோதாத்தனாகிய அரசனுக்கு மனஞ் செல்லுமோ வென்கிற சங்கைக்கு, உயிர்களுக்கு மனம் விதிவழிப்பட்டு நிற்குமாதலாற் செல்லுமென்பது சொல்லப்பட்டது. [ஊழ்வழி மனஞ்செல்லுமென்னும் பொதுப்பொருளை அவ்வன்னம் பற்றுதற்கு அரசன் மனஞ்சென்றதென்னும் சிறப்புப்பொருளாலே சாதித்தலால்

வேற்றுப் பொருள்வைப்பணி. இதில் உவமையுஞ் சேர்தலாற் சேர்வையணி.] (௫அ)

[இதனால் பிடிபட்ட அன்னத்தின் வருந்தச்செயல் சொல்லப்படுகின்றது.]

கைப்படு சிறையனங் கலங்கி வாய்வெரீஇத்
துப்புறழ் தோலடி துடிப்பத் துன்பமுற்
றெய்ப்பொடு சிறையடித் தேக லாமையின்
மைப்புய லனையகைம் மலரிற் கொத்திற்றால்.

இ - ள். கை - (அரசனது) கையில், படு - அகப்பட்ட, சிறை - சிறைகளையுடைய, அன்னம் - அன்னமானது, கலங்கி - அறிவழிந்து, வாய்வெரீஇ-அச்சவொலிகள் செய்து, துப்பு உறழ்-பவளம்போன்ற, தோல் - தோலையுடைய, அடி - அடிகளானவை, துடிப்ப - நடுங்க, துன்பம் உற்று-துயரமடைந்து, சிறை அடித்து - சிறைகளாலடித்து, ஏகலாமையின் - போக மாட்டாமையால், எய்ப்பொடு - இளைப்புடனே, மை புயல் அனைய - (கொடையால்) கரிய மேகம்போலும், கை மலரில் - (அவனது கையாகிய) மலரில், கொத்திற்று - கொத்தியது, எ - று.

க - து. அன்னமானது வருத்தமுற்று நளன் கையைக் கொத்திற்று என்பதாம்.

வலியவன் கையி லகப்பட்டோன் முன்னே தப்பிப் போதற்கு முயற்சி செய்தலும், அது கூடாதபோது தன்னாலானமட்டும் அவனை வருத்துதலுஞ் செய்வானாதலால், 'கைப்படு சிறையனங் கலங்கி வாய் வெரீஇத், துப்புறழ் தோலடி துடிப்பத் துன்பமுற், றெய்ப்பொடு சிறையடித் தேக லாமையின், மைப்புய லனையகைம் மலரிற் கொத்திற்றால்' என்றார். ஆல்-அசை. மைப்புயல்-கார்காலத்துமேகம். மைப் புய லனையகை என்றது தொழிலுவமம். அன்னத்திற்கு மலரைக் கொத்துத லியல்பாதலால் 'கைம்மலரிற் கொத்திற்றால்' என்றார். அன்னம் அனம் எனத் தொகுத்த லாயிற்று. [பிடிபட்டபோது கலங்குத லாதியாகிய அதன்சாதித் தன்மைகளைச் சொல்லுதலால் தன்மை நவிற்சியணியாம்.] (௫௯)

[இதுமுதல் இரண்டு பாட்டுகளால் அவ்விடத்து நிகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

இரைத்தயர் புள்ளினுக் கிரங்கிப் புட்குலம்
விரித்தெழு சிறைவளி வீச மெல்லிதழ்த்

திருத்தகு தாமரை யலைதல் சேர்தடம்
வருத்தலை யென்றுகைம் மறித்தல் போன்றதே.

இ - ள். புள்குலம் - பறவைக் கூட்டமானது, விரித்து - பரப்பி, எழு - எழும்புகையில், சிறை - சிறைகள், வளி - காற்றை, வீச - எறிதலால், மெல் - மெல்லிய, இதழ் - இதழ்களையுடைய, திரு தகு - அழகுபொருந்திய, தாமரை - தாமரை மலர்களானவை, அலைதல்-அசைதலானது, சேர் - சேர்விடமாகிய, தடம் - தடாகமானது, இரைத்து - கூவி, அயர் - வருந்துகின்ற, புள்ளினுக்கு - அவ்வன்னத்திற்கு, இரங்கி - இரக்கமுற்று, வருத்தலை என்று - (அதனை) வருத்தாதே யென்று, கை - (தன்) கைகளினாலே, மறித்தல் போன்றது - தடுத்தல் போன்றது, எ - று.

க - து. பறவைக ளெழுதலால் தாமரைக ளசைதலானது அன்னத்தை வருத்தாதேயென்று நளனைத் தடுத்தல்போன் றிருந்தது என்பதாம்.

இரங்கியென்னும் வினையெச்சம் கைம்மறித்தலென்னும் வினை கொண்டது. தன்னைச் சேர்ந்திருந்த தாதலால் அதற்குத் தடாக மிரங்கிற் றென்க. புள் என்ற பறவைப் பொதுப்பெயர் இங்கு அதிகரணைசிதமாய் அன்னத்தை யுணர்த்திற்று. [அத்தாமரை மலர்களினசைதலை அத்தடாகத்தின் கைம்மறித்தலாகக் குறித்தலால் தற்குறிப்பணி.] (௬0)

வள்ளவாய்த் தாமரை வதிந்து போதரு
புள்ளெலாந் தனித்தனி புலம்பல் வாவியி
னுள்ளுறு வறுமைகண் டொதுங்கு பூமக
டெள்ளரிச் சிலம்புகள் சிலம்பல் போன்றதே.

இ - ள். வள்ளம் - கிண்ணம்போலும், வாய் - வாயையுடைய, தாமரை - தாமரை மலர்களில், வதிந்து - வாசஞ்செய்திருந்து, போதரு - (அப்போது) போகின்ற, புள் எலாம் - அன்னப்பறவைகளனைத்தும், தனி தனி - வேறு வேறாக, புலம்பல் - புலம்புதலானது, வாவியின் உள்-தடாகத்தினுள்ளே, உறு-நேரிட்ட, வறுமை-(அரசவன்னம்) இல்லாமையை, கண்டு - பார்த்து, ஒதுங்கு - விலகுகின்ற, பூமகள் - திருமாதினுடைய, தெள் - தெள்ளப்பட்ட, அரி பருக்கைக் கல்லுகளையுடைய, சிலம்புகள் - பாதச்சிலம்புகளானவை, சிலம்பல் போன்றது - ஒலித்தல் போன்றது, எ - று.

க - து. பறவைப் புலம்பலானது தடாகத்தைவிட் டிலக்குமி நீங்கும் பாதச்சிலம்பொலிபோ லிருந்தது என்பதாம்.

இங்கே விளக்கத்தைத் திருமகளென்றாராதலின் அத்தடாகம் அரசவன்ன மில்லாமையினாலே சந்திரனில்லாத இரவுபோல விளக்கத்தை இழந்ததென்றதாயிற்று. [அஞ்சிப்போகிற அன்னங்களி னொலியை அச்சிலம்புகளி னொலியாகக் குறித்தலாலே தற்குறிப் பணி.] (சுக)

[இதனாலே சில நியாயங்கள் கூறத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

இன்னபொன் னிறவனங் கண்டி லேனெனு
மன்னர்மன் னவன்மதி வதன நோக்கியே
யன்னவன் கரமல ரமர்ந்த வோதிம
நன்னய மொழிசில நவிற லுற்றதே.

இ - ள். இன்ன - இப்படிப்பட்ட, பொன் - பொன்னினது, நிறம் - ஒளி பொருந்திய, அன்னம் - அன்னத்தை, கண்டிலேன் எனும்-(இதுவரையில்) பார்த்திலேனென (வியக்கின்ற), மன்னர் மன்னவன் - அரசர்க் கரசனது, மதி - சந்திரன்போலும் (விளக்கம் பொருந்திய), வதனம் - முகத்தை, நோக்கி - பார்த்து, அன்னவன் - அப்படிப்பட்டவனது, கரம் - கையாகிய, மலர் - தாமரைப்பூவின்கண், அமர்ந்த - தங்கிய, ஓதிமம் - அன்னமானது, நல் - நல்ல, நயம் - நீதிநூலைப்பற்றிய, சில மொழி-சிலசொற்களை, நவிறல் உற்றது-சொல்லத் தொடங்கிற்று, எ - று.

க - து. நளன் கையிலிருந்த வன்னமானது அவன் முகத்தைப் பார்த்துச் சிலநீதிகள் சொல்லத்தொடங்கிற்று என்பதாம்.

'மதிவதனம்' என்றதனாலே அதனைப் பார்க்கையில் அவனோடு பேசுதற்கு ஊக்கமுண்டாயிற் றென்றதாயிற்று. கைப்பிடியினாலே அதற்கொரு வருத்த மில்லையென்பது தோன்ற 'கரமலர்' என்றார். நயம்-நியாயம், "நயமென்ப நியாயநன்றி" (ஆதிப்பொருணிகண்டு) இதனாலறிக. (சுஉ)

[இதுமுதல் மூன்று பாட்டுகளாலே முன்கூறப்பட்ட நயமொழிகள் சொல்லப்படுகின்றன.]

சிறையொளிர் பொன்னிறை செல்வ நல்குமோ
வறைகடல் பனியினா னிறைவ தாங்கொலோ
கறைகெழு வேலினாய் கருத்தி னுள்ளுற
நிறைதரு விழைவினை நீத்தல் வேண்டுமால்.

இ - ள். கறை கெழு - உதிரம் படிந்துள்ள, வேலினாய்-வேலை யுடைய நளராஜனே, சிறை - (என்) சிறைகளிலே, ஒளிர்-விளங்கா நின்ற, பொன் - பொன்னிறமானது, நிறை செல்வம் - குறைவில் லாத செல்வத்தை, நல்குமோ - (உனக்குத்)தருமோ? அறை - ஒலிக் கின்ற, கடல் - (பெரிய) கடலானது, பனியினால் - (அற்பமாகிய) பனியினாலே, நிறைவதாங்கொலோ - நிறையுமோ? கருத்தினுள் - (உன்) மனத்தினுள்ளே, உற - பொருந்த, நிறைதரு - நிறைந்த, விழைவினை - (அப்பொன்னினது) ஆசையை, நீத்தல்வேண்டும்-(நீ) ஒழிக்கவேண்டும், எ - று.

க - து. நளமஹாராஜனே! என் பொன்னிறமானது செல்வந் தருமோ? கடலானது பனியால் நிறையுமோ? நீ உன்னாசையை நீக்க வேண்டுமென் றன்னங் கூறியது என்பதாம்.

முன்பாட்டிலே 'இன்ன பொன்னிறவனங் கண்டிலேன்' என்றுரு ளுகச் சொல்லப்பட்டமையால், தன்னைப் பொன்னுக்காகக் கொல்வா னென்று நினைத்து அன்னம் இவ்வாறு சொல்லியதென்க. 'கறை கெழுவேலினாய்' என்றதனாலே நீ கொலையிற் கொடியை யென்றதா யிற்று. இச்சிறிய பொன்னிறத்திலே உன் பேராசை பழிக்கப்படத் தக்கதாதலால் 'நீத்தல் வேண்டும்' என்றதாயிற்று. முன்னிரண்டு வாக் கியங்களிலுஞ் சாதாரண தருமத்தைச் சொல்லுதலால் தொடர்முழு துவமையணி.] (கூரு)

கோறல்செய் தாலுயிர்க் கொலையொன் றேயலாற்
றேறினர்ப் பிழைத்தவன் பழியுஞ் சேருமாற்
றுறுபாய் கவுண்மதத் தறுகண் யானையாய்
மாறுகொள் பகைஞர்க்கு மிதும னங்கொளார்.

இ - ள். தாறு - முட்கோல், பாய் - பாயப்பெறுகின்ற, கவுள் - கதுப்பையும், மதம் - மதத்தையும், தறு கண் - கோபக் கண்களையும் உடைய, யானையாய் - யானை போல்பவனே, கோறல் செய்தால் - (உன்னை விசுவாசித்திருந்த என்னை நீ) கொல்வையே யானால், உயிர் கொலை ஒன்றே அல்லால் - உயிரைக் கொல்லுதற் பாதகமொ ன்றே யல்லாமலும், தேறினர் - நம்பினவர்க்கு, பிழைத்த - தீங்கு செய்த, வல் பழியும் - கொடிய பாதகமும், சேரும்-(உன்னை) அடை யும்; மாறு கொள் - மாறுபாடுகொண்ட, பகைஞர்க்கும் - விரோதிக ளுக்கும், இது - இவ்விசுவாசகாதகஞ் செய்தலை, மனங்கொளார் - நினையார், எ - று.

**க-து.** நளமஹாராஜனே! என்னைக்கொன்று னுயிர்க்கொலை அல்லாமலும் நம்பினவர்க்குத் தீமைசெய்த பழியு முன்னை யடையு மென்றன்னங் கூறியது என்பதாம்.

'தேறினர்ப் பிழைத்தல்' என்றதனாலே எனக்கு ஒரு தீங்குஞ் செய்யாயென நான் உன்னை நம்பியிருந்தே னென்றதாயிற்று. "நன் றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக், கொன்றாகு மாக்கங் கடை" (திருவள்ளுவர் - கொல்லாமை-அ) என்றவாறே எல்லாப் பாவங்களிலுங் கொலைப்பாவங் கொடிது, அதினும் விசுவாச காதகங் கொடிதென்பது தோன்ற 'வன்பழி' எனப்பட்டது. மதச்செருக்கும் வன்கண்மையும் உடையை யாதலால் இத்தகாத செயல் செய்கின்றா யென்பது குறிப்பித்தற்கு 'மதத் தறுகண் யானையாய்' என்றார். நம்பின பகைவர்க்குத் தீங்கு நினைத்தலும் பாவமாயிருக்கப் பகைவனல்லாதிருந்து விசுவாசித்த என்னைக் கொலைசெய்யப் பற்றலாமோ வென்றதாயிற்று. (கூசு)

> செருக்களத் தேற்றவர்ச் செகுத்த லன்றியுன்
> னருட்கிட னுமெனை யடர்த்த னீதியோ
> முருக்கிதழ் மடந்தையர் முலைதி ளைத்திடுங்
> குருக்கிளர் மணிபுனை குவவுத் தோளினாய்.

**இ-ள்.** முருக்கு - முருக்கம் பூப்போலும், இதழ் - உதடுகளை யுடைய, மடந்தையர் - மாதருடைய, முலை - முலைகளானவை, திளைத்திடும் - அழுந்தப்பெறுகின்ற, குரு - நிறத்தினாலே, கிளர் - விளங்காநின்ற, மணி - இரத்தினாபரணத்தால், புனை - அலங்கரிக்கப்பட்ட, குவவு - திரட்சியையுடைய, தோளினாய் - தோள்களை யுடையவனே, செரு களத்து - போர்க்களத்தில், ஏற்றவர் - (உன்னோடே) எதிர்த்தவரை, செகுத்தல் அன்றி - கொல்லுதல் (நீதியாம்) அன்றி, உன் - உனது, அருட்கு - கருணைக்கு, இடனும் - பாத்திரமாகிய, எனை - (ஒருபுல்லிய பறவையாகிய) என்னை, அடர்த்தல் - கொல்லுதல், நீதியோ - நீதியாமோ, எ - று.

**க-து.** அரசனே! போரி லெதிர்த்தவரைக் கொல்லுதல் நீதி, உம்மையடுத்த வென்னைக் கொல்லுதல் நீதியோ என்று அன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

'எனை' என்றது அற்பமாகிய பறவையா யிருக்கிற வென்னுஞ் சொல்லை விசேடணமாக வேண்டி நின்றது. என்னை எனையெனத் தொகுத்தலாயிற்று. நீதியோவென்னும் ஓகாரம் அநீதியேயாமென்

னும் பிறிது பொருளைத் தந்தது. 'மூலைதிளைத்திடுந் தோளினாய்'என்றதனாலே பெண்டிரோடு கூடிவாழும் நீ அப்படிப்பட்ட என் வாழ்வைக் குலைத்தற்கு எப்படித் துணிந்தா யென்பதைக் குறிப்பித்தாயிற்று. (௬௫)

[இதனாலே அன்னம் பற்பல துயர்மொழிகள் கூறத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

கல்வியி னகன்றிடு கருணை வேந்துளத்
தொல்கலுங் கருணையு முவப்புந் தோன்றிட
வல்கலின் மொழிசில வறைந்து பின்னரும்
பல்பல துயர்மொழி பகர லுற்றதே.

இ - ள். கல்வியின் - கல்வியறிவுபோல, அகன்றிடு - பெருக்கத்தை யடைந்திருக்கின்ற, கருணை - அருளையுடைய, வேந்து-நளராஜனது, உள்ளத்து - உள்ளத்தின்கண், ஒல்கலும் - நாணமும், கருணையும் - அருளும், உவப்பும் - மகிழ்ச்சியும், தோன்றிட - ஏககாலத்திலுண்டாக, அல்கல் இல் - (பொருளால்) சுருங்குத லில்லாத, சில மொழி - சில சொற்களை, அறைந்து - சொல்லி, பின்னரும் - (அதன்) பின்பும், பல் பல - பற்பலவாகிய, துயர் மொழி - (அரசனுக்குத்) துன்பத்தை யுண்டாக்குகின்ற சொற்களை, பகரலுற்றது - (அன்னம்) சொல்லத் தொடங்கிற்று, எ - று.

க - து. அன்னமானது நளனுள்ளத்து நாணமுங் கிருபையு மகிழ்ச்சியுந் தோன்றிடச் சிலமொழி கூறிப் பல துயர்மொழி கூறத் தொடங்கிற்று என்பதாம்.

ஒல்கல் - அசைதல், அது இங்கே நாணத்தை உணர்த்தி நின்றது. முன்னிலையி லிருந்து நிந்தித்தலால் நாணமும், அதன் வருத்தத்தைக் காணுதலால் கருணையும், அது கற்று வல்லோர்போலப் பேசுதலால் மகிழ்ச்சியும் அரசனுக்குண்டாயின. சிலமொழிகளாயினும் நீதிநூலின் பலபொருள்களைத் தழுவிச் சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல் முதலிய அழகமைந்து நிற்கையால் (அல்கலின் மொழிசில) என்றார். "அல்கலுட் சுருங்கல் வைகல்" (ஆதிப்பொருணிகண்டு) இதனாலறிக. (௬௬)

[இதுமுதலாறு பாட்டுகளால் முன் கூறப்பட்ட துயர்மொழிகள் சொல்லப்படுகின்றன.]

பெருகிய மூப்பினிற் றளர்ந்து பேதுறு
மிருமுது குரவரு மென்செய் கிற்பரோ

கருவுயிர்த் தயர்வுறு காதற் பேடையுள்
ளுருகுமே யென்னநெட் டுயிர்ப்பு வீங்கிற்றே.

இ-ள். பெருகிய - நிறைந்த, மூப்பினில் - முதுமையால், தளர்ந்து - மெலிந்து, பேது உறும்-மதிமயக்கங்கொண் டிருக்கின்ற, இருமுது குரவரும் - (என்னுடைய) தாயுந் தகப்பனும், என்செய்கிற்பரோ - (இனி) யாது செய்வரோ, கரு - கருப்பத்தை, உயிர்த்து - ஈன்று, அயர்வுறு - சோர்வடைந்திருக்கின்ற, காதல் - (என்மேல்) அன்புடைய, பேடை - மனைவியானவள், உள் உருகுமே - மனமுருகுவளே, என்ன - என்று, நெடு உயிர்ப்பு வீங்கிற்று - பெருமூச்சு விட்டது, எ - று.

க - து அரசனே! என் தாயுந் தகப்பனு மென் செய்வார்களோ, என்மனைவி மனமுருகுவாளே என்று அன்னம் சொல்லிற்று என்பதாம்.

'என்செய்கிற்பரோ' என்றதனால் நான் அவர்களுக்கு ஏக புத்திரனென்றும், இனி மூப்புத் துன்பத்தோடும் என்னை இழந்த துன்பமும் இரை கொடுப்பாரில்லாத துன்பமுங்கொண்டு இறந்து படுவாரென்றுஞ் சொல்லியதாயிற்று. 'கருவுயிர்த்தயர்வுறும்' என்றதனால் அவளீன்று அதிககாலங் கழிந்ததில்லை யென்றும், 'உள்ளுருகுமே' என்றதனால் அத்துன்பத்தோடு இரைபெறாத துன்பமும் என்னை இழந்த துன்பமுங் கூடுதலால் எப்படிப் பிழைப்பாளென்றுங் குறிப்பித்ததாயிற்று. (கூஎ)

அன்னைமூப் பழிதர வார்கொ லாற்றுவார்
மன்னனெற் படுத்தலும் வெருவி வாவியிற்
றுன்னியாங் கிருந்தபுள் சொற்ற போழ்தினி
லின்னலங் கடலுளாழ்ந் திறக்கு மேகொலாம்.

இ-ள். அன்னை - (என்னுடைய) தாயானவள், மூப்பு - முதுமையினாலே, அழிதரவு - வருந்துதலை, ஆர் - எவர், ஆற்றுவார் - நீக்குவார்; மன்னன் - இவ்வரசனானவன், எற்படுத்தலும் - (என்னைப்) பிடித்தவளவிலே, வாவியில் - தடாகத்திலிருந்து, வெருவி - அஞ்சிப்போய், ஆங்கு - அவ்விடத்தே, துன்னி - நெருங்கி, இருந்த - தங்கிய, புள் - அன்னப் பறவைகள், சொற்ற போழ்தினில் - (இச்செய்தியைச்) சொன்னபோது, இன்னல் - துன்பமாகிய, கடலுள் - சமுத்திரத்திலே, ஆழ்ந்து - அமிழ்ந்து, இறக்குமே - (அவள்) இறந்து போவாளே, எ - று.

க - து. அரசன் என்னைப் பிடித்துக்கொண்டானென்று பறவைகள் சொன்னவளவில் என்தாய் இறக்குமென் றன்னஞ் சொல்லியது என்பதாம்.

ஆங்கென்றது விண்ணுலகத்தில் மானச தடாகத்தைச் சுட்டி நின்றது. ஒருவேளை மூப்புத் துயரத்தை யாற்றுவார் கிடைக்கினும் புத்திர சோகத்தாற் சாவாதிரா ளென்றதாயிற்று. (கூஅ)

புல்லுவிட் டஞ்சிறை நெகிழி னும்பொறா
தல்லல்கூர் பெடையவர் யாங்குற் றாரெனிற்
சொல்லரும் புட்குலங் கலுழூந் துன்பமாய்ந்
தெல்லையி றுயரொடு மிறக்கு மேகொலாம்.

இ - ள். புல்லு விட்டு - தழுவுதலை விட்டு, அம் சிறை - (என்) அழகிய சிறைகளானவை, நெகிழினும் - விலகினாலும், பொறாது - மனம் பொறாமல், அல்லல் கூர் - துன்பமிகுகின்ற, பெடை - (என்) மனைவியானவள், அவர் - என் கணவர், யாங்கு - எவ்விடத்தே, உற்றார் எனின்-அடைந்தாரென்று வினவில், சொல் அரு - (அதற்கு உத்தரம்) சொல்லமாட்டாத, புள் குலம் - பறவைக் கூட்டமானது, கலுழும் - அழாநிற்கும்; துன்பம் - அத்துன்பத்தினாலே, ஆய்ந்து - (என் செய்தியை) ஆலோசித்தறிந்து, எல்லை இல் - அளவில்லாத, துயரொடும் - துன்பத்துடனே, இறக்குமே - (அவள்) இறந்து போவாளே, எ - று.

க - து. என் மனைவியானவள் என் செய்தியைக்கேட் டிறந்து போவாளென் றன்னஞ் சொல்லியது என்பதாம்.

புல்லுதல் என்கிற தொழிற்பெயர் இறுதிநிலை கெட்டுவந்தது. சிறிதும் பிரியப்பொறாத இதற்கு இக்கொடிய செய்தியைச் சொல்வோமாயின் இறந்துவிடுமென்று சொல்ல நாவெழாமல் அழுமென்க, அவ்வழுகையே அச்செய்தியைக் குறிப்பினுணர்த்துகிற உத்தரமாம். கொல், ஆம் - அசைகள். (கூக)

அனிச்சமென் மலரினு நொய்ய வாய்சிறைத்
தனிப்பெடை யமைக்குமென் றளிர்க்கை யாலயன்
றனிப்படு பிரிவெனுஞ் சுடுசொ லென்றலை
நினைத்துமுன் னெவ்வண நிலவக் கோட்டினன்.

இ - ள். அனிச்சமென் - அனிச்சமென்னும், மலரினும் - பூவினும், நொய்ய - மெல்லிய, ஆய் - தேடத்தக்க, சிறை - சிறைகளை

யுடைய, தனி - ஒப்பற்ற, பெடை - (என்) மனைவியை, அமைக்கும் - உண்டாக்குவதாகிய, மெல் தளிர் - மெல்லிய தளிர்போலும், கையால் - கையினாலே, அயன் - பிரமன், துனிபடு - துன்பம் விளைதற்குக் காரணமாகிய, பிரிவு எனும் - பிரிவென்கின்ற, சுடு - சுடாநின்ற, சொல் - சொல்லை, நினைத்து - கருதி, முன் - முன்னே, என் - எனது, தலை - தலையில், எவ்வண்ணம் - எவ்விதமாக, நிலவ - விளங்க, கோட்டினான் - எழுதினான், எ - று.

க - து. பிரம னெப்படிக்கு என் தலையி லெழுதினான் என்பதாம்.

"தனிப்பெடை யமைத்த" எனப் பாடங் கூறின் பெடையைப் படைத்தபின் அதனைப் படைத்தா னென்பது தோன்றுதலாலே முறைபிறழ்வு என்னுங் குற்றந் தங்கும். 'அனிச்சமென் மலரினும்' என்றமையாலும், 'மென்றளிர்க்கையால்' என்றமையாலுங் காரணமாகிய கைக்கும் காரியமாகிய பெடைக்கும் மென்மையுந் தண்மையுஞ் சொல்லப்பட்டன. [மெல்லிய தளிர்க்கையாகிய காரணத்திலிருந்து சுடுசொல் லெழுதுதலாகிய பகையான காரியம் பிறத்தலைச்சொல்லுதலால் உ-வது தகுதியின்மையணி.] (எ0)

வீழுமெற் படுத்தவிக் கொடுஞ்சொன் மென்னிறத்
தாழ்சிறை மடப்பெடை செவியிற் சார்தலு
மாழ்துயர்க் கடலிடை யாழ்ந்தி யானிலாப்
பாழ்படு திசையெலா மருண்டு பார்க்குமே.

இ - ள். வீழும் - (தன்னால்) இச்சிக்கப்பட்ட, என் - என்னை, படுத்த - பிடித்த, இ கொடும் சொல் - இக்கொடுமையை யுணர்த்துகிற சொல்லானது, செவியில் - (தன்) காதில், சார்தலும் - சேர்ந்தவளவிலே, மெல் - மெல்லிய, நிறம் - ஒளி பொருந்திய, தாழ் - நீண்ட, சிறை - சிறைகளையும், மடம் - பேதைமையையுமுடைய, பெடை - (என்) மனைவியானவள், ஆழ் - ஆழம்பொருந்திய, துயர் கடலிடை - துன்பமாகிய கடலுள்ளே, ஆழ்ந்து - முழுகி, யான் - நான், இல்லா - இல்லாமையால், பாழ் படு - பாழடைந்த, திசை எலாம் - திக்குகளனைத்தையும், மருண்டு - மயங்கி, பார்க்குமே - பார்ப்பாளே, எ - று.

க - து. என் மனைவியானவள் துன்பக்கடலுளே முழ்கி நானில்லாமையால் பாழடைந்த திக்கனைத்தையும் மயங்கிப் பார்ப்பளென்றன்னஞ் சொல்லியது என்பதாம்.

'திசையெலாம்' என்பதற்குக் கிழக்காதியெட்டும் மேலுங் கீழும் ஆகியபத்துத் திசைகளுங் கொள்க. இப்பறவையொன் றில்லாமை யால் திசைகளெல்லாம் பாழ்படுமோவெனின், அவ்வத்திசைகளின் மற்றெல்லாப் பொருள்களு முண்டாயிருந்தும் "தன்னை யமிழ்த்தி யது சமுத்திரம்" என்கிறபடி உயிர்த்துணைவ னில்லாமையினாலே பாழ்பட்டனவாகத் தோன்றுமென்க. (எக)

பிரிவெனு மழல்சுடப் பெடையி றக்குமே
யரிதினிற் பெற்றவெம் பார்ப்பெ லாமயர்ந்
திரைபெறுக் குடம்பையு ளரற்றி யெய்திய
பரிவினிற் சாமெனப் பதைத்துச் சோர்ந்ததே.

இ - ள். பிரிவு என்னும் - பிரிவென்கின்ற, அழல் - நெருப்பா னது, சுட - (தன்னைச்) சுட, பெடை - (என்) மனைவியானவள் இறக்குமே - இறந்துபோவாளே; அரிதினில் - அரிய தவத்தினாலே பெற்ற - ஈன்ற, எம் - எம்முடைய, பார்ப்பு எல்லாம் - குஞ்சுகளெல் லாம், அயர்ந்து - தளர்ந்து, இரை - இரையை, பெறு - பெறுமல், குடம்பையுள் - கூட்டினுள்ளே, அரற்றி - கூவி, எய்திய - (தமக்கு) நேரிட்ட, பரிவினில் - துன்பத்தினாலே, சாம் - இறந்துபோம், என - என்று, பதைத்து - துடித்து, சோர்ந்தது - (அன்னம்) மூர்ச் சித்தது, எ - று.

க - து. பெண்சாதி பிள்ளைகள் இறக்குமென் றன்னம் மூர்ச் சித்தது என்பதாம்.

'பெடை யிறக்குமே' என்றதனால் இனித் தாய் தந்தைக ளிரண் டையு மிழந்த அக்குஞ்சுகளுக்கு இரைகொடுப்பா ரில்லையென்பதும் 'இரைபெறுக் குடம்பையிற்சாம்' என்றதனாலே அவை பறக்கமாட் டாத மிகுந்த விளமைப்பருவ முடையனவென்பதுஞ் சொல்லப்பட் டன. புத்திரசோக மெல்லாவற்றினுங் கொடிதாதலாலும் சந்ததி யற்றுப் போங்காலம் நேரிட்டதென்னுந் துயரத்தாலும் மூர்ச்சை யடைந்ததென்க. (எஉ)

[இதனால் அவ்வன்னம் அரசன் கருணையைக் கண்டு களித்தமை சொல்லப்படுகின்றது.]

அளிக்கொரு கடலனு னதனைக் கண்டுகண் டுளித்திடு தண்புனற் றுவலை வீழ்தலிற்
றளிர்த்தமென் சிறையனந் தளர்வு நீங்கியுட்
களித்தது காவலன் கருணை நோக்கியே.

இ - ள். அளிக்கு - அருளுக்கு, ஒரு கடல் அன்னான் - ஒரு கடல்போல்பவன், அதனை - அம்மூர்ச்சை யடைந்தமையை, கண்டு - பார்த்து, கண் - (பார்த்த) கண்களால், துளித்திடும் - (அவனாலே) சொரியப்படுகின்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, புனல் - நீரினுடைய, துவலை - மழையானது, வீழ்தலின் - (தன்மேல்) வீழ்தலினாலே, தளிர்த்த - உணர்வடைந்த, மெல் - மெல்லிய, சிறை - சிறைகளையுடைய, அனம் - அன்னமானது, தளர்வு நீங்கி - ஆயாசத்தினீங்கி, காவலன் - அரசனது, கருணை - அருளின்(பெருக்கத்தை), நோக்கி - பார்த்து, உள் - (தன்) உள்ளே, களித்தது - மகிழ்ந்தது, எ - று.

க - து. அன்னமானது அரசன் கிருபையைக் கண்டு அகமகிழ்ந்தது என்பதாம்.

மூர்ச்சை யடைந்தோர்க்குத் தண்ணிய நீர்த்துளிகளை மேலே தெளிக்கும்போது அது நீங்குமாதலால் அத்துளிகளாலே மூர்ச்சை நீங்கிற்று. கண்ணீர்த்துளிகள் அவலச் சுவையைப்பற்றிய விறலாம். அத்துளிகளால் அவனுள்ளிருந்த கருணையை அறிந்ததென்க. (எரு)

[இநனால் அன்னத்தை விட்டமை சொல்லப்படுகின்றது.]

ஆகுலத் துடன்மட வனத்தை நோக்கிநின்
சேகுறு பொன்னிறச் சிறகர் நோக்குறு
மோகமே பிடித்தனன் முழுது நோக்கின
னேகுழி யேகென விறைவி டுத்தனன்.

இ - ள். இறை - நளராஜனானவன், ஆகுலத்துடன் - துன்பத்துடனே, மடம்-இளமைபொருந்திய, அன்னத்தை-அவ்வன்னத்தை, நோக்கி - பார்த்து, நின் - உனது, சேகு உறு - மாற்றுயர்ந்த, பொன் - பொன்மயமாகிய, நிறம் - ஒளிபொருந்திய, சிறகர் - சிறைகளை, நோக்குறும் - பார்க்கவேண்டுமென்கிற, மோகமே - ஆசையினாலேயே, பிடித்தனன் - (உன்னைப்) பிடித்தேன், முழுதும் - முழுமையும், நோக்கினன் - பார்த்தேன், ஏகு உழி - (நீ) போகத்தக்க விடத்திற்கு, ஏகு என - போவென்று, விடுத்தனன் - (அதனை) விட்டான், எ - று.

க - து. அரசன் அன்னத்தை விட்டான் என்பதாம்,

என்னாலே பிடிக்கப்பட்டமையால் இப்பறவைக்கு இப்படிப் பட்ட துன்பம் விளைந்ததென்று அரசனுக்கு வியாகுலம் உண்டாயிற்

றென்க. 'நோக்குறு மோகமே பிடித்தனன்' என்றமையால் உன்னுற் சொல்லப்பட்டபடி பொன்னுக்காக உன்னைக் கொல்லுதற்குப் பிடித்திலே னென்றதாயிற்று. (எச)

அன்னத்தைக் கண்ணுற்ற படலம் முற்றிற்று.

## அன்னத்தைத் தூதுவிட்ட படலம்.

*அன்னமானது நளன் தன்னை யாதொரு துன்பமுஞ் செய்யாமல் விடுத்ததைப்பற்றி அவனிடத்து வந்து தமயந்தியின் அழகு முதலியவற்றைச் சொல்லியதையும், அவனிடத்து விடைபெற்று அவளிடத்துப் போய் அவளை அவனுக்கு மனைவியாக இசையும்படிச் செய்ததையும் சொல்லுகின்றது.*

[முன் படலத்திலே தமயந்தியும் நளனும் ஒருவர் குணங்களை யொருவர் கேட்டு வருந்தினவிதமும், அவன் அவ்வருத்தம் பொறுது பூங்காவனத்திற் சென்றதும், அங்கே தெய்வ வன்னத்தைப் பிடித்துவிட்ட விதமுஞ் சொல்லி, இந்தப் படலத்தில் அவ்வன்னம் அரசனிடத்து வந்து தமயந்தியி னழகைப் புகழ்ந்து அவனால் தூதுவிடப்பட்டுப் போய் அவளுடன் பாடு பெற்று வந்த விதத்தை உணர்த்தத் தொடங்கினர், அவற்றுள் இப்பாட்டால் அன்னம் தன்னிடத்திற் சேர்ந்தமை சொல்லப்படுகின்றது.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

*பிறைவடங் கிடந்து சுணங்குபூத் தொளிரும் பேரிள வனமுலை திளைப்ப, நறவுகொப் புளிக்குந் தெரியல்சூழ் மார்ப னுண்மலர் பொருவுமென் கரத்திற், றுறவுகொண் டெழுந்த பொலன்சிறை யன்னந் தொல்வினைத் தொடரறுத் தின்ப, நிறைகடற் றிளைக்கு மவரினின் புற்று நீடிரை வாவிபுக் கதுவே.*

இ - ள். நறவு - தேனை, கொப்புளிக்கும் - கக்குகின்ற, தெரியல் - பூமாலையினால், சூழ் - சூழப்பட்ட, மார்பன் - மார்பையுடைய நளமஹா ராஜனானவன், பிறைவடம் - சந்திரஹாரமானது, கிடந்து - தங்கியும், சுணங்கு - தேமலானது, பூத்து - படர்ந்தும், ஒளிரும் - விளங்கப்பெற்றுள்ள, பேரிளவனம் - பெருமையு மிளமையு மழகும் பொருந்திய, முலை - (தமயந்தியினுடைய) முலைகளை, திளைப்ப - அனுபவிக்கும்படியாக, நாள் மலர் பொருவும் - அன்றுபூத்த தாமரை மலர்போலும், மெல் கரத்தின் - மெல்லிய (அவன்) கையினின்றும், துறவுகொண்டு-விடுபட்டு, (தொல்வினை)-பழவினையின், (தொடர்) - சம்பந்தத்தை, (அறுத்து) - ஒழித்து, எழுந்த - புறப்பட்ட, பொலன் - பொன்மயமாகிய, சிறை - சிறைகளையுடைய, அன்னம் - அன்னமானது, (துறவுகொண்டு) - துறவறத்தைக்கொண்டு, தொல்வினை - பழவினையாகிய, தொடர் - சங்கிலியை, அறுத்து - வெட்டி, நிறைகடல் இன்பம் - பேரின்பக்கடலில், திளைக்கும் அவரின்-முழுகியோர்போல, இன்புற்று - இன்பத்தினாலே மிகுந்து, நீள் - நீண்ட, திரை - அலைகளையுடைய, வாவி - தடாகத்தின்கண், புக்கது - பிரவேசித்தது, எ - று.

க - து. அன்னமானது தாடகத்தினிடத்துச் சென்றது என்பதாம்.

சுணங்கு - பொன்னுரைபோற் சிறிதும் பெரிதுமாகப் படர்வது. 'பிறைவடங் கிடந்து சுணங்குபூத் தொளிரும்' என்றதனால் அவற்றால் விளங்குகிற மற்றை மகளிர் முலைகள் போலாது தமயந்தி முலைகள் அவற்றை விளக்குமென்று அம்முலைகளி னியற்கை யழகின் சிறப்பைக் குறிப்பித்ததாயிற்று. பேரிளவன முலையை பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாக்கி அப்படிப்பட்ட முலைகளை யுடையவளாகிய தமயந்தி யெனினுமாம். அப்படிப்பட்ட முலைகளை அனுபவித்தற்குரியது நளனது நறவுகொப்புளிக்குந் தெரியல் சூழ் மார்பே யாதலால் அதனை எடுத்துக் கூறினர். அவ்வன்னம் விட்டதற்குக் கைம்மாறாகத் தமயந்தியைக் கூட்டுதலால் திளைத்தற்குத் துறவுகொள்ளுதல் காரணமாக்கப்பட்டது. திளைப்பவென்னுஞ் செயவெனெச்சந் துறவு கொள்ளுதலாகிய பிறவினைகொண்டது. துறத்தல் - அன்னத்திற்கு அரசனை விட்டு நீங்குதல்; வீடடைந்தோர்க்கு யான் எனது என்கிற பற்றுக்களை விடுதல். தொல்வினைத் தொடரறுத்தல்-அன்னத்திற்கு முன் பிடிபட்டுப் புலம்பிய செயலின் சம்பந்தத்தை யொழித்தல்; வீடடைந்தோர்க்கு அநாதியாகத் தொடர்ந்த கருமத்தை யொழித்தல். கடவுளுலகத்தை 'இன்ப நிறை

கடல்' என்றார். [உவமையணி.] இதுமுதல் முப்பத்தெட்டுப் பாட்டுகள் பெரும்பாலும் முதற்சீரு மூன்றாஞ்சீரு மைந்தாஞ்சீரு மாறாஞ்சீரும் விளச்சீர்களும், மற்றவை மூன்றும் மாச்சீர்களுமாகி வருகிற எழுசீர்க்கழிநெடிலடி நான்குகொண்ட ஆசிரிய விருத்தங்கள். (க)

[இதனால் அன்னம் விடுபட்டபின்பு நிகழ்ந்தமை
சொல்லப்படுகின்றது.]

பொன்னிறத் தூவிப் பவளவாய்ச் செங்காற் பொற்புறு பசியசூட் டரச, வன்னமெய் யுதறிச் சிறையுளர்ந் தயல்சூ ழனக்குழாத் திடைவதி தரலுங், கன்னவி றிரடோ ளிறைகரத் தழுந்துஞ் சிறையினைக் காண்டலும் வெருவி, முன்னைய தன்றென் றிருந்தபுட் குலங்கண் முளரியந் தடத்தகன் றனவே.

இ - ள். பொன் - பொன்னினது, நிறம் - காந்தி பொருந்திய, தூவி - இறகையும், பவளம் - பவளம்போலும், வாய் - வாயையும், செம் - சிவப்புநிறம்பொருந்திய, கால் - அடிகளையும், பொற்பு உறு - அழகால் மிகுந்த, பசிய - பசுமை பொருந்திய, சூட்டு - உச்சிக் கொண்டையையுமுடைய, அரச அன்னம்-அரசவன்னமானது, மெய்-(தன்) உடம்பை, உதறி - (சிலிர்த்து) உதறி, சிறை - சிறைகளை, உளர்ந்து -(மூக்கினாலே) கோதிக்கொண்டு, அயல் - பக்கத்தில், சூழ் - (தன்னைக் கண்டு வந்து) சூழ்ந்த, அன்னம் - அன்னங்களது, குழாத்து - கூட்டத்தினது, இடை - நடுவில், வதிதரலும் - தங்கியவளவில், இருந்த - (அங்கு) இருந்த, புள் குலங்கள் - அப்பறவைக் கூட்டங்களானவை, கல் - மலைபோல, நவில் - செய்யப்பட்ட, திரள் - குவிந்த, தோள் - தோள்களையுடைய, இறை - நளராஜனது, கரத்து- கையினால், அழுந்தும் - அழுந்தின, சிறையினை - (அதன்) சிறைகளை, காண்டலும் - பார்த்தவளவில், முன்னையது - அரசனாற் கொண்டு போகப்பட்ட அரசவன்னம், அன்றென்று - அன்றென்று நினைத்து, வெருவி - அஞ்சி, முளரி - தாமரையையுடைய, தடத்து - தடாகத்தினின்றும், அகன்றன - நீங்கிப்போயின, எ - று.

க - து. தடாகத்தி லிருந்த அன்னங்களானவை இவ்வன்ன முன்னைய தல்லவென்று நீங்கிப்போயின என்பதாம்.

மெய்யுதறல் புழுதி உதிர்தற்கும், சிறையுளர்தல் தினவுதீர்தற்குமாம். அரசவன்ன மாதலாற் பறவைக் கூட்டத்துக்கு நடுவே தங்கியதென்க. முன்னைய தன்றெனவே இது வேற்றுப்பறவை

யென்று நினைத்தன வென்றதாயிற்று. ஆகவே வேற்றுப் பறவை யைக் காணும்போது அஞ்சிப் பறந்துபோதல் பறவைகளுக் கியல் பாதலால் வெருவினவென்க. [பறவையின் சாதித்தன்மையைச் சொல்லுதலால் தன்மை நவிற்சியணி.] (உ)

[இதனால் அன்னம் அரசனிடத்துக்கு மீண்டுவந்து பேசத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

புள்ளின மிரிய மதுக்குடம் விரிந்தாற் போலுமென் மலர்நறும் பொகுட்டி, னுள்ளுறை யன்னங் கொலைத்தொ ழில் சிறிது முளுற்றில னிறையெனத் தேறிக், கள்ளவிழ் கமல மலரென வகன்ற கரத்தினின் மீட்டும்வந் தெய்தி, யள்ளிலை நெடுவே லண்ணற னுளத்தி லதிசய மிகவிளைத் துரைக்கும்.

இ - ள். புள் - பறவைகளது, இனம் - கூட்டமானது, இரிய - அஞ்சியோட (அதன்பின்), மது குடம் - தேன்குடமானது, விரிந் தால் - வாய்மலர்ந்ததாயின், போலும் என் - ஒக்குமெனப்படுகின்ற, மலர் - தாமரைப்பூவினது, நறு - பரிமளம் பொருந்திய, பொகுட்டி னுள் - கொட்டையின்கண்ணே, உறை - தங்கிய, அன்னம் - அவ் வன்னமானது, கொலை - கொலையாகிய, தொழில் - தொழிலில், சிறிதும் - சிறிதையாயினும், இறை - அரசனானவன், உளுற்றிலன் என - (என்னிடத்தே) செய்திலனென்று, தேறி - தெளிந்து, கள் - தேனையுடைய, அவிழ் - மலர்ந்த, கமலம் மலர் என - தாமரைப் பூவென்று (மயங்கியதுபோல), அகன்ற - (முன்னேதான்) நீங்கப் பெற்ற, கரத்தினில் - கையின்கண்ணே, மீட்டும் - திரும்பியும், வந்து - வந்து, எய்தி - அடைந்து, அள் - கூர்மைபொருந்திய, இலை - இலைபோலும், நெடு - நெடிய, வேல் - வேலையுடைய, அண் ணல் - அவ்வரசனது, உள்ளத்தில் - மனத்தின்கண்ணே, அதிசயம் - ஆச்சரியத்தை, மிக - மிகுதியாக, விளைத்து - உண்டாக்கி, உரைக் கும் - சொல்லும், எ - று.

க - து. அன்னமானது திரும்பவும் நளன்கையில் வந்து அதி சயம் விளைவித்துச் சொல்லும் என்பதாம்.

'கொலைத்தொழில் சிறிது முளுற்றிலன்' என்றதனால் கைப்பிடி யினாலும் வருத்திலனென்றதாயிற்று. மீட்டுமென்னும் பிறவினை தன்வினைப் பொருளில் வந்தது. "நட்பாட றேற்றா தவர்" (திருவள் ளுவர் - புறங்கூறாமை - எ) என்பதுபோல. நெடுநாட் பழகி நம்

பிக்கை பெற்றதுபோலத் தானாக விரைந்து வந்தமையால் அரசனுக்கு ஆச்சரிய முண்டாயிற் றென்பது கருத்து. அன்றியும் 'நெடுவேலண்ணல்' என்றதனால் ஆயுதபாணியாகிய அவனிடத்து அப்படி வருதல் சிறிதுங்கூடாத காரியமாதலால் 'மிகவிளைத்து' என்றார். 'விரிந்தாற் போலு மென்மலர்' என்பதற்கு விரிந்தாற்போன்ற மெல்லிய தாமரை மலர் என்றுரைப்பினுமாம். மலர் எனப் பொதுப்படக் கூறினாரேனும் 'மதுக்குடம் விரிந்தாற் போலுமென் மலர்நறும் பொகுட்டி னுள்ளுறை யன்னம்' என்றமையானும், 'கமல மலரென' என்று மேல்வருதலானும் அது தாமரைமலரைக் குறித்தது. தன்-அசை. [மதுக்குடத்திற்கு வாய்மலர்தலில்லாமையால் இல்பொருளுவமையணி. அரசன் கையை யடைதற்கு ஏதுவாகாத அம்மயங்குதலை யேதுவாகக் குறித்தலாலே ஏதுத்தற்குறிப்பணி. மயங்கியதுபோ லென்னுஞ் சொற்கள் தொக்கு வந்தன.] (௯)

[இதனால் தனக்குச் செய்த வுதவியால் அது அரசனநுளைப் புகழ்தல் சொல்லப்படுகின்றது.]

அளியின முரன்று துளிநறு வருந்து மைங்கணைக் கிழவநன் னெறிக, டெளிவரு நூலோர் வேட்டமன் னவர் தஞ் செய்தொழி லென்பரெற் படுத்து, மெளிவரு மென்ற னயர்வினை நோக்கி விடுத்தலி னிரங்குநீர்த் தரங்க, நளிர்கட லுடுத்த புடவி யிற்றரும நாட்டிய துனதுபே ரளியே.

இ - ள். அளி இனம் - வண்டினமானது, முரன்று - ஒலித்து, துளி - துளிக்கின்ற, நறு-தேனை, அருந்தும்-உண்ணப் பெறுகின்ற, ஐங்கணை - பஞ்சபாணத்திற்கு, கிழவ - உரியமன்மதனே, நல் நெறிகள் - நல்வழிகளை, தெளிவரு - ஐயந்திரிபின்றியுணர்ந்த, நூலோர்- தருமநூலை யுடையோராகிய, மன்னவர் - அரசரும், வேட்டம் - வேட்டையை, தம் - தமக்கு, செய் - செய்தற்குரிய, தொழில் - தொழிலாகும், என்பர் - என்று சொல்லுவார்; (அப்படியிருக்க), இரங்கு - ஒலிக்கின்ற, நீர் - குணம்பொருந்திய, தரங்கம் - அலைகளையுடைய, நளிர் - குளிர்ச்சி பொருந்திய, கடல் - கடலை, உடுத்த - மருங்கிற் கொண்ட, புடவியில்-பூமியின்கண், என் படுத்தும் - (நீ) என்னைப் பிடித்தும், எளிவரும் - எளிதிற்கிடைத்த, என்-எனது, அயர்வினை- வருத்தத்தை, நோக்கி - பார்த்து, விடுத்தலின் - விடுதலால், தருமம் - இந்தத் தருமத்தை, நாட்டியது-(உன்னிடத்தே) நிறுத்தியது, உனது - உனது, பேர் - பெரிய, அளியே - கருணையே (இதற்கையமில்லை), எ - று.

க - து. அன்ன மரசனைப் புகழ்ந்து சொல்லிற்று என்பதாம்.

'அளியின முரன்று துளிநறு வருந்து மைங்கணைக் கிழவ' இவ ற்றை ஒருமொழியாகக்கொண்டு மன்மதனென்று பொருள்கொள்க; அவ்வடைகள் அப்பொருளை விளக்குதற்குக் கூடிவருதலால். மன்னவருமென்னும் உயர்வு சிறப்பும்மை தொக்கது. நூலோரை மனு முதலியோரென்று கூறி அவர் வேட்டை மன்னவர் தொழிலென்ப ரெனினுமாம். மிருகங்கள் பயிர் முதலியவற்றை யழித்தலாலும், பறவைகள் மல மூத்திராதிகளாலே பூஞ்சோலை பூந்தடாக முதலிய வற்றைக் கெடுத்தலாலும் அவற்றைக் கொல்லுதல் குற்றவாளியைத் தண்டித்தல்போலு மாதலால் அரசர்க்குரித்தென்று அறநூல் கூறு மென்க. "முதனிலை யின்றியுந் தொழிற்பெயர் மொழிகுவர்" (இலக் கணக்கொத்து-வினையியல்-கூ) இவ்விதியால் வேட்டம் என்றது முதனிலையில்லாத தொழிற்பெயர். 'புடவியில் விடுத்தலின்' என் றதனால் எனக்கொப்பான அரிய பொருள்களை வருந்திச் சம்பாதிப் பாரன்றி அவை யெளிதிற் கிடைப்பிற் கைவிடுவா ரொருவரு மில் லாத பூமியி லென்றதாயிற்று. விடுத்தலறத்தை நாட்டியது பேரளி யென்று எப்படி யறிந்தாயெனின், புகையினாலே நெருப்பை யறிதல் போல அறநூல் விதியையு நோக்காது என்னயர்வை நோக்கி விடுத்த லால் அனுமிதித்தறிந்தே னென்றதாயிற்று. ஏகாரம்-தேற்றப்பொ ருளில் வந்தது. [அரசனாகிய வுபமேயத்தை ஐங்கணைக் கிழவனாகிய வுபமானச் சொல்லினா லாகுபெயராகச் சொல்லுதலால் உருவக வுய ர்வு நவிற்சியணி. அரசனழகை யிங்கே சிறப்பித்ததற்கு அவன் வடிவ மேயன்றிச் செய்கையு மழகிதென்பது கருத்தாம்.] (௬)

["இதனாலே ஆயின் மீண்டிங் கேன்வந்தாய்" என்னும் வினாவிற்கு உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

வருந்தமுன் புகன்ற கொடியவென் மொழியின் வரு பிழை யனைத்தையு மின்னே, திருந்தலர்க் கடந்தோய் மகிழு மா செய்து தீர்க்குவன் றினஞ்செய்வோன் வெய்தா, விரிந் ததன் கதிரி னலைகட லுடுத்த மேதினி யிடத்தைபைங் கூழ் கள், கரிந்தன தளிர்ப்ப வெள்ளிவீ ழுன்ன கணமழை பொ ழிவது கடுப்ப.

இ - ள். திருந்தலர் - பகைவரை, கடந்தோய் - வென்றவனே, முன் - நான் பிடிபட்டிருந்தபோது, வருந்த - (நீ) வருந்தும்படி, புகன்ற - சொல்லப்பட்ட, என் - எனது, கொடிய - கொடிதாகிய,

மொழியின் - சொல்லினால், வரு-வந்த, பிழை அனைத்தையும்-குற்ற முழுதையும், மகிழுமாறு - (வருந்தியநீ) மகிழும்படியாக, செய்து - (ஒரு பெரிய வுபகாரத்தைச்) செய்து, அலை - அலைகளையுடைய, கடல் - கடலை, உடுத்த - மருங்கிற்கொண்ட, மேதினியிடத்த - பூமியிலுள்ளனவாகிய, பைங்கூழ்கள் - பயிர்களானவை, (வருந்த) - வருந்தும்படி, தினஞ்செய்வோன் - சூரியனானவன், வெய்தா - கொடிதாக, விரிந்த - விரிக்கப்பட்ட, தன் - தனது, கதிரின் - கிரணத்தினால், (வரு)-வந்த, பிழை அனைத்தையும்-குற்றமுழுதையும், கரிந்தன-வாடிய அப்பயிர்கள், தளிர்ப்ப - செழிக்கும்படியாக, வெள்ளி வீழ் அன்ன - வெள்ளி விழுதுகள்போலும், கணம் - துளிகளையுடைய, மழை - மழையை, பொழிவது கடுப்ப - பொழிவதுபோல, இன்னே- இப்போதே, தீர்க்குவன் - (நான்) தீர்ப்பேன், எ - று.

க - து. அரசனே! நான்செய்த குற்றத்தை நீர் மகிழும்படி தீர்ப்பேனென் றன்னஞ் சொல்லியது என்பதாம்.

விரித்தவென்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது. உபமான உபமேயங்களி லொன்றற்கொன் றிணங்கவேண்டுஞ் சொற்கள் கூட்டப்பட்டன. எப்படி சூரியன் தன் சுடுங்கதிரால் வருந்திய பயிரைத்தானே மழைபெய்து தளிர்ப்பிப்பானோ அப்படியே என் கொடுஞ்சொல்லால் வருந்திய வுன்னை யானே ருபகாரஞ்செய்து மகிழ்விப்பேனென்பது பொருள். மகிழுமாறு என்பது மகிழுமா என ஈறு தொகுத்தலாயிற்று. தினஞ்செய்வோன் - திநகரன் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. சூரிய கிரணத்தாற் பூமியிலுள்ள நீரணுக்கள் வானத்திற் கொண்டுபோகப்பட்டு மேகமாய் மழை பெய்யுமாதலிற் சூரியன் மழைக்கு நிமித்தகாரணமாத லறிக. "நீங்கிய விகாரப் பிரமமா மீச னிகழ்த்துமோ தொழில்பல வென்னிற், பூங்கதிரிச்சை யின்றியே வாரிப் பொழிமழைக் கதிரினாற் பொழிந்தே, யாங்கதி னிழலாய்ப் பொருந்தியந் நிழலை யலர்முகி லான்மறைத் தளித்துத், தூங்கிம கரத்தால் வெங்கதி ரானீர் தொலைத்ததைத் தன்னொடாக் குதல்போல்" (வேதாந்தசூடாமணி-திருக்குவிவேகம்-௨௮) இதனாலறிக. வெள்ளி வீழன்ன கணமழையென்னு முபமான முகத்தாலே தன்னாலே செய்யப்படு முபகாரம் பெரிதா மென்பதுங் காட்டியது. அதை வெளிப்படச் சொல்லின் தற்புகழ்ச்சியா மாதலின் எப்போது செய்யுமோ வென்னுமைய மொழித்தற்கு 'இன்னே' என்றது. [இல்பொருளுவமையணி.] (௫)

[இதனாலே சக்கிரவர்த்தியாகிய வெனக்கு உன்னாற் செய்யப்படும் நன்றி யாதென்னும் வினாவிற்கு உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

மல்லலம் புவனம் பொதுவறப் புரக்கு மன்னவர் மன்னநின் றனக்கோர், புல்லிய பறவை யியற்றுகைம் மாறொன் றிலதெனும் புணர்ப்பறிந் தாலு, மொல்லையிற் கைம்மா றியற்றுதி யென்னு மருத்தியென் னுளத்தின தாகி, யல்லலுற் றழுந்த வீருமா லதனை யடிகள்கேட் டருடியென் றறையும்.

இ - ள். மல்லல்-வளம்பொருந்திய, புவனம்-பூமியை, பொது-பொதுமையினின்றும், அற - நீங்க, புரக்கும்-காக்கின்ற, மன்னவர் மன்ன - ராஜாதிராஜனே, நின்தனக்கு-உனக்கு, ஓர் புல்லியபறவை-ஒரு சிறிய பறவையாலே, இயற்று-செய்யத்தகும், கைம்மாறு ஒன்று-ஓரெதிர்நன்றி, இலது எனும் - இல்லையென்கின்ற, புணர்ப்பு - நியாயத்தை, அறிந்தாலும் - (யான்) அறிந்திருந்தும், ஒல்லையில் - விரைவிலே, கைம்மாறு - ஒரெதிர்நன்றியை, இயற்றுதி என்னும் - செய்யென்றேவுகின்ற, அருத்தி - ஆர்த்தியானது, என் - எனது, உளத்தினது ஆகி - மனத்திலுள்ளதாகி; அல்லல் உற்று - துன்பமிகுந்து, அழுந்த - (அதில்) அழுந்தும்படியாக, ஈரும் - அறுக்கின்றது; அடிகள்-சுவாமீ, அதனை - அந்நன்றியை, கேட்டு அருடி என்று - கேட்டருளென்று, அறையும் - (அன்னம்) சொல்லும், எ - று.

க - து. சக்கிரவர்த்தியே! என் வார்த்தையைக் கேட்டருளுமென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

பொதுவறப் புரத்தலாவது - பலவரசர்க்கும் பொதுமையைக் கெடுத்துத் தனக்கே சிறந்ததாகக் கொண்டாளுதல். நீதியால் எல்லா அரசரும்போ லன்றி விசேடமாகப் புரத்தலெனினுமாம். பறவையென்னும் படர்க்கைப் பெயர் தன்மையில் வந்தது இடவழுவமைதி. உடம்பு நிலையாமைபற்றி ஒல்லையினென்றது. "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது, கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின், முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா, னற்கா யுதிர்தலு முண்டு" (நாலடியார்-இளமை நிலையாமை-க) இதனாலறிக. இயற்றுதி, அருடி என்னு முன்னிலை வினைமுற்றுகள் "ஏவலொருமைக் கியலுமாய்திமோ" (தொன்னூல் விளக்கம்) இவ்விதியால் ஏவற்பொருளில் வந்தன. ஆர்த்தி யென்கிற வடமொழி அருத்தியெனத் தற்பவமாயிற்று. ஆர்த்தி-விருப்பம்; அதாவது தன்னாற் செய்யப்பட

டதைப் பின்னே தீதென்று அறிந்து வருந்துதல் 'புல்லிய பறவை அல்லலுற் றழுந்த வீரும்' என்றவற்றால் அவ்வுபகாரஞ் சிறிதாயிருந் தாலும் என் வருத்த நோக்கிப் பெரிதாகப் பாவித்து ஏற்றுக்கொள் தல் உனக்குக் கடனு மென்றதாயிற்று. (

[இதனால் அன்னம் தன் சொல்லை விரும்பிக்கேட்க வேண்டுமெனல் சொல்லப்படுகின்றது.]

**பொ**ன்னினிற் செய்த வள்ளவா யமுதம் பூவை யைக் கிள்ளையை யருத்திக், கன்னலி னமிழ்திற் கனிந்தமென் சொற்கள் பயிற்றியுங் கேட்டுளங் களிப்பார், மன்னவர் மன்ன நின்னுளத் தேறா மடமொழி யாயினு மீதோ, ரன்ன மென் சொல்லென் றதிசயஞ் சிறப்ப வகமலர்ந் தினிதுகேட் டருளாய்.

இ - ள். பொன்னினில் - கனகத்தினாலே, செய்த - செய்யப் பட்ட, வள்ளவாய் - கிண்ணத்திலுள்ள, அமுதம் - அமிர்தத்தை, பூவையை - நாகணவாய்ப் புள்ளையும், கிள்ளையை - கிளியையும், அருத்தி - குடிப்பித்து, கன்னலின் - சர்க்கரையினும், அமிழ்தின் - அமிர்தத்தினும், கனிந்த - மதுரமுதிர்ந்த, மெல் - மெல்லிய, சொற் கள் - சொற்களை, பயிற்றியும் - கற்பித்தும், கேட்டு - (அவைபேசக்) கேட்டு, உளம் களிப்பார்-(உலகத்தார்) மனமகிழுவார் (ஆகையால்), மன்னவர் மன்ன - ராஜாதி ராஜனே, ஈது-இச்சொல்லானது, நின் உளத்து-உனது மனத்தில், ஏறா-ஏறமாட்டாத, மடம் - அறியாமை யோடுகூடிய, மொழி ஆயினும்-சொல்லாயினும், ஓர் அன்னம்-ஓரன் னத்தினது, மெல் - மெல்லிய, சொல் என்று - மொழியென்று, அதிசயம்-ஆச்சரியமானது, சிறப்ப-சிறந்துதோன்ற, அகம் மலர்ந்து - மனமகிழ்ந்து, இனிது - இனிதாக, கேட்டருளாய்-(நீ) கேட்டருளு வாய், எ - று.

க - து. தன் சொல்லை விரும்பிக் கேட்கவேண்டுமென்று அன் னஞ் சொல்லியது என்பதாம்.

'பயிற்றியுங் கேட்டுளங் களிப்பார்' என்றதனால் அம்முயற்சி செய்யாதிருக்க அவை தாமாகவே வந்து பேசுமாயின் யார்தான் செவி கொடாரென்பது தோன்றுகின்றது. 'நின்னுளத்தேறா மடமொழி யாயினும்' என்றதனால் என்சொல் பயனற்றதாகத் தோன்றினாலும் பூவைகிளிகளின் சொற்கள்போல உன் செவியறிவிற் கின்பஞ் செய் தற்பொருட்டாவது இனிதாகக் கேட்கவேண்டு மென்றதாயிற்று.

கேட்டருளாய் என்கிற முன்னிலை யெதிர்மறை வினைமுற்று உடன் பாட்டுப் பொருளில் வந்தது வேண்டிக்கோடற் பொருள்பற்றி. இத ற்குவிதி "செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற், செய்யென் கிளவி யாகிட னுடைத்தே" (தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-எச்ச வியல்-௫௪) என்பதாம். [அப்பறவைகளின் சொல்லிலே தீஞ்சுவை மிகுவித்தற்குக் காரணமாகாத பொன்னினிற் செய்த வள்ளவாயமு தம் அருத்துதலை அதற்குக் காரணமாகச் சொல்லுதலாற் கற்றோர் நவிற்சியணி. அமுதம்-அம்ருதம் என்னும் வடசொற்றிரிபு; சாவா மைக் கேதுவானது என்பது பொருள். உலகத்தார் பூவை கிளிக ளின் சொல்லைக் கேட்டலாகிய பொதுப் பொருளால் அன்னத் தின் சொல்லையுங் கேட்கலா மென்னுஞ் சிறப்புப் பொருளைச் சாதி த்தலால் வேற்றுப் பொருள் வைப்பணி.] (எ)

[இது முதலிய பாட்டுகளால் முன்னே 'அடிகள் கேட்டருடி' என்று சொல்லப்பட்டதில் அதையென்று சுட் டப்பட்டது சொல்லப்படுகின்றது.]

குடவளை யினங்கள் வயிறுளைந் தீன்ற குருமணி கரு வென வயிர்த்து, மடன்முறுக் கவிழுங் கமலமென் பொகு ட்டில் வரிச்சிறைக் குருகடை கிடக்குந், தடநிறை வாளை பகட்டின முகளுந் தண்பணை விதர்ப்பநா டுடையோன், விடு சுடர் பரப்பி விளங்குபொற் கழலான் வீமனென் றுளனொரு வேந்தன்.

இ - ள். குடம் - குடம்போலும், வளை இனங்கள் - சங்கினங்க ளால், வயிறு - (தம்) வயிறு, உளைந்து - நொந்து, ஈன்ற-தரப்பட்ட, குரு - நிறம்பொருந்திய, மணி - முத்துகளை, கரு என - முட்டைக ளென்று, அயிர்த்து-மயங்கி, மடல்-இதழ்களது, முறுக்கு அவிழும் - கட்டவிழ்ந்த, கமலம் - தாமரைப்பூவினது, மெல்-மெல்லிய, பொகு ட்டில் - கொட்டையின் கண்ணே, வரி - நீட்சிபொருந்திய, சிறை - சிறைகளையுடைய, குருகு - நாரைகளானவை, அடை கிடக்கும் - அவயங்காக்கப் பெறுகின்ற, தடம் - தடாகத்தையும், நிறை-பருத்த, வாளை - ஆண்வாளைகளானவை, பகட்டு - எருமைக்கடாக்களுடைய, இனம் - இனத்தின்மேல், உகளும் - குதிக்கின்ற, தண் - தண்ணிய, பணை - கழனிகளையும் உடைய, விதர்ப்பநாடு - விதர்ப்பதேசத்தை, உடையோன் - உடையவனும், விடு - வீசப்படுகின்ற, சுடர் - கிரண ங்களை, பரப்பி - விரித்து, விளங்கு - விளங்காநின்ற, பொன்-பொன் லாகிய, கழலான்-வீரக்கழலையுடையவனும் ஆகிய, ஒரு வேந்தன்-

ஓரரசனானவன், வீமன் என்று-வீமனென்று சொல்லப்பட்டு, உளன்-இருக்கின்றான், எ - று.

க - று. விதர்ப்பதேசத்தை யாளும் வீமராஜனென்னு மோரரச னிருக்கிறா னென்றது என்பதாம்.

விதர்ப்ப நாட்டில் நிலவள நீர்வளங்களைப் புகழ்தலால் வீமனது செல்வச் சிறப்பும், அவன் வீரக்கழலின் விளக்கத்தைச் சொல்லுத லால் அவனரசாட்சிச் சிறப்புஞ் சொல்லியவாறும். ஆகவே பின் அவன் மகளைக்குறித்துச் சொல்லப்படுஞ் சம்பந்தத்திற்கு அவனைத் தனக்குத் தகுந்தவனாகக் கொள்ளுதற்கு அடிப்படை செய்ததாயிற்று. குருகு-நாரை யென்பது, "குருகுவண் டான மென்ப கொய்யடி நா ரையின் பேர்" (சூடாமணி நிகண்டு - விலங்கின் பெயர்த்தொகுதி-௬௨) இதனாலறிக. குருகு-அன்னம் எனினுமாம். "அரிவளை பொன் மகிழா யிழைக்கீயுங் கொலந்திவந்து, முரிவளை முத்துஞ் சினையு மயங்க முறைசெறுத்து, வரிவளையு மன்னமுந் தம்மிலே வழக்கா டவலம், புரிவளை யூடறுக்குங் குருகூரெம் புரவலனே" என்றார் மஹாகவி. அந்நாரைகள் முத்துகளைத் தம் முட்டைகளென்று மயங் கலால் மயக்கவணி.] (அ)

அருந்தவத் தமன முனியருள் வரத்தா லாயிழை யரம்பையர் தம்மின், முருந்திள முறுவ லாகமங் கையரின் முகிழ்முலைப் புவிமடந் தையரின், வருந்தியு முவமை கூறு தற் கரிதா வனப்பொரு வடிவெடுத் தனைய, கருந்தட நெடு ங்கட் கதிர்முலைத் துவர்வாய்க் கன்னியை யரிதினிற் பயந் தான்.

இ - ள். அரு - அரிய, தவம் - தவத்தையுடைய, தமனமுனி - தமனமுனியினின்றும், அருள் - அருளாற் பெறப்பட்ட, வரத்தால் - வரத்தினாலே, ஆய் - ஆராய்ந்தெடுக்கப்பட்ட, இழை - ஆபரணங் களையுடைய, அரம்பையர் தம்மின் - தெய்வமங்கையருள்ளும், முரு ந்து - மயிலிறகினடிபோலும், இளமுறுவல் - சிறிய பற்களையுடைய, நாகமங்கையரின் - நாகலோக மங்கையருள்ளும், முகிழ் - தாமரை யரும்புபோலும், முலை - முலைகளையுடைய, புவி மடந்தையரின் - பூலோகத்து மங்கையருள்ளும், வருந்தியும் - வருத்தமுற்றும், கூறு தற்கு - சொல்லுதற்கு, உவமை - உவமானம், அரிதா-இல்லாததாக, வனப்பு - அழகானது, ஒரு வடிவு - ஒரு (மங்கை) வடிவத்தை, எடுத் தனைய-எடுத்தாற்போலும், கரு-கரிய, தடம் - விசாலம் பொருந்திய,

நெடு - நெடிய, கண் - கண்களையும், கதிர் - காந்தி பொருந்திய, முலை - முலைகளையும், துவர் - பவளம்போலும், வாய் - வாயையு முடைய, கன்னியை-ஒரு பெண்ணை, அரிதினில்-அரிய செயலால், பயந்தான் - (அவ்வீமராஜன்) பெற்றான், எ - று.

க - து. தமனமுனி வரத்தால் வீமராஜன் ஒரு பெண்ணைப் பெற்றான் என்பதாம்.

'அருந்தவத் தமனமுனி' என்றதனால் அவன் மேலான வரத்தைத் தருதற்கு வல்லவனென்பது குறிக்கப்படுகின்றது. தமனமுனி வரமென்றது தமனமுனியருள் வரத்தா லென்றதனாலே அம்முனி வீமன் தனக்குச்செய்த வழிபாட்டின் மிகுதியால் அவன்மேற் கருணை கூர்ந்து கொடுக்கப்பெற்ற தென்றதாயிற்று. அரம்பையர்க்கு 'ஆயிழை' என்றும், நாகமங்கையர்க்கு 'முருந்திள முறுவல்' என்றும், புவி மடந்தையர்க்கு 'முகிழ்முலை' என்றும் அடைகள் கொடுக்கப்படுதலால் அவ்வவ் வுலகத்திற் சிறந்த அரச மகளிரென்று கொள்க. வருந்தியுமுவமை கூறலாவது-அவர் குணங்களையெல்லா மாராய்ந்து ஒருபுடையொப்பாகக் கூறுதல். இங்கே அரிதென்றது இன்மைப்பொருளில் வந்தது. "உறற்பால தீண்டா விடுதலரிது" (திருக்குறள்), "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான் - மனக்கவலை மாற்றலரிது" (திருக்குறள்), "விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே - பசும்புற் றலைகாண் பரிது" (திருக்குறள்) என்பவற்றிலும் அரிது இன்மைப்பொருள் தருதல் காண்க. வடிவெடுத்தாலென்பது ஈறு கெட்டு வந்தது. மூன்றுலகங்களிலும் உபமான மில்லாமையால் 'வனப்பொரு வடிவெடுத்தனைய' என்றது. கண்களு முலைகளும் வாயும் போகத்திற் சிறந்தவை யாதலால் அவை சிறப்பித்துச்சொல்லப்பட்டன. அரசனுக்கு அவள்மே லாசை பிறப்பித்தற்கு இன்னும் விவாகமில்லையென்பது தோன்றக் 'கன்னி' என்றது. அரிதினிற் பயத்தல் - நெடுங்காலம் மகவில்லையென்று வருந்தி நோற்றமையாம். (௧)

களைகடிந் தொதுங்குங் கடைசியர் நெடுங்கண் காவி மென் மலரெனக் கருதி, விளரிவண் டினங்க ளலமருங் கழனி விதர்ப்பர்கோன் றவத்தினிற் றோன்றி, முளரியந் தவிசி வினிதுவீற் றிருக்கு முகிழ்முலை மதர்விழித் திருவே, தளிர் நலங் கவற்று மலத்தக மலர்த்தாட் டமயந்தி யெனும்பெயர் தரித்தாள்.

இ - ள். முளரி - தாமரைப்பூவாகிய, அம் - அழகிய, தவிசில் - ஆதனத்தில், இனிது - இனிதாக, வீற்றிருக்கும் - எழுந்தருளியிருக்

கின்ற, முகிழ் - தாமரையரும்புபோலும், முலை - முலைகளையும், மதர் - மதர்த்த, விழி - கண்களையுமுடைய, திருவே - ஸ்ரீதேவியே, களை - (பயிர்க்) களையை, கடிந்து - பிடுங்கி, ஒதுங்கும் - நடக்கின்ற, கடைசி யர் - உழத்தியருடைய, நெடு கண்-நெடியகண்களை, காவி - நீலோற் பலங்களுடைய, மெல் மலர் என - மெல்லிய மலர்களென்று, கருதி - நினைத்து, விளரி - விளரிராகத்தைப் பாடுகின்ற, வண்டு - வண்டுக ளுடைய, இனங்கள் - இனங்களானவை, அலமரும் - சுழலுகின்ற, கழனி - கழனிகளையுடைய, விதர்ப்பர் - விதர்ப்ப தேசத்தாருக்கு, கோன் - அரசனாகிய வீமனது, தவத்தினில் - தவத்தினாலே, தோ ன்றி - பிறந்து, தளிர்நலம் - தளிர்களிற் சிறந்ததை, கவற்றும் - வரு த்துகின்ற, அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பையுடைய, மலர் - செந் தாமரை மலர்கள் போலும், தாள் - பாதங்களையுடைய, தமயந்தி எனும்-தமயந்தியென்கிற, பெயர் - பெயரை, தரித்தாள் - தரித்திருக் கின்றாள், எ - று.

க - து. இலக்குமியே தமயந்தியென்னும் பெயரைத் தரித்திருக கிறாள் என்பதாம்.

'கடைசியர் நெடுங்கண் காவிமென் மலரெனக் கருதி' என்று அந் நாட்டிலுள்ள சாதாரணமான மகளிரழகைச் சிறப்பிக்கவே அரசன் மகளாகிய தமயந்தியினழகு இத்தன்மையதென்று விளங்குமாறறிக. அலமரல் - சுழலலென்பது, "அலமர றெருமர லாயிரண்டுஞ் சுழ ற்சி" (தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-உரியியல்-கச) இதனாலறிக. 'திருவே' என்னுந் தேற்றேகாரத்தால் பெயர் மாத்திரமே வேறு, மற் றைக் குணங்களிற் சிறிதும் வேறுபாடில்லை யென்றதாயிற்று. [கண் களைக் காவிமலரென மயங்குதலால் மயக்கவணி. தமயந்தியென்னும் பெயரினாலே புகழ் பொருளினது தன்மையை ஒழித்து அல்பொரு ளினது தன்மையை ஆரோபித்தலால் வஞ்சகவொழிப்பணி.] (க0)

[இதுமுதற் பதினைந்து பாட்டுகளால் அன்னம் அவ்வுபகாரப் பேறுநளாகிய தமயந்தியின் தலைமயிர்முதல் அடியளவும் புகழ்தல் சொல்லப்படுகின்றது.]

[இது கூந்தற் சிறப்பு.]

நீனிற முகிலோ பசியசை வலமோ நெடுந்திரை கொ ழித்ததெள் ளறலோ, பானலங் கொண்ட பணிமொழித் துவர்வாய்ப் பைந்தொடி கரியமென் கூந்த, றேனின முரா ன்று துதைந்துதா தாடுஞ் சினைமலர்த் தொடையொடும் வேய்ந்து, நானமும் புழுகுங் கமழ்தர நீவி நள்ளிருள் குடி யிருந் ததுவே.

இ - ள். பால் - பாலினது, நலம் - தித்திப்பை, கொண்ட - (தன்னிடத்தே) கொண்ட, பணி - வணக்கம் பொருந்திய, மொழி - சொல்லையும், துவர் - பவளம்போலும், வாய் - வாயையும் உடைய, பைந்தொடி - தமயந்தியினது, கரிய - கருமை பொருந்திய, மெல் - மெல்லிய, கூந்தல் - கூந்தலென்று சொல்லப்படுகிற பொருள், நீல் நிறம் - நீலநிறம் பொருந்திய, முகிலோ - மேகமோ, பசிய - பசுமை பொருந்திய, சைவலமோ - கொடிப்பாசியோ, நெடு திரை - நெடிய கடலலைகளாலே, கொழித்த - கொழிக்கப்பட்ட, தெள் அறலோ - தெள்ளிய கருமணலோ, தேன் - வண்டுகளின், இனம் - கூட்டமானது, முரன்று - ஒலித்து, துதைந்து - நெருங்கி, தாது - மகரந்தத்தில், ஆடும்-விளையாடப் பெறுகின்ற, சினை மலர் - கோட்டுப் பூக்களாலாகிய, தொடையொடும் - மாலையையும், வேய்ந்து - சூடப்பெற்று, நானமும் - கஸ்தூரியையும், புழுகும் - புழுகையும், கமழ்தர - பரிமளிக்க, நீவி - தடவப்பெற்று, நள் இருள் - பாதியிரவி னிருளானது, குடியிருந்தது - குடியிருக்கப் பெற்றுளது (அப்பொருள்), எ-று.

க - து. அன்னந் தமயந்தியின் கூந்தற் சிறப்பைச் சொல்லியது என்பதாம்.

பைந்தொடி - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். வெள்ளை மேகத்தை ஒழித்தற்கு 'நீனிற முகில்' என்றார். பசிய சைவலம்-முற்றிய கொடிப்பாசி. 'நெடுந்திரை' என்றதனால் கடலலையென்பது பெறப்பட்டது. 'தெள்ளறல்' என்றதனால் மாசொழித்துத் தாய்தாக்கப்பட்டமை தோன்றுகின்றது. "கொண்டலுங் கூந்தற்பனையுங் கொன்றைக்காயும்மிருளுந், தண்டலையுங் கார்மணலுஞ் சைவலமும்-வண்டினமுந், தண்குழலையொப்பாம்"(உபமானசங்கிரகம்-க) என்றவாறே உபமானங்களாகிய முகில் முதலியவற்றில் ஐயந்தோன்றிற்றென்க. கூந்தலென் றறிந்தபின் அதனிடத்தே சந்தேகம் பிறக்குமோவெனின், இங்கே பெயர்மாத்திரங்கூந்தலெனப்படுவதன்றிப் பொருள் அம்மேகமுதலிய மூன்று ளொன்றென்பதே கருத்தாமென்க. இவ்வுரை பின் வருவனவற்றிற்குங்கொள்க. தலைமயிர்முதல் அடியளவும் புகழ்தலை கேசாதிபாத வர்ணனை என்பர் வடநூலார். கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னு நான்கனுள்ளே கோட்டுப்பூச் சிறந்ததாதலின் 'சினைமலர்' என்றது; அவை சண்பகம், மகிழ், புன்னை முதலியவாம். தொடையொடு என்றதில் ஒடு உருபு செயப்படுபொருளில் வந்தது உருபுமயக்கம்; "யாதனுருபிற் கூறிற்றாயினும் பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்" (தொல்காப்பியம்-வேற்றுமைமயக்கியல்-உ௩) என்பது விதி. தொடை

யொடுமென்னும் உம்மையால் மற்றைக் கொடிப்பூ முதலியனவுங் கொள்ளப்படும். 'நள்ளிருள்' என்றது சந்திரனது தேய்வுக்கும் வளர்ச்சிக்கும் நடுநாளாகிய அமாவாசையி னிருளெனினுமாம்; ஒளிக்குழுவினீங்காது விளங்கலால் 'குடியிருந்தது' என்றது. இருந்ததுவே எனக் குற்றியலுகரத்தின்முன் வகரவுடம்படுமெய் வந்தது. ஏ-அசை. [கூந்தலின் கருமை யொளியை அப்படிப்பட்ட இருளாகக் குறித்தவாலே தற்குறிப்பணியாம். முதல் வாக்கியத்தில் வந்த ஐயவணியும் இதுவுஞ் சேர்தலால் சேர்வையணி.] (கக)

[இதனால் நெற்றிச் சிறப்பும் புருவங்களின் சிறப்புஞ் சொல்லப்படுகின்றன.]

கண்கவர் வனப்பிற் சிந்துரந் தீட்டிக் கவின்செய்
பொன் னிறத்ததாய்ச் சிறந்த, தண்பிறைக் கொழுந்தொன்
றுளதெனிற் றிலகத் தையல்வா ணுதலினை நிகர்க்குந்,
தெண்கட லமிழ்திற் கனிந்தவந் தீஞ்சொற் சேயிழை முகத்
தொளிர் புருவம், வெண்கதிர்க் குடையி லிரதியு மதனும்
வைத்தகை வில்லிணை பொருவும்.

இ - ள். கண் - கண்களின் பார்வையை, கவர்-(தன்னிடத்தே) இழுத்துக்கொள்ளுகின்ற, வனப்பின் - அழகையுடைய, சிந்துரம் - சிந்துர திலகத்தை, தீட்டி - எழுதப்பெற்று, கவின் செய் - அழகைச் செய்கின்ற, பொன் நிறத்தது ஆய் - பொன்னிறத்தை யுடையதாகி, சிறந்த - உயர்ந்த, தண் - குளிர்ச்சி பொருந்திய, பிறை கொழுந்து ஒன்று - ஓரிளம்பிறையானது, உளது எனின் - உளதாயின், தையல் - தமயந்தியினது, திலகம் - சிந்துர திலகத்தையுடைய, வாள் - ஒளிபொருந்திய, நுதலினை - நெற்றியை, நிகர்க்கும் - (அது) ஒக்கும்; தெள் - தெள்ளிய, கடல் - பாற்கடலினது, அமிழ்தின் - அமிர்தம் போல், கனிந்த - முதிர்ந்த, அம் - அழகிய, தீ - மதுரம் பொருந்திய, சொல் - சொற்களையுடைய, சேயிழை - தமயந்தியினது, முகத்து - முகத்திடத்தே, ஒளிர் - விளங்காநின்ற, புருவம்-(இரண்டு) புருவங்களும், இரதியும் - இரதிதேவியாலும், மதனும் - மன்மதனாலும், வெண் கதிர் - சந்திரனாகிய, குடையில் - குடையின்கண்ணே, வைத்த - வைக்கப்பட்ட, கை வில் இணை - (அவர்) கை வில்லிரண்டையும், பொருவும் - ஒத்திருக்கும், எ - று.

க - து. அன்னம் தமயந்தியின் நெற்றிச் சிறப்பும் புருவங்களின் சிறப்புஞ் சொல்லியது என்பதாம்.

சிந்தூரம் அதனாலே செய்யப்பட்ட திலகத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். 'உளதெனினிகர்க்கும்' என்றதனால் இப்போதுள்ளபிறைக்கு அப்படிப்பட்ட திலகமும் பொன்னிறமு மில்லாமையால் ஒவ்வாதென்றதாயிற்று. [அப்படிப்பட்ட பிறை ஒன்றுளதாயி னென்றதனாலும், நுதலினை நிகர்க்குமென உபமேயத்தை உபமானமாக்குதலாலும் இல்பொருளுவமை இதிர்நிலையணி.] மன்மதனுக்கு சந்திரன்குடையாதலால் 'வெண்கதிர்க்குடையில்' என்றது. [தமயந்தியின் முகத்தைச் சேர்ந்த இரண்டு புருவங்களையும் அக்குடையைச்சேர்ந்த அவ்விரண்டு விற்களாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம்.] (கஉ)

[இதனால் கண்களின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்து கொலைத்
தொழின் மறலியைப் பயிற்றி யமிழ்தினின் விளர்த்து நஞ்
சினிற் கருகி யையரி சிதறிமை தோய்ந்து, கமலமென் மல
ரை வனம்புகுத் தியவேற் கண்ணிணை மான்மரு ணோக்கந்,
தமதெனக் கவர்ந்து கொண்டவோ மடமான் றடங்கணின்
செயல்கவர்ந் தனவோ.

இ-ள். குமிழ் - மகிழம்பூவினது, மிசை - மேற்பக்கத்தில், மறிந்து - மீண்டு, குழை - குழையெனப்படுகின்ற காதணிக்கு, எதிர் - முன்பாக, நடந்து - சென்று, கொலை - கொல்லுதலாகிய, தொழில் - தொழிலை, மறலியை - யமனுக்கு, பயிற்றி - கற்பித்து, அமிழ்தினில் - அமிர்தத்தினும், விளர்த்து-(சுற்றிடம்) வெளுத்து, உள்-நடுவில், நஞ்சினில் - விஷத்தினும், கருகி - கறுத்து, ஐ அரி - அழகிய ரேகைகள், சிதறி - சிதறப்பெற்று, மை - அஞ்சனத்திலே, தோய்ந்து - முழுகி, கமலம் என் - தாமரையெனப்படுகிற, மலரை - பூவை, வனம் - காட்டிலே (நீரிலே), புகுத்திய - அடைவித்த, வேல் - வேல்போலும், கண் இணை - (தமயந்தியின்) கண்களிரண்டும், மான் - மானினது, மருள்-மருட்சிபொருந்திய, நோக்கம் - பார்வையை, தமது என - தம்முடையதென்று, கவர்ந்து கொண்டவோ - வௌவிக் கொண்டனவோ; மடம் மான்-தமயந்தியினுடைய, தடம் - விசாலம்பொருந்திய, கணின் - கண்களினது, செயல் - செய்கையை, கவர்ந்தனவோ-(அம்மான் கண்கள்) வௌவிக்கொண்டனவோ, எ-று.

க-து. அன்னம் தமயந்தியின் கண்களின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

குமிழ் - பொருளாகுபெயர். மறலியை - உருபு மயக்கம். [குமிழென்னு முபமானச் சொல்லால் மூக்கென்னு முபமேயஞ் சொல்லப்படுதலால் உருவகவுயர்வு நவிற்சியணி.] மேன் மூக்கி னிருபக்கத்திலுந் தடையுண்டு செல்லமாட்டாமையால் 'மறிந்து' என்றது. 'எதிர் நடந்து' என்றதனால் குழை காதைச் சூழவிடப்பட்ட வொரு காதணி யென்க. அன்றெனின் ஆகுபெயராக்கி அதனையுடைய காதென்று கொள்க. மறலிக்கு என்றது "தடுமா றுருபுக டாஞ்சில வுளவே" (இலக்கணக்கொத்து-வேற்றுமையியல்-௪௯) இவ்விதியால் மறலியை என உருபுமயங்கிற்று. [மறிதலும் எதிர்நடத்தலுங்கண்களுக்குச்சுபாவமாதலால் தன்மை நவிற்சியணி. கொலைத்தொழில் மறலியைப் பயிற்றுதலில்லாதிருக்கப் பயிற்றுதற் சம்பந்தத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி.] இதனாலே கொலை செய்தலில் யமனினும் வலியனவென்னும் பொருள் தொனிக்கின்றது. அமிழ்தும் நஞ்சுஞ் சேர்த்துச் சொல்லப்படுதலால் அவை பாற்கடலிற் பிறந்த தேவாமிர்தமும் ஆலாகலமுமாம். [கமலத்தை வனத்திலே புகுத்தலாகிய சம்பந்தத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி. இது சிலேடையை அங்கமாகக் கொண்டு வந்தது. வேற்கண்-உவமைத் தொகையணி.] மருளோக்கம்-அஞ்சியனபோற் பார்த்தல். [கொண்டவோ கவர்ந்தனவோ எனச் சந்தேகத்தைச் சொல்லுதலால் ஐயவணி. இங்ஙனம் பல அணிகளுஞ் சேர்தலால் சேர்வையணியாம்.] (௧௫)

[இதனாலே கபோலங்கள் மூக்கு இவற்றின்
சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

வேனில்வேள் வனப்பு நோக்குதற் கமைத்த விளங்
குகண் ணாடியோ வொளிரும், பானலங் கண்வா டட்டிய
கிடந்த சாணையின் படிவமோ கபோலங், கான்வழிந் தொழு
குஞ் சண்பக மலரைக் கடிந்துமென் குமிழினைத் துரந்துள்,
ளூனையு முருக்கு மொழுகுபொற் கொடிமூக் குவமையா
முரைக்கு மாறறிதே.

இ - ள். ஒழுகு - நேர்மை பொருந்திய, பொன் - பொன்மயமாகிய, கொடி - பூங்கொடிபோல்பவளது, கபோலம் - கதுப்பென்று சொல்லப்படுகிற பொருள்களானவை, வேனில் - வசந்தகாலத்திற்குரிய, வேள் - மன்மதனானவன், வனப்பு - அழகை, நோக்குதற்கு - பார்த்தற்காக, அமைத்த - (நான்முகனால்) உண்டாக்கப்பட்ட, விளங்கு - விளங்காநின்ற, கண்ணாடியோ - கண்ணாடிகளோ; ஒளிரும் -

விளங்காநின்ற, பானல் - கருங்குவளை மலர்போலும், அம் - அழகிய, கண் - கண்களாகிய, வாள் - (அவனுடைய) வாள்களை, தீட்டிய - தீட்டுதற்பொருட்டு, கிடந்த - தங்கிய, சாணையின் - சாணைக் கல்லினுடைய, படிவமோ - வடிவங்களோ; கான் - வாசனையானது, வழிந்து - பெருகப்பெற்று, ஒழுகு - நீண்ட, சண்பக மலரை - சண்பகப் பூவை, கடிந்து - கோபித்து, மெல் குமிழினை - மெல்லிய குமிழம்பூவை, துரந்து - துரத்தி, உள் - (கண்டோர்) உள்ளத்தையும், ஊனையும் - உடம்பையும், உருக்கும் - உருக்காநின்ற, மூக்கு - (அவளது) மூக்குக்கு, உவமை - உபமானத்தை, யாம் - நாம், உரைக்கும் ஆறு - சொல்லும் வழி, அரிது - இல்லை, எ - று.

க - து. அன்னம் தமயந்தியின் கபோலங்கள் மூக்கு இவைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

ஒழுகு பொன்-மாற்றுயர்ந்திளகிய பொன்னெனினுமாம். மன்மதனழகிற் சிறந்தவனாதலால் 'வனப்பு நோக்குதற்கு' என்றும், கண்ணினருகே யிருக்கையால் 'கண்வா டீட்டிய' என்றும் கூறப்பட்டது. தீட்டிய-செய்யியவென்னும் வாய்பாட்டுவினையெச்சம். காமன்சம்பந்தமான பொருள்களெல்லாங் காமநோயை வளர்க்குமாதலால் அவன் சம்பந்தமான கண்ணுடியையுஞ் சாணைக்கல்லையும் உருவகித்துக் கூறினார். [கபோலங்களை அப்படிப்பட்ட கண்ணுடிகளுஞ் சாணைக் கற்களுமாகக் குறித்தலாலே தற்குறிப்பணி; இதனை யுறுப்பாகக்கொண்டு ஐயவணி வந்தது.] சண்பக மணம் மூக்கின் சுவாசத் திருக்கின்றமையால் அதற்குக் 'கான் வழிந்து' என்கிற அடை கொடுக்கப்பட்டது. [சண்பகத்தைக் கடிதலுங் குமிழைத் துரத்தலு மில்லாதிருக்க அவைகளைக் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி; உவமை இல்லையென்றதனால் உபமானந் தொக்க தொகையுவமையணி; இப்பலவுஞ் சேர்தலால் சேர்வையணியாம்.] (கசு)

[இதனால் காதுகள் வாய் பல்வரிசைகள் சொல் இவற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

வள்ளைவார் காது நோக்கின ருள்ள மகிழ்ந்தினி தாடு
பொன் னூசல், கள்ளவி ழாம்பற் செய்யவாய் பவளக் கடி
கைவா ணகையொளிர் தரளந், தெள்ளிதிற் கோத்துப் பவ
ளவள் ளத்திற் சேர்த்திய தாகுமஞ் செறிசொல், கிள்ளையங்
கிளவி குயின்மொழி யலதி யாதெனக் கிளக்கலா வதுவே.

இ - ள். வள்ளை - வள்ளைத்தண்டு போல்கின்ற, வார் - நீட்சி பொருந்திய, காது - (அவள்) காதுகளானவை, நோக்கினர்-பார்த்தவருடைய, உள்ளம் - உள்ளங்களானவை, மகிழ்ந்து - களித்து, இனிது - இனிதாக, ஆடு - ஆடப்பெறுகின்ற, பொன் ஊசல் - பொன்னூசல்களாகும்; கள் - தேனையுடைய, அவிழ் - மலர்ந்த, ஆம்பல் - செவ்வல்லி மலர்போலும், செய்ய - சிவப்புநிறம் பொருந்திய, வாய் - (அவள்) உதடானது, பவளக்கடிகை - பவளத்துண்டாகும்; வாள் - காந்திபொருந்திய, நகை - (அவள் வாயைச் சேர்ந்த) பல்வரிசையானது, ஒளிர் - விளங்குகின்ற, தரளம் - முத்துகளை, பவளவள்ளத்தில் - பவளக் கிண்ணத்தினுள்ளே, தெள்ளிதின் - தெளிவுடையதாக, கோத்து-கோத்தல் செய்து, சேர்த்தியது ஆகும்-சேர்க்கப்பட்ட கோவையாகும்; அம் செறி - அழகானிறைந்த, சொல் - (அவள்) சொல்லுக்கு, கிள்ளை - கிளியினது, கிளவி - சொல்லும், குயில் - குயிலினது, மொழி - சொல்லும், அலது - (உபமானங்கள்) அல்லாமல், யாது என - (வேறே) யாதென்று, கிளக்கல் - சொல்லுதல், ஆவது - ஆகும், எ - று.

க - து. அன்னம் தமயந்தியின் செவி வாய் பல்வரிசை சொல் இவைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

காது வள்ளைத்தண்டு போலும் என்பதற்கு, "உள்ளூங் குறும்பியொழுகுங் காதை, வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்" என்றார் பட்டணத்தடிகள் (கச்சித்திருவகவல்). வள்ளையிலையைக் காதுக்குவமான மாக்குவாருமுளர். "காதிற்குவள்ளை"-என்று உவமான சங்கிரக நூலாசிரியர் கூறினரேயன்றி இலையென்றும் தண்டென்றும் எடுத்துக் கூறிலராயினும், மேலோராகிய பட்டணத்தடிகள்போலத் தண்டைக் கொள்வதே சிறப்புடைத்து. [வள்ளைவார்காது-உவமையணி.] காதுகள் தோள்களினளவுந் தொங்கி ஊசல்போல அசைவுறக் கண்டோர் மனந் தம்மைச் சேர்ந்து களிகூர்ந்திருக்கப் பெறுதலாலே 'நோக்கின ருள்ள மகிழ்ந்தினி தாடுபொன் னூசல்' என்றது. [காதைஅப்படிப்பட்ட ஊசலாகக்குறித்தலாலே தற்குறிப்பணி.] 'கள்ளவிழாம்பல்' என்றதனால் ஆம்பலிலே தேன்போல வாயிலே நீருசுவைநீர் கொள்ளப்படும். [உதட்டிலே பவளத் துண்டையும், வாயைச் சேர்ந்த பல் வரிசையிலே பவளக் கிண்ணத்தைச் சேர்ந்த முத்துக் கோவையையும் ஆரோபித்தலால் அவ்விரண்டும் உருவகவணிகள்.] உபமானத்திற் கேற்கப் பல்வரிசைக்கு வாயைச் சேர்ந்த வென்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. சொல்லுக்கழகு சுருங்கச் சொல்லல் முத

-லியன. கிள்ளையங்கிளவி சுரம்பற்றியுஞ் சொற்பற்றியும் உபமானமாத லாலும், குயின்மொழி சுர மொன்றையே பற்றி உபமான மாதலா லும் அது முன்னும் இது பின்னும் வைக்கப்பட்டன. (கஙி)

[இதனாலே முகத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

ஒழுகொளி விரிந்த கதிர்மணி வண்ணா னுந்தியந் தாம ரை யுறைவோன், முழுமதிக் கலையு ணிறைந்தபே ரழகை மொண்டுகொண் டரிபரந் தகன்ற, மழைமதர் நெடுங்கட் டமயந்தி வதனம் வகுத்தனன் கரத்தினா லெடுத்த, புழைவ ழித் தோன்றும் விசும்பினை யன்றோ களங்கமென் றின்ன மும் புகல்வார்.

இ - ள். ஒழுகு - நீள்கின்ற, ஒளி - காந்தியையுடைய, விரிந்த - பரந்த, கதிர் - கிரணங்களையுடைய, மணி - நீலமணிபோலும், வண் ணன்-நிறத்தையுடைய திருமாலின், உந்தி - நாபியிலுண்டாகிய, அம் தாமரை - அழகிய தாமரைப்பூவில், உறைவோன் - வாசஞ்செய்கின்ற நான்முகக் கடவுள், முழுமதிகலையுள் - பதினாறு கலைகளாலு நிறைந்த சந்திரனிடத்தே, நிறைந்த - நிரம்பிய, பேரழகை - உயர்வாகிய சார த்தை, மொண்டுகொண்டு - (கையினாலே) மொண்டுகொண்டு, அரி- இரேகைகள், பரந்து - படரப்பெற்று, அகன்ற - விசாலித்த, மழை - குளிர்ச்சி பொருந்திய, மதர் - களித்திருக்கின்ற, நெடு - நெடிய, கண் - கண்களையுடைய, தமயந்தி - தமயந்தியினது, வதனம் - முக த்தை, வகுத்தனன் - படைத்தான்; கரத்தினால் - கையினால், எடு த்த - எடுக்கப்பெற்ற, புழை வழி - துவாரத்தின் வழியிலே, தோன் றும் - காணப்படுகிற, விசும்பினை அன்றோ - (நீலநிறமுள்ள) ஆகா சத்தையன்றோ, களங்கம் என்று - களங்கமென்று, இன்னமும்-இப் போதும், புகல்வார் - சொல்லுவார் (உலகத்தார்), எ - று.

க - து. அன்னம் தமயந்தியினது முகத்தின் சிறப்புச் சொல்லி யது என்பதாம்.

திருமாலின் நிறத்துக்கு உவமையாகப் புணர்க்கப்பட்டமையால் மணி இவ்விடத்து நீலமணியைக் குறித்தது. மணியென்பது நவமணி களுக்கும் பொதுப்பெயராகியும் சில விடங்களிலே நீலமணிக்குச் சிற ப்புப் பெயராகியும் வருதலாலே நீலமணியெனப் பொருள் கூறப் பட்ட தென்பாருமுளர். ஒரு பிரளய முடிவிலே நான்முகக்கடவுள் திருமால் வயிற்றுட் சென்று அவனது நாபியிலே தோன்றிய கமலத் தின் வழியாக வெளிப்பட்டு அதிலிருக்கின்றா னென்பது புராண

கதை. 'பேரழகு' என்றது இங்கே சந்திரனது சிறந்த பங்கு. 'அரிபரந் தகன்ற மழைமதர் நெடுங்கண்' என்னும் அடையை முகத்துக்குக்கொள்ளாது தமயந்திக்குக் கொள்க. [காரணமாகச் சொல்லப்பட்ட சந்திர சாரத்தினாலே உயர்வுடைய முகத்தழகாகிய காரியந் தோன்றலாலே காரணப்புனைவிலி புகழ்ச்சியணி.] 'புழைவழித்தோன்றும்விசும்பினையன்றோ களங்கமென் றின்னமும் புகல்வார்' எனவே, அது களங்கமன்று அப்பங்கு எடுபட்ட பள்ளத்தே தோன்றுகிற நீல வாகாசமென்றதாயிற்று. "அறுதொகை யறைகுவ ரறிவுடை யார்பலர், படுதொகை யொடுதொகை யேழென்பார் சிலர்" (இலக்கணக்கொத்து-வினையியல்-கக) இவ்விதியால் தோன்றப்படு விசும்பெனப் படுதொகை விரிக்க. [களங்கத்திலே அவ்வாகாசத் தன்மையை ஆரோபித்தற்கு அதனது தன்மையை ஒழித்தலாலே ஒழிப்பணி. இப்பலவுஞ் சேர்ந்து வருதலாற் சேர்வையணியாம்.] (கக)

[இதனால் தோள்கள் முன்னங்கைகள் கைகள் இவற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

செய்யுறு மமுதப் பசுங்கரும் பேய்ப்பத் திரண்டழ கொழுகுமென் றடந்தோள், பெய்வளை முன்கைக் கிணையயன் வகுத்த பொருள்களிற் பேசுவ தெவனோ, வெய்யவன் கதிர்க ளலர்த்துசெங் கமல மெல்லடிக் குடைந்தன வென்றாற், கையிணை மலருக் கிணையென வுரைத்தல் கழிமட னலதுவே றிலையே.

இ - ள். மெல் - மெல்லிய, தடம்-பெரிய, தோள் - (தமயந்தியினுடைய) தோள்களானவை, செய்யுறும் - கழனியிலிருக்கிற, அமுதம் - அமிர்தத்தையுடைய, பசு கரும்பு ஏய்ப்ப - பசிய கரும்பு போல, திரண்டு - திரட்சி பொருந்தி, அழகு ஒழுகும் - அழகு பெருகப்பெற்றிருக்கும்; பெய் வளை - இடப்பட்ட வளையல்களையுடைய, முன் கைக்கு - (அவள்) முன்னங்கைகளுக்கு, இணை - உபமானம், அயன் - நான்முகக்கடவுளால், வகுத்த - படைக்கப்பட்ட, பொருள்களில் - பொருள்களுள்ளே, பேசுவது - சொல்லத்தகுவது, எவன்-யாது; வெய்யவன் - சூரியனுடைய, கதிர்கள் - கிரணங்களால், அலர்த்து - மலர்த்தப்படுகின்ற, செங்கமலம் - செந்தாமரை மலர்களானவை, மெல் அடிக்கு - மெல்லிய அடிகளுக்கு, உடைந்தன என்றால் - தோற்றனவென்று சொன்னால், இணை - இரண்டாகிய, கை - கைகளாகிய, மலருக்கு - மலர்களுக்கு, இணை என - உபமானமென்று, உரைத்தல் - சொல்லுதற்குக் காரணம், கழி - மிகுந்த, மடன்

அலது - அறியாமையல்லாமல், வேறு - மற்றொரு காரணம், இலை - இல்லை, எ - று.

க - து. அன்னம் தமயந்தியினது தோள்கள் முன்னங்கைகள் கைகள் இவைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

செழுமையும் கிளர்ச்சியும் நல்ல நிறமும் உபமேயத்திலே குறிப்பித்தற்குச் 'செய்யுறு மருதப் பசுங்கரும்பு' என்றது. [பசுங்கரும்பேய்ப்ப-உவமையணி.] எவனென்பது இன்மைப் பொருளில் வந்தது. [அயன் வகுத்த பொருள்களில் ஒருபமானந் தோன்றுமையால் தொகை யுவமையணி. செங்கமலத்திற்கு 'வெய்யவன் கதிர்க ளலர்த்து' என்ற அடை அது தம்மியல்பின் மலர்ச்சியையுடைய மெல்லடிகளுக்குத் தோற்றற்குரிய குணத்தை யுடையனவென்னுங் கருத்தை யுட்கொண்டிருத்தலாலே கருத்துடையணி. இதனாலே உபமேயமாகிய அவ்வடிகளுக்கு விசேஷந்தோன்றுவதாகிய வேற்றுமையணி தொனிக்கின்றது. கமலம் கீழ்ப்பட்ட வடிகளுக்குத் தோற்றமையைச் சொல்லவே மேற்பட்ட கைகளுக் கிணையாகாமை தோன்றுதலாலே செய்யுட்பொருட்பேறணி. இவை பலவுஞ் சேர்தலாலே சேர்வையணியாம்.] (கஎ)

[இதனாலே முலைகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

இழையிடை புகாது மார்பிடங் கொண்ட வேரிள
வனமுலை வள்ளைக், குழைபொருங் கண்ணி யெழிற்கடற்
பிறந்த குமிழியோ வதனிடை நீந்த, விழைவுறு மதனும்
பருவமு மமைத்து விளங்குபொற் குடங்கொலோ வதனிற்,
றழைசிறை நேமிப் புட்கொலோ கமல முகைகொலோ
வென்கொல்சாற் றுவதே.

இ - ள். இழை - நூலும், இடை - நடுவிலே, புகாது - நுழையாதிருக்கும்படி, மார்பு - மார்பை, இடம் - (தமக்கு) இடமாக, கொண்ட - கவர்ந்த, ஏர் இளவனம் - அழகும் இளமையும் சந்தனக் கோலமும் பொருந்திய, முலை - முலைகளென்று சொல்லப்படுகிற பொருள்களானவை, வள்ளை-வள்ளைபோலும் (காதுகளைச் சூழ்ந்த), குழை - குழைகளோடு, பொரும் - போர்செய்கின்ற, கண்ணி - கண்களையுடையவளது, எழில் - அழகாகிய, கடல் - கடலின்கண்ணே, பிறந்த - உண்டாகிய, குமிழியோ - குமிழிகளோ; அதனிடை - அக்கடலின்கண்ணே, நீந்த - நீந்துதற்கு, விழைவுறு - ஆசைகொண்ட, மதனும் - மன்மதனும், பருவமும் - மங்கைப் பருவத்தினாலும்,

அமைத்து - உண்டாக்கப்பட்டு, விளங்கு - விளங்காநின்ற, பொன் குடம் கொல் - பொற்குடங்களோ; அதனில்-அக்கடலிலிருக்கின்ற, தழை - தழைந்த, சிறை - சிறைகளையுடைய, நேமி புள்கொல் - சக்கரவாகப் பறவைகளோ; (அதனில்)-அக்கடலிலே தோன்றிய, கமல முகைகொல் - தாமரை யரும்புகளோ; என் - (இவற்றுள்ளே) யாது, சாற்றுவது - (என்றுற்) சொல்லப்படுவது, எ - று.

க - து. அன்னம் தமயந்தியினது முலைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

'இழையிடை புகாது மார்பிடங் கொண்ட' என்றதனாலே அம் முலைகள் அடிபரந்துயர்ந்து ஒன்றோடொன்று நெருங்கி விளங்குகின்றமை சொல்லப்பட்டதாயிற்று. வன்னம் - சந்தனக்கோலம்; அது வணம் எனத் தொகுத்தல் பெற்றது. நீந்துதல் - புனல் விளையாட்டைக் குறித்தென்க. பருவம் எனப் பொதுப்படக் கூறினும் எல்லாப் பருவங்களினுஞ் சிறந்த மங்கைப்பருவமென்று கொள்க. ஆழ நீர் விறங்க வஞ்சியோர் குட முதலியவற்றைப் பற்றி யிறங்குதல் உலக வழக்கம். [முலைகளை அக்குமிழி முதலியனவாகக் குறித்தலாலே தற்குறிப்பணிகள். இந்நான்கு தற்குறிப்புகளையும் அங்கமாகக்கொண்டு ஐயவணி வந்தது.] இத்தற்குறிப்புகள் 'எழிற்கடல்' என்ற வுருவகத்தாலே பிழைப்பிக்கப்பட்டன. (கஅ)

[இதனால் வயிற்று மயிரொழுங்கின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

மால்புரி முலைமென் கமலநாண் முகையில் வண்டுவீழ் மாலையோ பசும்பொற், சேலைமீ தணிந்த மேகலை மணியி னொருசுடர் செவ்வனின் றதுவோ, நூலினு நுடங்கு மருங்கிரு தனங்க ளுண்ணிதிற் சலாகைசேர்த் தியதோ, வாலிளந் தளிரி னழகுவீற் றிருந்த வவ்வயி றணிமயி ரொழுங்கே.

இ - ள். ஆல் - ஆலமரத்தினது, இளந்தளிரின்-சிறுதளிரினது, அழகு - அழகானது, வீற்றிருந்த - கொலுவிருக்கப்பெற்ற, அ வயிறு - அத்தமயந்தி வயிற்றை, அணி-அலங்கரித்துக்கொண் டிருக்கின்ற, மயிர் ஒழுங்கு - மயிரொழுங்கென்று சொல்லப்படுகிற பொருளானது, மால் - ஆசையை, புரி - செய்கின்ற, முலை - முலைகளாகிய, நாள் - மலரும் பருவத்தையுடைய, மெல் - மெல்லிய, கமலம் - தாமரையினுடைய, முகையில் - அரும்புகளில், வீழ் - (வந்து) விழுகிற, வண்டு - வண்டுகளது, மாலையோ - வரிசையோ; பசும்பொன் -

பசிய பொன்மயமாகிய, சேலை மீது - புடவையின்மேல், அணிந்த - தரிக்கப்பட்டிருக்கிற, மேகலை - மேகலாபரணத்தினது, மணியின் - நீலமணியினது, செவ்வன் - நேராக, நின்றது - மேலெழுந்து நின்றதாகிய, ஒரு சுடரோ - ஒரு கதிரோ; நூலினும் - இழையினும் மதிகமாக, நுடங்கும் - அசைகின்ற, மருங்கு - இடையானது, இறுது - ஒடியாதிருக்க, அநங்கன் - மன்மதனால், நுண்ணிதின் - நுண்ணிதாக, சேர்த்தியது - சேர்க்கப்பட்டதாகிய, சலாகையோ - இருப்புக்கம்பியோ, எ - று.

க - து. அன்னம் தமயந்தியின் வயிற்று மயிரொழுங்கின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

ஆடவர்க்கு மற்றை யவயவங்களினும் அதிக விருப்பஞ்செய்தல் பற்றி 'மால்புரி முலை' என்றது. மணமுந் தேனும் வெளிப்படாமையால் வண்டு வீழ்தற்கியைபில்லாத விளமுகைகளை யொழித்தற்கு 'நாண்முகை' என்றது; அதாவது அன்றைக்கு மலரும் பருவமுடைய அரும்பாம். வண்டு மாலையாவது-வண்டுகள் இடைவிட்டுப் போகாமலொன்றன்பின் னொன்றாகத் தொடருந் தொடர்ச்சி. செவ்வனிற்றலாவது-சாய்வின்றி மேலே நிவந்திருத்தல். மயிரொழுங்குக் குவமையாதலால் மணி நீலமணியைக் குறித்தது. நூலினு நுடங்கு நுண்ணிய விடைக்குத் தகுதியாக 'நுண்ணிதிற் சலாகை' என்றது. "வடமொழித் திரிபினி லல்லென் மொழிகளி, லகாரியையு மகரமுமுன்வரும்" (குவலயாநந்தம்-அணியியல்) இவ்விதியால் அங்கமிலான் அநங்கன் என்றாயிற்று. செவி முதலிய வுறுப்புகளுக்குக் குழை முதலியனபோல வயிற்றிற்கணியா யழகு செய்தலின் 'அணிமயிர்' என்றது. [வயிற்று மயிரொழுங்கை அவ்வண்டுமாலை முதலியனவாகக் குறித்தலாலே தற்குறிப்பணி; இதனை அங்கமாகக்கொண்டு ஐயவணி வந்தது. உபமானமாகிய ஆலந்தளிரினது நன்மையை உபமேயமாகிய வயிற்றிலே ஆரோபித்தலாலே காட்சியணி.] இதனாலே அம்மயிரொழுங்குக் கிடஞ் சொல்வது போன்று வயிற்றுச் சிறப்புஞ் சொல்லியதாயிற்று. (கக)

[இதனால் வயிற்று மடிப்புகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

படைப்புழி வேதன் கமலமென் மலரைப் பழிக்குமென் கரத்தினா னடுவைப், பிடித்தலும் விரல்க ளழுந்திய வரையோ வெட்புறு மங்கையம் பருவ, மடித்தலஞ் சேர்த்தியேறுதற் கமைத்த படிகொலோ வவ்வயி றணிந்த, மடிப்-

புறு வரையி னழகினுக் குவமை மற்றுநா முரைக்குமா றெவனோ.

இ - ள். அ வயிறு - அத்தமயந்தியின் வயிற்றினால், அணிந்த - தரிக்கப்பட்டிருக்கிற, மடிப்பு - மடிப்புகளென்று சொல்லப்படுகிற பொருள்களானவை, படைப்புழி - (அவளைப்) படைத்தபோது, வேதன் - நான்முகக்கடவுளானவன், கமலம் என் - தாமரையெனப் படுகிற, மலரை - பூவை, பழிக்கும் - நிந்திக்கின்ற, மெல் - மெல்லிய, கரத்தினால் - கையினால், நடுவை - இடையை, பிடித்தலும் - பிடித்தவளவிலே, விரல்கள் - (அவன் கை) விரல்களானவை, அழுந்திய - அழுந்துதலா லுண்டாகிய, வரையோ - மடிப்புகளோ; பெட்புறு - விரும்பப்படுகின்ற, மங்கை அம்பருவம்-அழகிய மங்கைப்பருவமாகிய (பெண்), அடித்தலம்-அடித்தலங்களை, சேர்த்தி - ஊன்றி, ஏறுதற்கு - ஏறுதற்காக, அமைத்த-(அவனாலே) உண்டாக்கப்பட்ட, படிகொல் - சோபானங்களோ; வரையின் - அம்மடிப்புகளது, உறு-மிகுந்த, அழகினுக்கு - சௌந்தரியத்துக்கு, உவமை - உபமானம், நாம் - நாம், உரைக்குமாறு - சொல்லுமாறு, எவன் - யாது, எ - று.

க - து. அன்னம் தமயந்தியினது வயிற்று மடிப்புக்களின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

'கமலமென் மலரைப் பழிக்குமென் கரம்' என்றதனால் அவள் மெல்லிய இடையைப் பிடித்தற்கு அக்கரந் தகுதியுடைத் தென்றதாயிற்று. நடுவைப் பிடித்தல் அதனளவை யறிதற்கென்க. 'விரல்களழுந்திய வரை' என்றதனால் அழுத்திப் பிடித்தா னென்பதும், அங்ஙனம் பிடித்தபோது அங்குட்டம் பின்புறத்திற் செல்ல மற்றைச் சுட்டுவிரல் முதலிய நான்கு விரல்களும் முன்புறத்துச் சென்றழுந்தலால் அவற்று ளொன்றற்கொன் றிடைவெளிகளிலெழும்பி மூன்று வரைக ளுண்டாயின வென்பதுந் தோன்றுகின்றன. [வயிற்று மடிப்புகளை அவ்விரல்க ளழுந்திய வரைகளாகவும் அப்படிகளாகவுங் குறித்தலால் தற்குறிப்பணிகள்; இவை ஐயவணிக்கங்கம்.] இங்ஙனஞ் சிறப்பிக்கப்பட்டது வரையின் வடிவமே யாதலால் வரையி னழகினுக் குவமையென்று பின் வேறு கூறப்பட்டது. மற்று - அசைநிலை. எவனென்பது இன்மைப்பொருளில் வந்தது. [அழகினுக் குவமையில்லையெனலால் உபமானந் தொக்க தொகையுவமையணி.] (உ0)

[இதனால் இடையின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

*சுணங்குபூத் தொருகாழ் மணிவடங் கிடந்த துணை யிள வனமுலை சுமந்து, வணங்கிநா டோறுந் தேய்ந்ததோ*

பெருகும் வனப்பெனுங் கடலுளாழ்ந் ததுவோ, கணங் கொள்வண் டார்க்குங் கணைமதன் கண்ணே றெய்தலுங் கழிந்ததோ வன்றி, யணங்கர வல்குற் றேர்மிசை வதியு மநங்கனே விடையறி கிலேமால்.

இ - ள். இடை - (அத்தமயந்தியினது) இடையென்று சொல்லப்படுகிற பொருளானது, சுணங்கு - தேமல், பூத்து - படரப்பெற்று, ஒரு காழ்-ஓரளவாகிய சரங்களையுடைய, மணி வடம் - ரத்நஹாரம், கிடந்த - கிடக்கப்பெற்ற, துணை - இரண்டாகிய, இளவனம் - இளமையுஞ் சந்தனக்கோலமும் பொருந்திய, முலை - முலைகளை, சுமந்து - சுமத்தலால், வணங்கி - வளைந்து, நாடோறும்-தினந்தோறும், தேய்ந்ததோ - (சிறிது சிறிதாகத்) தேய்ந்துபோயிற்றோ; பெருகும் - பொங்குகின்ற, வனப்பு எனும்-அழகென்கிற, கடலுள் - கடலுள்ளே, ஆழ்ந்ததுவோ - முழுகிப்போயிற்றோ; கணம் - கூட்டத்தை, கொள் - கொண்ட, வண்டு - வண்டுகளானவை, ஆர்க்கும்-ஒலிக்கப் பெறுகின்ற, கணை - (பூ) அம்பையுடைய, மதன் - மன்மதனது, கண்ணேறு - பார்வைக் குற்றமானது, எய்தலும் - அடைந்த மாத்திரத்திலே, கழிந்ததோ - இறந்துபோயிற்றோ; அன்றி - அல்லாமல், அணங்கு - அழகாகிய, அரவு - பாம்பின் படம்போலும், அல்குல் - அல்குலாகிய, தேர்மிசை - தேரின்மேலே, வதியும்-இருக்கின்ற, அநங்கனே - அங்கமில்லாத மன்மதனே, அறிகிலேம் - (யாம்) அறிந்திலேம், எ - று.

க - து. அன்னம் தமயந்தியினது இடையின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

[இடையானது நுண்ணிதாய்க் காணக்கூடா திருத்தல்பற்றி அதனை அதன்மேலே கனங்கொண்டிருக்கிற விரண்டு முலைகளாலும் அழுத்தப்பட்டுத் தேய்தற்கு வினைமுதலாகவும், அவைவற்றிருக்கையால் அழகைக் கடலாக உருவகஞ் செய்து அக்கடலிலே மூழ்குதற்கு வினைமுதலாகவும், ஒருவ னொருபொருளை வியந் துற்றுப் பார்த்தால் அப்பொருள் அப்பார்வைக் குற்றந் தாங்கி யழிதல் உலகியல்பாதலால் மன்மதனது அப்படிப்பட்ட பார்வைக் குற்றந் தாங்க அழிதற்கு வினைமுதலாகவும், அரசனுக்குத் தேர்போல மன்மதனுக்குப் பகை வெல்லுதற்குத் துணைக்கருவியாகையால் அல்குலைத் தேராக வுருவகஞ் செய்து அதன்மே லிருக்கிற உருவமில்லாத மன்மதனைக வும் குறித்தலாலே இந்நான்குந் தற்குறிப்பணிகள்; இவற்றை அங்கமாகக்கொண்டு ஐயவணி வந்தது.] இவற்றுள் முன்னைய மூன்றும்

வினைப்பொருட் டற்குறிப்புகள். பின்னது வடிவப்பொருட் டற்குறிப்பு. இவ்வேறுபா டறிதற்கு அவற்றிடை 'அன்றி' என்னுஞ் சொல் வைக்கப்பட்டது. இரண்டாவது தற்குறிப்பு உருவகத்தா லுய்விக்கப் பட்டது. (உக)

[இதனுல் அல்குற் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

வெங்கதிர்க் கடவுள் கொடிஞ்சியந் தேர்க்கு வியப் புற வாழியொன் றமைத்த, பங்கமி றொழிலின் பயிற்சியா லநங்கன் பைங்கிளிக் கூந்தன்மான் றேர்க்குச், செங்கரம் வருந்த மலரயன் வகுத்த திகிரியோ செய்யபொற் றட்டோ, வங்கர வல்கு லதனள வுரைக்கி னாடவ ரவாவின தளவே.

இ - ள். அங்கு - அவ்வரையிடத்தைச் சேர்ந்த, அரவு - பாம்பின் படம்போலும், அல்குல் - அல்குலென்று சொல்லப்படுகின்ற பொருளானது, மலர்-தாமரைப் பூவிலிருக்கின்ற, அயன் - நான்முகக்கடவுளானவன், வெம் கதிர் கடவுள் - சூரியதேவனுடைய, கொடிஞ்சி - மேன்மொட்டு வாய்ந்த, அம் தேர்க்கு - அழகிய இரதத்திற்கு, வியப்பு உற-ஆச்சரியப்பட, ஆழி ஒன்று - ஒருருளையை, அமைத்த - அமைவித்த, பங்கம் இல்-பழுதில்லாத, தொழிலின் - தொழிலினது, பயிற்சியால் - பழக்கத்தினுலே, அநங்கன் - மன்மதனது, பைங்கிளி-பச்சைக் கிளியாகிய, கூந்தன்மான் - குதிரையை யுடைய, தேர்க்கு - இரதத்திற்கு, செம் கரம் - செய்ய கைகளானவை, வருந்த - வருத்தமுற, வகுத்த - (அவனுலே) படைக்கப்பட்ட, திகிரியோ - ஒருருளையோ; செய்ய பொன் தட்டோ - (அக்கடவுளால் அம்மன்மதனுக்குப் படைக்கப்பட்ட) செம்பொன்னினுற் செய்த கோடிகமோ; அதன் - அவ்வல்குலினது, அளவு - (பரப்பின்) அளவை, உரைக்கின் - சொன்னுல், ஆடவர்-காளையரது, அவாவினது - (அதன்மே லுளதாகிய) ஆசையினது, அளவே - அளவேயாகும் (அது), எ - று.

க - து. அன்னம் தமயந்தியின் அல்குற் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

வெங்கதிர்க்கடவுள்-"அதுவு மாதுவு மவ்வு மூடையவு, மாறனுருபென் றறைதல் வேண்டும்" (அகத்தியச் சூத்திரம்) இவ்விதியால் உடைய வுருபுஞ் சிறப்பேயென்றறிக. கொடிஞ்சி - தேர்மேன்மொட்டு; "கூவிரங் கொடிஞ்சி கூம்புதேர் மொட்டே" (திவாகரம்-செய்ற்கை வடிவப் பெயர்த்தொகுதி) இதனுலறிக. பல வுருளைக ளின்றி யமையாத தேர்க்கு ஒருருளை அமையும்படியாகச் செய்தல் அரிய

செயலாதலால் 'வியப்புற' என்றும், அங்ஙனஞ் செய்யப்பட்டது நெடுங்காலமாக நிலைபெறுதலாலே 'பங்கமி றெழில்' என்றும் கூறினர். பின் செய்யப்பட்ட விதற்கு 'செங்கரம் வருந்த' எனலால் அதினுமிது சிறந்ததாகச் செய்யப்பட்டமை தோன்றுகின்றது. [அல்குலை அப்படிப்பட்ட உருளையும் பொற்றட்டுமாகக் குறித்தலாலே தற்குறிப்பணிகள்; இவற்றை யுறுப்பாகக்கொண்டு ஐயவணி வந்தது.] அதனளவு 'ஆடவ ரவாவின தளவு' எனவே அவ்வவாவி னளவைப்போலவே அல்குற் பரப்பி னளவைக் காணக்கூடா தென்றதாயிற்று. "ஐயோ வகலல்குல் சூழ்வருதற் காழித்தேர் வெய்யோற் கனேகநாள் வேண்டுமே" (தண்டியலங்காரம்) என்றார் பிறரும். [அல்குலி னளவு யாது, அது ஆடவ ரவாவின தளவென்பதுபடத் தோன்றுகிற விரண்டு வாக்கியப் பொருள்களுக்கு ஐக்கியத்தைச் சொல்லுதலாலே காட்சியணி.] (உஉ)

[இதனால் துடைகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

மாந்தளிர் மேனி யரம்பையை வனப்பின் வென்ற
மான் றிரண்மணிக் குறங்கு, கூந்தலம் பிடியின் கொழுங்
கரந் துரந்து குலவிய கவின்குடி யிருந்து, சேந்தநுண் பஞ்
சின் மென்மைய வாகிச் செழுமணி மேகலை தாங்கி, யேந்
தெழிற் கன்னி யரம்பையின் குலங்க ளியாவையு மெளிதின்
வென் றனவே.

இ-ள். மா - மாவினது, தளிர் - தளிர்போலும், மேனி - வடிவத்தையுடைய, அரம்பையை - அரம்பை யென்பவளை, வனப்பின் - அழகினாலே, வென்ற - வென்ற, மான் - தமயந்தியினுடைய, திரள் மணி - திரட்சியும் அழகும் பொருந்திய, குறங்கு - துடைகளானவை, கூந்தல் - கூந்தலையுடைய, பிடியின் - பெண் யானையினது, கொழுங்கரம் - செழிய துதிக்கையை, துரந்து - துரத்தி, குலவிய - விளங்குகின்ற, கவின் - காந்தியானது, குடி இருந்து - குடியிருக்கப் பெற்று, சேந்த - சிவந்த, நுண் - நுண்ணிய, பஞ்சின் - பஞ்சினு மதிகமான, மென்மையவாகி - மெல்லிய குணத்தை யுடையனவாகி, செழு மணி - செழிய நவமணிகளாலாகிய, மேகலை - மேகலையை, தாங்கி - சுமந்து, ஏந்து - ஏந்தப்பட்ட, எழில் - அழகையுடைய, கன்னி அரம்பையின் - இளவாழைகளுடைய, குலங்கள் யாவையும் - குலங்களை யெல்லாம், எளிதின் - வருத்த மில்லாமல், வென்றன - வென்றன, எ - று.

க-து. அன்னம் தமயந்தியினது துடைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

'மாந்தளிர் மேனி யரம்பை' என்றதனாலே அவளழகிற் சிறந்தவ ளென்றதாயிற்று. அரம்பை - தேவகணிகையரு ளொருத்தி. வென்றவென்னும் பெயரெச்சங் குறங்கென்னும் பெயர் கொண்டது. அரம்பையை 'வனப்பின் வென்ற குறங்கு' எனவே அவளுடைய எல்லா அவயவங்களி னழகுங்கூடி இவளது துடை யழகுக்குங் குறைந்த தென்றதாயிற்று. அரம்பைக்கு அவ்விரு பொருள்க ளுண்டென்பதை "அரம்பை தெய்வப்பெண் வாழை" (ஆதிப்பொருணிகண்டு) இதனாலறிக. மான்-உவமையாகுபெயர். [அவ்விரண் டரம்பைகளையும் வெல்லுதலும் பிடியின் கரத்தைத் துரத்தலும் இல்லாதிருக்க, அவற்றின் சம்பந்தத்தைக் கற்பித்தலாலே தொடர்புயர்வு நவிற்சியணி.] ()

[இதனால் கணைக்கால்களின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

பூங்கழை குழைக்கும் வேனில்வேள் பகழி பொதிந்த
பொன் னாவம்வெந் கொடுப்ப, வாங்கவன் வெற்றி குறித்
திட விரிஞ்ச னமைத்தகா களம்வெரீஇ யரற்றத், தேங்க
மழ் வாவி நீரிடைக் குளித்துச் சினைவரான் மறைந்திட
வரையிற், றூங்குதேன் பெய்த பச்சிளங் கழையைத் தோழ
மை கொண்டன கணைக்கால்.

இ - ள். கணைக்கால் - (தமயந்தியினுடைய) கணைக்கால்களானவை, பூ கழை - அழகிய கருப்புவில்லை, குழைக்கும் - வளைக்கின்ற, வேனில் - வசந்தகாலத்திற்குரிய, வேள் - மன்மதனது, பகழி - பூவம்புகளால், பொதிந்த - நிறைந்த, பொன் - பொன் மயமாகிய, ஆவம் - அம்புக்கூடானது, வெங் கொடுப்ப - (தோற்றுப்) புறங்கொடுக்கவும், ஆங்கு - அந்தக்காலத்தில், அவன் - அம் மன்மதனது, வெற்றி - வென்றியை, குறித்திட - குறிக்கும்படியாக, விரிஞ்சன் - நான்முகனால், அமைத்த - படைக்கப்பட்ட, காகளம் - காளமானது, வெரீஇ அரற்ற - அஞ்சி யொலிக்கவும், தேம் கமழ் - தேன் மணக்கப் பெற்றிருக்கின்ற, வாவி - தடாகத்திலுள்ள, நீரிடை - நீரின்கண்ணே, குளித்து - மூழ்கி, சினை - சூலையுடைய, வரால் - வராலானது, மறைந்திட - ஒளித்துக்கொள்ளவும் (செய்து), வரையில் - மலையின்கண்ணே, தூங்கு - தங்கிய, தேன் - தேனை, பெய்த - வார்த்து வளர்க்கப்பட்ட, பச்சி இளங்கழையை - பசுமையு மிளமையும் பொருந்திய மூங்கிலோடு, தோழமை - நட்பை, கொண்டன - கொண்டிருந்தன, எ - று.

க - து. அன்னம் தமயந்தியினது கணைக்கால்களின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

ஆவத்திற்குப் 'பகழி பொதிந்த' என்றும் 'பொன்' என்றும் அடைகள் சேர்த்தமையாற் கணைக்காலில் ஆடவரது மனவலியைக் கெடுக்கின்ற குணமும் பொன்னிறமுங் கொள்க. மன்மதன் காகள மெனப்பட்டது குயிலாம்; "கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங், கொடிமகரந் திங்கள் குடை" (அரதனச் சுருக்கம்-கூ) இதனுலறிக. குயில் - வடிவத்திற்குங் காமுகரை வருத்துதற்குங் கொள்ளப்படும். சினைவராலுக்கு வயிறுபோலக் கணைக்காலிற்குப் பின்புற மேற்பங்கு பருத்திருத்தல் காண்க. வெங்கொடுப்ப, வெரீஇயரற்ற, மறைந்திட இவ்வினையெச்ச அடுக்கை முடித்தற்குச் செய்து என்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. [ஆவ முதலியவை வெங்கொடுக்கச் செய்கை முதலியவற்றின் சம்பந்தத்தைக் கற்பித்தலாலே தொடர்புயர்வு நவிற்சியணி.] மூங்கிலுக்குக் கண்டோரால் விரும்பப்படுகிற அதன் செழுமை முதலிய குணங்கள் தோன்றற்கு 'வரையிற் றூங்குதேன் பெய்த' என்னு முடை கொடுக்கப்பட்டது போலும். 'தோழமை கொண்டன' என்றதற்கு அவைகளை யொத்திருக்கின்றன வென்பது கருத்து. (உச)

[இதனுல் அடிகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

மூருகவிழ் செய்ய கமலமுண் ணெகிழ்ந்து முகமலர்ந் துறுகணீர் சிந்தி, யொருபசுந் தாளின் வனத்தினின் றரிதி னுஞற்றிய தவத்தினு லன்றோ, விரிமல ரசோகின் றளிர் நலங் கவற்றி மென்சிறை யனமென மிழற்றும், பரிபுர மணிந்து பஞ்சியூட் டியபொற் பதத்தினைச் சிறிதுபோன் றனவே.

இ - ள். முருகு - பரிமளமானது, அவிழ் - விரியப்பெற் றிருக்கின்ற, செய்ய கமலம் - செந்தாமரை மலர்களானவை, உள் நெகிழ்ந்து - மனமுருகி (உடைகட்டுவிட்டு), முகமலர்ந்து - முகக்கிளர்ச்சி கொண்டு (நுனிவிரிந்து), உறு - மிகுந்த, கண்ணீர் - ஆனந்தக் கண்ணீரை (தேனுகிய நீரை), சிந்தி - பொழிந்து, ஒரு பசுந்தாளின்-பசிய ஒரு காலினுலே (ஒரு நாளத்தினுலே), வனத்தில் - காட்டிலே, (நீரிலே), நின்று - நின்று, அரிதின் - அரிதாக, உஞற்றிய - செய்த, தவத்தினுல் அன்றோ - யோகத்தினு லன்றோ, விரி - விரிந்த, மலர் - மலர்களையும், அசோகின் - அசோகத்தினது, தளிர் நலம் - தளிர் களி லுயர்ந்ததையும், கவற்றி - துன்பப்படுத்தி, மெல் சிறை - மெல்லிய சிறைகளையுடைய, அன்னம் என - அன்னம்போல, மிழற்றும் - ஒலிக்கின்ற, பரிபுரம் - சிலம்பை, அணிந்து - தரித்து, பஞ்சி - செம்பஞ்சை, ஊட்டிய - அப்பப்பெற்ற, பொன் - பொன்னிறம் பொருந்

தியபதத்தினை - அடிகளை, சிறிது போன்றன - சிறியவளவில் ஒத்தன, எ - று.

க - து. அன்னம் தமயந்தியினது பாதங்களின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

தாமரைக்கு முகமலர்தல் சூரியன்முன்னே யாதலால் அது தவத்திற்குங் கொள்க. வனத்திற்சென் றொருதாளா னின்று மனங் குழைந்து சூரியனை நோக்கி யானந்தக் கண்ணீர் பொழிந்து செய்யப் படுகிற யோகம் தாமரைக்குச் சிலேடையாற் சொல்லப்பட்டது. 'பதத்தினைச் சிறிதுபோன்றன' - என்றதற்கு அந்த யோகத்திற்குப் பயனாகத் தமயந்தியின் பதசாரூப்பியத்திற் சிறிது பெற்றன என்பது பொருள். சரியை, கிரியை, யோகம், ஞானம் இவற்றிற்கு முறையே சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம், சாயுச்சியம் இவை பயன்களாமென்பது சைவாகமத்திற் காண்க. [பதத்தினைச் சிறிது போலுதற் கேதுவாகாத அத்தாமரையினது அப்படிப்பட்ட நிலைமையாகிய தவத்தை யேதுவாகக் குறித்தலாலே யேதுத்தற்குறிப் பணி; தாமரை தன்னாலே விரும்பப்பட்ட பதசாரூப்பிய முழுதுமடையாமையைச் சொல்லுதலால் தகுதியின்மையணி; ஆதலாற் சேர்வையணி.] (உகு)

[இதனால் நீ அவளை எங்கே கண்டாய் என்கிற வினாவோடு கூடிய வுத்தரஞ் சொல்லப்படுகின்றது.

இத்தகை வனப்பின் மடவர றன்னை யெவ்வுழிக் கண்டனை யென்னிற், பைத்தபாம் பல்கு லரம்பையர் வதியும் பதிதுறந் திம்பரிற் போந்து, மொய்த்தபூம் பொய்கை காணிய தேய முழுவதுங் குறுகின னவற்றுட், கைத்தல மமர்ந்த நெல்லியங் கனியிற் கண்டனன் விதர்ப்பர்கோ னகரில்.

இ - ள். இத்தகை - இப்படிப்பட்ட, வனப்பின் - அழகினையுடைய, மடவரல் தன்னை - மங்கையை, எவ்வுழி - எவ்விடத்தே, கண்டனை என்னின் - பார்த்தாயென்று வினவினால், பைத்த பாம்பு - படம்விரித்த பாம்புபோலும், அல்குல் - அல்குலையுடைய, அரம்பையர் - தெய்வமாதர், வதியும் - தங்கப்பெற் றிருக்கின்ற, பதி - நகரத்தை, துறந்து - விட்டு நீங்கி, இம்பரில் - இவ்வுலகத்தின் கண், போந்து - வந்து, மொய்த்த - நெருங்கிய, பூ - மலர்களையுடைய, பொய்கை - தடாகங்களை, காணிய - பார்க்கும்படியாக, தேயம் முழுவ

தும் - தேசங்களனைத்தையும், குறுகினன் - அடைந்தேனுகி, அவற்றுள் - அத்தேசங்களுள்ளே, கைத்தலம் - உள்ளங்கையில், அமர்ந்த - தங்கிய, நெல்லியங்கனியின் - நெல்லிப் பழத்தைப்போல, விதர்ப்பர் கோன் - வீமராஜனது, நகரில் - பட்டணத்தில், கண்டனன் - (அவளைப்) பார்த்தேன், எ - று.

க - து. இவ்வழகுள்ள தமயந்தியை வீமராஜன் பட்டணத்திற் கண்டேனென் றன்னஞ் சொல்லியது என்பதாம்.

'அரம்பையர் வதியும் பதி' என்றது சுவர்க்க லோகத்தை. பூம்பொய்கை காணுதல் விளையாடுதற் பொருட்டென்க. அவளிடத்தே சில குறைவுகள் உன்னு லறியப்படா திருக்கலாகாதாவெனின், அப்படிக்கில்லை யெனற்குக் 'கைத்தல மமர்ந்த நெல்லியங் கனி' என்றது; நெல்லிக்கனியை யுள்ளங்கையில் வைத்துப் பார்ப்போருக்கு அதன் உருவ முழுவதும் நன்றாய்க் காணப்படுத லறிக. அன்றியும் அக்கனியின் புறவரைகளாலே அகத்து வித்து வரைகளையும் அளவறிதல் போல அவள் புறத்துக் குணங்களாலே அகத்துக் கருத்தின் குணங்களையும் அளவறிதற்குச் சொல்லப்பட்ட தெனினுமாம். (உசு)

[இதனாலே அப்படி யுன்னுற் காணப்பட்டவளை இங்கே நினைத்தற்குக் காரணம் யாதென்கிற வினாவிற்கு விடை சொல்லப்படுகின்றது.]

**கா**ண்டலு மவட்கு நிகரர மகளிர் தம்மிலுங் கண்டிலேன் கதித்துப், பூண்டயங் கிளைய வனமுலை திளைக்கும் புயமுடை யிளைஞன்யா ரென்னுத், தேண்டினன் மும்மை யுலகிலுங் காணேன் றிருந்தலர்க் கசனியே றன்ன, வாண்டகாய் நின்னைக் காண்டலு நினைந்தே னவ்வளைத் தோளணங் கினையே.

இ - ள். திருந்தலர்க்கு - பகைவருக்கு, அசனி ஏறு அன்ன - இடியுஞ் சிங்கமும் போலும், ஆண்டகாய் - ஆண்மையுடையவனே, காண்டலும் - கண்டவளவிலே, அவட்கு - அவளுக்கு, நிகர் - நிகர்வாளை, அரமகளிர் தம்மிலும் - தெய்வ மங்கையருள்ளும், கண்டிலேன் - பார்த்திலேன்; கதித்து - பருத்து, பூண் - ஆபரணங்களால், தயங்கு - விளங்காநின்ற, இளைய - இளமைபொருந்திய, வனம்-சந்தனக் கோலத்தையுடைய, முலை - முலைகளை, திளைக்கும் - தழுவுதற்குத் தகுதியுள்ள, புயம் - தோள்களை, உடை - உடைய, இளைஞன் - தாளை, யார் என்று - எவரென்று, தேண்டினன் - தேடினேன்;

மும்மை உலகிலும் - மூன்றுலகங்களிலும், காணேன் - கண்டிலேன்; நின்னை - உன்னை, காண்டலும் - பார்த்தவளவிலே, அ - அந்த, வளை - வளையலையணிந்த, தோள் - கைகளையுடைய, அணங்கினை - கன்னியை, நினைந்தேன் - நினைத்தேன், எ - று.

க - து. அவளுக்கு நாயகன் மூன்றுலகினுங் காணேன், உன்னைக் கண்டு அவளை நினைத்தேன் என்பதாம்.

முன்பாட்டிலே 'அரம்பையர் வதியும் பதிதுறந்து' என்றதனாலே தனக்கிடந் தேவலோக மென்பதும், தேவமகளிரை யெல்லாம் தானறிந்திருக்கையும் குறிப்பித்தலினாலே 'காண்டலு மவட்கு நிகரா மகளிர் தம்மிலுங் கண்டிலேன்' என்றது. நிகர்வாளென்பத னீறு கெட்டு நின்றது; "கொள்வாருங்கள் வருநேர்" என்புழிப்போல. அரமகளிர் தம்மிலு மென்றவும்மை உயர்வு சிறப்பு. "யாஅ ரென்னும் வினாவின கிளவி, யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே" (தொல்காப்பியம்-சொல்லதிகாரம் வினையியல்-௩௬) என்னும் விதியால் யாரென்று வென்றது. தேடின னென்னும் வினை எதுகைத் தொடைநோக்கி விரித்தல் விகாரமாய் வந்த ணகரம் பெற்று நின்றது. தேண்டு என்பதே பகுதியெனக் கோடலு மமையும். தேண்டினன் என்பதை முற்றெச்சமாக்கி காணேன் என்னும் வினைகொண்டு முடிந்ததாக வுரைத்தலுமாம். அசனியேறு-ஆணிடி யெனினுமாம். யாரென்னு மெழுவாய் வருவிக்க. 'மும்மை யுலகிலுங் காணேன்' என்றதனால் தேவர் உரகர் மனிதர் இம்முத்திறத்தாருள்ளுந் தக்கவனில்லை யென்றதாயிற்று. 'நின்னைக் காண்டலு நினைந்தேன்' என்றதனால் நெடுங்காலத்தின் முன்னே அவளைக் கண்டு இன்றளவும் அவளுக்குத் தக்கவனைக் காணாமையால் அவளை மறந்திருந்து இப்போது உனது பேரழகு அவளை நினைப்பிக்க நினைத்தே னென்றதாயிற்று. [அழகொப்புமையால் நளனைக் கண்டு தமயந்தியை நினைத்தலால் நினைப்பணி.]

(உஎ)

[இதனாலே நீ அவளுக்கு இன்றியமையாச் சிறப்பினை யென்பதும், அவளும் உனக்கு இன்றியமையாச் சிறப்பினளென்பதுஞ் சொல்லப்படுகின்றன.]

கேழ்கிளர் தரள வடமிள முலையிற் கிடப்பினன் றேசிறப் பெய்து, மாழையொண் கண்ணி மார்பிடங் கொண்டு வளரிள வனமுலை நினது, பாழியந் தடந்தோட் குவட்டினை நெருங்கப் புல்லினன் றேபயன் பயக்கு, மாழியாய் நினக்கு வனப்புவ ளிலளே லலர்ந்தபா டலங்கதாமால்,

இ - ள். ஆழியாய் - சக்கரவர்த்தியே, கேழ் - நிறத்திலுலே, கிளர் - விளங்காநின்ற, தரளவடம் - முத்துமாலையானது, இள முலையில் - (மாதரது) இளமைபொருந்திய முலையின்கண்ணே, கிடப்பின் அன்றே - கிடந்தாலன்றே, சிறப்பு எய்தும் - விளங்கும்; மாழை - மாவடுப்போலும், ஒள்-ஒளிபொருந்திய, கண்ணி - கண்களை யுடையவளது, மார்பு-மார்பை, இடம் கொண்டு-இடமாகக் கொண்டு, வளர் - வளர்கின்ற, இள வனம் முலை - இளமையுஞ் சந்தனக்கோல மும் பொருந்திய முலைகளானவை, நினது-உன்னுடைய, பாழி அம் தடம் தோள் - வலிமையும் அழகும் விசாலமும் பொருந்திய தோள் களாகிய, குவட்டினை - மலைகளை, ஒருமுங்க - அழுந்த, புல்லின் அன்றே - சேர்ந்தா லன்றே, பயன் பயக்கும் - விளங்கும்; நினக்கு- உனக்கு, வனப்பு - அழகானது, அவள் - அத்தமயந்தி, இலளேல் - இலளாயின், அலர்ந்த - மலர்ந்த, பாடலம் - பாதிரிப் பூவிற்கு, நிகராம் - ஒப்பாகும், எ - று.

க - து. சக்கரவர்த்தியே! தமயந்தி முலைகளானவை உன்னு டைய தோளைச் சேர்ந்தாற் பயனடையும்; அவளில்லாவிடில் உனக்கு அழகு பயன்படாது என்பதாம்.

'இளமுலையிற் சிறப்பெய்தும்' என்றும், 'தோட்குவட்டினைப் புல்லிற் பயன் பயக்கும்' என்றுங் கூறவே மற்றை யிடங்களிலே வீணு மென்றதாயிற்று; இதனாலே நீ அவளுக்கு இன்றியமையாச் சிறப்பினையென்பது காட்டப்பட்டது. அன்றே விரண்டும் உலகறி தேற்றத்தில் வந்தன. மாழை - மாமரம்; அது இங்கு அதன் சினை யாகிய வடுவை யுணர்த்தலால் முதலாகு பெயர். "மாவடு வகிரன்ன கண்ணிபங்கா" என்றார் மணிவாசகரும். [இங்கே தரளவடமும் வனமுலையுமாகிய உபமானோபமேயங்களையுடைய இரண்டு வாக்கியங் களிலே இளமுலைக்கும் அரசனுக்கும் பிம்பப் பிரதிபிம்ப பாவத்தைச் சொல்லுதலாலே எடுத்துக்காட் டுவமையணி.] பாதிரி மலரிலே தகுந்த காயுண்டாகாமை பற்றி 'அலர்ந்த பாடல நிகராம்' என்றது. இதன் முதனூலிலே அவகேசியென்று சொல்லப்பட் டிருக்கிறது; அது அத்தி முதலிய பூவாது காய்க்கு மரங்களுக் கெல்லாங் கோளி யென்பதுபோலப் பூத்துங் காயாத மரங்களுக்கெல்லாம் பொதுப் பெயராம். இங்கே அவற்று ளொன்றாகிய பாதிரி சொல்லப்பட் டது; "அல்கியுந் தீங்கனிமிக் காக்கும் பலவினலர், பல்கியும் பாடலப் பூப் பாழாகு - நல்கிசைகூர், நல்லோர்பாற் செல்வஞ் சிறிது நலம் பயக்கு, மல்லோர்பே ராக்கமும் வீணும்" என்பதனுலுமறிக. தற் கிழமைப் பொருளாகிய அழகைக் கூறவே பிறிதின் கிழமைப் பொரு

ளாகிய அரசாட்சி செல்வ முதலியவையும் வீணுமென்பது தானே தோன்றுமென்க. இதனாலே அவள் உனக்குக் கிடைப்பளாயின் உன் அழகு முதலிய யாவும் பயன்படு மென்பது தோன்றலால் அவள் உனக் கின்றியமையாச் சிறப்பினளென்பது காட்டப்பட்டது. [அரச னாகிய புகழ் பொருளைத் தமயந்தியாகிய ஒருபொரு ளில்லாமையி னாலே தாழ்வடைவதாகக் கூறலால் இன்மை நவிற்சியணி. இது வும் பாடல நிசராமென்ற உவமையணியுஞ் சேர்ந்துவருதலால் சேர் வையணியாம்.] (உஅ)

[இதனால் தன்னுதவி வேண்டுமென்பதைக் காட்டுதற்கு அவளருமை கூறலும், ஆனால் எப்படி அவளை அடையலா மென்றற்கு உத்தரமுஞ் சொல்லப்படுகின்றன.]

கருப்புயன் மறைக்கு மதிக்கதிர் வேட்டல் கைரவ மலர்பெறா ததுபோ, லரும்பிள முறுவ லிளமுலைப் போகம் மையநீ யெய்துதற் கரிதால், விரும்பின ராகி யமரரு மிருந் தார் விண்ணவ ரிடத்தவ ளார்வம், புரிந்திடா துனது பே ரெழி லவட னுளத்திடைப் பொறிப்பல்கா ணுதியால்.

இ - ள். ஐய - அரசனே, அமரரும் - தேவர்களும், விரும்பினர் ஆகி இருந்தார் - (அத்தமயந்தியை) விரும்பி யிருந்தார்; கைரவ மலர் - அல்லி மலரானது, கரு புயல் - கரிய மேகத்தினாலே, மறை க்கும் - மறைக்கப்பட்டிருக்கின்ற, மதி - சந்திரனது, கதிர் - கிர ணத்தை, வேட்டல் - அனுபவித்தலை, பெறாது - பெறமாட்டாது; அதுபோல் - அம்மலர்போல, அரும்பு இள முறுவல் - அரும்புகின்ற புன்சிரிப்பை யுடையவளாகிய (அத்தேவரால் விரும்பப்பட்டிருக் கின்ற தமயந்தியினது), இளமுலை - இளமுலையினது, போகம்-அனு பவமானது, நீ - நீ, எய்துதற்கு - அடைதற்கு, அரிது - அரிதாயிருக் கும்; விண்ணவரிடத்து - அத்தேவரிடத்தே, அவள் - அம்மங்கை யானவள், ஆர்வம் - ஆசையை, புரிந்திடாது - செய்யாதிருக்கும்படி யாக, உனது-நினது, பேர் எழில்-ஒப்புயர்வில்லாத அழகை, அவள் - அவளது, உளத்து இடை-மனத்தின்கண்ணே, பொறிப்பல்-(யான்) எழுதிவைப்பேன், காணுதி - (நீ என் வல்லமையைப்) பார், எ - று.

க - து. உன்னழகைத் தமயந்தி உள்ளத் தெழுதுவேனென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

இளமுறுவல் - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழி த்தொகைக் காரணப்பெயர், பேரெழில் - பேரழகு; இதனைக் சட்டழ

கென்றுங் கூறுவர். அமரர் - இந்திரன் முதலியோர். அமரரும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு. தான் முன்னறிந்தமையைச் சொல்லுதலால் இருக்கின்று ரென்னுது 'இருந்தார்' என்றிறந்தகாலத்தாற் கூறிற்று. ['விரும்பின ராகி யமரரு மிருந்தார்' என்னும் பதப்பொருளால் எய்துத லரிதெனப்பட்டதைச் சாதித்தலாலே செய்யுட் குறியணி; இதனை அங்கமாகக்கொண்டு உவமையணி வந்தது.] 'உனது பேரெழி லவட னுளத்திடைப் பொறிப்பல்' எனவே உனதுயர்வொப்பில்லாத அழகைக் குறித்து அவளிடத்தே பலவிதத்தாலும் புகழ்ந்து அவளது நினைப்பைவிட்டு நீங்காதிருக்கச் செய்வேனென்றதாயிற்று. இங்ஙனஞ் செய்தல் அரிதாதலாலே தகுதிபற்றிப் 'பார்' என்றதற்கு வல்லமை யென்னுஞ் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஆல், தன் - அசைகள். (உக)

[இதனால் அப்படியே செய்யலாமே, என்னோடு சொல்லுதலாற் பயனேன் என்றந்த உத்தரமும், அரசன் அதற்குக் காதல்கூர் மொழி சில சொன்னமையுஞ் சொல்லப்படுகின்றன.]

செய்தொழில் பயனானுரைப்பரே யன்றித் தெளிகுநருரையினா லுரையா, ரையமுற் றுடன்பா டெய்துவான் முன்ன ரறைந்தன னெனமட வன்னம், பெய்தசொல் லமுதமுள்ளெலாம் பரந்து பெருகிமேல் வழிதல்போ னகையாக், கையினாற் பசும்பொற் சிறகர்தை வந்து காதல்கூர் மொழி சில புகன்றான்.

இ - ள். ஐய - அரசனே, தெளிகுநர் - விவேகிகள், செய் தொழில் - (தம்மால்) செய்யப்படு முபகாரத்தை, பயனால் - (அதன்) காரியத்தினாலே, உரைப்பரே அன்றி-சொல்லுவரேயல்லாமல், உரையினால் - வாக்கினால், உரையார் - சொல்லார்; முற்று - முழுதும், உடன்பாடு - (உன்) சம்மதியை, எய்துவான் - அடையும் பொருட்டாகவே, முன்னர் - முன்னாக, அறைந்தனன் என - சொல்லினனென்று சொல்லியதாக, மட அன்னம் - இளமை பொருந்திய அன்னத்தினாலே, பெய்த - பெய்யப்பட்ட, சொல் அமுதம் - சொல்லாகிய அமிர்தமானது, உள் எல்லாம் - உள்ளிடமெல்லாம், பரந்து - பரவி, பெருகி - பெருக்கெடுத்து, மேல் - மேலே, வழிதல் போல் - (வாய்வழியால்) வெளிப்படுதல் போலும், நகையா - நகைசெய்து,

கையினால் - கரத்தினாலே, பசும்பொன் - பசிய பொன்வடிவமாகிய, சிறகர் - சிறகுகளை, தைவந்து - தடவி, காதல்கூர் மொழி சில-ஆசை மிகு சிலமொழிகளை, புகன்றான் - (அரசன்) சொன்னான், எ-று.

க - து. அரசன் அன்னத்தைத் தடவிக்கொடுத்து ஆசையோடு சிலவார்த்தை சொல்லுவான் என்பதாம்.

'தெளிகுநர்' - 'தொழிற்பெயர்க் கிடையிற் றோன்றுமே நகரம்' (இலக்கணத்திரட்டு-பொதுவியற்படலம்). முற்று மென்பதனும்மை தொக்கது. அம்முற்று மென்னுஞ் சொல் சிறிதும் பிறிதொன்றைக் குறித்தன்றென்னும் பொருள்பட நின்றது. உடன்பா டெய்தாமற் செய்தால் அங்ஙனஞ் செய்யப்பட்டதை நீ அங்கீகாரஞ் செய்யாமற் போவாயாயின் என் முயற்சி வீணாய்த் தீராப் பழிதருமென்னும் பொருளைக் காட்டுதற்கு 'உடன்பா டெய்துவான் முன்ன ரறைந்தனன்' என்றது. இதனாலே பின் செய்யப்படு முபகாரத்தை முன்னே சொல்லுதல் தகாதென்றதாயிற்று. 'செய்தொழிற் பயனே யுரைப்பதையன்றி' 'ஐயமுற் றிடுதி யென்ப,நான் முன்னர்' எனவும் பாடமுண்டு.அப்பாடத்திற்கு இப்பொருள் அமையாமை காண்க. அன்றியும் 'ஐயமுற்றிடுதி" என நிறுவி நீ அங்கீகாரஞ் செய்வாயோ செய்யாயோவென்று நான் சந்தேகமுற்று எனப் பொருள்கூறினும் அமையும்.[முதலடியிற் சொல்லப்பட்ட பொதுப் பொருளாலே இரண்டாமடியிற் சொல்லப்பட்ட முன்னரறைதல் தகாதென்னுஞ் சிறப்புப்பொருளைச் சாதித்தலாலே வேற்றுப்பொருள்வைப்பணி.] பெய்த சொல்லமுதம் - 'குடவளையினங்கள் வயிறுளைந்து' என்னும் பாட்டு முதலியவற்றாற் சொல்லப்பட்டவை. [சொல்லமுதம் - உருவகவணி. தெள்ளமுதம் எனப் பாடங்கூறின் உருவகவுயர்வு நவிற்சியணியாம். அமுதத்தை அதிகமாகக் குடித்தவனுக்கு எதிர்த்துச் சிறிது வெளிப்படு மாதலின் வெண்மைபற்றி அவனது நகையை அவ்வெளிப்படு மமுதமாகக் குறித்தலாலே தற்குறிப்பணி.] இது அவ்வுருவகத்தா லுய்விக்கப்பட்டது. காதல்கூர் மொழிசில என்றதற்கு அன்னத்தினாலே விரும்பப்படுகிற சிலமொழி யெனவும், தனது ஆசை மிகுதியை வெளிப்படுத்துகிற சிலமொழி யெனவு மிருபொருள் கொள்க. தெளிகுநர்-மனத்தெளி வுடையார். எய்துவான் என்பதில் வான் எதிர்காலவினையெச்ச விகுதி. இவ்வெச்சம் அறைந்தனன் என்னும் வினைகொண்டது. நகையா-செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்; இது தைவந்து என்னும் வினைகொண்டது. தைவந்து என்பதற்குப் பகுதி தைவா. சிறகு என்பது சிறகர் எனப் போலியாயிற்று.

[இதுமுதல் நான்கு பாட்டுகளாலே முன் காதல்கூர்
மொழி சிலவென்னப்பட்டவை சொல்லப்படுகின்றன.]

பொலன்சிறைப் பவளக் கடிகைவா யனநின் பொற்
பினுக் குவமைவே றின்று, நலங்கெழு குணனு முரைப்ப
தற் கரிது நல்லெழில் பகருமுன் னூலோ, ரிலங்கெழி லளவு
குணமென வுரைப்ப ரிதற்குமேற் கோளென நின்னைத்,
துலங்குறக் கண்டேன் விரகநோய் தீர்க்கு மருந்துநின்
சொல்லின்வே றுளதோ.

இ - ள். பொலன் - பொன் வடிவாகிய, சிறை - சிறைகளையும், பவளக் கடிகை - பவளத்துண்டுபோலும், வாய்-வாயையும் உடைய, அனம் - அன்னமே, நின் - உனது, பொற்பினுக்கு - அழகுக்கு, உவமை வேறு-வேறுவமை, இன்று - இல்லை; நலம் கெழு - நன்மை பொருந்திய, குணனும் - உன் குணமும், உரைப்பதற்கு - சொல்லுதற்கு, அரிது - அரிதாகும்; நல் எழில் - நல்ல அழகி னிலக்கணத்தை, பகரும் - சொல்லுகின்ற, முன் நூலோர் - பழைய நூலோர், இலங்கு - (ஒருபொருளிலே) விளங்காநின்ற, எழிலளவு - அழகின் அளவாகவே, குணம் என - குணமும் (அதிலிருக்கும்) என்று, உரைப்பர் - சொல்லுவார்; இதற்கு - இந்தச் சித்தாந்தத்திற்கு, மேற்கோளென - உதாரணமாக, துலங்குற - விளங்காநிற்க, நின்னை - உன்னை, கண்டேன் - (நான்) பார்த்தேன்; விரகம் - விரகத்தாலாகிய, நோய் - காம வியாதியை, தீர்க்கும் - நீக்குகின்ற, மருந்து - ஔஷதம், நின் சொல்லின் - உனது சொல்லின், வேறு - வேறாக, உளதோ - (எனக்கு) இருக்கின்றதோ, எ- று.

க - து. அன்னமே! என் விரகநோய்க்கு மருந்து உன் சொல்லே யல்லாது வேறுண்டோ என்றான் நளன் என்பதாம்.

'உவமை வேறின்று' என்றதனால் அதற்கு அதுவே ஒப்பென்றதாயிற்று. 'எழிலளவு குணமெனல்' - எதிலே எவ்வளவு அழகிருக்குமோ அதிலே அவ்வளவு குணமிருக்கு மென்றல். 'நின்னை மேற்கோளெனக் கண்டேன்' எனலால் ஒப்பில்லாத அவ்விரண்டிற்கும் நீ இடமா யிருக்கின்றா யென்றதாயிற்று. [எழிலளவு குணமெனப் பட்டதைச் சாதித்தற்கு முன் வாக்கியப் பொருள் ஏதுவாகையால் செய்யுட்குறியணி.] விரகநோய் தீர்க்கு மருந்து நின் சொல்லின் வேறுளதோ என்றதற்கு அவளைக் கூட்டுதல் உன்னாலன்றி முடியாதென்பது கருத்து. அன்னம் அனம் எனத் தொகுத்தலாயிற்று. அனம் அண்மை விளியாதலால் இயல்பாயிற்று. (௩௧)

வெண்ணகைத் துவர்வா யணங்கெழில் பலரும் விளம்பினர் நின்மொழி யவளென், கண்ணெதிர்ப் பட்டாள் போலுமெய்த் துணையாற் கருத்தினாற் காண்டலே காண்ட, னண்ணிமுற் றோன்றும் பொருளுநுண் ணியதே னாடுதற் கரியலா முகத்திற், பண்ணிய நோக்க நோக்குநர்க் கழகு பயப்பதை யன்றிவே றுளதோ.

இ - ள். வெள் நகை - வெள்ளிய பற்களையும், துவர் வாய் - பவளம்போலும் வாயையுமுடைய, அணங்கு - தமயந்தியினது, எழில் - அழகை, பலரும் - (விதர்ப்பதேயத்திலிருந்து வந்த) பலரும், விளம்பினர் - (எனக்குச்) சொன்னார்கள் (ஆயினும்), நின் மொழி - உன் சொற்களாலே, அவள் - அம்மங்கை, என் - எனது, கண் எதிர்ப்பட்டாள் போலும் - கண்முன் பார்க்கப்பட்டவள் போல்கின்றாள்; மெய் - மெய்மையாக, துணையால் - நட்பாளனாலும், கருத்தினால் - (தன்) மனத்தினாலும், காண்டலே - (எல்லாவற்றையும்) காணுதலே, காண்டல் - காட்சியாகும்; முன் - எதிரிடத்தே, நண்ணி - பொருந்தி, தோன்றும் - தோன்றுகின்ற, பொருளும் - பொருளையும், நுண்ணியதேல் - நுட்பமானதா யிருக்கின், நாடுதல் கரியலா - காணுதற்குச் சான்றாகாத, முகத்தில் - முகத்திடத்தே, பண்ணிய - உண்டாக்கப்பட்ட, நோக்கம் - கண்ணானது, நோக்குநர்க்கு - (அப்படித் துணைவனாலுங் கருத்தினாலும்) காண்கின்ற அறிவுடையோர்க்கு, அழகு - அழகை, பயப்பதை அன்றி - (அம்முகத்துக்குச்) செய்வதல்லாமல், வேறு - மற்றொரு பயனைச் (செய்தற்கு), உளதோ - இருக்கின்றதோ, எ - று.

க - து. அன்னமே உன் சொல்லானது தமயந்தி என்முன் வந்தாற்போலு மிருக்கின்றது என்றான் நளன் என்பதாம்.

ஆப்தவாக்கியப் பிரமாணத்தினாலே 'நின்மொழி யவளென் கண்ணெதிர்ப் பட்டாள் போலும்' என்றானென்க. 'மெய்' எனலால் சந்தேக விபரீதங்க ளொழிக்கப்பட்டன. துணையென்னும் பெயர் வேந்து - அரசு - அமைச்சு என்பவைபோல உயர்திணை அஃறிணை ஈறுபோல் பண்பிக்காயிற்று; "உயர்திணை யீறுபோ லஃறிணை வருதலு, மருகல் விதியென வறைந்தன ரான்றோர்" (இலக்கணத்திரட்டு - பொதுவியற்படலம்-எ). தன் மனம்போலவே துணைவனுமென்று அவனிடத்துள்ள நம்பிக்கையை வெளிப்படுத்துதற்குக் 'கருத்தினால்' என்பது சொல்லப்பட்டது. இதனாலே தன்

காட்சியினுந் துணைவன் காட்சியே உயர்வினதென்றதாயிற்று. எங்குமுள்ள எல்லாவற்றையுந் துணைவன் வாய்மொழியையுந் தன் கருத்தையுங்கொண்டு காணக்கூடுமாதலால் அவற்றாற் காணுதலே காட்சியென்றும், தூரத்திலுள்ளவற்றையே யன்றிச் சமீபத்திலுள்ள அணு முதலிய நுண்ணிய பொருள்களையுங் கண்ணைக்கொண்டு காணக் கூடாமையால் அவற்றாற் காண்பார்க்கு இக்கண்ணாற் பயனில்லையென்றுஞ் சொல்லப்பட்டன. 'நண்ணிமுற் றோன்றும் பொருளுளம் பிரியி னுடுதற் கரியவாண்முகத்திற், பண்ணிய நோக்கம்' எனப்பாடங் கூறி, அதற்கு எதிரேயுள்ள பொருளை மனந்தன்னைவிட்டுப் பிரிந்தாற் காணமாட்டாத கண் எனப் பொருள் கூறுவாருமுண்டு; அது இதன் முதனூன் முடிபின் வேறுபட்டு அத்துணைச் சிறப்பின்றி நிற்றலறிக. கரி - சாக்ஷி. (கூஉ)

முருந்திள முறுவ லழகுரைத் தெவரு மூட்டிய காம
வெந் தீயிற், சொரிந்திடு நெய்யிற் குணனெலா முரைத்தி
சொல்லுமவ் வழலிடைப் பெய்து, கரிந்தபைந் தளிரின்
வாடுமெற் குறித்துக் கனன்றுகூற் றுறுதிசை யமர்ந்து,
வருஞ்சிறு தென்றன் மலயவெவ் விடங்கால் வாளரா
வுயிர்ப்பென லாமால்.

இ - ள். முருந்து - மயிலிறகி னடிபோலும், இள முறுவல் - சிறிய பற்களை யுடையவளது, அழகு - அழகை, உரைத்து - (எனக்குச்) சொல்லி, எவரும் - (விதர்ப்பதேசத்திருந்து வந்த) பலராலும், மூட்டிய - (அச்சொற்களாகிய விறகிலே) மூட்டப்பட்ட, காமம் - காமமாகிய, வெந்தீயில்-வெப்பம் பொருந்திய நெருப்பிலே, சொரிந்திடு - சொரியப்பட்ட, நெய்யின் - நெய்யாக, குணன் எலாம் - (அவள்) அழகையெல்லாம், உரைத்தி - சொல்லினை; சொல்லும் - சொல்லப்பட்ட, அ அழலிடை - அக்காம நெருப்பில், பெய்து - இடப்பட்டு, கரிந்த - கருகின, பைந்தளிரின் - பசிய தளிராக, வாடும் - வாடுகின்ற, என் குறித்து-என்னைக் குறித்து, கனன்று-சுட்டுக்கொண்டு, கூற்று - யமனானவன், உறு - வாசஞ் செய்யப்பெற்ற, திசை - தென்றிசையில், அமர்ந்து - பொருந்தி, வரும் - வருகின்ற, சிறுதென்றல் - இளந்தென்றலை, மலயம் - பொதிய மலையிலுள்ள, வாள் - ஒளிபொருந்திய, அரா - பாம்புகளது, வெம் விடம் - கொடிய நஞ்சத்தை, கால் - பொழிகின்ற, உயிர்ப்பு எனல் ஆம் - ஊதுகாற்றென்று சொல்லலாம், எ - று.

க - து. தென்றற் காற்றைப் பாம்புகளினது உயிர்ப்பென்று சொல்லலாம் என்பதாம்.

இளமுறுவல்-பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். அவர்போலத் தமயந்தியினழகு மாத்திரமேயன்றி நீ அவள் பிறப்பு முதலியவற்றையுஞ் சொன்னுயென்றற்குக் 'குணன்' என்றும், அவற்றுளினி யறியவேண்டுவது சிறிதுமில்லையென்றற்கு 'எலாம்' என்றுங் கூறினனென்க. 'கூற் றுறுதிசை யமர்ந்து வருஞ்சிறு தென்றல்'என்றது சகவாசகுணம்பற்றி உயிர்க்கொலை செய்யுந் தன்மைத் தென்பது தோன்றற் கென்க. பொதிய மலையிலே சந்தன மரங்களின் மணம்பற்றிப் பாம்புகள் அதிகமா யிருத்தலால் 'மலயவெவ்விடங்கால் வாளரா' என்றான். விறகிலே நெருப்பு மூட்டி நெய்வார்த்து அதனை யெரிவித்தற்கு ஊதுதல் உலக வழக்கமாதலால் அங்ஙனஞ் சொல்லப்பட்டது. தளிரின் என்பதில் இன் ஐந்தாவதன் ஒப்புப் பொருளது. கனன்று என்பதற்குப் பகுதி கனல். [தென்றலை அவ்வூது காற்றாகக் குறித்தலாலே தற்குறிப்பணி; இது உருவகத்தை அங்கமாகக்கொண்டு வந்தது.] (௯௩)

வெண்கதிர் பரப்பித் தணந்தவ ரிதய மெழுகென வுருக்கும் வெண் டிங்கள், கண்கவர் வனப்பி னணங்கினை நினைந்து கவலுமென் னுளத்தினைக் கனற்றத், தண்கதிர் பெறுவென் றழற்றுவெங் கதிர்க டனித்தனிக் கவர்வதற் கன்றோ, வொண்சுட ரிரவி யிடத்தினிற் றிங்க டொறுமினி துறவுசெய் குவதே.

இ - ள். வெள் கதிர் - வெள்ளிய கிரணங்களை, பரப்பி - விரித்து, தணந்தவர் - பிரிந்தவரது, இதயம் - மனத்தை, மெழுகு என - (தீயிற்பட்ட) மெழுகென்னும்படி, உருக்கும் - உருக்காநின்ற, வெள் திங்கள் - சந்திரனானது, ஒள் சுடர் - ஒள்ளிய கிரணங்களையுடைய, இரவி இடத்தினில் - சூரியனிடத்தே, திங்கடொறும் - மாதந்தோறும், இனிது - இனிதாக, உறவு - நட்பை, செய்குவது - செய்துவருவது, கண் - கண்களை, கவர் - கவர்கின்ற, வனப்பின் - அழகையுடைய, அணங்கினை - அத்தமயந்தியை, நினைந்து - எண்ணி, கவலும் - துன்பப்படுகின்ற, என் உளத்தினை - எனது மனத்தை, கனற்ற - சுடுதற்கு, தண் கதிர் - சீதள கிரணங்கள், பெறு என்று - (வல்லமை) பெறுவனவல்லவென்று, அழற்று - சுடுகின்ற, வெம் கதிர்கள் - உஷ்ண கிரணங்களை, தனித்தனி - ஒவ்வொன்றாக, கவர்வதற்கு அன்றோ - வௌவுதற்கன்றோ, எ - று.

க - து. சந்திரன் என்னைச் சுடுதற்கோ மாதந்தோறுஞ் சூரியனிடத்தில் உறவுசெய்கின்றா னென்றான் நளன் என்பதாம்.

தணந்தவர் என்பதற்குப் பகுதி தண; கவலும் என்பதற்குப் பகுதி கவல். சிதள கிரணத்தினாலே தணந்த பலரையுஞ் சுடாநின்ற சந்திரன் தன்னுள்ளத்தைச் சுடுதற்கு அக்கிரணமுதவாதென்று சூரிய கிரணத்தை வாங்குகிறதாகச் சொல்லலால் தன்னை அவரின் மேற் பட்ட மனவலியை யுடையவனென்று அங்ஙனஞ் செய்கின்றானென் பது குறிப்பிக்கப்பட்ட தாயிற்று. [சந்திரன் அமாவாசைதோறுஞ் சூரியனோ டுறவுசெய்தற்குப் பயனாகாத அழற்றுவெங் கதிர்க டனித் தனிக் கவர்தலைப் பயனாகக் குறித்தலாலே பயன்றற்குறிப்பணி.] ()

[இதனால் அன்னத்தைத் தூதுவிடுதல் சொல்லப்படுகின்றது.]

காதலங் கடலின் கரைபெறற் கயனாற் காரண மின் றியே காட்டப், போதரும் புணைய தாதியென் னுள்ளம் புலம்புகொண் டினைவது தவிர்ப்பான், றாதுநீ போய்முன் னுரைத்தவா முடித்த றோமறு புகழ்நினக் கென்ன, வாதரம் பெருக நன்மொழி புகன்றவ் வனத்தினை மடந்தைபால் விடுத்தான்.

இ - ள். காதல் - ஆசையாகிய, கடலின் - கடலினது, கரை - கரையை, பெறற்கு - (நான்) பெறுதற்கு, காரணம் இன்றி - ஏதுவில் லாமல், காட்ட - (அதனைக்) காண்பிக்க, அயனால் - விதியினால், போதரும் - வந்த, புணை ஆதி - தெப்பமாகுதி; என் உள்ளம் - என் மனமானது, புலம்பு கொண்டு - துன்பத்தைக்கொண்டு, இனைவது - வருந்துதலை, தவிர்ப்பான் - தீர்க்கும்படியாக, நீ - நீ, தூது - தூதாக, போய் - சென்று, முன் - முன்னே, உரைத்தவா - (உன்னால்) சொல் லப்பட்டவாறு, முடித்தல் - நிறைவேற்றல், தோம் அறு-குற்றமற்ற, புகழ் - கீர்த்தியாகும், நினக்கென்ன - உனக்கென்று, ஆதரம் - அன் பானது, பெருக - வளர, நல் மொழி - முகமன் சொற்களை, புகன்று- சொல்லி, அ அனத்தினை - அந்த அன்னத்தை, மடந்தைபால் - தம யந்தியிடத்து, விடுத்தான் - அனுப்பினான், எ - று.

க - து. நளமஹாராஜன் அன்னத்தைத் தமயந்தியிடத்துத் தூதுவிட்டான் என்பதாம்.

காதல் - தமயந்திமேலாசை. காதலம் என்பதில் அம் சாரியை. புணையது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. கரைபெறுதல் - அவளையடைதல். இங்கே காரணமின்மை - தன் முயற்சியில்லாமை. 'காரண மின்றி அயனாற் போதரும் புணை' எனவே என் முயற்சியா லன்றி முன்னை நல்வினையாற் கிடைத்த புணையென்றதாயிற்று. [இம்

முதல் வாக்கியம் உருவகவணி.] 'முன்னுரைத்தவா முடித்தி' எனவே நீ தானே இதுகாரியத்திலே முயலாநிற்க நான் உன்னை முயல்வித்தல் பிசைபட்டமாவைப் பிசைதல் போலுமாமென்றதாயிற்று. [முடித்தல் புகழெனக் காரண காரியங்களுக்கு ஒற்றுமையைச் சொல்லுதலால் ஏதுவணி.] தோமறு புகழ் - உலகமுள்ளளவளவும் அழியாது நிற்கும் புகழ். (௩௫)

[இதனால் போம்போது அதற்குச் சொல்லப்பட்டவையும் பின் வருந்தியிருக்கின்றபடியுஞ் சொல்லப்படுகின்றன.]

போதரு நெறியி னன்மைகள் பயக்க பொருந்துறு கிளையொடு புல்லி, யாதரம் பெருகு மளியனை மறவே லாயி ழை யருண்முகம் பெற்றுத், தீதற விரைவில் வருதியென் றுரைத்துத் திங்களி னருஞ்சுதை தீற்று, தாதவிழ் தாம மாடமேற் றானுந் தனியுமா யிருந்துட றளர்ந்தான்.

இ - ள். போதரும் - போகின்ற, நெறியில் - வழியில், நன்மைகள் - சுபங்களானவை, பயக்க - (உனக்கு) உண்டாகுக; பொருந்துறு - பொருந்திய, கிளையொடு - (உன்) சுற்றத்துடனே, புல்லி - கூடி (அதனால்), ஆதரம் - ஆசையானது, பெருகும் - வளரப்பெற்றிருக்கின்ற, அளியனை - எளியேனை, மறவேல்-மறவாதே; ஆயிழை- தமயந்தியினது, அருள் முகம் - அருளோடுகூடிய வாக்கை, பெற்று - அடைந்து, தீது அற - குற்றமற, விரைவில் - சீக்கிரத்தில், வருதி என்று - வாவென்று, உரைத்து - சொல்லி, திங்களின் - சந்திரன்போலும், அரு சுதை - அரிய சுண்ணச்சாந்தை, தீற்று - தீற்றப்பெற்றுள்ள, தாது - பொடியையுடைய, அவிழ் - மலர்ந்த, தாமம் - பூமாலைகளையுடைய, மாடமேல் - மேல்வீட்டிலே, தானும் - தானும், தனியுமாய் - ஒருவருமுடனில்லாமையுமாகி, இருந்து - இருந்து, உடல் - உடம்பு, தளர்ந்தான் - தளரப்பெற்றிருந்தான், எ - று.

க - து. நளன் அன்னத்தைத் தூதுபோய்வாவென்று சொல்லியனுப்பித் தனித்திருந்து உடல் வருந்தினன் என்பதாம்.

பயக்க - "வியங்கோள் விகுதிமுன் வலியியல்பாகும்" (அகத்தியம்). புல்லி காரணப் பொருட்டாகிய வினையெச்சம். இச்செய்யெனெச்சம் மறவேல் என்னும் வினைகொண்டது. ஆயிழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். நன்மைகள் பயக்கவென்றது - வாழ்த்து. மறவேலென்றது - வேண்டிக்கோடல், வருதியென்றது - விதி. முகம் - ஆகுபெயர். நீடீண்டு

வருதற்குக் காலநீட்சி யுண்டாமாயின் அதுவரையில் என்னுயிர் நிற்க மாட்டாது, உன் முயற்சி வீணாய்ப் பழிபடுமென்பது தோன்றற்குத் 'தீதற விரைவில் வருதி' என்றானென்க. விடுத்தபின் னுரைத்தல் பொருந்துமோ வெனின், போகத் தொடங்குகையில் ஆசை மிகுதி யாற் சொல்லுதலும் உலகவழக்க மாதலாலே பொருந்துமென்றறிக. 'தானுந் தனியுமா யிருந்து' என்றதனால் உயிர்போற் சிறந்த நட்பாளரையும் விலக்கியிருந்தா னென்றதாயிற்று. (ரு௬)

[இதுமுத லிரண்டு பாட்டுகளால் அன்னத்தின் செலவு சொல்லப்படுகின்றது.]

ஈங்கிவன் மாழாந் தன்னமென் சொல்லா லின்னுயிர் தாங்கின னிருப்பத், தீங்கரும் பனுக்கு மாங்குயிற் கிளவி செவ்விகண் களிப்புற நோக்கி, யாங்கணுற் றிற்றைப் பகலை நற் பகல தாக்குவ லெனமனம் வலியாப், பூங்கனி நிறைநீர்ப் பொற்குட மெதிரப் போயது பொலன்சிறை யன்னம்.

இ - ள். ஈங்கு - இவ்விடத்தே, இவன் - இவ்வரசன், மாழாந்து - அறிவுகலங்கி, அன்னம் - அன்னத்தினது, மெல் சொல்லால் - மெல்லிய சொல்லால், இன் உயிர்-இனிதாகியவுயிரை, தாங்கினன் - தாங்கினவனாகி, இருப்ப - இருக்க, தீம் கரும்பு - மதுரமாகிய கன்னலை, அனுக்கும்-கெடுக்கின்ற, மா குயில்-மாங்குயில் (இசைபோலும்), கிளவி - சொல்லையுடையவளது, செவ்வி - அழகை, ஆங்கண் - அவளிருக்கின்றவிடத்தை, உற்று - அடைந்து, கண் களிப்புற - (என்) கண் களிகூர, நோக்கி - பார்த்து, இற்றை பகலை - இத்தினத்தை, நல் பகலது ஆக்குவல் என-நல்லதினமாக்குவனென்று, மனம் வலியா - மனத்திலெண்ணி, பூ கனி - அழகிய பழமும், நிறை நீர் - நிறைந்த நீரையுடைய, பொன் குடம் - பொற்குடமும், எதிர - தனக்கெதிர்ப்பட, பொலன் சிறை - பொற்சிறைகளையுடைய, அன்னம் - அன்னமானது, போயது - போயிற்று, எ - று.

க - து. அன்னமானது நற்சகுனங்காணச் சென்றது என்பதாம்.

அனுக்குதல் - (இனிமை மிகுதியால்) வருத்துதல். 'தீங்கரும்பனுக்கும்' என்றதனால் இனிமை மிகுதி பெறப்பட்டது. மற்றை மரங்களில் வாழினும் மாமரங்களில் மிகுதியாக வாழ்தல்பற்றி, குயிலென்னாது 'மாங்குயில்' என்றார். கன்னல் - சர்க்கரை யெனினுமாம். 'அன்னமென் சொல்லா லின்னுயிர் தாங்குதல்' - அது தன் விருப்பப் பொருளைப் பெறுதற்கு உபாயமாகையாலே தைரியங்கொண்டிருத்

தல். பூங்கனி - அவ்வனத்தி லோர் மரத்தின் பழம். பழமும் நிறை நீர்க்குடமும் எதிர்ப்படின் அவை விரும்பப்பட்ட காரியங் கைகூடு மென்பதை முன்னறிவிக்கின்ற நல்ல நிமித்தங்களாம்; இது நிமித்த நூலிலே சொல்லப்படுவது. (கஏ)

கட்புலன் கதுவா துயர்ந்துபின் னெவருங் காண்வர வெள்ளிடைப் பறந்து, புட்செறி வாவி புகாதகல் விசும் பிற் பொன் னுரைத் தாலெனப் போகி, நுட்பமாய் குநர்க்கு மதிசயம் பயப்ப நொடிவரைப் புகுந்ததவ் வன்னம், வட்கி வெண் மதியஞ் சவிகெட வொளிரு மாடமார் குண்டின புரமே.

இ - ள். அ அன்னம் - அவ்வன்னமானது, கண் - கட்பொறி க்கு, புலன்-விஷயமாக, கதுவாது - பற்றப்படாமல், உயர்ந்து - மே லெழும்பி, பின் - (அதன்) பின்பு, எவரும் - யாவரும், காண்வர - (தன்னைக்) காண, வெள்ளிடை - ஆகாசத்தில், பறந்து - பறந்து, புள் - பறவைகளானவை, செறி - நெருங்கப்பெற்ற, வாவி - தடா கங்களிலே, புகாது-செல்லாமல், அகல் விசும்பில் - விரிவுள்ள வாகாச மாகிய (உரை கல்லில்), பொன் - (தன் சிறைகளின்) பொன்னை, உரைத்தால் என - உரைத்ததுபோல, போகி - சென்று, நுட்பம்-கால நுட்பத்தில், ஆய்குநர்க்கும் - ஆராய்கின்றவருக்கும், அதிசயம் பய ப்ப - ஆச்சரியமுண்டாக, நொடிவரை - நொடியளவில், வெள் மதி யம் - வெள்ளைச் சந்திரனானது, வட்கி - நாணி, சவி கெட - அழகு கெட, ஒளிரும் - விளங்காநின்ற, மாடம் - மாளிகைகளால், ஆர் - நிறைந்த, குண்டினபுரம் - குண்டினபுரத்திலே, புகுந்தது - சென் றது, எ - று.

க-து. அன்னமானது குண்டினபுரத்தில் சென்றது என்பதாம்.

சவி - ஒளியெனினுமாம். மேலெழும்புகிற விசையாற் காணப் படாமையால் 'கட்புலன் கதுவா துயர்ந்து' என்றும், பின் மேலிரு ந்து வழி நிதானித்துச் செல்லுஞ் சிறிது காலத்திலே யாவராலுங் கண்களினூடக் காணப்படுதலால் 'எவருங் காண்வர வெள்ளிடைப் பற ந்து' என்றும், சுற்றத்தோடுகூடி யின்புறுதலையும் வழியிடையிற் சற் றே தங்கி இளைப்பாறுதலையும் விட்டு அரசன் காரியத்தையே பெரி தாக நினைத்துப் போதலால் 'புட்செறி வாவி புகாது' என்றும் சொ ல்லப்பட்டன. உரைத்ததென்னும் வினைமுற்று உரைத்தாலெனத் திரிந்தது. [பறத்தல் வேகத்தினாலே அதன் பொன்னொளி தாரை யாக விழுதல்பற்றிப் பொன்னுரைத்ததெனக் குறித்தலால் தற்குறிப்

பணி.] நுட்பமாய்குநர்-கீழே அதனிழலைப் பார்த்து அக்கணத்திற்றுனே மேலே பார்ப்பவர். (௫௮)

[இதனால் வனக்காட்சி சொல்லப்படுகின்றது.]

* கலிவிருத்தம்.

மன்னு மாநகர் மேய வளனெலா
மன்னங் கண்ணுற் றதிசயித் தேகனு
முன்னங் கண்டது மூசுவண் டார்த்தெழப்
பொன்னந் தாதவிழ் பூந்துணர்ச் சோலையே.

இ - ள். அன்னம் - அன்னமானது, மன்னும் - நிலைபெற்ற
பெருமை பொருந்திய, நகர்-குண்டினபுரத்தில், மேய-தங்கிய,
எலாம் - சிறப்புகளையெல்லாம், கண்ணுற்று - பார்த்து, அ
த்து - ஆச்சரியப்பட்டு, ஏகலும் - போமளவிலே, முன்னம் - (தன்)
திரே, மூசு - மொய்க்கின்ற, வண்டு - வண்டுகளானவை, ஆர்த்து - ஒலிசெய்து, எழ - எழும்பாநிற்க, பொன் - பொன்னிறம்பொருந்திய, தாது - பொடியுடனே, அவிழ் விரிகின்ற, பூ-மலர்களோடு கூடிய, துணர் - கொத்துகளையுடைய, சோலை - (தமயந்தியினது) வனத்தை, கண்டது - பார்த்தது, எ - று.

க - து. அன்னமானது குண்டினபுரத்தைப் பார்த்துப் போம் போது தமயந்தி வனத்தைக் கண்டது என்பதாம்.

பொன்னம் என்பதில் அம் சாரியை. கண்ணுற்று ஒரு சொல். இதற்குப் பகுதி கண்ணுறு. அரும்புகளா யிருக்கும்போது மொய்த்த வண்டுகள் விரியும்போது அஞ்சி யெழுமாதலால் ஆர்த்தெழவென்னும் வினையெச்சம் அவிழென்னும் வினைகொண்டதென்க. அன்றி, தன் சிறைக்காற்றால் அஞ்சியெழக்கண்டது என முடிக்கினு மமையும். (௫௯)

[இதனாலே அச்சமயத்திலே தமயந்தி அங்கே வருதற்கு நிமித்தஞ் சொல்லப்படுகின்றது.]

சோலை வாயிற் சுடரு நிலாமணி
யால வாலத் தவிர்மதி யாற்புனல்
கால வாய்ந்த கதிர்மணி முல்லையின்
கோல நாண்மலர் கொய்வதற் கெய்தினாள்.

* "பத்தெழுத் தென்ப நேரடிக் களவே, யொத்த நாலெழுத் தொற்றலங் கடையே" (தொல்காப்பியம்-செய்யுளியல்-௫௭).

இ-ள். சோலைவாயில் - அச்சோலையின் கண்ணே, ஆலவால த்து - பாத்திகளில், சுடரும் - விளங்குகின்ற, நிலாமணி - சந்திர காந்தங்கள், அவிர் - விளங்காநின்ற, மதியால் - சந்திரகிரணத்தினு லே, புனல் - நீரை, கால - கக்க, வாய்ந்த - (அதனுல்) நிலைபெற்ற, முல்லையின்-முல்லைக்கொடிகளுடைய, கதிர்-கிரணங்களோடுகூடிய, மணி - முத்துப்போலும், கோலம் - அழகிய, நாள் - அன்று பூத்த, மலர் - மலர்களை, கொய்வதற்கு - பறிப்பதற்கு, எய்தினுள் - (தமய ந்தி) வந்தாள், எ - று.

க-து. தமயந்தி மலர் கொய்தற்குச் சோலைக்கு வந்தாள் என் பதாம்.

ஆலவாலம் - பாத்தி. [இப்பாட்டின் பொருள் செல்வமிகுதி யைச் சொல்லுதலென்னு மிலக்கணத்தால் வீறுகோளணியும், சந் திரகாந்தத்தின் அவ்வளவு நீர்ப்பெருக்குக்கு முல்லைக்குஞ் சம்பந்த மில்லாமையிலே சம்பந்தத்தைக் கற்பித்தலென்னு மிலக்கணத்தால் தொடர்புயர்வு நவிற்சியணியும்; ஆதலால் ஒரு தொடர்ப் பொருட் கலவையணியாம்.] (எ0)

[இனுலே காட்சி சொல்லப்படுகின்றது.]

மீது லாயவெண் டாரகை நாப்பணிற்
சீத வொண்கதிர்த் திங்கள்கண் டாலென
மாதர் நோக்கின் மடந்தையர் நாப்பணிற்
காதல் கூர்தம யந்தியைக் கண்டதே.

இ-ள். மீது - ஆகாசத்திலே, உலாய - திரிகின்ற, வெள் தாரகை - வெள்ளிய உடுக்களது, நாப்பணில் - நடுவில், சீதம் - குளி ர்ச்சி பொருந்திய, ஒள் - ஒள்ளிய, கதிர் - கிரணங்களையுடைய, திங் கள் - சந்திரனை, கண்டால் என - கண்டதுபோல, மாதர் - அழகிய, நோக்கின் - பார்வையையுடைய, மடந்தையர்-மாதரது, நாப்பணில் - நடுவில், காதல்கூர் - விரும்பப்படுகிற, தமயந்தியை - தமயந்தி யென் பவளை, கண்டது - (அவ்வன்னமானது) பார்த்தது, எ - று.

க - து. அன்னம் தமயந்தியைக் கண்டது என்பதாம்.

நாப்பண் - நடு. காதல்கூர் என்பதற்கு நளனிடத்து விருப்பம் மிகப் பெற்றிருக்கிற எனினுமாம். இவ்வுவமையினுலே தமயந்தி யினுடைய தோழிகளெல்லாரும் ஒரு நிகரான அழகுடையவர்களாய் விளங்கலும், அவள் அவர்களுக்குள்ளே நடுநாயகமாய் விளங்கலுங் காண்க. ௬(எக)

[இதனால் அவளை வியந்தமை சொல்லப்படுகின்றது.]

கண்ணுங் கையு முகமுங் கமலமா
நண்ணுஞ் சண்பக நாண்மலர் மேனியா
வண்ணல் வேளை வழிபடற் காற்றிய
வண்ண மாலைகொ லென்று மருண்டதே.

இ - ள். கண்ணும் - கண்களும், கையும் - கைகளும், முகமும் - வதனமும், கமலம் ஆ - தாமரை மலர்களாகவும், மேனி - வடிவமானது, நண்ணும் - பொருந்திய, நாள் - அன்றுபூத்த, சண்பகம்-சண்பகத்தினுடைய, மலர் ஆ - மலர்களாகவும் (தோன்றலால்), அண்ணல் - தலைவனாகிய, வேளை - மன்மதனை, வழிபடற்கு - பூசித்தற்பொருட்டு,ஆற்றிய-செய்யப்பட்ட, வண்ணம்-அழகிய,மாலையென்று-தொடையென்று, மருண்டது - மயங்கிற்று (அன்னம்), எ - று.

க - து. அன்னமானது தமயந்தியை மாலையென்று மயங்கியது எனபதாம்.

கமலமாக மலராகவென்கிற செயவென் வாய்பாட்டு வினையெச்சங்க ளீறுகெட்டு வந்தன. அவற்றை முடித்தற்குத் தோன்றலாலென்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. நாலு சாதிகளினுஞ் சிறந்த பதுமினி சாதிக்கு "சண்பக மலரெனச் சிவந்த மேனியாள்" (கொக்கோகம்-க-ம் அத்தியாயம்-உ) என்று சொல்லப்பட்டமையால் பதுமினிசாதிய ளென்றதாயிற்று. [தமயந்தியை அப்படிப்பட்ட மாலையென்று மயக்குதலால் மயக்கவணியாம்.] கொல் - அசை. (சஉ)

[இதுமுதல் மூன்று பாட்டுகளால் பின் அன்னத்தின் செயல் சொல்லப்படுகின்றது.]

வழிந்து தெள்ளமு தூற வளர்ந்துமா
சொழிந்த திங்களை யூர்வளைந் தாலெனச்
செழுந்தண் கோதை திருமுக முள்ளுறச்
சுழன்று தாழ்ந்தது தூச்சிறை யன்னமே.

இ - ள். தூ - பரிசுத்தமாகிய, சிறை - சிறைகளையுடைய, அன்னம் - அன்னமானது, வழிந்து - பெருக்கெடுத்து, தெள் அமுது - தெள்ளிய அமிர்தமானது, ஊற - சுரக்க, வளர்ந்து-நிறைந்து, மாசு - குற்றத்தினின்று, ஒழிந்த - நீங்கிய, திங்களை - சந்திரனை, ஊர் - பரிவேஷமானது, வளைந்தால் என - சூழ்ந்ததுபோல, கோதை-தமயந்தியினது, செழு தண்-செழுமையுங் குளிர்ச்சியும் பொருந்திய, திரு-

அழகிய, முகம் - முகமானது, உள் - நடுவில், உற - பொருந்த, சுழ ன்று - சுற்றிவந்து, தாழ்ந்தது - இறங்கிற்று, எ - று.

க - து. அன்னமானது தமயந்தியைச் சுற்றிவந் திறங்கிற்று என்பதாம்.

பரிவேஷம் - சந்திர சூரியர்களைச் சூழத் தோன்றும் வட்டம். 'மாசொழிந்த திங்களை' என்றதற்குக் களங்கமில்லாத சந்திரன் ஒன்றுண்டாயின் அதனையெனப் பொருள்கூறி இல்பொருளுவமை யாக்கினு மமையும். சந்திரனுக்கு அமிர்தம்போல முகத்திற்கு மதுர வாக்குக் கொள்க. 'ஊர்வளைந் தாலெனச் சுழன்று' எனவே சுழற்சி வேகத்தினாலே அதன் பொன்னொளி வலயமாக வீழ்ந்ததென்பது தோன்றுதலறிக. பறவைக்கு ஆகாசத்திலிருந்து கீழே யிறங்கும் போது தங்குதற்குத் தகுந்தவிடத்தைச் சுழன்றுகொண்டே பார்த் தல் சுபாவம். [உவமையுந் தன்மை நவிற்சியுஞ் சேர்தலால் சேர்வை யணி.] (௯௩)

தெய்வத் தாமரைப் போதுறை செல்வியுங்
கொவ்வை வாயயி ராணியுங் கூறுமிந்
நவ்வி நோக்கிக் கிணையென நாட்டுத
லெவ்வ மென்ன விகழ்ந்து வியந்ததே.

இ - ள். தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, தாமரை போது - தாமரைப்பூவின்கண், உறை - வாசஞ் செய்கின்ற, செல்வி யும் - திருமாதும், கொவ்வை-கோவைப்பழம்போலும், வாய்-வாயை யுடைய, அயிராணியும் - இந்திராணியும், கூறும் - சொல்லப்பட்ட, இநவ்வி நோக்கிக்கு-மான்கண்போலுங் கண்களையுடைய இவளுக்கு, இணை என - உபமானமாவரென்று, நாட்டுதல் - நிறுத்துதல், எவ் வம் என்ன - குற்றமென்று, இகழ்ந்து - (அவ்விருவரையும்) இகழ் ந்து, வியந்தது - (இவளழகைக் குறித்து) ஆச்சரியப்பட்டது (அன் னம்), எ - று.

க - து. அன்னமானது இலக்குமியையும் இந்திராணியையு மிகழ் ந்து தமயந்தியைப் புகழ்ந்தது என்பதாம்.

தெய்வம் - அடங்காவழிச்சந்தி. செல்வங்களுக்கு அதிதேவதை யாதலால் திருமகளைச் 'செல்வி' என்றார். கொவ்வை - முதலாகு பெயர். நவ்வி - மான். [உபமானங்களுக்குக் குறைவைச் சொல்லுத லால் எதிர்நிலை யுவமையணி.] (௯௪)

வேறு.

சுலவுற் றெதிர்போ கியதூ வியனங்
குலவுற் றபொலன் சிறையைக் குவியா
நிலனுற் றெறிநீள் சிறைமெல் வளியா
லலைவுற் றமருங் கினளஞ் சினளால்.

இ - ள். சுலவுற்று - சூழ்ந்து, எதிர் - (தமயந்தி) முன்பு, போகிய - சென்ற, தூவி - இறகுகளையுடைய, அனம் - அன்னமானது, குலவு உற்ற-வளைவு பொருந்திய, பொலன்-பொன்மயமாகிய, சிறையை - சிறைகளை, குவியா - குவித்து, நிலன் - பூமியின்கண், உற்று - பொருந்தி, எறி - (அப்போது) உதறப்பட்ட, நீள் - விரிந்த, சிறை - (அதன்) சிறைகளது, மெல் வளியால் - மெல்லிய காற்றோசையால், அலைவுற்ற மருங்கினள்-அசைவுற்ற இடையையுடைய தமயந்தியானவள், அஞ்சினள் - அச்சமுற்றாள், எ - று.

க - து. தமயந்தியானவள் அன்னத் திறகுகளின் காற்றோசையால் அச்சமுற்றாள் என்பதாம்.

வேறொன்றிற் கருத்து வைத்திருக்கின்றவளுக்கு முன்னே அன்னஞ் சரேலென் றிறங்குஞ் சமயத்தில் விரித்தடித்துக்கொள்ளுஞ் சிறைகளின் காற்றோசை ஆகஸ்மிகமாக வுண்டாதலால் அச்சமுண்டாயிற்றெனக. அன்றியும் 'அலைவுற்ற மருங்கினள்' எனலால் காற்றால் இடை முரியுமென் றஞ்சினா ளெனினுமாம். [தன்மை நவிற்சியணியாம்.] இதுமுதற் பத்தொன்பது பாட்டுகள் பெரும்பாலும் முதற்சீர் புளிமாச்சீரேனுந் தேமாச்சீரேனும் பெற்று மற்றை மூன்றும் புளிமாச்சீர்களாகி வருகிற அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (சரு)

[இதனால் மங்கையர்க்கு அதனிடத்துண்டான விருப்ப மிகுதி சொல்லப்படுகின்றது.]

பொறியின் வழிநெஞ் சுபுகுத் தியிடா
ரறிவின் னறிவா யவரும் பொருளைப்
பிறிதொன் றறநோக் குதல்போற் பிறழு
மறியுண் கணின்மங் கையர்நோக் கினரால்.

இ - ள். பொறியின் வழி - ஐம்பொறிகளின் வழியிலே, நெஞ்சு-மனத்தை, புகுத்தியிடார் - செலுத்தாத யோகிகள், அறிவின் - ஞானமாகிய அகக்கண்ணினாலே, அறிவாய - அறிவுருவாகிய, அரும் பொ

ருளை - பிரமத்தை, பிறிதொன்று - மற்றொரு விஷயசம்பந்தம், அற நீங்க, நோக்குதல் போல் - பார்த்தல்போல், மங்கையர் - தோழிகளா னவர், (பிறிதொன்று) - மற்றொரு விஷயசம்பந்தம், (அற) - நீங்க பிறழும்-புரளுகின்ற, மறி-மான்கண்போலும், உண் - (மை) உண்ட கணின் - (முகக்) கண்களாலே, (அறிவாய)-அறிவை யுடையதாகிய (அரும்பொருளை) - அபூர்வமாகிய அன்னத்தை, நோக்கினர் - பார் த்தல் செய்தார், எ - று.

க - து. பாங்கிமார்க ளன்னத்தைப் பார்த்தார்கள் என்பதாம்.

அறிவின் னறிவாயவென ஒற்றிரட்ட வேண்டாவிடத்துச் சந்த நோக்கி யிரட்டித்தது. உலகம் அஞ்ஞானமயமாகியும் பிரமம் ஞான மயமாகியு நிற்றலின் 'அறிவாய' என்றார். "அகர வுயிர்போ லறிவாகி யெங்கு, நிகரிலிறை நிற்கு நிறைந்து" (திருவருட்பயன்-க) என்பதனு லுமறிக. 'பிறிதொன்றற'-அப்பிரமமன்றி யிரண்டாவ தொருபொரு ளில்லையாக வெனினுமாம். [இது உவமையணி.] ஆல்-அசை.(சசு)

[இதனால் தமயந்தி அதனை விரும்பிப் பிடிக்கத் தொடங்கி னமை சொல்லப்படுகின்றது.]

அணித்தா யரிதா யவரும் பொருளைப்
பிணிப்பா னசைவைத் தமர்பெற் றியர்போ
லணித்தா யவனங் கவர்வா னசையான்
மணிப்பூ ணசையா துவதிந் தனளால்.

இ - ள். அணித்தாய்-தேகத்தினுளிருக்கின்றதாய், அரிது ஆய-(பெறுதற்கு) அரிதாகிய, அரும்பொருளை - பிரமத்தை, பிணிப்பான்-கண்டுபிடித்தற் பொருட்டு, நசை வைத்து - (அதனிடத்தே) ஆசை வைத்து, அமர் - அசைவற்று நிற்கின்ற, பெற்றியர்போல் - மனச் செய்கையையுடைய முனிவர்போல், அணித் (தாய்)-சமீபத்திலுள்ள தாய், (அரி) தாய - அபூர்வமாகிய, அனம் - அன்னப்பறவையை, கவர் வான் - பிடித்தற்பொருட்டு, நசையால் - (அதன்மேல்வைக்கப்பட்ட) ஆசையினாலே, மணி - நவமணிகளாலாகிய, பூண் - ஆபரணமானது, அசையாது - (அசையாதிருக்கும்படி), வதிந்தனள் - (தமயந்தி) தங் கினள், எ - று.

க - து. தமயந்தி அன்னத்தைப் பிடிக்கும்படி யசைவற் றிருந் தாள் என்பதாம்.

பிரமம் உடம்புதோறும் உயிர்க்குயிராய்க் கலந்து நிற்றலின் அணித்தா யென்றதற்குத் தேகத்தினு ளிருக்கின்றதா யெனப் பொருள் கூறப்பட்டது. 'பூணசையாது' எனவே வடிவமசையாமை கூறப்பட்டதாயிற்று. யோகிகள் மனமசையாமல் வைத்துப் பிரமத்தைக் காணுமாறு "வாயுநிற்ப மனநின்று மனந்தானிற்பப் பொறிநின்று, பாயபொறிக ணிற்பவிடர் படுபுன்புலன்க ணின்றனவா, லாயபுலன்க ணின்றமையா லகிலந்தோன்ரு துள்ளத்தே, தூயபரமா னந்தபரஞ் சோதிதோன்றக் கண்டிருந்தார்" (பிரபுலிங்கலீலை-விமலைகதி-உகூ) என்பதனுலறிக. [இது உவமையணி.] வான் - பொருட்டு என்பதை, "வான்பான் பாக்குப் பொருட்டா மீறே" (இலக்கணத்திரட்டு) என்பதனுலறிக. (சஎ)

[இதனுல் அப்போது அன்னத்தின் செயல் சொல்லப்படுகின்றது.]

அவிர்பூ ணொலியா மடக்கினளாய்க்
கவர்வான் வரல்கண் டுமகன் றிலதாய்த்
துவர்வாய் மயிறொட் டிடலா குமெனு
நவைதீ ரனமெல் லநடந் ததுவே.

இ - ள். அனம் - அன்னமானது, அவிர்-விளங்காநின்ற, பூண்- பூண்களை, ஒலியாமல் - ஒலியாதிருக்க, அடக்கினளாய் - அடக்கினவளாகி, கவர்வான் - (தன்னைப்) பிடிக்கும்படியாக, வரல் - வருதலை, கண்டும் - பார்த்தும், அகன்றிலதாய் - (தைரியத்தினுல்) ஓடிப்போகாததாகி, துவர் - பவளம்போலும், வாய் - வாயையுடைய, மயில் - மயில்போல்பவளாலே, தொட்டிடல் ஆகும் எனும் - பிடிக்கக்கூடுமென்கின்ற, நவை - இகழ்ச்சியானது, தீர் - தீர, மெல்ல நடந்தது - மெள்ள நடந்தது, எ - று.

க - து. அன்னமானது தமயந்தி தன்னைப் பிடிக்கும்படி மெள்ள நடந்தது என்பதாம்.

'தொட் டிடலா குமெனு நவைதீர்' என்றலிற் பிடித்தற் கெளிதென்னு மெண்ணத்தை அவளுக்குண்டாக்கி அவள்கை தன்மேல் விழ வருந்தோறுந் தன் குதிப்பினுலே தப்பித்துக்கொண்டு அவள் முயற்சியை வீணுக்கிற் றென்க. தீரவென் வினையெச்சம் ஈறுகெட்டது. விரைந்து நடப்பிற் பிடிபடாதென்று தொடராளென அவணடைக்கேற்ப மெல்ல நடந்ததென்க. (சஅ)

[இதனால் மங்கையர் தமயந்தியைத் தடுத்தமை
சொல்லப்படுகின்றது.]

புளினத் தடமே வியபோ குமன
மெளிதிற் றனகைம் மலரெய் துறுமோ
வுளம்வைத் தமையென் னெனவொண் ணுதலார்
நளினக் கைபுடைத் துநகைத் தனரால்.

இ - ள். ஒள் - காந்திபொருந்திய, நுதலார் - நெற்றியையுடைய தோழிகள், புளினம் - மணற்குன்றுகளையுடைய, தடம் - தடாகத்திலே, மேவிய-வாசஞ்செய்யும்படியாக, போகும்-போகின்ற, அனம்-அன்னமானது, எளிதில் - எளிதிலே, தன - தன்னுடைய, கை - கைகளாகிய, மலர் - தாமரை மலர்களிலே, எய்துறுமோ - அடையுமோ; உளம் வைத்தமை - (எம்பிராட்டி அதனிடத்தே) மனம் வைத்தமைக்குக் காரணம், என் என - யாதென்று, நளினம் - தாமரை மலர்போலும், கை - (தம்) கைகளை, புடைத்து - தட்டி, நகைத்தனர் - சிரித்தார்கள், எ - று.

க - து. தமயந்தி அன்னத்தைப்பிடிக்க மனம் வைத்ததைப் பாங்கியர் கண்டு கைதட்டி நகைத்தார்கள் என்பதாம்.

'புளினம்' என்றதற்குப் பறவைகளி னினத்தையுடைய வெளினுமாம். தமயந்தியின் முயற்சி வீணாதலைக் கண்டு இங்ஙனம் பரிகாசஞ் செய்தாரென்க. (சக)

[இதுமுதல் ஒன்றுபாட்டுகளாலே பிடித்தற்குச் செய்யு
முயற்சி சொல்லப்படுகின்றது.]

புனைமே கலையீர் கைபுடைத் துநகைத்
தனமே கவியற் றுதலன் புகொலோ
தனியே குவனின் மினெனத் தகையாத்
துனியோ டுரைசெய் துதொடர்ந் தனளே.

இ - ள். புனை - அலங்கரிக்கப்பட்ட, மேகலையீர் - மேகலாபரணத்தை யுடையவரே, கை புடைத்து-கைதட்டி, நகைத்து - சிரித்து, அனம் - அன்னத்தை, ஏக - ஓடிப்போக, இயற்றுதல் - செய்தற்குக் காரணம், அன்போ - (என்மேலுள்ள) அன்போ, தனி - தனியாக, ஏகுவன்-(நான்) போவேன், நில்மின் என-(நீர்)நில்லுமென்று, துனியோடு - கோபத்தோடு, உரைசெய்து - சொல்லி, தகையா - ஆணையிட்டு, தொடர்ந்தனள் - (தமயந்தியானவள்) அதன்பின் போயினாள், எ - று.

க - து. தமயந்தியானவள் பாங்கிமாரை நிறுத்திவிட்டுத் தனியே அன்னத்தின்பின் போனாள் என்பதாம்.

கைபுடைத்த வொலியோடு மேகலையொலியு மெழுதல் தோன்றப் 'புனைமே கலையீர்' என்றாளென்க. 'அன்புகொலோ' எனலால் என்மேல் அன்பிலீராதலால் இங்ஙனஞ் செய்கின்றீரென்றதாயிற்று. 'தகைதல்' - என்பின்னே தொடருவீராயின் எனக்குத் துரோகஞ் செய்தவராகக் கடவீரென் றாணைகூறல். கொல், ஏ - அசைகள். நின்மின் - "மின்னீ ரெதிர்மறை யேவற் பன்மையாம்" (இலக்கணத் திரட்டு) என்பதனாலறிக. (௫0)

முகிழ்மென் முலைவா ணுதன்மொய் குழலார்
நகைசெய் வதுகண் டுளநா ணினளா
யகல்கின் றபொலன் சிறையன் னநிழ
னிகரென் னவொதுங் கினனே ரிழையே.

இ-ள். நேர் இழை-தகுந்தவணியையுடைய தமயந்தியானவள், முகிழ் - தாமரை யரும்புபோலும், மெல் முலை - மெல்லிய முலைகளையும், வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையும், மொய் குழலார் - நெருங்கிய கூந்தலையும் உடைய தோழிகள், நகை செய்வது - பரிகாசஞ்செய்தலை, கண்டு - பார்த்து, உளம்-மனத்திலே, நாணினள் ஆய்-வெட்கமுற்றவளாகி, அகல்கின்ற - நீங்குகின்ற, பொலன் - பொன்மயமாகிய, சிறை - சிறைகளையுடைய, அன்னம் - அன்னத்தினது, நிழல் - நிழலானது, நிகர் என்ன - (தனக்கு) நிகராமென, ஒதுங்கினள் - நடந்தாள், எ - று.

க - து. அன்னந் தன்னிழல் தன்னோடு செல்லுதல்போல தமயந்தி அன்னத்தின் பின் சென்றாள் என்பதாம்.

தகையப்பட்ட தோழிகள் தனது பிடிக்க மாட்டாமையைக் கண்டு சிரித்தலால் நாணங்கொண்டா ளென்க. 'அன்னநிழ னிகரென்ன வொதுங்கினள்' எனவே அந்நாணம் அவளது முயற்சியை எழுப்பலால் அதன் சாயைபோல விடாது சென்றாளென்க. [உவமையணி.] (௫௧)

வடியுண் கணிமா முலைதாங் கியதா
லிடுகும் மிடையென் படுமே கலெனப்
பிடிமென் னடைமங் கையர்பே சமறுத்
தடிமென் மலர்பேர்த் தனளா யிழையே.

இ - ள். வடி - கூர்மை பொருந்திய, உண் - (மை) உண்ட, கணி - கண்களை யுடையவளே; மா முலை - பெரிய முலைகளை, தாங்கியதால் - சுமத்தலால், இடுகும் - துவளுகின்ற, இடை - (உன்) இடையானது, என் படும் - (நடத்தலாலே) என்ன பாடுபடும், ஏகல் என - போகாதேயென்று, பிடி - பெண்யானைபோல், மெல் நடை - மெல்லிய நடையையுடைய, மங்கையர் - தோழிகள், பேச - சொல்ல, மறுத்து - (அதை) மறுத்து, ஆயிழை - ஆராய்ந்து கொள்ளப்பட்ட வணியை யுடையவளாகிய தமயந்தியானவள், அடி - அடியுருக்கொண்ட, மெல் மலர் - மெல்லிய தாமரை மலர்களை, பேர்த்தனள் - எடுத்தாள், எ - று.

க - து. தோழிமார் தடுக்கக் கேளாது தமயந்தி யன்னத்தைத் தொடர்ந்தாள் என்பதாம்.

வடி - வடுவகிருக்கோர் பெயராதலால் வடிக்கண் என்பதற்கு வடுவகிர்போலுங் கண் என்றுரைத்தலுமாம்; வடி-வடுவகிர்க்காதலை, திருக்கோவையார் ஙஉ-ம் பாட்டின் விசேடவுரையிற் காணலாம். இடுகும் - துவளுகின்ற என்பதை, "இடுகுத்விறுத லீதலசைதலாம்" (தாதுவிளக்கம்) என்பதனாலறிக. 'என்படும்' என்றதற்கு இப்படியிருக்கிற இது யான் நடந்து செல்லின் மிக வருந்துமென்று நீதானே அறிவாயென்பது பொருள். முன்னே 'எளிதிற் றனைகம் மலரெய் துறுமோ' என்று பிடிபடாமை கூறிக் கேளாமற் போகையாலே பின்னும் வருத்தங் கூறி மறுத்தாரென்க. தகாத தொழில் செய்யும்போது விலக்கல் தோழியர் கடனாதலின் "நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு" (திருவள்ளுவர் - நட்பு - சு) என்பதனாலு மறிக. 'அடிமென் மலர்' எனலால் அடி வருந்துதலுங் கொள்க. ஏகல் - முன்னிலை யேவலொருமை யெதிர்மறை வினைமுற்று. [மலராகிய வுபமானம் நடத்தற் செய்கையிலே உபயோகித்தற்கு அடியாகிய உபமேயத்தி னுருவங்கொண்டு வேறுபட்டதாகச் சொல்லலால் திரிபணி.] (ருஉ)

செய்ப்பட் டசெழுங் கமலத் திலனங்
கைப்பட் டதுபட் டதெனக் கருதா
மைப்பட் டமலர்ப் பொழின்மா தவிவாய்ப்
பொய்ப்பட் டமருங் கினள்புக் கனளே.

இ - ள். பொய் பட்ட - பொய் கூறுதற் கிடமாகிய, மருங்கினள் - இடையையுடைய தமயந்தியானவள், செய் பட்ட - கழனியி

னுண்டாகிய, செழுங்கமலத்தில்-செழிய தாமரைப்பூவி லிருக்கின்ற, அனம் - அன்னமானது, கை - (என்) கையிலே, பட்டது பட்டது என - அகப்பட்டது அகப்பட்டதென்று, கருதா - நினைத்துக் கொண்டு, மை பட்ட - மேகத்தை யளாவிய, மலர் - மலர்களை யுடைய, பொழில் - சோலையிலே, மாதவி வாய் - குருக்கத்தியி னிடத்தே, புக்கனள் - சென்றாள், எ - று.

க - து. தமயந்தி அன்ன மகப்பட்டதென்று குருக்கத்தி மரத்தி னிடத்தே சென்றாள் என்பதாம்.

இருந்துஞ் சிறத்துக் காணப்படாமைபற்றி இல்லையென்று கொள்ளப்படுதலாலே 'பொய்ப்பட்ட மருங்கு' என்று சொல்லப்பட்டது. 'கருதாப் புக்கனள்' என்றதனால் அடி பெயர்க்குந்தோறும் அப்படி நினைத்தாளென்க. பட்டதென்பது விரைவுபற்றி அடுக்கி இறந்தகாலத்திலே வந்தது. 'புக்கனள்' என்றதற்கு அன்னம் அவளை அப்படி நினைக்கச்செய்து வஞ்சித்துக் குருக்கத்தியின் கீழ்த் தனிப் படக் கொண்டுபோயிற் றென்பதே கருத்தாகக் கொள்க. மாதவி - வசந்த மல்லிகைக் கொடிப்புதல் எனினுமாம். (௫௩)

[இதனால் அன்னம் நன்மொழிகள் பேசத் தொடங் கினமை சொல்லப்படுகின்றது.]

தொடர்ந்தாள் கலுழ்தூ முகம்வே ரொழுக
நடந்தா யிழையெய்த் தனளென் னநயந்
திடந்தேர்ந் தவளின் புறுநன் மொழிகண்
மடந்தா ழிளவன் னம்வழங் கியதே.

இ - ள். மடம் தாழ் - அறியாமை போகிய, இள அன்னம் - இளமைபொருந்திய அன்னமானது, தொடர்ந்தாள் - (என் பின்னே) தொடர்ந்தவளாகி, கலுழ் - விளங்குகின்ற, தூ - பரிசுத்தமாகிய, முகம் - முகத்தினின்றும், வேர் - வெயர்வையானது, ஒழுக - ஒழுகா நிற்க, நடந்து - நடந்து, ஆயிழை - தமயந்தியானவள், எய்த்தனள் என்ன - இளைத்தாளென்று, நயந்து - விரும்பி, இடம்-(தகுதியான) இடத்தை, தேர்ந்து - அறிந்து, அவள் - அத்தமயந்தியானவள், இன்பு - இன்பத்தை, உறு - அடைதற்குக் காரணமாவனவாகிய, நல் மொழிகள் - நல்லசொற்களை, வழங்கியது - சொல்லிற்று, எ-று.

க - து. அன்னமானது தமயந்தி யின்பமடைய நல்ல வார்த்தை களைச் சொல்லிற்று என்பதாம்.

இடந்தேர்தல்-தனித்துப் பேசுதற்கா மிடத்தை யறிதல். (௫௪)

[இதுமுதல் இரண்டு பாட்டுகளாலே முன் சொல்லப்பட்ட நன்மொழிகள் இவையென்று சொல்லப்படுகின்றன.]

கோடுந் தியகொம் மைமுலைப் பொறைபால்
வாடும் மிடைமா மயில்வா ரலெனத்
தோடுண் குழன்மங் கையரிற் றுணர்மா
வாடுந் தளிரங் கைமறித் தனபார்.

இ - ள். துணர் - பூங்கொத்துகளை யுடைய, மா - மாமரங்களானவை, கோடு - யானைக் கொம்புகளை, உந்திய - கீழ்ப்படுத்திய, கொம்மை - திரட்சிபொருந்திய, முலை - முலைகளது, பொறையால் - பாரத்தினாலே, வாடும் - வாடுகின்ற, இடை - இடையையுடைய, மா மயில் - பெருமை பொருந்திய மயிலே, வாரல் என - (நடந்து) வராதே யென்று, தோடு - மலரிதழ்களை, உண் - உட்கொண்ட, குழல் - கூந்தலையுடைய, மங்கையரின் - (உன்னுடைய) தோழிகள் போல், ஆடும் - அசைகின்ற, தளிர் - தளிர்களாகிய, அம் கை - அழகிய கைகளாலே, மறித்தன - (உன்னை) விலக்குகின்றன, பார் - (நீ அவற்றைப்) பார், எ - று.

க - து. மாமரங்களானவை தளிர்களாகிய விரல்களாலே வாராதே என்று விலக்குகின்றன பார் என்பதாம்.

உந்திய—"உ.ந்தறள்ளுதல் உயர்ச்சி யேறுதலே" (தாதுவிளக்கம்). மயில் - உவமையாகுபெயர். இது அண்மைவிளியாதலால் இயல்பாயிற்று. 'வடியுண் கணி' என்ற பாட்டிலே மங்கையர் மறுத்தமையைச் சுட்டி இதிலே மங்கையரினென் றுவமிக்கப்பட்டது. [மாமரங்களை அங்ஙன மறிக்கின்றனவாகக் குறித்தலினாலே தற்குறிப்பணி.] இதற்கு மங்கையரினென்னு முவமையும் தளிரங்கையென்னு முருவகமும் அங்கங்கள். (௫௫)

[இதனால் பிடிபடாமைக்குக் காரணம் சொல்லப்படுகின்றது.]

விண்ணின் னியங்கும் மெனைமே வரநீ
மண்ணின் னடந்தெவ் வணம்வெள வுதியா
லெண்ணின் னிதுகண் டவர்யார் நகையார்
பெண்ணின் னமுதே வரல்பே தைமையே.

இ - ள். பெண் - பெண்களிலே, இன் அமுதே - இனிய அமிர்தம்போல் விளங்குகின்றவளே; விண்ணின் - ஆகாசத்திலும், இயங்கும் - திரிகின்ற, எனை - என்னை, மேவர - அடைதற்கு, நீ - நீ,

மண்ணில் – பூமியின்மேல், நடந்து - நடந்துவந்து, எவ்வணம் - எவ்விதத்தினுலே, வெளவுதி - பிடிக்கமாட்டுவாய்; எண்ணின் – ஆலோசிக்குமிடத்து, இது - இச்செய்கையை, கண்டவர் – பார்த்தவருள், யார் – யாவர், நகையார் – சிரியார்; வரல் - (மங்கைப்பருவ மடைந்தவுனது) வருதல், பேதைமை – பேதைப்பருவத்தின் செயலா யிருக்கின்றது, எ - று.

க – து. தமயந்தியே! நீ என்னைப்பிடிக்க வருத லறிவீனமென்றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

"வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல், விரித்த றொகுத்தலும் வரும்செய்யுள் வேண்டுழி" (நன்னூல் – உயிரீற்றுப் புணரியல்-ரு) இவ்விதியால் 'விண்ணின் னியங்கு' விரித்தல் விகாரமாம். 'விண்ணினியங்கு மெனை' என்றதற்குப் பூமியலன்றி ஆகாசத்திலுஞ் சஞ்சரிக்க வல்லவென்னையென்றும், 'மண்ணினடந்து' என்றதற்குப் பூமியொன்றிலே மாத்திரஞ் சஞ்சரிக்கின்ற நீ அப்பூமியிலே நடந்தென்றும் விரித்துரைத்துக்கொள்க. 'பெண்ணி னமுதே' எனலாலும், 'வரல்பேதைமை' எனலாலும் மங்கைப்பருவமுடைமை சொல்லப்பட்டது. பேதைப்பருவம்-ஏழுவயதுப்பருவம். [விண்ணினியங்கு மென்னும் பதப்பொருளாலும் மண்ணினடந்தென்னும் பதப்பொருளாலும் வெளவக் கூடாமையையும், இம்முதல் வாக்கியப் பொருளாலே வரல் பேதைமை என்றதையுஞ் சாதித்தலாலே இவ்விரண்டு செய்யுட் குறியணிகள் கலந்துவந்த கலவையணி.] (ருக)

[இதனுல் அரசன் காரியத்துக்கு உபயோகியாகிய தன் வரலாற்றின் சிறப்பை யுணர்ந்தந் தொடங்கிச் சுற்றமு மிடமு முணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

என்றின் மரபோ துமிவட் கியையப்
பின்னம் மொழிபே சுவலென் றயனூ
ரன்னந் தனதன் புறுசுற் றமியாம்
பொன்னின் னகர்யாங் கள்பொருந் திடமே.

இ – ள். என்று – என்று சொல்லி, இவட்கு - இவளுக்கு, இயைய – பொருந்த, பின் – பின்பு, அம்மொழி - அவ்வரசன் காரியத்தை, பேசுவல் என்று - சொல்வேனென் றெண்ணிக்கொண்டு, இன் மரபு - இனிதாகிய, (தன்) வரலாற்றை, ஓதும் - சொல்லுகின்றது; யாம் - யாங்கள், அயன் - நான்முகக்கடவுளால், ஊர் - செலுத்தப்படுகின்ற, அன்னம் தனது-அன்னவாகனத்தினது, அன்பு உறு -

அன்புமிருந்த, சுற்றம் - உறவினேம்; யாங்கள் - யாங்கள், பொருந்து-தங்கப்பெற்ற, இடம் - இடமானது, பொன்னின் நகர் - தேவநகர மாகும், எ - று.

க - து. அன்னமானது தன் ஜாதியையும் இருக்கு மிடத்தையும் கூறிற்று என்பதாம்.

என்றென்றது முன்னிரண்டு பாட்டையுஞ் சுட்டி நின்றது. பின் சொல்லப்படுவதாகிய அரசன் காரியத்திற்கு உபயோகியாத லால் 'இன்மரபு' என்றது. 'அன்புறு சுற்றம்' என்றதனுல் நெருங் கிய சம்பந்தமுடைமை சொல்லப்பட்டதாயிற்று. 'பொன்னின்னகர் பொருந்திடம்' எனலால் எம்மோடு பயிலுதல் மனிதர்க்கு அரிதென்ற தாயிற்று. தன்னினத்தையுந் தழுவிக்கொண்டு யாமென்றும் யாங்க ளென்றும் கூறிற்று. அயன்; அஜன் என்னும் வடசொற் றிரிபு; பிற வாதவன் என்பது பொருள். இது மங்கல வழக்கு. (௫௭)

[இதனுல் தன்வடிவம் பொன்மயமா யிருக்கைக்குக்
காரண முணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

மலர்மே லயன்மா னதவா வியினுட்
பொலன்மெல் லிதழ்பூத் தசெழுங் கமல
நலனார் வளையம் பலநா ளுமயின்
றுலவா தொளிர்பொன் னிறமுற் றனமால்.

இ - ள். மலர் மேல் - தாமரைப் பூமேலுள்ள, அயன் - நான் முகனது, மானத வாவியினுள் - மானச தடாகத்திலுள்ள, பொலன் - பொன்மயமாகிய, மெல் - மெல்லிய, இதழ் - இதழ்கள், பூத்த - விரி யப்பெற்ற, செழு கமலம்-செழிய தாமரை மலர்களையும், நலன் ஆர் - நலம்பொருந்திய, வளையம் - இளவிலைச் சுருள்களையும், பலநாளும் - பல தினமும், அயின்று - தின்று, உலவாது - அழியாமல், ஒளிர் - விளங்குகின்ற, பொன் நிறம் - பொன்னுருவத்தை, உற்றனம் - அடைந்தோம், எ - று.

க - து. அன்னமானது தன்வடிவு பொன்னிறமுற்ற காரணஞ் சொல்லிற்று என்பதாம்.

மானசவாவி - சத்தியலோகத்தி லுள்ளது. காரணகுணம் காரி யத்தில் உளதாமென்பதுபற்றிப் பொற்கமலமாகிய தம்முணவின் குணந் தமக்குண்டானமை சொல்லிற்று. அயின்று என்பதற்குப் பகுதி அயில். (௫௮)

யில் வந்தமைக்குக் காரண முணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

..யிலன் னவர்கா தலுறு
..ண் மலரைங் கணைவே ளனையா
..ன்மா நகர்நாண் மலர்வா வியினல்
வளநோக் குறமண் ணிடைவந் தனமால்.

இ - ள். களி - களிப்பைத் தருகின்ற, மா - பெருமை பொருந்திய, மயில் அன்னவர்-மயில்போலுஞ் சாயலுடையவராகிய மகளிரால், காதலுறும் - விரும்பப்படுகின்ற, அளி நாண் - வண்டுகளி னொழுங்காகிய நாரியையும், மலர் ஐங்கணை - மலர்களாகிய பஞ்சபாணத்தையு முடைய, வேள் அனையான் - மன்மதன்போ லழகினனாகிய, நளன் - நளமஹாராஜனது, மா நகர் - பெரிய பட்டணத்திலேயுள்ள, நாள் - ..ன்றுபூத்த, மலர் - மலர்களையுடைய, வாவியின் - தடாகத்தினது, ..ல் வளம் - நல்ல வளத்தை, நோக்குற - பார்த்தற்பொருட்டு, மண்ணிடை - பூமியினிடத்துக்கு, வந்தனம்-(யாம் வானுலகத்தை விட்டு) வந்தோம், எ - று.

க - து. நளனது வாவியைப் பார்க்கப் பொன்னுலகத்தைவிட்டு இவ்வுலகிற்கு வந்தோமென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

நளன்மேல் அவளுக்கு ஆசையை யெழுப்புதற்கு அவனழகை இங்ஙனஞ் சிறப்பித்துச் சொல்லியது. 'வளநோக்குற' என்றதற்கு அதில் விளையாடுதற் பொருட்டென்பது கருத்து. நோக்குற - ஒரு சொல். அதற்குப் பகுதி நோக்குறு. (ருக)

[உலகமெங்கு மொழிவில்லாத தீர்விலேயும் தளர்வு தோன்றுமைக்குக் காரண முணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

விண்ணம் புவிபா தலமே வுகினு
நண்ணுந் துயரின் றெனநல் வரமுன்
றண்ணங் கமலத் திறைதந் தனன்மைக்
கண்ணென் றயில்கொண் டகனங் குழையே.

இ - ள். மை - மையெழுதப் பெற்ற, கண் என்று - கண்களென்று (பெயர்வைத்து), அயில் - (நஞ்சம் பூசப்பெற்ற)வேல்களை, கொண்ட - கொண்டிருக்கிற, கனம் குழையே - கனம் பொருந்திய காதணியை யுடையவளே ; தண் அம் கமலத்து-குளிர்ச்சிபொருந்திய அழகிய தாமரைப்பூவி லிருக்கின்ற, இறை-தலைவன் (பிரமன்), விண்

அம்புவி பாதலம் - தேவலோகம் பூலோகம் பாதாளங்கள், பொருந்து-வனைத்தையும், மேவுகினும் - ஒழிவின்றி யடைந்தாலும், நகர் - தேவநகரனும் - (உன்னை) யடையக் கடவதாகிய, துயர் - (த மானது, இன்று என - இல்லையென்று, நல் வரம் - நல்ல மிடத்தையும் முன் - முன்பு, தந்தனன் - (எனக்குக்) கொடுத்தான், ஏ.

க - து. தமயந்தியே! யாங்கள் மூவுலகிற் சென்றாலும் மில்லை யென்று பிரமன் வரங்கொடுத்தான் என்றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

ஒருகாலத்தில் நான்முகனுக்கு வாகனமா யிருந்ததற்காகக் கொடுத்தா னென்க. இவ்வரத்தால் தளர்ச்சியின்றி இப்பூமியிலுள்ள தேசங்களையெல்லாம் ஒழிவின்றி நோக்கித் திரிகின்றே னென்பது இசையெச்சம். கண்ணிற்கு மைபோல வேலிற்கு நஞ்சம் வருவிக்கப்பட்டது. தண்ணங் கமலம் என்பதில் அம் அழகெனினும் சாரியை யெனினும் பொருந்தும். (சு0

[இதனால் வேட்டைக்காரர் முதலானவர் பிடிப்பரென்னும் அச்சம் எனக்கில்லையெனல் சொல்லப்படுகின்றது.]

கௌவைக் கடல்சூழ் தருகா சினியிற்
றெய்வத் திறமே வியசீர் நளனை
வெளவுற் றிடினன் றியிம்மா னிடர்தா
மெவ்வெப் படிவெள வினுமெய் துவனே.

இ - ள். கௌவை - ஒலியையுடைய, கடல் - கடலாலே, சூழ்தரு - சூழப்பட்ட, காசினியில் - பூமியிலே, தெய்வத்திறம் - தேவபோகத்தை, மேவிய - பொருந்திய, சீர் - பாக்கியத்தை யுடைய, நளன் - நளராஜன், வெளவுற்றிடின் அன்றி - பிடித்தாலன்றி, இம் மானிடர்தாம் - இம்மனிதர்தாம், எவ்வெப்படி - எந்தெந்த விதமாக, வெளவினும் - பிடித்தாலும், எய்துவனே - அகப்படுவேனோ, எ - று.

க - து. அன்னமானது யான் நளன்கையி லகப்படுவதன்றி மற்றவர்கையி லகப்படேனென்றது என்பதாம்.

நளன் பிறப்பினாலே மானிடனாயிருந்தும் போகத்தினாலே தேவனாகத் தோன்றலின் அவனிடத்தே மாத்திரம் என்னைப் பிடித்தற்கு வல்லமை யுண்டென்று கூறிற்றென்பது கருத்து. மானிடரெனப் பொதுப்படக் கூறினரேனும் தகுதிபற்றி வேட்டைக்காரர் முதலியோரென்று கொள்க. வலை கண்ணி படைக்கல முதலியவற்றைக்

கொண்டு பறவைகளை வெளவுமாறு பலவு மடங்குதற்கு 'எவ்வெப்படி வெளவினும்' என்றது. (சுக)

[இதுமுத லிரண்டு பாட்டுகளாலே அந்தெய்வபோகம் இதுவெனல் சொல்லப்படுகின்றது.]

ஒளிர்பொன் னுலகத் துறையும் பர்பிரா
னளியாற் புகலே வலுமாற் றகிலேம்
வளர்பூ வுறைவா னவனே வலுமிந்
நளனே வலுமே நனிசெய் குவமால்.

இ - ள். ஒளிர் - விளங்குகின்ற, பொன் உலகத்து - தெய்வலோகத்தின்கண், உறை - வாசஞ் செய்கின்ற, உம்பர்பிரான் - இந்திரனது, அளியால் - அன்பினாலே, புகல் - சொல்லப்பட்ட, ஏவலும் - ஏவலையும், ஆற்றகிலேம் - (யாம்) செய்யோம்; வளர் - வளர்கின்ற, பூ - தாமரைப்பூவின்கண், உறை - இருக்கின்ற, வானவன் - நான்முகக்கடவுளது, ஏவலும் - ஏவலையும், இந்நளன் - இந்த நளனது, ஏவலுமே - ஏவலையுமே, நனி - மிகுதியாக, செய்குவம்-(யாம்) செய்வோம், எ - று.

க - து. பிரமனேவலும் நளனேவலுஞ் செய்வேமென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

தனக்கடங்கின வென்றேவும் வல்லமை யில்லாமையால் 'அளியாற் புகலேவலும்' என்றது. "எழுத்துச் சொற்பொரு ளெய்துந் திரிபே" (இலக்கணத்திரட்டு - பொதுவியற்படலம்) இவ்விதியால் ஆற்றகிலேம் என்றது சொற்றிரிபு. நனிசெய்தல் - அவர் சொன்ன வளவினு மதிகமாகச் செய்து முடித்தல். இங்ஙனங் கூறலால் இந்திரனைக் காட்டிலுஞ் சிறந்தவன் நளனென்று குறிப்பித்ததாயிற்று. (சுஉ)

துளிதூங் கியவா னதிதோய்ந் துநறுங்
குளிர்தூங் குகுறுந் துளிமென் சிறையாற்
களிதூங் கியகா மவிடா யகல
நளன்மே னியில்வீ சுவநன் குறவே.

இ - ள். துளி - துளித்தலோடு, தூங்கிய - தங்கிய, வான் நதி - ஆகாசகங்கையிலே, தோய்ந்து-முழுகி, நறு குளிர் - நல்ல குளிர்ச்சியானது, தூங்கு - நிலையுறப்பெற்ற, குறு துளி - சிறிய துளிகளை, மெல் சிறையால் - மெல்லிய சிறைகளினாலே, களி - களிப்பானது,

தூங்கிய - தங்கும்படியாகவும், காமம் - காமத்தாலாகிய, விடாய் - தளர்ச்சியானது, அகல - நீங்கும்படியாகவும், நளன் - நளனது, மேனியில் - உடம்பில், நன்குற - நன்றாகப்பட, வீசுவம் - (யாம்) வீசுவேம், எ - று.

க - து. ஆகாய கங்கையிலே மூழ்கித் துளிகள் பொருந்திய இறகுகளினாலே நளனது திருமேனியில் வீசுவேம் என்பதாம்.

வீசுவ மென்றது எதிர்கால முற்றாயினும் எதிர்கால முற்று கள் இப்படிப்பட்ட இடங்களிலே செயலை மாத்திரமே யுணர்த்து மென்க. நளனுக்கு வேறு மகளிரோடு கூட்டுறவும் இவை அப்படி வீசுதலும் பொய்யாதலிற் குற்ற மன்றோவெனின் அன்று, "பொய் ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" (திருவள்ளுவர் - வாய்மை - உ) என்று சொல்லப் பட்டமையின். புரைதீர்ந்த நன்மையாவது - இதனால் அவளை வசப்படுத்தித் தகுந்த நாயகனோடு சேர்த்தலாம். (சுஎ)

[இனி நளனுடைய பலவகைப்பட்ட குணங்களையுஞ் சொல்லத் தொடங்கி, இதனாலே செல்வமும் அழகும் வேலியின் சிறப்பும் உணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

### கலித்துறை.

தெள்ளா ரமுதத் தெளிவொத்தவந் தீஞ்சொ னல்லாய்
வள்வார் முரசங் கறங்கும் மணிமுன் றில் வேந்தன்
கள்வா யுமிழ்பூங் கணையேந்திய காம னன்னா
னள்ளார் வணங்கு நளனென்னுமோர் நாம வேலான்.

இ - ள். தெள்ஆர் - தெளிவுபொருந்திய, அமுதம் - தேவாமிர்தத்தினது, தெளிவு ஒத்த - சாரம்போன்ற, அம் - அழகிய, தீ - தித்திப்பாகிய, சொல் - வாக்கையுடைய, நல்லாய் - தமயந்தியே; வள் வார் - வலிபொருந்திய வாரினாலிறுக்கப்பட்ட, முரசம் - முரசவாத்தியமானது, கறங்கும் - ஒலிக்கப்பெற்றிருக்கின்ற, மணி - நவமணிகளையுடைய, முன்றில் - வீட்டின் முன்னிடத்தையும், நளன் என்னும் - நளனென்று சொல்லப்படுகின்ற, ஓர் நாமம் - ஒப்பற்ற நாமதேயத்தையும் உடைய, வேந்தன் - அரசன் (ஒருவன்), கள் - தேனை, வாய் - (இதழ்) வாயினால், உமிழ் - கக்குகின்ற, பூ கணை - மலரம்புகளை, ஏந்திய - தாங்குகின்ற, காமன் அன்னான் - மன்மதன் போல் அழகுடையவன்; நள்ளார் - பகைவர், வணங்கும் - (தன்னை) வணங்குதற்குக் காரணமா யிருக்கின்ற, வேலான் - வேற்படையை யுடையவன், எ - று. (சுஅ)

கு - து. தமயந்தியே! மன்மதனுக் கொப்பானவன் நளனென்னும் பெயரையுடையவன் என்பதாம்.

'மணிமுன்றில் வேந்தன், காமனன்னான், நள்ளார் வணங்கு வேலான்' என முறையே செல்வம் அழகு வேற்படை இவற்றின் சிறப்புக் கூறியவாறு காண்க. 'மணி'-பலதேசத்தாராலுந் திறையளக்கக் குவிக்கப்பட்டவை. இல்முன் - முன்றிலென நிலைமாறிய இலக்கணப் போலி. இதுமுதற் பதினாறு பாட்டுகள் பெரும்பாலும் இடையிலொன்று புளிமாங்கனிச் சீரும் ஏனைநான்கும் மாச்சீர்களுமாகி வருகிற நெடிலடி நான்குகொண்ட கலித்துறைகள். (கூச)

[இதனாலே பின்னும் அழகின் புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

வண்டார்வஞ் செய்து மதுவுண்டுமிழ் மாலை மார்பன்
றிண்டோ ளெழில்கேட் டவரம்பையச் செம்மன் மார்பந்
தண்டாது புல்லப் பெறுதாற்பெயர்ச் சார்பு நாடி
யொண்டார் புனையு நளகூபரன் றன்னை யுற்றாள்.

இ - ள். வண்டு - வண்டுகளானவை, ஆர்வம் செய்து - விரும்பி, மது - தேனை, உண்டு - குடித்து, உமிழ் - உமிழப்பெறுகிற, மாலை - பூமாலையையுடைய, மார்பன் - மார்பையுடைய நளமஹாராஜனது, திண் தோள் - வலியதோள்களின், எழில் - அழகை, கேட்டு - (எம்மிடத்தில்) கேட்டு, அ அரம்பை - அந்த அரம்பையானவள், அ செம்மல் - அவ்வரசனது, மார்பம் - மார்பத்தை, தண்டாது - நீங்காமல், புல்ல - தழுவுதற்கு, பெறுதால் - பெறுத காரணத்தால், பெயர் - (அவன்) பெயரினது, சார்பு-சம்பந்தத்தை, நாடி - ஆராய்ந்து, ஒள் தார் - ஒள்ளிய பொன்னரிமாலையை, புனையும் - சூடுகின்ற, நளகூபரன்தன்னை - நளகூபரனை, உற்றாள் - அடைந்தாள், எ - று.

க - து. நளனழகை யரம்பைகேட்டு நளனைக் கூடப்பெறுமையால் நளன் பெயர்கொண்ட குபேரன்மகனாகிய நளகூபரனைச் சேர்ந்தாள் என்பதாம்.

அரம்பைக்கு அகரச்சுட்டு அழகிற் சிறந்தவளென்று பெயர் பெற்று விளங்குகின்றமையைக் காட்டுகின்றது. 'தண்டாது புல்லல்'- தனக்குக் கணவனாகப் பெற்று எந்நாளும் புணர்தல். தண்டாமை - நீங்காமை. இது "ஆறுமை தண்டாமை யாயிரண்டு நீங்காமை" (திவாகரம்) என்பதனாலறிக. நளகூபரன் - குபேரன் மகன். [நளகூபரனைச் சேர்தற்கு ஏதுவாகாத நளனது பெயர்ச்சார்பு நாடுதலை ஏதுவாகக் குறித்தலாலே ஏதுத் தற்குறிப்பணி.] இதனாலே அவனழகுக்கு ஒப்பு இல்லையென்பது குறிப்பிக்கப்படுகின்றது. (கூரு)

[இதனாலே இசைபாடற் புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

ஏகா விசும்பி னளன்பாடலை யாங்கள் கூற
மாகா திபனிவ் வரிபாடல் வருங்கொ லென்று
பாகூற வீணை பயில்வோன்முகம் பார்த்து ரைப்ப
வாகா வெனலா லவற்கப்பெயர் சேர்த்தி னாரே.

இ - ள். யாங்கள் - யாம், விசும்பின் - பொன்னுலகத்திற்கு, ஏகா - (இவ்வுலகத்திருந்து) போய், நளன் - நளராஜனது, பாடலை - இசைபாடுதற் சிறப்பை, கூற - சொல்ல, மாகாதிபன் - தேவேந்திரன், இவ்வரிபாடல் - இப்பாட்டுப் பாடுதல், வருங்கொல் என்று - உனக்கு வருமோவென்று, பாகு - பாகின்சுவை (போலுஞ் சுவை), ஊற - பெருக, வீணை பயில்வோன் - வீணைபாடுகிற ஒரு கந்தர்வனது, முகம் - முகத்தை, பார்த்து - நோக்கி, உரைப்ப - சொல்ல, ஆகா எனலால் - (யாம்) ஹாஹாவென்று இகழ்தலால், அவற்கு - அக்கந்தர்வனுக்கு, அப்பெயர் - அந்த ஹாஹா என்கிற பெயரை, சேர்த்தினார் - வைத்தார், எ - று.

க - து. இந்திரன்முன் நளன் பாடலை யாங்கள் சொல்ல, இந்திரன் கந்தருவனைப் பார்த்து இப்பாடல்பாட வருமோவென, யாங்கள் ஹாஹாவென இகழ்தலால் அவனுக்கு ஹாஹாவென்று பேர் கொடுத்தார்கள் என்பதாம்.

மாகமென்னும் ஆகாசத்தின் பெயர் ஆகுபெயராய்த் தேவலோகத்தை யுணர்த்தினின்றது. அது வருமொழியோடு மரம்+அடி=மராடி என்பதுபோலப் புணர்ந்து நின்றது. கொல்-வினாப்பொருளில் வந்தது. வரி - பாட்டு; அது "வரிசுணங் கெழுத்துப்பாட்டு" (ஆதிப் பொருணிகண்டு) என்பதனாலறிக. 'ஆகாவெனலால்' என்றதற்கு அக்கந்தருவன் என்னலாகா வெனலாலெனப் பொருள் கூறுவாரு முண்டு. அவனுக்கு அப்பெயர் அங்ஙனந் தற்பவமாய் வந்த வடமொழிப் பெயராதலால் அது சிறப்பன்றென்க. வடமொழிப் பெயராதல் அமரத்திலுங் காண்க. [ஆகாவென்னும் பெயர்க்கு வேறு காரணத்தைக் கற்பித்தலால் பிறிதிலே நவிற்சியணி.] இதனால் நளன் இசைபாடலில் அக்கந்தருவனிலும் வல்லவனென்னும் பொருள் தோன்றுகின்றது. (சுசு)

[இதனால் நற்குணப் புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

உலனூறு செய்த வுயர்மாமணித் தூண்செய் தோளா
னலன்யா முரைப்ப நசைகூரயி ராணி கொம்மை

முலைமேற் பொடித்த புளகத்தினை மொய்த்த செங்கண்
மலர்நீ ரரும்பு வதிற்கண்டிலன் வான வேந்தன்.

இ-ள். உலன் - திரண்டகல்லை, நூறு செய்த - பொடி செய்த, உயர் - உயர்வாகிய, மா - பெரிய, மணி தூண் - வச்சிரத் தூண்கள் போல, செய் - செய்யப்பட்ட, தோளான் - தோள்களையுடைய நளராஜனது, நலன் - நற்குணத்தை, யாம் - யாங்கள், உரைப்ப - சொலக் (கேட்டு), நசை கூர் - (அவன்மேல்) ஆசைமிக்க, அயிராணி-இந்திராணியினுடைய, கொம்மை - இளமை பொருந்திய, முலை மேல் - முலைகளின்மேலே, பொடித்த - உண்டாகிய, புளகத்தினை - மயிர் சிலிர்த்தலை, மொய்த்த - (தன்வடிவத்திலே) நெருங்கிய, செம்-செவ்விய, கண் மலர் - நேத்திராரவிந்தங்களில், நீர்-ஆநந்தநீரானது, அரும்புவதின் - தோன்றலால், வானவேந்தன் - தேவேந்திரனானவன், கண்டிலன் - பார்த்திலன், எ - று.

க - து. நளன் கீர்த்தியைக்கேட் டிந்திராணி முலைகள் பூரித்ததை இந்திரனுக் கானந்தக்கண்ணீர் தோன்றலாற் கண்டிலன் என்பதாம்.

வச்சிரமணி மற்றைப் பலமணிகளையும் பேதிக்கு முறுதியுடையதாதலின் 'உயர்மாமணி' எனப்பட்டது. நலன் - அவன் பலகுணங்களும். புளகம்-உவகைச் சுவையைப்பற்றிய விறல். இந்திரனுக்கு ஆயிரங் கண்களாதலின் 'மொய்த்த செங்கண்' என்றது. புளகத்தைக் கண்டால் உள்ளப்புணர்ச்சியின் குற்றநோக்கி மனைவியைத் தண்டிப்பனென்பது கருத்து. (கூஎ)

[இதுமுத லிரண்டு பாட்டுகளாலே முகப்புகழ்ச்சி
சொல்லப்படுகின்றது.]

முருகுண் டுவண்டு பயிறார்நளன் வாண்முகத்தைப்
பெருவெண் மதிய நிகரெய்தப் பெறுமை யன்றோ
கருதுங் கமலத் துறைநான்மு கன்கை வருந்த
வருதிங்க டோறும் புதிதாக வகுத்தல் செய்வான்.

இ - ள். கருதும் - நினைக்கின்ற, கமலத்து - தாமரைப் பூவின்கண், உறை - இருக்கின்ற, நான்முகன் - நான்முகக்கடவுள், வண்டு-வண்டுகளானவை, முருகு - தேனை, உண்டு-குடித்து, பயில்-வாசஞ் செய்யப்பெற்ற, தார் - மாலையையுடைய, நளன்-நளராஜனது, வாள் முகத்தை - காந்திபொருந்திய வதனத்திற்கு, பெருவெள் மதியம் - கலைநிறைந்த சந்திரன், நிகர் - ஒப்பை, எய்த - அடைய, பெறுமை

அன்றே - பெருமையாலன்றே, கை - (தன்) கைகள், வருந்த - நோவ, வரு - வருகின்ற, திங்கடோறும் - மாதந்தோறும், புதிதாக - நூதனமாக, வகுத்தல் செய்வான் - உண்டாக்குகிறான், எ - று.

க - து. நளன் முகத்துக்குச் சந்திர னொவ்வாமையாற் பிரமன் அச்சந்திரனை மாதந்தோறும் புதிதாகப் படைக்கிறான் என்பதாம்.

கருதல் - நளன் முகத்துக் கொப்பாவதொரு சந்திரனைச் செய்ய நினைத்தல். வல்லவனொருவன் தன்னாலே தொடங்கப்பட்டது பல முறை கெடுமாயினும் அது செவ்வையாக முற்றுப்பெறுமளவும் அதன் முயற்சியை விடானாதலால் 'வருதிங்கடோறும் புதிதாக வகுக்கின் றான்' என்க. [நான்முகன் மாதந்தோறுஞ் சந்திரனைப் புதிதாகப் படைத்தற்கு ஏதுவாகாத அங்கிகரெய்தப் பெருமையை ஏதுவாகக் குறித்தலினாலே ஏதுத்தற்குறிப்பணி.] இதனாலே நளன் முகஞ் சந் திரனைப் பார்க்கிலுஞ் சிறந்து விளங்குகின்றமை தோன்றுகின்றது.

கோணைக் களிற்று நளன்வாண்முகங் கூறு கென்னு
யாணர்த் திருமா லருள்செய்தலும் யாங்கள் கூற
நாணிக் கமல மயனோடு முகிழ்ப்ப நாடிப்
பூணிற் பொலிந்த முலைப்பூமகட் புல்லு மன்றே.

இ - ள். கோண் - மாறுபாடுபொருந்திய, களிற்று - யானைகளை யுடைய, நளன் - நளராஜனது, வாள் - காந்திபொருந்திய, முகம் - முகச்சிறப்பை, கூறுக என்னு-சொல்லக்கடவீரென்று, யாணர்-அழ கிய, திருமால் - மஹாவிஷ்ணு, அருள் செய்தலும் - சொல்லியவள விலே, யாங்கள் - யாம், கூற - (அவ்வாறே) சொல்ல, கமலம் - நாபி கமலமானது, நாணி - வெட்கி, அயனோடு-நான்முகனோடு, முகிழ்ப்ப- குவிய, நாடி-(அத்தருணம்) பார்த்து, பூணின் - ஆபரணத்தினாலே, பொலிந்த - விளங்குகின்ற, முலை - முலைகளையுடைய, பூமகள் - திரு மாதை, புல்லும் - (அக்கடவுள்) கூடுவான், எ - று.

க - து. விஷ்ணு நளன் முகத்தழகைச் சொல்லென நாங்கள் சொல்லத் தமது நாபிக்கமலம் பிரமனுடன் மூட, அதைக்கண்ட விஷ்ணுவானவ ரிலக்குமியை அணைந்தார் என்பதாம்.

கோணை யென்பதில் ஐ சாரியை. [திருமால் நளன்முகத்தைப் புகழ்வித்தலாகிய கபடத்தினாலே நாபிகமலத்தைக் குவிவித்து நான் முகனை மறைத்து மனைவியைப் புணர்தலாகிய விருப்பத்தை முடித்த

லால் பிறிதினவிற்சியணி. இதனாலே நளன்முகம் அக்கமலத்தினுஞ் சிறந்தமை தோன்றுகின்றது.] மன், ஓ - அசைகள். (சுகூ)

[இதனாலே பொறுமை பூபாரந் தாங்குதல்களின்
புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

சிறைவண்டு தண்ணென் முகைசூழ்ந்து பைந் தேறன் மாந்தி
யறைகின்ற தண்டார் புனையுந்திற லாடல் வேந்தன்
பொறைதேரி னங்கட் புவிமாதினைப் பொங்கு செஞ்சூட்
டிறைவா ளரவை நிகரென்ன வியம்ப லாமே.

இ - ள். சிறை - சிறைகளையுடைய, வண்டு-வண்டுகளானவை, தண்ணென் - குளிர்ச்சிபொருந்திய, முகை - அரும்புகளை, சூழ்ந்து - சுற்றிக்கொண்டு, பை தேறல் - பசிய தேனை, மாந்தி-குடித்து, அறைகின்ற - ஒலிக்கப்பெற்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, தார் - பூமாலையை, புனையும் - தரித்திருக்கின்ற, திறல்-வலிமையாலுண்டாகிய, ஆடல் - வெற்றிபொருந்திய, வேந்தன் - நளராஜனுடைய, பொறை- குற்றம் பொறுத்தலையும் பூபாரந் தாங்குதலையும், தேரின் - ஆராய்ந்தால், அம் கண் - அழகிய விடத்தையுடைய, புவி மாதினை-பூமிதேவியையும், பொங்கு - விளங்காநின்ற, செஞ்சூட்டு - சிவப்பாகிய சூட்டையுடைய, வாள் - காந்திபொருந்திய, இறை - (பாம்புகளுக்கெல்லாம்) தலைவனாகிய, அரவை-ஆதிசேஷனையும், நிகர் என்ன - (அவனுக்கு) உபமானங்களாக, இயம்பலாம் - (அறிவுடையோருக்குச்) சொல்லுதல் கூடும், எ - று.

க - து. நளன் பொறுமையிலே பூமிதேவியையும் ஆதிசேஷனையும் ஒப்பானவன் என்பதாம்.

சூட்டு - உச்சிக்கொண்டை. குற்றம் பொறுக்குங் குணத்துக்குப் பூமியும், பூபாரந் தாங்குதலுக்கு அனந்தனுமென்றுகொள்க. முன்னதற்கு "அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை யிகழ்வார்ப் பொறுத்த றலை" (திருவள்ளுவர் - பொறையுடைமை - க) என்றிருக்கையாலும், பின்னதற்கு இந்நூலிலே "பன்னகஞ் சுமந்த வைப்போர் தோளினிற் பரிக்கு மன்னர் மன்னனே" என்று வருதலாலும், அவை உபமானமாதற் கேற்றல்காண்க. [பொறையி னிருபொருளும் புகழ்பொருளாதலிற் புகழ்பொருட் சிலேடை.] (எ0)

[இதனால் நளராஜனிடத்து உத்தம மங்கையரிருக்கையைக்
குறிப்பித்தல் சொல்லப்படுகின்றது.]

புற்றுறு மாவ முறைவாளிப் புயங்க முண்ணச்
செற்றார்த மாவி நுகர்விக்குஞ் சிலைக்கை யாற்குக்

குற்றேவல் செய்யுங் கொடியன்னவர் பால நடக்கக்
கற்றா டரம்பை பயில்வா னடை காட்டு கிற்பேன்.

இ - ள். ஆவம் ஆகும் - தூணியாகிய, புற்று - புற்றினுள், உறை - இருக்கிற வாளி - அம்புகளாகிய, புயங்கம் - பாம்புகளானவை, உண்ண - உண்ணும்படியாக, செற்றார் - பகைவரது, ஆவி - பிராணவாயுவை, நுகர்விக்கும் - உண்பிக்கின்ற, சிலை - வில்லையுடைய, கையாற்கு - கையை யுடையவனாகிய நளனுக்கு, குற்றேவல் - சிறிய ஏவல்களை, செய்யும் - செய்கின்ற, கொடி அன்னவர் பால் - பூங்கொடி போல்பவரிடத்தே, நடக்க - நடத்தற்கு, கற்று - (யான்) கற்றுக்கொண்டு, ஆடு - (தெய்வ சபையில்) ஆடுகின்ற, அரம்பை - அரம்பையானவள், பயில்வான் - கற்கும்படியாக, நடை - அந்நடையை, காட்டுகிற்பேன் - கற்பிப்பேன், எ - று.

க - து. யாங்கள் நளனிடத் தேவல் செய்யும் பெண்களிடத்து நடைபயின்று அரம்பைக்குக் கற்பிப்போம் என்பதாம்.

வாயு அருவமாயினும் அதனை யுண்ணுதல் பாம்பிற்கு இயல்பாதலால் 'ஆவி நுகர்விக்கும்' என்றது. [ஆவ முதலியவற்றிலே புற்று முதலியவற்றி னொற்றுமையை ஆரோபித்தலாலே உருவக வணி.] 'கற்றுக் காட்டுகிற்பேன்' என்றதனால் எனது நடையினும் அரம்பை நடையினும் சிறந்துளது நளன் குற்றேவல் செய்யு மகளிர் நடை யென்றதாயிற்று. குற்றேவல் - சாமரம் வீசுதல், அடைப்பை யேந்துதல் முதலியன. இங்கே நளனுக்குச் சொல்லப்பட்ட விசேஷணத்தால் அவன் யுத்த பராக்கிரமஞ் சொல்லப்பட்டதாயிற்று. "எழுத்துச் சொற்றிரி பிரண்டே யன்றிப், பொருட்டிரி பெங்கும் பொருந்து மென்க" (இலக்கணக்கொத்து - ஒழிபியல் - கக) இவ் விதியால் காட்டுகிற்பேன் என்பது சொற்றிரிபு. தம் - அசை. (எக)

[இதனால் நளன் அந்தப்புரத்திலே தனக்குப் பழக்க முண்டெனல் சொல்லப்படுகின்றது.]

அறைபொற் கழற்கா லரசன்னக ரஞ்சொ லல்லார்
மறைசொற் கள்யாவு மறையாம லெனக்கு ரைப்பார்
பொறிமுற் றடக்கிப் புலன்போய்வழி போக்கல் செய்யா
நெறியிற் பிறர்க்கும் புகலாதென நெஞ்சி லெண்ணி.

இ - ள். அறை - ஒலிக்கின்ற, பொன் - பொன்னாலாகிய, கழல் - வீரக்கழலை யணிந்த, கால் - பாதத்தையுடைய, அரசன் - நளராஜனது, நகர் - அரண்மனையிலுள்ள, அம் சொல் - அழகிய சொல்

லையுடைய, நல்லார் - மாதரானவர், பொறிமுற்று - ஐம்பொறிகளை
யும், அடக்கி - அடக்கி, புலன் - ஐம்புலன்களிலும், போம் வழி -
செல்லும் வழியில், போக்கல் செய்யா - (அவற்றைச்) செலுத்தாத,
நெறியின்-ஒழுக்கத்தினாலே, பிறர்க்கு - அயலாருக்கு, புகலாது என-
சொல்லாதென்று, நெஞ்சில்-மனதிலே, எண்ணி - நினைத்து, மறை-
மறைக்கத்தக்க, சொற்கள் யாவும் - எல்லாச் சொற்களையும், மறை
யாமல் - ஒளிக்காமல், எனக்கு - எனக்கு, உரைப்பார் - சொல்லு
வார், எ - று.

க - து. நான் அரண்மனைப் பெண்கள் இரகசியங்களை என்னி
டத்திற் சொல்வார்கள் என்பதாம்.

[அந்தப்புரமாதர் சொல்லுவாரென்னும் பொதுப்பொருளினாலே உன் கருத்தைச் சொல்லென்னுஞ் சிறப்புப்பொருள் தோன்றுகலால் பொதுப்புனைவிலி புகழ்ச்சியணி.] (எஉ)

[இதனால் அவளுந் நளன்மேற் காதலை யெழுப்புதல்
சொல்லப்படுகின்றது.]

திங்கட் கலையின் செழும்பூங்கதிர் செவ்வி வாய்ப்பக்
கங்குற் கமல மலர்தோய்ந்து களிப்பு றாமற்
பைங்கட் குமுத முறல்போலுநீ பார்த்தி வன்றன்
றொங்கற் புயந் தோய்ந்துறாமற் பிறமாது துய்த்தல்.

இ - ள். திங்கள் கலையின் - சந்திர கலையினது, செழு-செழிய,
அழகிய, கதிர் - (அமுத) கிரணத்தை, செவ்வி - அழகானது,
வாய்ப்ப - பொருந்த, கங்குல் - இரவின்கண், கமலமலர் - தாமரை
மலரானது, தோய்ந்து - சேர்ந்து, களிப்பு - மகிழ்ச்சியை, உறாமல் -
அநுபவியாதிருக்க, பைங்கள் - பசியதேனையுடைய, குமுதம் - (அத்
தாமரை மலரிற் குறைந்த) அல்லிமலரானது, உறல்போலும் - (அப்
படி அம்மகிழ்ச்சியை) அனுபவித்தல்போலும், நீ - நீ, பார்த்திவன்
றன் - அரசனது, தொங்கல் - மாலையையுடைய, புயம் - தோள்களை,
(செவ்வி) - அழகானது, (வாய்ப்ப) - பொருந்த, தோய்ந்து - சேர்
ந்து, (களிப்பு) - மகிழ்ச்சியை, உறாமல் - அனுபவியாதிருக்க, பிற
மாது - (உன்னிற்குறைந்த) மற்றொருத்தி, துய்த்தல்-(அப்படி அம்
மகிழ்ச்சியை) - அனுபவித்தல், எ - று.

க - து. நளன் உன்னையல்லாது பிறமாதரைச் சேருதல் சந்திர
னைத் தாமரை சேராது அல்லி சேருதல்போ லிருக்கும் என்பதாம்.

தாமரைமலர் பல மலர்களிலுஞ் சிறந்தழகாய் நிற்றலிற் 'செவ்வி வாய்ப்ப' என்றது. "பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை" (தேவாரம்) என்பதனாலுமறிக. கமலமலர் களிப்புறுதல் - மலர்ச்சியுறுதல். நீ மகளிர் பலரினுஞ் சிறந்த அழகுடையவளா யிருந்தும் உனக்குத் தகுந்த நளனைப் பெறுதற்கு முயற்சி செய்யாது உன்னிற் குறைந்தவள் அவனைச் சேர்ந்தின்புற விட்டிருத்தல் மடமை யென்பது கருத்து. "பைங்கட் குமுத முறங்போலு நின்பா லுறுமற், றெருங்கற் புயத்தான் பிறமாதரைத் தோய்தன் மாதோ" எனப்பாடங் கூறி சந்திரகிரணங் கமலத்தைச் சேர்ந்து களிப்புறாமல் அல்லியைச் சேர்ந்து களிப்புறுதல் போலும், நளன் உன்னைச் சேர்ந்து களிப்புறாமற் பிறமாதரைச் சேர்ந்து களிப்புறுதல் எனப் பொருளுரைப்பாருமுண்டு. களிப்புறுதல் மலர்களுக்கன்றிக் கிரணத்திற்கு இயையாமையாலும் அரசனுக்குக் குறைவு தோன்றலாலும் அது முதனூன் முடிபின் வேறுபட்டுப் பயன்படாமை யறிக. (எ

[இதனால் அவளுக்கு நளனைப் பெறுதற்கு அனுகூல மிருக்கின்றபடியுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

மயிர்வாய்ச் சிறுகட் பிடிமென் னடைவாய்ந்த நல்லாய்
செயிர்தீர் விதியின் றிறம்யார்கொ டெளிந்த நீரா
ரயில்வே னளன்ற னழகுன்னெழி லொத்த வாற்றாற்
பயினேய மின்ப நினக்கன்றிப் பயன் படாதால்.

இ - ள். மயிர் வாய் - மயிர்பொருந்திய, சிறு கண் - சிறிய கண்களையுடைய, பிடி-பெண்யானை (நடைபோலும்), மென் நடை-மெல்லிய நடை, வாய்ந்த - பொருந்திய, நல்லாய் - தமயந்தியே; அயில் - கூர்மை பொருந்திய, வேல் - வேலையுடைய, நளன் - நளராஜனது அழகு - அழகும், உன் - உனது, எழில் - அழகும், ஒத்த-(தம்மில்) ஒத்திருக்கின்ற, ஆற்றால் - காரணத்தினால், பயில் - தங்கிய, நேயம் - (ஒப்புடை) அன்பா லுண்டாகும், இன்பம் - இன்பமானது, நினக்கு அன்றி - உனக்கல்லாமல் (மற்றொருத்திக்கு), பயன்படாது-கிடைப்பதில்லை; (அழகொத்திருந்தாலும் விதிசங்கற்பம் பிரதிகூலமா யிருந்தாலோவெனின்), செயிர் - குற்றத்தினின்றும், தீர் - நீங்கிய, விதியின் - விதியினது, திறம் - கருத்தை, தெளிந்த - அறிந்த, நீரார் - குணத்தை யுடையவர், யார் - எவர், எ - று.

க - து. தமயந்தியே! உன்னழகும் நளமகாராஜனழகும் ஒத்திருக்கிறதால் அவனின்பமுனக்கே கிடைக்கும், வேறொருத்திக்குப் பயன்படாது, விதிவச மெவ்வாறோ என்பதாம்.

இங்கே அழகும் எழிலும் ஆண்மை வடிவும் பெண்மை வடிவும் பிறழ்ச்சியின்றி யமைந்த வனப்பாம். அன்றியும் உயர்குடிப்பிறப்பு, நல்லொழுக்கம், பருவம், அறிவு, செல்வம் என்பவை முதலியனவும் ஒரோவழி அழகெனவும் படுமாதலின் அவையுமிங்கே யடக்கிக்கொள்ளப்படும். நும்மிருவருக்கும் அழகொத்தலால் அன்புமொத்து இன்பஞ் சிறக்குமென்பது தோன்ற 'நேயவின்பம்'என்றது. இருவர்க்கும் அன்பொக்குமாயி னின்பஞ் சிறக்குமென்பது, ''தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே, காமத்துக் காழில் கனி''(திருவள்ளுவர்-தனிப்படர்மிகுதி-க)என்பதனாலு முணர்க. நினக்கன்றிப் பயன்படாதெனவே நீயே அவனுக்கு மனைவியாவை யென்றதாயிற்று. விதியென வாளா கூறாது 'செயிர்தீர்விதி' எனச் சிறப்பித்துக் கூறுதலால் விதிசங்கற்பமும் இந்த நற்காரியத்துக்கு அனுகூலித்தே யிருக்குமென்பது குறிப்பிக்கப்பட்டது. யாரென்றது ஒருவருமில்லையென்னும் பொருளில் வந்தது. (எச)

[இதனால் அழகொத்திருக்கையினாலே விதிசங்கற்பமும் அனுகூலித்திருக்குமென்று துணிதற்கு உதாரண முண்டோவெனின் உண்டெனச் சொல்லப்படுகின்றது.]

விரைசேர் கமல விதியுந்தகக் கூட்டு மென்க
திருவோடு செங்கட் டிருமாலினைச் சேர்த்த லானும்
வரைமானை முக்கட் பெருமானிடம் வைத்த லானு
மிரவோடு தண்ணென் கதிர்த்திங்களி யைத்த லானும்.

இ - ள். திருவோடு - திருமாதோடு, செங்கண் - செய்ய கண்களையுடைய, திருமாலினை - விஷ்ணுவை, சேர்த்தலானும் - கூட்டினமையாலும், வரை மானை - பார்வதி தேவியை, முக்கண் - மூன்று கண்களையுடைய, பெருமானிடம் - கடவுளிடத்தே, வைத்தலானும் - இருத்தினமையாலும், இரவோடு - இராத்திரியோடு, தண்ணென் - குளிர்ச்சி பொருந்திய, கதிர் - கிரணங்களையுடைய, திங்கள் - சந்திரனை, இயைத்தலானும் - பொருத்தினமையாலும், விரை சேர் - வாசனை பொருந்திய, கமலம் - தாமரைப்பூவி லிருக்கின்ற, விதியும் - நான்முகனும், தக - தகுதியாக, கூட்டுமென்க - (ஒருபொருளோ டொரு பொருளைக்) கூட்டுகிறானென் றறியக்கடவாய், எ - று.

க - து. பிரமதேவன் திருமகளையுந் திருமாலையும் பார்வதியையும் பரமசிவனையும் இரவையுஞ் சந்திரனையும் சேர்த்தமையாலும் தகுதியாகவே ஒன்றோடொன்றைக் கூட்டுகிறான் என்பதாம்.

முக்கட்பெருமானிடம் என்பதற்கு முக்கட்பெருமானது இடப்பாகத்தில் என்றுரைத்தலுமாம். ஒருவர்க்கொருவர் தகுந்தவராகத்

திருவோடு செங்கட் டிருமாலினைச் சேர்க்கை முதலிய உதாரணங்களால் விதி சங்கற்பமும் இது காரியத்திலே அனுகூலித் திருக்குமென்று அறியப்படுகின்றதென்பது கருத்து. 'விரைசேர்கமல நறும் போதினில் வீற்றிருக்கும்'எனப்பாடங் கூறி இதனைத் திருவுக்கடையாக்குதலுமுண்டு. அப்போது இப்பாட்டிற்கு முடிக்குஞ்சொல் இல்லாமையாற் பின் பாட்டோடேனும் முன்பாட்டோடேனுஞ் சேர்த்துக் குளகமாக்கி முடிக்கவேண்டும்; அங்ஙன முடித்தற்குப் பொருளியையாமையாற் பொருந்தாமையறிக. (எரு)

[இதனால் அவ்வனுமானமேயன்றி இதற்கு ஆகமப் பிரமாணமுமுண்டெனல் சொல்லப்படுகின்றது.]

போர்வே னளன்றன் புனைதாரகன் மார்பு புல்லு
மேரார் மகள்யா ரெனயானய னோடு கேட்பக்
காரோதி நின்பேர் கழறுற்றனன் போலு மாங்குத்
தேரோதை தன்னாற் றெளிவுற்றிடக் கேட்டி லேன்யான்

இ - ள். கார் - மேகம்போலும், ஓதி - கூந்தலையுடையவளே, போர் - போர் செய்தற்குரிய, வேல் - வேலையுடைய, நளன் - நளராஜனது, புனை - சூடப்பட்ட, தார் - மாலையையுடைய, அகல் - பரந்த, மார்பு - மார்பை, புல்லும் - தழுவத்தகும், ஏர் - அழகினால், ஆர் - நிறைந்த, மகள் - மங்கை, யார் என - எவளென்று, யான் - நான், அயனோடு - நான்முகனை, கேட்ப - வினவ, நின் - நினது, பேர் - நாமதேயத்தை, கழறுற்றனன் போலும் - (அவன்) சொன்னான் போலும்; ஆங்கு - அப்போது, தேர் - (அவனது) தேரினது, ஓதை தன்னால் - ஒலியினாலே, தெளிவுற்றிட - ஐயந்தீர, யான் - நான், கேட்டிலேன் - (அதைக்) கேட்டறிந்திலேன், எ - று.

க - து. நளனுக்கு மனைவி யாரென்று பிரமனை யான் கேட்க அவனுன்பேர் சொற்றனன்போலு மிருந்தது; தேரோசையாற் றெளிவுறக் கேட்டிலன் என்பதாம்.

ருஎ-ஆம் பாட்டில் "அயனூர்,ன்னந் தனதன் புறுசுற் றமியாம்" என்றலின் அயனை வினவுதற்கு இயைபுடைமை பெறப்பட்டது. யாரென்றது பெண்பாலில் வந்தது. அது உயர்திணை முப்பாற்கும் பொதுவாதலின்; இதற்கு "யாஅ ரென்னும் வினாவின் கிளவி, யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே" (தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-வினையியல்-கரு)என்பது விதி. அயனோடென்பது உருபு மயக்கம்; இதற்கு "யாத னுருபிற் கூறிற் றாயினும், பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்" (தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - வேற்றுமை மயங்கியல்-உரு)என்பது விதி. ஒருவேளை மற்றொருவன்மே

லவளுக்கு விருப்ப முண்டாயிருப்பின் தன்சொல்லைப் பொய்யென்று கொள்வனென்று: 'நின்பேர் கழறுற்றனன் போலும்', 'தெளிவுற்றிடக் கேட்டிலேன்' என்றது. (எசு)

[இதனால் விதியின்செயலுஞ் சொல்லும் அப்படியிருந்தாலும் அவன் சுதந்தரனாகையால் இப்போது வேறுவிதமாகச் செய்யலாமோ வென்றால் அதற்குத் தடையுண் டெனல் சொல்லப்படுகின்றது.]

குயின்மென் குதலைத் திருவே நினைக் கூடு மின்ப
மயில்கொண்ட வொள்வே னளற்காக வமைத்தி லானே
லியைபெண்ணி யன்றி விதிகூட்டல னென்னுஞ் சீர்த்தி
பயனின்றி மாறிப் பழியாகப் பயக்கு மன்றே.

இ - ள். குயில் - குயிலிசைபோலும், மெல் குதலை - மெல்லிய மழலைச் சொற்களையுடைய, திருவே - தமயந்தியே, நினை - உன்னை, கூடும் - அனுபவித்தடைவதாகிய, இன்பம் - இன்பத்தை, அயில் கொண்ட - கூர்மைகொண்ட, ஒள் வேல் - ஒள்ளிய வேலையுடைய, நளற்காக - நளராஜன்பொருட்டு, அமைத்திலானேல் - படைத்திலனாயின், இயைபு - தகுதியை, எண்ணியன்றி - நினைத்தல்லாமல், விதி - நான்முகனானவன், கூட்டலன் என்னும் - (ஒருவரோடொருவரைச்)சேர்க்கலனென்கின்ற, சீர்த்தி - கீர்த்தியானது, பயனின்றி - பயனில்லாமல், மாறி - வேறுபட்டு, பழியாக - நிந்தையாக, பயக்கும் - (அவனுக்கு) விளையும், எ - று.

க - து: தமயந்தியே, உன்னை நளனுக்காகப் படைத்திலனானால் பிரமனுக்குப் பழிவிளையுமென் றன்னங்கூறிற்று என்பதாம்.

திரு - உவமையாகுபெயர். இங்ஙனங் கூறவே நளனை நீ நாயகனாகப் பெறுதற்கு விதியினாலுந் தடையுண்டாவதில்லை யென்று வலியுறுத்திக் கூறியவாறாயிற்று. அன்று - ஏ - அசை. (எஎ)

[இதுமுதலிரண்டு பாட்டுகளால் இப்படி அவளுக்கு ஆசையை வளர்த்த அன்னம் அவள் கருத்தை அறிதற்காக வேறொன்றைச் சொல்லி முன் சொல்லப்பட்டதை முடித்தமை சொல்லப்படுகின்றது.]

கருந்தாரை வாய்வாள் பொருவுங்கயற் கண்ணி கேண்மோ
பொருந்தா தனயான் புகன்றேனது நிற்க பூந்தாள்
வருந்தா வொதுங்கப் பிழைசெய்தனன் மாற வுள்ளம்
பரிந்தார்வ முற்றப் புரிவேனென் பணித்தி யென்னா;

இ - ள். கருந்தாரை வாய் - கருவிழிபொருந்திய, வாள் - வாளை யும், கயல் - கெண்டையையும், பொருவும் - நிகர்க்கின்ற, கண்ணி - கண்களையுடையவளே, கேள் -(நீ)கேளு; யான் - நான், பொருந்தா தன -(இப்போதைக்கு)வேண்டாத சொற்களை, புகன்றேன் - சொல் லினேன்; அது நிற்க - அது நிற்பதாக, பூ - மலர்போல (மெல்லிய), தாள் - (உன்) அடிகளானவை, வருந்தா - வருந்தி, ஒதுங்க - (என் பின்னே) நடந்து வரும்படியாக, பிழை - குற்றத்தை, செய்தனன் - (உனக்குச்) செய்தேன்; மாற - (அது) தீர, உள்ளம் - உள்ளத்தில், பரிந்து - அன்புற்று, ஆர்வம் - (உன்) விருப்பத்தை, முற்ற - நிறை வேற, புரிவேன் - செய்வேன்; என் -(அவ்விருப்பம்)யாது, பணித்தி - (நீ) சொல்லு, என்னு - என்று சொல்லி, எ - று.

க - து. தமயந்தியே, விருப்பற்ற சொற்களைச் சொன்னேன்; 'அது நிற்கட்டும், உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன் நீ சொல் லென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

மோ - முன்னிலையசை. 'வருந்தா வொதுங்க' என்றதற் கேற் பப் 'பூந்தாள்' என்றது. வருந்தா-செய்யா என்னும் வாய்பாட் டிறந்த கால வினையெச்சம். இப்பாட்டும் பின்வரும் பாட்டுங்குளகம்; "குள கம் பலபாட் டொருவினை கொள்ளும்" (தண்டியலங்காரம்) என் பதுவிதி. கண் - "உருவங் கவர்வது கருமணி நுனியது கண்ணெ னப் பெயரியத் தன்பொறியென்ப" (தருக்கசங்கிரகம்-21-கு). (எஅ)

தோளா மணியை நிரைத்தன்னமென் றூய மூரற்
கோளார் மதிவாண் முகத்தாளுட் குறிப்பு நாடித்
தாளாண்மை யுள்ளங் குறிப்பிற்றெரி தன்மை யோரின்
வாளா வதிந்த தணிப்பொற்சிறை வாய்ந்த வன்னம்.

இ - ள். அணி - அழகிய, பொன் - பொன்மயமாகிய, சிறை - இறைகள், வாய்ந்த - பொருந்திய, அன்னம் - அன்னமானது, தோளா - துளைக்கப்படாத, மணியை - முத்துகளை, நிரைத்தன்ன - ஒழுங்குபடுத்ததுபோலும், மெல் - மெல்லிய, தூய - பரிசுத்தமாகிய, மூரல் - பல்லொழுங்கையும், கோள் ஆர் - பெருமைபொருந்திய, மதி - சந்திரன்போலும், வாள் - காந்தி பொருந்திய, முகத்தாள் - முகத்தையுமுடைய தமயந்தியினது, உள் குறிப்பு - உட்கருத்தை, நாடி - ஆராய்ச்சிசெய்துகொண்டு, ஆண்மை - ஆழமாகிய, உள்ளம் - (ஒருவர்) கருத்தை, குறிப்பின் - அறியின், தாள் - (தமது) முயற் சியை, தெரி - (அதன்பின்பு) தெரிவிக்கும், தன்மையோரின் - குண முடையவர்போல், வாளா - சும்மா, வதிந்தது - இருந்தது, எ - று.

க - து. அன்னமானது தமயந்தி யுட்கருத்தை அறிந்து பேசா திருந்தது என்பதாம்.

ஆழ்மை - ஆண்மையென வந்தது. 'தோளாமணியை நிரைத் தன்ன மென்றூயமூரல்' என்றும், 'கோளார்மதி வாண்முகம்' என் றும் சொல்லப்பட்டமையால், நளன் செய்திகேட்டுத் தமயந்திக்கு நகையும்முகக்கிளர்ச்சியுந் தோன்றினமை குறிப்பிக்கப்பட்டதாயிற்று. ஆண்மை-இங்கே உள்ளக்கருத்தை வெளிப்படுத்தா தாளுதற்றன்மை யாதலின் ஆழமெனப் பொருள் கூறப்பட்டது. பெரியோர் அப்படிப் பட்ட பிறர் கருத்தைத் தாமறிவதன் முன்னே தமது காரியத்தைக் கெடினுங் கெடுமென்று சொல்லாராதலால் அன்னம் அவள் கருத்தை யறிந்தபின்னே தன் வரவின் காரியத்தைச் சொல்லுதற் கெண்ணிச் சும்மாவிருந்ததென்க. தெரியென்றது தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாதலின் இங்கே பிறவினைப் பொருளில்வந்தது. 'உட்குறிப்பு நாடித், தாளாண்மையுள்ளங் குறிப்பிற்றெரி தன்மையோரின்' என்ற தற்கு முயற்சியையுடைய உள்ளத்தை முகக்குறிப்பினு லாராயுந்தன் மையோர்போலத் தமயந்தி யுட்கருத்தை முகக்குறிப்பினு லாராய்ந் திருந்ததெனப் பொருள் கூறுவாறுமுண்டு; அது முதனூற் கருத் தன்றென்க. (எக)

[இதனால் தமயந்தி பேசத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

இவ்வாறு செங்கான் மடவன்னமி ருந்த வேலை
மைவ்வா ணெடுங்கட் டமயந்திம னத்தி னோர்ந்து
செவ்வாம்ப லூறுஞ் செழுந்தேறறு ளித்த லின்றி
யொவ்வாத தீஞ்சொல் குயினாணவு ரைக்க லுற்றாள்.

இ - ள். இவ்வாறு - இவ்விதமாக, செங்கால் - செய்யகால்களை யுடைய, மடம் - இளமை பொருந்திய, அன்னம் - அன்னமானது, இருந்தவேலை - இருந்தவளவில், மை - அஞ்சனமெழுதப் பெற்ற, வாள் - வாள்போலும், நெடு - நீட்சிபொருந்திய, கண் - கண்களை யுடைய, தமயந்தி - தமயந்தியானவள், மனத்தின் - மனத்தின்கண், ஓர்ந்து - ஆலோசித்து, செவ்வாம்பல் - செவ்வல்லிப் பூவிலிருந்து, ஊறும் - சுரக்கின்ற, செழுந்தேறல் - செழியதேனானது, துளித்தல் இன்றி - சிந்துதல்(தன்னிடத்து)இல்லாமல், ஒவ்வாத-நிகராகமாட் டாத, தீஞ்சொல் - (தன் செவ்வாயிலிருந்து வருகிற) மதுர வார்த் தையை, குயில் - கோகிலமானது, நாண - வெட்கமுற, உரைக்க லுற்றாள் - சொல்லத் தொடங்கினாள், எ - று.

க - து. தமயந்தி குயிலும் நாணச் சொல்லத் தொடங்கினாள் என்பதாம்.

மைவ்வாளெடுங்கண்ணி - மையெழுதப்பெற்ற கண்களையுடையவள், வாள்போலுங் கண்களையுடையவள்: இவற்றுள் இறுதிக்கண்ணது இல்பொருளுவமை; இதனை அபூதோபமம் என்பர் வடநூலார். செவ்வாம்பலுக்கேற்பச் செவ்வாய் வருவிக்கப்பட்டது. 'ஆம்பலூறுஞ் செழுந்தேற றுளித்தலின்றி,யொவ்வாத தீஞ்சொல்' எனவே அல்லி மலரிலிருந்து வெளிப்படுந் தேன்போல் வாயிலிருந்து வெளிப்படுதலுந் தீஞ்சுவையுமுடைய சொல்லென்றதாயிற்று. [இது உவமையணி.] (௮0)

[இதுமுதலிரண்டு பாட்டுகளாற் 'பூந்தாள்வருந்தாவோதுங்கப் பிழைசெய்தனன்' என்றதற்கு மாறுன உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

பேதை நீர்மையிற் பெட்புறின் யாங்கணு
மேத மெய்துறு மென்பர் சரதமே
யாத லானிற் றொடர்ந்தரு ரெய்துறத்
தீதி ழைத்தனன் யானுன் றிறத்தினே.

இ - ள். பேதை நீர்மையில்-பேதைமைக் குணத்தினாலே, யாங்கணும் - எல்லாவிடங்களிலும், பெட்புறின் - விரும்பினால், ஏதம் - குற்றமும் (அதனால் விளைவதாகிய) துன்பமும், எய்துறும் - அடையும், என்பர் - என்று சொல்லுவார் (பெரியோர்), சரதமே - (அது) சத்தியமே; ஆதலால் - ஆகையால், நின் - உன்னை, தொடர்ந்து - பின்சென்று, அருர் - துன்பமானது, எய்துற - (என்னை)அடைய, யான் - நான், உன்றிறத்தின் - உன்னிடத்தே, தீது - குற்றத்தை, இழைத்தனன் - செய்தேன், எ - று.

க - து. தமயந்தியானவள் அன்னமே உன்னிடத்திற் குற்றம் செய்தேனென்றாள் என்பதாம்.

பேதைநீர்மையாவது - செய்யத்தகுவதுந் தகாததும் பகுத்தறிய மாட்டாத குணம். அது பெண்மைக்குச் சிறந்தகுணமாய் நிற்றலிற் 'பேதைநீர்மையிற் பெட்புறின்' என்றாள். அது பெண்மைக்குச் சிறந்ததென்பது, "நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும், பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே" என்பதனாலறிக. இரட்டுற மொழிதலென்னு முத்தியால் ஏதத்திற்குக் குற்றமும் அதனால் வருந்

துன்பமு முரைக்கப்பட்டன. அவ்விருபொருளும் "ஏதந் துன்பங் குற்றப்பேர்". (ஆதிப்பொருணிகண்டு) என்பதனாலறிக. 'என்பர் சரதமே' என்றாள், "பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை, கையல்ல தன்கட் செயல்" (திருவள்ளுவர்-பேதமை-உ) என்பவாக வின். பேதைமையினாலே விஷய நியமமில்லாமல் எல்லாப் பொருள் களிலும் விருப்பம் வைத்தால் அதனாலே தான் பிறருக்கு அபகாரஞ் செய்யவும் பின்பு அதைக்குறித்துத் தான் மனம் வருந்தவு நேரிடும், அதை யென்னிடத்துத்தானே காணலாமென்பது கருத்து. [முன் வாக்கியத்தின் பொதுப்பொருளால் பின் வாக்கியத்தின் சிறப்புப் பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி.] (அக)

பளிங்கிற் றுன்னிய பல்பொருண் மற்றதில்
விளங்கித் தோன்றல்போல் யான்செய்த வெம்பிழை
களங்க மற்றவுன் னுள்ளத்திற் கண்டுகொ
றுளங்க யான்பிழைத் தேனென்று சொற்றதே.

இ - ள். (களங்கமற்ற) – மாசற்ற, பளிங்கில் - கண்ணாடியிடத்து, துன்னிய - கிட்டியிருக்கின்ற, பல்பொருள் - பலபொருளும், அதில் - அதனுள், விளங்கித் தோன்றல் போல் – பிரதிபிம்பித்துத் தோன்றுதல் போல், (துன்னிய) - (உன்னிடத்துக்) கிட்டியிருக்கின்ற, யான் – நான், செய்த - (உனக்குச்) செய்த, வெம் பிழை - கொடிய பிழையானது, களங்கமற்ற - மாசற்ற, உன் – உனது, உள்ளத்தில் - நெஞ்சுள், கண்டுகொல் – பிரதிபிம்பித்துத் தோன்றியே? யான் – நான், துளங்க - நடுங்கும்படியாக, பிழைத்தேன் என்று - (உனக்குக்) குற்றஞ் செய்தேனென்று, சொற்றது - (நீ) சொல்லியது, எ - று.

க - து. கண்ணாடியானது தன்முன்னுள்ள பொருளைத் தான் காட்டுதல்போல என் குற்றத்தையு நீ யேற்றுக்கொண் டெடுத்துக் காட்டினையென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

பெரியோர் தமக்கொருவ னொருபிழை செய்தவிடத்து அவனை நோக்கி நான்றா னுனக்குப்பிழைசெய்தேனென்று, கண்ணாடியானது தன் முன்னுள்ள பொருளைத் தன்னிடத்தே காட்டுதல்போல், அவனிடத்துள்ள பிழையைத் தம்மிடத்தே காட்டுவாராதலால், அவர் கண்ணாடிபோற் களங்கமின்றி விளங்குவார்; நீ யவர்களிற் சேர்ந்தோ யாதலால் அங்ஙனஞ் சொன்னா யென்பது கருத்து. கண்டு கொல் - தோன்றலைக் கண்டோவெனினுமாம். சொற்றதென்றது இறந்தகாலம் பற்றிவந்த தொழிற்பெயர். [இது உவமையணி.] (அஉ)

[இதனால் மாறவுள்ளம் பரிந்தார்வழற்றப் புரிவே னென்றதற்கு உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

*வேண்டல் செய்வலென் றாய்விழை வானினைக்*
*காண்ட லன்றியென் வேண்டுங் கதிர்மதி*
*யீண்டு நோக்குநர் கண்களிப் பெய்துறச்*
*சேண்ட யங்குவ தன்றியென் செய்யுமால்.*

இ - ள். வேண்டல் - வேண்டப்பட்டதை, செய்வல் என்றாய்- செய்வேனென்று சொன்னாய்; விழைவால் - ஆசையினாலே, நினை - (அழகிய) உன்னை, (கண்களிப்பு) - நேத்திரானந்தத்தை, எய்துற - அடைய, காண்டல் அன்றி-காணுத லல்லாமல், என்-யாது, வேண்டும் - (எனக்கு) வேண்டும்; கதிர் - கிரணத்தையுடைய, மதி - சந்திரனானவன், ஈண்டு - இவ்விடத்திருந்து, நோக்குநர் - பார்ப்பவர், கண்களிப்பு - நேத்திரானந்தத்தை, எய்துற - அடைய, சேண் - ஆகாசத்திலிருந்து, தயங்குவது அன்றி - விளங்குவதல்லாமல், எ யாதுபயனை, செய்யும் - (அவர்க்குச்) செய்வான், எ - று.

க - து. தமயந்தியானவள் அன்னமே யான் விரும்பியதைச் செய்வே னென்றாய்; உன்னைக் கண்டதே யல்லாமல் எனக்கென்ன வேண்டுமென்றாள் என்பதாம்.

வேண்டல் - வேண்டப்படுபொருளை யுணர்த்தலால் ஆகுபெயர். அவ்வன்னத்தைக் காணுதலினுஞ் சிறந்தபொருள் தனக்கில்லை யென்பது தோன்ற 'நினைக்காண்டலன்றி யென்வேண்டும்' என்றாள். சந்திரன் இங்கேயிருந்து பார்ப்பவர்க்குக் கண் களிப்பைச் செய்வதன்றி வேறே விசேஷமாகச் செய்யக்கிடந்த தொன்றில்லை; அதுபோல நீயும் எனக்குக் கண்களிப்பைச் செய்வதன்றி வேறே விசேஷமாகச் செய்யக்கிடந்ததொன்றில்லை என்பது கருத்து. [அன்னத்தையுஞ் சந்திரனையுங் குறித்துச் சொல்லப்பட்ட விரண்டு வாக்கியங்களுக்குப் பிம்ப பிரதிபிம்ப பாவந் தோன்றலால் எடுத்துக்காட்டுவமையணி.] (அ௩)

[இதனால் விரும்பப்பட்ட பொருள் எப்படிப்பட்டதாயினுஞ் சொல்லலாமெனின் அதுகூடாதெனல் சொல்லப்படுகின்றது.]

கோச்சகக்கலிப்பா.

*விழையுமனத் ததுமனத்தை விட்டகல்வ தெனினன்றே*
*தழையவுரை தருநாவாற் சாற்றலாந் தகைமைத்தா*
*மெழுபுவிவாழ் கன்னியரி லிருவிசும்பிற் றருவினறுங்*
*கொழுநனைநல் குதியென்று கூறுநரு முளர்கொல்லோ.*

இ - ள். விழையும் - விரும்பப்படுகின்ற, மனத்தது - மனத்தி லுள்ளதொன்று, மனத்தை - அம்மனத்தை, விட்டு அகல்வதெனின் அன்றே - விட்டு வெளிப்படுவதாயி னன்றே, தழைய - பெருக, உரைதரும்-பேசுகின்ற, நாவால்-நாவினாலே, சாற்றலாம் தகைமைத் தாம் - சொல்லப்படுந் தகுதியுடையதாகும்; எழு புவி - எழுதீவுகளி லேயும், வாழ் - வாழ்கின்ற, கன்னியரில் - பெண்களுள், இருவிசும் பில் - பெரியவானுலகத்துள்ள, தருவின் - கற்பக தருவினது, நறு - பரிமளம் பொருந்திய, கொழுநனை - செழியவரும்பை, நல்குதி என்று - (கொணர்ந்து) கொடுவென்று, கூறுநரும் - சொல்வாரும், உளள் கொல் - இருக்கின்றனளோ; [அப்படியே, தருவின் - கற்பக தருப்போலும், நறு - நற்குணம் பொருந்திய, கொழுநனை - நள ராஜனை, நல்குதி என்று - கொணர்ந்து கொடுவென்று, கூறு நரும்-சொல்வாரும், உளள் கொல் -இருக்கின்றனளோ,] எ - று.

க - து. தமயந்தியானவள் கொழுநனைத் தாவென்று சொல்பவ ளுமுண்டோவென்று சிலேடையாகச் சொன்னாள் என்பதாம்.

மனத்தைவிட் டகலாமைக்குக் காரணம் - மனம் அதனையுறு தியாகப் பிடித்திருத்தலேயாம். 'கொழுநனை' எனவே மலரும்பருவத் துப் பேரும்பென்றதாயிற்று. மலர்மேல் விருப்ப மகளிர்க்கியல்பாத லால் அதனை யெடுத்துக்காட்டினாள். கொழுநன் - தலைவன். "பிரா னே கொழுந னரசனுதி யெனப்பதினேந்துமுறைசெய் எப்பொருட்கு மிறைவன் மேற்றே" (திவாகரம்-மக்கட்பெயர்த் தொகுதி என்பதி னாலறிக. அது சிறப்புப்பற்றி நளனை யுணர்த்திற்று. கணவனென் பாருமுளர். கிடைத்தற்கரிய வொருவனைப் பெறவேண்டுதல், கிடை த்தற்கரிய கற்பகவரும்பைப் பெறவேண்டற் கொப்பாதலாற் பழிப்பு க்கிடமாதல் பற்றி நாணமுடையவ ளெப்படிக் கூறுவளென்பது கரு த்து. [சிலேடையி னிருபொருளுக்கும் பிம்ப பிரதிபிம்ப பாவத்தால் எடுத்துக்காட்டுவமையணி.] (இதுமுதல் விருபத்துநாலு பாட்டுகள் பெரும்பாலுங் காய்ச்சீர் நான்கு பெற்றுக் கலித்தளை மிக்குவருகிற அளவடி நான்கு கொண்ட தரவு கொச்சகக்கலிப்பாக்கள்.) (அச)

[இதனாலே தமயந்தியின் சொல்லைக்கேட்டு அன்னம் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

தழைசிறைய மடவனமே சாற்றுதியென் றிவ்வாறு
குழைகிழிக்கு மதர்நெடுங்கட் கொம்பர்மகிழ் நாணினொடு
மொழிவது கேட்டுயுற்று முகிழ்நகைவா ளுதலுளத்தில்
விழைவுறுநன் மொழிகள்சில மடவன்னம் விளம்புமால்.

இ - ள். தழை - தழைத்த, சிறைய - சிறைகளையுடைய, மடம் - இளமைபொருந்திய, அனமே - அன்னமே, சாற்றுதி என்று - சொல்லென்று, இவ்வாறு-இவ்விதமாக, குழை - குழையை யுடைய (காதை), கிழிக்கும் - கிழிக்கின்ற, மதர் - மதர்த்த, நெடு - நீட்சிபொருந்திய, கண் - கண்களையுடைய, கொம்பர் - பூங்கொம்பு போல்பவள், மகிழ்-மகிழ்ச்சியோடும், நாணிநெடும் - வெட்கத்தோடும், மொழிவது-சொல்வதை, கேட்டு - (தான்) கேட்டு, ஐயுற்று - சந்தேகித்து, முகிழ் - (முகிலை)அரும்புபோலும், நகை - பற்களையும், வாள் - காந்திபொருந்திய, நுதல்-நெற்றியையு முடையவளது, உளத்தில் - உள்ளத்தின்கண்ணே, விழைவுறு - விரும்பப்படும், நல் மொழிகள் சில - சில நல்லசொற்களை, மட அன்னம் - இளமைபொருந்திய அன்னமானது, விளம்பும்-(அவளுக்குச்) சொல்லும். எ- று.

க. து. தமயந்தி சொற்களைக்கேட் டன்னஞ் சொல்லியது என்பதாம்.

கொம்பு - கொம்பரென ஈறு திரிந்தது. கொம்பர்-உவமையாகுபெயர். குழைகிழிக்கும் என்பதற்குக் காதணியைக் கிழிக்கின்ற என்றுரைப்பினுமாம்; "குழையைச்சிலுகிட்டு" என்றார் பிறரும். மகிழ் - முதனிலைத் தொழிற்பெயர். மகிழ் - தன்விருப்பத்தை முடித்தற்கு உபாயங் கிடைத்ததென் றுண்டாகியது. ஐயமுற்றென்பது விகாரப்பட்டது. ஐயம் - நளன்மேலிவளுக்கு விருப்பமுண்டோ வில்லையோ வெனுஞ் சந்தேகம். (அரு)

[இதனால் அது நான் கேட்கத்தக்கதுதானெனல் சொல்லப்படுகின்றது.]

தருவினறுங் கொழுநனையார் தருகவென வுரைப்பளெனு
மரியமறைப் பொருளதனை யான்கேட்க லாகாதோ
தெரியவரு மறைப்பொருளைச் செவிப்புலத்தி னுறநான்காம்
வருணமுடை யவர்கேட்க லாகாத வாறேபோல்.

இ - ள். தருவின் - கற்பகதருவினது, நறு - பரிமளம் பொருந்திய, கொழுநனை - செழியவரும்பை, யார் - எவள், தருக என - கொடுவென்று, உரைப்பளெனும் - சொல்வாளென்று சொல்லப்பட்ட, அரிய - அரிதாகிய, மறை பொருள் அதனை - இரகசியப்பொருளை, யான் - நான், கேட்கல் ஆகாதோ - கேட்கத்தகாதா; தெரிய அரு - அறிதற்கரிய, மறைப்பொருளை - வேதப்பொருளை, செவி புலத்தில் - சுரோத்திரேந்திரியத்தினாலே, உற - பொருந்த, நான்

காம் வருணம் உடையவர்-சூத்திரர், கேட்கல் ஆகாத ஆறே போல் - கேட்கத்தகாத விதம்போல, எ - று.

க - து. அன்னமானது தமயந்தியே நீ சொன்ன இரகசியப் பொருளை யான் கேட்கலாகாதோ வென்று சொல்லிற்று என்பதாம்.

அம்மறைப்பொருளைக் கேட்டற்குச் சூத்திரர்போல் இம் மறைப்பொருளைக் கேட்டதற்கு யான் அனதிகாரியல்லேன், அதிகாரியே; அதனை நன்றாகச் சொல்லென்பது கருத்து. பின் மறைப்பொருள் - வேத வாக்கியம்; அன்றி - வேதத்தினது அர்த்த மெனினுமாம். (அசு)

[இதனால் அப்பொருள் பெறுதற் கரியதாகையாற் சொல்லுதற்கு நாணுகின்றேனெனின் அதற்குத் தருமத்தராஞ் சொல்லப்படுகின்றது.]

மனமுறுமோர் பொருளடைத லரியதோ மனத்தாலு
நினைவரிய பொருளினையு நிறையுடையோ ரடைகுவராற்
புனைமணிமே கலைதாங்கிப் புடையகன்ற வகலல்குற்
கனியனைய வந்தீஞ்சொற் கற்பகப்பூங் கொம்பன்னாய்.

இ - ள். புனை - அலங்கரிக்கப்பட்ட, மணிமேகலை - இரத்தின மேகலையை, தாங்கி - சுமந்து, புடை அகன்ற - புடைபரந்த, அகல் - பரப்பையுடைய, அல்குல் - அரைக்கீழிடத்தையும், கனி அனைய-முக் கனிபோலும், அம் - அழகிய, தீ - மதுரம்பொருந்திய, சொல் - சொல்லையுமுடைய, கற்பகம் பூ கொம்பு அன்னாய்-கற்பகத்தின் மலர் க்கொம்புபோல்பவளே; மனம்-மனத்தின்கண், உறும் - இருக்கின்ற, ஓர் பொருள் - ஒருபொருளை, அடைதல் - பெறுதல், அரியதோ - (கற்பகவரும்பை யடைதல்போல்) அரியதோ (அரியதன்று), (அரிய தென்று என் சொல்லக்கூடாதெனின்) நிறை உடையோர் - யோகிகள், மனத்தாலும் - அம்மனத்தினாலும், நினைவு அரிய - நினைத்தற் கெட்டாத, பொருளினையும் - பரப்பிரமத்தையும், அடைகுவர் - பெறுவார், எ - று.

க - து. தமயந்தியே நினைத்ததையடைதல் அரிதன்றென் றன்னஞ் சொல்லியது என்பதாம்.

'மனமுறுமோர் பொருளடைத லரியதோ' என்றதற்கு அப் பொருள் கட்பொறி முதலியவற்றிற்குப் புலனாகா திருப்பினும் மன மொன்றற்காவது புலனா யிருக்கையால் உனக்கு அதனை யடைத லரிதன்றென்பது கருத்து. ஆணவமலந்தடையா யுயிரைச்செறிந்து

நிற்கையாற் சச்சிதானந்த சொரூபமாகிய பரப்பிரமத்தை நினைத்தல் மனத்திற்குக் கூடாமையறிக. நிறை - அம்மனத்தைப் பொறிகளிற் செலுத்தாது சமாதியி னிருத்தல். நிஃலென் முதனிலை நிறுவென் பிறவினையாய்ப் பின்பு நிறையெனத் தொழிற்பெயராயிற்று. [மனத்திற்கெட்டாததையும் அடைவரென்னு மொருபொருளைச் சொல்லத் தண்டாபூபிக நியாயத்தினாலே மனத்திற்கெட்டிய பொருளை யடைதல் சொல்லவேண்டுவதில்லை என்னு மற்றொரு பொருள் தோன்றலால் செய்யுட் பொருட்பேறணி.] தண்டாபூபிகம் - தருக்கநூலிற் கூறப்படும் நியாயவகையுளொன்று; இதற்குத் தடியோடு சேர்த்துக் கட்டிவைத்த அப்பவருக்கம் என்பதுபொருள். (அஎ)

[இதனால் இது பொய்சொல்வதேன்று சொல்லாதிராதே யெனல் சொல்லப்படுகின்றது.]

பொய்ம்மைமொழி புகன்றறியேம் புகலமன மெண்ணுகினு
மெய்ம்மையல துரையாநா வேதநவில் பயிற்சியாற்
கொம்மைவரு முலைவாய்மை யுடையோரைக்குறித்துரைப்பி
னெம்மைமுத லெடுத்துரைப்ப ரீர்ங்கமலத் திறைமுன்னும்.

இ - ள். கொம்மை - இளமைபொருந்திய, வரு - வளர்கின்ற, முலை - முலைகளையுடையவளே; பொய்ம்மை மொழி - அசத்திய வார்த்தையை, புகன்று அறியேம்-சொல்லியறியேம்; புகல-(ஒரு சமயத்திலே) சொல்லுதற்கு, மனம் - மனமானது, எண்ணுகினும் - நினைத்தாலும், நா - (எம்முடைய) நாக்களானவை, வேதம் - வேதத்தை, நவில் ஓதிவருகின்ற, பயிற்சியால் - பழக்கத்தினாலே, மெய்ம்மை (மொழி) அலது - சத்திய வார்த்தையை யல்லாமல், உரையா - சொல்லாவாம்; ஈர்ங்கமலத்து-குளிர்ச்சிபொருந்திய தாமரைப் பூவிலுள்ள, இறை முன்னும் - நான்முகக்கடவுண் முன்னும், வாய்மை உடையோரை-சத்தியத்தை உடையவரை, குறித்து-கருதி, உரைப்பின் - பேசின், எம்மை - எம்மையே, முதல் - முதலில், எடுத்து - குறித்து, உரைப்பர் - சொல்லுவார், எ - று.

க - து. தமயந்தியே! பொய்வார்த்தைகள் சொல்லியறியோம், சொல்லநினைக்கில் வேதப்பயிற்சியால் நாக்கள் எழாவாம் என்பதாம்.

கொம்மைவருமுலை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். தன்னினத்தையுந் தழுவிய 'புகன்றறியேம்', 'எம்மை' எனப் பன்மையாகக் கூறப்பட்டது. புகலமன மெண்ணுகினும் என்னு மும்மை மனமும் அப்படி எண்ணு

கின்றதில்லை என்னும் பொருளைப் பயத்தலால் எதிர்மறை. சத்தி யத்தைச் சொல்லுகிற வேதத்தோடு பழகலால் நாவிற்கு அப்பழக்கக் குணம் விடாதென்க. "பழக்கங் கொடியதுபார் பாறையிலுங்கோழி, கிழிக்கும் பொலியைக் கிளறும், விழித்துங், குருடர்க் கொளிபகை யாக் கூசிக்கோல்போடா,ரருளைப்பகுக்குமான்மா(ஒழிவிலொடுக்கம்) என்பதனாலுமறிக. தேவலோகத்துப் பறவையாதலின் வேதமோது தற் குரித்தாயிற் றென்க. கமலத்திறை முன்னுமென்னு மெச்சப் பொருளில் வந்த வுயர்வு சிறப்பும்மையால் இந்திரன் முதலியோரிட த்து முரைப்பரென்பது தோன்றுதல் காண்க. (அஅ)

[இதனால் ஆனால் நீ என்ன செய்யமாட்டுவாயெனின் அதற்குத் தருமுத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

பாட்டுவரிச் சுரும்புமுரல் பங்கயமெல் லரும்பேய்க்கு
மோட்டிளவெம் முலையெனக்கு முடியாத பொருளுளதோ
சூட்டரவின் மேற்கிடந்த தொடுகடன்ஞா லத்திடைநீ
வேட்டதுகூ றுதிகொணர்வல் விரைவினெனக் கூறியதால்.

இ - ள். வரி - இரேகைகளை யுடைய, சுரும்பு - வண்டுகளா னவை, பாட்டு - பாட்டை, முரல் - பாடப்பெற்றிருக்கின்ற, பங்க யம் - தாமரையினது, மெல் அரும்பு - மெல்லியவரும்பை, ஏய்க்கும்- நிகர்க்கின்ற, மோட்டு இள வெம் - உயர்ச்சியும் இளமையும் விரும்பப் படுங் குணமும் பொருந்திய, முலை - முலைகளையுடையவளே, என க்கு - என்னால், முடியாத - முடிவுபெறாத, பொருள் - காரியமானது, உளதோ - (ஒன்று) இருக்கின்றதோ; சூட்டு-உச்சிக்கொண்டையை யுடைய, அரவின்மேல் - ஆதிசேஷன்மேல், கிடந்த-தங்கிய, தொடு - தோண்டப்பட்ட, கடல் - கடலாற் சூழப்பட்ட, ஞாலத்திடை - பூமியின்கண், வேட்டது - (உன்றைல்) விரும்பப்பட்ட பொருளை, நீ - நீ, கூறுதி - சொல்லு; விரைவில் - சீக்கிரத்தில், கொணர்வல் - (யான் அதனைக்) கொண்டுவருவேன்; என - என்று, கூறியது - (அன்னந் தமயந்திக்குச்) சொல்லியது, எ - று.

க - து. தமயந்தியே! நீ இச்சித்ததைச் சொல் விரைவிற் கொண்டுவருவேனென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

சுரும்பு முரலுதலைப் பங்கய வரும்பிற்கு அடையாக்கியது மல ரும் பருவத்துப் பெரிய வரும்பென்று தோன்றுதற்கென்க. 'எனக்கு முடியாத பொருளுளதோ' எனவே அற்பமான பறவையென்று நினையாதே, சிறியூ அச்சாணி பெரியதேரை நடத்துதல்போல், எப்

படிப்பட்ட பெரிய காரியத்தையு முடிக்கின்ற வல்லமை யெனக்குண் டென்றதாயிற்று. (அ௬)

[இதனால் 'வேட்டது கூறுதி' என்றதற்குத் தருமுத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

மருவுபுரி நரம்பிசைக்கு மாடகநல் லியாழிசைகேட்
டுருகினளன் பால்வேட்கை யுற்றனளென் றறிகில்லா
யரியபசும் பொன்னிறத்த வாய்தூவி மடவனமே
தெருமரலுற் றேன்விழைவு செப்புமா றெவனென்றாள்.

இ - ள். அரிய - பெறுதற்கரிய, பசும் பொன்-பசிய பொன்னி னது, நிறத்த - உருவமுள்ள, ஆய் - தேடத்தக்க, தூவி - இறகுகளை யுடைய, மடம் - இளமைபொருந்திய, அனமே - அன்னமே; மருவு - சேர்ந்த, புரி - வலிக்கட்டுகளையும், நரம்பு - தந்திகளை, இசைக்கும் - இசைவிக்கின்ற, மாடகம் - முறுக்காணிகளையும் உடைய, நல் யாழ் - நல்ல வீணையிசை போல்கின்ற, இசை - (என்) சொல்லை, கேட்டு - (இவள்) கேட்டு, உருகினள் - மனங்குழைந்தவளாகி, அன்பால் - ஆசையினலே, வேட்கை உற்றனள் என்று-(அச்சொல்லையே)கேட்க வேண்டுதலுற்றாளென்று, [இன்னுஞ் சிலேடையால், உருகு - உள முருகுகின்ற, இன் - இனிமை பொருந்திய, நளன்பால் - நளனி டத்தே, வேட்கை உற்றனள் என்று-ஆசை மிகுந்தாளென்று,] அறி கில்லாய் - அறியாயா; தெருமரல் உற்றேன்-மனச்சுழற்சியையடைந்த நான், விழைவு - அவ்வாசையை, செப்புமாறு - வெளிப்படையாகச் சொல்லும் விதம், எவன் - யாது, என்றாள் - என்று சொல்லினள் (தமயந்தி) எ - று. அனம் தொகுத்தல்.

க - து. அன்னமே யிசைகேட் டுருகி னளன்பா லாசையுற்ற னள் என்றறியாயா என்பதாம்.

வீணையிசை போல்கின்ற என் சொல்லை யிவள் கேட்டு மனங் குழைந்தவளாகி ஆசையினலே இன்னுமச் சொல்லையே கேட்க வேண்டுகின்றாளென்று 'அறியாயா' எனலால் உன்சொல் கேட்குந் தோறுஞ் செவிக்கின்பஞ் செய்தலால் நான் இன்னும் அதனையே கே ட்க வேண்டுகின்றே னல்லது பிறிதொன்றை வேண்டுகின்றிலேன் என்றா ளென்றதாயிற்று. இப்பொருளிலே வேட்கை-பெறல் வேண் டுதல். வீணை யிசைபோலு மென்சொல்லை இவள் கேட்டு உளமுருக நின்ற வினிமைபொருந்திய நளனிடத்தே விருப்பமுற்றாளென் றறி யாயாவெனலால், உன் சொல்லினலே நளனுடைய குணங்களை

நன்றாகவறிந்து அவனிடத்தே விருப்பமுற்றேன் என்றாளென்றதாயிற்று. இப்பொருளில் தமயந்தியை வினைமுதலாகவுடைய உருகென் வினைத்தொகை நளனென் பெயர்கொண்டு முடிந்தது. உற்றேனென்றது வினையாலணையும் பெயர். (கo)

[இதனால் அன்னம் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

வேட்கைதன துளத்தடக்கி மெய்நாணான் மறைத்திகலும், வாட்படைபோ னெடுங்கண்ணாள் வழங்கியசொற் பொருடேர்ந்து, நாட்கமல வள்ளவாய் நறும்போதி லமர்செய்ய, தாட்பவளக் கடிகைவாய் மடவன்னஞ் சாற்றுமால்.

இ - ள். நாள் - அன்றுபூத்த, கமலம் - தாமரையினது, வள்ளம் - கிண்ணம்போலும், வாய் - வாயையுடைய, நறும் போதில் - நலமலரில், அமர் - வாசஞ்செய்கின்ற, செய்ய - சிவப்புநிறம் பொருந்திய, தாள் - அடிகளையும், பவளக்கடிகை - பவளத் துண்டம் போலும், வாய் - வாயையும் உடைய, மடம் - இளமைபொருந்திய, அன்னம் - அன்னமானது, இகலும் - போர்செய்தற்குரிய, வாள் படைபோல் - வாளாயுதம்போலும், நெடுகண்ணாள் - நெடியகண்களை யுடையவள், வேட்கை - (நளன்மேலுண்டாகிய) ஆசையை, தனது - தன்னுடைய, உளத்து - மனத்தின்கண், அடக்கி - வெளிப்படாமல் வைத்து, நாணால் - வெட்கத்தினால், மெய் - (அவ்வாசை கொள்ளப் பட்ட)பொருளை, மறைத்து - (சிலேடையால்) மறைத்து, வழங்கிய - சொல்லிய, சொற்பொருள் - வாக்கியார்த்தத்தை, தேர்ந்து - அறிந்து, சாற்றும் - சொல்லும், எ - று. ஆல் - அசை.

க - து. தமயந்தி நளனிடத் திச்சைவைத்து மறைபொருளாகச் சொன்ன சொல்லையறிந் தன்னஞ்சொல்லும் என்பதாம். (கக)

[இதனால் நீ யென்னாலே மறைத்துச் சொல்லப்பட்ட பொருளை யறிந்திலையா வென்பாயாயின் அறிந்துளேனெனல் சொல்லப்படுகின்றது.]

தருவினாறுங் கொழுநனையார் தருகென்பா ரென்றதுவு, மருவுபுரி நரம்பிசைக்கு மாடகநல் லியாழிசைகேட், டுருகினளன் பால்வேட்கை யுற்றனளென் றுரைத்ததும் யான், கருதினனாற் பலகலையுங் கற்றுணர்ந்த தெளிவினால்.

இ - ள். தரு + என்றதுவும் - இப்படிக் கற்பக வரும்பின்மேல் வைத்துச் சொல்லப்பட்ட வாக்கியத்தையும், மருவு + என்றுரைத்த

தும் - இப்படி என்று சொல்லின்மேல் வைத்துச் சொல்லப்பட்ட வாக்கியத்தையும், யான் - நான், பலகலையும் - பலவகை நூல்களையும், கற்றுணர்ந்த - கற்று (அவற்றின்பொருளை) அறிந்த, தெளிவினால் - தெளிவைக்கொண்டு, கருதினன் - (நளனைக்குறித்துச் சொல்லப் பட்டவையென்று) அறிந்தேன், எ - று.

க - து. தமயந்தியே! நீ சிலேடையாகச் சொன்னதை யானறிந் தே னென்றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

நளனைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளென்பது இசையெச்சம். கருதல் - இங்கே அறிதற்பொருளைப் பயந்து நின்றது. பலகலை - வியாகரணம், தருக்கம் முதலியன. (கஉ)

[இதனால் இருவிசும்பிற் றருவினாலுங் கொழுநனை முதலிய வாக்கியப்பொருளை நீ அறிந்திருந்தால் அறியாய்போற் சொல்லியதற்குக் காரணம் யாதெனின் அதனை யுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

மறங்கிளரு மதர்நெடுங்கட் கன்னியர்த மனமொன்றிற்
செறிந்துமுடன் பிரியுமெனத் தெளிவுடையோர் செப்புதலா
னறுந்துணரொண் சில்லோதி நயப்புறுநின் குறிப்புரைக
ளறிந்துமறி யேன்போல வையுறவுற் றிருந்தனன்யான்.

இ - ள். நறு துணர் - நறிய மலர்களையும், ஒள் சில் - ஒள்ளிய பொன்வட்டத் தகட்டணியையுமுடைய, ஓதி - கூந்தலையுடையவளே, மறம் - கொலைத்தொழிலால், கிளரும் - விளங்காநின்ற, மதர் - மதர்த்த, நெடு - நெடிய, கண் - கண்களையுடைய, கன்னியர் - கன்னியர்களுடைய, மனம் - மனங்களானவை, ஒன்றில் - ஒருபொருளில், செறிந்தும் - அழுந்தியும், உடன் - விரைவில், பிரியும் என - (அந் நிலை) நீங்குமென்று, தெளிவுடையோர் - அறிவுடையோர், செப்புதலால் - சொல்லுதலினாலே, நயப்புறு - விரும்பப்படுகின்ற, நின் - உன்னுடைய, குறிப்புரைகள் - குறிப்புச் சொற்களின் பொருளை, யான் - நான், அறிந்தும் - தெரிந்தும், அறியேன் போல - அறிந்திலேன் போல, ஐயுறவுற்று - சந்தேகமடைந்து, இருந்தனன் - இருந்தேன், எ - று.

க - து. தமயந்தியே! பெண்கள் மனங்கள் விரைவிற் பிரியுமென அறிவுள்ளோர் சொல்லுதலால் உன் குறிப்புச் சொற்களை நானறிந்தும் அறியாதுபோலச் சந்தேகித்தேன் என்றது அன்னம் என்பதாம்.

சில்லோதி இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். மனமொன்றில் அழுந்தல் - ஒருபொருளைப் பெறல்வேண்டுமென்று மிக விரும்பி அதனையே நினைத்திருத்தல். தெளிவுடையோர் செப்புதல், "இனம்போன் றின மல்லார் கேண்மை மகளிர், மனம்போல வேறு படும்" (திருவள்ளுவர் - கூடாநட்பு - ௨) என்பதனாலறிக. கன்னியர்மன மொன்றி லழுந்தியும் உடனே நீக்குமெனச் சொல்லுதலாலே, உன் மனமும் நளனிடத்தே இப்போது அழுந்திநிற்பினும் இன்னுஞ் சிறிதுபொழுதிலே விட்டு நீங்கும், ஆதலால் உனது நிச்சயம் அறியப்படாமை பற்றி அறியேன்போலச் சந்தேகித் திருந்தே னென்றதாயிற்று.(கூரு)

[இதனால் அன்றியும் நளன் அரசர்க்கரசனு யிருக்கையால் அவனுக்கு நிச்சயமல்லாத செய்தியைச் சொல்லலாகாதெனல் சொல்லப்படுகின்றது.]

உலகமெலாம் பொதுநீக்கி யோராழி தனையுருட்டி
யலகில்புகழ்ப் படாம்போர்த்த வரசர்பிரான் றிருமுன்னர்
மலர்பொதுளஞ் சில்லோதி யையுற்று மடநாணாற்
சிலமொழிசொற் றனளென்னுச் செப்புவதுஞ் சீர்மைத்தோ.

இ - ள். உலகம் எல்லாம் - பூமிமுழுதையும், பொது - (பலவரசர்க்கும்) பொதுமையினின்றும், நீக்கி - நீங்குவித்து, ஓர் ஆழிதனை - ஒரு சக்கரத்தை, உருட்டி-செலுத்தி, அலகுஇல்-அளவில்லாத, புகழ்-புகழாகிய, படாம் - ஆடையை, போர்த்த - (அந்தப்பூமியின்மேல்) போர்த்தல்செய்த, அரசர்பிரான் - ராஜாதி ராஜனது, திருமுன்னர் - சந்நிதானத்தில், மலர் - மலர்கள், பொதுள் - நெருங்கப்பெற்ற, அம் - அழகிய, சில் - பொன்வட்டத் தகட்டணியையுடைய, ஓதி - கூந்தலையுடையவள், ஐயுற்று - சந்தேகித்து, மடம் - அறியாமையோடுகூடிய, நாணால் - வெட்கத்தினாலே, சிலமொழி - (உன்னைக் குறித்துச்) சிலசொற்களை, சொற்றனளென்னு - சொல்லினளென்று, செப்புவதும் - சொல்லுவதும், சீர்மைத்தோ - சிறப்புடைத்தாமோ, எ - று.

க - து. தமயந்தியே! நளராஜன் திருக்கொலுவின் முன்னே நான்போய் அரசே உன்னைக்குறித்துத் தமயந்தி வெட்கத்தாற் சில சொற்கள் சொன்னாள் என்று சொல்லுவது சிறப்பாகுமோ என்றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

எலாமென்பது எஞ்சாப்பொருளில் வந்தது; மேனியெலாம் பசலையாயிற் றென்பதிற்போல். ஆணையைச் சக்கரமாகச் சொல்லு

வது செய்யுள்வழக்கு. 'புகழ்ப்படாம் போர்த்த' எனவே அவன் புகழ் பூமியெங்கும் வியாபித்திருக்கின்ற தென்றதாயிற்று. பெண்களுக்கு விவாகமளவும் தகப்பனுடைமையாயிருக்கவேண்டுதலிற் கருத்தின்படி முடியுமோ முடியாதோவென்று சந்தேகித்தல். 'சீர்மைத்தோ' எனவே ஐயம், மடம், நாணம், சொற்குறைவு, இவற்றுளொன்றே சொல்லுதற்குத் தடையாமெனின் இந்நான்குஞ்சேர்ந்த இக்காரியத்தை நான் அதனால் வரும் பழிக்கஞ்சாது எப்படிச் சொல்லமாட்டுவே னென்றதாயிற்று. (கூஅ)

[இதனால் அப்படிதான் சொல்லினுந் தற்றமியாதெனின் அதற்குத் தகுமுத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

கந்தடுகிம் புரிக்கோட்டுக் கழைசுளியுங் கடாயானை
மந்தரத்தாற் பகைக்கடலை மதித்தடையும் வயவேந்தன்
சிந்தையை நின்பாற் பிணிப்பிற் றெள்ளமுதத் திருவேயுன்
றந்தைபிறற் களித்திடினென் வாய்மைதவ றுகாதோ.

இ - ள். தெள் அமுதம்-தெள்ளிய பாற்கடலிற்பிறந்த, திருவே-திருமாதே, கந்து - கட்டுத்தறியை, அடு - ஒடிக்கின்ற, கிம்புரி - பூணையணிந்த, கோட்டு - கொம்புகளுடைய, கழை - கரும்புகளை, சுளியும் - முறிக்கின்ற, கடா யானை-மதயானையாகிய, மந்தரத்தால் - மந்தரகிரியினாலே, பகை - பகைவரது, கடலை - (சேனையாகிய) பாற்கடலை, மதித்து - கடைந்து, அடையும் - அடையப்பட்ட, வயம் - வெற்றி(த்திருவை) யுடைய, வேந்தன் - நளராஜனது, சிந்தையை - மனத்தை, நின்பால் - உன்னிடத்தே, பிணிப்பின் - (யான்) கட்டிவைத்தால், உன் - உன்னுடைய, தந்தை - தகப்பனானவன், பிறற்கு-மற்றொருவனுக்கு, அளித்திடின் - (உன்னைக்) கொடுப்பானேயானால், என் - எனது, வாய்மை - வாய்ச்சொல்லின் றன்மையானது, தவறுகாதோ - வழுவாகாதோ, எ - று.

க - து. தமயந்தியே! நளன்மனதை யான் உன்னிடத்தில் வசப்படுத்திவைத்தால் உன் பிதா உன்னைப் பிறனுக்குக் கொடுத்துவிட்டால் என்சொற் பழுதாமென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

பகையென்னும் பண்புப்பெயர் பண்பிக்காயிற்று. பகைக்கடலோடு ஆரோபித்தற்கிடமாகிய சேனையும், வயத்தோடு ஆரோபிக்கப்படு பொருளாகிய திருவும் வருவித்துக் கூட்டப்பட்டன. பகைக்கடல் பகைவராகிய கடல் எனினுமாம். நளனுக்கு உன்மேலாசை பிறத்த லெளிதன்றென்பதுதோன்ற இப்படிப்பட்ட வெற்றிச்சிறப்புடையனை

யாக்கியது. உன்னைக்குறித்துப் பலவாறு புகழ்ந்தன்றி அவன் மனத்தை உன்னிடத்தே திருப்புதல் கூடாதென்பதுபடப் 'பிணிப்பின்' என்றது. அரசன் மனத்தை உன்னிடத்தே திருப்பிய பின்பு உன்றந்தை யுன்னை மற்றொருவனுக்குக் கொடுத்தால் அவனுக்கு நம்ப வைத்து மோசஞ்செய்தவனாவேனென்பதுதோன்ற 'என்வாய்மைதவறுகாதோ' என்றது. சந்தேகத்திற் கிடமில்லாத பொருளையே சொல்லவேண்டுமென்பது கருத்து. [யானை முதலியவற்றிலே மந்தர முதலியவற்றை யாரோபித்தலால் உருவகவணி.] (கரு)

[இதனால் அது சந்தேகத்திற் கிடமாகையால் அதனை விட்டு என் பிரதிக்கினை வழுவாமல் வேறுபகாரஞ் செய்வேனெனல் சொல்லப்படுகின்றது.]

என்னுளத்தி லையுறல்போல் யார்க்களிப்பான் றந்தையென
வுன்னுளத்து மையமுள தாதலா லிஃதொழிக
பின்னரெவை யுரைத்திடினு முடிப்பலெனப் பேரெழில்கூ
ரன்னமட வரலுள்ள மறியுமா றுரைத்ததுவே.

இ - ள். பேரெழில் - பெரிய அழகினால், கூர் - மிகுந்த, அன்னம் - அன்னப்பறவையானது, என் உளத்தில் - எனது மனத்தில், ஐயுறல் போல் - சந்தேகமிருத்தல்போல், தந்தை - தகப்பனானவன், யார்க்கு - யாருக்கு, அளிப்பான் என - கொடுப்பானோவென்று, உன் உளத்தும் - உனது மனத்திலும், ஐயம் - சந்தேகமானது, உளது - இருக்கின்றது; ஆதலால் - ஆகையினாலே, இஃது - இக்காரியம், ஒழிக - நீங்கக்கடவது; பின்னர் - அதுவன்றி, எவை - எந்தக்காரியங்களை, உரைத்திடினும் - (நீ எனக்குச்) சொல்லினாலும், முடிப்பல் என - (யான்) முடிப்பேனென்று, மடவரல் - தமயந்தியினது, உள்ளம் - கருத்தை, அறியுமாறு - உணரும்படியாக, உரைத்தது - சொல்லிற்று, எ - று.

க - து. தமயந்தியே! என் மனதிற் சந்தேக மிருக்கிறதுபோல உன்மனதிலுஞ் சந்தேகமிருக்கிறது, இது நிற்க வேறுகாரிய மிருந்தாற் சொல் முடிப்பேனென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

யார்க்களிப்பானோ வென்னும் ஓகாரந்தொக்குவந்தது. உனக்கே சந்தேகத்திற் கிடமாகிய விக்காரியத்தி லென்னைத் தூண்டுதல் நன்றன்றென்பது தோன்ற 'இஃதொழிக' என்றது. இஃதொன்று நீங்கலாக வேறே பலகாரியங்களுளவாயினும் உனக்கு முடிப்பேனென்றற்கு 'எவையும்' எனப் பன்மையாற் கூறியது. (கசு)

[இதனால் தமயந்தி நாணம்விட்டுப் பேசத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

கன்னிமனஞ் சூழ்கிடந்த நாணென்னுங் கடியரண
மன்னமொழி யெனும்படைகள் வழங்குதலு மழிந்ததான்
முன்னியுளந் தனிற்சிறிது முறுவலித்து முகங்கோட்டி
யின்னமுத முகுப்பதுபோல் வெளிப்படையி னியம்புமால்.

இ - ள். கன்னி - தமயந்தியானவள், மனம் - தன் மனத்தை, சூழ் கிடந்த - சூழ்ந்துகிடந்த, நாண் என்னும் - நாண மென்கின்ற, கடி - காவலாகிய, அரணம் - மதிலானது, அன்னம் - அன்னத்தினது, மொழி எனும் - சொற்களென்கிற, படைகள் - ஆயுதங்கள், வழங்குதலும் - மேற்சென்றவளவில், அழிந்ததால் - கெட்டமையால், சிறிது - சிறிதுபொழுது, உளந்தனில் - (தன்) மனத்திலே, முன்னி- ஆலோசித்து, முறுவலித்து - சிரித்து, முகங்கோட்டி - முகங்கவிழ்த்து, இன் அமுதம் - இனியவமிர்தத்தை, உகுப்பது போல் - சொரிவதுபோல், வெளிப்படையின் - வெளிப்படையினாலே, இயம்பும் - சொல்லுவாள், எ - று.

க - து. தமயந்தியானவள் வெளிப்படையாகச் சொல்லுவாள் என்பதாம்.

மனத்திலுள்ள பொருள்களை வெளிப்படாமற் காத்து நிற்றலால் 'நாணென்னுங் கடியரணம்' எனப்பட்டது. முன்னுதல்-அதிரகசியமாகிய விக்கருத்தை யெப்படி வெளிப்படையாற் சொல்வதென் றாலோசித்தல். நாணமழியினும் அதன் பழக்கவாசனை சிறிதுநிற்கையாற் சிரிப்பும், முகங்கோட்டலும் உண்டாயின. [நாணமுதலியவற்றிலே அரணமுதலியவற்றை யாரோபித்தலால் உருவகவணி.] (கஎ)

[இதனால் நளனே தனக்குத் தலைவனென்று நிச்சயமுறுத்தல் சொல்லப்படுகின்றது.]

விரையுயிர்க்குந் தாமரைக்கு வெய்யவனுஞ் சேதாம்பன்
மருவுயிர்க்கு நாண்மலர்க்கு மாமதியு மல்லாம [பு
லுரைபெறுநற் றலைவர்பிற ருளர்கொல்லோ பொலன்சிறை
லரசமட வனமெனயு மன்னளா யெண்ணுதியால்.

இ -ள். பொலன் - பொன்மயமாகிய, சிறைய - சிறைகளையுடைய, மடம் - இளமைபொருந்திய, அரச அனம்-அரசவன்னமே, விரை - வாசனையை, உயிர்க்கும் - வீசுகின்ற, தாமரைக்கு-தாமரைப்

பூவிற்கு, வெய்யவனும் - சூரியனும், சேதாம்பல் - செவ்வல்லியி னது, மரு - வாசனையை, உயிர்க்கும் - வீசுகின்ற, நாள் - பருவ முள்ள, மலர்க்கு-பூவிற்கு, மா மதியும் - பெரிய சந்திரனும், அல்லா பல் - அன்றி, பிறர் - அன்னியர்களாகிய, உரைபெறு - புகழ்பெற்ற, நல் தலைவர் - நல்ல நாயகர், உளர் கொல்லோ - இருக்கின்றாரோ? [இல்லை], என்னையும் - என்னையும், அன்னள் ஆய் - அப்படிப்பட் டவளாய், எண்ணுதி - (நளனன்றி நாயகனில்லை யென்று) எண் ணக்கடவாய், எ - று.

க - து. அன்னமே! தாமரைக்குச் சூரியனும் அல்லிக்குச் சந்தி ரனும் அன்றி வேறுநாயக ரில்லாதுபோல எனக்கு நளனையன்றி வேறு நாயகனில்லை யென்றெண்ணக்கடவாய் என்றாள் என்பதாம்.

எப்படித் தாமரை மலர்க்குச் சூரியனும் அல்லிமலர்க்குச் சந்தி ரனுமன்றி வேறு நாயகரில்லையோ அப்படியே எனக்கு நளனன்றி வேறு நாயகனில்லை யென்று தன்னிச்சயத்தைக் கூறியவாறாயிற்று. தாமரை - முதலாகுபெயர். வெய்யவன் - வெப்பத்தையுடையவன். செம்மை ஆம்பல் சேதாம்பல் என்றாயிற்று. உளர்கள் என்பதில் கள் விகுதிமேல் விகுதி. "உளர்கொல்லோ பொலன்சிறைய வரசமட வனமென்னையு மன்னளா வெண்ணுதியால்" என்றும் பாடமுண்டு. ()

[இதனால் விபரீதம் - பிரமாதம் - சாதனக்துறைபாடு-
வஞ்சவிருப்பு இவற்றுளொன்றற் பிறனைத்தான்
கணவனகக் கொள்ளாமையை வலியுறுத்தித் தன் பிதாவி
னலும் அது முடியாமையை யுணர்த்துதல்
சொல்லப்படுகின்றது.]

ஐயமுறே னளன்மார்பி லணியலணி குவனன்றி
மையல்புரி வேள்வரினு மன்றலந்தார் சூட்டுவனோ
நெய்யொழுகு வேற்றாதை பிறற்களிப்ப நேர்குவனேல்
வெய்யதழற் புகுந்தாவி விட்டுனுரை நிறுத்துவனால்.

இ - ள். ஐயம் உறேல் (அன்னமே நீ) சந்தேகப்படாதே; நள ன் - நளராசனது, மார்பில் - மார்பின்கண், அணியல் - மாலையை, அணிகுவன் அன்றி-சூட்டுவனல்லாமல், மையல் புரி - மயக்கத்தைச் செய்கின்ற, வேள் - மன்மதனானவன், வரினும் - வந்தானாயினும், மன்றல் - வாசனை பொருந்திய, அம் - அழகிய, தார் - மாலையை, சூட் டுவனோ - (யான்) சூட்டுவேனோ; நெய்-நெய்யானது, ஒழுகு- ஒழுகப் பெற்ற, வேல் - வேலையுடைய, தாதை - (என்) தகப்பனானவன், பிறற்கு - மற்றொருவனுக்கு, அளிப்ப - (என்னைக்) கொடுக்க, நேர்

குவனேல் - உடன்படுவானாயின், வெய்ய தழல் - வெப்பம் பொருந்திய நெருப்பினுள், புகுந்து - முழுகி, ஆவி விட்டு - உயிரைவிட்டு, உன்-உனது, உரை - சொல்லை, நிறுத்துவன் - (நளனிடத்தில்) நிலைபெறுவிப்பேன், எ - று.

க - து. அன்னமே! யான் நளனுக்கே மாலையிடுவேன், என் பிதா பிறனுக் கென்னைக் கொடுக்க வுடன்பட்டால் அக்கினியுள் வீழ்ந்திறந்து உன் சொல்லை நிலைநிறுத்துவேன் என்றாள் தமயந்தி என்பதாம்.

மூன்றுலகத்திலும் அழகாற் சிறந்த மன்மதனை யொழிக்கவே மற்றை யாடவர்களையு மொழித்ததாயிற்று. 'வெய்யதழற் புகுந்தாவி விட்டு' என்றதனால் கொடுந்துயர் விளைக்கு மரணமே நளனையன்றி மற்றொருவனை மணத்தலினும் இனிதென்றதாயிற்று. அரசனுக்குத் தன்னைக் குறித்து அன்னத்தாற் சொல்லப்படுஞ் சொல்லை 'உன்னுரை' என்றாள். (கக)

[இதனால் தனக்குள்ள நிச்சயத்தை யுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

ஊழியஞ்செய் திறம்வேந்தை வேட்டுள்ள முருகுமெனை
வாழிமட வனங்கூட்ட லரிதென்னை மதித்திடேல்
கேழ்கிளர்தா மரையின்முகை கிளரொளித்தண் ணோற்கலரா
தேழ்பரித்தே ரவற்காணி னலர்ந்திடுத லியல்பன்றே.

இ - ள். மடம் - இளமை பொருந்திய, அனம் - அன்னமே, வாழி - வாழக்கடவாய்; ஊழியம் செய் திறம் - அடிமைத்தொழில் செய்யும்படிக்கு, வேந்தை - நளராஜனை, வேட்டு - விரும்பி, உள்ளம் உருகும் - மனமுருகாநின்ற, எனை - என்னை, கூட்டல் - அவனுக்கு மனைவியாக்குதல், அரிது - பெரிய வுபகாரமாகும்; என்னை - (இனி) என்னை, மதித்திடேல் - விசாரித்தல் செய்யாதே; (இப்படிப்பட்ட பிடிவாதமேன், குணமுள்ள மற்றொரு நாயகனைப் பெறிற் குற்றம் யாதென்றால்), கேழ்-நிறத்தினாலே, கிளர் - விளங்காநின்ற, தாமரையின் - தாமரையினது, முகை - அரும்புக்கு, கிளர் - விளங்காநின்ற ஒளி தண்ணோற்கு - சீதள கிரணத்தையுடைய சந்திரனால், அலராது - மலராமல், எழ் பரி தேரவன் - எழுகுதிரைகள் பூட்டிய ரதத்தையுடைய சூரியனை, காணின் - கண்டால், அலர்ந்திடுதல் - மலர்தல் இயல்பு அன்றே - சுபாவமன்றோ, எ - று.

க - து. அன்னமே! விதியின் சம்பந்தத்தினாலே நளனை யிச்சித்து மனமுருகு மென்னை அந்நளனோடு கூட்டுவித்தல் உனக்குப் பெரிய காரியமல்லவென்று சொன்னாள் என்பதாம்.

வாழியவென்னும் வியங்கோளினீற்றின் யகரவுயிர்மெய் கெட்டு வாழியென நின்றது. 'ஊழியஞ்செய் திறம்வேந்தை வேட்டுள்ள முருகுமெனை, வாழிமட வனக்கூட்டலரிது' எனவே, தனக்கு நான் ஊழியக்காரியாம் பதத்தைப்பெற விரும்பும்படி யிருக்கின்ற அப்படிப்பட்ட நளனுக்கு மனைவியாம் பதம் எனக்குக் கிடைத்தால் அது எப்படிப்பட்ட பெரும்பேறு யிராதென்றதாயிற்று. வேந்து - பண்பாகுபெயர். 'என்னை மதித்திடேல்' எனவே இப்படிப்பட்ட நிச்சயத்தை அறிவிக்கப்பட்ட நீ என்னை யினிச்சோதித்தல் அரைபட்டமாவை யரைத்தல் போலுமாம்; ஆதலால் கூட்டுதற்கு வேண்டுமுயற்சி செய்யென்றதாயிற்று. தாமரையைக்குறித்துச் சொல்லப்பட்ட வுபமானவாக்கியத்தால் எப்படி தாமரை யரும்பு சூரியனையன்றிச் சீதள கிரணத்தையுடையனா யிருந்தாலுஞ் சந்திரனை விரும்புகிறதில்லையோ அப்படியே நான் நளனையன்றிக் குணமுடையவனா யிருந்தாலும் மற்றொருவனை விரும்பேனென்னும் பொருள் பெறப்பட்டது. நளனிற் சிறந்த குணமுடையவ னொருவனில்லாதிருக்கவுந் தனது நிச்சயத்தை நம்புவித்தற்கு இங்ஙனங் கூறினாள். [தாமரைச் செய்தியாகிய அல்பொருளி னொப்புமையின் சம்பந்தத்தால் தமயந்தி செய்தியாகிய புகழ்பொருள் தோன்றுதலால் ஒப்புமைப்புனைவிலி புகழ்ச்சியணி.] 'ஊழியல் பிற்றிறல் வேந்தை வேட்டுள்ள முருகுமெனை, வாழிமடவனக்கூட்ட லரிதென்ன மதித்திடேல், கேழ்கிளர்தாமரையின் முகை கிளரளி தண்டேனுகர' என வழங்குகின்ற பாடம் இதன் முதனூல் முடிபிற்குச் சிறிதும் ஒவ்வாமற்பொருட் சிறப்புமிலதாய் நிற்கின்றது. (க00)

[இதனால் தனது நிச்சயத்தை யறிவித்து அன்னத்தினது நிச்சயத்தை வினவுதல் சொல்லப்படுகின்றது.]

வாட்டிறல்சேர் வயவேந்தின் மணிப்புயத்தென் முலைதிளைப்பக்
கூட்டுதியே லுயிர்வாழ்வல் கூட்டாயே லுலகறிய
மூட்டழலிற் புகுந்தாவி முடித்திடுவ லொளிகெழுசெஞ்
சூட்டுமட வனமிவற்று ளென்செய்வான் றுணிந்தனையால்,

இ - ள். ஒளி கெழு - காந்தி பொருந்திய, செஞ்சூட்டு - செய்ய வுச்சிக் கொண்டையை யுடைய, மடம் - இளமை பொருந்திய

அனம் - அன்னமே, வாள் - வாளினது, திறல் - போரினாலே, சேர் - சேர்ந்த, வயம் - வெற்றியையுடைய, வேந்தின் - நளராஜனுடைய, மணி - அழகிய, புயத்து - தோள்களிடத்து, என் - என்னுடைய, முலை - முலைகளானவை, திளைப்ப - அழுந்தும்படியாக, கூட்டுதியேல் - (என்னை அவனோடு) சேர்ப்பாயானால், உயிர் வாழ்வல் - உயிர்வைத்திருப்பேன்; கூட்டாயேல்-சேர்க்காயானால், உலகு அறிய-உலகத்தாரறிய, மூட்டு - மூட்டப்பட்ட, அழலில் - நெருப்பினுள், புகுந்து - முழுகி, ஆவி - உயிரை, முடித்திடுவல் - விட்டுவிடுவேன்; இவற்றுள் - (கூட்டலுங் கூட்டாமையுமாகிய) இவ்விரண்டனுள், என் செய்வான் - ஏது செய்யும்படியாக, துணிந்தனை - (நீ) நிச்சயித்தாய், எ - று.

க - து. அன்னமே! நீ என்னை நளனோடு சேர்த்தால் உயிர் வைத்திருப்பேன், சேர்க்காவிட்டால் உயிரை விட்டுவிடுவேன் என்றாள் என்பதாம்.

'கூட்டுதியே லுயிர்வாழ்வல்' என்றும், 'கூட்டாயே லுலகறிய, மூட்டழலிற் புகுந்தாவி முடித்திடுவல்' என்றும் கூறுதலாலே கூட்டிப் பிழைப்பிக்கவும், கூட்டாம லிறப்பிக்கவும் வல்லமை உனக்குண்டாயிருத்தலால் உன்னையே தஞ்சமாக நம்பியிருக்கிற வென்னைப் பிழைப்பித்தாற் புகழும் புண்ணியமும் உண்டாமென்றும், அது செய்யாயாகிற் பழியும் பாவமும் உண்டாமென்றும் குறிப்பித்தவாறாயிற்று. தனது தீப்பாய்தலை யாவரும் புகழ்தற்பொருட்டுத் தன்னுத்தம சிந்தையை வெளிப்படுத்த வேண்டுமென்பதுபற்றி, 'உலகறிய' என்றாள். உலகு - இடவாகுபெயர். (கஒ

[இதனால் அக்கூட்டலுதவியின் பெருமை கூறல்
சொல்லப்படுகின்றது.]

உயிருதவி செய்தவர்க்கொன் றுற்றக்கா லுணர்வுடையோர்
செயிரறுதம் முயிரளித்துச் செய்ந்நன்றிக் கடன்கழிப்பா
ரயர்வறவென் னுயிரினுஞ்சீர் வாய்ந்தநளன் றனையளிப்பி
னயர்வறுமோ திமமதற்குக் கைம்மாறே தறிகிலன்யான்.

இ - ள். அயர்வறு - (மனச்) சோர்வற்ற, ஓதிமம் - அன்னமே, உணர்வுடையோர் - அறிவுடையோர், உயிர் உதவி செய்தவர்க்கு - (ஆபத்துவந்தபோது தம்) உயிரைக் காப்பாற்றினவர்க்கு, ஒன்று - ஓராபத்து, உற்றக்கால் - வந்ததாயின், செயிரறு - குற்றமற்ற, தம் -

தம்முடைய, உயிர் - உயிரை, அளித்து - கொடுத்து, செய் - (அவராற்) செய்யப்பட்ட, நன்றி - உபகாரமாகிய, கடன் - கடனை, கழிப்பார் - தீர்ப்பார்; மயர்வு - மயக்கமானது, அற - நீங்க, என் - எனது, உயிரினும் - உயிரைக்காட்டிலும், சீர் வாய்ந்த - சிறப்புப்பொருந்திய, நளன்றனை - நளராஜனை, அளிப்பின் - கொடுப்பாயானால், அதற்கு - அவ்வுபகாரத்திற்கு, கைம்மாறு - எதிருபகாரம், எது - யாது, யான் - நான், அறிகிலன் - (அதனை) அறியேன், எ - று.

க - து. அன்னமே! உயிர்க்குதவி செய்தவர்க்கு உயிர்க்குதவி செய்வார்கள் உணர்வுடையவர்கள்; என்னுயிரினுஞ் சிறந்த நளனை நீ எனக்குக் கொடுத்தால் உனக்கென்ன பிரதிபுபகாரஞ் செய்வேன் என்றாள் என்பதாம்.

கடன் கழிப்பரென உலகத்தின்மேல் வைத்துக் கூறினும் நீனக்கு உயிருதவி செய்யின் உன்பொருட் டென்னுயிரைக் கொடுத்து அக்கடனைத்தீர்ப்பேன் என்பதே கருத்தாகக்கொள்க. அதற்குக் 'கைம்மாறே தறிகிலன்யான்' என்றதற்கு உயிர்க்குயிரே யீடாமாதலின் என்னுயிரின் மேற்பட்ட நளனுக்கீடாக நளனிற் கீழ்ப்பட்டவென்னுயிரைக் கொடுத்து அக்கடனைத் தீர்க்கக் கூடாமையால் நீ அவனை எனக்குக்கொடுத்து என்னை உனக்கு இனி யென்றென்றைக்குந் தீர்க்கமாட்டாத கடன்பட்டவ ளாக்கென்பது கருத்து. யாது அறியேனெனவே யில்லை யென்றதாயிற்று. (க0உ)

[இதனால் ஈடில்லாதவுதவி செய்தலாற் பயன் யாதெனின் அதற்குத் தருமுத்தாஞ் சொல்லப்படுகின்றது.]

கைம்மாறு நினக்காற்ற லரிதெனினுங் களிப்பினுளஞ், செம்மாந்துன் செயிரறுசீ ரோவாது செப்புவல்யா, னெம்மாவி யிறந்துபடா திருக்குங்கொல் விரைவினிற்போய்த், தெம்மாறு சுடர்வேலான் றிருவருள்பெற் றிடாயெனினே.

இ - ள். கைம்மாறு - பிரதி யுபகாரத்தை, நினக்கு - உனக்கு, ஆற்றல் - செய்தல், அரிது எனினும் - இல்லையாயினும், களிப்பின் - மகிழ்ச்சியினாலே, உளம் - உள்ளத்தில், செம்மாந்து - இறுமாந்து, உன் - உனது, செயிர் அறு - குற்றமற்ற, சீர் - குணத்தை, ஓவாது - இடைவிடாமல், யான் - நான், செப்புவல் - சொல்லுவேன், (ஆனால் அதை நன்றாகவாலோசித்து விரையாமற் செய்வேனென்பாயாயின்) விரைவினில் - சீக்கிரத்தில், போய் - சென்று, தெவ் -

பகைவரும், மாறு - (நட்பினராய்) வேறுபடுதற்குக் காரணமாகிய, சுடர் - ஒளியையுடைய, வேலான் - வேலையுடையவனது, திரு - அழகிய, அருள் - அருளை, பெற்றிடாய் எனின் - பெறுயாயின், எம் - எம்முடைய, ஆவி - உயிர்களானவை, இறந்துபடாது - நீங்கிப்போகாமல், இருக்கும் கொல் - இருக்குமோ, எ - று.

க - து. அன்னமே நானுனக்குப் பிரதியுபகாரஞ்செய்த லரிதென்றாலும் உன் புகழ்ச்சியை இடைவிடாது சொல்லுவேன்; நீ விரைவிற்போய் நளனருளைப் பெறுவிடில் எங்களுயிர் இருக்குமோ என்றாள் என்பதாம்.

செம்மாந்து என்பதற்குப் பகுதி செம்மா. ஓவாது என்பதற்கு பகுதி ஓ. ஈடில்லாத வுபகாரத்தைச் செய்யுஞ் சீராதலால் 'செயிரறு சீர்' என்றாள். 'உன் செயிரறுசீ ரோவாது செப்புவல்' எனவே என்னாலே யுலகத்திலே பெரும்புகழுண்டாதலே யுனக்குப் பயனென்றதாயிற்று. அன்றியும் "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (திருவள்ளுவர்-செய்ந்நன்றியறிதல்-க0)என்றிருக்கையால் பின்னேதான் செய்யக்கடவதாகிய நன்றி பாராட்டலைக் காட்டித் தான் அவ்வுபகாரத்திற்குப் பாத்திரமா யிருக்கையைக் குறிப்பித்தவாறாயிற்று. தானிறக்கும்போது அதுபொறுது தாயார் பாங்கியரும் இறப்பரென்பது கருதி அவரையுந் தழுவி 'எம்மாவி' எனப் பன்மையாற் கூறினாள். பகைமைப்பொருளை யுணர்த்துந் தெவ்வென்பதின் வகரமெய் வருமொழி மகரத்தை நோக்கி மகரமெய்யாயிற்று. "தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க, தூங்காது செய்யும் வினை"(திருவள்ளுவர் - வினைசெயல்வகை-உ)என்றிருக்கையால் விரைந்துசெய்யத் தகுவதாகிய இக்காரிய முயற்சியில் ஆலசியஞ் செய்யாதே யென்னுங் கருத்தால் 'விரைவினிற் போய் அருள் பெற்றிடாயெனின் எம்மாவி யிறந்துபடாதிருக்குங்கொல்' என்றாள்.

[இதுமுத லைந்துபாட்டுகளால் பின்பு அன்னஞ்செய்யத் தகுமவற்றை யறிவித்தல் சொல்லப்படுகின்றது.]

என்குறைநீ வயவேந்தற் கியம்புதியேல் வடங்கிடந்து
பொன்பிதிர்மின் சுணங்கார்ந்த பொம்மலிள முலையினர்பா
லன்புறுநல் லமயமதி லறையற்க வறைகுதியே
னன்குரைதீங் காமவர்பா னயப்புற்ற தன்மையினால்.

இ - ள். என் - எனது, குறை - குறையை, நீ - நீ, வயம் - வெற்றியையுடைய, வேந்தற்கு - நளராஜனுக்கு, இயம்புதியேல் -

சொல்வாயாயின், வடம் - முத்துவடமானது, கிடந்து - தங்கப்பெற்று, பொன் பிதிர் - பொன்பொடிபோல், மின் - விளங்குகின்ற, சுணங்கு - தேமலால், ஆர்ந்த - நிறைந்த, பொம்மல் - பொலிவும், இள - இளமையும் பொருந்திய, முலையினர்பால் - முலையினரிடத்து, அன்பு உறு - அன்புற்றிருக்கின்ற, நல் அமயமதில் - நல்லசமயத்தில், அறையற்க - (அதனைச்) சொல்லாதே; அறைகுதியேல் - (அப்போது) சொல்வையேயானால், அவர்பால் - அவரிடத்தே, நயப்புற்ற- இன்பமுற்ற, தன்மையினால் - குணத்தினாலே, நன்குரை - (உனது) நல்லசொல்லும், தீங்கு ஆம்- (அவனுக்குக்) குற்றமுள்ளதாகும் எ-று.

க - து. அன்னமே! நீ என் குறைகளை அரசனிடத்திற் சொல்லுவையேயானால் அரசன் பெண்களிடத் தன்புள்ள சமயத்திற் சொல்லாதே, சொன்னால் நல்வார்த்தையும் குற்றமாய்விடும் என்றவாறு என்பதாம்.

வயவேந்தற்கு என்பதனை வயம் ஏந்தற்கு எனப் பிரித்து வெற்றியையுடைய அரசனுக்கு என்றுரைப்பினுமாம். பொம்மலுக்குப்பொருள் பொலிவு; "பொம்மலே பொலிவுஞ்சோறும்" (ஆதிப்பொருள் நிகண்டு) என்பதனாலறிக. எப்படி நீரைக்குடித்து அதனாலே திர்ப்தியடைந்திருக்கிறவருக்கு அப்போது தெளிவுந் தீஞ்சுவையும் பரிமளமுஞ் சீதளமுமுடையதாயிருந்தாலும் வேறு நீர் விரும்பப்படாதோ அப்படியே ஒருத்தியைப் புணர்ந்து அவளாலே திர்ப்தியடைந்திருக்கிறவனுக்கு அப்போது பல குணங்களு முடையவளாயிருந்தாலும் வேறொருத்தி விரும்பப்படாளாதலால், 'நன்குரைதீங் காமவர்பா னயப்புற்ற தன்மையினால்' என்றார். (க0௪)

வேற்றரசர் திறைகொணரும் வேலையினுஞ் சொல்லற்க
மாற்றரசர் பால்வெகுளு மமயத்தும் வகுத்துரையே
றேற்றமுடை மதிவல்லோர் தேர்ச்சியிலுந் தெரிந்துரையேல்
சாற்றினுரைத் தனவெல்லாந் தவறுத லறிதியே.

இ - ள். வேற்றரசர் - பிறவரசருடைய, திறை - இறைப்பொருளை, கொணரும் - வருவிக்கின்ற, வேலையிலும் - காலத்திலும், சொல்லற்க - சொல்லாதொழிக; மாற்றரசர் பால் - பகையரசரிடத்து, வெகுளும் - கோபஞ் செய்கின்ற, அமயத்தும் - காலத்திலும் வகுத்துரையேல் - சொல்லாதே; தேற்றம் - தெளிவை, உடை - உடைய, மதி வல்லோர் - மந்திரிகளோடு, தேர்ச்சியிலும் - ஆலோசனை செய்யுங்காலத்திலும், தெரிந்துரையேல் - சொல்லாதே; சாற்றின் - (நீ) சொலின், உரைத்தன எல்லாம் - (உன்னால்) சொல்

லப்பட்டனவெல்லாம், தவறுதல் - குற்றமுடையனவாதலே, அறிதி- (நீ) அறிவாய். எ - று.

க - து. அன்னமே! அரசர் திறை தரும்போதும், பகையரசரைக் கோபிக்கும்போதும், மந்திரிகள் மதிசொல்லும்போதும், என் வார்த்தைகளைச் சொல்லாதே, யான் சொன்னதெல்லாஞ் சொல்லென்றாள் என்பதாம்.

செல்வப்பொருளிலே சென்றிருக்கிற மனமானது தத்துவப் பொருளிலே சென்றிருக்கிற யோகி மனம்போற் பிறிதொன்றிலே விரைந்து திரும்பாதாதலாலும், பித்தத்தாற் குணம் வேறுபட்ட வாய்க்குச் சர்க்கரை கசப்பதுபோற் கோபத்தாற் கலங்கிய மனத்திற்கு நற்செய்தியும் கசக்குமாதலாலும், மந்திரிகளோடு செய்யும் ஆலோசனை வேளையிலே சொல்வது கனவு வேளையிலே சொல்வதுபோற் செவியிலே நுழையாதாதலாலும், அப்படிப்பட்ட சமயங்களிலே சொல்லலாகாதென்றாள். வகுத்துரை, தெரிந்துரை இவை ஒருசொற் றன்மைப்பட்டுவந்தன. (கoரு)

பொறிசெறித்த மாண்பினராய்ப் பொருந்தலர்ச்செற் றிருநிதியஞ்
செறிதருமா றீட்டியருவினைவாங்கு செயலினரு [றுபிழையுட்
சிறிதியற்றி னொறுத்திடுவர் வயவேந்த
ரறுதிபெற நீமொழியு மமயமறிந் துரைத்தியால்.

இ - ள். பொறி - ஐம்பொறிகளையும், செறித்த - அடக்கிய, மாண்பினராய் - நற்குணமுடையவராகி, பொருந்தலர் - பகைவரை, செற்று - வென்று, இருநிதியம் - அதிகதிரவியத்தை, செறிதருமாறு- நெருங்குமாறு, ஈட்டி - சேர்த்து, அருவினை - பெரியதொழில்களை, வாங்கு - (தம்மிடத்து) வாங்கிய, செயலினரும் - செய்கையையுடையவரும், உறு-(பலவாய்) உறுகின்ற, பிழையுள்-குற்றங்களுள், சிறிது- சிறிய வொருகுற்றத்தை, இயற்றின் - செய்தாலும், வயம் - வெற்றியையுடைய, வேந்தர்-அரசராயினோர், அறுதி - (தம்மின்) ஒழிவை, பெற - அடைய, ஒறுத்திடுவர் - (அப்படிப்பட்டவரையும்) தண்டிப்பார்; (ஆதலால்) நீ - (விவேகியாகிய) நீ, மொழியும் - சொல்லுதற்குரிய, அமயம் - காலத்தை, அறிந்து - தெரிந்து, உரைத்தி - சொல்லு, எ - று.

(க - து.) அன்னமே! பகைமன்னரை வென்று பாக்கியஞ் சம்பாதித்துத் தரும் வல்லவர்களும் அற்ப குற்றஞ் செய்தால் அரசர் தண்டிப்பா ராகையால் குற்றமின்றிக் காலமறிந்து கூறென்றாள் என்பதாம்.

பொறிசெறித்தலாவது அரசனொருவரோடு ரகசியம் பேசும்போது தான் செவிகொடுத்துக் கேளாமையும், கண்ணுற்பாராமையும் முதலியன. "எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை, விட்டக்காற் கேட்க மறை" (திருவள்ளுவர்-மன்னரைச் சேர்ந்தொழுகல்-ரு) என்பதனுலுமறிக. நல்ல குணத்தையும் பகைவெல்லு முபாயத்தையும் பொருள்சேர்க்கு முத்தியையும் எவரிடத்தே காண்கின்றரோ அவரை அரசர் பெரிய தொழில்களில் வைப்பாரென்க. பெரிய தொழில்களாவன:—மந்திரித்துவம் - சேனுதிபத்தியம்—நியாயாதிபத்தியம் முதலியனவாம். அப்படிப் பலவிதத்தாலுந் தமக்கு உதவிசெய்தவரையே சிறிது பிழையா லொறுத்தல் அரசர்க்குச் சுபாவகுணமாதலால் அச்சமயத்திலே சொன்னல் நமது காரியம் எப்படி முடியும் என்பது கருத்து. (க0சு)

உளத்தனவான் முகத்தனவா யுதிக்குமவை குறிப்பினுற்
றெளித்துரைத்தல் சீர்மைத்தே தூதர்செய லிற்றாகும்
விளக்கமுற நீயலதியா ரறிவரிவை மெலியுமெனை
யளித்திடுதி விரைவினிற்போ யாய்தூவி மடவனமே.

இ - ள். ஆய் - மிகமெல்லிய, தூவி - இறகையுடைய, மடம் - இளமை பொருந்திய, அனமே - அன்னமே, உளத்தன - (ஒருவர்) மனத்திலுள்ள குணங்களானவை, முகத்தன ஆய் - முகத்திடத்தனவாகி, உதிக்கும் - தோன்றும்; அவை - அக்குணங்களை, குறிப்பினல்- (அம்முகக்) குறிப்பினுலே, தெளித்து - அறிந்து, உரைத்தல் - சொல்லுதல், சீர்மைத்தே - சிறப்புடைத்தாகும்; தூதர் - தூதரது, செயல்- தொழிலானது, இற்றாகும் - இத்தன்மைத்தாகும்; இவை - (நளன் மனத்திலுள்ள) இவற்றை, விளக்கம் உற - விளங்குதலுற, நீ அலது - நீயல்லாமல், யார் - (வேறே) யாவர், அறிவர் - அறியவல்லவர்; விரைவினில் - சீக்கிரத்தில், போய் - (நளராஜனிடத்துப்) போய், மெலியும் - வருந்துகின்ற, எனை - என்னை, அளித்திடுதி - காப்பாற்று, எ - று. [ஆல் - அசை.]

க - து. அன்னமே! அகத்திலுள்ளவை முகத்திற் காட்டும், முகக்குறிப்பறிந்து சொல்லுதல் தூதர் திறமாகும், நளன்மனத் துள்ளவை நீ யல்லாமல் யாரறிவார்கள், சீக்கிரம்போய் என்னைக் காப்பாற்று என்றாள் என்பதாம்.

உளத்தன - விருப்புவெறுப்பு முதலியன. அவை முகத்தனவாயுதிக்குமென்றது, "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்,

கடுத்தது காட்டு முகம்" (திருவள்ளுவர் - குறிப்பறிதல்-சு) என்பதனு லும், 'அவை குறிப்பினாற் றெளித்துரைத்தல் சீர்மைத்தே' என்றது, "குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள், யாது கொடுத்துங் கொ ளல் (திருவள்ளுவர் - குறிப்பறிதல்-ங) என்பதனாலும் அறிக. தெளி ந்தெனற்பாலது தொடைநோக்கித் தெளித்தென விகாரப்பட்டது. விளக்கமுறல் - ஐயந்திரிபின்றி யறியநிற்றல்; நீயலதியா ரறிவர் எனவே விவேகியாகிய நீயே யறியவல்லா யென்றதாயிற்று. (க0எ)

[இதனாற் பின்பு அன்னஞ் சில சொற்கள் பேசத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

என்ன வாங்கு வெளிப்படையிற் குயிலு நாண வின்ன மிழ்திற், கன்னற் பாகிற் கோற்றேனிற் கனியிற் கனிந்த மொழிநவிலும், பொன்னம் பாவை யன்னாடன் னுள்ளந் தேர்ந்து மகிழ்புரியா, வன்னங் கண்ணா லருந்துதல்போ னோக்கிச் சிலசொல் லறையுமால்.

இ - ள். என்ன - என்று, அன்னம் - அன்னமானது. ஆங்கு - அந்தச்சோலையினிடத்து, வெளிப்படையின்-வெளிப்படையினாலே, குயிலும் - கோகிலமும், நாண - வெட்கமுற, இன் அமிழ்தின் - இனிதாகிய வமிர்தத்தினும், கன்னல் பாகின் - சர்க்கரைக் குழம்பி னும், கோல் தேனின் - கொம்புத்தேனினும், கனியின் - முக்கனியி னும், கனிந்த - சுவைமிகுந்த, மொழி - இந்தச்சொற்களை, நவிலும் - சொல்லிய, பொன் - பொன்மயமாகிய, அம் - அழகிய, பாவை அன் னாள் - பாவை போல்பவளது, உள்ளம் - கருத்தை, தேர்ந்து - அறி ந்து, மகிழ் புரியா - மகிழ்ந்து, கண்ணாலருந்துதல்போல் - கண்களால் விழுங்குதல்போல், நோக்கி - (அவளைப்) பார்த்து, சில சொல் - சில சொற்களை, அறையும் - சொல்லும், எ - று.

க - து. அன்னமானது தமயந்தியைப்பார்த்துச் சிலசொற்களைச் சொல்லும் என்பதாம்.

பொன்னம் பாவை யன்னாடன் னுள்ளம் - நளனிடத்துப் பற் றிய அவளது மனோநிச்சயம். தன்னைத் தூதனுப்பிய வரசன் காரியங் கைகூடுதலால் மகிழ்ந்ததென்க. கண்ணாலருந்துதல்போ னோக்கல் - அதிக விருப்பத்தோடு பார்த்தல். [இது உலகவழக்கச் சொல்லாத லால் உலகவழக்கு நவிற்சியணி.] இதுமுத லிருபத்தாறு பாட்டுகள் பெரும்பாலும் மூன்றாஞ்சீரும், ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றை

நான்குசீர்களும் மாச்சீர்களும் ஆகிவருகிற கழிநெடிலடி நான்கு கொண்ட ஆசிரியவிருத்தங்கள்.) (௧0அ)

[இதனால் நிச்சயமிருந்தாற் காரியம் எளிதின் முடியுமெனல் சொல்லப்படுகின்றது.]

சுணங்கு பூத்துக் குலிகச்செப் பெனலாய்ச் சுருங்கி நுழைநுசுப்பு, வணங்கித் தேம்ப வருமுலையா யுரைத்த மாற்ற மெய்யாமே, லிணங்கு வாயில் யார்வேண்டு நளற்கு நினக்கு மிதயத்து, ளணங்கு நோய்செய் தலர்தூற்று மனங்க னொருவ னிருக்கவே.

இ - ள். சுணங்கு - தேமலானது, பூத்து - படரப்பெற்று, குலிகச் செப்பு எனல் ஆய்-இங்குலிகத்தினலாகிய செப்புகளென்றற்காகி, நுழை - நுண்ணிய, நுசுப்பு - இடையானது, சுருங்கி - இளைத்து, வணங்கி - வளைந்து, தேம்ப - வருந்த, வரு - வளர்கின்ற, முலையாய் - முலைகளை யுடையவளே, உரைத்த - (உன்னாற்) சொல்லப்பட்ட, மாற்றம் - சொல்லானது, மெய்யாமேல் - சத்தியமாயின், நளற்கும் - நளராஜனுக்கும், நினக்கும் - உனக்கும், இதயத்துள் - மனத்தின்கண், அணங்கு - வருத்தஞ் செய்கின்ற, நோய் - (காம) நோயை, செய்து - உண்டாக்கி, அலர் தூற்றும் - பழிமொழியைப் பரப்புகின்ற, அனங்கன் ஒருவன் - மன்மதனொருவன், இருக்க - உளனாக, இணங்கு - (உம்மிருவரையும்) பொருத்துதற்கு, வாயில் - சந்தி செய்வோர், யார் - எவர், வேண்டும் - (உங்களுக்கு) வேண்டும், எ - று.

க - து. தமயந்தியே, நீ சொன்னசொல் மெய்யானல் இருவரையுங் கூட்டிவைக்க இடையில் மன்மதனொருவனிருக்க வேறே யொருவர் வேண்டுமோவென வன்னஞ்சொல்லிற்று என்பதாம்.

அனங்கன் - உருவில்லாதவன். இங்குலிகமெனற்பாலது குலிகமென முதற்குறைந்தது. இங்குலிகச்செப்பை உபமானமாக்கியது செந்நிறமும் ஒளியும்பற்றியென்க. 'அனங்க னொருவ னிருக்க இணங்கு வாயில் யார்வேண்டும்' எனவே உம்மிருவரையுங் கூட்டுதற்கு மன்மதனொருவனே போதுமாகையால் இது காரியத்திலே யான் செய்யக்கிடந்த வுபகாரமொன்றுங் கண்டிலே னென்றதாயிற்று. இணக்கென்னும் பிறவினை தொடைநோக்கி இணங்கென விகாரமாயிற்று. (௧0௯)

[இதுமுத லொன்பது பாட்டுகளால் அன்னம் நளனுடைய காட்சி முதலிய அவத்தைகளை யுணர்த்தத் தொடங்கி இதனுலே செவிப்புலக்காட்சி யுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கடல்சூழ் புவியிற் பாதலத்தி லமர ருலகிற் கவின்றி கழும், கொடிநே ரிடையாள் யாரென்ன நின்னை யாங்கள் கூறுதலும், படியேழ் புரக்கும் வேந்துளத்துப் படைவேள் பகழி புகுவழிபோய், மடமா னோக்கி நீயுறைதன் மறந்தாய் கொல்லோ மறைத்தனையோ.

இ - ள். மடம் - இளமை பொருந்திய, மான் - மான் (கண்) போலும், நோக்கி - கண்களை யுடையவளே, படி ஏழ் - ஏழு தீவு களையும், புரக்கும் - காக்கின்ற, வேந்து - நளராஜனுனவன், கடல் - கடல தனது, சூழ் - சூழப்பெற்ற, புவியில் - பூலோகத்திலே, பாத லத்தில் - நாகலோகத்திலும், அமரர் உலகில் - தேவலோகத்திலும், கவின் - அழகினலே, திகழும் - விளங்காநின்ற, கொடி நேர் இடை யாள்-கொடியைப்போ லிடையையுடைய மங்கை, யார் என்ன-எவ ளென்று வினவ, யாங்கள் - நாங்கள், நின்னை - உன்னை, கூறுத லும் - செல்லுதலும், படை - படையையுடைய, வேள் - மன்மத னது, பகழி - பாணமானது, புகு - சென்ற, வழி - வழியால், போய் - சென்ற, உளத்து - (அவன்) மனத்தின்கண், நீ - நீ, உறைதல் - இருக்கையை, மறந்தாய் கொல் - மறந்தாயோ, மறைத்தனையோ - (எனக்கு) ஒளித்தனையோ, எ - று.

க - து. தமயந்தியே! நள மஹாராஜன் அழகுள்ள பெண் யாரென் றெங்களைக்கேட்க யாங்களுன்னைச் சொல்லுதலும் மன்மத பாணஞ் சென்றவழியே நீ போயிருந்ததை மறந்தாயோ அல்லது மறைத்துச் சொல்லுகிறுயோவென் றன்னஞ் சொல்லியது என் பதாம்.

நாங்கள் உன்னுடைய குணதிசயங்களைச்சொல்ல என்று கேட் டறிந்தானே அன்று முதலாக வுன்மே லாசைகொண்டு மன்மத பாணங்களினலே வருந்தி உன்னை நினைத்திருக்கின்று னென்பது கருத்து. மறத்தற்குப் பேதைமையும், மறைத்தற்கு நாணமும் கார ணங்களாகும். கேட்டறிதலும் பார்த்தறிதலோடொத்தலிற் காட்சி யாதலறிக. (கக0)

[இதனால் சித்திரக்காட்சி சொல்லப்படுகின்றது.]

ஈட்டு மணிகள் பலதெளித்துன் னெழுதற் கரிய திரு வுருவங், கோட்டுங் கிழிதான் முலைகோட்டப் பரப்பின் றென்னுங் கொடிமருங்குல், நீட்ட வனைகோ னுதிநுண்மை யிலதென் றெண்ணித் திகைக்குமுளம், வேட்டு நெடுங்கண் ணிமையாம னோக்கித் தளரும் வேல்வேந்தே.

இ - ள். வேல் - வேற்படையையுடைய, வேந்து - நளராஜனா னவன், உன் - உனது, எழுதற்கு அரிய - (சித்திரக்காரரால்) எழுது தற்கரியதாகிய, திரு - அழகிய, உருவம் - (உனது) வடிவத்தை, ஈட்டும் - (தன்னால்) சம்பாதிக்கப்பட்ட, பல - பலவகையாகிய, மணி கள் - மணிகளை, தெளித்து - பதித்து, கோட்டும் - எழுதுகிறான்; முலை - (உன்) முலைகளை, கோட்ட - எழுதுதற்கு, கிழி - படத்தில், பரப்பு - அகலம், இன்றென்னும் - இல்லையென்கிறான்; கொடி - பூங்கொடிபோலும், மருங்குல் - (உனது) இடையை, தீட்ட - எழுது தற்கு, வனைகோல் - தூரிகைக்கோலினது, நுதி - நுனியின்கண், நுண்மை - கூர்மையானது, இலது என்று - இல்லை யென்று, எண்ணி - நினைத்து, திகைக்கும் - திகைக்கிறான்; உளம் - மனத் தில், வேட்டு - விரும்பி, நெடு கண் - நெடிய கண்களானவை, இமையாமல் - இமையாதிருக்க, நோக்கி - (அவ்வடிவத்தைப்) பார் த்து, தளரும் - வருந்துகிறான், எ - று.

க - து. நளமஹாராஜன் உனது திருவுருவத்தை யெழுதுகி றான், உன் கனதனங்களை யெழுதப் படமகலமில்லை யென்கிறான், உன் இடையை எழுதுதற்குத் தூரிகைக்கோல் கூர்மையில்லை யென் கிறான், உன்னுருவத்தை இமையாது நோக்கி வருந்துகிறான் என் பதாம்.

மணிகள் பலதெளித்தலாவது - ஒன்பதுவகை மணிகளிலே எவ் வெம்மணி யெவ்வெவ்வுறுப்பிற்கு ஒத்திருக்குமோ அவ்வம்மணியை அவ்வவ்வுறுப்பைச் செய்யுமிடத்துப் பதித்தலாம். அவையாவன - கண்ணுக்கு நீலமும், பல்லுக்கு முத்தமும், அதரத்துக்குப் பவளமும் போல்வனவாம். விநோதோபாயமாகத் தமயந்திக்குச் சமானமாக வெழுதப்பட்ட சித்திரமாதலால் அதனைப் பார்த்தலுங் காட்சியா மென்க. (கக௧)

[இதனால் வேட்கையும் உள்ளுதலுஞ் சொல்லப்படுகின்றன.]

பருந்துங் கழுகுங் கொடியினமு மருந்தப் பகைஞ ருடல் நடிந்தி, விருந்து செய்யுஞ் சுடர்வடிவேல் வேந்த னுயிரு

நீயென்னும், பொருந்துங் காமப் பிணிநீக்கிப் புலம்பு தீர்த்
தின் னுயிரளிக்கு, மருந்து நீயே யென்றெண்ணி மகிழ்தூங்
குளத்தோ டிருந்தயரும்.

இ - ள். பருந்தும் - சேனங்களும், கழுகும் - எருவைகளும், கொடி இனமும் - காக்கைக் கூட்டங்களும், அருந்த - தின்னும்படியாக, பகைஞர் - பகைவருடைய, உடல் - உடம்புகளை, தடிந்து - துணித்து, விருந்து செய்யும் (அவற்றிற்கு) விருந்து செய்கின்ற, சுடர் - ஒளியும், வடி - கூர்மையும் பொருந்திய, வேல் - வேலையுடைய, வேந்தன் - நளராஜனானவன், உயிரும் - (தன்) உயிரும், நீ என்னும் - நீயாக வேண்டுகிறான்; பொருந்தும் - (தன்னைப்) பற்றிய, காமப்பிணி - காமநோயை, நீக்கி - ஒழித்து, புலம்பு - (அதனா லாகின்ற) துன்பத்தை, தீர்த்து - தீர்வித்து, இன் - இனிதாகிய, உயிர் - (தன்) உயிரை, அளிக்கும் - காப்பாற்றும், மருந்தும் - ஔஷதமும், நீயே என்று - நீயேயாக, எண்ணி - இடைவிடாது நினைத்து, மகிழ் - மகிழ்ச்சியில், தூங்கு - பரவசப்பட்டிருக்கின்ற, உளத்தோடு - மனத்துடனே, இருந்து - தங்கி, அயரும் - வருந்துகிறான், எ - று.

க - து. தமயந்தியே! நளமஹாராஜன் உன்னைத் தன்னுயிராக நினைக்கிறான், அன்றியும் தன் காமநோயைத் தீர்த்து உயிரைக் காப்பாற்று மருந்தும் நீயே என்றெண்ணுகிறான் என்று அன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

அரசனுக்குச் சொல்லப்பட்ட வெகுளிச் சுவையைப்பற்றிய விசேடணம் உவகைச்சுவை சொல்லப்படு மிவ்விடத்திற்குப் பொருந்துமோவெனின் அரசனது நிகரற்ற பராக்கிரம தைரியத்தைக் காட்டி இப்படிப்பட்ட தைரியமும் உன்பொருட்டு இப்போது அழிந்ததென்று அறிவித்தற்கு அவ்விசேடணஞ் செய்தலாற் பொருந்துமென்க. இதுபோல் வருவன பிறவும் இப்படியே யமைத்துக் கொள்க. அவளைத் தன்னுயிர்போற் சிறந்தபொருளாகப் பெறல் வேண்டுதலால் வேட்கையும், அவளாலன்றித் தன் காமநோய் தீராதென்று அதற்கு மருந்தாக இடைவிடாது நினைத்திருத்தலால் உள்ளுதலும் ஆயின. (௧௧௨)

[இதனால் உள்ளுதலாகிய வேற்றுப் புலவேறுப்புச்
சொல்லப்படுகின்றது.]

தேற்றா ரொளிரு மணிமௌலி யிடறித் தேய்ந்து
விளங்குநகக், கூற்றா மென்னு *மால்யானைப் பிடரிற் றோ

ன்றுமெழில்குறியா, வாற்றா ராகி யாடவரும் பெண்மை
விரும்பு மடல்வேந்தன், வேற்றோர் பொருளி லைம்புலனும்
விழையா வாக மெலியுமால்.

இ - ள். தேற்றார் - பகைவரது, ஒளிரும் - விளங்காநின்ற, மணி-நவமணிகளாலாகிய, மௌலி-மகுடத்தில், இடறி-தாக்குண்டு, தேய்ந்து - தேய்தலால், விளங்கு - விளங்காநின்ற, நகம் - நகங்களை யுடைய, கூற்றும் என்னும் - (கொலையிலே) யமனெனப்படுகின்ற, மால் - பெரிய, யானை - யானையினது, பிடரில் - எருத்தத்தில், தோன்றும் - காணப்படுகின்ற, எழில் - (தனது) அழகை, குறியா - நினைத்து, ஆடவரும் - புருஷரும், ஆற்றாராகி - பொறுக்கமாட்டாத வராகி, பெண்மை - பெண்வடிவத்தை, விரும்பும் - விரும்பப்பெறு கின்ற, அடல் வேந்தன் - வெற்றிவேந்தனானவன், வேறு ஓர் பொரு ளில் - (உன்னிடத்தன்றி) வேறொரு பொருளிடத்து, ஐம்புலனும் - அஞ்சவிஷயங்களும், விழையாவாக - விரும்பப்படாதனவாக, மெலி யும் - தளர்கின்றான், எ - று.

க - து. நளமஹாராஜனானவன் உன்னையல்லாமல் வேறொரு பொருளிடத்தி லிச்சை வைத்திலன் என்று அன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

ஆடவருமென்னு மும்மை யுயர்வுசிறப்பு. [தமதாண்வடிவத்திற் றாழ்ந்த பெண்வடிவமாகிய குற்றத்தால் நளனைப் புணர்தலாகிய குணம் உண்டாதல் கண்டு அதனைப் பெறல்வேண்டுதலால் வேண்ட லணி.] 'வேற்றோர் பொருளி லைம்புலனும் விழையாவாக மெலியும்' எனவே உணவு முதலியவற்றையும் வெறுத்து உன்னையே விரும்பு கின்றன னென்றதாயிற்று. ஐம்புலன்: சுவை - ஒளி - ஊறு - ஓசை - நாற்றம் என்பன. ஐம்புலன்களும் ஒருத்தியிடத்தே யுளவென்பது "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" (திருவள்ளுவர் - புணர்ச்சிமகிழ்தல்-க) என்பதனாலறிக. விழையாவென்னுஞ் செய்வினை செயப்பாட்டு வினைப்பொருளிலே வந்தது. (கக௫)

[இதனால் மெலிதல் சொல்லப்படுகின்றது.]

கார்க்கும் வெண்மை யளித்திருண்ட கரிய கூந்தற்
கனங்குழையா, யார்க்குஞ் சுரும்பு மிசைத்தேனும் வண்டுஞ்
சூழுு மைங்கணைவேள், போர்க்கு மெலிந்தோ வெண்டிங்
கள் பொழியு நிலவிற் றேம்பியோ, பார்க்குந் தோறும் புதி
தாக வுடல மெலியும் பார்வேந்தே.

இ - ள். கார்க்கும் - மேகத்திற்கும், வெண்மை - வெள்ளை நிறத்தை, அளித்து - கொடுத்து, இருண்ட - கறுத்த, கரிய - பெரிய, கூந்தல் - கூந்தலையும், கனம் - கனம்பொருந்திய, குழையாய் - குண்டலத்தையு முடையவளே, பார் - பூமியையுடைய, வேந்து - நளராசன், ஆர்க்கும் - ஒலிசெய்கின்ற, சுரும்பும் - பொறிவண்டுகளும், இசை - இசைபாடுகின்ற, தேனும் - தேன்வண்டுகளும், வண்டும் - கருவண்டுகளும், சுழலும் - சுழலப்பெறுகின்ற, ஐங்கணை - பஞ்சபாணத்தையுடைய, வேள் - மன்மதனது, போர்க்கு - சண்டையினால், மெலிந்தோ - இளைத்தோ, வெள் திங்கள் - வெள்ளிய சந்திரனது, பொழியும் - சொரியப்பட்ட, நிலவின் - நிலாவினாலே, தேம்பியோ - வருந்தியோ, பார்க்குந்தோறும் - காணுந்தோறும், புதிதாக - நூதனமானதாக, உடலம் - உடம்பு, மெலியும் - இளைக்கப்பெறுகின்றான், எ - று.

(க-து.) தமயந்தியே! நளமஹாராஜனானவன் மன்மதன் போரினாலேயோ சந்திர கிரணங்களாலேயோ உடலிளைக்கப் பெறுகின்றான் என்று அன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

'கார்க்கும் வெண்மை யளித்திருண்ட' என்றதற்கு மேகத்தைப் பார்க்கிலு மிகக் கறுத்தவென்பது பொருள். 'பார்க்குந்தோறும் புதிதாக வுடலமெலிதலாவது - முன்பார்க்கப்பட்டவளவிற் பின்பார்க்கப்படுகிறவளவு குறைந்துபோதலாலே வேறுபட்டுத் தோன்றல். (ககச)

[இதனால் நாணுவரை யிறந்தல் சொல்லப்படுகின்றது.]

அலர்வார் பகழி துரந்துதுரந் தாக மெலிவித் திடுதலன்றிச், சிலைவேள் வேந்த னியல்பனைத்துங் கவர்ந்தான்
போலுந் தீங்கிழைத்துன், முலைமேற் கூடப் பெறுமெனிலோ
வதுவு மியற்று முதுக்குறைவற், றலையாக் காமங் கொடுன்
றொழும்பு முழப்ப நாணு மிழக்குமால்.

(இ - ள்.) சிலை - கருப்புவில்லையுடைய, வேள் - மன்மதனானவன், வார் - நெடிய, அலர் - மலர்களாகிய, பகழி - பாணங்களை, துரந்து துரந்து - செலுத்திச்செலுத்தி, ஆகம் - உடம்பை, மெலிவித்திடுதல் அன்றி-இளைப்பித்தலல்லாமலும், வேந்தன்-அரசனுடைய, இயல்பு அனைத்தும் - (பாவத்தை யஞ்சுதல் இழிதொழிலொழிதல் முதலாகிய) சுபாவகுண முழுதையும், கவர்ந்தான்போலும்-வெளவிக்கொண்டானோ, (ஏனென்றால்) தீங்கு - பாவத்தை, இழைத்து - செய்தலினாலே, உன் முலைமேல்-உன் கொங்கைகளின்மேலே, கூடப்பெறும்

ளனிலோ - கூடப்பெறலா மென்றாலோ, அதுவும் - அப்பாவத்தையும், இயற்றும்-(அஞ்சாது) செய்வான்; முதுக்குறைவு அற்று - பேரறிவற்று, உலையா - கெடாத, காமம் - காமத்தை, கொடு - கொண்டு, உன் - உன்னிடத்தே (செய்யப்படுவதாகிய), தொழும்பும் - அடிமைத் தொழிலிலும், உழப்ப - முயலுதற்கு, நாணும் - நாணத்தையும், இழக்கும் - விட்டுவிடுவான், எ - று.

க - து. தமயந்தியே! நளன் பாவஞ் செய்தாவ துன்னைக் கூடப்பெறுவானாகில் அதுவுஞ் செய்வான்; பேரறிவிழந்து காமத்திலுழந்து நாணத்தையும் விடுகிறான் என்பதாம்.

முதுக்குறைவு - பேரறிவு. பாவம் - கொலை முதலியன. பெண்ணேவல் இழிதொழிலாதல், "பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப் பெண்ணே பெருமை யுடைத்து" (திருவள்ளுவர்-பெண்வழிச்சேறல்-எ)என்பதனாலறிக. ஆயினும் அது காமமிக்கவாட்களுக்குரித்தாதல், "மடுக்கோ கடலின் விடுதிமி லன்றி மறிதிரை மீன், படுக்கோ பணிலம் பலகுளிக் கோபரன் றில்லைமுன்றிற்,கொடுக்கோ வளைமற்று நும்மையர்க் காயகுற் றேவல்செய்கோ, தொடுக்கோ பணியீ ரணியீர் மலர்நுஞ் சுரிகுழற்கே"(திருச்சிற்றம்பலக் கோவையார்' என்பதனாலறிக. [மன்மதனை வேந்த னியல்பனைத்துங்கவர்ந்தவனாகக் குறித்தலால் தற்குறிப்பணி.] 'உலையாக் காமக் கொடுந்துயர முழந்து' என்றும் பாடமுண்டு. ஆக்கஞ் செப்பற்குத் தடையாகிய நாணத்தி னிழப்பை யிங்ஙனங் கூறவே அதுவுந் தோன்றுதலறிக. (கக௬)

[இதனால் மறத்தல் சொல்லப்படுகின்றது.]

நின்சீ ருருவு வெளிப்படுத லேக்கி நோக்கி நிலைதளரு, மென்பூ டுருக விளமூலைமேற் புல்லு முனிந்தா யெனவருந்து, மன்போ டூட றீர்த்தனன்போ னகைக்கு மகன்றாயெனவெளியிற், பின்போ தருநல் லுணர்விழந்த பித்தர்போலப் பேதுறுமால்.

இ - ள். நின் - உனது, சீர் - சிறப்புப் பொருந்திய, உருவு - வடிவமானது, வெளிப்படுதல் - தோன்றுதலை, நோக்கி நோக்கி - பார்த்துப் பார்த்து, நிலை - (தன்னறிவு) நிலை, தளரும் - தளரப்பெறுகின்றான்; என்பு - எலும்பும், ஊடுருக - உள்ளுருக, இள - இளமை பொருந்திய, மூலைமேல் - (அவ்வடிவத்தின்) மூலைகளின்மேல், புல்லும் - தழுவுகின்றான்; முனிந்தாய் என - ஊடினையென்று, வருந்தும் - வருந்துகின்றான்; அன்போடு - ஆசையினால், ஊடல் - ஊடல்

ஆடலே, தீர்த்தனன்போல் - நீக்கினவன்போல், நகைக்கும் - சிரிக்கின்முன்; அகன்முய் என - நீங்கிஞெயென்று, வெளியில் - வெறு வெளியில், பின் - (அவ்வடிவத்தின்)பின்னே, போதரும் - போகின் முன்; நல் உணர்வு - நல்லறிவை, இழந்த - துறந்த, பித்தர்போல - பித்தநோயினர்போல், பேதுறும் - மறவியுற்றிருக்கின்முன், எ - று.

க - து. தமயந்தியே! நளன் உன்னுருவெளித் தோற்றத்தைக் கண்டு நிலே தளருகிமுன், உன்னுருவெளியைத் தழுவுகிமுன், பிணங்கினேயென்று வருந்துகிமுன், பிணக்கு நீக்கினவன்போல நகைக்கிமுன், உருவெளியின்பின் போகிமுன், நல்லறி விழந்திருக்கிமுன் என்றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

உருவு வெளிப்படுதல் - விருப்பத்தா லிடைவிடாது சிந்திக்கப் பட்ட வுருவுபோல்வது புத்தி விகாரத்திஞலே வெளியிலே தோன் றுதல். [பகையில்லாமையால் ஒருகாலத்திலே கூடத்தக்க இத்தளர் தல், புல்லுதல், வருந்தல், நகைத்தல், பின்போதரல், என்கிற பலவற் றிற்குக் கூட்டத்தைச் சொல்லுதலிஞலே கூட்டவணி.] வெறுவெளி யிலே அவ்வுருவு தோன்றுதலேச் சொல்லவே நோக்குவவெல்லா மவையேபோறலுஞ் சொல்லப்பட்டதாயிற்று. (ககசு)

[இதஞல் மயக்கஞ் சொல்லப்படுகின்றது.]

புலவு நாறும் வேல்வேந்தர் சேனேப் புணரி கடந்தெ திரற், றுலவு நிடதக் கடாயானே யுனது விரகப் பேராற்றி, னலேயி னிலேகாண் பரிதாகி யந்தோ வாழ்ந்து மயங்கியதாற், சிலேகொ ளுதலாய் பின்னர்வரு மவத்தை சேரா தருள் புரியாய்.

இ - ள். சிலே - வில் வடிவத்தை, கொள் - கொண்ட, நுதலாய் - நெற்றியை யுடையவளே, புலவு - (பகைவர்) ஊஞல், நாறும்- நாறுகின்ற, வேல் - வேலேயுடைய, வேந்தர் - அரசரது, சேனே - சேனேயாகிய, புணரி - கடலே, கடந்து - தாண்டி, எதிர் அற்று-எதிரி யில்லாமல்; உலவும்-திரிகின்ற, நிடதன் கடா யானே-நளஞகிய களி முனது, உனது - உன் சம்பந்தமாகிய, விரகம் - விரகமென்கின்ற, பேர் - பெயரையுடைய, ஆற்றின் - ஆற்றினது, அலேயின் - அலே யில், நிலே - நிலேயை, காண்பு அரிதாகி - காணமாட்டாததாகி, ஆழ்ந்து - முழுகி, மயங்கியது - மூர்ச்சித்தது; அந்தோ - ஐயோ, பின்னர் வரும் - (அம்மயக்கத்தின் பின்) வருவதாகிய, அவத்தை-(சாக்காடாகிய) அவஸ்தையை, சேராது - அடையாமல், அருள் புரியாய் அருள்செய்வாயாக, எ - று.

க - து. தமயந்தியே! நளனென்னும் யானையானது உனது காமக் கடலாற்றில் முழுகி மயங்கியது; அதற்கு மரணமாகிய பத்தா மவத்தை சாரா தருள்புரிவாயாக என்றன்னஞ் சொல்லிற்று என்ப தாம்.

நிடதன் கடாயானை நிடதக்கடாயானை யென விகாரட்புணர்ச்சியாயிற்று. பல்லாயிரவீரர் கூட்டத்தாற் றோன்றியதென்னும் பெருமைபற்றிச் சேனையை ஆறென்றது கடலென்றும், ஒருத்தியாற் றோன்றியதென்னுஞ் சிறுமைபற்றி விரகத்தைக் கடலென்றது ஆறென்றும் உருவகஞ் செய்ததென்க. [ஆற்றளவாகிய காரணத்திற்குப் பெருமையாகிய தருமங் குறைவாயிருப்பக் கடலைக் கடந்த யானை முழுகுதலாகிய காரியம் பிறத்தலைச் சொல்லுதலாலே உ-வது பிறிதாராய்ச்சியணி,இதற்கு உருவகம் அங்கம்.] கொடுமைபற்றிக்கூற நாவெழாமையாற் சாக்காட்டைப் 'பின்னர்வரு மவத்தை' என்று கூறிற்று. (கக எ)

குடங்கை யணையிற் பகைவேந்தர் துயிலுங் கொற்ற முற்றத்து, மடங்க லனைய போர்மீளி யின்னவாறு மதிமயங்கித், தடங்கொண் முலையா யெனைத்தூது நின்பால் விடுத்தான் றளர்ந்திடேன், முடிந்த ததுவு மிருவீரு முன்னர்ச் செய்த தவப்பேற்றால்.

இ - ள். தடம் - மலை வடிவத்தை, கொள் - கொண்ட, முலையாய் - முலைகளை யுடையவளே! பகை - (தன்னோடு) பகைத்த, வேந்தர் - அரசரானவர், குடங்கை - உள்ளங்கையாகிய, அணையில் - தலையணையில், துயிலும் - நித்திரை செய்யப்பெற்ற, கொற்றம் - வெற்றிபொருந்திய, முற்றத்து - முற்றத்தையும், மடங்கல் அனைய - ஆண்சிங்கம்போலும், போர் - போர்த்தொழிலையு முடைய, மீளி - அக்காளையானவன், இன்னவாறு - இப்படிப்பட்ட விதமாக, மதி மயங்கி - அறிவுகலங்கி, நின்பால் - உன்னிடத்து, தூது - தூதாக, எனை - என்னை, விடுத்தான் - அனுப்பினன், தளர்ந்திடேல் - (நீ) வருந்தாதே; இருவீரும் - நீங்களிருவரும், முன்னர் - முற்பிறப்பிலே, செய்த - செய்துவைக்கப்பட்ட, தவப்பேற்றால் - தவங்களைப் பெற்றிருக்கையினாலே, அதுவும் - அக்காரியமும், முடிந்தது - முடிவு பெற்றது, எ - று.

க-து. தமயந்தியே! நளமஹாராஜனவன் இவ்வாறு மதிமயங்கி உன்னிடத் தென்னை யனுப்பினன். நீ வருந்தாதே; முற்பிறப்பி

விருவருஞ் செய்யப்பெற்ற தவத்தா லதுவு முடிந்தது என்றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

ஒருவர்க்கொருவர் பெறுதற்கரிய பொருளாக நிற்றலால் 'இருவிரு முன்னர்ச் செய்த தவப்பேற்றால்' என்றது. 'அது' என்றது அதற்குப் பயனாகிய விவாகத்தைச் சுட்டி நின்றது. விரைவுபற்றி முடியுமென்பது 'முடிந்தது' என விறந்தகாலத்தாற் கூறப்பட்டது.

[தன் முயற்சி பயன்பட்டமைபற்றி அவளைப்
புகழ்தல் சொல்லப்படுகின்றது.]

முருகன் வேலு முக்கண்ணன் முடித்த புனிற்றுப்
பிறைக்கொழுந்துந், திருவின் கொழுநன் பாயலுங்கண்
டிலக நுதல்பே ரகலல்கு, லுருவ மாகத் தனிக்கவர்ந்த
வுனக்குக் கலுழி மதமொழுகுங், கரடக் களிற்று நளனுள்
ளங் கவரு மாறு வியப்பாமோ.

இ - ள். முருகன் - சுப்பிரமணியனது, வேலும் - வேலாயுதம், முக்கண்ணன் - பரமசிவனது, முடித்த - முடியிற் சூடப்பட்ட, புனிற்று - புதிய, பிறைக்கொழுந்தும் - பிறைப்பிள்ளையையும், திருவின் கொழுநன் - திருமாலினது, பாயலும் - (பாம்பாகிய) சயனத்தையும், கண் - கண்ணினதும், திலகம் - பொட்டையுடைய, நுதல் - நெற்றியினதும், பேர் - பெரிய, அகல் - பரந்த, அல்குல் - அல்குலினதும், உருவமாக - வடிவங்களாக, தனி - தனித்து, கவர்ந்த - வௌவிய, உனக்கு - நினக்கு, கலுழி - கான்யாறுபோல், மதம் - மதநீரானது, ஒழுகும் - இழியப்பெற்ற, கரடம் - கதுப்பையுடைய - களிற்று - களிறுபோலும், நளன் - நளமகாராசனது, உள்ளம் - உள்ளத்தை, கவருமாறு - வௌவுமாறு, வியப்பாமோ - ஆச்சரியமாமோ, எ - று.

க - ரு. தமயந்தியே! நளமஹாராஜனது மனதை வௌவுத லுனக் காச்சரியமாமோ என் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

முருகன் முதலிய மூவர்களுந் தலைமைக் கடவுளராதலே யன்றி 'முருகன்' எனவே கட்டிளமையோனென்பது தோன்றலால் அவன் பெரும் போர்க்குரிய கைப்படையையும், 'முக்கண்ணன்' எனவே பகையை யெரிக்கு நெற்றிக்கண்ணனென்பது தோன்றலால் அவன் முடிக்கணிகலமாகச் சூடப்பட்ட பிறையையும், 'திருவின் கொழுநன்' எனவே பெருஞ்செல்வச் சிறப்பினனென்பது தோன்றலால் அவனறி துயிற்குரியபாயலையும் கவர்தலரிதாதல் காட்டப்பட்டமை யறிக.

அவர் பன்மையும் இவனொருமையுந் தோன்றத் 'தனிக் கவர்ந்த' என்றது. [கடவுளராகிய அம்மூவர்களுடைய அப்பொருள்களைக் கவர்ந்தலாகிய வொருபொருளைச் சொல்லத் தண்டாபூபிக நியாயத்தினாலே ஒரு மனிதனாகிய நளனதுள்ளத்தைக் கவர்தல் சொல்லவேண்டிய தில்லையென்று மற்றொருபொருள் தோன்றுதலால் செய்யுட்பொருட் பேறணி.] இங்ஙனங் கூறவே அவ்வேற்படை முதலியவைபோற் சிறந்து விளங்குங் கண் முதலியவற்றை யுடையையாதலின் அரசன் உன்னழகுக்கு எளிதிலே மயங்குவா னென்றதாயிற்று. (கககூ)

[இதுமுத லிரண்டு பாட்டுகளால் காரியமுடிவை அதன்பின் விளைவைக்காட்டி வலியுறுத்தல் சொல்லப்படுகின்றது.]

பொன்னே யமுதே மொழிக்கரும்பே பூந்தா மரையிற் றிருவேநின், மின்னே ரிடைதேய்ந் தறவருந்த விம்மு முலையி லல்லாமல், லென்னே தொய்யிற் றொழிலனைத்து மெழுத லாமே யென்றெண்ணி, மன்னே யுரைக்கு மெங்களுடன் மதுவார் பொழிலி னிடையிருந்தே.

இ - ள். பொன்னே - தங்கமே, அமுதே - அமிர்தமே, மொழி - சொல்லாகிய (சாரத்தை) உடைய, கரும்பே - கன்னலே, பூ - அழகிய, தாமரை - தாமரை மலரிடத்து, இல் - இல்லாத, திருவே - சீதேவியே, நின் - உனது, மின் நேர் - மின்போலும், இடை - இடையானது, தேய்ந்து - இளைத்து, அற - மிகவும், வருந்த - நோவ, விம்மும் பருக்கின்ற, முலையில் அல்லாமல்-முலைக ளிடத்தல்லாமல், தொய்யில்-சந்தனக்கோலத்தினது, தொழில்அனைத்தும் - வேலைமுழுவதும், என்னே-என்னுகும், எழுதலாமே என்று - (மற்றொன்றில்) எழுதலாமோவென்று, எண்ணி - ஆலோசித்து, மன்னே - நளராசனே, மது - வண்டுகளானவை, ஆர் - ஒலிசெய்யப் பெற்றிருக்கின்ற, பொழிலினிடை - சோலையின்கண், இருந்து - தங்கி, எங்களுடன் - எங்களோடு, உரைக்கும் - (இனிச்) சொல்லுவான், எ - று.

க - து. சமயந்தியே! உன்னை நளன் மணந்து உன் முலைகளிற் றொய்யி லெழுதிப் பார்த்து வியந்து சொல்வான் என்பதாம்.

இனி விரைவிலே யுன்னை மணந்து உன் முலையிலே தொய்யி லெழுதிப் பார்த்து அவ்விரண்டற்குந் தகுந்திருக்கின்ற படியை யாலோசித்து அதனை வியந்து சொல்வானென்றது. (கஉ0)

இன்பக் கலவிக் கரணங்க ளியாவு மியற்றி யிருவீரு, மன்புற் றவச முறுமேனி யயர்தீர் வதற்கெம் பொலன்

சிறையால், முன்புற் றுயர்வா னதிப்புனலின் மூழ்கித் தண்ணொன் குறுந்திவலை, நன்கிற் றெறிப்ப வீசுதற்குக் காலமணித்தாய் நண்ணியதே.

இ - ள். இருவீரும் - நளராசனுநீயும், இன்பம் - சுகத்தைத் தருகின்ற, கலவி - புணர்ச்சியினுடைய, கரணங்கள் யாவும் - கரணங்கள் யாவற்றையும், இயற்றி - செய்து, அன்புற்று - (ஒருவர்மேலொருவர்) அன்பு மிக்கு, அவசமுறும் - பரவசப்படுமா றுண்டாகும், மேனி - (உங்கள்) உடம்பினுடைய, அயர் - தளர்ச்சியானது, தீர்வதற்கு-நீங்குதற்பொருட்டு, உயர் - உயர்வாகிய, வான் நதி-ஆகாசகங்கையினது, புனலில் - நீரின்கண், மூழ்கி - முழுகிவந்து, முன்புற்று - முன்னிருந்து, எம் - எமது, பொலம் - பொன்னுருவமாகிய, சிறையால் - சிறைகளினாலே, தண் என் - குளிர்ச்சிபொருந்திய, குறுந்திவலை - சிறிய துளிகள், நன்கின் - நன்றாக, தெறிப்ப - பட, வீசுதற்கு - வீசுதல் செய்தற்கு, காலம் - காலமானது, அணித்தாய் - சமீபித்து, நண்ணியது - வந்தது, எ - று.

(க - து.) தமயந்தியே! நீங்க ளிருவரும் புணர்ந் திளைப்புறுந் திருமேனியிலே ஆகாயகங்கை நீர்த்துளிபொருந்திய என்னிறகுகளினால் வீசுதற்குக் காலஞ் சமீபமாயிற்று என்றது.

கலவிக் கரணங்களாவன:-ஆலிங்கனம்-ஙு, சும்பனம்-கக, அமிர்தநிலை-கசு, நகக்குறி-அ, பற்குறி-அ, குரல்-அ, தாடனம் அ, ஆகசுசு. இவை, "ஆலிங்கன மைந்தும் மிதழ்ப் பானம் பதினொன்றும் மமிர்தம் பதினாறும் முகிரெழுதுங் குறியெட்டுங், கோலம்புனை தந்தக் குறி யெட்டுங் குரலெட்டுங் குவிதாடன மிருநான் கொடுகூடுங் கலவிக்கே" என்பதனாலறிக. இவற்றினியல்பு கொக்கோக முதலிய நூல்களிற் காண்க. (கஉக)

[இதனுல் ஆற்றுதல் சொல்லப்படுகின்றது.]

கொல்லும் வேலுங் கூர்வாளுங் கூற்றுங் கொடிய கடல் விடமும், வெல்லு நெடிய கருங்கண்ணாய் வேல்வேந் திடத்தி யான்விரைவிற், செல்லு மளவு நீவருந்தேல் செல்விற் றிகழ்பூண் வனமுலைகள், புல்லும் வேட்கைத் தேறுநர்ந்து வேந்துன் னகரம் புகுவானால்.

இ - ள். கொல்லும் - கொலைசெய்கின்ற, வேலும் - வேலையும், கூர் - கூரிய, வாளும் - வாளையும், கூற்றும் - யமனையும், கடல் - கடலிற்பிறந்த, கொடிய - தீய, விடமும் - ஆலாகலத்தையும், வெல்லும் -

வெல்லுகின்ற, நெடிய - நீட்சி பொருந்திய, கரு - கரிய, கண்ணாய் - கண்களையுடையவளே, யான் - நான், வேல் - வேலையுடைய, வேந்திடத்து-அரசனிடத்தே, விரைவில்-சீக்கிரத்தில், செல்லும் அளவும்- போமளவும், நீ - நீ, வருந்தேல் - வருந்தாதே; செல்லின் - போனால், திகழ் - விளங்காநின்ற, பூண் - ஆபரணத்தையும், வனம் - சந்தனக் கோலத்தையுமுடைய, முலைகள் - முலைகளை, புல்லும் - தழுவுதலைக் குறித்துண்டாகிய, வேட்கை - ஆசையினாலே, வேந்து - அரசனானவன், தேர் - தேரை, ஊர்ந்து - செலுத்தி, உன் - உனது, நகரம் - பட்டணத்தில், புகுவான் - வருவான், எ - று.

க - து. தமயந்தியே! நீ வருத்தப்படாதே, நான் போனால் நளன் உனது நகரத்திற்கு வருவானென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

வேந்துன் னகரம் புகுமளவும் வருந்தா தென்னாது 'வேல்வேந்திடத்தி யான்விரைவிற் செல்லு மளவும் வருந்தேல்' என்றமையால் கேட்டவளவிலே வருவா னென்றதாயிற்று. (கஉஉ)

[இதனால் அன்னம் விடை பெறுமாறு
சொல்லப்படுகின்றது.]

மடைவாய்த் தவழுஞ் சூற்சங்கம் வனசப் பொருட்டின் மணியுயிர்ப்பப், பெடைநா ரைகடங் கருவென்னு வடைசேர் நிடதப் பெருமான்பால், விடைதா வென்ன மடவன்னஞ் சிறகர் நீவி விருப்பினொடும், படைவா ணெடுங்கட் பசுந்தோகை முகம னுரைகள் பணித்தனளால்.

(இ) - ள். மடை வாய் - மடையின் கண், தவழும் - ஊர்கின்ற, சூல் - கருப்பத்தையுடைய, சங்கம் - சங்குகளானவை, வனசம் - தாமரைமலர்களுடைய, பொருட்டில் - கர்ணிகையில், மணி-முத்துகளை, உயிர்ப்ப - ஈன்றிட, பெடை நாரைகள் - பெண்நாரைகளானவை, தம் - தம்முடைய, கரு என்று - முட்டைகளென்று, அடைசேர் - அபயங்காக்கின்ற, நிடதம் - நிடததேசத்தையுடைய, பெருமான் பால்-அரசன்கண் (செல்ல),விடை - உத்தரவை, மடம் - இளமை பொருந்திய, அன்னம் - அன்னமானது, தா என்ன - கொடுவென்று சொல்ல, சிறகர் - (அதன்) இறகை, நீவி - தடவி, விருப்பினொடும் - ஆசையோடும், படை வாள் - வாட்படைபோலும், நெடு கண் - நெடிய கண்களையுடைய, பசுந்தோகை - பச்சைமயில்போல்பவள், முகமன் உரைகள்-உபசாரவார்த்தைகளை, பணித்தனள்-சொல்லினாள், எ - று.

க - து. அன்னமானது நளனிடத்துச் செல்ல உத்தரவு தா வென்று கேட்கத் தமயந்தி உத்தரவு கொடுத்தாள் என்பதாம்.

உபசாரவார்த்தைகளாவன - அன்னத்தினுடைய நற்குண நற் செய்கைகளைப் புகழுஞ்சொற்களும் அதற்குத் தன் வணக்கத்தைக் காட்டுஞ் சொற்களுமாம். பசுந்தோகை - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். தோகை-கலாபம்.()

[இதனால் அன்னஞ் சென்றவாறு சொல்லப்படுகின்றது.]

இவ்வா றிருந்து நன்மொழிக ளியம்பு வேலை யமு தூறுஞ், செவ்வாய் மடந்தை சிறடியின் சுவடு நோக்கிச் சிலதியரு, மைவ்வா ணெடுங்கட் டோழியரும் வரக்கண் டயிர்ப்ப ரிவரென்று, வெவ்வாய் வடிவேல் வேந்தன்பா லன்னம் விரைவி லேகியதே.

(இ-ள். இவ்வாறு இருந்து-இவ்விதமாயிருந்து, நல் மொழிகள் - நல் வார்த்தைகளை, இயம்பு வேலை - சொல்லிமுடித்த சமயத்தில், அமுது - அமிர்தமானது, ஊறும் - சுரக்கின்ற, செவ்வாய் - செய்ய வாயையுடைய, மடந்தை - தமயந்தியினது, சிறடியின் - சிறியவடி களது, சுவடு - சுவட்டை, நோக்கி - பார்த்துக்கொண்டு, சிலதிய ரும் - தாதிகளும், மை - அஞ்சனம் பொருந்திய, வாள் - வாள்போ லும், நெடு - நெடிய, கண் - கண்களையுடைய, தோழியரும் - பாங்கி களும், வர - (தேடிக்கொண்டு) வர, கண்டு - (அவர்களைப்)பாத்ர்து, இவர் - இம்மங்கையர், அயிர்ப்பர் என்று - சந்தேகிப்பாரென்று நினை த்து, வெம் வாய் - வெவ்விய வாயின்கண், வடி - கூர்மையை யுடைய, வேல் - வேலையுடைய, வேந்தன்பால் - அரசனிடத்து, அன்னம் - அன்னமானது, விரைவில் - விரைவிலே, ஏகியது - போ யிற்று, எ - று.

க-து. தமயந்தி இவ்வாறு சொல்லுகையில் பாங்கியருந் தோழி யரும் வருதலைக்கண்டு அன்ன மிவர்கள் சந்தேகிப்பார்களென்று நளனிடத்துச் சென்றது என்பதாம்.

'இவ்வாறிருந்து' என்றது அன்னத்தின் சிறகு நீவிக்கொண்டிரு ந்தபடியைச் சுட்டி நின்றது. அயிர்த்தல் - இவ்வன்ன மிதுவரைக்கு மிவளிடத்தே தனியாகவிருந்துகொண்டு என்ன காரியத்தைப் பேசி யதோவென்று சந்தேகித்தல். (கஉச)

[இதனால் அநன் பின் தமயந்தி நிலை சொல்லப்படுகின்றது.]

அன்ன முரைத்த மொழியமுத மருந்தித் தெவிட்டா வாரமுதக், கன்னற் குதலை யிருகண்ணுங் கருத்து மதன்

பின் றொடர்ந்தேகப், பொன்னம் பாவை தழற்பெய்தா லெ
ன்ன வுருகிப் புலம்பு கொண்டாங், கின்னற் கடலின் கரை
காணு திருந்தா ளிருந்த வேலைதனில்.

இ - ள். அன்னம் - அன்னத்தினால், உரைத்த - சொல்லப்பட்ட, மொழி - சொல்லாகிய, அமுதம் - அமிர்தத்தை, அருந்தி - உட்கொண்டு, தெவிட்டா - வெறுக்காத, ஆர் - உண்டற்குரிய, அமுதம் - அமிர்தமும், கன்னல் - சர்க்கரையும்போலும், குதலை - மழலைச்சொற்களையுடையவள், இரு கண்ணும் - (தன்) இருகட்பார்வையும், கருத்தும் - மனமும், அதன் பின் - அவ்வன்னத்தின்பின், தொடர்ந்து - பற்றிக்கொண்டு, ஏக - போக, பொன்னம் பாவை - பொன்மயமாகிய பாவையை, தழல் - நெருப்பின்கண், பெய்தால் என்ன - இட்டால் (அது)போல, உருகி - கரைந்து, புலம்புகொண்டு - இரங்குதல்கொண்டு, ஆங்கு - அவ்விடத்து, இன்னல் - துன்பமாகிய, கடலின் - கடலினது, கரை - கரையை, காணது - காணுமல், இருந்தாள் - இருந்தனள், இருந்த வேலைதனில் - (அப்படி) இருந்த சமயத்தில், எ - று. அம் - அசை.

க - து. தமயந்தி கருத்துங் கண்ணும் அன்னத்தின்பின் செல்லத் துன்பக்கடலின் கரை காணுதிருந்தாள் என்பதாம்.

அன்னத்தின் வாக்கு அமிர்தம் போன் மதுரித்து எவ்வளவு கேட்பினும் போதுமென்னு மமைதியைத் தாராததா யிருக்கையால் 'அன்னமுரைத்த மொழியமுத மருந்தித் தெவிட்டா' எனப்பட்டது. ஆரமுதம் - அரிய அமிர்தம் எனினுமாம். இன்னல் - அன்னத்தால் வளர்க்கப்பட்ட நளனுசையைப்பற்றி யுண்டாகிய துன்பம். இன்னற் கடலின் கரைகாணுமை அக்கடலி னுட்பட்டிருத்தல். (கஉ௬)

[இதுமுதல் மூன்று பாட்டுகளால் மகளிர் தளர்ச்சியைக் குறித்து வினவுமாறு சொல்லப்படுகின்றது.]

ஆய வெள்ளம் புடையெய்தி யணிச்ச மலரின் றுது
றைப்பச், சேய நிறமாஞ் சீறடிகள் கன்றச் செங்கா லனந்
தொடர்ந்து, மேய தென்ன மதிகொல்லோ முருகு விம்ம
நறவுமிழுந், தூய மலர்ப்பங் கயப்போதைத் துறந்தெம் மனை
யிற் புகுந்திருவே.

இ - ள். ஆய வெள்ளம் - வெள்ளம்போலு மங்கையர் கூட்டமானது, புடை - பக்கத்தில், எய்தி - அடைந்து, முருகு - வாசனையானது, விம்ம - பெருக, நறவு - தேனை, உமிழும் - கக்குகின்ற,

தூய மலர் - பரிசுத்த மலராகிய, பங்கயப் போதை-தாமரைப்பூவை, துறந்து - விட்டு, எம் மனையில்-எமது வீட்டின்கண், புகும் - வந்த, திருவே - ஸ்ரீதேவியே, அனிச்சமலரின் - அனிச்சப்பூவினது, தாது - மகரந்தமானது, உறைப்ப - உறுத்த, சேய நிறமாம் - சிவப்புநிறமா கின்ற, சிறடிகள் - சிறியவடிகள், கன்ற - வாட, செங்கால் - செய்ய கால்களையுடைய, அனம் - அன்னத்தை, தொடர்ந்து - (பிடிக்கும் படியாகப்) பின்சென்று, மேயது-(இங்கே) அடைந்ததற்குக் காரண மாயது, என்ன மதி - என்ன அறிவு, எ - று.

க - து. தமயந்தியே! அன்னத்தைத் தொடர்ந்து சென்ற தென்ன மதி என்றார்கள் பாங்கிமார்கள் என்பதாம்.

முன்பாட்டிலே இருந்தவேலைதனி லென்றதனோடு 'ஆயவெள்ளம் புடையெய்தி' என்றதைக் கூட்டுக. எய்தியென் வினையெச்சம் பின் வருந்தாது கமழுமென்னும்பாட்டில் என்னவென் வினைகொண்டது. 'என்னமதி' எனவே நல்லறிவன் றென்றதாயிற்று. (கஉசு).

மையன் மதவெங் களியானை வீமன் வரத்தால் வருந் திருவே, கையு முகமு மரிபரந்த கண்ணு முருகு கொப் புளிக்குஞ், செய்ய கமல மெனவீழு மளிக ளோச்சுந் திறத் தானோ, தொய்யி லெழுது தடமுலைகள் சுமந்தோ மேனி துவண்டதுவே.

இ - ள். மையல் - மயக்கஞ் செய்கின்ற, மதம் - மதத்தாலுண் டாகிய, வெம்களி - வெவ்விய செருக்கையுடைய, யானை - யானைப் படையையுடைய, வீமன் - வீமராசனது, வரத்தால் - வரத்தினாலே, வரும் - (மகளாய்ப்) பிறந்த, திருவே - திருமாதே, கையும் - (உன்) கைகளையும், முகமும் - முகத்தையும், அரி - இரேகையானது, பரந்த - படரப்பெற்ற, கண்ணும் - கண்களையும், முருகு - தேனை, கொப்புளிக்கும் - உமிழ்கின்ற, செய்ய கமலம் என - செந்தாமரை மலர்களென்று மயங்கி, வீழும் - (வந்து) வீழ்கின்ற, அளிகள் - வண்டுகளை, ஓச்சும் திறத்தானோ-ஓட்டுஞ் செயலாலோ, தொய்யில்- சந்தனக்கோலத்தை, எழுது - எழுதப்பெற்ற, தடம் - மலைபோலும், முலைகள் - முலைகளை, சுமந்தோ - தாங்கியோ, மேனி - உடம்பா னது, துவண்டது - வாடியது, எ - று.

க - து. வீமராஜன் பெற்றெடுத்த தமயந்தியே! உன தவயவத் தாமரைகளில் விழுந்த வண்டுகளை ஓட்டும் வகையினாலோ, உனது கனதனங்களைச் சுமந்தோ திருவுருவந் தளர்வடைந்தது என்றார்கள் என்பதாம்.

ஒரு தொழிலை யிடைவிடாது செய்வோர்க்கும் அதிபாரஞ் சுமப்போர்க்கும் உடம்புவாடி யிளைக்குமாதலால் அங்ஙனம் வினவினர். (கஉஎ)

அன்னத் தொடரு மயர்வதுவோ வயலார் விழியூ றடைந்ததுவோ, பன்னும் பொழில்வாய்ப் பலவலகை யெதிர்ந்தே மருட்டப் பயந்ததுவோ, பொன்னங் கிளியே மடமயிலே புகல்வாய்க் குயிலே பூங்கமல, மன்னுந் திருமானே யன்ன வணங்கு வாய்ந்த மரகதமே.

இ - ள். பொன் அம் கிளியே - அழகிய பொற்கிளியே, மடம் மயிலே - இளமயிலே, புகல் - கூவும், வாய்-வாயையுடைய, குயிலே-குயில்போல்வாளே, பூ-அழகிய, கமலம் - தாமரையில், மன்னும்-நிலை பெற்றிருக்கும், திருமானே அன்ன - இலக்குமிக்கொப்பான, அணங்கு-அழகு, வாய்ந்த-பொருந்திய, மரகதமே-மரகதம் போல்பவளே, அன்னம் - அன்னப் பறவையைப்பற்றி, தொடரும் - தொடர்ந்த, அயர்வதுவோ - வருத்தமோ; அயலார் - அயலவர்களது, விழி ஊறு-கண்ணேறு, அடைந்ததுவோ - சேர்ந்ததுவோ; பன்னும் - சொல்லும், பொழில் வாய் - சோலையினிடத்து, பல அலகை - பல பேய்கள், எதிர்ந்து - எதிர்ப்பட்டு, மருட்ட-வெருட்ட, பயந்ததுவோ - பயமடைந்ததுவோ (அம்மேணி), எ - று.

க - து. தமயந்தியே ! அன்னத்தின் பின் சென்ற வருத்தமோ, அயலார் கண்பட்டதோ, பேயால் வந்த கோளோ என்பதாம். (கஉஅ)

இச்செய்யுள் சில பிரதிகளில் காணப்படுவதால் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

[இதனால் அவள் மனையிற் சேர்க்கப்பட்டவாறு சொல்லப்படுகின்றது.]

தாது கமழு மலர்த்திருவே யென்னச் செவிலித் தாயர் பலர், பூதி யணிந்தாங் கயினி நீர் சுழற்றித் தெய்வம் பராய்ப் போற்றிக், காதன் மயிலைக் கொடுவந்து கடிமா மனையிற் பசுந்தேறற், சீத மலர்மேல் லணைமீது சேர்த்தா ரவளுஞ் செயலிழந்தாள்.

இ - ள். தாது - மகரந்தமானது, கமழும் - மணக்கப்பெற்ற, மலர் - தாமரைப்பூவிலுள்ள, திருவே - திருமாதே, என்ன - என்று சொல்ல, பலர் - பலராகிய, செவிலித்தாயர் - வளர்த்ததாய்மாரான

வர், பூதி - திருநீற்றை, அணிந்து - (நெற்றியில்)இட்டு, அயினிநீர் - ஆலாத்தியை, சுழற்றி - சுற்றி, தெய்வம் - குலதெய்வத்தை, பராய் - பிரார்த்தித்து, போற்றி - துதிசெய்து, காதல் - ஆசையைத் தருகின்ற, மயிலே - மயில்போல்பவளை, கொடு வந்து - கொண்டுவந்து, கடி - காவலையுடைய, மா - பெரிய, மனையில் - மாடத்தின்கண், பசுந்தேறல் - பசியதேனையும், சீதம் - குளிர்ச்சியையுமுடைய, மலர் - மலர்களாலாகிய, மெல் - மெல்லிய, அணைமீது - சயனத்தின்மேல், சேர்த்தார் - கிடத்தினார்; அவளும் - அத்தமயந்தியும், செயல் -(தன்) செய்கைகளை, இழந்தாள் - இழந்தனள், எ - று.

க - து. வளர்த்த தாய்மார்கள் தமயந்திக்கு விபூதியணிந்து ஆலஞ்சுற்றிக் குலதெய்வத்தைப் போற்றி மனையிற்கொண்டுவந்து மலரணையிற் சேர்த்தார்கள் என்பதாம்.

மயில் - உவமையாகுபெயர். செவிலித்தாயர்-அவளுக்கு நல்லவும் நல்லொழுக்கமுங் கற்பித்து வளர்த்த மாதர்கள். செயலிழத்தல்-உண்ணல், உடுத்தல், அணிதல், முதலிய செயல்களை மறத்தலாம். பூதியணிதலும் அயினிநீர் சுழற்றலும் அச்சமுதலியவற்றா லுண்டாகிய குற்றங் களைதற்கென்க. (கஉக)

[இதனால் அன்னம் அரசனைக்கண்டமை சொல்லப்படுகின்றது.]

ஈங்கிவ் வாறு மயில்வருந்தி யிருப்ப வினவண் டிசைமிழற்றுந், தேங்கொள் பொழில்வாய் முகையவிழ்ந்து செந்தே னிறைக்கு மலர்வாவிப், பாங்க ரமளி மிசைவிரித்த பனிமென் போது கரியவள,ரோங்கற் றிணிதோள் வயவேந்தை யன்னங் கண்ணுற் றுவந்ததால்.

இ - ள். மயில் - மயில்போல்பவள், ஈங்கு - இக்குண்டினபுரத்தின்கண், இவ்வாறு - இவ்வண்ணமாக, வருந்தி - (காமநோயால்) வருந்தி, இருப்ப - இருக்க, அன்னம் - அன்னமானது, இனம் - கூட்டமாகிய, வண்டு - வண்டுகளானவை, இசை - இராகத்தை, மிழற்றும் - பாடப்பெற்ற, தேம் - வாசனையை, கொள் - கொண்ட, பொழில்வாய் - சோலையின்கண், முகை - அரும்புகளானவை, அவிழ்ந்து - விரிந்து, செந்தேன் - செய்ய தேனினாலே, நிறைக்கும் - நிறைக்கப்பெறுகின்ற, மலர் - மலர்களையுடைய, வாவி - தடாகத்தினது, பாங்கர் - பக்கத்தில், அமளிமிசை - சயனத்தின்மேல், விரித்த - பரப்பப்பட்ட, பனி - குளிர்ச்சிபொருந்திய, மெல் - மெல்லிய, போது - மலர்களும், கரிய - கருகும்படியாக, வளர் - படுத்திருக்

கின்ற, ஓங்கல் - மலைபோலும், திணி - திடமுற்ற, தோள் - தோள்களையும், வயம் - வெற்றியையுமுடைய, வேந்தை - அரசனை, கண்ணுற்று - பார்த்து, உவந்தது - மகிழ்ந்தது, எ - று.

க - து. இவ்வாறு தமயந்தி குண்டினபுரத்தில் வருந்தியிருக்க அன்னமானது நளனைக்கண்டு மகிழ்வடைந்தது என்பதாம்.

'பனிமென் போது கரியவளர்' எனவே அதிக வெப்பங்கொண்டிருந்தபடி சொல்லப்பட்டதாயிற்று. அரசன் காதல்நோயாற் படும்பாட்டை நோக்கி அவன் தான் வருமளவுமுயிர் பொறுத்திருந்தமையைக்குறித்து மகிழ்தலால் 'அன்னங்கண்ணுற் றுவந்தது' என்றார்.

[இதுமுத லிரண்டு பாட்டுகளால் அப்போது அரசனிருப்புச் சொல்லப்படுகின்றது.]

பொன்னஞ் சிறைய மடவன்னம் போது முன்னர்
வேல்வேந்து, தன்னந் தனியோ துணையென்னுந் தடங்கண்
பொருந்தா தோவென்னு, மின்னுந் தூதேகியவன்ன மீளா
திருந்த தென்னென்னு,மின்னி னுருவு வெளிப்படுத னோக்கி
நோக்கி வெய்துயிர்க்கும்.

இ - ள். வேல்-வேலையுடைய, வேந்து - நளமகாராசனானவன், பொன் - பொன்மயமாகிய, அம் - அழகிய, சிறைய - சிறைகளையுடைய, மடம் - இளமை பொருந்திய, அன்னம் - அன்னமானது, போதுமுன்னர் - செல்லுதற்குமுன், தன்னந்தனியோ - தன்னந் தனியாக விருக்கையோ, துணை என்னும்-(எனக்குத்) துணையென்று சொல்லுவான்; தடம் கண் - விசாலம்பொருந்திய கண்களையுடையவள், பொருந்தாதோ என்னும் - உடன்படாளோவென்று சொல்லுவான்; தூது - தூதாக, ஏகிய - சென்ற, அன்னம் - அன்னமானது, இன்னும் - இதுவரையிலும், மீளாது இருந்தது - திரும்பிவாராமைக்குக் காரணம், என் என்னும் - யாதென்று சொல்லுவான்; மின்னின் - மின்னல்போல்பவளது, உருவு - வடிவமானது, வெளிப்படுதல் - வெளியிலே தோன்றுதலை, நோக்கி நோக்கி-பார்த்துப்பார்த்து, வெய்து உயிர்க்கும் - சுடுமூச்செறிவான், எ - று.

க-து. அன்னம் போகுமுன்னம் நளனானவன் எனக்குத் தனித்திருத்தலோ துணை, தமயந்தி யுடன்படாளோ, அன்னம் வாராதிருந்ததென்னவோ என்று உருவெளியைநோக்கிச் சுடுமூச்செறிவான் என்பதாம்.

தனியென்பது சிறப்புப்பற்றித் 'தன்னந்தனி' என வந்தது. தடங்கண் சொன்னோக்கத்தால் அஃறிணைமுடிபேற்றது. அன்னம் விரைவிலேதானே திரும்பியதாயினும் அரசனுக்குக் கணமும் நெடுங்காலமாகத் தோன்றலால் 'இன்னும்' என்றான். (க௱க)

மீண்ட தன்ன மெனவெண்ணி வினவு மொருகாழ் மணிமுத்தம், பூண்ட பொம்மன் முலையென்னே புகன்ற தென்று மருந்தாமற், காண்டல் செயினுங் கேட்பினுமென் னுள்ள மயக்குங் களிநறவைத், தூண்டல் செய்யா மணிவிள க்கைக் கொணர்ந்தாய் கொல்லோ வெனச்சோரும்.

இ - ள். அன்னம் - அன்னமானது, மீண்டது என - திரும்பி வந்ததென்று, எண்ணி - நினைத்து, வினவும் - வினவுவான்; மணி - அழகிய, முத்தம் - முத்துகளையுடைய, ஒரு காழ் - ஒருசரத்தை, பூண்ட - மேற்கொண்ட, பொம்மல் - பொலிவுபொருந்திய, முலை - முலைகளையுடையவள், என்னே - என்னசெய்தியையோ, புகன்றது - சொல்லினள், என்னும் - என்று சொல்வான்; அருந்தாமல் - உண்ணப்படாமல், காண்டல் செயினும் - கண்டாலும், கேட்பினும் - கேட்டாலும், என் - எனது, உள்ளம் - மனத்தை, மயக்கும் - மயக்கா நின்ற, களி நறவை - தேன்குழம்பை, தூண்டல்செய்யா - தூண்டப் படாத, மணி விளக்கை - இரத்தினதீபத்தை, கொணர்ந்தாய் கொல்லோ என - கொண்டுவந்தாயோவென்று, சோரும் - தளருவான்; எ - று.

க - து. நளனானவன் அன்னம் வந்ததென்பான்; தமயந்தி யென்னசொன்னா ளென்பான்; தமயந்தியைக் கொண்டுவந்தாயோ வென்பான் என்பதாம்.

களிநறவு - களிப்பைத் தருகிற கள் எனினுமாம். 'அருந்தாமற் காண்டல் செயினுங் கேட்பினு மென்னுள்ள மயக்குங் களிநறவை' எனவே அருந்துங்கால் உள்ளமயக்குதல் சொல்லவேண்டாவாயிற்று. இவ்வாறே "உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங், கள்ளுக்கில் காமத்திற் குண்டு" (திருவள்ளுவர் - புணர்ச்சி விதும்பல் - க) என்றமையறிக. 'மணிவிளக்கு' எனவே மற்றைத் தீவிளக்குப்போல் மழுங்குதலின்றி எப்போதும் விளங்குதல் கொள்க. (கரு௨)

[இதனுல் அன்னஞ் சொல்லலும் அரசன் மகிழ்தலும் சொல்லப்படுகின்றன.]

திருந்தார் மௌலி மணியுரிஞ்சித் திகழுங் கழற்காற் றேர்வேந்தே, வருந்தேல் வருந்தே னீவேண்டின் வாரா தனவு முளகொல்லோ, முருந்தேர் முறுவன் முகம்பெற்று வந்தே னெனலு மூர்ச்சைதெளிந், தருந்தா வமுத மருந்தி னன்போற் பலகாற் கேட்கு மகமகிழும்.

இ - ள். திருந்தார் - பகைவருடைய, மௌலி - மகுடத்தி லுள்ள, மணி - நவமணிகளை, உரிஞ்சி - தேய்த்து, திகழும் - விளங்

காகின்ற, கழல் - வீரக்கழலையுடைய, கால் - பாதத்தையும், தேர் - மகாரதத்தையுமுடைய, வேந்தே - அரசனே, வருந்தேல் வருந்தேல் - வருந்தாதே வருந்தாதே; நீ - (இப்படிப்பட்ட) நீ, வேண்டின - பெற விரும்பினால், வாராதனவும் - (உனக்குக்) கிடையாத பொருள்களும், உளகொல் - (உலகத்தில்) உண்டோ; முருந்து ஏர் - மயிலிறகின் அடி போலும், முறுவல் - பற்களையுடைய தமயந்தியது, முகம் - முகத்தை, பெற்று - அடைந்து, வந்தேன் எனவும் - வந்தேனென்றவளவில், அருந்தா - (முகந்து) உண்ணப்பட்டில்லாத, அமுதம்-தேவாமிர்தத்தை, அருந்தினன்போல் - உண்டவன்போல், மூர்ச்சை தெளிந்து - மூர்ச்சைநீர்ந்து, பலகால் - பலதரம், கேட்கும் - கேட்பான்; அகம் - உள்ளத்தின்கண், மகிழும் - களிப்பான், எ - று.

க - து. சக்கரவர்த்தியே! வருந்தாதே வருந்தாதே, நீ வேண்டினால் வாராதபொருள்களுளவோ, தமயந்தி திருமுகம்பெற்று வந்தேனென் றன்னஞ் சொன்னவுடன் மூர்ச்சைதெளிந் தெழுந்து நளன் பலகால்கேட்டு மனமகிழுவான் என்பதாம்.

அரசன் தன தொப்பற்ற மனவலிமையை மறந்து வருந்துதலை நோக்குதலால் அதனை நினைப்பித்தற்குத் 'திருந்தார் மௌலி மணி யுரிஞ்சித் திகழும் கழற்கால்' என்னும் விசேடணங் கொடுத்துக் கூறியது. 'வருந்தேல்' என்பது ஆற்றுதற் பொருளி லடுக்கிவந்தது. இதற்கு "இசைநிறை யசைநிலை பொருளொடு புணர்தலென், றவைமூன் றென்ப வொருசொல் லடுக்கே" (தொல்காப்பியம்-எச்சவியல்-கு) என்பதுவிதி. மேற்சொல்லப்பட்ட மனவலிமையுடைய வுனக்கு எண்ணப்பட்டபொருள்கள் யாவும் எளிதிற் கைகூடுமென்றற்கு 'நீ வேண்டின் வாராதனவு முளகொல்லோ' என்றது. "எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார், திண்ணிய ராகப் பெறின்" (திருவள்ளுவர்-வினைத்திட்பம்-சு)என்றாராதலின். இதனாலே அவளுடன்பட்டமை குறிப்பிக்கப்பட்டதாயினும் பின்னும் அதனை நன்றாக வறிவித்தற்கு 'முருந்தேர் முறுவன் முகம்பெற்று வந்தேன்' என்றது. முகம்பெறல் - ஒருவர் தஞ்சொல்லை மற்றொருவர் முகத்திருப்ப மின்றி விருப்பத்தோடுகேட் டுடன்படப் பெறலாம். முருந்தேர் என்பதில் ஏர் உவமவுருபு, அழகு எனினுமமையும். (கஙங)

[இதனால் அரசனது செய்தியை நிறுத்திப் பின்வருங் கைக்கிளைப்படல முதலியவற்றால் தமயந்திக்கு நேர்ட்ட காமநோய்த் துன்பமும் அதுபற்றிப் பின்னடந்த செய்தியும் கூறத் தொடங்கினமை சொல்லப்படுகின்றன.]

அன்ன முரைத்த வின்சொல்லி னவி தாங்கி யுகனேடு, பின்னு மடமான் பேரழகும் பெருகு துயரும் விளம்

பியது, மின்னு முரைத்தி யுரைத்தெனக் கேட்டிங் கிவ்வா றிவனிருப்ப, மின்னுண் மருங்கு றுயரமுமேல் விளைந்த வா றும் விளம்புவாம்.

இ - ள். அன்னம் - அன்னத்தினல், உரைத்த - சொல்லப் பட்ட, இன் சொல்லின் - இனிய சொற்களால், ஆவி - உயிரை, தாங்கி - பொறுத்திருந்து, பின்னும்-(அதற்குப்) பின்னும், மடம் மான்-இளமைபொருந்திய மான்போல்பவளது, பேர்அழகும்-பெரியவழகையும், பெருகு துயரும் - (காமத்தாலவளிடத்தே) வளர்கின்ற துன்பத்தையும், விளம்பியதும் - (தன்னைக் குறித்து அவளாற்) சொல்லப் பட்ட செய்தியையும், இன்னும் - இன்னமும், உரைத்தி உரைத்தி என - சொல்லுசொல்லென்று, கேட்டு - வினவிக்கொண்டு, அதனேடு - அவ்வன்னத்தோடு, இங்கு - இவ்விடத்தே, இவ்வாறு - இவ்விதமாக, இவன் - இந்நளன், இருப்ப - இருக்கும்போது (உண்டாகிய), மின் - மின்போலும், நுண் - நுண்ணிய, மருங்குல் - இடையுடையவளாகிய தமயந்தியினது, துயரமும் - துன்பத்தையும், மேல்-பின்பு, விளைந்தவாறும் - நடந்தசெய்தியையும், விளம்புவாம் - (யாம்) சொல்லுவாம், எ - று.

க - து. அன்னஞ்சொன்ன இனிய சொற்களால் நளமகாராஜனவன் உயிரை விடாதிருந்து தமயந்தி யென்னசொன்னு ளின்னஞ் சொல்லு சொல்லென்று கேட்டு நளனிருக்கத் தமயந்தி படுந் துயரத்தைச் சொல்லுவாம் என்பதாம்.

அன்னத்தின் சொல்லைக்கேட்டு அரசன் இனியெப்படியும் அவளைப் பெறலாமென்று நிச்சயங்கொண்டு உயிர் பொறுத்திருத்தலால் 'அன்னமுரைத்த வின்சொல்லி னவிதாங்கி' என்றூர். கேட்கப்பட்டதொருபொருள் தம்மால் விரும்பப்பட்டதா யிருப்பின் அவ்விருப்ப மிகுதியால் பின்னும் பின்னுங் கேட்பராதலால் பின்னும் 'இன்னு முரைத்தி யுரைத்தி' என்ற னென்க. அன்றியும் கேட்குந்தோறுந் தன் காமநோய்க்கு மருந்தாய் நிற்றலின் அங்ஙனங் கேட்டானெனினுமாம். (கருச)

அன்னத்தைத் தூதுவிட்டபடலம் முற்றிற்று.

# கைக்கிளைப்படலம்.

கைக்கிளை யென்பது ஒருதலைக்காமம்; அது ஆண்பாற் கைக்கிளையும் பெண்பாற் கைக்கிளையும் என விரு வகைப்படும்; அவற்றுள் இது பெண்பாற் கைக்கிளையாம்.

கை-சிறுமை. கிளை-உறவு.

[இப்படலத்தில் இது முதலிய பாட்டுகளால் தமயந்தி தந்தையாற் பின் செய்யப்படும் சுவயம்வரத் திற்குக் காரணமாக அவள் காமநோயிற் படும்பாடு சொல்லப்படுகின்றது.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொங்கு விம்மு கோதை யோடு கோதை தாழ வாண்முகம்
பங்கயத்தை மற்றோர் பங்க யத்து வைத்த பான்மைபோ
லங்கை சேர்த்தி மைக்க ணீல வாலி சிந்த வைகிய
மங்கை மென்மு லைத்த டத்து மாரன் வாளி யேவினான்.

இ - ள். கொங்கு - வாசனையானது, விம்மு - மிகப்பெற்ற, கோதையோடு - பூமாலையோடு, கோதை - கூந்தலானது, தாழ - அவிழ்ந்து தொங்கவும், பங்கயத்தை-(ஒரு)தாமரைப்பூவை, மற்றோர் பங்கயத்து - மற்றொரு தாமரைப்பூவிலே, வைத்த பான்மைபோல் - வைத்ததன்மைபோல், வாள் - ஒளிபொருந்திய, முகம் - முகத்தை, அங்கை - உள்ளங்கையிலே, சேர்த்தி - வைத்து, மை - மையெழு தப்பெற்ற, கண் - கண்களிலிருந்து, நீலம் - கரிய, ஆலி - நீர்த்துளி களானவை, சிந்த - உதிரவும், வைகிய - இருக்கின்ற, மங்கை - தம யந்தியினுடைய, மெல் முலை தடத்து - மெல்லிய முலைகளிடத்து, மாரன் - மன்மதனானவன், வாளி - பூவம்புகளை, ஏவினான் - செலு த்தினான், எ - று.

க - து. தமயந்தி கனதனத்திடத்து மன்மதன் கணைதொடுத் தான் என்பதாம்.

முகமுங் கையுந் தாமரைமலர் போலுதலால் 'பங்கயத்தை மற் றோர் பங்கயத்து வைத்த பான்மைபோல்' என்றார். கண்ணீர் மை

யைக்கரைந்துக் கொண்டிழிதலின் 'நிலவாவி' எனப்பட்டது. வை கிடவென்பதைச் செய்யியவென்னும் வினையெச்சமாக்கி இருக்கும் படியாக வெனப்பொருள் கூறினுமமையும். [இப்படலத்துப் பாட்டுக ளெல்லாம் பெரும்பாலும் ஈற்றுச்சீர் விளச்சீரும் ஏனைச்சீர்கள் மாச்சீர்களுமாகி வருகிற எழுசீர்க்கழி நெடிலடி நான்கு கொண்ட ஆசிரியவிருத்தங்கள்.] (க)

செப்பு நேர்மு லைக்கண் வேனில் வேளொ டுத்த தேமல
ரப்பு மாரி காம வெம்மை செய்ய வாற்ற லாமையா
லெப்பு விக்கும் வேந்தெ ழிற்க டற்ப டிந்து மீண்டுமால்
வெப்பு நோயர் நீரின் மூழ்கின் வெம்மை யாறு மேகொலாம்.

இ - ள். வேனில்-வசந்தகாலத்திற்குரிய, வேள் - மன்மதனால், தொடுத்த - செலுத்தப்பட்ட, தே மலர் - வாசனைபொருந்திய மலராகிய, அப்பு - அம்பாகிய நீரினது, மாரி - மழையானது, செப்பு நேர் - செப்புப்போலும், முலைக்கண் - முலைகளையுடையவளாகிய தமயந்தியிடத்து, காமவெம்மை - காமசுரத்தை, செய்ய - உண்டாக்க, ஆற்றலாமையால் - பொறுக்கமாட்டாமையால், எப்புவிக்கும் - எல்லாத் தேசங்களுக்கும், வேந்து - அரசனாயுள்ளோனாகிய நளனது, எழில் - அழகாகிய, கடல் - கடலுள்ளே, படிந்தும் - முழுகியும், மீண்டும் - (அக்காமசுரமானது அவளுக்கு) மிகும்; வெப்புநோயர் - சுரவியாதியை யுடையவர், நீரில் - நீரினுள், மூழ்கின் - முழுகினால், வெம்மை - அச்சுரமானது, ஆறுமேகொல் - தீருமோ, எ - று.

க - து. தமயந்தியானவள் காமாக்கினியால் நள னழகென்னுங் கடலிற் படிந்தும் அவளுக்குக் காமக்கனல் மிகும் என்பதாம்.

"மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற்றெல்லாம், வல்லொற்றிறுதிக் கிளையொற் றாகும்" (தொல்காப்பியம்-குற்றியலுகரப் புணரியல்) என்பதனால் அம்பு அப்பு எனவிகாரப்பட்டது. அப்பென்பது நீருக்கும் பெயராதலால் அம்பாகிய நீரென விருபொருள் கூறப்பட்டது. மழையிலே நனைந்தவர்களுக்குச் சுரமுண்டாமாதலால் 'அப்புமாரி காமவெம்மை செய்ய' என்றார். அழகாகிய கடலிலே படிதலாவது - அவ்வழகை யிடைவிடாது நினைத்தல். காய்ச்சலுள்ளோ யாளிகள் நீரிலே முழுகினால் அதுபின்னும் அதிகமாக விஷமிப்பது வைத்தியநூலிற் சொல்லப்பட்டபடி அனுபவசித்தமாதலின் 'வெம்மையாறுமேகொல்' என்றார். [ஈற்றடியின் பொதுப்பொருளால் முன் மூன்றடியின் சிறப்புப் பொருளைச் சாதித்தலால் வேற்றுப்பொருள் வைப்பணியாம். இதற்கு எழிலாகிய கடலி அம்பாகிய நீர்

என்கிற உருவகங்களும், கடற்படிதலாலே வெப்பந்தீரலாகிய விருப்பத்தைப் பெறாமல் அவ்வெப்ப மிகுதலைப் பெறுவதாகிய தகுதியின்மை யணியும் அங்கங்கள் ஆதலால் உறுப்புறுப்பிக்கலவையணி.] (உ)

அல்ல லுற்ற ழுங்கும் வாடு மாவி சோரு மெல்லிதழ்ப்
பல்ல வங்கடீயு மாறு பாய லிற்ப டுத்திடு
மொல்லை யிற்ப தைக்கு நெட்டு யிர்ப்பு வீங்கும் வார்கழை
வில்லி வாளி தன்னை யார்வி லக்குவார்கொ லென்னுமால்.

இ - ள். அல்லல் உற்று - துன்பமுற்று, அழுங்கும் - வருந்துவாள்; வாடும் - வாடுவாள்; ஆவிசோரும் - உயிர்சோர்வாள்; மெல் இதழ் - மெல்லிய பூவிதழ்களும், பல்லவங்கள் - தளிர்களும், தீயுமாறு - (தன்னுடல் வெப்பத்தாற்) கருகும்படியாக, பாயலில் - சயனத்தின்கண், படுத்திடும் - படுப்பாள்; ஒல்லையில் - விரைவில், பதைக்கும் - துடிப்பாள்; நெட்டுயிர்ப்பு வீங்கும் - பெருமூச்செறிவாள்; வார் கழை வில்லி - நெடிய கருப்புவில்லையுடைய மன்மதனது, வாளி தன்னை - அம்பை, யார் - யாவர், விலக்குவார் - விலக்கவல்லவர், என்னும் - என்று சொல்லுவாள், எ - று.

க - து. தமயந்தியானவள் மன்மத பாணத்தை யார் விலக்குவார்கள் என்று சொல்லுவாள் என்பதாம்.

[ஒன்றற்கொன்று பகையில்லாமையால் ஒருகாலத்திற் கூடத்தக்க அழுங்குதல், வாடல், ஆவிசோர்தல், படுத்திடல், நெட்டுயிர்ப்பு வீங்கல், மன்மதனம்பை யார் விலக்குவாரென்று சொல்லுதல் என்கின்ற பலபொருள்களுக்குக் கூடுதலைச் சொல்லுதலால் கூட்டவணியாகும்.] அச்சுரத்தாற் படும்பாடு சொல்லப்பட்டது. (ங)

மைம றந்த நீல வொண்கண் வார்பு னற்சொ ரிந்தியாழ்
கைம றந்த கூட லெண்ணி மெல்வி ரல்கள் கன்றின
பொம்மல் வெம்மு லைத்த டங்க லந்து றந்த பூமறந்
தம்மெ லோதி சோர்ந்த துள்ள மாவ மோட ழிந்ததே.

இ - ள். நீலம் - கருங்குவளை மலர்போலும், ஒள் - ஒள்ளிய, கண் - கண்களானவை, வார் - தாரையாயிழிகின்ற, புனல் - நீரை, சொரிந்து - பொழிந்து, மை - அஞ்சனத்தை, மறந்த - மறந்தன, கை - கைகளானவை, யாழ் - வீணை (வாசித்தலை) மறந்த - மறந்தன; கூடல் - கூடற் (சுழிகளை), எண்ணி - (தொட்டு) எண்ணி, மெல் - மெல்லிய, விரல்கள் - விரல்களானவை, கன்றின - வாடின; பொம்மல் - பொலிவு பொருந்திய, வெம் - விருப்பத்தைத் தருகின்ற,

முலை தடம் - முலைகளாகிய இடங்களானவை, கலம் - ஆபரணங்களை, துறந்த - நீங்கின; அம் - அழகிய, மென் - மெல்லிய, ஓதி - கூந்தலானது, பூ - மலரை, மறந்து - மறந்து, சோர்ந்தது - தளர்ந்தது; உள்ளம் - நெஞ்சமானது, ஆர்வமொடு - ஆசையோடு (கூடி), அழிந்தது - நிலைகெட்டது, எ - று.

க - து. தமயந்தி கண்கள் மை மறந்தன, கைகள் வீணையை மறந்தன, விரல்கள் கூடற்சுழியெண்ணி வாடின, முலைகள் ஆபரணங்களை நீக்கின, கூந்தல் பூ மறந்து சோர்ந்தது, நெஞ்சு மாசையா லழிந்தது என்பதாம்.

மறந்தற்றழிந்து நின்றதென்பது கருத்து. கூடல் ஆகுபெயர். கூடற்சுழியாவது தலைவியோடு தலைவன் கூடுமாயின் தம்மெண்ணம் பலிக்குமென்று குறித்தற்கு மகளிரால் கண்மூடி விரலாலே நிலத்திலே வளையமாகச் செய்யப்படுவது. அதுபலசெய்து அவற்றைக் கூட்ட இரட்டையென்றறிதற்கு விரலாலொவ்வொன்றாகத் தொட்டெண்ணுமென்க. "ஆழிதிருத்தும் புலியூருடையா னருளினளித், தாழிதிருத்து மணற்குன்றி னீர்நைகின்றார் வருகென், றூழிதிருத்திச் சுழிக்கணக் கோதிநை யாமலைய, வாழிதிருத்தித் தாக்கிற்றியோவுள்ள வள்ளலையே" (திருக்கோவையார் - கூடலிழைத்தல் - கஅசு) என்பதனாலறிக. அவை செய்தற்குப் பொருமற் பலவிரல்களுங் கொள்ளப்பட்டமை தோன்றற்த விரலென்றனது மென்மையும் பன்மையுங் கூட்டி 'மெல்விரல்கள்' என்றார். (ச)

மழைமதர்க்கண் முலைகள் செய்ய மார்பனைத்து மெ
ன்மைநேர், இழைபுகப்பெறாது விம்மி யேர்பெறக்கவர்ந்த
தால், கழைகுழைத்து மாரனெய்த கணையினுள்ள மூடு
போய், நுழைவதற்கிடம்பெறாது நொய்துநைந்து மீளு
மால்.

இ - ள். மழை - குளிர்ச்சி பொருந்திய, மதர் - செருக்கை யுடைய, கண் - கண்களையுடையவளது, முலைகள் - முலைகளானவை, செய்ய - சிவப்பாகிய, மார்பு அனைத்தும் - மார்பிட முழுதையும், மென்மை நேர் - மென்மையு நேர்மையும் பொருந்திய, இழை - ஒருநூலும், புக - நுழைதற்கு, பெறாது - சந்தில்லையாக, விம்மி - பருத்து, ஏர் பெற - அழகுபெற, கவர்ந்ததால் - வௌவினதால், கழை - கருப்பு (வில்லை), குழைத்து - வளைத்து, மாரன் - மன்மதனால், எய்த - செலுத்தப்பட்ட, கணையின் - அம்புகளால், உள்ளம் - நெஞ்சமானது, ஊடுபோய் - உள்ளுடைந்து, நுழைவதற்கு - (அவ்விருமுலைகளுக்

கும் ... வ) புகுந்து வெளிப்படுதற்கு, இடம் பெறு ந - வழிபெறு மல், நொய்து - சிறிது, உழைந்து - (அவற்றினடியை) உதைந்து, மீளும் - திரும்பிவிடும், எ - று.

க - து. தமயந்தி முலைகள் மிகவும் பூரித்ததால் மன்மதபாணந் தைக்காமற் றிரும்பும் என்பதாம்.

ஓரிடத்தொருவனுக்குப் பகைவ னம்புகளால் வருத்தமுண்டாம் போது அவ்விடம்விட் டோடிப்போகா திரானுதலின் மார்பிலுள்ளே மன்மதபாணம்பட்டு வருந்திய நெஞ்சம் அவ்விடம்விட்டுப் பலமுறை யோடி முலைகளினடியைக் குன்றுமுட்டிய குரீஇப்போல முட்டித் திரும்பியதென்க. நெஞ்சம் படபடவென்று அடித்துக்கொள்வதை அங்ஙனங் கூறினர். [இங்கே அம்புகள்பட்டும் நெஞ்சம் வெளிப்பட்டுப் போகாமைக்கு ஆயுண்மிகுதி யேதுவாயிருப்ப முலைகளின் செறிவை யேதுவாகக் குறித்தமையால் ஏதுத்தற்குறிப்பணி.] "கணைகளுள்ள மூடுபோய் நுழைவதற் கிடம்பெறாது நொய்து தைத்து மீளும்" எனப் பாடங்கூறி முலைநெருக்கத்தால் மார்பிலே நுழையமாட்டாமல் மன்மதபாணஞ் சிறிது தைத்துத் திரும்பிவிடுமென்று பொருள் கூறுவாருமுண்டு. அது முதனூற் கருத்துக்குச் சிறிதும் ஒவ்வாமற் போவதுமன்றிக் காமநோயை மிகுதியாக வுற்றில ளென்னுங் கருத்தை யுட்கொண்டிருத்தலாற் பொருந்தாதென்க. முதனூன்முடிபுக்கு முழுது மொத்திருக்கவேண்டின் "தழைதலுற்ற காமவெம்மை சார்தலாற் பிளப்புறீஇ, விழைதலுற்ற நெஞ்சகம் வெளிப்படாதிருந்ததே" எனப் பாடங் கூறல்வேண்டு மென்க. (௫)

சுழித்த கூடல் கூடு றாதுநீர் சொரிந்து நாடொறு
மழித்த கண்க டுயிலும் வேலை யணிதயங்கு மார்பகத்
திழைத்த வார முலைதி ளைப்ப வெய்து போழ்தி லிறைவனை
விழித்து நீர டக்கு மாய மென்கொ லென்று மெலியுமால்.

இ - ள். சுழித்த - சுழிக்கப்பட்ட, கூடல் - கூடற் (சுழியானவை), கூடுறாது - கூடாமற்போக, நீர் - நீரை, சொரிந்து - பொழிந்து, நாடொறும் - தினந்தோறும், அழித்த - கெடுத்துக்கொண்டு வந்த, கண்கள் - கண்களே, துயிலும் - தூங்கப்பெறுகின்ற, வேலை - காலத்திலே, அணி - ஆபரணங்களால், தயங்கும் - விளங்காநின்ற, மார்பகத்து - (என்) மார்பிலுள்ள, இழைத்த - தேய்க்கப்பட்ட, ஆரம் - சந்தனத்தையுடைய, முலை - (என்) முலைகளை, திளைப்ப - தழுவ, எய்து போழ்தில் - அடைகின்ற சமயத்தில், விழித்து - இமைகளைத்திறந்து, நீர் - நீங்கள், இறைவனை - (என்னுடைய) தலைவனை

கிய நளராசனை, அடக்கும் - மறைக்கின்றதாகிய, மாயம் - வஞ்ச வித்தையானது, என் என்று - எத்தன்மைத்தாகுமென்று சொல்லி மெலியும் - தளர்வாள், எ - று.

க - து. கண்களே! நித்திரையிலே நளனைக் கூடுஞ் சமயத்திலே விழித்துக்கொண்டு அந்நளனை யடக்கும் வஞ்சனை யென்னை யென்பாள் என்பதாம்.

கண்கள் கூடற் சுழிகளை யழித்தற் கன்றித் தன் வருத்தத்திற்காகவே நீர் சொரியினும் அந்நீரால் அச்சுழிகள் குலைதல்பற்றிப் பின்னும் வருத்தமிகுதலால் நனக்குந் தீங்கு செய்தனவாகக் கொண்டு அவற்றிற்கு அத்தன்மைதோன்றச் 'சுழித்த கூடல் கூடுறாது நீர் சொரிந்து தாமொடு மழித்த கண்கள்' என்றார். தான் காணுதற்குக் கருவியாயுள்ள கண்கள் அவற்றாலன்றித் தானேகவே காணப்பெற்ற தலைவனை விழித்து மறைத்தல் பெரியதோர் மாயை வித்தையாதலின் 'மாயமென்' என்றாள். அன்றித் தான் தலைவனைக் காணாது துயருறும் போது தம்மேலன்புடையன போன்று அழுது நீர் சொரிந்து அவனைக் கண்டபோது பகையுடையனபோன்று விழித்து மறைத்தலின் அங்ஙனங் கூறினளெனினுமாம். "துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால், நெஞ்சத்த ராவர் விரைந்து" (திருவள்ளுவர் - கனவுநிலையுரைத்தல்-அ) என்றவாறே இது கனவுநிலை. ஆல்-அசை. (சு)

வாட்ட டங்கண் மானை யாவி வாட்ட மாரன் வார்சிலை
பூட்டி யெய்த பகழி தைத்த புழைநு ழைந்து தென்றல்போ
யீட்டுகின்ற காம வெந்த ழற்பி ழம்பை யெரியெழ
மூட்டி மேலெ ழுந்த தாகு நெட்டு யிர்ப்பு முடிவினே.

இ - ள். நெடு உயிர்ப்பு - பெருமூச்சானது, மாரன் - மன்மதனாகிய (வேடன்) ஆனவன், வாள் - வாள்போலும், தடம்-விசாலப்பொருந்திய, கண் - கண்களை யுடையவளாகிய, மானை - மானை, ஆவி - உயிரின்கண், வாட்ட - வருத்துதற்கு, வார் சிலை - நெடியவில்லிலே, பூட்டி - தொடுத்து, எய்த - செலுத்தப்பெற்ற, பகழி - அம்புகளானவை, தைத்த - தைத்தலாகிய, புழை - துளைகளில், நுழைந்து-(ஒருவருமறியாமற்) புகுந்து, போய் - சென்று, ஈட்டுகின்ற - (நட்பாகச்) சேர்க்கப்படுகின்ற, காமம் - காமமாகிய, வெம் - வெப்பம்பொருந்திய, தழல் - நெருப்பினது, பிழம்பை - செறிவை, எரியெழ - எரிய, மூட்டி - மூள்வித்து, முடிவின் - (அச்செய்கை) முடிவில், மேல் - புறத்தே, எழுந்தது - புறப்பட்டதாகிய, தென்றல் - தென்காற்றே, ஆகும் - ஆகும், எ - று.

க-து. தமயந்தியினது பெருமூச்சானது மன்மதபாணந் தைத்த புழையிலே தென்றற் காற்றானது நுழைந் தக்கினியை மூள்வித்து மேலெழுந்ததற் கொப்பாகும் என்பதாம்.

மானையென முதற்பொருளில் ஐயுருபு வந்தமையால் ஆவிக்குக் கண்ணுருபு விரிக்கப்பட்டது. இதற்கு "முதன்முனை வரிற் கண்ணென் வேற்றுமை, சினைமுன் வருத றெள்ளி தென்ப" (தொல்காப்பியம்-வேற்றுமைமயங்கியல்-கு) என்பதுவிதி. தியிடுவோர் பிறரறியாமற் கள்ளவழியாற் செல்வராதலின் 'புழை நுழைந்தது' என்க. காற்றிற்கு நெருப்பு நட்பாதலால் மூட்டியது. நட்பாதல் "எரிசுசிசிகியே யாரலிறைவன் காற்றின் சகாயன்" (சூடாமணிநிகண்டு - தெய்வப்பெயர்த்தொகுதி) என்பதனாலறிக. அக்காற்றுப் பின்பு தனக்குரிய வழியாகிய மூக்கினூற் புறப்படுதலால் முன் பிறரறியாமற் புழைவழியாற் சென்றமை அனுமிதிக்கப்பட்டது. [தமயந்தியை மானாக அருவகஞ்செய்ததற்கேற்ப மாரனை வேடனாக வுருவகஞ் செய்யலாயிற்று. பெருமூச்சை அப்படிப்பட்ட தென்றலாகக் குறித்தலால் பொருட்டற்குறிப்பணியாம்.] (எ)

செயிர்ப்பின் மார னெய்ய வாவி யில்லை யுண்டு சிறிதென
வயிர்ப்ப வாடி விரக வெம்மை யழலின் மூழ்கி யனருறும்
பயிர்ப்பில் கோதை நெஞ்சு ணோய்கள் பரிவி னோடு மழலுறு
நெட்டுயிர்ப் புரைத்த தோநடுக்க முற்ற துத்த ரீயமேல். [நெட்

இ - ள். மாரன் - மன்மதனானவன், செயிர்ப்பின் - கோபத்தினால், எய்ய - (அம்புகளைச்) செலுத்த, ஆவி - உயிரானது, இல்லை - இல்லையெனவும், உண்டு சிறிது எனு - சிறிதுண்டெனவும், அயிர்ப்ப - ஐயங்கொள்ள, வாடி - தளர்ந்து, விரகம் - விரகமாகிய, வெம்மை - வெப்பம் பொருந்திய, அழலின் - நெருப்பினுள், மூழ்கி - முழுகி, அனர் - வருத்தத்தை, உறும் - அடைந்த, பயிர்ப்பில் - அருவருப்புக் குணமிழந்திருக்கிற, கோதை - மங்கையினது, நெஞ்சுள் - நெஞ்சத்தினுளுண்டாகிய, நோய் - நோய்களை, பரிவினோடும் - இரக்கத்தினாலே, அழலும் - சூடு பொருந்திய, நெட்டு உயிர்ப்பு - பெருமூச்சானது, உரைத்தது - சொல்லியதனால், மேல் - (அந்நெஞ்சத்தின்) மேலிடத்துள்ள, உத்தரீயம் - உத்தரீயமானது, நடுக்கம் - நடுக்கத்தை, உற்றதோ - அடைந்ததோ, எ - று. [ஓகாரம் உற்றதிற் கூட்டப்பட்டது.]

க - து. தமயந்தி நெஞ்சு நோய்களை நெட்டுயிர்ப்பானது காட்டியது என்பதாம்.

இல்லையோ வுண்டோவென வருகிற ஐயவேோகாரங்கள் தொக்கு வந்தன. அருகுறும் என்ற பெயரெச்சவினை நெஞ்சென்னும் வினைமுதற்பெயர் கொண்டது. நெஞ்சென்பது மனத்திற்கும் அம்மனத்திற் கிடமாகிய மார்பிற்கும் பெயராதலால் அவ்வாற்றுமை பற்றி 'நெஞ்சுநோய்கள்' என்றார். "நெஞ்செஃப மனமார்பின்பேர்" (ஆதிப்பொருணிகண்டு) இதனாலறிக. அரசமகளிர் அரையிற் பாவாடை யுடுத்து மார்பின்மே லுத்தரீயஞ் சேர்ப்பது வழக்கம். ஒருவரிடத்திற்கு இடையூறு நேரிடக்கண்டோர்க்கு இரக்கமுண்டாமாதலின் 'பரிவினோடும்' என்றார். தனக்காதாரமாகிய நெஞ்சிற்கு நோயுண்டானமையால் ஆதேயமாகிய வுத்தரீயம் அஞ்சி நடுங்கியதென்க. [உத்தரீயத்தினது நடுக்கத்திற்கு ஏதுவாகாத பெருமூச்சுரைத்தலை யேதுவாகக் குறித்தலாலும் உரைத்தலாகிய விடயம் இல்லாமையாலும் இல்புலவேதுத்தற்குறிப்பணி.] "பயிர்ப்பில் கோதை காம நோய்கள்" எனவும் பாடமுண்டு. (அ)

மையரிக்கண் வதன மங்கை வடிவமைந்த சீறடிச்
செய்ய பங்க யங்க ளுண்டு மிழ்ந்த செய்ய கதிர்கொலோ
தொய்யில் வெம்மு லைத்த டஞ்சு மந்து நொந்து வாடிய
வையநுண்ம ருங்குன் மெய்ய ழன்றெ ழுந்த வெம்மையே.

இ - ள். தொய்யில் - சந்தனக்கோலத்தினையுடைய, வெம் - விருப்பஞ்செய்கின்ற, முலை - முலைகளாகிய, தடம் - மலைகளை, சுமந்து - தாங்கி, நொந்து - வருந்தி, வாடிய - இளைத்த, ஐயம் - (உண்டோ வில்லையோவென்னும்) ஐயத்தைத் தருகின்ற, நுண் - நுண்ணிய, மருங்குல் - இடையையுடையவளது, மெய் - உடம்பிலிருந்து, அழன்று - சுட்டுக்கொண்டு, எழுந்த - புறப்படுகின்ற, வெம்மை - வெப்பமானது, மை - அஞ்சனத்தையும், அரி - இரேகைகளையும் உடைய, கண் - கண்களும், வதனம் - முகமும், அங்கை - உள்ளங்கைகளும், வடிவு - அழகால், அமைந்த - நிறைந்த, சீறு - சிறிய, அடி - அடிகளுமாகிய, செய்ய பங்கயங்கள் - செந்தாமரை மலர்களாலே, உண்டு-(அதற்குமுன்) உட்கொண்டு, உமிழ்ந்த - (அப்போது) க்கக்கப்படுகின்ற, செய்ய கதிர் கொல் - சூரியகிரணமோ, எ - று.

க - து. தமயந்தி உடம்பி லெழுந்த சூடானது இவளது அவயவத் தாமரைகள் உண்டுமிழ்ந்த சூரியகிரணமோ என்பதாம்.

செய்யகதிரெனவே சூரியகிரணமென்பது பெறப்பட்டது. அக்கிரணத்தைத் தங்களுக்கு நாயகனாகிய சூரியனாலே தரப்பட்டதென்

கிற விருப்பத்தா லுண்டனவென்க. [காம வெம்மையை அப்படிப் பட்ட கிரணமாகக் குறித்தலாலே பொருட்டற்குறிப்பணி. இதற்கு உருவகம் அங்கம், ஆதலால் உறுப்புறுப்பிக்கலவையணி.] (௯)

அலைத்த டங்க ணருவி பாய வார வண்ட லழியுமென்
முலைத்த டத்தி னூடு தோன்று முகமு நீல வொண்கணுஞ்
சிலைத்த டக்கை மாரன் மாது சிந்தை மீத ழுந்திட
வுலைத்து விட்ட கமலம் வெய்ய வுற்ப லத்தை யொத்தவே.

இ - ள். தடம் - விசாலம்பொருந்திய, கண் - கண்களிலிருந்து, அலை - அலையையுடைய, அருவி - வெள்ளமானது, பாய - பாய்தலினாலே, ஆரம் - சந்தனத்தினது, வண்டல் - குழம்பானது, அழியும் - அழியப்பெற்ற, மெல்-மெல்லிய, முலை தடத்தினூடு - முலைப்பரப்பினுள்ளே, தோன்று - காணப்பட்ட, முகமும் - முகத்தினது (நிழலும்), நீலம் - கருமைபொருந்திய, ஒள் - ஒள்ளிய, கணும் - கண்ணினது (நிழலும்), சிலை - (கருப்பு) வில்லையுடைய, தடம் - பெருமை பொருந்திய, கை - கையையுடைய, மாரன் - மன்மதனுல், மாது - மங்கையினது, சிந்தைமீது - நெஞ்சின்கண், அழுந்திட - அழுந்த, உலைத்து - இழுத்து, விட்ட - விடப்பட்ட, கமலம் - தாமரைப்பூ (அம்பையும்), வெய்ய - கொடிய, உற்பலத்தை - நீலோற்பலப்பூ (அம்பையும்), ஒத்த - ஒத்திருந்தன, எ - று.

க - து. தமயந்தி முலையினிடத்துத் தோன்று முகமுங் கண்களும் மன்மதனது தாமரைப்பூங் கணையையும் நீலோற்பலக் கணையையும் ஒத்திருந்தன என்பதாம்.

முகமுங் கண்ணும் அவற்றினிழல்களுக் காதலால் ஆகுபெயர்கள். நீலோற்பலங் கொல்லுகின்ற பாணமாதலால் 'வெய்யவுற்பலம்' என்றார். "முல்லை இடைகாட்டு மாதே முழுநீலங், கொல்லு மதனம்பின் குணம்" (அரதனச்சுருக்கம்-௧௧) என்பதனுலறிக. அவள் தலை வளைத்திருக்கும்போது முகமுங் கண்களும் முலைமேற்பாய்ந்த கண்ணீரிலே பிரதிபிம்பித்தனவென்க. [அந்நிழல்களை அப்படிப் பட்ட மன்மத பாணங்களாகக் குறித்தலால் பொருட்டற்குறிப்பணி. முகத்தையுங் கண்ணையும்வைத்த முறையே கமலத்தையு முற்பலத்தையும் வைத்தலால் முறைநிரனிறையணி. இவ்விரண்டுஞ் சேர்தலால் சேர்வையணி.] (௧௦)

வேயை வென்ற பசிய தோள ணங்கு காம வெம்மையாற்
றீயின் மேய தளிரின் வாடி யழிதல் கண்டு சிந்தியா

நேய நெஞ்ச மழிய மைக்க ணீரி றைப்ப நிலைதளர்ந்
தாய வெள்ளம் விரக வெம்மை யாற்று வான்று ணிந்ததே.

இ - ள். ஆய வெள்ளம்-(வெள்ளம்போலும்) மகளிர் கூட்டமானது, வேயை-மூங்கிலை, வென்ற-ஜயித்த, பசிய-பசுமைபொருந்திய, தோள் - தோள்களையுடைய, அணங்கு-தெய்வப்பெண்போல்பவள், காமம் - காமத்தினது, வெம்மையால் - வெப்பத்தால், தீயில் - நெருப்பில், மேய - விழுந்த, தளிரின் - தளிர்போல், வாடி - மெலிந்து, அழிதல் - வருந்துதலை, கண்டு - பார்த்து, சிந்தியா - (இதற்கு நாம் செய்யக்கடவதியாதென்று) ஆலோசித்து, நேயம் - அன்பையுடைய, நெஞ்சம் - மனமானது, அழிய - வருந்தவும், மை - மையையுடைய, கண் - கண்களானவை, நீர் - நீரை, இறைப்ப - பொழியவும், நிலை தளர்ந்து - நிலைசோர்ந்து, விரக வெம்மை - விரகத்தாலாகிய (அக்காம) வெப்பத்தை, ஆற்றுவான் - தணிக்கும்படியாக, துணிந்தது - நிச்சயித்தது, எ - று.

க - து. தமயந்தியினது காமவெப்பத்தைத் தணிக்கும் பொருட்டுப் பெண்கள் கூட்டம் புறப்பட்டது என்பதாம். (கக)

மதுப்பி லிற்று சோலை வாயின் மணிதெ ளித்த நீரதாம்
புதுப்பு னற்ற டத்தி லிந்து காந்த வேதி கைப்புறத்
துதித்த திங்கள் வாண்மு கத்த ணங்கை மார னொண்கணை
வெதுப்பு கின்ற தொழிய வாச மெல்ல ணைக்கி டத்தினர்.

இ - ள். மது - தேனை, பிலிற்று - துளிக்கின்ற, சோலைவாயில் - பொழிலின்கண், மணி - முத்துகளை, தெளித்த - தெளித்தலாகிய, நீரதாம் - குணமுடையது போல்வதாகிய, புது - புதிய, புனல் - நீரையுடைய, தடத்தில் - குளக் (கரை)யில், இந்து காந்தம் - சந்திர காந்தத்தாலாகிய, வேதிகை புறத்து - மேடையின்மேல், வாசம் - பரிமளம் பொருந்திய, மெல் - மெல்லிய, அணை - (பூ) அணையின்மேல், உதித்த - உதயமாகிய, திங்கள் - சந்திரன்போலும், வாள் - காந்தி பொருந்திய, முகத்து - முகத்தையுடைய, அணங்கை - தெய்வமாதுபோல்பவளை, மாரன் - மன்மதனது, ஒள் - ஒள்ளிய, கணை - அம்பானது, வெதுப்புகின்றது - சுடுகின்றது, ஒழிய - நீங்கும்படியாக, கிடத்தினர் - படுக்கவைத்தார்கள், எ - று.

க - து. பாங்கியர் தமயந்தியைச் சோலையிற் றடாகக்கரையில் சந்திரகாந்த மேடைமேற் பூவணையிற் கிடத்தினர்கள் என்பதாம்.

'திங்கள் வாண்முகத் தணங்கு' என்றதனால் திங்கள்போல் விளங்குகிற அவள் முகத்தொளியைச்சேர்ந்து தண்ணீர்சொரிந்து வெப்பமொழிக்கு மென்பதுபற்றிப் பகர்காலத்திலே சந்திரகாந்த மேடையிலே சேர்த்திருரென்க. பகலென்பதுபின் 'குரவவிழ்ந்த' என்னும் பாட்டாலறிக. 'வாசமெல்லணை' எனலால் பூவணையென்பது பெறப்பட்டது. (௯௨)

மலய வெற்பு யிர்த்தொர் காதம் வாச நாறு மாரமு
மலைக டற்பி றந்தி லங்கு மணிகொள் கோவை யாரமு
முலையின் வெப்பி னீற தாகி முழுமெ யும்பு தைத்தலாற்
சிலைம தற்கு வெருவி யீச னுருவெ டுத்தல் சிவனுமே.

இ - ள். மலயவெற்பு - பொதிய மலையினால், உயிர்த்து - தரப்பட்டு, ஓர் காதம் - ஒருகாதமளவாக, வாச நாறும் - வாசனைசெய்கின்ற, ஆரமும் - சந்தனமும், அலை - அலைகளையுடைய, கடல் - கடலின்கண், பிறந்து - உண்டாகி, இலங்கு - விளங்காநின்ற, அணி - அழகை, கொள் - கொண்ட, கோவை - வடங்களிலுள்ள, ஆரமும் - முத்துகளும், முலையின் - முலைகளது, வெப்பின் - (காமசுர) வெப்பத்தினால், நீறதாகி - சாம்பலாகி, முழு மெய்யும் - (தமயந்தியின்) உடம்பு முழுதையும், புதைத்தலால்-மறைத்தலால் (தமயந்தியானவள்,) சிலை - வில்லையுடைய, மதற்கு - மன்மதனுக்கு, வெருவி - அஞ்சி, ஈசன் - பரமசிவனது, உருவு - வடிவத்தை, எடுத்தல் சிவணும் - எடுத்தவள்போலும், எ - று.

க - து சந்தனமும் முத்துகளுந் தமயந்தி முலை வெப்பத்தினாலே நீறாகித் திருமேனிமுழுதையு மறைத்தலால் மன்மதனுக்குப் பயந்து சிவனைப்போல வடிவெடுத்தாள்போலு மிருந்தது என்பதாம்.

சந்தனமும் முத்தும் முலைகளின்மேலே தரிக்கப்பட்டு அவற்றின் வெப்பத்தால் அவ்விடங்களிலே நீறாயினும் அந்நீறு அவளிடை பொருந்தாது புரளும்போது சரீரமுழுதும் படிதலால் 'முலையின் வெப்பி னீற தாகி முழுமெ யும்பு தைத்தலால்' என்றார். பரமசிவன் முன்னொருகாலத்திலே மன்மதனை யெரித்தலால் தன்வடிவமுழுதமுள்ள நீற்றைக்காணின் தன்னை அவனென்று அஞ்சுவானென்று அப்பரமசிவ னுருவெடுத்தாளாகக் கூறினார். எடுத்தலென்னுந் தொழிற்பெயர் ஆகுபெயராய் வினைமுதலுக்காயிற்று. [அக்காரணத்தினாலே தமயந்தியை ஈசனுருவெடுத்தவளாகக் குறித்தலால் தற்குறிப்பணி.] (௯௩)

வளைத்த டக்கை வெம்மை தீர வார மேல்வ ளைத்ததிற்
றெளித்த வாச நீர்நி றைத்து முத்த ணிந்த செவ்விவான்
முளைத்த திங்க டார கைக்கு லங்க ளோடு மொய்த்துமா
துளத்து வேளை யார்வ மோடு காண வந்த தொத்ததே.

இ - ள். வளை - வளையல்களையுடைய, தடம் - பெரிய, கை - கைகளையுடையவளது, வெம்மை - (காமசுர) வெப்பமானது, தீர - நீங்க, ஆரம் - சந்தனத்தால், மேல் - (மார்பின்) மேல், வளைத்து - (கரை) கோலி, அதில் - அதனடுவில், தெளித்த - தெளிந்த, வாச நீர் - பனிநீரால், நிறைத்து - நிறைவித்து, முத்து-முத்துகளை, அணிந்த செவ்வி - (சுற்றிலும்) அணிந்தமையா லுண்டாகிய அழகானது, மாது - தமயந்தியினது, உளத்து - நெஞ்சிலிருக்கின்ற, வேளை-மன்மதனை, காண-பார்க்க, வான்-ஆகாயத்திலே, முளைத்த-தோன்றுகிற, திங்கள் - சந்திரனானவன், தாரகை குலங்களோடு - உடுக்கூட்டங்களுடனே, மொய்த்து - நெருங்கி, ஆர்வமோடு-ஆசையோடு, வந்தது - (அங்கே) வந்திருத்தலா லுண்டாகிய அழகை, ஒத்தது - நிகர்த்தது, எ - று.

க - து. தமயந்தி மார்பில் சந்தனத்தை வளைத்துப் பனிநீரை விட்டு முத்துகளை யணிந்த அழகானது சந்திரன் நட்சத்திரங்களோடு தமயந்தி யுள்ளத்து மன்மதனைக் காணவந்ததை ஒத்திருந்தது என்பதாம்.

தெளிந்தவென்பது எதுகை நோக்கி வலித்தல் விகாரமாயிற்று. அப்பனிநீர் சந்திரன்போன்றும், அதனைச் சூழ்ந்த முத்துகள் சந்திரனைச் சூழ்ந்த வுடுக்கள்போன்றும் தோன்றினவென்க. சந்திரன் உடுக்களுக்குத் தலைவனாதலால் 'தாரகைக்குலங்களோடு' என்றார். "வீபத்துடுபதி யமுத கிரணன்" (திவாகரம்-தெய்வப்பெயர்த் தொகுதி) என்பதனாலறிக. சந்திரனுக்கு மன்மத னட்பாளனாதலால் 'ஆர்வமோடு காண வந்தது' என்றார். [அவ்வணிந்த அழகை அப்படி சந்திரன் வந்த அழகாகக் குறித்தமையால் தற்குறிப்பணியாம்.] (கசு)

பூசு சாந்த மெய்யினிற் பொருக்கெ ழுந்து தீந்தன
வீசு மால வட்ட நெஞ்சில் விரக வெம்மை மூட்டின
வாசம் வீசு நெட்டு யிர்ப்பின் மாலை தீந்து வாடின
வாசை நோயின் வெம்மை தன்னை யாற்றலாகு மேகொலாம்.

இ - ள். பூசும் - பூசப்பட்ட, சாந்தம் - சந்தனமானது, மெய்யினில் - உடம்பின்கண், பொருக்கு - பொருக்காக, எழுந்து-எழும்பி,

தீந்தன - கரிந்தன; வீசும் - வீசப்பட்ட, ஆலவட்டம் - சிவிறிகளான வை, நெஞ்சில்-நெஞ்சிலுள்ள, விரகம் - விரகத்தாலாகிய, வெம்மை- நெருப்பை, மூட்டின - மூள்வித்தன; மாலே - மாலைகளானவை, வாசம் - வாசனையை, வீசும் - வீசுகின்ற, நெட்டுயிர்ப்பின் - பெரு மூச்சினாலே, தீந்து - கருகி, வாடின - புலர்ந்தன; ஆசை நோயின் - காமநோயினது, வெம்மை தன்னை - வெப்பத்தை, ஆற்றலாகுமே கொல் - (ஒருவரால்) ஆற்றலாமோ, எ-று.

க - து. சந்தனங்கள் தீந்தன, ஆலவட்டங்க ளக்கினியை மூட்டின, பெருமூச்சால் மாலைகள் வாடின, ஆகையால் காமாக்கினியை யவிக்கலாகுமோ என்பதாம்.

வெம்மையென்னும் பண்புப்பெயர் பண்பியாகிய நெருப்பிற் காதலால் ஆகுபெயர். சிவிறியின் காற்றுப் படுந்தோறும் நெருப்பு மூளுதல்போல் இவள் காமமூளுதலால் 'மூட்டின' என்றார். தமயந்தி பத்துமினியாதலால் அவள் மூச்சிற்கு வாசனை சொல்லப்பட்டது. 'நெட்டுயிர்ப்பின் மாலை தீந்து வாடின' எனவே அப்பெருமூச்சு மிக வும் வெப்பமுடைத் தென்றதாயிற்று. ஆம் - அசை. (கஞ)

ஐய ரிக்கண் மாதின் மெய்ய ழன்ற வெம்மை யாற்றலாத்
தொய்யில் வெம்மு லைப்பு தைத்த தோட விழ்ந்த தாமரை
மையன் மாம தத்த யானை நளன்ம ணந்தில் வாறுதன்
கையி னுற்பி டிப்ப னென்று காட்டு மாறு போன்றதே.

இ - ள். ஐயரி - பஞ்சவரிகளையுடைய, கண் - கண்களையுடைய, மாதின் - மங்கையினது, மெய் - உடம்பின்கண், அழன்ற - சுடுகின்ற, வெம்மை - (காம) வெப்பத்தை, ஆற்றலா - பொறுக்கமாட்டா மல், தொய்யில் - சந்தனக்கோலத்தையுடைய, வெம் - விருப்பஞ்செ ய்கிற, முலை - முலைகளை, புதைத்த - சுருங்கி யமுக்குகின்றனவும், தோடு - இதழ்களானவை, அவிழ்ந்த - விரியப்பெற்றனவும் ஆகிய, தாமரை - தாமரை மலர்கள், மையல் - மயக்கத்தைத் தருகின்ற, மா - பெரிய, மதத்த - மதத்தையுடைய, யானை-யானையையுடைய, நளன்- நளராசனானவன், மணந்து - (உன்னை) விவாகஞ்செய்து, இவ்வாறு- இவ்வண்ணமாக, தன் - தன்னுடைய, கையினால் - கைகளாலே, பிடி ப்பன் என்று - பற்றுவானென்று, காட்டுமாறு போன்ற-காட்டுந்தன் மையன போன்றன, எ - று.

க - து. தமயந்தி முலைகளைப் பாங்கியரால் அமுக்கப்பட்ட தாம ரைமலர்களானவை நளன் விவாகஞ்செய்து அவன்கையா லிவ்வாறு பிடிப்பனென்று காட்டல்போன் றிருந்தன என்பதாம்.

அத்தாமரை மலர்கள் நளன் கைகள்போன்றும், அம்மலர்களி னிதழ்கள் அக்கைகளின் விரல்கள்போன்றும் இருத்தலால் அவை காமசரவெப்பத்தால் சுருங்கி மூலைகளை யழுத்துதல் கையினாற் பிடித்தல்போன்றதென்க. "வெம்மை யாற்றுவான்" எனவும் பாடமுண்டு. [அத்தாமரைகளை அப்படி காட்டுவனவாகக் குறித்தலால் பொருட்டற்குறிப்பணி.] (கசு)

குரவ விழ்ந்த கோதை வாண்மு கங்கு விர்ந்த திங்க ளென்
றுருகி யிந்து காந்த நீரு குப்ப வெம்பி யுரைசெய்வா
ளிரவு திங்க ளென்று பேர்ம றைத்தெ ழுந்த விரவியும்
வருத லின்றி யிரவி காந்த மழல்வ தென்ன வாறெனா.

இ - ள். அவிழ்ந்த - மலர்ந்த, குரவு - குராமலர்களைக்கொண்ட, கோதை - கூந்தலையுடையவளது, வாள் - காந்திபொருந்திய, முகம் - முகத்தை, குவிர்ந்த - நிறம் பொருந்திய, திங்கள் என்று - சந்திரனென்று மயங்கி, இந்து காந்தம் - (தனக்கிடமாகிய) சந்திரகாந்தமானது, உருகி - உருகி, நீர் - நீரை, உகுப்ப - பொழிய, வெம்பி - வெந்து, இரவு - இரவில், திங்கள் என்று - சந்திரனென்று சொல்லப்பட்டு, பேர் மறைத்து - (சூரியனென்கிற தன்னியற்) பெயரை மறைத்து, எழுந்த - உதயமாகிக்கொண்டிருந்த, இரவியும் - சூரியனும், வருதல் இன்றி - வாராதிருக்க, இரவிகாந்தம் - இச்சூரிய காந்தமானது, அழல்வது - தீயைப் பொழிவது, என்ன ஆறு எனா - என்ன காரணத்தாலென்று, உரைசெய்வாள் - சொல்லுவாளானாள், எ - று.

க - து. தமயந்தியானவள் காமமிகுதியால் சந்திரனைச் சூரியனென்றும், சந்திரகாந்தத்தைச் சூரியகாந்தமென்றும், நீர்பொழிதலைத் தீப்பொழிதலென்றுஞ் சொன்னாள் என்பதாம்.

தனது தாபமிகுதிக்குக் காரணமாதல்பற்றிச் சந்திரனைச் சூரியனென்றும், சந்திரகாந்தத்தைச் சூரியகாந்தமென்றும், நீர்பொழிதலைத் தீப்பொழிதலென்றும் கூறினாளென்க. [முகத்தைச் சந்திரனென்று மயங்குதலால் மயக்கவணி. பேரென்கிற சொல்லினாலே சந்திரன் சந்திரகாந்தம் இவற்றின் றன்மையை யொழித்தலாலே வஞ்சகவொழிப்பணி.] (கஎ)

[இதுமுதல் விரண்டு பாட்டுகளால் மன்மதன் போர் சொல்லப்படுகின்றது.]

உருவி லானெ திர்ந்து வெய்ய கன்னல் விற்கு னித்துடன்
னருண வொண்ணி றத்த சோக வனல வம்பு றைத்தலும்

புரிந ரம்பி ரங்கு சொல்லி புருவ விற்கு னித்துநேர்
வருண வாளி விடுதல் போன்ம ழைக்க ணம்பி றைக்குமே.

இ - ள். உருவிலான் - மன்மதனானவன், எதிர்ந்து - முன்னுற்று, வெய்ய - கொடிய, கன்னல் வில் - கருப்புவில்லை, குனித்து - வளைத்து, உடன் - உடனே, அருண ஒள் நிறத்து - சிவப்பாகிய வொள்ளிய நிறத்தையுடைய, அசோகம் - அசோக மலர்களாகிய, அனல் அம்பு - ஆக்கினேயாஸ்த்ரத்தை, இறைத்தலும் - செலுத்திய வளவில், புரி - கட்டையுடைய, நரம்பு - (வீணையினது) தந்தியானது, இரங்கு - இரங்கப்பெறுகின்ற, சொல்லி - சொல்லையுடையவள், புருவ வில் - (தன்) புருவமாகிய வில்லை, குனித்து - வளைத்து, நேர் - (ஆக்கினேயாஸ்த்ரத்துக்கு) எதிராக, வருண வாளி - வாருணாஸ்த்ரத்தை, விடுதல் போல் - செலுத்துதல்போல், மழை - குளிர்ச்சிபொருந்திய, கண் - கண்களால், அம்பு - நீரை, இறைக்கும் - பொழிவாளானாள், எ - று.

க - து. மன்மத னக்கினியாஸ்திரந் தொடுத்தவளவில், தமயந்தி புருவமாகிய வில்லைவளைத்துக் கண்ணீராகிய வருணாஸ்திரந் தொடுத்தாள் என்பதாம்.

ஆக்கினேயாஸ்த்ரம் அக்கினியைத் தெய்வமாகக் கொண்டது. வாருணாஸ்த்ரம் வாயவ்யாஸ்த்ரம் என்பவற்றுக்கும் அப்படியே பொருள்கொள்க. அனலை யவிப்பது நீராதலாலே ஆக்கினேயாஸ்த்ரத்துக்கு எதிர் வாருணாஸ்த்ரம் சொல்லப்பட்டது. [அசோகமலராகிய ஆக்கினேயாஸ்த்ரந் தாக்கப்பொறாது தமயந்தி கண்ணீர் பொழிந்தலை அதற்கு எதிர்வாருணாஸ்த்ரஞ் செலுத்துதலாகக் குறித்தலாலே தற்குறிப்பணி.] இதன் முதனூலிலே சந்திரன் ஆக்கினேயாஸ்த்ரமாகச் சொல்லப்பட் டிருக்கின்றது. இதிலே நிலாத்தோற்றம் பின் சொல்லப்படுதலால் அது பொருந்தாதாயிற்று. (கஅ)

தூய திங்கள் வெண்கு டைக்க ருப்பு வில்லி தொடுமலர்ச்
சேய தேறல் வருண வாளி முனிவி னிற்செ லுத்தலும்
வேயை வென்ற தோளி னுள்வெ துப்பி யுள்ளம் விம்முறு
வாயு வாளி போல நெட்டு யிர்ப்பெ றிந்து வாடுமே.

இ - ள். தூய - பரிசுத்தமாகிய, திங்கள் - சந்திரனாகிய, வெண்குடை - வெள்ளைக் குடையையும், கருப்பு வில்லி - கருப்புவில்லையுமுடைய மன்மதனால், தொடு - தொடப்பட்ட, மலர் - மலர்களது, சேய தேறல் - செந்தேனாகிய, வருண வாளி - வாருணாஸ்த்ரத்தை,

முனிவினில் - கோபத்தால், செலுத்தலும் - செலுத்தியவளவில், வேலைய - மூங்கிலை, வென்ற - ஜயித்த, தோளினுள் - தோள்களை யுடையவள், வெதும்பி - வெம்பி, உள்ளம் - உள்ளத்தில், விம்முறு - வருந்தி, வாயு வாளி போல் - வாயவ்யாஸ்த்ரத்தைச் (செலுத்துதல்) போல், நெடு உயிர்ப்பு - பெருமூச்சை, எறிந்து - விட்டு, யாடும் - சோர்வாளானுள், எ - று.

க - து. மன்மதனுனவன் மலர்த்தேனுகிய வருணுஸ்திரந் தொடுத்தபோது தமயந்தியானவள் பெருமூச்சாகிய வாயுவாஸ்த்ரந் தொடுத்தாள் என்பதாம்.

மழையைத் தூரப்பது காற்றுதலால் வாருணுஸ்த்ரத்துக்கு வாயவ்யாஸ்த்ரம் பகையாதலறிக. [பூந்தேனுகிய வாருணுஸ்த்ரம் பொறுமல் தமயந்தி பெருமூச்சு விடுதலை அதற்கு எதிர் வாயவ்யாஸ்த்ரஞ் செலுத்துதலாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. (கக)

[இதுமுத லிரண்டு பாட்டுகளாலே தமயந்தி காமநோயின் கொடுமையை மகளிர்க்குக் கூறுமாறு சொல்லப்படுகின்றது.]

கூறு மங்கை யீரு ளங்கொ தித்து வெம்பு காமநோய்
தேறுகின்று லீரி தென்கொ றேவி யைப்பி ரிந்ததா
லாற ணிந்தும் விரக வெம்மை யழல்வெ டித்த தன்றுகொ
னீற ணிந்த கடவு ளுக்கு நெற்றி யிற்க ணுனதே.

இ - ள். கூறு - (என்னிடத்தே குறைவைச்) சொல்லுகின்ற, மங்கையீர் - மாதரே, உளம் - (என்) உள்ளமானது, கொதித்து - கொதிப்புற்று, வெம்பு - வெம்புதற்குக் காரணமாகிய, காமநோய் - காமநோயின் (கொடுமையை), தேறுகின்றிலீர் - அறிகின்றீரில்லை; இது - இது, என் - என்ன பேதைமை; நீறு - விபூதியை, அணிந்த - பூசிய, கடவுளுக்கு - பரமசிவனுக்கு, நெற்றியில் - நெற்றியினிடத்து, கண்ணுனது - (நெருப்புக்) கண்ணுனது, தேவியை - (தன்) மனைவியை, பிரிந்ததால் - நீங்கியதால், ஆறு - கங்கையை, அணிந்தும் - (முடியின்மேலே) தரித்தும், வெடித்தது - (அந்நெற்றியைப்)பிளந்து தோன்றியதான, விரகம் - காமமாகிய, வெம்மை - வெப்பத்தை யுடைய, அழலன்றுகொல் - நெருப்பன்றே, எ - று.

க - து. பெண்களே! காமக்கனற் கொடுமையை நீங்க ளறிய வில்லை; சிவன் உமையைப் பிரிந்தகாலத்துக் கங்கையைத் தரித்தும் அக்காமாக்கினி நெற்றிக்கண்ணுக வெடித்ததல்லவோ, என்பதாம்.

தேவியையென்னு மையுருபு நீக்கப்பொருளில் வந்தது. தக்கன் கடவுளை யிகழ்ந்து வேள்வி செய்தபோது அவன் மகளென்னு முறைபற்றி வந்த தாக்ஷாயணி யென்கிறபேரை யொழித்துப் பார்வதி யென்கிற பெயரைக்கொள்ள மலையரசனிடத்து வளர்ந்தபோது அவளைப் பிரிந்திருந்தமை கொள்க. தலைமேற் கங்கை யிருக்கவும், காமத்தீ யடங்காமல் உள்ளே பொங்கி யெழுந்து நெற்றியளவுஞ் சென்று அக்கங்கைத் தடையா லுச்சியைப் பிளந்து செல்லமாட்டாம னெற்றியைப் பிளந்து வெளிப்பட்டதென்க. கடவுளுக்கே அப்படி நேரிட்டதாயின் மெல்லிய வொரு சிறு பெண்பாலாகிய வெனக்கு எப்படி யிராதென்றதாயிற்று. [கடவுள் காமத்தாற் படும்பாட்டைச் சொல்லித் தண்டாபூபிக நியாயத்தினாலே தான்படும்பாடு தோன்றச் செய்தலாற் செய்யுட்பொருட்பேறணி.] (உ௦)

பண்ணமைந்த தீஞ்சொ லீர்ப ழிப்ப தென்னை மாநிலத்
துண்ண யந்த தலைவர் வீயி னுயிரை யன்ன மாதரா
ரெண்ணு கின்ற காம மென்னு மெரிய ழற்கு வெந்தழ
றண்ணி தென்று மூழ்கி யந்த வெம்மை யைத்த ணிப்பரால்.

இ - ள். பண் - பாட்டிசைபோல், அமைந்த - நிறைந்த, தீ-மதுரம்பொருந்திய, சொலீர் - சொற்களையுடையவரே, பழிப்பது - பழிப்பதற்குக் காரணம், என்னை-யாது; மா நிலத்து-பெரிய பூமியின்கண், உள் - உள்ளத்தில், நயந்த - விரும்பப்பட்ட, தலைவர் - (தம்) கணவரானவர், வீயின் - இறந்துபோனால், உயிரை அன்ன - (அக்கணவர்) உயிர்போலும், மாதரார் - மங்கையரானவர், எண்ணுகின்ற - சிந்திக்கப்படுகின்ற, காமம் என்னும்-காமமாகிய, எரி அழற்கு-நெருப்புக்கு, வெம் தழல்-வெப்பம் பொருந்திய நெருப்பானது, தண்ணிது என்று-குளிர்ச்சியதா யிருக்கின்றதென்று நினைத்து, மூழ்கி - (இந்நெருப்பினுள்ளே) மூழ்கி, அந்த வெம்மையை - அக்காம நெருப்பின் வெப்பத்தை, தணிப்பர் - நீக்குவார்கள், எ - று.

க - து. மாதர்களே! உலகிற் பெண்கள் தங்கள் கணவர்களிறந்தபோது காமாக்கினிக்குப் பயந்தல்லவா தீப்பாய்கிறார்களென்பதாம்.

'உயிரை யன்ன மாதர்' எனவே கற்புடைமகளிரென்றதாயிற்று. வெந்தழ றண்ணிதென்று மூழ்கல் - உடன்கட்டையேறல், அல்லது தீப்பாய்தல். கணவருடனிறந்தவர் வானுலகத்திலே பழையபடியே அவருக்கு மனைவியராயிருந்து காமசுகத்தை யனுபவிப்பாரென்பது அறநூலிற் சொல்லப்படுதலாலே அவ்வெம்மையைத் தணிப்பரென்

றாள். காமநோய் பொறுமை மகளிர்க்கெல்லாம் இயல்பாயிருக்க நீங்கள் பேதைமையால் என்னைப் பழிக்கின்றீரென்றதாயிற்று. [அப்படி மரணமடைதற்கு ஏதுவாகாத அத்தண்ணிதென்று முழுகலை யேதுவாகக் குறித்தலால் ஏதுத்தற்குறிப்பணி.] (உக)

என்று கூறி நுழை நுசுப்பி றுங்கொ லென்ன வினமணிக்
குன்று போலெ ழுந்து வீங்கு கொம்மை வெம்மு லைத்தடம்
பொன்ற யங்கு பசலை போர்ப்ப மம்மர் நோய்பொ றுக்கலா
மன்ற லோதி துயரு ழந்து மதிம யங்கு காலையில்.

இ - ள். என்று கூறி - என்று சொல்லி, நுழை - நுண்ணிய, நுசுப்பு - இடையானது, இறும் என்ன - ஒடியுமென, இனம் - இனமாகிய, மணி - மணிகளின் மயமாகிய, குன்றுபோல் - மலைபோல், எழுந்து - உயர்ந்து, வீங்கு - பருத்திருக்கின்ற, கொம்மை - இளமை பொருந்திய, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலை தடம் - முலைகளினிடங்கள், பொன் - பொன்போல், தயங்கு - விளங்காநின்ற, பசலை - பசப்புநிறத்தினால், போர்ப்ப - (தம்மை) மூடிக்கொள்ள, மம்மர்நோய் - காமநோயை, பொறுக்கலா - பொறாமல், மன்றல் - வாசனைபொருந்திய, ஓதி - கூந்தலையுடையவள், துயர் - துன்பத்தில், உழந்து - வருந்தி, மதி மயங்கு - அறிவு கலங்கப்பெறுகின்ற, காலையில் - காலத்திலே, எ - று.

க - து. தமயந்தியானவள் காமவிரகத்தைச் சகியாமல் அறிவு கலங்குங் காலத்தில் என்பதாம்.

இப்பாட்டும் பின்பாட்டும் குளகம்.

நையு நுண்ம ருங்குல் காம வெம்மை பற்று நாண்மலர்க்
கையி லங்கு வாண்மு கங்க ருந்த டங்கண் மெல்லடித்
துய்ய பங்க யந்தொ டிற்சு டுங்கொ லென்ன வெண்ணியோ
வெய்ய வன்க ரஞ்சு ருக்கி வேலை புக்கொ ளித்ததே.

இ - ள். நையும் - தேய்கின்ற, நுண் - நுண்ணிய, மருங்குல் - இடையையுடையவளது, காமம் - காமத்தீயினது, வெம்மை - வெப்பத்தை, பற்று - கொண்டிருக்கின்ற, கை - கைகளும், இலங்கு - விளங்காநின்ற, வாள் - ஒளிபொருந்திய, முகம்-முகமும், கரு-கரிய, தடம் - விசாலம்பொருந்திய, கண் - கண்களும், மெல் - மெல்லிய அடி - அடிகளுமாகிய, நாள் மலர் - அன்றலர்ந்த, துய்ய - பரிசுத்தம் பொருந்திய, பங்கயம் - தாமரைமலர்களை, தொடின் - தொட்டால்,

சுடும் என்ன - சுடுமென்று, எண்ணியோ - நினைத்தோ, வெய்யவன் - சூரியனானது, கரம் - (தன்) கிரணமாகிய கைகளை, சுருக்கி - சுருக்கிக்கொண்டு, வேலை - மேல்கடலுள்ளே, புக்கு - முழுகி, ஒளித்தது - மறைந்தது, எ - று.

க - து. சூரியனானவன் தமயந்தியினுடைய அவயவத் தாமரைகளைத் தொட்டால் சுடுமென்று நினைத்தோ அஸ்தமனமாயினான் என்பதாம்.

சூரியன் தாமரைக்கு நாயகனாதலால் அவற்றைத்தொடுதல் அவனுக்குரித்தாயிற்று. சூரியன் எல்லாவற்றுக்கும் வெப்பஞ் செய்பவனாயிருந்தும் தமயந்தியின் காமவெப்பத்துக்கு அஞ்சினனெனவே அவ்வெப்பத்தின் கொடுமை சொல்லவேண்டாவாயிற்று. கரஞ்சுருக்குதற்கு ஏதுவாகாத அவ்வெண்ணத்தை யேதுவாகக் குறித்தலால் ஏதுத்தற்குறிப்பணி.] (உக)

கைக்கிளைப்படல முற்றிற்று.

# மாலைப் படலம்.

இப்படலத்தால் முன் சொல்லப்பட்ட தமயந்தியின்
காமநோய் மிகுதற்குக் காரணமாகிய மாலையின்
வரவு சொல்லப்படுகின்றது.

## கலிநிலைத்துறை.

ஒற்றையாழியான் படமென வுறுபகற் சிறுவன்
கற்றைவார்கதிர்க் கயிற்றினால் விடுதலுங் கதித்து
முற்றுறுமுலை நெட்டுயிர்ப் பெறிதலான் மொத்துண்
டற்றுவீழ்ந்தபோற் குடதிசைக் கடலுளாழ்ந் ததுவே.

இ - ள். ஒற்றை ஆழியான்-சூரியனுடைய, படம் என - (தனக்குக்) காற்றாடியாக, உறு - உறப்பெற்ற, பகல் - பகலாகிய, சிறுவன் - சிறியோனானவன், கற்றை - திரளாகிய, வார் - நெடிய, கதிர் - கிரணமாகிய, கயிற்றினால் - கயிற்றைக்கொண்டு, விடுதலும் - (ஆகாசத்தின்கண்) விட்டவளவில், கதித்து - பருத்து, முற்றுறு - முற்றுத, முலை - முலைகளையுடைய தமயந்தியானவள், நெட்டுயிர்ப்பு - பெருமூச்சை, எறிதலான் - விடுதலினால், மொத்துண்டு - தாக்குண்டு, அற்று-(அக்கயிறு) அற்று, வீழ்ந்தபோல்-வீழ்ந்ததுபோல, குடதிசை - மேற்குத் திசையிலுள்ள, கடலுள் - சமுத்திரத்தினுள், ஆழ்ந்தது - (அது) மூழ்கிற்று, எ - று.

க - து. பகல் என்னுஞ் சிறுபிள்ளை சூரியனைக் காற்றாடியாகக் கிரணக் கயிற்றாற் கட்டிவிட்டவளவில் தமயந்தியின் பெருமூச்சால் கயிறற்று அக்காற்றாடி மேற்கடலில் வீழ்ந்து மூழ்கிற்று என்பதாம்.

வீழ்ந்தபோதென்பது வீழ்ந்தவெனத் துவ்விகுதி குறைந்துநின்றது. இதனால் மாலைப்பொழுது வருதற்குக் காரணமும் அப்பொழுதுளதாகுந் தமயந்தி வருத்தமும் சொல்லப்பட்டது. பிரிந்தோரை மாலை வருத்துமென்பது. "காதல ரில்வழி மாலை கொலைக்களத், தேதிலர் போல வரும்" (திருவள்ளுவர் பொழுதுகண்டிரங்கல்-௫) என்பதனாலுணர்க. [சூரியனிற் படமும் பகலிற் சிறுவனும் கதிரிற் கயிறும் ஆரோபித்தலால் உருவகவணி. சூரியன் மேற்கடலு ளியல்பாய் வீழ்தலைக் கதிர்க்கயிறற்று வீழ்வதாகக் குறித்தமையால் முன்னுருவகத்தை யுறுப்பாகக்கொண்ட பொருட்டற் குறிப்பணி.] ௧ (க)

புதைத்தகாரிருட் படமொழித் தித்துணைப் போது
முதித்தகீழ்த்திசை மகட்புணர்ந் தாயென வூடிக்
கொதித்துமேற்றிசை யணங்கலத் தகப்பதங் கொடுமே
லுதைத்ததாமெனச் சிவந்தது வெய்யவ னுடலம்.

இ - ள். புதைத்த - மறைத்த, கார் இருள் - கரியவிருளாகிய, படம் - போர்வையை, ஒழித்து - களைந்து, இத்துணை போதும் - இவ்வளவு காலமும், உதித்த - (நீ) உதயஞ்செய்யப்பெற்ற, கீழ்த் திசை - கிழக்குத்திக்காகிய, மகள் - மாதை, புணர்ந்தாய் என - கூடிக் கொண்டிருந்தாயென்று, மேற்றிசை - மேற்குத்திக்காகிய, அணங்கு - மாதானவள், ஊடி - பிணங்கி, கொதித்து - வெப்பமுற்று, அலத்தகம் - செம்பஞ்சூட்டப்பெற்ற, பதம் கொடு - அடிகளைக்கொண்டு, மேல் - வடிவத்தின்மேல், உதைத்ததாம் என - உதைக்கப்பெற்றது போல், வெய்யவன் - சூரியனது, உடலம் - வடிவம், சிவந்தது - சிவப்பை யடைந்தது, எ - று.

க - து. மேற்குத் திசைப்பெண் காலுதை பட்டதுபோலுஞ் சூரியன்மேனி சிவந்தது என்பதாம்.

சூரியனுக்குச் செந்நிறம் இயற்கையாயினும் காலையினு மாலையி னும் மிகுந்து தோன்றுமென்க. மாலையிற் சிவத்தற்குக் காரண மேற்றிசை மாதினுடைய அலத்தகப் பதத்துதை எனவே காலையிற் சிவத்தற்குங் கீழ்த்திசைமா துதையாமெனக் கொள்க. தலைவனோ டூடுதற்குப் பலகாரணங்க ளுளவேனும் பிறமாதரை நயந்தானெனப் பிணங்குவதே மகளிர்க்கு இயல்பாமென்பது தோன்ற 'கீழ்த்திசை மகட் புணர்ந்தாயென வூடி' என்றார். தாயைப் புணர்ந்தோனென் பது தோன்ற 'உதித்த கீழ்த்திசை மகட்புணர்ந்தாய்' என்றார். அவ னைக் கண்டுழி ஊடுதல் மாத்திரத்தி னடங்காது அழற்சினமு மிகு மாதலால் ஊடியென் றொழியாது 'கொதித்து' என்றார். திசைகளை மாதராகச் சொல்லியது உருவகம். சூரியன் அப்போதடைந்த சிவப்பை அவ்வுதையின் சிவப்பாகக் குறித்தலால் பொருட்டற் குறிப்பணி.] (உ)

சகரர்தொட்டவெண் டிரையெறி தடங்கடற் புகுதும்
புகரில்வெங்கதிர்க் கடவுண்முன் போக்கிய கதிர்க
ணிகரினித்திலங் குளிப்பவ னீர்நிலை யறிவா
னகநெடுங்கடல் விடுத்தபொற் கழையென லாமால்.

இ - ள். சகரர் - சகரரென்னப்பட்ட வரசர்களாலே, தொட்ட - தோண்டப்பட்டிருக்கிற, வெள் - வெள்ளிய, திரை - அலைகளை,

எறி - வீசுகின்ற, தடம் - விசாலம்பொருந்திய, கடல் - கடலின் கண், புகும்-புகுகின்ற, புகர் இல் - குற்றமில்லாத, வெம் கதிர் கடவுள் - சூரியதேவனாலே, முன் - முன்னே, போக்கிய - செலுத்தப் பட்ட, கதிர்கள்-கிரணங்களானவை, நிகர் இல் - ஒப்பில்லாத, நித்திலம் - முத்துக்களைக் (குறித்து), குளிப்பவன் - (அக்கடலிலே) மூழ்கு வோன், நீர் நிலை - நீராழத்தை, அறிவான் - அறியும்பொருட்டு, அகல் - விரிந்த, நெடு கடல் - நெடிய கடலிலே, விடுத்த - விடப் பட்ட, பொன் கழை எனலாம் - பொன் மூங்கில்களென்று சொல்ல லாம், எ - று, ஆல் - அசை.

க - து. கடலிற் சூரியனாற் செலுத்தப்பட்ட கிரணங்களான வை அக்கடலின் முத்தெடுக்க மூழ்குவோர் ஆழம்பார்க்க விடுத்த மூங்கில்கள்போன் றிருந்தன என்பதாம்.

சகரமகாராஜனால் வேள்வியின்பொருட்டு விடப்பட்ட குதிரையை இந்திரன்பற்றிப் பாதாளலோகத்திற் றவஞ்செய்திருந்த கபிலமுனிவன் புறத்துக் கட்டிடல்செய்ய அதைத் தேடும்பொருட்டு அவனுடைய புதல்வராகிய சாகரர் அறுபதினாயிரவராலுந் தோண்டப்பட்டபடியால் 'சகரர்தொட்ட கடல்' என்றார். கடலைச் சாகரமென்பதும் இதனாலெனவறிக. இரவியின்முன் செல்லுகின்ற கதிர்களில் நீராழம் பார்க்கும் மூங்கிலை ஆரோபித்தலால் உருவகவணி.] (ரு)

மையுண்கண்ணியை மதிவரின் வருத்துமென் றிரங்கி
யையபோகலென் றாம்பல்வாய் மலர்ந்தன வாவி
வெய்யவன்செழுங் கரங்களை விழைவொடுந் தமது
கையினாலுறப் பிடித்தெனக் குவிந்தன கமலம்.

இ - ள். மை உண் கண்ணியை-அஞ்சனத்தைக்கொண்ட கண்களையுடையவளாகிய தமயந்தியை, மதி - சந்திரனானவன், வரின் - வந்தால், வருத்தும் என்று - வருத்துவானென்று, இரங்கி - உள்ளிரங்கி, ஐய - சாமி, போகல் என்று - (இவளைக் கைவிட்டுப்)போகாதே யென்று (சொல்வனபோல), வாவி - குளங்களிலே, ஆம்பல்-அல்லி முகைகள், வாய் மலர்ந்தன-முகமலர்ந்தன; வெய்யவன் - சூரியனது, செழு - செழிய, கரங்களை - (கிரணங்களாகிய) கைகளை, விழைவொடும் - ஆசையோடும், தமது - தம்முடைய, கையினால் - கைகளால், உற - பொருந்த, பிடித்த என - பிடித்தனபோல, கமலம்-தாமரை மலர்கள், குவிந்தன - கூம்பின, எ - று.

க - து. சந்திரன்வரின் தமயந்தியை வருத்துவானென்று சொன்னதுபோல ஆம்பல்கள லர்ந்தன; சூரியனைப் போகாதேயென்று கையாற் பிடித்தலபோலுங் கமலங்கள் குவிந்தன என்பதாம்.

வாவியில் ஆம்பல்வாய் மலர்ந்தன தாமரை குவிந்தவெனக் கூட்டுக. சூரியனது இருத்தல் தன்னுயகன் வரவிற்குந் தடையாயினும் ்மயந்தியின் வருத்தத்திற் கிரங்கி யிருக்க வேண்டிக்கொண்டாளென்பது தோன்ற 'ஆம்பல்வாய் மலர்ந்தன' என்றும், தன்னுயகனென்னுஞ் சுதந்தரம்பற்றிக் கையினுற் பிடித்துத் தடுத்தாளென்பதுதோன்றக் 'கமலம் பிடித்தன' என்றும் சொல்லினர். [மாலைப்பொழுதின் அல்லி தாமரைகட்கு இயல்பாகிய மலர்தலையுங் குவிதலையும் சொல்லுதலும் பிடித்தலுமாகக் குறித்தமையால் பொருட்டற்குறிப்பணி.] ()

பொருவிலாழியொன் றுருட்டியெப் புவனமும் விளக்கு
மிரவிமன்னவ னிறத்தலு மெதிர்ந்தபுன் மாலை
பரவைமாநில முழுவதும் பரிப்பவ னிறப்ப
விரவுவெந்தொழிற் குறுநில வேந்துபோன் றுளதே.

இ - ள். பொருவில் - ஒப்பில்லாத, ஆழி ஒன்று - ஒருசக்கரத்தை, உருட்டி - செலுத்தி, எப்புவனமும் - எல்லாவுலகங்களையும், விளக்கும் - ஒளிர்விக்கின்ற, இரவி மன்னவன் - சூரியனுகியவரசன், இறத்தலும் - இறந்தவளவில், எதிர்ந்த - தோன்றிய, புல் மாலை - புல்லிய மாலைக்காலமானது, பரவை - கடலையுடைய, மா நிலம் முழுவதும் - பெரிய வுலகமுழுதையும், பரிப்பவன் - காப்பாற்றுகின்ற வரசன், இறப்ப - இறத்தலைச்செய்ய, விரவு - (அத்தருணத்திலே)வியாபிக்கின்ற, வெம் தொழில்-கொடியசெய்கையுடைய, குறு நில வேந்து போன்று உளது - சிறியநிலத்தையாளு மரசன்போலிருந்தது, எ-று.

க - து. சூரியன் சென்றவளவிலே மாலைக்காலம் வந்து சம்பவித்து தனிச்செங்கோல்வேந்த னிறந்தபின்பு குறுநில வேந்தன் பெருநிலமாள வந்தது போலும் என்பதாம்.

"இறப்பேசா மிகுதிபோக்காம்" (ஆதிப்பொருணிகண்டு) என்றதனுல் ஈண்டு சூரியனிறத்தல்போதலும் அரசனிறத்தல் சாதலுமாகப் பொருள்கொள்க. உலகமுழுவதும் புரத்தல்செய்த அரசனீங்கிய வளவிற் ருேன்றி ஏழைகளை வருத்துதலால் 'வெந்தொழிற் குறுநில வேந்தன்' என்றும், சூரியனீங்கிச் சந்திரன் ருேன்றுதற் கிடையே தோன்றிச் சிறிது பொழுதுநின் றழிவதாதலிற் 'புன்மாலை' என்றும் சொல்லினர். மாலைக்குக் குறுநிலமன்னரை ஒப்புமை சொல்லலால் உவமையணி.] (௫)

காலமென்னுமோர் வணிகன்மே லகன்றவான் கல்லின்
ஞாலநீளிருள் சீப்பவ னலங்கொள்பொன் ளுக

*வேனுமாறுரைத் தெனவொளிர் செக்கர்வா னிருண்ட*
*நீலவார்குழ லுயிர்சுட வெழுந்தசெந் நெருப்பே.*

இ - ள். காலம் என்னும் ஓர் வணிகன் - காலமாகிய வொரு வைசியனானவன், மேல்-மேலாக, அகன்ற - பரந்த, வான் கல்லின் - ஆகாசமாகிய (உரை) கல்லிலே, ஞாலம்-பூமியினிடத்து, நீள் இருள்-மிக்கவிருளை, சீப்பவன் - கெடுப்பவனாகிய சூரியனை, நலம் கொள் - நற்குணத்தைக்கொண்ட, பொன்னாக-கனகமாக, ஏலும் ஆறு - பொருந்துமாறு, உரைத்து என-உரைத்ததுபோல், ஒளிர்-விளங்குகின்ற, செக்கர் வான் - செவ்வானமானது, இருண்ட - இருளுற்ற, நீலம் - நீலநிறம் பொருந்திய, வார் - நெடிய, குழல் - கூந்தலையுடைய தமயந்தியினது, உயிர் - ஆவியை, சுட - சுடுதற்பொருட்டு, எழுந்த - தோன்றிய, செம் நெருப்பு - செந்தீயே (ஆம்), எ - று.

க - து. செவ்வானந் தோன்றியது தமயந்தியுயிரைச் சுடவெழுந்த செந்திக்கொப்பா யிருந்தது என்பதாம்.

[காலத்தில் வணிகனையும் ஆகாயத்தில் உரைகல்லையும் சூரியனிற் பொன்னையும் ஆரோபித்தலால் உருவகவணி. செவ்வானத்திற் பொன்னுரைத்தாலென்னுந் தற்குறிப்பணி மேற்சொல்லிய உருவகவணியை உறுப்பாகக் கொள்ளுதலால் உறுப்புறுப்பிக் கலவையணி. செவ்வானத்திற் செந்தீக் குறிக்கப்பட்டமையால் பொருட்டற்குறிப்பணி. இதனு ளிரண்டணிகள் சேர்ந்துவருதலாற் சேர்வையணி.] ()

*செய்யவெங்கதி ரிறத்தலு மவனுழைச் சிறந்த*
*மொய்கொள்பேரொளி வனிதைக்கு மூட்டுசெந் தழலின்*
*வெய்யநீரதாய்ப் பரந்தெழு செக்கர்வான் மெலிந்த*
*வையநுண்ணிடை யணங்கினுக் கென்கொலா யமையும்.*

இ - ள். செய்ய - செந்நிறம்பொருந்திய, வெங்கதிர் - சூரியனானவன், இறத்தலும் - இறந்தவளவில், அவனுழை - அவனிடத்தே, சிறந்த-சிறப்புற்றிருந்த, மொய் கொள்-மொய்த்தல்கொண்ட, பேர் - பெரிய, ஒளி வனிதைக்கு - சாயாதேவிக்கு, மூட்டு - மூட்டப்பட்ட, செம் தழலின்-செந்நெருப்புப்போல், வெய்ய நீரதாய் - கொடிய குணத்ததாய், பரந்து - விரிந்து, ஒளிர் - விளங்காநின்ற, செக்கர்வான் - செவ்வானமானது, மெலிந்த - காமநோயாலிளைத்த, ஐயம் - ஐயத்துக்கிடமாகிய, நுண் இடை - நுண்ணிய விடையையுடைய, அணங்கினுக்கு - தமயந்திக்கு, என்கொலாய் அமையும் - எப்படிப்பட்டதாயிருக்கும், எ - று.

க - து. சூரியனிறந்தவுட னவன் மனைவி சாயாதேவிக்கு மூட்டு நெருப்பைப்போ லிருக்குஞ் செவ்வானமானது தமயந்திக் கெவ்வாறு யிருக்கு மென்பதாம்.

இருவகைப் புணர்ச்சியுள் உள்ளப் புணர்ச்சியின் வழித்தாகிய மெய்யுறுபுணர்ச்சி யுற்றோர்க்கு விருப்பின்றின்மை சிறிதொழிந்து நிற்குமாயினுந் தலைவனீங்கியவளவி லவர்களும் பொறாது சககமனஞ் செய்வரென்பதுதோன்ற 'ஒளிவனிதைக்கு மூட்டு செந்தழலின்' என்றார். "மருவு காதல ராருயிர் மாய்ந்திடி, லெரியின் மூழ்கி யிறந்து படுவதற், கருநெ றித்தலை வைக்கு மடிக்கடி, புரவி நன்மகப் பேறு பொருந்துவார்" (காசிகண்டம்-கற்பிலக்கணம்-௬௯) என்பதனாலறிக. செக்கர்வானத்தை ஒளிவனிதைக்கு மூட்டு செந்தழலாகக் குறித்தமையால் தற்குறிப்பணி.] (எ)

தணததலெண்ணிமெய் தளர்வுறு நேமியம் பறவை
புணர்த்தவஞ்சிறைப் புல்லுவிட் டொழியநெட் டுயிர்ப்பாற்
றுணர்த்தமௌவல்வண் டூதநீள் கங்குன்முன் றோன்றிற்
பணைத்தவெம்முலைப் பாசிழை யல்குலென் படுமே.

இ - ள். தணத்தல் - பிரிவை, எண்ணி - நினைத்து, மெய் - உடம்பு, தளர்வுறு - தளர்ச்சியடைகின்ற, நேமி அம் பறவை - சக்கரவாகப்பறவைகள், நெட்டுயிர்ப்பால் - பெருமூச்சோடு, புணர்த்த - கலந்த, அம் - அழகிய, சிறை - சிறைகளின், புல்லு-தழுவுதலை, விட்டு-விடுத்து, ஒழிய - நீங்கவும், வண்டு - வண்டுகளானவை, துணர்த்த - கொத்துகளைச்செய்த, மௌவல் - முல்லைமலரிலே, ஊத - ஆரவாரிக்கவும், நீள் - நெடிய, கங்குன்முன் - மாலையானது, தோன்றின் - உதிக்குமாயின், பணைத்த - பருத்த, வெம் - விருப்பஞ்செய்கின்ற, முலை - முலைகளையும், பாசிழை - பசிய வாபரணத்தைக்கொண்ட, அல்குல் - அல்குலையுமுடைய தமயந்தியானவள், என்படும் - என்படுவாள், எ - று.

க - து. சகோரங்கள் புணர்ச்சிவிட்டு நீங்கவும், வண்டுகள் சத்திக்கவும், மாலைக்கால முதிக்குமானால் தமயந்தி என்னபாடுபடாள் என்பதாம்.

நேமியம் பறவை என்பதில் அம்-சாரியை. அழகெனினுமாம். இராக்காலத்தின் முற்பங்காதலால் மாலையை 'கங்குன்முன்' என்றார். ஒழிய ஊதவென்னும் வினையெச்சங்கள் தோன்றினென்னும் வினை கொண்டு முடிந்தன. புணர்ந்த புணர்த்தவென எதுகைநோக்கி விகா

ரமாயிற்று. இடைவிடாமற் கூடுதலுற்ற பகுப்பறிவில்லாத சக்கரவாகப் பறவைகள் பிரியவும், மன்மதனது அம்பாய்ப் பிரிந்தவர்க்குக் கிடைகாட்டும் முல்லைமலரில் வண்டுகளாகிய வின்ஞாண்போர்க் குறியாகிய ஒலியைச் செய்யவும் மாலைப்பொழுதுண்டாகுமளவில் இவள் படுந் துன்பம் அளவிறந்ததாகலின் 'என்படும்' என்றார். மாலையிற் காமநோய் மிகுமென்பது "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" (திருவள்ளுவர்-பொழுதுகண்டிரங்கல்-எ) என்பதனுற் காண்க. (அ)

அங்கண்வானக முழுவது மவிரொளி பரப்பிக்
கங்குல்வாயடர் தாரகை யெழுந்தன கடலுட்
பொங்குவெங்கதிர் மணிவிழுந் தெனத்திசை புரப்போ
ரெங்குநாடுதற் கெடுத்தவஞ் சுடரென வியையும்.

இ - ள். கங்குல்வாய் - இரவின்கண், அம் கண் - அழகியவிடத்தையுடைய, வானகம் முழுவதும்-ஆகாயத்தினிடமெங்கும், அவிர் - விளங்காநின்ற, ஒளி - ஒளியை, பரப்பி - விரித்துக்கொண்டு, எழுந்தன - தோன்றினவையாகிய, அடர் - நெருங்கிய, தாரகை - உடுக்களானவை, கடலுள் - சமுத்திரத்தினுள், பொங்கு - விளங்காநின்ற, வெங்கதிர் - சூரியனாகிய, மணி - மணியானது, விழுந்தென - விழுந்ததென்று, திசை புரப்போர் - திக்குப்பாலகர், எங்கும் - எவ்விடங்களிலும், நாடுதற்கு-தேடுதற்பொருட்டு, எடுத்த - ஏந்திய, அம் சுடர் என - அழகிய தீபங்கள்போல, இயையும் - பொருந்தும், எ - று.

க - து. நட்சத்திரங்களின் தோற்றங்களானவை சூரியனாகிய மணி கடலில் விழுந்ததென்று திக்குப்பாலகரம்மணியைத் தேட எடுத்த தீபங்களைப்போன் றிருந்தன என்பதாம்.

திக்குப் பாலகரது காப்புப் பெரும்பாலுஞ் சந்திரசூரியர்பொருட்டாதலால் அவருக்குத் தேடல் சொல்லப்பட்டது. 'கங்குல்வா யடர் தாரகை' எனலால் பகலிற் சூரியனொளியால் மழுங்கிநிற்குமென்க. [வெங்கதிர்மணியென்பது உருவகவணி. தாரகைகளில் தீபங்களைக் குறித்தலால் தற்குறிப்பணி.]

கருத்தினூடெழு காமமென் கொடுங்கனல் கனற்ற
வருத்தியுற்றவ ராருயிர்க் குளகினை யயில்வா
னுருத்துவெங்கதிர்ப் பாகெறிந் துடைப்புகர் முகத்த
விருட்கடாக்களி றிருநிலத் திறுத்ததை யன்றே.

இ - ள். உடு புகர் - தாரகைகளாகிய புள்ளிகளையுடைய, முகத்த - முகத்தினையுடைய, இருள் கடா களிறு - இருளாகிய மதயானை, உருத்து - கோபித்து, வெம் கதிர் பாகு - சூரியனாகிய பாகனை, எறிந்து - வீசி, கருத்தினூடு - நெஞ்சினுள், எழு - வளர்கின்ற, காமம் என் - காமமென்கின்ற, கொடு கனல் - கொடிய தீயானது, கனற்ற - சுடாநிற்க, அருத்தி - ஆசையை, உற்றவர் - பொருந்தினவருடைய, ஆர் - நிறைந்த, உயிர் குளகினை - உயிராகிய தழையை, அயில்வான் - உண்ண, இரு நிலத்து - பெரியபூமியினிடத்து, இறுத்தது - தங்கியது, எ - று.

க - து. இருளாகிய மதயானையானது சூரியனாகிய பாகனைக் கொன்று காமிகளது உயிராகிய தழைகளை யுண்ணும்பொருட்டுப் பூமியில் வந்தது என்பதாம்.

'ஆருயிர்க்குளகினை யயில்வான்' என்பதனால் இருள் பிரிந்தவர்க்கு மரணவேதனையொத்த வேதனையைவிளைக்குமென்க. குளகு-விலங்குண்ணுந்தழை. "இலைநுகர்விலங்கி னுணவுகுளகென்ப" (திவாகரம்-பலபொருட்பெயர்த் தொகுதி) என்பதனாலறிக. உயிரிற் குளகையும், வெங்கதிரிற் பாகனையும், உடுவிற் புகரையும், இருளிற் களிற்றையும் ஆரோபித்தலால் உருவகவணி.] (௪0)

தோட்டுமென்மலர்ப் பூங்கணை தூரப்பமெல் லளிநாண்
பூட்டுபைங்கழை குழைத்தெதிர் வேனிலான் புகழைத்
தீட்டுதாரகை யெழுத்தொளி சிறந்திட வணிவான்
கூட்டுமையெனச் செறிந்தது கூரிருட் பிழம்பே.

—— இ - ள். தோட்டு - இதழ்களையுடைய, மெல் - மெல்லிய, மலர் - பூக்களாகிய, பூ கணை - அழகிய அம்புகளை, தூரப்ப - செலுத்த, மெல் - மெல்லிய, அளி நாண் - வண்டுகளாகிய நாரியை, பூட்டு - பூட்டிய, பை கழை - பசிய கருப்புவில்லை, குழைத்து - வளைத்து, எதிர் - எதிர்க்கின்ற, வேனிலான் - மன்மதனது, புகழை - கீர்த்தியை, தீட்டு - எழுதப்பட்ட, தாரகை - உடுக்களாகிய, எழுத்து - எழுத்துக்களினது, ஒளி சிறந்திட - ஒளிவிளங்குதற்கு, அணிவான் - அழகியவாகாயமானது, கூட்டு - கூட்டிய, மை என - மைபோல், கூர் - மிகுந்த, இருள் - இருளினது, பிழம்பு - திரட்சி, செறிந்தது - நெருங்கியது, எ - று.

க - து. இருட்கூட்டமானது மன்மதனது கீர்த்தியை எழுதப்பட்ட நட்சத்திர வெழுத்தொளி சிறப்படைய ஆகாயத்தினாற் கூட்டிய மைபோ லிருந்தது என்பதாம்.

வேனிலானை எழுவாயாக்கி அவன் தனது புகழைத் தீட்டிய தாரகையாகிய எழுத்தொளி சிறந்திட அணிவதற்கு கூட்டுமையெனப் பொருள்கொள்ளினு மமையும். [தாரகையிலெழுத்தை யாரோபித்தலா லுருவகவணி. இருளில் மையைக் குறித்தலால் தற்குறிப்பணி. இது முன்னுருவகத்தை யுறுப்பாகக் கொண்டமையால் கலவையணி.] (கக)

பட்டகாரிருட் கங்குல்போ தரப்படர் திசைக
ளெட்டினுள்ளன பொருள்கவர்ந் தேகில னென்று
விட்டிலங்கொளி வெய்யவன் றனதுமெல் விரலாற்
சுட்டியெங்கணுங் காட்டல்போற் சுடர்வன சுடர்கள்.

இ - ள். பட்ட - உண்டாகிய, கார் - கரிய, இருள் - இருளையுடைய, கங்குல் - இரவானது, போதர-வர, படர் - பரந்த, திசைகள் எட்டின் - எட்டுத் திக்குகளிலும், உள்ளன - இருக்கின்றனவாகிய, பொருள் - பொருள்களை, கவர்ந்து - அபகரித்துக்கொண்டு, ஏகிலன் என்று - நான் போகவில்லையென்று, ஒளி - காந்தியை, விட்டு - வீசி, இலங்கு - விளங்காநின்ற, வெய்யவன் - சூரியனுனவன், தனது - தன்னுடைய, மெல்விரலால் - மெல்லிய விரலினுல், சுட்டி - குறித்து, எங்கணும் - எவ்விடங்களிலும், காட்டல்போல் - காட்டுதல்போல், சுடர்கள் - தீபங்கள், சுடர்வன - விளங்குவன, எ - று.

க - து. சூரியன் எண்டிக்கிலுமுள்ள பொருள்களைக் கவர்ந்தேகிலனென்று இரவினுக்குத் தன்விரலாற் சுட்டிக்காட்டல்போல் பிரகாசிக்கின்றன தீபங்கள் என்பதாம்.

பிறர் பொருளைப் பாதுகாப்போர் அவ்விடத்தைவிட்டு நீங்குமிடத்துப் பின் காப்பவர்க்குத் தங்காப்பினுள்ள பொருள்களை யொப்பித்தல் உலக வழக்கமாதலிற் பகலிற்காத்த சூரியனீங்குமிடத்து இரவிற்காக்குஞ் சந்திரன் வருதற்குப் பொழுது நீட்டித்தலால் அவ்வுடைமையைக் காத்தற்குரிய அவன் மனைவியாகிய இராமடந்தைக்கு ஒப்பிக்குமிடத்துச் சொன்மாத்திரத்தாற் புலப்படாதென்பது தோன்ற 'வெய்யவன் றனது மெல்விரலாற் சுட்டிக்காட்டல்' என்றார். அம் மாலைக்காலத்திலே உண்டாகிய தீபங்களில் சூரியன் விரலை யாரோபித்தலால் தற்குறிப்பணி.] (கஉ)

மாலைப்படல முற்றிற்று.

# நிலாத்தோற்றுபடலம்.

இப்படலத்தால் அம்மாலைக்குப் பின்வரும் நிலவினது தோற்றஞ் சொல்லப்படுகின்றது.

## கலிநிலைத்துறை.

வெவ்வராவினை விண்டொடர் மந்தரம் பிணித்துக்
கவ்வைமிக்கெழுக் கடவுளர் கடைந்திடுங் காலைப்
பவ்வவெண்டிரை யுயிர்த்தசெம் பதுமைவாண் முகம்போற்
றெய்வவொண்கதிர் பரப்பிமீ தெழுந்தது திங்கள்.

இ - ள். கடவுளர் – தேவர்கள், வெம் – வெவ்விய, அராவினை – வாசுகியென்னும் பாம்பை, விண் – ஆகாசமுகட்டை, தொடர் – அளாவிய, மந்தரம் – மந்தரமலையின்கண், பிணித்து – கயிறாகக்கட்டி, கவ்வை – ஒலியானது, மிக்கு எழ – அதிகரிக்க, கடைந்திடும் காலை – மதிக்குங்காலத்தில், வெள் திரை – வெள்ளிய அலைகளையுடைய, பவ்வம் – பாற்கடலானது, உயிர்த்த – ஈன்ற, செம் பதுமை – செந்தாமரையி லிருக்கின்ற இலக்குமியினது, வாள் – காந்திபொருந்திய, முகம்போல் – முகத்தைப்போல், தெய்வம் – தெய்வத்தன்மையுள்ள, ஒண்கதிர் – ஒளிபொருந்திய கிரணங்களை, பரப்பி – விரித்து, திங்கள் – நிலவானது, மீது – ஆகாயத்தின்கண், எழுந்தது – உதித்தது, எ - று.

க - து. திருப்பாற்கடல் கடையும்போ தெழுந்த திருமகள் திருமுகத்தைப்போலுஞ் சந்திர னுதயமாயிற்று என்பதாம்.

கடவுளரு முடிவுகாலம் அடைந்ததென்று நடுநடுங்கக் கொடிய கடுவைத் தந்ததென்பார் 'வெவ்வரா' என்றும், பெரியமலை யென்பார் 'விண்டொடர்மந்தரம்' என்றும், மற்றையராற் கடைதற்கரிதென்பார் 'கடவுளர் கடைந்திடும்' என்றும், ஒருவர் கருப்பத்திற் றோன்றின ளல்லளென்பார் 'பௌவவெண்டிரை யுயிர்த்த' என்றும், மாதர் முகத்துக்கு உபமானமாகு மதி இவள் முகத்துக்கு உவமேய மாகுமென்பார் 'பதுமை வாண்முகம்போல்' என்றும், நெடுந்தூரத்துற்றும் இருளை யோட்டுமென்பார் 'தெய்வ வொண்கதிர் பரப்பி' என்றும், இவ்விடத்தி லுதித்ததென்பார் 'மீதெழுந்தது' என்றும் சொல்லினர். [திருவின் முகத்தை உபமானமாகவும் சந்திரனை உபமேயமாகவும் சொல்லுதலால் உவமையணி.] (க)

செறிந்தவாழ்கடற் செல்வனு மவனுழைச் சிறந்தாங்
குறைந்தவாருயிர்த் துணைவியர் பலருமுள் ளுவந்து
நிறைந்ததெண்டிரை நீர்குடைந் தாடலி னிகலி
யெறிந்தமென்மலர்ப் பந்தென வெழுந்தது திங்கள்.

இ - ள். செறிந்த - மிகுந்த, ஆழ் - ஆழ்ந்த, கடல் செல்வனும் - சமுத்திர ராசனும், அவனுழை - அவனிடத்து, சிறந்து - சிறப்பை யடைந்து, ஆங்கு - அச்சமுத்திரத்தின்கண், உறைந்த - தங்கிய, ஆர் - நிறைந்த, உயிர் - உயிர்போன்ற, துணைவியர் பலரும் - மனைவிய ரனைவரும், உள் உவந்து - மனமகிழ்ந்து, நிறைந்த - நிறைவை யடைந்த, தெள் திரை - தெளிந்த அலைகளையுடைய, நீர் - நீரில், குடைந்து - குளித்து, ஆடலின் - விளையாடற்கண், இகலி - பகைத்து, எறிந்த - வீசிய, மெல் - மெல்லிய, மலர் பந்து என - பூச்செண்டு போல, திங்கள் - நிலவானது, எழுந்தது - தோன்றிற்று, எ - று.

க - து. சமுத்திராராஜனு மவன் மனைவியரும் நீராடும்போது அவர்கள் பகைத்தெறிந்த பந்தைப்போலு மெழுந்தது சந்திரன் என் பதாம்.

கடல்வேந்த னென்றமையால் அவ னுயிர்த்துணைவியர் நதி மாத ரெனக்கொள்க. [உதயமாகிய சந்திரனிடத்து மலர்ப்பந்தைக் குறித் தமையால் தற்குறிப்பணி.] இகலியென்பதை வலிந்தெனினு மொக் கும். (உ)

கதிர்செய்நித்திலங் கறங்குதெண் டிரைக்கரத் தெறியு
முதிர்பனிக்கடன் முகட்டினின் முளைத்தொளிர் திங்கள்
விதியின் மாலையாந் துணைவியை வீங்கிருட் டலைவன்
வதுவையாற்றுவான் வைத்தபொற் குடமென வயங்கும்.

இ - ள். கதிர் செய் - கிரணத்தைச் செய்கின்ற, நித்திலம் முத்துகளை, கறங்கு - ஒலிக்கின்ற, தெள் திரை - தெளிந்த அலைக ளாகிய, கரத்து - கைகளால், எறியும் - வீசுகின்ற, முதிர் - முதிர்ந்த, பனி கடல் - குளிர்ச்சியையுடைய கடலினது, முகட்டினில் - உச்சி யில், முளைத்து - தோன்றி, ஒளிர் - விளங்காநின்ற, திங்கள் - நில வானது, விதியின் - விதியினால், மாலையாம் - மாலைக்காலமாகிய, துணைவியை - மனைவியை, வீங்கு - மிகுந்த, இருள் - இருளாகிய, தலைவன் - நாயகன், வதுவை ஆற்றுவான் - மணஞ்செய்யும்பொருட்டு, வைத்த - வைக்கப்பெற்ற, பொன் குடம் என - பொன்னாலாகிய குடத் தைப்போல், வயங்கும் - விளங்கும், எ - று.

க - து. சந்திரனுதயமானது இருளாகிய நாயகன் மாலைக்காலமாகிய மனைவியைக் கலியாணஞ் செய்யும்பொருட்டு வைத்த பொற்குடம்போலு மிருந்தது என்பதாம்.

விவாகத்தில் கரணம் பிழைக்கின் மரணந் தருமென்பது அறநூலிற் சொல்லப்பட்டதாகலின் 'விதியின்வைத்த பொற்குடம்' என்றார். [மாலைப்பொழுதிற் றுணைவியையும் இருளிற் றலைவனையும் ஆரோபித்தலால் உருவகவணி. சந்திரனிடத்துப் பொற்குடத்தைக் குறித்தலால் தற்குறிப்பணி. இத்தற்குறிப்பு உருவகத்தை அங்கமாகவுடைமையின் உறுப்புறுப்பிக்கலவையணி.] (௯)

தெள்ளுதெண்டிரைக் கருங்கட லெழுந்தவெண் டிங்கள்
புள்ளவாங்கணை மதனனைப் பூம்புன லாட்ட
வள்ளிதழ்க்கருங் குவளைபெய் திரவெனு மடந்தை
வெள்ளிவெண்குட மேந்தின ளாமென விளங்கும்.

இ - ள். தெள்ளு - கொழிக்கின்ற, தெள் திரை - தெளிந்த அலைகளையுடைய, கரு கடல் - கரியகடற்கண், எழுந்த - தோன்றிய, வெள் திங்கள் - வெள்ளிய சந்திரனானது, புள் - வண்டுகளானவை, அவாம் - விரும்புகின்ற, கணை - மலர்க்கணைகளையுடைய, மதனனை - மன்மதனுக்கு, பூ புனல் - அழகிய நீரிலே, ஆட்ட - அபிடேகஞ் செய்ய, இரவு எனும் மடந்தை - இரவாகிய மடந்தையானவள், வள் இதழ் - கூரிய விதழ்களையுடைய, கரு குவளை - நீலோற்பலப்பூவை, பெய்து - மேலேசூட்டி, வெள்ளி - வெள்ளியினாலாகிய, வெள் குடம் - வெள்ளிய குடத்தை, ஏந்தினளாம் என - ஏந்தினாளென்று சொல்லும்படியாக, விளங்கும் - (களங்கத்தோடு) விளங்கும், எ - று.

க - து. சந்திரனுதயமான திரவென்னும் பெண்ணானவள் மன்மதனுக் கபிஷேகஞ்செய்ய நீலோற்பலஞ் சூட்டி வெள்ளிக்குடத்தை யேந்தினள்போலும் விளங்கும் என்பதாம்.

புள் - வண்டு. "புள்ளுவண்டவிட்டம் புட்பேர்" (ஆதிப்பொருணிகண்டு) என்பதனாலறிக. அவாவும் என்பது அவாமென உகரங் குறைந்தது. இரவு மன்மதனரசுக்குரிய காலமாதலால் பட்டாபிடேகமில்லாமல் அரசுசெய்யக் கூடாமையின், 'புனலாட்ட இரவெனு மடந்தை வெள்ளி வெண்குட மேந்தினள்' என்றார். மடந்தையர் அவன்றொழிற்குக் காரணமாகையால் இராமடந்தைக்கு அபிடேகஞ் செய்யும் உயர்வு சொல்லப்பட்டது. [இரவெனு மடந்தை யென்றது உருவகவணி. களங்கமென்னும் உவமேயத்தைவிட்டுக் கருங்குவளையென்னும் உவமானமாத்திரத்தைக் கூறுதல் உயர்வு நவிற்சியணி. சந்திரனிடத்திலே வெள்ளிக்குடத்தைக் குறித்தலாற் றற்குறிப்பணி.()

புலவுநாறுவெஞ் சுறவெறி பொருதிரை முகட்டி
னிலவுகொப்புளித் துயரிய நிகரில் வெண்மதிய
மலகிறுரகை மீன்பயி லாரிருட் கடலி
னுலகமாழ்தலு மெழுந்தபுற் புதமென வொளிரும்.

இ - ள். பலவு நாறு - புலானற்ற நாறுகின்ற, வெம்-வெவ்விய, சுறவு - சுறாமீன்களை, எறி - எறியும், பொரு - கரையின் மோதுகின்ற, திரை - அலைகளையுடைய கடலினது, முகட்டு - உச்சியில், நிலவு - சந்திரிகையை, கொப்புளித்து - உமிழ்ந்து, உயரிய - எழுந்த, நிகர் இல் - ஒப்பில்லாத, வெள் மதியம் - வெள்ளிய சந்திரனானது, அலகு இல் - கணக்கில்லாத, தாரகை - உடுக்களாகிய, மீன் - மீன்களானவை, பயில் - சஞ்சரிக்கின்ற, ஆர் இருள் - நிறைந்த அந்தகாரமாகிய, கடலில் - சமுத்திரத்தில், உலகம் ஆழ்தலும் - உலக முழுதிப்போதலும், எழுந்த - அதிலிருந்து மேலெழுந்த, புற்புதம் என - குமிழியைப்போல, ஒளிரும் - விளங்கும், எ - று.

க - து. சமுத்திரத்திடத் துதித்த சந்திரனது இருட்கடலெழுந்த நீர்க்குமிழியை ஒக்கும் என்பதாம்.

திரை சினையாகுபெயர். [வான்மீனின் மீனையும் இருளிற் கடலையும் ஆரோபித்தலால் உருவகவணி. சந்திரனில் நீர்க்குமிழியைக் குறித்தலால் பொருட்டற்குறிப்பணி. இத்தற்குறிப்ப உருவகத்தை அங்கமாக வுடைமையால் கலவையணி.] (கூ)

திரைநெடுங்கடல் வயிறுளைந் தீன்றவெண் டிங்க
ணிரைசெழுங்கதிர்க் கரங்களா லம்பர நீவ
விரவுகின்றபுன் மாலையாந் தெரிவையுள் வெள்கி
யருணவெங்கதிர்ச் சுடரினை யொளியற வவித்தாள்.

இ - ள். திரை - அலைகளையுடைய, நெடு கடல் - நெடிய கடலானது, வயிறு உளைந்து - வயிறுநொந்து, ஈன்ற - பெற்ற, வெள் திங்கள் - வெள்ளிய சந்திரனானவன், நிரை - வரிசையாகிய, செழு கதிர் - செழுமையுள்ள கிரணங்களாகிய, கரங்களால் - கைகளால், அம்பரம் - ஆகாயமென்னுந் தனதாடையை, நீவ - தடவ, விரவுகின்ற - கலக்கின்ற, புல் - புல்லிய, மாலையாம் - மாலைக்காலமாகிய, தெரிவை - பெண்ணானவள், உள் - உள்ளத்தில், வெள்கி - நாணி, அருணம் - சிவப்பாகிய, வெம் கதிர் - சூரியனாகிய, சுடரினை - தீபத்தை, ஒளி அற - ஒளிநீங்க, அவித்தாள் - அவித்தனள், எ - று.

க - து. சமுத்திரமீன்ற சந்திரனானவன் கிரணக் கரங்களால் மாலைக்காலமாகிய பெண்ணின் வஸ்திரத்தைத் தடவ அப்பெண் வெட்கிச் சூரியனாகிய விளக்கை அவித்தாள் என்பதாம்.

அம்பரமென்பது ஆகாயமும் ஆடையும். "அம்பரங்கடல் விண்டுகில் சாரம்" (ஆசிப்பொருணிகண்டு) என்பதனாற் காண்க. இனமுங்கலந்து நீங்குந் தன்புருடனாயினும் நாணிற்கெடாது என்று மொருதன்மைத் தாய்ப் பழகுங் குணமுள்ள குலமடந்தைபோல் சந்திரன் கதிர்க்கரங்களால் ஆகாயமாகிய கலையைத் தடவ மாலைமாது நாணந் தலைக்கொண்டு சூரியனாகிய தீபத்தை யவித்தாளென்றார். [சந்திரிற் கரங்களையும் மாலைப்பொழுதிற் றெரிவையையும் வெங்கதிரிற் சுடரினையும் ஆரோபித்தலால் உருவகவணி. அம்பரமென்றது முன்சொல்லப்பட்ட உருவகம் ஏதுவாகக்கொண்டு அம்பரமென்னும் அம்பரமெனப் பொருள் கொள்ளுதலிற் றொடர்புருவகவணி.] (அ)

குறைவில்வெண்மதி தோன்றமென் குமுதநாண் முகையிற்
சிறகர்வண்டுபாண் முரலனும் முயிரினிற் சிறந்த
விறைவன்வார்திரைக் கடன்முகட் டெழுந்தன னென்று
வறையவந்ததூ தர்கள்சொலிற் றோன்றிய தன்றே.

இ - ள். குறைவில் - கலைகணிரம்பிய, வெள் மதி - வெள்ளிய சந்திரனானவன், தோன்ற - உதயமாக, மென் - மெல்லிய, குமுதம் - அல்லிகளுடைய, நாள் - புதிய, முகையில் - அரும்புகளில், சிறகர் - இறகுகளையுடைய, வண்டு - வண்டுகள், பாண் - இசைகளை, முரலல் - ஒலிசெய்தல், நும் - உம்முடைய, உயிரினில் - உயிரைக்காட்டிலும், சிறந்த - சிறந்திருக்கின்ற, இறைவன் - நாயகனானவன், வார் - நெடிய, திரை - அலைகளையுடைய, கடல் - கடலினது, முகட்டு - உச்சியில், எழுந்தனன் என்று - புறப்பட்டானென்று, அறைய வந்த - சொல்லவந்த, தூதர் - தூதர்களுடைய, சொலில் - சொல்லைப்போல், தோன்றியது - தோன்றியது, எ - று.

க - து. சந்திரனுதயமாக அல்லிமலரில் வண்டுக ளொலிசெய்தல் உங்கள் நாயகன் புறப்பட்டானென்று சொல்லவந்த தூதர் சொல்லைப்போலு மிருந்தது என்பதாம்.

ஒருவர்பால் நாடோறும் பயன்பெற்று வருபவர் தம்மாலடுக்கப்பட்டவர் உயிரிற்சிறந்த பொருளடைவது தாமுன்னர்த் தெரிந்து அதை அவர்க்கு விரைந்துசொல்லி அவ்வின்பத்தைத் தாமுமடைவர்; அதுபோல் என்றும் அல்லிமலரிற் றேனுண்டு வண்டினம் பாடல் அவற்றிற்குத் தலைவன் வரவுகூறுந் தூதர்சொல்லிற் றோன்றியதென்

ரூர். எந்தத் தூதுகளினும் வண்டு தூதிற்குச் சிறந்ததென்பது வண்டுவிடுதூதிற் காண்க. [வண்டினிசையிற் றூதர்கள் சொல்லைக் குறித்தமையால் தற்குறிப்பணி.] (எ)

தெண்பனிக்கடற் றிரையினி துயிர்த்தவெண் டிங்க
டண்புனற்றடத் தாம்பன்மெல் லிதழ்த்துகி லைவந்
தொண்கரத்திரு னெகிழ்த்தது நாணமீ தூரக்
கண்புதைத்தெனக் குவிந்தன கடிகமழ் கமலம்.

இ - ள். தெள் - தெள்ளிய, பனி - குளிர்ச்சி பொருந்திய, திரை - அலைகளையுடைய, கடல் - கடலானது, இனிது - இனிதாக, உயிர்த்த - ஈன்ற, வெள் திங்கள் - வெள்ளிய சந்திரன், தண் - தண்ணிய, புனல் - நீரையுடைய, தடத்து - தடாகத்திலுள்ள, ஆம்பல் - ஆம்பலையுடைய, மெல் - மெல்லிய, இதழ் - இதழ்களாகிய, துகில் - ஆடையை, ஒள் - ஒள்ளிய, கரத்திருல் - கிரணமாகிய கையினால், ஐவந்து - தடவி, நெகிழ்த்ததும் - அவிழ்த்தவளவிலே, கடி - வாசனை, கமழ் - மணக்கின்ற, கமலம் - தாமரை, நாணம் - (அச்செய்கையைக் கண்டுண்டாகிய) நாணம், மீதூர - அதிகரிக்க, கண்புதைத்தென - கண்களை மூடிக்கொண்டனபோல், குவிந்தன - முகிழ்ந்தன, எ - று.

க - ரு. கடலீன்ற சந்திரனானவன் கிரணக்கரங்களால் அல்லியிதழாகிய வஸ்திரங்களை யவிழ்த்தவளவில் தாமரைகள் வெட்கிக் கண்களை மூடிக்கொண்டனபோலுங் குவிந்தன என்பதாம்.

ஐவந்து என்பதற்குப் பகுதி தைவா. புலவர் தொன்றுதொட்டமைந்த முறைப்படி சந்திரன் அல்லிமனைவியினது இதழ்த்துகிலை நெகிழ்த்தலு மென்றாற்கேற்ப சூரியன் மனைவியாகிய தாமரைகுவிதலை நாணிக்கண்களை மூடிக்கொண்டனபோல முகிழ்த்தனவெனக் கொள்க. [இதழ்த்துகிலென்றது உருவகவணி. கரத்திருல் என்றலிற் கரமாகிய சரமென்று மூன்றுருவகமேதுவாகப் பொருள்கொள்ள வேண்டலில் தொடர்புருவகவணி. கமலம் கண் புதைத்தனவென்றல் தற்குறிப்பணியாம்]. (அ)

களிசெய்காமநோய் விளைத்திடு மிரவெனுங் கன்னி
நளிகொள்வெண்மதி நலங்கிளர் வாண்முக மதனுற்
றெளிநிலாக்கதிர்த் தேறல்கொப் புளித்தலுஞ் சிறந்த
வொளிகொள்வான்மகிழ் பூத்தென விளங்கின வுடுக்கள்.

இ - ள். களி செய் - களிப்பினைச் செய்கின்ற, காமம் நோய் - காமமாகிய நோயை, விளைத்திடும் - உண்டாக்கும், இரவு எனும்

கன்னி - இரவென்னு மங்கையானவள், நளி கொள் - குளிர்ச்சியைக் கொண்ட, வெள் - வெள்ளிய, மதி - சந்திரனாகிய, நலம் கிளர் - நன்மை விளங்காநின்ற, வாள் - சாந்திபொருந்திய, முகம் அதனால் - முகத்தைக்கொண்டு, தெவி - தெவிந்த, நிலா - ஒளிபொருந்திய, கதிர் - கிரணமாகிய, தேறல் - மதுவை, கொப்புளித்தலும் - உமிழ்த லும், சிறந்த - சிறக்கப்பெற்ற, ஒளி கொள் - ஒளியைக்கொண்ட, வான் - ஆகாயமாகிய, மகிழ் - மகிழமரமானது, பூத்தென - மலர்ந் ததுபோல, உடுக்கள் - தாரகைகள், விளங்கின - ஒளிசெய்தன, எ - று.

க - து. இரவாகிய பெண்ணானவள் சந்திரனாகிய முகத்தைக் கொண்டு கிரணமாகிய தேனைக் கொப்புளிக்கச் சிறப்புற்ற வாகாய மாகிய மகிழமரங்கள் பூத்தனபோலும் நட்சத்திரங்க ளுதயமாயின என்பதாம்.

மாதர் சுவைக்க மகிழமர மலர்வதென்பதுபற்றி இரவென்னுங் கன்னி மதிமுகத்தாற் சுவைக்க வான்மகிழிற் றாரகைமலர் பூத்தன வென்றார். [உருவகத்தை அங்கமாகக் கொண்ட பொருட்டற்குறிப் பணி.] (௬)

நள்ளிருட்குறும் பெறிந்தெழு நளிர்மதிச் செல்வன்
விள்ளுமாம்பல்வாய்க் கங்குலாந் தெரிவையை வேட்ப
வள்ளிவான்மகள் சிதறுவெள் பொரியென வமைந்த
புள்ளிமீனின மகலிரு விசும்பினிற் பொடித்த.

இ - ள். அமைந்த - நிறைந்த, புள்ளி - பொறிகளாகிய, மீன் இனம் - தாரகைகளுடைய கூட்டங்களானவை, நள் - மிக்க, இருள் - இருளாகிய, குறும்பு - குறுநிலமன்னனை, எறிந்து - அழித்து, எழு - தோன்றிய, நளிர் - குளிர்ச்சிபொருந்திய, மதி - சந்திரனாகிய, செல் வன் - அரசிளங் குமரனானவன், விள்ளும் - மலர்கின்ற, ஆம்பல் - செவ்வல்லிப்பூவாகிய,வாய் - வாயையுடைய, கங்குலாம் - இரவாகிய, தெரிவையை - மங்கையை, வேட்ப - மணஞ்செய்ய, வான் - ஆகாய மாகிய, மகள் - மாதானவள், அள்ளி - கைகளாலள்ளி, சிதறு - இறைத்த, வெள் பொரி என - வெள்ளிய பொரிகளைப்போல, அகல் - அகன்ற, இரு விசும்பினில் - பெரிய வாகாயத்தின்கண், பொடித்த - தோன்றின, எ - று.

க - து. சந்திரன் இரவென்னும்பெண்ணை மணஞ்செய்ய வாகா யமென்னும் பெண்ணானவள் அள்ளித்தூவிய பொரிகளைப்போல நட் சத்திரங்க ளுதயமாயின என்பதாம்.

மணமுதலிய செய்யும்போது பொரியிறைத்தல் விதியென்பது விவாக கற்பத்திற் சொல்லப்பட்டது. [இதுவும் பொருட்டற்குறிப் பணி.] (கo)

திங்கள்வேந்துவெண் டாரகைத் துணைவியர் செறிய
வங்கண்வானகத் தெழுதலு மாரமு துகுக்கும்
பொங்குவெண்கதிர் வெள்ளியம் பிரம்புபார் போர்த்த
துங்கவல்லிருட் குறுநில வேந்தினைத் துரந்த.

இ - ள். திங்கள் - சந்திரனாகிய, வேந்து - அரசனானவன், வெள் தாரகை - வெள்ளிய வுடுக்களாகிய, துணைவியர் - மனைவியர், செறிய - (தன்னோடு) நெருங்கிவர, அம் கண் - அழகிய இடத்தை யுடைய, வான் அகத்து - ஆகாயத்தின்கண், எழுதலும் - தோன்றிய வளவில், ஆர் - நிறைந்த, அமுது - அமிர்தத்தை, உகுக்கும் - சிந்து கின்ற, பொங்கு - மிகுந்த, வெள் - வெள்ளிய, கதிர் - கிரணங்களா கிய, வெள்ளி பிரம்பு - வெள்ளிப் பிரம்புகளானவை, பார் - பூமி யை, போர்த்த - மூடிய, துங்கம் - உயர்வுள்ள, வல் - வலிய, இருள் - இருளாகிய, குறுநிலவேந்தினை - குறுநிலமன்னனை, துரந்த - துரத் தின, எ - று. அம் - சாரியை.

க - து. சந்திரனாகிய வரசன் நட்சத்திரங்களாகிய மனைவிக ளோடு வானத்தி லுதித்தவளவில் அவன் கிரணமாகிய பிரம்புகள் இருளாகிய குறுநிலவரசனைத் துரத்தின என்பதாம்.

வேந்து பண்பாகுபெயர். திங்களெழ அவனது கிரணத்தால் இருணீங்கினதென்பார் 'கதிர்வெள்ளிப் பிரம்பு இருளைத் துரந்த' என்றார். [சந்திரனில் வேந்தனையும் கிரணத்திற் பிரம்பினையும் இருளிற் குறுநிலவேந்தனையும் ஆரோபித்தலால் உருவகவணி.] (கக)

தாழும்வண்டிமிர் தண்மலர்த் தடஞ்சினைத் தருவி
னீழலெங்கணுந் துயல்வரு கின்றன நெடுநீ
ராழிவெண்டிரை முகட்டெழு மவிர்மதிக் கதிர்வாள்
போழும்வல்லிருட் டுணிபல பதைப்பனபோலும்.

இ - ள். வண்டு இமிர் - வண்டுகளொலிக்கின்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, மலர் - மலர்களாகிய, தாழும் - தாழ்ந்த, தடம் - விசா லம்பொருந்திய, சினை - கிளைகளையுடைய, தருவின் - மரத்தினு டைய, நீழல் - நிழல்களானவை, எங்கணும் - எவ்விடத்தும், துயல் வருகின்றன - அசைகின்றன; நெடு நீர் - நெடியநீரையுடைய, ஆழி - கடலினது, வெள் திரை முகட்டு - வெள்ளிய அலைகளினுடைய வுச்

சியில், எழும் - தோன்றும், அவிர் - காந்திபொருந்திய, மதி - சந்திரனுனவன், கதிர் வாள் - கிரணங்களாகிய வாளினுலே, போழும் - பிளக்கப்பட்ட, வல் - வலிய, இருள் - இருளினது, துணி - துண்டங்கள், பல - அனேகம், பதைப்பன போலும் - பதைப்பனவற்றையொக்கும், எ - று.

க - து. தருக்களினிழல்க ளசைவன வைபோலவெனின் சந்திர கிரணங்களென்னும் வாட்களால் வெட்டுப்பட்ட இருட்டுண்டங்கள் பதைப்பனபோலாம் என்பதாம்.

தாழுஞ் சினையெனமுடிக்க. [நிலவினிற் காற்றினு லலைகின்ற மரத்தினீழல் நிலத்தி லசைவதில் வெட்டுப்பட் டயிரிறக்கும் இருளின் பதைப்பைக் குறித்தலால் தற்குறிப்பணி.] (கஉ)

செருவின்மாண்டவ ரரம்பையர்ச் சேர்குவ ரன்றே
பொருவில்வெண்மதி பொழிகதிர் வாளினுற் போழ்ந்த
விருளுமின்னகிற் கொழும்புகை யுருவெடுத் தெழில்சே
ரரமடந்தையர் கருங்குழற் கற்றைசென் றடைந்த.

இ - ள். செருவில் - போரின்கண், மாண்டவர் - இறந்தவர், அரம்பையர் - அரம்பையரை, சேர்குவர் - அடைகுவர், அன்றே - அன்று; பொரு இல் - ஒப்பில்லாத, வெள் மதி - வெள்ளிய சந்திரனுனவன், பொழி - பொழிகின்ற, கதிர் - கிரணமாகிய, வாளினுல் - கத்தியினுல், போழ்ந்த - வெட்டப்பட்ட, இருளும் - அந்தகாரமும், இன் - இனிய, அகில் - அகிற்கட்டைகளினது, கொழும் புகை - கொழுமிய தூமத்தினது, உருவு எடுத்து-வடிவெடுத்து, எழில் சேர் - அழகுபொருந்திய, அரமடந்தையர் - தெய்வமங்கையருடைய, கரு - கரிய, குழல் கற்றை - மயிர்முடியை, சென்று - போய், அடைந்த - சேர்ந்தன, எ - று.

க - து. போரின்மாண்டவ ரரம்பையரைச் சேர்குவர் ஆகையால் சந்திரகிரண வாளால் வெட்டப்பட்ட இருளும் அகிற்புகை வடிவெடுத் தரம்பையரின் கூந்தலை யடைந்தன என்பதாம்.

போர்க்களத்திற் பகைவரோ டெதிர்த்து இறந்தவர்கள் தேவருபசரிக்கத் தமக்குரிய அரம்பையரோடுகூடி வீரசுவர்க்கத்தில் மகிழ்ந்திருப்ப ராகையால் அவ்வாறு மதியோடு எதிர்த்திறந்த விருளும் தனக்குரிய அவர் குழற்கற்றையை யடைந்ததென்க. [முற்கூறப்பட்ட பொதுப்பொருளாற் பிற்கூறப்பட்ட சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள்வைப்பணி] (கரு)

களிகொள் வண்டின மாம்பல்சேர்ந் திசைபயில் காட்சி
யொளிரும் வெண்மதி தூரத்தூறு முடைந்தகா ரிருள்போ
யளியின் மெல்லுரு வெடுத்தவ னருந்துணை வியர்பா
லெளிமை யின்னுரை யிரங்கிவீழ்ந் திசைப்பன வியையும்.

இ - ள். களிகொள் - மகிழ்ச்சியைக்கொண்ட, வண்டு இனம் - வண்டுக் கூட்டங்கள், ஆம்பல் சேர்ந்து - அல்லிமலர்களை யடுத்து, இசை பயில் - இராகத்தைப் பாடுகின்ற, காட்சி - தோற்றமானது, ஒளிரும் - விளங்காநின்ற, வெள் மதி - வெள்ளிய சந்திரனானவன், தூரத்து ஊறும் - தூரத்தியவளவிலே, உடைந்த - சிதைந்த, கார் இருள் - கரியவிருளானது, போய் - (தன்னுருவ) நீங்கி, அளியின் - வண்டுக ளுடைய, மெல் உரு எடுத்து - மெல்லிய வுருவங்கொண்டு, அவன் - அச்சந்திரனுடைய, அரு - அருமையாகிய, துணைவியர்பால் - மனை வியரிடத்து, எளிமை - எளிமையாகிய, இன் உரை - இனிய சொற் களை, இரங்கி - புலம்பி, வீழ்ந்து - அடிபணிந்து, இசைப்பன இயை யும் - சொல்வனவற்றையொக்கும், எ - று.

க - து. அல்லிமலர்களில் வண்டுகள்சேர்ந் திசைபாடுங் காட்சி யானது சந்திரன் றூரத்தியவளவில் சிதைபட்ட விருட்களானவை வண்டுருக்கொண்டு அச்சந்திரன் மனைவியரிடத் திரங்கிச் சொல்வன போலு மிருந்தது என்பதாம்.

ஒருவராலிடுக்க ணுற்றவர் தங்குறைமுடித்தற்கு நினைத்து அவன் நட்பாளர் முதலியோரினும் அவனுயிர்த் துணைவியரை யடுத்து எளி தின் முடிப்பரென்பதுதோன்ற 'அவனருந் துணைவியர்பா லெளிமை யின்னுரை யிரங்கி வீழ்ந்திசைப்பன வியையும்' என்றார். [வண்டினி சையும் இருளின் வேண்டுகோளாகக் குறித்தலால் தற்குறிப்பணி.]

முள்ளரைச்செழு முளரியு முருகுகொப் புளிக்கு
மள்ளலங்கயத் தாம்பலு முறவென வறிந்தேங்
கள்ளுலாமலர் முகிழ்த்தவக் கடிமலர்க் கமலப்
பிள்ளைவண்டினுக் கூறுதேன் பெரிதளித் ததனால்.

இ - ள். கள் உலாம் - தேனொழுகுகின்ற, மலர் - அல்லிப்பூவா னது, முகிழ்த்த - குவிந்த, அ கடி மலர் கமலம் - அப்படிப்பட்ட வாசனையுள்ள தாமரைமலரினது, பிள்ளை வண்டினுக்கு - பிள்ளையா கிய வண்டுக்கு, ஊறு - சுரக்கின்ற, தேன் - தேனை, பெரிது - மிக வும், அளித்ததனால் - கொடுத்ததனால், அள்ளல் - சேற்றையுடைய, அம் - அழகிய, கயத்து - கயத்திலுள்ள, முள் - முட்களையுடைய

அரை - தாளையுடைய, செழு - செழிய, முளரியும் - தாமரைப்பூவும், முருகு - தேனை, கொப்புளிக்கும் - உமிழ்கின்ற, ஆம்பலும் - அல்லிப்பூவும், உறவு என - நம்மு றுறவுடையனவென்று, (நாம்) அறிந்தேம் - அறிந்துகொண்டோம், எ - று.

க - து. அல்லிமலர்களானவை தாமரைகளிலுள்ள வண்டுகளுக்குத் தேன் கொடுத்தமையால் இரண்டுமுறவென் றறிந்தேம் என்பதாம்.

தாமரையின் பிள்ளையாகிய வண்டினுக்கு அல்லி தேனைக்கொடுத்தலால் மலர்கின்ற கால வேற்றுமைபற்றிப் புறத்தே பகையுடையனபோலத் தோன்றினும் அகத்தே நட்புடையனவென்பார் 'உறவென வறிந்தேம்' என்றார். [முளரியும் ஆம்பலும் உறவெனவறிந்தேமென்றது தற்குறிப்பணி. இவ்வாக்கியப்பொருள் கமலப்பிள்ளை வண்டினுக்கு அல்லி தேனளித்ததென்னும் பின்வாக்கியப்பொருளாற் சாதிக்கப்படுதலாற் செய்யுட்குறியணி.] (௧௫)

கங்குலெய்திய காரிருட் கருங்கட றெளியத்
திங்களென்சுடர்த் தேற்றினுற் றேற்றலுஞ் சிறந்து
பொங்கு வெண்ணிலா தெளிந்தநன் னீரெனப் பொலிந்த
பங்கமென்னநீ டருநிழல் படியினிற் படிந்த.

இ - ள். கங்குல் - இரவில், எய்திய - அடைந்த, கார் - கரிய, இருள் - இருளாகிய, கரு கடல் - கரியகடலானது, தெளிய - கலக்கந்தீர, திங்கள் என் - சந்திரனென்னும், சுடர் - காந்தியையுடைய, தேற்றினால் - தேற்றும் வித்தினாலே, தேற்றலும் - (உரைத்துத்) தெளிவித்தவளவில், சிறந்து - சிறப்புப்பெற்று, பொங்கு - விளங்குகின்ற, வெள் நிலா - வெள்ளிய சந்திரிகைகள், தெளிந்த - தெளிவையடைந்த, நல் நீர் என - நல்ல நீர்போல், பொலிந்த - பொலிவையடைந்தன; நீள் - நெடிய, தரு நிழல் - மரங்களுடைய நிழல்களானவை, படியினில் - பூமியின்மேல், பங்கம் என்ன - சேறுபோல், படிந்த - படிந்தன, எ - று.

க - து. இருட்கடலானது தெளியச் சந்திரனென்னுந் தேற்றும் வித்தினாலே உரைத்துத் தெளிவித்தவளவில் அவன் கிரணங்களே நீர்போலிருந்தன, தருக்களி னிழல்களானவை சேற்றைப்போலிருந்தன என்பதாம்.

[இருளில் கடலையும் திங்களில் தேற்றுவித்தையும் ஆரோபித்தலால் உருவகவணி. நிலா நன்னீரென தருநிழல் பங்கமென்ன என்றலால் உவமையணி.] (௧௬)

அகல்விசும்பெனு மாவின்மென் மடியெனத் தோன்றித்
திகழும்வெண்மதி யுமிழ்தரு செழுங்கதிர்த் தீம்பான்
முகைநெகிழ்ந்துதேன் பிலிற்றிய முல்லையம் புறவி
னுகள்புனிற்றிளங் கன்றெனச் சகோரநின் றுண்ணும்.

இ - ள். அகல் - அகன்ற, விசும்பு எனும் - ஆகாயமென்கிற, ஆவின் - பசுவினது, மெல் - மெல்லிய, மடி என - மடியைப்போல, தோன்றி - உண்டாகி, திகழும்-விளங்காநின்ற, வெள் மதி - வெள்ளிய சந்திரன், உமிழ்தரு - சொரிகின்ற, செழு - செழிய, கதிர் - நிலவாகிய, தீ - மதுரம்பொருந்திய, பால் - பாலை, முகை - அரும்புகள், நெகிழ்ந்து - விரிந்து, தேன் - தேனை, பிலிற்றிய - துளித்த, முல்லை - முல்லைக் கொடியையுடைய, அம் - அழகிய, புறவின் - முல்லைநிலத்தின்கண், சகோரம் - சகோரப் பறவையானது, உகள் - துள்ளுகின்ற, புனிற்று இளம் - மிகுந்த விளமையையுடைய, கன்று என-கன்றுபோல், நின்று-நிலைபெற்று, உண்ணும்-குடிக்கும், எ - று.

க - து ஆகாயமென்னும் பசுவினது மடியாகத்தோன்றுஞ் சந்திரனது கிரணமாகிய பாலைமுல்லைநிலத் திளங்கன்றைப்போற் சகோரங்களுண்ணும் என்பதாம்.

[ஆகாயத்திற் பசுவினையும் சந்திரனில் மடியையும் நிலவினிற் பாலையும் ஆரோபித்தலால் உருவகவணி. சகோரங்கன்றெனவென்றலால் உவமையணி.] (கஎ)

நன்கமைந்தசா ளரத்துறு நகைநிலாக் கொழுந்தை
யன்பினீடுகூர் வாயினாற் சகோரங்க ளருந்தன்
மின்செய்வெள்ளிவெண் கம்பியை விளங்கு நூலச்சிற்
பொன்செய்கம்மியர் குறட்டினால் வாங்குதல் போலும்.

இ - ள். நன்கு அமைந்த - அழகுபொருந்திய, சாளரத்து - பலகணியினுள், உறு - அடைகின்ற, நகை - ஒளிபொருந்திய, நிலா கொழுந்தை - சந்திரனுடைய இளங்கிரணங்களை, அன்பின் - ஆசையோடு, நீடு - நீண்ட, கூர் வாயினால் - கூரியவாயினால், சகோரங்கள் - சகோரப் பறவைகள், அருந்தல் - உண்ணுதல், மின் செய் - காந்தியைச்செய்கின்ற, வெள்ளி - வெள்ளியினாலாகிய, வெள் கம்பியை - வெள்ளியகம்பியை (மாட்டி), விளங்கு-விளங்காநின்ற, நூல் அச்சில்- கம்பியச்சென்னுங் கருவியில், பொன் செய் கம்மியர்-பொன்வேலை செய்யுங் கம்மாளர், குறட்டினால் - குறட்டினாற்பற்றி, வாங்குதல் போலும் - இழுத்தலையொக்கும், எ - று.

க - து. பல்கணியுட் பொருந்துஞ் சந்திரகிரணங்களைச் சகோரங்களுண்ணுதல் எதுபோலெனின் பொற்கொல்லர் வெள்ளிக்கம்பியைக் கம்பியச்சிற் குறட்டால் இழுத்தல்போலும் என்பதாம்.

நூல்போல் வெள்ளிக்கம்பியைச் செய்தலாற் கம்பியச்சை 'நூலச்சு' என்றார். [சாளரமிடமாகச் சகோரப்புள் சந்திரிகையை யுண்ணல் அக்கம்மாளர் கம்பியச்சில் வெள்ளிக்கம்பி யிழுப்பதுபோலெனலால் உவமையணி.] (கஅ)

துலங்குவெண்மதித் தூநிலாக் கதிரினின் றிலங்கு
பொலங்கொண்மாடமேற் புதுநிலா மணிபுனல் பொழிதல்
நலம்பெய் நேமியம் புட்குலம் பிரிவுள நலியப்
புலம்புமாறுகண் டுள்ளநெக் குருகுதல் போலும்.

இ - ள். துலங்கு - விளங்குகின்ற, வெண் மதி - வெள்ளிய சந்திரனது, தூ - பரிசுத்தமாகிய, நிலா கதிரில் - சந்திரிகையில், நின்று - நிலைபெற்று, இலங்கு - ஒளிர்கின்ற, பொலம் கொள் - அழகினைக் கொண்ட, மாடமேல் - உப்பரிகைமேற் பதித்த, புது - புதிய, நிலா மணி - சந்திரகாந்தங்கள், புனல் - நீரை, பொழிதல் - சொரிதலானது, நலம் பெய் - சுகத்தைத் தருகின்ற, நேமி புள் - சக்கரவாகப் பறவைகளது, குலம் - கூட்டத்தினது, பிரிவு - ஆண்பெண்களின் பிரிவானது, உளம் - அவற்றின் மனத்தை, நலிய - வருத்த, புலம்புமாறு - அவை வருந்துந்தன்மையை, கண்டு - (அச்சந்திரகாந்தங்கள்) கண்டு, உள்ளம் - தமதுள்ளம், நெக்குருகுதல்போலும் - கரைந்துருகுதல்போலும், எ - று.

க - து. சந்திரகிரணங்களால் சந்திரகாந்தம் நீரைப்பொழிதலானது சகோரங்கள் பிரிதலைக்கண் டுருகுதல்போலும் என்பதாம்.

நேமியம் புள் என்பதில் அம்சாரியை. [நிலாமணி புனல்சொரிதலில் உள்ள நெக்குருகுதலைக் குறித்தலால் தற்குறிப்பணி.] (கக)

இன்னகாரிருட் கங்குலுக் கெல்லைகாண் கிலளாய்க்
கன்னலஞ்செழுங் கழனிசூழ் விதர்ப்பநா டளிக்கு
மன்னர்மன்னவ னருந்தவப் பேற்றினுல் வந்த
பொன்னவாஞ்சுணங் கணிமுலைப் பூங்கொடி புலம்பும்.

இ - ள். கன்னல் - கரும்புகளுடைய, அம் - அழகிய, செழு - செழுமையுள்ள, கழனி சூழ் - வயல்கள்சூழ்ந்த, விதர்ப்பநாடு - விதர்ப்ப தேசத்தை, அளிக்கும் - காக்கின்ற, மன்னர் மன்னவன் - அரசர்க்

கரசனாகிய வீமனது, அரு தவம் பேற்றினால் - அரியதவப்பயத்தினால், வந்த - தோன்றிய, பொன் அவாம் - பொன்விரும்புகின்ற, சுணங்கு அணி - தேமலணிந்த, முலை - தனத்தினையுடைய, பூ கொடி - மலர்க் கொடிபோல்பவளாகிய தமயந்தி, இன்ன - இத்தன்மைத்தாகிய, கார் இருள் - கரியவிருளையுடைய, கங்குலுக்கு - இரவிற்கு, எல்லை காண்கிலளாய் - அளவுகாணாதவளாகி, புலம்பும் - புலம்புவாள், எ - று.

க - து. தமயந்தியானவள் இவ்விராக்காலத்தினளவு காணாதவளாய்ப் புலம்புத லுறுவாளாயினாள் என்பதாம்.

பூங்கொடி உவமையாகுபெயர். (௨௦)

நிலாத்தோற்றுபடலம் முற்றிற்று.

# சந்திரோபாலம்பனப்படலம்.

இப்படலத்தால் மேலுதித்த சந்திரனை விரகநோய்கொண்ட தமயந்தியானவள் நிந்தித்தல் சொல்லப்படுகின்றது.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விரிதெண் டிரைநீர்க் கருங்கடல்வான் முகட்டிலெ
ழுந்த வெண்டிங்காள், மருவு திரைநீர் சுவற்றுசிகை வட
வை யிடத்தோ மைவிளர்ப்பக், கருகுங் கொடிய வெவ்விடத்
தின் கண்ணோ துணந்தா ருயிர்பருக, வெரிவெங் கதிரா
ல்வெதுப்ப யாண்டுக் கற்றா யறியேமால்.

இ - ள். விரி - விரிந்த, தெள் - தெள்ளிய, திரை - அலைகளை யுடைய, நீர் - நீரையுடைய, கரு கடல் - கரியகடலினது, வான் - உயர்ந்த, முகட்டில் - உச்சியில், எழுந்த - உதயஞ்செய்த, வெள் திங் காள் - வெள்ளியசந்திரனே, துணந்தார் - பிரிந்தவர்களுடைய, உயிர் பருக - உயிரைக்குடிக்க, எரி - எரிகின்ற, வெம் கதிரால் - வெவ்விய கிரணத்திரளால், உடல் வெதுப்ப - உடலைச்சுட, மருவு - பொருந்து கின்ற, திரை நீர் - அலையையுடைய நீரினை, சுவற்று - சுவறச்செய் கின்ற, சிகை - கொழுந்தினையுடைய, வடவை இடத்தோ - வடவைத் தீயிடத்தோ, மை விளர்ப்ப - அஞ்சனமும் வெள்ளிதாக, கருகும் - கரு கிய, வெவ்விடத்தின் கண்ணோ - வெவ்வியவிடத்தினிடத்தோ, யாண் டு கற்றாய் - (இவ்விரண்டினுள்) எதனிடத்துக் கற்றுக்கொண்டாய், அறியேம் - (யாம் அதனை) அறிந்திலேம், எ - று.

க - து. சந்திரனே வெவ்விய கிரணங்களாலே பிரிந்தவருடலைச் சுட வடவாமுகாக்கினியிடத்துக் கற்றாயோ விஷத்தினிடத்துக் கற் றாயோ எவ்விடத்திற் கற்றாய் என்பதாம்.

ஆல் - அசை. திங்களென்பது உயர்திணைப் பெயராதலில் திங் காளென விளித்தற்கேற்றபணீண்டது. மைவிளர்ப்ப வென்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. கடலினிடத்து வடவைத் தீயும் விடமுந் தோன்றுதல்பற்றி அதிற்றோன்றிய சந்திரனுக்கு அவற்றி னிடத்திற் கற்றுக்கொள்ளுதல் சொல்லப்பட்டது. அவனது கதிர் தண்ணியவாயிருந்தும், பிரிந்தவரைச் சுடுதல்பற்றி 'எரிவெங்கதிர்' எனப்பட்டது. அறியேமென்பது தன்போலியோரையுந் தன்னுடன்

படுத்துக்கூறிய உளப்பாட்டுத் தன்மைப்பன்மைமுற்று. [வடவையி டத்தோ விடத்தின்கண்ணோவென்றது ஐயவணி. அறியேமென்றது தற்குறிப்பணி.] (க)

செய்ய கமல மலர்கூம்பச் சேர்ந்த கொடிய வெண் டிங்காள், வெய்ய கதிர்வாள் வீசியுயிர் வீட்டி யதனாற் புகழ் பெறுக, பொய்யி றவத்தி னிற்பயந்த புணரிவேந்தின் குலம் வாழ்க, மையல் கூரென் றனைநாளும் வருத்தா தொழியல் வேண்டுமால்.

இ - ள். செய்ய - சிவந்த, கமலமலர் - தாமரைப் பூக்களானவை, கூம்ப - குவிய, சேர்ந்த - அடைந்த, கொடிய - கொடுமை பொருந்திய, வெண் திங்காள் - வெள்ளிய சந்திரனே, மையல் கூர் - மயக்கமிகுந்த, என்றனை - என்னை, நாளும் - எந்நாளும், வருத்தாது - வருத்தஞ்செய்யாமல், ஒழியல்வேண்டும் - தவிரல்வேண்டும்; வெய்ய - வெவ்விய, கதிர் வாள்வீசி - கிரணமாகிய வாளைவீசி, உயிர் வீட்டி - என்னுயிரைக் கொன்று, அதனால் - அக்கொலைத்தொழிலி னாலே, புகழ் - கீர்த்தியை, பெறுக - பெறக்கடவாய்; பொய் இல் - பொய் தவிர்ந்த, தவத்தின் - தவத்தினால், நின் பயந்த - உன்னைப் பெற்ற, புணரிவேந்தின் - கடலரசனுடைய, குலம் - மரபு, வாழ்க - வாழக்கடவது, எ - று.

க - று. கொடுமையுள்ள சந்திரனே! என்னை வருத்தா தொழியாக; கிரணவாளால் வெட்டிப் புகழ்பெறுவாயாக; உன்னைப் பெற்ற வருணராஜன் குலமும் வாழ்க என்பதாம்.

பலநாளுந் துன்பப்படுதலில் இறத்தல் ஒருநாளைத் துன்பமென் பாள் 'உயிர்வீட்டி யதனாற் புகழ்பெறுக' என்றாள். "சாத-லொருநா ளொருபொழுதைத் துன்ப மவைபோ, லருநவை யாற்றுத லின்று" (நாலடியார்-மானம்-ரு). நீ புகழ்பெறுக, நின்குலம் வாழ்கவென்றா ளேனும் நீ நிந்தையடைக, நின்குலங்கேடடைக வென்பது கருத்து. [வருத்தாது உயிர்வீட்டிப் புகழ்பெறுகவெனப் பொருள்படலால் வஞ்சப் புகழ்ச்சியணி]

விரவு கரிய கூரிருள்வாய் வெய்யோ னென்னக் கதிர் பரப்பி, மருவு கொழுநர்ப் பிரிந்தாரை வருத்தா நிற்கு மாமதியே, திரைசெய் கடல்பொன் னுருக்கியபோற் செங்கே ழெழுதப் புலரியெழு, மிரவி கதிராற் சவிமழுங்கி யிருத்தல் யானே காண்குவனால்.

இ - ள். விரவு - (உலகமெங்கணும்) கலந்த, கரிய - கறுத்த, கூர்இருள்வாய்-மிக்க விருளினிடத்தில், வெய்யோன் என்ன - சூரிய னென்றுசொல்ல, கதிர் - கிரணங்களை, பரப்பி - விரித்து, மருவு - தம்மைமணந்த, கொழுநர் பிரிந்தாரை - தலைவரைப் பிரிந்தமாதரை, வருத்தாநிற்கும் - வருத்துகின்ற, மா மதியே - பெரியசந்திரனே, திரை செய் - அலைகளை யுண்டாக்குகின்ற, கடல் - கடலானது, பொன் உருக்கிய போல் - பொன்னை யுருக்கியதுபோல், செம் கேழ் எய்த - செந்நிறமடைய, புலரி - விடியற்காலத்தில், எழும் - எழு கின்ற, இரவி கதிரால் - சூரிய கிரணத்தினால், சவி மழுங்கி - ஒளி கெட்டு, இருத்தல் - இருக்கையை, யானே - நானே, காண்குவன் - பார்ப்பேன், எ - று.

க - து. மகிழ்நரைப்பிரிந்த மாதரை வருத்துகின்ற சந்திரனே! நீ சூரியகிரணத்தா லொளிமழுங்கி யிருத்தலை யானே காண்பேன் என்பதாம்.

உருக்கியது உருக்கியவெனக் கடை குறைந்தது. ஒருவர்க்குத் தீங்கிழைப்பவர் அவர் கண்முன்னே கேடுறுவரென்பது கருத்து. [வெய்யோனென்னவென்றது உவமையணி. கடல் பொன்னுருக்கிய போலென்றது தற்குறிப்பணி.] (ரு)

கன்று குணிலாக் கனியுகுத்தோன் கடலி னமுதங் கடைந்தெடுப்பக், குன்ற மிடலுங் கலையனைத்துந் தகர்ந்துள் ளாவி குறைந்திலையே, துன்று கதிர்வெண் கலைமதியே சுலவு திரைநீர்க் கடல்குடித்த, வன்று கலச முனிவயிற்றி லற்றா யென்னி லழலாயே.

இ - ள். துன்று - நெருங்கிய, கதிர் - கிரணங்களையுடைய, வெள் - வெள்ளிய, கலை மதியே - கலைகளையுடைய சந்திரனே, கன்று - பசுவின் கன்றை, குணிலா - குறுந்தடியாகக்கொண்டு, கனி - விளங் கனியை, உகுத்தோன் - உதிர்த்த நாரணனானவன், கடலின் - பாற் கடலிலே, கடைந்து - மதித்து, அமுதம் - அமிர்தத்தை, எடுப்ப - எடுத்தல்வேண்டி, குன்றம் - மந்தரமலையை, இடலும் - இட்டவளவில், கலை அனைத்தும் - பதினாறு கலைகளும், தகர்ந்து - உடைந்து, உள் ஆவி - உள்ளேயிருக்கின்ற வுயிர், குறைந்திலை - நீ குறைந்தா யில்லை; கடல் - கடலினுடைய, சுலவு - சுழல்கின்ற, திரை - அலை களையுடைய, நீர் - நீர்முழுவதையும், குடித்த - பானம்பண்ணின, அன்று - அந்நாளில், கலசமுனி - கும்பமுனிவனுடைய, வயிற்றில் - வயிற்றினிடத்தில், அற்றாய் என்னில் - நீ சீரணித்தாயானால், அழ லாய் - (இன்று) சுடமாட்டாய், எ - று.

க - து. வெள்ளிய சந்திரனே! திருமாலானவர் திருப்பாற்கடலி லமுதங் கடைந்தெடுக்க மந்தரமலையை யிட்டவளவில் கலைகள் கெட் டாவி குறைந்திலே; அந்நாளில் கடலைக்குடித்த அகத்தியர் வயிற்றிற் சிரணித்தாயென்னில் என்னைச்சுடாய் என்பதாம்.

கண்ணன் கன்று மேய்த்துக்கொண் டிருந்தபோது அவனை வஞ் சித்துக் கொல்லும்படி கன்றினுருக்கொண்டிருந்த தேனுகாசுரனென் பவனைக் குறுந்தடியாகக்கொண்டு விளவினுருவாயிருந்த அசுரனை விளங்கனி யெறிதல்போல வடித்து, இப்படி அவ்விருவரையுங் கொன்றானெனப் பாகவதத்திற் சொல்லப்பட்டது. உருமாறிவந்த பகைவரையுங் கொன்ற சூழ்ச்சியுடைய நாரணன் கடலிலே மந்தர மலையிட்டுக் கடைந்தும் தனது உதராக்கினியில் வாதாவியைச் சிர ணிக்கச்செய்த அகத்தியமுனி கடனீரோடுண்டும் நீ நசியாமலிருப் பது எனது தவக்குறையென்பது கருத்தாகக்கொள்க. (ஈ)

மட்டு விரியு மலர்வாளி வருந்துந் தமியே னுயிர்சோ ரப், பட்ட புழையி லழலுமிழுங் கதிர்கள் சுருக்கிப் பார் வேந்தி, னெட்டு வரையு மிகழ்ந்துபொலங் கிரியோ டிகலு மிருதடந்தோ, டொட்ட கதிர்மென் கரத்தாலென் னுடலந் தொடுவாய் சுடர்த்திங்காள்.

இ - ள். சுடர் திங்காள் - ஒளியையுடைய சந்திரனே, (நீ) வருந்தும் - (விரகத்தினால்) வருந்துகின்ற, தமியேன் - தனியேனா கிய வென்னுடைய, உயிர்சோர - ஆவிசோர, மட்டுவிரியும் - தேனொ ழுகுகின்ற, மலர் வாளி - மலர்ப்பாணங்கள், பட்ட - தைத்த, புழை யில் - துவாரத்தில், அழலுமிழும் - அக்கினியை யுமிழ்கின்ற, கதிர் கள் - கிரணங்களை, சுருக்கி - அடக்கிக்கொண்டு, பார் வேந்தின் - புவிக்கரசனாகிய நளமகாராசனுடைய, எட்டு வரையும் - அட்டகுல கிரிகளையும், இகழ்ந்து - இகழ்ச்சிசெய்து, பொலம் கிரியோடு-மேரு மலையுடனே, இகலும் - பகைக்கின்ற, இரு - இரண்டாகிய, தடம் தோள் - பெரிய புயங்களை, தொட்ட - தீண்டிய, கதிர் - கிரணங்க ளாகிய, மெல் கரத்தால் - மெல்லிய கரங்களால், என் உடலம் - என் னுடைய தேகமுழுவதையும், தொடுவாய் - தீண்டுவாயாக, எ - று.

க - து. சந்திரனே! நளனைத் தொட்ட கரத்தா லென்னைத் தொடுவாயென்றாள் என்பதாம்.

மேருமலை எல்லா மலைகளினும் பெரிதாயும் அட்ட குலவரைகள் அதனிற் சிறியவாயும் நிற்றலால் நளன் புயங்கள் 'இகலும்' என்றும்,

இகழ்ந்து' என்றுஞ் சொல்லப்பட்டன. அழலுமிழ நின்கதிர்கள் நளன்றேட் பரிசத்தால் தண்ணியவாகுமென்பாள் 'தொட்ட கதிர்மென் கரத்தாலென் னுடலந் தொடுவாய்' என்றாள். [கதிர்மென்கர மென்றது உருவகவணி. இருதடந் தோள்தொட்ட மென்கரத்தால் என்னுடலம் தொடுவாயென்பது அச்செய்கையால் குளிர்ச்சி பெறுமென்பது கருத்தாகலின் வல்லோர் நவிற்சியணி.] (டு)

அல்லி னிருண்மாக் கடல்சுவற்றி யளியன் முலைமே லழலூற்றிக், கொல்லுங் கொடிய வெண்டிங்காள் கொழிக்கு நினது கதிர்சிறிது, புல்லும் பொழுதி லொழியாது புனல்கான் றிந்து காந்தமெனுங், கல்லு முருகு மெனிலுலகி லெவரே யாவி கரையாதார்.

இ - ள். அல்லின் - இரவின்கண், இருள் - இருளாகிய, மா - பெரிய, கடல் - கடனீரை, சுவற்றி - சுவறச்செய்து, அளியன் - எளியளாகிய வென்னுடைய, முலைமேல் - தனத்தின்கண், அழலூற்றி - அக்கினியைச்சொரிந்து, கொல்லும் - கொல்லாநின்ற, கொடிய - கொடுமை பொருந்திய, வெள் திங்காள் - வெள்ளிய சந்திரனே, கொழிக்கும் - கொப்புளிக்கின்ற, நினதுகதிர் - உன்னுடைய கிரணங்கள், சிறிது - கொஞ்சம், புல்லும்பொழுதில் - பொருந்தும் பொழுதில், ஒழியாது-ஓயாமல், இந்துகாந்தம் எனும் கல்லும் - சந்திர காந்தம் எனுங் கல்லும், புனல் கான்று - நீரைக்கக்கி, உருகும் எனில் - கரையுமேயானால், உலகில் - உலகத்தில், ஆவி கரையாதார் - (மென்மையாகிய) உயிர் கரையாதவர், எவர் - யாவர், எ - று.

க - து. சந்திரனே! உன் கிரணங்களாற் கல்லு முருகுமானால் உலகத்தில் யார்தா முருகாதவர் என்றாள் என்பதாம்.

உலகமுடிவி லாயிரங் கிரணங்களோடு தோன்றிக் கடனீரனைத்தையுஞ்சுவற்றி மலைகளையுருக்கிச் சீவகோடிகளையெல்லா மழிக்கின்ற சண்டபானுவின் விர்த்தாந்தந் தொனிக்கச் சந்திரனுக்கு இருட் கடலைச் சுவறச்செய்தலும் மலைக்கொப்பாகிய முலைமே லழலூற்றுதலும் காமிகளைக் கொல்லுதலும் கூறப்பட்டன. நெருப்பு முதலியவற்றாலுருகப்பெறாத வன்மைபொருந்திய கல்லுஞ் சந்திரகிரணத்தா லுருகுமெனில் மெல்லிய மக்களுயி ருருகுதல் வியப்போவென்பாள் 'எவரே யாவி கரையாதார்' என்றாள். வன்மையுள்ள கல்லே யுருகுமளவில் மென்மையுள்ள உயிருருகுமென்னும் பொருள் வினாவின்றிப் பெறப்படுதலால் தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி.] (சு)

பணந்தா ழரவுண் டுமிழ்மதியே யமிழ்தி ேனுடும் பல தேவ, கணந்தாம் வெருவும் விடத்தொடும்வந் ததனு லன்றே கணவர்புய, மணந்தா ருள்ளங் குளிர்ப்பேறத் தண்ணென் கதிர்கள் வழங்குவதுந், தணந்தா ருள்ள மிகவெதும்பத் தழல்போ லுருக்குந் தன்மையுமே.

இ - ள். தாழ் - வளைந்த, பணம் - படத்தையுடைய, அரவு - சர்ப்பமானது, உண்டு - விழுங்கி, உமிழ் மதியே - உமிழ்கின்ற சந்திரனே, கணவர் புயம் - தலைவருடைய புயத்தை, மணந்தார் - சேர்ந்தவர்களுடைய, உள்ளம் - மனமானது, குளிர்ப்பேற - குளிர்ச்சியையடைய, தண் என் கதிர்கள் - குளிர்ச்சியாயிருக்கின்ற கிரணங்களை, வழங்குவதும் - கொடுப்பதும், தணந்தார் - பிரிந்தவர்களுடைய, உள்ளம் - மனமானது, மிக வெதும்ப - மிகவும் வாட, தழல்போல் - அக்கினியைப்போல், உருக்கும் - உருக்குகின்ற, தன்மையும் - குணமும், அமிழ்தினேடும் - அமிர்தத்துடனேயும், பல தேவகணம் - பலவாகிய தேவகூட்டங்கள், வெருவும் - பயப்படுகின்ற, விடத்தொடும் - நஞ்சுடனும், வந்ததனுல் அன்றே - வந்ததனுலன்றே, எ - று.

க - து. அரவுண்டு கக்கிய சந்திரனே! மணந்தார்க்குத் தண்கதிர்களும் தணந்தார்க்கு வெங்கதிர்களும் வழங்குவது அமிர்தத்துடனும் விஷத்துடனும் பிறந்த குணமோ என்றாள் என்பதாம்.

மணந்தார்க்குந் தணந்தார்க்கும் ஒரு தன்மையவாகச் செய்யாமை நின் குற்றமன்று, நீ பழகுதற்கிடமாக நின்னுடன் வந்தவைகளுடைய குற்றமென்பது கருத்து. [அமிழ்தினேடும் விடத்தோடும் என்னுமுறையே குளிர்ப்பேற மிகவெதும்ப வென்றமையால் நிரனிறையணி.] (எ)

வடவா னலத்தி னுடன்பிறந்தாய் வளர்பூங் கலையொன் றெய்தியபின், படர்வார் சடையோ னழல்பரப்பு நுதற்க ணுேடு பயின்றிருந்தாய், சுடர்கால் கலைக ணிறைந்து முழு மதியாங் காலத் தொடரரவின், விடவா யுறைந்தாய் மதியேநீ வெம்மை கால்வ தரிதேயோ.

இ - ள். மதியே - சந்திரனே, வடவானலத்தினுடன் - வடவாமுகாக்கினியுடனே, பிறந்தாய் - உதித்தாய்; வளர் - வளர்கின்ற, பூ - அழகிய, கலை ஒன்று - கலையொன்றனை, எய்திய பின் - அடைந்தபின்பு, படர் - படர்கின்ற, வார் - நெடிய, சடையோன் - சடையினையுடைய பரமசிவனது, அழல் - அக்கினியை, பரப்பும் - விரிக்

கின்ற, நுதல் கண்ணோடு - நெற்றிக்கண்ணுடனே, பயின்று இருந்தாய் - பழகிக்கொண்டிருந்தாய்; சுடர் - கிரணங்களை, கால் - உமிழ்கின்ற, கலைகள் நிறைந்து - பதினாறுகலையு நிறைந்து, முழு மதி ஆங்காலை - பூரணசந்திரனானபொழுது, தொடர் - தொடருகின்ற, அரவின் - பாம்பினுடைய, விடவாய் - விடமுள்ள வாயிலே, உறைந்தாய் - தங்கினாய், (ஆகையால்) நீ - நீ, வெம்மை கால்வது - வெப்பத்தைத் தருவது, அரிதேயோ - அரிதாகுமோ, எ - று.

க - து. சந்திரனே! வடவாமுகாக்கினியுடன் பிறந்தாய், ஒரு கலைபெற்றபின் பரமசிவனெற்றிக்கண்ணோடு பழகியிருந்தாய், பாம்பின் வாயி லுறைந்தாய், நீ அக்கினியைக் கக்குதலரிதோ என்றாள் என்பதாம்.

ஒருவனுக்குப் பிறக்குமிடமும் பழகுமிடமும் உறையுமிடமும் நல்லிடமாயிருக்கில் நற்குணமும், தீயிடமா யிருக்கில் தீக்குணமு முண்டாகும் ஆதலால் இம்மூவிடமும் உனக்குத் தீயவாயிருத்தலினால் பிறர்க்குத் துன்பஞ்செய்கின்றா யென்றாள். பிறக்குமிடம் பழகுமிடம் உறையுமிடமென்னு மூன்றனுள் ஒன்றுகொடிதா யிருந்தாலும் அவன் செய்யுங்கொடுமை யளவற்றதா யிருக்க அம்மூன்றிடமுங் கொடியனவாகவுடைய நீ செய்யுந் தீமை கூறவேண்டா வென்பது தோன்ற 'வெம்மை கால்வதரிதேயோ' என்னப்பட்டது. [சந்திரனுக்குப்பிறத்தல் பழகல் உறைதலென்பவைகள் முறையாகச் சொல்லப் பட்டமையால் முறையிற் படர்ச்சியணி.] (அ)

**தொய்யின் முலைகள் பசப்பூரத் துணைவர்ப் பிரிந்து துயிறுறந்த, மையன் மடவா ருயிர்கவர்வான் கூற்றம் போல வருமதியே, ஐய மிலையுன் னுடற்களங்க மழலுங் கொடிய விடமன்றே, வெய்ய பகுவாய்க் கரும்பாந்தள் விழுங்கி யாற்று துமிழ்ந்ததுவே.**

இ - ள். துணைவர் பிரிந்து - கணவரைப் பிரிதலினாலே, தொய்யில் - சந்தனக்கோலத்தை யெழுதப்பெற்ற, முலைகள் - தனங்களானவை, பசப்பூர - வேறுபட்ட நிறத்தையடைய, துயில் துறந்த - நித்திரையை யொழிந்த, மையல் - மயக்கத்தையுடைய, மடவார் - மங்கையரது, உயிர் - ஆவியை, கவர்வான் - கொள்ளையிடும்பொருட்டு, கூற்றம்போல - கூற்றுவனைப்போல, வரு மதியே - வருகின்ற சந்திரனே, ஐயம் இலை - (அதற்குச்) சந்தேகமில்லை; உன் - உன்னுடைய, உடல் களங்கம் - உடலிலுள்ள கறையானது, அழலும் - சுடாநின்ற, கொடிய - கொடுமை பொருந்திய, விடம் அன்றே - நஞ்சமன்று,

வெய்ய - வெவ்விய, பகு வாய் - பிளப்பாகிய வாயையுடைய, கரும் பாந்தள் - (இராகுவென்னும்) கரும்பாம்பானது, விழுங்கி - உண்டு, ஆற்றாது - தாங்கமாட்டாமல், உமிழ்ந்தது - கக்கியது, எ - று.

க - து. மாதருயிரைக் கவரும்பொருட்டு யமன்போல் வந்த சந்திரனே! உன்னுடற் களங்கம் கொடிய விடமென்றல்லவா கரும் பாம்பு உன்னை விழுங்கி யுமிழ்ந்துவிட்டது என்றாள் என்பதாம்.

துணைவரைப் பிரிந்து ஊணுறக்கமற்ற மாதருக்கு மரணவேதனை யொத்த துன்பஞ் செய்தல்பற்றிச் சந்திரனுக்குக் கூற்றுவனை யுவமை கூறப்பட்டது. [சந்திரனுடைய களங்கத்தை விடமாகக் குறித்தமையால் தற்குறிப்பணி.] (க)

சுடர்கான் றெழுந்த வெண்டிங்கா ளென்னே சுடுதி யாரமுதத், துடனீ பிறந்த பாற்கடலின் றன்மை யுணரா யாறுலு, மடலார் கமலப் பொகுட்டுறையும் புத்தேள் காணு மறைக்கொழுந்தின், படர்வார் சடையில் வீற்றிருக்கும் பான்மை யேனு மறிந்திலையே.

இ - ள். சுடர் - கதிர்களை, கான்று - வீசிக்கொண்டு, எழுந்த - உதித்த, வெள் திங்காள் - வெள்ளிய சந்திரனே, சுடுதி - சுடுகின்றாய், என்னே - (இது) யாதாகவிருந்தது; ஆர் - நிறைந்த, அமுதத்துடன் - அமிர்தினுடனே, நீ பிறந்த - நீ பிறக்கப்பெற்ற, பால் கடலின் - பாற்கடலினுடைய, தன்மை-குணத்தை, உணராய் ஆறுலும்-அறியாயென்னினும், மடல் ஆர் - இதழ்களணிறைந்த, கமலம் பொகுட்டு-தாமரைமலர்க்கொட்டையில், உறையும்-தங்குகின்ற, புத்தேள் - பிரமன், காணு - காணக்கூடாத, மறைகொழுந்தின் - வேதத்துச்சியிலிருக்கும் பரமசிவனுடைய, படர் - படர்ந்த, வார் - நெடிய, சடையில் - சடாபாரத்தில், வீற்றிருக்கும் - வீறுடனேயிருக்கின்ற, பான்மையேனும் - தன்மையையாறுலும், அறிந்திலை - அறிந்தாயில்லை, எ - று.

க - து. சந்திரனே! ஏன் சுடுகிறாய்? தேவாமிர்தத்தோடு திருப் பாற்கடலில் பிறந்த தன்மையை யறிந்தாயில்லையாயினும் சிவனது திருமுடியில் வீற்றிருக்குந்தன்மையு மறிந்திலையோ என்றாள் என்பதாம்.

நற்குலத்தில் நல்லோருடன் பிறந்து பெரியோரைச் சேர்ந்து பெருமை பெற்றிருக்கின்ற நீ யாதொரு பயனுமின்றி இத்தீச்செய்கை செய்வது தகாதென்பது கருத்து. [பாற்கடலமுது பரமசிவன்

இவைகளி னுறவுண்டாகியுஞ் சந்திரனுக்கு அக்குண முண்டாகாமை சொல்லப்பட்டமையால் இகழ்ச்சியணி.] (௪0)

தருவு மணியு மிருநிதியுந் தண்ணங் கமல மலர்த்த விசிற், றிருவு முயிர்த்த பாற்கடலிற் றெள்ளா ரமுதத் துடன் பிறந்தாய், பெருவெண் மதியே நீயுறைதல் பெம் மான் மௌலி கதிரமிழ்தி, னுருவ மனங்க னுறவொன்றும் விடுத்தி யேன்மற் றுனைநிகரார்.

இ - ள். பெரு - பெரிய, வெள் மதியே - வெள்ளியசந்திரனே, தருவும் - ஐந்தருவையும், மணியும்-சிந்தாமணியையும், இரு நிதியும் - சங்கநிதி பதுமநிதி யென்னு மிரண்டினையும், தண் - குளிர்ந்த, அம்- அழகிய, கமலம் மலர் - தாமரைமலராகிய, தவிசில்-ஆசனத்திலிருக் கின்ற, திருவும் - திருமகளையும், உயிர்த்த - பெற்ற, பால் கடலில் - பாற்கடலினிடத்தே, தெள் - தெள்ளிய, ஆர் - நிறைந்த, அமுதத் துடன் - அமிர்தத்துடனே, பிறந்தாய் - தோன்றினாய்; நீயுறைதல் - நீ வாசம்பண்ணுமிடம், பெம்மான் - பரமசிவனுடைய, மௌலி - சடைமுடி; கதிர் - உன்னுடைய கிரணங்கள், அமிழ்தின் உருவம் - அமிர்தத்தினுடைய வடிவம்; (ஆகையால்) அனங்கன் - மன்மதனு டைய, உறவு ஒன்றும் - சம்பந்தமொன்றனையும், விடுத்தியேல் - விடப்பெற்றாயானால், உனைநிகர்-உனைநிகர்வார், ஆர் - யாவர், எ-று.

க - து. சந்திரனே! ஐந்தரு கௌத்வமணி இருநிதி அமுது திருமாது இவற்றோடு பாற்கடலிற் பிறந்தாய்; நீ வாசம் பண்ணுதல் சிவனது திருமுடி, உனது கிரணங்க ளமிர்தத்தினுருவம், மன்மதனுற வொன்றைமாத்திரம் விடுத்தால் உன்னை நிகர்ப்பவர் யார் என்று ளென்பதாம்.

நிகர்வாரென்னு முற்று விகுதி நிகரெனத் தொக்குநின்றது. பிறப்பிடத்தினும் உறையு மிடத்தினும் உனக்குண்டாயிருக் கின்ற மேன்மையை விரகிகளைத் துன்பஞ்செய்வதற் கேதுவாயிருக் கிற பழகுமிடமொன்று விழக்கின்றுயென்பாள் 'அனங்கனுறவொன் றும் விடுத்தி' என்றாள். ஒருவனுக்குக் குடிப்பிறப்பு முதலியவற்றா லுளதாகுங் குணத்தினும் பழகுமினத்தாலுளதாகுங் குணமே பெரும் பாலென்பது "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்,கினத்தியல்ப தாகு மறிவு" (திருவள்ளுவர் - சிற்றினஞ்சேராமை-உ) என்பதனு லறிக. [அனங்கனுற வொன்றினை விடுகையில் சந்திரனுக்குச் சிறப் புச்சொல்லப்படுகையால் இன்மைநவிற்சியணி.] (௪௧)

திங்கட் புலியை வீழ்த்தி யுயிர் செகுப்ப மடவீ ரரமி யத்திற், றங்கப் படிமக் கலஞ்சேர்மி னதனுட் புகுதுந் தா ழாமே, துங்கக் கருந்தா துகப்புடைக்குந் தொழிலோர்க் கூவிக் கூடமெடுத், தங்கைத் தலத்தா லறைதிரெனப் பணி ப்பீ ராவி யளிப்பீரே.

இ - ள். மடவீர் - தோழியரே, திங்கள் புலியை - சந்திரனாகிய வியாக்கிரத்தை, வீழ்த்தி - வீழச்செய்து, உயிர் செகுப்ப - உயிரை நீக்க, அரமியத்தில் - நிலாமுற்றத்தில், தங்கம் படிமம் கலம் - தங்கத் தினால் வரம்புசெய்யப்பட்ட கண்ணாடியை, சேர்மின் - வையுங்கள்; அதனுள் - அக்கண்ணாடியினுள், புகுதும் - (திங்கட்புலி) நுழையும், தாழாமே - தாமசியாமல், துங்கம் - உயர்ச்சிபொருந்திய, கருந்தாது - இரும்பை, உக - உதிர, புடைக்கும் - அடியாநின்ற, தொழிலோர் - தொழில்செய்வோராகிய கொல்லரை, கூவி - அழைத்து, கூடம் எடு த்து - சம்மட்டியெடுத்து, அம் கைத்தலத்தால் - அழகியகையினாலே, அறைதிர் என - அடியுங்களென்று, பணிப்பீர் - சொல்லுவீர்களா னால், ஆவி - எனதுயிரை, அளிப்பீர் - காப்பவராவீர், எ - று.

க - து. தோழிமார்களே! சந்திரனென்னும் புலியை நிலா முற்றத்திற்றள்ளிக் கண்ணாடியைச் சேருங்கள், அதற்குள் அப்புலி வந்து புகும். கொல்லரைக் கூப்பிட்டுச் சம்மட்டியெடுத் தடிக்கச் சொல்லுங்கள் என்னுயிரைக் காப்பீர்கள் என்றாள் என்பதாம்.

[எதிர்நின்று கொல்லுதற்குக் கூடாத புலியைப் போனுட் படுத் திக் கொல்லுதல்போல அம்புலியையுஞ் செய்கவென்பாள் 'தங்கப்படி மக்கலஞ் சேர்மின்' என்றாள். கற்றுணர்ந்த தமயந்தியானவள் நிங் களைக் கொல்லுதற்கு இவ்வளவு உபாயஞ் சொல்லியது வண்டு முத வியவற்றை தூது அனுப்புதல்போலக் காமமயக்கத்தாற் கூறியதெ னக் கொள்க. [திங்களைப் புலியென்று உருவகஞ்செய்து கண்ணாடி யைப்போனென உருவகஞ்செய்யாமையால் ஏகதேசவுருவகவணி.]

சுடரும் வடவை யுலகழலத் தோன்றா தமைத்த திரை யாழி, யடரு மழன்மா மதியதனை யாற்றா தரற்றி விடுத்த தெனிற், படரு மிதழிப் புரிசடையெம் பரம னமரா ருயிர் புரப்பான், கொடிய விடமுண் டதுபோல வுண்டா லதனாற் குறையுண்டோ.

இ - ள். சுடரும் - பிரகாசியாநின்ற, வடவை - வடவைத்தீயா னது, உலகு - உலகத்தை, அழல - சுட, தோன்றாது - வெளிப்படா

மல், அமைத்த-(அடைத்) தன்னுளடக்கிய, திரை - அலைகளையுடைய, ஆழி - கடலானது, அடரும் - நெருங்கிய, அழல் - சுடாநின்ற, மா - பெரிய, மதியதனை - சந்திரனை, ஆற்றாது - பொறுக்காமல், அரற்றி - அழுது, விடுத்தது எனில் - விட்டதானால், படரும் - படராநின்ற, இதழி - கொன்றை மலர்மாலையை யணிந்த, புரி - கட்டப்பட்ட, சடை - சடாபாரத்தையுடைய, எம் பரமன் - எம்முடைய கடவுள், அமரர் - தேவர்களினுடைய, உயிர் - ஆவியை, புரப்பான் - காக்கும்பொருட்டு, கொடிய - கொடுமைபொருந்திய, விடம் - விடத்தை, உண்டதுபோல - புசித்ததுபோல, உண்டால் - (இதனையும்) புசித்தால், அதனால் - அச்செய்கையால், குறை உண்டோ - குறைபாடுளதோ, எ - று.

க - து. வடவாக்கினியுள்ள கடலும் சனலாகிய சந்திரனைக் கக்கிவிட்டது, பரமசிவன் தேவர்களைக் காக்கும்பொருட்டு விடத்தை யுண்டதுபோலச் சந்திரனை யுண்டாற் குறையுண்டோ வென்றாள் என்பதாம்.

[இதழி - இருமடியாகுபெயர். அரற்றலாவது அழுதலும் ஒலித்தலுமாம். "அரற்றலே யழுகையோசை" (ஆதிப்பொருணிகண்டு) என்பதனாலறிக. சந்திரனுதிக்குங் காலத்திற் கடன்மிக வொலித்தலின் அங்ஙனங் கூறப்பட்டது. வடவைத்தீயைத் தன்னு ளடக்கிய கடலானது திங்களை விடுத்த தென்பதனால் அதனினுமிது பெருந் தீயெனக் கொள்க. தேவருயிரைப் புரக்கக் காளகூடத்தை யுண்ட பேரருளையுடைய பரமசிவன் விரகிகளுடைய வுயிரைப்புரக்க இதனை யுண்ணாதது அவர்கள் தவக்குறை யென்பது கருத்து. (கரு)

விரிந்த திரைப்பாற் கடற்பிறந்த விடமோ ரிரண்டி
லோர்கடவுண், மருந்தி னுகர்ந்த கரியவிட மீட்டு முலகில்
வந்ததோ, பரந்து கனலு மதிக்கலையாம் வெள்ளை விடத்
தைத் தேவர்பல, ரருந்த வருந்த நாளும் வளர்வ தெவன்
கொ லறியேமால்.

இ - ள். விரிந்த - விரியப்பெற்ற, திரை - அலைகளையுடைய, பால் கடல்-பார்கடலிலே, பிறந்த-தோன்றிய, விடம் ஓர் இரண்டில்- விடமிரண்டில், ஓர்கடவுள் - ஒப்பற்ற பரமசிவனானவன், மருந்தின் - அமிர்தத்தைப்போல, நுகர்ந்த - புசித்த, கரிய விடம்-கறுத்த விடமானது, மீட்டும் - மீளவும், உலகில் - உலகத்திலே, வந்ததோ - தோன்றியதோ; பரந்து - பரவி, கனலும் - சுடாநின்ற, மதி கலையாம் - சந்திரனது கலையாகிய, வெள்ளை விடத்தை - வெண்ணிறத்தை

யுடைய விடத்தை, தேவர் பலர்-தேவர்களனேகர், அருந்த அருந்த - புசிக்கப் புசிக்க, நாளும் - நாடோறும், வளர்வது - வளருகின்றது, எவன்கொல் - என்னகாரணமோ, (யாம்) அறியேம் - அறிகிலேம், எ - று.

க - து. சிவனுண்டவிட மீண்டு மூலகில் வந்ததோ? வெள்ளை விடத்தைத் தேவர்க ளருந்த வருந்த வளர்வதெவன்கொலோ வென்றாள் என்பதாம்.

கடலிலுண்டாகிய விரண்டு விடங்களுள் கரியவிடம் ஒருவனுண்ண நசிக்க இவ்வெள்ளைவிடம் தேவர் பலருண்ண நசித்தும் பின்னும் வளர்வதனால் அதனினுமிது கொடிதென்க. ஒருவன் செய்கை முற்றுப் பெறுதலும் பலர் செய்கை முற்றுப்பெறாமையும் ஆச்சரியத்திற் கேதுவாகலின் எவனெனப்பட்டது. அறியேமென்பது விரகிகளுடைய ஆழ்வினையின் கொடுமை இவ்வளவென வறியேமெனக் கொள்க. [மதிக்கலையாம் வெள்ளைவிடமென்றது உருவகவணி. வெள்ளைவிடத்திற்கு மீட்டுந் தோன்றுதல் அதிகமாகச் சொல்லப்பட்டமையால் வேற்றுமையணி.] (கஅ)

நிரைத்தண் டரளக் கோவையென நிலவு காலும் வெண்ணகையீர், விரைத்தண் கலவைச் செழுஞ்சேறென் றழலை யிறைத்து மெய்வெதுப்பித், திருத்து மலர்ப்பூஞ் சேக்கையென வில்வேள் பிரிந்தா ருயிர்செருக்கு, மரத்தந் தோய்ந்த வாளியணை கிடத்தலென்மே லன்பேயோ.

இ - ள். நிரை - வரிசையாக விருக்கின்ற, தண் - தண்ணிய, தரளம் கோவை என - முத்துக்கோவையைப்போல, நிலவு - ஒளியை, காலும் - தருகின்ற, வெள் - வெள்ளிய, நகையீர் - பற்களையுடைய மங்கையரே, விரை - வாசனை பொருந்திய, தண் - தண்ணிய, செழும் - செழிய, கலவை சேறு என்று - கூட்டுவருக்கஞ் சேர்ந்த சந்தனக்குழம்பென்று, அழலை இறைத்து - தீயைவீசி, மெய், தேகத்தை, வெதுப்பி - சுட்டு, திருத்தும் - காம்பு களையப்பெற்ற, மலர் - மலரினாற் செய்யப்பட்ட, பூ - அழகிய, சேக்கை என - மெத்தையென்று, வில் வேள் - கருப்புவில்லையுடைய மன்மதனுனவன், பிரிந்தார் - பிரிந்தவர்களுடைய, உயிர் - ஆவியை, செருக்கும் - போக்குகின்ற, அரத்தம் தோய்ந்த - உதிரந்தோய்ந்த, வாளியணை - பாணமெத்தையின்மேல், கிடத்தல் - படுக்கவைத்தல், என்மேல் - என்னிடக்கு, அன்பேயோ - அன்பாமோ, எ - று.

க - து. முத்து வரிசையை யொத்த பற்களையுடைய பெண்களே! கல்வைச் சாந்தென்று கனலையிறைத் துடலைச்சுட்டு மலர்ச் சயனமென்று மன்மத பாணசயனத்தி லென்னை வளர்த்த லன்புதானோ வென்றாள் என்பதாம்.

நோயொன் றிருக்க மருந்தொன்று கொடுப்போரைப் போல விரகநோயைத் தீர்ப்பதற் கேற்றவைகளைச் செய்வது அன்புடையார் செயலன் றென்பது தோன்ற 'அன்பேயோ' என்னப்பட்டது. [சேறென்றழலையிறைத்து என்றதும், மலர்ச்சேக்கையென வாளியணை கிடத்தலென்றதும் ஒழிப்பணி.] (௧௫)

பணந்தா ழல்குற் பைந் தொடியீர் பதுமத் திறைக்கும் வானவர்க்குங், கணஞ்சே ருலகின் மன்பதைக்குங் காலங் கணித்த கலைவல்லோர், மணந்தார் தமக்கோ ரிமைப் பொழுது மாறாக் காதன் மகிழ்நர்புயந், தணந்தார்க் கூழி யாகுமெனச் சாற்றா திருந்த தகையென்னே.

இ - ள். பணம் - பாம்பின்படம், தாழ் - வணங்குகின்ற, அல்குல் - அல்குலையுடைய, பைந்தொடியீர் - பசியபொன்னாற் செய்த வளையலையுடைய மங்கையரே, பதுமத்து இறைக்கும் - தாமரைமலரி லிருக்கின்ற பிரமனுக்கும், வானவர்க்கும் - தேவர்களுக்கும், உலகில் - மண்ணுலகில், கணம் - கூட்டமாக, சேர் - சேரப்பெற்ற, மன்பதைக்கும் - மனிதர்க்கும், காலம் - வாழ்நாளை, கணித்த - நிச்சயித்த, கலைவல்லோர் - சோதிடநூல் வல்லோர், மாறாகாதல் - நீங்காத விருப்புள்ள, மகிழ்நர் புயம் - தலைவர் புயங்களை, மணந்தார்தமக்கு - கூடினவர்களுக்கு, ஓர் இமைபொழுது - ஒருமாத்திரையாயிருந்தகாலம், தணந்தார்க்கு - (அப்புயங்களைப்) பிரிந்தவர்க்கு, ஊழி ஆகும் என - ஊழி காலமாகுமென்று, சாற்றாது இருந்த தகை என்னே - சொல்லாம லிருந்த முறையென்ன காரணம், எ - று.

க - து. பெண்களே! பிரமனுக்கும் தேவர்களுக்கும் மக்களுக்குங் காலத்தைக் குறித்த கலை வல்லோர் மணந்தார்க் கிமைப்பொழுதானது தணந்தார்க் கூழிகால மாகுமென்று சொல்லாதிருந்த தென்னவென்றாள் என்பதாம்.

பிரமாவுக்கு ஒருநாள் மனிதர்க்குப் பிரளயமும் தேவர்க்கொரு நாள் மனிதர்க்கு வருஷமுமா யிருக்குங்கால வேறுபாடுகளைக் கணித்துச் சொல்லிய கணிதர் இதனைச் சொல்லாதது அறியாமையே யென்பது தோன்ற 'என்' எனப்பட்டது. (௧௬)

குதலை மொழியீர் மெய்வெதுப்புங் கொடுந்தீ யாற்ற வேண்டுதிரேற், பொதிய வரையி னறுஞ்சாந்தம் பூசி முலை மேற் புகைந்தழலக், கதலி யுளம்பூங் குருத்ததனல் வீசி வீசிக் கனற்றுவதென், மதியின் றழலை யவிப்பதற்கோர் மருந்துண் டாகிற் செய்வீரே.

இ - ள். குதலை மொழியீர் - மழலைச்சொற்களையுடைய மங்கையரே, மெய் - உடலத்தை, வெதுப்பும் - சுடுகின்ற, கொடுந்தீ - கொடிய வெப்பத்தை, ஆற்ற - தணிக்க, வேண்டுதிரேல் - விரும்புவீர்களானால், பொதிய வரையின் - பொதியமலையிற் பிறந்த, நறு - பரிமளம்பொருந்திய, சாந்தம் - சந்தனத்தை, பூசி - பூசுதல்செய்து, முலைமேல்-தனத்தின்மேல்; புகைந்து அழல-புகைவிட்டெரிய, கதலி - வாழையினுடைய, இளம்பூ குருத்ததனல் - அழகிய இளங்குருத்தால், வீசி வீசி-இடைவிடாமல் வீசுதல்செய்து, கனற்றுவது - சுடும்படி மூள்விப்பது, என் - என்னகாரணம்; மதியின் தழலை - சந்திரகிரணமாகிய நெருப்பை, அவிப்பதற்கு - தணிப்பதற்கு, ஓர் மருந்து - ஓர்மருந்து, உண்டு - உள்ளது, ஆகில் - உம்மாற்செய்யக்கூடுமானால், செய்வீர் - (அதனைச்) செய்வீர்களாக, எ - று.

க - து. பெண்களே ! காமாக்கினியை நீக்க விரும்புவீர்களானல் முலைமேற் சந்தனத்தைப்பூசி வாழைக்குருத்தால் வீசிச் சுடுவதென்ன? சந்திர கிரணமாகிய நெருப்பை யவிப்பதற் கோர்மருந்துண்டு; உங்களாற் கூடுமாகிற் செய்யுங்கள் என்பதாம்.

மொழியாலன்றிச் செயலாற் பயனிலீரென்பது தோன்றக் 'குதலைமொழியீர்' என்றும், விரகாக்கினியைத் தணிப்பதற்குத் தக்கவாறு செய்புந்திறத்தீ ரல்லீரென்பது தோன்ற 'வேண்டுதிரேல்' என்றும், எண்ணியபயனைய்தப்பெறுத முயற்சியான் மெய்வருந்துவது வீணென்பது தோன்ற 'என்' என்றும், இத்தீ கடனீர் முதலியவற்றாலவிக்கப்பெறுத பெருந்தீயென்பது தோன்ற நெருப்பவிப்பதற்குச் சாதனமாகிய நீரைக் கூறுது 'மருந்து' என்றும், தலைவனைப் பொருந்தலன்றிப் பிறிது மருந்தின்றென்பது தோன்ற 'உண்டாகிற் செய்வீர்' என்றுங் கூறினர். [ஓர் மருந்துண்டென்று குறிப்பிக்கவேண்டியதை குறித்தலால் குறிநிலையணி.] (கஎ)

அந்தா மரையின் மடநல்லீர் மலய முயிர்ப்ப வலர்பொதுளுஞ், சந்தா டவியிற் றவழ்ந்துநறுந் தண்ணெ னருவி தோய்ந்துமலர்ப், பைந்தா தாடி முருகுயிர்த்துப் பசும்பொற் சிறுசா ளரநுழையு, மந்தா னிலமின் றழல்வதெல்லாந் தமியேனிழைத்த வல்வினையே.

இ - ள். அம் - அழகிய, தாமரையின் - தாமரைமலரி லிருக்கின்ற, மடநல்லீர் - திருமகளையொத்த மங்கையரே, மலயம் - பொதியமலையானது, உயிர்ப்ப - பெற, அலர் - மலர்கள், பொதுளும் - நிறைந்திருக்கின்ற, சந்த அடவியில் - சந்தனக்காட்டிலே, தவழ்ந்து - ஊர்ந்து, நறு - நல்ல, தண் என் அருவி - குளிர்ச்சியா யிருக்கின்ற அருவிநீரில், தோய்ந்து-படிந்து, மலர் - மலர்களினுடைய, பைந்தாது ஆடி - பசிய மகரந்தங்களை யளைந்துகொண்டு, முருகு - வாசனையை, உயிர்த்து - வீசி, பசுபொன் - பசியபொன்னாற்செய்த, சிறு - சிறிய, சாளரம் - பலகணிவழியால், நுழையும் - நுழைகின்ற, மந்தாநிலம் - தென்றற் காற்றானது, இன்று - இன்று, அழல்வதெல்லாம் - சுடுவதெல்லாம், தமியேன் - தனிமையுடையேனாகிய யான், இழைத்த - செய்த, வல்வினையே - தீவினையே, எ - று.

க - து. இலக்குமிக்கொப்பான பெண்களே ! தென்றற்காற்றானது பலகணி வாயிலில் நுழைந்து என்னைச் சுடுவது யான் செய்த கொடுவினையாகும் என்றாளென்பதாம்.

பிறப்பு முதலியவற்றால் தண்மையே யியல்பாகவுடைய தென்றலானது என்னளவிற் சுடுதல் அதன் குற்றமன்று என் குற்றமென்பாள் 'தமியேனிழைத்த வல்வினையே' என்றாள். [தென்றற்குப் பிறத்தல் தவழ்தல் நீராட்டு புழுதியாட்டு என்னும் பிள்ளைப்பருவச் செயல் தோன்றச் சொல்லுதலால் சுருக்கச்சொல்லணி.] (கஅ)

கொங்கு விரியு மலர்க்குழலீர் கொழுநர்ப் பிரிந்தார் வருந்துறவா, னெங்குங் குருதி யிறைத்ததுபோற் குடபாற் றிசையி னெழுஞ்செக்கர், பொங்கு வடவைக் கொழுந்தீயே யதனா லன்றோ பூசுரர்க, ளங்கை நிறையப் புனல்வாரி யிறைத்து நாளு மவிப்பதுவே.

இ - ள். கொங்கு - வாசனையானது, விரியும் - விரியப்பெற்ற, மலர் - மலரையணிந்த, குழலீர் - கூந்தலையுடைய மங்கையரே, கொழுநர் - கணவரை, பிரிந்தார் - நீங்கினவர்கள், வருந்துற - வருத்தத்தையடைய, வான் எங்கும் - ஆகாயமுழுவதும், குருதி - உதிரத்தை, இறைத்ததுபோல் - வீசப்பெற்றதுபோல், குடபால் திசையின் - மேற்குத் திசையிலே, எழு - எழுகின்ற, செக்கர் - செவ்வானமானது, பொங்கு - மிகுந்த, வடவை - வடவையென்னும் பெயரையுடைய, கொழு - செழிய, தீயே அக்கினியே; அதனால் அன்றோ - அதனாலன்றோ, பூசுரர்கள் - பிராமணர்கள், அம் கை நிறைய - அழகியகைநிறைய, புனல் - சலத்தை, வாரி - அள்ளி, இறைத்து - சொரிந்து, நாளும் - நாடோறும், அவிப்பது - அத்தீயை யணைப்பது, எ - று.

க - து. கூந்தலையுடைய பெண்களே! கணவரைப்பிரிந்த மாதரை வருத்தும்பொருட் டெழுந்த செவ்வானமானது வடவாமுகாக் கினியே; அதனாலல்லவா பிராமணர்கள் நாள்தோறும் நீரைவாரி இறைத்தவிக்கிறார்க ளென்றாள் என்பதாம்.

பூமிக்குச் சுரர்களாக விரும்பவர்கள் சீவகாருண்யமுடைய அந்தணராதலால் அவரே விரகிகளைச் சுடவெழுந்த தீயையும் அவிக்க வேண்டுதலின் பூசுரர்க்கு அத்தீயவிப்பது கூறப்பட்டது. நெருப்பையவிப்பதற்குச் சாதனம் நீரன்றிப் பிறிதொன் றன்றென்பது தோன்றப் 'புனலைவாரி' எனப்பட்டது. [குருதியிறைத்தருபோ லெழுஞ் செக்கரென்றது தற்குறிப்பணி. செக்கரைத் தீயென்றது பூசுரர்கள் நீரிறைத்து அவிப்பதனால் சாதிக்கப்படுதலால் தொடர்நிலைச் செய்யுட் குறியணி.] (கக)

புனைமென் கொடியீர் நிலவருந்தென் புள்ளின் பார்ப்பை யருட்கலச, முனிவன் றன்பா லலைபுரட்டு முந்நீர் குடிக்குஞ் விஞ்சையினை, யினிதி னுணர வைத்திடுமின் வைத்தாற் குணபா லெழுந்து வெய்தாய்க், கனலுங் கொடிய வெண்டிங்கட் கதிர்வெங் கடலை யருந்தாதோ.

இ - ள். புனை - அலங்கரிக்கப்பட்ட, மெல் - மெல்லிய, கொடியீர் - மலர்க்கொடிபோன்ற மங்கையரே, நிலவு - சந்திரிகையை, அருந்து - புசிக்கின்ற, என் - என்னுடைய, புள்ளின் பார்ப்பை - சகோரக் குஞ்சினை, அருள் - கிருபையுடைய, கலச முனிவன் பால் - கும்பத்திற்பிறந்த அகத்தியமுனிவனிடத்து, அலை புரட்டும் - அலைகளைப் புரட்டுகின்ற, முந்நீர் - கடற்சலத்தை, குடிக்கும் - பானம் பண்ணுகின்ற, விஞ்சையினை - கல்வியை, இனிதின் - இனிதாக, உணர - அறிய, வைத்திடுமின் - வையுங்கள்; வைத்தால் - வைக்கப்பெற்றால், குணபால் - கீழ்த்திசையில், எழுந்து - உதயமாகி, வெய்தாய் - வெவ்வியதாய், கனலும் - சுடுகின்ற, கொடிய - கொடுமை பொருந்திய, வெள் திங்கள் - வெள்ளிய சந்திரனுடைய, கதிர் - கிரணமாகிய, வெம் - வெப்ப, கடலை - சமுத்திரத்தை, அருந்தாதோ - (அது) குடியாதோ, எ - று.

க - து. பெண்களே! எனது சகோரக்குஞ்சினை அகத்தியரிடத்து கடலைக்குடிக்கும் வித்தையைக் கற்பியுங்கள், கற்பித்தால் சந்திரகிரணக் கடலைக் குடியாதாவென்றாள் என்பதாம்.

யாதொன்றனைக் கற்கவேண்டுவது இளமைப்பருவத்தாதலால் 'புள்ளின்பார்ப்பு' எனப்பட்டது. காயந்தகமென்னும் பொருளாவில்

விஷத்தைக் கண்டவளவிற் கண்சிவக்குமியல்பினையுடைய சகோரத்தை விஷ சோதனையின்பொருட்டு அரசர் வளர்க்க வேண்டுமென்று சொல்லப்பட்டபடி தன் வீட்டில் வளர்க்கப்பட்ட தாதலின் என்புள்ளின் பார்ப்பெனப்பட்டது. [கடனீரைக் குடிக்கக்கற்ற சகோரப்பறவைக்குத் தண்டாபூபிக நியாயத்தால் சந்திரகிரணத்தைக் குடிப்பது எளிதிற் சித்திப்பதாகச் சொல்லப்பட்டமையால் தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணி.] (௨0)

பதும மலர்மெல் லணைகிடத்திப் பனிநீர் தெளித்துச் சாந்தணிந்து, முதிர்வெங் காமக் கனலவிப்பான் முயலா நின்ற மொய்குழலீர், ரதிருங் கடல்வான் முகட்டிலெழுந் தழற்றுங் கொடிய கதிர்பரப்பு, மதியங் குளிர மருந்தறிவீர், வடவைத் தழலு மவிப்பீரே.

இ - ள். பதுமமலர் - தாமரைமலரிதழ்பரப்பிய, மெல் அணை - மெல்லிய மெத்தையில், கிடத்தி - படுக்கவைத்து, பனிநீர் - பனிநீரை, தெளித்து - இறைத்து, சாந்து - சந்தனத்தை, அணிந்து - பூசி, முதிர் - முதிர்ந்திருக்கின்ற, வெம் - வெவ்விய, காமம் கனல் - காமத்தீயை, அவிப்பான் - தணிக்கும்பொருட்டு, முயலாநின்ற - முயலுகின்ற, மொய் குழலீர் - நெருங்கின கூந்தலையுடையீராகிய மங்கையரே, அதிரும் - ஒலிக்கின்ற, கடல் - கடலினது, வான் - மேலாகிய, முகட்டில் - உச்சியிலே, எழுந்து - உதித்து, அழற்றும் - சுடுகின்ற, கொடிய - கொடுமை பொருந்திய, கதிர் - கிரணங்களை, பரப்பும் - விரிக்கின்ற, மதியம் - சந்திரன், குளிர - குளிர்ச்சிபெற, மருந்து - மருந்தை, அறிவீர் - அறிவீர்கள், வடவை தழலும் - வடவாமுகாக்கினியையும், அவிப்பீர் - தணியச்செய்வீர், எ - று.

க - து. தாமரையணையிற் கிடத்திப் பனிநீர் தெளித்துச் சந்தனத்தைப் பூசிக் காமாக்கினியை யவிக்கும்பொருட்டு முயற்சிசெய்யும் பெண்களே! சந்திரன்குளிர மருந்தறிவீர்கள், வடவாமுகாக்கினியையு மவிப்பீர்கள் என்றாள் என்பதாம்.

ஒருகருமம் முடித்தற்கேற்ற கருவி இதுவென்றும் இதுவன்றென்று முணராது செய்பவர்களைப்போல் விரகத்தீயை யவிப்பதற்கு ஏற்ற தலைவற் கூட்டத்தைவிட்டு அதனை மிகுவிக்கின்ற மலர்ச்சேக்கைக் கிடத்தல் முதலிய ஏலாதனவைகளைச் செய்கின்றீரென்பது தோன்ற 'காமக் கனலவிப்பான் முயலா நின்ற மொய்குழலீர்' என்றாள். யாவருமனுபவ சித்தமா யறியப்படுகின்ற மதியைக் குளிர்விக்கும்

இறைவற் கூட்டமாகிய மருந்தை முன்னரறியீர்க ளென்பாள் 'அறி வீர்' என்றாள். இதனை முன்னறிந்தால் பின்னர் வடவைத்தழலை யவி க்கும் அரியவகையையு மறிவீர்களென்பாள் 'வடவைத்தழலு மவிப் பீர்' என்றாள். [இவளுறையைக் காமத்தினதாக வறியாது தணித்தற்கு முயலு மங்கையரை 'மதியங் குளிர மருந்தறிவீர் வடவைத்தியு மவிப்பீர்' என்று வஞ்சமாகப் புகழ்தலால் வஞ்சப்புகழ்ச்சியணி.] ()

துணர்த்தா ரளக மடநல்லீர் சுடுவெங் காமக் கொ டுந்தீயைத், தணிப்பா னெண்ணிக் கொடுவந்த தண்ணென் கதிர்கால் வெண்டரள, மணித்தாழ் வடமும் வியன் சினைத் தே மாவின் றளிரு மெஞ்ஞான்று, மணித்தா யிருந்த வட வையும்வெங் கானிற் றீயு மமைந்தனவே.

இ - ள். துணர் - பூங்கொத்துகளையுடைய, தார் - மாலையை யணிந்த, அளகம் - கூந்தலையுடைய, மடம் - இளமைபொருந்திய நல்லீர் - மங்கையரே, சுடு - சுடுகின்ற, வெம் - வெவ்விய, காமம் - ஆசையாகிய, கொடுந்தீயை - கொடியதீயை, தணிப்பான் - தணிக் கும்பொருட்டு, எண்ணி - கருதி, கொடுவந்த - கொண்டுவந்த, தண் என் - குளிர்ச்சிபொருந்திய, கதிர் - கிரணங்களை, கால் - வீசுகின்ற, வெள் - வெள்ளிய, தரளம்மணி - முத்துக்களாலாகிய, தாழ் - தொங்கிய, வடமும் - கோவையும், வியன் - பருத்த, சினை - கிளைகளையுடைய, தேம் - வாசனை பொருந்திய, மாவின் தளிரும் - மாங்கொழுந்தும், எஞ்ஞான்றும் - எந்நாளும், அணித்தாய் இருந்த - சமீபமாயிருக்கப்பெற்ற, வடவையும் - வடவாமுகாக்கினியாகவும், வெம் - வெவ்விய, கானில் தீயும் - காட்டுத்தீயாகவும், அமைந்தன - ஆயின, எ - று.

க - து. கூந்தலையுடைய மாதர்களே ! காமாக்கினியைத் தணிக் கும்பொருட்டுக் கொண்டுவந்த முத்தாரங்களு மாந்தளிர்களும் வடவா முகாக்கினிபோலும் காட்டுத்தீயைப்போலு மிருந்தன என்றாள் என் பதாம்.

சைத்திய வுபசாரத்தின் பொருட்டு மேலே அணிவதற்கும் கீழே பரப்புதற்குமான மணித்தாழ்வடமும் மாவின்றளிருஞ் சமீபத் திலே கொண்டுவரும் பொழுதே அவைகள் தமயந்திக்குப் பொருந்திப் போன்றிருந்தனவென்க. அவைகள் அப்போது கொண்டுவரப்பட் டனவாயினும் மிகுந்த துன்பத்தை விளைத்தலால் 'எஞ்ஞான்றும்' எனப்பட்டது. [தமயந்தி விரகவெப்பத்தைத் தணிக்கவெண்ணிக் கொண்டுவந்த தரளவடமும் மாவின்றளிரும் அதைச் செய்யாவிடி

னும் வீணாகாது வெப்பத்தை மிகச் செய்தலாகிய அனிட்டம் கிடை த்தலால் தகுதியின்மையணி.] (உஉ

மழலைத் தீஞ்சொன் மதர்நெடுங்கண் மடவீர் கொடுந் தீக் கடவுளும்வெஞ், சுழல்கட் பகுவாய் நிருதியுங்கா ரிருள் போ னிறத்த சுடர்க்குஞ்சி, யழல்கட் கூற்று முவந்துறை யுந் தென்பாற் றிசைநின் றசைந்துவருங், குழவித் தென்ற லாருயிரைக் குடியா தன்பு கூராதே.

இ - ள். தீ - மதுரம் பொருந்திய, மழலை சொல் - குதலைச் சொல்லையும், மதர் - களிப்புப் பொருந்திய, நெடுங்கண் - நெடிய கண்களையுமுடைய, மடவீர் - மங்கையரே, கொடுந்தீக்கடவுளும் - கொடிய அக்கினிதேவனும், வெம் - வெவ்விய, சுழல் கண் - சுழல் கின்றகண்களையும், பகு வாய் - பிளப்பாகிய வாயினையுமுடைய, நிரு தியும் - நிருதியென்னுமரக்கனும், கார் - கரிய, இருள்போல் - இரு ளைப்போன்ற, நிறத்த - நிறத்தினையும், சுடர் குஞ்சி - செந்நிறச் சிகையையும், அழல் - அழலைச்செய்கின்ற, கண்-கண்களையுமுடைய, கூற்றும் - யமனும், உவந்து - மகிழ்ந்து, உறையும் - வசிக்கின்ற, தென்பால் திசைநின்று - தென்றிசையிலிருந்து, அசைந்து வரும் - உலாவிவருகின்ற, குழவி தென்றல் - இளந்தென்றலானது, ஆர் - நிறைந்த, உயிரை - (விரகிகளுடைய) உயிரை, குடியாது - பானம் பண்ணாமல், அன்பு கூராது - அன்புமிகாது, எ - று.

க - து. மங்கையரே! தீக்கடவுளும் நிருதியும் யமனும் வாசம் பண்ணுந் தென்றிசையிலிருந்து வரும் இளந்தென்றலானது என்னு யிரைக் குடியா தன்புகொள்ளாது என்றாள் என்பதாம்.

தன்னைச் சேர்ந்தவர்களைக் கொல்லுதல்பற்றித் தீக்கடவுட்குக் 'கொடிய தீ' என்றும், தன்னைக்கண்டோர்கள் கலங்கியஞ்சும்படி அர க்கனு யிருத்தல்பற்றிச் 'சுழல்கட் பகுவாய்' என்றும்,எவ்வளவு மனவ லிமையை யுடையோர்களையும் உயிரைப்பிரிக்குங் காலத்து நடுங்கச் செய்யும் உருவினனாய் நிற்பனென்பதுபற்றிக் கூற்றுவனுக்குச் 'சுடர் க்குஞ்சி யழல்கண்' என்றும் அடைகொடுத்தார். பாம்பு குட்டியா யிருப்பினுங் கொல்லுதல்போலக் காற்று குழவித் தென்றலாயிருப்பி னுங் கொல்லுமென்பதுபட 'ஆருயிரைக் குடியாதன்பு கூராது' எனப் பட்டது. [தணந்தாரை வருத்துந்தென்றலின் கொடுமைக் கேதுவா காத தீகூற்று நிருதியுறைகின்ற தென்றிசையை யேதுவாக்கிக் கூறத லால் நற்றோர் நவிற்சியணி.] (உக)

விளரிச் சுரும்பர் பாண்முரல விரிதண் படலைத் துழாய் மார்ப, னொளிருந் திகிரிச் சுடர்ப்படையென் றோராதுள்ளம் வெருவியதோ, குளிர்வெண் மதியை நஞ்சுயிர்க்குங் கூர்முள் ளெயிற்றுக் கரும்பாந்த, ளெளிதிற் கவர்ந்தும் விழுங்காம லென்னே வாளா வுமிழ்ந்ததுவே.

இ - ள். விளரி - விளரிராகத்தைப்பாடுமென்ற, சுரும்பர் - வண்டுகளானவை, பாண் முரல - இசையைப்பாட, விரி - விரிந்த, தண் - தண்ணிய, துழாய்ப்படலை - துளபமாலையை யணிந்த, மார்பன் - மார்பினையுடைய நாரணனது, ஒளிரும் - பிரகாசியாநின்ற, திகிரி - சக்கரமாகிய, சுடர் - காந்திபொருந்திய, படை என்று - ஆயுதமென்றெண்ணி, ஓராது - இன்னதென்றறியாமல், உள்ளம் - மனம், வெருவியதோ - பயந்ததோ; குளிர் - குளிர்ச்சி பொருந்திய, வெள் மதியை - வெள்ளிய சந்திரனை, நஞ்சு உயிர்க்கும் - விடத்தைத் தருகின்ற, கூர் முள் - கூரிய முட்கள்போன்ற, எயிற்று - பற்களையுடைய, கரும்பாந்தள் - இராகுவென்னும் பாம்பானது, எளிதில் - இலேசாக, கவர்ந்தும் - பற்றியும், விழுங்காமல் - உட்கொள்ளாமல், என்ன - என்ன காரணம், வாளா - வீணே, உமிழ்ந்தது - உமிழ்ந்துவிட்டது, எ - று.

க - து. கரும்பாம்பானது சந்திரனைத் திருமாலின் சக்கரமென்று பயந்ததினாலோ விழுங்கியும் உமிழ்ந்துவிட்டது என்றான் என்பதாம்.

இராகுவானது தனது பகைவனாகிய திருமாலுடைய சக்கரப்படையானது விடுக்கப்பட்டவர்களைச் சேதியாமல் விடாதென்பதை யனுபவத்தா லறிந்துளதாதலின் 'வெருவி' என்றும், சந்திரன் அதன் வடிவாயிருப்பினுந் தன்வாய்க்குட்பட்ட பின்பு சந்திரனென்னு முணர்ச்சியுண்டாக வேண்டி யிருக்கவும் பண்டைப்பயத்தா லுண்மை யுணராது உமிழ்ந்தபடியால் 'வாளா' எனப்பட்டது. [திங்களைத் திகிரிப் படையாக மயங்குதலின் மயக்கவணி.] (உ௪)

முழைவாய் திறந்து தெழித்தடரு மூரி பெருமைப் பெரும்பகடேர்ந், தொழியா துவரி சூழ்கிடந்த வுலகில் வாழ் பல் லுயிர்கவர்ந்து, பழிகூர் வெய்ய கருங்கூற்றைத் தருமனெனப்பேர் பகர்ந் திடுவோர்க், கழன்மா மதியைத் தண்மதியென் றுரைக்கு மாற்ற மரிதேயோ.

இ - ள். முழை - குகையை யொத்த, வாய் திறந்து - வாயைத் திறந்து, தெழித்து - பேரொலிசெய்து, அடரும் - போர்செய்கின்ற,

மூரி - வலிமைபொருந்திய, பெரு - பெரிய, எருமைப்பகடு - எருமைக்கடாவை, ஊர்ந்து - செலுத்தி, ஒழியாது - நீங்காமல், உவரி - கடலானது, சூழ் கிடந்த - சூழப்பெற்றிருக்கின்ற, உலகில் - உலகத்திலே, வாழ் - வாழ்கின்ற, பல் உயிர் - பலவாகிய வுயிர்களை, கவர்ந்து - வௌவி, பழி கூர் - நிந்தைமிகுந்த, வெய்ய - வெவ்விய, கருங்கூற்றை - கரியயமனை, தருமன் என - தருமராசனென்று, பேர் பகர்ந்திடுவோர்க்கு - பேர் சொல்லுவோர்க்கு, அழல் - வெம்மையைச் செய்கின்ற, மா மதியை - பெரிய சந்திரனை, தண் மதி என்று - குளிர்ந்த சந்திரனென்று, உரைக்கும் - சொல்லுகின்ற, மாற்றம் - சொல்லானது, அரிதேயோ - அரிதோ, எ - று.

க - து. உலகிற் பல்லுயிரைக் கொல்லும் யமனைத் தருமராஜனென்று பேர்சொல்வோர் வெம்மதியைத் தண்மதியென்று சொல்லுதரிதோ வென்றாள் என்பதாம்.

முழைவாய் மற்ற வாய்களிலும் பெருவாயாம். 'முழைவாய் திறந்து தெழித்தடரு மூரியெருமை' என்றதனால் தன்னெலியினாலும் பகைவரைக் கொல்லுகின்ற கொடியதென்றதாயிற்று. 'வாழ்பல்லுயிர் கவர்ந்து பழிகூர் வெய்யகருங்கூற்று' என்றதனால் எத்துணையுங் கண்ணோட்டமின்றி யாவரையுங் கொல்லுங் கொடியோனென்ற தாயிற்று. பிராரத்தானுபவாந்தத்தி லுயிரைப் பிரிப்பவனும், அவரவர்கள் செய்த புண்ணியபாவங்கட் கீடாக நீதிக்கியைபத் தண்டிப்பவனுமாயிருப்பினுங் கொல்லுந்தொழிலே தன் றொழிலாக வுடையனாதலால் அவனுக்கு அப்பெயர் கூறலாகா தென்பாள் 'கூற்றைத் தருமனெனப் பேர் பகர்ந்திடுவோர்' என்றாள். [எவ்விடத்திலுள்ள வெல்லாவுயிரையுங் கொல்லுகின்ற யமனைத் தருமனென்று சொல்லுவோர்க்குத் தண்டா பூபிகா நியாயத்தால் தனக்கெதிர்ப்பட்டவைகளை மாத்திரங் கொல்லுகின்ற அழன்மதியைத் தண்மதி யெனல் எளிதென்பது தோன்றுதலால் தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி.] (உரு)

அறுகான் முரலு நறுங்கூந்தற் சீதையொருத்தி யாவியுய்யப், பெறுவான் வரைக ளனைத்துநெடுங் கடல்வாய்ப் பெய்த பெருங்கவிகள், சிறுகா லுயிர்க்குந் தமிழ்வரையை முந்நீரகத்திற் சேர்த்தியவே, லுறுகா தலைத் தணந்துறையு மடவார் பலரு முய்வாரே.

இ - ள். அறுகால் - வண்டுகளானவை, முரலும் - ஒலிக்கப்பெற்ற, நறு - நறவிய, கூந்தல் - அளகத்தையுடைய, சீதை ஒருத்தி - சீதையென்னு மொருமங்கையானவள், ஆவி உய்ய பெறுவான் - உயிர்

பிழைக்கப் பெறும்பொருட்டு, வரைகள் அனைத்தும் - மலைகள் யாவையும், நெடுகடல்வாய் - நெடிய கடலினிடத்தே, பெய்த - இட்ட, பெருங்கவிகள் - பெரிய வானரங்கள், சிறுகால் - தென்றற்காற்றை, உயிர்க்கும் - பெறுகின்ற, தமிழ்வரையை - பொதியமலையை, முந்நீரகத்தில் - அக்கடலினிடத்து, சேர்த்தியவேல் - சேர்த்தனவாகில், உறு - பொருந்தப்பெற்ற, காதலரை - துணைவரை, தணந்து-நீங்கி, உறையும் - வசிக்கின்ற, மடவார் பலரும் - பலராயுள்ள மாதர்களும், உய்வார் - பிழைப்பார்கள், எ - று.

க - து. சீதையின்பொருட்டு மலைகளைக் கடலிற்போட்ட குரங்குகள் பொதியமலையையுங் கடலிற்போட் டிருக்குமாயின் கணவரைப் பிரிந்த மாதர்கள் பலரு முயிர்வாழ்ந்திருப்பார்கள் என்பதாம்.

'வரைக ளனைத்து நெடுங்கடல் வாய்ப்பெய்த பெருங்கவிகள்' என்றதனால், இவ்வுலகில் வாழும் வானரங்களைப் போல்வனவல்ல, தெய்வத்தன்மையுள்ள வானரங்க ளென்றதாயிற்று, அவை யெவ்வளவு உயர்ந்தவைகளாயினுங் குரங்கினமாதலால் ஒருத்தியுயிர் பிழைத்தற்பொருட்டு அநேக மலைகளைக் கடலிடத்தேபோட்டு அநேகருயிர் பிழைத்தற் பொருட்டு இவ்வொருமலையை அதனிடத்திற்போடாது விட்டனவென்க. [வானரங்கள் சிறுகாலுயிர்க்குந் தமிழ்வரையையுங் கடலினிடத்துப் போட்டால் மடவார் பலர்க்கும் உய்தல் கூடுமென யூகித்தலால் உய்த்துணர்வணி.] (உகு)

சீதை யொருத்தி காதலரைத் தணந்து ளாரிற் சிறப்புடையள், ளாத லுணர்ந்தே மருகிருந்தோ ரரக்கமாத ராதலினாற், காத லுளர்போற் றோழியர்சூழ்ந் திவ்வா றியற்றிற் கழிதுயரா, லேதமுழந்துள் ளுயிர்சோரு மென்போ லயர்வுற் றிருப்பாளே.

இ - ள். சீதை ஒருத்தி - சீதையென்னு மொருத்திமாத்திரம், காதலரை - கணவரை, தணந்துளாரில் - நீங்கினவர்களில், சிறப்புடையள் ஆதல் - சிறப்புடையளாதலை, உணர்ந்தேம் - அறிந்தேம்; அருகு இருந்தோர் - பக்கத்திலிருந்தவர்கள், அரக்கமாதர் ஆதலினால் - இராக்கத மங்கையராகையினாலே, தோழியர் - தாதியர்கள், காதல் உளர்போல் - ஆசையுடையவர்களைப்போல, சூழ்ந்து-சுற்றிக்கொண்டு, இவ்வாறு - இந்தப்பிரகாரம், இயற்றில் - செய்தால், கழிமிகுந்த, துயரால் - துன்பத்தினாலே, ஏதம் உழந்து - வருத்தமங்கப்பொருந்தி, உள் - உள்ளேயிருக்கின்ற, உயிர் - ஆவி, சோரும் - சோர்வையடைந்திருக்கின்ற, என்போல் - என்னைப்போல, அயர்வுற்று - துன்பத்தைப்பொருந்தி, இருப்பாள் - இருப்பாள், எ - று.

க - து. கணவரைப் பிரிந்தவரில் சீதையொருத்தி காமச்சாந்தியால் வருத்தமடையாதவள், தோழியர் எனக்குச் செய்தல்போல லவருக்குஞ் செய்யில் வருத்த மடைந்திருப்பாள் என்பதாம்.

விரகிகளுக்குச் செய்யப்படுஞ் சைத்தியவுபசாரங்கள் நெருப்பிற் பெய்த நெய்போல் அவர்களுற்றநோயை மேன்மேலும் வளரச்செய்வதாதலின் அவ்வாறுசெய்யு மியல்பிலராகிய அரக்கமாதராற் சூழப்பட்டிருந்த சீதைக்கு அத்துயரமுள்ளவளவின் அதிகரியாதிருத்தலால் 'சீதையொருத்தி காதலரைத் தணந்துளாரிற் சிறப்புடையள்' என்ருள். அரக்கர் தேவரை மானிடரைக்கொன்று தின்னவிரும்புவதன்றி அவர்களுக் குபகாரஞ் செய்யாரென்பது கருத்து. [கொடுஞ் செயலையுடைய அரக்கமாதர் சூழ்தலாலுண்டாகிய சீதையின் வருத்தத்தைக் குணமாகவும், நற்செய்கையுடைய மானிடமாதர் தமயந்திக்குச் செய்புஞ்சயித்திய வுபசாரத்தைக் குற்றமாகவுஞ் சொல்லுதலால் இலேசவணி.] (உஎ)

கொங்கிற் பொலிந்து நறவுயிர்க்குங் கொன்றைத்
தொடைய லணிகுழகன், றிங்கட் கலைக ளனைத்துமொளிர்
செம்பொற் சடையிற் கரந்தனனே, வெங்கட் டுளைவா ளெயி
ற்றரவம் விழுங்கி யுமிழா திருந்ததோ, கங்குற் பொழுதுந்
தனியாழி செலுத்தா நிற்குங் கதிரோனே.

இ - ள். கொங்கில் - வாசனையினாலே, பொலிந்து - பிரகாசித்து, நறவு - தேனை, உயிர்க்கும் - துளிக்கின்ற, கொன்றைதொடையல் - கொன்றைமலராற்செய்த மாலையை, அணி - தரிக்கப்பெற்ற, குழகன் - பரமசிவன், திங்கள் கலைகள் அனைத்தும் - சந்திரனுடையபதினறு கலையையும், ஒளிர் - பிரகாசியாநின்ற, செம்பொன் - சிவந்த பொன்வடிவமாயிருக்கின்ற, சடையில் - சடாபாரத்தில், கரந்தனனே - ஒளித்துவைத்தானே; வெம் கண் - வெய்ய கண்களையும், வாள் - ஒளிபொருந்திய, துளை - துளையையுடைய, எயிறு - பற்களையுமுடைய, அரவம் - பாம்பானது, விழுங்கி - உட்கொண்டு, உமிழாது இருந்ததோ - கக்காமலிருந்துவிட்டதோ; கங்குல்பொழுதும் - இராத்திரிகாலத்திலும், தனி - ஒப்பற்ற, ஆழி - சக்கரத்தை, கதிரோன் - சூரியனானவன், செலுத்தாநிற்கும் - செலுத்துகின்ருன், எ - று.

க - து. இரவிலுஞ் சூரியனானவன் சக்கரத்தைச் செலுத்துகின்ருன், சந்திரகிரணங்க ளனைத்தையும் பரமசிவன் சடையிலொளித்துவைத்தானே கரும்பாம்பு உண்டு உமிழாதிருந்ததோ என்ருள் என்பதாம்.

[இரவிற்றோன்றி வெப்பத்தைச் செய்கின்ற சந்திரனிடத்தில் சடையிற் கரந்தனனோ உமிழாதிருந்ததோவென ஏதுவைக்கூறி அவன்றன்மையை யொழித்து இரவியின் றன்மை கூறுதலால் ஒழிபு பணி.] (உஅ)

வடுக்கண் டுயிலா தறவருந்து மடவார் தமையும் படைத்தவரைத், துடைக்கும் படிவெவ் விடங்காலுஞ் சுடர் மா மதியு மமைத்தழலின், விடுக்குங் கதிர்க டொடிற்கனற் றும் வெம்மைக் காற்ரு திதழ்க்கதவ, மடைக்குங் கமலத் திடையொளிக்கு மருமா மறையோன் வாழியவே.

இ - ள். வடு - மாவடுபோன்ற, கண் - கண்கள், துயிலாது - நித்திரைசெய்யாமல், அற - மிகவும், வருந்தும் - வருந்தப்பெற்ற, மடவார்தமையும் - மகளிரையும், படைத்து - உண்டாக்கி, அவரை துடைக்கும்படி - அம்மகளிரையழிக்கும்படி, வெவ்விடம் - வெவ்விய விடத்தை, காலும் - கக்கப்பெற்ற, சுடர் - காந்திபொருந்திய, மாமதி யும் அமைத்து - பெரியசந்திரனையும் படைத்து, அழலின் - தீயைப் போல, விடுக்கும் - (அவனால்) விடப்பட்ட, கதிர்கள் - கிரணங்கள், தொடில் - தொட்டால், கனற்றும் - சுடுகின்ற, வெம்மைக்கு - வெப் பத்திற்கு, ஆற்ருது - தரிக்காமல், இதழ் கதவம் - இதழாகிய கதவு களை, அடைக்கும் - அடைக்கப்பெற்ற, கமலத்திடை - தாமரை வீட் டில், ஒளிக்கும் - ஒளித்துக்கொள்ளும், அரு - அரிய, மா - பெரிய, மறையோன் - வேதநூற்கு உரியபிரமன், வாழிய - வாழ்க்கடவன், எ - று.

க - து. பெண்களையும் படைத்து அவர்களையழிக்கச் சந்திரனை யும் படைத்து அவன் கிரணம்படிற் சுடுமென்று தாமரையி லொளிக் கும் பிரமதேவன் வாழக்கடவன் என்ருள் என்பதாம்.

[நான்முகனானவன் மடவாரையும் படைத்து அவரை வருத்தும் படிச் சந்திரனையும் படைத்து, அச்சந்திரன் தன்னையும் வருத்துமெ ன்று கமலத்திடை யொளித்தானென்றதனால் பிறருக்குக் கேடு விளை ப்பவைகளை யமைத்தவன் அவைகளே தனக்குங் கேட்டைவிளைக்கு மென்று அஞ்சுவனென்பதும், இன்னது செய்பி னின்னது பயக்கு மென்னும் அறிவிலியென்பதும் பெறப்பட்டன. இப்படிச் செப்தோ ரூசமடைகவென்பாள் 'மறையோன்வாழிய' என்றதனால் வஞ்சப் புகழ்ச்சியணி.] (உக)

தண்ணங் கதிர்வெண் மதியென்பார் தழலாய் முடிந்த தென்னளவும், வண்ண வரிவின் மதன்பகழி மலராமென்பா

ரவையுமூழி, ருண்ணு மரவக் கணைபோல வுடற்று நின்ற வொ ருபாவிப், பெண்ணென் றயறாற் றிடப்பிறந்தேற் கின்னு மேதாம் பேருலகே.

இ - ள். (சந்திரனை) தண் - தண்ணிய, அம் - அழகிய, கதிர் - கிரணங்களையுடைய, வெள்மதி என்பார் - வெள்ளியசந்திரனெ ன்று சொல்லுவார், என் அளவும்-என்மட்டும், தழலாய் முடிந்தது- அது அக்கினியாய்விட்டது; வண்ணம் - அழகிய, வரி - நெடிய, வில்- (கருப்பு) வில்லையுடைய, மதன்பகழி - மன்மதனுடைய பாணங்கள், மலராம் என்பார் - மலரென்று சொல்லுவார்கள் ; அவையும் - அம் மலர்களும், உயிர் உண்ணும்-உயிரையுண்கின்ற, அரவம் கணைபோல- சர்ப்பபாணங்கள்போல, உடற்று நின்ற - கொல்லுகின்றன; ஒரு - ஒப்பற்ற, பாவி பெண் என்று - பாவியாகிய பெண்ணென்று, அயல் தூற்றிட - அயலார்தூற்ற, பிறந்தேற்கு - பிறந்தவெனக்கு, பேர் உலகு - பெரிய விவ்வுலகிலுள்ளவைகளில், இன்னும் ஏது ஆம்- இனி எதுவெதுவாமோ (யான்) அறியேன், எ - று.

க - து. சந்திரனைக் குளிர்ச்சி யென்பார்கள், அதென்னளவில் நெருப்பாயிற்று ; மன்மத பாணங்களை மலரென்பார்கள், அவை யென்னுயிரைக் கொல்லு மரவக்கணையாயின என்றாள் என்பதாம்.

அறியேனென்பது சொல்லெச்சம். மனிதர் பிறவியிற் பெண் பிறப்பிழிந்ததென்பாள் 'பாவிப்பெண் என்று பிறந்தேற்கு' என்றும், இவ்வுலகோர் தண்ணிய வென்பவைகள் வெச்செனவா யிருக்கின் வெச்செனவா யிருப்பவைகள் எப்படியிருக்குமோ வென்பாள் 'இன் னுமேதாம்பேருலகு' என்றுஞ் சொல்லினாள். (௩0)

திரைசெய் கரிய கடற்பிறந்த திங்கட் கொழுந்துந் தமிழ்ப்பொதிய, வரையில் வளர்ந்த நறுஞ்சாந்தும் வயவாள் வேந்தர் மார்பேற்குந், தரள வடமு முருகுயிர்க்குந் தண் ணென் மலரும் பைந்தொடிதன், விரக வனலை மேன்மேனு மூட்டும் விறகு போன்றனவே.

இ - ள். திரை செய் - அலைகளைச் செய்கின்ற, கரிய - கருமை பொருந்திய, கடல்பிறந்த - கடலினிடத்தேதோன்றிய, திங்கள்கொ ழுந்தும் - பாலசந்திரனும், தமிழ் - தமிழ்தோன்றிய, பொதியவரை யில் - பொதியமலையில், வளர்ந்த - வளரப்பெற்ற, நறுஞ்சாந்தும் - நறிய சந்தனமும், வயம் - வலிமை பொருந்திய, வாள் - வாட்படை யையுடைய, வேந்தர் - அரசர்களுடைய, மார்பு - மார்புகள், ஏற்கும்-

ஏற்றற்குரிய, தரளவடமும்-முத்துமாலையும், முருகு உயிர்க்கும்-வாசனையைத்தருகின்ற, தண் என் மலரும் - குளிர்ச்சியாயிருக்கின்ற மலரும், பைந்தொடிதன்-பசியவளையலணிந்த தமயந்தியினுடைய, விரக அனலை - விரகத்தாலாகிய தீயை, மேல் மேலும் - மேலுமேலும், மூட்டும் - மூளச்செய்கின்ற, விறகு போன்றன - விறகுகளைப்போலிருந்தன, எ - று.

க - து. சந்திரனும், சந்தனமும், முத்துவடமும், மலர்களும், தமயந்தி காமாக்கினியை மூட்டும் விறகுகளைப்போ லிருந்தன என்பதாம்.

சந்திரன் சந்தனம் தரளவடம் மலர் அடைமொழிகளோடு கூறப்பட்டமையால் மிகவுங் குளிர்ச்சி செய்வனவெனக் காட்டுகின்றன. இப்படிப்பட்டவைகளாயினும் விறகுகள் நெருப்பை விர்த்தி செய்வனபோல இவைகள் விரகத்துன்பத்தை விர்த்திசெய்வன வெனக்கொள்க. எப்படியென்னில், தலைவனைக்கூடு மின்பத்திற்குத் துணையுள்ள இந்நான்கு மிருக்கின்றனவே அவனில்லையே யென்னு நினைப்பை யுண்டாக்கி அத்துயரத்தை மிகுவித்தலாம். [சந்திரன் முதலியவற்றில் விரகாக்கினியை விர்த்திசெய்யும் விறகினைக் குறித்தமையால் தற்குறிப்பணி.] (கக)

நறைகொப் புளிக்கு மலர்வாளி நலிய வாற்றா துயிர்ப்
பொறைகொண் டுறைதற் கரிதென் றிகல்வேழ முண்ட கனி
போ லுள்ளுடைந்து, மறுவற் றொளிரு மதிமுகத்து மானேர்
நோக்கி விடுத்திடவும், பெறுதற் கரிய வுருவிதெனப் பிரியா
திருந்த தின்னுயிரே.

இ - ள். நறை - தேனை, கொப்புளிக்கும் - உமிழ்கின்ற, மலர் வாளி - மலர்க்கணைகளானவை, நலிய - வருத்துதல்செய்ய, ஆற்றாது - பொறாதவளாகி, உயிர்பொறை கொண்டு - உயிர்ப்பாரஞ்சுமந்து, உறைதற்கு-தங்குதற்கு, அரிது என்று - அருமையதென்று, இகல் - பகைமைபொருந்திய, வேழம் உண்ட கனி போல்-யானையுண்ட விளங்கனிபோல், உள் உடைந்து - மனந்தளர்ந்து, மறு அற்று-களங்கமற்று, ஒளிரும் - விளங்காநின்ற, மதி-சந்திரன்போன்ற, முகத்து-முகத்தையுடைய, மான் ஏர் - மானையொத்த, நோக்கு - பார்வையுடைய தமயந்தி, விடுத்திடவும் - தன்னைவிட்டுவிடவும், பெறுதற்கு - பெற்றிடுவதற்கு, அரிய உருவு இது என - இந்தரிய வடிவமென்று, இன்னுயிர் - அவளை அவளினிய வுயிரானது, பிரியாது இருந்தது - விட்டு நீங்காமலிருந்தது, எ - று.

**க - து.** மலர்க்கணை வருத்த தமயந்தி வேழமுண்ட கனிபோல மனம்வருந்தியும் பெறலரிய திருவுருவென்று உயிரை விடாதிருந்தாள் என்பதாம்.

உள்ளுடைந்தும் விடுத்திடவும் என்னும் உம்மைகள் கீழ்ப்போன வேட்கை முதலிய எட்டவத்தைகளையுந் தழுவி நின்றன. உள்ளுதல் மூர்ச்சித்தலாம், விடுத்திடல் சாக்காடாம். இவ்வவத்தைகள் பத்தும் இவளடைதலால் இனி மெய்யுறு புணர்ச்சி நிகழாவிட்டால் இவளுயிர் பிரியாதிராதென்பார், 'பெறுதற்கரிய வுருவிதெனப் பிரியாதிருந்த தின்னுயிர்' என்றார். தமிழ்நூலிற் பத்தவத்தைகளில் தலைமகட்குச் சில வவத்தைமாத்திரம் சொல்லியிருக்கின்றன வென்னில், இந்நூல் வடநூலினின்று மொழிபெயர்க்கப்பட்டதாதலின் அங்ஙனம்பற்றிக் கூறினாரென்க. (௯௨)

தார்வாய் முரலு மினவண்டின் சிறைமெல் வளியா
லிடைதளர்ந்து, சோர்வா டிதலை பரந்தமுலைத் துணையினூப்
பண் மைதோய்ந்த, கூர்வா ணெடுங்க ணீர்வார்தல் கொற்ற
மாரன் விரகமெனு, மீர்வாள் கைக்கொண் டுயிர்போழ்தற்
கெற்று நூல்போன் றிருந்ததுவே.

**இ - ள்.** தார் வாய் - மலர்மாலையினிடத்தில், முரலும் - ஒலிக்கின்ற, இனம் - கூட்டமாயுள்ள, வண்டின் - வண்டுகளுடைய, சிறை - இறகினுடைய, மெல் வளியால் - மெல்லியகாற்றால், இடை தளர்ந்து - இடைவருந்தி, சோர்வாள் - சோர்பவளாகிய தமயந்தியானவள், திதலை பரந்த - வேறுபட்ட நிறத்தையடைந்த, முலை துணையின் - இரண்டு தனங்களின், நாப்பண் - நடுவே, மை - அஞ்சனமானது, தோய்ந்த - கலந்த, கூர் வாள் - கூரியவாட்படையையொத்த, நெடு கண் - நெடிய கண்களினின்றும், நீர் வார்தல் - நீரொழுகுதல், கொற்றம் - வெற்றிபொருந்திய, மாரன் - மன்மதனுனவன், விரகம் எனும் - பிரிவென்கின்ற, ஈர்வாள் - அரிவாளை, கை கொண்டு - கையிற்கொண்டு, உயிர் - உயிரை, போழ்தற்கு - பிளத்தற்கு, எற்று நூல் போன்று - எற்றியநூலையொத்து, இருந்தது - இருந்தது, எ - று.

**க - து.** தமயந்தி இருதனங்களினடுவே மைக்கண்ணின் நீரொழுகுதல் மன்மதனுனவன் வாளைக் கைக்கொண்டு உயிரைப் பிளத்தற்கு நூல்போட்டதை ஒத்திருந்தது என்பதாம்.

'சிறைமெல்வளியா லிடைதளர்ந்து சோர்வாள்' என்றதனால் மிகவு மெல்லிய விடையினளென்றாயிற்று. எற்றுநூலாவது மரமறு

ப்டோர் கோணுதலின்றிச் செவ்விதா யறத்தற்பொருட்டுச் செய்யப்பட்ட கரிக்கோடாம். [மை தோய்ந்தொழுகிய கண்ணீரில் மன்மதனது எற்றுநூல் குறிக்கப்பட்டமையால் தற்குறிப்பணி.] (௫௫)

புலவுத் திரைசூழ் நிலவலயம் புரக்கும் வேந்தை யிப்பிறப்பி, னலமுற் றுறவீண் டணைவதற்கு நவைதீர் தவமுன் னியற்றேனே, னிலவுத் துவர்வாய் மடநல்லீ ரின்னும் பிறந்து புணர்வனென, நிலவுத் தழலிற் புகுந்திறப்ப நினையாநிற்கு நேரிழையே.

இ - ள். புலவு - புலால் நாற்றத்தையுடைய, திரை சூழ் - கடல் சூழ்ந்த, நிலவலயம் - பூமண்டலத்தை, புரக்கும் - காக்கின்ற, வேந்தை - நளராசனை, இப்பிறப்பில் - இந்தப்பிறப்பில், நலம் - இன்பமானது, முற்றுற - நிறைவுபெற, ஈண்டு - இவ்விடத்தில், அணைவதற்கு - தழுவுதற்கு, நவை தீர் - குற்றநீங்கிய, தவம் - தவத்தை, முன் - முற்பிறப்பில், இயற்றேன் - செய்யாதயான், இலவு - இலவிதழ்போன்ற, துவர் - சிவந்த, வாய் - வாயையுடைய, மடம் - இளமைபொருந்திய, நல்லீர் - மடவீர், இன்னும் - இன்னமும், பிறந்து - உதித்தாவது, புணர்வன் என - கூடுவேனென்று, நிலவு - சந்திரிகையாகிய, தழலில் புகுந்து - தீயின்மூழ்கி, இறப்ப - உயிரைநீக்க, நேரிழை - தமயந்தியானவள், நினையாநிற்கும் - நினைக்கின்றாள், எ - று.

க - து. நளனை இப்பிறப்பிற் கூடுதற்கு முற்பிறப்பிற் றவஞ் செய்யாத தமயந்தியானவள் இனிப்பிறந்து நளனைப் புணர்வனென்று சந்திரகிரணத் தணலிற் புகுந்திறக்க நினைக்கின்றாள் என்பதாம்.

நெருப்பு முதலியவற்றில் தாமாயிறப்பவர்கள் அப்பொழுது கருதியபடி மறுமையி லடைவரென்பது புராணசித்தாந்தமாதலின் 'இன்னும் பிறந்து புணர்வனென, நிலவுத் தழலிற் புகுந்திறப்ப நினையா நிற்கு நேரிழை' என்றார். (௫௬)

மன்றற் குழலார் வளிவிலக்கி வயங்கு சுடர்காத் தெனடாரன், வென்றிக் கொடியி னுருவமைந்த மடமான் முலையில் விசாமற், குன்றிற் பிறந்து தாதளைந்து குளிர்தூங் கருவி தோய்ந்துநாறுந், தென்றற் குழவி நுழைந்துவருஞ் சிறுசாளரங்க டாள்செறித்தார்.

இ - ள். மன்றல் - பரிமளம் பொருந்திய, குழலார் - கூந்தலையுடைய மகளிர், வளி விலக்கி - காற்றினலுண்டாகு மிடையூற்றை

நீக்கி, வயங்கு - பிரகாசியாநின்ற, சுடர் - விளக்கை, காத்தென - காத்தாற்போல, மாரன் - மன்மதனுடைய, வென்றி - வெற்றி பொருந்திய, கொடியின் - கொடியைப்போல, உருவு - வடிவமானது, அமைந்த - அமையப்பெற்ற, மடமான் - தமயந்தியினுடைய, முலையில் - தனத்தில், வீசாமல் - மோதாமல், குன்றில் - பொதிய மலையில், பிறந்து - தோன்றி, தாது - மலர்ப்பொடியை, அளைந்து - பூசிக்கொண்டு, குளிர்தூங்கு - குளிர்ச்சிபொருந்திய, அருவி - அருவி நீரில், தோய்ந்து - முழுகி, நறு - நறிய, தென்றல் குழவி - இளந்தென்றல், நுழைந்து - புகுந்து, வரும் - வருகின்ற, சிறு - சிறிய, சாளரங்கள் - பலகணிகளினுடைய, தாழ் - தாழை, செறித்தார் - பந்தித்தார்கள், எ - று.

க - து. பாங்கிமார்கள் தென்றற்காற்று நுழையுஞ் சாளரவாயிற் கபாடங்களைச் சாத்தினார்கள் என்பதாம்.

வளி விலக்கிச் சுடர்காத்தலாவது - விளக்கு நிலைபெறும்படித் திரைமுதலிய செய்தலாம். இவளுருவைக் சண்டளவில் துறவியர் முதலிய பகைவரும் மன்மதனுக் கிணங்கலின் 'மாரன்வென்றிக் கொடியி னுருவமைந்த மடமான்' என்றார். (கரு)

வெந்தீ யதனிற் பெய்தளிர்போன் மெலிந்து விளையாட் டயர்செழும்பூம், பந்தோ டரிய கழங்கணிகள் பலவுந் துறந்து மலர்மகளை, யந்தா ரகலத் திருத்தியபோர் வேந்தன் பெயரே யறைகுதலாற், செந்தார்ப் பசிய கிள்ளையொன்றுந் துறவா திருந்தாள் சேயிழையே.

இ - ள். வெம் தீயதனில் - வெவ்விய நெருப்பினில், பெய் - போடப்பட்ட, தளிர்போல் - தளிரைப்போல, மெலிந்து - (விரகாக்கினியால்) வாடி, விளையாட்டு அயர் - விளையாடுவதற்குரிய, செழு - செழிய, பூ - அழகிய, பந்தோடு - பந்துடனே, அரிய - அரியவாகிய, கழங்கு - அம்மனைகளையும், அணிகள் பலவும் - பல வாபரணங்களையும், துறந்து - நீக்கி, மலர்மகளை - திருமாதை, அம் - அழகிய, தார் - மாலையணிந்த, அகலத்து - மார்பினிடத்திலே, இருத்திய - இருக்கச் செய்த, போர் - போரைவிரும்பிய, வேந்தன் - நளராசனது, பெயரே - பெயரினையே, அறைகுதலால் - சொல்லுதலால், செம் - சிவந்த, தார் - இரேகையையுடைய, பசிய - பசுமை நிறத்தைப்பொருந்திய, கிள்ளை ஒன்றும் - கிளியொன்றனையும், சேயிழை - தமயந்தியானவள், துறவாது - நீக்காமல், இருந்தாள் - இருந்தனள், எ - று.

க - து. தமயந்தியானவள் தீயிற்போட்ட தளிரைப்போல மெலிந்து பந்து ஆபரண முதலியவைகளை நீக்கி நளன் பெயரைச் சொல்லுங் கிளியொன்றைமாத்திரம் நீக்காதிருந்தாள் என்பதாம்.

'தீயதனிற் பெய்தளிர்' என்றமையால் மெலிதற்கு விரகாக்கினி யும், 'மெலிந்து' என்றமையால் தளிருக்கு வாடுதலும் வருவிக்கப்பட்டன. 'மலர்மகளை யந்தாரகலத் திருத்திய போர்வேந்தன்' என்றமையால் பெருஞ்செல்வத்தையும் பெருவிறலையு முடையோ னென்றதாயிற்று. (௫௬)

அலைவாய் விடத்தி னுடன்றோன்றி யாவி கவரும் வெண்ணெருப்பே, யுலையாப் புவன மனைத்துமுழ லொருங்கு கொளுத்து நுதற்கண்ணன், றலைமே லுனது கலையொன்றே தரித்தா னென்றா னிகவுமுயிர்க், கொலைசூழ் குனரி னின் போலுங் கொடியா ருளரோ கூறென்றாள்.

இ - ள். அலைவாய்-கடலினிடத்தே, விடத்தினுடன் றோன்றி-விடத்தினுடனேபிறந்து, ஆவி - உயிரை, கவரும் - கௌவுகின்ற, வெண் நெருப்பே - (சந்திரனென்னப்பட்ட) வெள்ளிய நெருப்பே, உலையா - கெடாத, புவனம் அனைத்தும் - உலகம்யாவையும், அழல் - தீயால், ஒருங்கு - ஒன்றாய், கொளுத்தும் - கொளுத்துகின்ற, நுதல் கண்ணன் - நெற்றிக்கண்ணினையுடைய பரமசிவன், தலைமேல் - தலைமீது, உனது கலை ஒன்றே - உன்னுடையபங்கொன்றனையே, தரித்தான் என்றால் - தரிக்கப்பெற்றானேயானால், மிகவும் - அதிகமாக, உயிர் - உயிரை, கொலை சூழ்குனரில் - கொல்லக்கருதுவோர்களில், நின்போலும் - உன்னைப்போலும், கொடியார் - கொடுமையையுடையவர்கள், உளரோ - இருக்கின்றார்களோ, கூறென்றாள் - சொல்லென்றாள், எ - று.

க - து. விஷத்துடன் பிறந்து உயிரைக்கவரும் சந்திரனே ! உலகம் யாவையுங் கொளுத்தும் பரமசிவன் தலைமே லுன்கலையொன்றைத் தரித்தானென்றால் உயிரைக் கொல்பவர்களி லுன்போலுங் கொடியவருண்டோ வென்றாள் என்பதாம்.

உலகமனைத்தையு மொருங்குகொளுத்தும் [illegible] கண்ணிற்றரித்த பரமசிவனுக்கு உடலல்லாத [illegible] பதினாறுபங்கி லொருபங்கன்றி அதிகமாகத் தரிக்க[illegible] உன்முன் மெல்லியராகிய மாதருயிர் வாழ்தல் கூடா தென்பது கருத்து. (௫௭)

சந்திரோபாலம்பனப்படல முற்றிற்று.

தென்றல் செக்கர் முதலியவற்றை வெறுட்டனளாகச் சில செய்யுளிருப்பினும் சந்திரனை நிந்தித்தப் பெரும்பான்மைபற்றி ஆதனை குற்றியென்றாற்போல இப்படலத்திற்கு அப்பெயரிடப்பட்டது.

# மன்மதோபாலம்பனப்படலம்.

[முன்னே சந்திரனை நிந்தித்த தமயந்தியானவள்
இப்படலத்தால் மன்மதனை நிந்தித்தல்
சொல்லப்படுகின்றது.]

## கலிவிருத்தம்.

மங்கு லூடு மறைந்துயிர் வாட்டுமித்
திங்க டன்னை வெறுத்தது தீங்கெனா
வங்க மூடொளித் தாருயிர் கூட்டுணுந்
துங்க வேளை வெறுக்கத் தொடங்கினாள்.

இ - ள். (தமயந்தியானவள்) மங்குலூடு-மேகத்தினிடத்திலே, மறைந்து - ஒளித்திருந்து, உயிர் - ஆவியை, வாட்டு - வாட்டுகின்ற, இத்திங்கள் தன்னை-இந்தச்சந்திரனை, வெறுத்தது - வெறுத்துப்பேசினது, தீங்கு எனா - குற்றமென்றுநினைத்து, அங்கமூடு-தேகத்தினுள்ளே, ஒளித்து - மறைந்துநின்று, ஆர் - நிறைந்த, உயிர் - ஆவியை, கூட்டுணும் - கொள்ளைகொள்கின்ற, துங்கம் - உயர்வுபொருந்திய, வேளை-மன்மதனை, வெறுக்க - வெறுத்தல்செய்ய, தொடங்கினாள் - ஆரம்பித்தாள், எ - று.

க - து. தமயந்தியானவள் சந்திரனை வெறுத்தது குற்றமென்று மன்மதனை வெறுக்கத் தொடங்கினாள் என்பதாம்.

'மங்குலூடு மறைந்துயிர்வாட்டு மித்திங்கடன்னை வெறுத்தது தீங்கு' என்றது தூரத்திலிருந்துதுன்பஞ்செய்கின்றவனை வெறுப்பது காட்டிலழுவதுபோலப் பயனின்றென்றும், புறப்பகைக்கு மிகவும் அஞ்சவேண்டுவதின்றென்றுமாயிற்று. 'அங்கமூடொளித்தாருயிர் கூட்டுணுந், துங்கவேளைவெறுக்க' என்றதனால் அகத்திலிருந்து துன்பஞ்செய்கின்றவனை வெறுப்பதினாலே சிறிது பயனுண்டென்றும் உட்பகைக்கே அஞ்சவேண்டுமென்றுமாயிற்று. "வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக, கேள்போற் பகைவர் தொடர்பு" (திருவள்ளுவர்-உட்பகை-உ) என்பதனாலறிக. (க)

நையு மென்னுயிர் நாமறப் பூங்கணை
யெய்யும் வேளொன் றியம்புவல் கேட்டியால்
வெய்ய செந்தழ லேந்திவெண் ணீறணி
ஐயன் முன்னுறி லாண்டொழில் காண்பனால்.

இ - ள். நையும் - வாடுகின்ற, என் உயிர் - என்னுடைய வுயிரினது, நாமம் அற - பேரற, பூ கணை எய்யும் - பூவம்பையெய்கின்ற, வேள்-மன்மதனே, ஒன்று இயம்புவல்-ஒன்றுசொல்லுவேன், கேட்டி-கேட்பாயாக; வெய்ய - வெவ்விய, செம் தழல் - சிவந்ததீயை, ஏந்தி-தாங்கி, வெள்-வெள்ளிய, நீறு அணி-விபூதியைத் தரித்திருக்கின்ற, ஐயன் முன் - பரமசிவனெதிரே, உறில் - அம்பெய்யப்பொருந்துவையானால், ஆண் தொழில் - நின்னாண்மைச் சேவகத்தை, காண்பன் - காணுவேன், எ - று.

க - து. என்னுயிர்ப்பெயர் நீங்க மலர்க்கணை யெய்யு மன்மதனே கேள்! சிவனிடத்திற்சென்று கணை செலுத்துவாயானால் உன் சேவகத்தைக் காண்பேனென்றாள் என்பதாம்.

குடிசையிற் குதிரை நடத்துவோனைப்போலத் தன் கீழ்வாழும் விரகிகளிடத்தே தன்னாண்மையைக் காட்டுகின்றவனென்பது தோன்ற 'நையுமென்னுயிர் நாமறப் பூங்கணை யெய்யும் வேள்' என்றாள். அன்பசைவர் முன்னேநிற்க வஞ்சுகின்றவனென்பதுதோன்ற 'ஐயன் முன்னுறி லாண்டொழில்காண்பன்' என்றாள். ஆண்டொழில்-அஞ்சாமை, வீரம், ஊக்கமுதலியவாம். அவர்முன் ஆண்மை செல்லாதென்பதாம். அக்கடவுளை யொழிந்தவர் முன் செல்லுமென்பதுங் கருத்து. நாமமென்பது நாம் எனக் கடை குறைந்தது. (உ)

அலரின் மீதுறை யந்தண னெய்திட
மலரை யன்றி வடிக்கணை நல்குமேற்
சிலையெ னக்கழை கொண்ட திறலினே
யுலகில் யாவ ருயிர்கொண் டிருப்பரே.

இ - ள். அலரின் மீது - தாமரைமலரின்மேல், உறை - வசிக்கின்ற, அந்தணன் - பிரமனானவன், எய்திட - எய்யும்படி, மலரை அன்றி - பூங்கணையல்லாமல், வடி - வடிக்கப்பெற்ற, கணை - (இரும்புமுதலியவற்றாலாகிய) பாணங்களை, நல்குமேல் - கொடுப்பானேயானால், கழை - கரும்பினை, சிலை என கொண்ட - வில்லாகக்கொண்ட, திறலினோய் - வலிமைபொருந்திய மன்மதனே, உலகில் - உலகத்தில், யாவர் - எவர்கள், உயிர்கொண்டு - ஆவியைக்கொண்டு, இருப்பர் - இருப்பார்கள், எ - று.

க - து. மன்மதனே! உனக்குப் பிரமதேவன் மலர்க்கணையலாது வடிக்கணை கொடுத்திருப்பானாகில் உலகத்தில் யாவரேயுயிர் வைத்திருப்பார்கள் என்றாள் என்பதாம்.

உனது துன்மார்க்கத்தை யறிந்து நான்முகன் இப்படிச் செய்தா னென்பது கருத்து. (௩)

அருவ மாய வணு வாய மனத்தையும்
விரைகொள் வாளி விடுத்துப் பிளத்தலாற்
பொருவில் வேள்கட் புலனிற் புலப்படு
முருவு போழ்த லுனக்கரி தன்றரோ.

இ - ள். அருவமாய் - அரூபமாகியும், அணுவாய - அணுவடிவாயுமிருக்கின்ற, மனத்தையும் - மனத்தினையும், விரை கொள் - வாசனையைக்கொண்ட, வாளி - மலரம்புகளை, விடுத்து - எய்து, பிளத்தலால் - பிளக்கின்றபடியால், பொருவில்-ஒப்பில்லாத, வேள்-மன்மதனே, கண் புலனில்-நேத்திரேந்திரியத்திற்கு, புலப்படும்-விடயப்படுகின்ற, உருவு - வடிவங்களை, போழ்தல் - பிளத்தல், உனக்கு அரிதன்று - உனக்கெளிதாம், எ - று.

க - து. மன்மதனே ! அருவத்தைப் பிளக்கு முனக்கு உருவத்தைப் பிளத்தலரிதோ என்றாள் என்பதாம்.

மனத்தையு மென்றது உயர்வு சிறப்பும்மை. கட்புலனுக்கு விடயப்படாத மனத்தையும் பிளத்தலால் என்னுடலைப் பிளத்தலெளிதென்பாள் 'கட்புல னிற்புலப்படு முருவுபோழ்த லுனக்கரிதன்று' என்றாள். [உருவைப் பிளத்தல் மனத்தைப் பிளத்தலாலெனச் சாதிக்கப்படுதலாற் செய்யுட்குறியணி.] (௪)

மன்ற னாறு மதுமலர் வாளிகொண்
டின்றெ னாருயி ரீருந் தகைமையாற்
குன்ற வில்லி கொடுந்தழற் கண்ணில்வேள்
பொன்றி னானெனல் பொய்யென வேண்டுமால்.

இ - ள். மன்றல் - வாசனையானது, நாறும் - மணக்கின்ற, மது-தேனையுடைய, மலர் வாளி கொண்டு-மலரம்புகளைக் கொண்டு, இன்று - இப்பொழுது, என் - என்னுடைய, ஆர் - நிறைந்த, உயிர் - ஆவியை, ஈரும் தகைமையால்-அறுக்கின்ற முறைமையினாலே, குன்றவில்லி - மேருவில்லேந்திய பரமசிவனுடைய, கொடு - கொடிய, தழல் கண்ணில் - தீவிழியில், வேள் - மன்மதனானவன், பொன்றினான் எனல் - இறந்தானென்று சொல்வது, பொய் எனவேண்டும் - பொய்யென்று சொல்லவேண்டும், எ - று.

க - து. மன்மதனானவன் பூவம்புகொண் டென்னுயிரைப் பிளத்தலால் சிவனெற்றிக்கண்ணா லெரிந்தானெனல் பொய்யென்றாள் என்பதாம்.

பொய்யென்றொழியாது என வேண்டுமென்றதனால் இதிகாச புராணங்கள் பொன்றினனெனக் கூறுதலால் பொய்யெனலாகாது மெய்யென வேண்டுமென்றும், ஆயின் அவமிர்த்துவை யடைந்தபடியால் பிசாசனாகி யென்னை வருத்துகின்றானென வேண்டுமென்றும், சகத்துற்பத்திக்குக் காரணனாகிய காமதேவனானதால் பிசாசனாதல் கூடாதென்றும், பரமசிவனது தழற் கண்ணால் மடிந்தவன் மறுபடியும் பிழைத்தானெனல் அசம்பவமென்றும், அவன்பிழைத்து என்னை வருத்துவது அவருடைய ஆற்றல் குறைவாலன்று விரகிகளுடைய பாவத்தினாலாதலின் அசம்பவமன்றெனவேண்டுமென்றும் பொருள் படுதல் காண்க. [வேறிறவாமையை யிருந்தகைமையாற் சாதித்தலால் செய்யுட்குறியணி.] (௫)

கூற்ற மென்னக் கொலைபுரி வேனிலா
னூற்றி தழ்க்கம லத்திறை நோன்மைய
வாற்றல் சான்ற மலர்க்கணை யைந்தல
தேற்ற நல்கி னுலகினை யென்செயான்.

இ - ள். கூற்றம் என்ன - யமனென்னும்படி, கொலை புரி - கொலைத்தொழிலைச் செய்கின்ற, வேனிலான் - வசந்தகாலத்திற் குரிய மன்மதன், நூறு இதழ் கமலத்து இறை - நூறிதழ்களையுடைய தாமரைமலரி லிருக்கின்ற பிரமனானவன், நோன்மைய - நுட்பமாகிய, ஆற்றல் சான்ற - வலிமையுள்ள, மலர் கணை - பூவம்புகளை, ஐந்து அலது - ஐந்தன்றி, ஏற்றம் - அதிகமாக, நல்கின் - கொடுத்தால், உலகினை - உலகத்தை, என் செயான் - என்ன துன்பஞ் செய்ய மாட்டான், எ - று.

க-து. யமன்போற் கொலை செய்யு மன்மதனானவன் பிரமனைக் கணைமே லதிக கணைகளைத்தரி னுலகத்தை யென்செய்யமாட்டான் என்றான் என்பதாம்.

எல்லாவற்றையு நியதிசெய்கின்ற பிரமனானவன் மன்மதன் கொடுமையைக் கண்டு உலகத்திற்கிரங்கி மெல்லிய பூவைக் கணைகளாகச்செய்து அவையும் ஐந்தன்றி அதிகமாகக் கொடுத்திலனென்பது கருத்து.

அருவ மாயுமென் றாவி பதைத்துளம்
வெருவு மாறுவி னைசெயும் வேனிலான்
கருமி டற்றிறை கண்ணி லெரிந்திடா
துருவ மெய்தி னுலகமு முய்யுமே.

இ - ள். அருவம் ஆயும்-அருவமடைந்தும், என்-என்னுடைய, ஆவி பதைத்து - உயிர் பதைத்து, உளம் - மனம், வெருவுமாறு-பயங் கொள்ளும்படி, வினை செயும் - மலர்க்கணைகளைத் தொடுக்கின்ற, வேனிலான் - வசந்தகாலத்திற்குரிய மன்மதனென்பவன், கருமிடற்று இறை - நீலகண்டத்தையுடைய பரமசிவனது, கண்ணில் - நெற்றிக் கண்ணில், எரிந்திடாது - எரிந்திடாமல், உருவம் எய்தில் - வடிவத் தைப்பெற்றிருப்பானாகில், உலகமும் - உலகமும், உய்யுமே - பிழைக்குமா, எ - று.

க - து. அருவமடைந்திருந்தும் என்னாவி பதைக்க வம்பெய்யு மன்மதனென்பவன் உருவ மடைந்தா லுலகம் பிழைக்குமா என்றாள் என்பதம்.

உய்யுமேயென்னும் ஏகாரம் எதிர்மறை. "உலகமென்ப துயர்ந் தோர் மாட்டே" என்பவாகலின் இங்கே உலகமென்றது சிதேந்திரியராகிய முனிவரை யெனக்கொள்க. சரீரமில்லாதிருக்கும்போ தும் இவ்வளவு துன்பஞ் செய்கின்றவன் மற்ற வீரர்கள்போலச் சரீர முண்டாயிருக்குமாயின் சிதேந்திரியரென்ப தில்லாமற் போய்விடு மென்பாள் 'உருவமெய்தி னுலகமுமுய்யுமே' என்றாள். (எ)

> விரிந்த வேணி விமலன் வெகுளியா
> லெரிந்து ளாரிற் பிழைத்தவர் யாவரே
> கரிந்த வேள்பிழைத் தெய்வது கன்னியர்
> புரிந்த தீவினை யின்புணர்ப் பாகுமே.

இ - ள். விரிந்த - விரியப்பெற்ற, வேணி - சடையையுடைய, விமலன் - பரமசிவனுடைய, வெகுளியால் - கோபத்தினால், எரிந் துளாரில் - எரிக்கப்பட்டவர்களிலே, பிழைத்தவர் - பின்னும்பிழைத் தவர்கள், யாவர் - எவர்; கரிந்த வேள் - கரிந்துபோன மன்மதன், பிழைத்து - பின்னும் பிழைத்து, எய்வது - பாணங்களை யெய்வது, கன்னியர் - மாதர்கள், புரிந்த - செய்த, தீவினையின் - பாவத்தினு டைய, புணர்ப்பாகும் - சம்பந்தமாகும், எ - று.

க - து. சிவன் கோபத்தா லெரிந்தவரிற் பிழைத்தவர் யாவர்? மன்மதன் பிழைத்தெய்வது மாதர்கள் செய்த தீவினையின் சம்பந்த மாம் என்றாள் என்றதாம்.

பரமசிவனுடைய வெகுளியால் எரிந்த திரிபுரர் முதலியோர் பின்னும் பிழைத்திலரென்க. [கன்னியர்புரிந்த தீவினையின் புணர்ப் பெபன்று மாதரைப் பழித்தலில் மிகவுங் கொடியனென மன்மதன் பழிப்புத் தோன்றுதலால் வஞ்சப்புகழ்ச்சியணி.] (அ)

சடில மன்றுபைந் தார்குழற் பின்னல்கார்
மிடறு தோன்றல் விடமன்று நானமே
யுடல் விளர்ப்புவெண் ணீறன் றுருவிலா
யடர்வ தென்னை யானலன் காண்டியால்.

இ - ள். உருவிலாய் — வடிவமில்லாத மன்மதனே, அடர்வது என்னை — என்னுடன் போர்செய்வதென்ன, சடிலம்அன்று - சடையன்று; பை - பசிய, தார் — பூமாலையை யணிந்த, குழல் — கூந்தலினது, பின்னல் - வேணி, கார் - கருமை, மிடறு - கழுத்தினிடத்தில், தோன்றல் - தோன்றுதல், விடம் அன்று - நஞ்சமன்று, நானமே-கத்தூரியாம்; வெள் — வெள்ளிய, நீர் அன்று-விபூதியன்று, உடல் விளர்ப்பு - சரீரத்தினது வெண்ணிறமாம்; அரன் அலன்-(ஆதலால்) யாம சிவனல்லன், காண்டி — (நீ) காண்பாயாக, எ - று.

க - து. மன்மதனே! சடையல்ல கூந்தலின் பின்னல்; கண்டக் கறுப்பு விஷமல்ல கஸ்தூரி; பூசும் வெண்ணீறல்ல உடல்வெளுப்பு; நான் சிவனல்லன் என்னிடத்திலேன் போர் செய்கிறாய் என்றாள் என்பதாம்.

மன்மதனுக்கும் தனக்கும் பகையின்மையாலவன் தன்னை வருத்துதற்குக் காரணம் தன்னுடற்குறியால் அவன் பகைவனாகிய யாம சிவனென்னு நினைப்பேயாகுமென் றெண்ணி அதனைச் சொல்லி யொழித்தவாறென்க. [கூந்தன் முதலியவற்றிற் சடிலமுதலிய பிராந்தியைக் கற்பித்தொழித்தலல் மயக்கவொழிப்பணி.] (உ)

கொன்செய் வாளி குளித்தசெம் புண்ணிடைத்
துன்ப மெய்தத் தழல்சொரிந் தாலென
வன்பர் போல நின்றார மிறைப்பரா
லென்செ யாருயிர்த் தோழிய ரின்னுமே.

இ - ள். உயிர்த்தோழியர் - உயிரையன்ன தோழியராயிருந்தவர்கள், அன்பர்போல - இப்பொழுதென்னிடத் தன்புடையார் போல, நின்று - எனைச் சூழ்ந்துநின்று, கொன் செய் - அச்சத்தைச் செய்கின்ற, வாளி - மன்மத பாணங்கள், குளித்த - தைத்த, செம் - சிவந்த, புண்ணிடை - புண்ணினிடத்திலே, துன்பம் எய்த - யான் துன்பத்தை யடைய, தழல் சொரிந்தால் என - நெருப்பைச் சொரிந்ததுபோல, ஆரம் - சந்தனக்குழம்பை, இறைப்பர் - வீசுவார்கள், இன்னும் - இன்னமும், என்செயார் - யாதுசெய்யார்கள், எ - று.

க - து தோழிமார்கள் மன்மதபாணம் பட்ட புண்ணிடத்துத் தீயைப்போலுஞ் சந்தனத்தை யிறைக்கிறார்கள், இன்னுமென்செய்ய மாட்டார்கள் என்றாள் என்பதாம்.

இருந்தவரென்றும் இப்பொழுதென்றும் பொருளுக்கேற்பக் கூட்டப்பட்டன. [தோழியர் செய்யு முபசாரமாகிய குணத்தைக் குற்றமாகக் கூறலால் இலேசவணி.] (௯0)

தேற்று வார்சிலர் தேங்கமழ் வாசநீர்
தூற்று வார்சிலர் தொல்குல தெய்வதம்
போற்று வார்சிலர் பூண்முலை சாந்தினா
லாற்று வாரி னழற்றுகின் றார்சிலர்.

இ - ள். சிலர் - தோழிகளிற் சிலரானவர், தேற்றுவார் - தேறச் சொல்லுவார்கள்; சிலர் - சிலரானவர், தேம் - வாசனையான து, கமழ் - மணக்கின்ற, வாசம் நீர் - பனிநீரை, தூற்றுவார் - வீசுவார்கள்; சிலர் - சிலரானவர், தொல் - தொன்றுதொட்டாராதித்து வருகின்ற, குலதெய்வதம் - குலதெய்வத்தை, போற்றுவார் - பிரார்த்தனை செய்வார்கள்; சிலர் - சிலரானவர், பூண் - ஆபரணத்தை யணிந்த, முலை - தனத்தின் வெப்பத்தை, சாந்தினால் - சந்தனக் குழம்பினால், ஆற்றுவாரின் - தணிப்பவர்களைப்போல, அழற்றுகின்றார் - வெப்பமிகச் செய்வார்கள், எ - று.

க - து. சிலர் தேற்றுவார்கள், சிலர் பனிநீரை ஊற்றுவார்கள், சிலர் குலதெய்வத்தைப் போற்றுவார்கள், சிலர் சந்தனத்தா லாற்றுவார்கள் போலச் சுடுகிறார்கள் என்பதாம்.

தேற்றுதலாவது நின்னால் விரும்பப்பட்ட நாயகனை நீபெறுவை உன் தந்தையும் உன் விருப்பிற்கு மாறாகச் செய்யான் என்பன சொல்லி அவளுள்ள வருத்தத்தைப் போக்கல். தெய்வதம் போற்றுதலாவது தாம் வழிபடுங் கடவுளைநோக்கி இவளுக்கிவ்விடஞ் சித்தியாகவுந் துன்ப நீங்கவும் அருள்செய்கவென்று வேண்டிக்கோடல். ()

இன்ன வாறு மகளி ரியற்றவுங்
கன்னன் மாரன் கணையுயி ரீரவும்
பொன்னின் வார்முலை முத்தம் பொரிந்திடத்
தன்னை யும்மறந் தாடம யந்தியே.

இ - ள். இன்னவாறு - இவ்விதமாய், மகளிர் - தோழிகள், இயற்றவும் - உபசாரஞ்செய்யவும், கன்னல் - கருப்புவில்லேந்திய, மாரன் - மன்மதனுடைய, கணை - பாணங்கள், உயிர் - ஆவியை

ஈரவும் - பிளக்கவும், பொன்னின் - பொன்னினாற்செய்த, வார் - கச்சையணிந்த, முலை - தனங்களின்மீதணிந்த, முத்தம் - முத்துக்கள், பொரிந்திட - நீறுகவும், தமயந்தி - தமயந்தியானவள், தன்னையும் மறந்தாள் - தன்னையு மறந்துவிட்டாள், எ - று.

க - து. இவ்வாறு பெண்கள் செய்யவும், மன்மதன் பாணமெய்யவும், முத்துக்கள் பொரிந்திடத் தமயந்தி தன்னையு மறந்தாள் என்பதாம்.

மன்மதபாணஞ் செய்கின்ற வெம்மையானது தோழியர்கள் செய்கின்ற சைத்திய வுபசாரத்தினாலுந் தணியாமல் மூர்ச்சித்தாளென்க. இயற்றவும் ஈரவும் பொரியவும் என்றுமெச்சங்கள் மறந்தாளென்னும் வினைகொண்டன. (கஉ)

நாவி மென்குழ னன்னுதற் றோழியர்
காவி யங்கட் கதிர்முலைக் கன்னியைப்
பூவின் மெல்லணை சேர்த்திப் புடையிருந்
தாவி யுண்டுகொ லோவென் றழுங்குவார்.

இ - ள். நாவி - கஸ்தூரியணிந்த, மென் - மெல்லிய, குழல் - கூந்தலையும், நல் நுதல் - நல்ல நெற்றியையுமுடைய, தோழியர் - தோழிகள், காவி - கருங்குவளைபோன்ற, அம் - அழகிய, கண் - காந்திபொருந்திய, முலை - தனங்களையுடைய, கன்னியை - தமயந்தியை, பூவின் - மலரினாற் செய்யப்பட்ட, மென் - மெல்லிய, அணை - மெத்தையின்மேல், சேர்த்தி - சேர்த்து, புடை இருந்து - பக்கத்திலிருந்து, ஆவி - உயிரானது, உண்டுகொலோ என்று - உண்டோ இல்லையோவென்று, அழுங்குவார் - வருந்துவார், எ - று.

க - து. தோழிமார்கள் தமயந்தியை மலரணையிற் கிடத்தி உயிருண்டோ வில்லையோவென் றழுவார்கள் என்பதாம்.

மூர்ச்சையுஞ் சாக்காடோ டொக்குமாதலின் அவளுயிரைக் குறித்துச் சந்தேகித்தற் கிடமுண்டாயிற்றென்க. மலர்க்கிடப்படுத்தியெ மருட்பிலிற்றென்னுஞ் செய்யுளில் மெல்லணைக் கிடத்தினரென்றும், சந்திரோபாலம்பனப் படலத்திலே பருமமலர் மெல்லணைக் கிடத்தியென்றுங் கூறி யீண்டுப் பூவின் மெல்லணை சேர்த்தியென்றுங் கூறல் கூறியது கூறலாமெனின், பெருஞ் செல்வத்தால் பலவணைகள் பரப்பப்பட்டிருத்தலும் ஒவ்வொன்றுஞ் சிறிது சிறிதுகாலம் படுத்தலால் வாடி கழிபடுதலு மியல்பாதலால் கூறியது கூறலாகாது. அன்றியும் முன்னுள்ளவணையினும் மெல்லிய வணையிற் கிடத்தினரென்றுமாம். 'ஆவி யுண்டுகொலோ,' என்றதனால் இல்லையோ வென்பது வருவிக்கப்பட்டது. (கங)

எண்ணி யெண்ணி யிரங்குவ தென்னுயிர்ப்
புண்ணி கழ்ந்த துயிர்துறந் தாளலள்
வண்ண மென்றுவர் வாய்துடிக் கின்றது
கண்ணி மைத்தன காணுமென் பார்சிலர்.

இ - ள். சிலர் - அத்தோழிகளிற் சிலர், எண்ணி எண்ணி - நினைத்து நினைத்து, இரங்குவது என் - புலம்புவதென்ன, உள் - உள்ளே, உயிர்ப்பு - மூச்சு, நிகழ்ந்தது - அசைந்தது; உயிர் - ஆவி, துறந்தாளலள் - நீங்கினவளல்லள்; வண்ணம் - அழகிய, மெல் - மெல்லிய, துவர் - பவளம்போன்ற, வாய் - வாயானது, துடிக்கின்றது - துடியாநின்றது; கண் - கண்களானவை, இமைத்தன - இமைத்தல் செய்கின்றன, காணும் என்பார் - பாருமென்பார்கள், எ - று.

க - து. தோழிகளிற் சிலர் அழவேண்டியதென்ன? உயிரிருக்கின்றது, வாய் துடிக்கின்றது, கண்களிமைக்கின்றன பாரென்பார்கள் என்பதாம்.

இந்நிகழ்ச்சிகளால் அம்மூர்ச்சை தெளிந்தனவெனவறிதல் இதனாற் கூறப்பட்டது. எண்ணி யெண்ணி யிரங்கலாவது-இவள்சாக்காடுறின் இவளாற் செய்யப்பெற்ற சிறப்பு முதலியவெல்லாம் இகழப்படுவோமென் றிரங்கலாம். [தன்மை நவிற்சியணி.] (கச)

மைத்த டங்கணீர் மாற்றுமின் சோர்ந்துவீ
ழுத்த ரீகமு யர்முலை சேர்த்துமின்
கொத்து நாண்மல ரோடுங் குலைந்துசோர்
மொய்த்த கூந்தன் முடிமினென் பார்சிலர்.

இ - ள். சிலர் - தோழிகளிற் சிலரானவர், மை - அஞ்சனந் தீட்டிய, தடம் - விசாலம் பொருந்திய, கண்ணீர் - கண்களினீரை, மாற்றுமின் - மாற்றுங்கள்; சோர்ந்து - சோர்வை யடைந்து, வீழ் - வீழ்கின்ற, உத்தரீகம் - மேற்போர்வையை, உயர் - உயர்ந்த, முலை - தனத்தின்மேல், சேர்த்துமின் - சேருங்கள்; கொத்து - கொத்தாகிய, நாள் - அன்றலர்ந்த, மலரோடும் - பூக்களுடனே, குலைந்து - அவிழ்ந்து, சோர் - சோர்கின்ற, மொய்த்த - நெருங்கிய, கூந்தல் - குழலை, முடிமின் என்பார் - முடியுங்களென்று சொல்லுவார், எ - று.

க - து. தோழிகளிற் சிலர் கண்ணீரைத் துடையுங்கள், மேற்போர்வையால் முலையை மூடுங்கள், அவிழ்ந்த கூந்தலை முடியுங்கள் என்பார்கள் என்பதாம்.

இனி ஏற்பாடு அணித்தாகலின் இவளுடைய தந்தை முதலி யோர் வருதற்கு முன்னமே முன்போல ஆடையணி முதலியவற் றைத் திருத்த முயல்கின்றாரென்பது கருத்து. [இதுவும் அவ்வணி.]

சுடரும் வெண்மதி தூற்றுந் தழல்சுட
விடரின் மூழ்கி யிறந்து படுமுன
மடவரற் கிடர் மாற்றுவன் யானெனக்
கடன் முகட்டிற் கதிரவன் றோன்றினான்.

இ - ள். சுடரும் - பிரகாசியாநின்ற, வெள் - வெள்ளிய, மதி - சந்திரனானவன், தூற்றும் - தூற்றுகின்ற, தழல் - தீயானது, சுட - சுடுதல்செய்ய, இடரில் - துன்பத்தில், மூழ்கி - முழுகி, இறந்துபடும் முனம் - உயிர் நீங்குமுன்னே, மடவரற்கு - தமயந்திக்கு, இடர் - துன்பத்தை, யான் - நானே, மாற்றுவன் - நீக்குவன், என - [illegible] வன்போல, கடல் முகட்டில் - கடலினுச்சியில், கதிரவன் - சூரி யன், தோன்றினான் - உதயமானான், எ - று.

க - து. சந்திரனாகிய நெருப்புச்சுட தமயந்தி துன்பத்தில் மூழ்கி யிறக்குமுன் சூரியனுதயமாயினான் என்பதாம்.

சந்திரனும் மன்மதனும் இரவின் மிகுகின்ற தமயந்தியின் றுயரம் பகல்வர வொருபுடை நீங்குமென்பார் 'இடர் மாற்றுவன் யானெனக் கடன்முகட்டிற் கதிரவன் றோன்றினான்' என்றார். [இரவி யுதயத்தில் தமயந்தி வருத்த நீக்குவிப்போன் றன்மையைக் குறித்த லாற் குறிப்பணி.] ([illegible])

மன்மதோபாலம்பனப்படலம் முற்றிற்று.



நாரதர் இந்திரனுக்குத் தமயந்தியின் சுயம்வரச் செய்தியறிவித்தல்.

# இந்திரப்படலம்.

[இப்படலத்தால் தமயந்தியின் சுயம்வரத்திற்கு இந்திரன் முதலிய தேவர் வரவு சொல்லப்படுகின்றது.]

## கலிவிருத்தம்.

இடுக்க ணெய்த மிகந்து களித்துளார்
நடுக்க மெய்த நலிதரு வேந்தரின்
விடுத்த தண்கதிர்த் திங்கள் விளங்கொளி
கெடுத்து வெய்யவன் கீழ்த்திசைத் தோன்றினான்.

இ - ள். இடுக்கண் - துன்பத்தை, எய்த - அந்நாட்டிலுள்ளோ ரடைய, இகந்து - அதிக்கிரமித்து, களித்துளார் - செருக்கடைந்த குறுநிலமன்னர், நடுக்கம் - நடுக்கத்தை, எய்த - அடைய, நலிதரு - வருத்துகின்ற, வேந்தரின் - அரசரைப்போல, விடுத்த - (தமயந்தி வருந்தும்படி) விடுக்கப்பெற்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, கதிர் - கிரணங்களையுடைய, திங்கள் - சந்திரனுடைய, விளங்கு - விளங்குகின்ற, ஒளி - காந்தியை, கெடுத்து - அழித்து, வெய்யவன் - சூரியனானவன், கீழ்த்திசை - கீழ்த்திசையில், தோன்றினான்-உதித்தான், எ - று.

க - து. குறுநிலமன்னர் துன்பமடையப் பெருநிலமன்னர் புறப்பட்டாற்போலச் சந்திர பிரகாசத்தைக் கெடுத்துச் சூரிய னுதயமாயினான் என்பதாம்.

ஏழையரை வருத்தியவர்க்குக் கேடுதாமே வருமாதலில் தமயந்தியை வருத்திய சந்திரனும் ஒளி யிழந்தானென்க. கேடு தாமேவருதல் "முற்பகற் பிறர்க்கின்னா செய்யிற் றமக்கின்னா பிற்பகற் றாமே வரும்" (திருவள்ளுவர்-இன்னாசெய்யாமை) இதனாலறிக. [வேந்தரைப்போல வெய்யவன் கீழத்திசைத் தோன்றினா னென்றமையால் உவமையணி.] (க)

வைய மேழுடை மன்ன னிறுத்தலும்
வெய்ய பாசறை விட்டகல் வேளிரி
னைய செங்கதி ராதவன் றோன்றுமுன்
செய்ய வான்விட் டகன்றது திங்களே.

இ - ள். வையம் ஏழுடை - ஏழு தீபங்களையுமுடைய, மன்னன் - அரசனானவன், இறுத்தலும் - வந்து தங்கினமாத்திரத்தில், வெய்ய - வெவ்விய, பாசறை விட்டு - படைவீட்டை விட்டு, அகல் - நீங்குகின்ற, வேளிரின் - குறுநில வேந்தரைப்போல், ஐய - அழகிய, செம் கதிர் - சிவந்த கிரணங்களையுடைய, ஆதவன் - சூரியனானவன், தோன்றுமுன் - உதிக்கு முன்னே, செய்ய - சிவந்த, வான் விட்டு - ஆகாயத்தைவிட்டு, திங்கள் - சந்திரனானது, அகன்றது - நீங்கியது, எ - று.

க - து. சூரிய னுதயமாகுமுன்னே சந்திர னீங்கினான் என்பதாம்.

[இதுவும் உவமையணி.] (உ)

அன்ன காலையி லாய்வளைத் தோழியர்
நென்னல் வாட்டு நிலவுக் கதிர்மதி
யின்னு மெய்தி லிறந்து படுமென
வுன்னி யன்னையொ டுற்றவை கூறினார்.

இ - ள். அன்ன காலையில் - அப்பொழுதில், ஆய் - ஆராய்ந்தெடுக்கப்பட்ட, வளை - வளையலை யணிந்த, தோழியர் - தோழிகள், நென்னல் - நேற்றைப்பொழுதில், வாட்டு - வாட்டிய, நிலவு - பிரகாசம்பொருந்திய, கதிர் - கிரணங்களையுடைய, மதி - சந்திரனானவன், இன்னும் - இன்னமும், எய்தில் - வந்தால், இறந்துபடும் என - தமயந்தி மரணத்தை யடைவாளென்று, உன்னி - நினைத்து, அன்னையொடு - தாயுடனே, உற்றவை - அடைந்த காரியங்களை, கூறினார் - சொல்லினார்கள், எ - று.

க - து. தோழிமார்கள் தமயந்தி தாயாகிய காஞ்சனமாலையிடத்து நடந்த காரியங்களைச் சொன்னார்கள் என்பதாம்.

தோழியரென்றது உயிர்த்தோழியரை. செவிலியும் நற்றாயும் அன்னையாதலின் ஈண்டு அன்னையென்றது செவிலியையெனக் கொள்க. "தலைவிபாங்கிக் கறத்தொடு நிற்றலும், பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்றலுஞ், செவிலிநற்றாய்க் கறத்தொடு நிற்றலும், நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு நிற்றலும் விதியென்ப நெறியுணர்ந்தோரே." (ஙு)

அத்தி றந்தெரிந் தாய்மலர்க் கோதைவெண்
முத்த மூரன் முதுக்குறைந் தாளென
வுய்த்து ரைத்தன ளோடைப் புகர்முக
மத்த மால்கரி மன்னவர் மன்னற்கே.

இ - ள். அத்திறம் தெரிந்து-அச்செவிலி சொல்லிய திறத்தைத் தெரிந்துகொண்டு, ஆய் - ஆராய்ந்தெடுக்கப்பட்ட, மலர் - மலர்களை யணிந்த, கோதை - கூந்தலையுடைய நற்றாயானவள், வெள் - வெள்ளிய, முத்தம் - முத்துகளையொத்த, மூரல் - பற்களையுடையதமயந்தி யானவள், முதுக்குறைந்தாள் என-பேரறிவடைந்தாளென்று, ஓடை-பட்டமணிந்த, புகர் முகம் - புள்ளிபெற்ற முகத்தையுடைய, மத்தம் - மதங்கொண்ட, மால் - பெரிய, கரி - யானையையொத்த, மன்னவர் மன்னற்கு - வீமராசனுக்கு, உய்த்து - அவ்விடத்திற் கருத்தைச் செலுத்தி, உரைத்தனள் - சொல்லினாள், எ - று.

க - து. காஞ்சனமாலை யதையறிந்து தமயந்தி பேரறி வடைந்தாளென்று தன்கணவனாகிய வீமராசனுக்குச்சொன்னாள் என்பதாம்.

தடங்கொள் வெம்முலை சாற்றிய மாற்றமு
நுடங்கு சிற்றிடை யாக்கமு நோக்கிய
மடங்க லேறனை யான்மண நாட்டிய
முடங்கல் போக்கினன் மொய்கழல் வேந்தர்க்கே.

இ - ள். தடம் கொள் - பருமையைக்கொண்ட, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலை - தனத்தையுடைய துணைவியானவள், சாற்றிய - சொல்லிய, மாற்றமும் - சொல்லையும், நுடங்கு - வளையாநின்ற, சிற்றிடை - சிறிய விடையையுடைய தமயந்தியினது, ஆக்கமும் - பருவத்தையும், நோக்கிய - கண்ட, மடங்கல் ஏறு அனையான்-ஆண் சிங்கத்தையொத்த வீமராசனானவன், மணம் - விவாகநாளை, நாட்டிய - குறிக்கப்பெற்ற, முடங்கல் - ஓலையை, மொய் - நெருங்கிய, கழல் - வீரக்கழலினையுடைய, வேந்தர்க்கு - அரசர்க்கு, போக்கினன் - செலுத்தினான், எ - று.

க - து. வீமராசன் தன்மனைவி சொன்னசொல்லையும் தமயந்தி பருவத்தையும் பார்த்துத் திருமணவோலையைத் தேசத்தரசர்களுக்கனுப்பினான் என்பதாம்.

தலைவியின் சொற்குறியாலும் தமயந்தியின் மெய்க்குறியாலும் அந்தப்புரத்தினிகழ்ந்த ஆரவாரத்தினாலும் இந்த நோய்க்குக் காரணங் கண்ட வீமராசன் வடிவும் அழகும் நற்குணமும் நற்செய்கையும் நிறைந்த தன்மகளின் கருத்துக்கிசைந்த அரசன் இன்னானென்பது தெளியக்கூடாமையால் சுயம்வரம் நாட்டிய விவாகவோலையை அரசர் யாவருக்கும் விடுத்தானென்க. (௫)

வேலை சூழ்புவி மன்னர்க்கு வேந்தர்கோ
னோலை போக்கிய தோர்ந்துயர் கற்பக

மாலை தாழ்முடி வாசவற் கோதுவான்
ஞால மேத்திசை நாரதன் போயினான்.

இ - ள். வேந்தர் கோன்-அரசர்க்கரசனாகிய வீமராசனானவன், வேலைசூழ் - கடல்சூழ்ந்த, புவி மன்னர்க்கு - பூமண்டலத்தை யாளுகின்ற அரசர்க்கு, ஓலை - ஓலையை, போக்கியது - செலுத்தியதை, ஓர்ந்து - அறிந்து, உயர் - உயர்ந்த, கற்பகமாலை - கற்பகத்தினுடைய மலர்மாலை, தாழ் - தாழ்கின்ற, முடி - மகுடமணிந்த, வாசவற்கு - இந்திரனுக்கு, ஓதுவான் - சொல்லும்பொருட்டு, ஞாலம் - உலகத்தார், ஏத்து - துதிக்கின்ற, இசை - புகழையுடைய, நாரதன் - நாரதமுனிவன், போயினான் - போனான், எ - று.

க - து. நாரதமுனிவனானவன் வீமராசன் அரசருக்கு ஓலைவிட்டதையறிந்து தேவேந்திரனுக்குச் சொல்லும்பொருட்டுப் போனான் என்பதாம்.

திரிலோக சஞ்சாரியாகிய நாரதமுனிவன் இச்சுயம்வர அதிசயத்தை இந்திரனுக்குச் சொல்லி அவனையும் இதற்கு வருவித்தல் சிறப்பென்று நினைத்துப் பொன்னுலகத்திற்குச் சென்றானென்க. (ரு)

வேறு.

[இதுமுதலைந்துபாட்டுகள் ஒருதொடர்.
இவ்வைந்துபாட்டுகளாலும் இந்திரலோகத்தின்
சிறப்புச் சொல்லப்படுகின்றன.]

வானவரொள் சுடரெறிக்கு முடிதாழ்த்து வினைகழற்கால் வணங்கி யேத்தத், தேனிமிருங் கற்பகநாண் முகையுடைந்து பசியநறுந் தேறலூற்ற, மேனகைசா மரையிரட்டவுருப்பசிவெள் ளடையுதவ விளரித் திற்சொற், பானலங்கட்டிலோத்தமைமென் சதிமுறையிற் பாய்பெயர்க்கும் பாணிதூங்க.

இ - ள். வானவர் - தேவர்களுடைய, ஒள் - ஒள்ளிய, சுடர் - காந்தியை, எறிக்கும் - வீசுகின்ற, முடி - மகுடங்களை, தாழ்த்து - தாழச்செய்து, வினை கழல் கால்-வீரக்கழலையணிந்த பாதத்தை, வணங்கி - தாழ்ந்து, ஏத்த - புகழவும், தேன் - வண்டுகளானவை, இமிரும் - ஒலிக்கின்ற, கற்பகம் - கற்பகத்தினுடைய, நாள் - அன்றலர்ந்த, முகை - அரும்புகள், உடைந்து - உடைபட்டு, பசிய - பசுமை பொருந்திய, நறும் - நறிய, தேறல் - தேனை, ஊற்ற - சொரியவும், மேனகை - மேனகையானவள், சாமரை - கவரிசனை, இரட்ட -

அசைக்கவும், உருப்பசி - உருப்பசியானவள், வெள்ளடை - தாம் பூலத்தை, உதவ - கொடுக்கவும், விளரி - விளரியென்னுமிசையை யொத்த, தீ - மதுரம்பொருந்திய, சொல் - சொல்லையும், பானல் - நீலோற்பலம்போன்ற, அம் - அழகிய, கண் - கண்களையுமுடைய, திலோத்தமை - திலோத்தமையானவள், மெல் - மெல்லிய, சதி முறையில் - தாளவொத்தின்முறைப்படி, பதம் பெயர்க்கும் - பதம் பெயர்த்தற்குரிய, பாணி தூங்க - அஸ்தாபிநயஞ்செய்யவும், எ-று.

க-து. தேவர்கள் வணங்கவும், கற்பகத்தருக்கள் தேன்சொரிய வும், மேனகை சாமரைபோடவும், உருப்பசி தாம்பூலங் கொடுக்க வும், திலோத்தமை யபிநயஞ்செய்யவும் என்பதாம். (எ)

*தண்டரள மணிமுறுவ லயிராணி வரிபரந்த தடங்கட் காமர், வண்டுபகட் டெழின்மார்பின் மந்தார நறுந்தெரி யன் மலரின் வீழப், புண்டரிகச் செழுங்காடு பூத்ததெனு விழிமலர்கள் பொலிந்து தோன்றத், தெண்டிரைவா யமிழ்த மெனத் தெள்விளித்தே னரமகளிர் செவியி னூற்ற.*

இ-ள். தண் - குளிர்ந்த, தரளம்-முத்துக்கள்போன்ற, மணி - அழகிய, முறுவல் - பற்களையுடைய, அயிராணி - இந்திராணியி னுடைய, வரி - இரேகைகளானவை, பரந்த - பரவப்பெற்ற, தடம் - விசாலம்பொருந்திய, கண் - கண்களென்னும், காமர் - அழகிய, வண்டு - வண்டுகளானவை, பகடு - பெருமைபொருந்திய, எழில் - அழகிய, மார்பின் - மார்பிலணிந்த, மந்தாரம் - மந்தாரத்தினுடைய, நறும் - நல்ல, தெரியல் - மாலையினுடைய, மலரில் - பூவில், வீழ - மொய்க்கவும், புண்டரிகம் - தாமரையின், செழு காடு - செழுமை யுள்ளவனம், பூத்தது என-பூத்ததென்னும்படி, விழி மலர்கள் - நேத் திர கமலங்கள், பொலிந்து - பிரகாசித்து, தோன்ற - விளங்கவும், தெள் - தெள்ளிய, திரைவாய் - கடலிடத்துண்டாகிய, அமிழ்தம் என - அமிர்தமென்றுசொல்ல, தெள்விளி தேன் - தெள்விளியென் னுமிசைத்தேனை, அரமகளிர் - அரம்பையரானவர்கள், செவியின் - காதினிடத்திலே, ஊற்ற - சொரியவும், எ - று.

க - து. இந்திராணி கண்கள் மந்தாரமாலை மலரில் வீழவும், ஆயிரங்கண்கள் விளங்கவும், அரம்பையர்கள் பாடவும் என்பதாம்.()

*மருவுயிர்க்கு நறுந்துணர்மென் மலர்பொதுளும் பொலந்தருவு மணியுமானு, மிருநிதியும் விழிக்கடையி னருளுநோக்கி முறைமுறைநின் றேவல் கேட்பக், கருதினர்கண்*

கவர்வனப்பிற் கந்தருவ மடமகளிர் கனிந்த பாடற், சுருதி முறை பிறழாமன் மாடகயாழ் நரம்புளருந் துழனி யார்ப்ப.

இ - ள். மரு - வாசனையை, உயிர்க்கும் - வீசுகின்ற, நறு - நறிய, துணர் - கொத்தாகிய, மெல் - மெல்லிய, மலர் - மலர்களானவை, பொதுளும் - நெருங்கிய, பொலம் - பொன்மயமாகிய, தருவும் - ஐந்தருவும், மணியும் - சிந்தாமணியும், ஆனும் - காமதேனுவும், இருநிதியும் - சங்கநிதி பத்மநிதியென்னு நிதிகளிரண்டும், விழி கடையின் - கடைக்கண்களினுடைய, அருள் - அருளை, நோக்கி - பார்த்து, முறை முறை நின்று - வரிசைவரிசையாகநின்று, ஏவல் - ஏவலை, கேட்ப-கேட்கவும், கருதினர் - நினைத்தவர்களுடைய, கண் - கண்களை, கவர் - பற்றிக்கொள்கின்ற, வனப்பின் - அழகினையுடைய, கந்தருவர் - கந்தருவருடைய, மடம் - இளமைபொருந்திய, மகளிர் - மாதர்கள், கனிந்த - முதிர்ந்த, பாடல் - பாடல்களாலே, சுருதி - ஒலியினுடைய, முறை - வரிசைகள், பிறழாமல் - வேறுபடாமல், மாடகம் - முறுக்காணியோடுங்கூடிய, யாழ் - வீணையினுடைய, நரம்பு - நரம்பினை, உளரும் - தடவுகின்ற, துழனி - ஒலியானது, ஆர்ப்ப - ஒலிக்கவும், எ - று.

க - து. ஐந்தருவும் சிந்தாமணியும் காமதேனுவும் சங்கநிதியும் பதுமநிதியும் ஏவல்கேட்கவும், கந்தருவ மாதர்கள் வீணைவாசிக்கவும் என்பதாம்.

மருங்கினொரு புடைவிசித்த குற்றுடைவாள் வட்டுடையின் வயங்க வோர்பால், பொருங்குலிசப் படைகமஞ்சூன் முகிலினிடை விளங்குமின்னிற் பொலிவு காட்டச், சுரும்பிமிருஞ் சில்லோதிப் பூலோமிசைசெம் பஞ்சடிமென் சுவடு தோய்ந்து, விரிந்ததடம் புயம்பவளக் கொடிபடர்ந்த குலவரையின் விளங்கித் தோன்ற.

இ - ள். மருங்கின் - இடையில், ஒருபுடை - ஒருபக்கத்தில், விசித்த-கட்டிய, குறு உடைவாள் - குறியசுரிகையானது, வட்டுடையின் - அரைக்கவசத்தின்மீது, வயங்க - பிரகாசிக்கவும், ஓர்பால் - ஒருபக்கத்தில், பொரு - போர் செய்கின்ற, குலிசப்படை - வச்சிராயுதமானது, கமம் - நிறைவுபொருந்திய, சூல் - கருப்பத்தையுடைய, முகிலினிடை - மேகத்தினிடத்திலே, விளங்கு - பிரகாசிக்கின்ற, மின்னில் - மின்னலைப்போல், பொலிவு-காந்தியை, காட்ட - காண்பிக்கவும், சுரும்பு - வண்டுகளானவை, இமிர் - ஒலிக்கின்ற, அம் - அழகிய, சில் - பொன்வட்டத் தகட்டினையணிந்த, ஓதி - கூந்தலை

யுடைய, புலோமிசை - இந்திராணியினுடைய, செம் பஞ்சு - செம் பஞ்சுக்குழம்பணிந்த, அடி - பாதங்களினுடைய, மெல் - மெல்லிய, சுவடு - தழும்பு, தோய்ந்து - பொருந்தி, விரிந்த - விரியப்பெற்ற, தடம் - விசாலம்பொருந்திய, புயம் - தோள்களானவை, பவளக் கொடி - பவளக்கொடிகள், படர்ந்த - படரப்பெற்ற, குலவரையின் - குலகிரிகளைப்போல, விளங்கி தோன்ற - பிரகாசித்துத்தோன்றவும், எ - று.

க - து. ஒருபக்கத்தி லுடைவாள் பிரகாசிக்கவும், மற்றொரு பக்கத்தில் வச்சிராயுதம் பிரகாசிக்கவும், இந்திராணி காற்சுவடுபட்ட புயங்கள் பிரகாசிக்கவும் என்பதாம். (கப)

விஞ்சையர்கின் னரரவுண ருரகர்புவி முழுதாளும் வேந்தர் யாரு, மஞ்சலிசெய் திருமருங்கும் புடைசூழ முனிவர் குழா மாசி கூற, வெஞ்சலில்பல் வளஞ்சிறப்ப வரியணையில் வீற்றிருக்கு மிமையோர் வேந்தைக், கஞ்சமல ரயனளித்த மறைபயினா ரதனிருகண் களிப்பக் கண்டான்.

இ - ள். விஞ்சையர் - விச்சாதரர்களும், கின்னரர் - கின்னரர் களும், அவுணர் - அசுரரும், உரகர் - நாகரும், புவி முழுதும் ஆளும் - பூலோகமுழுதையு மாட்சிசெய்கின்ற, வேந்தர் யாரும் - அரசர்கள் யாவரும், அஞ்சலி செய்து - வணக்கஞ்செய்து, இரு மருங்கும் - இரண்டுபக்கத்திலும், புடைசூழ-நெருங்கிச்சூழவும், முனிவர்குழாம் - முனிவர்கூட்டங்கள், ஆசிகூற - ஆசீர்வதிக்கவும், எஞ்சலில் - குறைவில்லாத, பல் - பலவாகிய, வளஞ்சிறப்ப - வளங்களானவைமிக, அரியணையில் - சிங்காதனத்தில், வீற்றிருக்கும் - வீற்றிருக்கின்ற, இமையோர் வேந்தை - தேவராஜனாகிய இந்திரனை, கஞ்சமலர் - தாமரைமலரிலிருக்கின்ற, அயன் - பிரமனானவன், அளித்த - பெற்ற, மறை - வேதத்தை, பயில்-பயிற்சிசெய்கின்ற, நாரதன் - நாரதமுனிவன், இருகண் - தன்னிருகண்களும், களிப்ப - களிப்பையடைய, கண்டான் - பார்த்தான், எ - று.

க - து. விஞ்சையர்களும் கின்னரர்களும் அசுரர்களும் நாகர்களும் புவியரசர்களும் புடைசூழவும், முனிவர்க ளாசீர்வதிக்கவும், சிம்மாதனத்திலிருக்கு மிந்திரனை நாரதன் கண்டான் என்பதாம்.

வானவரென்னும் பாட்டுமுதலாக இந்தப்பாட்டினும் வந்த எந்த வென்பது முதலிய வினையெச்சங்கள் வீற்றிருக்குமென்னும் பெயரெச்சவினையையும் அது இமையோர் வேந்தனென்னும் பெயரையுங் கொண்டு முடிந்தன. (கக)

பொன்னகரந் தனிபுரக்கும் புரந்தரனு நாரதமுனிவன் புகுதலோடு, முன்னரியற் றியதவத்தி னெய்துபய னிப் பிறப்பின் முடிந்த தாமென், றன்னமுனி வரனுவப்ப வருக் கியபாத் தியமுதலா வனைத்து நல்கி, யின்னமுத முகுவன போ லினிதுரைக்கு முகமனொடு மிருக்கை யீந்தான்.

இ - ள். பொன் நகரம் - அமராவதியை, தனி - ஒப்பற, புரக்கும் - அளிக்கப்பெற்ற, புரந்தரன்-இந்திரனென்பவன், நாரதமுனிவன்- நாரதமுனிவன், புகுதலோடும் - அடைந்தமாத்திரத்தில், முன்னர் - முற்பிறப்பில், இயற்றிய - (யான்) செய்த, தவத்தின் - தவத்தினாலே, எய்து - அடையவேண்டிய, பயன் - பிரயோசனம், இப்பிறப்பில் - இந்தப்பிறப்பில், முடிந்ததாம் என்று - முற்றுப்பெற்றதாமென்று, அன்ன முனிவரன் - அந்தநாரதமுனிவன், உவப்ப - மகிழ்ச்சியடைய, அருக்கிய பாத்தியம் முதலா - அருக்கிய பாத்திய முதலாக, அனைத்தும் - யாவையும், நல்கி - கொடுத்து, இன் அமுதம் - இனிய வமிர்தமானவை, உகுவனபோல் - சொரிவனபோல, இனிது - இனிதாக, உரைக்கும் - சொல்லுகின்ற, முகமனொடும் - உபசாரத்துடன், இருக்கை - ஆசனத்தை, ஈந்தான் - கொடுத்தான், எ - று.

க - து. தேவேந்திரன் நாரதன் வந்தமாத்திரத்தில் ஆசனங் கொடுத்தான் என்பதாம்.

உருகியுளங் களிசிறப்ப வாயிரங்கண் மலராலு மொருங்கு நோக்கி, யருமறையோ யிவணீங்கி நெடுங்கால மெவ் வுலகி லடைந்தா யென்னப், பொருவரிய தவமுனிவன் வானவர்கோன் முகநோக்கிப் புணரி சூழ்ந்த, விருநிலத்திற் கடவுணதிப் புனலாடி யித்துணநா ளிறந்த தென்றான்.

இ - ள். உருகி உளம் - மனமுருகி, களி சிறப்ப - களிப்புமிக, ஆயிரம் கண் மலராலும்-ஆயிரங்கண்களாகிய தாமரைமலர்களாலும், ஒருங்கு - ஒருமிக்க, நோக்கி - பார்த்து, அரு மறையோய் - நாரதமுனியே, இவண் நீங்கி - இவ்விடம்விட்டு, நெடு காலம் - நெடுநாளாக, எவ்வுலகில் - எந்தவுலகத்தில், அடைந்தாய் என்ன-போயினையென்று கேட்க, பொருவரிய - ஒப்பில்லாத, தவமுனிவன் - தவத்தையுடைய நாரதமுனிவன், வானவர்கோன் - இந்திரனுடைய, முகம்நோக்கி - முகத்தைப் பார்த்து, புணரி சூழ்ந்த-சமுத்திரஞ்சூழ்ந்த, இரு நிலத்தில் - பெரியபூமியினிடத்தில், கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, நதி புனல் ஆடி - நதிதீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து, இத்துணை

நாள் - இவ்வளவு நாள், இறந்தது என்றான் - கழிந்ததென்றான், எ - று.

க - து. தேவேந்திரன் நாரதரைப்பார்த்து இவ்வளவுநாளெங்கே போனீரென்று கேட்க, நாரதன் பூலோகத்திற் றீர்த்தமாடப் போனேனென்றான் என்மதாம்.

என்றுமுனி வரனுரைப்பக் கடல்புடைசூழ் நிலவலயத் திகல்வேன் மன்னர், துன்றுசமர் துறந்தனர்கொல் சுடர்க் கதிர்போழ்ந் தரமகளிர் துணைமென் கொங்கை, மன்றல் விழைந் திங்கெமக்கோர் நல்விருந்தாய் வரலொழிந்த வாறே தென்றான், குன்றினிருஞ் சிறையரிந்த சுடர்வயிரப் படை சுமந்த குவவுத் தோளான்.

இ - ள். என்று - இப்படியென்று, முனிவரன் - நாரதமுனிவன், உரைப்ப - சொல்ல, குன்றின் - பர்வதங்களுடைய, இரு - பெரிய, சிறை - இறகுகளை, அரிந்த - அறுத்த, சுடர் - பிரகாசம் பொருந்திய, வயிரப்படை - வச்சிராயுதத்தை, சுமந்த - தாங்கிய, குவவு - திரட்சிபொருந்திய, தோளான் - புயங்களை யுடையவனாகிய விந்திரன், கடல் புடை சூழ் - கடலாற் புடைசூழப்பட்ட, நிலவலயத்து - பூமண்டலத்தில், இகல் - போர்செய்கின்ற, வேல் - வேற்படையேந்திய, மன்னர் - அரசரானவர், துன்று - நெருங்கிய, சமர் - போரை, துறந்தனர்கொல் - விடுத்தனரோ; சுடர் கதிர்போழ்ந்து - சூரியமண்டலத்தைக் கிழித்துக்கொண்டு, அரமகளிர் - அரமங்கையருடைய, துணை - இரண்டாகிய, மெல் - மெல்லிய, கொங்கை - தனத்தினுடைய, மன்றல் - மணத்தை, விழைந்து - விரும்பி, இங்கு - இவ்விடத்தில், எமக்கு - எமக்கு, ஓர் - ஒப்பற்ற, நல்விருந்தாய் - நல்விருந்தாகி, வரல் - வருதலை, ஒழிந்தவாறு - நீங்கியவிதம், ஏது என்றான் - என்னகாரணமென்றான், எ - று.

க - து. இப்படி நாரதன் சொல்லத் தேவேந்திரன் உலகத்தரசர் சுவர்க்கத்தை விட்டார்களோ, வீரசொர்க்கத்துக்கு வாராதிருந்த வகையென்ன வென்றான் என்பதாம்.

புண்ணியத்தினாற் கிடைத்த சம்பத்துக் குறைவுபடாது சர்பாத்திரமாயிருந்து வளர்ப்பவராதலால் விருந்தென்றொழியாது 'நல்விருந்து' என்றார். பொய்சொல்வோனை யொருவருஞ் சேராததுபோல் பூலோகத்தில் அரசர்கள் போர்செய்து மனிததேகம் விடுத்துத் திவ்வியதேகம்பெற்று விருந்தாய் வாராமல் தன்னுடைய சம்பத்தைத்

தானே யனுபவித்தழிக்கும்படி நிற்றலால் 'வரலொழிந்தவாறேது' என்றான். தானே யனுபவித்தல் இன்னதென்பது "இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய,தாமே தமிய ருணல்" (திருவள்ளுவர்-ஈகை-க) இதனாலறிக. (கச)

கன்னல்கமு கெழில்காட்டுந் தண்பணைசூழ் விதர்ப்ப நகர் காவல் பூண்ட,மன்னனருந் தவப்பேற்றா னுலகில்வனப் பனைத்துமொரு வடிவ மாகி, யன்னநடை வாய்ந்துமதர் விழியெனவாண் முகத்தினிரண் டயில்வே றாங்கிப், பொன்னவிர் பூண் முலையென்னப் பொருப்பேந்தி யிருநிலத்திற் பொலிந்த தன்றே.

இ - ள். கன்னல் - கரும்புகளானவை, கமுகு - கமுகைப் போலும், எழில் காட்டும் - அழகுடையதாய்வளர்ந்து காட்டுகின்ற, தண் - தண்ணிய, பணைசூழ் - வயல்களாற் சூழப்பட்ட, விதர்ப்ப நகர் - விதர்ப்பதேசத்தை, காவல் பூண்ட-காக்குந்தொழிலை யடைந்த, மன்னன் - வீமராசனுடைய, அருந்தவப்பேற்றால்-அரிய தவப்பேற்றினாலே, உலகில் - உலகத்திலிருக்கின்ற, வனப்பு அனைத்தும்-அழகெல்லாம், ஒரு வடிவமாகி-ஒருருவாகி, அன்னம் நடை-அன்னத்தினடையை, வாய்ந்து - பொருந்தி, மதர்-மதர்த்த, விழி என-கண்களென்று சொல்லும்படி, வாள் - ஒளிபொருந்திய, முகத்தின் - முகத்தினிடத்திலே, இரண்டு அயில்வேல்-கூரிய விரண்டுவேற்படைகளை, தாங்கி-தாங்கிக்கொண்டு, பொன் - பொன்னினாற்செய்யப்பட்டு, அவிர் - பிரகாசிக்கின்ற, பூண் - ஆபரணங்களையணிந்த, முலை என்ன - தனங்களென்று சொல்லும்படி, பொருப்பு - (இரண்டு) மலைகளை, ஏந்தி - தாங்கி, இரு நிலத்தில் - பெரிய பூவுலகில், பொலிந்தது - பிரகாசித்தது, எ - று.

க - து. விதர்ப்பதேசத் தரசனாகிய வீமன்றவத்தால் உலகத்தழகெல்லா மொருவடிவாகித் தமயந்தி உதித்தாள் என்பதாம். (கரு)

ஆங்கவண்மேல் விழைவினராய் நின்னுலகிற் போகமுமின் னமிர்து மன்னாண், மாங்குயிலின் றீங்குதலை மொழிக்கிணையாச் சிறிதேனு மதிக்க கில்லார், பூங்கமல முகையனைய பொறிசுணங்கா ரிளமுலையின் பூசல் வேட்டு, வீங்கு தடம் புயமெலிய விளைத்திடும்வா ளமர்துறந்தார் வேந்த ரெல்லாம்.

இ - ள் ஆங்கு - அவ்விடத்தில், அவள்மேல் - அத்தமயந்தி யென்னுமாதின்மேல், விழைவினராய் - விருப்பையுடையவராகி, நின் உலகில் - உன்னுடைய வுலகத்தில், போகமும்-போகத்தையும், இன் அமிர்தும் - இனியவமிர்தத்தையும், அன்னாள் - அவளுடைய, மா குயிலின்-மாமரத்திலுள்ள குயிலின் மொழியையொத்த, தீ - மதுரம்பொருந்திய, குதலை மொழிக்கு-மழலைச் சொல்லுக்கு, இணையா - ஒப்பாக, சிறிதேனும் - அற்பமாயினும், மதிக்ககில்லார் - மதியாதவர்களாய், பூ-அழகிய, கமலம் முகை அனைய-தாமரை யரும்பையொத்த, பொறி - புள்ளிகள்போன்ற, சுணங்கு - தேமல், ஆர் - நிறைந்த, இள முலையின் - இளமை பொருந்திய தனங்களினுடைய, பூசல் - போரை, வேட்டு - விரும்பி, வீங்கு - பருத்த, தடம் - விசாலம் பொருந்திய, புயம் - தோள்கள், மெலிய - வாட, விளைத்திடும் - செய்கின்ற, வாள் அமர் - வாட்படையாற் செய்யும் போரை, வேந்தர் எல்லாம் - அரசர்யாரும், துறந்தார் - விட்டனர்கள், எ - று.

க - து. அரசர்கள் தமயந்தியின் கனதனப்போரை விரும்பி வாட்போரை விட்டார்கள் என்பதாம். (கசு)

அத்தகைய மடவரலோ ராண்டகையை யுளத்தமைத்
தா ளவளை யீன்ற, முத்தநெடுங் குடைவேந்த னிலவலய
மினிதளிக்கு முதல்வர்க் கெல்லா, முய்த்துணரச் சுயம்வர
மென் றோலைபோக் கினனதனை யுரைப்பா னெண்ணி,
யித்தலையெய் தினனென்றா னின்னிசைநூன் முழுதுணர்ந்த
யாழ்வல் லோனே.

இ - ள். அ தகைய - அப்படிப்பட்ட குணத்தையுடைய, மடவரல் - தமயந்தியானவள், ஓர் - ஒரு, ஆண் தகையை - ஆண்மகனிற் சிறந்தவனை, உளத்து - மனத்தின்கண், அமைத்தாள் - வைத்தாள்; அவளை ஈன்ற - அவளைப்பெற்ற, முத்தம் - முத்தினாற்செய்த, நெடு குடை - நெடிய குடையையுடைய, வேந்தன் - வீமராசனானவன், நிலவலயம் - பூமண்டலத்தை, இனிது - இனிதாக, அளிக்கும் - காக்கின்ற, முதல்வர்க்கு எல்லாம்-தலைமைபூண்ட அரசரனைவர்க்கும், உய்த்து - கருத்தைச்செலுத்தி, உணர-அறிய, சுயம்வரம் என்று - சுயம்வரநாளிந்நாளென்று, ஓலை போக்கினன்-எழுதப்பட்டவோலையைச் செலுத்தினான்; அதனை-அச்செய்தியை, உரைப்பான் - உரைக்கும்படிக்கு, எண்ணி - நினைந்து, இத்தலை - இவ்விடத்தில், எய்தினன் என்றான் - வந்தேனென்று சொன்னான், இன் இசை நூல் - இனியவிசைநூல், முழுது - முழுவதையும், உணர்ந்த - அறிந்த, யாழ் வல்லோன் - யாழில்வல்ல நாரதமுனிவன், எ - று.

க - து. அத்தமயந்தி நளனை யிச்சித்தாள், அவளைப் பெற்ற வீமன் உலகத் தரசர்க்கெல்லாம் சுயம்வரமென் றோலைவிட்டான். அதைச் சொல்லும்பொருட் டிங்குவந்தேன் என்பதாம்.

மனம் பரமாணு ரூபமாகையால் அதனுளடக்கிய புருடனை நாணால் அவளை வெளியிற் சொல்லாமையால் ஒருவருமறியாரென்றும், யோகியரும் அணுமாத்திரமன்றி அதனுள்ளறியாராகலால் அவராலும் அறியக்கூடாமையால் சந்தேகித்து வீமராசன் சுயம்வர நாட்டியவேலை போக்கினனென்றும் சொல்லினர். யாவராலும் அறியக்கூடாமை "அத்திமலரு மருங்காக்கை வெண்ணிறமும், கத்து புனன் மீன்பதமுங் கண்டாலும்-பித்தரே, கானார் செறியற் கடவுளருங் காண்பரோ, மானார் விழியார் மனம்" (விவேகசிந்தாமணி) என்றதனாற் காண்க. (௬௬)

விண்ணகத்தும் பெறற்கரிய விழுப்பொருளி பெற
வேண்டில் விரிநீர் சூழ்ந்த மண்ணகத்து வருதியென மக
பதிவாண் முகநோக்கி மகிழ்ந்து கூறிப் பண்ணமைந்த நின்
குதலைத் தமயந்தி சுயம்வரத்திற் பாரில் வேந்தர் நண்ணிய
மர் விளைப்பரது காண்குவலென் றாசிபல நவின்று போனான்.

இ - ள். விண் அகத்தும் - தேவருலகத்தும், பெறற்கு அரிய - பெறுதற்கருமையாகிய, விழு பொருள் - சிறப்புப்பொருளை, நீ பெற வேண்டில் - நீ பெறவிரும்பினையாயின், விரிநீர் சூழ்ந்த - கடலாற் சூழப்பட்ட, மண் அகத்து - பூவுலகத்தில், வருதி என - வருவாயென்று, மகபதி - இந்திரனுடைய, வாள் - ஒளிபொருந்திய, முகம் நோக்கி - முகத்தைப் பார்த்து, மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து, கூறி - சொல்லி, பண் அமைந்த - பண்பொருந்திய, நின் - சிறப்புள்ள, குதலை - மழலைச்சொல்லையுடைய, தமயந்தி - தமயந்தியினது, சுயம் வரத்தில் - சுயம்வரநாளில், பாரில் - பூமியிலிருக்கின்ற, வேந்தர் - அரசரானவர்கள், நண்ணி - அடைந்து, அமர் - போர்த்தொழிலை, விளைப்பர் - செய்வார்கள்; அது - அப்போரை, காண்குவல் என்று - பார்ப்பேனென்று, ஆசி பல - அனேக ஆசிர்வாதங்களை, நவின்று - சொல்லி, போனான் - (நாரதமுனிவன்) போயினான், எ - று.

க - து. விண்ணிற் பெறுதற்கரிய பொருளை மண்ணிற்பெற விரும்புவையாகில் வாவென்று வாழ்த்திப் போரைக்காண்பேனென்று நாரதன் போனான் என்பதாம். (௬௭)

அருந்தவனை கனுப்பிறைவ னடன்மாரன் பகழிபொர
வாற்றானாகிக், கருந்தடங்கட் டமயந்தி கதிர்முலையுந் வார்

காதுங் கழைமென் றோளு, முருந்தினிள முறுவலும்வாண்
முகமதியு முருவெளியாய் முன்னர்த் தோன்ற, வருந்தியயி
ராணிமுத லரம்பையர்பா லுறுநலனு மறந்தா னன்றே.

இ - ள். அருந்தவன் - நாரதமுனிவன், ஏகலும் - போனவளவில், இறைவன் - இந்திரனானவன், அடல் - வலிமைபொருந்திய, மாரன் - மன்மதனுடைய, பகழி - பாணங்கள், பொர - போர்செய்ய, ஆற்றானாகி - பொறுக்கமாட்டாதவனாய், கரு - கரிய, தடம் - விசாலம்பொருந்திய, கண் - கண்களையுடைய, தமயந்தி - தமயந்தியினுடைய, கதிர் முலையும் - காந்திபொருந்திய தனங்களும், வார் காதும் - நெடிய செவிகளும், கழை - மூங்கில்போன்ற, மெல் தோளும் - மெல்லியதோளும், முருந்து - மயிலிறகின் முதன்முள்போன்ற, முறுவலும் - பற்களும், வாள் - ஒளிபொருந்திய, முகம் மதியும் - முகமாகிய சந்திரனும், உருவெளியாய் - உருவெளித் தோற்றமாய், முன்னர் - எதிரே, தோன்ற - தெரிய, வருந்தி - வருத்தப்பட்டு, அயிராணிமுதல் - இந்திராணிமுதலாகிய, அரம்பையர்பால் - அரமகளிரிடத்தில், உறு - மிகுந்த, நலனும் - நலத்தையும், மறந்தான் - மறந்துவிட்டான், எ - று.

க - து. தேவேந்திரன் மன்மத பாணத்துக்குச் சகியாதவனாய்த் தமயந்தி யுருவெளியாகத் தோற்ற வருத்தப்பட் டிந்திராணி முதலியோ ரின்பங்களை மறந்தான் என்பதாம். (கக)

மண்ணுலகின் மடவரலை விழைந்தனனம் மிறைவ
னென வருந்தி மாழாந் தெண்ணினம தெழினலனு மிளமை
யுநன் றாயவென விகழ்ந்து கூறி, வெண்ணிலவு பொழிதரள
முறுவலயி ராணிமுதல் விண்ணில் வாழு மொண்ணுதன்மங்
கையர்மடநாண் மீதூர வோவியம்போன் றுணர்வு தீர்ந்தார்.

இ - ள். மண் உலகின் - பூவுலகத்தி லிருக்கின்ற, மடவரலை - ஒரு பெண்ணாகிய தமயந்தியை, விழைந்தனன் - விரும்பினான், நம் இறைவன் என - நம்முடைய அரசனென்று, வருந்தி - வருத்தப்பட்டு, மாழாந்து - மயக்கமடைந்து, எண்ணின் - எண்ணுமிடத்தில், நமது - நம்முடைய, எழில் நலனும் - அழகினுடைய நன்மையும், இளமையும் - இளமைப்பருவமும், நன்றாய என - நல்லவாயவென்று, இகழ்ந்து கூறி - பழித்துச்சொல்லி, வெள் - வெள்ளிய, நிலவு - பிரகாசத்தை, பொழி - பொழிகின்ற, தரளம் - முத்துக்களையொத்த, முறுவல் - பற்களையுடைய, அயிராணிமுதல் - இந்திராணி முதலாகிய, விண்ணில் வாழும் - தெய்வலோகத்தில் வாழ்கின்ற, ஒள் - ஒள்ளிய, நுதல் - நெற்றியையுடைய, மங்கையர் - மாதர்கள், மடம் - அறியாமையும், நாண் - நாணும், மீதூர - அதிகரிக்க, ஓவியம் போன்று - சித்திரத்தையொத்து, உணர்வு தீர்ந்தார் - அறிவுநீங்கினார்கள், எ - று.

க - து. இந்திராணி முதலான மங்கையர்கள் நமதரசன் தமயந்தியை இச்சித்தானென்று சித்திரத்தையொத் தறிவிழந்தார்கள் என்பதாம்.

அயிராணி முதல் விண் மாதரென்றமையால் அச்சபையிலிருந்த மேனகை, உருப்பசி, திலோத்தமை, அரம்பை முதலிய தெய்வமங்கையராம். இவர்கள் அழகு முதலியவற்றில் மிக்கவரென்று மதித்திருந்த தம்மைத்தாமே வெறுத்துக்கொண்டு மானமுடையவராகையால் புறத்திற் சொல்லாமல் சித்திரம்போல அசைவற் றிருந்தனரென்க. [ஓவியம்போ லென்றமையால் உவமையணி.] (உ0)

மதர்நெடுங்க ணரமகளி ரிவ்வாறு துயருழப்ப மனத்தி னோராத், தகைமலர்க்கற் பகநறுந்தார் மணிமார்பன் றுயர்கூர்ந்து தருமன் வெய்ய, கதழெரிப்புத் தேள்வருணனுடனேகக் கொடிஞ்சியந்தேர் கடிதிற் றூண்டி, யதிரு நெடுந் திரையாழி சூழ்புவியி னொல்லையில்வந் தடைந்தான் மன்னோ.

இ - ள். மதர் - மதர்த்த, நெடு கண் - நெடியகண்களையுடைய, அரமகளிர் - அரம்பையரானவர்கள், இவ்வாறு - இந்தப்பிரகாரம், துயர் உழப்ப - துன்பப்பட, மனத்தின் - மனத்தினிடத்திலே, ஓரா - எண்ணாமல், தகை - நெருங்கிய, மலர் - மலரையுடைய, கற்பக நறு தார் - நறியகற்பகமலர்மாலையணிந்த, மணிமார்பன் - அழகியமார்பையுடைய இந்திரன், துயர் கூர்ந்து - துயரமிகுந்து, தருமன் - யமனும், வெய்ய - வெவ்விய, கதழ் - வேகம் பொருந்திய, எரி புத்தேள் - அக்கினிதேவனும், வருணன் - வருணனும், உடன் ஏக-உடனுசெல்ல, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, அம் - அழகிய, தேர் - இரதத்தை, கடிதில் - சீக்கிரத்திலே, தூண்டி - செலுத்தி, அதிரும் - அதிர்கின்ற, நெடு திரை - நெடிய அலைகளையுடைய, ஆழி சூழ் - கடலாற் சூழப்பட்ட, புவியின் - பூவுலகில், ஒல்லையில்-விரைவில், வந்து அடைந்தான் - வந்து சேர்ந்தான், எ - று. மன் - ஓ - அசைகள்.

க - து. இந்திரன் அரம்பையர் முதலானவர்கள் துன்பப்படுதலை யறியாமல் துன்பப்பட்டு யமன், அக்கினிதேவன், வருணன் இவர்களுடன் தேரிலேறிப் பூமியில் வந்தான் என்பதாம்.

இந்திரப்படல முற்றுப்பெற்றது.

# நளன் தூதுப்படலம்.

[இப்படலத்தால் இந்திரன் முதலிய நால்வர்பொருட்டுத் தமயந்தியினிடத்து நளன் தூதுசென்றமை சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

அண்டருல கத்திறைவ னவ்வழி யிருப்ப
மண்டுபுனல் வாளைவளர் பூகமடல் கீறுந்
தண்டலை யுடுத்தநிட தந்தனி புரக்கு
மொண்டிற லுடைக்குரிசில் செய்திற முரைப்பாம்.

இ-ள். அண்டர் உலகத்து-தேவருலகத்தையாளுகின்ற, இறைவன் - இந்திரன், அவ்வழி - அவ்விடத்தில், இறுப்ப - தங்க, மண்டு-நெருங்கிய, புனல் - நீரிலிருக்கின்ற, வாளை - வாளைமீன்களானவை, வளர் - வளர்கின்ற, பூகம் - கமுகினுடைய, மடல் - பாளைகளை, கீறும் - கிழிக்கின்ற, தண்டலை - சோலைகளை, உடுத்த - உடுக்கப்பெற்ற, நிடதம் - நிடதேசத்தை, தனி - ஒப்பற, புரக்கும் - காக்கின்ற, ஒள் - ஒள்ளிய, திறலுடை - வலிமையையுடைய, குரிசில் - நளமகாராசன், செய்திறம்-செய்தகாரியத்தை, உரைப்பாம் - (யாம்) சொல்லுவோம், எ - று.

க - து. தேவேந்திர னவ்விடத்திருக்க நளன் செய்கையைச் சொல்லுவாம் என்பதாம்.

அன்னமுரை செய்தவெழி லாயிழையை நெஞ்சத்
துன்னியயர் வோடுமுயி ருண்டிலைகொ லென்னக்
கன்னன்மத னைங்கணை கருத்திடை குளிப்ப
மன்னவர்கண் மன்னன்மதி மாழ்கியயர் காலை.

இ - ள். அன்னம் - அன்னப்புள்ளானது, உரைசெய்த-சொல்லிய, எழில் - அழகிய, ஆயிழையை - தமயந்தியை, நெஞ்சத்து - மனத்தினிடத்து, உன்னி - நினைந்து, அயர்வோடும் - சோர்வுடனே, உயிர்-உயிரானது, உண்டு இலை கொல் என்ன-உண்டோவில்லையோ வென்று சொல்ல, கன்னல் - கருப்புவில்லேந்திய, மதன் - மன்மதனுடைய, ஐங்கணை - பஞ்சபாணங்களும், கருத்திடை - கருத்தினி

டத்து, குளிப்ப - தைக்க, மன்னவர்கள் மன்னன் - அரசர்க் கரசனா கிய நளனானவன், மதி மாழ்கி - அறிவுமயங்கி, அயர் காலே - துன்பப் படுஞ் சமயத்தில், எ - று.

க - து. நளன் தமயந்தியை நினைந்து வருத்தப்படுங்காலத்தில் என்பதாம்.

மன்மதபாணம் பிரயோகிக்குமிடம் வெவ்வேறு யுளதேனும் துன்பப்படுவது கருத்தொன்றே யாதலால் கருத்திடை குளிப்ப வென்றார். "நெஞ்சி லரவிந்த நீள்சூதங் கொங்கையின்மே-லஞ்சுஞ் விழியி லசோகமாம் - வஞ்சியரே, சென்னிமிசை முல்லை திகழ்ந்தில மல்குலிலே, யின்னிலேவே ளெய்வா னிசை." (அரதனச்சுருக்கம்) இதனால் அவ்விடங்கள் காண்க. (உ)

பூகமடல் கீறியிள வாளைபுனல் காலு
மேகமிசை தாவிடும் விதர்ப்பநகர் மன்ன
னோகையொ டளித்தவுயி ரோவிய நிகர்க்குந்
தோகைமண வோலைகொடு தூதுவ ரடைந்தார்.

இ - ள். பூகம் மடல் - கமுகம்பாளையை, கீறி - கிழித்து, இள வாளை-இளமைபொருந்திய வாளைமீன்களானவை, புனல் காலும் - நீரைச் சொரிகின்ற, மேகமிசை - மேகத்தின்மீது, தாவிடும் - தாவு கின்ற, விதர்ப்பநகர் - விதர்ப்பதேசத்தை யாளுகின்ற, மன்னன் - வீமராசனானவன், ஓகையொடு - மகிழ்ச்சியுடனே, அளித்த - பெற்ற, உயிர் - உயிரையுடைய, ஓவியம் - சித்திரப்பாவையை, நிகர்க்கும் - ஒப்பாயிருக்கின்ற, தோகை - தமயந்தியினுடைய, மணவோலை கொடு-கலியாண வோலையைக்கொண்டு, தூதுவர்-தூதர்கள், அடை ந்தார் - சேர்ந்தார்கள், எ - று.

க - து. தூதர்கள் தமயந்தி கலியாண வோலையைக் கொண்டு வந்தார்கள் என்பதாம்.

தோகை உவமையாகுபெயர். (ந)

மூடங்கலின் வரைந்தவுரை முற்றுமுணரா முன்
றிடம்புயம் வளர்ந்தன வரைக்குவமை சாலக்
குடங்கையி னகன்றவிழி கோகனக செல்வன்
மடங்கலனை யானுள மகிழ்ச்சியொ டெழுந்தான்.

இ - ள். மூடங்கலின் - ஓலைச்சுருளில், வரைந்த - எழுதப்பட்ட, உரை - சொல்லுகளை, முற்றும் - முழுவதும், உணராமுன் - அறியா

முன்னே, தடம் - பெரிய, புயம் - தோள்களானவை, வரைக்கு - பர்வதங்களுக்கு, உவமைசால - உவமைபொருந்த, வளர்ந்தன - பருத்தன; குடங்கையின் - உள்ளங்கைபோல, அகன்ற - பரந்த, விழி - கண்களையுடைய தமயந்தியினது, கோநகரி - குண்டினபுரத்துக்கு, செல்வான்-செல்லும்பொருட்டு, மடங்கல் அனையான்-சிங்க வேற்றினையொத்த நளமகாராசன், உளம் மகிழ்ச்சியொடு - மனக்களிப்புடனே, எழுந்தான் - எழுந்தனன், எ - று.

க - து. நளன் திருமணவேலையின் செய்தி யறியாமுன் புயங்கள் பூரித்தன, விதர்ப்பதேசத்துக்குச் செல்லும்பொருட் டெழுந்தான் என்பதாம். (௪)

கொய்யுளை வயப்புரவி கோடியுழை போத
மையன்மத வாரண மருங்குற நெருங்க
வெய்யதிறல் வாளுழவர் வேலைபுடை சூழ
மொய்திரை யளக்கரி னியம்பல முழங்க.

இ - ள். கொய் - கொய்துகட்டிய, உளை - புறமயிரையுடைய, வயம் - வலிமைபொருந்திய, புரவி கோடி - கோடி குதிரைகள், உழைபோத - பக்கங்களிலே வரவும், மையல் - மயக்கம்பொருந்திய, மதவாரணம் - மதயானைகள், மருங்குற - பக்கத்திலே, நெருங்க-மிக நெருங்கிவரவும், வெய்ய - வெவ்விய, திறல் - வலிமைபொருந்திய, வாள்-வாட்படையையுடைய, உழவர் வேலை - காலாள்களாகிய கடலானது, புடைசூழ - பக்கங்களிலே சூழ்ந்துவரவும், மொய் - மொய்க்கப்பெற்ற, திரை - அலைகளையுடைய, அளக்கரின் - கடல்போல, இயம் பல - பலவாத்தியங்கள், முழங்க - ஒலிக்கவும், எ - று.

க - து. கோடிகுதிரைகள் சூழ, யானைகள் நெருங்க, சுத்தவீரர்கள் சூழ, கடல்போல வாத்திய முழங்க என்பதாம்.

இப்பாட்டில் போதவென்பது முதலிய வினையெச்சங்கள் பின்பாட்டில் போனானென்னு முற்றுவினையைக்கொண்டு முடிந்தன(௫)

விரிகதி ரெறிக்குமதி வெண்குடை நிழற்றத்
தரளநகை மாதர்பலர் சாமரை யிரட்ட
வெரிமணி யிமைக்குமுடி மன்னவ ரிறைஞ்சத்
திருவளரு மார்பனுயர் தேரின்மிசை போனான்.

இ - ள். விரி - விரியப்பெற்ற, கதிர் - கிரணங்களை, எறிக்கும் - வீசுகின்ற, மதி - சந்திரனையொத்த, வெண்குடை - வெள்ளியகுடை

கள், நிழற்ற - நிழலைச்செய்யவும், தரளம் - முத்தினையொத்த, நகை - பற்களையுடைய, மாதர் பலர்-அனேக மகளிர்கள், சாமரை யிரட்ட - கவரிகள் வீசவும், எரி மணி - காந்தியையுடைய மணிகள், இமைக்கும் - பிரகாசிக்கின்ற, முடி - மகுடத்தையுடைய, மன்னவர் - அரசர்கள், இறைஞ்ச - வணங்கவும், திரு - திருமாதானவள், வளரும் - வளர்கின்ற, மார்பன் - மார்பை யுடையவனாகிய நளமகாராசன், உயர் - உயர்ந்த, தேரின்மிசை - தேரின்மேல், போனான் - போயினான், எ - று.

க - து. வெண்குடை பிடிக்க, பெண்கள் சாமரைவீச, மன்னவர் வணங்க நளன் தேர்மேற் சென்றான் என்பதாம். (சு)

தேர்நடவு கம்பலை செவிப்புகுத லோடும்
வார்கடன் முழக்கொலி கொலோமழை முழக்கோ
சார்வதென வையமுறும் வானவர்க டம்மு
னேர்கெழுமு மாடநிட தத்திறை யெதிர்ந்தான்.

இ - ள். தேர் - தேரை, நடவு - செலுத்துகின்ற, கம்பலை - ஒலியானது, செவி - காதினிடத்து, புகுதலோடும் - நுழைந்தமாத்திரத்தில், வார் - நெடிய, கடல் முழக்கு ஒலி கொலோ - கடலொலியோ, மழை முழக்கோ - மேகத்தினொலியோ, சார்வது என - அடைவதென்று, ஐயம் உறும்-ஐயமடைகின்ற, வானவர்கள் முன் - தேவர்களுக்குமுன்னே, ஏர் - அழகானது, கெழுமு - பொருந்திய, மாடம்- மாளிகைகளையுடைய, நிடதத்து இறை - நிடதேசத்தரசன், எதிர்ந்தான் - எதிர்ப்பட்டான், எ - று. கொல்-ஐயப்பொருள்.

க - து. நளன் தேவர்களுக்கு முன்சென்றான் என்பதாம். (எ)

வேறு.

பொற்றடந் தேர்மிசைப் பொலிந்து தோன்றிய
மற்றடந் தோளினன் வனப்பு நோக்கினா
ருற்றதோர் வியப்பினுக் குள்ள மீந்து தாம்
வெற்றுடம் பாயினர் விண்ணு ளோரெலாம்.

இ - ள். பொன் - அழகிய, தடம் - பெரிய, தேர்மிசை - தேரின்மீது, பொலிந்து - பிரகாசித்து, தோன்றிய - வந்த, மல் - மற்போர் செய்கின்ற, தடம் - பெரிய, தோளினன் - தோள்களையுடைய நளமகாராசனது, வனப்பு - அழகை, நோக்கினார் - பார்த்தார், உற்றது - அதனாலடைந்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, வியப்பி

னுக்கு-ஆச்சரியத்துக்கு, உள்ளம் ஈந்து - மனத்தைக்கொடுத்து, விண்ணுளோர் எல்லாம் - இந்திரன்முதலிய நால்வரும், வெற்றுடப்பு ஆயினர் - உயிர்நீங்கிய வுடம்புபோலானார், எ - று.

க - து. இந்திரன் முதலானவர்கள் தேரின்மேலேறிய நளனழகைக் கண்டு மனதை நளனிடத்திற் செலுத்தி வெறிய வுடம்பினரானார்கள் என்பதாம்.

ஆச்சரியத்தால் அபகரிக்கப்பட்ட மனத்தை யுடையவராயினரென்பது கருத்து. (அ)

மாயிரு ஞாலத்து வந்து மன்னர்கோ
னேயபே ரழுகுகண் டிமைப்பி லாட்டமோ
ராயிரம் பெற்றபே றடைந்து ளேனெனச்
சேயுயர் விசும்பினுக் கிறைவன் செப்பினான்.

இ - ள். மா - மகத்தாகிய, இரு - பெரிய, ஞாலத்து வந்து - பூமியில் வந்து, மன்னர் கோன் - நளனுடைய, ஏய - பொருந்திய, பேர் அழகு - பெரிய அழகினை, கண்டு-பார்த்து, இமைப்பில்-இமைத்தலில்லாத, நாட்டம் ஓர் ஆயிரம் - ஆயிரங் கண்களை, பெற்ற பேறு - பெற்றபேற்றினை, அடைந்துளேன் என - இன்று அடையப்பெற்றேனென்று, சேய் - தூரமாக, உயர்-உயர்ந்த, விசும்பினுக்குஇறைவன்-சுவர்க்கத்துக்கரசனாகிய இந்திரன், செப்பினான்-சொல்லினான், எ-று.

க - து. இந்திரன் பூமியில்வந்து நளனழகைக்கண்டு தான் ஆயிரங்கண் பெற்றதற்கு இன்று பயன் பெற்றேனென்றான் என்பதாம்.

இப்படிப்பட்ட அழகுள்ள புருஷனைக் கண்டதில்லை யென்பது கருத்து. (கூ)

மண்டமர் கடந்தவேன் மன்னர் மன்னனைக்
கண்டுமற் றொருவர்தோள் காமுற் றீர்ந்தொடை
தொண்டைவாய் மடமயில் சூட்டு மோவெனாத்
தெண்டிரைக் கனைகடற் செல்வன் கூறினான்.

இ - ள். மண்டு - நெருங்கிய, அமர் - போரை, கடந்த - செயித்த, வேல் - வேற்படையையுடைய, மன்னர்மன்னனை - நளனை, கண்டு - பார்த்து, மற்று ஒருவர் தோள் - வேறொருத்தர் புயங்களை, காமுற்று - ஆசைப்பட்டு, தொண்டை - கோவைக்கனிபோன்ற, வாய் - வாயையுடைய, மடமயில் - தமயந்தியானவள், ஈர்ந்தொடை-குளிர்ச்சிபொருந்திய மாலையை, சூட்டுமோ எனா - தரிப்பாளோவென்று, தெள் - தெள்ளிய, திரை - அலைகளையுடைய, கனை -

ஒலிக்கின்ற கடல் செல்வன் - கடலுக் கரசனாகிய வருணன், கூறினான் - சொல்லினான், எ - று.

க - து. நளனைக்கண்ட தமயந்தியானவள் வேறொருவனுக்கு மாலையிடுவாளோ வென்று சமுத்திரராஜன் சொன்னான் என்பதாம்.

தொண்டை முதலாகுபெயர். (௪௦)

> பாந்தண்மேற் கிடந்தபார் பரிக்குந் திண்டிறல்
> வேந்தனுக் கேதொடை வேய்ந்தி லாளெனி
> லேந்திழை யெழினல மென்கொ லாமெனக்
> காந்துவெங் கதழெரிக் கடவுள் சாற்றினான்.

இ - ள். பாந்தள் மேல் - ஆதிசேடன்மீது, கிடந்த - இருந்த, பார் - பூமியை, பரிக்கும் - சுமக்கின்ற, திண் - திண்ணிய, திறல் - சௌரியத்தையுடைய, வேந்தனுக்கே-நளமகாராசனுக்கே, தொடை-மாலையை, வேய்ந்திலாள் எனில்-சூட்டாளேயானால், ஏந்து இழை தமயந்தியினுடைய, எழில் - அழகினது, நலம் - நன்மை, என்கொலாம் என - என்ன பிரயோசனமாகுமென்று, காந்து - காந்துகின்ற, வெம் - வெவ்விய, கதழ் - வேகத்தையுடைய, எரி கடவுள் - அக்கினிதேவன், சாற்றினான் - சொல்லினான், எ - று. கொல்-அசைநிலை.

க - து. நளனுக்குத் தமயந்தி மாலையிடாளேயானால் இத்தமயந்தி யழகு என்ன பயன்படுமென் றக்கினிதேவன் சொன்னான் என்பதாம். (௪௧)

> கழைசுளி புகர்முகக் களிநல் யானையா
> னிழைசுட ரெறிப்பவந் திறுத்த தேந்திழை
> விழவினுக் காயின்யா மீண்டு போதலே
> யழகிதென் றந்தக னறைந்திட் டானரோ.

இ - ள். கழை - கரும்புகளை, சுளி - முறிக்கின்ற, புகர்முகம் - புள்ளிபெற்ற முகத்தையுடைய, களி - களிப்புப்பொருந்திய, நல் - நல்ல, யானையான் - யானையையுடைய நளமகாராசன், இழை - ஆபரணங்கள், சுடர் - காந்தியை, எறிப்ப - வீச, வந்து இறுத்தது - வந்து தங்கியது, ஏந்திழை - தமயந்தியினுடைய, விழவினுக்கு ஆயின் - விவாகத்துக்கானால், யாம்-நாம், மீண்டு போதலே - திரும்பிச் செல்லுதலே, அழகிது என்று - அழகுடையதென்று, அந்தகன் - யமனானவன், அறைந்திட்டான்-சொல்லினான், எ - று.

க - து நளன் தமயந்திக்கு நாயகனானால் நாம் மீண்டுபோதலுத்தமமென்று யமன் சொன்னான் என்பதாம். (௪௨)

போர்த்தொழில் வயிரவாட் பொருவி லண்ணல்செந்
தார்ப்பசுங் கிளியனு டார்பெ றுதுபோய்க்
கார்க்குழ லரம்பையர் கமல வாண்முகம்
பார்ப்பதெவ் வாறெனப் பரிவிற் கூறினான்.

இ - ள். போர் - போர்செய்கின்ற, தொழில் - தொழிலையுடைய, வயிரவாள் - வச்சிராயுதமேந்திய, பொருவில் - ஒப்பில்லாத, அண்ணல் - இந்திரனானவன், செம் - சிவந்த, தார் - ரேகையையுடைய, பசும் - பசுமைபொருந்திய, கிளி அனாள் - கிளியை நிகர்த்தவளாகிய தமயந்தியினுடைய, தார் - மாலையை, பெறாது - பெற்றுக்கொள்ளாமல், போய் - சென்று, கார் - கரிய, குழல் - கூந்தலையுடைய, அரம்பையர் - அரமாதருடைய, கமலம் - தாமரைமலர்போன்ற, வாள் - ஒளிபொருந்திய, முகம் - முகத்தை, பார்ப்பது - நோக்குவது, எவ்வாறு எனா - எவ்வாறென்று, பரிவில் - துன்பத்தினால், கூறினான் - சொல்லினான், எ - று.

க - து. இந்திரன் தமயந்தி மாலையைப் பெறாதுபோய் அரம்பை முதலியோர் முகத்தை எப்படிப் பார்ப்பதென்று சொன்னான் என்பதாம்.

சந்தேகத்தா லிந்திரனிவ்வாறு கூறினான். (கக)

அரத்தமுண் டொளிரும்வா ளவுணர்ச் செற்றுநந்
திருத்தகு செல்வமுஞ் சிறப்பு நல்கிய
விரைத்துணா ரலங்கலான் வீர சேனன்போன்
றிருத்தலா லிவனள னென்ன வேண்டுமால்.

இ - ள். அரத்தம் - உதிரத்தை, உண்டு - பாணம்பண்ணி, ஒளிரும் - பிரகாசிக்கின்ற, வாள் - வாட்படையையுடைய, அவுணர் - அசுரர்களை, செற்று - கொன்று, நம் - நம்முடைய, திருத்தகு - திருவிற்குத்தக்க, செல்வமும் - செல்வத்தையும், சிறப்பும் - சிறப்பையும், நல்கிய - கொடுத்த, விரை - வாசனைபொருந்திய, துணர் - பூங்கொத்துகளையுடைய, அலங்கலான் - மாலையையுடையவனாகிய, வீர சேனன்போன்று - வீரசேனராஜனையொத்தவனாகி, இருத்தலால் - இருந்திடலால், இவன் - இவனை, நளன் என்னவேண்டும் - நளமகாராசனென்று சொல்லவேண்டும், எ - று.

க - து. அசுரர்களைக்கொன்று நமது செல்வத்தைக் கொடுத்த வீரசேனனை ஒத்திருத்தலால் இவன் அவன் மகனாகிய நளனெனச் சொல்லவேண்டுமென்று னிந்திரன் என்பதாம்.

மிகுந்த வலிமையுடையரென்பது தோன்ற 'அரத்தமுண்டொளி ரும் வாளவுணர்' என்றும், அவர்களால் முழுவது மிழந்தமைதோன் றத் 'திருத்தகு செல்வமுஞ் சிறப்பு நல்கிய' என்றும், வெற்றிமாலை யணிந்தோனென்பது தோன்ற 'விரைத்துண ரலங்கலான்' என்றும் சொல்லினர். முன்னொருகாலத்திலே தன்னைப்புறங்கண்ட அசுரர் களைவென்று தெய்வலோகத்தை நிலைநிறுத்தி இழந்த செல்வத்தை யுஞ் சிறப்பையுந்தந்த வீரசேனனைப்போலுதலால் அவன் குமாரனா கிய நளனென்று இந்திரன் நிச்சயித்தான். தந்தைபோலும் புதல்வ ரென்பது "செந்நெலா லாய செழுமுளை மற்றும்-செந்நெலே யாகி விளைதலா-லந்நெல், வயனிறையக் காய்க்கும் வளவய லூர, மகனறிவு தந்தை யறிவு" (நாலடியார்-பன்னெறி-எ) இதனாற்காண்க. (கச)

சேற்றிதழ்த் தாமரை மலரத் தெண்கட
றோற்றுசெங் கதிரெனத் தோன்று நின்னையா
மேற்றநல் லோரையி லெழுந்த தாலன்றோ
வாற்றெதிர்ப் பட்டன மலங்கல் வேலினாய்.

இ - ள். அலங்கல் - வெற்றிமாலையணிந்த, வேலினாய் - வேற் படையேந்திய நளமகாராசனே, சேறு - சேற்றிலிருக்கின்ற, இதழ் - இதழ்களையுடைய, தாமரை - தாமரைகள், மலர - விகசிக்க, தெள் - தெள்ளிய, கடல் - கடலினிடத்து, தோற்று - தோன்றுகின்ற, செம் கதிர் என - சூரியனைப்போல, தோன்று நின்னை - வந்தவுன்னை, யாம் - யாங்கள், ஏற்ற - தக்க, நல் - நல்ல, ஓரையில் - இராசியில், எழுந்த தால் அன்றோ - புறப்பட்டபடியாலல்லவா, ஆறு - வழியில், எதிர்ப் பட்டனம் - எதிர்ப்பட்டோம், எ - று.

க - து. சூரியன்போலத் தோற்று முன்னை நல்ல இலக்கினத் திற் புறப்பட்டபடியால் வழியிற் கண்டனமென்றார்கள் என்பதாம்.

ஓரை - இராசி. "ஓரையே மாதர்கூடி விளையாட லுடனிராசி" என்பதனாலறிக. [உவமையணி.] (கரு)

இவனழற் கடவுண்மற் றிவன்வெங் கூற்றுவ
னுவனெறி கடற்கிறை யொழிந்து நின்றயான்
கவனவாம் பரியுள முணருங் காவல
வவிரொளி மணிமுடி யமரர் வேந்தனே.

இ - ள். கவனம் - வேகத்தையுடைய, வாம் - தாவுகின்ற, பரி உளம் - குதிரையினுடைய கருத்தை, உணரும் காவல - அறியும் நள மகாராசனே, இவன் அழல் கடவுள் - இவனக்கினிதேவன், இவன்

வெம் கூற்றுவன் - இவன் வெப்பம் பொருந்திய யமன், உவன் - அவன், எறி கடற்கு இறை-அலையை வீசுகின்ற கடற்கரசனுகிய வருணன், ஒழிந்துநின்ற - இவரொழியநின்ற, யான் - யானேவெனில், அவிர் - பிரகாசிக்கின்ற, ஒளி - காந்தியையுடைய, மணி - மணிகளா லிழைக்கப்பட்ட, முடி-கிரீடத்தையுடைய, அமரர் வேந்தன்-தேவர்க் கரசனுகிய விந்திரன், எ - று.

க - து. குதிரைக் கருத்தை யறியு நளராஜனே, இவன் அக்கினிதேவன், இவன் யமன், இவன் வருணராஜன், யான் இந்திரன் என்றான் என்பதாம்.

ஒழிந்தென்னும் செய்தெனெச்சம் செயவெனெச்சப் பொருளில் வந்தது. (கசு)

உன்னுழை வேண்டுவ தொன்றுண் டாங்கது
பின்னர்யாங் கூறுது மென்று பெட்புறும்
பொன்னகர்க் கிறையவ னிருந்த போதினின்
மன்னவ னவரடி வணங்கி னனரோ.

இ - ள். உன்னுழை - உன்னிடத்தில், வேண்டுவது - யாம் விரும்புவது, ஒன்றுண்டு - ஒருகாரியமுண்டு, அது-அதனை, பின்னர்-பின்பு, யாம் கூறுதும் என்று - யாம் சொல்லுவேமென்று, பெட்பு உறும்-விருப்பமடைந்த, பொன்னகர்க்கு இறையவன் - இந்திரனை வன், இருந்தபோதினில் - இருந்தபொழுதில், மன்னவன் - நளமகாராஜன், அவர் அடி - இந்திரன் முதலிய அந்நால்வர் பாதங்களையும், வணங்கினன் - வணங்குதல் செய்தான், எ - று.

க - து. உன்னிடத்தில் வேண்டுவ தொன்றுண்டு, அதைப்பின்னே சொல்வேமென் றிந்திரன் சொல்ல நளன் இந்திரன் முதலியோரை வணங்கினன் என்பதாம். (கஎ)

[இனி ஆறுபாட்டால் நளனுடைய சிந்திப்புச் சொல்லப்படுகின்றது.]

உண்ணெகிழ்ந் திறைஞ்சிய வுலங்கொ டோளினன்
விண்ணுல காள்பவர்க் கரிய மெய்ம்பொருள்
மண்ணுல காள்பவர் மாட்டு வைகுமோ
வெண்ணின்மற் றிவருளம் யாதுகொ லோ.

இ - ள். உள் - உள்ளம், நெகிழ்ந்து - குழைந்து, இறைஞ்சிய-வணங்கிய, உலம்கொள்-திரள்கல்லினுடைய வலிமையைக்கொண்ட, தோளினன் - தோள்களையுடைய நளமகாராசன், விண்ணுலகு ஆள்

பவர்க்கு - தெய்வலோகத்தை யாளுகின்றவர்க்கு, அரிய - அருமை யாகிய, மேம்பொருள் - மேன்மைப்பட்டபொருள், மண்ணுலகு ஆள்பவர் மாட்டு - மண்ணுலகாள்பவரிடத்து, வைகுமோ - இருக்குமோ; எண்ணில் - எண்ணுமிடத்தில், இவர் உளம் - இவருடைய மனம், யாவது ஆம் - யாதாகுமோ, எ - று. கொல் - ஐயம், ஓ-அசை.

க-து. அவ்வாறு வணங்கிய நளன் விண்ணாட்டரசர்க்கு அரிய பொருள் மண்ணாட்டரசர்க்குக் கிடைக்குமோ, இவர் கருத்தென்னவோ என்றான் என்பதாம்.

மண்ணுலகத்தோர் வருந்தித் தவஞ்செய்து பெறற்குரியது பொன்னுலகம், அதனை யாளுகின்ற தலைமைபெற்ற இந்திரனுக்கும் அரிய பொருளுண்டோ, ஆயின் அது நம்பாலுளதாகுமோ, ஆதலின் இஃதியாதோவென ஐயுற்றனனென்க. மண்ணுல கென்றதனால் விண்ணுலகைப் பொன்னுலகெனக் கொள்ளப்பட்டது. (கஅ)

குறிப்பறிந் தீதலே கொடைமற் றின்றென
மறுத்தலே கேட்டபின் வழங்க லாதலிற்
பெறற்கரு மாவியும் பெட்பி னீகுவன்
றிறப்பட விவருளந் தெரிந்த தில்லையால்.

இ-ள். குறிப்பு அறிந்து-ஒருவர் குறிப்பினைத்தெரிந்து, ஈதலே-கொடுத்தலே, கொடை - கொடுத்தலாகும்; கேட்டபின் - கேட்டபின்பு, வழங்கல் - கொடுத்தல், இன்று என - இல்லையென்று, மறுத்தலே-தடுத்தலேயாகும்; ஆதலின்-ஆகையினாலே, பெறற்கு அரும் - பெறுதற்கரிய, ஆவியும் - உயிரையும், பெட்பின் - அன்பினாலே, ஈகுவன் - கொடுப்பேன்; திறப்பட - நிச்சயமாக, இவர் உளம் - இவருடைய மனம், தெரிந்தது இல்லை-தெரியவில்லை, எ-று. ஆல்-அசை.

க - து. குறிப்பறிந்து கொடுத்தலே கொடையாகும், கேட்டபின் கொடுத்தல் மறுத்தலாகும்; ஆகையால் என்னுயிரையுங் கொடுப்பேன் உண்மையாக இவருள்ளத்தை யறிந்திலேன் என்றான் என்பதாம்.

உம்மை உயர்வு சிறப்பு. குறிப்பறிதலாவது - தன்னிடத்தொன்றை விரும்பி வருபவனது முகக்குறிகளா லவன் கருத்தை யறிதல். அது "உயிர்க்கொலை புரிந்தவர் முகக்குறி யுரைக்கும்" (அரிச்சந்திர சரித்திரம்) என்பதனாலறிக. அஃதறிந்தீதலாவது "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள" (திருவள்ளுவர்-ஈகை-௩) இதனாலறிக. கேட்குமிடத் துண்டாம் மானமிழத்

தல் அச்சப்படுதல் முதலிய வருத்தம் இல்லையென்னும்போ துண்டா கும் வருத்தத்தோ டொப்பாதலின் 'இன்றெனை மறுத்தலே கேட்ட பின் வழங்கல்' என்றார். கொடுக்கும் பொருளின் முடிவாகிய ஆவி யெனினும் அன்போடு கொடுப்பே னென்றதாம். (௧௧)

ஒளிமுக மிழப்பவந் துற்ற நாணமீக்
கிளர்தர வில்லெனக் கிளக்கு மூர்ச்சனை
தெளிதர முகத்தினிற் றெளித்தற் கன்றுகொல்
நளிபுனல் பொருளொடு நல்கு கின்றதே.

இ - ள். முகம் - முகமானது, ஒளி இழப்ப - ஒளி நீங்க, வந்து- வந்து, உற்ற - மிகுந்த, நாணம் - நாணமானது, மீக்கிளர்தர - அதி கரிக்க, இல்லென கிளக்கும் - இல்லையென்று சொல்லும், மூர்ச் சனை - மூர்ச்சையானது, தெளிதர - தெளியும்படி, முகத்தினில் - முகத்தினிடத்தில், தெளித்தற்கு அன்றுகொல்-தெளித்தற்கல்லவா, நளி - குளிர்ந்த, புனல் - நீரை, பொருளொடு - திரவியத்துடனே, நல்குகின்றது - கொடுக்கின்றது, எ - று.

க - து. அகமலர்ந்து கொடுத்தல் முக மலரும்பொருட்டு என்ப தாம்.

நாணந் தலைக்கொண்டு எனக்கில்லையென்று சொல்லும்பொழு துண்டாகு மூர்ச்சை தெளிதற்கு முகத்திற் றெறிப்பத் தண்ணீரைப் பொருளொடு கொடுப்பதென்க. [விதிப்படி கொடுக்கு நீரில் மூர்ச் சை தெளிதற் பொருட்டெனக் குறித்தலால் தற்குறிப்பணி.] (௨0)

ஐந்தரு நீழலி னரசு வைகிய
விந்திரன் முதலினோ ரீகென் றென்னுழை
வந்துயர் பெரும்புகழ் வழங்கி னாரிவர்
சிந்தனை மகிழ்வுற வென்கொல் செய்வதே.

இ - ள். ஐந்தரு நீழலின் - பஞ்சதருவி னிழலிடத்து, அரசுவை கிய - அரசிருக்கின்ற, இந்திரன் முதலினோர் - இந்திரனாதியோராகிய நால்வரும், ஈக என்று - தருவாயென்று, என்னுழை வந்து - என்னி டத்தில் வந்து, உயர் - உயர்ந்த, பெரும் புகழ் - பெரிய கீர்த்தியை, வழங்கினார் - கொடுத்தார்கள்; இவர் - இவர்களுடைய, சிந்தனை - மனங்கள், மகிழ்வு உற - மகிழ்ச்சிபொருந்த, என் செய்வது - யாது செய்வது, எ - று.

க - து. இந்திரன் முதலானவர்க ளென்னிடத்தில் வந்து ஈந் தருள்செய் என்றார்கள், இவர்கள் மனமகிழும்படி என் செய்யலா மென்றான் என்பதாம்.

யாது விரும்பினும் இந்திரனுக் கொருகுறை யில்லையென்பது தோன்ற 'ஐந்தரு நீழலி னரசுவைகிய' என்றார். யாசகர்கள் எதைக் கேட்க நினைத்தார்களோ அதைக் கொடுத்தா லல்லாமல் அவராற் றரப்பட்ட புகழ் நில்லாதென்பது கருத்து. (உக)

உரவுநீர்க் கருங்கட லுடுத்த மாநிலத்
தருளுட னிம்மையி னளித்த வான்பொருண்
மருவிய மறுமையில் வழங்கு பான்மையா
லிரவலர் தமரினு மினிய ராவரே.

இ - ள். உரவு - ஒலிக்கின்ற, நீர் - நீரையுடைய, கரு கடல் - கரியகடலை, உடுத்த - ஆடையாகத் தரித்த, மா நிலத்து - மகத்தாகிய பூமியில், அருளுடன் - கருணையுடனே, இம்மையில் - இப்பிறப்பில், அளித்த - கொடுத்த, வான் பொருள் - மேலாகிய பொருளை, மருவிய - பொருந்திய, மறுமையில் - மறுபிறப்பில், வழங்கு பான்மையால் - கொடுக்கின்ற தன்மையால், இரவலர் - யாசகர்கள், தமரினும் - தம்மவரினும், இனியராவர் - இனிமை யுடையவராவர், எ - று.

க - து. இப்பிறப்பிற் கொடுத்தபொருள் மறுபிறப்பில் வருமாதலால் யாசகர்கள் உறவினரைப் பார்க்கிலும் இனிமை யுடையவர்களாவார்கள் என்பதாம்.

தம்மவர் உறவோர். இப்பிறப்பிற் கொடுப்பதை மறுபிறப்பி லவரிருக்கு மிடத்திற்குச் சென்று தருபவராதலால் யாசகரைத் தம்மவரினும் இனியரென்றார். "அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன், பெற்றான் பொருள்வைப் புழி" (திருவள்ளுவர்-ஈகை-சு) அதுகொடுப்பவர்க்கு ஆஸ்தியென்பது இதனாலறிக. (உஉ)

உடைப்பெரும் பொருளினை யுலகி லூதியங்
கிடைப்பதற் களித்தலிற் கிளர்நி ரப்பினா
லடுத்துவந் தேற்குனர்க் கார்வ மீதுறக்
கொடுக்கிலொன் றேபல கோடி யாகுமால்.

இ - ள். உடை - தமதாகவுடைய, பெரும்பொருளினை - பெரிய திரவியத்தை, உலகில் - உலகத்தில், ஊதியம் - இலாபம், கிடைப்பதற்கு - கிடைக்கும்பொருட்டு, அளித்தலில் - கொடுப்பதிலும், கிளர் - மிகுந்த, நிரப்பினால் - வறுமையினால், அடுத்து வந்து - அனுசரித்து வந்து, ஏற்குனர்க்கு - யாசிப்பவர்க்கு, ஆர்வம் - ஆசை, மீதுற - அதிகரிக்க, கொடுக்கில் - கொடுத்தால், ஒன்றே - ஒருபொருளே, பல கோடியாகும் - பலகோடிப் பொருளாகும், எ - று.

க - து. தமக்குள்ள பொருளை இலாபங் கிடைக்கும்பொருட்டுக் கொடுப்பதிலும் யாசகருக்குக் கொடுக்கு மொன்றே பலகோடியாகும் என்பதாம்.

உலகத்திலே ஒருவருக்கு இலாபத்திற்குக் கொடுப்பதைக்காட்டிலும் யாசகர்க்குக் கொடுப்பதில் அநேகங்கோடி இலாபம் உண்டென்பதாம். (உ௩)

[நளன் சொல்லுதல்.]

என்றுமற் றினையன வெண்ணி வண்ணவான்
குன்றெனப் பணைத்துயர் குவவுத் தோளினன்
வன்றிறல் வாசவன் வதன நோக்கிமற்
றொன்றுநீ கேட்டியென் றுரைத்தன் மேயினன்.

இ - ள். என்று - இப்படியென்று, இனையன - இத்தன்மையவாக, எண்ணி - நினைந்து, வண்ணம் - அழகிய, வான் - மேலாகிய, குன்று என - மலையைப்போல, பணைத்து - பருத்து, உயர்-உயர்ந்த, குவவு - திரட்சிபொருந்திய, தோளினன் - தோளையுடைய நளமகாராசன், வல் திறல் - மிகுந்த வலிமைபடைத்த, வாசவன் - இந்திரனுடைய, வதனம்நோக்கி - முகத்தைப்பார்த்து, ஒன்று - ஒருசெய்தி, நீ கேட்டி என்று - நீ கேட்பாயாகவென்று, உரைத்தல் மேயினன் - சொல்லத்தொடங்கினன், எ - று. மற்றுஇரண்டும் அசைநிலைகள்.

க - து. நளனிவ்வாறு நினைத்துத் தேவேந்திரன் முகத்தைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினன் என்பதாம். (உ௪)

என்னருந் தவத்தினன் றெனது தொல்குல
முன்னையோ ரருந்தவ முயன்ற பான்மையாற்
பொன்னகர் துறந்துநீர் போதப் பெற்றனன்
சொன்னவை மறுக்கிலன் சொல்க வென்றனன்.

இ - ள். என் - என்னாற் செய்யப்பட்ட, அரு தவத்தின் - அரிய தவத்தினாலே, அன்று - அன்றாகும்; எனது - என்னுடைய, தொல் குலம் - பழைய குலத்திற் றோன்றிய, முன்னையோர் - பெரியோர்கள், அரு தவம் - அரிய தவத்தை, முயன்ற பான்மையால் - முயன்று செய்தபடியினாலே, பொன் நகர் - தெய்வலோகத்தை, துறந்து - நீங்கி, நீர் போத பெற்றனன் - நீவிர் இங்கே வரப்பெற்றேன்; சொன்னவை மறுக்கிலன் - சொல்லிய செய்திகளை மறுக்கமாட்டேன், சொல்க என்றனன் - சொல்லக்கடவீ ரென்றான், எ-று.

க - து. என் தவத்தாலல்ல, என் குலத்தோர் செய் தவத்தால் நீங்க ளிங்கேவரப் பாக்கியம் பெற்றேன், தாங்கள் சொல்பவற்றைத் தடுக்கேன் சொல்லுங்களென்றான் என்பதாம்.

மேன்மையுள்ள நீவிர் வருதற்கு ஏற்றதவம் யாமொருவன் செய்தது போதாதாதலால் எனக்கு முற்பட்டவர் செய்த தவமாகுமென்றான். (உரு)

[நளனுக்கு இந்திரன் சொல்லுதல்.]

ஆங்கது கேட்டவா னரசன் பொற்பினால்
வீங்குதோண் மாரனை வென்ற நீயலால்
யாங்குள ரவன்றொடுத் தெய்யு மின்னறாப்
பூங்கணை யால்வருந் துயரம் போக்குவார்.

இ - ள். ஆங்கு - அவ்விடத்தில், அது - அம்மொழியை, கேட்ட - கேள்விப்பட்ட, வான் அரசன் - இந்திரனானவன், பொற்பினால் - அழகினால், வீங்கு - மிகுந்த, தோள் - தோளையுடைய, மாரனை - மன்மதனை, வென்ற - வெற்றி கொண்ட, நீ அலால் - நீ யொருவனல்லாமல், அவன் - அம்மன்மதனானவன், தொடுத்து - நாரியிற்றொடுத்து, எய்யும் - பிரயோகஞ் செய்கின்ற, இன் - இனிய, நறா - தேனொழுகுகின்ற, பூ கணையால் - மலரம்பால், வரும் - வருகின்ற, துயரம் - துக்கத்தை, போக்குவார் - நீக்குவார், யாங்கு உளர் - எவ்விடத்திலுளர், எ - று.

க - து. அவ்வார்த்தையைக் கேட்ட இந்திரனானவன் உன்னையல்லாது மன்மதபாணத்தை நீக்குபவர் யார் என்றான் என்பதாம்.

அழகினால் மிகுந்த தோளையுடைய மன்மதனைச் செயித்த நீயல்லாமல் அவன் வாளியால் வருந் துன்பத்தை நீக்குவோர் பிறர் யார். அழகினாலென்றதை வீங்குதலோடுங் கூட்டுக. அன்றி வென்றவென்பதோடுங் கூட்டிப் பொருள்கொளின் மிகுந்த அழகுள்ளவனென்னும் பொருள்படுதலால் துன்பம் நீக்குதற்குவல்ல ஏதுவில்லையாயிற்று. முற்படியாயின் காமனை வென்றவனென்றவில் சிதேந்திரியன் என்னும் பொருள்படலால் அத்துன்பம் நீங்கியவன் பிறர்க்கும் அத்துன்பத்தை நீக்குவானென்பது பெற்றும். (உசு)

வெயில்விரி மணிமுடி வீம னல்கிய
மயிலியன் மதர்விழி வளைக்கை மங்கைபாற்
செயிரறு தூதுநீ செல்ல வேண்டுமென்
றுயிரிரப் போரினு முளையக் கூறினான்.

இ - ள். வெயில் - பிரகாசம், விரி - விரிகின்ற, மணி - மணிகள் பதித்த, முடி-முடியையுடைய, வீமன் நல்கிய-வீமராசன்பெற்ற, மயில் - மயிலையொத்த, இயல் - சாயலும், மதர் - களிப்புமிக்க,

விழி - கண்களும், வளை கை - வளையலையணிந்த கைகளையுமுடைய, மங்கைபால் - தமயந்தியிடத்தில், செயிர் அறு - குற்றமற்ற, தூது நீ செல்லவேண்டும் என்று - நீ தூதுபோக வேண்டுமென்று, உயிர் இரப்போரினும் - உயிரைக் கொடுவென் றிரப்பவரைப் பார்க்கிலும், உளைய - வருந்த, கூறினான் - சொல்லினான், எ - று.

க - து. இந்திரன் நளனைப்பார்த்துத் தமயந்தியிடத்துத் தூது செல்ல வேண்டுமென்றான் என்பதாம்.

நளனால் விரும்பப்பட்ட உயிரினுஞ்சிறந்த தமயந்தியினிடத்து அவனே தூதுசெல்லுதலில் ஒருவருயிரிரத்தற்க ணுளதாந் துன்பத்தி னும் அதிக வருத்தமிருத்தலால் 'உயிரிரப்போரினு முளையக் கூறி னான்' என்றார். (உஎ)

[நளன் வருத்தமடைதல்.]

திருத்தகு செவியிடைச் சிவையி னூடுற
வுருக்கிய செம்பினை யூற்றினா லென
மருத்துவன் றீமொழி கேட்டு மன்னர்கோன்
கருத்தழிந் தாருயிர் கலங்கி னனரோ.

இ - ள். திரு தகு - அழகு பொருந்திய, செவியிடை - காதி னிடத்திலே, சிவையினூடு - உலைமூக்கில், உற - பொருந்த, உருக் கிய - உருக்கப்பெற்ற, செம்பினை - செம்பை, ஊற்றினால் என - ஊற்றியதுபோல, மருத்துவன் - இந்திரனுடைய, தீ மொழி - தீயை யொத்த சொல்லை, கேட்டு - கேள்விப்பட்டு, மன்னர்கோன் - நள னானவன், கருத்து அழிந்து - நினைவுமறந்து, ஆர் - நிறைந்த, உயிர் ஆவி, கலங்கினான் - கலக்கமுற்றான், எ - று.

க - து. நளன் உருக்கியசெம்பினைக் காதி லூற்றினாற்போலும் இந்திரன் கொடுமொழிகேட்டுக் கருத்தழிந்து உயிர்க்கலக்க மடைந் தான் என்பதாம்.

தான்விரும்பிய தமயந்தியை யபகரிக்கத் தன்னையே தூதுசெல் லச் சொன்னதாதலால் நளனுக்கு இந்திரன் சொல்லியது தீமொழி யாயிற்று. [செம்பை யூற்றினாலென வெனலால் உவமையணி.] ()

குருமணி மேகலைக் குவளைக் கண்கொலோ
பொருமதன் பகழியோ பொய்ம்மை தீதெனுந்
தருமமோ வுயிர்நிலை தளர்ந்து வாடுமென்
கருமமீ தூன்றிய வாளிற் போழ்வதே.

இ - ள். குரு - நிறம்பொருந்திய, மணி - இரத்தங்கள் பதிக்கப் பெற்ற, மேகலை - மேகலாபரணமணிந்த தமயந்தியினது, குவளை - நீலோற்பலம்போன்ற, கண்கொலோ - கண்ணோ, பொரு-பொர்செய்கின்ற, மதன் - மன்மதனுடைய, பகழியோ - பாணமோ, பொய்ம்மை-பொய்யுரை, தீது எனும்-குற்றமென்றுசொல்லும், தருமமோ - அறமோ, உயிர்நிலை-சீவநிலையானது, தளர்ந்து - தளர்ச்சியடைந்து, வாடுமென் - மெலிவேனுகிய வென்னுடைய, மருமமீது - மார்பினிடத்தில், ஊன்றிய - தைக்கச்செய்த, வாளில் - வாளாயுதத்தைப் போல, பேழ்வது - பிளக்கின்றது, எ - று.

க - து. தமயந்தியின் கண்ணோ, மன்மதன் பாணமோ, பொய்யுரை தீதென்னுந் தருமமோ என்னுடைய மார்பில் வாளாயுதம் போலும் பிளப்பது என்றான் நளன் என்பதாம்.

மேகலை - எட்டுச்சரமுள்ளது. தமயந்தி கண்ணோ மன்மதபாணமோ பொய்யுரை தீதென்னுந் தருமமோ என்மார்பினிடத்தில் வாட்படைபோலும் பிளப்பதெனக் கூட்டுக. [கண்கொலோ பகழியோ தருமமோவெனலால் ஐயவணி. வாளிற் போழ்வதேயெனலால் உவமையணி. இவ்விரண்டுங் கலந்துவருதலால் கலவையணி.] (உக)

என்னும்விள் ளாதயர்ந் திருக்கு மேமுறுந்
தன்னையு மறக்குமெய்த் தருமம் நன்றெனப்
புன்னகை கோட்டுமெய் புழுங்கும் வெய்துயிர்த்
தன்னமுன் னுரைத்தவை யனைத்து மெண்ணுமால்.

இ - ள். என்னும் - இப்படியென்றுசொல்லுவான்; விள்ளாது, - பசாமல், அயர்ந்து இருக்கும் - துன்பப்படுவான்; ஏமுறும் - மயங்குவான்; தன்னையும் மறக்கும் - தன்னையுமறப்பான்; மெய் - உண்மை பொருந்திய, தருமம்-அறம், நன்று எனு - நல்லதென்று, புன்னகை கோட்டும் - புன்சிரிப்புக் கொள்ளுவான்; மெய் புழுங்கும் - உடல் வெதும்புவான்; வெய்து உயிர்த்து - அச்சமடைந்து, அன்னம் - அன்னப்புள்ளானது, முன் உரைத்தவை அனைத்தும் - (அது போய் வந்து) முன் சொல்லிய செய்தி யாவையும், எண்ணும் - நினைப்பான், எ - று.

க - து. இவ்வாறு சொல்வான், பேசாது துன்பப்படுவான், மயங்குவான், தன்னையுமறப்பான், நல்ல தருமமென்று சிரிப்பான், வெதும்புவான், அன்னஞ் சொன்னவற்றை நினைப்பான் என்பதாம்.

காம்பீர நடையுடையவனுதலால், 'விள்ளாதயர்த்திருக்கும்'எனறும்,செய்வதுந்தவிர்வதுந் தோன்றாமையால் 'ஏமுறும்'என்றும், இப்

படிப்பட்ட சிந்தையுடையவனுதலின் 'தன்னையுமறக்கும்' என்றும், சத்திய மிவ்வாறுவருத்துவதாதலின்வஞ்சப்புகழ்ச்சியாய்த் 'தரும நன்றெறைப் புன்னகை கோட்டும்' என்றும், இதனால் அகத்தில் அதிக தாபமுண்டாகையால் 'மெய்புழுங்கும்' என்றும், தருமத்திற் குடன்பட்டவனுகையால் இனி தனக்குக் கிடையாதென்னு நிச்சயத்தால் 'வெய்துயிர்த்து' என்றும், 'பெருத பொருளின்மேல் விருப்பம் அதிகரித்தலால் அன்ன முன்னுரைத்தவை யனைத்தும் 'எண்ணும்' என்றுஞ் சொல்லினர். வருத்த மிகுதியின் நகைசெய்வது "இடுக்கண் வருங்கா னகுக வதனை, யடுத்தூர்வ தஃதொப்ப தில்" (திருவள்ளுவர்-இடுக்கணழியாமை-க) இதனலறிக. [பகையில்லாமல் ஒருகாலத்திலே கூடத்தக்க என்னும் அயர்ந்திருக்கு முதலிய பலவற்றிற்குக் கூட்டத்தைச் சொல்லுதலினலே கூட்டவணி.] (௩0)

முற்றிழை வனமுலை முயங்கு நன்னலம்
பெற்றில னெனினும்வேள் பெய்யும் வாளியான்
மற்றுயி ரிறப்பினும் வான வேந்தொடு
சொற்றது மறுக்கில னென்று சொல்லுவான்.

இ - ள். முற்று - முற்றிய, இழை - ஆபரணங்களையணிந்த தமயந்தியினது, வனம் - அழகிய, முலை - தனங்களை, முயங்கும் - தழுவுகின்ற, நல் நலம் - நல்லசுகத்தை, பெற்றிலன் எனினும் - பெருமற்போனேனுயினும், வேள் - மன்மதனுனவன், பெய்யும் - சொரிகின்ற, வாளியால் - பாணங்களினுலே, உயிர் இறப்பினும்-ஆவிமாயினும், வான வேந்தொடு - இந்திரனுடன், சொற்றது - சொல்லியதை, மறுக்கிலன் - தடுக்கமாட்டேனென்று நிச்சயித்துக்கொண்டு, சொல்லுவான் - சொல்லுவான், எ - று.

க - து. தமயந்தி இன்பத்தைப் பெறேனுகினு மன்மதன் கணையா லுயிர்போயினும் இந்திரனேடு சொன்னதை மறுக்கிலேன் என்றான் என்பதாம்.

முற்றுதல் - விளைத்தல். மற்று - அசைநிலை. இம்மைப்பயனைத் துரும்பென நினைத்து மறுமைப்பயனை விரும்பிய காம்பீர நடையையுடைய சத்தியசந்தனுகையால் இவ்வாறு கூறினனென்க. (௩க)

[தூதுபோகச் சொல்லிய இந்திரனைக்குறித்து நளன் சொல்லல்.]

எப்பொரு ளாயினும் யாவ ருள்ளமுங்
கைப்படு நெல்லியங் கனியிற் காணுநீர்
துப்பிதழ் மடந்தைபாற் றூது போகெனச்
செப்பிவ தெவன்கொலெஞ் சிந்தை யோர்ந்துமே.

இ-ள். எப்பொருள் ஆயினும் - எந்தப்பொருளானாலும், யாவர் உள்ளமும் - எவர்களுடைய மனமும், கைப்பட்டு - உள்ளங்கையிற் பட்ட, நெல்லி அம் கனியில் - நெல்லிப்பழத்தைப்போல, காணும் - அறிகின்ற, நீர் - நீவிர், துப்பு - பவளம்போன்ற, இதழ் - அதரத்தையுடைய, மடந்தைபால் - தமயந்தியினிடத்து, தூது போக என - தூதுபோவென்று, எம் - எங்களுடைய, சிந்தை - மனதை, ஓர்ந்தும் - தெரிந்தும், செப்பியது - சொல்லியது, எவன்கொல் - என்கொல், எ - று.

க - து. எல்லாமறிந்த நீர் தமயந்தியிடத்துத் தூதுபோவென்று சொல்லியதென்னவென்றான் என்பதாம்.

என்னுள்ளம் அவளிடத்தும் அவளுள்ளம் என்னிடத்தும் ஒருமித்து நின்றதென்பது தோன்ற 'எஞ்சிந்தை யோர்ந்தும்' எனத் தன்மைப் பன்மையாகச் சொல்லினார். 'ஒருதலையா னின்னாது காமங் காப் போல, விருதலை யானு மினிது" (திருவள்ளுவர்-தனிப்படர் மிகுதி-௬) எனவிருத்தலால் ஒத்தகாமமுள்ள வெனக்கன்றி ஒருதலைக்காமமுள்ள வுனக்குச்சந்துபொருந்தா தென்பது கருத்து. [நெல்லியங்கனியி லென்றமையால் உவமையணி.] (௬உ)

[நீயே செல்கென்ற இந்திரனுக்கு நளன் சொல்லல்.]

வழங்கிய நும்முரை மறுது சென்றியான்
மொழிந்தன னாயினு முன்னரே யெனை
விழைந்தவத் தளிரியல் வெள்குறு துளங்
குழைந்துநும் பான்மணம் பொருந்தல் கூடுமோ.-

இ - ள். வழங்கிய - சொல்லிய, நும் உரை - உம்முடைய சொல்லை, மறுது - மறுக்காமல், யான் சென்று - யான்போய், மொழிந்தனன் ஆயினும் - சொன்னேனானாலும், முன்னரே - முன்னமே, எனை விழைந்த - என்னை விரும்பிய, அ தளிரியல் - அத்தமயந்தி, வெள் குறுது - நாணமல், உளம் குழைந்து - மனங்கரைந்து, நும் பால் - உம்மிடத்தில், மணம்-விவாகத்திற்கு, பொருந்தல் கூடுமோ - சம்மதிப்பாளோ, எ - று.

க - து. உமது சொல்லை நான் சொன்னேனானாலும் என்னை விரும்பிய தமயந்தி உம்மை விரும்புவாளோ என்றான் என்பதாம்.

தளிரியல் உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக்காரணப்பெயர். யான் விழைந்தவென்னில் தன்னறிவுக் கேலாதென்பதுபற்றி 'எனை விழைந்த' என்றான். விழைந்தவனாத

லால் யான் சொல்லுவதற்கு எதிர்மொழி கொடுத்தற்கே நாணும்; அங்ஙனம் நாணுபவள் எவ்வாறு நின் விவாகத்திற்குச் சம்மதிப்பாளென்பது கருத்து. (௩௩)

[என்னுல் முற்றுமோ வென்ற நளனுக்கு இந்திரன் சொல்லியது.]

என்னவேந் துரைத்தலு மிசைத்த சொன்மரு
நின்னைமெய்ப் பரதனை நிகரில பார்த்தனை
முன்னினு நினைத்தவை யனைத்து முற்றுமா
லன்னநீ யேகிலே தரிய தாகுமே.

இ - ள். என்ன - இப்படியென்று, வேந்து - நளமகாராசனானவன், உரைத்தலும் - சொல்லலும், இசைத்த - சொல்லிய, சொல் - சொல்லினை, மரு - மறுக்காத, நின்னை - உன்னையும், மெய் - உண்மையையுடைய, பரதனை - பரதனையும், நிகரில் - ஒப்பில்லாத, பார்த்தனை - அருச்சுனனையும், முன்னினும் - நினைத்தாலும், நினைத்தவை அனைத்தும் - நினைத்தகாரியங்களியாவும், முற்றும்-முடியும்; அன்ன-அத்தன்மையையுடைய, நீ - நீயே, ஏகில் - போனால், ஏது - எந்தக் காரியம், அரியது ஆகும் - அருமையை யுடையதாகும், எ-று. ஆல் - அசைநிலை.

க - து. உன்னையும் பரதனையும் அருச்சுனனையும் நினைத்தால் நினைத்தகாரிய முடியும்; நீயேபோனால் காரியமரிதோ என்றா னிந்திரன் என்பதாம்.

பரதன் அர்ச்சுனன் எனப்பொதுப்படக் கூறினும் சகுந்தலை புத்திரனாகிய பரதனும் ஏகையபுத்திரனாகிய கார்த்தவீரிய அர்ச்சுனனுமெனக்கொள்க. பரதனை இராமற்கிளவலென்றும், பார்த்தனை வீமற்கிளவலென்றும், பொருள்கொள்வாருமுண்டு. அவ்வாறு கொள்ளிற் காலவேற்றுமைப்படலானும் வடநூலுரையுடன் மாறுபடலானும் சான்றோராட்சியல்லாமையானும் மரபுவழுவாதலானும் இழுக்காமென்க.

"தரைதிருத் தியசீர் வைனிய னென்னுந் தனிக்குடைப் பிருதுவேந் தினையும், விரைமலர்த் தொடையே கையன்றரு கார்த்த வீரிய வருச்சுனன் றனையும், உரைசகுந் தலைபுத் திரனெனும் பரத னொடுநளனையுமொரு செயற்குப், புரையறச் செல்லும் பொழுதுமுன் னினரப் பொருள்பெறீஇ விரைந்துமீள் குவரால்."

இச்செய்யுள் வடநூலுரை மேற்கோளின்படி இவ்வுரைகாரரால் மொழிபெயர்க்கப்பட்டது. [பிறர்க்கும் உன்னினைப்பால்முடியுங்காரி

யம் நீயேசென்றால் முடிதற்குச் சந்தேகமில்லையென்றலால் செய்யுட் பொருட் பேறணி.] (கூ௪)

[நளன் தூதுசெல்லச் சம்மதித்தது.]

இனையன வாசவ னியம்பு மெல்லையின்
வனைமலர்க் கோதைதன் வயத்த னாகியுந்
தனியற னிழுக்குறாத் தகைய னாதலி
னனையதற் கியைந்தன னலங்கல் வேலினான்.

இ - ள். வாசவன் - இந்திரனானவன், இனையன - இத்தன்மைய வாகிய சொற்களை, இயம்பும் எல்லையின் - சொல்லுகின்ற பொழுதில், வனை - கட்டுகின்ற, மலர் கோதை தன் - மலரையணிந்த கூந்தலை யுடைய தமயந்தியினது, வயத்தன் ஆகியும் - வசப்பட்டவனாயிருந்தும், தனி - ஒப்பற்ற, அறன் - தருமத்தினின்றும், இழுக்குறா - கெடுத லடையாத, தகையன் ஆதலின் - குணத்தையுடையவனாதலால், அனை யதற்கு - அவ்விந்திரன் சொன்னதற்கு, அலங்கல் - வெற்றிமாலை யைத்தரித்த, வேலினான் - வேற்படையையேந்திய நளமகாராசன், இயைந்தனன் - உடன்பட்டான், எ - று.

க - து. நளன் தூதுபோகச் சம்மதித்தான் என்பதாம்.

[நீ செல்லத் தடையுளதோவென்ற இந்திரனுக்கு நளன் சொல்லியது.]

பொருந்திய மன்னர்கோன் பொம்மல் வெம்முலைத்
திருந்திழை கடிநகர்ச் சேமமாகிய
வருந்திறல் வாயிலோ ரறிவு றாதுபோய்
வருந்திறன் யாதென மறித்துங் கூறினான்.

இ - ள். பொருந்திய - சம்மதிப்பட்ட, மன்னர் கோன் - நளன், பொம்மல் - பொலிவுபொருந்திய, வெம் - விருப்பத்தைத்தருகின்ற, முலை - தனங்களையும், திருந்து இழை - திருத்தமாகிய ஆபரணங்களையு மணிந்த தமயந்தியினுடைய, கடி நகர் - புதுமைபெற்ற நகர்க்கு, சேமம் ஆகிய - காவலாகிய, அரு திறல் - அரியவல்லமையையுடைய, வாயி லோர் - வாயில்காப்பவர், அறிவுறாது போய் - அறியாமற் புகுந்து, வரும் திறன் - வருகின்றவிதம், யாது என - எப்படியென்று, மறித்தும் - மறுபடியும், கூறினான் - சொல்லினான், எ - று.

க - து. நளன் தமயந்தி யரண்மனைக்காவலாள ரறியாதுபோய் வரும்வித மெப்படியென்றான் என்பதாம்.

[மறைந்து செல்வதற்கு உபாய மளதோவென்ற
நளனுக்கு இந்திரனருளியது.]

விட்புலந் தனிபுரந் தருளும் வேந்தர்கோ
னட்பொடு மினியன நவின்றி யாவர்க்குங்
கட்புல னுலுருக் காண்கி லாததோர்
நுட்பநூல் விஞ்சையை நுவன்றிட் டானரோ.

இ - ள். விண் புலம் - விண்ணுலகத்தை, தனி-ஒப்பற, புரந்தருளும் - காக்கின்ற, வேந்தர்கோன் - இந்திரனானவன், நட்பொடும்-சிநேகத்துடனே, இனியன - இன்சொற்களை, நவின்று - சொல்லி, யாவர்க்கும் - எவர்களுக்கும், கட்புலனால் - கண்ணறிவினால், உரு - வடிவத்தை, காண்கிலாதது - அறியப்படாததாகிய, ஓர் - ஒரு, நுட்ப நூல் - நுண்ணிய நூலிற்சொல்லும், விஞ்சையை - மந்திரத்தை, நுவன்றிட்டான் - சொல்லினான், எ - று.

க - து. இந்திரன் நளனுக் கரூபமாகும் வித்தையைக் கற்பித்தான் என்பதாம்.

விஞ்சை - மந்திரத்துக்காதலால் ஆகுபெயர். (கஎ)

பெறலரும் விஞ்சையும் பெற்று வானவர்க்
கிறைபவ னிணையடி யிறைஞ்சி வண்டிமிர்
நறைமலர்க் கூந்தலா ணகரி நண்ணுவா
னறைகழ லிலங்குதா ளரச னேகினான்.

இ - ள். பெறல் அரும்-பெறுதற்கரிய, விஞ்சையும் - மந்திரத்தையும், பெற்று - பெற்றுக்கொண்டு, வானவர்க்கு இறையவன்-இந்திரனுடைய, இணையடி - இரண்டு பாதங்களையும், இறைஞ்சி - வணங்கி, வண்டு - வண்டுகள், இமிர் - ஒலிக்கின்ற, நறை - தேனொழுகுகின்ற, மலர் - மலரை யணிந்த, கூந்தலாள் - அளகபாரத்தையுடைய தமயந்தியினது, நகரி - குண்டினபுரத்திலே, நண்ணுவான் - சேரும் பொருட்டு, அறை - ஒலிக்கின்ற, கழல் - வீரக்கழலானது, இலங்கு-பிரகாசிக்கின்ற, தாள் - பாதத்தையுடைய, அரசன் - நளன், ஏகினான் - போனான், எ - று.

ந - து. நளன் மந்திரத்தைக் கற்று இந்திரனை வணங்கிச்சென்றான் என்பதாம்.

நெடுநாள் தவஞ்செய்து யோகிகளும் அடைதற் கரிதாதலிற் 'பெறலரும் விஞ்சை' எனப்பட்டது, எடுத்தகருமம் இடையூறின்றி

யினிது முடியும்பொருட்டு உலக வழக்கப்படி கடவுளரை வணங்கு வது முறைமையாதலின் 'வானவர்க்கிறையவ னிணையடி யிறைஞ்சி' எனப்பட்டது. (௩அ)

[இதுமுதல் ௨-பாட்டுகளால் குண்டின புரத்துச் செல்லுதல் சொல்லப்படுகின்றன.]

பண்ணமை கூந்தன்மான் றேரிற் பார்புக
ழண்ணலு மிமையவ ரார்வம் பின்செல
மண்ணிடை வானவர் மகளிர் தம்மொடும்
விண்ணிழிந் திருந்தன நகர மேயினான்.

இ - ள். பண் அமை - கல்லணையமைந்த, கூந்தல் - புறமயிரை யுடைய, மான் - குதிரைகட்டிய, தேரில் - இரதத்தில், பார் - பூமி யிலுள்ளார், புகழ் - புகழ்கின்ற, அண்ணலும் - நளமகாராசனும், இமையவர் - தேவர்களுடைய, ஆர்வம் - ஆசையானது, பின்செல - பின்றொடர்ந் தொடர, மண்ணிடை - மண்ணுலகத்தில், வானவர் மக ளிரொடும் - அரம்பையருடன், விண் - சுவர்க்கமானது, இழிந்திருந் தன - இழிந்திருந்ததையொத்த, நகரம் - குண்டினபுரத்தை, மேயி னான் - பொருந்தினான், எ - று.

க - து. நளன் குண்டினபுரத்திற் போயினான் என்பதாம்.

விண்-இடவாகுபெயர், மான் என்பதில் னகரம் சாரியை. இது குண்டின புரமென்னும் பெயரினாலே மாத்திரம் வேற்று நகராகத் தோன்றுவதன்றிச் சகலசம்பத்து நிறைந்திருக்கின்றபடியால் அமரா வதி யென்பதற்குச் சந்தேகமில்லையென்பது கருத்து. [ஆர்வம் பின் செலவென்றது உடனிகழ்ச்சியணி. மண்ணுலகத்துள்ள இந்நகரை வானவர் மகளிரொடு மண்ணினிழிந்த விண்ணெனக் குறித்தமை யால் தற்குறிப்பணி.] (௩௯)

வாம்பரித் தேரினின் றிழிந்து வண்டுளர்
தேம்பொதி நறுமலர்த் தெரியன் மார்பினான்
காம்புறழ் தோளினாள் செவ்வி காண்குறு
மேம்பலிற் கோநக ரெய்தி னானரோ.

இ - ள். வாம் - தாவுகின்ற, பரி - குதிரையையுடைய, தேரி னின்று இழிந்து - தேரினின்றுமிறங்கி, வண்டு-வண்டுகளானவை, உளர் - ஒலிக்கின்ற, தேம் - வாசனை, பொதி - நெருங்கிய, நறும் - பரிமளம் பொருந்திய, மலர் - மலராற்றொடுத்த, தெரியல் - மாலை யணிந்த, மார்பினான் - மார்பை யுடையவனாகிய நளமகாராசன், காம்பு - மூங்கிலை, உறழ் - ஒத்த, தோளினாள் - தோளினையுடையவ

ளாகிய தமயந்தியினது, செவ்வி - அழகை, காண்குறும் - காண வேண்டுமென்கிற, ஏம்பலின் - ஆசையினாலே, கோநகர் - குண்டினபுரத்தை, எய்தினன் - அடைந்தான், எ - று.

க - து. நளன் தமயந்தியைக்காண வாசையால் குண்டினபுரத்தை யடைந்தான் என்பதாம். (௪0)

[இதுமுதல் ௨௫-பாட்டுகளால் இவன் செல்லுகையி னிகழ்ந்தவை சொல்லப்படுகின்றன.]

உருகுதங் கொழுனர்பா லூடி நீத்தநல்
விரைகமழ் தெரியலு மின்செ யாரமுங்
குருமணிக் கலன்களுங் குலவு வீதிவா
யெரிமணிப் பூணின னிடறி யேகினன்.

இ - ள். உரிய - உரிமையையுடைய, தம் - தம்முடைய, கொழுனர்பால் - கணவரிடத்து, ஊடி - பிணங்கி, நீத்த - நீக்கிய, நல் - நல்ல, விரை - வாசனை, கமழ் - வீசுகின்ற, தெரியலும் - மாலையும், மின்செய் - பிரகாசத்தைச் செய்கின்ற, ஆரமும் - பதக்கமும், குரு - நிறம்பொருந்திய, மணி கலன்களும் - ரத்தினாபரணமும், குலவு - பிரகாசிக்கின்ற, வீதிவாய் - வீதியினிடத்தில், எரி - ஒளியையுடைய, மணி - மணிகள் பதித்த, பூணினன் - ஆபரணத்தையுடைய நளமகாராசன், இடறி - காலினா லிடறிக்கொண்டு, ஏகினன் - போனான், எ - று.

க - து. நளன் பூமாலை இரத்தினாபரண மிவற்றை இடறி நடந்தான் என்பதாம்.

மிகுந்த அன்புடையோ ரென்றற்கு 'உருகுதங்கொழுனர்' என்றும், அவரிடத்தும் ஊடினாலன்றி இன்பம் பயவாமையால் 'ஊடி' என்றும், ஊடலில் தம்மெய்யி லணிவனவற்றில் வெறுப்புண்டாதலில் 'நீத்த' என்றும், செல்வச்செருக்கினால் நாடோறுங் கழித்தெறிவதாதலில் 'குலவுவீதிவாய்' என்றும், காலால் நடந்துசெல்வோனாதலின் 'இடறியேகினன்' என்றும் சொல்லினார். [செல்வமிகுதியைச் சொல்லுதலால் வீறுகோளணி.] (௪௧)

மனங்கவர் வனப்பமை வடிவி னன்றியுங்
கனம்பயில் வாயிலோர் காண்கு றுவகை
சினங்கொள் கூரிலையவேற் செம்மல் போதலா
லனங்கனென் றுரைப்பதற் கைய மில்லையே

இ - ள். மனம் - மனத்தை, கவர் - கவர்ந்துகொள்ளுகின்ற, வனப்பு - அழகு, அமை - அமைந்த, வடிவின் - வடிவினாலும், அன்றியும் - அல்லாமலும், கனம் - மேகங்கள், பயில் - சஞ்சரிக்கின்ற, வாயிலோர் - வழியிலிருக்குங் காவலாளர்கள், காண்குறு வகை - காணுதவிதம், சினம் கொள் - கோபங்கொண்ட, கூர் - கூர்மை பொருந்திய, இலைய - இலையையுடைய, வேல் - வேற்படையேந்திய, செம்மல் - நளமகாராசன், போதலால் - செல்கிறபடியால், அனங்கன் என்று - அருவத்தை யுடையவனாகிய மன்மதனென்று, உரைப்பதற்கு - சொல்வதற்கு, ஐயம் - சந்தேகம், இல்லை - இல்லை, எ - று.

க - து. நளன் அருபமாய்ச் செல்லுதலால் மன்மதனென்று சொல்லுவதற்குச் சந்தேகமில்லை என்பதாம்.

[இது தற்குறிப்பணி.] (சஉ)

கண்ணகன் மணிக்கடைக் காவ லாளர்தா
நண்ணின ரெவரென வெவரை நாடினுந்
தண்ணறுந் தெரியலான் றன்னை யாமென
வெண்ணிவெம் மடங்கலி னெருத்தங் கோட்டுமால்.

இ - ள். கண் அகல் - இடமகன்ற, மணி - அழகிய, கடை - வாயிலிலிருக்கின்ற, காவலாளர்தாம்-காவல்செய்வோர், நண்ணினர்-வந்தவர்கள், எவர் என - யாவரென்று, எவரை நாடினும - யாரை நாடிப் பார்க்கினும், தண் - தண்ணிய, நறு - பரிமளம்பொருந்திய, தெரியலான்-மாலையை யுடையவனாகிய நளமகாராசன், தன்னை ஆம் என - தன்னை யாருமென்று, எண்ணி - நினைத்து, வெம் - வெவ்விய, மடங்கலின் - சிங்கத்தைப்போல, எருத்தம் கோட்டும் - திரும்பிப் பார்ப்பான், எ - று.

க - து. வாயில்காப்பார் யார் யாரென, நளன் தன்னையென்று திரும்பிப் பார்ப்பான் என்பதாம்.

இவர்கள் நம்மை எவ்வாறு பார்த்தார்களென்கின்ற ஆச்சரியத்தினாலே திரும்பிப் பார்த்தானென்க. சிங்கத்துக்குத் தான்வந்த வழியைத்திரும்பிப்பார்த்த லியற்கையென்க. [மடங்கலினென்றமையால் உவமையணி. மறைந்துசெல்லு மவனியல்பு கூறுதலால் தன்மை நவிற்சியணி. இவ்விரண்டுங் கலத்தலால் கலவையணி.] (சந)

மலர்பயில் வரவிதோய் மாதர் நுண்டுகி
லலைபுன னனைதலு மல்கு மேன்றலாற்

கலைவலான் கண்முகிழ்த் தேகக் காண்குறான்
முலைமுக டழுந்துற வொருத்தி முட்டினாள்.

இ - ள். மலர் பயில் - மலர்கள் நெருங்கிய, வாவி - தடாகத்தில், தோய் - முழுகிய, மாதர் - மடவாருடைய, நுண் - நுண்ணிய, துகில் - ஆடையானது, அலை - அலைவீசுகின்ற, புனல் - நீரிலே, நனைதலும் - நனைந்தவளவில், அல்குல் - நிதம்பமானது, தோன்றலால் - தெரிதலால், கலை வலான் - அறநூலில் வல்லவனாகிய நளமகாராசன், கண் முகிழ்த்து ஏக - கண்களை மூடிக்கொண்டு போக, காண்குறான் - காணானாகி, முலை - தனங்களினுடைய, முகடு - உச்சி, அழுந்துற - அழுந்தும்படி, ஒருத்தி - (எதிர்ப்பட்ட) ஒருமங்கை, முட்டினாள் - முட்டினாள், எ - று.

க - து. நளன் வாவியிலாடு மாத ரல்குலைக்கண்டு கண்மூடிச் செல்லுதலால் எதிரில்வரு மொருத்தி முலைமுகடழுந்த முட்டினாள் என்பதாம்.

அறத்தின்வழி நிற்போனாதலால் பிறமாதர்களுடைய மறைத்தற்குரிய உறுப்புக்களை நோக்குதலிற் பாவம் உண்டாகுமென்றஞ்சிக் கண்களை மூடிக்கொண்டான். பின்பு எதிர்ப்பட்டவளுக்கு இவனுந் தெரியாமையாலும் இவன் கண்களை மூடிக்கொள்ளுதலாலும் அவன் வருவது தெரியாமல் முட்டிக்கொண்டனளென்க. (௬௪)

காமுறு மொருத்திதன் வதனங் கண்டகண்
கோமகன் முகிழ்த்தலாற் கோதை மார்முக
மாமதி யென்பது மன்னன் செய்யகண்
டாமரை யென்பதுந் தக்க வாயவே.

இ - ள். காமுறும் - விரும்புதற்குரிய, ஒருத்தி - ஒருமங்கையினுடைய, வதனம் - முகத்தை, கண்ட கண் - பார்த்தகண்களை, கோமகன் - நளமகாராசன், முகிழ்த்தலால் - மூடிக்கொள்ளுதலால், கோதைமார் முகம் - மாதருடைய முகம், மா - பெரிய, மதியென்பதும் - சந்திரனென்று சொல்வதும், மன்னன் - இந்த நளமகாராசனுடைய, செய்ய - சிவந்த, கண் - கண்கள், தாமரையென்பதும் - தாமரைமலரென்று சொல்வதும், தக்க ஆய - தகுதியாயின, எ - று.

க - து. நளன் ஒரு பெண்முகத்தைக் கண்ட கண்களை மூடலால் பெண்கள்முகஞ் சந்திரனென்பதும் நளன்கண்கள் தாமரையென்பதுஞ் சரியே என்பதாம்.

இவன் விரகமுடையோனாதலால் அந்த மங்கையர் முகத்தைக் கண்டு மனமயங்கிற் பாவமுண்டென்று மூடிக்கொண்டான். அது

அவர் முகத்தைச் சந்திரனென்பதையும் இவன் கண்களைத் தாமரை யென்பதையும் நிச்சயப்படுத்தியது. [தக்கதாயவெனலால் ஏதுத் தற்குறிப்பேற்ற யணி.] (சுகு)

செய்யகண் முகிழ்த்திடல் விழித்த றீதென
வையனுங் கடைக்கணா னோக்க வன்பிதென்
றெய்யும்வேள் கணைமல ரிதயமோர்ந்து மால்
பொய்யென வருச்சனை புரிதல் போன்றதே.

இ - ள். செய்ய - சிவந்த, கண் - கண்களை, முகிழ்த்திடல் - மூடிக்கொள்வதும், விழித்தல் - விழிப்பதும், தீது என - குற்றமென்று நினைத்து, ஐயனும் - நளமகாராசனும், கடைக்கணால் நோக்க - கடைக்கண்ணினாலே பார்க்க, அன்பு இது என்று - இது ஆசையினாலேபார்ப்பதென்று, எய்யும் - பிரயோகஞ்செய்கின்ற, வேள் - மன்மதனுடைய, கணை மலர்-பாணமலர்கள், இதயம் - கருத்தை, ஓர்ந்து - அறிந்து, மால் - மயக்கமானது, பொய்யென - பொய் என்று, அர்ச்சனை - பூசை, புரிதல்போன்றது - செய்வதுபோலுமாயிற்று, எ-று.

க - து. நளன் கடைக்கண்ணாற்பார்க்க அன்பான பார்வையென்று மன்மதனறிந்து பாணந்தொடுக்க அப்பாணம் அருச்சனை செய்த மலருக் கொப்பாயிற்று என்பதாம்.

கண்களை மூடில் எதிர்ப்படுமாதர் தெரியாமல் முட்டிக்கொள்வதாலும் திறக்கில் அவர்களது அழகிய வடிவநோக்குதலிற் பாவமுண்டாதலாலும் இப்படியன்றிக் கடைக்கணால் நோக்கினான். அங்ஙனநோக்குவதை அன்புநோக்கென்று நினைத்து மன்மதன்றொடுத்த மலரம்புகள் அவன் மனத்தையறிந்து மயக்கமில்லாமையால் வீணாய் அர்ச்சனை செய்வதாயிற்றென்க.

தெரிவையென் றுருவெளி யோடு செப்பிய
வரசன துரையசரீரி யாமென
வெருவிய மாதர்சொற் கேட்டு வெள்குறா
வுருவெளி யிதுவென வுள்ளந் தேறினான்.

இ - ள். தெரிவை என்று - தமயந்தியென்று, உருவெளியோடு - உருவெளித்தோற்றத்துடனே, செப்பிய - சொல்லிய, அரசனது - நளமகாராசனுடைய, உரை-சொல்லை, அசரீரி ஆம் என - ஆகாயவாணி வாக்கென்று, வெருவிப-பயந்த, மாதர் - மாதருடைய, சொற் கேட்டு - சொல்லைக்கேட்டு, (அந்நளனானவன்) வெள்குறா - நாணி, உருவெளி இது என - உருவெளித் தோற்ற மிதுவென்று, உள்ளம் - மனம், தேறினான் - தெளிவையடைந்தான், எ - று.

க - து. உருவெளியோடு சொல்லிய நளன்சொல்லை மாதர் அசரீரிவாக்கென்று சொல்ல நளன் தெளிவடைந்தான் என்பதாம்.

தெரிவை இங்குப் பருவங்குறியாது பெண்ணென்னுந் துணையாய் நின்றது. வெள்குறு - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். இதற்குப் பகுதி வெள்குறு. உருவெளித் தோற்றமாவது-தன்னால் விரும்பப்பட்ட பொருள்போல் எதிரே தோன்றுதல். செப்பிய வுரையென்பது இந்திராதிகள் தமயந்திக்குச் சொல்லும்படி தன்னொடு சொல்லிய செய்திகளாம். அவளைக் கண்டுந் தன் விருப்புக்குரியவற்றைப் பேசாமல் இவ்வாறு சொன்னானென்று பொருள்கொள்வானென்னெனில்அறத்தின்வழிதூதுசெல்வோர்க்கு வழுவாதலானும் இதற்கு முன்னூலாகிய வடமொழியுளிருத்தலானு மெனக்கொள்க. மாதர்க்கு அச்சமியற்கையாதலின் இது தெய்வமோ மாயமோவென அசரீரிக்கு வெருவினரென்க. அவர்களுரையால் உருவெளித் தோற்றத்தோடு சொன்ன ரகசியமான தன்சொல் வெளிப்பட்டதென்று தெளிந்து நாணுற்றானென்க. (௭௭)

விழைவெனும் பாகெறிந் தமரர் விஞ்சையாந்
தழைமுக படாத்தமை தறுகண் வாரணங்
கழைமத னியற்றிய கருங்கண் மங்கைய
ரழகெனும் படுகுழி யாழ்ந்த தில்லையால்.

இ - ள். விழைவு எனும் - ஆசையென்கின்ற, பாகு - பாகனை, எறிந்து - தள்ளி, அமரர் - தேவர்களுடைய, விஞ்சையாம் - மந்திரமாகிய, தழை - தழைந்த, முகபடாத்து - முகப்போர்வையினாலே, அமை - பொருந்திய, தறுகண் - அஞ்சாமையையுடைய, வாரணம் - [illegible]யானது, கழை மதன் - கருப்புவில்லேந்திய மன்மதன், இயற்றிய - செய்த, கரு கண் - கரிய கண்களையுடைய, மங்கையர் - மாதருடைய, அழகு எனும் - அழகென்று சொல்லும், படுகுழி - பள்ளத்தில், ஆழ்ந்ததில்லை - அழுந்தியதில்லை, எ - று.

க - து. நளனென்னும் யானை மாதரழகென்னும் படுகுழியில் வீழ்ந்ததில்லை என்பதாம்.

பாகு பண்பாகுபெயர். [நளனை யானையாகவும், விழைவைப் பாகனாகவும், விஞ்சையை முகபடாமாகவும் ஆரோபித்தலால் உருவகவணி] தூது செல்லுமிடத்து அறத்தின்வழி மகளிர் விழைவை நீக்கியோனாதலில் அவர்கள் அழகில் மயங்கவில்லையென்பது கருத்து.

அங்கலுழ் மேனிய வணங்கை நாடொறு
மெங்கணுங் காண்குறு மயக்க மேனைய

பங்கய வாண்முகப் பாவை மாரையம்
மங்கையென றெண்ணுறு மயக்கந் தீர்த்ததே.

இ - ள். அம் - அழகானது, கலுழ் - ஒழுகுகின்ற, மேனிய - மேனியையுடைய, அணங்கை - தமயந்தியை, நாடொறும் - எந்நாளும், எங்கணும் - எவ்விடத்திலும், காண்குறும் - உருவெளித்தோற்றமாகக் காணுகின்ற, மயக்கம் - மயக்கமானது, ஏனைய - மற்றைய, பங்கயம் - தாமரைமலர்போன்ற, வாள் - ஒளிபொருந்திய, முகம் - முகத்தையுடைய, பாவைமாரை - மகளிரை, அ மங்கை என்று - அந்தத் தமயந்தியென்று, எண்ணுறும் - நினைக்கின்ற, மயக்கம் - மயக்கத்தை, தீர்த்தது - நீக்கியது, எ - று.

க - து. நளனுக்குத் தமயந்தியென்கிற மயக்கமற்றது என்பதாம்.

அழகு மிகுதிபற்றிக் கலுழெனப்பட்டது. உருவெளித் தோற்றத்துக்கு நிகராகிய அந்தப்புரத்து மங்கையர் வடிவங்களில் நளனுக்குத் தமயந்தியென்னு மயக்கம் ஏனுண்டாகவில்லையெனில் அதனாறுதியாலென்க. (௬௯)

கணங்குழை முகத்தியர் கதிர்த்து விம்மிய
சுணங்கவி ரிளமுலைச் சுவடு தாக்கியு
மணிந்தகுங் குமமெழி லகல மூழ்கியு
மணந்தனர் போன்றனன் மன்ன ரேறனான்.

இ - ள். மன்னர் - அரசர்களுக்கு, ஏறு அனான் - ஆண் சிங்கத்தையொத்த நளன், கணம் - கூட்டமாகிய மணிபதித்த, குழை - குண்டலந் தரித்த, முகத்தியர் - முகத்தை யுடையவராகிய மாதர், கதிர்த்து - காந்திபொருந்தி, விம்மிய - பருத்த, சுணங்கு - தேமலானது, அவிர் - பிரகாசியாநின்ற, இள முலை - இளமைபொருந்திய தனங்களுடைய, சுவடு - தழும்புகள், தாக்கியும் - பொருந்தப்பெற்றும், அணிந்த - தரித்த, குங்குமம் - குங்குமக் குழம்புகள், எழில் - அழகிய, அகலம் - மார்பினிடத்து, மூழ்கியும் - மூழ்கப்பெற்றும், மணந்தனர் - கூடினவர்களை, போன்றனன் - ஒத்தனன், எ - று.

க - து. நளன் மார்பில் மாதர் தனங்களழுந்தப்பெற்றும் குங்கும மூழ்கப்பெற்றும் புணர்ந்தவரை ஒப்பாயினான் என்பதாம்.

கூடினவர்க்குள்ள குணம் இவனிடத் துண்டாதலின் 'மணந்னர் போன்றனன்' என்றார். [இது உவமையணி.] (௭௦)

விளங்கிழை யொருத்திபே ரணியில் வேந்தெழி
றுளங்கலு மதிசயந் தோன்ற நோக்கினள்
வளங்கெழு புகழினன் மறையக் காண்கிலா
ளுளம்புகுந் தொளித்ததவ் வுருவென் றெண்ணினள்.

இ - ள். விளங்கு - பிரகாசியாநின்ற, இழை - ஆபரணத்தை யணிந்த, ஒருத்தி - ஒரு மாதானவள், பேர் - பெரிய, அணியில் - தன்னாபரணத்தில், வேந்து - அரசனுடைய, எழில் - அழகானது, துளங்கலும் - பிரகாசித்தலும், அதிசயம் - ஆச்சரியம், தோன்ற - உண்டாக, நோக்கினள் - பார்த்தாள்; வளம் கெழு - வளம்பொருந்திய, புகழினன் - கீர்த்தியையுடைய நளன், மறைய - மறைந்து போக, காண்கிலாள் - காணாதவளாகி, உளம் - மனத்தினிடத்து, புகுந்து - நுழைந்து, ஒளித்தது - ஒளித்துக்கொண்டது, அ உரு என்று - அவ்வடிவமென்று, எண்ணினள் - நினைத்தாள், எ - று.

க - து. ஒருத்தி தன்னாபரணத்தில் நளன் வடிவு தோன்றப் பார்த்தாள், நளன் மறைய அவ்வடிவு தன்னுளத்துட் புகுந்ததென் றெண்ணினள் என்பதாம்.

'உளம்புகுந் தொளித்தது' எனலால் நளனுடைய நிழன்மாத்திரம் அவளுடைய அணியினின்றும் நீங்கியதல்லது அந்நளன் அவள் மனத்தைவிட்டு நீங்கவில்லையென்பது கருத்து. [மறைதலில் உளம் புகுதலைக் குறித்தலால் ஏற்குறிப்பணி.] (௫க)

வாட்டிறன் மன்னவன் வனிதை பேரெழி
றீட்டியொண் கதிருமிழ் செய்ய வார்வடஞ்
சூட்டின னகலவிவ் வுருவு தோன்றயார்
கோட்டின ரெனச்சிலர் குறிப்பி னாடுவார்.

இ - ள். வாள் - வாளாயுதத்திலே, திறல் - வல்லமைபெற்ற, மன்னவன் - நளமகாராசனானவன், வனிதை - தமயந்தியினுடைய, பேர் - பெரிய, எழில் - அழகை, தீட்டி - எழுதி, ஒள் - ஒள்ளிய, கதிர் - கிரணங்களை, உமிழ் - உமிழ்கின்ற, செய்ய - சிவந்த, வார் - நெடிய, வடம் - ரத்நமாலைகளை, சூட்டினன் - தரித்தனனாகி, அகல - நீங்க, இ உருவு தோன்ற - இந்த வடிவந்தெரிய, யார் - எவர்கள், கோட்டினர் என-செய்தாரென்று, சிலர் - சிலர்கள், குறிப்பின் - குறிப்பினாலே, நாடுவார் - தேடுவார்கள், எ - று.

க - து. நளன் தமயந்தி வடிவத்தை யெழுதி இரத்தினாபரணஞ் சூட்டிப்போக இவ்வடிவத்தை யாரெழுதினாரென்று சிலர் தேடுவார்கள் என்பதாம்.

விஞ்சையைவிட்டு உருத்தெரிய நிற்பினும் ஒருவராலும் வெல்லக்கூடாமை தோன்ற 'வாட்டிறன் மன்னவன்' என்றும், உருவெழுதுவதிலும் கைபோயவனென்பது தோன்ற 'வனிதைபே ரெழிறீட்டி' என்றும், அவளிடத்தில் மிகுந்த அன்புள்ளவனென்பது தோன்ற 'வடஞ் சூட்டினன்' என்றும், அறிவினால் அவ்வன்பையும் நீக்கினானென்பது தோன்ற 'அகல' என்றும், இப்படிப்பட்ட உருவமெழுதினனைக் காணவேண்டுமென்கிற அவாவினாலும் இவனுருத் தெரியாமையினாலுஞ் 'சிலர் குறிப்பினுடுவார்' என்றுஞ் சொல்லினர். ஒருநாளுங் காணாதவடிவை இவன் எவ்வாறெழுதினனெனில் முன்னே 'வெண்ணகைத் துவர்வா யணங்கெழில் பலரும் விளம்பினர் நின்மொழி யவளென் கண்ணெதிர்ப்பட்டாள்' என்றிருப்பதாலும், அன்னப்புள்ளானது தாமரையிலையி லெழுதிக்காட்டியதென்று வடநூலி லிருத்தலாலுமென்க. (௫உ.)

பூந்துகள் செறிந்தகோ மறுகிற் போகிய
வேந்தரு ளழுந்துமவ் விடங்க ணோக்குறு
மாந்தளிர் மேனியர் வையங் காவல்செய்
வேந்தர்தா ளிலக்கண மேய தென்னென்பார்.

இ - ள். பூந்துகள் - மகரந்தப்பொடிகள், செறிந்த - நெருங்கிய, கோ மறுகில் - அரசவீதியில், போகிய - சென்ற, ஏந்தல் - நளமகாராசனுடைய, தாள் - பாதங்கள், அழுந்தும் - அழுந்துகின்ற, அவ்விடங்கள் - அந்தவிடங்களை, நோக்குறு - பார்த்து, மாந்தளிர் - மாந்தளிர்போன்ற, மேனியர் - வடிவத்தையுடைய மங்கையர், வையம் - உலகத்தை, காவல் செய் - காத்தல் செய்கின்ற, வேந்தர் - அரசருடைய, தாள் - பாதங்களிலிருக்கும், இலக்கணம் - இலக்கணங்கள், மேயது - இவ்வடிச்சுவட்டிற் பொருந்தியது, என் என்பார் - என்ன ஆச்சரிய மென்பார்கள், எ - று.

க - து. மகரந்த நிறைந்த இராஜ வீதியில் நளன் அடிவைத்த விடத்தை மாதர்கள்கண்டு அரசர்க ளடிச்சுவடு பொருந்திய தென்னவென்பார்கள் என்பதாம்.

வேந்தர்தா ளிலக்கணமென்பது சக்கிரரேகை முதலியவாம். அம்மாதர் சாமுத்திரிக நூலிலும் வல்லவராகையால் இது அறிந்தனரென்க. (௫௩)

கள்ளவிழ் கோதைய ரெறிந்த கந்துகம்
வள்ளன்மார் புற்றெதிர் மறிந்து வீழ்தலுந்

தள்ளரு மதிசய மெய்தித் தத்தமில்
வெள்ளிடைப் பட்டிவண் மீண்ட தென்னென்பார்.

இ - ள். கள் அவிழ் - தேனொழுகுகின்ற, கோதையர் - மாலையையணிந்த மாதர், எறிந்த - வீசிய, கந்துகம் - பந்துகள், வள்ளல் - நளமகாராசனுடைய, மார்பு-மார்பினிடத்திலே, உற்று - பொருந்தி, எதிர் - எதிராக, மறிந்து - மறிபட்டு, வீழ்தலும் - வீழ்ந்தவளவில், தள்ளரும் - தள்ளுதற்கரிய, அதிசயம் - ஆச்சரியத்தை, எய்தி - அடைந்து, தத்தமில் - தங்கள் தங்களுக்குள்ளே, வெள்ளிடை பட்டு - வெளியிடத்திற்பட்டு, இவண் - இவ்விடத்தில், மீண்டது - திரும்பியது, என் என்பார் - என்னவென்று சொல்லுவார்கள், எ - று.

க - து. மாதர்களெறிந்த பந்துகள் நளன் மார்பில்பட் டெதிராக விழுந்தமாத்திரத்தில் பெண்களிதென்ன வாச்சரிய மென்பார்கள் என்பதாம்.

எதிர்முக மாயிருந் திருவர் பைந்துணர்ப்
புதுமலர் தொடுத்தலு நடுவட் புக்கவன்
கதுமென வேகலு மறைப்பக் கன்னியர்
மதிமயக் குறமுக மறைத்த தென்னென்பார்.

இ - ள். எதிர் முகமாய் இருந்து-அபிமுகமாகவிருந்து, இருவர்- இரண்டுபேர், பை துணர் - பசிய பூங்கொத்துகளி லிருக்கின்ற, புது மலர் - அன்றலர்ந்த மலரை, தொடுத்தலும் - கட்டலும், நடுவண் - அவருக்கிடையில், புக்கவன் - புகுந்த நளன், கதுமென - விரைந்து, ஏகலும் - போனவளவில், மறைப்ப - மறைக்க, கன்னியர் - அம்மாலை தொடுத்த மாதர்கள், மதி - புத்தி, மயக்கு உற - மயக்கத்தைப்பொருந்த, முகம் மறைத்தது - முகத்தை மறைத்துவிட்டது, என் என்பார் - என்ன ஆச்சரியமென்று சொல்லுவார்கள், எ - று.

க - து. மாலைகட்டு மாதரிருவர் நடுவே நளன் போனவளவில் அம்மாதர்கள் முகத்தை மறைத்துவிட்ட தென்ன வென்பார்கள் என்பதாம்.

[மறைத்தற்குக் காரணமில்லாதிருக்க மறைப்பைச் சொல்லுதலால் பிறிதாராய்ச்சியணி.] (௫௫)

அண்ணறன் மார்பகத் தணிந்த பேரணி
மண்ணிய மணிவயின் வடிவு தோன்றலும்
கண்ணுற நோக்குவாள் கன்னிமா ரொடும்
விண்ணிடை யெனதுரு விளங்க லென்னென்பாள்.

இ - ள். அண்ணல் தன் - நளமகாராசனுடைய, மார்பகத்து - மார்பினிடத்து, அணிந்த - தரித்த, பேர் - பெரிய, அணி - ஆபரணங்களிலுள்ள, மண்ணிய - தெளிந்த, மணிவயின் - மணியினிடத்தில், வடிவு - உருவமானது, தோன்றலும் - தெரிதலும், கண் உற - கண்ணினாற்பொருந்த, நோக்குவாள் - பார்ப்பவளாகிய வொருத்தி, கன்னிமாரொடும் - மாதர்களுடன், விண்ணிடை - ஆகாயத்தினிடத்து, எனது உரு - எனது வடிவம், விளங்கல் - பிரகாசித்தல், என் என்பாள் - என்ன ஆச்சரியமென்று சொல்லுவாள், எ - று.

(க - து.) நளனாபரணத்தில் ஒருத்தி தன் வடிவுதோன்றியவளவில் என் வடிவு வெளியிற் றோன்றியதென்னென்பாள் என்பதாம்.

[வடிவு தோன்றற்குரிய கண்ணாடி முதலியவையின்றி நிழலின் றோற்றஞ் சொல்லப்படுதலால் சிறப்புநிலையணி.] (௬௬)

வெற்பின தெழில்கெட விளங்கு தோளினான்
பொற்பொளிர் பித்திகைப் புறத்திற் றோன்றலு
மற்புத மிதுவென நோக்கி யன்பினாற்
கற்புடை மகளிரு நிலை கலங்கினார்.

இ - ள். வெற்பினது - மலையினது, எழில் - அழகு, கெட - கெடும்படி, விளங்கு - பிரகாசிக்கின்ற, தோளினான் - தோளினையுடைய நளமகாராசனது, பொற்பு - அழகானது, ஒளிர் - பிரகாசிக்கின்ற, பித்திகை புறத்தில் - சுவர்த்தலத்தினிடத்து, தோன்றலும் - தோன்றுதலும், அற்புதம் இது என - அச்சரியமிதுவென்று, நோக்கி - பார்த்து, அன்பினால் - ஆசையினால், கற்புடை மகளிரும் - கற்புடை மாதர்களும், நிலை கலங்கினார் - மயங்கினார்கள், எ - று.

(க - து.) நளன்வடிவு சுவரிற்றோன்ற கற்புள்ள மாதரும் நிலை கலங்கினார்கள் என்பதாம்.

உம்மை உயர்வு சிறப்பு. கற்புடைமகளிர் நிலை கலங்கலுண்டோ வெனின் அழகிற் சிறந்த ஆண்மக்களைக் காணின் உண்டாம். அது "தந்தையாயினும் விழைவிற் றன்னுடனே யொருவயிற்றிற் சார்ந்தாரேனு-மைந்தராயினு மிகவும் வனப்புடையரெனி லவர்மேன்மட நல்லார்தஞ், சிந்தை நடந்திடுமெதனாற் சாம்பன் மலர்க்கணை வேளிற் செவ்விவாய்ந்தோன், பைந்தொடியா ரினிதமரு முவளகத்திற் றனிவருதல் பான்மையன்றே (காசிகண்டம் ௬௫-ஆம் அத்தியாயம்-௬.) இதனாலறிக.

(௬௭)

இழைவளர் முலையினா ரொருவ னேர்பெறு
நிழலிவ ணோக்கின னெனவு நீளிடை
மொழிவன கேட்டன னெனவு மொய்ம்புறத்
தழுவின னென்னவுந் தம்மிற் கூறுவார்.

இ - ள். இழை - ஆபரணத்தோடு கூடி, வளர் - வளர்கின்ற, முலையினார் - முலையையுடைய மாதர்கள், ஒருவன் - ஒரு ஆண்மகனுடைய, ஏர் பெறு - அழகைப்பெற்ற, நிழல் - நிழலை, இவண் - இவ்விடத்தில், நோக்கினன் எனவும் - பார்த்தேனென்றும், நீளிடை - இந்நீண்ட விடத்தில், மொழிவன - பேசுவனவற்றை, கேட்டனன் எனவும் - கேட்டேனென்றும், மொய்ம்பு உற - தோள்கள் பொருந்த, தழுவினன் எனவும் - தழுவினேனென்றும், தம்மில் - தங்களுக்குள்ளே, கூறுவார் - பேசிக்கொள்ளுவார்கள், எ - று.

க - து. மாதர்கள் ஒருவனிழலைக் கண்டேனென்றும் ஒருவன் சொல்லைக் கேட்டேனென்றும் ஒருவனைத் தழுவினேனென்றும் சொல்லிக்கொள்வார்கள் என்பதாம். (௬அ)

[இதுமுதல் ஐந்துபாட்டுகளால் வழியில்கண்ட தமயந்தியோடு நாணுந்தண்டாகிய செய்கை சொல்லப்படுகின்றது.]

இன்னிசை யளிபயில் பொழிலி னேந்தன்முன்
பொன்னவிர் முலைத்தம யந்தி போதலு
மன்னமுன் கூறிய வற்றை நாண்முதன்
முன்னுறு முருவென முன்னி னானரோ.

இ - ள். இன் - இனிய, இசை - இசையைப்பாடும், அளி - வண்டுகள், பயில் - சஞ்சரிக்கின்ற, பொழிலின் - சோலையிடத்தில், ஏந்தல் - நளமகாராசன், முன் - தன்னெதிரே, பொன் - பொன்னையொத்த, அவிர் - பிரகாசியாநின்ற, முலை - முலையையுடைய, தமயந்தி - தமயந்தியானவள், போதலும் - வருதலும், அன்னம் - அன்னப்புள்ளானது, முன் கூறிய - முன் சொல்லிய, அற்றை நாள் முதல் - அன்றையநாள்முதலாக, முன் உறும் - எதிரே தோன்றுகிற, உரு என - உருவெளித் தோற்றமென்று, முன்னினன் - நினைத்தான், எ - று. அரோ - அசை.

- து. சோலையில் நளன்முன்னே தமயந்தி வருதலும் அவளுருவெளியென் றெண்ணினான் என்பதாம்.

[அன்னத்தின் சொல்லால் நாடோறும் காண்கின்ற தமயந்தியினுருவெளித் தோற்றத்திற்கும் மெய்யாகக்கண்ட தமயந்திக்கும் அங்

னம் வேற்றுமை தோற்றுமைகூறப்படுதலால் மறைவணி.] நாடோறுங் கண்டது பொய்யாகவே யிக்காட்சியிலு மிவ்வாறு மருபுண்டாயிற்றென்க. (ருகூ)

மடவர லுருவெளி மன்னன் றோண்மிசை
யிடையறு விழைவுட னென்றுஞ் சூட்டல்போன்
மிடைமலர்ப் பூந்தொடை சூட்ட மேவிய
சுடரிலை வேலினான் றோளில் வீழ்ந்ததே.

இ - ள். மடவரல் - தமயந்தியானவள், உருவெளி - உருவெளியாய்த்தோன்றிய, மன்னன் - நளமகாராசனுடைய, தோண்மிசை - தோளின்மேல், இடையறு - இடைவிடாத, விழைவுடன் - ஆசையுடனே, என்றும் - என்றைக்கும், சூட்டல்போல் - சூட்டுதல்போல, மிடை - நெருங்கிய, மலர் - மலராற்றொடுத்த, பூ தொடை - பூமாலையை, சூட்ட - தரிக்க, மேவிய - அங்கிருக்கின்ற, சுடர் - காந்தி பொருந்திய, இலைவேலினான் - இலைபோன்ற வேற்படையையுடைய நளமகாராசனுடைய, தோளில் - புயங்களில், வீழ்ந்தது - விழுந்தது, எ - று.

க - து. தமயந்தியானவள் உருவெளித் தோற்றமென்று மாலை சூட்ட அம்மாலை நளனுடைய தோளில் விழுந்தது என்பதாம். (சுo)

உருவெளி யாகயான் கண்ட வொண்ணுதன்
மருமலர் மாலிகை வனைந்த தென்னென
வரசனு மெண்ணின னவளுஞ் சூட்டிய
தெரியல்காண் கிலனெனத் தெருமந் தாளரோ.

இ - ள். உருவெளி ஆக - உருவெளித் தோற்றமாக, யான் கண்ட - என்னாற் காணப்பட்ட, ஒள் நுதல் - ஒள்ளிய நெற்றியையுடைய தமயந்தியானவள், மரு மலர் மாலிகை - வாசனைபொருந்திய பூமாலையை, வனைந்தது என் என - சூட்டியதென்ன காரணமென்று, அரசனும் - நளமகாராசனும், எண்ணினன் - நினைத்தான்; அவளும் - அத்தமயந்தியும், சூட்டிய - தரித்த, தெரியல் - மாலையை, காண்கிலன் என - கண்டிலேனென்று, தெருமந்தாள் - மனஞ்சுழன்றாள், எ - று.

க - து. உருவெளியாகக் காணப்பட்ட தமயந்தி மாலைசூட்டியதென்னவென்று நளன் எண்ணினான். தமயந்தி மாலையைக் காணேனென்று மயங்கினாள் என்பதாம்.

நளன் நாள்தோறும் கண்டவிடத்தில்லாம லிப்போது சூடியது புதுமையாதலால் இது என்னவெனவியந்தான். தமயந்தியும்நாடோறுஞ் சூடிய மாலே தெரிய இதுமாத்திர மறைதலால் என்ன மாயமென்று திகைக்கிட்டாளென்க. (சுக)

முருகவிழ் குழலினா டனையு முன்னுறு
முருவெளி யெனவிறை யுவந்து புல்லினா
னரிவையு மன்னவா றெண்ணி யாங்கெதிர்
புரவலன் மார்புறப் புல்லி னாளரோ.

இ-ள். முருகு அவிழ்-வாசனை வீசுகின்ற, குழலினாள் தனையும்-கூந்தலையுடைய தமயந்தியையும், முன் உறும் - முன்னே தோன்றுகின்ற, உருவெளி என - உருவெளித் தோற்றமென்று, இறை - நளமகாராசன், உவந்து - மகிழ்ச்சியை யடைந்து, புல்லினான் - தழுவினான்; அரிவையும் - தமயந்தியும், அன்னவாறு - அந்தப்பிரகாரம், எண்ணி - நினைத்து, ஆங்கு - அவ்விடத்திலே, எதிர் - எதிரேவந்த, புரவலன் - அரசனுடைய, மார்பு உற - மார்புபொருந்த, புல்லினாள் - தழுவினாள், எ - று.

க - து. நளன் உருவெளித் தோற்றமென்று தமயந்தியைப் புணர்ந்தான். தமயந்தியு மப்படியே நினைத்து நளனைப் புணர்ந்தாள் என்பதாம்.

தமயந்தியை யுண்மையாகக் கண்ட நளன் உருவெளியென மயங்கினானென்றும் அவ்வாறின்றி உருவெளியாகக் கண்ட தமயந்தியானவள் நளனை யுண்மையென்றுன்னிப் புல்லினாளென்றுங்கொள்க. [தெய்வவரத்தினா லிவனுருவை யறியாளாகலின் ஒருவர்க்கொருவர் மயக்கஞ் சொல்லப்பட்டமையால் மயக்கவணி.] (சுஉ)

சொல்லரு மின்பமீ தூரத் தோன்றலும்
புல்லுவிட் டவ்வுருப் பொலிவு நோக்கினான்
மெல்லிய லவ்வுரு விழியிற் காண்குறூ
தல்லலுற் றணிவளை யங்கை நீக்கினாள்.

இ - ள். சொல் அரும் - சொல்லுதற்கரிய, இன்பம் - இன்பமானது, மீதூர - அதிகரிக்க, தோன்றலும் - நளனும், புல்லுவிட்டு - தழுவுதலைநீக்கி, அவ்வுரு - அந்த வடிவினுடைய, பொலிவு - காந்தியை, நோக்கினான் - பார்த்தான்; மெல்லியல் - தமயந்தியானவள், அ உரு - அந்த வடிவத்தை, விழியில் - கண்ணினால், காண்குறூஉ - கண்ணுதவளாகி, அல்லல் உற்று-பயத்தையடைந்து, அணி வளை-அழகிய வளையலை யணிந்த, அம் கை-அழகிய கையை, நீக்கினாள் - விடுத்தாள், எ - று.

க - து. நளன் இன்பந்தோன்றப் புணர்ந்து தமயந்தி வடிவத்தைப் பார்த்தான். தமயந்தி அவ்வடிவத்தைக் காணாது கையை விட்டாள் என்பதாம்.

மாதர்கட்கு அச்சம் உரியகுணமாகலின் உருவு கண்ணிற்றோன்றாது கையிலகப்படலா லிவ்வாறு வெருவி விடுத்தனளென்க. (சுரு)

[இனி ஒவ்வொருபாட்டா லவ்விருவர் செய்கையும் வெவ்வேறு சொல்லல்.]

பொன்னடிப் பூஞ்சிலம் பொலிப்ப மேகலை
யின்னரிக் கிண்கிணி யிகலி யார்ப்பெழ
மின்னடை கற்பது போன்று மெல்லெனத்
தன்னமர் கோயிலுட் டையலெய்தினாள்.

இ - ள். பொன் - பொன்னினாற் செய்த, அடி பூ சிலம்பு - பாதத்திலணிந்த அழகிய சிலம்புகள், ஒலிப்ப - ஒலித்தலைச்செய்ய, மேகலை - மேகலையி லிருக்கின்ற, இன் - இனிய, அரி - பருக்கைக் கல்லையுடைய, கிண்கிணி - சதங்கைகள், இகலி - ஒன்றோடொன்று தாக்கப்பட்டு, ஆர்ப்பு எழ-ஒலியெழும்ப, மின் - மின்னல், நடை கற்பது போன்று - நடத்தலைக்கற்பதொத்து, மெல்லென - மிருதுவாக, தன் - தன்னுடைய, அமர் - அமர்கின்ற, கோயிலுள் - கன்னிமாடத்தில், தையல் - தமயந்தியானவள், எய்தினாள் - அடைந்தாள், எ-று.

க - து. தமயந்தி கன்னிமாடத்திற் சேர்ந்தாள் என்பதாம்.

தையல் கைபுனையப்பட்டவள். [தற்குறிப்பணி.] (சுசு)

கருந்தடங் கண்ணியைக் கையிற் புல்லியும்
பொருந்திய வுருவெளி யென்று போக்கிநல்
லருந்தனம் பெற்றிழந் தாரி லையனும்
வருந்தித்வெந் துயரொடு மதி மயங்கினான்.

இ - ள். கரு - கரிய, தடம் - விசாலம்பொருந்திய, கண் கண்களையுடைய தமயந்தியை, கையில் புல்லியும்-கையினாலே தழுவியும், பொருந்திய - பொருந்தப்பெற்ற, உருவெளி என்று - உருவெளித் தோற்றமென்று, போக்கி - விட்டு, நல் - நல்ல, அருதனம் - அரியதிரவியத்தை, பெற்று - எளிதிற்பெற்று, இழந்தாரில் - இழந்தவர்களைப்போல, ஐயனும் - நளமகாராசனும், வருந்தி - வருத்தமடைந்து, வெந்துயரொடு - வெவ்விய துன்பத்துடன், மதி மயங்கினான் - புத்தி மயங்கினான், எ - று.

க - து. நளன் கைப்பொருளிழந்தவர்கள் போலத் தமயந்தியைப் புணர்ந்து துன்புற்று மயங்கினான் என்பதாம்.

பின் நடக்கைகளால் நளன் மெய்த்தமயந்தியென்றறிந்து வருந் திஞனென்க. [அருந்தனம் பெற்றிழந்தாரில் என்றமையால் உவமை யணி.] (சுரு)

[நளன் கன்னிமாடத் தடைதல்.]

பாணிகர் வண்டினம் பாடுஞ் சோலையுஞ்
சேணுற நிவந்தசெய் குன்றுந் தேடியுங்
காணல ஞகிய களிநல் யானையான்
மாணிழை யுறைதரு மாட மெய்திஞன்.

இ - ள். பாண் - இசைப்பாட்டுக்கு, நிகர் - நிகராக, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், பாடும்-பாடுகின்ற, சோலையும் - சோலை யிடத்திலும், சேண் - ஆகாயத்தில், உற - பொருந்த, நிவந்த - உய ர்ந்த, செய் குன்றும் - கட்டுமலையினிடத்திலும், தேடியும் - தேடுதல் செய்தும், காணலஞகிய - காணுதவஞகிய, களிநல் யானையான் - நளமகாராசாவானவன், மாணிழை - தமயந்தி, உறைதரும் - வசிக் கின்ற, மாடம் - கன்னிமாடத்தை, எய்திஞன் - அடைந்தான், எ - று.

க - து. நளன் தமயந்தி கன்னிமாடத்திற் சேர்ந்தான் என்ப தாம்.

இவ்வளவுகால மிவ்விடந்தோறும் தேடியறியாத நளன் தமயந்தி சென்ற நெறிபற்றி யவளுறைையுமிடத்துச் சென்ருனென்க. மாணி ழை-ஆகுபெயர். (சுசு)

[தமயந்திக் காட்சி.]

மின்னிடை யரம்பையர் குழாத்துண் மேவிய
வன்ன மென்னடை யயிராணி யாமென
நன்னுதன் மடந்தையர் நாப்ப ணின்னகைக்
கன்னிவீற் றிருத்தல்கண் களிப்ப நோக்கிஞன்.

இ - ள். மின் - மின்னலையொத்த, இடை - இடையையுடைய, அரம்பையர் குழாத்துள்-தெய்வமாதருடைய கூட்டத்துள், மேவிய - பொருந்திய, அன்னம் - அன்னநடைபோன்ற, மெல் - மெல்லிய, நடை - நடையையுடைய, அயிராணியாம் என - இந்திராணியாமெ ன்று சொல்லும்படி, நல் - நல்ல, நுதல் - புருவத்தையுடைய, மடந் தையர் - மாதர்களுடைய, நாப்பண் - நடுவே, இன் - இனிய, நகை - புன்சிரிப்பையுடைய, கன்னி - தமயந்தியானவள், வீற்றிருத் தல் - வீற்றிருத்தலை, கண்களிப்ப - கண்களிக்க, நோக்கிஞன் - பார்த்தான், எ - று.

க - து. நளன் தமயந்தியைக் கண்டான் என்பதாம்.

[அயிராணியாமென வென்றமையால் உவமையணி] (கஎ)

[தன்னூரைத்தையுறல்.]

மண்டமர் கடந்தவே னளன்வந் தானெனத்
தொண்டைவாய் மடந்தையர் நாளுஞ் சொல்வன
பண்டரு மொழிக்கிளி பயின்று கூறலுங்
கண்டதோ விஃதெனக் காளை யெண்ணினான்.

இ - ள். மண்டு - நெருங்கிய, அமர் - போரை, கடந்த - வென்ற, வேல் - வேற்படையையுடைய, நளன் வந்தான் என-நளமகாராசன் வந்தானென்று, தொண்டை வாய்-கொவ்வைக்கனிபோன்ற வாயையுடைய, மடந்தையர் - மாதர்கள், நாளும் - நாடோறும், சொல்வன - சொல்வனவற்றை, பண்டரும் - இசையைத்தருகின்ற, கிளி - கிளிப்பிள்ளை, பயின்று - பழகி, கூறலும் - சொன்னவளவில், இஃது - இந்தக்கிளிப்பிள்ளை, கண்டதோ என - பார்த்ததோவென்று, காளை - நளமகாராஜன், எண்ணினான் - நினைத்தான், எ - று.

க - து. கிளி வழக்கமாக நளன் வந்தானென்று சொல்ல நளன் இது தன்னை யறிந்ததென்று சந்தேகித்தான் என்பதாம்.

தொண்டை - முதலாகுபெயர். தமயந்தி வருந்துங்காலத்து அது தீர்ந்து மனங்களிக்க நளன் வந்தானென்று தோழிகள் சொல்லுஞ் சொல்லைக்கேட்டு அவள் கையிலிருக்குங் கிளிப்பிள்ளை சொல்லுவதாகவி னிவ்வாறு கூறிற்று. தெய்வவரத்தால் மறைந்து வந்த நம்மை யிது எவ்வாறு கண்டதென்று சிந்தித்தானென்க. யார் எதை யுரைப்பினும் குற்றமுடையோர் தம்மையாமென்று எண்ணுவரென்பது கருத்து. [தன்மைநவிற்சியணி.] (கஅ)

[இனி இரண்டுபாட்டால் நளன் மகிழ்ச்சியையடைதல் சொல்லப்படுகின்றன.]

ஒருத்தியா னளனென விருப்ப வுள்ளுறும்
விருப்பினா லொருத்தியான் வியன் மாதென
மருக்கமழ் பூந்தொடை சூட்ட மன்னவன்
பொருப்புறழ் தடம்புயம் புளகம் பூத்தவே.

இ - ள். உள்ளுறும் - உள்ளே யிருக்கின்ற, விருப்பினால் -

இருப்ப-ஒருமங்கை யிருக்க, ஒருத்தி - வேறொரு மங்கையானவள், யான்-நான், வீமன் மாது என-தமயந்தியென்று சொல்லி, மருகமழ்-வாசனை கமழ்கின்ற, பூ தொடை - மலர்மாலையை, சூட்ட - தரிக்க, மன்னவன்-நளமகாராஜனுடைய, பொருப்பு உறழ்-மலையையொத்த, தடம் - பருத்த, புயம்-தோள்களானவை, புளகம் பூத்த - மயிர்க்குச் செறிந்தன, எ - று.

க - து. ஒருத்தி நளனாகவும் மற்றொருத்தி தமயந்தியாகவும் மாலைசூட்டக்கண்ட நளன் மகிழ்ந்தான் என்பதாம்.

நளனுக்கே தமயந்தி மாலைசூடுதற்குச் சந்தேகமில்லையென்னுந் தெளிவாலும், அவனுக்கே சூட்டவேண்டுமென்கிற ஆர்வத்தாலும் அவ்வார்வ முற்றுப்பெறுந்துணையும் பொறுக்கமாட்டாத மங்கையர் தமக்குள்ளே அவ்வாறு செய்தேனும் நோக்குவோ மெனுமன்பால் நாடோறுஞ் செய்துவருகையில் அன்றுஞ் செய்தனராக அது கண்ட அவனுக்குத் தன்னிடத்து ஆர்வம் வைத்தமை தெரிந்து தனக்கே மாலைசூட்டுவாளென்னுந் தேற்றத்தால் தோள்கள் புளகம் பூத்தன வென்க. (சுக)

மலர்ந்தசெந் தாமரைமென் மடலின் மேற்றனக்
கிலங்கிழை யுகிரினா லெழுது பாசுர
நலம்பெறக் காண்டலு நண்ண லார்புக
ழுலம்பொரு தோளினா னுவகை யெய்தினான்.

இ - ள். மலர்ந்த - விரிந்த, செந்தாமரை மடலின் மேல்-சிவந்த தாமரையினுடைய மெல்லிய விதழின்மேல், தனக்கு - தனக்கு, இலங்கிழை - தமயந்தியானவள், உகிரினால் - நகத்தினாலே, எழுது - எழுதப்பட்ட, பாசுரம் - செய்யுளை, நலம் பெற - நன்மைபெற, காண்டலும் - பார்த்தவளவில், நண்ணலார் - பகைவரால், புகழ் - புகழப்பட்ட, உலம் - திரள் கல்லை, பொரு - ஒத்த, தோளினான் - தோள்களையுடைய நளமகாராசன், உவகை - சந்தோஷத்தை, எய்தினான் - அடைந்தான், எ - று.

க - து. தமயந்தி தாமரை மடலிலே நகத்தினாலே நளன்றனக் கெழுதும் வசனங்களைப் பார்த்தவளவில் மகிழ்ச்சி யடைந்தான் என்பதாம்.

தமயந்தி நாடோறுந் தன்னுடைய வருத்தத்தை எழுதிக்கொள்ளவேண்டுமென்கிற அன்புடையவளா யிருந்துஞ் சில இடையூறுகளால் ஒத்துக்கொள்ளாமையால் அவ்வன்பை யொருவாறு நிறை

வேற்றற்பொருட்டுத் தாழைமடலிலே தனக்கெழுதிக்கிடந்த செய்யுளைக் கண்டு நளன் மகிழ்ச்சியடைந்தனனென்க. (எ0)

[நளனிழல் வடிவால் மாதர்மனம் பேதியாமை.]

செழுமணிப் பித்திகைத் தலத்திற் றீதறு
மழவிடை யனையவன் வடிவந் தோன்றலுங்
கழையமை தோளினர் காளை பேரெழி
லெழுதிய வுருவிலொன் றென்ன வெண்ணினர்.

இ - ள். செழு மணி - செழுமையுள்ள மணிகள் பதித்த, பித்திகை தலத்தில் - சுவர்த்தலத்தில், தீது அறு-குற்றமற்ற, மழ-இளமை பொருந்திய, விடை அனையவன் - இடபத்தையொத்த நளமகாராசனுடைய, வடிவம் - உருவம், தோன்றலும் - தெரிந்தவளவில், கழை-மூங்கில்போல, அமை - பொருந்திய, தோளினர் - தோளையுடைய மாதர்கள், காளை - நளமகாராசனுடைய, பேர் - பெரிய, எழில் அழகை, எழுதிய - தம்மா லெழுதப்பட்ட, உருவில் - வடிவத்தில், ஒன்று என்ன-ஒரு வடிவென்று, எண்ணினர்-நினைத்தார்கள், எ-று.

க - து. இரத்தினச் சுவரில் நளன் வடிவு தோன்றிய வளவில் பெண்கள் எழுதிய வுருவி லொன்றென் றெண்ணினார்கள் என்பதாம்.

மந்திரத்தால் நளன் மறைந்திருப்பினும் அவன்வடிவந் தோன்றுமாகையால் அதைச் சுவர்த்தலத்திற்கண்ட மங்கையர் அந்தப்புரத்தில் ஒருவன் வந்தனனென்னு நினைப்பு அணுத்துணையுமின்றித் தமயந்தி முதலிய தாங்கள் பார்க்கும்பொருட்டுச் சித்திரத்திருக்கும் நளவடிவங்களிலே இவனையும் ஒன்றென மதித்திருந்தனரென்க. ஆதலால் நளன் வடிவு கட்டழகுள்ளதன்றி அவ்வாறு சித்திரித்தலும் அருமையென்பது கருத்து. [அவ்விடத்துச் சித்திரத்தோடு நளனுடைய நிழலுக்கு வேற்றுமையின்மை கூறப்பட்டமையால் பொதுமையணி.] ()

[அழகினுற் றமயந்தி தன்னைத் தேரிந்தல்.]

நாமவேல் வலனுயர் நளனுக் காங்கமர்
வாமமே கலையினர் நடுவண் வைகுவா
டாமமார் குழற்றம யந்தி யென்றவள்
காமரு பேரெழில் காட்டு கின்றதே.

இ - ள். நாமம் - அச்சத்தைத் தருகின்ற, வேல் - வேற்படையால், வலன் உயர் - வெற்றிமிகுந்த, நளனுக்கு - நளமகாராசனுக்கு,

ஆங்கு - அவ்விடத்தில், அமர் - அமர்ந்த, வாமம் - அழகிய, மேகலை யினார் - மேகலாபரணத்தையுடைய மகளிருடைய, நடுவண் - நடுவே, வைகுவாள் - இருப்பவள், தாமம்-மாலைகள், ஆர் - நிறைந்த, குழல் - கூந்தலையுடைய, தமயந்தி என்று - தமயந்தியென்னும் பெயரை யுடையவளென்று, அவள் - அவளுடைய, காமர் - ஒளிபொருந்திய, பேர் - பெரிய, எழில் - அழகானது, காட்டுகின்றது - காண்பிக்கின் றது, எ - று.

க . து. அழகினால் தமயந்தியென் றறியப்பட்டது என்பதாம்.

காமரு என்பதில் உகரம் சாரியை. (எ௨)

[இது கவிக்கூற்று.]

ஏதமில் குணத்தினா னினைய னாகநண்
டாதவிழ் பூங்குழற் றையல் பாற்றம
தாதரம் பெருகிய வமர ரேவிய
தூதியர் செய்திறஞ் சொல்லு வாமரோ.

இ - ள். ஏதம் இல் - குற்றமற்ற, குணத்தினான் - குணத்தை யுடைய நளமகாராசன், இனையன் ஆக-இத்தன்மையையுடையவனாக, நண் - நட்பமாகிய, தாது - மகரந்தப் பொடிகள், அவிழ் - உதிர் கின்ற, பூ - மலரை யணிந்த, குழல் - கூந்தலையுடைய, தையல்பால் - தமயந்தியிடத்தில், தமது - தம்முடைய, ஆதரம் - ஆசையானது, பெருகிய - மிகுந்த, அமரர் - தேவர்களால், ஏவிய - ஏவப்பட்ட, தூதியர் - தூதிகள், செய் திறம் - செய்த வகையை, சொல்லுவாம் - சொல்லுவாம், எ - று. அரோ - அசை.

க-து. இப்படியிருக்கத் தேவர்களால் ஏவப் பட்ட தூதிகள் செய்கையைச் சொல்லுவாம் என்பதாம்.

[இனிப் பதினெரு பாட்டால் இந்திரன் முதலிய நால்வரா லேவப்பட்ட தூதிகள் தமயந்தியோடு பேசி மீளுதல் சொல்லப்படுகின்றன.]

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

கானமர லங்கன் மாலைக் கடவுளர் விடுப்ப வந்த
பானலங் கடந்த தீஞ்சொற் பணைமுலைப் பாவை நல்லா
ருடனுடு பழகி மெய்த்தே ருமிழ்ந்துவெம் புலவு நாறு
மானவேல் விம னீன்ற வனிதையை யினிது கண்டார்.

இ - ள். கான் - வாசனை, அமர் - பொருந்திய, அலங்கல் - அசையாநின்ற, மாலை - மாலையையுடைய, கடவுளர் - தேவர்களால், விடுப்ப - அனுப்பப்பட, வந்த - வந்த, பால் - பாலினுடைய, நலம் - நன்மையை, கடந்த - வென்ற, தீ - தித்திப்புப்பொருந்திய, சொல் - சொல்லையும், பணை - பருத்த, முலை - முலையையுமுடைய, பாவை நல்லார் - பாவைபோலுமிருக்கின்றமாதர், ஊனொடு - மாமிசத்துடன், பழுபி - பழுகுதல் செய்து, நெய்த்தோர் உமிழ்ந்து - உதிரத்தையுமிழ்ந்து, வெம் - வெம்மைபொருந்திய, புலவு - புலாலுற்றம், நாறு - நாறுகின்ற, மான - ஒப்பற்ற, வேல் - வேற்படையையுடைய, வீமன் ஈன்ற - வீமராசன் பெற்ற, வனிதையை - தமயந்தியை, இனிது - இனிதாக, கண்டார் - கண்டார்கள், எ - று.

கு - து. தேவர்கள் விடுக்கப்பட்ட தூதிகள் தமயந்தியைக் கண்டார்கள் என்பதாம். (எச)

பொருவரு வனப்பின் மிக்க புலோமசை முதல்வ ராய
வரிவிழிக் குமுதச் செவ்வாய் வானவர் மகளிர் தாமித் [று
தெரியிழை செவ்வி நோக்கிற் சேணிடைப் பொலிந்து தோன்
மிரவிமுன் மதிய மாவ ரெனவுளத் தெண்ணி னரால்.

இ - ள். பொரு அரு - ஒப்புச் சொல்லுதற்கரிய, வனப்பின் - அழகினாலே, மிக்க - மிகுந்த, புலோமசை முதல்வராய - இந்திராணி முதலியராகிய, வரி - இரேகைகளையுடைய, விழி - கண்களையும், குமுதம் செவ்வாய் - அல்லி மலர்போன்ற சிவந்த வாயினையுமுடைய, வானவர்மகளிர் - தெய்வமாதர், இ தெரியிழை - இந்தத் தமயந்தியினுடைய, செவ்வி - அழகை, நோக்கில் - பார்த்தால், சேண் இடை - ஆகாயத்தினிடத்து, பொலிந்து - பிரகாசித்து, தோன்றும் - தோன்று கின்ற சூரியனுடைய முன்னே, மதியம் ஆவர் என - சந்திரன் போலாவரென்று, உளத்து - (தூதியர்) எண்ணினார் - , எ - று. தாம், ஆல் - அசைகள்.

க - து. தமயந்தி அழகுக்கு முன்னே தேவமாதரழகு சூரியன் முன்னே தோன்றுஞ் சந்திரன்போலும் என்றெண்ணினார்கள் என்பதாம்.

தெய்வமாதரிற் சிறந்த இந்திராணி முதலான மங்கையரும் இவளழகை நோக்கில் தாமழகுடையோமென்னுஞ் செருக்கை யொழிவார்களென்பது கருத்து.

(எரு)

எய்திய மகளிர் தம்மி லிமையவர் தலைவன் றூதி [ய்
யையரி நெடுங்கட் செவ்வா யணங்கிற்கு மணங்கு போல்வா

கொய்துணர்த் தருவி னீழற் கோமகன் பணியாற் போந்த
செய்திநீ கேட்டியென்று சீறடி வணங்கிச் சொல்வாள்.

இ - ள். எய்திய - அடைந்த, மகளிர் தம்மில் - தூதியர் நால்வருள், இமையவர் தலைவன் - இந்திரனுடைய, தூதி - தூதியானவள், ஐ - அழகிய, அரி - இரேகைகளையுடைய, நெடு கண் - நெடிய கண்களையும், செவ்வாய் - சிவந்த வாயினையுமுடைய, அணங்கிற்கும் - தெய்வ மங்கைக்கும், அணங்குபோல்வாய் - தெய்வமாதையொத்த தமயந்தியே, கொய் - கொய்கின்ற, துணர் - பூங்கொத்துகளையுடைய, தருவின் நீழல்-ஐந்தருவி னிழலிலிருக்கின்ற, கோமகன் - இந்திரனுடைய, பணியால் - ஏவலினாலே, போந்த - வந்த, செய்தி - செய்தியை, நீ கேட்டி என்று - நீ கேட்பாயாகவென்று, சீறடி - சிறிய பாதங்களை, வணங்கி - வணங்குதல் செய்து, சொல்வாள் - சொல்வாள், எ - று.

து. இந்திரன் தூதியானவள் தமயந்தியைவணங்கிச் சொல்வாளாயினாள் என்பதாம்.

தான் தெய்வமங்கையாயினும் தன்னிறைவனுக்குத் தலைவியாக் குவிக்கத் தூதியாக வந்தமையால் தமயந்தியினிடத்து அவளுக்கு வணக்கஞ் சொலல்லப்பட்டது. (எசு)

இருவிசும் பொருகோ லோச்சி யெதிலர்க் கடந்து தேவர்
பரவிநின் றிறைஞ்ச நாளும் பனிமலர்த் தருவி னீழ
லரியணைப் புறத்து வைகு மண்ண லுக் கமிர்த மன்னா
யுருவிலா னொருவன் செய்யு முறுபகை காத்தல் வேண்டும்.

இ - ள். இரு - பெரிய, விசும்பு - வானுலகை, ஒருகோல் ஓச்சி - ஒரு செங்கோல் செலுத்தி, ஏதிலர் - சத்துருக்களை, கடந்து - வென்று, தேவர் - தேவர்கள், பரவிநின்று - துதிசெய்து நின்று, இறைஞ்ச - வணங்க, நாளும் - நாடோறும், பனி - குளிர்ச்சிபொருந்திய, மலர் - மலரானிறைந்த, தருவின் நீழல்-ஐந்தருவினிழலில், அரியணை புறத்து - சிங்காதனத்தினிடத்து, வைகும் - தங்கிய, அண்ணலுக்கு - இந்திரனுக்கு, அமிர்தம் அன்னாய் - அமிர்தத்துக் கொப்பானவளே, உருவு இலான்-வடிவமில்லாதவனாகிய, ஒருவன் - மன்மதனானவன், செய்யும் - செய்கின்ற, உறு - மிகுந்த, பகை - பகையை நீக்கி, காத்தல் வேண்டும் - (நீ) காக்கவேண்டும், எ - று.

க - து. இந்திரனுக் கமிர்தம்போன்ற தமயந்தியே! நீ மன்மதபாணத்தை நீக்கிக் காக்கவேண்டுமென்றாள் என்பதாம்.

இதுமுத லைந்துபாட்டால் தூதி தமயந்தியை வேண்டிக்கோடல். 'இருவிசும்பு' என்றதனால் பொன்னுலகென்பதும், 'ஒருகோலோச்சி' என்றதனால் பொதுவறப் புரப்பவனென்பதும், 'எதிலர்க்கடந்து' என்றதனால் வீரனென்பதும், 'தேவரிறைஞ்ச' என்றதனால் அவரினுஞ் சிறந்தோனென்பதும், 'தருவினீழல்' என்றதனால் மிகுந்த செல்வமுடையோனென்பதும், 'அறியணைப் புறத்து' என்றதனால் அரசு செய்பவனென்பதும், 'அண்ணல்' என்றதனால் பெருமையிற் சிறந்தோனென்பதும் கருத்தாகப் பெற்றாம். [இந்திரனை மணம்புரிவாயென்பது உருவிலான் செய்யும்பகையை யொழித்தல் வேண்டும் என்னும் வாக்கியத்தாற் பெறப்படுதலால் பிறிதுநவிற்சியணி.] (எஎ)

எம்மிறை யிளவற் காக விருங்கடல் கடைந்து வாசச்,
செம்மலர்த் திருவை யீந்த தேவர்வா சவற்கு மின்னுங்,கைம்
மலர் வருந்த விக்குக் கடல்கடைந் துழலா வண்ணம், பொம்
மல்வெம் முலையா யன்னோற் கின்னருள் புரிதல் வேண்டும்.

இ - ள். எம்மிறை - எங்களரசனுடைய, இளவற்காக - உபேந்திரனுக்காக, இரு - பெரிய, கடல் கடைந்து - பாற்கடலைக் கடைந்து, வாசம் - வாசனைபொருந்திய, செம்மலர் திருவை - செந்தாமரைமலரி லிருக்கின்ற திருமகளை, ஈந்த - தந்த, தேவர் - தேவதைகள், வாசவற்கும் - இந்திரனுக்கும், இன்னும் - இன்னமும், கைமலர் வருந்த - கைகளாகிய மலர்கள் வருந்த, இக்கு கடல் கடைந்து - கருப்பிரதக்கடலைக் கடைந்து, உழலா வண்ணம் - அலையாதவிதம், பொம்மல் - பொலிவினையுடைய, வெம் - விரும்பத்தக்கவாகிய, முலையாய் - முலைகளையுடைய தமயந்தியே, அன்னோற்கு - அவ்விந்திரனுக்கு, இன் அருள் - இனியவருளை, புரிதல் வேண்டும் - (நீ) செய்தல்வேண்டும், எ - று.

க - து. இந்திரனுக் கருள்செய்ய வேண்டுமென்றாள் என்பதாம்.

இங்கு இளவலென்பது இந்திரனுக்குச் சயந்தருவதற்காக அவன் தம்பியா யவதரித்து உபேந்திரனாகி யுடனிருக்கின்ற திருமாலையெனக்கொள்க. [தேவர்க்கு இம்முயற்சி யில்லாதிருக்கவும் அவர்க்குளதாகக் கூறலால் உயர்வு நவிற்சியணி.] (எஅ)

மாயிரு ஞாலந் தன்னின் மகம்பல வியற்றிப் பெற்ற
மீயுயர் பசும்பொ னாட்டின் மேதகு செல்வ மெல்லா
மேயின நின்பா லன்றோ விமையவர்க் கிறைவன் பாணிச்
சேயரிக் கடைக்க ணோக்கஞ் சிறிதருள் புரியின் மாதோ.

இ - ள். மா - மகத்தாகிய, இரு - பெரிய, ஞாலம் தன்னின் - பூமியிலே, மகம் பல இயற்றி - நூறு வேள்விசெய்து, பெற்ற-பெற்றுக்கொண்ட, மீ - மேலாக, உயர் - உயர்ந்த, பசு - பசுமைபொருந்திய, பொன் நாட்டின் - பொன்னுலகத்தில், மேதகு - மேன்மை பொருந்திய, செல்வம் எல்லாம் - பாக்கிய மெல்லாம், நின்பால்-உன்னிடத்தில், ஏயின அன்றோ-பொருந்தியனவல்லவா; இமையவர்க்கு இறைவன்பால் - இந்திரனிடத்தில், நின் - உன்னுடைய, சேயரி - செவ்வரிபரந்த, கடைக்கண் நோக்கம் - கடைக்கண் பார்வையானது, சிறிது - கொஞ்சம், அருள்புரியின் - அருள்செய்தால், எ - று.

க - து. உன் கடைக்கண் பார்வை சிறிது இந்திரனிடத்தில் வைத்தால் அவன் செல்வமெல்லாம் உனக்குடையவாம் என்றான் தூதி என்பதாம்.

செல்வமாவன-மூவுலகாட்சி,கற்பக முதலிய ஐந்தருக்கள்,காமதேனு, சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி, பொன்னுலகம், அமராவதி, வைசயந்தமாளிகை, ஐராவதயானை, உச்சைச்சிரவக் குதிரை, சுதர்மசபை, நந்தனவனம், அமிர்தம், தேவர், அரம்பையர் இவை முதலியனவாம். [செல்வத்திற்கும் அருட்கும் மாற்றிக்கோடல் சொல்லப்பட்டமையால் மாற்றுநிலையணி.] மகம் பல என்பதில் பல நூறென்னுந் தொகையைக் குறித்தது. (எக)

மண்ணினிற் சிறந்து வாழு மன்பதைத் தொகுதி தன்னி
லெண்ணிடிற் சிறந்தா ரன்றோ வியக்கரவ் வியக்கர் தம்மில்
விண்ணவர் சிறந்தா ரன்றோ விண்ணவர் தமையு மாளு
மண்ணனின் னேவல் கேட்பி னதனினுஞ் சிறந்த துண்டோ.

இ - ள். மண்ணினில் - பூவுலகத்தில், சிறந்து - சிறப்பைப் பொருந்தி, வாழும் - வாழ்கின்ற, மன்பதை தொகுதி தன்னில் - மக்கட்கூட்டத்துக்குள், எண்ணிடில் - நினைக்குமிடத்தில், இயக்கர் - இயக்கரானவர்கள், சிறந்தார் அன்றோ - சிறந்தவர்களல்லவா; அ இயக்கர் தம்மில் - அவ்வியக்கருக்குள்ளே, விண்ணவர் - தேவர்கள், சிறந்தார் அன்றோ-சிறப்பைப் பொருந்தினவர்களல்லவா; விண்ணவர் தமையும் ஆளும் - அத்தேவர்களையு மாட்சிசெய்கின்ற, அண்ணல் - இந்திரனானவன், நின் ஏவல் கேட்பின் - உன்னுடைய ஏவற்றொழிலைக் கேட்பானாயின், அதனினும் - அதைக்காட்டிலும், சிறந்தது - சிறப்புடையது, உண்டோ - ஒருபொருளுண்டோ [இல்லை], எ-று.

க - து. இந்திர னுனக்கேவல் செய்தால் இதிலுஞ் சிறந்ததில்லையென்றான் என்பதாம்.

[மேன்மேலும் சிறப்பைச் சொல்லுதலால் மேன்மே லுயர்ச்சி யணி.] (அ௰)

தாதொடு நறவு தூற்றுந் தருநிழ லினிது வைகு
மேதகு நிதியு மானும் வேட்டன வுவந்து நல்க
வேதமி லரம்பை மாதர் முறைமுறை யேவல் கேட்ப
நீதொழு மமரர் யாரு நிற்றொழப் பணித்தி யென்றாள்.

இ - ள். தாதொடு - மகரந்தப்பொடியோடு, நறவு - தேனையு மூறும் - தூற்றுகின்ற, தருநிழல் - ஐந்தருநிழலில், இனிது - இன்பமுறுதாக, வைகும் - தங்கிய, மேதகு - மேன்மைபொருந்திய, நிதியும் - சங்கநிதிபதுமநிதிகளும், ஆனும் - காமதேனுவும், வேட்டன - விரும்பியவைகளை, உவந்து - மகிழ்ந்து, நல்க - கொடுக்க, ஏதம் இல் - குற்றமில்லாத, அரம்பைமாதர் - தெய்வமடவார்கள், முறைமுறை - வரிசை வரிசையாக, ஏவல்கேட்ப - ஏவற்றொழிலைக்கேட்க, நீ தொழும் - நீ வணங்குகின்ற, அமரர் யாரும் - தேவர்கள் யாவரும், நின் தொழ - நின்னை வணங்க, பணித்தி என்றாள் - சொல்லென்றாள். எ - று.

க - து. நீ வணங்கப்படுந் தெய்வங்களுன்னை வணங்கச் செய் யென்றாள் என்பதாம். (௯)

[இனி இரண்டுபாட்டால் தமயந்தி இந்திரன் தூதிக்கு விடைகொடுத்தல் சொல்லப்படுகின்றது.]

இனையன வுரைத்த லோடும் யாவர்த முளமுந் தேரும்
பனியிரு விசும்பிற் றேவர் பரவவீற் றிருக்கும் வேந்தென்
மனநிலை யுணரான் போலு மழைமதர் நெடுங்க ணல்லாய்
உனைவிரைந் திங்ஙன் றூது விடுத்ததென் னுரைத்தி யென்று

இ - ள். இனையன - இத்தன்மையவாகிய சொற்களை, உரைத்தலோடும் - சொன்னமாத்திரத்தில், யாவர்தம் - எவர்களுடைய, உளமும் - மனமும், தேரும் - தெரியாநின்ற, பனி - குளிர்ச்சியொருந்திய, இரு - பெரிய, விசும்பில் - தெய்வலோகத்திலிருக்கின்ற, தேவர் - தேவர்கள், பரவ - வணங்க, வீற்றிருக்கும் - அரசிருக்கின்ற, வேந்து - இந்திரனானவன், என் மனநிலை - என்மனத்தினிலைமை, உணரான்போலும் - தெரியாதவன்போல, மழை - குளிர்ச்சிபொருந்திய, மதர் - மதர்த்த, நெடு கண் - நெடிய கண்களையுடைய, நல்லாய் - தூதியே, உனை - உன்னை, விரைந்து - சீக்கிரமாக, இங்ஙன் - இவ்விடத்தில், தூது விடுத்தது - தூதாக வனுப்பியது,

ஏன் - யாது காரணமாக, உரைத்தி என்று - சொல்லென்று, எ-று.

க - து. தமயந்தியானவள் தூதியே இந்திரனென்னது மனத்தை யறியாதவன்போல, உன்னை யென்ன காரணமாகத் தூதுவிட்டா னென்று சொல்லி என்பதாம்.

[அறியான்போலு மென்றமையால் தற்குறிப்பணி.] (அஉ)

என்னுளத் தென்று நீங்கா திருப்பவ னளனே யாகும், பொன்னகர்க் கிறைவன் றன்பாற் பொருந்துதி யென்னுந் தூதுக், கன்னவ னியையுங் கொல்லோ வெனமறைந் தய லே நிற்கு, மன்னவன் மகிழ்ச்சி கூர மடவர லினிது சொன் னாள்.

இ - ள். என் உளத்து - என்னுடையமனதில், என்றும் - எந் நாளும், நீங்காது இருப்பவன் - பிரியாமனிலைநிற்பவன், நளனே ஆகும் - நளமகாராஜனேயாகும்; பொன்னகர்க்கு இறைவன் தன்பால் - இந்திரனிடத்து, பொருந்துதி - நீ பொருந்தக்கடவாய், என்னும் தூது க்கு - என்று சொல்லுந் தூதுக்கு, அன்னவன் - அந்த நளமகாராஜன், இயையும் கொல்லோ என - சம்மதிப்பானோவென்று, மறைந்து - ஒளி த்து, அயலே நிற்கும் - பக்கத்திலே நிற்கின்ற, மன்னவன் - அரசன், மகிழ்ச்சி கூர - மகிழ்ச்சிமிக, மடவரல் - தமயந்தி, இனிது - இனி தாக. சொன்னாள் - சொல்லினாள், எ - று.

க - து. என்னுளத் திருப்பவ னளனாகும், இந்திரனுக்குப் பொ ருந்தென்னும் தூதுக்கு நளனிசைவானோ வென்றாள் என்பதாம்.

அன்னவ னியைதலாவது - தான் காணியாகக்கொண்ட மனத் தைவிட்டு நீங்குதல். அவ்வரசனாவது என்னிடத்து வெறுத்து நீங்கல் வேண்டும், யானாவது அவனை வெறுத்து நீங்கல்வேண்டும், இருவரும் ஒத்திருக்கும்போது அவ்விடத்தை விரும்பத் தகாதென்றதாயிற்று. ஆயின் ஓரிடத்தில் இருவர் எப்படி யிருக்கலாமென்பது கருத்து. மறைவாய்த்திற் சொல்லுந் தமயந்தியினுரையைக் கேட்டமையால் நளனு க்கு மிகவு மகிழ்ச்சி யுண்டாயிற்றென்க. (அங)

கோற்றொடி நளன்மே லுற்ற காதலைக் குறித்து நோக் கி, மாற்றாத லரிதென் றெண்ணி வாசவன் றூதி யேக, வூற்றல்வா சவற்கு நேரா வணங்கெவர்க் கிசையு மென்னுந், தேற்றமோ டுரையார் மற்றைத் தேவர்தூ தியரும் போனார்,

இ - ள். கோற்றொடி - தமயந்தியானவள், நளன்மேல் - நளனிடத்தில், உற்ற - வைத்த, காதலை - ஆசையை, குறித்து நோக்கி - குறித்துப்பார்த்து, மாற்றுதல் - அதனை நீக்குதல், அரிது என்று - அரிதாகுமென்று, எண்ணி - நினைத்து, வாசவன் தூதி - இந்திரனுடைய தூதி, ஏக - தன்னிடத்துக்குச் செல்ல, ஆற்றல் - வலிமை பெற்ற, வாசவற்கும் - இந்திரனுக்கும், நேரா - உடன்படாத, அணங்கு - தமயந்தி, எவர்க்கு - யாவர்கட்கு, இயையும் என்னும் - சம்மதிப்பாள் (ஒருவருக்குஞ் சம்மதியாள்) என்கின்ற, தேற்றமொடு - தெளிவுடனே, உரையார் - பேசாதவர்களாய், மற்றை தேவர் தூதியரும் - மற்றைத்தேவர்கள் விடுத்த தூதிகளும், போனார் - சென்றார்கள், எ - று.

க - து. தமயந்தி நளன்மேல் வைத்த ஆசையைக்கண்டு இந்திரன் தூதிபோக மற்ற தூதியரும் போனார்கள் என்பதாம்.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம். தமயந்தி பூவுலகமடந்தையாயினும் நம்மினுமிக்க கலைகளின் பயிற்சியுடையவளாகையால் அவளை நமது சொல்லால் மடக்கி இந்திரனுக்குத் துணைவியாக்குவது அசாத்தியமென்று இந்திரன் தூதி நீங்கினளென்க. அப்படிப்பட்ட சம்பத்துக்களையும் போகத்தையும் வலிமையையும் சிறப்பையுமுடைய இந்திரனுக்குச் சம்மதியாதவள் நம்மிறைவர்க்குஞ் சம்மதிப்பாளென்பது கரதலாமலகம்போற் றெரிதலால் மற்றைத் தூதிகளவளுடனுரையாடி அவமானமடையாமையே நமக்கு மேன்மையென் றொழிந்தனரென்க. (அஎ)

தூதிய ரேகக் கண்ட தோன்றல்செங் கமலக் கண்கண்
மேதகு செல்வ மிக்க விதர்ப்பர்கோன் றவத்திற் றோன்.
மாதர்மென் னோக்கி னுடன் வடிவினி லழுந்திப் பின்னு
மாதரம் பெருகி யின்ப வாரியி னாழ்ந்த வன்றே.

இ - ள். தூதியர் - தேவதூதிகள், ஏக - தம்மிடத்துக்குப் போதலை, கண்ட - பார்த்த, தோன்றல் - நளமகாராஜனுடைய, செம் கமலம் கண்கள் - செந்தாமரைமலர்போன்ற நேத்திரங்கள், மேதகு - மேம்பட்ட, செல்வம் - செல்வத்திருலே, மிக்க - மிகுந்த, விதர்ப்பர் கோன் - வீமராசனுடைய, தவத்தில் தோன்றும் - தவத்தினலவதரித்த, மாதர் - அழகிய, மெல் - மெல்லிய, நோக்கினுடன் - பார்வையையுடைய தமயந்தியினது, வடிவினில் - உருவத்தில், அழுந்தி - ஆழ்ந்து, பின்னும் - பின்னும், ஆதரம்பெருகி - ஆசைமிகுந்து, இன்ப வாரியில் - இன்பக்கடலிலே, ஆழ்ந்த - அழுந்தின, எ - று.

க - து. நளன் கண்கள் தமயந்தி உருவத்தி லழுந்திப் பின்னு மின்பக்கடலில் மூழ்கின என்பதாம்.

கரவினி லொருமங்கையின் அழகை நோக்கும் ஆடவர்க்கு மற் றொருவர் அங்கில்லாதிருந்தால் மாத்திரஞ் சகிக்குமாதலால் 'தூதிய ரேகக்கண்ட தோன்றல்' என்றார். அங்குள்ள தோழிகளோவெனில், அவர்களுக் கிவனிருப்பது தெரியாதென்க. அவளவயவங்களைத் தனித்தனி நோக்கின் அந்நோக்குதற் கிடையூறடையின் மற்றவைக ளெப்படியுளவோவென்று கருத்தலையுமாதலால் முழுவதுந் தன் சத் தியா லொருங்கு நோக்குதலால் 'வடிவினிலழுந்தி' என்றும், அதில் ஆசைமிகுதலா லின்பசாகரத்தி லழுந்தின னென்றுஞ் சொல்லினார்.

பாசிழை பரந்த வல்குற் பனிமொழிக் குமுதச் செவ்வாய்
மாசறு மதிய மன்ன வாண்முகத் தணங்கை நோக்கி
யாசையங் கடலு ளாழ்ந்த கரைபெறா வரச னோக்க
மேசுவ தொன்று மில்லா முலைவரை யிவர்ந்த வன்றே.

இ - ள். பாசிழை - பசும்பொன்னாற்செய்த வாபரணங்கள், பரந்த - பரவப்பெற்ற, அல்குல் - அல்குலையும், பனி மொழி - குளிர்ச்சிபொருந்திய சொற்களையும், குமுதம் - அல்லிமலர்போன்ற, செவ் வாய்-சிவந்தவாயினையும், மாசு அறு-குற்றமற்ற, மதியம் அன்ன - சந் திரனையொத்த, வாள் - ஒளிபொருந்திய, முகத்து - முகத்தையு முடைய, அணங்கை - தமயந்தியை, நோக்கி - பார்த்து, ஆசை கட லுள் - ஆசையாகிய கடலினிடத்து, ஆழ்ந்து - முழுகி, கரை பெறா - கரையைப்பெறாத, அரசன் நோக்கம் - நளனுடையபார்வை, ஏசுவது ஒன்றும் இல்லா - பழிப்பதொன்றுமில்லாத, முலை வரை - முலைக ளாகிய மலையின்மேல், இவர்ந்த - ஏறின, ஏ - று. அம்-அசை.

க - து. நளன் கண்கள் ஆசைக்கடலிலே மூழ்கித் தமயந்தி முலைகளாகிய மலைகள்மேலே யேறின என்பதாம்.

அல்குற் பாம்பையும் வாய்க் குமுதத்தையும் முகமதியத்தையு முடைய மங்கையினது ஆசைக்கடலில் வீழ்ந்து அவைக ளூறுபடுத்த வருந்தி ஒரு துறையுங் காணாது தடுமாறும் அரசனோக்கங்கள் அங்கு முலைகளென்னு மலைகளைக் கண் டேறினவென்க. கச்சறுத்தல், களபச்சேறணிதல், முத்துவடமணிதல், இறுமாந்துமேனோக்கல், கண் கறுத்தல், அடிகனத்தல், திதலைபூத்தல், பூரித்தல், புளகித்தல், இழைநுழையாது நெருங்கல், வெச்செனல், தண்ணெனல், இடை யைவாட்டல் முதலிய நற்குணங்களிற் குறைவின்றி யிருத்தலால் 'ஏசுவதொன்றுமில்லா முலை' என்றார். மிகுந்த வாசையோடும் ஈது

னங்களை நோக்கினுனென்பது கருத்து. ஆசையங்கட லென்றதும் முலைவரை யென்றதும் உருவகங்கள். [தமயந்தியைக்கண்ட கண்கள் மிகுந்த ஆசையுடையவாய் முலையைப் பார்த்தன என்னும் பொருளுபெறச் சொல்லியநோக்கம் கடலுளாழ்ந்து மலையிலிவர்ந்தவென்றுலில் கடலில் மூழ்கினோர் கரையிலேறுவதாகிய உலகர் செய்கை தோற்றுதலால் முன்னுருவகத்தை யங்கமாகக் கொண்ட சுருங்கச் சொல்லலணி.] (அக)

போர்க்களி றனைய வீமன் புரிந்தமெய்த் தவத்திற் றோன்றுங், கார்க்கரும் கூந்த லாண்மைக் கண்வலை யதனுட் பட்டோ, வீர்க்கிடை புகாத பொம்ம லிளமுலை நெருக்கிற் புக்கோ, பார்த்தசெங் கமலக் கண்கள் பறிப்பரி யனவாய் நின்ற.

இ - ள். போர் - போர் செய்கின்ற, களிறு அனைய-யானையை யொத்த, வீமன் - வீமராசன், புரிந்த - செய்த, மெய் தவத்தின் - உண்மையான தவத்தினாலே, தோன்றும் - அவதரித்த, கார்-மேகம் போன்ற, கரு கூந்தலாள் - கரியவளகபாரத்தையுடைய தமயந்தியினது, மை - மையையணிந்த, கண் வலை அதனுள்பட்டோ - கண்ணாகிய வலையி லகப்பட்டோ, ஈர்க்கு - ஈர்க்கானது, இடை - மத்தியத்திலே, புகாத - நுழையாத, பொம்மல் - பொலிவுபெற்ற, இளமுலை- இளமைபொருந்திய ஸ்தனபாரங்களினுடைய, நெருக்கில் - நெருக்கத்தில், புக்கோ - புகுந்தோ, பார்த்த - நோக்கிய, செம்கமலம் கண்கள் - செந்தாமரைமலர்போன்ற நேத்திரங்கள், பறிப்பு அரிய ஆய் - பறிப்பதற்கரியவாகி, நின்ற - நின்றன, எ - று.

க - து. நளன் கண்கள் தமயந்தி கண்வலையிற் பட்டோ நகிலநெருக்கிற் பட்டோ பறிப்பதற் கரியவாக நின்றன என்பதாம்.

"குழூஉப்புறந்தருதல் குஞ்சரத்தியல்பே" என்றலின் அவ்வாறுலகினரைக் காப்பவனாகையால், 'போர்க்களிறனைய வீமன்' என்றும், பொய்த்தவத்திற் றோன்றினு ளன்றென்பதற்கு மெய்த்தவத்திற்றோன்றினுள் என்றுங்கொள்க. ஈர்க்கிடை புகாமல் விம்முதலால் மூத்தனவோவென்னும் ஐயநிகழாமைக்கு 'இளமுலை' என்றார். கண்கள் அழகு முழுவது நோக்கி முற்றாமையால் பறிப்பரியனவாய் நின்றனவென்க. [இது ஐயவணி.] (அஉ)

விண்ணவர் மகளிர் யாரும் வெள்குற வனப்பு வாய்ந்து பெண்ணலங் கனிய நின்ற பேதைபே ரழகு முற்றுங் [கும் கண்ணொடு பிணித்தா லென்ன வியப்புறக் களித்து நோக் புண்ணுறு புலவு வேலா னுளத்தொடு புகல லுற்றான்.

இ - ள். விண்ணவர் - தேவர்களுடைய, மகளிர் யாரும் - மங்கையரெல்லாம், வெள்கு உற - நாணமடைய, வனப்பு வாய்ந்து-அழகைப்பெற்று, பெண் - பெண்களுக்குரிய, நலம் - நற்குணங்கள், கனிய - முதிர, நின்ற-நிற்கப்பெற்ற, பேதை-தமயந்தியினது, பேர் - பெரிய, அழகு முற்றும் - அழகு முழுவதும், கண்ணொடு - கண்களினுடனே, பிணித்தால் என்ன-கட்டினதையொப்ப, வியப்பு உற-ஆச்சரியமிக, களித்து - களிப்பை யடைந்து, நோக்கும் - பார்க்கின்ற, புண்ணுறு-மாமிசத்தையுற்ற, புலவு - நாற்றத்தையுடைய, வேலான்-வேற்படையேந்திய நளமகாராஜன், உளத்தொடு - மனத்துடனே, புகலலுற்றான் - சொல்லத்தொடங்கினான், எ - று.

க - து. தமயந்தி யழகைக்கண்டு நளன் தன்னுள்ளத்தோடு சொல்வான் என்பதாம்.

பெண்ணலமாவன: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலிய குணங்களும் பிறவுமெனக் கொள்க. அவ்வழகின்கடலை யொருவாற்றாற் கடந்த நளன் தன்மனத்துக்கிசைந்தவர் வேறொருவரும் அங்கில்லாமையால் தான்கண்ட வியப்பை மனத்துடன் சொல்லத்தொடங்கினனென்க. உளத்தொடு புகலல் - சிந்தித்தல். [பிணித்தாலென்றமையால் தற்குறிப்பணி.] (சஅ)

[இதுமுதல் பத்துப்பாட்டால் நளனது சிந்திப்புச் சொல்லப்படுகின்றது.]

வடிவமை நூலிற் சொல்லும் வனப்பெலா மமைத்து வேதன்
கடிமலர்ச் செங்கை வண்ணங் காட்டிய வுருவு கொல்லோ
வடிகணை வேனிலானின் னமுதுகோ றோய்த்துத் தீட்டும்
படிவமோ வுயிரை வாட்டும் பாவைதன் வடிவந்தானே.

இ - ள். உயிரைவாட்டும் - என்னுயிரைவாட்டுகின்ற, பாவை - இப்பாவை போல்வாளுடைய, வடிவம் - உருவமானது, வேதன் - பிரமனானவன், வடிவமைநூலில் - சாமுத்திரிகநூலிலே, சொல்லும் - சொல்லாநின்ற, வனப்பெலாம் - அழகனைத்தும், அமைத்து - அமையச்செய்து, கடி - புதுமைபெற்ற, மலர் - தாமரைமலர்போன்ற, செங்கைவண்ணம் - தனது சிவந்தகைகளின் குணத்தை, காட்டிய - காண்பித்த, உருவுகொல்லோ - உருவமோ, அடு - கொல்லாநின்ற, கணை - பூங்கணைகளையுடைய, வேனிலான் - மன்மதனானவன், இனிய - இனிய, அமுது - அமிர்தத்தில், கோல் - தூரியக்கோலை, தோய்த்து - நனைத்து, தீட்டும் - எழுதப்பட்ட, படிவமோ - உருவமோ, எ - று.

.கு - து. நளன் தமயந்தி வடிவம் பிரமன் கைத்திறமோ, மன்மதனெழுதிய வுருவமோ என்றான் என்பதாம்.

வேதன் செங்கைவண்ணங் கொல்லோவென்றவன்பின் வேனிலான் நீட்டும் படிவமோவெனக் கூறியது அவன்படைப்பி லிவ்வழகு கண்டிலேம் அழகினால் உலகத்தை மயக்குங் காமனே படைக்கி லிவ்வழகுண்டாகலாமெனுங் கருத்தாலெனக்கொள்க. [வேதன் கைவண்ணங் காட்டிய வுருவோ வேனிலான்நீட்டும் படிவமோவெனக் குறித்தலால் தற்குறிப்பணி]. (அக)

குழையெதிர் நடந்து பைம்பொற் குமிழ்மிசை மறிந்து நீண்ட
வுழைபொரு நெடுங்க ணாட னுறுப்பினுக் குவமை யாகச்
செழுமலர் முதல வாய பொருள்களைத் தெரிந்து கூறி
னழகினுக் குவமை தீர்ந்த வவற்றினுக் கிகழ்ச்சி யாமே.

இ - ள். குழை - குழையென்னுங் காதணிக்கு, எதிர் நடந்து - முன்பாகச்சென்று, பைம்பொன் - பசிய பொன்போன்ற, குமிழ் - குமிழம்பூவினது, மிசை - மேற்பக்கத்தில், மறிந்து - மறிபட்டு, நீண்ட - நீட்சியை யடைந்த, உழை பொரு - மான்போன்ற, நெடுகணாள் தன்-நெடிய கண்களையுடைய தமயந்தியினது, உறுப்பினுக்கு - அவயவத்துக்கு, உவமையாக - உவமானமாக, செழும் - செழுமை பெற்ற, மலர் முதலவாய-தாமரைமலர் முதலவாகிய, பொருள்களை - வஸ்துக்களை, தெரிந்து கூறின்-தெரிந்து சொல்லின், அழகினுக்கு - அழகுக்கு, உவமை தீர்ந்த - உவமை நீங்கிய, அவற்றினுக்கு - அவ்வுறுப்புக்களுக்கு, இகழ்ச்சியாம் - பழிப்பாகும், எ - று.

க-து. தமயந்தி அவயவங்களுக்கு உவமானப்பொருள்க ளிகழ்ச்சியவாம் என்றான் என்பதாம்.

குமிழென்பது அதுபோன்ற மூக்கெனக்கொள்க. மலர் முதலவாய பொருள்களாவன:—மேகம், நாகம், பிறை, நரை, [illegible] குமிழ், குமுதம், அமிர்தம், காந்தள், பாந்தள், அரும்பு, கரும்பு, சுரும்பு முதலியவாம். உவமையில்லாத அவயவங்கட்கு அவைகளைச் சொல்லுவது இகழ்வாமென்க. உயர்ந்தவைகட்கு இழிந்தவைகளையுவமித்துக் கூறுதலின்மிக்க அவமான மில்லையென்பது கருத்து. [உவமானமாகிய தாமரைமலர் முதலியவற்றை இவளுறுப்புக்கு உவமையாகக் கூறின் இழிவென உவமேயத்தைச் சிறப்பித்தலால் எதிர்நிலையணி. (கூ0)

குடைந்துவண் டிமிருஞ் செய்ய கொழுமலர்த் திருவி னோடுந்
தடஞ்சினை பொதுளுமென்பூந் தருநிழ லுறையுந் தெய்வ மடந்தையர் தம்மை யெல்லாம் வைகலும் படைத்துச் செம்
படிந்தபி னிந்த மாதைப் படைத்தனன் கமலத் தோனே.

இ - ள். வண்டு - வண்டுகளானவை, குடைந்து - மூக்கினாலே கிண்டி, இமிரும் - ஒலிக்கின்ற, செய்ய - சிவந்த, கொழு - செழுமை பெற்ற, மலர் - தாமரைமலரி லிருக்கின்ற, திருவினோடும் - இலக்குமியுடனே, தடம் - பருத்த, சினை - கிளைகள், பொதுளும் - நெருங்கிய, மெல் - மெல்லிய, பூ - மலர்களையுடைய, தருநிழல் - ஐந்தருநிழலில், உறையும் - வசிக்கின்ற, தெய்வமடந்தையர் தம்மை எல்லாம் - தெய்வமங்கைய ரனைவரையும், வைகலும் - நாள்தோறும், படைத்து - சிருட்டித்து, செம் கை படிந்தபின் - தன்னுடைய சிவந்த கைகள் பழகியபின்பு, இந்தமாதை - இந்தத் தமயந்தியை, கமலத்தோன் - பிரமனானவன், படைத்தனன் - சிருட்டித்தான், எ - று. ஏ - அசைநிலை.

க - து. பிரமன் இலக்குமியையும், தேவமாதர்களையும் படைத்துக் கைதேர்ந்தபின் னிவளைப் படைத்தான் என்று னளன் என்பதாம்.

அழகிற் சிறந்த இலக்குமி இந்திராணி முதலிய தெய்வமங்கையராலும் விரும்பத்தக்க அழகுடையவளா யிருத்தலா லிவ்வாறு சொல்லினான். [இப்படிப்பட்ட படைப்பின் முயற்சி பிரமனுக்கு இல்லாதிருந்தும் உள்ளதாகக் கூறலின் உயர்வு நவிற்சியணி.] (கூக)

விரிந்தசெங் கமலத் தண்பூம் பொகுட்டில்வீற் றிருக்கு மேலோன், முருந்திள முறுவற் செவ்வாய் முகிழ்முலைக் கரிய கூந்தற், றிருந்திழை யழகு வாய்ந்த திருமுகந் திங்க ளாகப், புரிந்தனன் களங்க மன்றோ புருவமா வியற்றி னானே.

இ - ள். வராந்த - வரியப்பெற்ற, செம் கமலம் - செந்தாமரையினுடைய, தண் - குளிர்ச்சி பொருந்திய, பூம்பொகுட்டில் - மலர்க்கொட்டையின்மேல், வீற்றிருக்கும் - அரசிருக்கின்ற, மேலோன் - பிரமனானவன், முருந்து - மயிலிறகின் முதன்முள்போன்ற, இள - இளமைபொருந்திய, முறுவல் - தந்தங்களையும், செவ்வாய் - சிவந்த வாயினையும், முகிழ் - அரும்பையொத்த, முலை - முலைகளையும், கரிய - கறுத்த, கூந்தல் - அளகபாரத்தையுமுடைய, திருந்திழை - தமயந்தியினது, அழகு வாய்ந்த - அழகுபொருந்திய, திருமுகமாக - திருமுகமாக, திங்கள் - சந்திரனை, புரிந்தனன் - செய்தான், களங்கம் அன்றோ - அதன் களங்கத்தை யல்லவா, புருவமா - புருவமாக, இயற்றினான் - செய்தான், எ - று.

க - து. பிரமனிவள் முகத்தைச் சந்திரனைப் படைத்தான் என்றான் என்பதாம்.

இவள்முகம் சந்திரனென்பதற்குச் சந்தேகமில்லை யென்பது கருத்து. [இது உயர்வு நவிற்சியணி.] (கஉ)

மணிமுடி யதனைக் கொம்மை முலையென வமைத்து மன்ன
னணிமலர்க் கணைக ளைந்தி லான்றமூ வுலகு மூன்று
கணைகளால் வென்று மற்றைக் கணைகளுக் கெதிரில் லாமை
யிணைவிழி யென்று பேரிட் டிவண்முகத் திருத்தி னானே.

இ-ள். மாரன்-மன்மதனானவன், மணி முடியதனை - தன்னுடைய மணிகள்பதித்த கிரீடத்தை, கொம்மை - இளமைபொருந்திய, முலை என - ஸ்தனங்களென்று சொல்ல, அமைத்து - பொருத்தி, அணி-அழகிய, மலர் கணைகள் ஐந்தில் - பூவம்புகளைந்தனுள், ஆன்ற-நிறைந்த, மூ உலகும் - திரிலோகங்களையும், மூன்று கணைகளால் - மூன்று பாணங்களால், வென்று - வெற்றிகொண்டு, மற்றை கணைகளுக்கு - மற்றை யிரண்டு பாணங்களுக்கு, எதிரில்லா - எதிரில்லாத, மை - அஞ்சனந்தீட்டிய, இணை விழி என்று - இரண்டு கண்களென்று, பேரிட்டு - பேர்வைத்து, இவள் முகத்து - இந்தத் தமயந்தியினுடைய முகத்தில், இருத்தினன் - இருத்திவைத்தான், எ-று.

க-து. மன்மதன் தன்முடியை முலையாகவுங் கணைகளைக் கண்களாகவும் அமைத்தான் என்றான் என்பதாம்.

இவளுடைய கண்கள் மாரன்கணைக ளாயினவாற்றால் ஆடவரை மயக்கின, அல்லவாயின் எவ்வாறு மயக்குமென்பது கருத்து. [தமயந்தியின் விழிக்கண் மாரன் கணையை ஆரோபித்தற் பொருட்டு விழியின் பேரிட்டென்று அத்தன்மையை யொழித்தலால் ஒழிப்பணி.]

வெதிர்புரை பசிய மென்றோள் வேனெடுங் கண்ணி தன்ன
றிதலைவெம் முலைபோன் முத்தந் தெரிதர வணிந்தி டாமன்
மதமழை கொழிக்கும் வேழ மருப்பிணை வெருவி யன்றோ
கதிர்மணி முத்த முள்ளே கரந்தவைத் திருக்கு மாதோ. (கக)

இ-ள். வெதிர் புரை - மூங்கிலையொத்த, பசிய - பசுமைபொருந்திய, மெல் - மெல்லிய, தோள் - தோளையும், வேல் - வேற்படை போன்ற, நெடு - நெடிய, கண்ணினள் தன்-கண்களையுமுடைய தமயந்தியினது, திதலை - தேமலையுடைய, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலைபோல் - ஸ்தனங்களைப்போல், முத்தம் - முத்துக்களை தெரிதர - தெரியும்படி, அணிந்திடாமல் - தரித்துக்கொள்ளாமல், மத மழை - மதமாகிய மழையை, கொழிக்கும் - கொழிக்கின்ற,

வேழம் - யானையினுடைய, மருப்பிணை - கொம்பிரண்டும், வெருவி அன்றோ - பயந்தல்லவா, கதிர் - கிரணங்களையுடைய, மணி - அழகிய, முத்தம் - முத்துக்களை, உள்ளே - தமக்குள்ளே, கரந்து - ஒளித்து, வைத்திருக்கும் ஆறு - வைத்திருக்கும்விதம், எ - று. கொழித்தல் - பெருக்குதல்.

க - து. தமயந்தி முலைகளைப்போல முத்துக்களை வெளிப்படுத்தாமல் அம்முலைகட்குப் பயந்தல்லவா யானைக் கொம்புகள் முத்துக்களை உள்வைத்திருக்கின்றன என்றானளன் என்பதாம்.

முத்துக்கள் தம்மிடத்திற் பிறந்தனவாயிருந்தும் தனங்களால் வெல்லப்பட்டபடியால் அவ்வெற்றி தோன்ற அம்முத்துக்களை யணிந்த அத்தனங்கள்போல் தந்தங்கள் வெளிப்பட வணிதற்கு வெருவினமையாய் கரந்து வைத்தனவென்க. அரசனால் அபகரிக்கப்பட்ட பொருளையுடையவன் தப்பி நின்ற திரவியத்தைத் தனக்குள் அடக்கி வைப்பனென்பது கருத்து. [தந்தங்கள் தமக்குளியற்கையின் முத்துக்களுடைமையில் வெருவி கரந்துவைத்ததெனக் குறித்தலால் தற்குறிப்பணி. இவ்வாறு கூறலால் வர்ணியமாகிய தமயந்தியின் தனச்சிறப்புத் தோற்றுகின்றமையால் புனைவிலிபுகழ்ச்சியணி.] (கஅ)

மடலவிழ் கமலப் புத்தேள் வடிவினை யமைத்து வெய்ய
தடமுலை யமைப்ப மாதி னுறுப்பலாற் றாமின் றென்று [லோ
விடையினுக் கமைத்த கூற்றை யெடுத்தெடுத் தமைத்த லா
கொடியெனத் தேய்ந்து தேய்ந்து குறைந்தது மருங்குறுமேன.

இ - ள். மடல் - இதழ்களானவை, அவிழ் - விரிந்த, கமலம் புத்தேள் - தாமரை மலரிலிருக்கும் பிரமனானவன், வடிவினை - உருவத்தை, அமைத்து - முன்புசெய்து, வெய்ய - வெவ்விய, தடம் - பருத்த, முலை - ஸ்தனங்களை, அமைப்ப - பின்புசெய்ய, மாதின் - தமயந்தியினுடைய, உறுப்பலால் - அவயவமல்லாமல், தாமின்று என்று - தருந்தபொருளில்லையென்று, இடையினுக்கு - மருங்குற்கு, அமைத்த கூற்றை - வைத்தபங்கை, எடுத்து எடுத்து - கொஞ்சங் கொஞ்சமாக வெடுத்துக்கொண்டு, அமைத்தலாலோ - செய்தபடியாலோ, கொடி என - கொடியென்றுசொல்ல, தேய்ந்து தேய்ந்து - தேய்பட்டுத் தேய்பட்டு, மருங்குல் - இடையானது, குறைந்தது - குறைபட்டது, எ - று.

க - து. பிரமன் இடைக்கமைத்த பங்கை யெடுத்து முலைக்கமைத்தபடியினாலல்லவோ இவளுக் கிடைசுருங்கிற்று என்றானளன் என்பதாம்.

தமயந்தியின் தனங்கள் நாடோறும் பருத்து இடை சிறுக்கையால் அவைகளைக்கண்ட வரசன் மற்றை மாதரைப்போலாது முன்பு இவளைப் படைத்த பிரமன் வேறொரு கருவிக்கூறு தாமன்றென்று கருதி இவளுறுப்புக்களுள் இடையில்வைத்த கூற்றைத் தனத்திற் கமைத்திருக்கலாகுமெனக் கருதினனென்க. [இயற்பிற் குறைந்த இடையினைத் தனத்திற் கமைத்தலாற் குறைந்ததெனக் குறித்தலால் தற்குறிப்பணி.] (கரு)

மௌவலந் தெரியல் வேய்ந்து மணங்கமழ் கரிய கூந்தற்
கொவ்வையங் கனிவாய்ப் பேதை குவிமுலைக் களிநல் யானை
செவ்விதிற் பிணித்த நீலச் செழுமணி வல்லி போலு
மவ்வயி றணிந்த கோல வணிமயி ரொழுக்கந் தானே.

இ - ள். மௌவல் - முல்லை மலரினுடைய, அம் - அழகிய, தெரியல் வேய்ந்து - மாலையைத் தரித்து, மணம் - வாசனை, கமழ் - கமழ்கின்ற, கரிய - கறுத்த, கூந்தல் - அளகபாரத்தையும், கொவ்வை அம் கனி வாய் பேதை - கொவ்வைக்கனிபோன்ற வாயையுமுடைய தமயந்தியினது, குவி - குவிந்த, முலை - ஸ்தனங்களாகிய, களி - களிப்பையுடைய, நல்யானை - நல்ல யானையை, செவ்விதின் - நேராக, பிணித்த - கட்டிய, நீல செழுமணி வல்லிபோலும் - செழுமையுள்ள நீல ரத்னக் கொடிபோலும், அ வயிறு - அந்தவயிறுனது, அணிந்த - தரித்த, கோலம் - ஒப்பனையமைந்த, அணி - அழகிய, மயிரொழுக்கம் - மயிரொழுங்கு, ஏ - ம். தான், ஏ-அசைகள்.

க - து. மயிரொழுக்கானது தமயந்தி முலைகளாகிய யானைகளைக்கட்டிய வல்லிபோ லிருந்தது என்று னளன் என்பதாம்.

மௌவல் - முதலாகு பெயர். தமயந்தியினுடைய தனங்களென்னும் யானைகள் கட்டாவிட்டால் எதிர்ப்பட்ட ஆடவரைக் கொல்லுமென்பது கருத்து. [மயிரொழுக்கத்தை நீலச் செழுமணி வல்லி போலுமெனக் குறித்தலால் தற்குறிப்பணி.] (கசு)

ஐங்கணைக் கிழவன் வைகு மணியர சிருக்கைப் பாங்கர்
தங்குற வமைத்த வாழைத் தண்டுகொ றுறுகட் சிற்றத்
துங்கவெம் பருமயானைத் தடக்கைகொ லுணிதந் தேற்றுஞ்
செங்கயற் கருங்கட் செவ்வாய்த் திருந்திழை குறங்கு தாமே.

இ - ள். செம் கயல் - சிவந்த கயல்போன்ற, கரு கண் - கரிய கண்களையும், செம் வாய் சிவந்த வாயினையும், திருந்து இழை - திருந்தமாகிய ஆபரணத்தையுமுடைய தமயந்தியினது, குறங்கு - தொடை

கள், ஐங்கணை கிழவன் - மன்மதன், வைகும் - தங்குகின்ற, அணி - அழகிய, அரசிருக்கை - அத்தாணியிடத்தின், பாங்கர் - பக்கத்தில், ஏய்குற - தங்கும்படி, அமைந்த - செய்த, வாழை தண்டு கொல் - வாழைத் தண்டோ; தறுகண் - அஞ்சாத, சீற்றம் - கோபத்தையுடைய, துங்கம் - உயர்ச்சி பொருந்திய, வெம் - வெவ்விய, பருமம் - ஒப்பனை யமைந்த, யானை - யானையினுடைய, தடம் - பருத்த, கைகொல் - துதிக்கையோ, துணிதல் - இன்னதென்று துணிதலை, தேற்றும் - (யாம்) தேறும், எ - று.

க - து. தமயந்தி தொடைகள் மன்மதன் அத்தாணி மண்டபத்து வாழை ஸ்தம்பங்களோ, யானைத் துதிக்கைகளோ அறியோம் என்றானான் என்பதாம்.

மாதரது அல்குல் மாரனுக்கு அரசிருக்கை மண்டபமாகையால் அதற்கு அலங்கரித்த வாழைத்தண்டோ வென்றார். தேற்றும் எனத் தன்வினைப்பொருள் பிறவினையில் வந்தது. [குறங்கை வாழைத் தண்டுகொல் யானைத் தடக்கைகொலென ஐயுறலால் ஐயவணி.] ()

மைபடுதரு நீழல் வைகும் பாவையர் பதும பீடத்
திந்திரைக் கணங்குசெய்யு மேந்திழை யெழிற்குத் தோற்று
வந்தடி பணியுந் தோறும் வாணுதல் கவினத் தீட்டுஞ்
சிந்துரத் திலகந் தோய்ந்தோ சிறடி சிவந்த வாறே.

இ - ள். பை தரு நிழல் - பசிய வைந்தருநிழலில், வைகும் - தங்கிய, பாவையர் - அரம்பையர்கள், பதுமபீடத்து - தாமரைமலரி லிருக்கின்ற, இந்திரைக்கு - திருமாதுக்கு, அணங்கு செய்யும் - வருத்தத்தைச் செய்கின்ற, ஏந்திழை - தமயந்தியினது, எழிற்கு - அழகிற்கு, தோற்று வந்து - தோல்விபெற்றுவந்து, அடி பணியுந்தோறும் - அடிக யில் வணங்குந்தோறும், வாள் - ஒளிபொருந்திய, நுதல் - நெற்றியாண்டு, கவின - அழகுபெற, தீட்டும் - எழுதப்பட்ட, சிந்துரத்திலகம் - சிந்துரப்பொட்டு, தோய்ந்தோ - தோயப்பெற்றோ, சீறடி - சிறிய பாதங்கள், சிவந்தவாறு - சிவந்தவிதம், எ - று.

க - து. தேவமாதர்கள் தமயந்தி யழகுக்குத் தோற்று அடியை வணங்குதலால் அவர்கள் நெற்றித்திலகம்பட்டுப் பாதஞ் சிவந்த என்று னான் என்பதாம்.

அரம்பையர் மேற்பிறப்பிலாவது நின்போ லழகு பெற விரும்பி னம் நீ முற்பிறப்பிலே யாதுசெய்தா இவ்வழகு பெற்றனை அதைச் சொல்லுவாயாகில் யாமும் அவ்வாறு செய்துமெனப்போற்றுதலால்

'வந்தடி பணியுந்தோறும்' என்றார். [பாதந்தினியற்கைச் சிவப்பினில் அடிபணியுந் தேவமாதர் சிந்தூரத் திலதத்தோய்வைக் குறித்தலால் தற்குறிப்பணி.] (௯௪)

இன்னவா றுளத்தி னெண்ணி யெறுழ்வலி மடங்க லன்னான்
மின்னவிர் குலிச வேந்தன் விஞ்ஞையின் புணர்ப்பி னிங்கிப்
பொன்னவிர் சுணங்கு பூத்த பொம்மல்வெம் முலையி னாண்முன்
கன்னலஞ் சிலைவே ளென்னக் கட்புலன் கதுவ நின்றான். [ன்

இ - ள். இன்ன ஆறு - இந்தப்பிரகாரம், உளத்தின் - மனதிலே, எண்ணி - சிந்தித்து, எறுழ் வலி - மிகுந்த வலியைபெற்ற, மடங்கல் அன்னான் - சிங்கத்தையொத்த நளன், மின்னவிர் - மின்போல விளங்குகின்ற, குலிசவேந்தன் - வச்சிரப்படையையுடைய இந்திரனது, விஞ்ஞையின் - வித்தையினுடைய, புணர்ப்பின் நீங்கி - சம்பந்தத்தினின்று நீங்கி, பொன் - பொன்போலும், அவிர் - பிரகாசிக்கின்ற, சுணங்கு - தேமல், பூத்த - உண்டாகிய, பொம்மல் - பொலிவினையுடைய, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலையினாள் முன் - முலைகளையுடைய தமயந்திக்கு முன்னே, கன்னல் அம் சிலை வேள் என்ன - கருப்பு வில்லேந்திய மன்மதன்போல, கண் புலன் - கண்ணறிவு, கதுவ - பற்றும்படி, நின்றான் - நின்றனன், எ - று.

க - து. நளன் தமயந்திக்கு முன் அருவத்தைவிட்டு உருவமாய் நின்றான் என்பதாம்.

நளன் இவ்வாறு சிந்தித்துப் பின்பு தான் வந்தகாரிய முடித்தற்காக உருவின்றியுறைக்கின்ற வேறுவேடமான வித்தையை விட்டு வெளிப்பட்டு நின்றனனென்க. [சிலைவேளென்ன வெனவாம் உவமையணி.] (௯௫)

விரைகமழ் நறிய தண்டார் விதர்ப்பர்கோ னளித்த பாவை
யரசிளங் குமரன் றன்னை யார்வமோ டினிது கண்டா
ளுருவெளி கண்டு நாணு முவந்தனா ளயர்வான் முன்னைத்
தெருளுறக் காணி லெய்து முவமையார் தெரிக்கற் பாலார்.

இ - ள். விரை - வாசனை, கமழ் - கமழ்கின்ற, நறிய - நல்ல, தண் - குளிர்ச்சிபொருந்திய, தார் - மாலையணிந்த, விதர்ப்பர்கோன் - விதர்ப்பராசன், அளித்த - பெற்ற, பாவை - தமயந்தியானவள், அரசு இளங் குமரன் தன்னை - நளமகாராசனை, ஆர்வமோடு - ஆசையுடன், இனிது - இனிதாக, கண்டாள் - பார்த்தாள்; உருவெளி கண்டு - உருவெளித் தோற்றத்தைக்கண்டு, நாணும் - நாணோடும், உவந்து - உவ



(நளன்தமயந்திபால்தேவர்களுக்காகத்தூதுபோய்ச்சேருதல்.)

ப்படைந்து, உளம் - மனம், அயர்வாள் - வருந்துகின்றவள், முன்னம் - முன்னாக, தெருள் உற-தெளிவுபொருந்த, காணில்-கண்டால், எய்தும் - அப்போதடைகின்ற, உவகை - மகிழ்ச்சியை, யார் - எவர்கள், தெரிக்கற்பாலார்-தெரியப்படுத்த வல்லவர்கள் (ஒருவருமில்லை), எ - று.

க - து. தமயந்தி நளனை ஆசையோடு கண்டாள், அவள் மகிழ்ச்சியை யார் சொல்லவல்லார் என்பதாம்.

பாவை - உவமையாகுபெயர். [அந்தப்புரத்திலே வந்த புருடனை நோக்குந் தமயந்தி வெருட்சிவெதுட்சிகளின்றி மகிழ்ந்தனளென்பது நாடோறும் பொய்வடிவங் கண்டு மகிழ்பவளுக்கு மெய்வடிவங் காணப்பெறில் உண்டாமின்பம் சொல்லி முடியாதென்னும் வாக்கியப் பொருளால் நிறுத்தப்படலால் செய்யுட்குறிப்பணி.] (க00)

அங்கண்மா ஞாலங் காக்கு மண்ணன்மே லணங்க ளுடன்
செங்கயற் கருங்கண் வாளி சிறிதுசென் றழுந்தா முன்னம்
பைங்கழை தாங்கி யாவம் பரித்திடம் பார்த்து நின்ற
துங்கவேள் விடுத்த வாளி தூவன்மட் டாழ்ந்த வன்றே.

இ - ள். அம் - அழகிய, கண் - இடமகன்ற, மா - மகத்தாகிய, ஞாலம் - பூமியை, காக்கும் - அளிக்கின்ற, அண்ணல் மேல் - நளமகாராசன்மேல், அணங்களுள் தன்-தமயந்தியினுடைய,செம் கயல்-சிவந்தகயல்போன்ற, கரு கண் - கரியகண்களாகிய, வாளி - பாணங்கள், சிறிது சென்று - கொஞ்சம்போய், அழுந்தா முன்னம்-அழுந்துவதற்கு முன்னமே, பைங்கழை-பசிய கருப்புவில்லை, தாங்கி - சுமந்துகொண்டு, ஆவம் பரித்து-அம்பறுத்தூணியைத் தாங்கிக்கொண்டு, இடம் பார்த்து நின்ற-இடம்நோக்கியிருந்த, துங்கம் - உயர்ச்சிபொருந்திய,வேள்-மன்மதனானவன், விடுத்த-பிரயோகம்பண்ணின, வாளி-பாணங்கள், தூவல் மட்டு - குதைவரையும், ஆழ்ந்த - அழுந்தின, எ - று.

க - து. தமயந்தி கண்களை யெய்யுமுன்னே நளன்மேல் மன்மதன் கணை யெய்தான் என்பதாம்.

இடம்பார்த்தல் - சமயம் பார்த்தல். தம்மரசன் ஒரு தொழிற்செய்யத் தொடங்குதலோக்கிய ஏவலர் அவன் றொடங்குமுன்னமே விரைந்து செய்து முடித்தல்போல் தமயந்தியின் கண்களாகிய பாணங்கள் சிறிதுபோய் நளன்மே லழுந்துமுன்னமே மன்மதபாணங்கள் குதைவரையும் அழுந்தினவாயின் அக்காமன் இவள் கண்குறிப்பினி

ற்கும் ஏவலனாயினனென்க. [இவள்நோக்கியபின் செல்லுங் காம பாணத்திற்கு நோக்கின் முற்காலஞ் சொல்லப்பட்டமையால் உயர்வு நவிற்சியணி.] (கOசு)

கழிபெருங் காத லாள்கட் கருவிளை மலர்கள் வெய்ய
மழுவிடை யனையான் செய்ய மணிப்புய வரையிற் பூத்த [கள்
விழைவொடு மகிழ்ச்சி கூரும் வேனில்வே ளனையான் செங்
முழுநெறிக் கமல மன்னாண் முலைத்தடத் தலர்ந்த மாதோ.

இ - ள். கழி - மிகுந்த, பெருங்காதலாள் - பேராசையையு டைய தமயந்தியினது, கண் - கண்ணாகிய, கருவிளை மலர்கள் - காக் கணம் பூக்கள், வெய்ய - வெவ்விய, மழுவிடை அனையான் - இள வேற்றையொத்த நளமகாராசனது, செய்ய - சிவந்த, மணி - அழ கிய, புயவரையில் - தோளாகிய மலையில், பூத்த - மலர்ந்தன; விழை வொடும் - அன்புடனே, மகிழ்ச்சிகூரும் - மகிழ்ச்சியடைகின்ற, வே னில் வேள் அனையான் - நளமகாராசனுடைய, செம் கண் - சிவந் கண்ணாகிய, முழுநெறி - முழுநெறிப்பையுடைய, கமலம் - தாமரை கள், அன்னாள் - அத்தமயந்தியினுடைய, முலை தடத்து - தனத்தட மாகிய குளத்தினிடத்து, அலர்ந்த - பூத்தன, எ - று.

க - து. தமயந்தி கண்களாகிய கருவிளை மலர்கள் நளன்றோட் களிற் பூத்தன, நளன் கண்களாகிய தாமரைமலர்கள் தமயந்தி முலை த்தடங்களிற் பூத்தன என்பதாம்.

தமயந்தியின் கண்கள் நளன் புயங்களிலும் அவன் கண்கள் அவள் தனங்களிலும் பூத்தவென்றமையால் மாதர்க்கு ஆடவர் புயங் கள்போலும் ஆடவர்க்கு மாதர் முலைகள்போலும் காட்சிப்பிரமாணத் தின் முற்பட்டு விரைந் தின்பஞ்செய்யும் அவயவங்கள் வேறொன் றில்லையென்க. இவர்கள் எல்லையற்ற ஆசையுடையவ ரென்பதற்குப் பெருங்காதலென்றொழியாது 'கழி' என்றும், மகிழ்ச்சியென்றொழி யாது 'விழைவொடு' என்றும் கூட்டிச் சொல்லப்பட்டன. [கட்கரு விளை மலர்கள் புயவரையென்றதும், செங்கண் முழுநெறிக்கமலம் முலைத்தடம் என்றதும் உருவகவணிகள். முலைத்தடமென்றவிடம், முலைத்தடமாகிய தடம் எனப்படலால் உருவகம்.] தடமென்பது மலையும் குளமும். மாது, ஓ-அசைகள். (கOஉ)

படவர வல்குற் செவ்வாய்ப் பனிமொழிக் கொடியன் னாளை
மட லவிழ் கமலப் போதின் மடந்தையென் பதற்கு வெற்பின்
கடகளி றன்ன கின்ற காமரு காளை தனலை
யிடையறு தினிது நோக்கி யிமைப்புறு முறையுந் தீர்ந்தான்

இ - ள். பட அரவு அல்குல்-அராப்படம்போன்ற அல்குலையும், செவ்வாய் - சிவந்த வாயையும், பனி மொழி - குளிர்ந்த சொல்லையு முடைய, கொடிஅன்னாளை-தமயந்தியை, மடல் அவிழ்-இதழ்விரிந்த, கமலப்போதின் - தாமரைமலரிலிருக்கின்ற, மடந்தை என்பதற்கு- இலக்குமியென்று சொல்வதற்கு, வெற்றி - சயத்தைப்பெற்ற, கடம் களிறு என்ன-மதயானையைப்போல, நின்ற - அருகிலிருந்த, காமர் - அழகிய, காளை தன்னை - நளமகாராசனை, இடையறாது - இடைவிடாமல், இனிது நோக்கி - இனிதாகப்பார்த்து, இமைப்பு உறு - (இதுவரையும்) இமைப்பினையடைந்த, குறையும் - குறையையும், தீர்ந்தாள் - நீங்கினாள், எ - று.

க-து. தமயந்தி நளனைப்பார்த்துக் கண்குறை தீர்ந்தாள் என்பதாம்.

தமயந்தி கண்ணிமைப்பினா லன்றி மற்றைக் குணங்களால் இலக்குமியை யொத்தவளென்க. (கoஅ)

உண்ணிறை வுடைய காம முருவெடுத் தென்ன நின்ற
வண்ணலு மணங்கன் னாளு மழகெனு மினியதேற
லெண்ணருங் காதல் கூர வினிதினின் மாறி மாறிக்
கண்ணினாற் பருகி யின்பக் களிப்பெனுங் கடலு ளாழ்ந்தார்.

இ - ள். உள் - உள்ளே, நிறைவு உடைய - நிறைவினையுடைய, காமம் - ஆசையானது, உரு எடுத்தென்ன - ஒருவடிவுகொண்டது போல, நின்ற அண்ணலும்-நின்ற நளனும், அணங்கு அன்னாளும் - தமயந்தியும், அழகு எனும்-அழகென்று சொல்லும், இனிய தேறல் - இனிப்பையுடைய தேனை, எண் அரும் - எண்ணுதற்கரிய, காதல் கூர - ஆசைமிக, இனிதினின் - இனிமையினாலே, மாறி மாறி-ஒருவர்க்கொருவ ரடிக்கடி மாறிக்கொண்டு, கண்ணினால் - நேத்திரேந்திரியங்களினால், பருகி - உண்டு, இன்பம் - இன்பத்தைத்தரும், களிப்பு எனும் - களிப்பென்கின்ற, கடலுள் - கடலின்கண், ஆழ்ந்தார் - அழுந்தினார்கள், எ - று.

க-து. நளனுந் தமயந்தியும் ஒருவரையொருவர் பார்த்து மகிழ்ச்சிக் கடலிலே மூழ்கினார்கள் என்பதாம்.

மாறிமாறியென்றது ஒத்தகாமமுள்ளவர் நாணத்தால் ஒருவர் நோக்குங்காலத்தொருவர் நோக்காமையாலென்க. அது "யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற், றானோக்கி மெல்ல நகும்" (திருவள்ளுவர் - குறிப்பறிதல்-௩) இதனாலறிக. [காமமுருவெடுத்தென்ன வென்றலால் தற்குறிப்பணி. இன்பக்கடலென்றது உருவகவணி.]

இருதடம புயமு மந்தா ரகலமு மியைந்த தாமென்
றெரிவரு மாவி யென்று டெரிவையு மண்ணா லுறு
முருகவிழ் குழலும் வெய்ய முகிழ்முலைத் துணையுந் தாங்கு
முருவுடைத் தாங்கொ லென்ற னுயிரென வியந்து நின்றான்.

இ - ள். தெரிவையும் - தமயந்தியும், என் - என்னுடைய, தெரிவரும் - தெரிதற்கரிய, ஆவி - உயிரானது, இரு தடம் புயமும் - பருத்த தோள்களிரண்டையும், அம் - அழகிய, தார் - மாலையணிந்த, அகலமும் - மார்பையும், இயைந்தது என்றாள் - பொருந்தியதென்றாள்; அண்ணல் தானும் - நளனும், என்றன் உயிர் - என்னுடைய உயிரானது, முருகு அவிழ் - தேனொழுகப்பெற்ற, குழலும் - கூந்தலையும், வெய்ய - வெவ்விய, முகிழ் - அரும்பையொத்த, முலை துணையும் - இரண்டிலேதனங்களையும், தாங்கும் - சுமக்கப்பெற்ற, உருவு உடைத்து ஆம் என - உருவுடையதாமென்று, வியந்து - அதிசயித்து, நின்றான் - நின்றான், எ - று.

க - து. தமயந்தி நளன் தோள்களையும் மார்பையும் தன்னுயிரென்றாள், நளன் தமயந்தி கூந்தலையும் தனங்களையுந் தன்னுயிரென்றான் என்பதாம்.

முன்பு நளன் புயங்களைக்கண்ட தமயந்திக்கு இப்பொழுது அப்புயங்களுடன் மார்புந் தோன்றியது. அப்பொழுது தமயந்தி தனங்களைக்கண்ட நளனுக்கு இப்பொழுது அத்தனங்களுடன் கூந்தலுந் தோன்றியதென்க. [நளனிடத்து இருதடப்புயமு மந்தாரகலமு மியைந்ததாவியெனக் குறித்தலாலும், தமயந்தியிடத்துக் குழலும் முலைத்துணையுந் தாங்கு முயிரெனக் குறித்தலாலும் தற்குறிப்பணிகள்.] (க0[illegible])

மாதுபால் விழைவி னேகு மனத்தினை யல்ல செய்த
லாதினுக் கியல்பன் றென்றுத் தோன்றல்பே ரறிவின் மீட்
பக், காதலி னவன்பாற் செல்லுங் கருத்தினைக் கமலைத் தன்
பூம், போதுறை மடந்தை யன்னாட் பொருந்துநா ணடுத்த
தன்றே.

இ - ள். அல்ல செய்தல் - ஆதுக் குரியவல்லவைகளைச் செய்தல், ஆதினுக்கு - ஆதுக்கு, இயல்பு அன்று என்று - இயற்கையன்றென்று, தோன்றல் - நளமகாராசாவானவன், மாதுபால் - தமயந்தியினிடத்து, விழைவின் - ஆசையினாலே, ஏகும் - செல்லுகின்ற, மனத்தினை - மனத்தை, பேர் அறிவின் - பேரறிவினால், மீட்ப - மீட்க

யம் தண் பூ போது உறை - குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரில் நிக்கின்ற, மடந்தை அன்னாள் - இலக்குமியையொத்த தமயந்தியை, பொருந்து நாண் - பொருந்திய நாணமானது, காதலின் - ஆசையினால், அ யன்பால் செல்லும் கருத்தினை - அந்நளமகாராசனிடத்திற் சென்ற மனத்தை, தடுத்தது - தடுத்துவிட்டது, எ - று.

க - து. நளன் இச்செய்கை ஆதிற்குத் தகாதென்று மனதை மீட்கத் தமயந்தி நாணந் தன்மனதைத் தடுத்தது என்பதாம்.

அல்லசெய்தவென்பதற்கு அல்லவைதேயவென்பதற்குப்போல் எதிர்மறைப் பொருளாகக் கொள்க. ஆடவர்க்குப் பேரறிவுபோலும் மாதர்க்கு நாணம்போலும் தருணத்தில் நன்மைவிளைப்பதொன்றில்லையென்பது கருத்து. (கoக)

[இதுமுதல் ஆறுபாட்டுக்களால் நளனைக்கண்ட
தமயந்தியுந் தோழிமார்களுஞ் சிந்தித்தல்
சொல்லப்படுகின்றது.]

நாணமீ தூர நின்ற நகைமதி முகத்தி னாளும்
பூணினுக் கழகு செய்யும் புணர்முலைத் தோழி மாரு
நிணகர்க் கடிகொள் வாயி னீங்கிவந் தருகு நின்றான்
சேணுறை யமரன் கொல்லோ திருந்தெழி லியக்க னேயோ.

இ - ள். நாணம் - நாணமானது, மீதூரநின்ற - அதிகரிக்க நிருந்த, நகை - ஒளிபொருந்திய, மதி - திங்கள்போன்ற, முகத்தினாளும் - முகத்தையுடைய தமயந்தியும், பூணினுக்கு - ஆபரணங்களுக்கு, அழகு செய்யும் - அழகைச்செய்கின்ற, புணர் - ஒன்றோடொன்றுசேர்ந்த, முலை - ஸ்தனங்களையுடைய, தோழிமாரும் - தோழிகளும், நின் - நீண்ட, நகர் - இந்நகரத்தினது, கடி கொள் - காவலைக்கொண்ட, வாயில் - வாயிலை, நீங்கி வந்து - கடந்துவந்து, அருகு நின்றான் - நம்மருகே நின்றவன், சேண் உறை - ஆகாயத்திலிருக்கின்ற, அமரன் கொல்லோ - தேவனோ, திருந்து - திருந்தப்பெற்ற, எழில் - அழகையுடைய, இயக்கனேயோ - இயக்கனோ, எ - று.

க - து. தமயந்தியுந் தோழிமார்களும், இவன் தேவனோ இயக்கனோ என்றார்கள் என்பதாம்.

இப்பாட்டில் மதிமுகத்தினாளும் தோழிமாருமென்னும் எழுவாய்கள் யாவனோவென்னும் பாட்டில் 'உரைக்கலுற்றார்' என்னும் பயனிலைகொண்டு முடிந்தன. (கoஎ)

கடிகமழ் கமலச் செல்வி கண்கவர் வனப்பு வாய்ந்த, வடிவுறு குவவுத் திண்டோள் வண்டுழாய் மாயன் கொல்லோ, மிடல்கெழு வெள்ளி வெற்பின் விஞ்சையர்க் கிறைவன் கொல்லோ, முடியுடை யமரர் போற்று மொய்கழற் குமரன் கொல்லோ.

இ - ள். கடி - வாசனை, கமழ் - கமழ்கின்ற, கமலச் செல்வி - தாமரைமலரிலிருக்கின்ற திருமாதினுடைய, கண் - கண்களை, கவர் - கவர்கின்ற, வனப்பு வாய்ந்த - அழகுபெற்ற, வடிவுறு - வடிவின்மிக்க, குவவு - திரட்சிபொருந்திய, திண் தோள் - திண்ணிய புயங்களை யுடைய, வண் - அழகிய, துழாய் - துளபமாலையணிந்த, மாயன் கொல்லோ - திருமாலோ; மிடல் கெழு - வலிமைபொருந்திய, வெள்ளி வெற்பின் - வெள்ளிமலைக்கணுற்ற, விஞ்சையர்க்கு இறைவன் கொல்லோ - விஞ்சையர்க்கரசனோ, முடி உடை - மகுடத்தையுடைய, அமரர் போற்றும் - தேவர்களால் வணங்கப்பட்ட, மொய் - நெருங்கிய, கழல் - வீரக்கழலையணிந்த, குமரன் கொல்லோ - குமாரக்கடவுளோ, எ - று.

க - து. விஷ்ணுவோ, விஞ்சையர்க்கரசனோ, சுப்பிரமணியனோ என்றார்கள் என்பதாம்.

பகைவரைத் துரத்தல், மாதரால் விரும்பப்படல், சராசரங்களைப் பாதுகாத்தல், வீரமிகுதி முதலிய குணத்தால் 'மாயனோ' என்றும், இசைநூல் வல்லமை, இங்கிதசீர்மை, இறுமாப்புடைமை முதலிய குணத்தால் 'விஞ்சையர்க் கிறைவனோ' என்றும், அபயந்தருதல், அசுரரைமாட்டல், அருளுடைமை, அனைவரும் விரும்பும் கட்டழகுடைமை, ஆற்றலுடைமை, கட்டிளமையுடைமை முதலிய குணத்தால் 'குமரனோ' என்றும் சொல்லினார். சூரன் முதலிய அசுரரைக்கொன்று இந்திரன் முதலிய தேவரைக் காத்தலால் 'அமரர்போற்றுங் குமரன்' எனப்பட்டது. (௪௦௩)

விரும்பிய வனைத்து நல்கு மேதகு நலத்தின் மாய்ந்தோர், திருந்தெழில் யாக்கை பெற்றுத் திகழ்வரென் றுரைக்கு நீராற், கரும்புறழ் கிளவி பாகன் கட்டழற் பாய்ந்து துஞ்சி, யரும்பெறல் யாக்கை பெற்ற காமனே வடிவி லேமால்.

இ - ள். விரும்பிய அனைத்தும் - இச்சித்தவைகளெல்லாம், நல்கும் - தருகின்ற, மேதகு - மேம்பட்ட, நலத்தின் - நலத்தினால், மாய்ந்தோர் - இறந்தவர்கள், திருந்து - திருத்தமாகிய, எழில் -

அழகுபொருந்திய, யாக்கை பெற்று - தேகத்தைப்பெற்று, திகழ்வர் என்று - விளங்குவர்களென்று, உரைக்கும் நீரால் - சொல்கின்றதன்மையால், கரும்பு உறழ் - கரும்பிரதத்தைபொத்த, கிளவி - சொல்லையுடைய வுமைமாதை, பாகன் - தனதிடப்பாகத்தில் வைத்த கடவுளது, கண் - நெற்றிக்கண்ணினுடைய, தழல் - நெருப்பிலே, பாய்ந்து - பகுந்து, துஞ்சி - இறந்து, அரும்பெறல் - பெறுதற்கரிய, யாக்கை பெற்ற - (அழகுள்ள) தேகத்தைப்பெற்ற, காமனே - மன்மதனே, அறிகிலேம் - (யாம்) அறியேம், எ - று. ஆல் - அசை.

க - து. மன்மதனே அறியோ மென்றார்கள் என்பதாம்.

கரும்பு முதலாகுபெயர். முற்பிறப்பிலே ஒன்றைவிரும்பிஅதன் பொருட்டு அக்கினிப்பிரவேசம் வரைபாய்தல் புண்ணியதீர்த்தங்களில் விழுதல்முதலியவற்றா லுடலை நீத்தவர்கள் மறுபிறப்பிலே அதனைப்பெறுவர்களென்பது "முற்பவ முச்சியினின்று மிழிந்துயர் முற்றுற்றோர், பிற்பவ மெண்ணிய வாறு பெறத்தரு பேரோங்கல்" இதனாற்காண்க. இங்ஙனம் நளனை உவமித்தற்கரிய வடிவம்வேண்டி, ஈசுரன் விழிநெருப்பிலுடலை நீத்து இவ்வடிவைப்பெற்றமன்மதனோ வெனக் கருதினார்கள். ['நாணமீதூர' என்னும் பாட்டுமுதல் மூன்று பாட்டாலும் நளனை அமரனோ இயக்கனோ மாயனோ விஞ்சையர்க்கிறைவனோ குமரனோ காமனோ வென ஐயுறலால் ஐயவணி.] (க0க)

மங்கையர் நிறையு நாணுங் கவர்ந்திட வனப்பு வாய்ந்த
இங்கிவன் றன்னை ஞால மின்புறப் படைத்தி லானேற்
றிங்களங் கண்ணி வேய்ந்த செஞ்சடைக் கடவு ளெங்ஙன
பைங்கழை மதனைக் கொன்ற படுபழி தீரு மாறே.

இ - ள். மங்கையர் - மாதருடைய, நிறையும் - கற்பையும், நாணும் - நாணையும், கவர்ந்திட - கொள்ளையிடத்தக்க, வனப்பு வாய்ந்த - அழகுபெற்ற, இங்கு - இவ்விடத்து, இவன் தன்னை - இப்புருடனை, ஞாலம் - உலகம், இன்புற - இன்பத்தையடைய, படைத்திலானேல் - சிருட்டியாதிருப்பானேல், திங்கள் அம் கண்ணி வேய்ந்த - அழகிய பிறையைத் தரித்த, செம் சடை கடவுள் - சிவந்த சடாபாரத்தையுடைய பரமசிவன், பை கழை - பசிய கருப்புவில்லேந்திய, மதனை கொன்ற - மன்மதனைக் கொன்ற, படு பழி - கொலைப்பழி, தீரும் ஆறு - தீரும்விதம், எங்ஙன் - எப்படி, எ - று.

க - து. சிவன் மன்மதனைக்கொன்ற பழிதீர இவனைப்படைத்தான் என்பதாம்.

உலகமென்பது அதிலிருக்கும் உயிருக்காதலால் ஆகுபெயர். ஈசுரரும் இவனது படைப்பால் காமனை எரித்த பழியைத்தீர்ந்தாரெனலால் அக்காமனிலுமிக்க அழகுள்ளவனென்பது பெறப்பட்டது. நல்லோரொருவருக்குத் தீங்குசெய்யார், ஒருகாரணம்பற்றிச் செய்யினும் அதனினுமிக்க நன்மைசெய்து அத்தீங்கை யொழிப்பரென்பது கருத்து. [பழிதீராரென்பது இவன்றனை படைத்திலானே லெனவூகித்தலால் உய்த்துணர்வணி.] (கக0)

**மா**யிரு ஞாலத் தானேன் மண்ணினிற் பொலிந்த தில்லை
மீயுயர் விசும்பு ளானேல் விசும்பினிற் சிறந்த துண்டோ
பாயொளி பரிதி வேலான் பாதலத் துள்ளா னாயின்
மேயகீ ழுலகே யெல்லா வுலகினு மேல தாமால்.

இ - ள். பாய் - தாவுகின்ற, ஒளி - காந்தியையுடைய, பரிதி - சூரியனையொத்த, வேலான் - வேற்படையையுடைய இப்புருடன், மா - மகத்தாகிய, இரு - பெரிய, ஞாலத்தானேல் - பூவுலகிலிருப்பவனாகில், மண்ணினில் - அப்பூவுலகைவிட, பொலிந்தது - பிரகாசமுள்ளதாகிய வுலகம், இல்லை - இல்லை; மீ - மேலாக, உயர் - உயர்ந்த, விசும்புளானேல் - தெய்வலோகத்தானாகில், விசும்பினில் - அத்தெய்வலோகத்தைக் காட்டிலும், சிறந்தது - சிறக்கப்பெற்றதாகிய வுலகம், உண்டோ - இல்லை; பாதலத்து உள்ளான் ஆயின் - கீழுலகத்திருப்பவனாகில், மேய - பொருந்திய, கீழ் உலகே - பாதாளவுலகமே, எல்லா உலகினும் - உலகங்களனைத்திலுக்கும், மேலதாம் - மேற்பட்டதாகும், எ - று.

க - து. இவனிருக்கு முலகமெதுவோ அதுவே எவ்வுலகிலுஞ் சிறப்புற்றது என்பதாம்.

இவனிருக்கு முலகம் எதுவோ அதுவே எவ்வுலகினுஞ் சிறந்ததென்பது கருத்து. [இதுவும் அவ்வணி.] (ககக)

**யா**வனோ விவனென் றெண்ணி யிருநிலத் திலங்கு
பைம்பொற் சேவடி பொருந்து நீராற் றேவரி னொருவ னல்லன்
ஆவியஞ் சிறைய வன்னஞ் சொல்லிய வனப்பு வாய்ந்த
காவல னாங்கொ லென்னக் கருதியொன் றுரைக்க லுற்றாள்.

இ - ள். யாவனோ இவன் என்று - இவனெவனோவென்று, எண்ணி - சிந்தித்து, இரு நிலத்து - பெரியபூமியிடத்து, இலங்கு - பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசியபொற்சதங்கையணிந்த, சேவடி - சிவந்த பாதங்கள், பொருந்தும் நீரால் - பொருந்துகின்ற தன்மையால், தேவ

ரின் - தேவர் கூட்டத்துள், ஒருவன் அல்லன் - ஒருத்தனல்லனாகும்; தூவி - தூவியென்னும்பெயரையுடைய, அம் - அழகிய, சிறைய - சிறகினையுடைய, அன்னம் - அன்னப்புள்ளானது, சொல்லிய - (முன்பு) சொல்லிய, வனப்பு வாய்ந்த - அழகுபெற்ற, காவலன் ஆங்கொல் என்ன - அரசனாகுமென்று, கருதி - நினைத்து, ஒன்று - ஒருவார்த்தை, உரைக்கலுற்றார் - (தோழிகள்) சொல்லத் தொடங்கினார்கள், எ - று.

க - து. இவன் தேவனல்லன், நளனென்று சொல்லத்தொடங்கினார்கள் என்பதாம்.

பூமியிற் பாதம் பொருந்தலாலே தேவரினொருவனல்லனென்று நிச்சயித்த மாதர்க்கு கிழுலகத்தானோ வென்னும் ஐயநிகழவில்லை, அன்னஞ் சொல்லிய அழகுள்ள நளமகாராசனெனக் குறித்தவாறென்க. (கஉஉ)

கலைநிலாத் தவழு மாடக் கடிநகர் கடந்து போந்த
சிலைவலாய் நீயிங் கெய்தச் சிறப்புடைப் புவனந் தம்மிற்
பொலிவிழந் திருந்த தெந்தப் புவனநீ பொருள தாக
நலனுறு புனித மாய தெப்பெயர் நவிற்று கென்றார்.

இ - ள். கலை நிலா - கலைகணிறைந்த சந்திரன், தவழும் - தவழ்கின்ற, மாடம் - உப்பரிகைகளையுடைய, கடி நகர் - காவலைப்பெற்ற நகரத்தை, கடந்து போந்த - கடந்துவந்த, சிலை வலாய் - விற்றொழில் வல்லவனே, நீ இங்கு எய்த - நீயிங்கேவர (அதனாலே), சிறப்புடை - சிறப்பினையுடைய, புவனம் தம்மில் - தேசங்களுக்குள்ளே, பொலிவு இழந்து - அழகிழந்து, இருந்தது - இருக்கப்பெற்றது, எந்த புவனம் - எந்தத்தேசம், நீ பொருளது ஆக - நின்னைப்பொருளாகவுடைய, நலன் உறு - நன்மைபொருந்திய, புனிதம் ஆயது - பரிசுத்தமானது, எப்பெயர் - எந்தப்பெயர், நவிற்றுக என்றார் - (தோழிகள்) சொல்லென்றார்கள், எ - று.

க - து. தோழிகள் நளனைப்பார்த்து உமது ஊரென்ன பேரென்ன என்றார்கள் என்பதாம்.

[உன்பேர்யாது உன்தேசம் யாதென்னும் வினாக்கள் நீ போதலால் 'பொலிவிழந்திருந்த தெந்தப்புவனம்' எனலாலும், 'நீபொருளாக நலனுறு புனிதமாய தெப்பெயர்' எனலாலும் பெறப்படுதலால் பிறிதுவிளைவிற்சியணிகள். இவ்விரண்டுஞ் சேர்தலாற் சேர்வையணி.]

கானமர் கரிய கூந்தற் கன்னிய ரிவ்வா றோதத்
தேனிமிர் தெரியல் வேய்ந்து சிலைக்கழூஉம் பிருந்த தோளான்

பாலலங் கடந்த தீஞ்சொற் பைந்தொடி வதுவை வேட்டு
வானவர் விடுத்த தூதன் யானென வழங்க லுற்றான்.

இ - ள். கார் அமர் - வாசனைபொருந்திய, கரிய கூந்தல் - கறுத்த குழலையுடைய, கன்னியர் - மாதர்கள், இவ்வாறு ஓத - இப்படிச் சொல்ல, தேன் - வண்டுகள், இமிர் - ஒலிக்கின்ற, தெரியல் - மாலையை, வேய்ந்து - தரித்து, சிலை தழும்பு - விற்றழும்பு, இருந்த - தங்கிய, தோளான் - தோள்களையுடையநளன், பால் - பாலினது, நலம் கடந்த - நலத்தை செயித்த, தீ சொல் - இனிய சொல்லையுடைய, பைந்தொடி - தமயந்தி, வதுவை வேட்டு - விவாகத்தை யிச்சித்து, வானவர் - தேவர்களால், விடுத்த - விடுக்கப்பட்ட, தூதன் யான் என - தூதுவன்யானென்று, வழங்கலுற்றான் - சொல்லத்தொடங்கினான், எ - று.

க - து. நளன் தேவர்கள்விட்ட தூதன் யானென்றான் என்க.

...வர் பேர் முதலியவற்றையறைந்தின்று விழைந்த தமயந்
[illegible]
தனது தொழிற்குரிய பெயரால் கூறினனென்க. (கக௪)

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் நளன் பேசுதல் சொல்லப்படுகின்றது.]

ஐந்தரு நீழல் வேந்த னுரகவிக் கிறைவன் வெய்ய
செந்தழற் கடவு டென்பாற் றிசையுறை யருமனின்னோர்
பைந்தொடி நின்னை வேட்டுப் படைமதன் பகழி பாயச்
சிந்தனை பிறிதாய் மாழ்கித் தெருமர லெய்து கின்றார்.

இ - ள். ஐந்தரு நீழல் வேந்தன் - இந்திரன், உரகவிக்கு இறைவன் - வருணன், வெய்ய - கொடிய, செம் தழல் கடவுள் - அக்கினி பகவான், தென்பால் திசை உறை - தெற்குத்திக்கிலிருக்கின்ற, அருமன் - யமன், இன்னோர் - ஆகிய இந்நால்வரும், பைந்தொடி - தமயந்தி, நின்னை வேட்டு - உன்மேல் விருப்புற்று, படை - சேனைகளையுடைய, மதன் பகழி - மன்மதன்பாணங்கள், பாய - (தங்கள்மேல்) தைக்க, (அதனால்) சிந்தனை - மனம், பிறிதாய் - வேறுபட்டு, மாழ்கி - மயங்கி, தெருமரல் - சுழற்சியை, எய்துகின்றார் - அடைகின்றார்கள், எ - று.

க - து. இந்திரன் வருணன் அக்கினி யமன் ஆகிய இந்நால்வரும், தமயந்தியே, உன்னைவிரும்பி மன்மதபாணத்தால் வருந்துகின்றார்கள் என்று நளன் என்பதாம். ([illegible])

இங்கிவர் தம்மை யாசைக் கிறைவரென் றறைவ தெல்லாந்
தங்கிய திசையின் பேராற் சாற்றிய மாற்ற மன்றே
கொங்கவிழ் குழையிற் றாவிக் குமிழ்மிசை மறியும் வேற்க
ணங்கலுழ் மேனி யாய்நின் னாசையால் வந்த தாமால்.

இ - ள். இங்கு - இவ்விடத்தில், இவர் தம்மை - இந்நால்வரை யும், ஆசைக்கு இறைவர் என்று - ஆசைக்கரசரென்று, அறைவது எல்லாம் - சொல்லுவ தனைத்தும், தங்கிய - இவர்களிருக்கின்ற, திசையின் பேரால் - திக்கினது பெயரினாலே, சாற்றிய - சொல் லப்பட்ட, மாற்றம் அன்று - சொல்லன்றாகும்; கொங்கு - வாசனை, அவிழ் - விரிகின்ற, குழையில் - காதணியில், தாவி - பாய்ந்து, குமிழ் - குமிழம்பூவினது, மிசை - மேற்பக்கத்தில், மறியும் - மீளுகின்ற, வேல்கண் - வேல்போன்ற கண்களையுடைய, அம் - அழகானது, கலுழ் - ஒழுகுகின்ற, மேனியாய் - வடிவையுடைய தமயந்தியே, நின் - உன் மேல் வைத்த, ஆசையால் - ஆசையினால், வந்தது ஆகும் - வந்ததா கும், எ - று.

க - து. தமயந்தியே! இந்நால்வரும் உன்மேல் வைத்த ஆசையி னாலே ஆசைக்கிறைவரென்று பேர்பெற்றார்கள் என்பதாம்.

குமிழ் - முதலாகுபெயர். ஆசையென்பது திசைக்கும் அன்புக் கும்பெயர். அது "ஆசையே திசைபொன் னன்பாம்" என்பதனாற் காண்க. [திசைக்கிறைவ ரென்றமையால் வந்த ஆசைக்கிறைவரென் னும் பெயர்க்கு அன்பினால் வந்ததெனப் பொருள் கூறுதலால் பிறி தின் நவிற்சியணி.] (கககு)

[இதனால் இந்திரனது வருத்தஞ்சொல்லப்படுகின்றது.]

பற்றிய காமத் தீயாற் பைம்பொனாட் டமரர்க் கெல்லாங்,
கொற்றவன் வருந்தா வண்ணங் கொய்துகொய் தணையிற் சேர்த்தே, யுற்றவர் வறுமை தீர்க்கு முயர்சினைத் தருக்க ளைந்து, நற்றளி ரின்மை யாகி நல்குர வடைந்த மாதோ.

இ - ள். பை - பசிய, பொன்நாடு - பொன்னுலகத் திருக்கின்ற, அமரர்க்கு எல்லாம் - தேவரனைவர்க்கும், கொற்றவன் - அரசனாகிய இந் திரன், பற்றிய - தன்னைப்பற்றிய, காமத்தீயால் - காமாக்கினியால், வருந்தா வண்ணம் - வருத்தப்படாதவிதம், உற்றவர் - தம்மையடைந் தவர்களுடைய, வறுமை - இல்லாமையை, தீர்க்கும் - நீக்கும், உயர் - உயர்ந்த, சினை - கிளைகளையுடைய, தருக்கள் ஐந்தும் - பஞ்சதருக்க ளும், கொய்து கொய்து - பறித்துப்பறித்து, அணையில் சேர்த்து - படு

க்கு மெத்தையிற் சேர்த்து, (அதனால்) நல் - நல்ல, தளிர்-தளிர்களை, இன்மையாகி - இல்லாமையாய், நல்குரவு - வறுமையை, அடைந்த- சேர்ந்தன, எ - று.

க - து. இந்திரன் உன்மேல் விருப்புற்றடைந்த காமந் தணிக்கும்பொருட் டடைந்த தருக்களுந் தழைகளிழந்தன என்பதாம்.

இந்திரன் உன்னிடத்துற்ற ஆசையினாலே அளவற்றதாபத்தை யடைந்தானென்பது கருத்து. [கற்பகத்தருவுக்கு இதனால் நல்குரவில்லாதிருந்தும் உளதாகக் கூறலின் உயர்வு நவிற்சியணி.] (௧௧௭)

[இதனால் மற்றை மூவர் வருந்தமுஞ் சொல்லப்படுகிறது.]

கடிமலர்க் கூந்த னின்மேற் காதன்மீ தூர நின்ற
அடுதொழிற் கூற்று மஞ்ச வடர்கின்றா னனங்கன் வெய்ய
வடவையோ டிகலு முந்நீர்க் கிறையையும் வருந்தி யாவுஞ்
சுடுதழற் கடவுண் மீதுஞ் சுட்டது காமத் தீயே.

இ - ள். கடி - வாசனை பொருந்திய, மலர் - மலரையணிந்த, கூந்தல் - அளகபாரத்தையுடைய தமயந்தி, நின்மேல் - உன்னிடத்தில், காதல்-ஆசை, மீதூர நின்ற-அதிகரிக்கவிருந்த, அடு தொழில் - கொல்லுந்தொழிலையுடைய, கூற்றும் - யமனும், அஞ்ச - பயங்கொள்ள, அனங்கன் - மன்மதனானவன், அடர்கின்றான் - நெருக்குகின்றான்; வெய்ய - கொடிய, வடவையோடு - வடவைத்தீயுடனே, இகலும்-பகைகொள்ளும், முந்நீர்க்கு இறையையும் - கடற்கரசனாகிய வருணனையும், வருந்தி - வருத்தப்படுத்தி, யாவும் - எவற்றையும், சுடு - சுடுகின்ற, தழல் கடவுண் மீதும் - அக்கினி பகவான்மேலும், காமத்தீ - காமாக்கினி, சுட்டது - சுட்டது; எ - று.

க - து. தூமத்தீயைப் பார்க்கிலும் காமத்தீ கொடிதென்பதாம்.

கொல்லுந் தொழிலையுடைய கூற்றையும் அஞ்சச்செய்து வடவைத்தீயையும் அடக்குங் கடலரசனையும் வருத்தி எல்லாவற்றையுஞ் சுடுகின்ற தீக்கடவுளையுஞ் சுடுதலாற் காமத்தீயை ஒருவராலும் வெல்லக்கூடாதென்ற தாயிற்று. "ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு, நீருட் குளித்து முயலாகு - நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமே குன்றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" (நாலடியார்-பிறர்மனை நயவாமை-௧0) இதனால் தூமத்தீயினுங் காமத்தீ கொடிதென்ப துணர்க.

நெருக்கித முனங்க ளைந்தின் முகிழ்முலை வேட்ட னானே
செருக்கிள ரனங்கன் வாளிச் செழுமலர் வருத்த வாடி
யிருத்தலாற் பழிச்சு கின்றோ ரேடவிழ் நறிய போதா
லருச்சனை புரியுந் தோறு மஞ்சுவ ரமரர் மாதோ.

இ - ள். முருக்கு - முருக்கலரையொத்த, இதழ் - அதரத்தையு டைய, அணங்கனாய் - தமயந்தி, நின் - உன்னுடைய, முகிழ் - அரும் பையொத்த, முலை - ஸ்தனங்களை, வேட்ட ஞான்றே - விரும்பிய பொழுதே, செரு - போர்த்தொழிலில், கிளர் - கிளர்ச்சியையுடைய, அனங்கன் - மன்மதனுடைய, வாளி-பாணங்களாகிய, செழு மலர் - செழுமையுள்ள மலர்கள், வருத்த - வருத்தஞ்செய்ய, வாடி-அவைக ளால் வாட்டமுற்று, இருத்தலால் - இருக்கையினால், பழிச்சுகின் றோர் - பரவுகின்றவர்கள், ஏடு அவிழ் - இதழ்கள்விரிந்த, நறிய போ தால் - நல்லமணமுள்ள மலரால், அருச்சனை புரியுந்தோறும் - பூசை செய்யுந்தோறும், அமரர் - (அதிலிருக்கும்) தேவர்கள், அஞ்சுவர் - பயங்கொள்ளுவார்கள், எ - று.

க - து. இந்திரன் மன்மதபாணத்தால் வருந்தியிருத்தலால் அவ னைக் காணவருபவர் மலரா லருச்சிக்குந்தோறும் அப்பாணமென்று தேவர் பயப்படுவர் என்பதாம்.

இந்திரன் தமயந்தியை விரும்பிய நாள்முதலாக இன்றளவும் மன்மத பாணங்கள் வருத்தஞ்செய்ய வாடியிருத்தலால் காணவரு மவர் முறைமைப்படி நறியமலர்களைக்கொண்டு அவனை அருச்சிக்குந் தோறுந் தேவர்கள் இவையும் அப்பாணங்களென் றஞ்சுதலாலே 'அஞ்சுவரமரர்' என்றார். (கககக)

இன்னணந் தேவர் மாழாந் திருநில வரைப்பிற் போந் துன், பொன்னவிர் திதலையார்ந்த புணர்முலைப் போகம் வே ட்ப, முன்னமெத் தவஞ்செய் தாய்கொ லியைவதே முறை மை யென்றான், கன்னல்வில் லொளித்து நின்ற காமனே யனைய நீரான்.

இ - ள். இன்னணம் - இவ்விதம், தேவர் - தேவர்கள், மாழா ந்து - மயங்கி, இரு-பெரிய, நில வரைப்பில் போந்து- பூவுலகில்வந்து, உன் - உன்னுடைய, பொன் - பொன்போலும், அவிர் - விளங்குகி ன்ற, திதலை ஆர்ந்த - தேமலாணிறையப்பெற்ற, புணர் - ஒன்றோ டொன்று நெருங்கிய, முலை - ஸ்தனங்களினுடைய, போகம் - போக த்தை, வேட்ப - விரும்ப, முன்னம் - முற்பிறப்பில், எத்தவம் செய் தாய் கொல் - என்னதவஞ் செய்தனையோ, இயைவதே - சம்மதிப்ப துவே, முறைமை என்றான் - கிரமமென்றான், கன்னல் வில்-கருப்பு வில்லை, ஒளித்து நின்ற - மறைத்துவைத்துநின்ற, காமனே அனைய - மன்மதனையே யொத்த, நீரான்- தன்மையையுடைய நளமகாராஜன், எ - று.

க - து. இந்திரன் முதலியோருன்னை யிச்சிக்க நீ முன்னென்ன தவஞ் செய்தாயோ, அவர்களுக்குச் சம்மதிப்பதே ஒழுங்கென்றான் என்பதாம்.

தேவரிற் சிறந்த இந்திரன் முதலியோரைத் தலைவராகப் பெறுவது முற்பிறப்பிலே அருந்தவஞ் செய்தவர்க்கன்றி மற்றையோர்க்கு எளிதன்றென்பது கருத்து. (கஉ0)

**என்றிவன் மொழித லோடு மினையனே நளனென் றெண்ணி, மன்றலங் குழலா ணாணி வருத்தமோ டெருத் தங் கோட்டி, நின்றன ண் மருங்கு சூழ்ந்த தோழியர் நிட தங் காக்கும், வென்றிகொள் சுடர்வேல் வேந்தற் கெதிர் மொழி விளம்ப லுற்றார்.**

இ - ள். என்று - இப்படியென்று, இவன் - இந்நளன், மொதலோடும்-சொல்லியவளவில், இனையனே - இவனே, நளன் என் எண்ணி - நளனென்று நினைத்து, மன்றல் அம் குழலாள்-தமயந்தி, நாணி - நாணமடைந்து, வருத்தமோடு - வருத்தத்துடனே, எருத்தம் கோட்டி - தலையை வளைத்துக்கொண்டு, நின்றனள் - நின்றாள்; மருங்கு - பக்கத்தில், சூழ்ந்த-சுற்றியிருக்கின்ற, தோழியர் - தோழிகள், நிடதம்காக்கும்-நிடததேசத்தைப் புரக்கின்ற, வென்றி கொள் - வெற்றியைக்கொண்ட, சுடர் - கிரணங்களையுடைய, வேல் - வேற்படையையேந்திய, வேந்தற்கு - நளமகாராஜனுக்கு, எதிர் மொழி - எதிருத்தரத்தை, விளம்பலுற்றார் - சொல்லத் தொடங்கினார்கள், எ - று.

க - து. தமயந்தி இவனே நளனென்று நாணி நின்றாள். நளனுக்குத் தோழியர் சொல்லத் தொடங்கினார்கள் என்பதாம்.

நளன் இவனேயென்று நிச்சயித்த தமயந்திக்கு இனி நமக்குத் தலைவனாக வருபவனென்னுந் துணிவினாலே நாணமும் நாம் இவனை விரும்பியிருக்க இவன் தேவர் பொருட்டுத் தூது வந்தானென்பதால் வருத்தமும் உண்டாயினவாற்றால் வாளா விருந்தனள். உயிர்த் தோழிகள் அவள் கருத்து முழுவதும் அறிந்தவராதலால் அவ்விறைக்கு இறைகொடுக்கத் தொடங்கினரென்க. (கஉக)

[இதுமுதலிரண்டு பாடல்களால் தூதியர் விடைகொடுக்கின்றனர்.]

**ஆற்றல்சா னளனே யன்றி யாருயிர் பிறிதின் றென்னும் வேற்றடங் கண்ணி னுடன் மெய்பதைத் தாவி சோரத்**

சாற்றிய மாற்றந் தன்றாற் றழலுமிழ் தறுகட் பேழ்வாய்க்
கூற்றுவன் றூத னென்று கூறிய தியற்கை யாமே.

இ - ள். ஆற்றல் சால்-வலிமைமிக்க, நளனே அன்றி - நளமகா ராஜனையல்லாமல், ஆர் உயிர்-நிறைந்த ஆவியானது, பிறிது இன்றி என்னும்-வேறொன்றில்லை யென்கின்ற, வேல்தடம்கண்ணினாள்தன்-, தமயந்தியினுடைய, மெய் பதைத்து-தேகநடுங்கி, ஆவி - உயிரானது, சோர - சோர்வையடைய, சாற்றிய-நீசொல்லிய, மாற்றந்தன்றால்- சொல்லினால், தழல் உமிழ்-நெருப்பை யுமிழ்கின்ற, தறுகண் - கொடிய கண்களையும், பேழ் வாய் - பெருவாயையுமுடைய, கூற்றுவன் தூதன் என்று - யமதூதனென்று, கூறியது - (முன்) சொல்லியது, இயற்கையாம் - (உனக்குத்) தகுதியாகும், எ - று.

க - து. நளனே தன்னுயிரென்று நினைத்திருக்குந் தமயந்தி யுயிர்சோர நீ சொல்லியசொல்லால் யமதூதனென்பது சரியே என்றார்கள் என்பதாம்.

நளனையே உயிரென்று நிச்சயித்திருக்குந் தமயந்தியது அபிப்பிராயத்திற்கு விரோதமாகிய செய்தியைச்சொல்லி அவளுயிர் பிரிதற்கு நீ யேதுவாகையால் முன்பு யமதூதனென்று சொல்லியது உனக்குத் தகுமென்றார்கள். 'தழலுமிழ்தறுகட் பேழ்வாய்' என்னும் அடைமொழிகள் கூற்றுவனது கொடுமையை விளக்குகின்றன. கூற்றுவன் றூதனென விதித்தலால் விதியணி. (உ௨)

வையக மொருகோ லோச்சி வான்புகழ் நிடதங் காக்கு
மையனை மணப்ப தன்றி யரிமதர் நெடுங்கட் செவ்வாய்த்
தையல்வே றொருவர் நாமஞ் சாற்றினு மாற்றா ளாகி
வெய்யசெந் தழலின் மூழ்கி விளிவதற் கைய மின்றே.

இ - ள். வையகம் - பூவுலகத்தை, ஒரு கோல் ஓச்சி - தனிச் செங்கோல்செலுத்தி, வான் புகழ் - மிகுந்த புகழையுடைய, நிடதம் காக்கும் - நிடதேசத்தைப் புரக்கும், ஐயனை - நளமகாராஜனை, மணப்பது அன்றி - விவாகஞ் செய்துகொள்வதல்லாமல், அரி-செவ்வரிபரந்த, மதர் - களிப்பையுடைய, நெடுங்கண் - நெடியகண்களையும், செவ்வாய் - சிவந்தவாயினையுமுடைய, தையல் - தமயந்தியானவள், வேறு ஒருவர் நாமம் - வேறொருவர்பெயரை, சாற்றினும் - சொல்லினும், ஆற்றாள் ஆகி-பொறுக்கமாட்டாதவளாய், வெய்ய - கொடிய, செம் தழலில் - செந்நெருப்பினில், மூழ்கி - முழுகி, விளிவதற்கு - இறப்பதற்கு, ஐயம் இன்று - ஐயமில்லை, எ - று.

க - து. தமயந்தி நளனை விவாகஞ் செய்வதன்றி வேறொருவர் பெயரைச்சொன்னாலு மக்கினியில் விழுந்திறப்பாள் என்பதாம்.

விளிதல்-இறத்தல். நளனை மணப்பதற்கு முன்பு செய்த தவம போதாமையால் இப்படியாயிற்று. இப்பொழுதாவது விதிப்படி தீ வளர்த்து அதில்விழுந்து கிளைத்ததை மறுபிறப்பில் முடிப்பாளென் னுங் கருத்துத் தோன்ற 'வெய்யசெந் தழலின்மூழ்கி விளிவதற் கையு மின்று' என்றார். (கஉரு)

[இதுமுதல் நாலுபாட்டால் நளன் தமயந்தியை வற்புறுத்திக் கூறல்.]

என்றவர் மொழிய வேந்த னியம்புவா னெரியின் வீழ்ந் து, பொன்றில்வெங் கனலி தன்னைப் புணர்ந்ததாம் புக ன்ற செந்தீ, யன்றிவார் புனலின் வீழ்ந்துள் ளாருயிர் விடு த்தா ளேனுந், துன்றுசீர் வருணன் றன்னைத் தோய்ந்ததாம் விளையு மன்றே.

இ - ள். என்று - இப்படியென்று, அவர் மொழிய - அந்தத் தோழிகள்சொல்ல, வேந்தன்-நளமகாராஜன், இயம்புவான் - சொ ல்லுவான்; எரியின் வீழ்ந்து பொன்றில்-நெருப்பில் வீழ்ந்திறந்தால், வெம் கனலி தன்னை-அக்கினிபகவானை, புணர்ந்தது ஆம்-கூடியதா கும்; புகன்ற-(இப்பொழுது) சொல்லிய, செம் தீ அன்றி-அக்கினியல் லாமல், வார் - நெடிய, புனலில் வீழ்ந்து - நீரிலே விழுந்து, உள் - உள்ளே, ஆர் - நிறைந்த, உயிர் விடுத்தாளேனும்-உயிரைவிட்டாளா னாலும், துன்று - நெருங்கிய, சீர் - சிறப்பையுடைய, வருணன் தன்னை - கடலரசனை, தோய்ந்ததாய் விளையும்-கலந்ததாகி விளையும், எ - று.

க - து. அக்கினியில் வீழ்ந்திறந்தால் அக்கினியைச் சேர்ந்ததா யிருக்கும், நீரில் வீழ்ந்திறந்தால் வருணனைச் சேர்ந்ததாயிருக்கும் என்பதாம்.

நெருப்பில் வீழினும் நீரில் வீழினும் தீக்கடவுளையும் கடற்கர சனையும் புணர்ந்ததாக முடிதலாலும் இவள் நினைப்பு இப்பிறப்பில் முற்றாமையாலும் மறுமைப்பயனின்மையிற் பயவாமையானும் அவர் களேவந்து பிரார்த்திக்கும்போது இசைந்தால் மிக்க நன்மையுண்டா மென்பது கருத்து. (கஉசு)

அன்றியுங் கனலி சான்று யல்லது வதுவை யாற்றற் கொன்றுமோ வருண னெவ்வா றுதகமோ டளிக்குந் தூ

மன்றலெவ் வாறு முற்றும் வானவ ரருளில் லாமற்
றுன்றுநீர்ப் புவியில் யார்க்குஞ் சூழ்வினை முடிக்க லாமே.

இ - ள். அன்றியும்-அப்படியல்லாமலும், கனலி சான்றாய் அல்லது - அக்கினி சாக்ஷியாயல்லாமல், வதுவை ஆற்றற்கு - விவாகஞ் செய்தற்கு, ஒன்றுமோ - பொருந்துமோ; வருணன் - கடலரசன், ஒவ்வாது - சம்மதியாமல், உதகமோடு அளிக்கும்-நீரொடுகொடுப்பதாகிய, தூய - சுத்தமாகிய, மன்றல் - விவாகம், எவ்வாறு முற்றும் - எவ்வழி முடியும்; (ஆதலால்) வானவர் - தேவர்களுடைய, அருள் இல்லாமல் - கிருபையில்லாமல், துன்று நீர்-கடல்சூழ்ந்த, புவியில்-பூமியிலே, யார்க்கும் - எப்படிப்பட்டவர்களுக்கும், சூழ்வினை - நினைக்கப்பட்ட கருமங்களை, முடிக்கலாமே - முடிக்கக்கூடுமா, எ - று.

க - து. எப்படிப்பட்டவர்க்கும் தீயு நீரு மில்லாமல் விவாகமுடியாது, இதற்கிவர்க ளருள் வேண்டுமென்றா னென்பதாம்.

சூழ்தல் - நினைத்தல். பூமியிலே எப்படிப்பட்டவர்களுக்கும் தீயும் நீருமன்றி விவாகமுறாது ஆதலால் அதற்கு அதிதேவதைகளாகிய இவர்கள் அருள்வேண்டுமென்பது கருத்து. (கஉரு)

வேயினைப் பழித்த மென்றோள் வேற்றடங் கண்ணி னாடன்
னேயபே ரழகு மாந்த ரிருகணா னோக்க வற்றோ
தீயுமிழ் வயிர வொள்வா ளேந்திய தேவர் கோமா
னாயிரங் கண்க ளாலு நோக்குதற் கமைந்த தன்றே.

இ - ள். வேயினை - மூங்கிலை, பழித்த - நிந்தித்த, மெல் - மெல்லிய, தோள் - தோளையுடைய, வேல் தடம் கண்ணினாள் தன் - தமயந்தியிடத்து, ஏய-பொருந்திய, பேர் அழகு-மிகுந்த அழகானது, மாந்தர்-மனிதருடைய, இரு கண்ணால்-இரண்டு விழிகளால், நோக்க வற்றோ-பார்க்கவல்லதோ; தீ உமிழ்-நெருப்பை யுமிழ்கின்ற, வயிரம் ஒள்வாள் - வச்சிராயுதத்தை, ஏந்திய - தாங்கிய, தேவர் கோமான்-இந்திரனானவன், ஆயிரம் கண்களாலும் - ஆயிரம் விழிகளாலும், நோக்குதற்கு - பார்க்கும்பொருட்டு, அமைந்தது - பொருந்தியதாகும், எ - று.

க - து. இந்திரன் ஆயிரங்கண்களாற் பார்த்தற்கமைந்த தமயந்தியினழகை மனிதர்க ளிருகண்களாற் பார்த்தல் பயன்படாது என்பதாம்.

உயர்பிறப்புடைய தேவர்க்கரசனாகிய இந்திரன் ஆயிரங் கண்களாலும் பார்த்தற் கமைந்த தமயந்தியினழகை இழிபிறப்புடைய

மனிதர் இரண்டு கண்களாற் பார்க்கும்படி விரும்புவதில் அவ்வழகு பயன்படா தென்பதாம். (கஉசு)

வெந்திறற் களிநல் யானை விதர்ப்பர்கோ னளித்த மாதைத்
தந்துயி ரளித்தி யென்னத் தனியிரு விசும்பு காக்கு
மிந்திரன் கேட்ட போதி லெண்ணிய வனைத்து நல்கு
மைந்தரு வழங்கி னும்மா லன்றென மறுக்க லாமோ.

இ - ள். தனி - ஒப்பற்ற, இரு விசும்பு-பெரிய விண்ணுலகத்தை, காக்கும் - காக்கின்ற, இந்திரன்-இந்திரனெனவன், வெம் திறல் - வெவ்விய வலிமைபெற்ற, களி - களிப்பையுடைய, நல் - நல்ல, யானை - யானையையுடைய, விதர்ப்பர் கோன் - வீமனெனவன், அளித்த - பெற்ற, மாதை - தமயந்தியை, தந்து - கொடுத்து, உயிர் - என்னுயிரை, அளித்தி என்ன - காப்பாற்றென்று, கேட்டபோதில் - கேட்டால் அப்பொழுது, எண்ணிய அனைத்தும் - நினைத்தவைகளெல்லாம், நல்கும் - தருகின்ற, ஐந்தரு-பஞ்சதருக்கள், வழங்கின் கொடுத்தால், நும்மால் - உங்களால், அன்றென - அன்றென்று, மறுக்கலாமோ - மறுக்கக்கூடுமோ, எ - று.

க - து. தமயந்தியைக் கொடுத் தென்னுயிரைக் காப்பாயென் றிந்திரன் கேட்ப, ஐந்தருக்களும் அப்படியே யவளைக் கொடுக்குமாயி னுங்களாற் றடுக்கலாகுமோ வென்பதாம்.

இந்திரன் தருமநினைப்பை யுடையவனாதலால் தன்னுயிர் போக வந்தவிடத்தும் அவ்வாறு செய்யாது சம்மதிப்படுத்த நினைத்தான னென்க. 'தனியிருவிசும்பு காக்கும்' என்றலால் அவனுடைய ஆக்ஞை சொல்லப்பட்டது. பிறர் எண்ணிய வனைத்துங் குறிப்பறிந்து கொடுக்கும் பஞ்சதருக்கள் தமக்கரசனாகிய இந்திரன் வாய்திறந்து கேட்கில் அது எப்படி யில்லையென்று சொல்லும். "எல்லா மொறுக்கு மதுகை யுறனுடையாளன் பொறுக்கும் பொறையே பொறை" என்றிருத்தலால், இந்திரன் பொறுமையுள்ளவனென்பது பெறப்பட்டது. ஐந்தரு சிருட்டித்துக் கொடுக்குமெனப் பொருள்கொள்ளில் உலகத்தில் உவமையற்ற இவள்போற் பலருண்டாயின் இவளுக்குச் சிறப்பில்லையென்பது கருத்து. (கஉஎ)

என்றிவன் புகன்ற மாற்ற மிருசெவி வெதுப்பக் கேட்டு
நின்றுளம் பதைப்ப வாடி நெட்டுயிர்ப் போடுஞ் சோரு
மன்றலங் குழலி னுடன் மதர்நெடுங் கயற்க ணாளி
குன்றெனப் பணைத்து வீங்குங் குவிமுலை வார்ந்த வன்றே.

இ - ள். என்று - இப்படியென்று, இவன் - இந்நளனானவன், புகன்ற மாற்றம் - சொன்ன சொற்கள், இரு செவி - இரண்டு காதுகளையும், வெதுப்ப - சுடுதலைச்செய்ய, கேட்டு - அதுகளைக் கேள்விப்பட்டு, நின்று - நின்று, உளம் - மனமானது, பதைப்ப - பதைப்படைய, வாடி - வாட்டமுற்று, நெடு உயிர்ப்போடும் - பெருமூச்சுடனே, சோரும் - சோர்வை யடைகின்ற, மன்றல் குழலினாள் தன் - தமயந்தியினுடைய, மதர் - களிப்பையுடைய, நெடு கயல் கண் - நெடிய கயல்போன்ற கண்களினின்றும், ஆலி - நீர்த்துளிகள், குன்று என - மலைகளென்று சொல்ல, பணைத்து - பருத்து, வீங்கும் - வீங்கிய, குவி முலை - குவிந்த ஸ்தனங்களின்மேல், வார்ந்த - ஒழுகின, எ - று.

க - து. நளன் சொன்ன சொல்லைத் தமயந்தி கேட்டு அவளிரு கண்ணீர்த்துளிக ளிருமுலைமேல் விழுந்தன என்பதாம்.

ஆடவர் ஒரு பொருளைக் குறித்து வினவும்பொழுது அதற்கு விடைகூறத் தடைபடின் அழுவது மாதர்க்குச் சுபாவமாதலால் தமயந்திக்குக் 'கயற்கணாலிகுவிமுலைவார்ந்த' என்றார். மிக்ககல்விப்பயிற்சியுள்ள விவட்குத் தடைபடுவ தேனெனின், தான் பேசுவதற்குக் கூடாமையாலும், இவன் பேசுவதில் தோழிகட்கும் வருத்த மிகுதலானுமென்க. எப்படிப்பட்டவர்க்கும் மனவருத்த மேலிடில் ஒன்றுந் தோன்றா தென்பதாம். (கஉஅ)

மாதுகண் பனிப்ப நோக்கித் தோழியர் மாழாந் துள்ளம்
பேதுற வெய்தி நின்ற பெய்வளைத் துயா மெல்லாந்
தூதுநாம் விடுத்த வன்னஞ் சொல்லிய தென்னிற் சற்று
மாதர மின்றி யிவ்வா றுரைக்குமோ வரச னென்றார்.

இ - ள். மாது - தமயந்தியினுடைய, கண் - கண்கள், பனிப்ப - நீரைச் சொரிய, நோக்கி - பார்த்து, தோழியர் - தோழிகள், மாழாந்து - மயங்கி, உள்ளம் - மனமானது, பேதுறவு எய்தி - கவலையடைந்து, நின்ற பெய்வளை - நிற்கின்ற தமயந்தியினுடைய, துயரம் எல்லாம் - துன்ப மனைத்தையும், தூது - தூதாக, நாம் விடுத்த - நம்மால் விடுக்கப்பட்ட, அன்னம் - அன்னப் பறவையானது, சொல்லியது என்னில் - சொல்லியிருந்ததானால், சற்றும் - கொஞ்சமும், ஆதரம் இன்றி - ஆசையில்லாமல், இவ்வாறு - இப்படி, அரசன் - நளனானவன், உரைக்குமோ என்றார் - சொல்லுவானோ வென்றார்கள்,

க - து. தோழிகள் தூது சென்ற அன்னம் தமயந்தி துயரத்தைச் சொல்லி யிருக்குமானால் நளனிப்படிச் சொல்வானோ வென்றார்கள் என்பதாம்.

மாழாந்து என்பதற்குப் பகுதி மாழா. இவன் நளனோ அல்லனோ நளனேயாயினும் நாம் முன்னர்த் தூதாகவிடுத்த அன்னம், நமது குறைகளைச் சொல்லவில்லையோ, சொன்னதாயின் தமயந்தியிடத்து முன்னரே விழைந்துள்ள அரசன் அவளை எதிரிலே கண்டும் நம்முரை கேட்டும் சிறிதேனும் அன்பின்றி இவ்வாறு கூறுதலின் யாவனோவென விடை கொடுத்தற்கு ஐயுற்றுத் தோழிகள் வருத்தமுற் றிருந்தனரென்க. (கஉக)

இன்னண மணங்க ளூரு மாயமு மிரங்க னோக்கி
மன்னனு மறிவு தீர்ந்து மனஞ்சிறி தயரும் வேலைப்
பொன்னிறப் பவளச் செவ்வாய்ப் பொற்புறு பசிய மென்சூட்
டன்னமும் விசும்பி னீங்கி யவ்வுழி யடைந்த தன்றே.

இ-ள். இன்னணம்-இப்படி, அணங்கு அன்னாளும்-தமயந்தியும், ஆயமும்-தோழிகளும், இரங்கல் நோக்கி - வருந்துவதைப் பார்த்து, மன்னனும் - நளனும், அறிவு தீர்ந்து - மதிமயங்கி, மனம் - மனமானது, சிறிது - கொஞ்சம், அயரும் வேலை – தளர்வடையும்போது, பொன் நிறம் - பொன்போன்ற நிறத்தையும், பவளம் - பவளம் போன்ற, செவ்வாய் - சிவந்த வாயையும், பொற்புறு – அழகான் மிகுந்த, பசிய - பசுமை பொருந்திய, மெல் சூட்டு - மெல்லிய உச்சிக் கொண்டையையுமுடைய, அன்னமும் – அன்னப் பறவையும், விசும்பில் நீங்கி - ஆகாயத்தினின்று நீங்கி, அவ்வுழி-அந்தவிடத்தில், அடைந்தது – வந்தது, எ – று.

க - து. இப்படித் தமயந்தியுந் தோழிகளும் நளன் அறிவுங் கலங்கி வருந்தும் வேளையில் அன்னம் வந்தது என்பதாம்.

தூதுவந்த நளனை இன்னனென்று தெளியக் கூடாமையால தமயந்தியும் தோழிகளும் வருந்தினார்கள்; நளனும் அறவழியிற் செல்பவனாகலால் தன்னுடைய வேட்கையை அவர்கள் முன்பு வெளிப்படுத்தக் கூடாமையால் வருந்தினனென்க. (ககூ)

எய்திய தூவி யன்ன மின்னகைப் பவளச் செவ்வாய்
மையவாங் கரிய கூந்தல் வாண்முக மினிது நோக்கி
மெய்தவழ் புலவு வைவே லிடதர்கோ னிவனே யுள்ளத்
தையுறேல் கமலப் போதி லணங்கிற்கு மணங்கு சொல்லாய்.

இ – ள். எய்திய - அங்குவந்த, தூவி - இறகையுடைய, அன்னம் - அன்னப்பறவை, இன் நகை - இனிய நகையையும், பவள செவ்வாய் - பவளம்போன்ற செவ்வாயையும், மை - மேகங்கள்

அவாம் - விரும்புகின்ற, கரிய கூந்தல் - கறுத்த குழலையுமுடைய தமயந்தியினது, வாள் - ஒளிபொருந்திய, முகம் - திருமுகத்தை, இனிது நோக்கி-இனிதாகப் பார்த்து, கமலம்போதில் அணங்கிற்கும்-தாமரைமலரிலிருக்குந் திருமாதுக்கும், அணங்கு போல்வாய் - திருமாது போன்ற தமயந்தியே, நெய் தவழ் - நிணந்தவழ்கின்ற, புலவு - புலாலூற்றம்பொருந்திய, வைவேல் - கூரிய வேலையுடைய, நிடதர்கோன் இவனே - இவனே நளமகாராஜன், உள்ளத்து - மனத்தில், ஐயுறேல் - ஐயப்படவேண்டாம், எ - று.

க - து. அன்னமானது தமயந்தியைப் பார்த்து இவனே நளமஹாராஜன் என்றது என்பதாம்.

தெய்வத்தன்மையுள்ள அன்னமாதலால் தான் எடுத்த கருமத்திற்கு இடையூறுவாராது நளன் தூதுவந்தது தெரிந்து இவனே நளனென்று தமயந்திக்குச் சொல்லியதென்க. (கரூ௪)

மழைமதர் நெடுங்கட் செவ்வாய் வளர்முலை மடந்தாய் நின்மேல், விழைவிகந் துரைத்தா னல்லன் விண்ணவர்க் கியைந்த மாற்றம், பழுதுறு மென்னு மாற்றாற் பகர்ந்தனன் பரிதி வேலா, னழுதகங் குழைந்தி டேலென் றன்பினா லறைந்த தன்றே.

இ - ள். மழை - குளிர்ச்சிபொருந்திய, மதர் - களிப்பையுடைய, நெடு கண் - நெடிய கண்களையும், செவ்வாய் - சிவந்த வாயையும், வளர் முலை - வளர்கின்ற ஸ்தனங்களையுமுடைய, மடந்தாய் - தமயந்தியே, பரிதி வேலான் - நளமகாராஜன், நின்மேல் - உன்னிடத்தில், விழைவு இகந்து-ஆசைநீங்கி,உரைத்தான்அல்லன்-சொன்னவனல்லனும்; விண்ணவர்க்கு - தேவர்களுக்கு, இயைந்த-(தூதின்பொருட்டுச்) சம்மதித்த, மாற்றம்-சொல், பழுதுறும் என்னும் ஆற்றால்-பழுதாகு மென்கின்றபடியால், பகர்ந்தனன் - (இவ்வாறு) பேசினான், (அதனால்) அழுது - நீ யழுது, அகம் குழைந்திடேல் என்று - மனங்குழைய வேண்டாமென்று, அன்பினால்-விருப்பத்தினால், (அன்னம்) அறைந்தது - சொல்லியது, எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. தமயந்தியே! நளனுன்மேல் ஆசைவையாது சொன்னவனல்லன்; தூதுக்குப் பழுதில்லாமற் சொன்னான், அழாதேயென்று சொல்லிற்று என்பதாம்.

நளமகாராசனானவன் தேவர்பொருட்டுச் சம்மதித்த கருமத்துக்கோர் பழுதடையின் இம்மைக்குப் பழியன்றி மறுமைக்குப் பாவமும்

உண்டாம் ஆதலின் இவ்வாறு பேசினேன்; அதனால் நீ வருத்தப் பட வேண்டாமென்று அன்னஞ் சொல்லியதென்க. (கருஉ)

வடுவகி ரனைய வுண்கண் மடந்தையோ டிவ்வா றோதிக்
கடகளி றென்ன நின்ற காளைதன் முகத்தை நோக்கா
வுடையபே ரறிவாற் காம முள்ளமைத் தின்ன கூறிற் [லோ.
கொடிநெடுந் தானை வேந்தே கோற்றொடி யாற்றுங் கொல்

இ - ள். வடு - மாவடுவினுடைய, வகிர் அனைய - பிளப்பை யொத்த, உண் கண் - மையுண்ட கண்களையுடைய, மடந்தையோடு - தமயந்தியுடனே, இவ்வாறு ஓதி - இவ்விதமாகச் சொல்லி, கட களிறு என்ன நின்ற - மதயானையென்னும்படி நின்ற, காளைதன் முகத்தை - அரசனது முகத்தை, நோக்கா - பார்த்து, கொடி நெடு தானை வேந்தே - நளமகாராஜனே, உடைய பேர் அறிவால் - பேரறிவுடைமையால், காமம் - ஆசையை, உள் அமைத்து - உள்ளே யடக்கி, இன்ன கூறில் - இப்படிப்பட்ட வார்த்தைகளைப் பேசினால், கோற்றொடி - தமயந்தி ஆற்றும் கொல்லோ - பொறுப்பாளோ, எ - று.

க - து. அன்னம் நளனைப் பார்த்துத் தமயந்தி இவ்வாறு சொன்னால் பொறுப்பாளோ என்றது என்பதாம்.

மடந்தை - பருவங்குறியாது பெண்ணெனல் மாத்திரையையே குறித்தது. நின்போல்வார்க் கன்றிக் காமத்தைப் பேரறிவா லுள்ளடக்கிப் பேசுதல் மற்றையோர்க் கரிதென்றதாயிற்று. நின்னை விழைந்தவளாதலால் நீயே பேசில் தமயந்தி யாற்றுவ தரிதென்ற தென்க. (கரு௩)

மாங்குயிற் குதலைப் பேதை மனமுநீ யிசைந்த வண்ணந்
தீங்கற வுரைத்த வாறுந் தேவர்மற் றுணரா ரல்ல
ரீங்கினி யுரைப்ப தென்னை யிவ்வயி னிகழ்ந்த வெல்லா
மாங்கவர் தம்பா லேகி பறைதியென் றுறைந்த தன்னம்.

இ - ள். மா குயில் - மாமரத்திலிருக்குங் குயிற் சொல்லை யொத்த, குதலை - மழலைச் சொல்லையுடைய, பேதை மனமும் - தமயந்தியினது மனமும், நீ இசைந்த வண்ணம் - நீ சம்மதித்துவந்தபடி, தீங்கு அற - தீங்குநீங்க, உரைத்தவாறும் - சொல்லியவிதமும், தேவர் - தேவர்கள், உணரார் அல்லர் - அறியாதவர்களல்லர்; ஈங்கு - இவ்விடத்தில், இனி உரைப்பது என்னை - இனி பேசவேண்டுவதென்ன, இவ்வயின் - இவ்விடத்திலே, நிகழ்ந்த எல்லாம் - நடந்தவை யனைத்தும், ஆங்கு அவர் தம்பால் - அத்தேவரிடத்துக்கு, ஏகி - போய், அறைந்

என்று - நீ சொல்லுவாயாகவென்று, அன்னம் - அன்னப்பறவை, அறைந்தது - சொல்லியது, எ - று.

க - து. இங்கு நடந்ததையெல்லாந் தேவர்க ளறிவார்கள், நடந்தபடி நீபோய்ச் சொல்லென்றது என்பதாம்.

தமயந்தியினது கருத்தும் நீ தூதுக்குச் சம்மதித்துவந்தபடி பேசியதும் சர்வக்ஞயத்துவமுள்ள தேவர்களுக்கு நீ போய்ச் சொல்லு முன்னமே தெரியுமென்க. (கருச)

அவ்வுரை கேட்ட லோடு மடையலர்ச் செகுக்கும் வேலான்
மவ்வலங் குழலி னுடன் மனவலி யினிதி னோர்ந்து
செவ்விதின் மனமுங் கண்ணுந் தெரிவைமேற் கிடப்ப மாறாக்
கவ்வைகொள் வாயி னீங்கி விஞ்சையிற் கரந்து போனான்.

இ - ள். அ உரை - அந்த வார்த்தையை, கேட்டலோடும் - கேட்டவளவில், அடையலர் - சத்துருக்களை, செகுக்கும் - கொல்லுகின்ற, வேலான் - வேற்படையையுடைய நளன், மவ்வலம் குழலினாள் தன்-தமயந்தியினது, மனவலி - நெஞ்சினது வலிமையை, இனிதின் ஓர்ந்து - இனிதினறிந்து, செவ்விதின் - செம்மையையுடைய, மனமும் - தன்மனத்தையும், கண்ணும் - கண்களையும், தெரிவை மேல் கிடப்ப - அத்தமயந்தியின்மே லிருக்க வைத்து, மாறா - நீங்காத, கவ்வைகொள் - ஒலித்தலைக்கொண்ட, வாயினீங்கி - வாயிலைகடந்து, விஞ்சையின் - மந்திரத்தினால், கரந்து போனான் - ஒளித்துச்சென்றான், எ - று.

க - து. நளன் கண்களு மனமுந் தமயந்தியிடத்திருக்க வுருவ மறைத்து அரூபமாகப் போனான் என்பதாம்.

இந்திரன்மேல் தமயந்திக்குக் காதலில்லாமையை யறிந்தவனாதலால் தன்மனமுங் கண்ணும் அவள்மேற் கிடப்ப விஞ்சையிற் கரந்து போனான் என்றார். (கருரு)

காரிகை யுளமு நாணுங் கவர்ந்தனன் கரந்து போய
மூரிவெஞ் சிலைக்கை வீரன் கடவுளர் முன்ன ரேகி, நேரிழை
தன்பாற் றூது போயபி னிகழ்ந்த வெல்லாஞ், சோர்வுறா
துரைத்தான் றேவர் தோன்றல்பா னகிழ்ச்சி கூர்ந்தார்.

இ - ள். காரிகை - தமயந்தியினுடைய, உளமும் - மனத்தையும், நாணும் - நாணையும், கவர்ந்தனன் - கொள்ளைகொண்டவனாகி, கரந்து போய - மறைந்துசென்ற, மூரி - வலிமைபெற்ற, வெம்

சிலை கை வீரன் - நளமகாராசன், கடவுளர் முன்னர் - தேவர்களெதிரே, ஏகி - சென்று, நேரிழை தன்பால் - தமயந்தியினிடத்து, தூது போய பின் - தூதுபோனபின்பு, நிகழ்ந்த எல்லாம் - நடந்தவைகளனைத்தையும், சோர்வு உறாது - குறைவுபடாமல், உரைத்தான் - சொல்லினான்; தேவர் - தேவர்கள், தோன்றல்பால் - அந்நளமகாராசனிடத்தில், மகிழ்ச்சி கூர்ந்தார் - உவகை யடைந்தார்கள், எ - று.

க - து. நளன் தேவர்கள் முன்சென்று தமயந்தி சொன்னவையெல்லாம் சொன்னான், தேவர்கள் நளனிடத்தில் மகிழ்ச்சிகூர்ந்தார்கள் என்பதாம்.

காரிகை - பண்பாகுபெயர். தான் விரும்பிய மாதிடத்தில் நம் முறைதவறாது தூதுசென்று உள்ளபடி பேசிவந்தானென்று நளனிடத்தில் இந்திரன் முதலிய நால்வரும் மகிழ்கூர்ந்தனரென்க. (கஙச)

நளன் தூதுப்படலம் முற்றிற்று.

NO. 8. சுயம்வரப்படலம். 423.வது பக்கம்.



உ௦-௧௦-1925. தமயந்திசுயம்வரம்.

# சுயம்வரப்படலம்.

[சுயம்வரமாவது-அரசமங்கையானவள் தனக்கு
மூத்தோர்கள் தன்னை விழைந்துவந்த அனேக அரசர்களை
ஏககாலத்தில் வருவிக்க அவரிற் றனக்கிசைந்த
ஒருவனுக்குத் தானே மாலையிட்டுத்
தலைவனாகக் கொள்ளுதலாம்.]

[இப்படலத்தால் தமயந்தியானவள் நளமகாராஜனைத்
தலைவனாகத்தானே வரித்தாளென்று சொல்லத்தொடங்கி
இப்பாட்டால் தமயந்தியின் சுயம்வரத்திற்குத்
திரிலோகத்திலுமுள்ளவர் வரவு
சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

இன்னவை நிகழும் வேலை யெழுகடல் வரைப்பின் மேவு, மன்னவர் குழாமும் விண்ணோர் தொகுதியு மணிச்செஞ் சூட்டுப், பன்னக நாட்டு வேந்தர் வெள்ளமும் பரித் தேர் வீமன், கன்னியம் புரிசை சூழ்ந்த கடிநகர்க் கெழுந்த வன்றே.

இ - ள். இன்னவை - இப்படிப்பட்டவைகள், நிகழும் வேலை - நிகழ்கின்றபொழுது, எழு கடல் வரைப்பின் மேவும் - எழுகடல்சூழ்ந்த தீவுகளிலிருக்கின்ற, மன்னவர் குழாமும் - அரசர்கூட்டமும், விண்ணோர் தொகுதியும் - தேவர்கூட்டமும், மணி-ரத்னங்களாகிய, செம் சூட்டு - சிவந்தசூட்டையுடைய, பன்னக நாடு - நாகலோகத்துள்ள, வேந்தர் வெள்ளமும் - அரசர்கூட்டமும், பரி தேர் - குதிரைகட்டிய தேரையுடைய, வீமன் - வீமராசனது, கன்னி - அழிவில்லாமையுடைய, அம்-அழகிய, புரிசை சூழ்ந்த - மதிலாற்சூழப்பட்ட, கடி நகர்க்கு - காவலையுடைய குண்டினபுரத்துக்கு, எழுந்த - எழுந்தன, எ - று.

க - து. அரசர் கூட்டங்களும் தேவர் கூட்டங்களும் நாகலோகத்தரசர் கூட்டங்களும் குண்டினபுரத்திற் கெழுந்தன என்பதாம்.

வீமன் பூமியிலுள்ள அரசர்க்குமாத்திரம் சுயம்வரவோலை செலுத்தியிருக்க மற்றையுலகத்தாரு மெழுந்தனரென இப்பொழுது சொல்

வியதற்குக் காரணமென்னெனில், முன்பு நாரதமுனி இந்திரனுக்குத் தமயந்தியின் செய்தி சொல்லும்போது 'விஞ்சையர்கின் னரரவுணருரகர்புவி முழுதாளும் வேந்தர் யாரு, மஞ்சலிசெய் திருமருங்குடைசூழ முனிவர்சூழா மாசிகூற' என்னும் பாட்டில் அங்கிருந்தாரெனச் சொல்லிய மேலுலகத்தாருங் கீழுலகத்தாருந் தீவிலுள்ளவரும் அவாவின்மிக்கவராய் அதைத் தமக்குநேர்ந்த செய்தியாகக்கொண்டு நல்லூழிருக்குமாயின் அம்மாது சூட்டுமாலை நமக்குங் கிடைப்பினுங் கிடைக்குமென வெழுந்தனரெனக் கொள்ளல்வேண்டுமென்க. (க)

[இதனால் மேற்சொல்லிய அரசர்களுடைய
நால்வகைச் சேனைகளின் வரவு
சொல்லப்படுகின்றது.]

பண்ணமை கலினப் பாய்மா பசியபொற் கொடிஞ்சித்
திண்டேர், கண்ணழற் சீற்றத் துப்பிற் கடாம்பொழி களிநல்
யானை, மண்ணமை முழவுத் திண்டோள் வாகைவே லுழ
வ ரீட்ட,மெண்ணிட விடமொன் றின்றி யெங்கணும் பரந்த
வன்றே.

(இ-ள்.) பண் அமை - கல்லணையமைந்த, கலினம் - கடிவாளத்தையுடைய, பாய் - தாவுகின்ற, மா - குதிரைகளும், பசிய பொன் - பசியபொன்னாற்செய்த, கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய, திண் - வலிமைபெற்ற, தேர் - தேர்களும், கண் - கண்களில், அழல் - தீயையும், சீற்றத்துப்பின் - மிகுந்த கோபத்தையுமுடைய, கடாம் பொழி - மதம்பொழிகின்ற, களி நல் யானை-களிப்பையுடைய நல்ல யானைகளும், மண் அமை - ஒப்பனையமைந்த, முழவு - மத்தளம்போன்ற, திண் தோள்-வலிமைபெற்ற புயங்களையும், வாகை வேல்-வெற்றிபெற்ற வேலையுமுடைய, உழவர் ஈட்டம்-காலாள்கள் கூட்டமும், எண் இட-எண்ணையிடுதற்கு, இடம் ஒன்று இன்றி - வெற்றிடமொன்றுமில்லாமல், எங்கணும்-எவ்விடங்களிலும், பரந்த - பரவின, எ - று.

க - து. குதிரைகளும் தேர்களும் யானைகளும் காலாள்களும் எங்கும் பரவின என்பதாம்.

ஒவ்வொரு தேசத்தரசர்கள் சேனைகளே அனேகமாயிருப்பின் அனேகதேசத்தரசர் நால்வகைச் சேனைகளும் ஏககாலத்தில் ஓரிடத்துக்கு வருமாயின் இவ்வளவென்று குறிக்கக்கூடாதென்பார் 'எண்ணிட விடமொன் றின்றி யெங்கணும் பரந்த' என்றாரென்க. *எண் -

என். அது "எண்ணுந் திலமு மெள்ளென விசைப்பர்" (திவாகரம் - மரப்பெயர்த்தொகுதி) என்பதாலறிக. (உ)

[இதனால் குதிரைக் குளம்புகளினெழுந்த புழுதியின் தோற்றஞ் சொல்லப்படுகின்றது.]

கொய்யுளைக் கலின மாவின் குரந்துக ளெழுந்து விம்மி, வையக முழுதுஞ் சூழ்போய் மறிகடற் கிடங்கு தூர்த்து, மொய்பெறா தசலத் தோடு முரணியெண் டிசையுங் காக்குங், தொய்யின்மா முகத்த யானைக் கவுட்குழி தூர்த்த வன்றே.

இ - ள். கொய் - கொய்யப்பட்ட, உளை - புறமயிரையுடைய, கலினம் மாவின் - கடிவாளம்பூண்ட குதிரைகளுடைய, குரம் துகள் - குளம்புபட் டுண்டாகும் புழுதிகள், எழுந்து - எழும்பி, விம்மி - பரவி, வையகமுழுதும் - பூவுலகமுழுவதும், சூழ் போய் - வளைத்துக் கொண்டு, மறி கடல் - மடங்குகின்ற அலைகளையுடைய கடலாகிய, கிடங்கு - அகழை, தூர்த்து - தூர்த்துவிட்டு, மொய் பெறாது - போர் பெறாமல், அசலத்தோடு முரணி - (குல) கிரியுடன் மாறுகொண்டு, எண்டிசையுங்காக்கும் - திசைகளெட்டையும் புரக்கின்ற, தொய்யில் - சிந்துரமெழுதப்பெற்ற, மா - மகத்தாகிய, முகத்த யானை - முகத்தை யுடைய யானைகளின், கவுள் குழி - கன்னத்துளைகளை, தூர்த்த - தூர்த்தன, எ - று.

க - து. குதிரைகளின் குளம்பாலுண்டாகும் புழுதிகள் கடலைத் தூர்த்து அட்டகஜங்களின் கவுட்குழிகளையுந் தூர்த்தன என்பதாம்.

பூவுலகமுழுவதுஞ் சூழ்ந்து கடல்களைத் தூர்த்துத் திக்கயங்களினுடைய கன்னத் துளைகளையுந் தூர்த்தபுழுதி அப்புறம் போதற் கிடமில்லாமையாற் றடைபட்டதன்றி அதற்களவில்லையென்க. புழுதியிப்படிப்பட்டதாயின் அக்குதிரைகளின் ஆரவாரஞ் சொல்லவேண்டுவதில்லையாயிற்று. [இது உயர்வுநவிற்சியணி.] (ஈ)

[இதனால் தேவர்கட்கும் அரசர்களுக்கு மிருக்குங் கலப்பு சொல்லப்படுகின்றது.]

மண்ணக வரைப்பின் வேந்தர் வரைப்புயத் தெழுதுந்தம், விண்ணகத் தமரர் மார்பங் கமழ்ந்தன விண்ணோர் வேய்ந்த, தண்ணற வொழுகு மன்றற் றருமலர்ப் பசும்பொற் றாது, கண்ணகன் ஞாலங் காக்கும் வேந்தர்மெய் கமழ்ந்த மாதோ.

இ - ள். மண்ணகவரைப்பின்-பூவுலகத்திடத்திருக்கின்ற, வேந்தர் - அரசர்களுடைய, வரை புயத்து - மலைகளையொத்த தோள்களில், எழுது - அரியக்கோலாற்றீட்டிய, சாந்தம் - சந்தனமானது, விண்ணகத்து - ஆகாசத்திடத்திருக்கின்ற, அமரர்-தேவர்களுடைய, மார்பம் - மார்பிலே, கமழ்ந்தன - மணந்தன; விண்ணோர் - தேவர்கள், வேய்ந்த - தரித்த, தண் - குளிர்ச்சிபொருந்திய, நறவு ஒழுகு - தேனொழுகுகின்ற, மன்றல் - வாசனையையுடைய, தரு மலர் - பஞ்சதருவினுடைய மலர்கள், கண் அகல் - இடமகன்ற, ஞாலம் காக்கும்-பூமியைப் புரக்கின்ற, வேந்தர் மெய் - அரசர்களுடைய தேகத்தில், கமழ்ந்த - மணந்தன, எ - று.

க - து. அரசர்கள் தோட்களிலணிந்த சந்தனங்கள் தேவர்கள் மார்பிற் பரிமளித்தன; தேவர்களணிந்த கற்பகமலர்த்தாதுகளரசர்களுடலிற் பரிமளித்தன என்பதாம்.

ஒருவர்க்கொருவர் நெருங்கியிருத்தலால் மனிதர் புயங்களிற் பூசிய சாந்தந் தேவர்கள் மார்பினும் தேவர்களணிந்த மாலைமலரின் மகரந்தம் அரசர் தேகங்களினுங் கமழ்ந்தனவென்க. ஆயின் தேவர்களை மனிதர்கள் அப்படி நெருங்கலாமோவென்னில் அரசரால்விரும்பப்படுந் தமயந்தியையே அவர்களும் விரும்பிவருதலாலும் அதிக நெருக்கமுள்ளவிடத்தில் எவர்களும் அதிக மரியாதையை விரும்பாமையாலும் ஆகுமென்க. (௭)

[இதனால் மதநீர் முதலியவற்றின் பெருக்கஞ் சொல்லப்படுகின்றது.]

காந்தெரி கதுவுஞ் செங்கட் கரிமதக் கலுழி யாறுங்
கூந்தன்மா வுமிழ்வி லாழிப் பெருக்கும்வேற் குமர னன்ன
வேந்தர்திண் புயத்தில் வார்ந்த விரைகமழ் நானச் சேறும்
பாந்தண்மேற் கிடந்த ஞால மெங்கணும் பரந்த வன்றே.

இ - ள். காந்து - முதிர்கின்ற, எரி - தியானது, கதுவும் - பற்றுகின்ற, செம் கண் - சிவந்த கண்களையுடைய, கரி - யானைகளுடைய, மதம் - மதநீராகிய, கலுழி ஆறும் - காட்டாறும், கூந்தல் - புறமயிரினையுடைய, மா - குதிரைகள், உமிழ் - சொரிகின்ற, விலாழி பெருக்கும் - நீர்ப்பெருக்கும், வேல் - வேற்படையையுடைய, குமரன் அன்ன - குமாரக்கடவுளையொத்த, வேந்தர் - அரசர்களுடைய, திண் புயத்தில் - வலிமையுள்ள தோள்களில், வார்ந்த - ஒழுகிய, விரை கமழ் - வாசங்கமழ்கின்ற, நானம் சேறும் - கஸ்தூரிச் சேறும், பாந்

தன் மேல் - ஆதிசேடன்மேல், கிடந்த - இருந்த, ஞாலம் எங்கணும் - பூமியெங்கும், பரந்த - பரவின, எ - று.

க - து. யானைகளின் மதமும், குதிரைகள் வாய்நீரும், அரசர்கள் புயத்தொழுகிய கஸ்தூரிச்சேறும் பூமியெங்கும் பரவின என்பதாம்.

மதநதியும் விலாழிப்பெருக்கும் கஸ்தூரிச்சேறும் பூமிமுழுவதும் பரந்தவெனலால் அவைகளையுடைய யானைகளும் குதிரைகளும் அரசர்களும் அளவில்லையென்பது கருத்தாகக் கொள்க.

[இதனால் தேவராதியர் ஊர்திகளின் பெருக்கஞ் சொல்லப்படுகின்றது.]

வெள்ளியங் கிரியின் மேய விஞ்சைய ரியக்கர் விண்ணோ, ரொள்ளொளி யெறிக்கும் பைம்பொன் விமானமு மூலகில் வேந்தர், நள்ளிருள் சீக்குஞ் செய்ய நகைமணிக் கொடிஞ்சித் தேருந், தெள்ளிதி னுணர்ந்து ளோர்க்குந் தெரிவில மயங்கு மன்றே.

இ - ள். வெள்ளி அம் கிரியின்-கயிலாசமலையில், மேய - பொருந்திய, விஞ்சையர் - விச்சாதரரும், இயக்கர் - இயக்கர்களும், விண்ணோர் - தேவர்களும் ஆகிய இவர்களுடைய, ஒள் ஒளி - மிகுந்த வொளியை, எறிக்கும் - வீசுகின்ற, பை பொன் - பசும் பொன்னாற் செய்த, விமானம் - விமானங்களும், உலகில் - பூவுலகிலிருக்கும், வேந்தர் - அரசர்களுடைய, நள் இருள் சீக்கும் - மிகுந்த விருளினையோட்டுகின்ற, செய்ய - சிவந்த, நகை - ஒளியையுடைய, மணி - ரத்நங்கள் பதித்த, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, தேரும்-தேர்களும், தெள்ளிதின் - தெளிவாக, உணர்ந்துளோர்க்கும் - அறிந்தவர்களுக்கும், தெரிவில - தெரிந்துகொள்ளக் கூடாமையாகி, மயங்கும் - ஒன்றோடொன்று மயங்கும், எ - று.

க - து. தேவர்கள் விமானங்களும், அரசர்கள் தேர்களும் பகுத்தறியப்படாவாம் என்பதாம்.

வெள்ளியங்கிரி என்பதில் அம் சாரியை. ஒவ்வொரு மாதிரிகையில் அனேகம் விமானங்களும் அனேகந் தேர்களு மாதலால் நுண்ணறிவுடையராயினுந் தேவர்களுக்கும் அரசர்களுக்கும் நமது அதுவோ இதுவோ வென்னத் தலைமயங்கிக் கிடக்குமென்க. (சு)

[இதனா லரசரனைவருங் கலந்துபேசல் சொல்லப்படுகின்றது.]

சிற்பநூல் கழியக் கற்றோர் சித்திரித் தென்ன வாய்ந்த
பொற்புறு நெடிய வேற்கட் பூங்கொடி வதுவை வேட்டுப்

பற்பல தேய வேந்தர் தொகுதலிற் பாடை தேர்வா
னற்புட னெவருந் தேவ பாடையி னறைவர் மாதோ.

இ - ள். சிற்பநூல் - சிற்பசாத்திரத்தை, கழிய - மிகவும், கற்றோர்-படித்தவர்கள், சித்திரித்தது என்ன-சித்திரித்ததுபோல, வாய்ந்த - பொருந்திய, பொற்பு உற - அழகான்மிக்க, நெடிய-நீட்சியையுடைய, வேல் கண் - வேல்போன்ற கண்களையுடைய, பூ கொடி-தமயந்தியினது, வதுவை வேட்டு - விவாகத்தை விரும்பி, பற்பல-அனேகமாகிய, தேயம் வேந்தர் - தேசங்களிலிருக்கும் அரசர்கள், தொகுதலில் - கூட்டங்கொண்டிருத்தலால், பாடை தேர்வான்-(எல்லோர்க்கும்) சொற்பொருள் தெரியும்பொருட்டு, அற்புடன் - அன்புடனே, எவரும்-எவர்களும், தேவ பாடையின்-கீர்வாணபாஷையால், அறைவர் - பேசிக்கொள்வார்கள், எ - று.

க - து. யாவருந் தேவபாஷையிற் பேசுவார்கள் என்பதாம்.

அதிக சவுந்தரியமுள்ள தமயந்தியினது விவாகத்தை விரும்பி அனேக தேசத்து அரசர்கள் கூடியபடியால் தேசங்கள்தோறும் பாஷைகள் வேறாதலின் அவைகளாற் பேசினால் ஒருவர்க்கொருவர் உரைக்கும் வார்த்தைகட்குப் பொருளறியக்கூடாதென்று கீர்வாண பாஷையால் பேசினாரென்க. ஆதலாலே அதுவே பாஷைகளுக்கு மூலமும் எந்தத்தேசங்களுக்கும் பொதுவுமென்பது பெற்றாம். அன்பு அற்பெனத் திரிந்தது. (எ)

[இதனால் அங்கநாடாகிய ஒலியின் றேற்றந்
சொல்லப்படுகின்றது.]

கழைசுளி களிநல் யானை பிளிறொலி கமஞ்சூல் வான
மழையொலி யவியப் பம்பும் வார்முர சோதை தேவர்
முழவொலி தடந்தேர்ச் சில்லி முழக்கொலி புடவி போர்த்த
வெழுகட லொலியு மெஞ்ச வெங்கணு மொலித்த வன்றே.

இ - ள். கழை - கரும்புகளை, சுளி - முறிக்கின்ற, களி-களிப்பையுடைய, நல் - நல்ல, யானை - யானைகளினது, பிளிறு - ஆரவாரமாகிய, ஒலி - சத்தமும், கமம் - நிறைந்த, சூல்-கருப்பத்தையுடைய, வானம் - ஆகாயத்திற் சஞ்சரிக்கும், மழை - மேகத்தினுடைய, ஒலி - சத்தமான்து, அவிய - கெடும்படி, பம்பும் - நெருங்கிய, வார்-வாரையுடைய, முரசு ஓதை - பேரிகைகளின் சத்தமும், தேவர் முழவு ஒலி-தேவதுந்துமிகளின் சத்தமும், தடம் - பருத்த, தேர்-தேரினுடைய, சில்லி - உருளைகள், முழக்கு ஒலி - முழக்குகின்ற சத்தமும், புடவி

போர்த்த - பூமியைச்சூழ்ந்த், எழுகடல் ஒலியும் - ஏழுகடலினோசை யும், எஞ்ச - குறையும்படி, எங்கணும் - எவ்விடத்தும், ஒலித்த - சத் தித்தன, எ - று.

க - து. யானைகள் சத்தமும், பேரிகைகள் சத்தமும், தேவதுந் துமிகள் சத்தமும், தேவர்கள் சத்தமும் கடலொலிமங்க வெங்குஞ் சத்தித்தன என்பதாம்.

யானை முதலியவற்றின் பேரொலியைச்சொல்லவே "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (நன்னூல்-பொதுவியல்-எ) என்பதனால் அளவற்ற மற்றைச் சிற்றொலிகளுங் கொள்க. இவ் வொலி எவ்விடத்துமிருத்தலால் கரையருகின் மாத்திரம் ஒலிக்கும் 'எழுகடலொலியு மெஞ்ச' என்றார். (அ)

[இதனால் அந்நகரிடான இருளும் ஒளியுஞ் சொல்லப்படுகின்றது.]

அகலிரு விசும்பு போர்த்த வணிமதிக் கவிகை யீட்டம்
பகலொளி கரப்ப வெங்கும் பாயிருள் பரப்பு மன்னர்
நகைமணி மகுட கோடி நள்ளிருட் பிழம்பை நக்கி
யிகலிவா னிரவி யோட விளவெயி லெறிக்கு மாதோ.

இ - ள். அகல் - அகன்ற, இரு - பெரிய, விசும்பு-ஆகாயத்தை, போர்த்த - மூடிய, அணி - அழகிய, மதி கவிகை - சந்திரவட்டக் குடைகளினுடைய, ஈட்டம் - கூட்டங்கள், பகல் ஒளி - சூரியப் பிர காசம், கரப்ப - மறைய, எங்கும் - எவ்விடத்தும், பாய் - பரவிய, இருள் - இருளை, பரப்பும்-பரவச்செய்யும், மன்னர்-அரசர்களுடைய, நகை-ஒளியையுடைய, மணி-ரத்நங்கள் பதித்த, மகுடகோடி-அனேக மகுடங்கள், நள் இருள் பிழம்பை - மிகுந்த விருட்பிழம்பை, நக்கி - உண்டு, இகலி - பகைத்து, வான்-ஆகாயத்திலிருக்கும், இரவி ஓட - சூரியனவனோடும்படி, இள வெயில் - இளங்கதிரை, எறிக்கும் - வீசும், எ - று.

க - து. குடைகள்கூட்ட மிருளைக்கொடுக்கும், மகுடகூட்டம் ஒளியைக்கொடுக்கும் என்பதாம்.

அகல்-இரு-என்னும் அடைமொழிகளால் விசும்பின் அகற்சியும் பெருமையுந் தோன்றின. அப்படிப்பட்ட விசும்பையுங் குடைகள் மறைக்க அதனாலுளதாம் இருளை யோட்டற்கு அரசர் மகுடங்களிற் பதித்த மணிகளில் ஒவ்வொன்றே போதுமானதாயிருக்க அப்படிப் பட்ட மணிகள் பலவற்றையுடைய அனேக மகுடகோடிகளுக்கு இவ் விருள் போதாதென்பது தோன்ற விழுங்கியென்னாது 'நக்கி' என் றார். (கூ)

[இதனால் கொடிகளுங் குடைகளுஞ் சொல்லப்பட்டது.]

வெங்கதிர் நெற்றி தோய்ந்து விளங்குபொற் கொடியி னீட்டம், மங்குல்வா னிழியுந் தெய்வ மடந்தையர் வடிவு காட்டக், கொங்கலர் தெரியல் வேந்தர் கொற்றவெண் கவிகை யீட்டந், திங்களி னழகு காட்டத் திருநகர் பொலிந்த தன்றே.

இ - ள். வெம் கதிர்-சூரியனுடைய, நெற்றி தோய்ந்து-நெற்றியிற்படிந்து, விளங்கு - பிரகாசிக்கின்ற, பொன் கொடியின் - பொன்னாற்செய்த கொடிகளினுடைய, ஈட்டம்-கூட்டங்கள், மங்குல்-மேகங்களையுடைய, வான் இழியும்-ஆகாயத்தினின்றிழிகின்ற, தெய்வமடந்தையர் - தெய்வமாதருடைய, வடிவு காட்ட - வடிவினைத்தெரிக்க, கொங்கு-வாசமிகுந்த, அலர் தெரியல்-மலர்மாலையை யணிந்த, வேந்தர் - அரசர்களது, கொற்றம் - வெற்றியையுடைய, வெண் கவிகை - வெள்ளிய குடைகளினுடைய, ஈட்டம் - கூட்டங்கள், திங்களின் - சந்திரனது, அழகு காட்ட - அழகைத்தெரிக்க, திருநகர் - குண்டினபுரமானது, பொலிந்தது - பொலிவையடைந்தது, எ-று. அன்று, ஏ - அசைகள்.

க - து. கொடிகள் கூட்டம் தேவமாதர்கள்போலும், குடைகள் கூட்டஞ் சந்திரன்போலும் வடிவுகாட்டக் குண்டினபுரஞ் சிறப்புற்றது என்பதாம்.

கொடிகள் அனேக அரம்பையர் வடிவங்களையும் குடைகள் அனேக சந்திரர் வடிவங்களையும் காட்டுதலால் விவாகத்திற்குச் சிறப்பு மங்கையாலன்றி வேறில்லை யாதலாலும் ஒரு சந்திரனாலுலகம் மகிழ்ச்சி யடையும்போது அனேகசந்திரர் ஏககாலத்தில் ஒருநகரிற்றோன்றினா லெவ்வளவு சிறப்புண்டாகலா மாதலாலும் 'திருநகர் பொலிந்தது' என்றார். (௧0)

[இதனால் அரசர்க்குந் தேவர்க்கும் வேற்றுமை தோன்றமை சொல்லப்படுகின்றது.]

குருமணி யிமைக்கும் பைம்பொற் குடைநிழல் வெயிலை யோட்ட, மருமலி நறிய மென்பூ மாலைவா டாமை யானுந், திருநகர்ச் செவ்வி நோக்கி யிமைப்பிலர் திரித லானும், பரசரோ டமரர் தம்மை யறிவரி தாய தன்றே.

இ - ள். குரு - நிறம் பொருந்திய, மணி - ரத்னங்கள், இமைக்கும் - பிரகாசிக்கின்ற, பை பொன்-பசிய பொன்னாற்செய்த, குடை

நிழல் - குடைகளினுடைய நிழல்கள், வெயிலை ஒட்ட - வெய்யிலைத் துரத்த, (அதனால்) மரு மலி - வாசம்பொருந்திய, நறிய-நறியவாகிய, மெல் பூ மாலை - மெல்லிய பூமாலைகள், வாடாமையானும் - வாடாமையாலும், திருநகர் - குண்டினபுரத்தினுடைய, செவ்வி நோக்கி - அழகைப்பார்த்து, இமைப்பிலர் - கண்களிமையாதவர்களாய், திரிதலானும்-திரிகின்றபடியினாலும், அரசரோடு - அரசர்களுடனே, அமரர் தம்மை - தேவர்களை, அறிவு அரிதாயது - பகுத்தறித லரிதாயது, எ - று.

க - து. குடைகளினிழலால் மாலைகள் வாடாமையாலும் நகரத்தை இமையாது பார்த்தலாலும் அரசர்களென்றுந் தேவர்களென்று மறியப்படாது என்பதாம்.

மாலைவாடுதல் கண்ணிமைத்தல் ஆகிய இரண்டு செய்கையால் தேவர்க்கு வேற்றுமைப்பட்டிருந்த அரசர் இப்பொழுது அவ்விரண்டு மில்லாமையால் வேற்றுமை தோன்றிலரென்க. [அரசர்க்கு மமரர்க்கும் வேற்றுமை தோன்றாமையால் மறைவணி.] (கக)

[இதனால் மற்றைத்தேயங்களின் பொறையொழிவு சொல்லப்படுகின்றது.]

**மா**ங்குயி லனைய தீஞ்சொல் வடுவகிர் பொருவும் வேற்கட், பூங்கொடி வதுவை வேட்டுப் புவியினில் வேந்த ரெல்லாந், தேங்கமழ் தெரியல் வீமன் றிருநக ரிறுத்த றன்னா, லாங்கவர் தேயம் யாவு மரும்பொறை யுயிர்த்த வன்றே.

இ - ள். மா குயில் அனைய-மாங்குயிற் சொல்லையொத்த, தீஞ்சொல்-தித்திக்கின்ற சொல்லையும், வடு வகிர் பொருவும்-மாவடுவின் பிளப்பை யொத்த, வேல் கண் - வேல்போன்ற கண்களையுமுடைய, பூங்கொடி - தமயந்தியினது, வதுவை வேட்டு-விவாகத்தை விரும்பி, புவியினில் வேந்தர் எல்லாம் - பூவுலகத்திருக்கும் அரசர்களெல்லாரும், தேம் கமழ்-வாசங்கமழ்கின்ற, தெரியல் - மலர்மாலையை யணிந்த, வீமன் - வீமராஜனது, திருநகர் - குண்டினபுரத்தில், இறுத்தல் தன்னால் - வந்துதங்கியபடியால், அவர் தேயம் யாவும்-அவர்கள் தேசமெல்லாம், அரும்பொறை - பொறுத்தற்கரிய சுமையை, உயிர்த்த - நீங்கின, எ - று.

க - து. குண்டினபுரமொன்றே சுமைபெற்றது, மற்றத் தேசங்கள் சுமையற்றன என்பதாம்.

வீமன் அனேகர் வருத்தங்களுக்கு இடங்கொடுத்து அவர்களை மகிழ்வுறச்செய்வதுபோல் அவன் தேசமும் அனேக தேசத்திலுமுள்ளவர்க்கு இடங்கொடுத்து அவைகள் இளைப்பாறி மகிழ்வுறச்செய்த தென்பது கருத்து. (கஉ)

[இதுமுதல் நாலுபாட்டுக்களால் தமயந்தி சுயம்வரத்திற்கு வாயுமுதலிய நால்வரும் வாராமைக்குக் காரணஞ் சொல்லத்தொடங்கி இப்பாட்டால் வாயு வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது]

இழைபரந் திமைக்கு மல்கு லின்கனித் துவர்வா யேழை
மழைமதர் நோக்கிற் கஞ்சி மறியுமா னேறு மாதின்
விழைதரு நகரிற் றூண்ட வெருவிமீண் டேகு மாற்றாற்
கழிபெருங் காதல் கூர்ந்துங் காற்றிறை வரவு தீர்ந்தான்.

இ - ள். இழை - ஆபரணங்கள், பரந்து - பரவி, இமைக்கும் - பிரகாசிக்கின்ற, அல்குல் - அல்குலையும், இன் - இனிய, கனி - (கொவ்வைக்) கனிபோன்ற, துவர் வாய் ஏழை-செவ்வாயையுமுடைய தமயந்தியது, மழை - குளிர்ச்சிபொருந்திய, மதர் - களிப்பையுடைய, நோக்கிற்கு அஞ்சி-பார்வைக்குப் பயந்து, மறியும் - மடங்குகின்ற, மான் ஏறும் - ஆண்மானும், மாதின் - அம்மங்கையினது, விழைதரு-விரும்புகின்ற, நகரில் தூண்ட - குண்டினபுரத்திற்குச்செலுத்த, வெருவி-பயந்து, மீண்டு - திரும்பி, ஏகும் ஆற்றால்-போகின்றபடியால், கழி - மிகுந்த, பெருங்காதல் கூர்ந்தும்-பேராசையையடைந்தும், காற்று இறை - வாயுவானவன், வரவு-வருதலை, தீர்ந்தான்-நீங்கினான் என - று.

க - து. தமயந்தி கண்ணைக்கண்டு தானேறு மான் வாகனந் திரும்பிவிடுகிறபடியால் வாயுதேவன் வாராதிருந்தான் என்பதாம்.

துவர் - செந்நிறம், பவளம். நாம் விவாகத்திற்குச் செல்லவெழுந்ததற்கு அமங்களமாக நமதூர்தியே தடைசெய்தலால் நமக்கு அத்தமயந்தி மாலையிடுவதும் அவ்வாறுமென்று வாயுவானவ னின்றனனென்க. (கரு)

[இப்பாட்டால் ஈசன் வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

ஐயரி பரந்து மைதோய்ந் தம்பலைத் திகழும் வேற்கட்
டையலோர் பாதி யாய தன்மையாற் றனது பைம்பொற்

செய்யதாள் பெயர்ப்ப வன்னாள் சீறடி யெழாமை யாலே
மையணி கண்டத் தோனு மன்றலுக் கெழுந்தி லானே.

இ - ள். ஐ - அழகிய, அரி பரந்து - செவ்வரிபரந்து, மை தோய்ந்து - அஞ்சனமணிந்து, அம்பு அலைத்து - அம்புகளையலைவுசெய்து, இகலும் - பொருகின்ற, வேல் கண்-வேல்போன்ற கண்களையுடைய, தையல் - உமைமாதானவள், ஓர் பாதியாய தன்மையால் - வாமபாகத்தி லிருக்கின்றபடியால், தனது - தன்னுடைய, பைம்பொன்-பசிய பொன்போன்ற, செய்ய தாள்-சிவந்தபாதங்களை, பெயர்ப்ப - அசக்க, அன்னாள் - அவ்வுமாதேவியினது, சீறடி - சிறியபாதங்கள், எழாமையாலே - எழுதலில்லாமையால், மை அணி கண்டத்தோனும் - ஈசரனும், மன்றலுக்கு - (தமயந்தியின்) விவாகத்திற்கு, எழுந்திலான் - புறப்பட்டிலன், எ - று.

க - து. தன்னிலொரு பங்காகிய உமையவள்பாதம் எழாமையாலே சிவன் வாராதிருந்தான் என்பதாம்.

சிவன் மன்மதனை யெரிப்பினும் காமமுள்ளவனென்பது தோன்றத் 'தையலோர் பாதியாய தன்மையால்' என்றும், உமாதேவியைத் தமயந்தி விவாகத்திற்குச் செல்லவேண்டும் நீயும் வாவென வாய்திறந்துரைக்கின் முனியுமென்று குறிப்பித்தமை தோன்றத் 'தனது தாள்பெயர்ப்ப' என்றும், மாற்றவள் வருதற் கொருவருமுடன்படாளென்பது தோன்ற 'அன்னாள் சீறடியெழாமையால்' என்றும், விடத்தையுண்டு தேவரைப் புரந்த வல்லமை யுற்றோனாயினுந் தன் மனைவிக்குச் சமாதானஞ் சொல்லிப் போதற்கரிதாய் நின்றனனென்பது தோன்ற 'மையணி கண்டத்தோனு மன்றலுக் கெழுந்திலான்' என்றுஞ் சொல்லினர். உத்தம நாயகனானவன் தனக்கொரு பொருளில் அதிக விழைவிருந்ததாயினும் தலைவிக்கு அதிலே வெறுப்புள்ளதாகத் தோன்றுமாயின் விடுப்பனென்பது கருத்து. (கஅ)

[இப்பாட்டால் குபேரன் வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

உருவுகண் டுவப்ப தன்றி யோடரித் தடங்க ணல்லார்
திருவினுங் குலத்தி னனுஞ் செய்கில ரார்வ மென்னா
மருவுதன் வடிவின் குற்ற மனக்கொளா வயங்கு பைம்பொற்
றுரைகழ லிலங்கு மோன்றாட் குபேரனும் வந்தி லானே.

இ - ள். உருவு கண்டு-அழகுள்ள வடிவைப்பார்த்து, உவப்பது அன்றி - மகிழ்வதல்லாமல், ஓடு - ஓடுகின்ற, அரி - செவ்வரிபரந்த,

நடம் - விசாலம்பொருந்திய, கண் - கண்களையுடைய, நல்லார் - மங்கையர்கள், திருவினும் - செல்வத்தினாலும், குலத்தினாலும்-உயர்ந்த குலத்தினாலும், ஆர்வம் செய்கிலர் என்று - ஆசைசெய்யமாட்டார்களென்று, தன் வடிவின்-தன்னுடைய தேகத்தில், மருவு - பொருந்திய, குற்றம் - குற்றத்தை, மனம் கொளா - மனத்திலேகொண்டு, வயங்கு - பிரகாசிக்கின்ற, பை பொன் - பசும்பொன்னாற் செய்த, ருரை - சத்தத்தையுடைய, கழல் - வீரக்கழல்கள், இலங்கு - விளங்குகின்ற, நோன் - பெருமைபொருந்திய, தாள் - பாதங்களையுடைய, குபேரனும் - குபேரனும், வந்திலான் - வந்திலன், எ - று.

க - து. குபேரன் குருடனாகையால் அக்குற்றத்தால் வாராதிருந்தான் என்பதாம்.

தான் செல்வத்தினுங் குலத்தினு மிக்கவனாயிருப்பினும் மங்கையர் அழகுள்ளவரை விரும்புவதன்றி மற்றையரை விரும்பாராகையால் தன்வடிவின் குற்றமாகிய கண் தெரியாமை மறைக்கக்கூடாத குற்றமாகையால் அதுகண்டு நம்மை விழையாளென்று குபேரன் தமயந்தி சுயம்வரத்திற்கு வந்திலனென்க. (௩௬)

[இப்பாட்டால் நிருதி வாராமைக்குக் காரணஞ்
சொல்லப்படுகின்றது.]

விரைகமழ் தருவி னீழல் விண்ணவ ரிடத்து மார்வம்
புரிகில னளன்மே லன்பு பூண்டனள் புலம்பு கொண்ட
முருகவிழ் நறுமென் கூந்தன் முகிழ்முலைத் துவர்வாய்ப் பேதை
நிருதரை விழையா ளென்ன நிருதியும் போந்தி லானே.

இ-ள். விரைகமழ் - வாசங்கமழ்கின்ற, தருவின் நீழல் - கற்பக நிழலிலிருக்கின்ற, விண்ணவரிடத்தும்-தேவர்களிடத்திலும், ஆர்வம் புரிகிலள் - ஆசைசெய்கிலள்; நளன்மேல்-நளனிடத்தில், அன்பு பூண்டனள் - அன்புவைத்தவளாகி, புலம்பு கொண்ட - இரங்குதலைக் கொண்ட, முருகு அவிழ் - தேனொழுகுகின்ற, நறு - நறிய, மென் கூந்தல் - மெல்லிய குழலையும், முகிழ் முலை - அரும்புபோன்ற முலையையும், துவர்வாய் - செவ்வாயையுமுடைய, பேதை - தமயந்தியானவள், நிருதரை - இராக்கதரை, விழையாள் என்ன - இச்சிக்கமாட்டாளென்று, நிருதியும் - நிருதியென்பவனும், போந்திலான் - வந்திலன், எ - று.

க - து. தேவர்களை விரும்பாதவள் இராக்கதர்களை விரும்பாளென்று நிருதியும் வாராதிருந்தான் என்பதாம்.

பேதை பெண்ணென்னுந் துணையாய்நின்றது. முன் சொல்லப்பட்ட மூவருக்குமுண்டாகிய தடை இவனுக்கில்லாதிருந்தும் இவன் வாராதது அகத்துக்குணம்பலவிருப்பினும் மாதர் முதற்கண் வடிவழகையே விரும்புவராதலின் அவ்வழகுள்ள இந்திரன் முதலியோரை யிகழ்ந்து நளனை விழைந்துள்ள தமயந்தி அரக்கனென்னுங்குலம்பற்றி மாலைசூடாள் ஆயின் அது பெருநகரின் அதின் மிக்க அவமானமில்லையென்று தன்பேரறிவாற்குறித்து நிருதிவந்திலனென்க. விவேகிகள் சிறந்ததாயினும் அவமானப்படுங் காரியத்தைக்குறித்துச்செல்லாரென்பது கருத்து. (கசு)

[இதனால் இந்திரன் முதலிய நால்வரும் வருதல் சொல்லப்படுகின்றது.]

பொன்னகர் புரக்கும் வேந்தும் பொங்கழற் கிறையு முந்நீர்
மன்னனுந் தறுகட் பேழ்வாய் மறலியு மடமா னோக்கி
னன்னுத னளனுக் கன்றி நறுந்தொடை சூட்டா ளென்ன
வன்னவ னுருவு தாங்கி யணிநகர் மேயி னாரே.

இ - ள். பொன் நகர் புரக்கும் வேந்தும்-இந்திரனும், பொங்கு அழற்கு இறையும்-அக்கினிபகவானும், முந்நீர் மன்னனும்-வருணனும், தறு கண் பேழ் வாய் மறலியும்-யமனும், மடமான்நோக்கின்-இளமான் பார்வையையொத்த பார்வையையுடைய, நன்னுதல் - தமயந்தியானவள், நளனுக்கு அன்றி-நளனுக்கல்லாமல், நறு தொடை - நறியமலர் மாலையை, சூட்டாள் என்ன - தரிக்கமாட்டாளென்று, அன்னவன் - அந்நளனுடைய, உருவு தாங்கி - (வடிவையொத்த) வடிவத்தைக் கொண்டு, அணி நகர் - அழகிய நகரத்தில், மேயினார் - பொருந்தினோர்கள்; எ - று.

க - து. இந்திரன், அக்கினி, வருணன், யமன் இவர்கள் நளனுருக்கொண்டு குண்டினபுரத்துக்கு வந்தார்கள் என்பதாம்.

தறுகண் - அஞ்சாமை. பேழ்வாய் - பெரியவாய். நியாயமாகத் தம்முடைய பெருமைகளைத் தூதர்கள் மூலத்தில் தெரிவித்தும் விரும்பாத தமயந்தியை வஞ்சித்தாவது பெறல்வேண்டுமென்னுங் கருத்தால் மனிதவடிவங் கொள்ளல் தமக்கிழிவேனும் இந்திரன் முதலிய நால்வரும் நளன் வடிவுகொண்டு வந்தனரென்க. காமமுள்ளவர்கள் அதன் விஷயத்தில் எதையுஞ் செய்வார்களென்பது கருத்து. (கஎ)

[இதனால் நளன் வருதல் சொல்லப்படுகின்றது.]

கூற்றெனக் கொல்லும் வேழங் கொடியணி கொடிஞ்
சித் திண்டேர், பாற்றிரைக் கவரி நெற்றிப் பண்ணமை கலி

னப் பாய்மா, மாற்றருஞ் சீற்றத் துப்பின் வரிசிலை யுழவ
ரீட்ட, நாற்றிசைப் பரப்பும் போர்ப்ப நாமவே னளனும்
வந்தான்.

இ - ள். கூற்று என - யமனென்று சொல்லும்படியாக, கொல்லும் - கொலை செய்கின்ற, வேழம் - யானைகளும், கொடி அணி - கொடிகளணிந்த, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, திண்-வலிமைபெற்ற, தேர் - தேர்களும், பால் - பாலினுடைய, திரை - அலைகள்போன்ற, கவரி - சாமரைகள்கட்டிய, நெற்றி - நெற்றியையுடைய, பண் அமை - கல்லணையமைந்த, கலினம் - கடிவாளம் பூண்ட, பாய் - தாவுகின்ற, மா - குதிரைகளும், மாற்றரும்-நீக்குதற்கரிய, சீற்றத்துப்பின் - கோபமிகுந்த, வரி சிலை - நெடிய வில்லையுடைய, உழவர் ஈட்டம் - காலாள்கள் கூட்டமும், (ஆகிய இந்நால்வகைச்சேனைகளும்) நாற்றிசை பரப்பும் - நாலுதிசைகளின் பரப்பெல்லாம், போர்ப்ப - மூடிக்கொண்டுவர, நாமம் - அச்சத்தைத்தருகின்ற, வேல் - வேற்படையையுடைய, நளனும் - நளமகாராஜனும், வந்தான் - வந்தனன், எ - று.

க - து. யானைகளும், தேர்களும், குதிரைகளும், காலாள்களும் சூழ்ந்துவர நளமகாராசனும் வந்தான் என்பதாம்.

இந்திரன் முதலிய தேவர்களே தமயந்தியை விரும்பிய தன்னைத் தூதாகவிடுத்தும் வேறு தூதிகளையனுப்பியும் தடைசெய்ததுமன்றிப் பின்னுந் தனதுருவங்கொண்டு வஞ்சிப்பதற்கு வருவதையறிந்தும் நளனவன் "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித், தாழா துஞற்று பவர்" (திருக்குறள்-ஆள்வினையுடைமை-கO) என்பதால் தாழாது செல்லுந் திறத்தினனாதலின் 'நளனும்' என உயர்வு சிறப்பும்மை கொடுக்கப்பட்டது. (கஅ)

[இதனால் சுயம்வரத்திற்கு வந்தவரை வீமன் எதிர்கொண்டமை சொல்லப்படுகின்றது.]

உலகொரு மூன்றி னுள்ள வொளிமுடி மன்ன ரெல்லா,
மிலகுபொற் குடுமி வான்றோ யெயிற்புறத் திறுத்தா ராக,
வலகில்வெஞ் சேனைசூழ வரும்பெறற் சுற்றந் தோடும், விலங்கில்
லுமிழும் பைம்பூண் வீமப்பர்கோ னெதிர்கொண் டானே.

இ - ள். உலகு ஒரு மூன்றின் உள்ள - திரிலோகத்திலுமுள்ள, ஒளி - காந்தியையுடைய, முடி மன்னர் எல்லாம்-மகுடத்தையணிந்த அரசர்களெல்லாரும், இலகு - பிரகாசிக்கின்ற, பொன் குடுமி - பொ

ன்றுளவாகிய சிகரம், வான் தோய் - ஆகாசமளாவிய, எயில் புறத்து - மதிற்புறத்திலே, இறுத்தார் ஆக-தங்கினராக, (அதுகேட்டு) அலகில் - அளவற்ற, வெம் - வெவ்விய, சேனை சூழ - சேனைகள் சூழ்ந்துவர, அருப்பெறல் - பெறுதற்கரிய, சுற்றத்தோடும்-கிளைஞருடன், விலகி- வீசி, வில் - ஒளியை, உமிழும் - உமிழ்கின்ற, பைம்பூண் - பசிய ஆபரணத்தையுடைய, விதர்ப்பர் கோன் - விதர்ப்பதேசத்தார்க் கரசனாகிய வீமராஜன், எதிர்கொண்டான் - எதிர்கொண்டனன், எ-று.

க - து. திரிபுவனத்தரசர்களும் வந்திருக்கச் சுற்றத்தாரோடு வீமராஜன் எதிர்கொண்டுபோனான் என்பதாம்.

பலவித உபசாரங்களினும் எதிர்கொள்ளுதல் முற்பட்டதாகலின் அங்குவந்த அரசர்களுக்கு வீமராசன் அதனைச் செய்தனனென்க. (கக)

[இதனால் வீமன் அவர்களுக்குச் சிறப்புச்செய்தல் சொல்லப்படுகின்றது.]

விரைசெறி யலங்கன் மாலை விண்ணவர் விஞ்சை மன்ன
ருருகெழு முரக வேந்த ரோங்குநீ ருடுத்த ஞாலத்
தரசிளங் குமர ரோடு மளவளாய் முகமன் கூறி
வரிசையின் வழாமை நோக்கி வான்சிறப் பியற்றி னானே.

இ - ள். விரை செறி - வாசமிகுந்த, அலங்கன் மாலை - மலர் மாலையையணிந்த, விண்ணவர் - தேவர்கள், விஞ்சை மன்னர் - வித்தியாதரவேந்தர், உரு கெழும் - வடிவுள்ள, உரகவேந்தர் - நாகவேந்தர், ஓங்கு-உயர்ந்த, நீர் உடுத்த ஞாலத்து-கடலாற் சூழப்பட்ட பூமியிலுள்ள, அரசு இளம் குமரரோடும்-இராஜகுமாரரோடும், அளவளாய்-கலந்து, முகமன் கூறி - உபசாரவார்த்தைகளைச் சொல்லி, வரிசையின் - கிரமத்தினில், வழாமை - தப்பாமல், நோக்கி - ஆலோசித்து, வான் - மேலாகிய, சிறப்பு - சிறப்பை, இயற்றினான் - செய்தான், எ - று.

க - து. தேவர்கள் வித்தியாதரர் நாகலோகத்தரசர் பூவுலகத்தரசர் இவர்களுக்கு வீமராஜன் முறைப்படி சிறப்புச்செய்தான் என்பதாம்.

தன்னின் மிக்கோர்க்குச் செய்யும் எழுவகை மரியாதைகளுள் பிரியி னுடன்குசேற வொழித்து இருப்பெழுகை, விரைந்துபோதல், எதிர்கொள்கை யென்னு மூன்றும் முற்பாட்டிலும், தவிசினிடையிருத்தல், பூசைசெய்தல், இன்சொலாதியா லுவப்புச்செயல் என்னு மூன்றும் இப்பாட்டிலும் அடங்குதல் காண்க. (உ0)

[இதனால் அரசர்கள் பகற்பொழுது போக்கல் சொல்லப்படுகின்றது.]

தோட்டலர் மாலை நாற்றித் துறக்கமோ டுறழச் செய்த, வீட்டகந் தோறும் பைம்பொன் விளங்கிழை செவ்வி வாய்ப்பத், தீட்டிய வுருவு நோக்கித் தேறல்கொப் புளித்து மாந்தும், பாட்டளித் தாம வேந்தர் பகற்பொழு தாற்றி னாரே.

இ - ள். தோடு - இதழ்களையுடைய, அலர் - மலராற்றொடுத்த, மாலை - மாலைகளை, நாற்றி - தொங்கக்கட்டி, துறக்கமோடு - தெய்வலோகத்துடனே, உறழ - ஒக்கும்படி, செய்த - செய்யப்பெற்ற, வீட்டகந்தோறும் - வீடுகளினிடந்தோறும், பைம்பொன் - பசிய பொன்னினால், விளங்குஇழை-தமயந்தியினது, செவ்வி வாய்ப்ப-அழகுபொருந்த, தீட்டிய - எழுதிய, உருவு நோக்கி - (பதுமைகளின்) வடிவங்களைப் பார்த்து, தேறல் - தேனை, கொப்புளித்து - கொப்புளித்து மாந்தும் - உண்ணுகின்ற, பாட்டு - இசைகளைப் பாடுகின்ற, அளி - வண்டுகள்மொய்த்த, தாம வேந்தர்-மாலையையணிந்த வரசர்கள், பகல்பொழுது - பகற்காலத்தில், ஆற்றினார் - (காம நோயைப்) பொறுத்திருந்தார்கள், எ - று.

க - து. சுவர்க்கத்திற் கொப்பாகிய வீடுகளினிடங்கடோறும் எழுதப்பட்ட தமயந்தி திருவுருவத்தை அரசர்கள் பார்த்துப் பகற்பொழுதுபோக்கிக் காமத்தைப் பொறுத்திருந்தார்கள் என்பதாம்.

இவ்வரசர்கள் காமந் தலைக்கொண்டவர்களாதலால் அழகினாம் தாம்விழைந்த தமயந்திக்கொப்பாகிய பதுமைகளைப்பார்த்துப் பகற்பொழுதில் தமது காமநோயைச் சகித்துக்கொண்டிருந்தனரென்க. ஒப்புமை நோக்கல், சித்திரந்திட்டல், கனவிற்காண்டல், அவர்மெய்யுற்றதைத் தீண்டல் இந்நான்கும் காமநோய்க்குப் பரிகாரமாம். "கூடும் பிரிவினிலுங் கூடாப் பிரிவினிலு, மோடு மன்பர் நேர்காட்சியோவியத்தி - னூடல், கனவவர்மெய்ப் பூண்டவற்றைத் தீண்டலென்பர் காமத்,தினையுமவர்க் குற்ற மருந்தே" இதனாலறிக. கூடும்பிரிவு - ஒரு நிமித்தம்பற்றிப் பிரிதல்; கூடாப்பிரிவு - இறத்தல். இது வடநூலிற்கண்டு மொழிபெயர்க்கப்பட்டது. 'விளங்கிழை செவ்விவாய்ப்பத் தீட்டியவுரு' என்பதற்குப் பிரகாசிக்கின்ற ஆபரணங்கள் அழகுபொருந்த எழுதப்பட்ட சித்திரமென்பாருமுளர். [விளங்கிழை செவ்வி வாய்ப்பவென உவமானமாகிய தீட்டியவுருவங்களை உவமேயமாகக் கூறலால் எதிர்நிலையணி.] (உக)

[இதனால் சூரியாஸ்தமயஞ் சொல்லப்படுகின்றது.]

சேயுயர் விசும்பிற் றேவர் தெண்டிரைப் பரவை சூழ்ந்த
மாயிரு ஞாலங் காக்கு மன்னவ ருரக ருற்ற
காயழற் காமவெந்திக் கனற்றுமென் றஞ்சி ஞன்போற் [ன்.
பாயிரு ளுலகம் போர்ப்பப் பகல்செய்வான் கடலு ளாழ்ந்தா

இ-ள். சேய் உயர்-மிகவுமுயர்ந்த, விசும்பில்-தெய்வலோகத்திலிருக்கும், தேவர்-தேவர்களும், தெள் திரை பரவை சூழ்ந்த-தெள்ளிய அலைகளையுடைய கடலாற் சூழப்பெற்ற, மா இரு ஞாலம் காக்கும் - மகத்தாகிய பெரியபூமியைக் காக்கின்ற, மன்னவர்-அரசர்களும், உரகர் - நாகவேந்தர்களும், உற்ற-(ஆகிய இவர்கள்) அடைந்த, காய்-சுடுகின்ற, அழல் - வெப்பம் பொருந்திய, காம வெந்தீ - காமாக்கினி, கனற்றும் என்று-(தன்னைச்) சுடுமென்று, அஞ்சினன்போல் - பயந்தவன்போல், பாய் - பரவிய, இருள் - இருளானது, உலகம்போர்ப்ப - உலகத்தை மூடிக்கொள்ள, பகல் செய்வான் - சூரியனானவன், கடலுள் - (மேற்றிசைக்)கடலுள், ஆழ்ந்தான் - அழுந்தினான், எ - று.

க - து. தேவர்களும் அரசர்களும் நாகவேந்தர்களும் அடைந்த காமாக்கினி தன்னைச்சுடுமென்று சூரியன் அஸ்தமனமாயினான் என்பதாம்.

பகல்செய்வான் - திநகரன் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. வெப்பத்தையுடைய சூரியனையும் அஞ்சச்செய்தலால் காமத்தீ அவனிலும் மிக்கதென்பது கருத்து. [அஞ்சினன்போலெனக்குறித்தலால் தற்குறிப்பணி.] (உஉ)

[இதனால் இருள் பரவாமைக்குக் காரணஞ்
சொல்லப்படுகின்றது.]

விரிகதிர் மௌலி விண்ணோர் மெய்யொளி பரத்த லானு
மரசிளங் குமரர் மார்பி லணிவெயி லுமிழ்த லானு
முரகர்தஞ் சுடிகை யுச்சி யொளிர்மணி யிமைத்த லானும்
பரிதிமேற் கடலு ளாழ்ந்தும் பாயிருள் பரந்த தின்றே.

இ - ள். விரி-விரியப்பெற்ற, கதிர்-கிரணங்களையுடைய, மௌலி - மகுடங்களைத்தரித்த, விண்ணோர் - தேவர்களுடைய, மெய் ஒளி - தேககாந்திகள், பரத்தலானும் - பரவுதலாலும், அரசு இளங் குமரர் மார்பில்-இராஜ குமாரர்கள் மார்பிலிருக்கும், அணி-ஆபரணங்கள், வெயில் - ஒளியை, உமிழ்தலானும் - கொப்புளித்தலாலும்

உரகர் - நாகவரசர்களுடைய, சுடிகை உச்சி-முடியின்மேல், ஒளிர் - விளங்குகின்ற, மணி - ரத்நங்கள், இமைத்தலானும் - பிரகாசித்தலாலும், பரிதி - சூரியனானவன், மேல் கடலுள் ஆழ்ந்தும்-மேற்கடலுள் அழுந்தியும், பாய்-பாய்கின்ற, இருள்-இருளானது, பரந்தது இன்று-பரந்ததில்லை, எ - று.

க - து. தேவர்கள் சரீரகாந்தியாலும், அரசர்கள் மார்பினுபாணங்களாலும், நாகவேந்தர்கள் சிரோரத்தினங்களாலும் சூரியன் மறைந்தும் இருள்தோற்றவில்லை என்பதாம்.

மெய்யொளிபரத்தல், அணிவெயிலுமிழ்தல், ஒளிர்மணியிமைத்தல் ஆகிய பிரகாசங்கள் சூரியன் பிரகாசித்தல்போ லிருந்தனவென்பது கருத்து. [மெய்யணி மணிகளை இருள்பரவாமைக்குக் காரணமாகச் சொல்லப்பட்டமையால் கூட்டவணி.] (உ௩)

[இதனால் இரவுபகல் தோன்றாமை சொல்லப்படுகின்றது.]

மையவாங் கரிய கூந்தல் வாள்கிடந் தனைய வுண்கட்
பையர வல்குற் செவ்வாய்ப் பனிமொழி வதுவை வேட்டு
வெய்யசெங் கதிரி னோடும் வெண்மதி யுறைத றன்றா
லெய்துமிக் காலந் தன்னை யிரவென்கோ பகலென் கேனோ.

இ - ள். மை - அஞ்சனமானது, அவாம் - விரும்புகின்ற, கரிய கூந்தல்-கருமையுள்ளகூந்தலையும், வாள் கிடந்தது அனைய-வாளாயுதங்கிடந்ததையொத்த, உண் கண்-மையுண்டகண்களையும், பை அரவு அல்குல்-அரப்படம்போன்ற அல்குலையும், செவ்வாய்-சிவந்தவாயையும், பனி மொழி-குளிர்ச்சி பொருந்திய சொல்லையுமுடைய தமயந்தியினது, வதுவை வேட்டு - விவாகத்தைவிரும்பி, வெய்ய - வெவ்விய செம் கதிரினோடும் - சூரியனோடும், வெண்மதி-சந்திரன், உறைதல் தன்றால் - (அந்நகரத்தில்) தங்குகின்றபடியால், எய்தும் - பொருந்திய, இ காலம் தன்னை - இக்காலத்தை, இரவு என்கோ-இரவென்று சொல்லுவேனோ, பகல் என்கேனோ - பகலென்று சொல்லுவேனோ (இன்னதென்று சொல்லேன்), எ - று.

க - து. தமயந்தி கலியாணத்தை விரும்பிவந்த சூரியனுஞ் சந்திரனும் அந்நகரத்தில் வாசம்பண்ணலால் இரவென்று சொல்வேனோ பகலென்று சொல்வேனோ என்பதாம். (உ௪)

[இப்பாட்டால் மாலைப்பொழுதின் வரவு சொல்லப்படுகின்றது.]

ததைமலர்த் தெரியல் வேந்தர் தளர்ந்துமெய் பதைத்து வாடப், புதையிருட் போர்வை மெய்பிற் பொலிவுறப்

போர்த்து வெய்ய, கதமெழுரிச் செக்கர்ப் பேழ்வாய் திறந்து வெண் கதிர்கு லாய, மதிவகி ரெயிறு தோன்ற வந்தது மாலைக் கூற்றம்.

இ-ள். ததை - நெருங்கிய, மலர் தெரியல் - மலர்மாலையை யணிந்த, வேந்தர் - அரசர்கள், தளர்ந்து - தளர்ச்சியடைந்து, மெய் ப்பதைத்து - தேகம்பதைத்து, வாட - வாடும்படி, புதை-(உலகத்தை) மூடுகின்ற, இருள் போர்வை - இருளாகியபோர்வையை, மெய்யில்-(தனது) உடம்பில், பொலிவு உற-விளக்கமிக, போர்த்து-போர்த்துக் கொண்டு, வெய்ய - கொடிய, கதம் - வேகத்தையுடைய, எரி - நெருப்பையொத்த, செக்கர் - செவ்வானமாகிய, பேழ் வாய் திறந்து - பெரியவாயைத்திறந்து, வெள் கதிர்-வெள்ளிய கிரணங்கள், குலாய-விளங்கப்பெற்ற, மதி - சந்திரனாகிய, வகிர் - பிளப்பையுடைய, எயிறு - கோரப்பல்லானது, தோன்ற - தோன்றும்படி, மாலை - மாலைப் பொழுதாகிய, கூற்றம் - யமனானவன், வந்தது - வந்தான், எ - று.

க - து. அரசர்கள் வாடும்படி மாலைக்காலமாகிய இயமனானவன் இருட்போர்வை போர்த்துச் செவ்வானமாகிய வாயைத்திறந்து சந்திரனாகிய வக்கிரதந்தந் தோன்றும்படி வந்தான் என்பதாம்.

மாலைப்பொழுதானது விரகிகளைக் கொல்லப்பட்டதாகலின் அதற்கேற்க அதைக்கூற்றுவனாகவும், இருளை மறைக்கும் போர்வையாகவும், செவ்வானத்தைப் பேழ்வாயாகவும், பிறையைப் பல்லாகவும் உருவகஞ்செய்தார். ஆதலால் அக்கூற்றுவன் தான்கொல்வதேயன்றித் தன் போர்வையால் மறைத்தும் வாயால் விழுங்கியும் பல்லாற்கறித்தும் கொல்வானென்பதாயிற்று. [உறுப்புடை யுருவகவணி.] (உ௩)

[இதுமுதல் ஏழுபாட்டால் வளர்பிறையின் றேம்றந் சொல்லப்படுகின்றது.]

விரிகதிர் பரப்பி வான மீதெழு குழவித் திங்க
ளெரிமணிப் பூண்செய் திண்டோ ளெழுபுவி வேந்தர் மேலும்
வரிசிலை குழைய வாங்கி மண்டமர் தொடங்கு மாரன்
குரைகடன் முரச மென்றுங் குனிலெனச் சிறந்த தன்றே.

இ-ள். விரி கதிர் - விரிந்தகிரணங்களை, பரப்பி-பரவச்செய்து, வானமீது - ஆகாயத்தில், எழு - எழுந்த, குழவி திங்கள் - இளம்பிறை, எரி - விளங்குகின்ற, மணி - ரத்நங்கள்பதித்த, பூண் செய் - ஆபரணங்களையணிந்த, திண் தோள்-வலிமையுள்ள தோளையுடைய, எழு புவி வேந்தர் மேலும்-ஏழுதீவிலுள்ள அரசர்கள் மேலும், வரி -

நெடிய, சிலை - வில்லை, குழைய வாங்கி - வளையவளைத்து, மண்டி - நெருங்கிய, அமர்-போரை, தொடங்கு மாரன் - ஆரம்பித்த மன்மதனது, குரை - ஒலிக்கின்ற, கடல் முரசம் - கடலாகிய பேரிகையை, எற்றும் - அடிக்கின்ற, குணிலென - குறுந்தடிபோல், சிறந்தது - சிறந்திருந்தது, எ - று.

க - து. வானி லுதயமான இளம்பிறையானது மன்மதனது கடலாகிய முரசுக்குக் குறுந்தடிபோ லிருந்தது என்பதாம்.

அழகிற் சிறந்த தமயந்தியை விழைந்துவந்த அரசர்களனைவரும் அவ்விரவில் அளவற்ற காமவாதத்தை அடைவதற்கு மன்மதன் காரணமாதலால் இதுகாறும்போலன்றி அதிக முயற்சியோடு படையெடுத்துவருதற்குக் குறியாக அக்காலத்தில் ஒலிக்குங்கடலை முரசமாக்கி அங்குண்டாகிய பிறையை அதை எற்றுங் குணிலாகக் கூறினரென்க. (உஅ)

ஏர்குடி யிருந்த நங்கை யிளமுலைப் போகம் வேட்ட
நீர்மலி கடலந் தானை நெடுநில வேந்தர் தம்மேல்
வார்சிலைத் தடக்கை மாரன் மண்டமர் புரியத் தூண்டுங்
கூரிருள் வேழக் கோட்டி னெழுந்தது குழவித் திங்கள்.

இ - ள். குழவி திங்கள் - இளம்பிறையானது, ஏர் - அழகுகளானவை, குடி இருந்த - ஒருங்குபடத் தங்கியிருக்கப்பெற்ற, நங்கை - தமயந்தியினது, இளம் - இளமையாகிய, முலை - ஸ்தனங்களினது, போகம் - அனுபவத்தை, வேட்ட - விரும்பிய, நீர் மலி - நீர்மிகுந்த, கடல் - கடலாகிய, அம் - அழகிய, தானை - ஆடையையுடைய, நெடு நிலம் - நெடியபூமியிலுள்ள, வேந்தர் தம்மேல் - அரசர்களிடத்து, வார் சிலை - நீண்ட வில்லையேந்திய, தடக்கை - விசாலமாகிய கையையுடைய, மாரன் - மன்மதன், மண்டு அமர் புரிய - நெருங்கிய யுத்தத்தைச் செய்ய, தூண்டும் - நடத்தப்பட்ட, கூர் இருள் - மிகுந்த இருளாகிய, வேழம் - யானையினது, கோட்டின் - கொம்புபோல், எழுந்தது - உதித்தது, எ - று.

க - து. இளம்பிறையானது தமயந்தியை விரும்பிய அரசர்கள்மேல் மன்மதன் போர்செய்ய நடத்தப்பட்ட இருளாகிய யானையின் கோட்டைப்போலு மிருந்தது என்பதாம்.

கீழ்த்திசைத் தோன்றிவரும் இருளை அக்காலத்தில் மன்மதனது யானையாகக்கூறி மேற்றிசைத்தோன்றிய பிறையையும் அதற்குக் கொம்பாகச் சொல்லப்பட்டது. இதனுல் இவ்விரண்டும் காம

னைப்போலும் விரகிகளுக்குக் காமத்தை விளைத்து வருத்துமென்பது கருத்து.[இருள்வேழமென்பதுஉருவகம்.கோட்டினெழுந்ததென்பது தற்குறிப்பணி. இது மூன்றுருவகத்தை அங்கமாகக் கொண்டது.]()

கள்ளுயிர்த் தினவண் டார்க்குங் கமலம்வாய் முகிழ்ப்பச் செய்ய, வள்ளலங் கயத்து ளாம்ப லலர்த்திய குழவித் திங்க, டெள்ளுசெங் கதிரோன் மாலைத் தெரிவைவெம் முலையிற் கோட்டிட், வள்ளுகிர்க் குறியிற் றோன்றிப் பொலி வுற வயங்கிற் றன்றே.

இ - ள். கள் - தேனை, உயிர்த்து - தந்து, இனம் - கூட்டமாகிய, வண்டு - வண்டுகள், ஆர்க்கும் - ஒலிக்கின்ற, கமலம் - தாமரை மலர்கள், வாய் முகிழ்ப்ப - குவிய, செய்ய-சிவந்த, அள்ளல் - குழை சேற்றையுடைய, அம் - அழகிய, கயத்துள் - தடாகத்துள், ஆம்பல் - அல்லிகளை, அலர்த்திய - மலரச்செய்த, குழவி திங்கள் - இளம் பிறையானது, தெள்ளு - தெளிந்த, செம் கதிரோன் - சிவந்த கதிரையுடைய சூரியனானவன், மாலை-மாலைப்பொழுதாகிய, தெரிவை-மங்கையினுடைய, வெம்முலை - விருப்பத்தைச்செய்யுங் கொங்கைகளில், கோட்டும் - ஊன்றிய, வள் - கூரிய, உகிர் குறியின் - நகக் குறியைப்போல், தோன்றி - உண்டாகி, பொலிவு உற-அழகுபொருந்த, வயங்கிற்று - விளங்கிற்று, எ - று.

க - து. தாமரைமலர்கள் குவிய ஆம்பல்மலர்களை மலரச்செய்த இளம்பிறையானது சூரியனானவன் மாலைக்காலமாகிய மங்கையின் கொங்கைகளில் அழுத்திய நகக்குறிபோ லிருந்தது என்பதாம்.

சூரியனோடுங்கூடிப் பிரிந்துநின்ற மாலைப்பொழுதில் காணப் படுகின்ற பிறையினை அடன்செப் நகக்குறியாகக் கூறினார். புணருமிடத்து நகக்குறியுண்டாதல், "பற்குறி நகக்குறிகள் பாணிகொடு தட்ட,வெற்கமிழ்து துய்த்தல்களி நன்றெழ வணைத்த,லற்குகர ணங்களறியாரு மெளிதாகக்,கற்கும்வகை நின்றன கதிர்த்தமணியோவம்" (தணிகைப்புராணம்-நகரப்படலம்-எக) இதனாலறிக. [மாலைப்பொழுதிலுண்டாகிய பிறையினைச் சூரியனோடு கூடிப்பிரிந்தமாலைப்பெண் முலைக்குறியாகக் குறித்தலால் தற்குறிப்பணி.] (உஅ)

சேட்டிளம் பரிதி மார்பி னளனுக்குத் தெரிய னோலைச்
சூட்டிவ டெரிவை யென்னத் துலங்கு கீட்டிசைமா தன்பிற்
காட்டிய நிருத்தக் கையிற் கதிர்நில வுமிழுந் தண்ணொன்
கோட்டிளங் குழவித் திங்கள் குடபுலத் தெழுந்த தன்றே.

இ - ள். சேடு இளம் - மிகுந்த விளமையையுடைய, பரிதி - சூரியன்போன்ற, மார்பின் - மார்பினிடத்தில், நளனுக்கு - நளமகாராஜனுக்கு, நாளை - நாளைப்பொழுதில், தெரிவை - தமயந்தியானவள், தெரியல் சூட்டுவள் என்ன - மாலையைத்தரிப்பாளென்று, துலங்கு - விளங்குகின்ற, கீழ் திசை மாது - கிழக்குத்திக்காகிய மங்கையானவள், அன்பின் - அன்பினாலே, காட்டிய - காட்டப்பட்ட, திருத்தம் கையில் - அபிநயக்கைபோல், கதிர் - கதிர்களாகிய, நிலவு உமிழும் - ஒளியைக் கொப்புளிக்கின்ற, தண் என் - குளிர்ச்சிபொருந்திய, கோடு - வளைந்த, இளம் குழவி திங்கள் - மிகுந்த விளமைபொருந்திய பிறையானது, குடம் புலத்து - மேற்குத்திசையில், எழுந்தது - உதயமாயிற்று, எ - று.

க - து. நளனுக்கு நாளையத்தினம் தமயந்தி மாலைசூட்டுவாளென்று கீழ்த்திசை மாதானவள் காட்டப்பட்ட அபிநயத்தைப் போல் இளம்பிறை மேற்குத்திசையில் உதித்தது என்பதாம்.

நாடகக்கணிகையர் தமது கருத்தினுள்ளதை அபிநயத்தா லபிமுகத்திற் காட்டுதலியல்பாதலின் அவ்வாறு கீழ்த்திசைமாது தமயந்தி நளனுக்கு மாலைசூட்டலைக் காட்டிய திருத்தக்கைபோல் இளம்பிறை யெழுந்ததென்றார். [பிறையில் திருத்தக் கையைக் குறித்தமையால் தற்குறிப்பணி.] (உக)

கூன்பயில் குழவித் திங்கள் கொள்ளைவண் டிருந்து பாடக்
கான்பயின் மலரம் பேந்துங் கன்னலஞ் சிலைக்கை வேட
னூன்பயில் குருதி வேற்க ணொண்ணுதன் மடவா ருள்ள
மீன்கவர் தூண்டி லென்ன விசும்பிடை விளங்கிற் றன்றே.

இ - ள். கூன் பயில் - வளைவு பொருந்திய, குழவி திங்கள் - இளம்பிறையானது, கொள்ளை - மிகுதியாக, வண்டு இருந்து - வண்டுகளிருந்து, பாட - பாடலைச்செய்ய, கான் பயில் - வாசனைபொருந்திய, மலர் அம்பு ஏந்தும் - மலர்க்கணைகளையேந்திய, கன்னல் அம் சிலை கை வேடன் - மன்மதனானது, ஊன் பயில் - தசைபொருந்திய, குருதி - உதிரத்தையுடைய, வேல் கண் - வேல்போன்ற கண்களையும், ஒண் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுமுடைய, மடவார் - மாதரது, உள்ளம் - மனமாகிய, மீன் - மீனை, கவர் - கிரகிப்பதற்குப் போடப்பட்ட, தூண்டில் என்ன - தூண்டிலைப்போல், விசும்பிடை - ஆகாயத்தினிடத்து, விளங்கிற்று - பிரகாசித்தது, எ - று.

க - து. இளம்பிறை உதயமானது மன்மதன் மாதர்களுடைய மனமாகிய மீனைக் கிரகிக்கப் போடப்பட்ட தூண்டிலைப்போ லிருந்தது என்பதாம்.

மாமிசத்தை விரும்பிப் பற்றிய மீன்களைத் தூண்டில் இறக்கும்படி செய்வதுபோல் இப்பிறையும் காமவிடாய் தீரத் தன்னைப்பார்க்கின்ற பிரிந்தவரை வருத்துவதாதலின் இவ்வாறு கூறினர். [பிறையைத் தூண்டின் முள்ளாகக் குறித்தமையால் தற்குறிப்பணி.] (கூ0)

நீனிறத் தங்கண் வான நீள்கடற் பரப்பிற் றூய,
வானிலாக் கதிர்கள் வீசி வயின்வயின் விளங்கு கின்ற,
மீனெனுங் கதிர்கொண் முத்த வெண்மணி யுயிர்த்துத்
தோன்றும், கூன்முது கிப்பி யென்ன வெழுந்தது குழவித்
திங்கள்.

இ - ள். குழவி திங்கள் - இளம்பிறையானது, நீனிறத்து - நீலநிறத்தையுடைய, அம் கண் - அழகிய இடத்தையுடைய, வானம் - ஆகாயமாகிய, நீள் - நீண்ட, கடல் பரப்பில் - கடலினது பரப்பிலே, தூய - பரிசுத்தமான, வால் - வெள்ளிய, நிலா கதிர்கள் - பிரகாசத்தையுடைய கிரணங்களை, வீசி - எறிந்து, வயின் வயின் - இடங்கள்தோறும், விளங்குகின்ற - பிரகாசிக்கின்ற, மீன் எனும் - மீனென்கின்ற, கதிர் கொள் - கிரணங்களைக்கொண்ட, முத்த வெள் மணி - வெள்ளிய முத்தங்களை, உயிர்த்து - ஈன்று, தோன்றும் - விளங்கும், கூன் முதுகு இப்பி என்ன - வளைந்த முதுகையுடைய இப்பியைப்போல், எழுந்தது - எழுந்தது, எ - று.

க - து. நட்சத்திரங்களோடு உதயமான இளம்பிறையானது முத்துக்களை யீன்ற இப்பிகளைபபோ விருந்தது என்பதாம்.

['மீனெனு முத்தம்' என்றது உருவகம். 'கூன்முது கிப்பி யென்ன' எனக் குறித்தலால் தற்குறிப்பணி.] (கூக)

ஓங்குயர் விசும்பு பூத்த வுடுப்புகர் முகத்த தாய
வாங்குவிற் றடக்கை மாரன் மலர்தலை யுலகிற் றூண்டுந்
தூங்கிருட் களிநல் யானை துரந்திடுங் கோட்டி போலத்
தீங்கதிர்க் குழவித் திங்கள் சேணிடைத் திகழ்ந்த தன்றே.

இ - ள். தீம் கதிர் - தித்திப்புப்பொருந்திய கிரணங்களையுடைய, குழவி திங்கள் - இளம்பிறையானது, வாங்கு - வளைக்கப்பட்ட, வில் - (கருப்பு) வில்லேந்திய, தடம் கை - விசாலம்பொருந்திய கையையுடைய, மாரன் - மன்மதனானவன், மலர் தலை உலகில் - பரந்த இடத்தையுடைய வுலகத்தில், தூண்டும் - செலுத்துகின்ற, ஓங்கு உயர் - மிகவுமுயர்ந்த, விசும்பு - ஆகாசத்தில், பூத்த - உண்டாகிய, உடு - தாரகைகளாகிய, புகர் முகத்தது ஆய - புள்ளிபெற்ற முகத்தையுடை

யந்தியினது, வதுவை வேட்டு - விவாகத்தை விரும்பி, கூர் இருள் - மிகுந்த இருளையுடைய, கங்குல் போதில் - இராப்பொழுதில், தாறு - குலைகளையுடைய, இளம் பூகவேலி - இளமைபொருந்திய கமுகவேலி சூழ்ந்த, தண் - குளிர்ச்சிபொருந்திய, பணை - வயல்களையுடைய, நிடதம்காக்கும் - நிடததேசத்தைப் புரக்கின்ற, ஆற்றல் சால் - பொறுமைமிக்க, நளனுக்கு - நளமகாராசனுக்கு, உற்ற-பொருந்திய, அரு துயர் - பொறுத்தற்கரிய துயரை, உரைக்கலுற்றும் - சொல்லத்தொடங்கினும், எ - று.

க - து. தமயந்தியின் விவாகத்தை விரும்பிய நளனுக்குப் பொருந்திய துன்பத்தைச் சொல்லத்தொடங்கினேம் என்பதாம்.

உரி - முதனிலைத் தொழிலாகுபெயர். பொறுமை மிக்க நளனுலும் பொறுத்தற்கரிய துயரென்றது அதன் அருமையைக் குறிப்பித்து நின்றது. (கஅ)

[இதனுல் நளன் பிறையை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

## கலிவிருத்தம்.

பனிமைக் கடலிற் படுமா ரமிர்தோ
டினிதிற் றிருவோ டெழுந் தனையென்
மனனுற் றவள்வா ணுதல்போ லுதியாற்
கனலத் தகுமோ கலைவெண் மதியே.

இ - ள். கலை - கலையையுடைய, வெள் மதியே - வெள்ளிய சந்திரனே, பனி - குளிர்ச்சிபொருந்திய, மை - கரிய, கடலில் படும் - கடலிற்றோன்றிய, ஆர் - நிறைந்த, அமிர்தோடு - அமிர்தத்துடன், இனிதின் - இனிமையுடைய, திருவோடும் - இலக்குமியுடன், எழுந்தனை - தோன்றினுய்; என் மனன் உற்றவள்-என் மனத்திலிருப்பவளாகிய தமயந்தியினது, வாள் - ஒளிபொருந்திய, நுதல் போலுதியால் - நெற்றிபோலிருக்கின்றுய்; கனலத்தகுமோ - (நீ என்னைச்) சுடத்தகுமா, எ - று. ஆல், ஏ-அசை.

க - து. நான் கலைகளையுடைய சந்திரனே! அமிர்தத்தினோடும் இலக்குமியோடும் பிறந்தாய், தமயந்தி நெற்றிபோ லிருக்கின்றுய், ஆதலா லென்னைச் சுடத்தகுமா என்றான் என்பதாம்.

நீ தோன்றிய இடத்தின் குணத்தையும் உடன்பிறந்தோர் தன்மையையும் உணராவிடினும் தமயந்தியினது நிகரில்லாத நெற்றிக்கு

நிகரானாய்; இப்பொழுது அதற்குரிய மகிழ்ச்சி செய்வதைவிட்டு வெப்பஞ்செய்யின் அப்பெருமை உனக்குத் தகாதென்பது கருத்து.

[இதனால் தென்றலை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

கொந்தார் குவளைக் குளிர்மென் மலரிற்
பைந்தா துதைந்து படிந்து நறுஞ்
சந்தா டவியூ டுதவழ்ந் துவரு
மந்தா னிலமே யுயிர்வெள வுதியோ.

இ - ள். கொந்தார் - திரளாக நிறையப்பெற்ற, குவளை - உற்பலத்தினது, குளிர் - குளிர்ச்சி பொருந்திய, மெல் மலரில் - மெல்லிய மலர்களிலிருக்கும், பைந்தாது-பசிய மகரந்தங்களில், துதைந்து-நெருங்கி, படிந்து-முழுகி, நறும்-நல்ல வாசனையுள்ள, சந்தம் அடவியூடு-சந்தனக் காட்டினிடத்தில், தவழ்ந்து வரும்-தவழ்ந்துவருகின்ற, மந்தானிலமே - இளந்தென்றலே, (நீ) உயிர் - (என்) உயிரை வெளவுதியோ - அபகரிக்கின்றனையோ, எ - று.

க - து. நளன் தென்றற்காற்றே! என்னுயிரைக் கிரகிக்கின்றாயோ என்றான் என்பதாம்.

தென்றலுக்குக் குளிர்ச்சியும் மணமும் மென்மையும் சிறந்தனவாயினும் பிரிந்தவரைவருத்துதலால் இவ்வாறு கூறினான். [இக்கருத்தைக் கொண்டமையால் கருத்துடை யடைகொளியணி] (கூகூ)

[இதனாற் குயிலைவெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

அயில்வா ளிதுறந் தடல்வேள் பொரலாற்
செயலே துமிலா துதிகைத் தயர்வே
னுயிர்போல் பவளின் சொலுணர்த் திவரிக்
குயிலே யெனதா ருயிர்கொல் லுதியே.

இ - ள். அடல் - கொலை செய்கின்ற, வேள் - மன்மதனானவன், அயில் - கூர்மை பொருந்திய, வாளி - அம்புகளை, துரந்து - செலுத்தி, பொரலால் - பொருதலால், செயல் ஏதும் இலாது - ஒரு செய்கையுமில்லாமல், திகைத்து - மயங்கி, அயர்வேன் - வருந்துவேனாகிய எனது, உயிர் போல்பவள் - உயிரையொப்பவளாகிய தமயந்தியினது, இன் சொல் - இனியமொழியை, உணர்த்தி - அறிவித்து, வரி குயிலே - இசையையுடைய குயிலே, எனது - என்னுடைய, ஆர் - நிறைந்த, உயிர் - உயிரை, கொல்லுதியோ - கொல்லுகின்றனையோ, எ - று.

க - து. குயிலே! என்னுயிரைக் கொல்லுகின்றாயோ என்றான் நளன் என்பதாம்.

ஆருயிர் - அரியவுயிர் எனினுமாம். ஒருவரோடு பொருது இளைத்தவரை வேறொருவன் வெல்ல வருவது தகாதென்பது கருத்து. இவ்விரண்டுபாட்டாலும் சுயம்வரம் வேனிற்காலத்திலென்பது பெற்றாம். (௩௭)

[இது உருவெளித் தோற்றந் தமயந்தியைக் குறித்துச் சொல்லியது.]

விண்ணோர் விடுதூ துவிளம் புதலாற்
பெண்ணா ரமிர்தே பிழைசெய் தனனோ
வெண்ணா துறுமிந் திரசா லமெனக்
கண்ணா டுபுகுந் துகரந் தனையே.

இ - ள். விண்ணோர் - தேவர்களால், விடு - விடுக்கப்பட்ட, தூது - தூதினை, விளம்புதலால் சொல்லுதலால், பெண் ஆர் அமிர்தே - தமயந்தியே, பிழை செய்தனனோ-குற்றஞ் செய்தேனோ, எண்ணாது - நினைக்கப்படாத, (அனைத்தும்) உறும் - பொருந்துகின்ற, இந்திரசாலம் என - இந்திரசால வித்தைபோல், கண்ணாடு - என் கண்ணிடத்தில், புகுந்து-நுழைந்து, கரந்தனை - ஒளித்தாய், எ - று.

க - து. நளன் தமயந்தியை உருவெளித் தோற்றமாகக் கண்டு தன் கண்ணில் இந்திரசாலமாக ஒளித்துக்கொண்டாய் என்றான் என்பதாம்.

தூதாகவந்தவிடத்து யான்சொல்லியது குற்றமாகக்கொள்ளின் அது எனதன்று தேவர்கள் செய்தது ஆதலின் நீ என் கண்ணெதிர் வந்து நில்லாது மறைவதற்கு யானொரு குற்றமுஞ் செய்திலனென்பதாம். (௩௮)

[இது தன்னெஞ்சைக் குறித்துச் சொல்லியது.]

துஞ்சா தயர்வோ டுயிர்சோர் தரவெந்
நஞ்சார் விழிவே லெறிநன் னுதலாம்
பஞ்சே ரடியா யிழைபா லுறையு
நெஞ்சே யெனைநீ யுநினைந் திலையே.

இ - ள். துஞ்சாது - உறங்காமல், அயர்வோடு-துன்பத்தோடு, உயிர் - ஆவியானது, சோர்தர - தளர்ச்சியடைய, வெம் - வெப்பம் பொருந்திய, நஞ்சு ஆர்-விடம்நிறைந்த, விழி வேல்-கண்ணாகியவேலை,

எறி - எறிகின்ற, நல் நுதலாம் - நல்லபுருவத்தை யுடையவளாகிய, பஞ்ச - செம்பஞ்சுக் குழம்பணிந்த, ஏர் - அழகிய, அடி - பாதங்களை யுடைய, ஆயிழைபால் - தமயந்தியிடத்து, உறையும் - தங்குகின்ற, நெஞ்சே - என்மனமே, எனை - என்னை, நீயும் - நீயும், நினைந்திலை - நினைந்தாயில்லை, எ - று.

க - து. தமயந்தியிடத்துத் தங்குகின்ற என் மனமே! நீயும் என்னை நினைக்கவில்லை என்றான் என்பதாம்.

ஆயிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக்காரணப்பெயர். இடுக்கண் வரும்போது தனக்கு உயிர்போ லிருப்பவரும் உதவாரென்பது கருத்து. (ரகூ)

[இது கவிக்கூற்றால் நிகழ்ந்தவை கூறல்.]

என்றார் வமொடின் னபுலம் பிமணிக்
குன்றார் புயன்மெய்த் துயர்கூர் தரலும்
பொன்றாழ் பிதிர்சிந் தியபொம் மன்முலைப்
பின்றாழ் குழலுற் றதுபே சிடுவாம்.

இ - ள். என்று - இப்படியென்று, ஆர்வமோடு - ஆசையோடு, இன்ன - இத்தன்மையவாக, புலம்பி-இரங்கி, மணி - அழகிய, குன்று ஆர் புயன் - நளமகாராஜன், மெய் - உண்மையாகிய, துயர் கூர்தரலும் - அதிக துன்பங்கொண்டவளவில், பொன் - பொன்றனது, தாழ் - தாழும்படி, பிதிர் - தேமல், சிந்திய - சிதறிய, பொம்மல் - பொலிவுபெற்ற, முலை - முலைகளையும், பின் - பிற்பக்கத்தில், தாழ் - தாழ்கின்ற, குழல் - கூந்தலையுமுடைய தமயந்தி, உற்றது - அடைந்த துயரத்தை, பேசிடுவாம் - சொல்வாம், எ - று.

க - து. இவ்வாறு நளன் புலம்பித் துன்பப்படுமளவில் தமயந்தி துன்பத்தைச் சொல்லுவாம் என்றார் புராணிகர் என்பதாம். (சo)

[இது தமயந்தி தன் கொங்கைகளைப்
பார்த்துச் சொல்லியது.]

கணைவே ணிகர்கா மருகா ளைபுயத்
தணையா மலென்மார் பகலங் கவரா
விணைமால் வரையென் னவளர்ந் தனிராற்
பணைமா முலைகாள் பயனென் னைகொலாம்.

இ-ள். கணை - மலர்க்கணைகளையுடைய, வேள் நிகர்-மன்மதனை யொத்த, காமர் - அழகிய, காளை புயத்து - நளமகாராஜனுடைய

ஸ்தானங்களில், அணையாமல் - அழுந்தாமல், என் - என்னுடைய, மார்பு அகலம் - மார்பினிடமெல்லாம், கவரா - கவர்ந்துகொண்டு, இணை - இரண்டாகிய, மால் - பெரிய, வரை என்ன - பர்வதங்களென்று சொல்லும்படி, வளர்ந்தனிர் - வளர்வுற்றீர்கள்; பணை - பருத்த, மா - மகத்தாகிய, முலைகாள் - ஸ்தனங்களே, பயன் - (உமக்கும் நமக்கும்) பயன், என்னை - யாது, எ. - று.

க - து. என் கனதனங்களே நளன்புயங்களை யணையாவிட்டாலுங்களுக்குப் பயனென்ன என்றாள் என்பதாம்.

கவரா - செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். பணைமா முலைகாள் என விரிந்துப் பொருட்படப் பயனென்னைகொல் எனலால் மலைபோல் வளர்ந்து பெரியமார்பகலங் கவர்ந்த நும்மைச் சுமந்த எனக்கு நன்மைசெய்ய நினைந்து நளன்மார்பகத்துப் புல்லாவிடினும் நீர் பிறந்ததற்காவது பயன் கருதி யிளைந்திரில்லையாதலால் தனக்கும் பிறர்க்கும் பயன்படாத நும்போலும் வீணரில்லையென்பதாம். (சக)

[இது மனத்தைக் குறித்துச் சொல்லியது.]

முனம்வா னவர்தூ துமொழிந் திடுநாட்
புனைதா ரவன்மார் பிடைபுல் லியுநீ
நினையா துவிடுத் தனைநின் றுருகு
மனமே யினியென் கொல்வருந் துவதே.

இ - ள். முனம் - முன்னே, வானவர் - தேவர்களுடைய, தூது - தூதை, மொழிந்திடுநாள் - சொல்லியநாளில், புனைதாரவன் - நளமகாராஜனுடைய, மார்பிடை - மார்பினிடத்திலே, புல்லியும் - தழுவியும், நீ நினையாது - நீ எவ்வளவுஞ் சிந்தியாமல், விடுத்தனை - அவனைவிட்டு, நின்று - (திகைத்து) நின்று, உருகும் - கரைகின்ற, மனமே - நெஞ்சமே, இனி என்கொல் - இப்போது என்னகாரணமாக, வருந்துவது - வருத்தமடைவது, எ - று.

க - து. தமயந்தி தன் மனதைக் குறித்து என் வருத்தமடைகிறா யென்றாள் என்பதாம்.

சமயம் வந்தகாலத்திற் பெறவேண்டுவதைப் பெறாமல்விடுத்துப் பின் வருந்துவதிற் பயனில்லையாயினும் பிறர் நகைக்கப்படுவா யென்பது கருத்து. (சஉ)

[இது கண்களைக் குறித்துச் சொல்லியது.]

நன்றா ரொழுகுவே னளன்மார் பகலந்
தன்றா ரணையிற் றழுவுங் கனவில்

லெண்ணா துவிழித் துவிடுத் திடுமென்
கண்ணே யிஃதென் கொல்கலுழ் வதுவே.

இ - ள். நண்ணார் - பகைவர், தொழு - துதிக்கின்ற, வேல் - வேலையேந்திய, நளன் - நளமகாராஜனுடைய, மார்பகலம் - மார்பினை, தண்ணார் - குளிர்ச்சிபொருந்திய, அணையில் - மெத்தையில், தழுவும் - தழுவுகின்ற, கனவில் - சுவப்பனத்தில், எண்ணாது - ஆலோசியாமல், விழித்து - விழிந்துக்கொண்டு, விடுத்திடும் - விட்டு விடுகின்ற, என் கண்ணே-என் கண்களே, இஃது என்கொல் - இது என்ன காரணமாக, கலுழ்வது - கலங்குவது, எ - று.

க - து. என் கண்களே! நான் சொப்பனத்தில் நளனைக்கூடும் போது நீங்கள் விழித்தழுத தென்ன என்றாள் என்பதாம்.

பிறராலன்றி நின்றாற் செய்யப்பட்ட குற்றத்துக்கு நீயே வருந்துவது பேதைமையென்பது கருத்து. (௬௩)

[இதனால் சந்திரனை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

துதைநாண் மலர்வா ளிதுரந் துதுரந்
தெதிர்வே ளுயிர்கொல் லுதலெண் ணிலைநீள்
கதிர்வா ணிலவா ரழல்கான் றெழுவெண்
மதியே யெனைநீ யும்வருத் துதியோ.

இ - ள். துதை - நெருங்கிய, நாள் மலர் - புதிய மலராகிய, வாளி - பாணங்களை, துரந்து துரந்து - விடுத்து விடுத்து, எதிர் - எதிர்க்கின்ற, வேள் - மன்மதனானவன், உயிர் கொல்லுதல் - உயிரைக்கொல்லுதலை, எண்ணிலை - நினைத்தாயில்லை; நீள்-நீண்ட, கதிர் - கிரணங்களினுடைய, வாள் - ஒள்ளிய, நிலவு - பிரகாசமாகிய, ஆர் அழல்-மிகுந்ததீயை, கான்று - வீசிக்கொண்டு, எழு-தோன்றுகின்ற, வெள் மதியே - வெள்ளியசந்திரனே, எனை - என்னை, நீயும் - நீயும், வருத்துதியோ - வருத்துகின்றனையோ, எ - று.

க - து. சந்திரனே! மன்மதன் பாணத்தா லென்னைக் கொல்லுதலை நினைக்கவில்லை, நீயும் வருத்துகின்றாய் என்றா ளென்பதாம்.

என்னுயிரை வருத்துவதற்கு மன்மதனொருவனே போதும் அப்படியிருக்க நீயும் அத்தொழிலின் முயல்வது அரைக்கப்பட்டதை அரைப்பதுபோல் பயனில்லையென்பது கருத்து.

[இது நளனைக்குறித்து சொல்லியது.]

வேளாண் மைசெலுத் தல்விலக் கிலையாய்
வாளா வுறைகின் றதுமன் னறமோ

தோளாண் மையின்மன் னர்தொழுஞ் சுடர்வேற்
காளா யெனதா ருயிர்கா வலனே.

இ - ள். தோள் ஆண்மையின் - புயவலிமையினால், மன்னர் தொழும் - அரசர்களால் வணங்கப்பட்ட, சுடர் வேல் காளாய் - ஒளிபொருந்திய வேலைத்தரித்த காளையை யொத்தவனே, எனது - என்னுடைய, ஆர் - நிறைந்த, உயிர் - உயிருக்கு, காவலனே - அரசனாகிய நளமகாராஜனே, வேள் - மன்மதனானவன், ஆண்மைசெலுத்தல் - (உனைவிழைந்த வென்னிடத்துப்) பராக்கிரமஞ் செலுத்துவதை, விலக்கிலையாய் - ஒழிக்காதவனாய், வாளா உறைகின்றது-சும்மாவிருக்கின்றது, மன் அறமோ - அரசரது தருமமோ, எ - று.

க - து. நளமகாராஜனே! மன்மதன் பாணஞ் செலுத்துதலை நீ விலக்காதிருக்கிறது இராஜதருமமோ என்றாள் என்பதாம்.

தோளாண்மையின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு மூன்றாவதன் கருவிப்பொருளில் வந்தது. மன்னர்தொழும் என்பது மன்னரால் தொழப்பட்ட என மூன்றுவதனுருபு விரிக்கப்பட்டுத்தொழப்பட்ட எனச்செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. தன்றேயத்திலுள்ளவர் தீங்குசெய்யின் அதை விலக்கிக்காப்பது அரசர் தருமமாகும்; அங்ஙனமாதலின் நின்னையே யடைக்கலமாயுள்ள என்னிடத்து வேளானவன் தனது ஆண்மையைச் செலுத்தினால் அதை நீ விலக்கி அருள்செய்யாயாயின் நின்னறமிழுக்குற்றதுமன்றி நினக்கும் பழிப்புண்டாகும் என்றதாம். (சஙு)

[இது இரங்குதல், நெய்தற்றிணைக்குரியபொருளாதலால் அங்குள்ள பொருள்களைக்குறித்துச் சொல்லுதல்.]

இடரோ தவிரா திரவோ விடியா
தடல்வே லவர்தா மருளோ புரியார்
குடவால் வளையே குருகே திரையே
கடலே கழியே யிதுவோ கடனே.

இ - ள். குட வால் வளையே-குடம்போன்ற வெள்ளியசங்கே, குருகே - நாரையே, திரையே - அலையே, கடலே - சமுத்திரமே, கழியே - கழிநிலமே, இடரோ - துன்பமோ, தவிராது - நீங்காது; இரவோ - இராத்திரியோ, விடியாது - விடியமாட்டாது; அடல் - கொலைசெய்கின்ற, வேலவர்தாம் - வேற்படையையுடைய நளமகாராஜர், அருளோ புரியார் - கருணைசெய்யார், (ஆதலால்) இதுவோ - இப்படி வருந்துவதோ, கடன் - என்கடன், எ - று.

க - து. தமயந்தி கழிக்கரைப் புலம்பல் என்பதாம்.

ஓ - இரக்கப் பொருளிலும், ஏ - எண்ணிலும் வந்தன. இவ்வுலகில் அனேக அரசர் அனேக மங்கையர் வருத்தத்தை நீக்கி அளித்தனரெனக் கேட்டதன்றி; இவர் கொலைசெய்கின்ற வேலையுடையவராகையால் அங்ஙனஞ் செய்திலர்போலும். ஆதலின் எனதிடர் நீக்கிற்றில்லை; அதனோடு போக்குதலின் இரவும் நெடுங்காலம் போல விடிந்ததில்லை; நீவிர் இங்ஙனமுற்றுப் பிரிந்துவருந்துபவர்க்கு ஒப்புரவுசெய்யுங் நடப்பாடு பெற்றுடையீராகலின் இவ்வரசர்க்குச் சொல்வீராகவென்றபடி. நீரால் எதிர்ப்புற்ற எரியைக் காக்கும்பொருட்டுப் போக்குவிடுவதுபோல் மிக்க துன்பமுற்றவர்கள் பிறரோடு அதனை உரையாவிடின் ஆற்றாராதலின் இவளுந் தன் றுன்பத்தை இங்ஙனஞ் சொல்லினளென்க. (௪௯)

> கழலா வளையுங் கனலா மதியு
> முழலா மனனும் பெறுநா ளுளதோ
> மழவே றனையான் மருவா விரகக்
> தழலா லுருகுந் தமியே னினியே.

இ - ள். மழ ஏறு அனையான் - இளவேற்றையொத்த நளமகாராஜன், மருவா-பொருந்தப்பெறாத, விரகம் தழலால் - விரகாக்கினியால், உருகும் - கரைகின்ற, தமியேன் - தனியேனாகியநான், இனி - இனி, கழலா வளையும் - கழலாத வளையல்களையும், கனலா மதியும் - சுடாத சந்திரனையும், உழலா மனனும்-கவலைப்படாத மனத்தினையும், பெறும் நாள் - பெற்றுக்கொள்ளு நாள், உளதோ - உண்டாகுமோ, எ - று.

க - து. நான் கழலாத வளையல்களையும் சுடாத சந்திரனையுங் கவலைப்படாத நெஞ்சையும் பெறுநாளுண்டோ என்றாள் என்பதாம்.

ஒரு ஆடவர்மாட்டு விருப்புவைத்த மடவார்க்கு அந்நினைப்புமுற்றுவிடின் அன்னம்நீர் முதலியவற்றின் விருப்பில்லாமையால் தேகம் வாடும்; அவ்வாட்டத்தாற் கைவளை முதலியவுங் கழலும்; மதியங் குளிர்ச்சிசெய்து புணர்ச்சியுண்டாக்கி அதுகிடைக்கப் பெறாமையாற் சுடும்; இங்ஙனமாதலின் மனம் விரும்பியதை யடையப் பெறாமையாற் பல நெறிகளினுஞ்சென்று புகுந்து சுழன்றுழலும்; இவ்வாறாதலின் நளனைப்பெறாத தமயந்தியும் 'கழலாவளையுங் கனலாமதியுமுழலாமனனும் பெறுநாளுளதோ' என்றாள். நளனைப்பெற்ற நாளில் அவ்வாறுமென்பது கருத்து. ஓ-இரக்கப்பொருளில் வந்தது. (௫௰)

அள்ளிக் கொளலா மிருளூ டடர்வேள்
கள்ளத் தெனதா ருயிரோ கவர்வான்
விள்ளற் கரிதாம் விரகந் தமியே
னுள்ளத் துறைவா யுணர்கிற் றிலையோ.

இ-ள். விள்ளற்கு அரிதாம்-சொல்லுதற்கரிதாகிய, விரகம்-விரகத்தையுடைய, தமியேன் - தனியேனாகிய என்னுடைய, உள்ளத்து உறைவாய் - மனத்திலிருக்கின்ற நளனே, (நீ) அள்ளிக்கொளலாம்-(கையால்) அள்ளிக்கொளலாம்படியிருந்த, இருளூடு - இருளினிடத்தில், அடர் வேள் - அடர்கின்ற மன்மதனானவன், கள்ளத்து - களவினால், எனது - என்னுடைய, ஆர் - நிறைந்த, உயிர் - ஆவியை, கவர்வான் - அபகரிப்பான், உணர்கிற்றிலையோ-(அக்களவினை) அறிகின்றாயில்லையோ, எ - று.

க - து. என்னுள்ளத் திருக்கின்ற நளனே! மன்மதன் என்னுயிரை அபகரிப்பான், நீ யறியாயோ என்றாள் என்பதாம்.

இருளிற் கரவு செய்பவர்போல் காமனும் என்னுயிரைக் கொள்ளையிட நினைத்திருக்கின்றனன்; காமநோயால் இன்றிரவில் எனதாவி தரிக்கப்பெறாது; அது உனது பொருளாதலால் அதற்கொரு தீங்கு வாராமற் காக்கக்கடவை; காவாவிடில் அதனால் பின்னர்வருந் துன்பம் உனதாம் என நேரிற்சொல்வதற்குப் பெறாத தமயந்தி தன்னுளத்திருக்கும் நளனைவிளித்து மடமையா லிவ்வாறு கூறினளென்க.

[இதனால் சூரியவுதயஞ் சொல்லப்படுகின்றது.]

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

என்றுவெந் துயருற் றிருகணீர் வார விளமுலைத்
துணைபசப் பூர, மின்றிகழ் மருங்குற் செய்யவாய்ப் பேதை
மெலிவொடு வருந்துமெல் லையினின், மன்றலங் கமல
முகைமுறுக் கவிழ்த்து வரிச்சிறைத் தும்பிபாட் டயரத்,
துன்றிருள் பருகும் விரிகதிர் பரப்பிச் சுடரவன் குணபுலத்
தெழுந்தான்.

இ - ள். என்று - இப்படியென்று, வெம்துயர் உற்று-வெவ்விய துன்பத்தையடைந்து, இரு கண் நீர்வார-இரண்டு கண்களினின்றும் நீரொழுக, இளமுலை துணை - இளமைபொருந்திய இரண்டு ஸ்தனங்களும், பசப்பு ஊர - வேறுபட்ட நிறத்தையடைய, மின் - மின்னல்போல், திகழ் - பிரகாசிக்கின்ற, மருங்குல் - இடையினையும், செய்ய

வாய் - சிவந்தவாயினையுமுடைய, பேதை - தமயந்தியானவள், மெலி வொடு - இளைப்போடு, வருந்தும் - வருத்தப்படுகின்ற, எல்லையி னில் - காலத்தில், மன்றல் - வாசனைபொருந்திய, அம் - அழகிய, கமலமுகை - தாமரையரும்பினுடைய, முறுக்கு அவிழ்த்து-முறுக்கவி ழச்செய்து, வரி - இரேகைகள்பொருந்திய, சிறை - சிறகையுடைய, தும்பி - வண்டுகள், பாட்டு அயர - பாட்டைப்பாட, துன்று-நெருங் கிய, இருள் பருகும்-இருளையுண்ணும், விரி கதிர் பரப்பி - விரிகின்ற கிரணங்களைப்பரவச்செய்து, சுடரவன் - சூரியனானவன், குணபுல த்து - கிழக்குத்திசையில், எழுந்தான் - உதித்தான், எ - று.

க - து. தமயந்தி வருத்தப்படுங்காலத்தில் சூரியனுதயமாகினான் என்பதாம்.

இப்படி வருத்தமுற்ற தமயந்தி பின்பு அவ்வருத்தங்களையெல் லாம் நீங்கி மகிழ்வுறுதற்கு நிகழ்வதாகிய சுயம்வரச்சிறப்பைச் சொல் லுதற்கு உரியநாளெய்திய தென்பார், 'பேதை வருந்து மெல்லை யினிற் சுடரவன் குணபுலத் தெழுந்தான்' என்றார். (சுக

[இதனால் விவாக முரசறைதல் சொல்லப்படுகின்றது.]

தணிவருந் துயரிற் கண்படை பெறாது தளர்வொடு வருந்திவெய் துயிர்த்து, மணியெழு வனைய பொற்றடந் திணிதோண் மன்னவர் மனமகிழ் சிறப்பப், பணியர வல் குற் கதிர்முலைத் துவர்வாய்ப் பைந்தொடி வதுவையின் றென்று, வணிநக ரணிகென் றரசர்கோன் பணியா லதிர்குரற் கடிமுர சறைந்தார்.

இ - ள். தணிவு அருந்துயரின் - ஆறுதற்கரிய துன்பத்தினால், கண்படை பெறாது - நித்திரைசெய்யாமல், தளர்வொடு - தளர்ச்சியு டன், வருந்தி - வருத்தப்பட்டு, வெய்து உயிர்க்கும் - பெருமூச்சுவிடு கின்ற, மணி எழு அனைய - மணித்தூண்போன்ற, பொன் - அழ கிய, தடம் - பருத்த, திணி - வலிமைபொருந்திய, தோள் - தோளை யுடைய, மன்னவர்-அரசர்கள், மனம் மகிழ் சிறப்ப-மனமகிழ்ச்சிமிக, பணி அரவு அல்குல்-அராப்படம்போன்ற அல்குலையும், கதிர் முலை - காந்திபொருந்திய ஸ்தனங்களையும், துவர் வாய் - செவ்வாயையும், பைந்தொடி - பசியவளையலையுமுடைய தமயந்தியினது, வதுவை - விவாகம், இன்று என்று - இன்றென்றுசொல்லி, அணி - அழகிய, நகர் அணிக என்று - நகரையலங்கரிக்கவென்று, அரசர்கோன் பணி யால் - அரசர்க்கரசனாகிய வீமராச னேவலினால், அதிர்குரல் - அதிர்

கின்ற வோசையையுடைய, கடி - பெருமைபெற்ற, முரசு - பேரிகை யை, அறைந்தார் - (வள்ளுவர்) அடித்தார்கள், எ - று.

க — து. அரசர்கள் மனங்களிக்க வீமராஜன் கட்டளையினுலே தமயந்திக்கு விவாக மின்றைக்கென்று நகரை யலங்கரிக்கும்படி பே ரிகை யறைந்தார்கள் என்பதாம்.

இராமுழுவதும் நித்திரையின்றி வருந்திய அரசர் மனமகிழ்ச்சி யடைய வீமராசன் ஏவலின்படி வள்ளுவர் முரசறைந்தார். முரசறை தல் "தெள்ளிய வேவலாளர் செப்பலு மகிழ்ந்துபோற்றி, வள்ளுவ னுண்டுபூசி வாலிய வணிந்துவீர, வெள்ளிய வேற்றுப்போர்வை விசிமுர செடுத்துவல்லே, கள்ளிவர் மாலைநாற்றிக் களிற்றினிட் டேறிச்சொல்வான்." இந்தப்பாட்டுமுதல் "இனியன நுகர்ந்துபூசி யெழில்கொள வணிந்து மென்றீங், கனியென மொழிந்து ளின்பங் கனிதர வளவளாவிப், புனிதவிண் ணவர்க்கும்பூசைப் போற்றுக போற்றுகென்று, நனிபல பொருளுஞ்சொல்லி நளிமுர செருக்கினு னே" (பார்க்கவபுராணம் - பட்டாபிடேகப்படலம் — உகூ) என்னும் இந்தப்பாட்டீருகவந்த ஐந்துபாட்டாலும் அறிக. (கூ0)

[இதுமுதல் மூன்றுபாட்டுக்களால் நகாலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

இமிழ்கடி முரசங் கறங்குபே ரோதை யெழினகர் மாந்தர்தஞ் செவியி, னமிழ்துகுத் தென்னத் தவழ்தலு மகி ழ்வுற் றணிவிழ வறுதகோ மறுகிற், கமழ்நறுந் தாற்றுப் பாளைவாய் கமுகுங் கன்னலுங் கதலியு நடுவா, ருமிழ்கதி ரெறிக்கு மணிநெடுங் கொடிக ளுயர்விசும் பகடுற நிரைப் பார்.

இ - ள். இமிழ் - இனிமையையுடைய, கடி - புதுமைபெற்ற, முரசம் — பேரிகையானது, கறங்கு — ஒலிக்கும், பேரோதை - பே ரொலியானது, எழில் நகர் - அழகிய நகரத்திலிருக்கும், மாந்தர்தம் செவியின்-மனிதர்செவியில், அமிழ்து உகுத்ததுஎன்ன-அமிர்தத்தை யுகுத்ததுபோல், தவழ்தலும்-தவழ்ந்தவளவில், மகிழ்வு உற்று - மகிழ் ச்சியடைந்து, அணி - அழகிய, விழவு அறுத — திருவிழா நீங்காத, கோமறுகில் - இராஜவீதியில், கமழ் - பரிமளிக்கின்ற, நறு - நறிய, தாறு - குலைகளையுடைய, பாளைவாய் - பாளைகள் வாய்ந்த, கமுகும் - கமுகமரமும், கன்னலும்-கருப்பங்கழியும், கதலியும் - வாழைமரமும், நடுவார் - நடுவார்கள்; உமிழ் — கொப்புளிக்கின்ற, கதிர் எறிக்கும் -

கிரணத்தை வீசுகின்ற, மணி - இரத்நங்கள் பதித்த, நெடு கொடிகள் - நெடிய கொடிகளை, உயர் விசும்பு அகடு உற - உயர்ந்த ஆகாச முழுவதும் நிறைய, நிரைப்பார் - வரிசையாகக் கட்டுவார்கள், எ-று.

க-து. மனிதர்கள் மங்கலமுரச சத்தங்கேட்டவளவில் இராஜ வீதிகளில் பாக்குமரங்களும் கரும்பும் வாழையும் நடுவார்கள், ஆகாய மளாவக் கொடிகளுங் கட்டுவார்கள் என்பதாம்.

அரசன் மகட்குச் சுயம்வர மென்றடித்த முரசோதையை அவரவருந் தம்முடைய மகட்கு விவாகமென்று அடித்த ஓதையைக்கேட்டதுபோல மகிழ்ச்சியடைந்தனரென்பது தோன்றச் 'செவியிலமிழ்து குத்தென்னத் தவழ்தலும்' என்றார். எப்பொழுதும் அலங்கரித்திருகின்ற வீதியென்பதுதோன்ற 'அணிவிழவறாதகோமறுகில்' என்றார். இப்பாட்டில் மாந்தரென்னும் எழுவாய் இதுமுதல் பன்னிரண்டு பாட்டுவரையும் நடுவார் நிரைப்பார் முதலிய வெவ்வேறு பயனிலைகளைக்கொண்டு முடிந்தது. (ரு

சேணுயர் பரிதி தழும்புற நிவந்த செழுமணித் தோரண நடுவார், வாணில வொழுகு மணிவடம் புனைந்து வயங்குபொற் றசும்புக ணிரைப்பார், பாணிகர் வரிவண் டுளர்ந்துதே னுகரும் பனிமலர்த் தாமநாற் றிடுவார், தூணுறை கழித்து விரிகதி ரெறிக்குஞ் சுடர்மணிச் செறிதுக டுடைப்பார்.

இ-ள். சேண் உயர் - மிகவுமுயர்ந்த, பரிதி - சூரியனுடைய, தழும்பு உற - தழும்பு பொருந்த, நிவந்த - உயர்ந்த, செழு மணி - செழுமையுள்ள மணிகள் பதித்த, தோரணம் - தோரணங்களை, நடுவார் - நடுவார்கள்; வாள் - ஒளிபொருந்திய, நிலவு - சந்திரிகை, ஒழுகும் - வீசுகின்ற, மணிவடம் - முத்துமாலைகளை, புனைந்து - தரித்து, வயங்கு - பிரகாசிக்கின்ற, பொன் தசும்புகள் - பொற்குடங்களை, நிரைப்பார் - வைப்பார்கள்; பாண் நிகர் - பண்ணையொத்த, வரி-பாட்டுகளையுடைய, வண்டு - வண்டுகள், உளர்ந்து-தடவி, தேன் நுகரும்-தேனுண்ணும், பனி மலர் - குளிர்ச்சி பொருந்திய மலரால்தொடுத்த, தாமம் - மாலைகளை, நாற்றிடுவார் - தொங்கக்கட்டுவார்கள்; தூண் - தூண்களின், உறை கழித்து-உறையை நீக்கி, விரி கதிர் எறிக்கும் - விரியுங் கிரணங்களை வீசுகின்ற, சுடர் - பிரகாசிக்கின்ற, மணி-ரத்நங்களில், செறி - படிந்த, துகள்-புழுதியை, துடைப்பார் - துடைப்பார்கள், எ-று.

க - து. சூரியன் தழும்படையத் தோரணமாலைகள் கட்டுவார்கள், தூண்களி னுறைகளைக் கழற்றித் தூசைத் துடைப்பார்கள் என்பதாம்.

பலகாலெறும்பூரக் கற்குழியுமென்றிருப்பதால் அனேகந் தோரணங்கள் அந்நகரைக் கடக்கும் வரையும் படுதலால் 'பரிதிதழும்புற' என்றார். (ருஉ)

மைந்தரோ டூடி யந்நலார் பரிந்த மணிவடக் குப்பைக ளகற்றிச், சந்தமென் குழம்பா னன்னில மெழுகித் தண்முளைப் பாலிகை யமைப்பார், ரிந்திர தனுவிற் றிகழ்தரச் சாந்து மெரிமணிச் சுண்ணமு மிறைப்பார், நந்தலில் விளக்க மணிசெய்பொற் றகளி நறுநெய்பெய் தொளியுற வெடுப்பார்.

இ - ள். மைந்தரோடு - புருடருடன், ஊடி - பிணங்கி, அந்நலார் - அந்தமகளிர்கள், பரிந்த - நீக்கிய, மணி வடம் குப்பைகள் - முத்துமாலைகளின் குவியல்களை, அகற்றி - நீக்கி, சந்தம் மென்குழம்பால் - சந்தனத்தினுடைய மெல்லியகுழம்பினால், நல் நிலம் மெழுகி - நல்லபூமியைமெழுகி, தண்முளை - குளிர்ச்சிபொருந்திய முளைகளையுடைய, பாலிகை - பாலிகைகளை, அமைப்பார் - வைப்பார்கள்; இந்திரதனுவில் - இந்திரவில்லைப்போல், திகழ்தர-பிரகாசிக்க, சாந்தம் - சந்தனத்தையும், எரி - காந்தியையுடைய, மணி சுண்ணமும் - (அதன்மேல்) ரத்நப்பொடிகளையும், இறைப்பார் - இறைப்பார்கள்; நந்தலில் - கெடுதலில்லாத, விளக்கம் - தீபங்களை, மணிசெய் பொன் தகளி - ரத்நங்களிழைத்த பொன்னகல்களில், நறு நெய் பெய்து - நல்ல நெய்விட்டு, ஒளி உற - ஒளிபொருந்த, எடுப்பார் - ஏற்றுவார்கள், எ - று.

க - து. புருஷர்களோடு பிணங்கிப் பெண்களெறிந்த மணிக் குப்பைகளை நீக்கிச் சந்தனக்குழம்பாலே நிலத்தை மெழுகி முளைப் பாலிகையை வைப்பார்கள், நவமணி விளக்கேற்றுவார்கள் என்பதாம்.

அந்நலார் என்பது ஒரு சொல்லாகக்கொண்டு மாதர் எனப் பொருள் கூறலுமாம். மணிவடக்குப்பைகள் என்பதற்கு நவமணி மாலைகள் எனினுமாம். ஊடுதல் காமத்திற் கின்பமாதலின் 'மைந்தரோடூடி' என்றார். இந்திரதனுவிலெனப் பலநிறமுள்ளதை உவமானமாகக் கூறலால் இங்ஙன மணியென்றதற்கு வெவ்வேறு நிறமுள்ள நவமணியையும் பொருளாகக்கொள்க. அவை: வச்சிரம், வைடூரியம்,

கோமேதகம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், நீலம், பவளம், முத்து என்பனவாம். (ருந)

[இதுமுத லிரண்டுபாட்டால் மாதர் தங்களை
அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

ஐயரி சிதறு மழைமதர் நெடுங்க ணஞ்சன மெழுது
வார் சாந்தத், தொய்யில்வெம் முலையி னிலவுகொப் புளிக்
குந் தூமணிப் பிறைவட மணிவார், மையிருங் கூந்தல் வகிர்
ந்துதேன் முரலு மட்டுவார் பூந்தொடை புனைவார், நையு
நுண் மருங்கிற் கதிரொளி பரப்பு நகைமணி மேகலை புனை
வார்.

இ - ள். ஐ அரி சிதறும்-அழகிய செவ்வரி பரந்த, மழை-குளிர்ச்சிபொருந்திய, மதர் - களிப்பையுடைய, நெடு கண் - நெடிய கண்களில், அஞ்சனம் எழுதுவார்-மையெழுதுவார்கள்; சாந்தம் தொய்யில் - சந்தனக்கோலம் எழுதப்பெற்ற, வெம் முலையின் - விருப்பத்தைச்செய்யுந் தனங்களில், நிலவு - சந்திரிகையை, கொப்புளிக்கும் - உமிழ்கின்ற, தூ - பரிசுத்தமாகிய, மணி - ரத்நங்களிழைத்த, பிறை வடம் - சந்திரஹாரத்தை, அணிவார் - அணிவார்கள்; மை - கரிய, இரு - பெரிய, கூந்தல் - அளகபாரத்தை, வகிர்ந்து - கோதி, தேன் முரலும் - வண்டுகளொலிக்கின்ற, பூந்தொடை - பூமாலைகளை, புனைவார் - சூடுவார்கள்; நையும் - நைகின்ற, நுண் - நுண்ணிய, மருங்கில் - இடையில், கதிர் - கிரணங்களினது, ஒளி பரப்பும் - ஒளியை விரிக்கின்ற, நகை - காந்தியையுடைய, மணி - மணிகளிழைத்த, மேகலை - மேகலாபரணத்தை, அணிவார் - அணிவார்கள், எ - று.

க - து. அந்நகர் மாதர்கள் கண்களுக்கு மையிடுவார்கள், தனங்களில் சந்திரஹாரந் தரிப்பார்கள், கூந்தலில் மாலையணிவார்கள், இடையில் மேகலாபரணந் தரிப்பார்கள் என்பதாம். (ருச)

சில்லரிச் சிலம்பு பஞ்சிமேற் பணிக்குஞ் சீறடி கவின்
செயப் புனைவா, ரெல்வளை திருத்தி யாடமை பணைத்தோ
ளெழில்பெறத் தொயில்வரைந் திடுவா,ரல்லியங் கமல மென்
மலர் கவற்று மடியினி லலத்தக மணிவார், வில்லுமி ழொரு
காழ் முத்தணி யணிவார் விரைகமழ் தெரியல்கை புனைவார்.

இ - ள். சில் - ஆரவாரிக்கின்ற, அரி - பருக்கைக்கல்லையுடைய, சிலம்பு - சிலம்புகளை, பஞ்சிமேல் - பஞ்சின்மேல் மிதிப்பினும், பணிக்கும் - வாடுகின்ற, சீறடி - சிறியபாதங்களில், கவின் செய -

அழகுபொருந்த, புனைவார் - தரிப்பார்கள்; எல் - பிரகாசத்தையுடை ய, வளை - வளையல்களை, திருத்தி - அணிந்து, ஆடமை - வெற்றிய மைந்த, பணைத்தோள் - பருந்தோள்களில், எழில் பெற - அழகுபெ றும்படி, தொயில் - சந்தனக்கோலத்தை, வரைந்திடுவார் - எழுது வார்கள்; அல்லி - அகவிதழையுடைய, அம் - அழகிய, கமலம் மெல் மலர் - தாமரையினது மெல்லியமலரை, கவற்றும்-கவலைப் படுத்தும், அடியினில் - பாதங்களில், அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பை, அணிவார் - பூசுவார்கள்; வில் - ஒளியை, உமிழ் - கொப்புளிக்கின்ற ஒரு - ஒப்பற்ற, காழ் - தேறிய, முத்தணி - முத்துமாலைகளை, அணி வார் - அணிவார்கள்; விரை கமழ் - வாசனை கமழ்கின்ற, தெரியல் - மலர்மாலைகளை, கைபுனைவார் - அலங்கரிப்பார்கள், எ - று.

க - து. பாதங்களிற் சிலம்பணிவார்கள், வளையல்க ளணிந்து தோள்களிற் சந்தனக்குழம்பாற் சித்திர மெழுதுவார்கள், பாதங் களிற் செம்பஞ்சின் குழம்பு பூசுவார்கள், முத்தாரமணிவார்கள், மலர் மாலைகளை யலங்கரிப்பார்கள் என்பதாம். (ருரு)

[இதுமுதல் ஆறுபாட்டுக்களால் அந்நகரிலுள்ளவர் செய்யும் பலவிதச் செய்கைகளுஞ் சொல்லப்படுகின்றன.]

கதிர்மதி தவழு மாடநீண் முகப்பிற் காழகிற் றீம்புகை யிடுவார், முதுமறை வாணர்க் கின்னமு தடுவார் மொய்கதிர் வெயில்கரந் தொழிய, மதிநில வொழுகு நித்திலப் பந்தர் மாணுற வயின்வயி னிரைப்பார், சதிமுறை தவறுத் தண் ணுமை கறங்கக் கூத்தியர் தனித்தனி நடிப்பார்.

இ - ள். கதிர் - கிரணங்களையுடைய, மதி தவழும் - சந்திரன் றவழ்கின்ற, மாடம் - உபரிகையினுடைய, நீள் முகப்பில் - நீண்ட முகப்பினில், காழ் - வயிரம்பொருந்திய, அகில் தீம்புகை - அகிலின தினிய புகையை, இடுவார் - இடுவார்கள்; முது மறை வாணர்க்கு - பிராமணர்களுக்கு, இன் அமுது அடுவார்-இனிய அமுதுசமைப்பார் கள்; மொய் - மொய்க்கப்பெற்ற, கதிர் வெயில் - சூரியனது வெப்ப மானது, கரந்து ஒழிய - ஒளித்துநீங்க, மதி நிலவு ஒழுகும் - சந்திரப் பிரகாசம்வீசுகின்ற, நித்திலம் பந்தர்-முத்துப்பந்தல்கள், மாண் உற- பெருமைபொருந்த, வயின் வயின் - இடங்கடோறும், நிரைப்பார் - செய்வார்கள்; சதி முறை - தாளவொத்தின் முறைப்படி, தவறு - தப்பாமல், தண்ணுமை - மத்தளம், கறங்க - ஒலிக்க, கூத்தியர் - நாடகக்கணிகையர், தனித்தனி - வேறு வேறாக, நடிப்பார் - கூத் தாடுவார்கள், எ - று.

க - து. மாடங்களில் அகிற்புகை யூட்டுவார்கள், பிராமணர்களுக்கமுது சமைப்பார்கள், முத்துப்பந்த லிடுவார்கள், நாடகக்கணிகையர் நடனமாடுவார்கள் என்பதாம்.

'மறைவாணர்க் கின்னமுதடுவார்' எனப் பொதுப்படக்கூறினும் உரிமையால் அந்த நகரத்திலுள்ள அந்தணரெனக் கொள்க. 'தண்ணுமை கறங்க' என்றாரேனும் அவ்வந் நாட்டியங்கட்குரிய உறுப்புகள் பலவுங்கொள்க. 'தனித்தனி நடிப்பார்' என்றதனால் பலவிடங்களினும் பலவிதக்கூத்தும் ஆடுகின்றாரென்பது பெற்றாம். அக்கூத்தாவது-சாந்தி, விநோதம் என இருவகை. சாந்தியாவது-சொக்கம், மெய், அவினயம், நாடகம் என ச. அவற்றுள் சொக்கமாவது - சுத்தநிருத்தம், அது நூற்றெட்டுக் கரணமுடைத்து. மெய்க்கூத்தாவது - தேசி, வடுகு, சிங்களம், இவை அகச்சுவையாகிய முக்குணம் பற்றி எடுத்தலின் அகமார்க்கமெனப்படும். அவினயமாவது-கதைதழுவாது பாட்டுக்களின் பொருள்தோன்றக் கைகாட்டி வல்லபஞ் செய்யுங் கூத்து. நாடகமாவது - கதை தழுவிவருங் கூத்து. இனி விநோதமாவது-குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை என சு. குரவை-கைகோத்தாடுவது, கலிநடம் - கழாய்க்கூத்து, குடக்கூத்து-மாயோனாடல், கரணம் - படிந்தவாடல், நோக்கு - பாரமும் நுண்மையும் ஆயமு முதலாயின. தோற்பாவை-தோலாற் பாவைசெய்தாட்டுவது. இன்னும் வசைக்கூத்தொடு ஏழென்பாருமுண்டு. இவ்வேழும் இழிகுலத்தோ ராடற்குரியன. இவற்றின் விகற்பமனைத்தும் இங்ஙனம் விரிக்கிற் பெருகுமாதலிற் சுருக்கிக் கூறினும். (௫௬)

எழிறிகழ் கன்னிக் கமுகமென் மிடற்றி னிசையெழீஇ
யினிதுபாட் டயர்வார், செழுமலர்க் காந்தண் முகிழ்விரல்
சேப்பத் திவவியா ழின்னரம் புளர்வார், முழுநெறிக் குமுத
முகைநெரித் தெனவாய் முகிழ்த்தருங் குரவைகள் புரிவார்,
கொழுமலர் வளைக்கை கொட்டிவே னெடுங்கட் கோதையர்
குரவையாட் டயர்வார்.

இ - ள். எழில் - அழகானது, திகழ்-பிரகாசிக்கின்ற, கன்னி - இளமைபொருந்திய, கமுகம் மெல் மிடற்றில்-கமுகையொத்த மெல்லிய கண்டத்தில், இசை எழீஇ - இசையை யெழுப்பி, இனிது - இனிமையாக, பாட்டு அயர்வார் - பாட்டைப் பாடுவார்கள்; செழு - வளம்பொருந்திய, மலர்-மலரையுடைய, காந்தள் முகிழ் விரல் - காந்தளரும்பையொத்த விரல்கள், சேப்ப - சிவக்க, திவவு - வலிக்கட்

டையுடைய, யாழ் - வீணையினுடைய, இன் நரம்பு - இனியநரம்பை, உளர்வார் - தடவுவார்கள்; முழுநெறி - முழுநெறிப்பையுடைய, அமுதமுகை - செவ்வல்லியரும்பை,நெரித்தென - நெரித்ததுபோல, வாய் முகிழ்த்து - வாயைக் குவித்துக்கொண்டு, அரு-அரிய, குரவைகள் புரிவார் - குரவைப்பாடலைப் பாடுவார்கள்; கொழு மலர்-கொழுமையுள்ள தாமரை மலர்போன்ற, வளை கை கொட்டி - வளையலையணிந்த கைகளைக்கொட்டி, வேல் நெடு கண்-வேல்போன்ற நெடிய கண்களையுடைய, கோதையர் - மாதர்கள், குரவை ஆட்டு அயர்வார் - குரவைக் கூத்தாடுவார்கள், எ - று.

க - து. பெண்கள் பாடுவார்கள், வீணை வாசிப்பார்கள், குரவைப் பாடல் பாடுவார்கள், கைகளைக் கொட்டிக் குரவைக்கூத் தாடுவார்கள் என்பதாம்.

குரவையாவது 'காமமும் வென்றியும் பொருளாகக்கொண்ட பாடலைப் பாடிக்கொண்டு எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின் மரேனும் மாதர்கை பிணைத்தாடுவதாம். (௫எ)

வெண்மதிக் கதிர்நூற் றனையவான் கவரி நெற்றி
வெங் கலினவாம் புரவி, பண்ணுறுத் திடுவார் குருதிதோய்
கோட்டுப் படுமதக் கலுழிவெஞ் சினத்த, வண்ணன்மால்
யானை கவினுறப் பருமித் தணிவிழா மறுகிடைக் கொணர்
வார், மண்ணமை கொடிஞ்சிக் கூந்தன்மான் றடந்தேர்
வானவ ரூர்தியிற் றருவார்.

இ - ள். வெள் மதி - வெள்ளிய சந்திரனுடைய, கதிர் - கிரணங்களை, நூற்றனைய - நூற்றதையொத்த, வான் - மேலாகிய, கவரி - சாமரையணிந்த, நெற்றி - நெற்றியையுடைய, வெம்-வெய்ய, கலினம் - கடிவாளம் பூண்ட, வாம் - தாவுகின்ற, புரவி - குதிரைகளுக்கு, பண் உறுத்திடுவார் - கல்லணை சேர்ப்பார்கள்; குருதி தோய் - உதிரந்தோய்ந்த, கோட்டு - கொம்பையுடைய, படு - உண்டாகின்ற, மதம் கலுழி - மதப்பெருக்கையும், வெம் சினத்த-வெவ்விய கோபத்தையும், அண்ணல் - பெருமையினையும், மால் - மயக்கத்தினையுமுடைய, யானை-யானையை, கவின் உற - அழகுபொருந்த, பருமித்து- அலங்கரித்து, அணி - அழகிய, விழா - திருவிழாவையுடைய, மறுகிடை - வீதியிலே, கொணர்வார் - கொண்டுவருவார்கள்; மண்ணமை - ஒப்பனையமைந்த, கொடிஞ்சி - மேன்மொட்டையும், கூந்தல் மான் - புறமயிரினையுடைய குதிரைகளையுமுடைய, தடம் தேர்-விசா

லம்பொருந்திய தேர்களை, வானவர் ஊர்தியில் - தேவர் விமானங்கள்போல், தருவார் - கொண்டுவருவார்கள், எ - று.

க - து. குதிரைகளுக்குக் கல்லணை யிடுவார்கள், யானைகளை யலங்கரித்து வீதியிற் கொண்டுவருவார்கள், தேர்களை யலங்கரித்துக் கொண்டுவருவார்கள் என்பதாம். (௫அ)

இருங்கடற் றோன்று மழகதி ரேய்க்கு மெரிமணிச்
சிவிகையின் வருவார், சுரும்புவீழ்ந் தரற்ற மும்மதம்
பொழியுஞ் சூழிமால் யானையிற் புகுவார், திருந்துமொண்
சுழிய கூந்தன்மான் றேரிற் சேட்டிளம் பரிதியிற் செல்வார்,
பொருந்தமண் டோயா தகல்விசும் பகவும் பொங்குளைப் புர
வியிற் போவார்.

இ - ள். இரு கடல் தோன்றும் - பெரியகடலிலுதிக்கின்ற, மழ கதிர் ஏய்க்கும் - இளஞ்சூரியனையொக்கும், எரி மணி-பிரகாசிக்கின்ற ரத்நங்கள் பதித்த, சிவிகையின் - தண்டிகையில், வருவார் - வருவார்கள்; சுரும்பு - வண்டுகள், வீழ்ந்து - விரும்பி, அரற்ற - ஒலிக்க, மும் மதம் பொழியும் - மும்மதங்களையும் பொழிகின்ற, சூழி - முகபடாத்தையுடைய, மால் - பெரிய, யானையில் புகுவார் - யானையின்மேல் வருவார்கள்; திருந்தும் - திருந்தப்பெற்ற, ஒள் - விளங்குகின்ற, சுழிய - சுழிகளையுடைய, கூந்தல் மான் - புறமயிரினையுடைய குதிரைகட்டிய, தேரில்-இரதத்தில், சேட்டு இளம்பரிதியில்-மிகுந்த இளமையையுடைய சூரியனைப்போல், செல்வார் - செல்வார்கள்; பொருந்த - பொருந்தும்படி, மண் - பூமியிலே, தோயாது - தோயாமல், அகல் விசும்பு - அகன்ற ஆகாயத்தில், அகவும் - ஆடுகின்ற, பொங்கு-மிகுந்த, உளை - புறமயிரினையுடைய, புரவியில் - குதிரையின்மேல், போவார் - போவார்கள், எ - று.

க-து. சிலர் அரதநச் சிவிகைகளில் வருவார்கள், சிலர் யானைகளில் வருவார்கள், சிலர் தேர்களிற் போவார்கள், சிலர் குதிரைகள் மேற் போவார்கள் என்பதாம்.

திருந்துமொண் சுழிகளாவன - கழுத்தி னடுவிலேனும் கணைக்காலிலேனும் மேலுதடு முன்னங்கால் கன்னம் முழங்கால் ஆகிய இவைகளிலேனும் இரட்டைச் சுழிகளிருக்கின் ஆகாதனவாம். இவைகளின்றிக் கழுத்தில் வலஞ்சுழித்திருப்பது தேவமணியாம். முகம், தலை, மூக்கு, மார்பு இந்நான்கிடத்திலும் இரண்டிரண்டு சுழிகளும், நடுநெற்றி பிற்பக்கம் இவைகளில் ஒவ்வொரு சுழியும் இருக்கின் நல்

லனவாம். சிரீவற்சமென்னுங் குதிரைக்கு மார்பிலேந்து சுழியிருக்கும். நெற்றியில் இருசுழியேனும் முச்சுழியேனு மிருக்கினும் நான்கு சுழி வலம்புரியாயிருக்கினும் இரண்டுசுழி முன்னங்காலடியி லிருக்கினும் நல்லனவாம். இவற்றின் விகற்பமெல்லாம் அடலீலாவதியென்னும் வடநூலிற்காண்க. (கூ௯)

நளிர்மதி தவழு மலையவெற் புயிர்த்த நறுங்குறடுரிஞ்சுபூந் தேய்வை, தளர்கொடி மருங்கு லலமரப் பணைத்த தரளமென் முலைமுகட்டணிவா, ரளியின மோச்சி வள்ளவாய்த் தேற லமிர்தென நுகர்ந்துளங் களிப்பார், துளிமதுப் பிலிற்றிக் காவதங் கமழுந் தூமலர்ச் சிகழிகை புனைவார்.

இ - ள். நளிர் - குளிர்ச்சிபொருந்திய, மதி தவழும் - சந்திரன் றவழ்கின்ற, மலைய வெற்பு - பொதியமலை, உயிர்த்த - பெற்ற, நறு குறடு - நறிய சந்தனக்கட்டைகளால், உரிஞ்சு - தேய்த்துண்டாக்கின, பூ தேய்வை - அழகிய குழம்பினை, தளர் - தளரப்பெற்ற, கொடி—வல்லிபோன்ற, மருங்குல் - இடையானது, அலமர — சுழற்சியடைய, பணைத்த - பருத்த, தரளம் - முத்துவடமணிந்த, மெல் முலை முகட்டு — மெல்லிய முலைகளின்மேல், அணிவார் - பூசுவார்கள்; அளியினம் ஓச்சி — வண்டுக்கூட்டங்களை யோட்டி, வள்ளம்வாய் தேறல்-கிண்ணத்திலிருக்குந் தேனை, அமிர்து என நுகர்ந்து—அமிர்தம்போலுண்டு, உளம் களிப்பார் - மனமகிழ்வார்கள்; துளி - துளிகளையுடைய, மது பிலிற்றி - தேனையொழுக்கி, காவதம் — காததூரமளவும், கமழும் — மணக்கும், தூ — பரிசுத்தமாகிய, மலர் - மலராற் றொடுக்கப்பெற்ற, சிகழிகை - மாலைகளை, புனைவார் - தரிப்பார்கள், எ - று.

க - து. சிலபெண்கள் சந்தனங்களைக் கனதனங்களிற் பூசுவார்கள், சிலபெண்கள் தேனுண்டு களிப்பார்கள், சிலபெண்கள் மாலைகளைத் தரிப்பார்கள் என்பதாம்.

'நுகர்ந்துளங்களிப்பார்' என மேல்வருதலால் தேறல் என்பதற்குக் கள் எனப்பொரு ளுரைத்தலுமாம். (கூ0)

நிழலொடு கறுவிப் பாகெறிந் தூன்பெய் பிணத்தொடு பழகுகூன் பிறைக்கோட், டழிகவுட் கடாத்த நறுகண்மால் யானை யகற்றுமி னெயிற்புறத் தென்பார், மழைமதர் நோக்கி மன்றல்செய் காலை வல்லவர் கன்னலிற் றெரிவார், விழைவொடு மகிழ்வுற் றளவளாய்ப் புகுந்தோர் வியப்புற விருந்தெதிர் கொள்வார்.

இ - ள். நிழலொடு - (தங்கள்) நிழலொடு, கறுவி - கோபித்து, பாகு எறிந்து - பாகனைவீசி, ஊன் பெய் - தசையைப் பெய்கின்ற, நிணத்தொடு - நிணத்தோடு, பழகு - பழகாநின்ற, கூன் பிறை கோட்டு - வளைவுபொருந்திய பிறைபோலுங் கொம்பினையும், அழி - அழிகின்ற, கவுள் - கதுப்பினிலொழுகுகின்ற, கடாத்த - மதத்தினையுமுடைய, தறுகண் - அஞ்சாத, மால் யானை - பெரியயானையை, எயில் புறத்து - மதிற்புறத்தில், அகற்றுமின் என்பார் - நீக்குங்களென்பார்கள்; மழை மதர் நோக்கி - தமயந்தியினது, மன்றல் செய் காலை - விவாகஞ்செய்யும் பொழுதை, வல்லவர் - (கணிதநூலில்) வல்லமையுடையவர்கள், கன்னலில் - நாழிகை வட்டிலால், தெரிவார் - தெரிந்துகொள்வார்கள்; விழைவொடு - விருப்பொடு, மகிழ்வுற்று - மகிழ்ச்சியையடைந்து, அளவளாய் - கலந்து, புகுந்தோர் - அடைந்தவர்கள், வியப்பு உற - அதிசயிக்க, விருந்து - விருந்தாக, எதிர் கொள்வார் - எதிர்கொள்வார்கள், எ - று.

க - து. யானைகளைக் கோட்டையின்புறத் தோட்டென்பார்கள், கணிதநூலில் வல்லவர்கள் தமயந்தி முகூர்த்தகாலத்தளவை நாழிகைவட்டிலா லறிவார்கள், வந்தோரை விருந்துக் கழைப்பார்கள் என்பதாம்.

நாழிகை வட்டிலாவது - ஆழமுள்ள ஒரு பாத்திரத்திலே நீரை நிறைத்து அதிற் பிரமாணப்படி செய்து அடியிற் றுளையிட்டிருக்கும் வெண்கல வட்டிலைவிடுக்கில் அத்துளை வழியே நீர் உள்ளே நிரம்பி அமிழ்வது ஒருநாழிகையெனக் கொண்டு காலத்தை யளவிடுதற்குரிய கருவியெனக்கொள்க. மகிழ்ச்சி விருப்பினது காரியமாம். நிணம் - கொழுப்பு. (௬௯)

[இதனால் அன்னந்தருதல் சொல்லப்படுகின்றது.]

விரைகமழ் முல்லை முகைநிக ரடிசில் வெள்ளியங் கிரியெனக் குவிப்பார், கருனையுங் கன்னற் கட்டியுந் தேமாங் கனிகளும் வயின்வயி னிரைப்பார், திரைபொரு கடலி னறுநெயும் பாலுந் தெருத்தொறும் பெருக்கெடுத் தோட, வெரிபசும் பொன்னங் கலம்பல பரப்பி யிரவலர்க் கின்னமு தளிப்பார்.

இ - ள். விரை - வாசம், கமழ் - மணக்கின்ற, முல்லை முகை நிகர் - முல்லையரும்பையொத்த, அடிசில் - சோற்றை, வெள்ளியங் கிரி என - வெள்ளிமலைபோல், குவிப்பார் - குவிப்பார்கள்; கருனை

யும் - பொரிக்கறியும், கன்னல் கட்டியும் - சருக்கரைக்கட்டியும், தேமா கனிகளும் - தித்திப்பு மாம்பழங்களும், வயின் வயின் - இடங்கள்தோறும், நிரைப்பார் - ஒழுங்குபடவைப்பார்கள்; திரை பொரு-அலைமோதுகின்ற, கடலின் - கடல்போல், நறு நெயும் - நறியநெய்யும், பாலும் - பாலும், தெருத்தொறும் - தெருக்கடோறும், பெருக்கு எடுத்து ஓட - அதிகரித்தோட, எரி - பிரகாசிக்கின்ற, பசு பொன் அம் கலம் - பசியபொற்கலங்களை, பல - அனேகமாக, பரப்பி - வைத்து, இரவலர்க்கு - யாசகர்க்கு, இன் அமுது - இனியசுவையுள்ள அமுதை, அளிப்பார் - கொடுப்பார்கள், எ - று.

க - து. சாதங்களை வெள்ளிமலைபோற் குவிப்பார்கள், பொரிக்கறிகளையும் வெல்லக்கட்டிகளையு மாங்கனிகளையும் இடமெங்குநிறைப்பார்கள், தெருக்களில் நெய்யும்பாலும் பெருக்கெடுத்தோடப்பொற்கலங்களில் யாசகருக் கமுதளிப்பார்கள் என்பதாம்.

அமுதுக்கினிமையாவது தகுதியாகக்கலந்து கூட்டிய அறுசுவைகளாம். அவை தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, துவர்ப்பு, உறைப்பு என ஆறு. இவை செயற்கையால் பலவகைப்படும். அவை "நெய்விரவன்னஞ் சுத்தவெண் சொன்றி நிகழ்ததியோதனம் பாற்சோறு, நைவளர் மிளகின் வல்சிமென் கடுகி னமலைதண் ணிலவங்கப்பொம்மல், செய்வள ரெள்ளுப் போனகங்கட்டிச் செழும்பத மாதி மூரல்களும்" இதனாற் காண்க. (கூஉ)

[இதனால் தேவர் மனிதர் நாகர் செய்கை சொல்லப்படுகின்றது.]

வெள்ளியங் கிரியில் விஞ்சையர் தொகுவார் விண்ணவ ரெண்ணிலர் புகுவா, ரள்ளிலை நெடுவேலரசர்வந் திருப்பா ரந்தண ரளப்பிலர் திரிவா, ரொள்ளொளி விரிக்கும் பருமணிச் செஞ்சூட் டுரகர்வெள் ளிடையறச் செறிவார், பள்ளநீர்க் கடல்சூ ழெழுபெருந் தீவி னுறைபுநர் பரிவினிற் றெருகுவார்.

இ - ள். வெள்ளி அம் கிரியில் - கைலாசத்திலிருக்கின்ற, விஞ்சையர் - வித்தியாதரர்கள், தொகுவார் - கூடுவார்கள்; விண்ணவர் - தேவர்கள், எண்ணிலர் - அளவில்லாதவர், புகுவார் - நுழைவார்கள்; அள் இலை - (மாமிசத்தை) அள்ளிக்கொள்கின்ற இலையையுடைய, நெடு வேல் - நெடியவேலையேந்திய, அரசர் - அரசர்கள், வந்திருப்பார் - வந்து தங்குவார்கள்; அந்தணர் - பிராமணர்கள்,

அளப்பிலர் - அளவற்றவர்கள், திரிவார் - உலாவுவார்கள்; ஒள் ஒளி- மிகுந்தவொளியை, விரிக்கும்-விரிக்கின்ற, பரு மணி - பரியமணி யினையுடைய, செம் சூட்டு - சிவந்தசூட்டினையுடைய, உரகர் - நாகர் கள், வெள்ளிடை அற -(எங்கும்)வெளியிடமில்லாமல், செறிவார் - நெருங்குவார்கள்; பள்ளம் - ஆழம்பொருந்திய, நீர் - நீரையுடைய, கடல் சூழ் - கடலாற்சூழப்பெற்ற, எழு பெருந்தீவில் - பெரியசத்த தீவில், உறையுனர் - வசிப்பவர்கள், பரிவினில் - அன்பினால், தொகு வார் - கூடுவார்கள், எ - று.

க - து. வித்தியாதரர்கள் கூடுவார்கள், அளவிலாத் தேவர்க ளும் இராஜாக்களும் வந்து தங்குவார்கள், அளவிலாப் பிராமணர்கள் திரிவார்கள், நாக வேந்தர்கள் நெருங்குவார்கள், சப்ததீவாரும் கூடு வார்கள் என்பதாம். (கூஈ)

[இதனால் மாதரிசைப் பாட்டின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

பொன்னவிர் திதலைப் பொம்மல்வெம் முலையார் புனை மணி மாடக முறுக்கி, யின்னரம் புளரும் பாடல்கேட் டுருகி யேழிசை மகரயாழ் பண்ணிக், கின்னர மிதுனம் பாட லுக் குடைந்து கீழ்ப்படு மிளிவர நோக்கி, மின்னகு சுடர் வேல் விஞ்சையர் மகளிர் வியப்பொடு தலைபணித் திடுவார்.

(இ - ள்.) பொன் - பொன்போல், அவிர் - பிரகாசிக்கின்ற, திதலை - தேமல் பரந்த, பொம்மல் - பொலிவினையுடைய, வெம் - விருப்பத்தைச் செய்கின்ற, முலையார் - ஸ்தனங்களையுடைய மாதர் கள், புனை மணி - ரத்நங்கள்பதித்த, மாடகம் - முறுக்காணிகளை, முறுக்கி - திருகி, இன் நரம்பு - இனியநரம்பை, உளரும் - தடவுகி ன்ற, பாடல் கேட்டு - பாடலைக்கேட்டு, உருகி - மனங்கரைந்து, ஏழ் இசை - ஏழிசைகளையுடைய, மகரயாழ் - மகரயாழை, பண்ணி - செய்து, கின்னரமிதுனம்-கின்னரமிதுனங்கள், பாடலுக்குடைந்து- அப்பாட்டுக்குத் தோற்று, கீழ்ப்படும் - தாழ்வுபடுகின்ற, இளிவரல் - இழிவை, நோக்கி - பார்த்து, மின் நகு - ஒளியை வீசுகின்ற, சுடர் வேல் - காந்திபொருந்திய வேலையேந்திய, விஞ்சையர் மகளிர் - விஞ் சையர் மாதர்கள், வியப்பொடு - ஆச்சரியத்தோடு, தலை - தலையை, பணித்திடுவார் - சாய்ப்பார்கள், எ - று.

க - து. கனதனங்களையுடைய பெண்கள் வீணைவாசிக்கும் பாடலைக் கேட்டுருகி வித்தியாதர மாதர்கள் தலைவணங்குவார்கள் என்பதாம்.

கின்னரமிதுனம் முலையார் பாடல்கேட்டுருகி யாழ்பண்ணி
உடைந்து கீழ்ப்படி மிளிவரனெக்கியெனக்கூட்டுக. ஏழிசையாவன-
குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன
வாம். இவை பிறக்குமிடம் முறையே கண்டம், நா, அண்ணம், தலை,
நெற்றி,மார்பு,மூக்கு என எ. இவையே ஏழ்சுரமெனவும்வீணையில் ஏழ்
நரம்பெனவுஞ் சொல்லுவர். இவற்றினிசையுவமை-மயில், இடபம்,
ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை, என எ. அதிதேவதைகள்-
விசுவாமித்திரன், சமதக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசி
பன், ஈசன், என எ. யாழாவது-பேரியாழ், மகரயாழ், செங்கோட்டி
யாழ், சகோடயாழ் என ச. இவற்றுள் பேரியாழிற்கு நரம்பு-உக,
மகரயாழிற்கு-கக, சகோடயாழிற்கு-கச. செங்கோட்டியாழிற்கு-
எ. அவற்றுளிது தண்டு, பத்தர், நரம்பு, முறுக்காணி, கொழுவாணி
முதலிய வுறுப்பமைந்த மகரயாழெனக்கொள்க. பண்ணல், பரிவட்
டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்
போக்கு என்னுங் கலைத்தொழிக ளெட்டனுள் பண்ணலாவது
பாடநினைக்கப்பட்ட பண்ணுக்கு இணை, கிளை, பகை, நட்பானநரம்பு
கள் பொருந்தன்மை மாத்திரையறிந்து கட்டுதல், அவ்வாறுசெய்தலின்
'மகரயாழ்பண்ணி' என்றார். "பருந்து மதனிழலும் பாட்டுமெழாலுந்,
திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தனவென்றெண்ணி, விருந்தாகயாழ்
பண்ணி வீணைதான் றோற்பா, னிருந்தா ளிளமயில்போ லேந்திலை
வேற்கண்ணாள்" (சீவகசிந்தாமணி - தத்தையாரிலம்பகம்) எனப்
பிறரும் யாழ்பண்ணியென்றார். கின்னரமிதுனமென்பது ஒரு தேவ
சாதி, அது 'முன்னரசிங்கமதாகியவுணன் முக்கியத்தை முடிப்பான்
மூவுலகின், மன்னரஞ்சுமது சூதனன்வாயிற் குழலினோசை செவி
யைப் பற்றிவாங்க, நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனுந்தந்தம்
வீணைமறந்து, கின்னரமிதுனங்களுந் தந்தங் கின்னரந் தொடுகிலோ
மென்றனரே" (திருமொழி) இதனாலறிக. இசைக்குத் தோற்று
நாணமடைதலால் 'தலைபணித்திடுவார்' என்றார். விஞ்சையரும் பாட
லில் வல்லவரேனும் ஈண்டு நகரமாதருக்கு அம்மாதரைக் கூறினார்.
ஆடவரிசையினும் மாதரிசை விசேடமெனக் கூறுதலுமொன்று.
அன்றி விஞ்சையரு மகளிருமெனக் கொள்ளினும் அமையும். (கச)

[இதனால் கொடிகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

முகிறவழ் குடுமி மாடநீள் கொடிகண் மொய்ம்மணிக்
கதிர்பரப் புதலா, னகர்வயிற் றுவர்வா யரிமதர் மழைக்க
ணன்னுதல் வதுவைவேட் டடைந்த, வகலிரு விசும்பிற்

பாயிருள் பருகு மருக்கர்பன் னிருவருந் தமது, பகலிடைப்
பறந்து திரியுமின் மினியிற் படரொளி மழுங்கினர் திரிவார்.

இ - ள். முகில் - மேகங்கள், தவழ் - தவழ்கின்ற, குடுமி - சிக
ரத்தையுடைய, மாடம் - உபரிகைகளின், நீள் கொடிகள் - நீண்ட
கொடிகள், மொய் மணி-நெருங்கிய ரத்நங்களினது, கதிர் பரப்புத
லால் - கதிர்களை விரித்தலால், நகர்வயின் - அந்நகரத்தில், துவர்
வாய் - செவ்வாயையும், அரி - செவ்வரிபரந்த, மதர் - களிப்பை
யுடைய, மழை - குளிர்ச்சிபொருந்திய, கண் - கண்களையுமுடைய,
நல் நுதல் - தமயந்தியினது, வதுவை-விவாகத்தை, வேட்டு அடை
ந்த - விரும்பிவந்த, அகல் - அகன்ற, இரு - பெரிய, விசும்பில் -
ஆகாயத்தில், பாய் - பரவிய, இருள் பருகும் - இருளையுண்ணும்,
அருக்கர் பன்னிருவரும் - சூரியர்கள் பன்னிரண்டுபேரும், தமது -
தம்முடைய, பகலிடை - பகற்பொழுதில், பறந்து திரியும் - பறந்து
திரிகின்ற, மின்மினியின் - மின்மினிப்பூச்சிகள்போல், படர் ஒளி
படர்கின்றகாந்தியை, மழுங்கினர் - ஒழிந்தவராகி, திரிவார் - தி
வார்கள், எ - று.

க - து. மாடங்களிற் கட்டியகொடிகளி னிரத்நங்கள் அதிக
பிரகாசங்களை விரித்தலால் தமயந்தி விவாகத்திற்குவந்த பன்னிரு
சூரியர்களு மின்மினிபோ லொளிமழுங்கித் திரிவார்கள் என்பதாம்.

அருக்கர் பன்னிருவராவார்-தாத்துரு, சக்கிரன், அரியமன், மித்
திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவேச்சுரன்,
பூடன், சவித்திரு, துவட்டன் எனக்கொள்க. இவர்கள் ஒவ்வொரு
வரே அதிகப் பிரகாசமுள்ளவர், அப்படியிருக்க ஏககாலத்திற் பன்
னிருவரும் பகலிற் பறக்கு மின்மினிபோல மழுங்கினரெனில் அந்
நகரிற் கட்டிய கொடிகளின் மணிப்பிரகாசஞ் சொல்லவேண்டுவ
தில்லை யாயிற்று. [அருக்கர் மின்மினியிற் றிரிவாரெனலால் உவமை
யணி.] (சுரு)

விண்ணகத் தமர ரளப்பில ரென்கோ விஞ்சைய ரளப்
பில ரென்கோ, மண்ணகத் தரச ரளப்பில ரென்கோ வனி
தைய ரளப்பில·ரென்கோ, பண்ணமை களிறு கூந்தன்மான்
றடந்தேர் பதாதிமற் றளப்பில வென்கோ, வெண்ணிமற்
றுரைக்கி னித்துணை யென்ன வெட்டமனோர்க் கியம்புமா றரி
தே.

இ - ள். விண்ணகத்து அமரர்-விண்ணுலகத்திருந்துவந்த தேவர்
கள், அளப்பிலர் என்கோ-அளவிலரென்று சொல்லுவேனோ, விஞ

சையர் - வித்தியாதரர்கள், அளப்பிலர் என்கோ - அளவிலரென்று சொல்லுவேனோ; மண்ணகத்து அரசர் - மண்ணுலகத்திருந்துவந்த அரசர்கள், அளப்பிலர் என்கோ-அளவிலரென்று சொல்லுவேனோ; வனிதையர் - மங்கையர்கள், அளப்பிலர் என்கோ - அளவிலரென்று சொல்லுவேனோ; பண் அமை-ஒப்பனையமைந்த, களிறு - யானைகள், கூந்தல் மான்-புறமயிரினையுடைய குதிரைகள், தடம் தேர்-விசாலம் பொருந்தியதேர்கள், பதாதி - சேனைகள், (ஆகிய இவைகள்) அளப்பில என்கோ - அளவில்லனவென்று சொல்லுவேனோ; எண்ணி - சிந்தித்து, உரைக்கின் - சொன்னால், இத்துணை என்ன - இவ்வளவென்று, எம்மனோர்க்கு - எம்போலியோர்க்கு, இயம்புமாறு - சொல்லுமாறு, அரிது - அரிதாகும், எ - று.

க - து. தேவர்கள் அளவில்லை, வித்தியாதரர்கள் அளவில்லை, அரசர்கள் அளவில்லை, மாதர்கள் அளவில்லை, நால்வகைச் சேனைகளும் அளவில்லை, இவ்வளவென்று சொல்லல் எனக்கரிதென்றார் என்பதாம்.

ஏழைமையுடையவரும் விவாகத்திற்குச் செல்லும்போது அனேகருடன் செல்வது வழக்கமாதலின் கிடைத்தற்கரிய தமயந்தியை விரும்பிவந்த செல்வங்களில் ஒருகுறைவுமின்றிய தேவர்கள் விஞ்சையர் நாகர் அரசர் முதலிய தலைவர்களையே இத்துணையரெனக் குறிக்கக்கூடாதெனின் அவர்களில் ஒவ்வொருவருக்கே அனேக பரிவாரமிருக்குமாதலின் அப்படி அனேகருக்கிருத்தலால் அவற்றையு மளவுபடுத்தல் மற்றைப்புலவர்க்கு மரிதென்பார், 'எம்மனோர்க்கியம்புமாறரிது' என்றார். மற்று-அசைகள். (கூகூ)

[இதனால் வீமன் சுயம்வரமண்டபத்துக்கு வருதல் சொல்லப்படுகின்றது.]

எரிகதிர்ப் பசும்பொன் முகடுவேய்ந் தோங்கி யேழிரு காவத மகன்ற, நிரைமணி குயிற்றி மணவினைக் கமைத்த நித்தில விதானமண் டபத்திற், புரிமுறுக் கவிழ வண்டுபாண் முரன்று பூந்துகள் குடைந்துதே னுகரும், விரைகமழ் நறுந் தார் துயல்வரு தடந்தோள் விதர்ப்பர்கோ னினிதுவந் தடைந்தான்.

இ - ள். எரி - ஒளிவிடுகின்ற, கதிர் - கிரணங்களையுடைய, பசும் பொன் - பசிய பொன்னால், முகடு வேய்ந்து - சிகரங்கூட்டி, ஓங்கி-உயர்ந்து, ஏழ் இருகாவதம் - பதினாலுகாதவழி, அகன்ற - பர

ந்த, நிரை - ஒழுங்காக, மணி குயிற்றி - இரத்தினங்கள் பதித்து, மண வினைக்கு அமைத்த - விவாகக் கிரியைக்குச் செய்த, நித்திலவிதானம் - முத்தினாற் செய்த மேற்கட்டியை யுடைய, மண்டபத்தில் - மண்டபத்தின்கண், புரி முறுக்கு அவிழ - கட்டினது முறுக்குவிரிய, வண்டு - வண்டுகள், பாண் முரன்று - இராகங்களை யிசைத்து, பூந் துகள் குடைந்து-மகரந்தங்களைக் குடைந்து, தேன் நுகரும் - தேனை யுண்ணும், விரை கமழ் - வாசனை கமழ்கின்ற, நறு தார் - நறிய மலர் மாலையானது, துயல்வரு - அசைகின்ற, தடம் தோள் - பருத்த தோளையுடைய, விதர்ப்பர்கோன் - விதர்ப்ப தேசத்தார்க் கரசனாகிய வீமராஜன், இனிது உவந்து - இனிதான மகிழ்ச்சிகொண்டு, அடைந்தான் - வந்தனன், எ - று.

க - து. செம்பொற்சிகரம் பொருத்தி இரத்தினங்கள் பதித்து முத்து மேற்கட்டி கட்டிப் பதினான்கு காதவழி விஸ்தாரம் போடு வித்த பந்தலாகிய கல்யாணமண்டபத்துள் வீமராஜன் வந்து சேர்ந் தான் என்பதாம்.

இனிதுவத்தல் - மிக மகிழ்தல். இச்சுயம்வரத்திற்குத் தலைவனே வீமராசனாதலால் இதைக்குறித்து வந்த தேவர், விஞ்சையர், நாகர், அரசர் முதலியவர்களுக்கு மரியாதை செய்யும்பொருட்டு மனமகிழ்ச் சியுடன் விதிப்படி செய்து அலங்கரித்திருக்கும் விவாக மண்டபத் திற்குத் தான் முன்னே வந்தனனென்க.

[இதனால் திரிலோகத்தரசரும் வருதல் சொல்லப்படுகின்றது.]

குழவிவெண் டிங்கண் மணிவடங் கிடந்த குங்குமக் குலவரைத் தடந்தோண், மழகளி றனைய விதர்ப்பர்கோன் பணியால் வானகத் தமரர்தங் குழுவு, மொழுகொளி மணிச் சூட் டரகருஞ் சேடி யுறைதரு விஞ்சையர் கணமு, பெழுக டல் வரைப்பின் மன்னருந் தேன்வேட் டிரைத்தெழு சுரும் பின்வந் தடைந்தார்.

இ - ள். குழவி - இளமையதாகிய, வெள் திங்கள் - வெள்ளிய சந்திரன்போன்ற, மணி வடம் - சந்திரஹாரம், கிடந்த - இருந்த, குங்குமம் - கும்குமமணிந்த, குலவரை - குலாசலம்போன்ற, தடம் தோள் - பருத்த தோளையுடைய, மழகளிறு அனைய - இளங்களிற் றையொத்த, விதர்ப்பர்கோன் பணியால் - வீமராஜ னேவலினால், வானகத்து அமரர் தம் குழுவும் - விண்ணுலகத் தேவர்கள் கூட்டமும், ஒழுகு ஒளி-ஒளி வீசுகின்ற, மணி சூடு-உச்சிமணியை யுடைய,

உரகரும் - நாகவேந்தரும், சேடி உறைதரு - விஞ்சைய ருலகத்தி லிருக்கும், விஞ்சையர் கணமும் - வித்தியாதரர் கூட்டமும், எழு கடல் வரைப்பின் - சத்ததீவிலுள்ள, மன்னரும் - அரசரும், தேன் வேட்டு - தேனை விரும்பி, இரைத்து - சத்தித்து, எழு - எழுகின்ற, சுரும்பின் - வண்டுகள்போல், வந்து அடைந்தார் - வந்து சேர்ந் தார்கள், எ - று.

க - து. வீமராஜன் கட்டளையினால் தேவர் கூட்டமும், நாகர் கூட்டமும், வித்தியாதரர் கூட்டமும், அரசர்கூட்டமும் வந்து சேர்ந் தன என்பதாம்.

தேனைவிட வண்டிற்கு இனிமைசெய் துயிர்காப்பது வேறொரு பொரு ளில்லாமையால் 'தேன்வேட் டிரைத்தெழு சுரும்பின்' என் றார். உவமிக்கப்படும் பொருட்கும் இவ்வுரைகொள்க. விதர்ப்பர் கோன்பணியால் அடைந்தாரெனக் கூட்டுக. சேடி-விஞ்சையருலகம். அது "சேணியுஞ் சேடியும் விஞ்சையர் சேர்விடம்" (ஐந்தாவது - இடப்பெயர்த்தொகுதி) இதனாலறிக. அமரர்குழுவும், உரகரும், விஞ் சையர் கணமும், மன்னரும் என்னு மெழுவாய்கள் அடைந்தார் என் னும் வினைமுற்றுப் பயனிலைகொண்டன. [சுரும்பின் வந்தடைந்தா ரெனலால் உவமையணி.] (சுஅ)

[இதனால் இந்திரன் முதலிய நால்வரும் வருதல் சொல்லப்படுகின்றது.]

கொய்துணர்த் தருவி னறுநிழ லமர்ந்த குரைகழல் விண்ணவர்க் கரசுஞ், செய்யகட் கயவா யெருமையே றுகைக் குந் தென்றிசைக் கடவுளுங் கனலும், வெய்யவான் சிகைய செந்தழற் கிறையும் விரிதிரைக் கனைகடல் வேந்து, நெய் துடைத் தொளிரு மள்ளிலை நெடுவே னிடதர்கோ னுரு வொடு மடைந்தார்.

இ - ள். கொய் - பறிக்கின்ற, துணர்-பூங்கொத்துகளையுடைய, தருவின் - ஐந்தருவினுடைய, நறு நிழல் - நறிய நிழலின்கண்ணே, அமர்ந்த - தங்கிய, குரை - ஒலிக்கின்ற, கழல் - வீரக்கழலையணிந்த, விண்ணவர்க்கு அரசும் - தேவர்களுக் கரசனாகிய இந்திரனும், செய்ய கண் - சிவந்தகண்களையும், கயவாய் - பெரிய வாயையுமுடைய, எருமை ஏறு - எருமைக்கடாவை, உகைக்கும் - செலுத்துகின்ற, தென் திசை கடவுளும் - தென்றிசைக் கிறைவனாகிய யமனும், கன லும் - சுடுகின்ற, வெய்ய - வெவ்விய, வான் - மேலாகிய, சிகைய -

கொழுந்தையுடைய, செம் தழற்கு இறையும்-அக்கினிபகவானும், விரி திரை - விரிகின்ற அலைகளையும், கனை - ஒலியையுமுடைய, கடல் வேந்தும் - சமுத்திரராஜனாகிய வருணனும், நெய் துடைத்து - உதிரத்தைத்துடைத்து, ஒளிரும் - விளங்குகின்ற, அள் இலை - மாமிசத்தை யள்ளுகின்ற இலையையுடைய, நெடு வேல் - நெடிய வேலையுடைய, நிடதர் கோன் உருவொடும் - நிடததேசத்தார்க் கரசனாகிய (தாங்கொண்ட) நளனது வேடத்துடன், அடைந்தார் - வந்தார்கள், எ - று.

க - து. இந்திரனும், இயமனும், அக்கினிதேவனும், வருணனும் நளனுருக்கொண்டு வந்தார்கள் என்பதாம்.

உருவுகொண் டடைந்தாரெனப் பாடங்கொள்ளின் முன்னே அன்னவனுருவுதாங்கி யணிநகர் மேயினாரென்றிருப்பதால் கூறியது கூறலென்னுங் குற்றமாதலின் உருவொடு மடைந்தாரெனப் பாடங்கொண்டு முன்கொண்ட வுருவோடும் இப்பொழுதடைந்தாரெனப் பொருள் கொள்ளப்பட்டது. நெய்-நிணமெனினுமமையும். (க

[இதுமுத லைந்துபாட்டால் நளன் சுயம்வர மண்டபத்துக்குப் புறப்படுஞ் சிறப்புச் சொல்லப்படுகிறது.]

மோட்டிளங் கயவாய் நெறிமருப் பெருமை முலைவழி யொழுகிய தீம்பால், சேட்டிளங் குருகின் பார்ப்பின மருந்துஞ் செழுவய னிடதர்கோன் மருமான், பாட்டிளஞ் சுரும்பர் பேட்டொடு முரன்று பருமுகை விரிக்குநாண் முல்லைச், சூட்டணிந் தம்பொற் சுடர்முடி கவித்துத் தொடு கழ லரலவிக் கினனால்.

இ - ள். மோடு - உயர்வும், இள - இளமையும் பொருந்திய, கயவாய் - பெரியவாயையும், நெறி மருப்பு - நெறித்த கொம்புகளையுமுடைய, எருமை - எருமைகளினுடைய, முலை வழி-முலைவழியாக, ஒழுகிய - வந்த, தீம்பால் - தித்திப்புப்பாலை, சேட்டிளம் - மிகுந்த இளமைபொருந்திய, குருகின் - நாரைகளினுடைய, பார்ப்பு இனம் - குஞ்சுக்கூட்டங்கள், அருந்தும் - உண்ணுகின்ற, செழுவயல் - செழுமைபொருந்திய வயல்கள் சூழ்ந்த, நிடதர்கோன் மருமான் - நிடததேசத்தார்க் கரசனது மருமகனாகிய நளமகாராசன், பாட்டு - பாட்டுக்களை, இளஞ்சுரும்பர் - இளவண்டுகள், பேட்டொடும் - பெட்டைகளுடன், முரன்று-பாடி, பரு முகை - பரிய அரும்புகளை, விரிக்கும் - மலர்த்துகின்ற, நாள் - புதிய, முல்லை சூட்டு அணிந்த-முல்லைமாலையை யணிந்த, அம் - அழகிய, பொன் - பொன்னாற்செய்த,

சுடர் முடி - கிரணங்களையுடைய மகுடத்தை, கவித்து - கவித்துக் கொண்டு, தொடு - தொடுக்கின்ற, கழல் - வீரக்கழலை, நரல-ஒலிக்க, வீக்கினன் - கட்டினான், எ - று.

க-து. நளமஹாராஜன் மணிமுடி சூடி வீரகண்டாமணி காலிற் றரித்தான் என்பதாம்.

புல்லுகளை வயிறார மேய்ந்து நீருண்டு உடையவராற் காக்கப் படுதலால் 'முலைவழி தீம்பாலொழுகிய வெருமை' என்றார். பால் பரவிய வயலெனக்கொள்க. மருமான்-வழித்தோன்றல், அது "மருமான் பிறங்கடையும் பல்வழித்தோன்றல்" (திவாகரம்-மக்கட்பெயர்த்தொகுதி) இதனாலறிக. நிடததேசத்தரசன் வழியிற்றோன்றிய நளனெனக்கொள்க. (எ0)

கூற்றின்நா வென்னக் குருதிகொப் புளிக்குங் குற்றுடை வாண்மருங் கசைத்துப், பாற்றினஞ் சுழல நிணப்புலால் கமழும் பாயொளிப் பரிதிவே லேந்தி, நூற்றிதழ்க் கமல முகைமுறுக் கவிழ நொ்றில்பரித் தேரிளங் கதிரோன், றோற்றின னென்ன நிழலுமிழ் கொடிஞ்சிச் சுடர்மணித் தேர்மிசைப் பொலிந்தான்.

இ - ள். கூற்றின் நா என்ன - யமனுடைய நாவைப்போல், குருதி கொப்புளிக்கும் - உதிரத்தை யுமிழ்கின்ற, குறு உடைவாள் - குறுகிய சுரிகையை, மருங்கு அசைத்து - பக்கத்திற் செருகி, பாறு இனம் - பருந்துக் கூட்டங்கள், சுழல - வட்டமிட, நிணம் புலால் - உதிரநாற்றம், கமழும் - நாறுகின்ற, பாய் - பரவப்பெற்ற, ஒளி - காந்தியையுடைய, பரிதி - சூரியன்போன்ற, வேல் ஏந்தி - வேற்படையைத்தாங்கி, நூறு இதழ் - நூறிதழ்களையுடைய, கமலமுகை - தாமரை யரும்புகள், முறுக்கு அவிழ - கட்டவிழ, நொறில் - வேகத்தையுடைய, பரி - குதிரைகட்டிய, தேர் - தேரையுடைய, இளங்கதிரோன் - பாலசூரியன், தோற்றினன் என்ன - உதயமானானென்று சொல்ல, நிழல் உமிழ் - நிழலைக் கொப்புளிக்கின்ற, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, சுடர் - கிரணங்களையுடைய, மணி - ரத்நங்கள் பதித்த, தேர்மிசை - தேரின்மேல், (நளமகாராசன்) பொலிந்தான் - தோன்றினான், எ - று.

க - து. நளமஹாராஜன் குற்றுடைவாள் பக்கத்திற் செருகி வேலாயுதந் தாங்கிச் சூரியனைப்போலத் தேரிலேறினான் என்பதாம்.

யமன் நாவினால் அனேகரைக் கொல்லும்படி சொல்லுதலால் அக்கொலைத்தொழிலா லுண்டாகிய உதிரத்துக்கு அவனது நாவா

னது காரணமாதல்பற்றி அதுபோல் 'குருதி கொப்புளிக்கும் உடை வாள்' என்றார். நாவைப்போற் சிவந்து அடிபரந்து முனை கூரிய தெனினும் அமையும். அன்றிக் குருதி கொப்புளித்தலை உடைவாளுக்கு விசேடணமாக்கி நாவென்னக் குற்றுடைவாளெனக் கூட்டின் அத்துணைச் சிறப்பின்றாம். உணவளிப்பவரை உண்பவரெப் போதுஞ் சூழ்வராதலால் அதுபோல் தமக்கு விருந்துசெய்யும் வேற்படையைப் பருந்துகள் நீங்காமையால் 'பாற்றினஞ் சுழல நிணப்புலால் கமழும் வேல்' என்றார். சூரியனைக்கண்டு தாமரை மலர்தல் போல் நளனைக்கண்டு மாதர்முகம் மலர்ச்சிபெறுதல் கொள்க. நளன் றேரிற்பொலிதலால் 'தேரிளங்கதிரோன் றோற்றினனென்ன' எனச் சூரியனை அவனுக்கு உவமையாக்கினார். [இது உவமையணி.]

இன்னகைத் துவர்வா யிளமுலை மகளி ரெரிமணிப் படியக மேந்தப், பொன்னவிர் திதலைப் பொம்மல்வெம் முலையார் பொழிகதிர்ச் சாமரை யிரட்ட, மின்னென நுடங்கு மருங்குலார் மருங்கின் வெள்ளடை யுதவினர் செல்லத், தென்வரைச் சாந்து நானமென் சேறுந் திசைதிசை காவதங் கமழ.

இ - ள். இன் நகை - இனிய நகையையும், துவர் வாய் - செவ்வாயையும், இள முலை - இளமைபொருந்திய ஸ்தனங்களையுமுடைய, மகளிர் - மாதர்கள், எரி மணி-ஒளி விளங்குகின்ற மணிகளிழைத்த, படியகம் ஏந்த - (தம்பலப்)படிக்க மேந்திவர, பொன் அவிர் - பொன்போல விளங்குகின்ற, திதலை - தேமலையுடைய, பொம்மல் - பொலிவுபெற்ற, வெம் முலையார் - விருப்பத்தைத் தருகின்ற முலைகளையுடைய மாதர்கள், பொழி கதிர் - கிரணங்களை வீசுகின்ற, சாமரை இரட்ட - சாமரைவீசிவர, மின் என - மின்னல்போல், நுடங்கும் - அசைகின்ற, மருங்குலார் - இடையையுடைய மாதர், மருங்கின் - அருகிலிருந்து, வெள் அடை-தாம்பூலத்தை, உதவினர் செல்ல-கொடுத்துக்கொண்டு வர, தென்வரை சாந்தும் - தென்றிசையிலுள்ள பொதியமலையிற் பிறந்த சந்தனக்கட்டையாற் சேர்க்கப்பட்ட சந்தனமும், நானம் மெல் சேறும்-கத்தூரியினது மெல்லிய குழம்பும், திசை திசை - எட்டுத் திக்குகளிலும், காவதம் - காததூரமளவும், கமழ - பரிமளிக்க, எ - று.

க - து. அந்நளமஹாராஜன் கனதனங்களையுடைய சிலபெண்கள் நவமணிகளிழைத்த தம்பலப்படிக்கங்க ளேந்தவும், சிலபெண்கள் சாமரைகள் வீசவும், சில பெண்கள் பஞ்சவாசங்கள் பொருந்

திய பாக்கு வெற்றிலைகள் மடித்துக்கொடுக்கவும், சந்தனங் கஸ்தூரி திக்கெங்கும் பரிமளிக்கவும் என்பதாம்.

நகை-பல், புன்சிரிப்பெனினு மொக்கும். துவர்-பவளமுமாம். மகளிர், முலையார், மருங்குலார் எனப் பன்மையாகக் கூறினமையால் நளன் சக்கிரவர்த்தியாதலாலும் செல்வமிகுதியாலும் ஒரு தொழிலைப் பலர் செய்தனரென்க. "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (நன்னூல்-பொதுவியல்-எ) என்பதனால் வெள்ளிலைபெனிவை துவர்க்காய், சுண்ணம்,வாசந்தருபண்ட முதலியவுங் கொள்க. அவை "தகரந் தக்கோலங்கோட்டஞ் சாதிக்கா, யிலவங்க மேலங் கச்சோல மாஞ்சிப், பகரும்வாசந் தருபண்டப் பெயரே" (திவாகரம்-மரப்பெயர்த் தொகுதி) இதனாலறிக. இப்பாட்டுமுதல் மூன்று பாட்டுக்குளகமாய் நளனென்னுந் தோன்றாவெழுவாய் மூன்றாம்பாட்டிற் புகுந்தானென்னும் வினைமுற்றுப் பயனிலைகொண்டு முடிந்தது (எஉ)

குளிர்மதி பொருவ நிலவுகொப் புளிக்குங் கொற்ற வெண் கவிகைமே னிழற்ற, வளியினம் புடைக்குந் தழை செவிப் பருஉத்தா ளரசுவா விருபுடை நெருங்க, முளரிமென் மலர்த்தா டொழப்புகு மரசர் முடியொடு முடிபொரு துகுத்த, வொளிகிளர் பசும்பொற் றுகள்பரந் தவனி யும்பர்தம் பதியினிற் சிறப்ப.

இ - ள். குளிர் மதி பொருவ - குளிர்ச்சி பொருந்திய சந்திரனை யொப்ப, நிலவு கொப்புளிக்கும் - பிரகாசத்தை யுமிழ்கின்ற, கொற்ற வெள் கவிகை - வெண் கொற்றக்குடை, மேல் - மேலே, நிழற்ற - நிழலைச்செய்ய, அளி இனம் - வண்டினங்களை, புடைக்கும் - ஓட்டுகின்ற, தழை செவி - தழைந்த காதுகளையும், பருத்தாள் - பருத்த கால்களையுமுடைய, அரசு உவா - உத்தம யானைகள், இரு புடை நெருங்க - இரண்டு பக்கத்திலும் நெருங்கிவர, முளரி மெல் மலர் தாள் - தாமரையின் மெல்லிய மலர்போன்ற பாதங்களை, தொழ புகும் - வணங்குதற்கு வருகின்ற, அரசர் - அரசர்களுடைய, முடியொடு முடி பொருது-மகுடங்களோடு மகுடங்கள் தாக்கி, உகுத்த - உதிர்த்த, ஒளி கிளர் - ஒளி விளங்குகின்ற, பசு பொன்-பசிய பொன்னாலாகிய, துகள் பரந்து - தூளிகள் பரவி, அவனி பூமியானது, உம்பர்தம் பதியினில் - தேவருலகம்போல், சிறப்ப - சிறப்பையுடைய, எ - று.

க - து. வெண்குடை பிடிக்கவும் யானைகளிருமருங்கு நெருங்கவும் அரசர்கள் வணங்கவும் என்பதாம்.

அரசுவாவென்றது எழுமுழ நிலந்தோய்ந்து வெள்ளிய நகத்த தாய்க் காலாலுங் கையாலும் வாலாலும் கோட்டாலும் பகையைக் கொல்ல வல்லதாய் எழுமுழ முயர்ந்து ஒன்பதுமுழ நீண்டு பதின் மூன்றுமுழஞ் சுற்றளவுடையதாய்த் தீயுமிழ் சிறுகணுஞ் செப்பு கரு முடைத்தாய் முன்புயர்ந்து பின்பணிந்திருப்பதாம். அது "காலொரு நான்குந் துதிக்கையுங் கோசமும், வாலுறுப் போடெழு மாநிலந் தோய்ந்து, பாலுஞ் சங்கும் போலக் காலுகிர், காலினு நான்ற வொருதனிக் கையினும், வாலினு மருப்பினுங் கோறல் வல்லதாய்ப், பதின்மூன்று முழச்சுற் றுடையதாகி, யெழுமுழ முயர்ந்தொன் பதுமுழ நீண்டு, தீயுமிழ் சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய், முன்புயர்ந்து பின்பணிந்ததாயி னய்யானை, அரசுவா வென்ன வறையவும் படுமே" (திவாகரம் - பலபொருட்கூட்டத் தொருபெயர்த் தொகுதி) இதனு லறிக. (௭௩)

உரவுநீர்த் தரங்கக் கடலுடைந் தென்ன வொலிசெழு பல்லியந் துவைப்ப, மருவலர்க் கடந்த வொளிறுவாள் விசயம் மாகத ரினிதினேத் தெடுப்பத், திருகுவெஞ் சினத்த வரி சிலை யுழவர் சேட்டிளம் புலியெனச் சூழ, வெரிபசும் பொன் செய் மாடநீண் மறுகி னிந்திர குமரனிற் புகுந்தான்.

இ - ள். உரவு - ஒலியையுடைய, நீர் - நீர் நிறைந்த, தரங்கம் - அலை வீசுகின்ற, கடல் உடைந்தென்ன-சமுத்திர முடைந்ததுபோல், ஒலி செழு - சத்தமிகுந்த, பல் இயம் துவைப்ப-நானாவித வாத்தியங்களை முழக்க, மருவலர் - சத்துருக்களை, கடந்த - வென்ற, ஒளிறு - பிரகாசிக்கின்ற, வாள் - வாட்படையினது, விசயம் - (வீரமுதலிய) வெற்றியை, மாகதர் - வந்தியர்கள், இனிதின் - இனிதாக, ஏத்து எடுப்ப - துதிசெய்ய, திருகு - மாறுபடுகின்ற, வெம் சினத்த - வெவ்விய கோபத்தையுடைய, வரி சிலை - நெடிய வில்லேந்திய, உழவர் - காலாள்கள், சேட்டு இளம் புலி என - மிகுந்த இளமைபொருந்திய புலிப்போத்துப்போல், சூழ - சூழ்ந்துவர, எரி-ஒளிவிடுகின்ற, பசும் பொன் செய் - பசிய பொன்னினாற் செய்யப்பட்ட, மாடம் - உபரிகைகளையுடைய, நீள் மறுகில் - நெடிய வீதியில், இந்திர குமரனில் - இந்திரகுமரன்போல், (நளமகாராசன்) புகுந்தான்-போயினான், எ-று.

க - ரு. பலவாத்தியங்கள் முழங்கவும், புகழ்வோர் துதிசெய்யவும், சுத்தவீரர்கள் சூழவும், இராஜவீதியில் இந்திரனைப்போல வந்தான் என்பதாம்.

கடலுடைதலின் மிக்க வொலியின்மையாதலால் அதைப் பல்லியத்துக் குவமையாக்கினார். பகைவரைக் கடத்தலின் மிக்கவென்றி யின்

றென்பதற்கு 'மருவலர்க்கடந்த வாள்விசயன்' எனப்பட்டது. வீரத்தொழிலைப்பற்றிச் சிலை யுழவர்க்குப் புலி யுவமையாயின. இந்திர குமரன் - இந்திரனாகிய குமரனும். அரசாட்சி, செல்வம், போகம் முதலியவற்றிற் குறைவில்லாமையால் இந்திரகுமரனை யுவமிக்கப்பட்டது. [இது உவமையணி] (எசு)

[இதுமுதல் பதினெட்டுப் பாட்டுக்களால் சுயம்வர மண்டபத்திற்குச் செல்கின்ற நளனைக்கண்ட மங்கையர்கள்தாம் கொண்ட விரகத்தால் வேறுவேறாகக் கூறுதல் சொல்லப்படுகின்றது.]

அலங்குளைப் புரவித் தேர்மிசைப் பொலிந்த வரசிளங் குமரனை நோக்கி, நலங்குடி யிருந்த நாகிள வேய்த்தோ ணங்கையர் பலரும்வந் தீண்டி, விலங்கிவில் லுமிழு மொரு பெருஞ் சேடி விஞ்சையர் குமரனே யென்பார், பொலங் குழை மடவா ருளம்புகுந் துருக்கும் பூங்கணைக் குமரனே யென்பார்.

இ - ள். அலங்கு - அசைகின்ற, உளை - புறமயிரினையுடைய, புரவி - குதிரை கட்டிய, தேர்மிசை - தேரின்மேல், பொலிந்த - விளங்கிய, அரசு இளங்குமரனை - நளமகாராஜனை, நோக்கி - பார்த்து, நலம் குடியிருந்த - நன்மைதங்கிய, நாகு இள வேய் தோள் - மிகுந்த இளமையுள்ள மூங்கிலையொத்த தோள்களையுடைய, நங்கையர் பலரும் - மாதர்களனைவரும், வந்து ஈண்டி - வந்து சேர்ந்து, விலங்கி - தனித்தனியாக, வில் உமிழும் - ஒளியை வீசுகின்ற, ஒரு - ஒப்பற்ற, பெரு - பெரிய, சேடி - விஞ்சையருலகத்திருக்கின்ற, விஞ்சையர் குமரனே என்பார் - விஞ்சையர் குமாரனே யென்பார்கள்; பொலம் குழை - பொற்குழைகளை யணிந்த, மடவார் - மங்கையர்களுடைய, உளம் புகுந்து - உள்ளத்தினுள் நுழைந்து, உருக்கும் - (அதைக்) கரைக்கின்ற, பூ கணை குமரனே என்பார் - மலரம்புகளையுடைய மன்மதனே யென்பார்கள், எ-று.

க-து. மாதர்கள் பலரும் தேர்மேல்வரும் நளனைப்பார்த்து வித்தியாதரனே என்பார்கள், மன்மதனே என்பார்கள் என்பதாம்.

பெண்களுக்கு வேண்டும் நற்குண மனைத்தும் எப்பொழுதும் நீங்காதிருத்தலால் 'நலங்குடியிருந்த' என்றார். நங்கையர் பலரும் இவன் செல்லுதல் ஆரவாரத்தாற் றெரிந்தன ரெனக்கொள்க. விஞ்சையர் குமரன்-விஞ்சையர்க்கரசன். மடவாருளத்தை யுருக்குதலால்

'பூங்கணைக் குமரனோ' என்றார். விலங்கியென்பதற்கு இருளைவிலங்கி
யென விகாரமாக்கினுமமையும். [இது ஐயவணி.] (எ௫)

வண்டுழா யலங்க றுயல்வரு தடந்தோண் மணிநிற
வண்ணனோ வென்பார், தெண்டிரைக் கடல்வாய்ச் சூர்முத
றடிந்த சினவுவேற் குமரனோ வென்பார், விண்டலத் தியங்கு
மந்திர மறந்து வீழ்ந்திய லியக்கனோ வென்பார், கெண்
டையந் தடங்கண் பெற்றபே றின்றே கிடைத்தனம் யாமெ
னக் கிளப்பார்.

இ-ள். வண் துழாய் அலங்கல்-வளம்பெற்ற துளபமாலை, துயல்
வரு - அசைகின்ற, தடம் தோள்-பருத்த தோள்களையுடைய, மணி
நிற வண்ணனோ என்பார் - நீலரத்ந நிறத்தையொத்த நிறத்தை
யுடைய நாரணனோ வென்பார்கள்; தெள் திரை கடல்வாய் - தெளி
ந்த அலை மோதுகின்ற கடலிடத்தே, சூர்முதல் தடிந்த-சூரபன்மனா
கிய முதல்வனைக்கொன்ற, சினவு வேல் - கோபஞ்செய்கின்ற வேற்
படையையுடைய, குமரனோ என்பார் - குமாரக்கடவுளோ வென்
பார்கள்; விண்டலத்து இயங்கும்-ஆகாயத்திற் சஞ்சரித்தற்குரிய, மந்
திரம் - மந்திரத்தை, மறந்து - மறந்துவிட்டு, வீழ்ந்து - பூமியில்
வீழ்ந்து, இயல் - பொருந்திய, இயக்கனோ என்பார் - இயக்கனோ
வென்பார்கள்; கெண்டை அம் தடம் கண்-சேலையொத் தழகிய விசா
லம்பொருந்திய கண்களோ, பெற்ற பேறு - பெற்றுக்கொண்ட பேற்
றை, இன்றே - இப்பொழுதே, யாம் - நாம், கிடைத்தனம் என -
பெற்றனமென்று, கிளப்பார் - சொல்வார்கள், எ - று.

க - து. விஷ்ணுவோ என்பார்கள், சுப்பிரமணியனோ என்பார்
கள், இயக்கனோ என்பார்கள், கண்கள் பெற்றதற்குக் காட்சிப்பேற்
றைப் பெற்றோம் என்பார்கள் என்பதாம்.

இங்ஙனஞ் சொல்லிய தேவர்க ளழகையொத்த அழகும் அவர்
செய்கையையொத்த செய்கையும் நளனுக்கிருத்தலால் இவ்வாறுகூறி
னார். கண்களுக்குப் பேறுவது அழகுள்ள ஒருபொருளைக் காண்ட
லாம். [இது ஐயவணி.] (எ௬)

ஏர்க்கிடை புகாம லடிபரந் தோங்கு மேரிள வனமு
லைத் துவர்வாய்த், தாக்கணங் கனையார் நாணமு மடனுஞ்
சங்கமுங் கலையுமுண் ணிறையும், போக்கினர் புலம்பிக் கண்
கவர் வனப்பிற் புரவலன் றடம்புயம் புல்லு, மேக்கறவதனு
ளுள்ளம்விட் டகலு மின்னுயிர் தாங்கினர் மெலிவார்.

இ-ள். ஈர்க்கு இடைபுகாமல்-இடையிலீர்க்கு நுழைதற்கிடமில்லாமல், அடிபரந்து ஓங்கும்-அடிபரந்தோங்கிய, ஏர் இளவன முலை-அழகும் இளமையும் சந்தனக் கோலமும் பொருந்திய ஸ்தனங்களையும், துவர் வாய் - செவ்வாயையுமுடைய, தாக்கு அணங்கு அனையார் - இலக்குமியையொத்த மடவார்கள், நாணமும் - நாணத்தையும், மடனும் - மடமையையும், சங்கமும் - வளையையும், கலையும் - ஆடையையும், உள் நிறையும் - உள்ளே யிருக்கின்ற கற்பையும், போக்கினர் - ஒழித்தவராகி, புலம்பி - இரங்கி, கண் - கண்களின் பார்வையை, கவர் - தன்னிடத்தே யிழுத்துக்கொள்கின்ற, வனப்பின்-அழகையுடைய, புரவலன்-நளமகாராஜனுடைய, தடம்-பருத்த, புயம் - தோள்களை, புல்லும் - தழுவவேண்டுமென்னும், ஏக்கறவதனால் - ஏக்கத்தினால், உள்ளம் விட்டு அகலும் - மனத்தை விட்டு நீங்கும், இன் உயிர் - இனிய உயிரை, தாங்கினர் - சுமந்தவராகி, மெலிவார் - வாடுவார்கள், எ - று.

க - து. இலக்குமிக்கொப்பான பெண்கள் நாணம் மடம் வளைகள் ஆடை கற்பு இவை யிழந்தவர்களாய் நளனைக் கூடும் ஆசையாலுயிர்வைத்திருந்தார்கள் என்பதாம்.

போக்கினர் தாங்கினர் என்பன முற்றெச்சங்கள். நாண முதலிய வைந்தும் போக்கின மாதர் நளனைத் தழுவல் வேண்டுமென்ற ஆசையினால் அகத்தைவிட்டு நீங்கு முயிரைத்தாங்கி வருந்தியிருந்தனரென்க. (எஎ)

[இது நாகமங்கையர் சொல்லியது]

பாட்டளி துதைந்து பருமுகை யவிழ்க்கும் பைந்துணர்த் தெரியல்சூழ் கூந்தற், சூட்டுடை யுச்சி நாகமங் கையர்தந் துணைமுலை பசப்பவந் தெய்தி, வாட்டிறற் குரிசில் செயிரற விளங்கும் வனப்பெலாம் வந்திய ருரைப்பக், கேட்டகண் கண்டு களிப்புற நோக்கக் கிடைத்ததெந் தவமெனக் கிளப்பார்.

இ - ள். பாடு அளி - இசையைப் பாடுகின்ற வண்டுகள், துதைந்து - நெருங்கி, பரு முகை - பெரிய அரும்புகளை, அவிழ்க்கும்-விரிக்கின்ற, பைந்துணர் - பசிய பூங்கொத்துக்களாற் செய்த, தெரியல் சூழ் - மாலை சுற்றிய, கூந்தல்-அளகபாரத்தையும், சூடு உடை உச்சி-உச்சிக்கொண்டையையு முடைய, நாக மங்கையர்-நாகலோகத்து மாதர், தம் - தம்முடைய, துணை முலை-இரண்டு ஸ்தனங்களும், பசப்ப-வேறுபட்ட நிறத்தையடைய, வந்து எய்தி-வந்துசேர்ந்து, வாள் திறல்

குரிசில் - நளமகாராசனது, செயிர் அற - குற்றமில்லாமல், விளங்கும் - பிரகாசிக்கின்ற, வனப்பு எலாம் - அழகனைத்தையும், வந்தியர் உரைப்ப - புகழ்வோர்கள் சொல்ல, கேட்ட - கேள்வியுற்ற, கண் - கண்களானவை, கண்டு - பார்த்து, களிப்பு உற - களிப்பையடைய, நோக்க கிடைத்தது - பார்க்கக்கிடைத்தது, எத்தவம் என-எப்பொழுது செய்த தவமென்று, கிளப்பார் - சொல்லுவார்கள், எ - று.

க - து. நளனுடைய அழகைப் புகழ்வோராற் கேள்விப்பட்ட கண்களாகிய செவிகளே இன்று நீங்கள் நளனைக் காணப்பெற்றது எக்காலஞ் செய்ததவமோ என்றார்கள் நாகமங்கையர்கள் என்பதாம்.

நளனுடைய அழகை வந்தியராற் கேள்விப்பட்ட கண்களே இப்பொழுது காணக்கிடைத்தது எப்பொழுது செய்த தவமென நாகமங்கையர் கண்ணையே செவியாகக் கொண்டமையால் இருவகை யின்பமும் ஒருகாலத்து ஒன்றனால் பெற்றமையால் வியந்து இவ்வாறு கூறினரென்க. நாகமங்கையர்க்குக் கண்ணே செவியென்பது, "பணிக்கட்செவி பாம்பெனப்படுமே" (திவாகரம் - விலங்கின்பெயர்த்தொகுதி); "பரிசமுறுக் காண்டல் பகர்கேள்வி யோர்பான், மருவுமணிப் பூணினன் வந்தான்" (வண்டுவிடுதூது) இவற்றாலறிக. (எஅ)

[இது அரமங்கையர் சொல்லியது.]

அமைத்தட மென்றோ ளரம்பையர் திதலை யணிந்த
பொற் றடமுலைப் பாரஞ், சுமக்கலா தொல்கி நுழைமருங்
கொசியத் துகிற்கொடி மறுகின்வந் தெய்திச், சமர்த்தலை யுட
ன்றோ ராருயிர் பருகுந் தாமவேற் குரிசிலை நோக்கி, யிமைப்
பிலா நாட்டம் பெற்றபே றின்றே யெய்தின மெனமகிழ்ந்
திசைப்பார்.

இ - ள். அமை-மூங்கிலையொத்த, தடம்-பருத்த, மெல் தோள் அரம்பையர் - மெல்லிய தோள்களையுடைய அரமங்கையர்கள், திதலை அணிந்த - தேமலை யணிந்த, பொன் - அழகிய, தடம்-பருத்த, முலை பாரம் - முலைகளினுடைய சுமையை, சுமக்கலாது - பொறுக்க மாட்டாமல், ஒல்கி - துவண்டு, நுழை - நுட்பமாகிய, மருங்கு - இடையானது, ஒசிய - வருந்த, துகில் கொடி - வஸ்திரக்கொடிகளையுடைய, மறுகின் - வீதியிலே, வந்து எய்தி - வந்து சேர்ந்து, சமர் தலை - யுத்தகளத்தில், உடன்றோர் - பொருதவர்களுடைய, ஆர் - நிறைந்த, உயிர் - ஆவியை, பருகும் - உண்கின்ற, தாமம் - வெற்றி மாலை தரித்த, வேல் - வேற்படையையுடைய, குரிசிலை - நளமகாரா

ஜனை, நோக்கி - பார்த்து, இமைப்பிலா நாட்டம் - இமையாவிழிகளை, பெற்ற பேறு - அடைந்த பேற்றை, இன்றே - இப்பொழுதே, எய்தினம் என - அடைந்தனமென்று, மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து, இசைப்பார் - சொல்லுவார்கள், எ - று.

க - து. அரம்பையர்கள் நளனைப் பார்த்து இமையாக் கண்கள் பெற்றதற்குப்பேறு இன்றே பெற்றோம் என்பார்கள் என்பதாம்.

மூலைப்பாரஞ் சுமக்கக்கூடாதிருந்தும் நுண்ணிய இடை வருந்த அரம்பையரெய்தியது தாம் எப்பொழுதுங் கேள்விப்பட்டும் அறியாத அழகு இவனிடத் திருத்தலாலென்க. இந்திரன் முதலிய தேவரிடத்து மில்லாது இவனிடத்துள்ள அழகைக்கண்டு இமையா விழிகள் பெற்றபேற்றை யடைந்தன மென்றாரென்க. (எக)

கலைவலா னெஞ்சிற் காதன்மீ தூர்ந்து கடிமணங் குறித்திவண் புகுதப், புலவுநா றழல்வேல் விதர்ப்பர்கோன் மடந்தை புரிந்ததெத் தவமெனப் புகல்வா, ரிலைகுலாம் பைம்பூணரசிளங் குமர ரெண்ணிலர் விரும்பிமே விடினுஞ், சிலைவலாற் கன்றிச் செழுமலர்த் தெரியல் சேயிழை புனையுமோ வென்பார்.

இ - ள். கலைவலான் - கலைகளில் வல்லவனாகிய நளமகாராஜனானவன், நெஞ்சில் - மனத்தில், காதல் - ஆசை, மீதூர்ந்து - அதிகரித்து, கடிமணம் குறித்து - விவாகத்தைக்குறித்து, இவண் - இந்நகரில், புகுத - வருதற்கு, புலவு நாறு - புலானாற்ற நாறுகின்ற, அழல்வேல் - தீயையொத்த வேற்படையையுடைய, விதர்ப்பர்கோன் - வீமராசனுடைய, மடந்தை - பெண்ணாகிய தமயந்தியானவள், புரிந்தது - செய்தது, எத்தவம் என - என்ன தவமென்று, புகல்வார் - சொல்லுவார்கள்; இலை குலாம் - இலை விளங்குகின்ற, பைம்பூண் - பசிய ஆபரணங்களையுடைய, அரசு இளம் குமரர் இராஜகுமாரர்கள், எண்ணிலர் - அளவற்றபேர், விரும்பி - இச்சித்து, மேவிடினும் - வந்தாலும், சிலைவலாற்கு அன்றி - விற்றொழிலில் வல்லவனாகிய இவ்வரசனுக்கு அல்லாமல், செழு மலர் தெரியல் - செழுமைபொருந்திய மலர்மாலையை, சேயிழை - தமயந்தியானவள், புனையுமோ என்பார் - சூட்டுவாளோ வென்பார்கள், எ - று.

· து. நளன் வருதற்குத் தமயந்தி என்னதவஞ் செய்தாளோ எனபார்கள், தமயந்தி நளனுக்கன்றி மற்றை யரசர்களுக்கு மாலையிடுவாளோ என்பார்கள் என்பதாம்.

'விதர்ப்பர்கோன் மடந்தை புரிந்ததெத்தவம்' எனலால் இப்படிப்பட்ட அழகுள்ள புருடனை மாலையிடத் தாமும் அத்தவஞ் செய்யலாமென்பது கருத்து. இந்நளன் குணம் மற்ற அரசர்களுக்கில்லாமையால் தமயந்தி மாலைசூட்ட மாட்டாளென்றார். (அ0)

திரைக்கட லுடுத்த மாநில நிழற்றுந் திங்களங் கவிகை
மன்னவரு,மருக்கமழ் தருவி னீழல்வீற் றிருக்கும் வானவர்
தொகுதியும் வருகென், றரத்தமுண் டொளிரு மள்ளிலை
நெடுவே லரசர்கோ னழைத்தது குழைக்குங், கருப்புவில்
லொழித்த காமனை யனையான் கவினலங் காட்டுதற் கென்
பார்.

இ - ள். திரை - அலைகளையுடைய, கடல் - கடலை, உடுத்த - ஆடையாகத்தரித்த, மா - பெரிய, நிலம் - பூமிதேவிக்கு, நிழற்றும் - நிழலைச் செய்கின்ற, திங்கள் கவிகை மன்னவரும் - சந்திரவட்டக்குடையையுடைய அரசர்களும், மரு கமழ்-வாசங் கமழ்கின்ற, தருவின் நீழல் - ஐந்தருவினீழலில், வீற்றிருக்கும் - அரசிருக்கின்ற, வானவர் தொகுதியும் - தேவர் கூட்டமும், வருக என்று - வரக்கடவீரென்று அரத்தம் உண்டு-உதிரத்தைப்புசித்து, ஒளிரும் - விளங்குகின்ற, அள் இலை - மாமிசத்தை அள்ளிக்கொள்கின்ற இலையையுடைய, நெடு வேல் - நெடிய வேற்படையையுடைய, அரசர்கோன் - ராஜாதிராஜனாகிய வீமராஜன், அழைத்தது - அழைப்பித்தது, குழைக்கும் - வளைக்கப்பெற்ற, கருப்பு வில் ஒழித்த - கருப்புவில்லை நீக்கிய, காமனை அனையான் - மன்மதனையொத்த நளனுடைய, கவின் நலம் - அழகு நலத்தை, காட்டுதற்கு என்பார் - காண்பித்தற் கென்று சொல்வார்கள், எ - று.

க - து. வீமன் அரசரையுந் தேவரையும் அழைப்பித்தது நளனழகைக்காட்ட வென்பார்கள் என்பதாம்.

சுயம்வரமென்று ஒன்றைக்குறித்து வீமன் தேவர் முதலியவரைத் தன்னகரில் அழைப்பித்தது நளமகாராசனது மிகுந்த அழகைக் காட்டற்காம். அதிலே அவனுக்கு அவசியமென்னெனில் அப்படிப்பட்டவன் தன் மருகனாதல் பற்றிப்போலும். (அக)

மண்ணாள வன்றிம் மன்னவன் றிணிதோண் மணி
வரைப் பணைப்பென மகிழ்வார், கண்ணாள வன்று காவல
னகலங் காண்பதற் கெனமனங் கனுழ்வார், பண்ணாள வன்
றே யமிர்தினிற் றேனிற் பாகினிற் பழுத்தவத் தீஞ்சொல்,
பெண்ணாள வன்றே யாணவா வுறுமிப் பேரெழி லென்று
பே சுறுவார்.

இ - ள். மண் அளவு அன்று-பூமியை மாத்திரம் ஆளும் அளவுடைய தன்றாகும், இம்மன்னவன்-இவ்வரசனுடைய, திணி தோள் - வலிமைபொருந்திய தோளாகிய, மணி - அழகிய, வரை பணைப்பு என - மலையினுடைய பருமனென்று, மகிழ்வார்-மகிழ்ச்சியடைவார்கள்; கண் அளவு அன்று - கண்களாலெட்டும் அளவன்றாகும், காவலன் - அரசனுடைய, அகலம் - மார்பு, காண்பதற்கு என - பார்ப்பதற்கென்று, மனம் - மனமானது, கலுழ்வார் - கலங்குவார்கள்; பண் அளவு அன்று-பண்களினுடைய அளவன்றாகும், அமிர்தினில்-அமிர்தம்போலும், தேனில் - தேன்போலும், பாகினில் - பாகுபோலும், பழுத்த - (சுவை) முதிர்ந்த, அம் - அழகிய, தீஞ்சொல் - மதுரம் பொருந்திய சொல்லென்பார்கள்; பெண் அளவு அன்று - பெண்கள் மாத்திரமயங்கும் அளவினதன்றாகும், ஆண் அவாவுறும் - ஆண்மக்களும்விரும்பும், இப்பேர் எழில் என்று - இப்பெரிய அழகென்று மதுறுவார் - அறிவு மயங்குவார்கள், எ - று.

க - து. நளனது தோளையு மார்பையுங்கண்டு மயங்குவார்கள் என்பதாம்.

திரிலோகத்தையும் ஆளத்தக்க புயவலிமை இவனுக்கிருத்தலால் தோளுக்குத் 'திணி' என்னும் அடை கொடுக்கப்பட்டது. இவன் மார்பு பார்த்தற்கெட்டாமற் கண்ணளவினும் பரந்திருந்ததென்க. பண்ணென்பது பாலை - குறிஞ்சி - மருதம் - செவ்வழி என நான்கு வகைப்படும். இவன் மொழி அவற்றிலு மிக்கிருத்தலால் 'அமிர்தினிற் றேனிற் பாகினிற் பழுத்தவந் தீஞ்சொல்' என்றார். ஆணவாவுறுதல் யாமும்பெண்பிறப் பெடுத்திருந்தோமானல் இப்படிப்பட்ட அழகுள்ள புருடனைச் சேரலாமென்று விரும்புதலாம். (அஉ)

கருணையங் கடல்வாய் மடைதிறந் தொழுகுங் கண்களுங் கதிர்மதி முகமு, முருகுகொப் புளிக்குஞ் செழுமலர்த் தொடைதாழ் முழவுறழ் திணிதடந் தோளும், பருகுவபோல நோக்குவா ரேற்ற படைநெடுங் கண்கள்போன் முலைகா, ளருவரை யகல மின்புறத் திளைப்ப வருந்தவம் புரிந் திலீ ரென்பார்.

இ - ள். கருணை அம் கடல் வாய்-அருளாகிய அழகிய கடலினுள்ள, மடை திறந்து ஒழுகும்-மடை திறந்துவருகின்ற, கண்களும் - நேத்திரங்களையும், கதிர் மதி முகமும்-கிரணங்களையுடைய சந்திரன் போன்ற முகத்தையும், முருகு கொப்புளிக்கும் - தேனையுமிழ்கின்ற,

செழு மலர் தொடை தாழ்-செழுமையுள்ள மலர்மாலை தாழ்கின்ற, முழவு உறழ்-மத்தளத்தையொத்த, திணி-வலிமைபொருந்திய, தடம் தோளும் - பருத்த புயங்களையும், பருகுவ போல - உண்பனபோல, நோக்குவான் - பார்க்கும்படி, நோற்ற - தவஞ்செய்த, படை - வாட் படையையொத்த, நெடு கண்கள் போல - நெடிய கண்களைப்போல, முலைகாள் - ஸ்தனங்களே, அரு வரை-அரிய மலையையொத்த, அகலம்-(இந்நளன்) மார்பை, இன்பு உற - இன்பமிக, திளைப்ப-அழுந்தத் தழுவுதற்கு, அரு தவம் - செய்தற்கரிய தவத்தை, புரிந்திலீர் - செய்தீரில்லை, என்பார் - என்பார்கள், எ - று.

க - து. நளனுடைய கண்களையு முகத்தையும் தோள்களையும் பார்க்கத் தவம்பண்ணிய கண்களைப்போல கனதனங்களே அவன் மார்பைத்தழுவத் தவம்பண்ணிலீர் என்பார்கள் என்பதாம்.

முலைகாள்! அரசனுடைய பல அவயவங்களை நோக்கிக் களிக்குந் தவஞ்செய்யப் பெற்ற கண்கள்போல் அவன் மார்பை யாத்திடு மேனும் பொருந்தும்படியான அருந்தவம் நீங்கள்செய்திலீ ரென்றார். இதனால் தவஞ்செய்தவர் வேண்டியவை யடைவரென்பது கருத்து. அது "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப் படும்" (திருவள்ளுவர்-தவம்-ரு) இதனாற் காண்க. (அ௲)

பணிமுடிக் கிடந்த பார்பொது நீக்கிப் பரித்திடு மரசிளங் குமரன், மணியெழு வனைய மல்லலந் திணிதோள் வனப்பெலாங் கண்டுகண் டுவப்ப, விணர்விரி பசுந்தார் துயல்வரத் தொடுத்த வெரிமணிக் கொடிஞ்சியந் தேர்கொண், டணிகெழு மறுகின் மெல்லெனச் செல்கென் றலங்குளைப் புரவியைத் தொழுவார்.

இ - ள். பணி முடி கிடந்த-ஆதிசேடன் றலைமேலிருந்த, பார் - பூமியை, பொது நீக்கி - பலவரசர்க்கும் பொதுமையா யிருப்பதை நீக்கி, பரித்திடும் - (முழுவதுந் தானொருவனே) சுமக்கின்ற, அரசு இளங்குமரன் - இளவரசனாகிய நளனுடைய, மணி எழு அனைய - மணித்தூணை யொத்த, மல்லல் - வளப்பம் பொருந்திய, அம் - அழகிய, திணி தோள் - வலிமைபெற்ற தோள்களினுடைய, வனப்பு எலாம் - அழகனைத்தையும், கண்டு கண்டு - நோக்கி நோக்கி, உவப்ப - மகிழ்ச்சியடைய, இணர் விரி - பூங்கொத்துகள் விரிந்த, பசுந் தார் - பசியமலர்மாலை, துயல்வர - அசைய, தொடுத்த - கட்டப் பெற்ற, எரி மணி - ஒளியையுடைய மணிகள்பதித்த, கொடிஞ்சி அம் தேர் கொண்டு - மேன்மொட்டையுடைய தேரைக்கொண்டு

அணி கெழு மறுகில் - அழகுபொருந்திய வீதியில், மெல்லென செல்க என்று-மெள்ளப்போகென்று, அலங்கு -அசைகின்ற, உளை - பூறமயிர்களையுடைய, புரவியை-குதிரையை, தொழுவார் - வணங்கு வார்கள், எ - று.

க - து. நளனழகைக் கண்டு மகிழத் தேரிற் கட்டிய குதிரை களை மெல்லச் செல்கென்று தொழுவார்கள் என்பதாம்.

கிடையாது கிடைத்த நளமகாராசனுடைய அழகைப் பார்த்த மங்கையர் இன்னுஞ் சிறிதுபொழுது பார்த்தற்கு இடையூறாகத் தேரைவிரைவிற் கொண்டு போதலாலே தம்மாற் றொழப்படுதற்குரிய தல்லதாகிய விலங்கின் பிறப்புடைய குதிரையையும் வணங்கினார்க ளென்பதாம். இதனால் ஒருவனுக்குத் தன்னன்பு தெரிவித்தற்கு வணக்கம்போல மற்றொன்றில்லை யென்பது கருத்து. (அச)

வேலென மிளிர்ந்து குமிழ்மிசை மறிந்து வேனிலாற் கரசிய லளித்துச், சேலெனப் பிறழ்ந்து குழையெதிர் நடந்து செவ்வரி பரந்துமை தோய்ந்து, காலனிற் சினவிக் கொலைத் தொழில் புரியுங் கருந்தடங் கண்ணினார் தமது, மாலுற விடுத்த மனத்தினுங் கடிதோ வாவுமான் றேரெனத் தொடர் வார்.

இ - ள். வேல் என - வேற்படைபோல், மிளிர்ந்து - விளங்கி, குமிழ்மிசை - குமிழம்பூவினை யொத்த மூக்கின்மேற் பக்கத்தில், மறிந்து - தடைபட்டு, வேனிலாற்கு - மன்மதனுக்கு, அரசியல் அளித்து-அரசாட்சியைக்கொடுத்து, சேல் என-கெண்டைபோல, பிறழ்ந்து - ஒளிசெய்து, குழை - குழையெனப் படுகின்ற காதணிக்கு, எதிர் - முன்பாக, நடந்து - சென்று, செவ்வரி - சிவந்த ரேகைகள், பரந்து - பரவப்பெற்று, மை - அஞ்சனத்திலே, தோய்ந்து - அமிழ்ந்தி, காலனில் - யமன்போல், சினவி - கோபித்து, கொலை தொழில்-கொல் லுந்தொழிலை, புரியும் - செய்கின்ற, கரு தடம் கண்ணினார்-கரிய விசாலம்பொருந்திய கண்களையுடைய மாதர்கள், தமது-தம்முடைய, மால் உற - மயக்கம்பொருந்த, விடுத்த-அனுப்பப்பட்ட, மனத்தினும்- மனத்தைக்காட்டிலும், கடிதோ - கடுமையை யுடையதோ, வாவும் - தாவுகின்ற, மான் - குதிரைகட்டிய, தேர் என-தேரென்று, தொடர் வார் - அத்தேரின் பின் செல்லுவார்கள், எ - று.

க - து. பெண்கள் விடுத்த மனவேகத்தைப் பார்க்கிலுந் தேர் அதிகவேக முடையதென்று தொடருவார்கள் என்பதாம்.

வேனிலாற் கரசிய லளித்தலாவது இவள் கடைக்கண் பார்வைகளானவை திரிலோகத் தரசரையும் விரகங்கொண்டு வருந்தச்செய்து மன்மதனுடைய தொழிலை விர்த்தியாக்குதலாம். மனோவேகத்தினுங் குதிரைவேகஞ் சிறிதாதலால், மாதர்கள் தமது 'மனத்தினுங் கடிதோ வாவு மான்றேர்' என்றார். வசந்தகாலத்துக் குரியவனாதலால் மன்மதனை 'வேனிலான்' என்றார். குமிழ்-முதலாகுபெயர். கடிதோ என்பதில் ஓகாரம் எதிர்மறை. (அரு)

கண்டுகண் டுருகி யினையராய் மனனுங் கருந்தடங் கண்களுங் களிக்கும், வண்டிமிர் கூந்தல் வனிதையர் வருந்த மணிநெடு வீதிவா யகன்று, கொண்டல்கண் படுக்கும் வரையினின் றிழியுங் கோளரி யேறென நிவந்த, விண்டொடு கொடிஞ்சித் தேரினின் றிழிந்து மேவரும் வேத்தவை புகுந்தான்.

இ-ள். இனையராய் - இத்தன்மையுடையராய், கண்டு கண்டு - பார்த்துப் பார்த்து, மனனும் - மனமும், கரு தடம் கண்களும் - கரிய பெரிய கண்களும், களிக்கும் - களிக்கின்ற, வண்டு - வண்டுகள், இமிர் - ஒலிக்கின்ற, கூந்தல் - அளகத்தையுமுடைய, வனிதையர் - மங்கையர்கள், உருகி - கரைந்து, வருந்த - துன்பமுற, மணி - அழகிய, நெடு வீதி வாய் - நெடிய தெருவின்கணின்றும், அகன்று - நீங்கி, கொண்டல் மேகங்கள், கண்படுக்கும் - நித்திரைசெய்கின்ற, வரையில் நின்று இழியும் - மலையினின்று மிறங்குகின்ற, கோளரி ஏறு என - சிங்கவேற்றைப்போல், நிவந்த - உயர்ந்த, விண் தொடு - ஆகாயத்தையளாவிய, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, தேரினின்று இழிந்து - இரதத்தினின்று மிறங்கி, மேவரும் - (ஒப்பனை) பொருந்திய, வேத்தவை - அரசவையில், (நளனென்பவன்) புகுந்தான் - புகுந்தனன், எ-று. கோள் - வலிமை.

க-து. மாதர்கள் வருந்த நளன் தேரைவிட்டிறங்கி இராஜசபையிற் புகுந்தான் என்பதாம்.

நளன் மாதர்கள் வருந்த வீதியினீங்கித் தேரினின்றிழிந்து அவையிற் புகுந்தானென்க. வேத்தவையெனச் சந்தவின்பநோக்கி விகாரமாயிற்று. ['வரையினின் றிழியுங் கோளரி யேறென' என்றமையால் உவமையணி.] (அசு)

[இதனால் சபையிலிருந்த அரசர்களுடைய தன்மை கூறப்படுகின்றது.]

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தெரியல்சூழ் குவவுத் திண்டோட் சிலைவலா னினிதி னெய்தவரசவை யிருந்த செவ்வி யரசிளங் குமர ரெல்லாங்

குறைகடன் முகட்டிற் றோன்றுங் குளிர்மதி காண்டலோடும்
விரிகதிர் மழுங்கும் வானின் மீனின மென்ன லானார்.

இ - ள். தெரியல் சூழ் - மாலைகள் சூழ்ந்த, குவவு-திரட்சிபொருந்திய, திண் - வலிமைபெற்ற, தோள் - புயத்தையுடைய, சிலை வலான்-விற்போரில் வல்லவனாகிய நளமகாராஜன், இனிதின்-இனிமையால், எய்த - அடைய, அரசவை இருந்த-(அப்பொழுது) இராஜசபையிலிருந்த, செவ்வி-அழகிய, அரசு இளங்குமரர் எல்லாம்-இராஜகுமாரர்களனைவரும், குறை - ஒலிக்கின்ற, கடல் முகட்டில் தோன்றும்-கடலுச்சியி லுதிக்கின்ற, குளிர் மதி - குளிர்ச்சிபொருந்திய சந்திரனை, காண்டலோடும்-கண்டவளவில், விரி கதிர மழுங்கும் - விரிந்த கிரணங்களி னொளிகெடப்பெற்ற, வானில் - ஆகாயத்திலிருக்கின்ற, மீன் இனம் என்னலானார்-உடுக்கணமென்று சொல்லும்படியாயினார்கள், எ - று.

க - து. நளன் முன்னிருந்த அரசர்களெல்லாம் சந்திரன்முன்னிருந்த நட்சத்திரங்கள்போ லானார்கள் என்பதாம்.

கதிர்மழுங்கினும் உடுக்கணத்திற்குச் சந்திரனிடத்து வெறுப்பின்றி விருப்பு மிகுதல்போல் அழகிற் குறைந்த அரசர்களுக்கு நளனிடத்து விருப்பமிகுதல் கொள்க. உடுக்கணத்திற்குச் சந்திரனிடத்து மகிழ்ச்சியுண்டாதல் அவன் உடுபதியாதலாலும் சிலவற்றிற்குத் துணைவனாதலாலுமென்க. வடிவினால் மாத்திரமன்றி விற்போர் முதலியவற்றினு மிக்கவனென்பது தோன்றக் 'குவவுத்திண்டோட் சிலைவலான்' என்றார். (அஎ)

[இதுவுமது.]

குருமணி யிமைக்கும் பைம்பொற் கோடுயர் குடுமிக் குன்றம், பொருவுமண் டபத்தி னூடு பூண்சுடர் தவழப் புக்க, செருமலி தானை வேந்தன் றிருமுகந் திங்க ளாக, வரசர்வாண் முகங்க ளெல்லா மம்புயம் போன்ற வன்றே.

இ - ள். குரு - நிறம்பொருந்திய, மணி - ரத்நங்கள், இமைக்கும் - பிரகாசிக்கின்ற, பைம்பொன்-பசியபொன்னாற் செய்த, கோடு உயர் - உச்சியுயர்ந்த, குடுமி-சிகரங்களையுடைய, குன்றம் பொருவும்-மலையையொத்த, மண்டபத்தினூடு - விவாகமண்டபத்தில், பூண் - ஆபரணங்களின், சுடர் தவழ - ஒளிவிளங்க, புக்க - புகுந்த, செருமலி தானை வேந்தன் - போர்த்தொழிலிற் சிறந்த படையையுடைய நளமகாராஜனுடைய, திருமுகம் - திருமுகமானது, திங்களாக - சந்

திரனாக, அரசர் - அரசர்களுடைய, வாள்-ஒளிபொருந்திய, முகங்கள் எல்லாம் - முகங்களனைத்தும், அம்புயம் போன்ற - தாமரை மலரை யொத்தன. எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. நளன் முகம் சந்திரனாகவும், அரசர்கள் முகம் தாமரை மலர்கள் போலவு மிருந்தன என்பதாம்.

திங்களைக்கண்ட வளவிலே தாமரைமலர்கள் குவிதல்போல் நளனைக்கண்ட வளவில் அரசர் முகங்கள் வாடினவென்க. இதனால் அரசர்களழகினும் இவனழகு மேற்பட்டிருந்த தென்பது கருத்து. [திங்களென்னும் உருவகம் அம்புயம்போன்ற வென்னும் உவமையோடு கலத்தலாற் கலவையணி.] (அஅ)

[இதனால் தேவர்கள் பொறாமை சொல்லப்படுகின்றது.]

கடிமலர்ப் பகழி யேந்துங் காமனு நாணும் பொற்பி
னடல்கெழு பரிதி வைவே லையனை யினிதி னோக்கித்
தொடிகழ லமரர் யாருந் துயரொடு மழுக்கா றெய்தி
வடிவினிற் சிறந்தா னேனு மானிட னலனே வென்றார்.

இ - ள். கடி - வாசனை பொருந்திய, மலர் பகழி ஏந்தும் - பூங்கணைகளை யேந்திய, காமனும் - மன்மதனும், நாணும் - நாணத்தக்க, பொற்பின் - அழகையுடைய, அடல் கெழு - வெற்றிமிகுந்த, பரிதி - சூரியன் போன்ற, வை வேல்-கூரிய வேலையுடைய, ஐயனை - நளமகாராஜனை, இனிதின் - இனிமையினால், நோக்கி - பார்த்து, தொடிகழல்-கட்டப்பட்ட வீரக்கழலையுடைய, அமரர் யாரும்-தேவர்களனைவர்களும், துயரொடும் - துன்பத்துடன், அழுக்காறு எய்தி - பொறாமைகொண்டு, வடிவினில் - உருவத்தில், சிறந்தானேனும் - (இந்நளன்) சிறந்திருந் தானேனும், மானிடன் அலனே என்றார் - மனிதப்பிறப்பை யுடையவ னல்லனோ வென்றார்கள், எ - று.

க - து. தேவர்கள் நளன் அழகில் மிகுந்திருந்தாலும் தேவனல்லன் மனிதன்றானே என்றார்கள் என்பதாம்.

அழகிற் சிறந்த நளனைத் தேவர்கள் மற்றொன்றிலுங் குறைவுபடுத்தக் கூடாமல் 'வடிவினிற் சிறந்தானேனு மானிட னலனே' என்று பிறப்பிற் குறைவுசொல்லுதலால் அப்பொறாமை வார்த்தை அவனுக்குக் கல்வி, செல்வம், வீரம், தீரம், போகம், அரசு, வெற்றி, நற்குணம், நற்செய்கை முதலியவற் றொன்றினும் ஒரு குறைவுமில்லையென்பதனைப் புலப்படுத்தி நின்றது. அவர்களுக்கு நாம் மானிடரும் புண்ணியப்பேற்றாற் பெறுவதாகிய தெய்வப்பிறப்பினால் உயர்ந்திருக்கின்றோ மென்பது கருத்து. (அக)

[இதனால் நளனைக் கண்ட தேவர் முதலானவர் நாணஞ் சொல்லப்படுகின்றது.]

ஓவிய ரெழுத வொண்ணா வுலப்பொரு வயிரத் திண்டோள்
வாவுமான் றடந்தே ரண்ணல் வனப்பினை நேரா ராகித்
தேவரில் வையங் காக்கு மரசரிற் செவ்வி வாய்ந்த
காவலர் திருந்த நோக்கார் கடைக்கணா னோக்கி னாரால்.

இ - ள். ஓவியர் - சித்திரக்காரராலும், எழுத ஒண்ணா - எழுதக்கூடாத, உலம் பொரு - திரள்கல்லை யொத்த, வயிரம் - வச்சிரம் போன்ற, திண் தோள் - வலிமைபெற்ற தோளையும், வாவும் - தாவுகின்ற, மான் - குதிரைகட்டிய, தடம் - பருத்த, தேர் - தேரையுமுடைய, அண்ணல் - பெருமையிற் சிறந்தோனாகிய நளமகாராஜனது, வனப்பினை - அழகை, நேரார் ஆகி - ஒவ்வாதவர்களாய், தேவரில் - தேவருக்குள்ளேயும், வையம் காக்கும் - பூமியைப் புரக்கின்ற, அரசரில் - அரசருக்குள்ளேயும், செவ்வி வாய்ந்த - அழகுபொருந்திய, காவலர் - அரசர்கள், திருந்த - நேராக, நோக்கார் - பாராராகி, கடைக்கணால் - கடைக்கண்ணினால், நோக்கினார் - பார்த்தார்கள், எ - று.

க - து. தேவர்களும் அரசர்களும் நளன் அழகுக் கொவ்வாதவர்களாகி அவனழகை நேராகப்பாராது கடைக்கண்ணாற் பார்த்தார்கள் என்பதாம்.

அழகிற் சிறந்தவனை அது குறைந்தவன் நேராகப்பார்த்தால் நம் மழகிடத்தில் இவன் மிக்க விருப்புள்ளவனாய் நோக்குகின்றனனென்று எண்ணங்கொள்வானென்று நாணத்தால் கடைக்கண்ணாற் பார்த்தல் உலகத்திற் சுபாவமென்க. (௯0)

[இதனால் நளனிருந்தல் சொல்லப்படுகின்றது.]

விரிகதி ரெறிக்கும் பைம்பூண் விதர்ப்பர்கோ னினிதி னிட்ட
வரியினஞ் சுமந்த பைம்பொ னணிமணித் தவிசின் மீது [ய
குருதிகொப் புளிக்கும் வைவேற் குமரனி னிருந்தான் வெய்
செருமலி கடலந் தானைத் தீயுமிழ் வேலி னானே.

இ - ள். விரி கதிர் - விரியப்பெற்ற கிரணங்களை, எறிக்கும் - வீசுகின்ற, பைம்பூண் - பசும்பொன்னாற்செய்த ஆபரணங்களை யணிந்த, விதர்ப்பர்கோன் - வீமராஜனால், இனிதின் இட்ட - இனிமையினாலிடப்பட்ட, அரி இனம் - சிங்கக்கூட்டங்கள், சுமந்த - தாங்கிய, பைம்பொன் - பசியபொன்னாற் செய்த, அணி - அழகிய, மணி தவிசின் மீது - ரத்நாசனத்தின்மேல், வெய்ய - வெவ்விய, செருமலி - போர்

மலிந்த, கடல் அம் தானை - சேனாசமுத்திரத்தையும், தீ உமிழ்-தீயை யுமிழ்கின்ற, வேலினன் - வேற்படையையுமுடைய நளமகாராஜன், குருதி-உதிரத்தை, கொப்புளிக்கும்-உமிழ்கின்ற, வை வேல் - கூரிய வேலையுடைய, குமரனில் - குமாரக்கடவுள்போல், இருந்தான்-இருந் தனன், எ - று. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. நளன் நவமணிகளிழைத்த சிங்காசனத்தில் சிவசுப்பிர மணியக் கடவுள்போல் வீற்றிருந்தா னென்பதாம்.

விதர்ப்பர்கோனிட்ட மணித்தவிசி லிருந்தனனெனக் கூட்டுக. விவாகமண்டபத்திற்கு வந்ததும் வீமன் மரியாதை செய்ததும் தேவ ராதியர்க்குப் பொதுப்படச்சொல்லி நளமகாராசனுக்கு மாத்திரம் வேறு பிரித்துச் சொல்லியது அவனுக்கு அவ்வளவு சிறப்பிருத்தலா லும் தமயந்தி விரும்பி மாலையிடலாலு மென்க. (கக)

[இதனால் மன்மதன் வியந்தல் சொல்லப்படுகின்றது.]

கொங்கவி ழுருவப் பைந்தார்க் குமரனை யினிது நோக்கி
யிங்கிவன் வனப்புக் கொவ்வா திழிவர லெய்தி டாம
லைங்கணைக் கிழவன் வெய்ய வழற்கணா லருவ மாக்குந்
திங்களங் கண்ணி முக்கட் டேவனை வியக்கு மன்றே.

இ - ள். கொங்கு - வாசனை, அவிழ் - விரிகின்ற, உருவம்-உரு வத்தையுடைய, பை தார் - பசியமாலையையணிந்த, குமரனை-நளனை, இனிது - இனிமையால், நோக்கி - பார்த்து, இங்கு - இவ்விடத்தில், இவன் - இவ்வரசனுடைய, வனப்புக்கு - அழகிற்கு, ஒவ்வாது - நிக ராது, இழிவரல் - இழிதகவை, எய்திடாமல்-அடையாமல், ஐங்கணை கிழவன் - பஞ்சபாணங்களுக் குரியவனாகிய மன்மதனானவன், வெய்ய - வெவ்விய, அழல் கணால் - தீவிழியால், அருவம் ஆக்கும் - (தன்னை) அருவமாக்கிய, திங்கள் அம் கண்ணி-ஒற்றைக்கலையாகிய சந்திரகண் டத்தைத் தரித்த, முக்கண் தேவனை - பரமசிவனை, வியக்கும்-அதி சயிப்பான், எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. மன்மதன் நளன் அழகுக்குமுன் அவமானப்படாமல் சிவன் தன்னை அருபமாக்கினதற்காக மகிழ்ச்சி யடைந்தான் என்ப தாம்.

ஐங்கணைக்கிழவன் முக்கட்டேவனை வியத்தலாவது நாம் எல்லா ரும் அழகில் உவமிக்கப்பட்டிருந்தோம், இது பொழுது நம்மை அழ கால் வென்ற நளனால் இவ்வரசர் முன்னே அவமானப்படாமல் ஈசன் அருவமாக்கியது நமக்கு நன்மையாயிற்றென்று நினைத்து மகிழ்தலாம். [அருவமாக்கிய குற்றத்தைக் குணமாகக் கொள்ளுதலால் இலேச வணி.] (கஉ)

[இதனால் விவாக மண்டபத்திற்கு உவமை சொல்லப்படுகின்றது.]

ஏழ்நில வரைப்பில் வானிற் பாதலத் தினிது வைகும்
பாழியந் தடந்தோள் வேந்தர் பலரும்வந் தமர்ந்த வாற்றாற்
கேழ்கிளர் மணிசெய் மாடங் கிளர்வெயி லெறிக்குஞ் செய்ய
வாழியந் தடக்கை மாய னகடுபோ லிருந்த தம்மா.

இ - ள். ஏழ் நில வரைப்பில்-சத்ததீவுகளிலும், வானில்-தேவருலகத்திலும், பாதலத்து - நாகருலகத்திலும், இனிது வைகும் - இனிமையொடு தங்கிய, பாழி - அகலமாகிய, அம்-அழகிய, தடம்-பருத்த, தோள்-தோள்களையுடைய, வேந்தர் பலரும் - அரசரனைவரும், வந்து அமர்ந்த ஆற்றால் - வந்து தங்கியபடியால், கேழ் கிளர்-ஒளிமிகுந்த, மணி செய்-ரத்நங்கள் பதித்த, மாடம்-விவாகமண்டபமானது, கிளர்-பிரகாசிக்கின்ற, வெயில் எறிக்கும் - வெயிலை வீசப்பெற்ற, செய்ய - சிவந்த, ஆழி - சக்கிரமேந்திய, அம் - அழகிய, தடக்கை - விசாலம் பொருந்திய கையையுடைய, மாயன்-திருமாலினது, அகடு போன்று-வயிற்றை யொத்து, இருந்தது - இருந்தது, எ - று.

க - து. விவாக மண்டபமானது பிரளயகாலத்தில் சராசரங்களடங்கிய திருமால் வயிற்றைப்போலிருந்தது என்பதாம்.

சத்ததீவுகளாவன-நாவலந்தீவு, சாகத்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, சான்மலித்தீவு, கோமேதத்தீவு, புட்கரணித்தீவு என்பனவாம். பிரளயகாலத்திற் சராசரங்களெல்லாம் நாரணக்கடவுளது வயிற்றில் அடங்கியிருத்தல்போல் இந்த விவாகமண்டபத்திலுந் திரிலோகத்தரசரும் அவர்கள் பரிவாரங்களும் அடங்கி யிருத்தலால் அவ்வயிறு உவமையாயிற்று. [இது உவமையணி.] (கூரு)

[இதனால் நளனழகு சொல்லப்படுகின்றது.]

மாங்குயிற் குதலைச் செவ்வாய் வனமுலைப் போகம்
வேண்டித், தேங்கமழ் தருவி னீழற் றேவரு நிடதங் காக்கு,
மோங்கெழு வனைய தோளா னுருவுகொண் டடைந்தா ரெ
ன்னி, லாங்கவன் வனப்பு நம்மா லறையலாந் தகைமைத்
தன்றே.

இ - ள். மா குயில் - மாமரத்திலிருக்குங் குயிற் சொல்லையொத்த, குதலை-மழலைச் சொல்லையும், செவ்வாய்-செவ்வாயையுமுடைய தமயந்தியினது, வன முலை - அழகிய ஸ்தனங்களினுடைய, போகம் வேண்டி - போகத்தை விரும்பி, தேம் கமழ் - வாசனை கமழ்கின்ற, தருவின் நீழல் - ஐந்தருவி னிழலிலிருக்கும், தேவரும் - இந்திரன்

முதலிய தேவர்களும், நிடதம் காக்கும்-நிடததேசத்தை பாலிக்கின்ற, ஒய்கு எழு அனைய தோளான்-உயர்ந்த எழுத்தூணையொத்த தோளை யுடைய நளமகாராஜனது, உருவு கொண்டு - வடிவைக் கொண்டு, அடைந்தார் என்னில் - வந்தாரேயானால், ஆங்கவன் - அவ்வரசனு டைய, வனப்பு - அழகு, நம்மால் - நம்மால், அறையலாம் - சொல்ல லாம், தகைமைத்து அன்று - தகைமையுடையதன்று, எ-று.

க - து. தேவர்களே நளனழகைக் கொண்டமையால் நளனழ கைச்சொல்ல எம்மா லாகுமோவென்றார் புராணிகர் என்பதாம்.

யாவரும் விரும்பித் தவஞ்செய்தடைதற்குரிய பொன்னுலகத் தையாளும் இந்திரன் முதலிய நால்வரும் தம்முருவோடி ருந்தால் தமயந்திமாலை தரிக்கமாட்டாளென்று அழகிற்சிறந்த நளமகாராஜனு டைய உருவைக் கொள்வாரென்னில் அவனழகை ஒருவராலுஞ் சொல்லக்கூடாதென்க. ஏ - அசை. (கசு)

[இதனால் விவாகத்திற்கு வந்த அரசர் கூட்டத்துக்கு உவமை சொல்லப்படுகின்றது.]

வடுநெடுங் கண்ணி கொம்மை வருமுலை திளைப்ப வேண்டித்
தொடுகழ லரசர் வெள்ளந் தொக்கொருங் கிருந்த தோற்ற
முடல்சினத் திகிரி மாய னுந்தியங் கமலம் பூத்த
கடவுடன் படைப்பின் வீக்கங் காட்டுதல் போன்ற தன்றே.

இ - ள். வடு - மாவடுவை யொத்த, நெடு கண்ணி-நெடிய கண் ணையுடைய தமயந்தியினது, கொம்மை - இளமையையுடைய, வரு - வளரப்பெற்ற, முலை - ஸ்தனங்களில், திளைப்ப-அணைய, வேண்டி - விரும்பி, தொடு - கட்டப்பட்ட, கழல் - வீரக்கழலையுடைய, அரச வெள்ளம்-அரசர் கூட்டங்கள், தொக்கு-கூடி, ஒருங்கு இருந்த தோற்றம்-ஒருசேரவிருந்த தோற்றமானது, உடல்-பொருகின்ற, சினம்- கோபத்தையுடைய, திகிரி - சக்கரப்படையை யேந்திய, மாயன் - நாரணனுடைய, உந்தி அம் கமலம் பூத்த - நாபிக்கமலமானது தந்த, கடவுள் - பிரமதேவன், தன்படைப்பின் வீக்கம் - தனது சிருட்டியி னுடைய விரிவை, காட்டுதல் - காண்பித்தலை, போன்றது - ஒத்திரு ந்தது, எ - று.

க - து. திரிலோகத்திலுமுள்ள பிரமசிருட்டியி லடங்கிய அனை வரும் வந்திருந்தார்கள், அதனால் பிரமசிருட்டிபோ லிருந்தது என்ப தாம்.

இங்ஙனஞ் சொல்லுதலால் திரிலோகத்திலுமுள்ள பிரமசிருட டியிலடங்கிய அனைவரும் வந்திருக்கின்றன ரென்பது கருத்து. [இங்

னங்கூடிய வரசவையில் பிரமன் படைப்பின் வீக்கங்காட்டுதல் போன்றதெனக் குறித்தலால் தற்குறிப்பணி.] (௩௫)

[இதனால் அரசர் ஒருசேரக்கூடுதல் சொல்லப்படுகின்றது.]

தனியுருத் தாங்கி யீசன் றழல்விழிப் பட்டோ மென்று
பனிமலர்ப் பகழி மாரன் பலவுரு வெடுத்தல் போலக்
கனிபடு கிளவி யாடன் கதிரிள முலையிற் றோய்வான்
குனிசிலைத் தடக்கை வேந்த ரொருவழிக் குழுமி னாரே.

இ - ள். பனி - குளிர்ச்சிபொருந்திய, மலர் பகழி - பூங்கணைகளையுடைய, மாரன் - மன்மதனானவன், தனி உரு தாங்கி - ஒருவடிவங்கொண்டு, ஈசன் - பரமசிவனுடைய, தழல் விழி - நெருப்புக்கண்ணினால், பட்டோம் என்று - இறந்தோமென்று, பல உரு எடுத்தல் போல - பலவடிவங் கொண்டதுபோல, கனி படு கிளவியாள்தன் - முக்கனிபோலுஞ் சொல்லையுடையவளாகிய தமயந்தியினது, கதிர் - காந்திபொருந்திய, இள முலையில் - இளமை பொருந்திய ஸ்தனத்தில், தோய்வான் - கலக்கும்படி, குனிசிலை - வளைந்த வில்லையேந்திய, தடம் கை - விசாலம் பொருந்திய கையையுடைய, வேந்தர் - அரசரானவர்கள், ஒருவழி - ஓரிடத்தில், குழுமினார் - கூடினார்கள், ஏ - ஈறு. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. அரசர்கள் மன்மதனை நிகர்த்திருந்தார்கள் என்பதாம்.

இங்ஙனஞ் சொல்லுதலால் விவாகத்திற்கு வந்த அரசரனைவரும் அழகினால் மன்மதனை யொத்திருந்தன ரென்பது கருத்து. [இதுவு முற்கூறியவணி.] (௩௬)

[இதனால் பிரமவிஷ்ணுக்களின் வரவு சொல்லப்படுகின்றது.]

வேனிலா னுயர்த்த வெற்றிக் கயலையும் வெருட்டி நீண்ட
மானின மருளு நோக்கின் மடவரல் வதுவை காண்பான்
பானிற வன்ன மூர்ந்த பழமறைக் கிழவ னோடு
நீனிறச் செங்கண் மாய னெடுவிசும் படைந்தான் மன்னோ.

இ - ள். வேனிலான் - மன்மதனானவன், உயர்த்த - பிடித்த, வெற்றி - வெற்றிபொருந்திய, கயலையும் - கொடியாகிய மீனையும், வெருட்டி - அச்சமுறுத்தி, நீண்ட - நீண்ட, மான் இனம் - மான்கூட்டங்கள், மருளும் - மயங்குகின்ற, நோக்கின் - பார்வையையுடைய, மடவரல் - தமயந்தியினது, வதுவை - விவாகத்தை, காண்பான் - காணும்பொருட்டு, பால் - வெள்ளிய, நிறம் - வண்ணத்தையுடைய,

அன்னம் ஊர்ந்த-அன்னப்பறவையைச் செலுத்திய, பழமறை கிழவனேடும்-பழமையாகிய வேதங்களுக்குரியவனுகிய பிரமதேவனேடும், நீல் நிறம்-கரிய வண்ணத்தையும், செம் கண் - சிவந்த கண்ணேயுமுடைய, மாயன் - நாரணனுனவன், நெடு விசும்பு - நெடிய ஆகாயத்தின் கண், அடைந்தான் - வந்தான், எ - று.

க - து. பிரமனும் விஷ்ணுவுந் தமயந்தி கலியாணத்திற்கு வந்தார்கள் என்பதாம்.

தமயந்தியினுடைய கடைக்கண் பார்வையைக் குறித்துத் திரிலோகத்தரசரும் வந்திருக்கிறபடியால் அவள் பார்வைக்கு அவ்வளவு சிறப்புச் சொல்லினர். (கள)

[இதனுல் வீமன் செய்கை சொல்லப்படுகின்றது.]

அவ்வழி நிணம்வாய்ப் பில்கி யழலுமிழ்ந் தரத்தந் தோயு
நெய்வழி பரிதி வைவேல் விதர்ப்பர்கோ னீல வுண்கட்
செவ்வழி யனைய தீஞ்சொற் றெரிவையர் தம்மை நோக்கி
மைவழி கரிய கூந்தன் மங்கையைக் கொணர்மி னென்ருன்.

இ - ள். அவ்வழி - அப்பொழுது, நிணம் - நிணத்தை, வாய் பில்கி - வாயாற் கொப்புளித்து, அழல் உமிழ்ந்து-நெருப்பைக் கக்கி, அரத்தம் தோயும் - உதிரம் படிகின்ற, நெய் வழி - நெய் யொழுகுகின்ற, பரிதி - சூரியனையொத்த, வை வேல் - கூரியவேலையுடைய, விதர்ப்பர் கோன் - விதர்ப்பதேசத்தார்க் கரசனுகிய வீமராஜனுனவன், நீலம் - கருங்குவளை மலர்போன்ற, உண் கண் - மையுண்ட கண்களையுடைய, செவ்வழி அனைய - செவ்வழிப்பண்ணையொத்த தீ சொல்-மதுரம் பொருந்திய சொல்லையுடைய, தெரிவையர் தம்மை நோக்கி - மாதரைப் பார்த்து, மை வழி - மயிர்ச்சாந்தொழுகுகிற, கரிய கூந்தல் - கரிய குழலையுடைய, மங்கையை - தமயந்தியை, கொணர்மின் என்ருன் - அழைத்துக்கொண்டுவாருங்க ளென்ருன், எ - று.

க - து. வீமராஜன் தமயந்தியைக் கொண்டுவரும்படிப் பெண்களுக்குக் கட்டளையிட்டான் என்பதாம்.

நிணம் - கொழுப்பு. நெய் - எண்ணெய். இப்பொழுது நற்பொழுதாயிருக்கின்றபடியால் கன்னியை யழைத்துக்கொண்டு வரச் சொன்னுர்களென்று மங்களவார்த்தைசொல்லச் செல்கின்றவராகையால், அத்தன்மைதோன்றத் 'தீஞ்சொற்றெரிவையர்' என்றமாத்திரத்தொழியாது 'செவ்வழியனைய' என்ருர். (கஅ)

[இனிப் பதின்மூன்று பாட்டால் தமயந்தியது செய்கை சொல்லத்தொடங்கி இதனால் மாதர்சென்றமை சொல்லப்படுகின்றது.]

உரையது கேட்ட லோடு மோடரித் தடங்க ணல்லா, ரெரிபரந் திமைக்கும் பைம்பூ ணின்னரிச் சிலம்பொ டேங்கப், புரிகுழன் மாலை சோரப் பூசல்வண் டார்த்துப் பொங்க, விரைவின ரேகிப் பைம்பொன் விளங்கிழை கோயில் புக்கார்.

இ - ள். உரையது - அச்சொல்லை, கேட்டலோடும் - கேட்ட வளவில், ஓடரி - செவ்வரிபரந்த, தடம் கண் நல்லார் - விசாலம் பொருந்திய கண்களையுடைய மாதர்கள், எரி பரந்து - ஒளி பரவி, இமைக்கும் - விளங்குகின்ற, பைம்பூண் - பசிய ஆபரணங்கள், இன் அரி சிலம்பொடு - இனிய கிண்கிணியையுடைய பாதசாலத்தோடு, ஏங்க - ஒலிக்க, புரி - கட்டப்பட்ட, குழல் - கூந்தலி லிருக்கின்ற, மாலை சோர - மலர்மாலை சோர்வையடைய, பூசல் - மிகுந்த வொலியையுடைய, வண்டு - வண்டுகள், ஆர்த்து - ஒலித்து, பொங்க - எழும்ப, விரைவினர் - விரைவுகொண்டவராகி, ஏகி - போய், பைம்பொன் - பசிய பொன்னாற் செய்த, விளங்கு இழை-ஒளிசெய்கின்ற ஆபரணத்தையுடைய தமயந்தியினது, கோயில் - கன்னிமாடத்தில், புக்கார் - புகுந்தார்கள், எ - று.

க - து. மாதர்கள் தமயந்தி மாளிகையிற் சென்றார்கள் என்பதாம்.

நல்லார் உரைகேட்டவளவில் பூணுஞ்சிலம்பும் ஏங்க மாலை சோர வண்டார்த்துப் பொங்க விரைந்தேகிக் கோயில் புக்காரெனக் கூட்டுக. [விரைந்து செல்வோர்தன்மை கூறப்பட்டமையால் தன்மை நவிற்சியணி.] (கக)

[இது வீமன் மனைவிக்குச் சொல்லியது.]

வாங்குவிற் றடக்கை வேந்தன் வதுவைமண் டபத்தின் வல்லே, கோங்கிள முலையினாளைக் கொணர்கவென் றுரைத்தா னென்னத், தீங்கதிர்க் குழவித் திங்கள் சிறைகிடந் தனைய நெற்றிப், பூங்கொடி தன்னை யீன்ற பொற்றொடிக் குரைத்தா ரன்றே.

இ - ள். வாங்கு - வளைக்கப்பட்ட, வில் - வில்லையுடைய, தடம் கை - விசாலம் பொருந்திய கையையுடைய, வேந்தன் - அரசனாகிய வீமனானவன், வதுவை மண்டபத்தின் - விவாக மண்டபத்தில், வல்

லே - விரைவிலே, கோங்கு இள முலையினளை-கோங்கரும்பை நிகர்த்த இளமுலைகளையுடையவளாகிய தமயந்தியை, கொணர்க என்று-அழைத்துக்கொண்டு வாருங்களென்று, உரைத்தான் என்ன-சொன்னானென்று, தீ கதிர் - மதுரம் பொருந்திய கிரணங்களையுடைய, குழவி திங்கள் - இளம்பிறையானது, சிறை கிடந்தனைய - சிறையிருந்ததையொத்த, நெற்றி - நெற்றியையுடைய, பூ கொடி தன்னை அன்ற - பூங்கொடி போல்பவளாகிய தமயந்தியைப்பெற்ற, பொற்றொடிக்கு - பொன்வளையலையணிந்த நற்றாயாகிய சாருகாசினிக்கு, உரைத்தார் - சொல்லினார், எ - று.

க - து. மாதர்கள் வீமன் மனைவியாகிய சாருகாசினியிடத்து வீமன் சொன்னதைச் சொன்னார்கள் என்பதாம்.

தோற்றவனை வென்றவன் சிறையிடுத லியற்கையாதலால் நெற்றியால் வெல்லப்பட்ட பிறையைத் 'தீங்கதிர்க் குழவித் திங்கள் சிறை கிடந்தனையநெற்றி' என்றார். அங்ஙனஞ் சென்றமாதர் அரசன் தமயந்தியை அழைத்துவரச் சொல்லினானென்று அவள் நற்றாயாகிய சாருகாசினிக்குச் சொல்லினரென்க. வீமன் மனைவிக்குப்பெயர் சாருகாசினியென்பது, "வீரவேன் மன்னவன் விழையுங் கற்பினாள், மூரனோன் முறுவலை முறுவல் செய்தலாற், சாருகா சினியெனச் சாற்று நாமத்தா, ளோருமா நலமெலாந் திரண்ட வுள்ளத்தாள்" (பார்க்கவ புராணம்-விசுவாமித்திரனை வீமனடுத்தபடலம்-ம) இதனாலறிக.

[இதனால் தமயந்திக்கு நீராட்டல் சொல்லப்படுகின்றது.]

களிமகிழ் வெய்தி யாங்கட் கனைத்துவண் டிமிரும் பைந்தார்த், துளிமதுக் கோதை தன்னைத் துவரினும் விரையினானு, மொளிமணி கழீஇய தொப்ப வுவப்பொடுந் திமிர்ந்து பொங்குந், தெளிதிரை சுருட்டுங் கங்கைத் தீம்புன லாட்டினாரே.

இ - ள். களி மகிழ்வு எய்தி-மிகுந்த மகிழ்ச்சியையடைந்து, ஆங்கண்-அவ்விடத்தில், கனைத்து-ஆரவாரித்து, வண்டு இமிரும் - வண்டுகளொலிக்கின்ற, பைந்தார் - பசிய மலர்மாலையையணிந்த, துளி மது - தேன்றுளிக்கின்ற, கோதை தன்னை - கூந்தலையுடைய தமயந்தியை, துவரினும் - பத்துத்துவராலும், விரையினானும் - இருவகை வாசனைத் திரவியத்தாலும், ஒளி - ஒளியையுடைய, மணி கழீஇ ஒப்ப - மணியை யொப்பமிட்டதை யொப்ப, உவப்பொடும் - மகிழ்ச்சியுடன், திமிர்ந்து-பூசி, பொங்கும் - பொங்குகின்ற, தெளி திரை-

தெளிந்த அலைகளை, சுருட்டும் - மடக்குகின்ற, கங்கை - கங்காநதியி லிருந்து கொண்டுவந்த, தீ புனல் - இனிய நீரைக்கொண்டு, (மாதர் கள்) ஆட்டினார் - முழுகப்படுத்தினார்கள், எ-று. ஏ - அசை.

க - து. தமயந்திக்கு நீராட்டினார்கள் என்பதாம்.

"கங்கையின் களிற்றினுச்சிக் கதிர்மணிக் குடத்திற் றந்த, மங் கல வாசநன்னீர் மணிநிறங் கழீஇய தொப்ப, நங்கையை நயப்பவெ ல்லா விரையொடு துவருஞ் சேர்த்தி, யங்கர வல்குலாளை யாட்டினா ரரம்பை யன்னார்" (சீவகசிந்தாமணி-தத்தையாரிலம்பகம்-௩௬௧)எனப் பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. இருவகை வாசனைத் திரவியங் கள் ஓமாலிகையெனவும் பஞ்சவாசமெனவுஞ் சொல்வர். அவற்றுள் முப்பத்திரண்டு வகைசேர்ந்த ஓமாலிகையும் பஞ்சவாசமும் பத்துத் துவரும் முறையே இவ்விரண்டுபாட்டாலும் காண்க. "புழுகுசட்டங் கோட்டமா ரியக்கோட்ட நாகப் பூமுத்தக் காசுசயி லேகம்விலா மிச்சம், பழுதிலிரு வேரிமலை யிருவேரி மாஞ்சில் பச்சிலைகச் சோல மதி மதுரந்தக் கோலம், வழைமலர்நன் னாரிநீம் பூவெண்ணெய் கண்டில் வகுளப்பூத் தாவரிசி யேலஞ் சாதிக்காய், தழைசரள மில வங்க நாகணமஞ் சட்டி சண்பகமொட் டரத்தைநறும் பிசின்றகரங் குக்குல்", 'கூறியவோ மாலிகையெண் ணன்கொடு கத்தூரி குங்கும ங்கர்ப்பூரமகில் சந்தனமை விரையும், வீறியபான் மரநான்கு திரிபலை மா நாவன் மிக்க கருங்காலியெனுந் துவர்பத்து நல்லோர், தேறுவெ ள்ளி லோத்திரப்பூம் பொருக்கரைத்த சாந்துஞ் சேர்த்துநறு நெய் பூசித் திமிர்ந்தருவி போல, ஆறியமா மதக்களிற்றுப் பிடரின்வரு கங்கை யுவந்தாட்டித் திருமேனி யொற்றுடை புரிந்தார்" (பார்க் கவபுராணம் - திருமணப்படலம்-கஉ0-கஉக) முதலியவற்று லறிக. மரநான்காவன:—ஆல், அரசு, அத்தி, இத்தி என்பனவாம். திரிபலை யென்பது:—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் என்பனவாம். மணப்பெண்களுக்கு இவ்விரண்டுவகைத் திரவியங்களையும் வெவ் வேறு சேர்த்தரைத்துப் பூசி முழுக்காட்டல் விவாகநூலிற் சொல்லு நியதியாம். [மணிகழீஇயதொப்ப வெனலா லுவமையணி.] (க0க)

[இதனால் அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

புரிகுழல் புலர வாசப் பூம்புகை யூட்டி விண்டு
முருகுயிர்த் தினவண் டார்க்கு முல்லையுஞ் சூட்டி வேய்ந்து
வருமுலை முகட்டிற் றெய்வ மலையச்செஞ் சாந்து பூசி
யெரிமணிக் கலாபம் வீக்கி யிழைபல திருத்தி னாரே.

இ - ள். புரி-கட்டப்பட்ட, குழல் - கூந்தலானது, புலர - ஈரம் வாட, வாசப்பூம்புகை - வாசப்புகையை, ஊட்டி - ஊட்டுவித்து, வி

ண்டு-விரிந்து, முருகு உயிர்த்து - தேனைத்தந்து, இனவண்டு - வண்டுக்கூட்டங்கள், ஆர்க்கும்-ஒலிக்கப்பெற்ற, முல்லை அம் சூட்டு-முல்லை மாலையை, வேய்ந்து-சூடி, வரு முலை முகட்டில் - வளர்கின்ற ஸ்தனங்களினுச்சியில், தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, மலையம்-பொதிய மலையிற்றோன்றிய, செம் சாந்து - செந்நிறமுள்ள சந்தனக்குழம்பை, பூசி - தடவி, எரி மணி - ஒளியையுடைய மணிகளணிந்த, கலாபம் - கலாபத்தை, வீக்கி - தரித்து, இழை பல - இன்னும் அனேக ஆபரணங்களை, திருத்தினார் - அணிந்தார்கள், எ-று. ஏகாரம் - ஈற்றசை.

க - து. தமயந்தி கூந்தலுக்கு அகிற்புகையூட்டி மாலைசூட்டி கொங்கைகளிற் சந்தனம்பூசி மேகலாபரணங்கட்டிப் பலவாபரணங்களைத் தரித்தார்கள் என்பதாம்.

கலாபம் - பதினாறுகோவையுள்ள மணி. இழை திருத்தலாவது - உரிய விடங்களில் தக்கவாறணிதல். ஆபரணங்களுமனேகம், அணிந்தவரு மனேகரென்பது தோன்ற 'இழைபல திருத்தினார்' என்றார்.

[இதுவுமது.]

வேற்றுருக்கொண்டு மாதின் விளங்குவாண் முகத்திற்
சேர்ந்த, கூற்றினைத் தடங்க ணென்ன வஞ்சனங் குலவத்
தீட்டிக், கீற்றிளந் திங்க ளன்று கிளரொளி நுதலே யென்று,
தேற்றுவார் போலச் செய்ய திலகமு மெழுதி னாரே.

இ - ள். வேறு உருக்கொண்டு - வேற்று வடிவங்கொண்டு, மாதின் - தமயந்தியினது, விளங்கு - பிரகாசிக்கின்ற, வாள் - ஒளிபொருந்திய, முகத்தில் சேர்ந்த - முகத்திலடைந்த, கூற்றினை - யமனை, தடம் கண் என்ன - விசாலம்பொருந்திய கண்களென்று, அஞ்சனம் - மையை, குலவ தீட்டி - விளங்கவெழுதி, கீற்று - கீற்றாகிய, இளந் திங்கள் அன்று - இளம்பிறையன்று, கிளர் ஒளி - மிகுந்த ஒளியையுடைய, நுதலே என்று - நெற்றியே யென்று, தேற்றுவார் போல - தெளிவிப்பாரைப்போல, செய்ய - சிவந்த, திலகமும் - திலகப்பொட்டும், எழுதினார் - எழுதினார்கள், எ - று.

க - து. தமயந்தி கண்ணிற்கு மையும் நெற்றிக்குத் திலதமும் இட்டார்கள் என்பதாம்.

ஏ இரண்டில் முன்னையதுதேற்றம்; பின்னையது ஈற்றசை. கூற்றுவன் விழி வடிவங்கொண்டு இவள் முகத்திருப்பது எற்றுக்கெனின், தன் வடிவோடு மிருந்துகொண்டு உலகத்தார் நாடோறும் நிந்திக்கத் தானொருவனே கொலைப்பழியைச் சுமத்தல்பற்றிப்போ

லும். இங்ஙனஞ் சொல்லுதலால் யமன்போலும் விழிகள் ஆடவரைக் கொல்கின்றனவென்பது கருத்து. இளந்திங்களன்று நுதலேயென்று தேற்றுவார்போ லென்றதனால், நுதலே இளந்திங்களென் றிருந்தாற் படுமிழுக் கென்னெனின்? அதனை விரகிகள் நீக்கித் தலுண்டு, அந்நிந்தை இதற் கேறுமென்று கருதி அடையாளமாகத் திலகமு மெழுதினாரெனக்கொள்க. ['கூற்றினைத் தடங்கணென்னும் திங்களன்று நுதலேயென்னும்' ஒழிப்பணிகள் தேற்றுவார்போலவென்ற தற்குறிப்போடு கலந்துவருதலால் கலவையணி.] (௧0௩)

[இதுவுமது.]

வணங்கிடை யிறுவ தோரா வனமுலை கவர்ந்து கொண்ட, சுணங்கணி யாக முற்றுஞ் சுந்தரச் சுண்ண மாட்டிக், கணங்குழை முகத்துச் செவ்வாய்க் கன்னல்மென் றனைய தீஞ்சொ,லணங்கினுக் கணிசெய் வார்போ லணியினுக் கழகு செய்தார்.

இ - ள். வணங்கு - வளைந்த, இடை-இடையானது, இறுவது-ஒடிவதை, ஓரா - எண்ணாது, வன முலை - அழகிய முலைகளானவை, கவர்ந்துகொண்ட - கிரகித்துக்கொண்ட, சுணங்கு - தேமலையுடைய, அணி-அழகிய, ஆகம் முற்றும் - மார்பு முழுவதும், சுந்தரம் சுண்ணம் ஆட்டி-அழகிய பொற்றூளைத் தூவி, கணம் குழை முகத்து-கூட்டமாகிய மணிகள் பதித்த குழையையணிந்த முகத்தையும், செவ்வாய்-செவ்வாயையும், கன்னல் மென்றனைய - கரும்பைமென்றதை யொத்த, தீ சொல் - மதுர வார்த்தையையுமுடைய, அணங்கினுக்கு - தமயந்திக்கு, அணி செய்வார் போல்-அழகு செய்பவர்போல், அணியினுக்கு-ஆபரணங்களுக்கு, அழகு செய்தார் - அழகைச் செய்தார்கள், எ-று.

க - து. தமயந்தி அவயவங்களுக்கு ஆபரண மணிந்தார்கள், அணியாவிடினும் அவளியற்கை யழகே போதும் என்பதாம்.

ஆபரணங்கள் தமயந்தியின் அவயவங்களிலே தரிக்கப்பெற்றுச் சிறப்புப் பெறுதலால் 'அணியினுக் கழகுசெய்தார்' என்றார். இதனால் ஆபரணந் தரியாவிடினும் அவளுக்கு இயற்கை யழகே போதுமென்பது கருத்து. (௧0௪)

[இதனால் உபசரித்தல் சொல்லப்படுகின்றது.]

அயினிநீர் விளக்க மேந்தி யையவி சிதறி முத்தந்
துயல்வரு முலையி னார்தந் தொல்குலத் தெய்வம் போற்றி
முயலறு முழுவெண் டிங்கண் முகத்துவெண் முத்த மூரன்
மயிலியற் றிருவ னாளை வலஞ்செய்து காப்பு மிட்டார்.

இ - ள். அயினிநீர் விளக்கம் - ஆலாத்தியை, ஏந்தி - எதிரே யேந்தி, ஐயவி - வெண்கடுகை, சிதறி - வீசி, முத்தம் துயல்வரும் - முத்துவடமசைகின்ற, முலையினார் - ஸ்தனங்களையுடைய மாதர்கள், தம்-தம்முடைய, தொல் குலம் தெய்வம் போற்றி-தொன்று தொட்டு வணங்குகின்ற தெய்வத்தைத் துதித்து, முயல் அறு-முயற்கறை நீங்கிய, முழு வெள் திங்கள் - வெள்ளிய பூரண சந்திரனையொத்த, முகத்து - முகத்திடத்தில், வெள் முத்த மூரல் - வெள்ளிய முத்தையொத்த பற்களையும், மயில் இயல் - மயில்போன்ற சாயலையுமுடைய, திரு அன்னாளை - தமயந்தியை, வலம்செய்து-வலமாகச்சுற்றி, காப்பும் இட்டார் - திருநீறுந்தரித்தார்கள், எ-று.

க - ரு. மாதர்கள் தமயந்திக்கு ஆலஞ்சுற்றித் திருநீற்றுக் காப்பணிந்தார்கள் என்பதாம்.

அயினிநீர் விளக்கமென்பது மஞ்சணீர்க்கலத்திலே செஞ்சோற்றுத் திரளையை வைத்து அதன்மேலேற்றும் விளக்காம். ஐயவிசிதறு மென்பது வெண்கடு கிறைத்தல்; அது அலகை நீங்கும் பொருட்டுச் செய்வது. கடுகிற்குக் கடிப்பகை யென்னும்பெயர் வந்தது இதனாலெனக்கொள்க. கடி-அலகை. இனி இரட்டுற மொழிதலென்னு முத்தியால் வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமையென்னும் ஐவகை வண்ணமுள்ள சோற்றை வெவ்வேறு ஐந்துண்டைசெய்து பலியிடுவதெனினும் அமையும். காப்புமிட்டா ரென்னும் எச்சவும்மை இன்னும் செய்யவேண்டியவைகளைச் செய்தாரென்பதைக் காட்டி நின்றது. (க0ரு)

[இதுமுதல் நாலுபாட்டால் தமயந்தி சுயம்வர மண்டபத்திற்குப் புறப்படல் சொல்லப்படுகின்றது.]

பந்தொடு கழங்கும் பொன்னம் பாவையுங் கிளியும் யாழுஞ்
சிந்துரத் திலக நெற்றித் தெரிவைய ருடன்கொண் டேக
விந்திர குமர னன்னா னெழின்மணி யகலம் பூட்டக்
கொந்தவி ழலங்கன் மாலை கொண்டனர் மருங்கு செல்ல.

இ - ள். பந்தொடு - பந்துடனே, கழங்கும் - அம்மனையையும், பொன்னம் பாவையும் - சொர்ணப்பதுமைகளையும், கிளியும் - கிளிப்பிள்ளைகளையும், யாழும்-யாழையும், சிந்துரத்திலகம் நெற்றி-சிந்துரப் பொட்டணிந்த நெற்றியையுடைய, தெரிவையர்-மங்கையர்கள், உடன் கொண்டு ஏக-உடன்கொண்டு செல்ல, இந்திர குமரன் அன்னான்-இந்திர குமாரனை யொத்த நளமகாராஜனுடைய, எழில்-அழகிய, மணி-

ரத்நாபரணம் பூண்ட, அகலம் - மார்பினிடத்தில், பூட்ட - தரிக்க, தொத்து அவிழ்-கொத்துவிரிகின்ற, அலங்கல் மாலை - மலர்மாலையை, கொண்டனர் - (ஏந்திக்)கொண்டவர்கள், மருங்கு செல்ல - அருகே வர, எ-று. ஓடு - எண்ணொடு.

க - து. பெண்கள் பந்துடனே அம்மனையையும் பொற்பதுமைகளையும் கிளிகளையும் வீணைகளையும் மலர்மாலைகளையும் கொண்டு பக்கலில் வர என்பதாம்.

தமயந்தி அரசமாதாதலால் தனது செல்வ மிகுதிக்கேற்ப இதுவரையும் பொழுதுபோக்கற்குச் சகாயமாயிருந்த பந்துமுதலியவற்றையும் ஏவன் மாதர் உடன்கொண்டு சென்றனரென்க. தாமொரு கருமத்தின் பொருட்டுச் செல்லுபவர் இவைபோல்வனவற்றை உடன்கொண்டு சென்றதுண்டோவெனின் உண்டு. அது "கைக்கடா குரங்கு கோழி சிவல்கவுதாரி பற்றிப், பக்கமுன் போதுவார்கள் பயின்மொழி பயிற்றிச் செல்ல, மிக்கபூம் பிடகை கொள்வார் விரையடைப் பையோர் சூழ, மைக்கருங் கண்ணி னூர்கண் மறுகுநீண் மறுகில் வந்தார்" (பெரியபுராணம்-தடுத்தாட்கொண்ட சருக்கம்-கஅ) இதனாலறிக. இவள் நளனுக்கே மாலை சூட்டவேண்டுமென்றிருக்குந் துணிவாலும் இச்செய்யுள் பின்பு செய்யப்பட்டமையாலும் மாலையை 'இந்திர குமரனன்றொனழின்மணி யகலஞ் சூட்ட' என்றார். (க0௬)

விரியிருள் சீக்குங் கற்றை வெண்ணிறக் கவரி வீச
வெரிமணி யடைப்பை தாங்கி யின்னகை மகளிர் போத
வரிசிலை தூணி யொள்வாள் கேடகம் வளைக்கை பற்றிப்
புரிநரம் பிரங்கு தீஞ்சொற் பொன்னனார் முன்ன ரேக.

இ - ள். விரி இருள் - விரிந்த விருளை, சீக்கும் - ஓட்டுகின்ற, கற்றை - மயிர்த்தொகுதியாகிய, வெள் நிறம் கவரி - வெண்ணிறத்தையுடைய சாமரைகளை, வீச - (மாதர்களிருபாலும்) வீசிவர, எரி - ஒளிவிடுகின்ற, மணி - மணிகள்பதித்த, அடைப்பை தாங்கி - அடைப்பையைச் சுமந்து, இன் நகை - இனிய நகையையுடைய, மகளிர் - மாதர்கள், போத - செல்ல, வரி சிலை - நெடிய வில்லையும், தூணி - அம்புக்கூட்டையும், ஒள் வாள் - ஒளியையுடைய வாளையும், கேடகம் - கேடகத்தையும், வளை கை - வளையலையணிந்த கையில், பற்றி - ஏந்திக்கொண்டு, புரி நரம்பு - (யாழில்) கட்டிய நரம்புகள், இரங்கு - வருந்தும்படியாகிய, தீ சொல் - மதுரவார்த்தையுடைய, பொன் அனார் - மங்கையர்கள், முன்னர் ஏக-முன்னே செல்ல, எ-று.

க - து. சில பெண்கள் சாமரை வீசவும், சில பெண்கள் அடைப்பை யேந்திவரவும், வில்லையும் அம்புக்கூட்டையும் கேடகத்தையும் கையிற்றாங்கிச் சில பெண்கள் முன் செல்லவும் என்பதாம்.

மற்றைத் தொழிற் கேற்பக் கவரிவீசுதற்கும் மாதரென்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. அடைப்பை - தாம்பூலம் வைக்கும் ஒரு பாத்திரவிசேடமாம். விற்படை முதலியவற்றை மாதரேந்தி வந்தனரெனலால் அகங்காரப் பொருட்டன்றி ஒருவரெதிர்ப்பில் வெற்றி கொள்வாரோவெனில், துர்க்கை, காளி முதலியவரும் அசுரரைக் கொன்று வெற்றிபெற்றனரென்றும், கைகேசி முதலிய அரசமாதரும் விசயங்கொண்டனரென்றும் சரித்திர மிருத்தலால் இவருங் கொள்வாரென்க. ஆடை - இலை, அது இங்கு வெற்றிலையைக் குறித்தது.

தொல்குல மரபிற் றோன்றிச் சூழ்புல நெறியிற் காத்துக்
கல்வியின் றுறைகை போய விருத்தர்கஞ் சுகத்தின் மெய்யர்
வில்லுமிழ் மணியிற் செய்த வேத்திரக் கரத்தர் வேந்திர்
நில்லுமி னின்மி னென்று நீக்கினர் தொடர்ந்து செல்ல.

இ - ள். தொல் குல மரபில் தோன்றி-தொன்றுதொட்டு வருகின்ற நல்ல மரபிற் பிறந்து, சூழ் புலம் - ஒன்றைப் பற்றுகின்ற புலனைந்தையும், நெறியில் காத்து - புறம்போகவொட்டாம லடக்கி, கல்வியின் துறை - கல்வியின் வழியில், கைபோய - வல்லவராகிய, விருத்தர் - விருத்தரும், கஞ்சுகத்தின் மெய்யர் - கவசம்பூண்ட தேகத்தை யுடையவரும், வில் உமிழ் - ஒளியைக் கொப்புளிக்கின்ற, மணியில் செய்த - மணியினாற் செய்த, வேத்திரம் கரத்தர் - பிரம்பைக் கையிலுடையவரும் (ஆகிய சேவகர்கள்), வேந்திர் - அரசர்களே, நில்லுமின் நின்மின் என்று - நில்லுங்கள் நில்லுங்களென்று, நீக்கினர் - அவரை விலக்கினராகி, தொடர்ந்துசெல்ல - தொடர்ந்துடன் செல்ல, எ - று.

க - து. கல்வியில் வல்ல நற்குல விருத்தசேவகர்கள் அரசர்களை நில்லுங்களென்று பிரம்பால் விலக்கி உடன் செல்லவும் என்பதாம்.

தமயந்தி பெண்பாலாகையால் அதற்கேற்ப அவளருகே நின்று உபசரிக்க மாதரையும் பின்பு அம்மாதரைச் சூழ்ந்துவர நற்குண நற்செய்கையுள்ள விருத்தராகிய சேவகரையுஞ் சொல்லப்பட்டது. நீக்கினர் முற்றெச்சம். (க0அ)

பாயிருண் மேயும் பைம்பொன் னிலத்திடைப் பராரைச்
சாந்தத், தேய்வையின் மெழுகி நுண்டூ சுடுத்துமேற் றேங்
கொள் வாசத், தாய்மல ரணிச்சப் போது பரப்பிய வணி

கொள் வீதி, வேயுறழ் பசிய தோளி மெல்லடி பெயர்த்திட்
டாளே.

இ - ள். பாய் இருள் - பரவிய விருளை, மேயும் - மேய்கின்ற, பைம்பொன் நிலத்திடை - பசிய பொன்படுத்த பூமியிலே, பராரை - பரிய அடியையுடைய, சாந்தம் - சந்தனமரத்திற்கொண்ட கட்டை யாற் சேர்த்த, தேய்வையின் - குழம்பினால், மெழுகி - மெழுகி, நுண் தூசு - மெல்லிய வஸ்திரத்தை, உடுத்து - பரப்பி, மேல் - மேலே, தேம் கொள் - தேனைக்கொண்ட, வாசத்து - வாசனையோடு கூடிய, ஆய் - ஆய்ந்தெடுக்கப்பட்ட, மலர் - விரிந்த, அனிச்சப்போது - அனிச்சமலரை, பரப்பிய - பரப்பியிருக்கின்ற, அணி கொள் - அழகைக் கொண்ட, வீதி - வீதியிலே, வேய் உறழ் - மூங்கிலையொத்த, பசிய தோளி - பசிய தோள்களையுடைய தமயந்தியானவள், மெல் அடி - மெல்லியபாதத்தை, பெயர்த்திட்டாள் - தூக்கிவைத்து நடந்தாள், உ - று. ஏ - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. சந்தனத்தால் மெழுகி மெல்லிய சேலைவிரித்து மலர் பரப்பிய வீதியில் தமயந்தி நடந்தாள் என்பதாம்.

பொன் நான்கில் மாற்றுயர்ந்த சாம்பூநதப் பொன்னென்பதற்கு 'பாயிருண் மேயும் பைம்பொன்' என்றார். சாம்புநதம் - சாம்புநதியிற் பிறந்தபொன். பொன் நான்காவன - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என்பன. மெல்லிய பாதமாகையால் அதற்கேற்பப் பொன்னிலத்தில் சந்தனக்குழம்பால் மெழுகி நுண்சேடுத்து அனிச்சப்போது பரப்பிய வீதியென்றார். பங்தொடு என்னும் பாட்டு முதல் இந்தப்பாட்டு வரையுங் குளகமாய் பசிய தோளி யென்னும் எழுவாய் பெயர்த்திட்டாளென்னும் பயனிலையைக் கொண்டு முடிந்தது. (௧0௧)

[இதனால் சிலம்பொலியின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கலத்தொடு பழகுஞ் செம்பொற் கதிர்முலைக் களிநல் யானை
யுலப்பரு மதத்த காணி னுயிர்குடித் தன்றி நில்லா
நிலத்தலை காக்கும் வேந்திர் நீங்குக நீங்கு கென்னு
வலத்தக மூட்டுஞ் செம்பொ னடிச்சிலம் பரற்றச் சென்றாள்.

இ - ள். கலத்தொடு - ஆபரணத்தோடு, பழகும் - பழகுகின்ற, செம் பொன் - சிவந்த பொற்பிரகாசம் பொருந்திய, கதிர் - கிரணங் களையுடைய, முலை - ஸ்தனங்களாகிய, களி - களிப்பையுடைய, நல் யானை - நல்லயானைகளானவை, உலப்பரும் - கெடுதற்கரிய, மதத்த -

மதத்தையுடையன, காணில்-நம்மைக்கண்டால், உயிர் குடித்தன்றி-உயிரைக்குடித்தாலல்லாமல், நில்லா-நிற்றலைப் பெறமாட்டா; (ஆதலால்) நிலத்தலை - பூமியினிடத்தை, காக்கும்-புரக்கின்ற, வேந்திர் - அரசர்காள், நீங்குக நீங்குக என்று - நீங்கக்கடவீர் நீங்கக்கடவீரென்று, அலத்தகம் ஊட்டும்-செம்பஞ்சுக் குழம்பூட்டிய, செம் பொன்-சிவந்த பொன்னாற்செய்யப்பட்ட, அடி - பாதத்திலிருக்கின்ற, சிலம்பு-சிலம்புகள், அரற்ற - சத்திக்க, சென்றாள் - போனாள், எ - று.

க - து. அரசர்களே! தமயந்தி முலைகளாகிய யானைகள் உம்மைக்கண்டால் கொல்லும், நீங்கிப்போங்களென்று சொல்லுவதுபோலச் சிலம்பு சத்திக்கச் சென்றாள் என்பதாம்.

தம்மை மேற்கொண்ட பாதங்கள் மற்ற அவயவங்களைச் சுமந்து காத்தல்போல் பூமியைச் சுமந்து காக்கும் அரசராகையால் அவ்வன்புபற்றி அவரிறவாதபடி ஒரு தீங்கு வருமுன்னர்த் தெரிப்பவர்போ 'நிலத்தலை காக்கும் வேந்திர் முலைக்களி நல்யானை யுலப்பரு மதத்த காணி லுயிர்குடித் தன்றி நில்லா நீங்குக நீங்கு கென்று அடிச்சிலம் பரற்ற' வென்றார். நீங்குக நீங்குக வென்றது வந்தது வந்தது கூற்றென்றதுபோல் விரைவு பற்றிவந்தஅடுக்கு. முலைகளுக்கு யானையை உவமை சொல்லுதல், "கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர், படாஅ முலைமேற் றுகில்" (திருக்குறள்-தகையணங்குறுத்தல்-எ) இதனாலறிக. [சிலம்பொலித்தலில் நீக்குதற் குரியோர் சொல்லைக் குறித்தலால் தற்குறிப்பணி.] (கக ப)

[இதனால் தமயந்தி சுயம்வர மண்டபஞ் சேர்தல் சொல்லப்படுகின்றது.]

வரிவளைக் குலமும் வள்வார் மங்கல முரசுங் கன்னற், பொருசிலை மதனன் வின்னாண் புடைப்பொடும் பொங்கி யார்ப்ப, விரிதிரைப் பரவை யீன்ற விளங்கிழை யனைய நங்கை, திருமணி யிமைக்குஞ் செம்பொன் மண்டபஞ் சென்று சேர்ந்தாள்.

இ - ள். வரி - இரேகைகளையுடைய, வளை குலமும் - சங்குக் கூட்டமும், வள் வார் - இறுக்கிய வாரையுடைய, மங்கல முரசும் - விவாக பேரிகையும், பொரு கன்னல் சிலை - பொருகின்ற கரும்பு வில்லேந்திய, மதனன்-மன்மதனுடைய, வில் நாண் புடைப்பொடும்-வில்லினது குணத்தொனியோடும், பொங்கி - மிகுந்து, ஆர்ப்ப-சத்திக்க, விரி - விரிந்த, திரை - அலைகளையுடைய, பரவை ஈன்ற - பாற்கடல் பெற்ற, விளங்கிழை அனைய - திருமாதையொத்த, நங்கை -

தமயந்தி, திருமணி - உயர்ந்த ரத்நங்கள் பதிக்கப்பட்டு, இமைக்கும் - பிரகாசிக்கின்ற, செம் பொன் மண்டபம்-சிவந்த பொன்னாற்செய்த மண்டபத்தில், சென்று - போய், சேர்ந்தாள் - சேர்ந்தனள், எ-று.

க - து. தமயந்தி சுயம்வர மண்டபத்திற் சென்றாள் என்பதாம்.

தமயந்திமேல் விருப்புற்று விவாகஞ் செய்துகொள்ள வந்திருக்கின்ற அனேக அரசரும் இப்பொழுது அவளைக்கண்ட சமயமாகையால் காலம் பார்த்திருந்த மன்மதன் ஏககாலத்தில் இடைவிடாமல் அவர்மேல் பூங்கணை யெய்தல் பற்றிச் 'சங்கபேரிகையொலி வின்னாண்புடைப்பொடும் பொங்கியார்ப்ப' என்றார். விளங்கிழை-வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இது பரவையீன்ற என்னும் விசேடணத்தால் திருமாதைக் குறித்தது. பரவை-கடல்; அது ஈன்ற விளங்கிழை யென மேல்வருதலரல் பாற்கடற்காயிற்று. (கககக)

[இதனால் தமயந்தியைக் கண்ட அரசர் செய்கை சொல்லப்படுகின்றது.]

இழைசுட ரெறித்த லானு மிருவிசும் புறையும் வானோர்
பொழிமலர் மிடைத லானும் பூசல்வண் டிவர்த லானு
முழைபொரு தடங்கட் பேதை யுருவினைத் தெரியக் காணார்
விழைவொடு நோக்கும் வேந்தர் விழிநெருக் குற்ற மாதோ.

இ - ள். இழை - ஆபரணங்கள், சுடர் - ஒளியை, எறித்தலானும் - வீசுதலாலும், இரு விசும்பு - பெரிய சுவர்க்கத்தில், உறையும் - வசிக்கப்பெற்ற, வானோர் - தேவர்கள், பொழி-பொழிகின்ற, மலர்-பூக்கள், மிடைதலானும் - நெருங்குதலாலும், பூசல்-பூசலையுடைய, வண்டு-வண்டுகள், இவர்தலானும்-மொய்ப்பதனாலும், உழை பொரு-மானையொத்த, தடம் கண் பேதை-விசாலம் பொருந்திய கண்களையுடைய தமயந்தியினது, உருவினை - வடிவை, தெரிய காணார் - தெரியும்படி பாராராகிய, விழைவொடு - விருப்போடு, நோக்கும் - பார்க்கின்ற, வேந்தர் - அரசருடைய, விழி - விழிகளானவை, நெருக்குற்ற - நெருக்கமடைந்தன, எ-று. மாது, ஓ - அசைகள்.

க - து. ஆபரணங்களி னொளிகளாலும் மலர்களாலும் வண்டுகளாலும் தமயந்தி வடிவைக்காணாதவர்களாய் அரசர்கள் கண்கள் நெருக்குற்றன என்பதாம்.

இழைசுடரெறித்தல் முதலிய காரணங்கண் மூன்றும் பொதுப்படக்கூறினும் இழை சுடரெறித்தலாற் பார்த்தற்குக் கண்கூசி 'விழி நெருக்குற்ற' என்றும், மலர் மிடைதலானும் வண்டிவர்தலானும்

'உருவினைத் தெரியக்காணார்' என்றும் கொள்க. உருவினைத் தெரியக் காணாராயினும் வெறுப்பின்றி விழைவினால் அனேகர் நோக்குதலால் அவர் விழிகள் நெருக்கமுற்றன வெனினும் அமையும். உழைபெருநாட்டங்கணென்றதனால் மான் பார்வையை மாதர் கண்பார்வைக்கு உவமை சொல்லுதலன்றி மானையே அவர் கண்ணிற்கு உவமைசொல்லுதலுமுண்டு, அது, "கற்றை வார்குழ லாய்ச்சியர் கயல்விழி முகத்தின், பெற்றி யொப்புறப் பெருங்குருந் துச்சிமேற் றாவி, யொற்றை மானுடைக் கலைமதி யதனிழ லுறங்கு, மற்றை மானையும் பற்றுவான் கதிர்க்கையால் வருடும்" (காஞ்சிப்புராணம்-நாட்டுப்படலம்) இதனாலறிக. (கக௨)

[இதனால் தமயந்தி ஆபரணங்களில் நீலரத்நத்தின் விளக்கஞ் சொல்லப்படுகின்றது.]

அறற்கருங் கூந்தற் பேதை யணிகளிற் கரிய சோதி
யெறிக்குநன் மணியின் றோற்ற மெறிதிரைக் கடலின்
மொய்த்த, விறற்கதிர் வடிவேல் வேந்தர் விழைவொடு நோ
க்குங் கண்கள், பறிப்பரி யனவாய் மெய்யிற் பதிந்தன போலு
மாதோ.

இ-ள். அறல் - கருமணலையொத்த, கரு கூந்தல் - கரிய குழலையுடைய, பேதை - தமயந்தியினது, அணிகளில் - ஆபரணங்களுக்குள்ளே, கரிய சோதி - நீல வொளியை, எறிக்கும் - வீசுகின்ற, நன்மணியின் தோற்றம் - நல்ல நீலரத்நத்தின் காட்சியானவை, எறி - திரை - அலை யெறிகின்ற, கடலின் - கடல்போல், மொய்த்த - நெருங்கப்பெற்ற, விறல் - பெருமை பொருந்திய, கதிர் - கிரணங்களையுடைய, வடி வேல் - வடித்த வேலையுடைய, வேந்தர் - அரசர்கள், விழைவொடு - விருப்பத்தோடு, நோக்கும்-பார்க்கும், கண்கள் - கண்களானவை, பறிப்பரியனவாய் - வாங்குதற் கரியவாகி, மெய்யில் - தேகத்திலே, பதிந்தன போலும்-அழுந்தினபோலு மிருந்தன, எ-று. மாது, ஓ-அசைகள்.

க-து. தமயந்தி யணிந்த நீலரத்நங்களின் காட்சிகளானவை அரசர்கள் கண்களைப்போலு மிருந்தன என்பதாம்.

அணிகளிலே நவமணிகளும் அழுத்தியிருக்க நீலமணித் தோற்றத்தைச் சொல்லியது தமயந்தியைப் பார்க்கும் அரசர் கண்களை யுவமையாக்குதற் கென்க. [தமயந்தியி னணிகளிற் பதித்த நீலமணிகளில் அரசர் பார்வையைக் குறித்தலால் தற்குறிப்பணி.] (ககங)

[இதனால் அரசர் கூறுதல் சொல்லப்படுகின்றது.]

வஞ்சமொன் றின்றி வேற லரிதென வதுவை நாட்டி
விஞ்சையின் புணர்ப்பாற் கூற்றை விளங்கிழை வடிவ மாக்கி
யெஞ்சலி லுலக மன்னர் யாரையு மொருங்கு கொல்வான்
செஞ்சுடர் வயவாள் வேந்தன் றீவினை யிழைத்த தென்பார்.

இ - ள். வஞ்சம் ஒன்று இன்றி - வஞ்சனை யொன்றில்லாமல், வேறல் அரிது என-நம்மால் வெல்லப்படுத லரிதென்றெண்ணி, வதுவை நாட்டி - சுயம்வரமென்று நாட்டி, விஞ்சையின் புணர்ப்பால் - மந்திரவித்தையினுடைய சம்பந்தத்தால், கூற்றை-யமனை, விளங்கிழை வடிவம் ஆக்கி - விளங்குகின்ற ஆபரணங்களை யணிந்த தமயந்தியி னுருவமாகச்செய்து, எஞ்சல் இல் - குறைவில்லாத, உலக மன்னர் யாரையும் - திரிலோகத்திலுமுள்ள அரசரனைவரையும், ஒருங்குகொல் வான் - ஒருசேரக் கொல்லும்படி, செஞ்சுடர் - செய்ய கிரணத்தை யுடைய, வயவாள்-வெற்றி பொருந்திய வாட்படையையுடைய, வேந் தன் - வீமராஜனானவன், இழைத்தது - செய்தது, தீவினை என்பார்- தீவினையாகு மென்பார்கள், எ - று.

க - து. வீமன் இயமனைப் பெண்ணாக்கி அரசர்களைக் கொல்ல நினைத்தது தீவினை யென்பார்கள் என்பதாம்.

வீமன் வஞ்சகஞ்செய்து கொல்ல நினைத்தது யாதன் பொருட் டெனில் தனக்கு வலிமை மிக்கிருப்பினும் படையெடுத்து நம்மைத் தனித்தனி வெல்வதற்கு நெடுங்காலஞ் செல்லுமென்றும் அங்ஙனஞ் செல்லினுந் தன்னின்மிக்கவரு மிருப்பாரென்னுங் கருத்தால் வெற்றி யாகுமோ ஆகாதோ வென்றுங் கருதியென்க. இதுமுதல் நாலு பாட் டுக்கள் தமயந்தியைக் கண்ட அரசர்கள் சொல்லியனவென்க. (கககச)

[இதுவுமது.]

தொண்டைவாய் முத்த மூரற் றுடியிடை யறன்மென் கூந்த
லொண்டொடி வனப்பு வாய்ந்த வுருவுநங் கண்க ளாரக்
கண்டுழி வியந்து நெஞ்சங் களிப்புற வொற்றர் கூறப்
பண்டுநாங் கேட்ட வாற்றிற் பதின்மடங் காயிற் றென்பார்.

இ - து. தொண்டை வாய் - கொவ்வைக் கனிபோன்ற வாயை யும், முத்தம் மூரல் - முத்தையொத்த பல்லையும், துடி இடை - உடுக் கையை யொத்த இடையையும், அறல் மென் கூந்தல் - கருமணலை யொத்த மெல்லிய கூந்தலையுமுடைய, ஒள் தொடி - ஒள்ளிய வளை யலை யணிந்த தமயந்தியினது, வனப்பு வாய்ந்த - அழகு பொருந்திய,

உருவு - வடிவை, நம் - நம்முடைய, கண்கள் ஆர - கண்கள் திருத்தி பெற, கண்டுழி - கண்டவிடத்தில், வியந்து - அதிசயித்து, நெஞ்சம் - மனமானது, களிப்புற - களிப்பையடைய, ஒற்றர் கூற - ஒற்றர் சொல்ல, பண்டு - முன்னே, நாம் - நாம், கேட்டவாற்றில் - கேட்ட வகையில், பதின்மடங்கு - பத்துமடங்கு, ஆயிற்று என்பார் - மேலாயின தென்பார்கள், எ - று.

க - து. அரசர்கள் தமயந்தி யழகை வியந்தார்கள் என்பதாம்.

வியந்து பதின்மடங்காயிற் றென்பாரென்க. தமயந்திக்குத் தம்மோடு ஒற்றர் கூறிய அழகினும் இப்பொழுது பதின்மடங்கு அதிகரிக்கக் காண்டலால் அரசர்க்கு மோகமும் அவ்வளவாயிற் றென்பது கருத்து. கண்டவுழி கண்டுழியென நிலைமொழியீற்றகரம் தொகுத்தலாயிற்று. (கசரு)

[இதுவுமது.]

வள்ளுறை கழித்த வொள்வாண் மாறிவைத் தனைய வுணக
ணள்ளிக்கொண் டுயிரை யின்னே யருந்திடா தொழியி னன்
றெள்ளமிர் தனைய தீஞ்சொற் சேயிழை யுத்த ரீகத் [றோ
துள்ளுறை கொடிய கூற்ற முயிர்குடித் திடுவ தென்பார்.

இ - ள். வள் - கூர்மை பொருந்திய, உறை கழித்த - உறையினின்று நீக்கிய, ஒள் வாள் - ஒளிபொருந்திய வாளை, மாறி வைத்தது அனைய - மாறிவைத்தால் அதையொத்த, உண் கண் - மை யுண்ட கண்களானவை, உயிரை - ஆவியை, அள்ளிக்கொண்டு - கையி லள்ளிக்கொண்டு, இன்னே - இப்பொழுதே, அருந்திடாது - உண்ணாமல், ஒழியின் அன்றோ - நீங்கினலன்றோ, தெள் அமிர்து அனைய - தெளிவுபொருந்திய அமிர்தத்தையொத்த, தீசொல் - மதுரம்பொருந்திய சொல்லையுடைய, சேயிழை - தமயந்தியினது, உத்தரீகத்து உள் உறை - மேற்போர்வைக் குள்ளேயிருக்கும், கொடிய கூற்றம் - (முலைகளாகிய) கொடியகூற்றம், உயிர் - ஆவியை, குடித்திடுவது என்பார் - பருகுவ தென்பார்கள், எ - று.

க - து. அரசர்கள் தமயந்தி முலைகளாகிய யமன் உயிரைக்கெல்லு மென்பார்கள் என்பதாம்.

அள்ளிக்கொண்டு உயிரை யருந்துதல்பற்றிக் கண்களுக்கு வாளையுவமை யாக்கினர். கொல்பவன் மறைந்துவருவ னென்பதுதோன்ற ஸ்தனங்களை 'உத்தரீகத் துள்ளுறை கொடிய கூற்றம்' என்றார். தமயந்தி கண்களுக்கே உயிர் தப்பாதென்பது கருத்து. (கசசு)

[இதுவுமது.]

முருந்துற ழினிய மூரன் முகிழ்முலைப் பசிய வேய்த்தோட்
கருந்தடங் கண்ணி செவ்வாய்க் கமழ்திரை யமிழ்த மாந்த
வருந்தவம் புரிந்தோர் மண்ணி லரசரோ வமர ரேயோ
தெரிந்தில மென்ன மாழ்கித் தெருமர லெய்தி நிற்பார்.

இ - ள். முருந்து - மயிலிறகினடியை, உறழ் - ஒத்த, இனிய - இனிமையையுடைய, மூரல் - பற்களையும், முகிழ்-அரும்பையொத்த, முலை - ஸ்தனங்களையும், பசிய வேய் - பசிய மூங்கிலையொத்த, தோள் - தோள்களையும், கரு தடம் கண்ணி - கரிய பெரிய கண்களை யுமுடையவளாகிய தமயந்தியினுடைய, செவ்வாய்-சிவந்த வாயாகிய, கமழ் - வாசிக்கின்ற, திரை - பாற்கடலிற் றோன்றிய, அமிழ்தம் - அமிர்தத்தை, மாந்த - புசிப்பதற்கு, அரு தவம் புரிந்தோர் - அரிய தவத்தைச்செய்தவர், மண்ணில் - பூமியிலிருக்கின்ற, அரசரோ - அரசருக்கு ளொருவரோ, அமரரேயோ - தேவர்க்கு ளொருவரோ, தெரிந்திலம் என்ன - யாம் அறிந்திலமென்று, மாழ்கி-மயங்கி, தெருமரல் எய்தி - சுழற்சியடைந்து, நிற்பார் - நிற்பார்கள், எ - று.

க - து. தமயந்தியை அநுபவிக்கத் தவஞ்செய்தவர்கள் தேவர்களோ அரசர்களோ என்பார்கள் என்பதாம்.

ஒருவராயினும் அருந்தவம் புரிந்தோராகையால் அவ்வுயர்வு பற்றி அவரைப் பன்மைவிகுதியாற் கூறினர். தவம்புரிந்தவர் இன்னாரென்று தெரிந்தால் மற்றையவர் மாலைதரிக்கும்போது இங்ஙனமிருந்து அவமானப்படாமல் தம்மிடங்களிற் சேரலாமென்பது கருத்து. அது முன்னே தெரியாமையால் 'மாழ்கித் தெருமர லெய்தி நிற்பார்' என்றார். (ககஎ)

[இதுவுமது.]

அளியசீ றடிக ணோவ வனிச்சமே லொதுங்கச் செய்த[பார்
விளைமதுத் துளிக்குந் தண்டார் வேந்தனே கொடிய னென்
வளர்முலைப் பாரங் கண்டும் வண்டிமிர் தெரியல் சூட்டித்
தளரிடைக் கிடுக்கண் செய்த தாயரே கொடிய ரென்பார்.

இ - ள். அளியை - அளிதலையுடையவாகிய, சிறு அடிகள்-சிறிய பாதங்கள், நோவ - நோவையடைய, அனிச்சம்மேல்-அனிச்சமலரின் மேல், ஒதுங்க செய்த - நடக்கச்செய்த, விளை - விளைகின்ற, மது துளிக்கும் - தேன்றுளிக்கின்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, தார் - பூமாலையையுடைய, வேந்தனே-வீமராஜனே, கொடியன் என்பார் -

கொடியவனென்பார்கள்; வளர் - வளரப்பெற்ற, முலை-ஸ்தனங்களி னுடைய, பாரம் கண்டும் - சுமையைக்கண்டும், வண்டு - வண்டுகள், இமிர் - ஒலிக்கப்பெற்ற, தெரியல் சூட்டி - மாலையைச்சூட்டி, தளர்- தளரப்பெற்ற, இடைக்கு - மருங்குலுக்கு, இடுக்கண் செய்த - வருத் தத்தைச்செய்த, தாயரே - தாய்மார்களே, கொடியர் என்பார்-கொடி யரென்பார்கள், எ - று.

க - து. தமயந்தியை நடக்கச்செய்த வீமனே கொடியனென் பார்கள்; முலைப்பாரத்தின்மேன் மாலைசூட்டிய தாய்மார்களே கொடி ய ரென்பார்கள்.

அனிச்சமலர் மென்மையவா யிருப்பினும் மாதரடிக்கு வருத்தஞ் செய்யுமென்பது பற்றி 'அனிச்சமே லொதுங்கச் செய்த வேந்தனே கொடியன்' என்றார். அது "அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத ரடிக்கு நெருஞ்சிற் பழம்" (திருக்குறள்-நலம்புனைந்துரைத்தல்-க0) "அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதரடி மலர்க்குச், சனித்த நெருஞ் சிற்பழமென் றறிந்துந் தருவரன்றி, மனித்தர் வழங்கரும் வெங்கொ டும் பாலைவழி யொருநா, ளினித்த மொழியுடை யாரை யெவ்வாறு கொண் டேகுவனே" "தாமே தமக்கொப்பு மற்றில்லவர் தில்லைத் தண்ணனிச்சப், பூமேன் மிதிக்கிற் பதைத்தடி பொங்கு நங்காயெரி யுந், தீமேலயில்போற் செறிபரற் கானிற் சிலம்படிப்பா, யாமே நட க்க வருவினையேன் பெற்றவம் மனைக்கே" என்றற் றொடக்கத்தன வற்றா னுணர்க. தந்தைக்குப் பெண்கள் வருத்தந் தெரியாவிடினும் தாயருக்குந் தெரியாதென்பார் 'முலைப்பாரங் கண்டுந் தெரியல் சூட் டித் தளரிடைக் கிடுக்கண்செய்த தாயரே கொடியர்' என்றார். தாய ரெனப் பன்மையாகக்கூறுதலால் பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலை த்தாய், கைத்தாய், செவிலித்தாய் என்னும் ஐவரையுங்கொள்க. ()

[இதனால் தமயந்தி செய்கை சொல்லப்படுகின்றது.]

ஏமுறு மன்னர் யாரு மினையன கூறப் பைம்பொன்
வாமமே கலைக ளார்ப்ப மணிச்சிலம் பொலிப்பச் செய்ய
காமர்வாண் முகைய செவ்விக் காந்தளஞ் செங்கை கூப்பித்
தாமமேவற் றடங்க ணல்லா டாதையைத் தொழுது நின்றாள்.

இ - ள். ஏமுறும்-இன்பமடைகின்ற, மன்னர் யாரும் - அரச ரனைவரும், இனையன-இப்படிப்பட்ட வார்த்தைகளை, கூற-சொல்ல, பைம்பொன் - பசிய பொன்னாற்செய்த, வாமம் - அழகாகிய, மேகலைகள் - மேகலாபரணங்கள், ஆர்ப்ப - சத்திக்க, மணி - நவம ணிகளிழைக்கப்பெற்ற, சிலம்பு - பாதசாலங்கள், ஒலிப்ப-ஒலிக்கவும்,

(நடந்துவந்து) செய்ய - சிவந்த, காமர் - அழகுபொருந்திய, வாள்-ஒளியையுடைய, முகைய - அரும்பையுடையவாகிய, செப்வி - செவ்வியையுடைய, காந்தள் அம் செங்கை கூப்பி-காந்தண்மலரையொத்த சிவந்தகைகளைக்குவித்து, தாமம் - வெற்றிமாலையைத்தரித்த, வேல்-வேலையொத்த, தடம் கண் - விசாலம்பொருந்திய கண்களையுடைய, நல்லாள் - தமயந்தியானவள், தாதையை-தந்தையை, தொழுது நின்றாள் - வணக்கஞ்செய்து நின்றனள், எ - று.

க - து. தமயந்தி தன் பிதாவாகிய வீமனை வணங்கி நின்றாள் என்பதாம்.

ஏமமென்பது-ஏம் எனக்கடைகுறைந்து நின்றது. மன்னரெனப் பொதுப்படக் கூறலால் திரிலோகத்தரசரையுங் கொள்க. வீமனுடைய ஆணைப்படி நடக்க வேண்டியவளாகையால் அக்குறிப்புத்தோன்ற அவனைத் தமயந்தி வணங்கினளென்க. (கக௬)

[இதனால் வீமராஜன் செய்கை சொல்லப்படுகின்றது.]

சேவடி தொழுது நின்ற தெரிவையை மகிழ்ந்து நோக்கி
மூவுல காளும் வேந்த ரொருவழித் திரண்டு மொய்த்தார்
யாவரே யிவரை யெண்ணி யினையரென் றுரைப்பா ரென்னப்
பூவைபோன் மேனி யோனை நினைந்தனன் புலவு வேலான்.

இ - ள். சேவடி - (தன்னுடைய) சிவந்தபாதங்களை, தொழுது நின்ற - வணங்கிநின்ற, தெரிவையை - தமயந்தியை, மகிழ்ந்து - மகிழ்ந்து, நோக்கி-பார்த்து, மூவுலகு ஆளும் வேந்தர்-திரிலோகத்திலுமுள்ள அரசர்களும், ஒருவழி - ஓரிடத்திலே, திரண்டு - கூடி, மொய்த்தார் - நெருங்கினார்கள்; யாவர் - எவர்கள், இவரை - இவ்வரசரை, எண்ணி-நினைத்து, இனையர் என்று - இத்தன்மையர் என்று, உரைப்பார் என்ன-சொல்லுவாரென்று, பூவைபோல் மேனியானை-காயாமலரையொத்த வண்ணத்தையுடைய நாரணனை, புலவு வேலான் - பகைவரது மாமிசம் பொருந்திய வேற்படையை யுடையவனாகிய வீமராஜன், நினைந்தனன் - நினைந்தான், எ - று. எ - வினை.

க - து. வீமராஜன் விஷ்ணுவை நினைந்தான் என்பதாம்.

திரிலோகத்தரசரு நெருங்கியிருக்கின்றபடியால் இவர் இன்னாரென்று சொல்லுதற்குத் தேவராலன்றி மனிதராலாகாதென்பதைக் கருதி வீமன் திருமாலை நினைந்தனனென்க. வீமன் தெரிவையை நோக்கி நினைந்தனனெனக்கூட்டுக. பூவை-பொருளாகுபெயர். (

[இதனால் திருமாலின் செய்கை சொல்லப்படுகின்றது.]

மன்னவ னினைவை யோர்ந்து வண்டுழா யலங்கன் மார்பன்
றன்னடி தொழுது நின்ற சதுமுகத் தேவை நோக்கிக்
கன்னலிற் கனிந்த தீஞ்சொற் கலைமக ளன்றி யாரே
யின்னரென் றிவரை யெண்ணி யேந்திழைக் கிசைக்கு நீரார்.

இ - ள். மன்னவன்-வீமராஜனுடைய, நினைவை ஓர்ந்து-நினைப்பையறிந்து, வண் துழாய் அலங்கல் - வளம்பொருந்திய துளபமாலையையணிந்த, மார்பன் - மார்பினையுடைய நாரணனானவன், தன்னடி - தனதுபாதங்களை, தொழுது நின்ற - வணங்கிநின்ற, சதுமுக தேவை நோக்கி - பிரமதேவனைப்பார்த்து, கன்னலில் - கரும்பைக் காட்டிலும், கனிந்த - சுவைமுதிர்ந்த, தீஞ்சொல் - மதுரவார்த்தையையுடைய, கலைமகள் அன்றி - நாமகளல்லாமல், இன்னர் என்று - இத்தேயத்தினரென்று, இவரை - இவ்வரசரை, எண்ணி-நினைத்து, ஏந்திழைக்கு - தமயந்திக்கு, இசைக்கும் - சொல்லுகின்ற, நீரார் - தன்மையையுடையவர், யார் - யாவர், எ - று. ஏகாரம் - வினா.

க - து. விஷ்ணு வீமராஜன் நினைவையறிந்து பிரமனைப் பார்த்துச் சரஸ்வதியே தமயந்திக்கு இன்னாரின்னாரென்று சொல்லவல்லவள் என்றார் என்பதாம்.

மற்றையர்க்கு இவர் இன்னாரென்று தெரியினுஞ் சொல்லுதலரிதாகலால் 'கலைமகளன்றியாரே யின்னரென்றிவரையெண்ணி யேந்திழைக் கிசைக்கு நீரார்' என்றார். சொல்லிற்குக் கன்னலிற்கனிந்த வென்னும் அடைகொடுத்ததும் அதுபற்றியாம். (கஉ௪

[இதனால் பிரமன் நாமகளை ஏவல் சொல்லப்படுகின்றது.]

என்றலு மலரின் மேலோ னிளநிலா வெறிக்கு மேனி
மன்றலங் கரிய கூந்தல் வாணிவாண் முகத்தை நோக்கிச்
சென்றுநீ யரசர் வெள்ளத் திரளினை விதர்ப்ப னீன்ற [ள்.
பொன்றிகழ் முலையி னாளுக் குரையெனப் புவியிற் போந்தா

இ - ள். என்றலும் - இப்படியென்று சொன்னவளவில், மலரின் மேலோன் - பிரமதேவனானவன், இளநிலா-இளமை பொருந்திய நிலவினொளியை, எறிக்கும் - வீசுகின்ற, மேனி - திருமேனியையுடைய, மன்றல் - வாசனைபொருந்திய, அம் - அழகிய, கரியகூந்தல் - கறுத்தகூந்தலையுடைய, வாணி - நாமகளுடைய, வாள் - ஒளிபொருந்திய, முகத்தை நோக்கி - முகத்தைப்பார்த்து, நீ சென்று-நீ போய், அரசர் வெள்ளத்திரளினை - இராஜகூட்டத்திரட்சியை, விதர்ப்பன்

ஈன்ற - வீமன்பெற்ற, பொன் திகழ் - பொன்போன்ற தேமல்விளங்கிய, முலையினளுக்கு - தமயந்திக்கு, உரை என - சொல்லென்று சொல்ல, புவியில் - பூமியிலே, போந்தாள் - வந்தாள், எ - று.

க - து. பிரமன் சரஸ்வதியை நோக்கித் தமயந்திக்கு அரசர்கள்பெயரை அறிவியென்று சொல்ல அவள் பூமிக்கு வந்தாள் என்பதாம்.

மனிதப்பிறப்புற்ற வீமனேனும் தமயந்தியேனும் அருந்தவம் புரிந்து தம்மை வேண்டாதிருப்ப நாரணனேவலாற் பிரமன் நாமகளை விடுப்ப அவள்விரைந்துசேறலால், தந்தை வார்த்தையை மைந்தன் கடவாமையும் கணவன்மொழியைத் துணைவியிகவாமையும் பெறப்பட்டன. உரையென அவள் புவியிற் போந்தாளெனக்கொள்க. ()

போந்தவள் வண்டு மூசாப் பொன்னரி மாலை யோடும்
வார்ந்ததேந் தமாலை தாழ்ந்த வதுவைமண் டபத்தின் மேவி
யேந்தெழி லெருத்தங் கோட்டி நாணொடு மிறைஞ்சி நின்ற
கூந்தலம் பிடிக்கு வேந்தர் குலமுறை கிளக்க லுற்றாள்.

இ-ள். போந்தவள்-அப்படிவந்த நாமகள், வண்டு மூசா-வண்டுகளால் மொய்க்கப்படாத, பொன்னரி மாலையோடும் - பொன்னரி மாலையுடனே, வார்ந்த - நீண்ட, தேம் - வாசனைபொருந்திய, மாலை தாழ்ந்த - மலர்மாலைகள் தாழ்ந்த, வதுவை மண்டபத்தில் - விவாக மண்டபத்தில், மேவி - பொருந்தி, ஏந்து - தாங்கிய, எழில் - அழகுபொருந்திய, எருத்தம் கோட்டி-தலையை வளைத்துக்கொண்டு, நாணொடும் - நாணத்தோடும், இறைஞ்சி நின்ற - தொழுதுநின்ற, கூந்தலம்பிடிக்கு - தமயந்திக்கு, வேந்தர் குலமுறை - அரசர்மரபினை, கிளக்கலுற்றாள் - சொல்லத் தொடங்கினாள், எ-று.

க - து. சரஸ்வதியானவள் தமயந்திக்கு அரசர்கள் குலமுறை சொல்லத்தொடங்கினாள் என்பதாம்.

எருத்தங்கோட்டலும் நாணுதலும் மாதர்க்குச் சுபாவமாயினும் நாமகள் திரிமூர்த்திகளில் ஒரு மூர்த்தியினுடைய தேவியாதலால் அவரிடத்திலே இறைஞ்சியெனத் தமயந்திக்கு வணக்கமுஞ்சொல்லப்பட்டது. கூந்தலம் பிடியென்பது அதுபோன்ற நடையையுடையவளென்த் தமயந்திக் காதலால் உவமையாகுபெயர். இனி சஉ பாட்டால் அரசர்களை வெவ்வேறு சொல்லத்தொடங்கி ஆறுபாட்டால் தேவர்களைச் சொல்லுதல் காண்க. (கஉந)

சேயரி சிந்தி நீண்ட செழுங்கடை மழைக்கட் செவ்வாய்
மாயிரு ஞாலம் விற்கும் வருமுலைத் தெரிவை கேட்டி

யாயிரங் கதிர்கள் வீசி யங்கண்மா ஞாலம் போர்த்த
பாயிருள் பருகுஞ் செங்கேழ்ப் பரிதியிவ் விருந்த தேவே.

இ - ள். சேயரி - செவ்வரிகள், சிந்தி-சிதறப்பெற்று, நீண்ட - நெடுகிய, செழுங்கடை - செழுமைபெற்ற கடையையுடைய, மழை- குளிர்ச்சிபொருந்திய, கண் - கண்ணையும், செவ்வாய் - சிவந்தவாயை யும், மா - மகத்தாகிய, இரு - பெரிய, ஞாலம் - பூமியை, விற்கும் - விலைசெய்யும், வரு முலை - வளர்கின்ற ஸ்தனங்களையுமுடைய, தெரி வை - தமயந்தியே, கேட்டி - நீகேட்பாயாக, ஆயிரம் கதிர்கள் வீசி- ஆயிரங்கிரணங்களை வீசி, அம் கண்- அழகிய இடத்தையுடைய, மா- மகத்தாகிய, ஞாலம் - பூமியை, போர்த்த-மூடிய, பாய் இருள் - பர வியவிருளை, பருகும்-குடிக்கின்ற, செம் கேழ்-செந்நிறத்தையுடைய, பரிதி - சூரியன், இவ்விருந்த தேவு - இருத்தலையுற்ற இத்தேவன், எ - று. ஏகாரம் - ஈற்றசை.

க - து. தமயந்தியே இவன் சூரியதேவன் என்றாள் என்பதாம்.

பூமியை விற்றால் தமயந்தி முலைக்கு விலையாகு மென்பார் 'ஞா லம் விற்கும் வருமுலை' என்றார். பூமியை விடப் பெரிதும் வலிதும் பொறுமையுள்ளதும் வளமுள்ளதும் வேறொன்றில்லை யென்பதற்கு மாயிருவென்னும் அடைகள் கொடுக்கப்பட்டன. அது "தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும், பருவ முயற்சி யளவிற் பய த்தலு, மருவிய நன்னில மாண்பா கும்மே" இதனாலறிக. பூமியை மூடிய இருளையோட்டிக் கண்களுக்குத் தெரியத்தக்க நிலநீர் முத லிய வெல்லாப் பொருள்களையும் நாடோறுங் காட்டுகின்ற நன்றி தோன்றச் சூரியனை 'ஆயிரங் கதிர்கள் வீசி யங்கண்மா ஞாலம்போ ர்த்த, பாயிருள் பருகுஞ் செங்கேழ்ப் பரிதி' என்றார். (கஉச)

பண்ணமை யினிய தீஞ்சொற் படாமுலைப் பாவை கேண்மோ
கண்வழூக் குறுதண் சோதிக் கலைநில வெறிப்ப வல்லான்
மண்ணிய மணியிற்செய்த வான்றவி சிருந்த தேவன்
விண்ணவர்க் கமிர்த மீந்த வெண்கதிர்க் கடவு ளாமால்.

இ - ள். பண் - இசை, அமை - பொருந்திய, இனிய - இனிய வாகிய, தீஞ்சொல் - மதுரவார்த்தையையுடைய, படா - சாயாத, முலை - ஸ்தனங்களையுடைய, பாவை - தமயந்தியே, கேள் - கேட்பா யாக, கண் - கண்கள், வழுக்குறு - கூசுகின்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, சோதி - பிரகாசத்தையுடைய, கலை-சோடசகலைகளும், நிலவு எறிப்ப - ஒளிவீச, வல்லான் - வல்லவனும், மண்ணிய - ஒப்

டணையமைந்த, மணியின்செய்த - ரத்நங்களால் செய்யப்பட்ட, வான் - பெரிய, தவிசு - ஆசனத்தில், இருந்த தேவன்-இருத்தலையுற்ற தேவ னானவன், விண்ணவர்க்கு-தேவர்களுக்கு, அமிர்தம் ஈந்த-அமிர்தத் தைக்கொடுத்த, வெள் கதிர் கடவுளாம் - வெள்ளிய கிரணங்களையு டைய சந்திரனாகும், எ - று. மோவென்பது முன்னிலைக்கண் வந்த அசை.

க - து. இவன் சந்திரனென்றாள் என்பதாம்.

வல்லான் செய்த தவிசில் கலை நிலவெறிப்ப விருந்ததேவனென க்கூட்டுக. சந்திரனுடைய கலைகளை அபரபக்ஷத்துப் பிரதமை முத லாகத் தொடங்கிப் பதினைந்து திதியிலும் அக்கினி முதலாயினோ ருண்பர். பூர்வபக்ஷத்திலும் அப்படியே கலைகள் வளரும். தேவர்க ளுண்ணும்படி தன்னுடைய கலைகளைச் சந்திரன் தருதலால் 'விண் ணவர்க் கமிர்தமீந்த வெண்கதிர்க் கடவுள்' என்றார். (கஉகூ)

ஊர்சுணங் கணிந்து விம்மி பொழுகொளி யாரஞ் சூடி
யேர்கனிந் தொழுகும் பொம்ம லிளமுலை யணங்கு கேட்டி
தார்புனை மௌலி வேய்ந்து தணப்பிலா திருந்த தேவர்
மாரனில் வனப்பு வாய்ந்த மருத்துவத் தலைவர் தாமே.

இ - ள். ஊர்-பரவுகின்ற, சுணங்கு அணிந்து - தேமலையணிந்து, விம்மி - பருத்து, ஒழுகு ஒளி - ஒளியை வீசுகின்ற, ஆரம்-முத்துவட த்தை, சூடி - தரித்துக்கொண்டு, ஏர் - அழகானது, கனிந்து-முதிர் ந்து, ஒழுகும் - ஒழுகுகின்ற, பொம்மல்-பொலிவுபெற்ற, இளமுலை- இளமைபொருந்திய ஸ்தனங்களையுடைய, அணங்கு - தமயந்தியே, கேட்டி - கேட்பாயாக, தார் - மலர்மாலையை, புனை - தரித்த, மௌ லி வேய்ந்து - கிரீடத்தை யணிந்து, தணப்பிலாது - இணைபிரியாது, இருந்த தேவர்-(இங்கு) இருத்தலை யுற்றதேவர்கள், மாரனில் - மன் மதனைக்காட்டிலும், வனப்பு வாய்ந்த - அழகு பெற்ற, மருத்துவத் தலைவர் - அசுவினி தேவர்கள், எ - று. தாம், ஏ - அசை.

க - து. இவர்கள் அசுவினி தேவர்கள் என்றாள் என்பதாம்.

எப்பொழுதும் இருவரும் இணைபிரியாதிருத்தலால் 'தணப்பிலா திருந்த' என்றும், அழகின் மிக்கோராதலால் 'மாரனில் வனப்பு வாய் ந்த' என்றும், தேவர்களுக்கு வியாதி தீர்ப்பவர்களிற் றலைமையுடைய வராகையால் 'மருத்துவத் தலைவர்' என்றுஞ்சொல்லினார். தேவர்களு க்கும் வியாதியுண்டோவெனில் உண்டு. அது "வலாரிதோள் வாத நோயன் வண்மதி கயநோயாளன், சலாவறு வெப்புநோயிற் றொடக் குண்டான் றக்கனென்பா, னுலாவுறு சாவிலாத முடவனே யுரங்கொ

ண்மந்தன், சலோதர நோய்க்கோட் பட்டான் றண்புனற் கரையன் மாதோ" (தணிகைப்புராணம் - அகத்திய ரருள்பெறுபடலம்) இதனு லறிக. (கஉகூ)

வண்ணமே கலையாய் மற்றுன் வருமுலைப் போகம் வேண்டி
யெண்ணில ராகி யிப்பா லினிதுவீற் றிருந்தோ ரெல்லாம்
விண்ணவ ரப்பாற் பைம்பொன் வியன்றவி சிருந்த தேவர்
பண்ணமை திவவி னல்யாழ் பயின்றகாந் தருவ வேந்தர்.

இ - ள். வண்ணம்மேகலையாய்- அழகுபொருந்திய மேகலாபரண த்தை யணிந்த தமயந்தியே, உன் - உன்னுடைய, வரு-வளரப்பெற்ற, முலை - ஸ்தனங்களுடைய, போகம் வேண்டி-போகத்தை விரும்பி, எண்ணிலர் ஆகி-அளவற்றவராகி, இப்பால்-இப்புறத்தில், இனிது - இனிமையோடு, வீற்றிருந்தோர் எல்லாம் - வீறுடனிருத்தலை யுற்ற வர்களெல்லாரும், விண்ணவர் - தேவர்கள், அப்பால் - அவர்க்கப்புற த்தில், பைம்பொன் - பசியபொன்னாற் செய்த, வியன் - மேலாகிய, தவிசு இருந்த தேவர் - ஆசனத்திலிருக்கப் பெற்ற தேவர்கள், பண் அமை - இசையமைந்த, திவவின்-வலிக்கட்டிலையுடைய, நல் யாழ் - நல்லயாழை, பயின்ற - வாசிக்கின்ற, காந்தருவ வேந்தர் - கந்தருவ வரசர்கள், எ - று. மற்று - அசைநிலை.

க - து. இவர்கள் காந்தருவ அரசர்கள் என்றாள் என்பதாம்.

தேவர்களை இன்னாரின்னாரென்று வெவ்வேறு கூறத்தொடங் கிற் காலநீட்டிக்கு மென்பது பற்றி 'எண்ணில ராகி யிப்பா லினிது வீற் றிருந்தோ ரெல்லாம் விண்ணவர்' எனப் பொதுப்படக் கூறப்பட் டது. யாழினதிலக்கண முன் பெழுதப்பட்டது. அங்ஙனங் காண்க.

குழைமுகங் கிழிக்கும் வேற்கட் கொம்மைவெம் முலை யாய் கேட்டி, மழவிடை யென்ன வாங்கண் மணித்தவி சிரு ந்த தேவ, ரிழுமென வருவிச்சார லினமணி வரன்றித் தூங் கும், விழைவுறு வெள்ளி வெற்பின் விஞ்சையர்க் கிறைவர் தாமே.

இ - ள். குழை முகம் - காதணியினுடைய முகத்தை, கிழிக்கும்- கிழிக்கின்ற, வேல் கண் - வேல்போன்ற கண்களையும், கொம்மை - இளமையையுடைய, வெம் முலையாய்-விருப்பைச் செய்கின்ற ஸ்தன ங்களையுமுடைய தமயந்தியே, கேட்டி - கேட்பாயாக, மழவிடை யன்ன - இளவேற்றைப்போல், ஆங்கண் - அவ்விடத்தில், மணி தவிசு-ரத்நாசனத்திலே, இருந்த தேவர்-இருத்தலையுற்ற தேவர்கள்

இழும் என - இழுமென்று மோசையோடு, அருவி - அருவியானது, சாரல் - மலைப்பக்கத்தினின்றும், இனமணி - கூட்டமாகிய மணிகளை, வரன்றி - வாரிக்கொண்டு, தூங்கும் - ஒழுகுகின்ற, விழைவுறு-விருப்படைகின்ற, வெள்ளி வெற்பின் - கைலாசமலையிலிருக்கின்ற, விஞ்சையர்க்கு இறைவர்-வித்தியாதரருக் கரசர்கள், எ-று. தாம், ஏ என்பன இரண்டும் அசைகள்.

க - து. இவர்கள் வித்தியாதரருக் கரசர்கள் என்றாள் என்பதாம்.

இழுமென அருவி தூங்குமென்பது இழுமென்றல் விரைவினொலிக்குறியாம். "இழுமென விழிதருமருவி, பழமுதிர் சோலை மலைகிழவோனே" (திருமுருகாற்றுப்படை) எனப் பிறரும் இவ்வாறு கூறுதல்காண்க. ஐந்துமுகத்தோடுங்கூடிய சதாசிவமூர்த்தி யிருத்தலால் அங்கிருப்பின் நமக்கழிவில்லை யென்று யாவருந் தவஞ்செய்தடைதற்கு விரும்புவதாதலின் கைலாசமலையை 'விழைவுறு வெள்ளி வெற்பு' என்றார். (கஉஅ)

> முயற்கறை யொழிந்த செவ்வி முழுமதி யதனி னாளு
> மயக்கியுள் ளுயிரை யுண்ணும் வாள்கிடந் தனைய கண்ணாய்
> பயக்கருஞ் சிறப்பிற் றேவர் பரவவீண் டிருந்த காளை
> யியக்கர்தம் பெருமா னீன்ற வெழில்புனை குமர ரேறே.

இ - ள். முயல் கறை - முயலினது கறுப்பு, ஒழிந்த - நீங்கிய, செவ்வி - அழகு பொருந்திய, முழு மதி அதனில்-பூரணசந்திரனிடத்தில், நாளும் - நாடோறும், மயக்கி - மயங்கச்செய்து, உள் உயிரை - உள்ளேயிருக்கின்ற ஆவியை, உண்ணும் - உண்கின்ற, வாள் கிடந்து அனைய - வாளிருந்ததையொத்த, கண்ணாய்-கண்ணுடைய தமயந்தியே, பயக்கரும் - தோன்றுதற்கரிய, சிறப்பின் - சிறப்பினால், தேவர் பரவ - தேவர்கள் வணங்கும்படி, ஈண்டு இருந்த-இவ்விடத்தி லிருத்தலைப்பெற்ற, காளை - யவ்வன பருவத்தையுடைய அரசன், இயக்கர் தம் பெருமான் ஈன்ற - குபேரனாற் றரப்பட்ட, எழில் புனை-அழகு பொருந்திய, குமரர் ஏறு - நளகூபரன், எ - று. ஏ - அசை.

க - து. இவன் நளகூபரன் என்றாள் என்பதாம்.

திரவியமுடையவனை யாவருஞ் சூழ்ந்திருத்த லியல்பாதலின் நளகூபரன் குபேரன்மகனாதல்பற்றித் 'தேவர் பரவவீண்டிருந்த காளை' எனப்பட்டது. குபேரன் இயக்கர் வேந்தனென்பது "இயக்கர்வேந்தன் அளகையாளி" (திவாகரம் - தெய்வப்பெயர்த்தொகுதி) இதனாலறிக. இனி ஒரு பாட்டால் நாகவேந்தனைச் சொல்லுதல் காண்க.()

காதளவோடி மீண்டு கடைசிவந் தாவி யுண்ணு
மாதர்மென் னோக்கி னாயிம் மணித்தவி சிருந்த வேந்தல்
பூதர வில்லி னாணாய்ப் புனிதனுக் கணியு மாகிப்
பாதலத் தின்பந் துய்க்கும் பஃறலைப் பாந்தள் வேந்தே.

இ - ள். காது அளவு ஓடி - காதுவரையுமோடி, மீண்டு - திரும்பி, கடை சிவந்து - கடைக்கண் சிவந்து, ஆவி உண்ணும் - உயிரையுண்கின்ற, மாதர்-அழகிய, மெல் நோக்கினாய் - மெல்லியபார்வையையுடைய தமயந்தியே, இ மணி தவிசு இருந்த - இந்த ரத்நாசனத்திலிருத்தலைப்பெற்ற, ஏந்தல் - அரசனானவன், புனிதனுக்கு - பரமசிவனுக்கு, பூதரவில்லின் - மேருமலையாகிய வில்லில், நாண் ஆய்-நாரியாகியும், அணியும் ஆகி-ஆபரணமாகியும், பாதலத்து-நாகருலகத்திருந்து, இன்பம் துய்க்கும் - சுகத்தை யனுபவிக்கின்ற, பஃறலை-பலதலையையுடைய, பாந்தள் வேந்து - சர்ப்பராஜன், எ - று. ஏ - ஈற்றசை.

க - து. இவன் ஆதிசேடன் என்றாள் என்பதாம்.

பரமசிவன் திரிபுரத்தை அழிக்கத்தொடங்கியபோது மேருவை வில்லாக்கிக்கொண்டு அதற்கேற்பச் சர்ப்பராசனை நாணாக்கியபடியால் 'பூதர வில்லினாணாய்' என்றும், சர்ப்பங்களனைத்துஞ்சிவபூசைசெய்து எங்களை ஆபரணமாக்கிக் கொள்ளல் வேண்டுமென வரங்கேட்க அவ்வாறு அச்சிவன் கொடுத்தலாற் 'புனிதனுக்கு அணியுமாகி' என்றுஞ் சொல்லினார். இவை சிவபுராணம்பத்திலுங்காண்க. இனி ஐந்துபாட்டால் ஐந்து தீவிலு மிருந்துவந்த அரசரைச் சொல்லுதல் காண்க. ()

இழைபரந் திமைக்கு மல்கு லின்னகைப் பவளச் செவ்வாய்
மழைமதர் நெடுங்க ணல்லாய் மலர்க்கணை வேனில் வேளுந்
தொழுதகு வனப்பு வாய்ந்து தோன்றுமித் தோன்றல் வெய்ய
பொழிமதக் களிநல் யானைப் புட்கரத் தீவில் வேந்தே.

இ - ள். இழை-ஆபரணங்களால், பரந்து-பரவப்பெற்று, இமைக்கும் - பிரகாசிக்கின்ற, அல்குல் - அல்குலையும், இன் நகை-இனிய நகையையும், பவளச்செவ்வாய்-பவளம்போன்றசெவ்வாயையும், மழை-குளிர்ச்சிபொருந்திய, மதர்-களிப்பையுடைய, நெடு கண்-நெடியகண்களையுமுடைய, நல்லாய் - தமயந்தியே, மலர் கணை - புஷ்பபாணங்களையுடைய, வேனில் வேளும் - மன்மதனும், தொழுதகு-வணங்கத்தக்க, வனப்பு வாய்ந்து - அழகுபெற்று, தோன்றும்-தோன்றுகின்ற, இ தோன்றல் - இவ்வரசன், வெய்ய - வெவ்விய, பொழி மதம்-மும்மதமும் பொழிகின்ற, களி நல் யானை-களிப்பு மிகுந்த நல்ல யானை

களையுடைய, புட்கர தீவில்-புட்கரமென்னுந் தீவிலிருக்கின்ற, வேந்து - அரசன், எ - று.

க - து. இவன் புட்கரன் என்றாள் என்பதாம்.

வேந்து பண்பாகுபெயர். தேவர்களையும் நாகவேந்தனையுஞ் சொல்லி உடனே நாவலந்தீவரசரைக் கூறாது மற்றைத் தீவரசரைச்சொல்லிய தெற்றுக்கெனின், அவர்கள் சோகம் நரை திரை மூப்பின்றிப் பதினாயிரம் வயதுள்ளவராய்த் தேவரொடு ஒருபுடை யொத்திருத்தலி னென்க. அவர்களுக்கு அக்குணங்கள் "சாகமுத லிருமூன்றிற் றங்கினர்க டமக்கெல்லாஞ், சோகமில்லை யெந்நாளுந் துய்த்திருப்பர் சுகமவர்த, மாகமதி னரைதிரையு மில்லையயு தாயுள்வளர், மோகமிலை கலியுகத்துங் கிம்புருடர் முறைபெறுவர்" (சிவதருமோத்தரம்-சோபுரவியல்-எக) இப்பாட்டு முதலாவரும் பாட்டுத்தோறும் அரசர் செல்வச்சிறப்பைச் சொல்லுதலால் வீறுகோளணி காண்க. (கருக)

ஆற்றல்சான் மன்ன ராவி யருந்துவான் கரந்து வெய்ய
கூற்றிருந் தனைய வுண்கட் கோல்வளை யினிது கேட்டி
வேற்படைத் தானை சூழ வியன்றவி சிருந்த காளை
பாற்கட லுடுத்த சாகத் தீவுறை பரிதி வேலான்.

இ - ள். ஆற்றல் சால் - வலிமைமிக்க, மன்னர் ஆவி-அரசர்களுயிரை, அருந்துவான்-உண்ணும்படி, கரந்து-மறைந்து, வெய்ய-வெவ்விய, கூற்று இருந்து அனைய - யமனிருந்ததையொத்த, உண் கண்-மையுண்ட கண்களையுடைய, கோல்வளை - தமயந்தியே, இனிது கேட்டி - இனிமையோடு கேட்பாயாக, வேல் படை-வேற்படையை யேந்திய, தானை - சேனைகள், சூழ - தன்னைச்சுற்றும்படி, வியன் - அழகிய, தவிசு இருந்த-ஆசனத்திலிருக்கப்பெற்ற, காளை-அரசனானவன், பாற்கடல் உடுத்த - பாற்கடலையுடுத்த, சாகத்தீவு உறை - சாகமென்னுந் தீவிலிருக்கின்ற, பரிதி வேலான் - சூரியன்போன்ற வேற்படையையுடைய அரசன், எ - று.

க - து. இவன் சாகத்தீவரசன் என்றாள் என்பதாம்.

கடல்களேழினும் உயர்ச்சி பெற்ற கடலாதலாலும், அக்கடலிற் சிந்தாமணியாற் செய்யப்பட்ட மண்டபத்தில் உமாதேவி யோகநித்திரை கொண்டிருத்தலாலும், நாரணக்கடவுள் ஆலிலைமேல் அறிதுயில்கொண்டிருத்தலாலும், தேவர்களால் அமிர்தங்கடைத்தெடுக்கப்படுதலாலும், இலக்குமி முதலிய அழகின் மிக்க மங்கையரும் கவுத்துவமணி பஞ்சதருக்கள் ஐராவத முதலியவும் பிறத்தலாலும் அச்சிறப்பு விளங்க மற்றைத் தீவுகளுக்கு அவ்வக் கடல்களைக் கூறாது இத்தீவு

மாத்திரம் 'பாற்கட லுடுத்த சாகத்தீவு' என்று சிறப்பிக்கப்பட்டது. அதனால் அத்தீவைப்புரக்கும் அரசன் பெருமையுங் கூறியதாயிற்று. பாற்கடலிலே உமாதேவி யோகநித்திரை கொள்ளுதல் "ஆரமிர் தின் கடல்வேலி செழுத்தருவாய் மணிபம்பிய தீவூடே, பாரகடம் படர் கானி லருங்கொடை பாய்மணி மண்டப வீடுடே, கோரசிவன் பரமே சனு மஞ்சமொர் கூர்பரியங்கமெ னுமேலே, சீரடரும் பரஞான முறு ங்களிதே வரருந்தவர் பூமாதே" (சௌந்தரியலகரி-அ) இதனாலறிக.

தளரிடை மெலிய வீங்கிச் சந்தனத் தேய்வை கொட்டி
வளரிள முலையா யிங்ஙன் வைகிய மணிசெய் பூணு
னிளவெயிற் பரிதி மான்றே ரிடறுபொற் குடுமி யோங்கிக்
கிளரொளி விரிக்கு மாடக் கிரவுஞ்சத் தீவின் வேந்தன்.

இ-ள். தளர் இடை-தளர்கின்ற இடையானது, மெலிய-வாட வீங்கி - பருத்து, சந்தன தேய்வை - சந்தனக்குழம்பினை, கொட்டி அப்பி, வளர் - வளரப்பெற்ற, இள முலையாய் - இளமைபொருந்தி ஸ்தனங்களையுடைய தமயந்தியே, இங்ஙன்-இவ்விடத்தில், வைகிய தங்கிய, மணி செய் பூணன்-ரத்நாபரணங்களையுடைய அரசன், இள வெயில்-இளவெய்யிலையுடைய, பரிதிமான் தேர்-சூரியனுடைய குதி ரைகட்டிய தேரானது, இடறு - இடறுகின்ற, பொன் குடுமி-பொன் னாற்செய்த சிகரமானது, ஓங்கி - உயர்ந்து, கிளர்-மிகுந்த, ஒளி விரிக் கும் - காந்தியைப் பரப்புகின்ற, மாடம் - உபரிகைகளையுடைய, கிர வுஞ்ச தீவின் - கிரவுஞ்சமென்னுந் தீவையாளுகின்ற, வேந்தன்-அர சன், எ - று.

க - து. இவன் கிரவுஞ்சத்திவரசன் என்றாள் என்பதாம்.

இங்ஙனமென்பது இங்ஙனெனக் கடைகுறைந்தது. சூரிய னிர தத்திற் கட்டிய குதிரைகள் ஒளியை நோக்கிக் கண் கூசி ஒதுங்கி நடக்கப்பெறுமையால் 'பரிதி மான்றே ரிடறுபொற் குடுமி யோங்கிக் கிளரொளி விரிக்கு மாடம்' எனப்பட்டது. (கரு௯)

புரிவடஞ் சுமந்து வீங்கும் புணர்முலை யீங்கு வைகுந்
திருகுவெஞ் சீற்றத் துப்பிற் றிண்களி யானை யன்னான் [னும்
விரைமது வுயிர்க்குங் கைதை வேலிவாய் மணியும் பொன்
வருதிரை சுருட்டுங் கானல் வான்குசைத் தீவில் வேந்தன்.

இ - ள். புரி வடம் - முத்துவடங்களை, சுமந்து - பொறுத்து, வீங்கும் - பருத்த, புணர் முலை-நெருங்கிய ஸ்தனங்களையுடைய தம யந்தியே, ஈங்குவைகும் - இங்கேயிருக்கின்ற, திருகு-மாறுபடுகின்ற,

வெம் - வெவ்விய, சிற்றத்துப்பின் - மிருந்த கோபத்தையும், திண் - வலிமையையுமுடைய, களி யானை அன்னான்-களிப்புமிக்க யானையை யொத்த அரசனானவன், விரை - வாசனை பொருந்திய, மதுவுயிர்க்கும் - தேனைத்தருகின்ற, கைதை வேலி வாய்-தாழைவேலியிடத்தில், மணியும் - நவமணிகளையும், பொன்னும் - பொன்னையும், வரு திரை-வருகின்ற அலைகள், சுருட்டும் - மடக்கி வீசுகின்ற, கானல் - கடற்கரைச் சோலைகளையுடைய, வான் - மேலாகிய, குசை தீவில் - குசையென்னுந் தீவிலிருக்கின்ற, வேந்தன் - அரசன், எ - று.

க - து. இவன் குசைத்தீவரசன் என்றாள் என்பதாம்.

எப்போதாயினுந் தன்னைப் பகைத்தவர்மேற் கோபம் வைத்தால் அநேக நாள் கழிக்கினும் மறவாது அவரைக் கொல்லுதலும் வலிமை பெறலும் களிப்பு மிகுதலும் யானைக்குள்ள குணமாதலால் இவ்வரசனுக்கும் அக்குணங்க ளுண்டென்பது தோன்றத் 'திருகுவெஞ் சிற்றத் துப்பிற் றிண்களி யானை யன்னான்' என்றார். (கருச)

தெண்டிரைப் பரவை யீன்ற தெள்ளமிர் தூறல் போலும்
பண்டரு மினிய தீஞ்சொற் படாமுலைப் பாவை கேண்மோ
விண்டலப் பரிதி போல விளங்குமிக் குரிசில் வாசத்
தண்டலை யுடுத்த கானற் சான்மலித் தீவில் வேந்தன்.

இ - ள். தெள் திரை - தெளிந்த அலைகளையுடைய, பரவை ஈன்ற - கடலானதீன்ற, தெள் - தெளிந்த, அமிர்து ஊறல்போலும் - அமிர்தத்தின் ஊறல்போலும், பண் தரும் - இசையைத் தருகின்ற, தீ சொல் - மதுரம் பொருந்திய சொல்லையும், படா முலை - சாயாத ஸ்தனங்களையுமுடைய, பாவை - தமயந்தியே, கேள் - கேட்பாயாக, விண் தலம் பரிதி போல - ஆகாயத்திலிருக்கின்ற சூரியன்போல், விளங்கும் - பிரகாசிக்கின்ற, இ குரிசில் - இவ்வரசனானவன், வாச தண்டலை உடுத்த - வாசமிக்க மலர்களையுடைய சோலைகளையுடுத்த, கானல் - நெய்தனிலத்தையுடைய, சான்மலி தீவில் - சான்மலித் தீவிலிருக்கின்ற, வேந்தன் - அரசன், எ - று.

க - து. இவன் சான்மலித்தீவரசன் என்றாள் என்பதாம்.

பாற்கடலிற் பிறந்த அமிர்தத்தின் மாதுரியம் இவள் சொல்லினாலறியலாமென்பதற்குப் 'பரவை யீன்ற தெள்ளமிர் தூறல்போலு மினிய தீஞ்சொல்' எனப்பட்டது. சூரியன் இருட்பகையை யோட்டுதல்போல் இவன் தன் பகையை யோட்டியவனென்பது தோன்ற 'விண்டலப்பரிதிபோல விளங்குமிக் குரிசில்' என்றார். அன்றிப்பரிதி போல் விளங்கிய ஒளியையுடையவனெனினும் அமையும். (கருரு)

தேவர்கண் முதலா மற்றைத் தீவினில் வனப்பு வாய்ந்த
காவல ரினைய ரென்று வுரைத்துமைக் கரிய கூந்தற்
பூவையந் தீஞ்சொல் வாட்கட் பொம்மல்வெம் முலையி னுட்கு
நாவலந் தீவின் வேந்தர் யாரையு நவில லுற்றாள்.

இ - ள். தேவர்கள் முதலா - தேவர்களாதியாக, மற்றை தீவினில் - மற்றைத்தீவுகளில், வனப்பு வாய்ந்த-அழகுபெற்ற, காவலர் - அரசர்கள், இனையர் என்று - இத்தன்மையரென்று, உரைத்து-சொல்லி, மை-மைபோலும், கரிய கூந்தல்-கறுத்த குழலையும், பூவையம் தீஞ்சொல் - பூவைப் புள்ளினிசையை யொத்த தித்தித்த வார்த்தையையும், வாள் கண் - வாள்போன்ற கண்களையும், பொம்மல்-பொலிவுபெற்ற, வெம் முலையினுட்கு - விருப்பத்தைச் செய்கின்ற ஸ்தனங்களையுமுடைய தமயந்திக்கு, நாவலந்தீவின் வேந்தர் - நாவலந்தீவிலிருக்கின்ற அரசர்கள், யாரையும் - எவர்களையும், நவிலல் உற்றாள் சொல்லத் தொடங்கினாள், எ - று.

க - து. நாவலந்தீ வரசர்களைச் சொல்லத் தொடங்கினாள் கருத்தாம்.

தீவுகளேழனுள் இப்பொழுது சொல்லிய தீவுகளைந்தும் இனி சொல்லப்போகிற தீவொன்றுமாக ஆறுதீவுகளைச்சொல்லி ஒன்றனைக்கூறுதொழிந்தது, எந்தப்பிரதிகளிலு மில்லாமையால் அத்தீவையாளும் அரசன் வந்திலன்போலும். இனி நாவலந்தீவி லிருக்கின்ற பல தேயத்தரசருஞ் சொல்லப்படுதல் காண்க. நாவலந்தீவென்று இத் தீவிற்குப் பெயரானது, "நறவனைய கனியுதிரு நன்னாவ லெந்நாளு முறுதியுற வுயிர்க்கெல்லாந் தென்றிசையி லோங்குதலாற், பெறுநவ கண்டமும் பெரிய நாவலந்தீ வெனும்பெயரை, மறுவறுமக் கனித்தீ நீர் மலையதனை வலம்வருமே" (சிவதருமோத்தரம்-கோபுரவியல்-௩௧) இதனாற் காண்க. (௧௩௬)

கொள்ளைவண் டிமிருங் கூந்தற் கோதையிவ் விருந்த வேந்த
வள்ளவாய்க் கமல வாவி வாளையம் பகடு தாவிக் [ல்
கள்ளுலாம் பசிய தாற்றுக் கமுகிளம் பாளை கீறு
மள்ளலம் பழனஞ் சூழ்ந்த வவந்திநா டாளும் வேந்தே.

இ - ள். கொள்ளை-கூட்டமாகிய, வண்டு-வண்டுகள், இமிருப் சத்திக்கின்ற, கூந்தல் - அளகத்தையுடைய, கோதை - தமயந்தியே, இ இருந்த வேந்தல் - இங்கிருந்த வில்வரசன், வள்ள வாய்-கிண்ணம் போன்ற வாயையுடைய, கமல வாவி-தாமரைமலர்த் தடாகத்தினின்

றும், வாளையம் பகடு - ஆண்வாளைநன், தாவி-பாய்ந்து, கள் உலாம் - தேனொழுகுகின்ற, பசிய - பசுமை பொருந்திய, தாறு - குலைகளையு டைய, கமுகு இளம் பாளை - கமுகமரத்தினிளம்பாளைகளை, கீறும் - கிழிக்கும்படி யிருக்கின்ற, அள்ளல்-சேற்றையுடைய, அம் - அழகிய, பழனம் சூழ்ந்த - கழனிகள் சூழ்ந்த, அவந்தி நாடு-அவந்திதேசத்தை, ஆளும் - ஆளுகின்ற, வேந்து - அரசன், எ - று.

க - து. இவன் அவந்திநாட்டரசன் என்றாள் என்பதாம்.

கொள்ளையிடும் வண்டெனப் பொருள்கொண்டு அதற்கேற்பத் தேனையென்னுஞ் செயப்படுபொருள் வருவித்துக் கொள்ளினும் அமையும். அள்ளலம் பழனமென்னுந் தொடர்மொழியிலிருக்கும் அம் மென்பது விரித்தல் விகாரமாய் நின்றது. அது "வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல், விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண் டுழி" (இலக்கணவிளக்கம்-உயிரீற்றுப்புணரியல்-டு) என்னுஞ் சூத் திரத்தால் அந்நூலார் விரித்தல் விகாரத்திற்குக் காட்டிய "தண்ணந் துறைவர் தகவிலரே" என்னும் உதாரணத்தாலறிக. இன்னும் இந் நூலிற் பலவிடந்தோறும் அழகெனப்பொருள்கொண்டிருக்கும். இது போல்வனவற்றையும் இவ்வாறு விகாரமென்று கொள்ளினும் இழுக் காதென்க. கோதை அண்மைவிளியாதலா லியல்பாயிற்று. (கஙஎ)

நன்னலங் கனிந்த கோதா யீங்குறை நாம வேலான் [குஞ்
பொன்னவி ரோடை நெற்றிப் பொழிமதக் களிறு மாய்க்
செந்நெலங் குலையிற் றூங்குந் தீந்தொடை நறவு காலுங்
கன்னலங் கழனி சூழ்ந்த கௌடநாட் டரச ரேறே.

இ - ள். நல் நலம் - மிகுந்த நலமானது, கனிந்த - முதிர்ந்த, கோதாய் - தமயந்தியே, ஈங்கு உறை - இங்கே யிருக்கின்ற, நாமம் - அச்சத்தைத் தருகின்ற, வேலான் - வேலாயுதத்தையுடைய அரசன், பொன் - பொன்னாற்செய்து, அவிர் - பிரகாசிக்கின்ற, ஓடை - முக படாத்தையணிந்த, நெற்றி - நெற்றியையும், பொழிமதம் - பொழி கின்ற மதத்தையுமுடைய, களிறு - யானையை, மாய்க்கும் - மறைக் கின்ற, செந்நெல் - செஞ்சாலிகளுள்ளனவும், அம் குலையின்-அழகிய குலைகள்போல, தூங்கும்-தங்குகின்ற, தீ-தித்திப்புடைய, தொடை - தேன்கூண்டானது, நறவு - தேனை, காலும் - துளிக்கின்ற, கன்னல்- கரும்புள்ளனவுமாகிய, அம் கழனி - அழகிய கழனிகளால், சூழ்ந்த - சூழப்பட்ட, கவுட நாடு - கவுடதேசத்தை யாளுகின்ற, அரசர் - மன் னர்க்கு, ஏறு - ஆண்சிங்கத்தையொத்த வரசன், எ-று. ஏ-அசை.

க - து. இவன் கவுடநாட்டரசன் என்றாள் என்பதாம்.

களிறுமாய்க்குஞ் செந்நெலென்றும் தேன்கூட்டையுடைய கன்னலென்றுஞ் சொல்லுதல் கவிகளின் வழக்கம். அது "மீன்கணி னுளவும்வெற் றிடங்க ளினமையாற், றேன்கணக் கரும்பியல் காடுஞ் செந்நெலின், வான்புகழ் களிறுமாய் கழனியாக்கமு, மூன்கணுர்க் குரைப்பரி தொல்லென் சும்மைத்தே" (சீவகசிந்தாமணி-நாமகளிலம்பகம்-ருச) இதனாலறிக. (கஙஅ)

கஞ்சநாண் மலரை வென்று கடைகுழை யெறிந்து மீண்ட
நஞ்செனக் கொடிய வாட்க ணங்கையிவ் விருந்த மீளி
வெஞ்சமங் காத்த லன்றி யணியென விளங்கச் செய்த
விஞ்சிசூழ் மதுரை மூதூ ரெதுகுல மன்ன ரேறே.

இ - ள். கஞ்சம் - தாமரையினுடைய, நாள்மலரை-புதியமலரை, வென்று-வெற்றிகொண்டு, குழை கடை - காதணியினுடைய கடையை, எறிந்து - வீசி, மீண்ட - திரும்பிய, நஞ்சு என - விடம்போல, கொடிய - கொடியவாகிய, வாள் கண் - வாள்போன்ற கண்ணையுடைய, நங்கை - தமயந்தியே, இ இருந்த மீளி - இருத்தலைப்பெற்ற விவ்வரசன், வெம் - வெப்பம்பொருந்திய, சமம் - யுத்தத்திலே, காத்தல் அன்றி - காப்பதற்கல்லாமல், அணி என - அலங்காரமாக, விளங்க செய்த - பிரகாசிக்கும்படி செய்த, இஞ்சி சூழ் - மதில் சூழ்ந்த, மதுரை மூதூர் - மதுராபுரியை யாளுகின்ற, எதுகுல மன்னர்-எதுகுலவரசர்க்கு, ஏறு - ஆண்சிங்கத்தை யொத்தவன், எ - று.

க - து. இவன் மதுராபுரி யரசன் என்றான் என்பதாம்.

பெரியோர்களாற் சிறந்தெடுத்துச் சொல்லப்பட்ட அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்னும் ஏழு நகரங்களில் ஒரு நகரமாதலாலும் யதுவேந்தன் முதலிய அனேக அரசர் புரக்கும்படி இராசதானியா யிருந்தலாலும் மதுரைக்கு மூதூரென அடைகொடுக்கப்பட்டது. (கஙக)

அமிழ்தினை முனிந்து சார லருவிதாழ் மலைய மீன்ற
தமிழினு மினிய தீஞ்சொற் றையலீண் டிருந்த கோமா
னிமிழ்திரை கொழித்த முத்த மேழைநின் முறுவல் காட்டுங்
கமழலர் துறைசூழ் தெண்ணீர்க் கங்கைநா டாளும் வேந்தே.

இ - ள். அமிழ்தினை - அமிர்தத்தை, முனிந்து - கோபித்து, சாரல் - பக்கங்களிலே, அருவி தாழ்-அருவியானது தாழ்கின்ற, மலையம் - பொதியமலையிலிருக்கும் அகத்திய முனிவனால், ஈன்ற - தரப்பட்ட, தமிழினும் - தமிழைக்காட்டிலும், இனிய - இனிமையுள்ள, தீஞ்சொல் - மதுரம்பொருந்திய சொல்லையுடைய, தையல் - தமயந்

தியே, ஈண்டு இருந்த-இவ்விடத்திலிருந்த, கோமான்-அரசனானவன், இமிழ் - பிரகாசிக்கின்ற, திரை - அலைகளானவை, கொழித்த - ஒதுக்கிய, முத்தம் - முத்துக்கள், ஏழை-தமயந்தியே, நின் முறுவல் - உன்னுடைய பல்வரிசையை, காட்டும் - காண்பிக்கும், கமழ் - பரிமளிக்கின்ற, அலம் - அமைவினையுடைய, துறை சூழ் - துறைகள் சூழ்ந்த, தெள் - தெளிவு பொருந்திய, நீர்-நீரையுடைய, கங்கை நாடு ஆளும் வேந்தன் - கங்கைநாடாளும் அரசன், எ-று.

க - து. இவன் கங்கை நாட்டரசன் என்றாள் என்பதாம்.

மலையமென்பது அதிலிருக்கும் அகத்திய முனிக்காதலால் ஆகு பெயர். பரமசிவன் வடமொழிக் கிலக்கணம் பாணினிக்குச் சொல்லியதுபோல் தமிழ்மொழிக் கிலக்கணம் அகத்தியமுனிக்குச் சொல்லி உலகத்திலே பரவச்செய்தபடியால் 'மலையமீன்ற தமிழ்' எனப்பட்டது. அது "விடையுகைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள், வடமொழிக்குரைத் தாங்கியன் மலையமா முனிக்குத், திடமுறுத்தியம் மொழிக் கெதிராக்கிய தென்சொல், மடமகட்கரங் கென்பது வழுதிநாடன்றோ" (திருவிளையாடல்-நாட்டுப்படலம்-௫௬) இதனாலறிக.

வனைமலர்க் குழலங்கள் மாலை வணரிருங் கூந்தற் செவ்வா
யினவளை மடந்தை யிப்பா லெரிமணித் தவிசிற் றோன்று
நனைவிரி யலங்கன் மார்ப னாள்விழ வறாத வீதிக்
கனைகுரன் முரசந் துஞ்சாக் காம்பிலிக் காவல் வேந்தன்.

இ - ள். வனை மலர் - மலராற் றொடுத்த, குழலங்கள் மாலை-அழகியமாலையையணிந்த, வணர்-வளைந்த, இரு - பெரிய, கூந்தல்-குழலையும், செவ்வாய்-செவ்வாயையும், இனவளை-கூட்டமாகிய வளையலையுமுடைய, மடந்தை-தமயந்தியே, இப்பால்-இப்புறத்து, எரி-ஒளிவிடுகின்ற, மணி தவிசில்-ரத்நாசனத்தில், தோன்றும் - தோன்றுகின்ற, நனை விரி-அரும்புகள் விரிந்த, அலங்கல்-மாலையையணிந்த, மார்பன்-மார்பை யுடையவன், நாள் - நாடோறும், விழவு அறாத - திருவிழா நீங்காத, வீதி-வீதியிலே, கனை-சத்திக்கின்ற, குரல் - குரலையுடைய, முரசம்-பேரிகையானது, துஞ்சா-ஓய்வில்லாத, காம்பிலிக்காவல் வேந்தன்-காம்பிலிதேசத்தை யாளுகின்ற அரசன், எ - று.

க - து. இவன் காம்பிலி தேசாதிபதி என்றாள் என்பதாம்.

எக்காலுந் தெய்வங்களுக்குச் சிறப்புமிக்க திருவிழா வெடுப்பது தோன்ற 'நாள்விழவறாத வீதி' என்றும், எந்த வாத்தியங்களினும் முரசஞ் சிறந்தமையால் 'கனைகுரன் முரசந் துஞ்சா' என்றும் சொல்லினர். மோசம்வாச்கியப் பொதுவுமாகும். (௧௭௪)

நுழைநொசி மருங்குறேம்ப நண்ணெழின் மாமை வாய்ந்த
இழைவளர் முலையி னாய்மற் றிங்கினி திருந்த தோன்றல்
மழலைவண் டுழலத் தூங்கு மழைமதப் புழைக்கை நால்வாய்க்
கழைசுளி களிநல் யானைக் கலிங்கநா டாளு மன்னன்.

இ - ள். நுழைநொசி - மிகுந்த நுட்பத்தையுடைய, மருங்குல் - இடையானது, தேம்ப - வாட, நண் - நுட்பம்பொருந்திய, எழில் - அழகானது, மாமை வாய்ந்த - பிரகாசம் பொருந்திய, இழை - ஆபரணத்தை யணிந்த, வளர் முலையினாய் - வளரப்பெற்ற முலையினையுடைய தமயந்தியே, இங்கு - இவ்விடத்தில், இனிது - இனிதாக, இருந்த - இருக்கப்பெற்ற, தோன்றல் - அரசனானவன், மழலை - இனிமை பொருந்திய கோஷையையுடைய, வண்டு - வண்டுகள், உழல - உழலும்படி, தூங்கும் - தங்கிய, மழைமதம் - மழைபோன்ற மதத்தையும், புழை கை - துவாரம்பொருந்திய துதிக்கையையும், நால்வாய் - தொங்குகின்ற வாயையுமுடைய, கழை சுளி - கரும்பை முறிக்கின்ற, களி நல் யானை - களிப்புப் பொருந்திய நல்ல யானைகளையுடைய, கலிங்க நாடு ஆளும் மன்னன் - கலிங்க நாட்டையாளுகின்ற அரசன், எ-று.

க - து. இவன் கலிங்கதேசாதிபதி என்றாள் என்பதாம்.

யானை மதநீரையுண்ண வண்டுழலுதலால் 'வண்டுழலத் தூங்கு மழைமதம்' என்றார். அம்மதநீரை வண்டுண்ணுதல், ''நல்லமதந்தா னுண்சுவை யின்பா னன்றுண்ணச், செல்லுசுரும்பே வெங்கரியின்றாழ் செவியூடே, மெல்லநடந்தே போகெனமெல்ல விளம்பென்று, சொல்லிமறங்கூர் வேலனை கண்ணார் துயர்கின்றார்'' (பிரபுலிங்கலீலை - உமாதேவி துறவுகதி-க) என்பதனாலறிக. (க[illegible])

உளங்கனிந் துருகப் பைந்தார்க் காமனு முவக்குஞ் சாய
றுளங்கொளி முத்த மூரற் றோகையீங் கிருந்த தோன்றல்
விளங்கிழை நினது கண்போல் வெரியுங் குவளை பூத்த
வளங்கெழு மருத வேலி வாரண வாசி மன்னன்.

இ - ள். உளம் - மனமானது, கனிந்து உருக - இளகியுருகும்படி, பைந்தார் - பசியமாலையை யணிந்த, காமனும் - மன்மதனும், உவக்கும் - விரும்புகின்ற, சாயல் - சாயலையும், துளங்கு - அசைகின்ற, ஒளி - ஒளியையுடைய, முத்தமூரல் - முத்தையொத்த பற்களையுமுடைய, தோகை - தமயந்தியே, ஈங்கு - இங்கே, இருந்த - தங்கிய, தோன்றல் - அரசனானவன், விளங்கிழை - விளங்குகின்ற வாபரணத்தையுடையாய், நினது - உன்னுடைய, கண் போல் - கண்ணைப்போல்,

வேரி அம் குவளை-தேனையுடைய அழகிய குவளைமலர்கள், பூத்த-பூத்திருக்கின்ற, வளம் கெழு - வளப்பம் பொருந்திய, மருதவேலி-மருத நிலத்தையுடைய, பாரணவாசி மன்னன் - காசிதேசத்தரசன், எ-று.

க - து. இவன் காசிதேசாதிபதி என்றாள் என்பதாம்.

வாரணாசி யென்பது வாரணவாசி யென மருவிற்று. சாயலால் தோகைபோன்றவளெனக் கொள்க. [மாதர் கண்களுக்கு உவமிக்கப்படுங் குவளைமலர்களை இத்தமயந்தி கண்களுக்கு உவமேயமாகக் கூறுதலால் எதிர்நிலையணி.] (கசா௩)

குவட்டிள முலையி னுய்நின் குழைமுகத் திங்க ணோக்கி, யுவட்டெடுத் துவகை வெள்ள மோங்கவீங் கிருந்த தோன்றல், கவட்டடிக் கயவாய் மேதி கன்றுள்ளிப் பொழிந்த தீம்பா, றெவிட்டவுண் டன்னந் துஞ்சுஞ் செழும்புனற் சிந்து வேந்தே.

இ - ள். குவடு - மலைபோன்ற, இளமுலை-இளமைபொருந்திய ஸ்தனங்களையுடைய தமயந்தியே, நின் - உன்னுடைய, குழை-குண்டலத்தை யணிந்த, முகம் திங்கள் நோக்கி-முகமாகிய சந்திரனைப்பார்த்து, உவட்டு எடுத்து-பெருக்கெடுத்து, உவகை-மகிழ்ச்சியென்னும், வெள்ளம் - கடலானது, ஓங்க-மிகுந்தொலிக்க, ஈங்கு இருந்த-இங்கிருந்த, தோன்றல் - அரசனானவன், கவட்டு அடி - பிளப்பாகிய குளம்பையும், கய வாய் - பெரிய வாயையுமுடைய, மேதி-எருமை, கன்று உள்ளி-தன் கன்றை நினைத்து, பொழிந்த-சொரிந்த, தீம்பால் - தித்திப்புப்பாலை, தெவிட்ட உண்டு - நிறையவுண்டு, அன்னம் துஞ்சும்-அன்னப்பறவை துயிலுகின்ற, செழும்புனல் - செழுமையுள்ள நீரையுடைய, சிந்து வேந்து - சிந்துதேசத்தை யாளுகின்ற அரசன், எ-று. ஏகாரம்-ஈற்றசை.

க - து. இவன் சிந்துதேசாதிபதி என்றாள் என்பதாம்.

சந்திரனைப் பார்த்தால் கடல் அதிகரித்தொலித்த லியல்பாதலால் 'குழைமுகத் திங்க ணோக்கி யுவட்டெடுத் துவகை வெள்ள மோங்கவீங் கிருந்த தோன்றல்' எனப்பட்டது. "மதியெழக்கடன் முழங்குதல்போல்" என்றார் பிறரும். நீரிலே எருமை தன் கன்றை நினைத்துப் பொழிந்தபாலை அன்னம் உண்ணுதல், "பாலுநீரும் பாற்படப் பிரிக்த லன்னத் தியல்பென வறிந்தனர் கொளலே" (இலக்கண விளக்கம் - பொதுப்பாயிரம்) இதனாற் காண்க. (கசா௪)

பகட்டிள முலையா யீங்குப் படுதிரைப் பரவை வேலை
முகட்டெழும் பரிதி யேய்ப்ப வீங்குறை முழவுத் தோளான்

பொருட்டுமென் கமல வாவிப் பூம்புன லுழக்கிக் கொண்ட
லகட்டினில் வாளை தாவு மகன்பணைக் குருத ரேறே.

இ - ள். பகடு-யானைமத்தகம்போன்ற, இள முலையாய்-இளமை பொருந்திய முலையையுடைய தமயந்தியே, ஈங்கு - இவ்விடத்தில், படுதிரை - அலைகளையுடைய, பரவை - பரந்த, வேலை முகட்டு எழு - கடலுச்சியிற்றோன்றிய,பரிதியேய்ப்ப-சூரியனையொப்ப, ஈங்கு உறை- றுங்கிருக்கின்ற, முழவு தோளான் - மத்தளம்போன்ற தோளையுடையவன், பொருட்டு - கொட்டையையுடைய, மெல் கமலம் - மெல்லிய தாமரை மலரையுடைய, வாவி - தடாகத்திலுள்ள, பூ புனல் உழக்கி- அழகு பொருந்திய நீரைக் கலக்கி, கொண்டல் அகட்டினில்-மேகங்களுடைய வயிற்றினிடத்தில், வாளை தாவும் - வாளைமீன் தாவுகின்ற, அகல் பணை - அகன்ற வயலையுடைய, குருதர் ஏறு - குருதேசத்தாருக்குச் சிங்கவேற்றை யொத்த அரசன், எ - று.

க - து. இவன் குருதேசாதிபதி என்றாள் என்பதாம்.

முன்பாட்டிலும் இப்பாட்டிலும் குவடு, கவடு, பகடு, முகடு, அகடு, என்னும் அடி யெதுகையாய் வந்த உயிர்த்தொடர் மொழிக்குற்றிய லுகரங்கள் டகர வொற்றிரட்டித்தல், "ஈரெழுத்து மொழியு முயிர்த் தொடர் மொழியும், வேற்றுமையாயி னொற்றிடையின் மிகத், தோற் றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி" (தொல்காப்பியம் - குற்றிய லுகரப் புணரியல் - சு) இச்சூத்திரத்தாலறிக. கொண்டலகட்டினில் வாளைதாவு மென்றல் "வெள்ளத்தடங்க ணெடுவாளை வேலிக்கமுகின் மிடறொடியத், துள்ளிமுகிலைக் கிழித்துமழைத் துளியோடிறங்கும்" என்பதாற் காண்க. (கசக)

வேலெனப் பிறழ்ந்து கூற்றை வெல்குவன் வருக வென்று
வோலைவிட் டுலவுங் கண்ணா யீங்குறை யுலங்கொ டோளான்
சூலுளைந் தலறிப் பைந்தேன் றுளிக்குமென் கமலப் போதின்
வாலவளை முத்த மீனும் வளவயன் மச்சர் கோவே.

இ - ள். வேல் என பிறழ்ந்து - வேற்படைபோ லொளியைச் செய்து, கூற்றை - யமனை, வெல்குவன் - வெற்றிகொள்ளுவேன், வருக என்று - நீவரக்கடவாயென்று, ஓலை விட்டு-(அந்த யமனுக்கு) ஓலையெழுதி விட்டு, உலவும் - உலாவுகின்ற, கண்ணாய் - கண்களையுடைய தமயந்தியே, ஈங்கு உறை-இங்கேயிருக்கின்ற, உலம் கொள் - திரள்கல்லின் வலியைக்கொண்ட, தோளான்-புயத்தையுடையவன், சூல் உளைந்து-கருப்பவாதைப்பட்டு, அலறி-ஒலித்து, பைந்தேன்-பசிய

தேனை, துளிக்கும் - தெறிக்கின்ற, மெல் கமலம் போதின் - மெல்லிய தாமரைமலரில், வால் - வெண்மை பொருந்திய, வளை - சங்கங்கள், முத்தம் ஈனும்-முத்துக்களைப் பெறுகின்ற, வளம் - வளம்பொருந்திய, வயல் - கழனிகள் சூழ்ந்த, மச்சர் வேறு - மச்சதேயத்தாருக் கரசன், எ - று.

க - து. இவன் மச்சதேசாதிபதி என்றாள் என்பதாம்.

நீதிப்படி போர்செய்து வெல்லக்கருது மரசர்கள் உன்னைப்போரில் வெல்லும்படி எத்தனித்து வந்தேன், நீயும் வருகவென்று ஓலையேனும் தூதேனும் விடுத்துத் தெரியப்படுத்தல் முறையாதலின், 'கூற்றை வெல்குவன் வருக வென்று, வோலைவிட் டெலவுங் கண்ணாய்' என்றார். இதனால் கண்களானவை காமுகர்க்குச் செய்யுங்கொடுமை கூறியதாயிற்று. (கசசு)

குடங்கையி னெடிய வாட்கட் கொம்பனா யீங்குப் பைம்பொன், மடங்கலா சனத்தின் மேய மணியெழு வனைய தோளான், முடங்குவெண் டோட்டுக் கைதை முருகுயிர்த் திரங்குந் தெண்ணீர்த், தடங்கடற் புலவு போக்குந் தண்டுறை மகத நாடன்.

இ - ள். குடம் கையின்-உள்ளங்கைபோல், நெடிய வாள் கண்-நீண்டவாள்போலும் கண்களையுடைய, கொம்பு அனாய்-பூங்கொம்பு போன்ற தமயந்தியே, ஈங்கு-இங்கே, பைம்பொன்-பசும் பொன்னாற் செய்யப்பட்ட, மடங்கல் ஆசனத்தின்-சிங்காதனத்தில், மேய-பொருந்திய, மணி எழு அனைய-அழகிய எழுத்தூணை யொத்த, தோளான் - புயங்களையுடையவன், முடங்கு - வளைவினையுடைய, வெள் தோடு - வெண்மை பொருந்திய விதழையுடைய, கைதை - தாழைகளானவை, முருகு உயிர்த்து-வாசனையை வீசி, இரங்கும் - சத்திக்கின்ற, தெண்ணீர் - தெளிந்த நீரையுடைய, தடம் - விசாலம் பொருந்திய, கடல் புலவு - கடலினது புலானாற்றத்தை, போக்கும் - நீக்குகின்ற, தண் துறை - குளிர்ச்சிபொருந்திய துறையையுடைய, மகத நாடன்-மகததேசத்தரசன், எ - று.

க - து. இவன் மகதநாட்டரசன் என்றான் என்பதாம்.

வீரத்தன்மையும் புயவலிமையுந் தோன்ற ஆசனமென்மொழியாது 'மடங்கலாசனம்' என்றும், தோளானென்மொழியாது 'மணியெழு வனையதோளான்' என்றும் சொல்லினார். 'முருகுயிர்த்துக் கடற் புலவுபோக்கும்' என்றமையால் நெய்தற் கருப்பொருளாய தாழை அங்கே அதிகரித்திருக்கின்ற தென்பது கருத்து. (கசஎ)

கழையெனத் திரண்ட மென்றோட் காமரு குவளை யுண்கட்
பொழிகதிர் முத்த மூரற் பூங்கொடி யீங்கு வைகு
மழிகவுட் கடாத்த சீற்றத் தண்ணலங் களிறு போல்வான்
மழையக டுரிஞ்சு மாட மலிகுரு நாடர் கோவே.

இ - ள். கழை என - மூங்கில்போல், திரண்ட - திரண்டிருக்கின்ற, மெல் தோள்-மெல்லிய தோள்களையும், காமர் - அழகு பொருந்திய,குவளை உண் கண் - நீலோற்பலத்தழகை யுண்ட கண்களையும், பொழி கதிர்-கிரணங்களைப்பொழிகின்ற, முத்தம் மூரல்-முத்தங்களை யொத்த பற்களையுமுடைய, பூங்கொடி-தமயந்தியே, ஈங்கு வைகும்- இங்கே தங்கிய, அழி - ஒழுகுகின்ற, கவுள் கடாத்த - மதமொழுகுகின்ற கன்னத்தையும், சீற்றத்து-கோபத்தையுமுடைய, அண்ணல் - பெரிய, களிறு போல்வான்-யானையையொத்த அரசனானவன், மழை அகடு - மேகத்தின் வயிற்றை, உரிஞ்சு-தேய்க்கின்ற,மாடம் மலி-உரிகைகள் நெருங்கிய, குருநாடர் கோ - குருநாடர்க்கதிபதி, எ - .

க - து. இவன் குருநாட்டரசன் என்றாள் என்பதாம்.

கழையென்பது கரும்பெனினும் ஒக்கும். குருவென்னும் அரசனாற் புரக்கப்படுதலால் குருநாடாயிற்று. குருக்ஷேத்திரமென்று கூறுவர். குருக்ஷேத்திரம் புண்ணிய பூமியாம். அது பாரதத்திற் காண்க. அன்றியும், "தீர்த்த மார்சிவகாசி திகழ்குருக், கேத்திரம் பிரயாகை கிளரலர், பூத்த புட்கரமாதி புனிதர்க, ளார்த்த கங்கை யலைகட லாதியும்" (சிவதருமோத்தரம் - பலவிசிட்ட காரணவியல்-௭௭) இதனாலுமறிக. (க

வடுநெடுங் கண்ணி யீங்கு வைகிய மடங்க லன்னான் [ர்த்
குடநிகர் செருத்தற் செங்கட் குவிமுலை யெருமை தெண்ணீ
தடவய லுழக்க வாளை தாவிமுப் புடைக்காய்த் தெங்கின்
படுபழ முதிர்க்குஞ் சூழற் பல்லவ தேய வேந்தே.

இ - ள். வடு - மாவடுபோன்ற, நெடு கண்ணி - நெடிய கண்களையுடைய தமயந்தியே, ஈங்கு - இங்கே, வைகிய - தங்கப்பெற்ற, மடங்கல் அன்னான்-சிங்கவேற்றை யொத்தவன், குடம் நிகர் - குடத்தையொத்த, செருத்தல்-மடியையும், செம் கண்-சிவந்தகண்களையும், குவி முலை - குவிந்த முலையையுமுடைய, எருமை - எருமையானது, தெள் நீ[illegible]ந்த நீரையுடைய, தடம் வயல்-விசாலம்பொருந்திய கழனி[illegible] - கலக்க, வாளை - அதனாலெழும்பிய வாளைகள், [illegible] -மூன்று பக்கமுள்ள காயையுடைய,

தெங்கின் - தென்னமரத்தில், படு - உண்டாகிய, பழம் - பழங்களை, உதிர்க்கும் - உதிர்க்கின்ற, சூழல் - இடத்தையுடைய, பல்லவதேய வேந்து - பல்லவதேசத்தை யாளுகின்ற அரசன், எ - று. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. இவன் பல்லவதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

எருமை தெண்ணீர்த் தடவயலுழக்க அதனுலெழுந்த வாளைதாவித் தெங்கின் பழமுதிர்க்கும் பல்லவதேயமெனக் கூட்டுக. இதனால் அந்நாடு நீர்வளமிக்குச் செழித்திருக்கின்ற தென்பது கருத்து. (கசக)

பிள்ளைமா னோக்கி யீங்கு வைகிய பிறங்கற் றோளா
னள்ளிலைக் கமலப் போதி லரசிள வன்னங் காண
வள்ளுறை பிலிற்றுந் தண்கார் வரவெதிர் மயில்க ளாடக்
கிள்ளைபாட் டயருஞ் சோலைக் கேகய நாட்டு வேந்தன்.

இ - ள். பிள்ளை மான் - இளமான் பார்வையை யொத்த, நோக்கி - பார்வையையுடைய தமயந்தியே, ஈங்கு - இங்கே, வைகிய - தங்கப்பெற்ற, பிறங்கல் - மலையையொத்த, தோளான் - தோளையுடையவன், அள் இலை-நெருங்கிய இலையையுடைய, கமலப்போதில்- தாமரை மலரிலிருக்கின்ற, அரசு இள அன்னம் காண - இளமைபொருந்திய அரச அன்னம் பார்க்கும்படி, வள் - வளம்பொருந்திய, உறை- துளியை, பிலிற்றும் - துளிக்கின்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, கார் - மேகங்களினுடைய, வரவு எதிர் - வரவினை யெதிர்த்த, மயில்கள் ஆட - மயில்கள் கூத்தாட, கிள்ளை - கிளிப்பிள்ளைகள், பாட்டு அயரும் - பாட்டைப்பாடும், சோலை-சோலைகள் சூழ்ந்த, கேகய நாட்டு வேந்தன்-கேகய நாட்டரசன், எ - று.

க - து. இவன் கேகய நாட்டரசன் என்றாள் என்பதாம்.

அரசவன்னமாவது மூக்குங் கால்களுஞ் சிவந்து உடம்பு விளர்த்திருப்பது. கார்கண்டு மயிலாடுதல் "என்னை யூர்ந்தருள் சுடர்வடி யிலையவேற் பெருமான், றன்னை நன்மரு கெனப்படைத் தவன்றன தூர்தி, யன்ன தாமெனுங் கேண்மையா லளிமுகிற் குலத்தைக், கன்னிமா மயில் காண்டொறுங் களிசிறந் தகவும்" (காஞ்சிப்புராணம்-நாட்டுப்படலம்) இதனாற்காண்க. கிள்ளைபாட்டயருமென்றலால், "கிள்ளை பாடல கேட்பன பூவைகள்" என்றார் பிறரும். (கரு0)

கொல்லுலை வேற்க ணல்லா யீங்குறை குவவுத் தோளான்
முல்லையம் புறவிற் சேதா முலைவழி யொழுகு தீம்பா
லல்லியங் கமல வள்ளத் தரசிள வன்ன மாந்து
மல்லலம் பழனஞ் சூழ்ந்த மத்திர தேய வேந்தன்.

இ - ள். கொல் உலை - கொல்லனுலையிற் காய்ந்த, வேல் கண் வேல்போன்ற கண்களையுடைய, நல்லாய்-தமயந்தியே, ஈங்கு உறை-இங்கே யிருக்கின்ற, குவவு-திரட்சிபொருந்திய, தோளான்-தோள்களையுடையவன், முல்லையம் புறவில் - முல்லைகளையுடைய அந்நிலத்தில், சேது ஆ-செவ்விய பசுக்களினுடைய, முலை வழி-முலையின்வழியே, ஒழுகு தீம்பால் - ஒழுகிய தித்திப்புப்பாலை, அல்லி கமலம் வள்ளத்து - அகவிதழையுடைய தாமரைமலராகிய கிண்ணத்தில், அரசு இள அன்னம் - இளமை பொருந்திய அரசவன்னங்கள், மாந்தும் - உண்ணுகின்ற, மல்லல் - வளம்பொருந்திய, பழனம் சூழ்ந்த-வயல்களாற் சுற்றப்பட்ட, மத்திரதேய வேந்தன் - மத்திரதேயத்தை யாளுகின்ற வரசன், எ - று. அம்-அசை.

க - து. இவன் மத்திரதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

முல்லையம் புறவிலிருக்குஞ் சேதாவின்பாலைக் கமலவள்ளத் தன்னமாந்தும் பழனஞ்சூழ்ந்த தேயமென்னலால் முல்லை நிலத்திற்கு மருதநிலத்திற்கும் திணைமயக்கங் கூறியவாறாயிற்று. (கரு)

தாளதா மரையின் மேய தாக்கணங் கனையா யீங்குக்
கோளரி யென்ன வைகுங் குருதிகொப் புளிக்கும் வேலான்
பாளைவாய்க் கமுகிற் றாவிப் பலவின்முட் புறக்காய் சிந்த
வாளையம் பகடு தாவும் வங்கநா டாளும் வேந்தே.

இ - ள். தாள - நாளத்தையுடைய, தாமரையில் - தாமரைமலரிலே, மேய-இருக்கின்ற, தாக்கணங்கு அனையாய் - இலக்குமியையொத்ததமயந்தியே, ஈங்கு-இங்கே, கோளரி என்ன-சிங்கவேற்றைப் போல், வைகும்-தங்கிய, குருதி-உதிரத்தை, கொப்புளிக்கும்-கொழிக்கின்ற, வேலான் - வேற்படையையுடையவன், பாளை வாய்-பாளைகள் வாய்ந்த, கமுகில் தாவி-கமுகமரத்தின் மேற்றாவி, பலவின்-பலாமரத்திற் காய்த்த, முள்புறம் காய் - முள்ளைப்புறத்திலே யுடைய காய்கள், சிந்த - சிதற, வாளை பகடு தாவும் - ஆண்வாளைகள் தாவுகின்ற, வங்கநாடு ஆளும் வேந்து - வங்கதேசத்தை யாளுகின்ற அரசன், எ - று. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது. அம்-அசை.

க - து. இவன் வங்கதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

அரியென்பதற்குத் திருமாலெனப் பொருள்கொள்ளினு மமையும். அரசமங்கையர்க்கு இலக்குமியைச் சொல்லுதலும் அரசனுக்குத் திருமாலைச் சொல்லுதலும் அழகிற்கு மாத்திரமன்றிப் பொருள், போகம், காப்பு, பெருமை முதலியவற்றிற்குங் கொள்க. கமுகினும் பலாப்பெரிதாதலால் 'கமுகிற்றாவிப் பலவின் முட்புறக்காய் சிந்த வாளை

யம்பகடு தாவும்' என்றார். கோன் சிங்கத்திற்குக் கொலையும் திருமா லுக்கு வலிமையும் கொள்க. (கஞஉ)

காம்புறழ் பசிய மென்றோட் கதிர்முலைத் துவர்வாய்த் தீஞ்
பாம்படு மல்கு லீங்கு வைகிய பரிதி வேலான் [சொற்
றேம்பொதி கமல மேய வால்வளை திங்க ளென்று
வாம்பல்வாய் மலரும் வாவி யங்கநா டாளும் வேந்தே.

இ - ள். காம்பு உறழ் - மூங்கிலை யொத்த, பசிய - பசியவாகிய, மெல் தோள் - மெல்லிய தோள்களையும், கதிர் முலை-பிரகாசம் பொருந்திய முலையையும், துவர் வாய் - சிவந்த வாயையும், தீஞ்சொல் - மதுரம்பொருந்திய சொல்லையும், பாம்பு அடும்-பாம்பினை யடுகின்ற, அல்குல் - அல்குலையுமுடைய தமயந்தியே, ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, பரிதி வேலான்-சூரியன்போன்ற வேலையுடையவன், தேம்-தேனனது, பொதி-நிறைந்த, கமலம் மேய-தாமரைமலரிலிருக்கின்ற, வால் வளை-வெண்சங்குகளை, திங்கள் என்று - சந்திரனென்று, ஆம் பல் - அல்லிமுகைகள், வாய் மலரும்-வாய்விரியும், வாவி - தடாகத்தையுடைய, அங்க நாடு ஆளும்-அங்கதேசத்தை யாளுகின்ற, வேந்து-அரசன், எ - று. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. இவன் அங்கதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

வளை திங்கள்போல் ஒளிவீசுதலால் 'ஆம்பல்வாய் மலரும்' என்றார். "ஏவிழி யார்மூர லினாநிலாக் கண்டுகெருங் காவிமுகையவிழுங் காஞ்சியே" என்றார்பிறரும். உமாதேவி இமையமலைக்கு மகளாய்வந்திருந்தபோது பரமசிவன் சனகன்முதலிய நால்வர்க்கும் தக்ஷிணாமூர்த்தியாயிருந்து அனுக்கிரகம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்போது அக்கவுரியை மணக்கும்படி செய்யவேண்டிய தம்மேல் மலரம்புகளைத் தொடுத்த மன்மதனை அக்கடவுள் நெற்றிக்கண்ணைத் திறந்தெரித்த போது அவனெலும்பு விழுந்த இடமாதலால் அதற்கு அங்கதேசமென்னும் பெயராயிற்று. ['வால்வளை திங்க ளென்று வாம்பல்வாய் மலரும்' என ஆம்பன் மலருக்குச் சங்கினிடத்தில் சந்திரனென்னும் மயக்கஞ் சொல்லப்பட்டமையால் மயக்கவணி.] (சஞ௩)

சிதரரி நெடுங்க ணல்லா யீங்குறை திணிபொற் றோளான்
கதிர்படு கழனி யூடு களைத்தின வண்டுந் தேனும்
புதிதுணைக் கமலப் போது புரிமுறுக் கவிழ்ந்து மாறா
மதுமடை திறந்து பாயும் வளங்கொள்பாஞ் சால வேந்தே.

இ - ள். சிதர் - பரவுகின்ற, அரி - செவ்வரி பரந்த, நெடு கண் நல்லாய்-நெடிய கண்களையுடைய தமயந்தியே, ஈங்கு உறை-இங்கே

யிருக்கின்ற, திணி - வலிமைபொருந்திய, பொன் தோளான்-அழகிய தோளையுடையவன், கதிர் படு - கதிர்களானிறையப் பெற்ற, கழனி சூழ் - வயல்களிலே, கனைத்து - ஆரவாரித்து, இனம்-கூட்டமாகிய, வண்டும்-வண்டுகளும், தேனும்-தேன்வண்டுகளும், புதிது உண-புதிதாக வுண்ண, கமலம் போது-தாமரைமலர்கள், புரி - கட்டுப்பட்ட, முறுக்கு அவிழ்ந்து - முறுக்குடைந்து, மாறு - நீங்காத, மது - தேனை, மடை திறந்து-மடையைத்திறந்து, பாயும்-பாய்கின்ற, வளம் கொள் - வளத்தைக்கொண்ட, பாஞ்சால வேந்து - பாஞ்சாலதேசத்தரசன், எ - று. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. இவன் பாஞ்சாலதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

கழனியினிடத்திலே யிருக்குந் தாமரைமலர்கள் வண்டினங்களுக்கு நாடோறும் புதிதாக வுண்ணும்படி தேனைத் தருமென்னலால் அவ்வாறு அந்நாட்டிலுள்ளவ ரனைவரும் விருந்தினர்க்கு உபசரிக்கின்றன ரென்பது கருத்து. (கடுச)

இழைபுரை மருங்கு லின்னே யிறுமிறு மென்ன வீங்கி
யழகுவீற் றிருந்த பொம்ம லணிமுலை யாங்கு வைகுங்
கொழுதிவண் டிமிருந் தாரான் கோணிலை திரிந்த ஞான்று
மழைவளஞ் சுரக்குஞ் செல்வ மலிந்தகாந் தார வேந்தே.

இ - ள். இழை புரை-நூலிழையை யொத்த, மருங்குல்-இடையானது, இன்னே-இப்பொழுதே, இறும் இறும் என்ன-ஒடியுமொடியுமென்று, வீங்கி - பருத்து, அழகு வீற்றிருந்த - அழகானது அரசிருந்த, பொம்மல் - பொலிவுபெற்ற, அணி - ஆபரணங்களை யணிந்த, முலை-ஸ்தனங்களையுடைய தமயந்தியே, ஆங்கு வைகும்-அங்கே தங்கிய, கொழுதி - மூக்கினுலழுது, வண்டு-வண்டுகள், இமிரும்-ஒலிக்கின்ற, தாரான்-மாலையை யுடையவன், கோள்-நவக்கிரகங்கள், நிலை திரிந்த ஞான்றும்-நிலைமாறிய காலத்தும், மழை வளம் சுரக்கும்-மழை வளங்களுண்டாகின்ற, செல்வம் மலிந்த-செல்வமிகுந்த, காந்தார வேந்து - காந்தார தேயத்தரசன், எ - று.

க - து. இவன் காந்தாரதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

கோணிலை திரிதலாவது கோள்கள் நடக்கவேண்டிய முறைதப்பி மாறிநடத்தல்; அப்படி நடந்தால் அந்தத்தேசத்தில் மழை பெய்யமாட்டாதென்க. கோணிலை திரிதல், "காய்சின வெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித், தேசிகன் பின்பு சென்று நடக்குமிச் செயலான் முந்நீர்த், தூசின வுலகிற் பன்னீ ராண்டுவான் சுருங்குமே

ன்று, டேசின நூல்கண் மாரி பெய்விப்போற் சென்று கேண்மின்''
(திருவிளையாடல் - இந்திரன் முடிமேல் வளையெறிந்தபடலம் - ௪)
இதனாலறிக. (௩௫௫)

அள்ளிலை வடிவேற் கண்ணா யிங்குறை யலங்கற் றோளான்
முள்ளரை முளரி மேய்ந்து முழுநெறிக் குவளை மென்று
வள்ளைவாய் குதட்டி மேதி வழைநறு நீழற் றுஞ்சும்
வெள்ளநீர்ப் பழனஞ் சூழ்ந்த மிதிலைநா டாளும் வேந்தே.

இ - ள். அள் இலை - மாமிசத்தை யள்ளிக்கொள்கின்ற இலையை யுடைய, வடி வேல் - கூரிய வேல்போன்ற, கண்ணாய் - கண்களையுடைய தமயந்தியே, ஈங்கு உறை - இங்கேயிருக்கின்ற, அலங்கல் தோளான் - மாலையை யணிந்த தோள்களையுடையவன், முள் அரை - முள்ளுகள் நிறைந்த தாளையுடைய, முளரி மேய்ந்து - தாமரைப்பூவை மேய்ந்து, முழு நெறி - முழுநெறிப்பையுடைய, குவளை மென்று - குவளை மலரைமென்று, வள்ளை - வள்ளையிலையை, வாய் குதட்டி - மென்று, மேதி - எருமைகளானவை, வழை - புன்னைமரத்தினுடைய, நறு நீழல் - நறியநிழலிலே, துஞ்சும் - உறங்குகின்ற, வெள்ளநீர் - அதிக நீரையுடைய, பழனம் சூழ்ந்த - கழனிகளாற் சூழப்பட்ட, மிதிலைநாடு ஆளும் - மிதிலாதேசத்தை யாளுகின்ற, வேந்து - அரசன், எ - று. ஏகாரம்-ஈற்றசைக்கண் வந்தது.

க - து. இவன் மிதிலைநாட்டு மன்னன் என்றாள் என்பதாம்.

மேய்ந்து மென்று வாய்குதட்டி யென்னும் வினையெச்ச வழிக்கு துஞ்சுமென்னும் பெயரெச்ச வினையையும் அது பழனமென்னும் பெயரையுங்கொண்டு முடிந்தன. (௩௫௬)

வெதிர்புரை பசிய மென்றோள் வேல்கிடந் தனைய கண்ணா
யதிர்கழ லரசர் போற்ற வீங்குறை யரியே றன்னான்
கதிர்வெயிற் கற்றை கான்று காசுகண் படுக்கு மாட
மதியக டுரிஞ்ச வோங்கு மாளவ தேய வேந்தே.

இ - ள். வெதிர் புரை - மூங்கிலையொத்த, பசிய - பசியவாகிய, மெல் தோள் - மெல்லிய புயங்களையுடைய, வேல் கிடந்தனைய - வேற்படை யிருந்ததையொத்த, கண்ணாய் - கண்ணையுடைய தமயந்தியே, அதிர் - அதிர்ச்சியையுடைய, கழல் அரசர் - வீரக்கழலையணிந்த அரசர்கள், போற்ற - வணங்க, ஈங்கு உறை - இங்கேயிருக்கின்ற, அரி ஏறு அன்னான் - சிங்கவேற்றை யொத்தவன், கதிர் - கதிராகிய, வெயில் கற்றை - வெயிற்றொகுதியை, கான்று - வீசி, காசு - ரத்நங்கள், கண்

படுக்கும் - பதித்திருக்கின்ற, மாடம் - உபரிகைகள், மதி - சந்திரனு டைய, அகடு - வயிற்றை, உரிஞ்ச - தேய்க்க, ஓங்கும் - உயர்ந்திருக் கின்ற, மாளவதேய வேந்து - மாளவதேசத்தரசன், எ - று.

க - து. இவன் மாளவதேயத்து மன்னன் என்றாள் என்பதாம்.

அனேக மன்னர் இவன் கீழ் அரசுசெய்துகொண் டிருத்தல் தோன்ற 'அதிர்கழ லரசர் போற்ற' என்றும், அவர்களினு மிகுந்த வல்லமை யுடையவனென்பது தோன்ற 'அரியே றன்னான்' என்றுஞ் சொல்லினர். (கருஎ)

வடுவகிர் நெடுங்க ணல்லாய் மடங்கலா சனத்தின் வைகுந்
தொடுகட லுயிர்த்த முத்தந் துயல்வரு தடந்தோள் வீரன்
கடிமுறுக் கவிழ்ந்த செவ்விக் கமலமென் பொகுட்டி லேறிக்
குடவளை முத்த மீனுங் கோசலத் தரச ரேறே.

இ-ள். வடு வகிர் - மாவடுவின் பிளப்பை யொத்த, நெடு கண் - நெடிய கண்களையுடைய, நல்லாய் - தமயந்தியே, மடங்கல் ஆசனத் தின் - சிங்காதனத்திலே, வைகும் - தங்கிய, தொடு கடல் - சகரரா லேண்டப்பட்ட கடலானது, உயிர்த்த - பெற்ற, முத்தம் - முத்து வடங்களானவை, துயல்வரு - அசைகின்ற, தடம் - பருத்த, தோள் - புயத்தையுடைய, வீரன் - அரசனானவன், கடி-வாசனைபொருந்திய, முறுக்கு அவிழ்ந்த-முறுக்குடைந்த, செவ்வி-அழகுபொருந்திய, கமலம் மெல் பொகுட்டில் - தாமரைமலரினுடைய மெல்லிய கொட்டைகளி ன்மேல், ஏறி-ஏறிக்கொண்டு, குடம் வளை-குடம்போன்ற சங்கானது, முத்தம் ஈனும்-முத்துக்களைப்பெறுகின்ற, கோசலத்து-கோசலதேசத் தை யாளுகின்ற, அரசர் ஏறு - அரசரிற் சிங்கவேற்றை யொத்தவர சன், எ - று. ஏகாரம்-ஈற்றசைக்கண் வந்தது.

க - து. இவன் கோசல நாட்டரசன் என்றாள் என்பதாம்

அணிகள் அனேகமிருக்க இவ்வரசன் முத்துவட மணிந்ததைக் குறிக்கில் தனக்கு இயற்கையிற் செல்வமிகுந்திருப்பினும் உடுத்திரள் படிகம் போன்றும் உருட்சியும் கனமும் உள்ளனவும் பார்வைக்கின் பந்தருவனவும் குற்றமில்லனவுமாகிய முத்துக்களை யணிந்தால் வறு மையுள்ளனவும் போய்ச் செல்வமுண்டாகுமென்னும் விதிபற்றிப் போலும். தன்னாட்டில் வச்சிரம் உற்பத்தியாயினும் அதில் இவ்வளவு விருப்பின்மை காண்க. (கருஅ)

மாழைமென் னோக்கி யீங்கு வைகிய மான வேலான்
றாழைமுப் புடைக்காய் வீழ்ந்து தாற்றிளங் கமுகு செற்று
வீழ்குலை வருக்கை போழ்ந்து வெம்புலி யடிய பைங்காய்க்
கொழுரை யரம்பை சாய்க்குங் குடகநா டாளும் வேந்தே.

இ - ள். மாழை - மாம்பிஞ்சுபோன்ற, மெல் நோக்கி-மெல்லிய பார்வையையுடைய தமயந்தியே, ஈங்கு - இங்கே, வைகிய - தங்கிய, மாண்ம் - பெரிய, வேலோன் - வேற்படையையுடையவன், தாழை - தெங்கினுடைய, முப்புடை காய் - மூன்று பக்கங்களையுடைய காயா னது, வீழ்ந்து - விழுந்து, தாறு - குலைகளையுடைய, இளங்கமுகு - இளமைபொருந்திய கமுகமரத்தை, செற்று - ஒடித்து, வீழ் சுளை - விரும்பப்பட்ட சுளையையுடைய, வருக்கை போழ்ந்து-பலாவைப் பிள ந்து, வெம் புலி அடிய-வெப்பம்பொருந்திய புலியினதடியையொத்த, பைங்காய்-பசியகாயையுடைய, கோழ் அரை - கொழுமையுள்ள அடி யையுடைய, அரம்பை - வாழையை, சாய்க்கும் - சாயச்செய்யும், குட கநாடு-குடகதேசத்தை, ஆளும்-ஆளுகின்ற, வேந்து-அரசன், எ - று.

க - து. இவன் குடகநாட்டரசன் என்றாள் என்பதாம்.

மரங்களைக் கூறினும் அவ்வவற்றின் கனிகளையெனக் கொள்ளு தல் சிறப்பெனக. தென்னம்பழம் வீழ்தலால் இவ்வாறுகுமோவெ னின் ஆகும். அது "காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற் றிப், பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து, தேமாங் கனி சிதறி வாழைப்பழங்கள் சிந்து, மேமாங்கத மென்றிசையாற் றிசைபோய துண்டே" (சீவகசிந்தாமணி - நாமகளிலம்பகம்) இதனு லறிக. (கஙுக)

ஏந்திள முலையா யிப்பா லினிதுறை குமர னன்னான்
றேந்துணை ருழ்த்த போதுந் தெரிவைய ரிழைத்த சிற்றிற்
காந்தெரி மணியும் பொன்னுங் காழகிற் றுணியும் வாரிப்[தே
பூந்திரை சுருட்டுந் தெண்ணீர்ப் பொன்னிநா டாளும் வேந்

இ - ள். ஏந்து - தாங்குகின்ற, இளமுலை யாய்-இளமைபொருந் திய முலைகளையுடைய தமயந்தியே, இப்பால்-இப்புறத்தில், இனிது உறை-இனிமையுடனுறைகின்ற, குமரன் அன்னான்-குமாரக்கடவுளை யொத்தவன், தேம் துணர்-வாசனைபொருந்திய மகரந்தங்களை, ஊழ் த்த - உதிர்த்த, போதும் - மலரையும், தெரிவையர் - சிறுபெண்கள், இழைத்த - செய்த, சிற்றில்-சிறுவீட்டினது, காந்து எரி-ஒளிமிகுந்த, மணியும் - மணிகளையும், பொன்னும் - பொன்னையும், காழ் - வயிரம் பொருந்திய, அகில் துணியும் - அகிற்றுண்டுகளையும், வாரி - வாரிக் கொண்டு, பூ-அழகுபொருந்திய, திரை சுருட்டும் - அலைகளை மடக்கு கின்ற, தெள் நீர் - தெளிவு பொருந்திய நீரையுடைய, பொன்னி நாடு - காவிரிசூழ்ந்த சோணாட்டை, ஆளும் வேந்து-ஆளும் அரசன், எ - று.

க - து. இவன் சோழநாட்டரசன் என்றாள் என்பதாம்.

வான்வறப்பினும் காலந்தப்பாது வரும் காவேரிநதி சூழ்ந்த அந் நாட்டுக்கு ஒரு குறைவில்லை யென்பது தோன்ற 'போதும் மணியும் பொன்னும் அகிற்றுணியும் வாரிப் பூந்திரை சுருட்டுந் தெண்ணீர்ப் பொன்னிநாடு' என்றார். அதனால் அந்நாட்டையாளும் அரசன்பெரு மை விளங்குகின்றது. (கசு0)

மோட்டிள முலையாய் பைம்பொன் மொய்ம்மணித் தவிசி ளுப்பட், சேட்டிளம் பரிதி போல வீங்குறை திணி பொற் றோளான், பாட்டளி பேட்டி னோடும் பருமுகை யவி ழ்த்துத் தேறற், கூட்டுணுங் கமல வாவி கொற்கையம் பதி க்கு வேந்தே.

இ - ள். மோடு - உயர்ச்சிபெற்ற, இள முலையாய்-இளமைபெ ருந்திய ஸ்தனங்களையுடைய தமயந்தியே, பைம்பொன் - பசியபொ ன்னாற் செய்யப்பட்ட, மொய் மணி - மணிகள் நெருங்கிய, தவிசின் நாப்பண்-ஆசனத்தின் மத்தியத்திலே, சேடு இளம்பரிதி போல-மிகு ந்த இளமைபொருந்திய சூரியன்போல், ஈங்கு உறை - இங்கேயிருக் கின்ற, திணி - வலிமைபெற்ற, பொன் தோளான்-அழகுபொருந்திய தோளையுடையவன், பாட்டு அளி-பாட்டையுடைய வண்டுகள், பேட் டினோடும் - பெட்டைகளுடன், பரு முகை யவிழ்த்து-பரிய அரும்பு களை விரித்து, தேறல்-தேனை, கூட்டு உணும்-கொள்ளைகொண்டுண் ணும், கமலம் வாவி - தாமரைத் தடாகத்தையுடைய, கொற்கை அம் பதிக்கு வேந்து - கொற்கையாகிய அழகிய நகரத்துக்கு அரசனாகிய சேரமான், எ - று. ஏகாரம் - அசைநிலை.

க - து. இவன் கொற்கைநாட்டரசன் என்றாள் என்பதாம்.

'பாட்டளிபேட்டினோடுந் தேறல் கூட்டுணும்' எனலால் உலகத் தில் தனியே யுண்பதினும் தமக்கினிய துணைவியுட னிருந்துண்ணல் யாவர்க்கு மின்ப மென்றதாயிற்று. (கசுக)

என்னமற் றினைய வாறே யெரிமணி மாடஞ் சேர்ந்த மன்னவர் குலமும் பேரும் வரன்முறை வழாது கூறி மின்னகு பரிதி வைவே னளனுருக் கொண்டு மேய வன்னவர் தமையு மற்றை நளனையு மறைய வுற்றாள்.

இ - ள். என்ன-இப்படி யென்று, இனையவாறு - இத்தன்மைப் படி, எரி மணி - ஒளிவீசுகின்ற மணிகள் பதித்த, மாடம் சேர்ந்த- உபரிகைகளில் வந்துகூடின, மன்னவர் - அரசர்களுடைய, குலமும்-

மரபும், பேரும் - நாமமும், வரன்முறை-குலமுறைமையில், வழாது-வழுவாமல், கூறி - சொல்லி, மின் உரு - ஒளியையுடைய, பரிதி - சூரியனையொத்த, வை வேல் - கூரிய வேலையுடைய, நளன் உரு கொண்டு மேய - நளனுருவங் கொண்டிருக்கின்ற, அன்னவர் தமையும் - இந்திரன் முதலிய அந்நால்வரையும், நளனையும் - நளமகாராஜனையும், அறையல் உற்றாள் - சொல்லத் தொடங்கினாள், எ - று. மற்று - அசை.

க - து. தேவர்களையும் நளனையும் சொல்லத் தொடங்கினாள் என்பதாம்.

வடநூலிற் சொல்லியபடி வெவ்வேறுசொல்லில் இந்நூல் விரியுமென்பதுபற்றி இத்தன்மையுடைய நாட்டரசனென்றுசொல்லியபடி. குலமும் பேருஞ் சொன்னாளென்பதற்கு 'இனையவாறு மன்னவர் குலமும் பேரும் வரன்முறை வழாது கூறி' என மாட்டெறிந் தொகுகவென்னும் யுத்தியாற் சுருக்கிக் கூறினார். இனி நாலுபாட்டால் இந்திரன் முதலிய நால்வர்க்கும் நளனுக்குஞ் சிலேடையாகத் தனித் தனி சொல்லுதல் காண்க. (கசஉ)

கலைவளர் திங்க ளென்னக் கடிகமழ் கமலம் வாட்டுந்
திலகவாண் முகத்தா யீங்கு வைகிய சினவேற் காளை
வலனுடை வயிர வாளான் கற்பக மலிந்த தோளான்
பலபகை வரைமுன் செற்ற பகட்டெழின் மார்பி னானே.

இ - ள். கலை வளர் - கலைகள் வளரப்பெற்ற, திங்கள் என்ன - சந்திரன்போல், கடி கமழ் - வாசனை கமழ்கின்ற, கமலம் வாட்டும் - தாமரைமலரை வாடச்செய்கின்ற, திலகம் வாள் முகத்தாய் - திலகப் பொட்டிட்ட ஒளிபொருந்திய முகத்தையுடைய தமயந்தியே, ஈங்கு வைகிய-இங்கே தங்கிய, சினம்வேல் காளை-கோபம்பொருந்திய வேற்படையை யுடையவன், வலன் உடை வயிரம் வாளான் - வலனைக் கொன்ற வச்சிரப்படையை யுடையவன், (வெற்றிபொருந்திய கூரிய வாளையுடையவன்), கற்பகம் மலிந்த தோளான் - கற்பக மலர்மாலை நெருங்கப்பெற்ற தோளையுடையவன், (கற்பகமலிந்த தோளான் - மலையைப் பிளக்கும்படி வலிமை மிகுந்த தோளையுடையவன்), பல பகை வரை முன் செற்ற-பலவாகிய பகைகொண்ட மலைகளை முன் சிறகறுத்துச் சயங்கொண்ட, (பல பகைவரை முன் செற்ற-பல சத்துருக்களை முன் செயித்த), பகடு எழில் மார்பினான் - பெருமைபொருந்திய அழகிய மார்பையுடைய இந்திரன், (நளன்), எ - று.

க - து. இவன் இந்திரன் என்றாள் என்பதாம்.

தமயந்தி மாலைசூட்டாது மேற்சொன்ன அரசர் முகமலர்கள் வாடுதல்பற்றி 'திங்களென்னக் கமலம் வாட்டுந் திலகவாண் முகத்தாய்' என்றார். இறந்தால் தன்னுடம்பு நவமணியாகும்படி வரம்பெற்றிருந்தவலாசுரனைக்கொன்றபடியால் 'வலனுடை வயிரவாளான்' என்றும், பறந்து உலகத்தை யழித்துக்கொண்டிருந்த மலைகளின் சிறகை யறுத்தபடியால் 'பலபகைவரை முன் செற்ற' என்றும், இந்திரனுக்கு அடைகள் கொடுக்கப்பட்டன. இப்பாட்டிற் பின்னிரண்டடியும் இந்திரனுக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க. (கசக)

நகைமதி முகத்தா யீங்கு வைகிய நாம வேலான்
புகலரும் வெகுளி யுள்ளத் தொருவினன் பொங்கி யார்த்த
பகையிருட் பிழம்பு சீக்கும் பலசுட ருமிழும் வாளான்
றகைமைசால் புலவ ரேத்துந் தாலமே ழுடைய கோவே.

இ - ள். நகை - ஒளியையுடைய, மதி முகத்தாய் - சந்திரனை போன்ற முகத்தையுடைய தமயந்தியே, ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, நாமம் வேலான் - அச்சத்தைத்தரும்வேற்படையையுடையவன், புகல் அரு - சொல்லுதற்கரிய, வெகுளி உள்ளத்து - கோபமுள்ள மனத்தையுடைய, ஒருவினன் - ஆட்டுக்கடா வாகனத்தையுடையவன், (புகலரு - புகுதற்கரிய, வெகுளி - சினத்தை, உள்ளத்து - மனத்தின்கண், ஒருவினன் - நீக்கினன்), பொங்கி - பொலிந்து, ஆர்த்த - ஒலித்த, பகை - பகையாகிய, இருள் பிழம்பு - இருட்பிழம்பை, சீக்கும் - ஓட்டுகின்ற, பல - பலவாகிய, சுடர் உமிழும் - ஒளியை யுமிழ்கின்ற, வாளான் - சுவாலையையுடையவன், (பொங்கி ஆர்த்த - மிகுந்து கர்ச்சித்த, பகை இருள் - இருளையொத்த பகைவரது, பிழம்பு - கூட்டத்தை, சீக்கும் - கெடுக்கின்ற, பல - பலவாகிய, சுடர் உமிழும் - ஒளிவிடுகின்ற, வாளான் - வாட்படையையுடையவன்), தகைமை சால்-அழகு மிகுந்த, புலவர் ஏத்தும்-தேவரால் துதிக்கப்பட்ட, தாலம் ஏழ் உடைய கோ - ஏழுநாவுடைய தீக்கடவுள், (தகைமை சால் - பெருமை மிகுந்த, புலவர் ஏத்தும் - வித்துவான்களால் துதிக்கப்பட்ட, தாலம் ஏழ் உடைய கோ - சத்ததீவையுடைய நளன்), எ-று.

க - து. இவன் அக்கினிதேவன் என்றாள் என்பதாம்.

ஒருவென்பது ஆடு. வெறிவிலக்கில் "ஒருத்திக்கொருவன் பலியோ" என்றார் பிறரும். தேவர் புசிக்கின்ற அவிப்பாகங்கள் அக்கினி முகமாகப் பெறவேண்டுதலாலும், இதனால் தேவர்கள் வாழ்க்கைக்கு அக்கினி காரணமாதலாலும், வேதத்தில் தேவர்களுக்கு அக்கினியை

முகமாகச் சொல்லுதலாலும், தமக்குப் புசிப்புத்தருபவனை உண்பவர் புகழ்வது இயல்பாதல்பற்றி அக்கினியைப் 'புலவரேத்துந் தாலமேழு டைய கோ' என்றார். புலவரென்பது பலபொரு ளொருசொல்லாய்த் தேவரையும் கற்றவரையும் உணர்த்துதலால், ஏத்துதல்: அக்கினிக் குத் தேவரும்,நளனுக்குக் கற்றவருமெனக்கொள்க. இப்பாட்டிற்பின் மூன்றடியும் அக்கினிக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க. ()

அஞ்சன மெழுத லாற்று தம்மவோ வென்று நையும்
வஞ்சிநுண் ணிடையா யீங்கு வைகிய காம வேலா
னெஞ்சலி றருமன் றெண்ணீ ரிருங்கட லுலக மெல்லாஞ்
செஞ்சவே யோசை போய தீதறு செங்கோல் வேந்தே.

இ - ள். அஞ்சனம் - மையை, எழுதல்-எழுதுதலை, ஆற்றாது - சகியாது, ஓ என்று - ஓவென்று, நையும் - நைகின்ற, வஞ்சி நுண் இடையாய் - வஞ்சிக்கொடிபோல்நுட்பமாகியஇடையையுடையதமயந்தியே, ஈங்கு வைகிய - இங்கேதங்கிய, காமம் வேலான் - அச்சத்தைத்தருகின்ற வேற்படையையுடையவன், எஞ்சல் இல்-குறைவில்லாத, தருமன் - தருமனென்னும் பெயரையுடையவன், (தருமத்தையுடையவன்), தெள் நீர்-தெளிவுபொருந்திய நீரையுடைய, இரு கடல் உலகம் எலலாம்-பெரியகடல்சூழ்ந்த உலக முழுவதும், செஞ்சவே - செவ்வையாக, ஓசை போய - புகழ்பரவப்பெற்ற, தீது அறு - குற்றமற்ற, செங்கோல் வேந்து-செவ்விய காலதண்டத்தையுடைய யமன், (செங்கோல் செலுத்தும் நளன்), எ - று.

து. இவன் யமன் என்றாள் என்பதாம்.

...ணுக்கு மையெழுதினால் அந்த மையளவுகனமும் பொறுக்க மாட்டாது நையுமிடையெனக்கொள்க. அம்மவோ - இரக்கக்குறிப்பு. 'அனிச்சப்பூக்கோதைசூட்டி னம்மனையோ வென்றஞ்சிப், பனிக்கு நுண்ணுசுப்பிற் பாவை' என்றார் பிறரும். உயிர்கள்செய்த தீவினைக் குத் தகவொறுத்தலால் யமனையும், அறமுப்பத்திரண்டும் செய்தலால் நளனையும் 'தருமன்' என்றார். இப்பாட்டிற்பின்னிரண்டடியும் யமனுக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க. (கசுரு)

பாற்றிரை யமிர்த மூறும் படரொளிப் பவளச் செவ்வாய்க்
கோற்றொடி மடக்கை யீங்கு வைகிய குவவுத் தோளான்
மாற்றருஞ் சிறப்பின் மிக்க வளங்கெழு புவன வேந்த
னாற்றிசைப் பரப்புஞ் சூழ்போ நலங்கெழு கேமி வேந்தே.

இ - ள். பால் திரை - பாற்கடலிற்பிறந்த, அமிர்தம் ஊறும் - அமிர்தமூறுகின்ற, படர் - படரப்பெற்ற, ஒளி - ஒளியையுடைய,

பவளம் செவ்வாய் - பவளம்போன்றசெவ்வாயையும், கோல் தொடி- அழகிய வளையலையுமுடைய, மடந்தை - தமயந்தியே, ஈங்கு வைகிய- இங்கேதங்கிய, குவவு தோளான் - திரட்சி பொருந்தியதோளையுடையவன், மாற்றரு - ஒருவராலும் நீக்குதற்கரிய, சிறப்பின் மிக்க-சிறப்பினால்மிகுந்த, வளம் கெழு - வளம்பொருந்திய, புவனவேந்தன் - நீருக்கரசன், (பூமிக்கரசன்), நால் திசை பரப்பும் - நான்குதிசைகளின் பரப்பினும், சூழ் போம் - சூழ்ந்துபோகின்ற, நலம் கெழு - நன்மைபொருந்திய, நேமி வேந்து - கடலரசனான வருணன், (சக்கிரவர்த்தியாகிய நளமகாராஜன்), எ - று.

க - து. இவன் வருணன் என்றாள் என்பதாம்.

புவனமென்பது - நீருக்கும் பூமிக்கும், நேமியென்பது - கடலுக்கும் சக்கிரத்துக்கும் பலபொருளொருசொல்லாதல்காண்க. இப்பாட்டிற் பின்னிரண்டடியும் வருணனுக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க.

போதரி நெடுங்க ணல்லாய் பொருசிலை வேனி லானிற்
கோதையர் மனமுங் கண்ணுங் கூட்டுணுங் குவவுத் தோளான
முதவிழ் கமலப் போது மலர்ந்தபூந் தடங்க டோறு
மாதர்மென் முகங்கள் காட்டும் வளங்கெழு நிடத வேந்தே.

இ - ள். போதரி - அரிபரந்த, நெடு கண் - நெடிய கண்களையுடைய, நல்லாய் - தமயந்தியே, பொரு சிலை - பொருகின்ற வில்லையுடைய, வேனிலானில் - மன்மதன்போல், கோதையர் - மங்கையர்களுடைய, மனமும் - நெஞ்சையும், கண்ணும் - விழிகளையும், கூட்டுணும் - கொள்ளையிடுகின்ற, குவவு தோளான் - திரட்சிபொருந்திய தோளையுடையவன், தாது அவிழ் - மகரந்தப்பொடி யுதிர்கின்ற, கமலம் போது - தாமரை மலர்கள், மலர்ந்த - விரிந்த, பூ தடங்கடோறும் - பொலிவுபொருந்திய தடாகங்கள்தோறும், மாதர் - மடவார்களுடைய, மெல் முகங்கள் காட்டும் - மெல்லிய முகங்களைக்காண்பிக்கின்ற, வளம் கெழு - வளம்பொருந்திய, நிடதவேந்து - நிடததேசத்தையாளும் நளமகாராஜன், எ - று. ஏ-அசை.

க-து. இவன், அரிபரந்த நெடிய கண்களையுடைய தமயந்தியே, மன்மதனைப்போலப் பெண்கள் கண்களையு மனங்களையும் கொள்ளைகொள்ளும் அழகு பொருந்திய தோள்களையுடைய நளமஹாராஜன் என்றாள் என்பதாம்.

கோதையர் மனமுங்கண்ணுங் கொள்ளைகொண்டுண்ணுந் தோளானெனினும் அமையும். இப்பாட்டில் தோளான் - எழுவாய், நிடத

வேந்து - பயனிலை. இப்படலத்தில சேயரி சிந்தியென்னும் நூற்றிரு பத்தநாலாம்பாட்டுமுதல் இப்பாட்டுவரையும் முதற்கண் இத்தன்மை யென்று பொதுப்படச் சுட்டியதை எழுவாயாகவும், இந்நாடனென்பதைப் பயனிலையாகவுங்கொள்க. (கசுஎ)

என்றிய லணங்கு கூற வினையரி லன்னங் கூறு, மன்ற
லந் தெரியற் றிண்டோண் மன்னவன் யார்கொ லென்னாப்,
பொன்றிகழ் திதலை பூத்த புணர்முலைப் பாவை போல்வா,
ளொன்றிய வையத் தோடு முள்ளநெக் குருகி நின்றாள்.

இ - ள். என்று - இப்படியென்று, இயல் அணங்கு - நாமகளானவள், கூற - சொல்லியவளவில், இனையரில் - இத்தன்மையையுடைய அரசர்களில், அன்னம் கூறும் - அன்னப்பறவை முன்பு சொல்லிய, மன்றல் - வாசனைபொருந்திய, தெரியல் - மாலையையணிந்த, திண் தோள் - திண்மைபொருந்திய தோள்களையுடைய, மன்னவன் - நளமகாராஜன், யார்கொல் என்னா - எவனென்று, பொன் - பொன் போல், திகழ் - விளங்குகின்ற, திதலை பூத்த - தேமல் பரவிய, புணர் முலை - நெருங்கிய முலைகளையுடைய, பாவை போல்வாள் - பாவை போல்பவளாகிய தமயந்தியானவள், ஒன்றிய ஐயத்தோடும் - பொருந்திய சந்தேகத்துடனே, உள்ளம் - மனமானது, நெக்கு உருகி நின்றாள் - மிகவுங்கரைந்து நின்றாள், எ - று.

க - து. தமயந்தி மனமுருகி நின்றாள் என்பதாம்.

இந்திரன்முதலிய நால்வரும் நளவேடங் கொண்டிருத்தலாலும், அவர் அவ்வாறிருத்தலைக் கேள்விப்படாமையாலும் நாமகள் அந்நால் வரையுஞ்சொன்ன செய்யுளுக்கு அத்தேவரையன்றி நளனென்றும் பொருள்படுதலாலும் நளனைச் சொல்லிய செய்யுளுக்கு வேறு பொருள்படாது நிடதவேந்தென்று வெளிப்பட்டிருப்பினும் இதற்கும் உளதோவென்னும் ஐயத்தாலும், நம்மை விரும்பியிருந்ததேவர் நிலைமாறி மாயஞ்செய்யினுஞ் செய்வரென்னு மெண்ணமுள்ள தமயந்திக்கு ஒருவர்போலிருக்கும் இவ்வைவருள் நளன் எவனென்று சந்தேகத் துக்கிடமுண்டாய் வருத்தந் தோன்றியதென்க. [இது பொதுமையணி.] (கசுஅ)

எள்ளுற வேலை யோரை யிரட்டுற மொழித லானும்,
வள்ளன்மார் பணிந்த தாரில் வண்டுவீழ்ந் தாற்ற லானு,
முள்ளுறப் பிணித்த வன்பி னூழ்வினைத் தொடர்பி னானு,
நள்ளிருள் பருகும் பைம்பூ ணளனையே நளனென் றோர்ந்
தாள்.

இ - ள். எள் உற - சந்தேகம் பொருந்த, ஏனையோரை - மற்றையோரை, இரட்டுற மொழிதலானும் - இரண்டு பொருள்படச் சொல்லுதலாலும், வள்ளல் மார்பு அணிந்த தாரில்-நளன்மார்பிலணிந்த மாலையில், வண்டு வீழ்ந்து அரற்றலானும்-வண்டுகள் வீழ்ந்தொலித்தலாலும், உள் உற பிணித்த - உள்ளேபொருந்தக்கட்டிய, அன்பின் - அன்பினாலுண்டாகிய, ஊழ்வினை தொடர்பினானும் - ஊழ்வினையினுடைய சம்பந்தத்தினாலும், நள் இருள் - மிகுந்த இருளை, பருகும் - உண்கின்ற, பைம்பூண் - பசியபொன்னாற் செய்த ஆபரணங்களையுடைய, நளனையே - நளனென்னு மரசனையே, நளன் என்று-நளமகாராஜனென்று, ஓர்ந்தாள் - அறிந்தாள், எ - று.

க - து. நளனையே நளனென் றறிந்தாள் என்பதாம்.

தேவர்களணிவது கற்பகந்தந்த பொற்பூமாலை யாதலால் அதில் வண்டுவீழாமைபற்றி 'வள்ளன்மார்பணிந்ததாரில் வண்டுவீழ்ந் தரற்றலானும்' என்றும், "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, (சூழி)னுந் தான்முந் துறும்" (திருக்குறள் - ஊழ் - க0) என்பதுபற்றி 'ஊழ்வினைத் தொடர்பினானும்' என்றும் சொல்லினார். [பொதுமையுற்றிருந்த நளனை ஏதுவினால் சிறப்பித்தறிதலால் சிறப்பணி.] (கசுக)

மாதர்மென் னோக்கி நாணி மதிமுகஞ் சிறிது கோட்டிக், காதன்மீ தூர வுள்ளங் களிமகிழ் தூங்க நின்ற, கோதையர் மணிசெய் செம்பொற் கோடிகத் தினிதி னேந்துந், தாதுலா மலங்கன் மாலை தளிரியற் கரத்திற் கொண்டாள்.

இ - ள். மாதர் - அழகுபொருந்திய, மெல் நோக்கி - மெல்லிய பார்வையையுடைய தமயந்தியானவள், நாணி - நாணமுற்று, மதி முகம் - மதிபோன்றமுகத்தை, சிறிது கோட்டி - கொஞ்சம்வணக்கிக்கொண்டு, காதல் - ஆசையானது, மீதூர - அதிகரிக்க, உள்ளம் - மனமானது, களி மகிழ் தூங்க-களிப்புமிகுந்த மகிழ்ச்சிதங்க, நின்ற - அருகேநின்ற, கோதையர் - தோழிகள், மணி செய் - நவமணிகள் பதித்த, செம்பொன் கோடிகத்து - செம்பொன்னாற் செய்ததட்டில், இனிதின் ஏந்தும் - இனிமையிற் றூங்குகின்ற, தாதுலாம் - மகரந்த மூலாவுகின்ற, அலங்கல் மாலை - அசைகின்ற மலர்மாலையை, தளிர் இயல் - தளிரின்து சாயலையுடைய, கரத்தில் கொண்டாள் - கையிலெடுத்துக் கொண்டாள், எ - று.

க - து. தமயந்தி மாலையைக் கையிலெடுத்தாள் என்பதாம்.

கணவனென்னுந் துணிபுடையவளாதலால் 'நாணி முகஞ்சிறிது கோட்டி' என்றார். அப்பொழுது தமயந்தி யுவகை என்னுற்

சொல்லிமுடியாதென்பார், 'களிமகிழ் தூங்க நின்ற கோதையர்' எனப் பூந்தட்டேந்திய தோழிகளுவகைமாத்திரங் கூறினர். (கஎ0)

[இதனால் தமயந்தி நளனுக்கு மாலைசூட்டல்
சொல்லப்படுகின்றது.]

இன்னரிச் சிலம்பு செம்பொற் கிண்கிணி யார்ப்ப வேகி, மன்னவர் மனமுங் கண்ணும் வண்டெனத் தொடர்ந்து வீழக்,கொன் னுனை வயிர வொள்வா ணிடதர்கோன் குவவுத் தோண்மேற், பொன்னரி மாலை சூட்டிப் பூங்கழல் வணங்கி நின்றாள்.

இ - ள். இன் - இனிய வோசையைத் தருகின்ற, அரி - பருக்கையையுடைய, சிலம்பு - சிலம்புகளும், செம் பொன் - சிவந்தபொன்னாற்செய்த, கிண்கிணி - சதங்கைகளும், ஆர்ப்ப-ஒலிக்கும்படி, ஏகி - போய், மன்னவர் - அரசர்களுடைய, மனமும் - நெஞ்சும், கண்ணும் - கண்களும், வண்டு என - வண்டுகள்போல், தொடர்ந்து வீழ - தொடர்புகொண்டு வீழ, கொல் - கொல்லுகின்ற, நுனை - முனையையுடைய, வயிரம் ஒள் வாள் - கூர்மைபொருந்திய ஒளிவீசுகின்ற வாட்படையையேந்திய, நிடதர்கோன் - நளமகாராஜனுடைய, குவவு-திரட்சி பொருந்திய, தோள் மேல் - புயங்களின்மேல், பொன்னரி மாலை சூட்டி - பொன்னரிமாலையையணிந்து, பூ கழல் - அழகுபொருந்திய அவன் பாதங்களை, வணங்கி நின்றாள் - பணிந்து நின்றனள், எ - று.

க - து. தமயந்தி நளனது தோளில் மாலையணிந்து அவனது திருவடியை வணங்கி நின்றாள் என்பதாம்.

இப்பொழுது பார்த்தாலன்றி இது தப்பில் தமயந்தி நமக்குப் பார்க்கவுங்கிடையாளென்னும் நினைப்பு அவள் தமக்கு மாலைசூட்டிலளென்னும் பொறாமையினு மேற்பட்டிருத்தலால் 'மன்னவர் மனமும் கண்ணும் வண்டெனத் தொடர்ந்துவீழ' என்றும், மாதர்க்குக் கணவரைத் தொழுதலின் மிக்கதின்மையால் 'பூங்கழல் வணங்கி நின்றாள்' என்றும் சொல்லினர். பொன்னரிமாலையென்பது பொன்னையரிந்துசெய்யு மொருமாலையி நுப்பினும் முன்பாட்டில் தாதுலாமலங்கன்மாலையெனலால், இங்கு அழகுபொருந்திய வண்டுகள் சூழ்ந்த மாலையெனப் பொருள்கொள்க. (கஎக)

[இதனால் அப்போழுது நளனுக்கிருந்த மகிழ்ச்சி
சொல்லப்படுகின்றது.]

வடிமலர் நெடுங்கட் செவ்வாய் மடவர லினிது சூட்டுந், தொடையல்பொற் கிரியில் வீழுஞ் சுடர்மணி யருவி யே

ய்ப்ப, விடுகதிர் வலயத் திண்டோண் மன்னவன் விழைவு கூர்ந்து, பிடிதழீஇ யுவகை பூத்த பெய்மதக் களிறு போன்றான்.

இ - ள். வடி - தேனையுடைய, மலர் - குவளைமலர்போன்ற, நெடு கண் - நெடியகண்களையும், செவ்வாய் - செவ்வாயையுமுடைய, மடவரல் - தமயந்தியானவள், இனிது சூட்டும்-இனிமையோடுஞ்சூட்டிய, தொடையல் - மாலையானது, பொன் கிரியில் - மேருமலையினின்றும், வீழும்-ஒழுகுகின்ற, சுடர் - ஒளியையுடைய, மணிரத்நங்களோடும் வருகின்ற, அருவி ஏய்ப்ப - அருவியையொப்ப, விடுகதிர் - கிரணங்களை வீசுகின்ற, வலயம் - கேயூரமணிந்த, திண்-வலிமை பொருந்திய, தோள் - தோளையுடைய, மன்னவன் - நளமகாராஜன், விழைவு கூர்ந்து - ஆசைமிகுந்து, பிடி தழீஇ - பெட்டையானையைத் தழுவி, உவகை பூத்த - மகிழ்ச்சியடைந்த, பெய் மதம் களிறு - மதம் பொழிகின்ற யானையை, போன்றான் - ஒத்தான், எ - று.

க - து. நளன் மகிழ்ச்சி யடைந்தான் என்பதாம்.

பிடி - பெட்டையானை. களிறு - ஆண்யானை. நளன் பிடியைத்தழுவி யுவகைபூத்தகளிறு போன்றானென்னலால் அவ்வாறு தமயந்தி களிற்றைத் தழுவி யுவகைபூத்த பிடிபோன்றாளெனக்கொள்க. [இது உவமையணி.] (களஉ)

பூணுலாக் கிடந்த வல்குற் பொற்பெலாங் களிகொள் வண்டின், பாணுலாக் கிடந்த தாரான் பருகுவான் போல நோக்க, நாணமீ தூரப் பைம்பொ னலத்தபூங் கொடியி னொல்கி, வாணகை யுயிர்த்த செவ்வி மதிமுகங் கோட்டி நின்றாள்.

இ - ள். பூண் உலா கிடந்த - ஆபரணங்கள்சைந்துகிடந்த, அல்குல்-அல்குலையுடைய தமயந்தியது, பொற்பு எலாம்- அழகனைத்தையும், களி கொள்-களிப்பைக்கொண்ட, வண்டின் -வண்டுகளுடைய, பாண் உலா கிடந்த - இசையுலாவிக் கிடந்த, தாரான் - மாலையையணிந்த நளனானவன், பருகுவான் போல-கண்ணாலுண்பவன்போல, நோக்க - பார்க்க, (அதனால்) நாணம் மீதூர - நாணமதிகரிக்க, பைம்பொன் - பசியபொன்னாலாகிய, நலத்த - நன்மையையுடைய, பூ கொடியின் - பூங்கொடிபோல், ஒல்கி - துவண்டு, வாள் - ஒளிபொருந்திய, நகை உயிர்த்த - புன்னகையைத் தந்த, செவ்வி-அழகுபெ

ருந்திப, மதி முகம் - பூர்ணசந்திரன்போன்ற முகத்தை, கோட்டி நின்றாள் - வணக்கிக்கொண்டு நின்றனள், எ - று.

ம - து. நளன் தமயந்தியைப் பார்க்கத் தமயந்தி தலைவணங்கி னாள் என்பதாம்.

தமயந்தி மாலைசூட்டியபடியால் நமக்கு எப்படியுந்துணைவியாயி னள், இனி நாம் அந்தரங்கத்தில் அவளழகைப் பார்ப்பமென்றில்லா மல் 'பொற்பெலாம் பருகுவான்போல நோக்கி' என்றமையால் அவ ளழகிடத்திருந்த அவாவானது அப்பொழுது அவன் விவேகத்தினு மேற்பட்டிருந்ததுபோலும். அவளுக்கும் அப்படியிருப்பினும் பெண் பாலாகையால் வெளிப்படுத்தாளென்பது தோன்ற 'நாணமீதூரப்பூ ங்கொடியிறைஞ்சி நகையுயிர்த்த செய்விமதிமுகங்கோட்டி நின்றாள்' என்றும் சொல்லினர். (கஎ௩)

அலைகட லுயிர்த்த பொன்னம் பாவையை யலங்கு சோதி
நிலவுமிழ் பளிக்கு மாட வேதிகை கொணர்ந்து நீங்காச்
சிலதிய ருயிரை யன்ன தோழியர் செவிலித் தாயர்
விலைவரம் பறிய லாகா மென்றுகி லெழினி வீழ்த்தார்.

இ - ள். அலை கடல் - பாற்சமுத்திரமானது, உயிர்த்த - பெ ற்ற, பொன்னம் பாவையை-இலக்குமியையொத்த தமயந்தியை, அல ங்கு-அசைகின்ற, சோதி நிலவு உமிழ் - மிகுந்த வொளியைக் கொ ப்புளிக்கின்ற,பளிக்குமாட வேதிகை-பளிங்கரிந்துசெய்த உபரிகையி லிருக்குமேடையில், கொணர்ந்து - அழைத்துக் கொண்டுவந்துவை த்து, நீங்கா - நீங்காத, சிலதியர் - ஏவல்செய்தோழிகளும், உயிரை அன்ன தோழியர் - உயிரையொத்த தோழிகளும், செவிலி தாயர் - வளர்த்த தாய்மாரும், விலை வரம்பு அறியல் ஆகா - விலை யளவறியக் கூடாத, மெல் துகில் - மெல்லியசீலையாற் செய்த, எழினி - திரை யை, வீழ்த்தார் - விடுத்தார்கள், எ - று.

க - து. தாய்மார்களுந் தாதிமார்களுந் தமயந்தியை உப்பரிகை யின்மே லழைத்துக்கொண்டுபோய் வைத்துத் திரைபோட்டார்கள் என்பதாம்.

சிலதியராதியர் - எழுவாய். அரசரைத் தனித்தனி கண்டுவந்த திற் பொழுது நீட்டித்தலால் இளைப்புறுமென்று தமயந்தியைப் பளி ங்குவேதிகையிற் சேர்த்துப் பிறரவளையும் பிறரை யவளும் நோக்கா மைப்பொருட்டுச் சிலதியர் முதலியர் திரை வீழ்த்தனரென்க பொ ன்னம்பாவை என்பதற்கு பொற்பாவைபோல்வாள் என்றுரைப்பினு மாம். (கஎச)

தாவருஞ் சீற்றத் துப்பிற் றறுகண்மால் யானை யன்ன, மேவலர்க் கடந்த வொள்வாள் வேந்தர்கோன் முழவுத் தோண்மேன், மாவகிர் நெடுங்கண் சூட்டு மாலையே மாலை யாகக், காவலர் முகங்க ளெல்லாங் கமலமொத் திருந்த மாதோ.

இ - ள். தாவரும் - தாவுதற்கரிய, சீற்றத்துப்பின் – மிகுந்த கோபத்தையும், தறுகண் - அஞ்சாமையையுமுடைய, மால் - பெருமைபொருந்திய, யானை அன்ன - யானையையொத்த, மேவலர் - சத்துருக்களை, கடந்த – வென்ற, ஒள்-ஒளிபொருந்திய, வாள் – வாட்படையையுடைய, வேந்தர்கோன்-நளமகாராஜனுடைய, முழவு - மத்தளத்தையொத்த, தோள்மேல் - புயங்களின்மீது, மா வகிர் – மாவடுவின்பிளப்பையொத்த, நெடு கண் - நெடியகண்களையுடைய தமயந்தியானவள், சூட்டும் - தரித்த, மாலையே - பூமாலையே, மாலையாக - மாலைப்பொழுதாக, காவலர் – அரசருடைய, முகங்கள் எல்லாம் - முகங்களனைத்தும், கமலம் – தாமரைமலரை, ஒத்திருந்த - ஒத்திருந்தன, எ- று. மாது, ஓ - அசைகள்.

க – து. நளன் தோளிலணிந்த மாலையே மாலைக்காலமாக அரசர்கள் முகங்கள் தாமரை மலர்களாக விருந்தன என்பதாம்.

நெடுங்கணென்பது பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. தமயந்தி நளனுக்கு மாலைதரித்தவளவில் மற்றையரசர் முகங்கள் குவிதல்பற்றி அவள் சூட்டியமாலையை மாலைப்பொழுதாகவும் அவர் முகங்களை அம்மாலைப்பொழுதிற்குவியுந் தாமரைமலராகவும் சொல்லினர். [முகங்கள் கமலமொத்திருந்தவென்னும் உவமை மாலையே மாலையாகவென்னும் உருவக மடியாக வருதலால் கலவையணி.] (கஎ௫)

சுயம்வரப்படலம் முற்றிற்று.



நளன்தன்னையெதிர்த்த அரசரோடுபோர்செய்துவெல்லுதல்.

# போர்புரிபடலம்.

[இப்படலத்தால் சுயம்வரத்திற்கு வந்த அரசர் தமயந்தி நளனை விரும்பி மாலைசூட்டுதலால் தாம் அவனைக் கைப்பற்றும் பொருட்டு அவனை வெல்ல வெண்ணிச் செய்யும் யுத்தம் சொல்லப்படுகின்றது.]

[இதனால் அரசர்கள் மகிழ்ச்சியும் இந்திரன் பொறாமையுஞ் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அழகினைச் சுமந்த பேறு பெற்றன ளணங்கின் றென்று, வொழுகொளி யார மார்ப ருவாக்கடன் மெலிய வார்ப்பப், பொழிகதிர் வயிர வொள்வாட் புரவலன் புழுங்கி நெஞ்சம், விழியழல் கதுவ நோக்கி வேந்தரை விளித்துச் சொல்வான்.

இ - ள். அழகினை - சௌந்தரியத்தை, சுமந்த பேறு - தாங்கிய பேற்றினை, அணங்கு - தமயந்தியானவள், இன்று,பெற்றனள் என்று - இன்றுதான் பெற்றாளென்று, ஒழுகு ஒளி - ஒளிவிளங்குகின்ற, ஆரம் - மணிவட மணிந்த, மார்பர் - மார்பையுடைய அரசர்களனைவரும், உவா கடல் - பர்வகாலத்துக் கடலானது, மெலிய-ஒலியிற் குறையும்படி, ஆர்ப்ப - ஒலிக்க, (அதுகண்டு) பொழி கதிர் - கிரணங்களை வீசுகின்ற, வயிரம் ஒள் வாள் - ஒளிபொருந்திய வச்சிரவாளையுடைய, புரவலன் - இந்திரனானவன், நெஞ்சம் புழுங்கி - மனம் வெந்து, விழி - கண்களில், அழல கதுவ - நெருப்புப்பற்ற, நோக்கி- பார்த்து, வேந்தரை - அரசரை, விளித்து - அழைத்து, சொல்வான் இவ்வாறு சொல்வான், எ - று.

க – து. இந்திரன் பொறாமைகொண் டரசரைப்பார்த்துச்சொல்வான் என்பதாம்.

நளனுக்கு மாலைசூட்டுதலால் தமயந்தி யழகிற்கு அவனன்றி நாம் தகுதியுடையோமல்ல மென்று மற்றையரசர் நினைத்தமை தோன்ற 'அழகினைச்சுமந்த பேறுபெற்றனளணங்கின்று' என்றும், அதிலவ்வரசர்க்கு மகிழ்ச்சியன்றிப் பொறாமையின்மைதோன்ற 'ஆரமார்பருவாக்கடன் மெலியவார்ப்ப' என்றும், இந்திரன் தூதுகள் விடுத்தும்

நளவேடங் கொண்டும் தம்மிலொருவர்க்கும் அவளிசையாமையால் வந்த அவமானம்பற்றிப் பொறாமையும்வெகுளியுங்கொண்டமைதோன்ற 'புழுங்கி நெஞ்சம் விழியழல்கதுவ' என்றும், அதனால் அவ்வரசர்க்கும் பொறாமையுண்டாக்கினமைதோன்ற 'வேந்தரைவிளித்துச் சொல்வான்' என்றும் சொல்லினர். "வெள்ளிலை வேற்கணாளைச் சீவகன் விரைந்துவென்று, ஞெள்ளிய னென்றுமாந்த ருவாக்கடன் மெலிய வார்ப்பக், கள்வராற் புலியைவேறு காணிய காவன்மன்ன, னுள்ளகம் புழுங்கி மாதோ வுரைத்தனன் மன்னர்க்கெல்லாம்" (சீவகசிந்தாமணி-காந்தருவதத்தையாரிலம்பகம்-உசக) எனப் பிறரும் இவ்வாறுகூறுதல் காண்க. பர்வகாலத்தில் நிறைமதிகண்டால் கடல் மிக்கொலித்தலறிக. (க)

[இதுமுதல் நாலு பாட்டால் இந்திரன் கலக மூட்டுதல் சொல்லப்படுகின்றது.]

விரிகதிர்ப் பரிதி முன்னர் வெண்மதி மழுங்கு மன்றாற், பரிதியு மதியந் தோன்றிற் படரொளி மழுங்க லுண்டோ, அரசர்கா ணீவிர் வெய்யோ னருங்குலத் துதித்துந் திங்கண்,மரபின்மன் னவற்கு நுங்கண் மாணெழின் மழுங்கினீரால்.

இ - ள். விரி கதிர் - விரிந்த கிரணங்களையுடைய, பரிதி முன்னர் - சூரியன் முன்னே, வெள் மதி - வெண்மை பொருந்திய சந்திரன், மழுங்கும் அல்லால் - மழுங்கிப் போகுமல்லாமல், பரிதியும் - சூரியனும், மதியம் தோன்றில் - சந்திரனுதித்தால், படர் - விரிகின்ற, ஒளி மழுங்கல் உண்டோ - ஒளி கெடுதலுண்டோ, (இல்லை, இவ்வாறிருக்க), அரசர்காள் - அரசர்களே, நீவிர் - நீவிர்கள், வெய்யோன் - சூரியனுடைய, அரு குலத்து உதித்தும் - கிடைத்தற்கரிய மரபினிற்பிறந்தும், திங்கள் மரபின் மன்னவற்கு - சந்திரவம்சத்திற் பிறந்த அரசனாகிய நளனுக்கு, நுங்கள் - உங்களுடைய, மாண்-பெருமைபொருந்திய, எழில் - அழகு, மழுங்கினீர் - மழுங்கிப்போனீர்கள், எ - று. ஆல்-அசை.

க - து. அரசர்களே நீங்கள் சூரியகுலத்திற்பிறந்துஞ் சந்திரகுலத்து நளனழகுக்குத் தோற்றீர்க ளென்றான் என்பதாம்.

சந்திர வம்சத்திற் பிறந்தவன் - நளன். உலகத்தில் யாவருக்குங் குலத்தை யிழிவுபடுத்தலி லுண்டாகும் வேற்றுமை மற்றொன்றிலுண்டாகா தென்பதுபற்றி அரசரைநோக்கி இவ்வாறு சொல்லினனென்க. (உ)

உரிமையிற் புணர்ந்த மாத ரூடவு மறுத்திம் மாதின்
வரிமுலைப் போகம் வேண்டி மணவினை துணிந்து வந்தீர்
குருதிவேல் சுமந்து வாளா வீங்கிய குவவுத் தோளீர் [ரே.
திருநகர்க் கினிநீர் போய்நுந் தெரிவையர்க் கென்சொல் வீ

இ - ள். உரிமையில் - கிழமையினால், புணர்ந்த - கூடிய, மாதர் - மங்கையர்கள், ஊடவும் - பிணக்கங்கொள்ளவும், மறுத்து - அதைத்தடுத்து, இம்மாதின் - இந்தமங்கையினுடைய, வரி-சந்தனக் கோலத்தையுடைய, முலை போகம் வேண்டி - ஸ்தனத்தினுடைய போகத்தை விரும்பி, மணம் வினை - விவாகத்தொழிலை, துணிந்து வந்தீர் - நிச்சயித்துக்கொண்டு வந்தீர்கள்; குருதி - உதிரந் தோய்ந்த, வாள் சுமந்து - வாட்படையைச் சுமந்து, வாளா - வீணாக, வீங்கிய - பருத்த, குவவு தோளீர் - திரட்சி பொருந்திய தோள்களையுடைய அரசரே, திருநகர்க்கு - உங்களுடைய நகரத்திற்கு, இனி - இப்பொழுது, நீர் போய் - நீர் சென்று, நும் தெரிவையர்க்கு - உம்முடைய மனைவியர்க்கு, என் சொல்வீர் - யாது சொல்வீர்கள், எ - று.

க - து. அரசர்களே உங்கள் மனைவிகளுக் கென்னசொல்வீர்கள் என்றான் என்பதாம்.

வேறொரு மாதரைத் தமது கணவ னினைத்தது தெரியினும் பொறாத மங்கையர் தமயந்தியின் விவாகத்தைக் குறித்துவந்த அரசரோடு மிகவும் பிணங்கி யிருப்பரென்பது தோன்ற 'மாதரூடவும்' என்றும், நீர்விரும்பிவந்த தமயந்தியைக் கொண்டுபோன நளனை வெல்லும் வல்லமை உமக்கில்லையென்பது தோன்ற 'குருதிவேல் சுமந்து வாளாவீங்கிய குவவுத்தோளீர்' என்றும், இங்ஙனமான நீர் உம்முடைய மனைவியர் பிணக்கையுந் தணிக்கமாட்டீரென்பது தோன்ற 'தெரிவையர்க் கென்சொல்வீர்' என்றும் சொல்லினான். (ரு)

சூழிருஞ் சடைக டாங்கிச் சுடர்முடி துறந்து கான்போய்
வீழ்சரு கருந்தி நீவிர் மெய்த்தவம் புரிதல் வேண்டுங்
காழிருங் கூந்த லாளை நிடதர்கோன் றழீஇய போதே
யாழ்கெழு முலக மெல்லா மவனடி படுக்கு மன்றே.

இ - ள். சுடர் முடி-இரணங்களையுடைய கிரீடங்களை, துறந்து-விடுத்து, சூழ் - சுற்றுகின்ற, இரு - பெரிய, சடைகள் தாங்கி-சடைகளைச்சுமந்து, கான் போய் - வனத்திற்சென்று, வீழ் - அங்கேயுதிர்கின்ற, சருகு அருந்தி - சருகைப்புசித்து, நீவிர் - (அரசர்களே) நீர், மெய் தவம் - உண்மையாகிய தவத்தை, புரிதல்வேண்டும் - செய்தல்

வேண்டும், (அஃதேனெனில்), தாழ் - தாழ்ந்த, இரு - பெரிய, கூந்தலாளை - அளகபாரத்தையுடையவளாகிய தமயந்தியை, நிடதர்கோன் - நிடததேசத்தார்க்கரசனாகியநளன், தழீஇய போதே - தழுவியபோதே, ஆழி சூழ் - கடலாற் சூழப்பட்ட, உலகம் எல்லாம் - உலகமுழுதும், அவன் - அவ்வரசனுடைய, அடி படிக்கும் - அடிபணிந்து கிடக்கும், எ - று.

க - து. அரசர்களே! தமயந்தியை நளன் தழுவியபோதே நீங்கள் மணிமுடிநீக்கிச் சடைமுடிதாங்கிக் காட்டிற்போய் தவசுபண்ண வேண்டுமென்றான் என்பதாம்.

உம்முடைய குலத்திற்கும் உமக்கும் இப்பொழுதுவந்த குற்றம் போரில்வென்று நீக்கல்வேண்டும்; அங்ஙனமின்மையால் இச்செய்கையாலன்றித் தீராதென்பான் 'மெய்த்தவம் புரிதல் வேண்டும்' என்றும், தமயந்திஇலக்கண முழுவதும் அமைந்தவுறவுடையவளாதலால் அவளை மணந்தவன் பூமண்டலமுழுதும் ஆள்வனென்பது தோன்ற 'ஆழிசூழுலகமெல்லா மவனடிபடிக்கும்' என்றும் சொல்லினான். "வடதிசைக் குன்றமன்ன வான்குல மாசுசெய்தீர், விடுகதிர்ப் பரிதிமுன்னர் மின்மினி விளக்கமொத்தீர்; வடிவுரை யென்றுமாயும் வாளமரஞ்சினீரேல், முடிதுறந் தனியீர்போகி முனிவனம் புகுமினென்றான்" "திருமக ளிவளைச் சேர்ந்தான் றெண்டிரை யாடைவேலி, யிருநிலமகட்குஞ் செம்பொனேமிக்கு மிறைவனாகுஞ், செருநிலத் திவனை வென்றீர் திருவினுக் குரியீரென்றான், கருமன நச்சுவெஞ்சொற் கட்டியங் காரனன்றே" (சீவகசிந்தாமணி - காந்தருவதத்தையாரிலம்பகம் - உ௬0 - உ௬உ) இவ்வாறு பிறருங் கூறுதல் காண்க. (௬)

கண்டவர் மனமுங் கண்ணுங் கவர்ந்திட வனப்பு வாய்ந்த,வொண்டொடி மாலை வேய்ந்தோற் குரியளென் றெண்ண வேண்டா, திண்டிற னிடதர் கோமான் செருவினி லிரியல் போக, மண்டமர் கடந்த வொள்வேன் மன்னவற் குரியளென்றான்.

இ - ள். கண்டவர் - தன்னைப் பார்த்தவர்களுடைய, மனமும் - மனத்தையும், கண்ணும் - கண்களையும், கவர்ந்திட - வாரிக்கொள்ளும்படி, வனப்பு வாய்ந்த - அழகுபெற்ற, ஒள் தொடி - தமயந்தியானவள், மாலை வேய்ந்தோற்கு - மாலைசூட்டினவனுக்கு, உரியள் என்று - உரிமையுடையவளென்று, எண்ண வேண்டா - நினைக்க வேண்டா; திண் திறல் - மிகுந்தவலிமையையுடைய, நிடதர் கோமான் - நிடததேசத்தார்க்கரசன், செருவினில் - போரில், இரியல்

போக - ஓடிப்போக, மண்டு - நெருங்கிய, அமர் - யுத்தத்திலே, கடந்த - செயித்த, ஒள் வேல் - ஒளிபொருந்திய வேலையுடைய, மன்னவற்கு - அரசனுக்கு, உரியள் என்றான் - உரிமையுடையவளாவாளென்றான், எ - று.

க-து. தமயந்தி மாலை தரித்தவனுக்குச் சொந்தமென்று எண்ண வேண்டாம், நளனை வெல்லுகின்றவர்களுக் கவள்சொந்தமென்றான் என்பதாம்.

நளனைப் போர்செய்து வெல்லினும் அரசர் பலராதலால் இவள் எவனுக்கு உரியவளாத லென்னுஞ் சந்தேக முண்டாகாமைப்பொருட்டு இந்திரனனவன் 'நிடதர் சோமான் செருவினி லிரியல்போக, மண்டமர் கடந்த வொள்வேன் மன்னவற் குரியள்' என்றனென்க. மேற்படலத்தில் நூற்றறுபத்தைந்தாம் பாட்டிற் காட்டிய அனிச்சப் பூங்கோதை யென்னு மேற்கோளால் பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. (௫)

[இதனால் அக்கலகவார்த்தை கேட்ட பாண்டியன் வெகுளல் சொல்லப்படுகின்றது.]

என்றலுங் கடவுட் டிங்க ளிருங்குல மிழித்துக் கூற
னன்றுநன் றென்ன நக்கு நாமவேல் வழுதி சீறி
யுன்றலை துணிப்ப னென்னு வொளிறுவா ளுறையி னீக்கிக்
குன்றெறிவயிரவொள்வாட்குரிசின்மேற்கனன்றுசென்றான்.

இ - ள். என்றலும் - இப்படியென்று இந்திரன் சொன்னவளவில், கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, இரு திங்கள் குலம்-பெருமை பொருந்திய சந்திரவம்சத்தை, இழித்து கூறல்-இழிவுபடுத்திச்சொல்லல், நன்று நன்று என்ன - நல்லது நல்லதென்று, நக்கு-நகைத்து, நாமம் வேல்-அச்சத்தைத் தருகின்ற வேற்படையையுடைய, வழுதி-பாண்டியராஜன், சீறி - அதட்டி, உன் தலை - இப்படிச் சொல்லிய உனது சிரத்தினை, துணிப்பன் என்னு - தறித்துவிடுவே னென்று, ஒளிறு - பிரகாசிக்கின்ற, வாள் - வாளை, உறையின் நீக்கி-உறையினின்று நீக்கி, குன்று எறி - மலைகளின் சிறகை யறுத்த, வயிரம் ஒள் வாள் - ஒளியையுடைய வச்சிரவாளை யேந்திய, குரிசின்மேல் - இந்திரன்மேல், கனன்று - கோபித்து, சென்றான் - போனான், எ - று.

க - து. பாண்டியன் வாளுருவி இந்திரன்மேற் போர்க்குச்சென்றான் என்பதாம்.

குன்றென்பது அதன் சிறகினுக்காதலால் ஆகுபெயர். உமையவள் பரமசிவன் குமரவேள் என்னு மூவரும் விரும்பிவந்து அரசு

செய்திருந்த குலமாதலாலும் சந்திரனைச் சிவன் முடிமேற் கொண்டிருத்தலாலும் அந்த வம்சத்தைக் 'கடவுட்டிங்க ளிருங்குலம்' என்றார். அதனால் அக்குலத்திற் றோன்றிய பாண்டியனுக்கு அதை இழிவுபடுத்திய இந்திரன்மேல் வெகுளியுண்டாயிற் றென்க. (சு)

[இதுவுமது.]

வெகுளலை யணங்கிற் காக நளனுருக் கொண்டு மேய
வகல்விசும் பளிக்கும் வேந்த னிவனென வமரர் கூறத்
துகளெழ மௌலி பண்டு தோற்றவன் றன்னோ டென்கொ
லிகலெனப் புகையு மொள்வா ளுறைசெறித் தேகி னானே.

இ - ள். வெகுளலை - கோபியாதே, அணங்கிற்காக-தமயந்திக்காக, நளன் உரு கொண்டு மேய-நளன் வடிவங்கொண்டுவந்த, அகல் விசும்பு - அகன்ற தெய்வலோகத்தை, அளிக்கும் வேந்தன் - காக்குமிந்திரன், இவன் என - இவனென்று, அமரர் கூற-தேவர்கள் சொல்ல, (அதுகேட்டு) துகள் எழ - தூளியெழும்ப, மௌலி - கிரீடம், பண்டு - முன்னே, தோற்றவன் தன்னோடு - தோற்றுப்போன இவனோடு, என்கொல் இகல் என - என்னபோரென்று, புகையும்-புகைகின்ற, ஒள் வாள்-ஒளிபொருந்திய வாட்படையை, உறை செறித்து-உறையிலிட்டு, ஏகினான் - போனான், எ - று.

க.- து. தேவர்கள் இந்திரனென்று சொல்லப் பாண்டியன் முற்காலத்திற் றோற்றவனோடு போர்க்குச் செல்லலாகாதென்று திரும்பினான் என்பதாம்.

மதுரையில் உக்கிரபாண்டியன் அரசுசெய்திருந்தநாளில் தன்னாட்டிலிருக்கும் பொதியமலையின்கண் மேய்ந்திருந்த மேகங்களைப் பிடித்துத் தளைசெய்தான், அதைக் கேட்டு அப்பாண்டியனோடெதிர்த்து யுத்தஞ்செய்து இந்திரன் மகுடபங்கப்பட்டுத் தோற்றோடியபடியால் தோல்வியடைந்தவரோ டெதிர்த்தல் தருமமன் றென்பதுபற்றி இவன் அவ்விந்திரனென்று கேட்டவரசன் 'துகளெழ மௌலிபண்டு தோற்றவன் றன்னோ டென்சொ, லிகலெனப் புகையு மொள்வா ளுறைசெறித் தேகினான்' என்றார். (எ)

[இதுமுதல் மூன்று பாட்டால் அரசர் செய்கை கூறப்படுகின்றது.]

கூற்றெனக் கனலி யென்னக் குலவரை திரிக்கு மூழிக்
காற்றென வுருமே றென்னக் கதிர்முடி யரச ரெல்லா
மாற்றருஞ் சீற்றத் தோடு மடங்கலந் தவிசி னின்றும்[தார்.
பாற்றினஞ் சுழலும் வைவாட் படையொடு நிலத்திற் பாய்ந்

இ - ள். கூற்று என - யமன்போலவும், கனலி என்ன - அக்கினிபோலவும், குல வரை - சத்தகுலகிரிகளையும், திரிக்கும் - சுழற்றுகின்ற, ஊழி காற்று என-முடிவுகாலக் காற்றுப்போலவும், உருமேறு என்ன - இடியேற்றைப்போலவும், கதிர் முடி-கிரணங்களையுடைய கிரீடமணிந்த, அரசர் எல்லாம்-அரசரனைவரும், மாற்றரு - நீக்குதற்கரிய, சீற்றத்தோடும்-கோபத்துடன், மடங்கல் அம் தவிசினின்றும்-அழகிய சிங்காதனத்திலிருந்து, பாறு இனம் - பருந்துக்கூட்டங்கள், சுழலும்-வட்டமிடுகின்ற, வை-கூர்மைபொருந்திய, வாள் படையொடும்-வாளாயுதத்துடன், நிலத்தில் - பூமியிலே, பாய்ந்தார்-குதித்தார்கள், எ - று.

க - து. அரசர்களெல்லாருங் கோபத்துடன் சிங்காதனம் விட்டு வாட்கையோடு நிலத்திற் குதித்தார்கள் என்பதாம்.

உயிர்போக்கலால் யமனையும், நீறுசெய்தலால் அக்கினியையும், வேகத்தோடு தள்ளுதலால் காற்றையும், கர்ச்சித்து நடுக்கஞ்செய்தலால் இடியேற்றையும் பெரும்பான்மைபற்றி அரசர்க்கு உவமையாக்கினர். (அ)

கொய்யுளைக் கலினப் பாய்மா கொடிஞ்சியந் தேரிற் பூட்டி
மையன்மா மதத்த யானை பருமித்து மறலி யேனுஞ்
செய்யகண் புதைக்குஞ் சீற்றத் திறல்கெழு வயவர் சூழ
மொய்கழ லரச ரெல்லா முருகுலாந் தும்பை வேய்ந்தார்.

இ - ள். கொய் உளை - கொய்துகட்டிய புறமயிரினையுடைய, கலினம்-கடிவாளம் பூண்ட, பாய்-தாவுகின்ற,மா-குதிரைகளை,கொடிஞ்சி அம் தேரில்-மேன்மொட்டையுடைய அழகிய இரதங்களில், பூட்டி-பூட்டுதல் செய்து, மையல்-மயக்கம் பொருந்திய, மா-பெரிய, மதத்த - மும்மதத்தையுமுடைய, யானை - யானைகளை, பருமித்து-அலங்கரித்து, மறலியேனும்-கூற்றுவனாயினும், செய்ய கண் புதைக்கும் - சிவந்த கண்களை மூடிக்கொள்ளத்தக்க, சீற்றம்-கோபத்தையுடைய, திறல் கெழு - வலிமை பொருந்திய, வயவர் சூழ - காலாள்கள் தம்மைச் சூழ்ந்துவரும்படி, மொய் - நெருங்கிய, கழல் - வீரக்கழலையணிந்த, அரசர் எல்லாம் - அரசரனைவரும், முருகு உலாம் - தேனொழுகுகின்ற, தும்பை-தும்பைமாலையை, வேய்ந்தார்-தரித்தார்கள், எ-று.

க - து. அரசர்கள் யாவருந் தும்பைமாலை தரித்தார்கள் என்பதாம்.

தும்பை வேய்தலாவது "செங்களத்து மறங்கருதிப் பைந்தும்பை தலைமலைந்தன்று", "கார்கருதி நின்றதிருங் கௌவைவிழுப் பணை

யான், சோர்குருதி சூழா நிலநனைப்பப்-போர்கருதித்,துப்புடைத் தும்பை மலைந்தான் றுகளறுசீர், வெப்புடைத் தானையெம் வேந்து" (புறப்பொருள் வெண்பாமாலை - தும்பைப்படலம் - க) இதனாலறிக.

கொடுங்குணில் பொருத வெற்றிப் போர்ப்பறை குளிற வெம்போர்க், கடுந்திறல் வயவர் வின்ஞாண் புடைப்பொலி கடலி னார்ப்பச், சுடுங்கனல் குளிர வெய்தாச் சுடர்விழி பொறிகள் சிந்த, மடங்கலே றனைய வேந்தர் வாளம ரழுவத் துற்றார்.

இ - ள். கொடு குணில் - வளைந்த குறுந்தடியால், பொருத - அடிக்கப்பெற்ற, வெற்றி - சயத்தைத் தருகின்ற, போர் பறை - யுத்தமுரசு, குளிற - ஒலிக்க, வெம் போர் - வெவ்விய போர்செய்கின்ற, கடு திறல் - மிகுந்த சௌரியத்தையுடைய, வயவர் - படைவீரர்கள், வில்-வில்லைவளைத்துச் செய்யும், நாண் புடைப்பு ஒலி - குணத்தொனிகள், கடலின் ஆர்ப்ப - கடல்போலொலிக்க, சுடு கனல் - சுடுகின்ற நெருப்பும், குளிர - குளிரும்படி, வெய்தா - வெப்பமாக, சுடர் விழி - சிவந்தகண்கள், பொறி - நெருப்புப்பொறிகளை, சிந்த-சிதற, மடங்கல் ஏறு அனைய - சிங்கவேற்றையொத்த, வேந்தர்-அரசர்கள், வாள் அமர் - வாட்போர் செய்கின்ற, அழுவத்து - யுத்தகளத்தில், உற்றார் - அடைந்தார்கள், எ - று.

க - து. அரசர்கள் போர்க்களத்தில் வந்தார்கள் என்பதாம்.

அனேக ரிறக்கும்படிச் செய்யும் போரைக்குறித்துப் பறையையடிக்கின்றதாதலால் குணிலென்றது 'கொடுங்குணில்' என்றார். விழிகள் சிந்தும் பொறிகளுக்குச் சுடுங்கனலை ஒப்புச்சொன்னால் நெருப்புக்கு நீரை ஒப்புச்சொல்லுதல்போ லிருத்தலால் 'சுடுங்கனல் குளிர வெய்தாச் சுடர்விழிப் பொறிகள் சிந்த' என்றார். குளிற ஆர்ப்ப சிந்த வென்னும் வினையெச்சங்கள் உற்றாரென்னும் வினைகொண்டு முடிந்தன. (க0)

[இதனால் நளனது செருக்குச் சொல்லப்படுகின்றது.]

மன்னவர் தருக்கும் வெம்போர் வயிரவாள் சுமந்த திண்டோட், பொன்னகர்க் கிறைவன் சூழ்ந்த புணர்ப்புநாங் காண்டு மென்று,வொன்னல ரகல மூழ்கி யூன்சுவைத் துதிரமாந்து, மின்னகு பரிதி யொள்வேல் வேந்தர்கோன் சிறிது நக்கான்.

இ - ள். மன்னவர்-அரசர்களுடைய, தருக்கும்-கர்வமும், வெம் போர் - வெவ்விய போர்செய்கின்ற, வயிரவாள் சுமந்த-வச்சிராயுதத்

தைச் சுமந்த, திண் தோள்-வலிமைபொருந்திய தோள்களையுடைய, பொன் நகர்க்கு இறைவன் - பொன்னுலகத்துக் கரசனாகிய இந்திரனானவன், சூழ்ந்த - எண்ணிய, புணர்ப்பும்-சம்பந்தமும், நாம் காண்டும் என்று-நாம் காண்போ மென்று, ஒன்னலர்-சத்துருக்களுடைய, அகலம் மூழ்கி - மார்பினிடத்திலே குளித்து, ஊன் சுவைத்து-மாமிசத்தை மென்று, உதிரம் மாந்தும் - புண்ணீரைக் குடிக்கின்ற, மின் நகு - ஒளிவிடுகின்ற, பரிதி - சூரியன்போன்ற, ஒள் வேல்-ஒளிபொருந்திய வேற்படையையுடைய, வேந்தர் கோன் - அரசர்க்கரசனாகிய நளமகாராஜன், சிறிது - கொஞ்சம், நக்கான் - சிரித்தான், எ - று.

க - து. அரசர்கள் செருக்கையும், இந்திரன் பெருக்கையு மறிவோமென்று நளன் சிரித்தான் என்பதாம்.

இங்கே நளன் சிரித்தது வீரச்சிரிப்பாம். அது பரமசிவன் சிரித்துத் திரிபுரத்தை யெரித்தலாலறிக. "ஒன்னலரைச் செற்றன வொக்குஞ் சிறுநகை செய்வன" என்றார் பிறரும். (கக)

[இதனால் தமயந்தி வருந்தல் சொல்லப்படுகின்றது.]

சிலைகுழைத் தரசர் நின்ற சீற்றமு நிணம்வாய்ப் பில்கிக், கொலைபழுத் தொழுகும் வேலான் குவவுத்தோட் பணைப்பு நோக்கி, யிலைமுகப் பூணி யாண்மற் றென்கொலாய் விளையு மென்று, முலைமுகட் டலங்கல் வேற்கண் முத்துக வெருவி நின்றாள்.

இ - ள். சிலை குழைத்து - வில்லைவளைத்து, அரசர் நின்ற - அரசர் நிற்கப்பெற்ற, சீற்றமும் - கோபமும், நிணம்-கொழுப்பை, வாய் பில்கி - வாயிற்சிதறி, கொலை பழுத்து - கொல்லுதல் மிகுந்து, ஒழுகும்-ஒழுகுகின்ற, வேலான் - வேற்படையையுடைய நளனது, குவவு தோள் - திரட்சிபொருந்திய தோள்களினுடைய, பணைப்பும் - பூரிப்பும், நோக்கி - பார்த்து, இலை முகம் பூணினாள்-தமயந்தியானவள், என்கொலாய் விளையும் என்று - யாதாய் முடியுமோவென்று, முலை முகட்டு - ஸ்தனங்களினுடைய வுச்சியில், வேல் கண்-வேல்போன்ற கண்களினின்றும், முத்து உக-முத்துப்போல் நீர்துளிக்க, வெருவி - பயந்து, நின்றாள் - நின்றனள், எ - று.

க - து. தமயந்தி நளனது புயங்களைப்பார்த்து இப்போ ரெப்படி முடியுமோவென் றஞ்சி யழுதாள் என்பதாம்.

அரசர் கோபத்தையும் நளன்றோள் பூரிப்பையும் பார்த்த தமயந்தியானவள் அரசனுக்கு இத்தனைபேர் பகையாதற்கு நான் காரணமானேன் இனி யாதாகுமோ வென்று வெருவி நின்றனளென்க. மற்று - அசைநிலை. (கஉ)

[இதனால் நளன் தமயந்தியைத் தேற்றல் சொல்லப்படுகின்றது.]

செழுங்கடை மழைக்க ணல்லாய் திண்சிலை குழைத்து
வெம்போர்க், கெழுந்தவிவ் வரசர் மார்பத் திழிபெருங் குரு
தி மாந்தப், புழுங்குவெம் பகழி மாரி பொழிந்தமர் முருக்கி
யாடி, யுழுந்துருள் பொழுதின் மீள்வ லுள்ளநீ கவல லென்
றான்.

இ - ள். செழு கடை-செழுமையுள்ள கடையையுடைய, மழை கண் நல்லாய் - குளிர்ச்சிபொருந்திய கண்களையுடைய தமயந்தியே, திண் சிலை - வலிமையையுடைய வில்லை, குழைத்து-வளைத்து, வெம் போர்க்கு - வெவ்விய யுத்தத்திற்கு, எழுந்த-புறப்பட்ட, இவ்வரசர் மார்பத்து - இவ்வரசர் மார்பினிடத்திலே, இழி - இழிகின்ற, பெருங் குருதி - அதிக உதிரத்தை, மாந்த - உண்ணும்படி, புழுங்கு - வெம்புகின்ற, வெம் பகழி மாரி - வெவ்விய பாணமழையை, பொழிந்து சொரிந்து, அமர் - யுத்தத்திலே, முருக்கி - கொன்று, ஆடி - விளையாடி, உழுந்து உருள் பொழுதின்-ஒரு உழுந்துருளுகிற காலத்திலே, மீள்வல் - திரும்புவேன், நீ - நீயானவள், உள்ளம்-மனத்தினிடத்து, கவலல் - கவலைப்படவேண்டாம், எ - று.

க - து. நளன் தமயந்திக்கு அஞ்சாதேயென்று சொன்னான் என்பதாம்.

தமயந்தி யாற்றாமையையுங் கவலைப்படுதலையுநோக்கி விரைவு தோன்ற 'உழுந்துருள் பொழுதின் மீள்வல்'என்றான். [உழுந்துருள் பொழுதெலன உலகவழக்கச் சொல்லைத் தழுவிச் சொல்லுதலால் உலகவழக்க நவிற்சியணி. (கஙு

[இதனால் நளனுக்கு உதவியின்றிய பராக்கிரமஞ்
சொல்லப்படுகின்றது.]

விளைசமர்க் கெழுந்து நின்ற வீமனை யினிதி னோக்கிக்
களிமதக் களிறுந் தேருங் களப்படுத் திகலி னேற்ற
வுளைவயப் புரவித் தானை யொன்னலர்ச் செருப்ப னீபோய்
நளிகடற் றானை சூழ நங்கையைக் காத்தி யென்றான்.

இ - ள். விளை - உண்டாகிற, சமர்க்கு - போர்செய்தற்கு, எழுந்து நின்ற-புறப்பட்டுநின்ற, வீமனை - வீமராஜனை, இனிதின்-இனிமையினால், நோக்கி - பார்த்து, களி - களிப்பையுடைய, மதம் களிறும் - மதயானையையும், தேரும் - தேரையும், களப்படுத்து - யுத்தகளத்திலழித்து, இகலின் - பகையினால், ஏற்ற - எதிர்த்த, உளை

புறமயிரினையுடைய, வயம் புரவி - வலிமைபெற்ற குதிரைகளையும், தானை - சேனையையுமுடைய, ஒன்னலர் - சத்துருக்களை, செகுப்பல் - கொல்லுவேன், நீ போய் - நீசென்று, நளி - குளிர்ச்சிபொருந்திய, கடல் - கடல்போன்ற, தானையோடு - சேனையுடனேயிருந்து, நங்கையை - தமயந்தியை, காத்தி என்றான் - காப்பாயென்றான், எ - று.

க - து. நளன் வீமனைக்குறித்துத் தமயந்தியைக் காத்திரும் சத்துருவைச் செயித்து வருவேன் என்றான் என்பதாம்.

நளன் நங்கையைக் காத்தியென்றானென்க. தமயந்தி நமக்கு மாலையிட்டபின்பு அவளைவிரும்பி நம்மோடெதிர்க்கும் அரசர் நாம் போர்செய்யும்போது அவளைக்கரந்து வெளவவரினும் வருவரென்பதுபற்றியும், தன்பொருட்டு வந்தபோரை மற்றொருவர்பால் விடில் தனக்கிழிவென்பதுபற்றியும் அவட்குத் தந்தையாகிய வீமனை அவளைக் காக்கும்படி வைத்தனனென்க. (கஅ)

[இதனால் நளன் போர் முயற்சி செய்தல் சொல்லப்படுகின்றது.]

உடல்சின வுருமே றன்ன வயவரை யொருங்கு நோக்கிக், கொடியணி கொடிஞ்சித் திண்டேர் கொய்யுளைக் கலினப் பாய்மா, கடன்மடை திறந்த தென்னக் கரடமூற் றிருந்து பாயும், படுமதக் களிநல் யானை பண்ணுறுத் திடுமினென்றான்.

இ - ள். உடல் - பொருகின்ற, சினம் - கோபத்தையுடைய, உரும் ஏறு அன்ன - இடியேற்றையொத்த, வயவரை - சேவகரை, ஒருங்கு நோக்கி - ஒரேதரம்பார்த்து, கொடி அணி - கொடிகளையணிந்த, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, திண் - வலிமைபொருந்திய, தேர் - தேரையும், கொய்யுளை - கொய்துகட்டிய புறமயிரினையுடைய, கலினம் - கடிவாளம்பூண்ட, பாய்மா - குதிரைகளையும், கடல் - கடலானது, மடை திறந்து என்ன - மடைதிறந்ததென்று சொல்லும்படி, கரடம் - சுவடுபட, ஊற்றிருந்து பாயும் - ஊற்றிருந்து பாய்கின்ற, படு மதம் - மதம்படுகின்ற, களி நல் யானை - களிப்பையுடைய நல்லயானைகளையும், பண் உறுத்திடுமின் என்றான் - அலங்கரியுங்களென்றான், எ - று.

க - து. நளன் வீரரை நோக்கித் தேர் குதிரை யானை இவைகளை யலங்கரிக்கச் சொன்னான் என்பதாம்.

தனித்தனி உத்தரவுபண்ணிற் காலநீட்டிக்கு மென்பதுபற்றி விரைந்து கூறினமை தோன்ற வயவரை யொருங்குநோக்கித் தேர், பாய்மா, யானை பண்ணுறுத்திடுமின் என்றான். (௬௫)

[இதனால் நளன் போர்க்கோலங் கொள்ளுதல் சொல்லப்படுகின்றது.]

நீங்கருங் கவச மார்த்து நேரலர் மௌலி தேய்க்கும்
பூங்கழ னரல வீக்கிப் போரெனிற் பொருப்பு மஞ்ச
வீங்கிய குவவுத் தோளில் வெங்கணைப் புட்டி றாங்கி
வாங்குவிற் றடக்கை யேந்தி மறலிகண் புதைப்ப நின்றான்.

இ - ள். நீங்கு அரு - பிரிதற்கரிய, கவசம் ஆர்த்து-கவசங்கட்டி, நேரலர் - சத்துருக்களுடைய, மௌலி - முடியை, தேய்க்கும் - தேய்க்கின்ற, பூ கழல் - வீரக்கழலை, நரல - ஒலிக்கும்படி, வீக்கி - கட்டி, போர் எனில் - யுத்தமென்றால், பொருப்பும் அஞ்ச - மலையு மஞ்சும்படி, வீங்கிய - பருத்த, குவவு தோளில் - திரட்சிபொருந்திய புயத்தின்கண், வெம் கணை - வெவ்விய பாணங்களையுடைய, புட்டில் தாங்கி - அம்புக்கூட்டைத்தாங்கி, வாங்கு - வளைக்கப்பட்ட, வில் - வில்லை, தடம் கை ஏந்தி-விசாலம்பொருந்திய கையிலேந்தி, மறலி - யமனும், கண் புதைப்ப - கண்களை மூடிக்கொள்ளும்படி, நின்றான்- நின்றனன், எ - று.

க - து. நளன் கவசங்கட்டி வீரக்கழலணிந்து அம்புக் கூட்டைத்தாங்கி வில்லேந்தி நின்றான் என்பதாம்.

நளன் கவசமார்த்துக் கழல்வீக்கிப் புட்டில் தாங்கி வில்லேந்திநின்றன னெனக்கூட்டுக. சத்துருக்கள் பணிந்து கிடத்தலால் "நேரலர் மௌலிதேய்க்கும் பூங்கழல்" என்றார். மறலியென்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்குநின்றது. (௬௬

[இதனால் நளன் தேரேறுதல் சொல்லப்படுகின்றது.]

பொருசமர் தொடங்கி நின்ற புரவலர் மடவார் செய்ய
வரிநெடுங் கண்ணுந் தோளும் வலந்துடித் தின்னல் காட்டக்
குருமணி குயிற்றுஞ் செம்பொற் கோடியர் கொடிஞ்சித் தேரி
னருவரை யிவருஞ் சீற்ற மடங்கலே றென்ன வார்ந்தான்.

இ - ள். பொரு - பொருகின்ற, சமர் - யுத்தத்தை, தொடங்கி நின்ற - ஆரம்பித்து நின்ற, புரவலர் - அரசர்களுடைய, மடவார் - மாதரது, செய்ய - சிவந்த, வரி - அரிபரந்த, நெடு கண்ணும் - நெடிய கண்களும், தோளும் - தோள்களும், வலம் துடித்து - வலப்பக்கம்

துடித்து, இன்னல் காட்ட - துன்பக்குறிகாட்ட, குரு மணி - நிறம் பொருந்தியமணிகள், குயிற்றும் - பதிக்கப்பட்ட, செம் பொன் - சிவந்த பொன்னாற்செய்த, கோடு உயர் - சிகரத்தினாலுயர்ந்த, கொடிஞ்சி தேரின் - மேன்கொட்டையுடைய தேரின்மேல், அருவரை - அரிய மலையின்மேல், இவரும் - ஏறுகின்ற, சீற்றம் - கோபத்தையுடைய, மடங்கல் ஏறு அன்ன - ஆண்சிங்கம்போல், ஆர்ந்தான் - ஏறினான், எ - று. நளன் தேரிலேறினனெனக் கூட்டுக.

க - து. நளன் தேரேறினான் என்பதாம்.

மாதர்க்குத் துன்பம் வருமாறால் வலத்தோள்களும் வலக்கண்களும் துடிக்குமென்பது துடிநூலிற் காண்க. (கஎ)

[இதனால் நளன் சங்கத்தொனிசெய்தல் சொல்லப்படுகின்றது.]

ஊன்பயில் வடிவே லேந்தி யுடன்றுவெம் போரி லேற்ற
தேன்பயி றெரியல் வேந்தர் நடுக்குறத் திசையி னின்ற
கூன்பிறைக் கோட்டு நால்வாய்க் குஞ்சரம் வெருவி யோட
வான்பொதி ரெறியத் தெய்வ வலம்புரி முழக்கி யிட்டான்.

இ - ள். ஊன் பயில் - பகைவரது மாமிசந்தங்கிய, வடி வேல் ஏந்தி-கூரிய வேற்படையைத்தாங்கி, உடன்று - கோபித்து, வெம் போரில்-வெவ்விய யுத்தத்தில், ஏற்ற-எதிர்த்த, தேன் பயில்-தேன்றங்குகின்ற, தெரியல்-மாலையையுடைய, வேந்தர் - அரசர்கள், நடுக்கு உற - நடுக்கமடைய, திசையில் நின்ற - எட்டுத்திசையிலுநின்ற, கூன் - வளைவுபொருந்திய, பிறை கோட்டு - பிறையை யொத்த கொம்பினையும், நால் வாய் - தொங்குகின்றவாயினையுமுடைய, குஞ்சரம் - யானைகள், வெருவி ஓட - பயந்தோடும்படி, வான் - ஆகாயம், பொதிர் எறிய - நடுக்கமடைய, தெய்வ வலம்புரி - தெய்வச்சங்கம், முழக்கியிட்டான் - தொனிசெய்தான், எ - று.

க - து. நளன் சங்கத்தொனி செய்தான் என்பதாம்.

சங்கத்தொனியினால்தான் எது எது எப்படி ஆதல்வேண்டுமென்று நினைக்கின்றாரோ அது அது அப்படியாகத் தொனித்தலால் 'தெய்வவலம்புரி' என்றார். உடன்று என்பதற்குப் பகுதி உடல். (கஅ)

[இதனால் இந்திரன் நடுக்கஞ் சொல்லப் படுகின்றது.]

கொன்னவில் பரிதி வைவாட் கூற்றுயி ருண்ணுங் கூற்றின்
மின்னகு வரிவி லேந்தும் விடலையை நோக்கி யேற்ற
மன்னவ ரளவன் றின்னோன் மணிவரைத் திணிதோள் வீக்க
மென்னினி யாந்தென் செய்தோ மென்றிந்திர னடுங்க லுற்றான்.

இ - ள். கொல் - கொலைத்தொழிலை, நவில் - சொல்லப்பட்ட, பரிதி - சூரியன்போன்ற, வை வாள் - கூர்மைபொருந்திய வாட்படையையும், கூற்று உயிர் - யமனுயிரை, உண்ணும்-உண்ணப்பட்ட, கூற்றின் - ஒருயமன்போல், மின் நகு - ஒளியைவீசுகின்ற, வரி வில் ஏந்தும் - நெடியவில்லையுமேந்திய, விடலையை - நளமகாராஜனை, நோக்கி - பார்த்து, ஏற்ற - எதிர்த்த, மன்னவர் - அரசர்களது, அளவு அன்று - அளவுடையதன்று, இன்னோன் - இவ்வரசனுடைய, மணி வரை - அழகுபொருந்திய மலைபோன்ற, திணி - வலிமைபெற்ற, தோள் - புயங்களினுடைய, வீக்கம் - பாரிப்பு, (ஆதலினால்), என் நினைந்து - யாதை நினைந்து, என் செய்தோம் என்று - யாதுசெய்தோமென்று, இந்திரன்-இந்திரனானவன், நடுங்கல் உற்றான்-நடுங்கினான், எ - று.

க - து. நளனை இந்திரன்கண்டு நடுங்கினான் என்பதாம்.

பொறாமையால் மூட்டிவிட்ட சண்டையிற் கொலைப்பழிவந்து அதிலும் நமக்கு அவமானமே வருவதற்கு ஐயமில்லையென்று இந்திரன் நடுங்கலுற்றானென்க. (கக)

[இனி இரண்டுபாட்டால் சேனைகளின் ஆரவாரஞ் சொல்லப்படுகின்றது.]

**கார்த்திரண் முழக்க மென்னக் கனைகுரன் முரச மார்த்த**
**தூர்த்தன கடல்க ளேழுந் துரகதக் குரத்தின் றூளி [ங்கி**
**போர்த்தன விசும்பு பைம்பொற் கொடியொடு குடையு மோ**
**யார்த்தன வுவகை பொங்கித் துணங்கையிட் டலகை யீட்டம்.**

இ-ள். கார் திரள்-மேகக்கூட்டங்களினுடைய, முழக்கம்என்ன-சத்தம்போல், கனை - முழங்குகின்ற, குரல் - குரலையுடைய, முரசம் - பேரிகைகள், ஆர்த்த - ஒலித்தன; கடல்கள் ஏழும் - ஏழு சமுத்திரங்களையும், துரகதம் - குதிரைகளினுடைய, குரத்தின் தூளி - குளம்பினின்று மெழுகின்ற புழுதிகள், தூர்த்தன - தூர்த்துவிட்டன; விசும்பு - ஆகாயத்தை, பைம்பொன் கொடியொடு - பசியபொற்கொடிகளோடு, குடையும் - குடைகளும், ஓங்கி - உயர்ந்து, போர்த்தன - மூடிக்கொண்டன; அலகை ஈட்டம் - பேய்க்கூட்டங்கள், உவகை பொங்கி - மகிழ்ச்சி மிகுந்து, துணங்கையிட்டு - துணங்கைக் கூத்தாடி, ஆர்த்தன - சத்தித்தன, எ - று.

க - து. முரசங்கள் சத்தித்தன, குதிரைப்புழுதிகள் கடலைத் தூர்த்தன, குடைகள் கொடிகள் ஆகாயத்தை மூடின, பேய்கள் சத்தித்தன என்பதாம்.

துணங்கை - இருகை முடக்கிப் பழுப்புடை யொத்தியாடல். 'ஆர்த்திரண் முழக்கமென்ன முரசமார்த்த' எனலால் அனேக முர சங்களென்றும், 'குரத்தின் றூளிகடல்கலேழுந் தூர்த்தன' எனலால் அனேகங் குதிரைகளென்றும், 'விசும்பைப் போர்த்தன' எனலால் அனேகங் குடைகள் கொடிகளென்றும், 'துணங்கையிட் டார்த்தன' னெலால் மாமிசமுண்ணவந்த பேய்க ளனேகமென்றும் பெறப் பட்டது. (உ0)

கூற்றென வுரறி யார்த்துக் கொல்சின வரியே றென்ன, வேற்றவர் வெருவ நெய்த்தோ ரிடையறு தொழுகுங் கோட்டுச், சீற்றமும் மதத்தி னூழித் தீயையு மவிக்கும் வேகக், காற்றுறழ் களிறு தூண்டிக் கட்கனல் கதுவச் செல்வார்.

இ - ள். கூற்று என - யமனைப்போல, உரறி - ஆரவாரித்து, கொல் - கொல்கின்ற, சினம் - கோபத்தையுடைய, அரி ஏறு என்ன - சிங்கவேற்றைப்போல், ஆர்த்து - கர்ச்சித்து, ஏற்றவர் - எதிர்த்தவர்கள், வெருவ-அஞ்ச, நெய்த்தோர் - உதிரமானது, இடையறாது ஒழுகும் - நீங்காதொழுகப்பெற்ற, கோடு - கொம்பையும், சீற்றம் - கோபத்தையுமுடைய, மும்மதத்தின் - மும்மதங்களால், ஊழி தீயையும் - வடவாமுகாக்கினியையும், அவிக்கும் - அவிக்கப்பட்ட, வேகக் காற்று உறழ் - சண்டமாருதத்தையொத்த, களிறு தூண்டி - யானையைச் செலுத்தி, கண் - விழிகளில், கனல் கதுவ - நெருப்புப்பற்ற, செல்வார் - செல்வார்கள், எ - று.

க - து. வீரர்கள் கோபத்துடனே போவார்கள் என்பதாம்.

வீரரைத் தன்கோட்டாற் குத்திக்கொல்லுதலால் யானைக்கொம்பு 'நெய்த்தோ ரிடையறு தொழுகுங் கோடு' எனப்பட்டது. "வேலாண் முகத்தகளிறு" என்றார் பிறரும். (உக)

[இதுமுதற் பத்துப்பாட்டால் இருதிறச்சேனைகளும் பொருதல் சொல்லப்படுகின்றது.]

ஒள்ளழல் கண்ணிற் கால வுயிர்ப்பலி யுண்ணுங் கூற்றின்
வள்ளுறை வடிவா ளேந்தி வாய்மடித் தெயிறு தின்று
கள்ளவிழ் தும்பை சூடிக் கழுதுகை கொட்டி யார்ப்ப
வள்ளிலை வயிரப் பைம்பூ ணரசரோ டரச ரேற்றார்.

இ - ள். ஒள் - பிரகாசம் பொருந்திய, அழல் - நெருப்பு, கண்ணில் - கண்களினின்றும், கால - கொப்பளிக்க, உயிர் பலி - உயிர

கிய உணவை, உண்ணும் - உண்ணுகின்ற, கூற்றின் - யமன்போல், வள் உறை - நெருங்கிய வுறையையுடைய, வடி வாள் ஏந்தி - கூரிய வாளை யேந்திக்கொண்டு, வாய் மடித்து - உதட்டை மடித்துக்கொண்டு, எயிறு தின்று-பல்லைக்கடித்து, கள் அவிழ்-தேனொழுகுகின்ற, தும்பை சூடி - தும்பை மாலையைத் தரித்து, (இதுகண்டு) கழுது - பேய்கள், கை கொட்டி - கைகளைக்கொட்டி, ஆர்ப்ப - கர்ச்சிக்கும்படி, அள் இலை-(தசையை) அள்ளிக்கொள்ளும் இலைபோன்ற, வயிரம் பைம்பூண் - பசியபொன்னிற் பதித்த வச்சிராபரணத்தையுடைய, அரசரோடு - அரசருடன், அரசர் - அரசர்கள், ஏற்றார் - எதிர்த்தார்கள், எ - று.

க - து. அரசர்களோடு அரசர்க ளெதிர்த்தார்கள் என்பதாம்.

அனேகரைச் சேதித்து உயிரை யுண்ணுதலால் வாட்படை யமனுக்கு உவமை சொல்லப்பட்டது. வாய்மடித்தலும் பற்கறித்தலும் சினக்குறிப்பை வெளிப்படுத்தி நின்றன. அதிரப்பொருதற்கு வந்த குறிப்புத்தோன்ற 'கள்ளவிழ் தும்பைசூடி' என்றார். நெடுங்காலம் போரில்லாமையால் உணவுகள் கிடையாதிருந்த வருத்தம் இப்பொழுது கெடுமென்னும் உவகை மிகுதியால் 'கழுதுகை கொட்டியார்ப்ப' என்றார். போரில்லாமை இந்திரப்படலத்தில் "ஆங்கவண்மேல்" என்னும் பதினேழாம் பாட்டாலறிக. [தன்மைநவிற்சியணி.] (௨௨)

மண்ணிடைத் திரிவ போல மாதிரங் கடப்ப தாவி
விண்ணிடைப் பறப்ப வேழ மருப்பிடை மிதித்து மீள்வ
கண்ணிமை பொருந்திற் காணாக் கடுப்பின கலினப் பாய்மா
வெண்ணில வயவர் தூண்டி யெதிரெதிர் மலைந்து நிற்பார்.

இ - ள். மண்ணிடை - பூமியின் கண்ணே, திரிவபோல - திரிவனபோல, மாதிரம் - திசைகளை, கடப்ப - தாண்டுவன; தாவி - பாய்ந்து, விண்ணிடை - ஆகாயத்திலே, பறப்ப - பறப்பன; வேழம் மருப்பிடை - யானைக்கொம்பின்கண், மிதித்து - மிதித்து, மீள்வ - திரும்புவன; கண் - கண்கள், இமை பொருந்தில் - இமை கொட்டுமாறல், காணா கடுப்பின - காணக்கூடாத வேகத்தையுடையன; கலினம் பாய் மா - (இத்தன்மையுள்ள) கடிவாளம் பூண்ட தாவுகின்ற குதிரைகள், எண்ணில - அளவற்றவைகளை, வயவர் தூண்டி-காலாள்கள் செலுத்தி, எதிர் எதிர் - நேர் நேராக, மலைந்து - போர்செய்து, நிற்பார் - நிற்பார்கள், எ - று.

க - து. வீரர்கள் குதிரையேறிப் போர்செய்தார்கள் என்பதாம்.

கடப்ப, பறப்ப, மீள்வவென்னுங் கடுப்பினவாகிய பாய்மாவெனக் கூட்டுக. வேழமருப்பு இங்கே வெள்ளையானைக் கொம்பெனக் கொள்க. [இதுவும் அவ்வணி.] (உங)

சூழ்சுடர் வயிர வாளா லிந்திரன் றுமிக்கு முன்னம்
பாழியங் குடுமிக் குன்றஞ் சிறகொடு பறப்ப வென்னக்
கேழ்கிளர் பரிதி யேய்க்குங் கிளர்மணிக் கொடிஞ்சி மான்றே
ராழியோ டாழி தாக்க வருஞ்சமர் தொடங்கி நிற்பார்.

இ - ள். சுடர் சூழ் - ஒளி சூழ்கின்ற, வயிரவாளால் - வச்சிராயுதத்தால், இந்திரன் றுமிக்குமுன்னம் - இந்திரனறுப்பதற்குமுன்னே, பாழி - அகன்ற, குடுமி - சிகரங்களையுடைய, குன்றம் - மலைகளானவை, சிறகொடு - இறகுடனே, பறப்ப என்ன-பறப்பனபோல், கேழ் கிளர்-செந்நிறமிகுந்த, பரிதி ஏய்க்கும்-சூரியனையொத்த, கிளர் மணி - ஒளிவிளங்கு மணிகள் பதித்த, கொடிஞ்சி-மேன்மொட்டையுடைய, மான் தேர்-குதிரைகட்டிய தேர்கள், ஆழியோடு ஆழி தாக்க-உருளைகளோடுருளைகள் முட்ட, அரு சமர்-அரியயுத்தத்தை ,தொடங்கி - ஆரம்பித்து, நிற்பார் - நிற்பார்கள், எ - று.

க - து. வீரர்கள் தேரேறிப் போர்செய்து நிற்பார்கள் என்பதாம்.

ஒவ்வொரு தேர் ஒவ்வொரு மலைபோல் திரிதலால் அவைகட்குச் சிறகுடைய மலையை யுவமை சொல்லினர். அனேகந் தேராதலால் நெருக்கம்பற்றி 'ஆழியோடாழி தாக்க' என்றார். அரசரோடரச ரெதிர்த்தலால் ஆழியோடாழி தாக்கினவென்க. (உச)

மோட்டிள முலைகள் பாய்ந்த மருமத்தின் மூரி யானைக்
கோட்டிணை யுழக்க வெம்போர்க் கோளரி யென்னச் சீறித்
தோட்டுணை கொட்டி யார்த்துச் சுடர்நெடுங் குருதி வாளாற்
பூட்டிய வோடை நெற்றி மத்தகம் போழ்ந்திட் டாரே.

இ - ள். மோடு - உயர்ச்சி பொருந்திய, இள முலை - இளமை பொருந்திய ஸ்தனங்கள், பாய்ந்த - பாயப்பெற்ற, மருமத்தில் - மார்பின்கண், மூரி - வலிமையையுடைய, யானை கோட்டிணை - யானையினிரண்டு கொம்புகளும், உழக்க - குத்திக்கலக்க, வெம் போர் - வெவ்விய போர்செய்கின்ற, கோளரி என்ன-சிங்கவேற்றைப்போல், சீறி - கோபித்து, தோள் துணை - இரண்டுதோள்களையும், கொட்டி-தட்டி, ஆர்த்து - கர்ச்சித்து, சுடர் - ஒளியையுடைய, நெடு-நெடிய, குருதி - உதிரந்தோய்ந்த, வாளால் - வாட்படையால், ஓடை பூட்டிய - முகபடாத்தை யணிந்த, நெற்றி - நெற்றியையுடைய, மத்தகம்-தலையை, போழ்ந்திட்டார் - பிளந்தார்கள், எ - று.

க - து. அரசர்கள் யானைகளோடு போர்செய்தார்கள் என்பதாம்.

தமது மார்பிற் குத்திய யானைக்குச் சிங்கம் வைரியாதலால் அரசரை 'கோளரி யென்னச் சீறி' என்றார். அரசர்சீறி ஆர்த்து வாளால் மத்தகம் போழ்ந்திட்டா ரென்க. (உரு)

கொலைத்தடங் கண்ணி னல்லார் குறங்கின்மேற் குறங்கு சேர்த்தி, முலைத்தட நெருங்கப் புல்லிக் கண்டுயின் முழவுத் தோளா, ரலைத்துமிழ் குருதி பொங்க வற்றுவீழ் புழைக்கை யேற்றி, மலைக்கடாக் களிறு புல்லி மண்ணிடைத் துஞ்சு கின்றார்.

இ - ள். கொலை - கொலைசெய்கின்ற, தடம் - விசாலம்பொருந்திய, கண்ணின் - கண்களையுடைய, நல்லார் - மாதர்களுடைய, குறங்கின்மேல் - துடைகளின்மேல், குறங்கு சேர்த்தி-துடைகளைச்சேர்த்துக்கொண்டு, முலை தடம்-ஸ்தனதடங்களை, நெருங்க புல்லி-அழுந்தத் தழுவிக்கொண்டு, கண் துயில் - நித்திரை செய்கின்ற, முழவு-மத்தளம்போன்ற, தோளார் - தோளையுடைய அரசர்கள், அலைத்து உமிழ் - அலைத்துமிழுகின்ற, குருதி பொங்க - உதிரம் ஒழுக, அற்று வீழ் - அற்றுவிழுந்த, புழை கை-துதிக்கையின்மேல், எற்றி-துடையை ஏற்றிக்கொண்டு, மலை - மலையையொத்த, கடா களிறு - மதயானையை, புல்லி - தழுவிக்கொண்டு, மண்ணிடை-பூமியிலே, துஞ்சுகின்றார் - நித்திரை செய்கின்றார்கள், எ - று.

க - து. அரசர்கள் போர்க்களத்தில் வீழ்ந்தார்கள் என்பதாம்.

மாதர் துடைக்குத் துதிக்கையும் முலைக்கு யானையும் உவமையாதல் பற்றி, அரசர் இறந்தும் முன்பு மாதரோடு துயிலுதல் போன்றிருந்தனரென்றார். (உசு)

கூற்றொடுங் கொம்மை கொட்டிக் குனிக்கும்வா ளுழவர் வேகக், காற்றினிற் பெண்ணை யீன்ற கருங்கனி யுகுவதேபோல், வேற்றிறல் வயவர் சென்னி வீழ்த்துவெங் கரிகளூறிச், சிற்றவெம் மடங்க லேற்றிற் செருக்களத் துழக்கியிட்டார்.

இ - ள். கூற்றொடும் - யமனுடனே, கொம்மை கொட்டி - கைதட்டிக்கொண்டு, குனிக்கும் - கூத்தாடுகின்ற, வாள் உழவர் - வாட்படையையுடைய வீரர்கள், வேகம் காற்றினில்-சண்டமாருதத்தில், பெண்ணை ஈன்ற-பனைமரந்தந்த, கரு கனி - கரிய பழம், உகுவதே போல்-உதிர்வதுபோல், வேல் திறல்-வேற்படையிற் றிறலையுடைய,

வயவர் - படைவீரர்களுடைய, சென்னி - தலைகளை, வீழ்த்து-தள்ளி, வெம் கரிகள் - வெவ்விய யானைகளை, நூறி - கொன்று, சீற்றம் - கோபத்தையுடைய, வெம் மடங்கலேற்றில் - வெவ்விய சிங்கவேற்றைப்போல், செரு களத்து - யுத்தகளத்தில், உழக்கியிட்டார்-கலக்கினார்கள், எ - று.

க - து. வீரர்கள் வீரர்களையும் யானைகளையுங் கொன்றார்கள் என்பதாம்.

கொல்லுதலில் யமனோடொப்பாதலால் அவ்வுரிமைபற்றிக் 'கூற்றோடுங் கொம்மை கொட்டி' என்றார். கொம்மைகொட்டலாவது அகங்கை விரித்துக் கொட்டுதலாம். மயிருள்ள தலையாதலால் வயவர் சென்னிக்குப் பனையின் சருக்கனி உவமை சொல்லப்பட்டது. [மடங்கலேற்றி னுழக்கியிட்டா ரெனலால் உவமையணி.] (உஎ)

வயவரோ ரிருவர் தம்மில் வாளமர் விளைத்த லோடு
முயிர்துறந் தவற்கு மாலை புனைதுமென் றும்பர்ப் போந்த
கயமலர்க் கண்ணி காணக் காளையர் மாய்ந்து மண்ணிற்
புயலுறழ் கூந்தற் காக வானினும் போர்செய் கின்றார்.

இ - ள். வயவர் - படைவீரர்கள், ஓர் இருவர்-இரண்டுபேர், தம்மில் - தமக்குள்ளே, வாள் அமர் - வாட்போரை, விளைத்தலோடும் - செய்தவளவில், உயிர்துறந்தவற்கு-இவருளாவி நீங்கினவனுக்கு,மாலை புனைதும் என்று - மாலைதரிப்போமென்று, உம்பர்போந்த-சுவர்க்கத்தினின்றும்வந்த, கயம் மலர்-தடாகத்திற் பூத்த குவளை மலரையொத்த, கண்ணி - கண்ணையுடைய அரம்பையானவள், காண - காணும்படி, காளையர் - வீரர்கள், மாய்ந்து - ஒருசேர இறந்து, மண்ணின் - பூமியிற்போல், புயல் உறழ் - மேகத்தையொத்த, கூந்தற்காக - கூந்தலையுடைய பெண்ணிற்காக, வானினும் - ஆகாயத்தின் கண்ணும், போர் - யுத்தத்தை, செய்கின்றார் - செய்கின்றார்கள், எ - று.

க - து. வீரர்களிருவர் போர்செய்கிறார் என்பதாம்.

வானினு மென்பதில் உம்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மையாம். மண்ணில் புயலுறழ் கூந்தல்-தமயந்தி, வானில் புயலுறழ் கூந்தல்-அரம்பையெனக் கொள்க. இம்மையில் ஒரு பெண்ணைப் பலர் விரும்பிப் போர்செய்வது போல் மறுமையிலும் ஓரரம்பையை விரும்பியவர் பலராதலால் பொருதனரென்க. எங்கணும் ஒருத்தியைப் பலர் விரும்பில் போரே முடியும் என்பது கருத்து. [மாய்ந்துபோர் செய்கின்றாரெனலால் தொல்லுருப்பெறலணி.] (உஅ)

குருதிகொப் புளிக்கும் வேலான் குங்கும வளறு மூழ்கு
மருமத்தில் வாளி மூழ்க மயங்கினன் றெளித லோடும்
விரைமொய்த்த கூந்த றாழ விண்ணினின் றார்வத் தோடு
முருவத்தார் புனைய வந்த வொண்டொடி மயங்கி நின்றாள்.

இ - ள். குருதி - உதிரத்தை, கொப்புளிக்கும் - உமிழ்கின்ற, வேலான் - வேற்படையையுடைய வரசனானவன், குங்கும அளறு - குங்குமச்சேற்றில், மூழ்கும் - முழுகப்பெற்ற, மருமத்தில் - மார்பினிடத்தில், வாளி மூழ்க - பாணங்கள் புதைய, மயங்கினன் - மயக்கங்கொண்டவனாகி, தெளிதலோடும் - தெளிந்தவளவில், விரை மொய்த்த - வாசனையையுடைய, கூந்தல் தாழ - குழலானது அவிழ, விண்ணினின்று - ஆகாயத்தினின்றும், ஆர்வத்தோடும்-ஆசையுடன், உருவம் தார் - அழகிய மாலையை, புனைய வந்த-தரிக்கவந்த, ஒள் தொடி - ஒட்பமாகிய வளையலை யணிந்த அரமங்கையானவள், மயங்கி நின்றாள் - மயங்கி நின்றனள், எ - று.

க - து. நளன் பாணங்கள்பட்டு மயங்கினவனாகித் தெளிந்து நிற்க, மாலை சூட்டவந்த அரம்பையானவள் மயங்கிநின்றாள் என்பதாம்.

'கூந்தலவிழ' எனலால் நினைப்பின்றி விரைந்துவந்தனளென்க. இவன் உயிர் மனிததேகத்தைவிட்டு நீங்குமுன் மாலைசூட்டத் தெய்வமங்கை வந்து காத்திருப்பாளானால் விண்ணின்பம் பெறுதற்குப் போரின் மிக்கதில்லையென்பது கருத்து. (உக)

கான்படு முருவப் பைந்தார் விதர்ப்பர்கோன் கன்னி வேற்கண், ஊன்படா துளையக் குத்தி யுள்ளுயிர் பருக லாற்றேம், வான்படா மின்னி னேச்சும் வாளினான் மாய்து மென்னாத், தேன்படு தெரியல் வேந்தர் செருமலைந் தாவி நீத்தார்.

இ - ள். கான் படும் - வாசனை யுண்டாகிய, உருவம் - அழகிய, பை தார் - பசியமாலையையுடைய, விதர்ப்பர் கோன் - விதர்ப்பதேசத்தார்க்கரசனாகிய வீமனுடைய, கன்னி-பெண்ணாகிய தமயந்தியினது, வேல் கண்-வேல்போன்ற கண்களானவை, ஊன் படாது-மாமிசம் படாமல், உளைய - வருந்தும்படி, குத்தி - குத்தி, உள் உயிர்-உள்ளாவியை, பருகல் - உண்பதை, ஆற்றேம் - பொறுக்கமாட்டேம்; வான் படா - மேகத்திற்றோன்றாத, மின்னின் - மின்போல், ஓச்சும் - எறிகின்ற, வாளின்-வாட்படையால், மாய்தும் என்னா-மாய்வேமென்று, தேன் படு - தேனுண்டாகின்ற, தெரியல் - மலர்மாலையை யணிந்த, வேந்தர் - அரசர்கள், செரு மலைந்து - போர்புரிந்து, ஆவி - உயிரை, நீத்தார் - நீக்கினார், எ - று.

க - து. அரசர்கள் தமயந்தி கட்படைக்கஞ்சி வாட்படையாலிறந்தார்கள் என்பதாம்.

மாதர்விழி வாளினுங் கொடியதென்பது "வெய்யகூற் றருந்தெறிவேல்வி லக்கினு, மெய்தாழ் வினைத்தொட ரெண்ணி மாற்றினுந், தையலார் முழுமதி முகத்திற் றங்கிய, மையகட் காலவேன் மாற்றலாகுமோ" (காசிகாண்டம்-தாரகை யுலகும் புதனுலகுங் கண்ட அத்தியாயம்-கூ) இதனாலறிக. (கூ௦)

முழவுறழ் திணிதோள் வீரர் முழுமெயு மிரும்புண் மேய
விழிபெருங் குருதி யாடி யிளங்கதிர்ப் பரிதி யேய்ப்ப
வழிகவுட் கடாத்த நால்வா யரசுவா வெருத்திற் றோன்றிப்
பொழிகணை மாரி சிந்தி யகலிரு விசும்பு போர்த்தார்.

இ - ள். முழவு உறழ் - மத்தளத்தையொத்த, திணி - வலிமை பொருந்திய, தோள் - புயத்தையுடைய, வீரர்-படை வீரர், முழு மெயும் - தேகமுழுதும், இரு - பெரிய, புண் மேய - புண்ணிற்பொருந்திய, இழி - ஒழுகுகின்ற, பெரு குருதி ஆடி - பெரிய வுதிரத்தில் மூழ்கி, இளங்கதிர் - இளமைபொருந்திய கிரணத்தையுடைய, பரிதி ஏய்ப்ப - சூரியனையொப்ப, கவுள் - கவுளினிடத்திலே, அழி - வீழுகின்ற, கடாத்த-மதத்தையுடைய, நால் வாய்-தொங்குகின்ற வாயையுடைய, அரசுவா - அரசயானையின், எருத்தில் - பிடரியின்மேல், தோன்றி - ஏறி, பொழி - பொழிகின்ற, கணை மாரி-பாண வருஷங்களை, சிந்தி - சிதறி, அகல் - அகன்ற, இரு - பெரிய, விசும்பு - ஆகாத்தை, போர்த்தார் - மறைத்தார்கள், எ - று.

க-து. படைவீரர் யானைமேலேறிக் கணைமழையா லாகாயத்தை மூடினார்கள் என்பதாம்.

அரசுவாவிற் கிலக்கணம் சுயம்வரப்படலத்தில் "குளிர்மதி" என்னும் எழுபத்து மூன்றும் பாட்டுரையிற் காண்க. (கூக)

[இனி மூன்று பாட்டால் அரசர் நளனை யெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

அருமருந் தனையாள் சூட்டு மலங்கலந் தோளி னானைப்
பொருதிரைப் புணரி சூழ்ந்த புவியினி லரச ரெல்லா
நிரையுளை யரிமா னேற்றை நிழல்சுளி தறுகட் சீற்ற
வரைபுரை களிநல் யானை வளைந்தென வளைந்து கொண்டார்

இ - ள். அரு மருந்து அனையாள்-அரிய தேவாமிர்தத்தை யொவளாகிய தமயந்தியானவள், சூட்டும்-தரித்த, அலங்கல் அம் தே

ளிளனை - மாலை விளங்கும் அழகிய புயத்தையுடைய நளனை, பொரு திரை-மோதுகின்ற அலைகளையுடைய, புணரி சூழ்ந்த-கடலாற் சூழப் பட்ட, புவியினில் - பூவுலகத்து, அரசர் எல்லாம் - அரசரனைவரும், நிரை-வரிசைபெற்ற, உளை - புறமயிரையுடைய, அரிமான் ஏற்றை - சிங்கவேற்றை, நிழல் சுளி - நிழலைக்கோபிக்கின்ற, தறுகண்-அஞ்சா மையையும், சீற்றம் - கோபத்தையுமுடைய, வரை புரை - மலையை யொத்த, களி நல் யானை-களிப்பையுடைய நல்ல யானைகள், வளைந்து என - வளைந்தனபோல், வளைந்துகொண்டார் - சூழ்ந்துகொண்டார் கள், எ - று.

க - து. அரசர்கள் நளனைச் சூழ்ந்து கொண்டார்கள் என்ப தாம்.

இத்தனை யரசரெதிர்த்தும் நளனுக்கு இணையாகமாட்டா ரென் பதுதோன்ற 'அரிமானேற்றைக் களிநல்யானை வளைந்தென வளைந்து கொண்டார்' என்றார். [உவமையணி.] (கூ௨

நொறில்பரித் தடந்தே ருந்தி நோன்சிலை குழைய வாங்கி
பொறியழற் பகழி தூவிப் பொங்குளைப் புரவி மான்றேர்
செறுகதக் களிநல் யானை சினவுவாள் வயவ ரீட்டங்
குறைபட நூழி லாட்டிக் கூற்றெனு வரச ரார்த்தார்.

இ - ள். நொறில் - விரைவினையுடைய, பரி - குதிரைகட்டிய, தடம் - விசாலம்பொருந்திய, தேர் உந்தி - தேரைச்செலுத்தி, நோன் சிலை-பெரியவில்லை, குழைய வாங்கி-வளையவளைத்து, அழல் பொறி- அக்கினிப் பொறியையுடைய, பகழி தூவி-பாணங்களைவீசி, பொங்கு உளை - மிகுந்த புறமயிரினையுடைய, புரவி-குதிரைகளும், மான் தேர்- குதிரைகட்டிய தேர்களும், செறு கதம் களி நல்யானை-மிகுந்த கோபத் தையுங் களிப்பையுமுடைய யானைகளும், சினவு வாள் வயவர் ஈட் டம் - கோபிக்கின்ற வாட்படையையுடைய படைவீரர் கூட்டமும், குறைபட - குறையும்படி, நூழிலாட்டி-நூழிலாட்டுச் செய்து, கூற்று என - யமன்போல், அரசர் - மன்னர்கள், ஆர்த்தார் - கர்ச்சித்தார் கள், எ - று.

க - து. அரசர்கள் சத்தித்தார்கள் என்பதாம்.

தேருந்தி, சிலைவாங்கி, பகழிதூவி, நூழிலாட்டி, ஆர்த்தார் அரச ரெனக்கொள்க. நூழிலாட்டாவது - பகைவர் ஒடும்படி தன்மார்பிற் றைத்துக்கிடந்தஆயுதத்தைப் பிடுங்கியெறிதல். "களங் கழுமிய படை யிரிய,வுளங்கழிந்த வேல்பறித் தோச்சின்று," "மொய்யகத்து மன்ன முரணினி யென்னுங்கொல்,கையகத்துக் கொண்டான் கழல்விடலை-

வெய்ய, விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த, படுசுட ரெஃகம் பறித்து" (புறப்பொருள் வெண்பாமாலை-தும்பைப்படலம்-கக) "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும்" (திருவள்ளுவர்-படைச்செருக்கு-ச) இவற்றாலறிக. (௫௫)

தெண்டிரைப் பரவை யேழுஞ் சேறுபட் டொழியத் தெண்ணீர், மொண்டுகொண் டெழுந்தோர் குன்றின் முகிற்குழாஞ் சொரிவ தேய்ப்பப், புண்டலை வடிவேன் மன்னர் பொறியழற் பகழி மாரி, மண்டமர் கடந்த திண்டோண் மன்னன்மேற் பொழிந்திட் டாரே.

இ - ள். தெள் திரை - தெளிவுபொருந்திய அலைகளையுடைய, பரவை ஏழும் - கடல்களேழும், சேறுபட்டு ஒழிய-சேறுபட்டு நீங்க, தெள் நீர் மொண்டுகொண்டு - தெண்ணீரை மொண்டுகொண்டு, ஓர் குன்றில் - ஒருமலையின்மேல், குழாம்-மேகக்கூட்டங்கள், சொரிவது ஏய்ப்ப - பொழிவதையொப்ப, புண் தலை - ஊனைத்தலையிலுடைய, வடி வேல் மன்னர் - கூரிய வேற்படையையுடையவரசர்கள், பொறி அழல் - நெருப்புப்பொறி பறக்கின்ற, பகழி மாரி - பாணமழையை, மண்டு-நெருங்கிய, அமர் கடந்த-யுத்தத்திற் செயித்த, திண் தோள்-வலிமை பொருந்திய புயத்தையுடைய, மன்னன் மேல் - நளமகாராஜன்மேல், பொழிந்திட்டார் - சொரிந்தார்கள், எ - று.

க - து. அரசர்கள் நளன்மேற் பாண மெய்தார்கள் என்பதாம்.

'பரவையேழுஞ் சேறுபட்டொழியத் தெண்ணீர் மொண்டுகொண்டு' என்னலால் அரசர்கள் வைப்பாக வைத்திருந்த பாணங்களையும் நளன்மேற் பொழிந்தனரென்ப தாயிற்று. (௫௬)

[இனி இரண்டுபாட்டால் அவ்வரசரை நளனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கொள்ளைகொண் டோரி யுண்ணக் குழாங்கொடு கவந்த மாட, வொள்ளழற் றறுகட் கூற்ற முயிருண்டு தெவிட்டி நிற்ப, வெள்ளவெங் குருதி போர்ப்ப வியன்பணை நிடதங் காக்கும், வள்ளறன் புருவத் தோடும் வரிசிலை குனிந்த தன்றே.

இ - ள். கொள்ளை கொண்டு - கொள்ளையாக வாரிக்கொண்டு, ஓரி உண்ண - கிழநரிகளுண்ண, குழாம் கொடு - கூட்டங்கொண்டு, கவந்தம் ஆட-உடற்குறைகள் கூத்தாட, ஒள் அழல்-ஒளியையுடைய

நெருப்புப்பொறி பறக்கின்ற, தறுகண் - அஞ்சாமையையுடைய, கூற்றம் - யமனானவன், உயிர் உண்டு - மடிந்தாருடைய உயிரையுண்டு, தெவிட்டி நிற்ப - உமிழ்ந்து நிற்க, வெம் குருதி வெள்ளம் - வெப்பம் பொருந்திய உதிரவெள்ளமானது, போர்ப்ப - மூடிக்கொள்ள, வியன் - பெரிய, பணை - வயலையுடைய, நிடதம் காக்கும்-நிடதநாட்டைப் புரக்கின்ற, வள்ளல்-வள்ளலாகிய நளனுடைய, புருவத்தோடு-புருவத்துடன், வரி சிலை-அவனது நெடிய வில்லும்,குனிந்தது-வளைந்தது, எ - று. அன்று, ஏ - இவ்விரண்டும் அசைநிலைகள்.

க - து. நளன் வில்லை வளைத்தான் என்பதாம்.

ஓரியுண்ண, கவந்தமாட, கூற்றமுயிருண்டு தெவிட்டி நிற்ப, குருதிபோர்ப்ப வள்ளல் சிலை குனிந்ததெனக் கூட்டுக. [புருவத்தோடும் சிலைவளைந்ததெனலால் உடனிகழ்ச்சியணி.] (௬௪)

கூன்பிறைக் கோட்டு வல்விற் குழைத்ததுங் குழைத்துத் தெவ்வ, ரூன்சுவைத் துண்ணும் வாளி விடுத்தது மொன்னலார்தஞ், சான்படு தெரியல் மார்பம் போழ்ந்ததுந் தெரியக் காணார், வான்படு பிணக்குன் றோங்கி வயின் வயின் விளங்கக் கண்டார்.

இ - ள். கூன் - வளைந்த, பிறை - பிறையையொத்த, கோடு வல் வில் - கொம்பினாலாகிய வலியவில்லை, குழைத்ததும் - வளைத்ததையும், குழைத்து - வளைத்து, தெவ்வர் - பகைவருடைய, ஊன் சுவைத்து - மாமிசத்தை மென்று, உண்ணும் - உண்ணுகின்ற, வாளி விடுத்ததும் - பாணங்கள் விட்டதையும், ஒன்னலார் - சத்துருக்களுடைய, சான் படு - மணமுண்டாகிய, தெரியல் - மலர்மாலையணிந்த, மார்பம்-மார்பை, போழ்ந்ததும் - பிளந்ததையும், தெரியக் காணார் - ஒருவருந் தெரியக்கண்டிலர்; (யாதுகண்டனரெனில்) வான் படு - ஆகாயமளாவிய, பிணம் குன்று ஓங்கி - பிணமலைகளுயர்ந்து, வயின் வயின் - இடங்கடோறும், விளங்க-விளங்குதலை, கண்டார்- பார்த்தார்கள், எ - று.

க - து. நளன் செய்கையைக் காணார்கள், பிணக்குவியலைக் கண்டார்கள் என்பதாம்.

புகையினால் நெருப்புண்டென் றறிந்ததுபோல் பிணக்குன்றினால் நளன் பொருதனனென் றறிந்தனரென்க. [பிணக்குன்றோங்கி வயின்வயின் விளங்கக்கண்டா ரென்னுங் காரியத்தினால் காரணமாகிய நளனது வில்லாண்மை தோன்றுதலால் புனைவிலிப் புகழ்ச்சியணி.] ஒன்னலார்தம் என்பதில் தம் சாரியை. (௬௫)

[இனி நளனோடு தனித்தனி அரசரெதிர்த்துப்பொருதல் சொல்லத்தொடங்கிக் கலிங்கநாட்டரசனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

பொருசமத் துடன்ற வீரர் பொன்றிட நின்ற வேந்தர்
வெருவலுற் றிரியு மாறும் வேந்தர்கோன் வலியு நோக்கி
யெரிமணிப் பொன்செ யோடை யிளங்களிப் பகடு சூழக்
கரைபொரு கடலந் தானைக் கலிங்கர்கோ னமரி லேற்றான்.

இ - ள். பொரு சமத்து-பொருகின்றபோரில், உடன்ற வீரர் - கோபித்தெதிர்த்த வீரர்கள், பொன்றிட - இறந்துவிட, நின்ற வேந்தர் - நின்ற மற்றையரசர்கள், வெருவல் உற்று - பயந்து, இரியும் ஆறும் - ஓடுந்தன்மையும், வேந்தர்கோன்-நளமகாராஜனுடைய, வலியும் - வலிமையினையும், நோக்கி - பார்த்து, எரி மணி - ஒளியையுடைய மணிகள்பதித்த, பொன் செய் ஓடை-பொன்னாற்செய்த முகபடாத்தையுடைய, இளம் களி பகடு சூழ - இளமைபொருந்திய களிப்பையுடைய யானைகள் சூழ்ந்துவர, கரை பொரு - கரையோடு மோதுகின்ற, கடல் தானை - சேனாசமுத்திரத்தையுடைய, கலிங்கர் கோன் - கலிங்கதேசத்தரசன், அமரில் - யுத்தத்தில், ஏற்றான் - எதிர்த்தான், எ - று.

க-து. கலிங்கதேயத்தரசன் நளனுடனெதிர்த்தான் என்பதாம்.

எதிர்த்தவர்களிறத்தலையும் மற்றவேந்தரோடுதலையும் நளன்வலிமையையுங்கண்ட கலிங்கதேசத்தரசன் அவனோடேற்றனனென்க. சேனையிற் குறைவில னென்பதுதோன்றக் 'கடலந்தானைக் கலிங்கர் கோன்' என்றார். கடலந்தானை யென்பதில் அம் சாரியை. (கஎ)

கந்தடு தறுகட் சீற்றக் கடாம்பொழி களிநல் யானை
மந்தர கிரியாற் றானை வாரிதி யுழக்கி வானத்
திந்திர குமர னென்ன விகல்புரி நிடதர் கோமா
னுந்துமான் றேரின் மேலு மொருகணை தெரிந்து விட்டான்.

இ - ள். கந்து அடு-கட்டுத்தறியை முறிக்கின்ற, தறுகண்-அஞ்சாமையை யுடைய, சீற்றம் - கோபத்தையுடைய, கடாம் பொழி - மதம்பொழிகின்ற, களி நல் யானை - களிப்பையுடைய நல்லயானையாகிய, மந்தரகிரியால் - மந்தரமலையினால், தானை வாரிதி - சேனாசமுத்திரத்தை, உழக்கி - கலக்கி, வானத்து - விண்ணுலகத்து, இந்திர குமரன் என்ன - இந்திரகுமரனைப்போல், இகல் புரி - போர்செய்கின்ற, நிடதர் கோமான்-நிடததேசத்தார்க்கரசனாகிய நளமகாராஜன்,

உந்த - செலுத்துகின்ற, மான் தேர்மேலும் - குதிரைகட்டிய தேர்மேலும், ஒருகணை - ஒரு பாணத்தை, தெர்ந்து-தேர்ந்தெடுத்து, விட்டான் - விடுத்தனன், எ - று.

க - து. நளனது தேர்மேல் கலிங்கராஜன் கணை தொடுத்தான் என்பதாம்.

இவன்விடும் பாணங்களுக்கும் வலிமைக்கும் தனதுகோலொன்றே நிகரென்பவன்போ லொருபாணம் விடுத்தனனென்க. உம்மை-சிறப்பு. [யானையை மந்தரகிரியாகவும் தானையை வாரிதியாகவும் உருவகப்படுத்திச் சொல்லுதலால் உருவகவணி.] (ருஅ)

பைப்பலைத் தகன்ற வல்குற் பாவையர்க் கனங்க னன்ன
தெய்ப்பலைச் சினவேற் காளை சிலைவளைத் தொருகோ லுந்தக்
கைப்பலைக் கோட்டில் வீழ்ந்த கலிங்கர்கோ னமரர் மாதர்
வெம்முலைக் கோட்டில் வீழ்ந்து விண்ணிடை விளங்கினானே

இ - ள். பை மலைத்து - பாம்பின் படத்துடன் பொருது, அகன்ற - விரிந்த அல்குல் - அல்குலையுடைய, பாவையர்க்கு-மாதர்க்கு, அனங்கன் அன்ன - மன்மதனையொத்த, தெவ்-சத்துருக்களை, மலை-பொருகின்ற, சினம் வேல் காளை - கோபம்பொருந்திய வேலையுடைய நளனானவன், சிலை வளைத்து - வில்லைவளைத்து, ஒருகோல் உந்த-ஒருபாணஞ்செலுத்த, கை மலை கோட்டில் - யானைக்கொம்பின்மேல், வீழ்ந்த - விழுந்த, கலிங்கர் கோன் - கலிங்கதேசத்தரசனானவன், அமரர் மாதர் - அரம்பையருடைய, வெம் - விருப்பைச்செய்கின்ற, முலை கோட்டில் வீழ்ந்து - முலையாகிய யானைக்கொம்பின்மேல் விழுந்து, விண்ணிடை - தெய்வலோகத்தில், விளங்கினான்-பிரகாசித்தான், எ - று.

க - து. நளன் கணையால் கலிங்கராஜனிறந்தான் என்பதாம்.

கலிங்கதேசத்தரசன் அநேகம் பாணங்கள் பிரயோகித்தும் அதனால் நளனிறவாமல் இவன்விட்ட ஒருபாணத்தால்அவன் இறத்தலால் அப்பலவும் இவ்வொன்றை நிகராமை விளக்கிநின்றது. நளனுடைய பாணத்தா லறுபட்டு யானையின் கொம்பில் வீழ்ந்தவளவிலேதானே அரம்பையருடைய ஸ்தனத்தைப்புல்லி அதனால் சிறப்புற்று நின்றனனென்க. கைம்மலைக்கோட்டில் வீழ்ந்தது மனிதவுடல், வெம்முலைக்கோட்டில் வீழ்ந்தது அவனது தெய்வவுடலெனக்கொள்க. விரைவுபற்றி அக்கோட்டில் வீழ்ந்து உடனே இக்கோட்டில் வீழ்ந்தனனென்றார். (ருகூ)

[இனி மூன்று பாட்டுகளாலே மகததேசத் தரசன் எதிர்த்திறத்தல் சொல்லப்படுகின்றது.]

களத்திடைக் கலிங்கர் கோமான் கவிழ்தலுங் கடைக்கண் சேப்ப, வுளத்திடை வெகுளி பொங்க வூழிவெங் காலினோடி, வளைத்தனன் சேனை யோடும் வார்சிலை வணக்கி வெம்போர், விளைத்தனன் கூற்று மஞ்சவெந்திறன் மகதர் கோவே.

இ - ள். களத்திடை - யுத்தகளத்திலே, கலிங்கர் கோமான் - கலிங்கதேசத்தரசன், கவிழ்தலும் - இறந்தவளவில், கடைக்கண் சேப்ப - கடைக்கண்கள் சிவக்க, உளத்திடை - மனத்தில், வெகுளி பொங்க - கோபமிக, ஊழி வெம் காலின் - யுகமுடிவி லுண்டாகிற வெவ்வியகாற்றுப்போல், ஓடி - ஓடி, வளைத்தனன்-வளைத்தனனாகி, சேனையோடும் - சேனையுடனே, வார் - நெடிய, சிலை வணக்கி - வில்லை வளைத்து, கூற்றும் அஞ்ச - யமனுமஞ்சும்படி, வெம் திறல் - வெவ்வியதிறலையுடைய, மகதர்கோ-மகததேசத்தரசன், வெம் போர்- வெவ்வியபோரை, விளைத்தனன் - செய்தனன், எ - று.

க - து. மகததேயத்தரசன் நளனுட னெதிர்த்தான் என்பதாம்.

மகதர்கோவானவன் கடைக்கண்சேப்ப வெகுளிபொங்க ஓடி வளைத்தனனாகி வெம்போர் விளைத்தனனெனக் கூட்டுக. (௬0)

முரிதிரைப் பரவை வேலை முகட்டெழுந் தகல்வான் மேய, விரிகதிர் மதியந் தீண்டும் வெள்ளெயிற் றரவ மென்னக், குருதிகொப் புளிக்கும் வேலான் கொற்றவெண் குடையின்மீது, வரிசிலை குழைத்து வெய்ய வடிக்கணை யொன்று விட்டான்.

இ - ள். முரி - வளைந்த, திரை - அலைகளையுடைய, பரவை - பரப்பையுடைய, வேலை முகட்டு எழுந்து - கடலினுச்சியிலுதித்து, அகல் வான்மேய - அகன்ற ஆகாயத்தின்கணுள்ள, விரி கதிர் மதியம் - விரிகின்ற கிரணங்களையுடைய சந்திரனை, தீண்டும் - தொடுகின்ற, வெள் எயிறு அரவம் என்ன - வெள்ளியபல்லையுடைய சர்ப்பம்போல், குருதி கொப்புளிக்கும் - உதிரத்தை யுமிழ்கின்ற, வேலான்-வேற்படையையுடைய நளனானவன், கொற்றம் - சயத்தைத் தருகின்ற, வெள் குடையின்மீது - தவள சத்திரத்தின்மேல், வரி சிலை குழைத்து - நெடியவில்லைவளைத்து, வெய்ய -கொடிய, வடி கணை ஒன்று - கூரியகணையொன்றை, விட்டான்-விடுத்தனன், எ - று.

க - து. நளன் மகததேயத் தரசன்மேல் ஒரு கணைதொடுத்தான் என்பதாம்.

மதியந்திண்டும் வெள்ளெயிற்றரவமென்னச், "கண்டது மன்னு மொருநாளலர் மன்னுந், திங்களைப் பாம்புகொண் டற்று" (திருவள்ளுவர்-அலரறிவுறுத்தல்-சு) எனுமதறிக. [வெண்குடைக்கு மதியையும் பாணத்திற்கு சர்ப்பத்தையும் ஒப்புச்சொல்லுதலால் உவமையணி.] (சுக)

சுரும்பிமிர் தும்பை வேய்ந்த சுடர்முடி மகதர் கோமான், விரும்பலர்ச் செருக்கும் வேலான் விற்பழுத் துமிழு மெய்ய, சரம்பட வற்று வீழ்ந்த தன்னுடற் குறைநின் றாட, வரம்பைய ரோடு நோக்கி யணிமணி முறுவல் பூத்தான்.

இ - ள். சுரும்பு - வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, தும்பை வேய்ந்த - தும்பைமாலை தரித்துவந்த, சுடர் முடி - கிரணங்கள் வீசுகின்ற கிரீடத்தையுடைய, மகதர் கோமான் - மகததேசத்தார்க் கரசனானவன், விரும்பலர் - சத்துருக்களை, செருக்கும் - கொல்லுகின்ற, வேலான் - வேற்படையையுடைய நளனது, வில் பழுத்து - வில்லானது பழுத்து, உமிழும் - உமிழுகின்ற, வெய்ய சரம் பட - வெவ்விய பாணங்கள்பட, (அவைகளால்) அற்று வீழ்ந்த - அறுபட்டு வீழ்ந்த, தன் - தன்னுடைய, உடல் குறை - கவந்தமானது, நின்று - நின்று, ஆட - கூத்தாட, அரம்பையரோடு - தெய்வமாதரோடு, நோக்கி - பார்த்து, அணி - அழகிய, மணி - முத்தையொத்த நகைதோன்ற, முறுவல் பூத்தான் - நகைத்தனன், எ - று.

க - து. நளன் கணைபட்டு மகததேயத்தரச னிறந்தான் என்பதாம்.

மகததேசத்தரசன் தெய்வவுருப்பெற்றமையால் அதிற்குறைந்த மனிதவுருவையிகழ்ந்து நகைத்தனனென்க. 'தன்னுடற்குறை நின்றாட நோக்கி' என்றலால் தறிபட்டவுடலாடி நிலத்தின் வீழுமுன்னமே தெய்வவுருப் பெற்றனனென்னும் விரைவுதோன்றியது. காணமுற்றவர் உடன் சிரித்திடுவரென்பது இயல்பாதலால் தனக்கு மாலைசூட்டிய அரம்பையரோடு நோக்கி 'அணிமணி முறுவல் பூத்தான்' என்றார். (சுஉ)

[இதனால் சோழனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

அமைப்பருந் தறுகட் சீற்றத் தாளரி யேறு போல்வான்
சமர்த்தலை யிகலி னேற்ற தரியலர் சென்னி வீழத்
தமித்திடுங் குருதி யொள்வாள் சுடரெழ விதிர்ப்ப நோக்கி
யமைத்தலும் வளவர் கோனை வெருவலீ யேகு கென்றான்.

இ - ள். அமைப்பரும் - அமைத்தற்கரிய, தறுகண் - அஞ்சாமையையும், சீற்றத்து - கோபத்தையும், ஆள் - ஆளுகின்ற, அரி ஏறு போல்வான் - சிங்கவேற்றையொத்த நளனானவன், சமர்த்தலை - யுத்தகளத்தில், இகலின் எற்ற - பகையினாலெதிர்த்த, தரியலர் - சத்துருக்களுடைய, சென்னி வீழ - தலைகள் வீழும்படி, நுமிந்திடும் - தறித்திடுகின்ற, குருதி - உதிரத்தையுடைய, ஒள் வாள் - ஒள்ளிய வாட்படையை, சுடர் எழ - ஒளிதுளும்ப, விதிர்ப்ப - அசைக்க, நோக்கி - அதுகண்டு, இமைத்தலும் - இமைகொட்டுமளவில், வளவர் கோனை - சோழனை, வெருவல் - அஞ்சாதே, நீ - நீ, ஏகுக என்றான் - போவென்றான், எ - று.

க - து. நளன் வாளசைவைக்கண்டு சோழன் பயந்து இமைகொட்டலா லதைக்கண்ட நளன் சோழனை அஞ்சாதே போவென்றான் என்பதாம்.

., நளன் வாளசைத்ததைக்கண்டு கண்ணிமைகொட்டலால் நம்மோடு பொருதற்கு அஞ்சினன் இவனோடு பொருவது தருமமன்றென்று சோழனைப்பார்த்து அஞ்சாதே நீபோவென்றான். அது தோல்வி யென்பது, "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி, னோட்டன்றோ வன்க ணவர்க்கு" (திருவள்ளுவர் - படைச்செருக்கு-ரு) இதனாலறிக. (சரு)

[இதனால் சேரமான் எதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கொய்யுளைப் புரவி தூண்டிக் கொடுமரங் குழைய வாங்கி
வெய்யவெம் பகழி மாரி விண்ணகம் புதைப்பத் தூவி
ஐயன்மெய்க் கவச மீது மைங்கணை சிதறி யார்த்தான்
மையறு சிறப்பின் மிக்க வஞ்சியம் பதிக்கு வேந்தே.

இ - ள். மை அறு - குற்றமற்ற, சிறப்பின் மிக்க - சிறப்பினாலுயர்ந்த, வஞ்சி அம் பதிக்கு - வஞ்சியென்னு மழகிய நகரத்திற்கு, வேந்து - அரசனாகிய சேரமான், கொய்யுளை - கொய்துகட்டிய புறமயிரினையுடைய, புரவி - குதிரையை, தூண்டி - செலுத்தி, கொடுமரம் - வில்லை, குழைய வாங்கி - வளையவளைத்து, வெய்ய - கொடிய, வெம் பகழி மாரி - வெவ்விய பாணமழைகளை, விண் அகம் - ஆகாயமுழுவதும், புதைப்ப - மூடும்படி, தூவி - இறைத்து, ஐயன் - நளனுடைய, மெய் கவசமீதும் - சீராவின்மேலும், ஐங்கணை சிதறி - ஐந்துபாணம் விட்டு, ஆர்த்தான் - கர்ச்சித்தான், எ - று.

க - து. சேரமான் நளன் மெய்க்கவசத்தின்மேலைங்கணை விடுத்தான் என்பதாம்.

நளன்மேல் ஐங்கணைதூவினனெனலால் பகழிமாரி விண்ண கம்புதைப்பத் தூவியென்பதைச் சேனைகண்மேலெனக்கொள்க. வேந்து-பண்பாகுபெயர். (சச)

சில்லியந் தடந்தே ருந்தித் திண்சிலை குழைய வாங்கிக்
கொல்லிய வெழுந்த கூற்றிற் கொடியவெம் பகழி தூவி
மல்லடு தோளு மார்பும் வழிபெருங் குருதி யோடும்
வில்லவன் வெருவி யோட வெஞ்சம முடற்றி னானே.

இ - ள். சில்லி - உருளையையுடைய, தடம் - விசாலம்பொருந்திய, தேர் உந்தி - தேரைச்செலுத்தி, திண் - வலிமைபொருந்திய, சிலை - வில்லை, குழைய வாங்கி - வளையவளைத்து, கொல்லிய எழுந்த - கொல்லவெழுந்த, கூற்றின் - யமன்போல், கொடிய - கொடியவாகிய, வெம் பகழி - வெவ்விய பாணங்களை, தூவி - விட்டு, மல் அடு - மற்போர் செய்கின்ற, தோளும் - புயங்களிலும், மார்பும் - மார்பிலும், வழி - வழிகின்ற, பெருங்குருதியோடும் - அதிக உதிரத்தோடும், வில்லவன் - சேரமான், வெருவியோட-அஞ்சியோடும்படி, வெம் சமம் - வெவ்வியபோரை, உடற்றினான் - செய்தான், எ - று.

க - து. சேரமான் பயந்தோட நளன் போர்செய்தான் என்பதாம்.

வில்லவனாயினும் நளன்வில்லுக்குத் தோற்றோடினமை தோன்றச் சேரமானுக்குப் பலபேரிருக்க 'வில்லவன்' என்றார். வில்லவன் - விற்கொடியை யுடையவன். (சரு)

[இதனால் புட்கரத்தீவரச னெதிர்த்தல் சொல்லப் படுகின்றது.]

நிறங்கிளர் வயிரப் பைம்பூ ணிடதர்கோன் றொடுத்த கோலிற், கறங்கெனத் திரியும் வெய்ய கலினமான் றடந் தேர் வீழ, மறங்கிளர் பரிதிவேலு மானமுந் துறந்து நாணாற், புறங்கொடுத் திரியல்போனான் புட்கரத் தீவில் வேந்தனே.

இ - ள். புட்கரத்தீவில் வேந்தன் - புட்கரத்தீவையாளுமரசனானவன், நிறம் கிளர் - ஒளிவிளங்குகின்ற, வயிரம் பைம்பூண் - வச்சிராபரணத்தையுடைய, நிடதர்கோன் - நளமகாராஜன், தொடுத்த - பிரயோகஞ்செய்த, கோலின் - பாணத்தால், கறங்கு என திரியும் - காற்றாடிபோற் றிரிகின்ற, வெய்ய - வெவ்விய, கலினமான் - கடிவாளம்பூண்ட குதிரைகட்டிய, தடம் - விசாலம்பொருந்திய, தேர் வீழ - இரதம்வீழ, மறம் கிளர் - மறமிகுந்த, பரிதி வேலும் - சூரியனையொத்த வேற்படையையும், மானமும் - அபிமானத்தையும், துறந்து -

விட்டு, நாணல் - நாணத்தால், புறங்கொடுத்து - முதுகுகாட்டி, இரியல்போனான் - ஓடிப்போனான், எ - று.

க - து. புட்கரன் நளனுடனெதிர்த் தோடினான் என்பதாம்.

மானமும் ஒருஆபரணம்போ லணிபவனாதலால் 'புட்கரத்திவில் வேந்தன் வேலு மானமுந் துறந்துபோனான்' என்றார். "மானவருங் கலனீக்கி" என்றார் பிறரும். (சச)

[இதனால் சாகத்தீவரசன் எதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

பாகடு வெந்திறற் பருமை யானைமேல்
வேகவெங் கலினமா வெள்ளஞ் சூழ்வரச்
சாகத்தீ வுக்கிறை சமரி னார்ப்பொடுந்
தோகையர் கண்ணெனப் பகழி தூவினான்.

இ - ள். பாகு - பாகனை, அடு - கொல்லுகின்ற, வெம் திறல் - வெவ்விய திறலையுடைய, பருமை யானைமேல் - ஒப்பனைசெய்த யானையின்மேல், வேகம்-வேகத்தையுடைய, வெம் கலினம் மா வெள்ளம்-வெவ்விய கடிவாளம்பூண்ட குதிரைக்கூட்டங்கள், சூழ்வர-தன்னைச் சூழ்ந்து வரும்படி, சாகத்தீவுக்கு இறை - சாகத்தீவுக் கரசனானவன், சமரின் ஆர்ப்பொடும் - யுத்தத்தினாரவாரத்துடன், தோகையர் கண் என - மாதர்விழிகள்போல், பகழி - பாணங்களை, தூவினான் - சிந்தினான், எ - று.

க - து. சாகத்தீவரசன் பாணந் தொடுத்தான் என்பதாம்.

மாதர்கண்கள் பாணங்களிலும் கொடியனவாதலால் 'தோகையர்கண்ணெனப் பகழிதூவினான்' என்றார். பாகு என்னும் பண்புப் பெயர் பண்பிக்காயிற்று. [இது உவமேயமாகிய கண்களை உவமானமாகிய பாணங்களுக்கு ஒப்புமைசொல்லலால் எதிர்மறையணி.] ()

துணங்கையிட் டலகைக டுள்ளி யார்த்தெழ
வணங்கெயிற் றரவென வழலும் வாளிகள்
வணங்குவிற் கால்வளைத் தெய்து மாற்றினா
னிணங்கமழ் குருதிவே னிடதர் வேந்தனே.

இ - ள். துணங்கையிட்டு - கையைக்கொட்டி, அலகைகள்-பேய்கள், துள்ளி - குதித்து, ஆர்த்து - ஒலித்து, எழ-எழும்ப, அணங்கு - வருத்தத்தைச் செய்கின்ற, எயிறு - பல்லையுடைய, அரவு என - சர்ப்பம்போல், அழலும் - சுடுகின்ற, வாளிகள் - பாணங்களை, வணங்கு - வளைகின்ற, வில் - வில்லை, கால் வளைத்து - காலிலூன்றி வளைத்து,

எய்து - பிரயோகஞ்செய்து, மாற்றினான் - நீக்கினான், நிணம் கமழ் - கொழுப்பு நாறுகின்ற, குருதி வேல்-உதிரந்தோய்ந்த வேற்படையையுடைய, நிடதர் வேந்தன் - நளமகாராஜன், எ - று. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. சாகத்தீவரசன் பாணங்களை நளன் விலக்கினான் என்பதாம்.

இப்போரில் நமக்கு நல்லவுணவு கிடைக்குமென்று அதிக மகிழ்ச்சியால் பேய்கள் கர்ச்சித்தலால் 'துணங்கையிட் டலகைக டௌ்ளியார்த்தெழ' என்றார். அரவைப் பாணத்துக்கும் எயிற்றை அதன் முனைக்கும் உவமையாகக் கொள்க. (சஅ)

பாற்றினந் தொடர்வது பகைவ ரூன்சுவைத்
தூற்றிருந் திடையறு துதிரங் கால்வது
கூற்றொடுந் தோழமை கொள்வ தாயதோர்
மாற்றருங் கொடியவேன் மன்னன் வாங்கினான்.

இ - ள். பாறு இனம் தொடர்வது - பருந்துக்கூட்டங்கள் தொடர்வதும், பகைவர் - சத்துருக்களுடைய, ஊன் - மாமிசத்தை, சுவைத்து - மென்று, ஊற்று இருந்து - ஊற்றாகவிருந்து, இடையறுது - ஒழியாமல், உதிரம் கால்வது - உதிரங்கக்குவதும், கூற்றொடும் - யமனுடன், தோழமை கொள்வதாயது - சினேகங்கொள்வதாகியதுமாகிய, ஓர் - ஒரு, மாற்றரு - தடுப்பதற்கரிய, கொடிய வேல்-கொடிய வேற்படையை, மன்னன் - நளனானவன், வாங்கினான் - கைக்கொண்டான், எ - று.

க - து. நளன் வேலாயுதத்தைக் கைக்கொண்டான் என்பதாம்.

ஒருவர்மேல் விட்டால் அதன் கொடுமை சொல்லவேண்டுவதில்லையென்பது தோன்ற சுபாவத்தில் இம்மூக்குணங்களையுமுடைய வேலென்றார். (சகூ)

அயிலெடுத் தெறிதலு மடர்க்கு மொன்னலார்
வயிறெரி தவழ்ந்தது வயிர வாட்படை
செயிரற வேந்திய சாகத் தீவிறை
யுயிர்துறந் தந்தக னுலகம் புக்கதே.

இ - ள். அயில் எடுத்து எறிதலும் - வேற்படையையெடுத்து வீசியவளவில், அடர்க்கும் - பொருகின்ற, ஒன்னலார் - பகைவருடைய, வயிறு - வயிறானது, எரி - நெருப்பினால், தவழ்ந்தது-தவழ்ந்திடப்பட்டது, வயிரம் வாள்படை-வச்சிரவாளை, செயிர் அற-குற்ற

மற, ஏந்திய - தாங்கப்பெற்ற, சாகத்தீவு இறை - சாகத்தீவுக்கரசனு டைய, உயிர் - உயிரானது, துறந்து - அவனைவிட்டு, அந்தகன் உலகம் - யமலோகத்தில், புக்கது - புகுந்தது, எ - று.

க - து. சாகத்தீவரசனுயிர் யமலோகஞ் சென்றது என்பதாம்.

'வயிறெரி தவழ்தலால் அடர்க்கு மொன்னலர்' என்றது சாகத்தீவரசனோடு வந்து எதிர்த்தவரை யெனக்கொள்க. நிராயுதனாகி யிறந்திலனென்பது தோன்ற 'வயிரவாட்படை செயிரற வேந்திய சாகத்தீவிறை' என்றார். (௫0)

[இதுமுத லேழுபாட்டால் காம்பிலிதேசத்தரச னெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

தூம்புடைக் கரமலை யெருத்திற் றோன்றுபு
காம்பிலிக் கரசன்வில் வாங்கிக் காய்கணை
தேம்பொதி செழுமலர்த் தெரியன் மார்பினன்
வாம்பரித் தேர்மிசை மழையிற் றூவினன்.

இ - ள். தூம்புடை - துவாரத்தையுடைய, கரம் மலை - கையை யுடைய மலைபோன்ற யானையினது, எருத்தில் - பிடரியின்மேல், தோன்றுபு - தோன்றி, காம்பிலிக்கு அரசன் - காம்பிலி நாட்டுக்கரசனானவன், வில் வாங்கி - வில்லைவளைத்து, காய் - கொல்லாநின்ற, கணை - பாணங்களை, தேம் - வாசனை, பொதி - நெருங்கிய, செழு மலர் - செழுமையுள்ள மலராற்றொடுத்த, தெரியல் - மாலையை யணிந்த, மார்பினன் - மார்பினையுடையவனாகிய நளனது, வாம் - தாவுகின்ற, பரி - குதிரைகட்டிய, தேர்மிசை - தேரின்மேல், மழையின் - மேகம்போல், தூவினன் - பிரயோகித்தான், எ - று.

க - து. காம்பிலி தேசத்தரசன் நளனது தேர்மேற் கணைதொடுத்தான் என்பதாம்.

துதிக்கை யொன்று தவிர மற்றையுடல் மலைபோலிருத்தலால் யானையைக் 'கரமலை' என்றார். காம்பிலிதேசத்தரசன் நளன் தேரின் மேற் பாணந்தூவினனெனக் கூட்டுக. (௫௧)

சிலையுயிர்த் தாயிர்ப்பலி கவருந் திண்கணை
கொலைவடி வேலினன் றுரப்பக் குஞ்சர
மலையெனக் கவிழ்தலு மடங்க லேறெனப்
புலவுவா ளொடுமவன் புவியிற் பாய்ந்தனன்.

இ - ள். சிலை உயிர்த்து - வில்லால் விடப்பட்டு, உயிர் பலி கவரும் - உயிராகிய வுணவை யுண்கின்ற, திண் கணை - வலிமைபெற்ற

பாணங்களை, கொலை வடிவேலினுன்-நளனுனவன், துரப்ப - செலு த்த, குஞ்சரம் - (ஏறிவந்ததன்) யானையானது, மலை என கவிழ்த லும் - மலைபோற் கவிழ்ந்து வீழ்ந்தவளவில், மடங்கல் ஏறு என-சிங் கவேற்றைப்போல், புலவு - புலானுற்றத்தையுடைய, வாளொடும் - வாட்படையுடன், அவன் - அவ்வரசனுனவன், புவியில் - பூமியிலே, பாய்ந்தனன் - குதித்தனன், எ - று.

க - து. நளன் பாணம் விடுக்க யானைவிழவும், காம்பிலிதேயத் தரசன் நிலத்திற் குதித்தான் என்பதாம்.

புலவு-மாமிசம் எனினுமாம். தன்னைவிட்டுத் தன் தேரின் மேற் பாணம் விடுத்தலால் நளனும் அவ்வரசனேறி வந்த யானைமேற் பா ணம் விடுத்து அதைக்கொன்றன னென்க. [மலையெனவெனலா லுவ மையணி.] (௫உ)

வார்மயிர்க் கேடகம் பற்றி வாள்விதிர்த்
தூர்சினக் களிற்றணி யுழக்கி யொய்யெனப்
போர்முகத் துரறிவெம் புலியின் போத்தெனச்
சாரிகை திரிந்தனன் றறுக ணாளனே.

இ - ள். வார் - நெடிய, மயிர் கேடகம் - மயிரையுடைய தோற் கேடகத்தை, பற்றி - பிடித்து, வாள் விதிர்த்து - வாளை யசைத்து, ஊர் - நடக்கின்ற, சினம் - கோபத்தையுடைய, களிறு அணி-யானை வகுப்பை, உழக்கி - கலக்கி, ஒய்யென - விரைவில், போர் முகத்து - யுத்தமுகத்தில், உரறி-கர்ச்சித்து, வெம் புலியின் போத்துஎன-வெய்ய புலிப்போத்துப்போல், சாரிகை திரிந்தனன்-வட்டமாகத் திரிந்தான், தறுகணாளன் - அஞ்சத்தக்கவைகட்கு அஞ்சாத காம்பிலி தேசத்தர சனுனவன், எ - று.

க - து. காம்பிலிதேசத்தரசன் கேடகம் பற்றி வாளையசைத்து வட்டமிட்டு உலாவினுன் என்பதாம்.

பாணங்கள் தைப்பினும் அழிவிலாதிருத்தற்கு மயிருள்ள தோலி னுற் செய்வதுபற்றி 'மயிர்க்கேடகம்' என்ருர். ஒரு குற்றஞ் செய்த வர்க்குப் பலகுற்றஞ் செய்பவர்போல் தானேறி வந்த ஒரு யானையைக் கொன்ற நளனது களிற்றணி யுழக்கிச் சாரிகை திரிந்தனனென் ருர். [புலியின் போத்தென வெனலால் உவமையணி.] (௫௩)

பாரினின் றவனமர் புரியப் பாய்பரித்
தேரினின் றடுகணைச் செரு விளைத்திட
ஞருடை வயவர்போர்த் தரும மன்றெனக்
கூர்நுதி வாளுரீஇக் குப்புற் றனரோ.

இ - ள். பாரினின்று - பூமியிலிருந்து, அவன் அமர் புரிய-அவ்வரசன் போர்புரிய, பாய் - தாவுகின்ற, பரி தேரினின்று - குதிரை கட்டிய தேரிலிருந்து, அடு கணை-கொல்லாநின்ற பாணங்களைக்கொண்டு, செரு விளைத்திடல் - யுத்தஞ்செய்தல், தார் உடை - வெற்றி மாலையையணிந்த, வயவர் - படைவீரருடைய, போர் தருமம் அன்று என - யுத்தத்தினுடைய தரும மன்றென்று, கூர் - கூரிய, நுதி - நுனியையுடைய, வாள் உரீஇ-வாளையுருவிக்கொண்டு, குப்புற்றுன்-குதித்தான், எ - று. அரோவென்பது - அசை.

க - து. நளன் வாளையெடுத்துத் தேரைவிட் டிறங்கினுன் என்பதாம்.

நளன் அறநிலைப் போர் செய்பவனுதலால் தன்னோடெதிர்த்த காம்பிலிதேசத் தரசனுனவன் பூமியிலிருத்தல் பற்றித் தானும் பூமியிற் குதித்தனனென்றார். (ருச)

மன்பெருங் கேடகந் திரித்து வானிடை
மின்பிறழ்ந் தென்னவாள் விதிர்த்து நோக்கின
ரென்புநெக் குள்ளுடைந் திரிய வேற்றனர்
வென்பிற ரறிகிலாத் திறல்கொள் வீரரே.

இ - ள். மன் - நிலைபெற்ற, பெரு கேடகம்-பெரிய பரிசையை, திரித்து - சுழற்றி, வான் இடை - ஆகாயத்தின்கண், மின் பிறழ்ந்து என்ன - மின்னலசைந்தாற்போல், வாள் விதிர்த்து-வாட்படையையசைத்து, நோக்கினர் - பார்த்தவர்களுடைய, என்பு - எலும்புகள், நெக்கு-நெக்குவிட்டு, உள் - உள்ளே, உடைந்து இரிய - உடைந்து போகும்படி, வெந் - தம்முதுகை, பிறர் - பிறர்களால், அறிகிலா - அறியப்படாத, திறல் கொள் - வலிமையைக்கொண்ட, வீரர் - அரசர்கள், ஏற்றனர் - எதிர்த்தனர், எ - று.

க - து. அரசர்க ளெதிர்த்தார்கள் என்பதாம்.

வெந் - என்பதில் நகரவொற்று பகரத்தோடு மயங்காமையின் வழக்கப்படி எதுகை நோக்கி னகரவொற் றெழுதப்பட்டதாம். 'வென் பிற ரறிகிலா' என்பதனுல் ஒரிடத்திலும் இவ்விருவரும் தோற்றவ ரல்லரென்பது கருத்து. [இது உவமையணி.] (ருரு)

தெறுஞ்சினந் தலைக்கொளீஇச் செங்கண் டீயுகப்
பிறங்குபொற் கேடகம் பிறழ வெற்றியு
மறங்கிளர் வயிரவாள் வாளிற் றாக்கியுங்
கறங்கெனத் திரிந்தனர் காளை வீரரே.

இ - ள். நேறும் - அழிக்கின்ற, சினம் - கோபமானது, தலைக்கொளீஇ - அதிகரித்து, செம் கண் - சிவந்த கண்களினின்றும், தீ உக - நெருப்புதிர, பிறங்கு - உயர்ந்த, பொன் கேடகம் - அழகிய கேடகத்தை, பிறழ - நீங்கும்படி, எற்றியும் - எறிந்தும், மறம் கிளர் - கொலைத்தொழில் மிகுந்த, வயிரவாள் - வச்சிரவாளை, வாளின் தாக்கியும் - வாளினுலெறிந்தும், கறங்கு என - காற்றாடிபோல், காளை வீரர் - அரசர்கள், திரிந்தனர் - திரிந்தார்கள், எ - று.

க - து. அரசர்கள் வாளினுற் போர்செய்தார்கள் என்பதாம்.

இவ்விரண்டு பாட்டால் ஒருவர்க்கொருவ ருயர்வு தாழ்வு சொல்லாமையால் வாட்போரில் இவ்விருவரு மொத்தன ரென்பதாம். தலைக்கொளீஇ என்பதற்குப் பகுதி தலைக்கொள். (நிசு)

கோட்புலிப் போத்தென நிடதர் கோமகன்
ஞாட்பினுட் காம்பிலிக் கிறைவ னுமற
வாட்படை யெறிந்துயிர் வவ்வி னுனவன்
சேட்புலத் தரம்பையர் தெரியல் சூடினுன்.

இ - ள். கோள் - கொலைசெய்கின்ற, புலி போத்து என-ஆண்புலிபோல், நிடதர் கோமகன் - நளனுனவன், ஞாட்பினுள் - யுத்தத்தின்கண், காம்பிலிக்கு இறைவன் - காம்பிலி நாட்டுக்கரசனுடைய, நாமம் அற - நாமமறும்படி, வாள் படை-வாளாயுதத்தால், எறிந்து - வீசி, உயிர் - ஆவியை, வவ்வினுன் - கொண்டான், அவன் - அவ்வரசன், சேண் புலத்து - விண்ணுலகத்தின்கண், அரம்பையர் - தெய்வமங்கையரால், தெரியல்-மாலை, சூடினுன்-சூடப்பட்டான், எ - று.

க - து. நளன் காம்பிலிதேயத்து வேந்தனைக் கொன்றுன் என்பதாம்.

நாமம் - நாமெனக்கடை குறைந்தது. தோல்வியின்றி வாட்போரில் எதிர்த்திறந்த வனுதலால் காம்பிலி தேசத்தரசனுக்கு அரம்பையர் மாலைசூட்டின ரென்றுர். ஞாட்பு - போர். (நிஎ)

அறைகழல் வேந்தர்மே லலங்கல் வேலினு
னெறுழ்வலிக் களிற்றிடைத் தாவு மெண்ணிலா
நொறில்பரி தேர்மிசைப் பாயு நோன்கெழு
சிறையொடுந் திரிவதோர் சீய மென்னவே.

இ - ள். அலங்கல் - வெற்றிமாலை தரித்த, வேலினுன் - வேற்படையையுடைய நளனுனவன், நோன்கெழு - பெருமைபொருந்திய, சிறையொடும் திரிவது - சிறகினுடன் திரிவதாகிய, ஓர் - ஒரு, சீயம்

என்ன - சிங்கம்போல், அறை - ஒலிக்கின்ற, கழல்-வீரக்கழலை யணிந்த, வேந்தர்மேல் - அரசர்கள்மேலும், எறுழ் வலி - மிகுந்த வலிமையையுடைய, களிற்றிடை - யானையின்மேலும், தாவும் - தாவுவான், எண்ணிலா - அளவில்லாத, கொறில்-விரைவையுடைய, பரி-குதிரை மேலும், தேர்மிசை - தேரின்மேலும், பாயும் - பாய்வான், எ - று.

க - து. நளன் அரசர்கள் மேலும், யானைகள் மேலும், குதிரைகள் மேலும், தேர்களின்மேலும் பாய்வான் என்பதாம்.

நளன் செய்தபோரைத் தனித்தனி சொல்லின் முடியாதெனப் பார், தொகுத்துச் சுட்டவென்று முத்தியால் வேந்தர்மேல் களிற்றிடை பரி தேர்மிசை இவ்வாறெதிர்த்து வென்றனனென்றார். (ருo)

இன்னணங் கொடுஞ்சமர் முருக்கி யேற்றிகல்
மன்னவர் புறக்கொடை கண்டு மாலைதாழ்
கொன்னவில் குருதிவேற் குவவுத் தோளினன்
சென்னிவான் றடவுபொற் றேரி னேறினன்.

**இ - ள்.** இன்னணம் - இந்தப்பிரகாரம், கொடு சமர் - கொடிய யுத்தத்தில், முருக்கி - கொன்று, ஏற்று - எதிர்த்து, இகல் - பகைக்கின்ற, மன்னவர் - அரசர்கள், புறக்கொடை கண்டு - முதுகு கொடுத்தோடப் பார்த்து - மாலை தாழ் - மாலை தாழ்கின்ற, கொல் நவில் - கொல்லுதலைச் சொல்லுகின்ற, குருதி-உதிரந்தோய்ந்த, வேல்-வேற்படையையுடைய, குவவுதோளினன்-திரட்சிபொருந்திய தோள்களையுடைய நளனவன், சென்னி - தலையினால், வான் - ஆகாயத்தை, தடவு - தடவுகின்ற, பொன் தேரின் - அழகிய தேரின்மேல், ஏறினன் - ஏறினன், எ - று.

க - து. நளன் வெற்றிகொண்டு தேர்மேலேறினன் என்பதாம்.

இன்னவண்ணம் என்பது இன்னணம் என விகாரமாயிற்று. கொல்லுதலைத் தெரிந்தவர் வாயினாற் சொல்லாது செய்கையாற் சொல்லுதல்போல் வேற்படை கொலைசெய்தலாற் சொல்லுதலின் 'கொன்னவில் குருதிவேல்' என்றார். (ருக)

[இனி ஆறுபாட்டால் படுகளச் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கொச்சகக்கலிப்பா.

புலத்தகனு மடநல்லார் புலவிதீர் தரச்சூட்டு
மலைத்தக மலர்க்குஞ்சி யழிகுருதிப் புனலலைப்ப
மலைத்தடந் திணிதோளார் வடிக்கணை மெயிற்போர்ப்பக்
கொலைத்தலைமுண் மாப்போற் கொடுஞ்சமத்திற் கிடந்தனரே.

இ - ள். மடநல்லார் - மாதர்கள், புலத்தலும் - ஊடியவளவில், புலவி - அவ்வூடல், தீர்தர - நீங்கும்படி, சூட்டும் - அணிவிக்கும், அலத்தகம் - அவர் பாதங்களி னூட்டப்பெற்ற செம்பஞ்சு படிந்த, மலர் - பூவையணிந்த, குஞ்சி - குடுமியை, அழி - அழிகின்ற, குருதி புனல் - உதிர நீரானது, அலைப்ப-அலைக்க, மலை-மலைபோல், தடம் - பருத்த, திணி - வலிமையையுடைய, தோளார் - தோளையுடைய வரசர்கள், வடி கணை - கூரிய பாணங்கள், மெயில்போர்ப்ப - தேகத்தில் மூட, கொலை தலை-கொல்லுகின்ற நிலையையுடைய, முண்மாபோல் - முள்ளம் பன்றிபோல், கொடு சமத்தில் - கொடிய யுத்தகளத்தில், கிடந்தனர் - கிடந்தனர், எ - று.

க - து. அரசர்கள் மெய்யிற்பட்ட கணையோடு முள்ளம் பன்றி போற் போர்க்களத்திற் கிடந்தார்கள் என்பதாம்.

மாதர்க்கு ஊடலுண்டாயின் கணவரை யுதைத்தல் மாலைப்படலத் திரண்டாம் பாட்டாலுணர்க. மாதர்புலவியில் ஆடவரைத் தாமுதைத்தலும் அவரை ஆடவர் பணிதலுமாகிய இரண்டுமுண்டு. அது அப்போது அவர்க்குண்டாகும் வேட்கைக் கீடாய் நிற்குமெனக்கொள்க. தேகங்களில் அம்புகள் தைத்திருத்தல் முள்ளம் பன்றி முட்களைச் சிலிர்த்தல்போ னிருத்தலால் அதற்கதை யுவமை யாக்கினார். (சுo)

இகன்மிகு திறல்வேந்த ரேதியாற் களப்படுத்த
புகர்முகக் கடாயானை பொழிகுருதிச் செழுஞ்சேற்றிற்
றிகிரிய கொடிஞ்சிநெடுந் தேருழக்கத் துகளெழுந்தவ்
வகலிரு விசும்புபோர்த் தந்திவான் போன்றதுவே.

இ - ள். இகல் மிகு - பகைமை மிகுந்த, திறல்-வலிமைபொருந்திய, வேந்தர் - அரசர்கள், ஏதியால் - வாட்படையால், களப்படுத்த - யுத்தகளத்திற் கொன்ற, புகர் முகம் கடா யானை-புள்ளிபெற்ற முகத்தையு மதத்தையுமுடைய யானைகள், பொழி - ஊற்றிய, செழு குருதி சேற்றில் - செழுமைபொருந்திய வுதிரச்சேற்றில், திகிரிய - உருளைகளை யுடையவும், கொடிஞ்சி - மேன்மொட்டை யுடையவுமாகிய, நெடு தேர் - நெடிய தேர்கள், உழக்க - கலக்க, துகள் - தூளிகள், எழுந்து - எழும்பி, அ அகல் இருவிசும்பு-அந்த அகற்சியுள்ள பெரிய ஆகாசத்தை, போர்த்து-மூடிக்கொண்டு, அந்தி வான் - அந்திக்காலத்தில் தோன்றும் செவ்வானத்தை, போன்றது - ஒத்தது, எ - று.

க - து. ஆகாயமானது போர்க்களத்தின் உதிரப் புழுதியால் மூடப்பட்டுச் செவ்வானத்தை யொத்திருந்தது என்பதாம்.

குருதிச்சேறுயினும் அனேகந்தரம் தேருருளைக ளோய்ந்தலால் புழுதியாயிற் றென்க. அப்புழுதி மூடிதலால் ஆகாயம் செவ்வானம் போன்றதென்றார். [இது உவமையணி.] (கூ௬)

ஒளிகிளர் மணியோடை சிதைந்தொழிய வுடன்றபோர்க்
களிசின மால்யானைக் கதிர்மருப் புமிழ்ந்தநீ
முளிதடஞ் சினைமேயு முருங்கெரி யெனப்பற்றி
விளிதரு வயவருடல் வெந்தொழியப் பரந்ததே.

இ - ள். ஒளி கிளர் - பிரகாசமிகுந்த, மணி ஓடை - அழகிய முகபடாமானது, சிதைந்து - கெட்டு, ஒழிய - நீங்க, உடன்ற-வெகுண்ட, போர் - யுத்தத்தில், களி - செருக்கையும், சினம்-கோபத்தையுமுடைய, மால் - பெரிய, யானை - யானைகளுடைய, கதிர் - பிரகாசம்பொருந்திய, மருப்பு - தந்தங்கள், உமிழ்ந்த - சொரிந்த, தீ-நெருப்பானது, முளி - காய்ந்த, தடம்-பருத்த, சினை-கிளைகளை, மேயும் - தகிக்கின்ற, முருங்கு எரி என - அழியுந் தீயைப்போல், பற்றி - பற்றிக்கொண்டு, விளிதரு - இறந்த, வயவர் உடல் - வீரருடைய தேகங்கள், வெந்து ஒழிய - வெந்துபோகும்படி, பரந்தது-பரவியது, எ - று, ஆல் - அசை.

க - து. யுத்தகளத்தில் யானைக்கொம்பிற் பிறந்த தீயானது அரசர்களுடல் வெந்தெரியும்படி பரவியது என்பதாம்.

போர்க்களத்தில் யானைக்கொம்பிற் பிறந்த தீயே வயவருடல் வெந்தொழியப் பரந்ததெனக் கொள்க. முருங்கெரி - அதிகரித்த தீயெனினு மமையும். (கூ௭)

பரிதிவடி வாள்பிடித்துப் பல்லினா லிதழதுக்கித்
திருகுசினந் தலைக்கொளீஇச் செங்கண்க ளுமிழக்
குருதிபா யடுகளத்திற் குற்றுயிரிற் கிடந்தார்க்கண்
டருகணையக் கொடுங்கூற்று மஞ்சிமீன் றலறுமால்.

இ - ள். பரிதி - சூரியன்போன்ற, வடி - கூரிய, வாள் - வாட்படையை, பிடித்து - கையிற்பற்றி, பல்லினால் - பற்களினால், இதழ் அதுக்கி - உதட்டைக் கடித்து, திருகு - மாறுபட்ட, சினம்-கோபம், தலைக்கொளீஇ - அதிகரித்து, செம் கண்கள்-சிவந்தகண்களானவை, தீ உமிழ - நெருப்பைச்சொரிய, குருதி பாய் - உதிரம்பரவிய, அடு களத்தில்-கொலைக்களத்தில், குற்றுயிரின்-குற்றுயிருடன், கிடந்தார் கண்டு - கிடந்தவர்களைக் கண்டு, அருகு அணைய-அவர்களருகே வரு

கிடைத்து, கொடு கூற்றும்-கொடிய யமனும், அஞ்சி நின்று - அச்சமுற்று நின்று, அலறும் - அலறுவான், எ - று. ஆல் - அசைநிலை.

க - து. வாளைக் கையிற்பிடித்துப் பல்லா லிதழைக் கடித்துக் கோபங்கொண்டு கண்ணிலே நெருப்புப்பொறி பறக்கக் குற்றுயிரோடு போர்க்களத்திலிருக்கும் வீரரைக்கண்டு யமன் அருகிற்போகப் பயப்படுவான் என்பதாம்.

குற்றுயிரிற் கிடக்கும்போது யமன் அவரைப்பற்றுதற்கு அலறுவானென்னின், போரி லெதிர்க்கும்போது அவரைக் கண்டவர் அஞ்சுதல் சொல்ல வேண்டுவதில்லை யாயிற்று. (கூரு)

சிலைபொரு திணிதடந்தோட் டேர்வேந்தர் செருமலைந்து
கொலைபுரி யடுகளத்திற் குடர்பின்னிக் கிடந்ததனைப்
புலவுநா றுடற்றசைவேட் டுண்ணவரும் புள்ளினங்கள்
வலைவளைந்த தெனவெண்ணி வானினிடைச் சுழலுமால்.

இ - ள். சிலை பொரு - மலையையொத்த, திணி - வலிமைபொருந்திய, தடம் தோள் - பருத்த தோள்களையுடைய, தேர் வேந்தர் - தேரையுடையவரசர்கள், செரு மலைந்து-போர்செய்து, கொலை புரி-கொலைசெய்த, அடு களத்தில் - யுத்தகளத்தில், குடர் - குடர்கள், பின்னி கிடந்ததனை-ஒன்றோடொன்று பின்னிக்கிடந்ததை, புலவு நாறு - புலானாற்ற நாறுகின்ற, உடல் தசை - தேகத்தின் மாமிசத்தை, வேட்டு - விரும்பி, உண்ண வரும் - உண்பதற்கு வந்த, புள் இனங்கள் - பறவைக்கூட்டங்களானவை, வலை வளைந்தது என - வலையானது வளைந்ததென்று, எண்ணி - நினைந்து, வானினிடை - ஆகாயத்தின் கண், சுழலும் - வட்டமிடும், எ - று. ஆல் - அசை.

க - து. ஊனுண்ண வந்த பறவைகள் குடல்கள் பின்னிக்கிடக்கின்றனவற்றை வலையென்றெண்ணி ஆகாயத்தில் வட்டமிடும் என்பதாம்.

தசைவேட்கையினும் உயிரின் வேட்கை பெரிதாதலாலும், தசையைவிட்டு நீங்கற்கு மனமெழாமையாலும் குடர் பின்னிக்கிடந்ததை 'வலைவளைந்ததென்று - தசைவேட்டுண்ண வரும் புள்ளினங்கள் வானினிடைச் சுழலும்' என்றார். (கூசா)

சிற்றமிகுங் களியானைத் திறல்கெழுபோர் வயவேந்தர்
காற்றாளக் குடைதுணிந்து களத்தினிடைக் கிடப்பனகளைப்பெருமை யுகைத்தடரு மிருணிறத்த வெரிகுஞ்சிக்
கூற்றுயிர்ப் பலியேற்குங் கொள்கலம்போன் றிருந்தனவே.

இ - ள். சீற்றம் மிகும் - கோபமிகுந்த, களி யானை-செருக்கையுடைய யானைகள்போல், திறல் கெழு - வலிமை மிக்க, போர் - போர்செய்கின்ற, வயவேந்தர்-வெற்றிமிகுந்த வீரர்களுடைய, கால்-காம்பையுடைய, தரளம் குடை - முத்துக்குடைகளானவை, துணிந்து - துண்டுபட்டு, களத்திடை - யுத்தகளத்தின்கண், கிடப்பனகள் - இருப்பனவாகி, ஏற்றெருமை - எருமைப்போத்தை, உகைத்து - செலுத்தி, அடரும் - நெருங்குகின்ற, இருள் நிறத்த-இருளையொத்த நிறத்தையுடைய, எரி குஞ்சி-எரிபோன்ற சிகையையுடைய, கூற்றம் - யமனானவன், உயிர் பலி ஏற்கும் - உயிர்ப்பிச்சை யேற்கின்ற, கொள்கலம் போன்று - பாத்திரத்தை யொத்து, இருந்தன - இருந்தன, எ - று. ஏகாரம் - ஈற்றசை.

க - து. அரசர்களுடைய குடைகள் யமனுயிர்ப் பிச்சை யேற்கும் பாத்திரங்கள்போ லிருந்தன என்பதாம்.

கள் - இங்கே இசை நிறைத்தற்பொருட்டு விகுதிமேல் விகுதியாய் வந்தது. [காம்பு துணிந்துகிடந்த குடையைப் பலியேற்கும் பாத்திரமாகக் குறித்தலால் தற்குறிப்பணி.] (கூ௰)

[இனி இரண்டுபாட்டால் இந்திரனேண்ணுதல் சொல்லப்படுகின்றது.]

## கலிவிருத்தம்.

இன்ன களத்தி னிரிந்தவ ரல்லாற்
றுன்னின ராவி துறத்தலும் வெங்கூற்
றன்னவன் வாளம ராற்றலு நோக்காப்
பொன்னக ரத்திறை புந்தியி னோர்ந்தான்.

இ - ள். இன்ன களத்தில்-இப்படிப்பட்ட யுத்தகளத்தில், இரிந்தவர் அல்லால் - ஓடிப்போனவரல்லாமல், துன்னினர் - எதிர்த்தவர்கள், ஆவி துறத்தலும்-உயிர் விடுதலையும், வெம் கூற்று அன்னவன் - வெவ்விய யமனையொத்த நளனானவன், வாள் அமர் - வாட்போரை, ஆற்றலும்-செய்தலையும், நோக்கா-பார்த்து, பொன் நகரத்து இறை - இந்திரனானவன், புந்தியின்-(தன்)புத்தியில், ஓர்ந்தான்-சிந்தித்தான், எ - று.

க - து. ஓடினவர் பிழைத்தலையும், எதிர்த்தவரிறத்தலையும் நளன் வாளின்வல்லமையையும் இந்திரன் கண்டு ஆலோசித்தான் என்பதாம்.

மன்றன் மலர்த்தொடை மன்னனை யெய்தி
வென்றிகொள் போரை விலக்கில மாயிற்

றுன்று திரைக்கடல் சூழுல கெல்லா
மின்று முடித்திடு மென்ன நினைந்தே.

இ - ள். மன்றல் - வாசனை பொருந்திய, மலர் தொடை - மலர் மாலையையணிந்த, மன்னனை - நளராஜனை, எய்தி - அடைந்து, வென்றி கொள் - வெற்றியைக்கொண்ட, போரை - யுத்தத்தை, விலக்கிலமாயின் - விலக்காமற் போவோமாகில், துன்று-நெருங்கிய, திரை - அலையையுடைய, கடல் சூழ்-கடலாற் சூழப்பட்ட, உலகு எல்லாம் - பூவுலகத்திலுள்ள யாவரையும், இன்று - இன்று, முடித்திடும் என்ன- கொல்லுவா னென்று, நினைந்து - (இந்திரன் முதலிய நால்வரும்) கருதி, எ - று.

க - நு. இந்திரன் முதலிய நால்வரும் நளனிடத்துச்சென்று போரை விலக்காவிடுவோமாகில் உலகத்தை இன்றே கொன்றிடுவா னென்று நினைத்தார்கள் என்பதாம்.

இச்செய்யுளு மேற்செய்யுளுங் குளகமாதலின் இதில் நினைந்தெ ன்னும் வினையெச்சம் மேற்செய்யுளில் மேவியவென்னும் பெயரெச்ச வினை கொண்டது. இந்திரனுனவன் நாம் இப்போரை விலக்காது விட்டனமென்னில் உலகமுழுவதையும் நளன் கொல்லுவனென்று நினைத்தான்; அந்நினைப்பு இரக்கமன்றியும் போரைத் தான் மூட்டினமையாலு முண்டாயிற் றென்க. (கூஎ)

[இதனுல் இந்திரன் முதலிய நால்வருந் தம் முருக்கோளல் சொல்லப்படுகின்றது.]

மழகளி றன்னவன் மாணுரு நீங்கி
விழைவொடு தம்முரு மேவிய விண்ணோ
ரழகுறு காளைய ரவ்வுரு விட்டோர்
கிழவுரு வெய்திய கேண்மைய ரொத்தார்.

இ - ள். மழகளிறு அன்னவன் - இளங்களிற்றை யொத்த நளனது, மாண் - பெருமை பொருந்திய, உரு-வடிவத்தை, நீங்கி-விட்டு நீங்கி, விழைவொடு - விருப்போடு, தம் உரு மேவிய - தங்கள் வடிவைப் பொருந்திய, விண்ணோர் - தேவர்கள், அழகு உறு - அழகின் மிக்க, காளையர் - காளைப்பருவத்தையுடையவர், அ உரு விட்டு- அக்காளை வடிவத்தைவிட்டு, ஓர் கிழ உருவு எய்திய-ஒரு கிழவடிவத்தையடைந்த, கேண்மையர்-தன்மையராதலை, ஒத்தார்-ஒத்தனர், எ -

க - து. இந்திரன் முதலிய நால்வரும் நளன் வடிவத்தைவிட்டு நீங்கித் தங்கள் வடிவாகிய தேவர்கள் நளனழகுக்கு முன்னை வாலிபர் விருத்தராளுற்போ லானுர்கள் என்பதாம்.

நளனுருவிற்கும் இந்திரன் முதலிய நால்வருருவிற்கும் ஒப்புச் சொல்லில் அழகிய காளையர் வடிவிற்கும் கிழவர் வடிவிற்கும் ஒப்புச் சொல்லுதல்போலா மென்பது கருத்து. (கூஅ)

[இனி இரண்டுபாட்டால் நளன் போரை விலக்குதல் சொல்லப்படுகின்றது.]

முன்னுரு மேவிய மொய்கழல் விண்ணோர்
மன்னனை யெய்துபு வாய்மையி னானுந்
துன்னல ரைத்தெறு தோள்வலி யானு
நின்னை நிலத்திடை நேர்பவர் யாரே.

இ - ள். முன் உரு மேவிய-பழைய வடிவினைப்பெற்ற, மொய் - நெருங்கிய, கழல் - வீரக்கழலை யணிந்த, விண்ணோர் - தேவர்கள், மன்னனை எய்துபு - நளராஜனை யடுத்து, வாய்மையினானும் - சத்தியத்தினாலும், துன்னலரை - சத்துருக்களை, தெறு - கொல்லுகின்ற, தோள் வலியானும்-புசபலத்தினாலும், நின்னை-உன்னை, நேர்பவர் - ஒப்பவர், நிலத்திடை-பூமியில், யார் - எவர் (ஒருவருமில்லை) எ - று. ஏகாரம் - ஈற்றசைக்கண் வந்தது.

க - து. தேவர்கள் நளனை உண்மையினாலும் வலிமையினாலும் உனக்கு நிகரானவ ரிவ்வுலகத்து வில்லை யென்றார்கள் என்பதாம்.

யாவரும் புகழ்ச்சியில் வயப்படுதல்போல் மற்றொன்றிலும் வயப்படா ரென்பது தெரிந்து தேவர்கள் நளனைப் பூமியில் வாய்மையிலும் வலிமையிலும் நினக்குச் சமானமானவ ரில்லை யென்றார். [உவமேயமாகிய நளனை உவமானமாகக் கூறி அவனுக்கு மற்றவரசரோடு ஒப்பானமை கூறலால் எதிர்நிலையணி.] (கூகூ)

துன்று களத்தெதிர் துன்னலர் யாரும்
பொன்ற முருக்கிய போர்த்தொழி னீங்கி
வென்றிகொள் வேலவ மின்னனை யாடன்
மன்றன் முடித்தனை வாழிய வென்றார்.

இ - ள். வென்றி கொள் - வெற்றியைக் கொண்ட, வேலவ - வற்படையையுடைய நளனே, துன்று - நெருங்கிய, களத்து எதிர் - த்தகளத்தி லெதிர்த்த, துன்னலர் யாரும் - சத்துருக்களெல்லாம், பொன்ற-இறக்கும்படி, முருக்கிய-கொன்ற, போர்த்தொழில் நீங்கி - போர்த்தொழிலை விட்டு, மின்னனையாள் தன் - மின்னலை யொத்த தமயந்தியினது, மன்றல் - விவாகத்தை, முடித்தனை - செய்துகொண்டவனாகிய, வாழிய என்றார்-(நீ) வாழக்கடவை யென்றார்கள், எ - று.

க - து. தேவர்கள் போரைவிட்டு விவாக முடித்துக்கொண்டு தமயந்தியோடு நீடூழி வாழ்கவென்று நளனை வாழ்த்தினார்கள் என்பதாம்.

போரைவிட்டு விவாக முடித்துக்கொண்டு தமயந்தியுடன் நெடுங்காலமிருப்பாயாக வென்பார் 'வாழிய' என்றனர். (எ0)

[இதனால் இந்திரன் முதலிய நால்வரையும் நளன் வணங்குதல் சொல்லப்படுகின்றது.]

விண்ணவ ரின்னணம் வேண்டினர் கூறப்
புண்ணுறு வெய்ய புலால்கமழ் வைவே
லண்ணல மர்த்தொழி லாற்றில னாகிப்
பண்ணமை தேரி னிழிந்து பணிந்தான்.

இ - ள். விண்ணவர் - தேவர்கள், இன்னணம் - இந்தப்பிரகாரம், வேண்டினர் - வேண்டினவராகி, கூற - சொல்ல, புண் உறு - மாமிசந்தங்கிய, வெய்ய - வெவ்விய, புலால் - புலாலுற்றம், கமழ் - கமழ்கின்ற, வை வேல் - கூரிய வேற்படையையுடைய, அண்ணல் - நளனானவன், அமர் தொழில் - யுத்தத்தை, ஆற்றிலனாகி - செய்யாதவனாகி, பண் அமை - அலங்கரிப்பமைந்த, தேரின் இழிந்து - தேரினின்றுமிறங்கி, பணிந்தான் - (அந்நால்வரையும்) வணங்கினன், எ - று.

க - து. தேவர்களிப்படி வேண்ட நளன் போர்செய்யாதவனாய்த் தேரைவிட்டிறங்கி அவர்களைப் பணிந்தான் என்பதாம்.

வேண்டினர் முற்றெச்சம். போர்த்தொழிலில் முடுகினனாயினும் நளனானவன் தேவர்கள் வேண்டுகோளுக் குடன்பட்டவனாய் அமர்த்தொழிலைவிட்டுத் தனது பொறைதோன்ற அவரைப் பணிந்தனனென்க. (எக)

[இனி ஐந்து பாட்டால் தேவர்கள் வரங்கொடுத்தல் சொல்லப்படுகின்றது.]

கருணையி னெய்திய காளையை நோக்கி
யருமக மெவ்வுழி யாற்றினு மாங்க
ணுருவொடு வந்தவி யுண்குவ மென்னு
மருவரு நல்வரம் வாசவ னீந்தான்.

இ - ள். வாசவன் - இந்திரனானவன், கருணையின் - அருளினால், எய்திய - அடைந்த, காளையை - நளனை, நோக்கி - பார்த்து, அருமகம் - அரிய யாகத்தை, எவ்வுழி - எவ்விடத்தில், ஆற்றினும் - நீ செய்தபோதினும், ஆங்கண் - அவ்விடத்தில், உருவொடு - உருவு

டனே, வந்து - அடைந்து, அவி - அவிர்ப்பாகத்தை, உண்குவம் என்று - யாமுண்போ மென்று, மருவரும்-அடைதற்கரிய, நல்வரம் - நல்லவரத்தை, ஈந்தான் - கொடுத்தனன், எ - று.

க - து. இந்திரன் நளனைப்பார்த்து நீ யாகஞ்செய்தால் யாம் உருவோடு வந்து அவிர்ப்பாக முண்போமென்று வரங்கொடுத்தான் என்பதாம்.

உருவுடனே தேவர்கள் வந்து யாகத்தில் அவிர்ப்பாகங் கொள்வது அருமை யென்பது தோன்ற 'மருவரு நல்வரம்' என்றார். (எஉ)

மிடல்கெழு மேழக மேற்கொளு மேலோ
னுடைதிரை வேலையி னின்னமு தொப்ப
மடிதலில் வெங்கன லின்றியும் வாளா
வடிசி லடுந்தொழில் விஞ்சை யளித்தான்.

இ - ள். மிடல் கெழு - வலிமைபொருந்திய, மேழகம் மேற்கொளும் - ஆட்டுக்கிடாவின் மேலேறும், மேலோன் - அக்கினிதேவனனவன், உடை திரை வேலையின் - உடைகின்ற அலைகளையுடைய கடலிற் பிறந்த, இன் அமுது ஒப்ப - இனிய அமிர்தத்தை யொப்ப, மடிதலில் - கெடாத, வெம் கனல் இன்றியும் - வெவ்விய தீயில்லாமலும், வாளா - சும்மா, அடிசில் - உணவை, அடும் தொழில்-சமைக்குந்தொழிலாகிய, விஞ்சை - வித்தையை, அளித்தான் - வரமாகக் கொடுத்தான், எ - று.

க - து. அக்கினிபகவான் நளனுக்குத் தீயில்லாமற் சமையல் செய்யும் வித்தையைக் கற்பித்தான் என்பதாம்.

அக்கினிதேவன் இவ்வரங்கொடுத்தலால் உலகத்தில் இப்பொழுதும் நளபாகம் போலென்று உவமை சொல்லும்படி விளங்கிற்றென்க. (எஙு)

அல்ல லுழந்தரு ரெய்தினு நெஞ்சி
னல்லற மெய்தவு நண்ணிய நாட்டில்
வெல்படை வேண்டுவ வெய்தவும் வென்றிக்
கொல்சின வெம்பக டூர்தி கொடுத்தான்.

இ - ள். வென்றி - வெற்றியையும், கொல் சினம் - கொல்லாநின்ற கோபத்தையுமுடைய, வெம் பகடூர்தி-வெவ்விய எருமைக்கடா வாகனத்தையுடைய யமனானவன், அல்லல் உழந்து - வருத்தப்பட்டு, அருநர் எய்தினும் - துன்பமடையினும், நெஞ்சில் - மனத்தின்கண், நல் அறம் எய்தவும் - நல்ல தருமமடையவும், நண்ணிய-பொருந்திய,

ஞாட்பில் - யுத்தத்தில், வெல் படை - வெல்லத்தக்க ஆயுதங்கள், வேண்டுவ - வேண்டுவனவற்றை, எய்தவும் - அடையவும், கொடுத்தான் - நளனுக்கு வரங்கொடுத்தான், எ - று.

க - ரு. அல்லற் படுங்காலத்தும் தர்மசிந்தை யுடையவனா யிருக்கும்படியும் சத்துருக்களை வெல்லு மாயுதங்களைப் பெறவும் நளனுக்கு யமன் வரங்கொடுத்தான் என்பதாம்.

காரணம் காரியத்துள்ள தென்பது பிரசித்தப்படும்படி யமன் தருமனென்னும் பெயர்க்கேற்ப நளன் அல்லற்படும்போதும் நல்லறமெய்தவும் கொலைத்தொழிற் கேற்ப யுத்தகளத்தில் வெல்படைக ளெய்தவும் வரமாகக் கொடுத்தன னென்றார். (எச)

தார்புல ராது தயங்கவும் வேண்டி
னார்கலி வற்ற வமைக்கவு மல்லா
னீர றுபாலையி னெஞ்சி னினைப்பின்
வார்புன லெய்தவும் வருண னளித்தான்.

இ - ள். வருணன் - வருணனென்பவன், தார் - மாலைகள், புலராது - வாடாமல், தயங்கவும் - விளங்கவும், வேண்டின்-வேண்டுமானல், ஆர்கலி - சமுத்திரமானது, வற்ற அமைக்கவும் - வற்றும்படி செய்யவும், அல்லால் - அவையன்றியும், நீர் அறு பாலையில் - நீரில்லாத பாலைநிலத்தில், நெஞ்சில் நினைப்பின்-நெஞ்சிலே நினைத்தால், வார் - நெடிய, புனல் எய்தவும் - நீருண்டாகவும், அளித்தான் - நளனுக்கு வரங்கொடுத்தான், எ - று.

க - ரு. வருணராஜன் நளனுக்குக் கடல்வற்றச் செய்யவும், நீரில்லாவிடத்தில் நீருண்டாகச் செய்யவும் வரங்கொடுத்தான் என்பதாம்.

இதனால் மழையில்லாது விடினும் இவன் தேசத்துக்கு நீராற் குறைவில்லை யென்றதாயிற்று. (எரு)

ஆண்டகைக் கின்ன வளித்தரி வைக்கு
மாண்டகு கற்பை வருத்துவ மென்னாத்
தீண்டின ராவி சிதைந்திடு மாறும்
வேண்டுரு வெய்தவும் விண்ணவ ரீந்தார்.

இ - ள். விண்ணவர் - இந்திரன் முதலிய தேவர்கள், ஆண்தகைக்கு - நளனுக்கு, இன்ன அளித்து - இவ்வரங்களைக்கொடுத்து, அரிவைக்கும் - தமயந்திக்கும், மாண்தகு - மாட்சிமை பொருந்திய, கற்பை - கற்பினை, வருத்துவம் என்னா - வருத்துவோமென்று, தீண்

டினர் - தொட்டவர்களுடைய, ஆவி - உயிர், சிதைந்திடுமாறும் - கெடுமாறும், வேண்டுரு எய்தவும்-வேண்டிய வடிவங்களையடைக்கவும், ஈந்தார் வரங்கொடுத்தனர், எ - று.

க - ரு. இந்திரன் முதலிய தேவர்கள் நளனுக்குந் தமயந்திக்கும் வேண்டிய வுருவம் பெறவும், தமயந்தி கற்பழியத் தீண்டினவர் உயிர் நீங்கவும் வரங்கொடுத்தார்கள் என்பதாம்.

அரிவைக்கு மென்பதில் உம்மை எச்சவும்மை யெனக்கொள்க. தாங்கள் பலமுயற்சி செய்தும் சம்மதியாமல் மனிதனாகிய நளன் மேல்வைத்த கருத்தின்படி சாதித்தலால் தேவர்கள் அதனால் மிகவும் மகிழ்வுடையவராய்த் தமயந்தி கற்பை வருத்தவெண்ணின் அவருயிர் மாயும்படி வரந்தந்தன ரென்க. அரிவை - பருவங் குறியாது பெண் ணென்னுந் துணையாய் நின்றது. (எக)

[இதனால் தேவர் மகிழ்வோடுந் தம்பதியடைதல் சொல்லப்படுகின்றது.]

கண்ணகன் ஞால மளித்த கழற்கா
லண்ணலை யேத்தி யருந்ததி மானும்
பெண்ணமு தத்தை வியந்து பெருஞ்சீர்
விண்ணவர் தம்பதி மேவின ரன்றே.

இ - ள். கண் அகல் - இடமகன்ற, ஞாலம்-பூமியை, அளித்த- இரக்ஷித்த, கழல் கால் - வீரக்கழலை யணிந்த காலையுடைய, அண்ணலை - நளனை, ஏத்தி - துதித்து, அருந்ததி மானும்-அருந்ததியை யொத்த, பெண் அமுதத்தை - தமயந்தியை, வியந்து - அதிசயித்து, பெரு சீர் - மிகுந்த சிறப்பையுடைய, விண்ணவர் - தேவர்கள், தம் பதி - தம்முடைய நகரங்களை, மேவினர் - அடைந்தனர், எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - ரு. இந்திரன் முதலிய தேவர்கள் நளனைப் புகழ்ந்தும் தமயந்தியைக்கண் டதிசயித்தும் சுவர்க்கத்திற்குப் போனார்கள் என்பதாம்.

குற்றமில்லாத தன்மேலெதிர்க்க வந்த மற்றை யரசரை விலக்குதலால் 'ஞாலமளித்த அண்ணல்' என்றார். அருந்ததி மானுமென்பது பெரும்பாலும் கற்புக் கெனக்கொள்க. பெண்ணமுதத்தை வியந்தென்பது தமயந்தி நற்குண நற்செய்கையை யென்க. (எஉ)

வேறு.

அங்கண் வானத் தமரரு மாழியிற்
பொங்கு தானை யரசரும் போயபின்

சிங்க வேறனை யான்றிகழ் மாமணி
தங்கு பைம்பொ னிருக்கையிற் சார்ந்தனன்.

இ-ள். அம் கண் - அழகிய விடத்தையுடைய, வானத்து-தெய்வ லோகத்திருந்து வந்த, அமரரும் - தேவரும், ஆழியில் - சமுத்திரம் போல, பொங்கு - மிகுந்த, தானை - சேனையையுடைய, அரசரும் - அரசர்களும், போயபின் - போனபின்பு, திகழ்-பிரகாசிக்கின்ற, மா மணி - மாணிக்க மணிகளிழைத்து, தங்கு - தங்கிய, பைம்பொன் - பசிய பொன்னாற்செய்த, இருக்கையில்-ஒரிடத்தில், சிங்கவேறு அனையான் - சிங்கவேற்றையொத்த நளனானவன், சார்ந்தனன் - சேர்ந்தனன், எ - று.

க - ரு. தேவர்களும் அரசர்களும் போனபின்பு நளன் நவமணி பீடத்திலிருந்தனன் என்பதாம்.

தேவரும் அரசருந் தம்மிடத்திற் சென்ற பின்பு நளனும் தானிருக்கத்தக்க ஓரிருக்கையிற் சார்ந்தன னென்பதாம். (எஅ)

போர்புரிபடலம் முற்றிற்று.

No. 11. மணம்புரிபடலம். (599-வது பக்கம்.)



நளனுக்கும் தமயந்திக்கும் திருமணம்.

# மணம்புரிபடலம்.

[இப்படலத்தால் ஜனமகாராஜன் தமயந்திக்கு விவாகஞ்செய்தது சொல்லப்படுகின்றது.]

## கலிவிருத்தம்.

சாந்த முழ்கு தடமுலைக் கோதையர்
காந்து பைம்பொற் கவரி யிரட்டுற
வாய்ந்த செவ்வி மணவினை மாடத்தின்
வேந்தர் சூழ்வர வீமன்வந் தெய்தினான்.

இ - ள். சாந்தம் - சந்தனக்குழம்பினால், முழ்கு-முழுகப்பெற்ற, தடம் முலை - பருத்தமுலையையுடைய, கோதையர் - மாதர்கள், காந்து - பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசிய பொற்காம்பையுடைய, கவரி - சாமரைகளை, இரட்டுற-வீச, வாய்ந்த-பொருந்திய, செவ்வி - அழகிய, மணவினை - விவாகஞ்செய்யும், மாடத்தின் - உபரிகையில், வேந்தர் - அரசர்களனைவரும், சூழ்வர - சூழ்ந்து வாராநிற்க, வீமன் - வீமராஜன், வந்து எய்தினான் - வந்து சேர்ந்தான், எ - று.

க - து. வீமராஜன் விவாகமண்டபத்துக்கு வந்தான் என்பதாம்.

பார்த்தவர்களுடைய கண்களைக் கவர்ந்து கொள்ளும்படி கைபோயவரால் அணிசெய்த மாடமென்பதற்கு 'வாய்ந்த செவ்வி மணவினை மாடம்' எனப்பட்டது. விவாகஞ் செய்வித்தற்குப் பிரதானமானதையால் முன்னே வீமன் வந்தனனென்றார். (க)

ஆற்று வேள்வி யருந்தவர் சூழ்வரப்
போற்று நான்மறைக் கோதமன் போர்கெழு
வேற்ற டங்கண் விளங்கிழை மன்றலுக்
கேற்ற யாவையுங் கொண்டுட னெய்தினான்.

இ - ள். வேள்வி - யாகங்களை, ஆற்று-செய்கின்ற, அருந்தவர் - முனிவர்கள், சூழ்வர - சூழ்ந்துவர, நான்மறை-நாலுவேதங்களையும், போற்று - போற்றுகின்ற, கோதமன் - கௌதமமுனிவன், போர் கெழு - போரின்மிக்க, வேல் தடம் கண் - வேல்போன்ற விசாலம் பொருந்திய கண்களையுடைய, விளங்கு இழை-தமயந்தியினது, மன்றலுக்கு - விவாகத்துக்கு, ஏற்ற யாவையும்-ஏற்ற திரவியமனைத்தையும், கொண்டு - வருவித்துக்கொண்டு, உடன் - அதனுடனே, எய்தினான் - வந்தான், எ - று.

த - ரு. கௌதமரிஷி விவாகத்திற்கு வேண்டியவைகளைக்கொ ண்டு வந்தார் என்பதாம்.

கௌதமமுனி விவாக விதிப்படிஅக்கிரியைக்கு வேண்டிய மாவிலை சமித்து தருப்பை முதலியவும் வரவழைத்துக்கொண்டு வந்தனனென் பதற்கு, 'மன்றலுக்கேற்ற யாவையுங் கொண்டுட னெய்தினான்' என்றார். விளங்கிழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொ ழித்தொகைக் காரணப்பெயர்; விளங்குகின்ற ஆபரணத்தையுடைய வள் என்பது பொருள். (உ)

வேரியந் தொடை வீமனும் வேந்தருந்
தேரு நான்மறைச் செல்வரு மன்றலுக்
கோரை யெய்திய தென்றுழை யொற்றரா
லார மார்பற் கறிய வுணர்த்தினார்.

இ - ள். வேரியந்தொடை - தேனொழுகு மலர்மாலையை யணிந் த, வீமனும் - வீமராஜனும், வேந்தரும்-அரசர்களும், தேரும் நான் மறை செல்வரும் - நாலுவேதங்களையுமறிந்த பிராமணர்களும், மன் றலுக்கு - விவாகத்திற்கு, ஓரை எய்தியது என்று - முகூர்த்தகாலம் வந்ததென்று, உழை - அருகிலிருந்த, ஒற்றரால் - ஒற்றுவரால், ஆர மார்பற்கு - நளமகாராஜனுக்கு, அறிய-தெரியும்படி, உணர்த்தினார் - தெரிவித்தார்கள், எ-று.

த - ரு. வீமராஜன் முதலானோர் முகூர்த்தலக்கினம் வந்ததெ ன்று வேவுகாரராலே நளனுக் கறிவித்தார்கள் என்பதாம்.

விவாகக் கிரியைக்கு முன்பு நடக்கவேண்டிய சடங்குகளைத் தையு முடிக்கவேண்டி நளமகாராசனைத் தூண்டு நினைப்புடையவர், 'ஓரையெய்திய தென்றுழை யொற்றரால், ஆரமார்பற் கறிய வுணர்த் தினர்' என்றார். (ங)

ஒற்றர் கூற வொளிர்முடி வேந்தனைக்
கற்றை வார்சடைக் காசிப னாதியோர்
சொற்ற நான்மறை நூல்வழித் தூமணிப்
பொற்ற சும்பினிற் பூம்புன லாட்டினார்.

இ - ள். ஒற்றர் கூற - ஒற்றுவர் சொல்ல, (அவ்வளவில்) ஒளிர் முடி - விளங்குகின்ற மகுடத்தையுடைய, வேந்தனை - நளராஜனை, கற்றை-மயிர்த்தொகுதியாகிய, வார் சடை-நெடிய சடையையுடைய, காசிபனாதியோர்-காசிபன்முதலிய முனிவர்கள், சொற்ற நான்மறை நூல்வழி - வேதநூலிற் சொல்லிய வழிப்படி, தூ - பரிசுத்தமாகிய,

மணி - நவமணிகள் பதித்த, பொன் தசும்பினில் - பொற்குடத்திற் கொணர்ந்த, பூ புனல் - பொலிவையுடைய தீர்த்தங்களினால், ஆட்டினார் - ஸ்நாநஞ் செய்வித்தார்கள், எ - று.

க-நு. காசிபர்முதலான முனிவர்கள் கொண்டுவந்த புண்ணிய தீர்த்தத்தினாலே நளனை ஸ்நாநஞ் செய்வித்தார்கள் என்பதாம்.

'பூம்புனல்' எனலால் கங்கையாதிய தீர்த்தமெனக் கொள்க. நூல்வழிப் பூம்புனலாட்டினரெனலால் முப்பத்திரண்டு வகையுள்ள ஓமாலிகையையும் துவர்ப்பத்தையும் விரை ஐந்தையும் பூசி முழுக் காட்டினரென்க. இவைகள் சுயம்வரப்படலத்தில் 'களிமகிழ்வெய்தி' என்னும் நூற்றொன்றும் பாட்டுரையிற் காண்க. (௬)

புனிற்றி ளம்பிறைக் கண்ணியன் பூங்கழன்
மனத்தி னெண்ணி வழிப்பட்டு மாமறை
யனைத்தும் வல்ல வறநெறி யந்தணர்
நினைத்த யாவையு நீரொடு நல்கினான்.

இ - ள். புனிற்று இளம் - மிகுந்த விளமைபொருந்திய, பிறை கண்ணியன் - பாலசந்திரனாகிய மாலையணிந்த பரமசிவனுடைய, பூ கழல் - அழகிய பாதங்களை, மனத்தின் எண்ணி - இதயத்திலே தியானித்து, வழிபட்டு - பூசித்து, மா மறை அனைத்தும் வல்ல - பெரிய வேதமுழுதுந் தெரிந்த, அறம் நெறி - தருமமார்க்கத்தினின்ற, அந்தணர் - பிராமணர்கள், நினைத்த யாவையும் - நினைத்தவையனைத்தையும், நீரொடு - நீருடனே, நல்கினான் - கொடுத்தனன், எ - று.

க - நு. நளன் பிராமணர்கள் நினைத்தயாவையுந் தானமாகக் கொடுத்தான் என்பதாம்.

புனிற்றிளம்பிறைக்கண்ணியன் வழிபடு கடவுளெனக்கொள்க. வழிபடல் - பூசித்தலாம். குறிப்பறிந்தீபவனாதலால் அந்தணர்நினைத்த யாவையு நீரொடு தானஞ் செய்தனன் என்க. பூங்கழல் என்பதற்கு தாமரைமலர்போலுந் திருவடியென்றுரைத்தலுமாம். நீரொடு நல்குதலாவது தாரைவார்த்துக்கொடுத்தல். (௭)

[இதுமுதல் ஆறுபாட்டால் நளனுக்கு அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

அழகு வாய்ப்ப வனைபவ ரண்ணலைத்
தொழுது நல்லருள் பூண்டு சுடர்விரி
மழவு நன்கதிர் மால்வரை சேர்ந்தெனச்
செழும ணிப்பொற் றிகழ்முடி சூட்டினார்.

இ - ள். அழகு வாய்ப்ப - அழகுபொருந்த, வனைபவர் - ஆபரணந்தரிப்பவர்கள், அண்ணலை தொழுது - நளனை வணங்கி, நல் அருள் பூண்டு - (அவனுடைய) கிருபைபெற்று, சுடர் விரி-கிரணம் விரிகின்ற, மழவு நல் கதிர் - இளமையும் அழகுமுள்ள சூரியனானவன், மால்வரை சேர்ந்து என - பெரிய உதயகிரியில் வந்ததுபோல், செழு மணி - செழுமையுள்ள மணிகள்பதித்து, பொன் - பொன்னாற்செய்து, திகழ் - பிரகாசிக்கின்ற, முடி-கிரீடத்தை, சூட்டினார் - தரித்தார்கள், எ - று.

க - து. நளனுக்கு முடிதரித்தார்கள் என்பதாம்.

அணிதலில் வல்லவரென்பதுதோன்ற 'அழகுவாய்ப்ப வனைபவர்' என்றும், நளனருள் பெற்றனென்பதற்கு 'நல்லருள் பூண்டு' என்றும், அரசர்க்குப் பிரதானமாகையால் 'முடிசூட்டி' என்றுஞ் சொல்லினார். மழவுநன்கதிர் சேர்ந்தென எனலால் வரை உதயகிரியைக் குறித்தது. ['கதிர்வரை சேர்ந்தென' எனலால் உவமையணி.] (க

புயங்க ளென்னும் பொலங்கிரி மீதுவான்
றயங்கு சோதிக் கதிர்க டவழ்ந்தெனக்
கயங்கொள் வள்ளைக் கவின்கவர் காதினில்
வயங்கு பைம்பொன் மணிக்குழை சேர்த்தினார்.

இ - ள். புயங்கள் என்னும் - தோள்களென்கின்ற, பொலம் கிரி மீது - மேருமலையின்மேல், வான் - ஆகாயத்தில், தயங்கு - விளங்குகின்ற, சோதி - ஒளியையுடைய, கதிர்கள் - சூரியர்கள், தவழ்ந்து என - தவழ்ந்தனபோல், கயம் கொள் - தடாகங்கள் கொண்ட, வள்ளை - வள்ளையிலையினுடைய, கவின் - அழகை, கவர் - கொண்ட, காதினில் - செவிகளில், வயங்கு - பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசிய பொன்னாற்செய்த, மணி குழை - ரத்நகுண்டலங்களை, சேர்த்தினார் - தரித்தார்கள், எ - று.

க - து. நளன் செவியில் குண்டல மணிந்தார்கள் என்பதாம்.

பொலம் பொன்னாதலால் பொலங்கிரி மேருமலையைக் குறித்தது. கதிர்கள் - சினையாகுபெயர். வள்ளை - வள்ளைத் தண்டெனினுமாம். [நளன் புயங்களென்னும் பொலங்கிரி யென்றது உருவகவணி; கதிர்கள் தவழ்ந்தென மணிக்குழை யென்றது உவமையணி; வள்ளைக் கவின் கவர்காதென்றது காட்சியணி. இம்மூன்றுங் கலந்து வருதலிற் கலவையணி.]

வண்ண மேகலை யார்மனங் கூட்டுணக்
கன்னா கன்றுக வின்செயு மார்பிடை

யண்ணல் மால்வரை தாழு மருவிபோற்
றெண்ணி லாமணி யார்வடஞ் சேர்த்தினர்.

இ - ள். வண்ணம் மேகலையார் - அழகிய மேகலையைத் தரித்த மங்கையர்களுடைய, மனம் - நெஞ்சை, கூட்டு உண - கொள்ளை கொள்ள, கண் அகன்று - இடமகன்று, கவின் செயும்-அழகைச்செய்யும், மார்பிடை-மார்பின் கண்ணே, அண்ணல் - பெரிய, மால்வரை - பெரிய மேருமலையில், தாழும் அருவிபோல் - தாழ்ந்தொழுகு மருவி நீரைப்போல், தெள் - தெளிந்த, நிலா - ஒளியையுடைய, மணி ஆர் வடம் - முத்துவடங்களை, சேர்த்தினார் - தரித்தார்கள், எ - று.

க - து. நளன் மார்பில் முத்துமாலை யணிந்தார்கள் என்பதாம்.

மாதர்க்குத் தழுவுதற்குரிய ஆடவர் மார்பிடத்தில் மிகுந்த விருப்பமென்பது தோன்ற 'வண்ண மேகலையார் மனங்கூட்டுண்ணு மார்பு' எனப்பட்டது. [மார்பிடை வரைதாழு மருவிபோல் வடஞ்சேர்த்தினரெனலால் உவமையணி.] மேகலை மாதரிடை யணியுளொன்று. இது எழுகோவையுள்ளது. மலைகளில் மேருவினும் பெரிதின்மையால் மால்வரை மேருவைக்குறித்தது. நிலா என்ற விசேடணத்தால் மணி முத்தெனப் பொருள்பட்டது. (அ)

பூமலர்ச் செழுங் கற்பகம் புல்லிய
காமர் வல்லியெ னக்கவின் செய்திடத்
தூமணிச் சுடர் தூங்கு பொலந்தொடி
தேமலர்த் தொடைத் திண்புயஞ் சேர்த்தினர்.

இ - ள். பூ மலர் - பொலிவுபொருந்திய மலர்களையுடைய, செழும் - செழுமையுள்ள, கற்பகம் புல்லிய-கற்பகத்தைத்தழுவிய, காமர் வல்லி என-காமர்வல்லி யென்னுங் கொடிபோல், கவின் செய்திட-அழகைச்செய்ய, தூ - பரிசுத்தமாகிய, மணி சுடர் - நவமணியின் கிரணங்கள், தூங்கு - தங்கிய, பொலம் தொடி-பொன்னினாற் செய்யப்பட்ட தோள்வளையை, தே மலர் தொடை - வாசனை பொருந்திய மலர்மாலையை யணிந்த, திண் புயம் - திண்ணிய தோள்களில், சேர்த்தினர் - தரித்தார்கள், எ - று.

க - து. நளன் தோள்களில் வாகுவலயந் தரித்தார்கள் என்பதாம்.

கற்பகம் புல்லிய காமர்வல்லிபோல் பொலந்தொடியைத் திண்புயஞ் சேர்த்தினரெனலால் உவமையணி.] (கூ)

துளங்கு தெண்டிரை சூழ்கடல் வையக
மளந்து கோடற் கருவிலைப் பூந்துகில்

விளங்கு பொன்னங் கிரியினை வெண்முகில்
வளைந்த தென்னம ருங்கினிற் சாத்தினார்.

இ - ள். துளங்கு - அசைகின்ற, தெள் திரை சூழ் கடல்-தெளிந்த அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட, வையகம் - பூமியை, அளந்து கோடற்கு - அளவிட்டுக் கொள்வதற்கு, அரு விலை-அரியவிலையையுடைய, பூ துகில் - அழகிய ஆடையை, விளங்கு - பிரகாசிக்கின்ற, பொன் அம் கிரியினை - மேருமலையை, வெண் முகில் - வெள்ளைமேகமானது, வளைந்தது என்ன - சூழ்ந்ததுபோல், மருங்கினில்-அரையின்கண், சாத்தினார் - தரித்தார்கள், எ - று.

க - து. நளனிடையி லாடை தரித்தார்கள் என்பதாம்.

[பொன்னங் கிரியினை வெண்முகில் வளைந்த தென்ன பூந்துகில் மருங்கினிற் சேர்த்தினாரெனலால் உவமையணி.] மேரு பொன்மலையாதலால் அதனைப் பொன்னங்கிரி யென்றார். (௪௰)

பாந்த ளேந்திய பார்பொது நீக்கிய
வேந்தல் சேவடிப் போதினெ ழில்பெற
வேந்தர் பொன்முடி தேய்த்து விளங்கிய
காந்து பைம்பொற் கனைகழல் வீக்கினார்.

இ - ள். பாந்தள் - ஆதிசேடனால், ஏந்திய-சுமக்கப்பட்ட, பார் - பூமியை, பொது நீக்கிய - யாவருக்கும் பொதுவாதலை நீக்கிய, ஏந்தல் - நளனது, சேவடி போதின் - சிவந்த பாதமலர்களில், எழில் பெற - அழகுபெறும்படி, வேந்தர் - அரசர்களுடைய, பொன் முடி - சுவர்ன கிரீடங்களால், தேய்த்து - தேய்க்கப்பட்டு, விளங்கிய - பிரகாசித்த, காந்து - சொலிக்கின்ற, பைம்பொன் - பசும்பொன்னாற் செய்த, கனை கழல்-ஒலிக்கும் வீரக்கழலை, வீக்கினார்-கட்டினார்கள், எ - று.

க - து. நளன் வலப்பாதத்தில் வீரக்கழ லணிந்தார்களென்பதாம்.

பூமி அரசர்க்கெல்லாம் பொதுவா யிருப்பதை நீக்கித் தனதாக்கினாகையால் 'பார்பொது நீக்கிய வேந்தல்' என்றார். வீரத்தன்மை தோன்றக் 'கனைகழல் வீக்கினார்' எனப்பட்டது. பாந்தள் - பாம்பு. இது ஏந்தியபார் என மேல் வருதலால் ஆதிசேடனுக்காயிற்று. (௧௧)

இன்ன பேரணி யாவு மெழில்செயத்
துன்னி யெங்கு முழவந் துவைதிடப்
பொன்னஞ் சூழிப் புகர்முக வெற்பின்மேன்
மன்னர் மன்னன் மகிழ்ச்சியொ டேகினன்.

இ - ள். இன்ன - இப்படிப்பட்ட, பேர் அணி யாவும் - பெரிய விலையுள்ள ஆபரணங்களனைத்தும், எழில் செய - அழகினைச்செய்ய, எங்கும் - எவ்விடத்தும், துன்னி - நெருங்கி, முழவம் - பேரிகைகள், துவைத்திட - ஒலிசெய்ய, பொன் - பொன்னாற்செய்த, அம் - அழகிய, ஓடை - முகபடாத்தையுடைய, புகர் முகம் - புள்ளிபெற்ற முகத்தையுடைய, வெற்பின்மேல் - மலைபோன்ற யானையின்மேல், மன்னர் மன்னன் - ராஜாதி ராஜனாகிய நளனானவன், மகிழ்ச்சியொடு - மகிழ்ச்சியுடன், ஏகினான் - சென்றான், எ - று.

க - து. நளன் யானையேறிச் சென்றான் என்பதாம்.

அரசன் புறப்படல் யாவர்க்குந் தெரிவித்தல்போல் 'எங்குமுழவந் துவைத்திட' என்றும், சக்கிரவர்த்தியென்பது தோன்ற 'மன்னர் மன்னன்' என்றுஞ் சொல்லினார். (கஎ)

நேமி சூழ்ந்த நெடுநில மன்னவர்
தாம வெண்குடை தாங்கினர் பின்வர
வாம மேகலை மங்கைய ரங்கையிற்
காமர் செம்பொற் கவரி யிரட்டவே.

இ - ள். நேமி சூழ்ந்த - சமுத்திரஞ்சூழ்ந்த, நெடு நில மன்னவர் - நெடிய பூவுலகத்தரசர், தாமம் - மாலையணிந்த, வெண்குடை - வெண்கொற்றக்குடையை, தாங்கினர் - சுமந்தவராகி, பின் வர - பின்னேவரவும், வாமம் - அழகிய, மேகலை - மேகலாபரணத்தையுடைய மங்கையர் - மாதர்கள், அம் கையில் - அழகிய கையினால், காமர் - அழகிய, செம் பொன் - சிவந்த பொற்காம்பையுடைய, கவரி - சாமரைகளை, இரட்ட - வீசிவரவும், எ - று.

க - து. வேந்தர் குடை பிடிக்கவும், மாதர் சாமரை வீசவும் என்பதாம்.

குடைதாங்குதல் அருமையாதலால் அதற்கேற்ப அரசரையும், கவரியிரட்டல் எளிதாதலால் அதற்கேற்ப மங்கையரையுஞ் சொல்லினார். (கஅ)

தண்ணந் தாமரைத் தாக்கணங் கன்னவர்
கண்ணு நெஞ்சு முவந்து களிப்புற
வெண்ணில் வேதிய ராசி யியம்பிட
வண்ண மாமணி மண்டபத் தெய்தினான்.

இ - ள். தண் அம் தாமரை - குளிர்ச்சி பொருந்திய அழகிய தாமரைமலரிலிருக்கின்ற, தாக்கணங்கு அன்னவர் - இலக்குமியை

யொத்த மங்கையர், கண்ணும் நெஞ்சம்-கண்ணுமனமும், மகிழ்ந்து-மகிழ்ச்சியடைந்து, களிப்புஉற-களிப்புமிக, எண்ணில் வேதியர்-அளவற்ற பிராமணர்கள், ஆசி இயம்பிட - ஆசீர்வதிக்க, வண்ணம்-அணி மணி-அழகிய மாணிக்கமணிகள் பதித்த, மண்டபத்து - மண்டபத்தில், எய்தினன் - வந்துசேர்ந்தான், எ - று.

க - து. மாதர்கள் மகிழ மறையவர் வாழ்த்த நளன் விவாகமண்டபத்தில் வந்தான் என்பதாம்.

நினைக்குநெஞ்சு களித்தற்கு நோக்குங்கண் காரணமாதலால் 'கண்ணுநெஞ்சு முவந்து களித்திட' என்றும், மண்டபத்தெய்துஞ் சமயமாதலில் 'எண்ணில் வேதிய ராசி யியம்பிட' என்றுஞ் சொல்லினர். (கஎ)

வேனி லைங்கணை வேள்புறங் காத்திடப்
பான லுண்கட் பனிமதி வாணுதற்
றேன வாங்குழற் றேமொழி யைக்கொடு
மானி னோக்கின் மடந்தைய ரெய்தினர்.

இ - ள். வேனில் - வசந்தகாலத்திற்குரிய, ஐங்கணை வேள் - பஞ்சபாணங்களையுடைய மன்மதனுனவன், புறம் காத்திட-புறங்காத்துவர, பானல் அம் கண் - நீலோற்பலமலர்போன்ற அழகிய கண்களையும், பனி மொழி - குளிர்ச்சிபொருந்திய சொல்லையும், வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையும், தேன் அவாம் - வண்டுகள் விரும்புகின்ற, குழல் - கூந்தலையுமுடைய, தேமொழியை கொடு - தமயந்தியை யழைத்துக்கொண்டு, மானின் நோக்கின்-மான்பார்வையை யொத்த பார்வையையுடைய, மடந்தையர் - மாதர்கள், எய்தினர் - அடைந்தார்கள், எ - று.

க - து. மாதர்கள் தமயந்தியை யழைத்துக்கொண்டு வந்தார்கள் என்பதாம்.

நளனை வெல்லும்படி வந்தவளாதலால் அதுபற்றி 'வேள்புறங் காத்திட' என்றார். தேமொழி - உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக்காரணப்பெயர். மடந்தையர்-பருவங்குறியாது பொதுப்பட மாதரையே குறித்தது.

கள்ளரு மலர் நாற்றியெண் காவத
முள்ள கன்ற வொளிர்மணி மாடத்தில்
பிள்ளை மானிகர் நோக்கியைப் பெய்கழல்
வள்ள லோடு மணத்தவி சேற்றினர்.

இ - ள். கள் அரு - தேனூறுந், மலர் நாற்றி - மலர்மாலைதூக்கி, எண் காவதம் - எண்காதவழிதூரம், உள் அகன்ற - உள்ளேவிரிந்த, ஒளிர் - பிரகாசம்பொருந்திய, மணி மாடத்தில் - மணிகள்பதித்த உபரிகையில், பிள்ளை மான் நிகர் - இளமான் பார்வையையொத்த, நோக்கினை - பார்வையையுடைய தமயந்தியை, மெய் கழல் - வீரக்கழலையணிந்த, வள்ளலொடு - நளனுடன், மணம் தவிசு - கல்யாணமேடையில், ஏற்றினார் - ஏற்றினார்கள், எ - று.

க - து. தமயந்தியை நளனொடு கல்யாணமேடையி லேற்றினார்கள் என்பதாம்.

இடமுழுவதும் அலங்கரித்தமைதோன்ற 'கள்ளாருமலர்நாற்றி யெண்காவதம்' என்றார். நாற்றியென்பதற்கு நாறச்செய்து (மணக்கச்செய்து) எனினுமாம். பிள்ளைமானிகர் என்பதில் மான் முதலாகுபெயர். (கசு)

உதக நல்குநல் லோரை யிஃதென
விதியி னாடிக் கணிதர் விளம்பலும்
பதலை யார்த்தெழப் பாவையை நல்கிய
மதுமலர்த் தொடை மன்னெழுந் தானரோ.

இ - ள். உதகம் நல்கும் - தாரைவார்க்கின்ற, நல் ஓரை - நல்ல முகூர்த்தம், இஃது என - இதுவென்று, விதியின் நாடி - சோதிட விதிப்படி பார்த்து, கணிதர் - சோதிட நூலோர், விளம்பலும் - சொன்னவளவில், பதலை - வாத்தியங்கள், ஆர்த்து எழ - மிகவொலிக்க, பாவையை நல்கிய - தமயந்தியைப்பெற்ற, மது மலர் தொடை - தேனொழுகு மலர்மாலையையணிந்த, மன் - வீமராஜன், எழுந்தான் - எழுந்தனன், எ - று.

க - து. சோதிடர் முகூர்த்தலக்கின மிதுவென்று சொல்ல வீமனெழுந்தான் என்பதாம்.

தாரைவார்க்கின்ற காலமாதலால் 'பதலையார்த்தெழப் பாவையை நல்கிய மன்னெழுந்தான்' என்றார். பாவை-உவமையாகுபெயர். (கஎ)

கமல மீதுசெங் காந்த ளலர்ந்தெனக்
குமர னங்கையிற் கோல்வளை செங்கைவைத்
திமய மாது மிறைவனும் போலவாழ்ந்
தமைதி ரென்ன வரும்புன னல்கினான்.

இ - ள். கமலம் மீது - தாமரைமலரின்மேல், செம் காந்தள் லர்ந்து என - சிவந்த காந்தண்மலர் பூத்ததுபோல், குமரன் அம் கை

யில் - நளனது அழகிய கைமேல், கோல்வளை-தமயந்தியினது, செம்கை வைத்து - சிவந்தகையைவைத்து, இமயமாதும் - பார்வதியும், இறைவனும்போல வாழ்ந்து-பரமசிவனும்போல் வாழ்ந்து, அமைதிர் என்ன - பொருந்தியிருமென்று, அரு புனல் - அரியநீரை, நல்கினன் - வார்த்தான், எ - று.

க - து வீமன் நளன்கையில் தமயந்திகையைவைத்து வாழ்ந்திருங்களென்று தாரைவார்த்தான் என்பதாம்.

[கமலமலரையும் காந்தண்மலரையும் நளன் தமயந்தியென்னும் இருவர் கரங்களுக்கும், இமயமாதையும் இறைவனையும் அவ்விருவர்க்கும் இணைசொல்லுதலால் உவமையணி.] (சஅ)

சாந்த மூழ்கு தடம்புய னாரழற்
கேய்ந்த யாவு மினிது முடித்தபி
னாய்ந்த நான்மறை யின்வழி யாயிழை
காந்தண் மெல்விரல் கைபிடித் தானரோ.

இ - ள். சாந்தம் மூழ்கு - சந்தனக்குழம்பால் மூழ்கப்பெற்ற, தடம் புயன் - பருத்த புயங்களையுடைய நளனெனவன், ஆர் - பொருந்திய, அழற்கு ஏய்ந்த யாவும் - அக்கினிகாரியத்துக்குப் பொருந்திய வினைத்தையும், இனிது முடித்தபின்-இனிமையோடுசெய்து முடித்த பின்பு, ஆய்ந்த - ஆய்ந்திருக்கின்ற, நான்மறையின்வழி - வேதமார்க்கப்படி, ஆயிழை-தமயந்தியினது, காந்தள் மெல்விரல்-காந்தளரும்புபோன்ற மெல்லியவிரல்களை, கை - தன்கையால், பற்றினன்-பிடித்தான், எ - று.

க - து. நளன் தமயந்தி கையைப் பிடித்தான் என்பதாம்.

விவாககோலந்தோன்ற 'சாந்தமூழ்கு தடம்புயன்' என்றும், அரசர்க்குப் பாணிக்கிரகணமே சிறப்பென்பதுதோன்ற 'நான்மறையின் வழியாயிழை காந்தண்மெல்விரல் கைப்பிடித்தான்' என்றும் சொல்லினர். ஆயிழை-வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; ஆராய்ந்தெடுத்த ஆபரணத்தை யணிந்தவள் என்பது பொருள்.

பொங்கு செந்தழல் சூழ்வந்து பூம்பொரி
செங்கை யாரச் சொரிந்து திருமகள்
பங்கயப் பதம் பைம்பொனம் மிவைத்
தங்கண் வானத் தருந்ததி காட்டினன்.

இ - ள். பொங்கு - மிகுந்த, செந்தழல் - அக்கினியை, சூழ்வந்து - வலம்வந்து, பூ பொரி - அழகியபொரியை, செம் கை ஆர-சிவ

ந்தகைநிறைய, சொரிந்து - அத்தியிலிட்டு, திருமகள்-தமயந்தியினது, பங்கயம் பதம் - தாமரைமலர்போன்ற பாதத்தை, பை பொனின் - பசியபொன்னாற்செய்த, அம்மி வைத்து - அம்மியின்மேற் றூக்கிவைத்து, அம் கண் வானத்து - அழகிய இடத்தையுடைய ஆகாயத்திலிருக்கின்ற, அருந்ததி - அருந்ததி நக்ஷத்திரத்தை, காட்டினான் - காண்பித்தான், எ - று.

க - து. அக்கினி வலம்வந்து பொரியிறைத்துத் தமயந்திபாதத்தை யம்மியில்வைத்து அருந்ததியைக் காட்டினான் என்பதாம்.

அக்கினியை வலஞ்செய்து பொரியிறைத்து பாதத்தை அம்மியின்மேல் தூக்கிவைத்து அருந்ததிகாட்டினனென்க. இப்படி செய்தற்கு விதி விவாகபத்ததியிற் காண்க. சூழ்வந்து என்பதற்குப் பகுதி சூழ்வா. திருமகள்-உவமையாகுபெயர். திருமகள் பங்கயப்பதம் பைம்பொனி னம்மிவைத்தங்கண் வானத்தருந்ததி காட்டினது பாதிவ்ரத்யநிஷ்டையின் பொருட்டென்க. (உ0)

ஏனை யுள்ளன யாவு முடித்தபின்
மானி னோக்கியோர் வல்லியி னொல்கிப்போய்த்
தானை யங்கடற் றாதைபொற் றாளினிற்
றேன வாங்குழற் றேமலர் சூட்டினாள்.

இ - ள். ஏனை உள்ளன - மற்றகாரியங்கள், யாவும் - எல்லாம், முடித்தபின் - முடித்தபின்பு, மானின் நோக்கி-மானோக்கம்போலும் நோக்கத்தையுடையவளாகிய தமயந்தியானவள், ஓர் வல்லியின்-ஒரு கொடிபோல், ஒல்கி போய் - அசைந்துபோய், தானை அம் கடல் - சேனைசமுத்திரத்தையுடைய, தாதை - தகப்பனாகிய வீமனது, பொன் தாளினில் - பொற்பாதங்களில், தேன் அவாம் - வண்டுகளால் விரும்பப்படுகின்ற, குழல் - கூந்தலிலுள்ள, தே மலர் - வாசனைபொருந்தியமலரை, சூட்டினாள் - தரித்தாள், எ - று.

க - து. தமயந்தி தன்பிதாவின் காலில் விழுந்தாள் என்பதாம்.

விவாகமுடிவில் தந்தையை வணங்கி மங்கலவாழ்த்துப் பெறுதல் மகளிர்க்கு இயல்பாதலின் அவ்வாறு தமயந்தியும் தன்தாதையாகிய வீமனை வணங்கினாளென்க. 'தேனவாங்குழற் றேமலர் சூட்டினாள்' என்றது கூந்தலானது தந்தையின்பாதத்திற்படும்படி வணங்கினாளென்றபடி. (உக)

சென்னி தாழ்த்து வணங்கிய தேமொழி
மின்னனாளை யுவந்து விதர்ப்பர் கோன்

பொன்னந் தாமரைப் பூவையு மாலும்போன்
மன்னர் கோனொடும் வாழ்கென வாழ்த்தினான்.

இ - ள். சென்னி - தலையை, தாழ்த்து - தாழச்செய்து, வணங்கிய - பணிந்த, தே மொழி - தேன்போன்ற சொல்லையுடைய, மின் அன்னாளை - மின்கொடிபோன்றவளாகிய தமயந்தியை, உவந்து - மகிழ்ந்து, விதர்ப்பர்கோன் - விதர்ப்பதேசத்தார்க்கரசனாகிய வீமனானவன், பொன் அம் தாமரை பூவையும் - இலக்குமியையும், மாலும் போல் - திருமாலையும்போல், மன்னர் கோனொடும் - ராஜாதிராஜனாகிய நளனோடும், வாழ்க என-வாழக்கடவையென்று, வாழ்த்தினான் - வாழ்த்தினான், எ - று.

க - து. வீமன் தமயந்தியை நளனொடு வாழ்கவென்று வாழ்த்தினான் என்பதாம்.

இங்கே காப்பதுகருதி மாலையும், செல்வமிகுதிகருதி திருமகளையும் நளனுக்குந் தமயந்திக்கும் உவமை கூறலாயிற்று. அவ்விருவரையும்போல் நெடுங்காலம் வாழ்கவென வாழ்த்தினனெனினும் அமையும். (உஉ)

முருகு வாய்மடுத் துண்டளி மூசுபூந்
தெரியல் மார்பினன் றேசிகர் தாடொழு
துருகு மன்பி னுவந்து விதர்ப்பர்கோன்
வரைகொண் மார்ப மகிழ்வுறப் புல்லினான்.

இ - ள். முருகு - தேனை, வாய்மடுத்து - உண்டு, அளி - வண்டுகள், மூசு - மொய்க்கப்பெற்ற, பூ தெரியல் மார்பினன் - மலர்மாலையையணிந்த மார்பையுடைய நளனானவன், தேசிகர் - ஆசிரியரது, தாள் தொழுது - பாதத்தைவணங்கி, உருகும் - கரைகின்ற, அன்பின் - பத்தியினால், உவந்து - மகிழ்ந்து, விதர்ப்பர்கோன் - வீமராஜனுடைய, வரை கொள் மார்பம் - மலையின தழகைக்கொண்ட மார்பினை, மகிழ்வு உற-மகிழ்ச்சியடைய, புல்லினான்-தழுவினான், எ-று.

க - து. நளன் குருவைவணங்கி வீமனைத் தழுவினான் என்பதாம்.

தேசிகராதலின் 'தாடொழுது' என்றும், தான் சக்கிரவர்த்தியாதலின் 'விதர்ப்பர்கோன் வரைகொண்மார்ப மகிழ்வுறப் புல்லினான்' என்றுஞ் சொல்லினார். வரை-மலையுருவெனினுமாம். (உ

கோதி னுன்மறைக் கோதம னாதியா
மாத வத்து முனிவரு மன்னருங்

காதல் வேலை கரையழிந் தோங்கிட
வாத ரத்தொடு மாசி யியம்பினார்

இ - ள். கோதில் - குற்றமற்ற, நான்மறை - நாலுவேதங்களை யுடைய, கோதமன்ஆதியாம் - கவுதமமுனிமுதலாகிய, மா தவத்து - பெரியதவத்தையுடைய, முனிவரும் - தபோதனரும், மன்னரும் - அரசரும், காதல் - ஆசையாகிய, வேலை - கடலானது, கரை அழிந்து - கரைகெட்டு, ஓங்கிட - உயர, ஆதரத்தொடும் - அன்புடனே, ஆசி இயம்பினார் - ஆசிர்வதித்தார்கள், எ - று.

க - து. முனிவரும் அரசரும் நளனை வாழ்த்தினார்கள் என்பதாம்.

தவமாதியவற்றிற் றலைமையுடைமைபற்றிக் 'கோதமனாதியா முனிவர்' என்றார். விவாகமுடிவில் ஆசிகூறல் பெரியோர்கடனென் பதாம். முனிவர்-மௌநசீலர். அவராவார் கடவுளை தியானித்துக்கொண் டிருப்பவர். (உ௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னவை நிகழ்ந்த பின்ன ரிறைவனு மணங்க னாளும்
பொன்னரி மாலை நாற்றிப் பூம்புகை கமழ வூட்டிப்
பன்னருஞ் சிறப்பு வாய்ந்து பனியிரு விசும்பு பாரின்
மன்னிய தனைய கோல மணவறை யெய்தி னாரே.

இ - ள். இன்னவை - இத்தன்மையானவை, நிகழ்ந்த பின்னர் - நடந்தபின்பு, இறைவனும் - நளமகாராஜனும், அணங்கு அனாளும் - தெய்வப்பெண் போன்றவளாகிய தமயந்தியும், பொன்னரி மாலை - பொன்னரி மாலைகளை, நாற்றி - தொங்கக்கட்டி, பூ புகை-அழகிய புகையை, கமழ-பரிமளிக்கும்படி, ஊட்டி-ஊட்டுவித்து, பன் அரு - சொல்லுதற்கரிய, சிறப்பு வாய்ந்து-சிறப்புப்பொருந்தி, பனி-குளிர்ச்சிபொருந்திய, இரு - பெரிய, விசும்பு - பொன்னுலகம், பாரில் - பூமியின்கண், மன்னியது அனைய - பொருந்தியிருந்தால் அதையொத்த, கோலம் - அழகிய, மணவறை - படுக்கை யறையை, எய்தினார் - அடைந்தார்கள், எ - று.

க - து. நளனுந் தமயந்தியும் பள்ளியறையிற் சேர்ந்தார்கள் என்பதாம்.

பூவுலகில் அவ்வளவழகுள்ள இடமொன்று மில்லாமையால் 'விசும்புபாரின் மன்னிய தனையகோல மணவறை' என்றார். பொன்னுலகம்-சுவர்க்கலோகம். (உரு)

பாயிருட் பிழம்பு சித்துப் பகற்கதி ருமிழும் வெய்ய
காயெரி மணியிற் செய்த கவின்றிகழ் மஞ்ச மீது
தூயமென் பஞ்சி யன்னத் தூவியூ றினிய செய்யு
மாய்மயிர் முதல மூவைந் தடுக்கிய வமளி சேர்ந்தார்.

இ - ள். பாய் - பாயாநின்ற, இருள் பிழம்பு-இருளினது தொ-கையை, சித்து - போக்கி, பகல் கதிர் - சூரிய கிரணங்களை, உமிழும் - கொப்புளிக்கின்ற, வெய்ய - வெவ்விய, காய் - சுடுகின்ற, எரி - அக்கினிபோன்ற, மணியின் செய்த-மணிகளாற் செய்யப்பெற்ற, கவின் திகழ் - அழகு விளங்குகின்ற, மஞ்சமீது - கட்டிலின்மீது, தூய-சுத்தமாகிய, மெல் - மெல்லிய, பஞ்சி - பஞ்சியினாலும், அன்னம் தூவி - அன்னப் புள்ளினிறகாலும், ஊறு - பரிசம், இனிய - இனியவாக, செய்யும் - செய்கின்ற, ஆய் - ஆயாநின்ற, மயிர் முதல்-மயிர் முதலியவாக, மூவைந்து - மூவைந்தாக, அடுக்கிய - ஒன்றின்மேலொன்றாய்ச் சேர்த்த, அமளி - மெத்தையின்மேல், சேர்ந்தார் - சேர்ந்தார்கள் எ - று.

க - து. பதினைந்து பஞ்சணை யடுக்கிய கட்டிலின்மேற் சேர்ந்தார்கள் என்பதாம்.

பஞ்சியெனப் பொதுப்படக் கூறினமையால் செம்பஞ்சு வெண்பஞ்சு இரண்டுங்கொள்க. "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணமுறு தூவிசய்யையோ டைந்து" என்றார் பிறரும். மூவைந்தென்றமையால் ஐந்துவகை யொன்றாகச் செய்த மூன்றுமெத்தை யெனக் கொள்க. அம்மூன்றுள் ஒன்று போகநுகர்தற்கும், இரண்டு இருவரும் தனித்தனி நித்திரை செய்தற்குமாம்.

போயிறு மருங்கு லென்னப் புணர்முலை சுமக்க லாற்றாச்
சேயிழை பஞ்சி யார்ந்த சிறடிக் கமலப் போதின்
மீயுயர் விசும்பு பூத்த மின்னுருக் கொண்ட தன்ன
வாயிரங் கோடி மாத ரயினிநீர் சுழற்றிப் போனார்.

இ - ள். மருங்குல் - இடையானது, போய் இறும் என்ன-இற்றுப்போய்விடு மென்னும்படி, புணர் முலை - நெருங்கிய முலைகளை, சுமக்கல் ஆற்றா - சுமக்கமாட்டாத, சேயிழை - தமயந்தியினுடைய, பஞ்சி ஆர்ந்த - செம்பஞ்சு நிறைந்த, சிறடி-சிறிய அடிகளாகிய, கமலம் போதின் - தாமரை மலரின்மேல், மீ உயர் - மேலாக வுயர்ந்த, விசும்பு பூத்த - மேகத்திலுண்டாகிய, மின் - மின்னல், உரு கொண்டது அன்ன - பெண்வடிவுகொண்ட தென்னும்படியுள்ள, ஆயிரம் கோடி மாதர் - ஆயிரங்கோடி மங்கையர்கள், அயினி நீர்-சோறிடப்

பட்ட மஞ்சள் நீரை, சுழற்றி - சுழற்றுதல் செய்து, போனார்-போயி னார்கள், எ - று.

க - ரு. ஆயிரங்கோடிப் பெண்க ளாலஞ்சுழற்றிப் போனார்கள் என்பதாம்.

அநேக மாதரென்பதற்கு 'ஆயிரங்கோடி மாதர்' என்றார். ஆலி னிநீரென்பதற்கு முன்பெயு மிதனும். (௩௰)

அருப்புமென் முலைபா ரைஞ்ஞூற் றைம்பதிற் றெண் மர் பைம்பொற், பொருப்புறழ் தோளி னாற்கும் பொருகயற் கண்ணி னாட்கு, முருக்கிளர் மணியிற் செய்த வொளிகிளர் பசும்பொற் றட்டிற், கருப்புரத் திபமேந்திக் கண்ணெச்சில் கழித்திட் டாரே.

இ - ள். அருப்பு - தாமரை யரும்பையொத்த, மென் முலையார் - மெல்லிய முலைகளையுடைய மங்கையர்கள், ஐஞ்ஞூற்று ஐம்பதிற்று எண்மர் - ஐந்நூற்றைம்பத் தெட்டென்னுந் தொகையை யுடையவர்கள், பைம்பொன் - பசிய பொன்மயமாகிய, பொருப்பு உறழ் - மேருமலையை யொத்த, தோளினாற்கும் - புயங்களையுடைய நளனுக்கும், பொரு கயல் கண்ணினாட்கும் - போர்செய்கின்ற கயற்கெண்டையை யொத்த கண்களையுடைய தமயந்திக்கும், உரு கிளர் - உரு விளங்குகின்ற, மணியின் செய்த - நவமணிகளிற் செய்த, ஒளி கிளர் - ஒளிவிளங்குகின்ற, பசும்பொன் தட்டில் - பசிய பொன்னாற் செய்த தட்டினில், கருப்புர தீபம் ஏந்தி - கருப்புரத்தீபத்தை யேந்தி, கண் ணெச்சில் - திருஷ்டி தோஷத்தை, கழித்திட்டார் - போக்கினார்கள், எ - று.

க - ரு. ஐந்நூற் றைம்பத்தெட்டுப் பெண்கள் நளனுக்குந் தமயந்திக்குங் கருப்பூரத் தீபத்தால் திருஷ்டி கழித்தார்கள் என்பதாம்.

அரும்பென்பது எதுகைநோக்கி அருப்பென விகாரமாயிற்று. கண்ணெச்சில் - கண்ணால் வந்த தோஷம். ஐஞ்ஞூற்றைம்பதிற் றெண்மர் என்பதில் ஞகரம் நகரத்துக்குப் போலியாய் வந்தது. (௩௧)

வாசனை கமழுஞ் சுண்ணம் வண்டிமிர் குழலுங்கன் மாலை
யோசனை நாறுஞ் சாந்த மொண்கருப் பூரம் பைங்காய்
தூசறு செப்பி னுய்ந்த கமழ்திரை யமிழ்தி னோடுந்
தூசுலாம் பருமவல்குற் றோகைய ரேந்தி னாரே.

இ - ள். வாசனை - பரிமளமானது, கமழும்-மணக்கின்ற, சுண் ணம் - பொடிகளையும், வண்டு இமிர் - வண்டுகளொலிக்கின்ற, குழல்

கன் மாலை - அழகிய மாலைகளையும், யோசனை - யோசனைதூரம், நாறும் - கமழ்கின்ற, சாந்தம் - சந்தனத்தையும், ஒண் - ஒள்ளிய, கருப்பூரம் - பச்சைக் கருப்பூரத்தையும், பைங்காய்-துவர்க்காயையும், காசு அறு - குற்றமற்ற, செப்பில் - வட்டில்களில், ஆய்ந்த-ஆய்ந்தெடுத்த, கமழ் - பரிமளிக்கின்ற, திரை-பாற்கடலிற்பிறந்த, அமிழ்திளேடும் - அமிர்தத்துடனே, தூசு உலாம் - ஆடைமேலசைகின்ற, பருமம் - பருமமணிந்த, அல்குல் - நிதம்பத்தையுடைய, தோகையர் - மங்கையர்கள், ஏந்தினர் - தாங்கினர், எ - று.

க - து. பெண்கள் வாசனைப்பொடி, மாலை, சந்தனம், கருப்பூரம், பாக்கு, அமிழ்து இவைகளை யேந்தினர்கள் என்பதாம்.

சுண்ணமுதலியவும் போகத்துக்கு வேண்டிய பொருள்களெனக்கொள்க. பருமம்-பதினெண்சரமுள்ளது. இது மாதரிடையணிகளுளொன்று. (உகூ)

பண்ணமை திவவி னல்யாழ் பருமணி யடைப்பை
நோக்கிற், கண்வழுக் குறுசெஞ் சோதிக் கதிர்மணிக் கால்
செய் வட்டம், வெண்ணிறக் கவரி செம்பொற் படியக மினை
ய வெல்லா, மண்ணிய மணிசெய் பைம்பூண் மடந்தையர்
மருங்கு வைத்தார்.

இ - ள். பண் அமை-இசையமைந்த, திவவு-கட்டுக்களையுடைய, நல் யாழ் - நல்லயாழும், பரு மணி - பரியமணிகள் கோத்த, அடைப்பை - தாம்பூலப்பையும், நோக்கில் - பார்த்தால், கண் வழுக்குறு - கண்கள் கூசுகின்ற, செம் சோதி - சிவந்த காந்தியையுடைய, கதிர் மணி - கிரணங்களையுடைய மணிகள் பதித்த, கால்செய்வட்டம்-சாந்தாற்றியும், வெண்ணிறம்-வெள்ளிய நிறத்தையுடைய, கவரி-சாமரையும், செம் பொன் - சிவந்தபொன்னாற்செய்த, படியகம் - தம்பலப்படிக்கமும், இனைய எல்லாம் - ஆகிய விவைமுதலிய வினைத்தையும், மண்ணிய - கழுவிய, மணி செய் - மணிகள் பதித்த, பைம்பூண்-பசிய ஆபரணங்களையுடைய, மடந்தையர் - மாதர்கள், மருங்கு - அருகே, வைத்தார் - வைத்தனர், எ - று.

க - து. மாதர்கள் யாழ், அடைப்பை, ஆலவட்டம், சாமரை, பொற்படிகம், இவற்றைப் பக்கலில் வைத்தார்கள் என்பதாம்.

யாழ்முதலியவும் போகத்திற்கு வேண்டியனவாதலான் மாதர் மருங்குவைத்தன ரென்றார். (௩௦)

பாம்பினைப் படத்தை மானும் பங்கயப் பரும வல்குற்
காம்புறம் பசிய மென்றோ[illegible] காரிகை [illegible]

மேம்படலோ டினிது நோக்கி யின்னுயிர்த் தோழி மார்கள்
பூம்புகை தவழ்ந்தா லன்ன பொருமுக வெழினி வீழ்த்தார்.

இ - ள். பாம்பின் - சர்ப்பத்தினது, படத்தை - படத்தினை, மானும் - ஒத்த, பங்கயம் - தாமரைமலரை யொத்த, பருமம்-பருமத்தை யுடைய, அல்குல் - அல்குலையும், காம்பு உறழ் - மூங்கிலையொத்த, பசிய - பசுமையாகிய, மெல் தோள் - மெல்லிய தோளையுமுடைய, சாரிகை - தமயந்தியினுடைய, விழைவும் - விருப்பத்தையும், நாணும் - நாணத்தையும், எம்பலோடு - அகமலர்ச்சியுடன், இனிது நோக்கி - இனிமையினோடு பார்த்து, இன் உயிர்-இனிய வுயிரையொத்த, தோழிமார்கள் - தோழிகள், பூ புகை-அழகிய புகையானது, தவழ்ந்தால் அன்ன - தவழ்ந்தாலதை யொத்த, பொருமுக எழினி - பொருமுக வெழினி யென்னுந் திரையை, வீழ்த்தார் - விடுத்தார்கள், எ - று.

க - து. தோழிமார்கள் திரையை விடுத்தார்கள் என்பதாம்.

பாம்பினைப் படத்தை யென்றதில் ஐ சாரியையாகக்கொண்டு பாம்பினது படமெனக்கொள்க. அன்றி உருபுமயக்கமெனினு மமையும். பங்கயத்தை மாதரல்குற்கு உவமை சொல்லுதல், "திருமுகக்கமல மிணைவிழிகமலஞ் செய்யவாய்கமல நித்திலந்தாழ், வருமுலை கமலந் துணைக்கரங்கமலம் வலம்புரியுந்தி பொற்கமலம், பெருகிய வல்குன் மணித்தடங் கமலம் பிடிநடைத் தாள்களுங் கமல, முருவவட் கவ்வா ருதலினன்றே யுயர்ந்தது பூவினுட் கமலம்." (தணிகைப்புராணம் - களவுப்படலம்-சஉ) "சரோருகமே திருக் கோயிலுங்கைகளுந் தாளிணையும், உரோருகமுந்திரு நாபியுமல்குலு மோங்கிருள்போற், சிரோருகஞ் சூழ்ந்த வதனமுநாட்டமுஞ் சேயிதழும், ஒரோருக மீரரை மாத்திரையான வுரைமகட்கே" (சரசுவதியந்தாதி-கக) இவற்றாலறிக. பொருமுகவெழினி யென்பது அரங்கத்திலிடு திரையெனக் கொள்க. அது, "வழுவில் கேள்வி நன்னூலுணர்ந்தோ ரெழினிதானே மூன்றென மொழிப" அவைதாம், "ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங், காந்துவா லெழினியுமென மூவகையே" இவை, இராசதானியிலும் அரங்கிலும் கோலமறைத்து வருமிடத்து மிடுவனவாம். இது சிந்தாமணி யுரையிற்காண்க. [உவமையணி.] (௩௧)

வரிமுலை யோடுந் தோன்றி வளர்தொறும் வளர்ந்து வீங்கிப்
பெருகுநாண் சுமக்க லாற்றுப் பெய்மலர்க் கொம்பு போல்வா
டிருமுகஞ் சிறிது கோட்டிக் கயிற்புற மதனிற் றேங்கொள்
விரிமலர்க் கூந்த றாழ மின்னென நடுங்கி நின்றாள்.

(இ - ள். வரி முலையோடும் தோன்றி - சந்தனக்கோலத்தையுடைய முலைகளுண்டானபோ துண்டாகி, வளர்தொறும் - அவைகள் வளருந்தோறும், வளர்ந்து-தாறும் வளர்ந்து, வீங்கி-பருத்து, பெருகு நாண் - பெருகிய நாணை, சுமக்கல் ஆற்ளு - சுமக்கமாட்டாத, பெய் - பெய்கின்ற, மலர் - மலரையுடைய, கொம்பு போல்வாள் - கொம்பை யொத்த தமயந்தியானவள், திருமுகம்- திருமுகத்தை, சிறிதுகோட்டி- கொஞ்சம் வணக்கி, கயிர்ப்புறம் அதனில் - பிடரியின்மேல், தேம் கொள் - வாசனைகொண்ட, விரிமலர் கூந்தல் - விரிகின்ற மலரையணிந்த குழலானது, தாழ-சோர, மின் என - மின்னல்போல், நுடங்கி - துவண்டு, நின்றாள் - நின்றனள், எ - று.

க - நு. தமயந்தி நாணிநின்றாள் என்பதாம்.

ஸ்தனங்களோடு தோன்றி வளர்வதாதலால் 'வரிமுலையோடுந் தோன்றி வளர்தொறும் வளர்ந்து வீங்கிப் பெருகுநாண்' என்றார்.

கூற்றுறழ் தடங்க ணாவி கொள்ளைகொண் டுண்ண வேவி
மாற்றமொன் றுரையா திங்ஙன் மதிமுகங் கோட்டி நின்றீர்
சேற்றிதழ்க் கமலப் போதிற் றிருந்திழை யனையீர் காத
லாற்றுமா றெவன்கொ லாசைக் கடற்படு மளியன் றனே.

இ - ள். கூற்று உறழ் - யமனையொத்த, தடம் கண் - விசாலம் பொருந்திய கண்ணை, ஆவி - என்னுயிரை, கொள்ளை கொண்டு உண்ண - கொள்ளையிட்டருந்த, ஏவி - அனுப்பி, மாற்றம் ஒன்று உரையாது - ஒருபேச்சும் பேசாமல், இங்ஙன் - இவ்விடத்தில், மதி முகம் - சந்திரன் போன்ற முகத்தை, கோட்டி நின்றீர் - வளைத்து நின்றீர், சேறு - சேற்றிலிருக்கின்ற, இதழ் கமலம் போதில்-இதழை யுடைய தாமரைமலரி லிருக்கின்ற, திருந்து இழை அனையீர் - இலக்குமியை யொத்தவரே, காதல்-ஆசையை, ஆற்றுமாறு-சகிக்குமாறு, எவன்கொல் - எப்படி, ஆசை கடல் படும்-ஆசைக்கடலில் மூழ்கிய, அளியன் - எளியேன், எ - று. ஏ - அசை.

க - நு. தமயந்தியே! பேசாது முகங்கோணி நிற்கின்றாய், ஆசைக்கடலில் வீழ்ந்த வெளியேன் விரகஞ் சகிக்கும் வழியாது என்றான் என்பதாம்.

திருந்திழை வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக்காரணப்பெயர். மாதர் வலிந்தணைதலின் மிக்க சுகமென்று கருதி நளன் இவ்வாறு கூறினன்.

வாட்டடங் கருங்கட் கூற்றை மலர்க்கையான் மறைத்தீ ராவ
கோட்டுமண் கொண்டு வீங்குங் குவிமுலைக் களிநல் யானை

யாட்டுசாந் தகலம்போழா தளியனேன் றடந்தோட் கந்திற்
பூட்டிடி லன்றோ முன்னம் புரிந்தது மளிய தாமே.

இ - ள். வாள் - வாள்போன்ற, நடம் - விசாலம்பொருந்திய, கரு கண் கூற்றை - கரியகண்ணாகிய யமனை, மலர் கையால் - மலர்போன்ற கையினால், மறைத்திர் - மூடிக்கொண்டீர்; ஆவி - உயிராகிய, கோட்டு மண் - கரைமண்ணை, கொண்டு-கொண்டு, வீங்கும் - பருத்த; குவி முலை - குவிந்த முலையாகிய, களி நல் யானை-களிப்பையுடைய யானையை, ஆட்டு சாந்து - சந்தனம்பூசிய, அகலம் - மார்பினிடத்தில், போழாது - பிளவாது, அளியேன் - என்னுடைய, நடம் தோள் - பருத்ததோளாகிய, கந்தில்-தறியில், பூட்டிடில் அன்றோ - பூட்டினாலன்றோ, முன்னம் புரிந்ததும் - முன்செய்ததும், அளிய தாம் - அன்பாகும், எ - று.

க - ரு. தமயந்தியே! உன்முலைகளாகிய யானைகளை என்னுடைய தோள்களாகிய கட்டுத்தறிகளில் கட்டினாலல்லவோ அன்பாகும் என்பதாம்.

அந்த யானை கோட்டால் கரைமண் கொள்வதுபோல முலைகளாகிய யானை உயிரைக்கொள்ளு மென்க. ஆவி - தடாகமுமாம். இது நாணிக்கண் புதைத்தலாம். (கச)

சுற்றநல் கூர வாழுந் தோமுறு சிறியர் போல
விற்றிடை மெலியச் செம்மாந் தெழுமுலைப் பாரம் பார்த்துங்
கற்றையங் குழலில் வீழ்ந்து மதுநுகர் களிவண் டீரின்
றற்றது நுமக்கு மேலோ ரளியென வளித்த பேரே.

இ - ள். சுற்றம் - சுற்றத்தார், நல்கூர-வறுமையடைய, வாழும்- வாழ்கின்ற, தோமுறு - குற்றத்தையுடைய, சிறியர்போல - சிறியவர்களைப்போல, இற்று - ஒடிந்து, இடை - இடையானது, மெலிய - வாட, செம்மாந்து - அகமலர்ச்சி யடைந்து, எழு - எழுகின்ற, முலை பாரம் - முலையினுடைய பளுவை, பார்த்தும் - கண்டும், கற்றை குழலில் - மயிர்த்தொகுதியாகிய கூந்தலில், வீழ்ந்து - விழுந்து, மது நுகர் - கள்ளையுண்கின்ற, களி - களிப்பையுடைய, வண்டீர் - வண்டர்களே, நுமக்கு - உமக்கு, மேலோர் - பெரியோர்கள், அளி என- அளியென்று, அளித்தபேர்-கொடுத்த நாமமானது, இன்று - இன்று, அற்றது - அற்றுவிட்டது, எ - று.

க - ரு. வண்டுகளே! தமயந்தி முலைப்பாரத்தைப் பார்த்தும் கூந்தலில் வீழ்ந்து மிதக்கின்றீர்கள்; இடையொடிந்து பழிவரும்; உங்களுக்கு அளியென்னும்பேரின்றே நீங்கிற்று என்பதாம்.

இது வண்டோச்சி மருங்கணைதல் ; அஃதாவது ஒன்றும் அவன் பேசாமையால் வண்டையோட்டி மருங்கு செல்லுதலாம். இடையொடியும்படி யெழுகின்ற முலைப்பாரம் பார்த்தும் கற்றையங் குழலில் வீழ்தலால் நமக்குமேலோர் அளியென அளித்தபேர் இன் றற்றது என்றார். அளியென்பது இங்கே வண்டும் அன்புமாம். (கரு)

பகைக்கடல் சுவற்றும் வைவேற் பகட்டெழின் மார்பி னன்ற, னகத்திடைப் பெருகி யோங்கு மாசையங் கடலை யின்னே, முகைத்தெழு முல்லைமாலை முருகுலாங் கோதை நாணாற், றகைத்திட லரிதென் றெண்ணித் தன்னுளே மகிழ்ச்சி கூர்ந்தாள்.

இ - ள். பகை கடல் - பகையாகிய கடலை, சுவற்றும் - சுவறச் செய்கின்ற, வை வேல் - கூரிய வேலையுடைய, பகட்டு எழின்-பகட்டு கின்ற வழகையுடைய, மார்பினன் தன் - மார்பையுடைய நளனது அகத்திடை - மனத்தின் கண், பெருகி ஓங்கும்-அதிகரித்துயர்கின்ற ஆசை கடலை - ஆசையாகிய சமுத்திரத்தை, இன்னே - இப் பொழுதே, முகைத்து - அரும்பி, எழும் - எழுகின்ற, முல்லைமாலை-முல்லை மாலையினுடைய, முருகு - வாசனையானது, உலாம் - உலாவு கின்ற, கோதை - கூந்தலையுடைய தமயந்தியானவள், நாணால்-தனது நாணினால், தகைத்திடல் - தடுத்திடுவது, அரிது என்று எண்ணி - அருமை யென்று நினைத்து, தன்னுளே - தன்மனத்தினுள்ளே, மகிழ்ச்சி - மகிழ்ச்சியை, கூர்ந்தாள் - மிகுந்தாள், எ - று.

க - து. நளன் காமத்தைத் தன் நாணாற் றடுப்பதரிதென்று தன் னுள்ளே மகிழ்ச்சியடைந்தாள் என்பதாம்.

அரசனது இப்படிப்பட்ட காமத்தை நமது நாணாற் றடுப்பதா தென்று தன்னுள மகிழ்ந்தன ளென்பதாம். (கசு)

கழிமட நாண மச்சம் பயிர்ப்பெனுங் காவல் வேலை
யழிதர வாசை வெள்ள மகத்திடை யடங்கா தாகி
வழிவதே போல வின்பம் வடிவெடுத் தனைய நங்கை
பொழிகதிர் நிலவு நாணப் புன்னகை கோட்டி னாளே.

இ - ள். கழி - மிகுந்த, மடம் - மடமும், நாணம் - நாணமும், அச்சம் - பயமும், பயிர்ப்பு எனும் - அருவருப்புமென்று சொல்லுகி ன்ற, காவல் - காவலையுடைய, வேலை - சமுத்திரமானது, அழிதர - அழியும்படி, ஆசை வெள்ளம் - ஆசையாகிய வெள்ளமானது, அகத் திடை - மனத்தின்கண், அடங்காதாகி - அடங்காததாய், வழிவ

தே போல - வழிகிறதேபோல, இன்பம் - இன்பமானது, வடிவு எடுத்தது அனைய - ஒரு வடிவுகொண்டதைபொத்த, நங்கை-தமயந்தியானவள், பொழிகதிர்-கிரணத்தைப்பொழிகின்ற, நிலவு நாண - சந்திரிகையும் நாணும்படி, புன்நகை - புன்சிரிப்பு, கோட்டினாள் - செய்தாள், எ - று.

க - ரு. தமயந்தியானவள் மடம், நாணம், அச்சம், பயிர்ப்பு என்னு மிந்நாற்குணமுங் கெட நகைத்தாள் என்பதாம்.

மடமாதிய காவலை உறுதிப்படுத்துங்கால மன்றாகையால் அதைத் தாளிக்கினமைதோன்றப் 'புன்னகைசெய்தனள்' என்க. (கஎ)

குருமணி வலய மின்னுங் குங்குமக் குவவுத் திண்டோள்
முருகுலாந் தாம மார்பன் முறுவலின் குறிப்பு நோக்கித்
திருநலங் கனிய நின்ற செழுங்கடை மழைக்கட் பேதை
வருமுலை ஞெமுங்கப் புல்லி மலரணை மேயி னானே.

இ - ள். குரு - நிறம்பொருந்திய, மணி - மணிகள்பதித்த, வலயம் - கேயூரங்கள், மின்னும் - மின்னுகின்ற, குங்குமம் - குங்குமமணிந்த, குவவு - திரட்சிபொருந்திய, திண் - வலிமையையுடைய, தோள் - புயத்தையும், முருகு உலாம்-வாசனைவீசுகின்ற, தாமம்-மாலையணிந்த, மார்பன் மார்பினையுமுடைய நளனானவன், முறுவலின்-புன்சிரிப்பினுடைய, குறிப்பு நோக்கி - குறிப்பினைப் பார்த்து, திரு - சிறப்பினையுடைய, நலம் - சுகமானது, கனியநின்ற - முதிரும்படியிருந்த, செழு கடை - செழிய கடையையுடைய, மழை கண்-குளிர்ச்சிபொருந்திய கண்ணையுடைய, பேதை - தமயந்தியினுடைய, வருமுலை - வளர்கின்ற முலையை, ஞெமுங்க புல்லி - அழுந்தத் தழுவி, மலர் அணை - மலர் மெத்தையில், மேயினன்-பொருந்தினன், எ-று. ஏ - அசை.

க - ரு. நளன் தமயந்தியினது நகைக்குறிப்பை யறிந்து தழுவினான் என்பதாம்.

பேதை - பருவங்குறியாது பெண்பொதுவையே குறித்தது. பாம்பு - பொருளாகுபெயர். உடனே முறுவற்குறிப்புணர்ந்த நளன் 'வருமுலை ஞெமுங்கப்புல்லி மலரணை மேயினன்' எனவே தமயந்தியைத் தழுவிக்கொண்டே யவளோடுங்கூட அணையிற் சேர்ந்தானென (கஅ)

ஆம்பலம் போது மானு மணிதிகழ் பவள வாயிற்
றேம்பொதிந் தமுத மூறுஞ் செந்துவர்த் தேறன் மாந்திப்

பாம்படு மல்கு லாடன் பணைமுலை மணிக்கண் சேப்ப
வெம்பலுற் றினிது புல்லி யிளநலம் பருகி னானே.

இ-ள். ஆம்பலம் போதுமானும் - அல்லிமலரையொத்த, அணி - அழகு, நிகழ் - பிரகாசிக்கின்ற, பவளம் வாயில் - பவளம்போன்ற வாயில், தேம் - வாசனை, பொதிந்து-தங்கி, அமுதம் ஊறும்-அமிர்த மூறுகின்ற, செம் துவர் - செம்பவளம்போன்ற அதரத்தினுடைய, தேறல் - தேனை, மாந்தி - உண்டு, பாம்பு அடும் - பாம்பின் படத்தை யடுகின்ற, அல்குலாள் தன்-அல்குலையுடைய தமயந்தியினது, பணை - பருத்த, முலை - முலைகளினுடைய, மணி கண்-கரிய கண்களானவை, சேப்ப - சிவக்க, எம்பல் உற்று - இன்பத்தை யடைந்து, இனிது புல்லி - இனிதாகத் தழுவி, இளநலம் - இளநலத்தை, பருகினான் - அநுபவித்தான், எ-று.

க-து. தமயந்தியினது இதழைச் சுவைத்துக் கனதனமழுந்த தழுவினான் என்பதாம்.

ஆம்பல் இவ்விடத்துச் செவ்வல்லிமலரைக் குறித்தது. செந்துவர் என்பதில் துவர் உவமையாகுபெயர். இளநலம் பருகுதல் இங்கே அல்குற் பானமும் அதரபானமுமாம். அன்றியும் இளமைப்பருவத்திற்குரிய காமசுகத்தில் ஆந்தரப்புணர்ச்சியெனினுமமையும். (௫௧)

கத்திகைக் கருமென் கூந்தல் கயிற்புறத் தவிழ்ந்து வீழ
முத்தரிச் சிலம்பு பைம்பொற் கிண்கிணி முரன்று பாடத்
தத்தரி நெடுங்கண் சேப்பத் தடமுலை தாங்க லாற்றா
தெய்த்துநுண் மருங்கு றேம்ப வேந்தலோ டாடி னாளே.

இ-ள். கத்திகை - மலர்மாலையை யணிந்த, கரு மெல் கூந்தல் - கரிய மெல்லிய கூந்தலானது, கயிற்புறத்து-பிடரியினிடத்து, அவிழ்ந்து வீழ - அவிழ்ந்து வீழவும், முத்து - முத்துக்களாகிய, அரி - பரலையுடைய, சிலம்பு - சிலம்புகளும், பைம்பொன்-பசிய பொன்னாற் செய்த, கிண்கிணி - சதங்கைகளும், முரன்று - ஒலித்து, பாட-பாடவும், தத்து - நெருங்குகின்ற, அரி-செவ்வரிபரந்த, நெடு கண்-நெடிய கண்களானவை, சேப்ப - சிவக்கவும், தடம் முலை - பருத்தமுலைகளை, தாங்கல் ஆற்றாது - சுமக்கமாட்டாது, எய்த்து-இளைத்து, நுண் மருங்குல் - நுண்ணிடையானது, தேம்ப - வருந்த, ஏந்தலோடு - நளனோடு, ஆடினாள் - புணர்ந்தாள், எ-று.

க-து. தமயந்தி கூந்தலவிழப் பாதசரஞ் சத்திக்கக் கண்கள் சிவக்க இடை துவள நளனோடு சேர்ந்தாள் என்பதாம்.

ஒருதலைக் காமமாய் முடியாது தானும் அவ்வாறு நளனுடனாடினளென்றார். [இது உபரிசுரதம் என்றுந் தலைவிப் புணர்ச்சியின் றன்மை கூறப்படுதலால் தன்மை நவிற்சியணி.] (௪0)

களிக்கயல் பொருது நீண்டு கதுப்பினை யளக்கும் வேற்கட்
டுளிப்புயன் மின்னி னன்னாட் டொண்டைவா யமுத மாந்தித்
தளிர்த்தெழு முவகை பொங்கத் தண்ணறுஞ் சாந்த மார்ப
னளப்பருங் களிகொள் காமக் கடலகத் தழுந்தி னானே.

இ - ள். களி - களிப்பையுடைய, கயல் - கயற்மீனைப்போன்ற, பொருது - போர்செய்து, நீண்டு - நெடிதாகி, கதுப்பினை அளக்கும் - கூந்தலினை யளக்காநின்ற, வேல் கண் - வேல்போன்ற கண்களையுடைய, துளி - துளியையுடைய, புயல் - மேகத்திற் றோன்றிய, மின்னின் அன்னாள் - மின்னலையொத்த தமயந்தியினது, தொண்டை வாய் - கொய்வைக்கனியொத்த வாயிலுண்டாகிய, அமுதம் மாந்தி - அமிர்தத்தையுண்டு, தளிர்த்து - துளிர்த்து, எழும் - எழுகின்ற, உவகை - மகிழ்ச்சியானது, பொங்க - மிக, தண் - குளிர்ச்சிபொருந்திய, நறு - நல்ல, சாந்தம் மார்பன் - சந்தனத்தையணிந்த மார்பினையுடைய நளனவன், அளப்ப அரும் - அளத்தற்கரிய, களி கொள் - களிப்பைக் கொண்ட, காமம் கடலகத்து - காம சமுத்திரத்தில், அழுந்தினான் - மூழ்கினான், எ - று.

க - து. நளன் விரகவெள்ளத்தி லழுந்தினான் என்பதாம்.

காமக்கடலகத் தழுந்தல் என்றது புணர்ச்சி முடிவில் அவசத்தினால் முலையிடைத்துயிறலை யென்க. தொண்டை-முதலாகுபெயர். வாய் - அதரம். (௪௧)

அலங்கலங் குன்ற மன்னான் மணிவரை யகல மூழ்கி,
நலங்கெழு கலவைச் சாந்து நானமு மழிந்த லோடு, மிலங்
கொளி வயிரப் பைம்பூ ணிளமுலை வடுக்கண் டேங்கிப், பொ
லங்கொடி நாணி மீண்டும் பொய்த்துயில் கூர்ந்தா ளன்றே.

இ - ள். அலங்கல் - மாலையணிந்த, அம் - அழகிய, குன்றம் அன்னான் - மலையையொத்த நளமகாராஜனது, மணி-அழகிய, வரை- மலைபோன்ற, அகலம் மூழ்கி - மார்பினிடத்திலே மூழ்கி, நலம் கெழு - நன்மைபொருந்திய, கலவை சாந்தும் - கூட்டுவர்க்கஞ் சேர்ந்த சந்தனக்குழம்பும், நானமும் - கஸ்தூரியும், அழிதலோடும் - அழிந்தவளவில், இலங்கு ஒளி-மிகுந்த வொளியையுடைய, வயிரம் பைம் பூண் - வச்சிராபரணத்தையுடைய, இள முலை-இளமைபொருந்திய

ஸ்தனத்தினிடத்திலே, வடு கண்டு ஏங்கி - வடுவைக்கண் டிரங்கி, பொலம் கொடி - பொற்கொடிபோன்ற தமயந்தியானவள், நாணினேடும் - நாணத்துடனே, பொய் துயில் கூர்ந்தாள் - பொய் நித்திரையைச் செய்தாள், எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. தமயந்தி தன்னுடைய சனதனங்களிலே நள னகக்குறி கண்டு வெட்கங்கொண்டு பொய்ந்நித்திரை செய்தாள் என்பதாம்.

முலையின்மேல் கணவன் செய்த வடுவாதலால் தோழிகள் கண்டால் என்சொல்வார்களோ வென வெண்ணி 'வடுக்கண்டேங்கி' என்றார். வடு - நகக்குறி. பொலங்கொடி - மூன்றும் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்.()

புலவியிற் றுயின்று டீண்டின் முனிந்திடும் பூவை யென்று, மலரணைப் புறத்துத் தானுந் துயிறல்போற் கிடப்ப வாய்ந்த, கலவியின் வேட்கை தூண்டக் கனவினில் வெருவி னாள்போன், முலைமுக டழுந்த வேந்தன் முழவுத் தோள் புல்லி னாளே.

இ - ள். புலவியின் - பிணக்கினால், துயின்றாள்-நித்திரைசெய்தாள், தீண்டின் - தொட்டால், முனிந்திடும் - கோபஞ்செய்வாள், பூவை என்று - தமயந்தியென்று, மலரணை புறத்து - மலரணையினிடத்தில், தானும் துயிறல்போல் - தானும் நித்திரைசெய்தல்போல், கிடப்ப - இருக்க, வாய்ந்த - பொருந்திய, கலவியின் - புணர்ச்சியினுடைய, வேட்கை - ஆசையானது, தூண்ட - தூண்டுதல்செய்ய, கனவினில் - கனவினிடத்திலே, வெருவினாள் போல் - பயந்தவள் போல, முலை முகடு - முலையினுச்சி, அழுந்த - அழுந்தும்படி, வேந்தன் - நளமகாராஜனுடைய, முழவு தோள் - மத்தளம்போன்ற தோளை, புல்லினாள் - தழுவினாள், எ - று.

க - து. தமயந்தி கனவிற் பயந்தாள்போல நளன் புயங்களிலே கனதனங்க ளழுந்தப் புணர்ந்தாள் என்பதாம்.

பூவை - உவமையாகுபெயர். மாதர் தமக்கு வேட்கை மிகுந்திடினும் புணர்ச்சியில் முந்துவதில்லையென்பது தோன்றக் 'கனவினில் வெருவினாள்போல்' என்றார். (௪௩)

புல்லலு மகிழ்ச்சி கூரப் புணர்முலை குழைய மோந்து
மெல்லித ழமுத மாந்தி மேகலை நெகிழ்த்த லோடு
நல்லெழில் கனிந்த கோதை நகையுளத் தடக்க லாற்றாள்
முல்லைமென் முகையு நாண வரும்பிள முறுவல் பூத்தாள்.

இ - ள். புல்லலும் - தழுவிக்கொண்டவளவில், மகிழ்ச்சி - சந்தோஷமானது, கூர - அதிகரிக்க, புணர் - நெருங்கிய, முலை - ஸ்தனங்கள், குழைய மோந்து - குழையும்படி யுச்சியின்மோந்து, மெல் - மிருதுவாகிய, இதழ் - அதரத்தினுடைய, அமுதம் மாந்தி - அமிர்தத்தையுண்டு, மேகலை - மேகலாபரணத்தை, நெகிழ்த்தலோடும் - அவிழ்த்தவளவில், நல் - நல்ல, எழில் - அழகானது, கனிந்த - முதிர்ந்த, கோதை - தமயந்தியானவள், நகை - மகிழ்ச்சியை, உளத்து - மனத்தின்கண், அடக்கலாற்றாள் - சகிக்காதவளாய், முல்லை - முல்லையினுடைய, மெல் - மிருதுவாகிய, முகையும் - அரும்புகளும், நாண - நாணும்படி, அரும்பு - உண்டாகாநின்ற, இள - இளமையாகிய, முறுவல் பூத்தாள் - தந்தங்கள்தோன்ற நகைத்தாள், எ - று.

க - து. தமயந்தி புணர்ந்தவளவில் நளன் கனதனங்களை மோந்து அசரபானம்பண்ணி மேகலாபரணத்தை யவிழ்த்தவளவில் நகைத்தாள் என்பதாம்.

தான் கனவில் பயந்தவள்போல் தழுவியது நளன் உள்ளபடியென்று நினைத்தனனென்று நகை யுளத்தடக்க லாற்றாளாய் முறுவல் பூத்தாளென்க. ஆற்றாள்-முற்றெச்சம். (சஈ)

புருவவிற் கோலி யுள்ளம் போழ்ந்துகட் கணைக ளோட
வுருவத்தா ருடைய வொற்றை வலம்புரி யொலிப்ப விம்மி
வரிமுலைக் களிநல் யானை மருமம்பாய்ந் துழக்க மன்றல்
விரிமலர்க் கோதை காம வெஞ்சமர் விளைத்திட் டாளே.

இ - ள். புருவம் - புருவமாகிய, வில் - தனுசை, கோலி - வளைத்து, உள்ளம் - மனத்தை, போழ்ந்து - பிளந்து, கண்-கண்களாகிய, கணைகள் - பாணங்கள், ஓட - ஓடவும், உருவம்-வடிவம்பொருந்திய, தார் உடைய - மாலையையுடைய, ஒற்றை வலம்புரி-ஒற்றைச்சங்கமாகிய மிடறு, ஒலிப்ப - சத்திக்கவும், விம்மி - பூரித்து, வரி - சந்தனக்கோலம் வரைந்த, முலை - ஸ்தனங்களாகிய, களி-களிப்பையுடைய, நல் - நல்ல, யானை - யானையானது, மருமம் பாய்ந்து - மார்பினிடத்திற் பாய்ந்து, உழக்க - கலக்கவும், மன்றல் - வாசனையை, விரி - விரியச்செய்கின்ற, மலர் - மலராற்றொடுத்த, கோதை - மாலையையணிந்த தமயந்தியானவள், காமம் - காமமாகிய, வெம் சமம் - வெவ்விய யுத்தத்தை, விளைத்திட்டாள் - செய்தாள், எ - று. ஏ-அசை.

க - து. தமயந்தி புருவவில்லை வளைத்துக் கண்ணென்னும் அம்பையெய்து கண்டமாகிய வலம்புரிச்சங்குசத்திக்க முலைகளாகிய யானைகள் நளன்மார்பிற் பாய்ந்து கலக்கக் காமப்போர் செய்தாள் என்பதாம்.

தமயந்தியும் புருவவில் முதலிய சாதனங்களைக்கொண்டு நளனோடு காமப்போர் விளைத்தனளென்க. (சரு)

திருநுதற் பொடித்த வேர்விற் றேங்கமழ் திலகந் தேயப்
புரிமுறுக் கவிழ்ந்து தாழ்ந்த பொலங்குழை திருவில் வீச
மருமலர்க் கூந்தல் சோர வசமழிந் துருகி வேந்த
னெரிமணி யாரமார்பி னின்றுயில் பொருந்தி னாளே.

இ - ள். திரு - அழகிய, நுதல் - நெற்றியின்கண், பொடித்த - உண்டாகிய, வேர்வின் - வேர்வையினாலே, தேம் - வாசனை, கமழ் - வீசுகின்ற, திலகம் - சிந்தூரப்பொட்டு, தேய - அழியவும், புரி - புரிந்த, முறுக்கு - முறுக்குகள், அவிழ்ந்து - நீங்கி, தாழ்ந்த - தொங்கிய காதினிடத்து, பொலம் - பொன்னினாற்செய்த, குழை - குண்டலங்கள், திரு - அழகிய, வில் - பிரகாசத்தை, வீச - வீசவும், மரு மலர் - வாசனைபொருந்திய மலர்களையணிந்த, கூந்தல் - அளகபாரமானது, சோர - சரியவும், வசமழிந்து - பரவசப்பட்டு, உருகி - மனமுருகி, வேந்தன் - நளமகாராஜனுடைய, எரி - பிரகாசிக்கின்ற, மணி - மணிகள்பதித்த, ஆரம் மார்பின் - பதக்கமணிந்தமார்பினிடத்தில், இன் துயில் - இனிதாகிய நித்திரையை, பொருந்தினாள் - கொண்டனள், எ - று. ஏ - அசை.

க - ரு தமயந்தி நெற்றிவேர்வையாற் றிலதமழியவும், குண்டலம் பிரகாசிக்கவும், கூந்தலவிழவும், மெய்சோர்ந்து மனமுருகி நளன் மார்பி னித்திரை செய்தாள் என்பதாம்.

பொடித்தல் - அரும்புதல் என்றுமாம். இங்ஙனம் காமப்போர் விளைத்த தமயந்தி பரவசப்பட்டு நளன்மார்பில் நித்திரைசெய்தா ளென்க. (சசு)

கலவியின் மயக்கந் தீர்ந்த கனிபடு கிளவி யாட
னலர்முலை யாகந் தைவந் தணிவட மணிந்து வாங்குஞ்
சிலைநுதற் றிலகந் தீட்டித் தேங்கமழ் கூந்தல் கைசெய்
திலைமலர்க் கோதை சூட்டி யிழைபல திருத்தி னானே.

இ - ள். கலவியின் - புணர்ச்சியிற் றோன்றிய, மயக்கம்-மயக்கமானது, தீர்ந்த - நீங்கிய, கனிபடு - பழம்போற்சுவை பொருந்திய, கிளவியாள் தன் - சொற்களையுடைய தமயந்தியினது, அலர் - பரந்த, முலை - ஸ்தனங்களையுடைய, ஆகம் - மார்பை, தைவந்து - தடவி, அணி - அழகிய, வடம் - மணிவடங்களை, அணிந்து - தரித்து, வாங்கும் - வளைக்கின்ற, சிலை - விற்போன்ற, நுதல்-நெற்றியினிடத்து, திலகம் தீட்டி - சிந்தூரப்பொட்டிட்டு, தேம் கமழ் - வாசனைவீச

கின்ற, கூந்தல் - கூந்தலை, கை செய்து - ஒழுங்குசெய்து, இலை-மரு முதலியபிலைகளோடு, மலர் கோதை - மலர்மாலையை, சூட்டி - தரித்து, இழை பல - பலவாபரணங்களை, திருத்தினன் - திருந்தச் செய்தான், எ - று.

க - து. நளன் தமயந்தியைத் தடவிக்கொடுத்து மணிமுடிந் சூட்டித் திலதமிட்டுக் கூந்தலைமுடித்து ஆபரணஞ்சூட்டினன் என்பதாம்.

தைவந்து என்பதற்குப் பகுதி தைவா. கணவர் மாதர்க்குக் கலவியி லிவ்வாறு கூந்தன் முதலியவை திருத்த லியற்கையாதல் காண்க. (சஎ)

தெளியுமின் னமிழ்த மன்ன தேம்படு கிளவி யாட
னொளிகிளர் முகத்து லாய வோடரித் தடங்கண் போலக்
களியிளஞ் சுரும்பு காணீர் கண்டன வுளவோ சொல்லீர்
முளரிநாண் மலரிற் பூத்த முழுநெறிக் குவளைப் போதே.

இ - ள். தெளியும் - தெளிந்த, இன் - இனிதாகிய, அமிழ்தம் அன்ன - அமிர்தம்போன்ற, தேம்படு - மதுரம்பொருந்திய, கிளவியாள்தன்-சொற்களையுடைய தமயந்தியினது, ஒளி - காந்தியானது, கிளர் - விளங்குகின்ற, முகத்து உலாய-முகத்தினிடத்துலாவுகின்ற, ஓடு - காதளவுமோடாநின்ற, அரி - செவ்வரிபரந்த, தடம் - விசாலம் பொருந்திய, கண் போல - கண்கள்போல, களி - களிப்பையுடைய, இள - இளமையாகிய, சுரும்புகாள் - வண்டுகளே, நீர் - நீங்கள், கண்டன - பார்த்தவை, உளவோ - உண்டோ, சொல்லீர் - சொல்லுங்கள், முளரி - தாமரையாகிய, நாள் - அன்றலர்ந்த, மலரில்-மலரின்மேல், பூத்த - உண்டாகிய, முழு நெறி-முழுநெறிப்பையுடைய, குவளை போது - நீலோற்பலமலர்களை, எ - று.

க - து. நளன், வண்டுகளே! தமயந்திகண்போலத் தாமரையிற் பூத்த நீலோற்பலத்தை நீங்கள் கண்டதுண்டோ சொல்லுங்களென்றான் என்பதாம்.

இது பெருநயப்புரைத்த லென்னுந் துறை. வண்டுகளைப் பார்த்துத் தலைவன் வினவியது. (சஅ)

தாமரைப் பொகுட்டின் மேய தாக்கணங் கனையாய் நெஞ்சு
மேமுற வரினு நின்னை யிம்மையிற் பிரியே னென்ன
வாமமே கலையினளு மறுமையிற் பிரிவை யென்றுக்
காமரு குவளை போலுங் கண்பனி யுகுப்ப நின்றாள்.

இ - ள். தாமரை பொகுட்டில்-தாமரைக் கொட்டையின்மேல், மேய - பொருந்திய, தாக்கு அணங்கு அனையாய் - இலக்குமியை யொத்தவளே, நெஞ்சம் - மனமானது, ஏமம் - வருத்தம், உறவி..றும் - பொருந்தவந்தாலும், நின்னை - உன்னை, இம்மையில் - இப்பிறப்பில், பிரியேன் என்ன - பிரியமாட்டேனென்றுசொல்ல, வாமம் - அழகிய, மேகலையினளும் - மேகலையையணிந்த தமயந்தியும், மறுமையில் - வருபிறப்பில், பிரிவை என்று - நீபிரிவையேயென்று, காமரு - அழகிய, குவளைபோலும் - நீலோற்பலமலர்போன்ற, கண் - கண்களினின்றும், பனி உகுப்ப - நீர்துளிக்க, நின்றாள் - வருந்திநின்றாள், எ - று.

க - து. நளனிப்பிறப்பிற் பிரியேனென்றுசொல்ல, தமயந்தி வருபிறப்பிற் பிரிவையென் றழுதாள் என்பதாம்.

காமரு என்பதில் உகரம் சாரியை. இவளெந்தச்சனனத்திலு. பிரியாம லிருத்தல்வேண்டுமென்னு நினைப்புடையவளாதலா லிவ்வாறு கூறினாள். (கூக

பெய்தொடி கலுழ்வ தென்கொல் பிழைத்திலே னருளா யென்னி, லுய்குவன் கொல்லோ வின்னே யுள்ளுயிர் துறப்ப லென்று, வெய்துயிர்த் தனிச்சப் போதின் மிதிப்பினும் பனித்து வாடுந், தெய்வமென் கமலப் போது சென்னிமேற் சூடி னானே.

இ - ள். பெய்தொடி - தமயந்தியே, கலுழ்வது - நீ கலங்குவது, என்கொல் - என்னகாரணம்; பிழைத்திலேன் - நானொருகுற்றமுஞ் செய்திலேன்; அருளாய் என்னில் - கிருபைசெய்யாவிட்டால், உய்குவன் கொல்லோ - பிழைப்பேனோ; இன்னே - இப்பொழுதே, உள் உயிர் - உள்ளே யிருக்கின்றவுயிரை, துறப்பல் என்று - விடுவேனென்று, வெய்து உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, அனிச்சப்போதில் - அனிச்சப்பூவின்மேல், மிதிப்பினும் - நடந்தாலும், பனித்து - கொப்புளித்து, வாடும் - வாடாநின்ற, தெய்வம் - தெய்வத்தன்மைபொருந்திய, மெல் - மிருதுவாகிய, கமலம் போது - (பாதமாகிய) தாமரைப்பூவை, சென்னிமேல் - சிரத்தின்மீது, சூடினன் - தரித்துக்கொண்டான், எ - று.

க - து. நளன், தமயந்தியே! நீ யழுவதென்ன? நான் ஒருகுற்றமுஞ் செய்யவில்லையே, கிருபைசெய்யாவிடி லுயிரைவிடுவே னென்று அவள் அடியை முடியில் வைத்துக்கொண்டான் என்பதாம்.

அனிச்சப்பூ - ஓர்மெல்லிய மலர் விசேடம். யாவரும் வணக்கத்தில் வசப்படுவதுபோல் மற்றென்றில் வசப்படாரென்பது பற்றி ளனிவ்வாறுசெய்தா னென்க. (௫0)

குழுமிய பறவை யாவுங் கூட்டுணப் பொதுவி னல்கும்
பழுமர மனைய திண்டோட் பகட்டெழிற் றாம மார்ப
வுழுவலன் போடு நின்னை யொருமையிற் புணர்வ தன்றி
யெழுமையுந் தொடரு மாதர் சீறடி யிறைஞ்சு கென்றா.

இ - ள். குழுமிய - கூடிய, பறவை யாவும் - பறவைக்கூட்டங்களனைத்தும், கூட்டு உண - கொள்ளைகொள்ள, பொதுவின் நல்கும் - பொதுவாகத்தரும், பழுமரம் அனைய - ஆலமரத்தையொத்த, திண் தோள் - வலிமைபொருந்திய தோளையும், பகட்டு எழில் - பகட்டுகின்ற அழகையுடைய, தாமம் - மாலையணிந்த, மார்ப - மார்பினையுமுடைய நளமகாராஜனே, உழுவல் அன்போடு - இடையறாதவன்புடனே, நின்னை-உன்னை, ஒருமையில்-இப்பிறப்பில், புணர்வது அன்றி-கூடுவதல்லாமல், எழுமையும் - எழுபிறப்பிலும், தொடரும் - தொடர்ந்துவருகின்ற, மாதர்-மங்கையருடைய, சிறு அடி - சிறிய பாதத்தில், இறைஞ்சுக என்றா - வணங்குவாயென்றுசொல்லி, எ - று.

க - து. தமயந்தியானவள், மாலையணிந்த மார்பா, அன்புடனே உம்மை இப்பிறப்பிற் புணர்வதல்லாம லெழுபிறப்பிலும் புணரு மாதர்களினடியை வணங்கென்று சொல்லினாள் என்பதாம்.

யாவருக்கும் உபகாரஞ் செய்வோ னென்பது தோன்ற 'பழுமரய திண்டோள்' என்றார். (௫க)

கிளிபொரு கிளவி யாற்பொற் கிண்கிணி சிலம்போ டார்ப்பத், தளிநறாப் பிலிற்று மென்பூந் தடம்புயத் துதைத்த லோடுங், களிசெயப் பொடித்த ரோமங் கண்டகத் துறுத்தி னந்தோ,வளியசீ றடிக ணோமென் றல்லலுற் றழுங்கி னானே.

இ - ள். கிளிபொரு - கிளிமொழியையொத்த, கிளவியாள்-வசனத்தையுடைய தமயந்தியானவள், பொன் - பொன்னினாற்செய்த, கிண்கிணி - சிறுசதங்கைகள், சிலம்போடு - சிலம்புடனே, ஆர்ப்ப - சத்திக்க, தளி - துளிதுளியாக, நறா - தேனை, பிலிற்றும் - துளிக்கின்ற, மெல் - மிருதுவாகிய, பூ - புட்பமாலையணிந்த, தடம் - விசாலம்பொருந்திய, புயத்து-புசத்தினிடத்தில், உதைத்தலோடும்-உதைத்தமாத்திரத்தில், களி செய - மகிழ்ச்சியைச்செய்ய, பொடித்த - புளகித்த, ரோமம் - மயிர்கள், கண்டகத்து - முட்கள்போல், உறுத்

நின் - உறுத்துமாகில், அந்தோ - ஐயோ, அளிய - மிருதுவாகிய, சிறு அடிகள் - சிறியபாதங்கள், நோம் என்று - வருந்துமேயென்று, அல்லல் உற்று - துன்பமுற்று, அழுங்கினன் - வருந்தினன், எ-று.

க - து. நளன்தோள்களிற் காலாலுதைத்தவளவில் அவளது சிற்றடி நோமென்று துன்புற்றான் என்பதாம்.

அக்குற்றத்தைத் தமயந்தி பொறுத்தமைதோன்ற 'தடம்புயத் துதைத்து' என்றும், அதிலும் அவளுக்கோ ராச்சரியமான அருமை தோன்ற 'அளியசிறடிகணோமென் றல்லலுற்றழுங்கினன்' என்றுஞ் சொல்லினர். இந்தப்பாட்டும் முற்பாட்டுங் குளகம். (ருஉ)

உடைதிரைப் பரவை ஞாலத் துயர்ந்தவர் தொழும்பு
பூண்ட, வடியவ ரிழைத்த தீமை யருளொடும் பொறுப்ப தல்
லால், கொடியவர் போலச் சீறி யாருயிர் குறைப்பர் கொல்
லோ, மடலவிழ் கமலப் போதில் வாள்கிடந் தனைய கண்ணாய்.

இ - ள். உடை - கரையையுடைக்கின்ற திரை - அலைகளையு டைய, பரவை - சமுத்திரஞ் சூழ்ந்த, ஞாலத்து - பூமியினிடத்தில், உயர்ந்தவர் - பெரியோர்கள், தொழும்பு பூண்ட - தொண்டுபட்ட, அடியவர் - வேலைக்காரர்கள், இழைத்த - செய்த, தீமை-குற்றத்தை, அருளொடும் - கிருபையுடனே, பொறுப்பது அல்லால் - பொறுத்துக் கொள்வதேயல்லாமல், கொடியவர் போல - தீயவர்போல, சீறி-கோ பித்து, ஆர் உயிர்-பொருந்தியசீவனை, குறைப்பர் கொல்லோ - சேதி ப்பார்களோ, மடல் அவிழ் - இதழ்கள் விரிந்த, கமலம் போதில் - தாமரைமலரில், வாள் கிடந்து அனைய - இரண்டுவாள்க ளிருந்ததை யொத்த, கண்ணாய் - கண்களையுடைய தமயந்தியே, எ - று.

க - து. தமயந்தியே! பெரியோர் அடியவர்செய்த குற்றத்தைப் பொறுப்பதல்லாம லுயிர்ச்சேதம் செய்வாரோ என்பதாம்.

கலவிவேளையில் மாதர்க்கிதஞ்செய்வதே முக்கியம், மற்றவேளை யில் ஒருவர்க் கொருவர் செய்யு மரியாதை அங்ஙனம் வேண்டுவ தன் றாதலால், நளன் 'அடியவ ரிழைத்த தீமை யருளொடும் பொறுப்பத ல்லாற், கொடியவர் போலச் சீறி யாருயிர் குறைப்பர் கொல்லோ' என்றான். (ருங)

அள்ளிலை மணிப்பூண் கோதை யருளெனப் பணித லோடுங்
கள்ளுலா நறிய கூந்தல் கலவியி னுரைத்த யாவுங்
கிள்ளைசண் மிழற்று மாறு கேட்டிள நிலவு காலு
மூள்ளொளி றிலங்கச் செவ்வி முகிழ்நகை கோட்டி னாளே.

இ - ள். அள் - நெருங்கிய, இலை - அரசிலைபோன்ற, மணி பூண் - ரத்தாபரணமணிந்த, கோதை - தமயந்தியே, அருள் என - கிருபைசெய்யென்று, பணிதலோடும் - வணங்கின மாத்திரத்தில், கள் - தேனானது, உலாம் - பெருகுகின்ற, நறிய கூந்தல் - வாசனை பொருந்திய கூந்தலையுடைய தமயந்தியானவள், கலவியில் - புணர்ச்சியில், உரைத்த யாவும் - சொல்லியதெல்லாம், கிள்ளைகள் - கிளிப்பிள்ளைகள், மிழற்றுமாறு - சொல்லும்விதத்தை, கேட்டு - காதிற்கேட்டு, இளநிலவு - இளஞ்சந்திரிகையை, காலும் - கக்குகின்ற, முள் - முருந்துபோன்ற, எயிறு - தந்தங்கள், இலங்க - பிரகாசிக்க, செவ்வி - அழகு, முகிழ் - அரும்புகின்ற, நகை - புன்சிரிப்பை, கோட்டினாள் - செய்தாள், எ - று.

க - து. நளன், தமயந்தியே! கிருபைசெய்யென வணங்கினவுடனே, தமயந்தி புணர்ச்சியிற் சொன்னசொற்களைக் கிளிகள் சொல்லக்கேட்டு நகைத்தாள் என்பதாம்.

தாமிருவருங் கலவியிற்பேசினவற்றைக் கிளிப்பிள்ளைகள் வெளிப்படுத்தலால் தமயந்தி அங்ஙனம் நாணி நகைத்தனளென்க. (கூ)

இன்னமிழ் துயிர்த்த செவ்வி யிளநிலா வுருவு வாய்ந்த
நன்னலங் கனிந்த கோதை நகைமுக வாயில் பெற்றுப்
பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலைக் கோடு புல்லிக்
கன்னவி றோளான் காமக் கடலகத் தழுந்தி னானே.

இ - ள். இன் அமிழ்து - இனியவமிர்தத்தை, உயிர்த்த - ஈன்ற, செவ்வி - அழகுபொருந்திய, இள நிலா - இளமைபொருந்திய நிலவையொத்த, உருவு வாய்ந்த - வடிவம்பொருந்திய, நல் நலம் - நல்ல நலமானது, கனிந்த - முதிர்ந்த, கோதை - தமயந்தியினது, நகை முகம் - புன்சிரிப்பையுடைய முகமாகிய, வாயில் பெற்று - தூதுபெற்று, பொன் அவிர் - பொன்னைப்போலும் பிரகாசிக்கின்ற, சுணங்கு - தேமலானது, பூத்த - உண்டாகிய, புணர் - நெருங்கிய, முலை - ஸ்தனமாகிய, கோடு - கொம்பினை, புல்லி - தழுவி, கல் - மலைபோலும், நவில் - சொல்லாநின்ற, தோளான் - தோளையுடைய நளமகாராஜன், காமம் கடலகத்து - காமமாகிய சமுத்திரத்தினிடத்தில், அழுந்தினான் - முழுகினான், எ - று.

க - து நளன் தமயந்தியைப் புணர்ந்து காமக்கடலிலே மூழ்கினான் என்பதாம்.

தமயந்தியினுடைய நகைமுகத்தை நளன் தன்வேண்டுகோளுக்கு வாயிலாகப்பெற்றுக் காமக்கடலகத் தழுந்தினனெனக்கூட்டுக. ()

எறிதிரை சுருட்டு முந்நீ ரினியதெள் ளமிழ்தி னோடும்
பொறையுயிர்த் துலகில் வந்த பொலன்கொடி யனைய நங்கை
கறைகெழு குருதி வைவேற் கண்வலைப் பட்டு வெம்போர்த்
திறல்கெழு சிங்க வேறு சிமிழ்ப்புண்டு கிடந்த தன்றே.

இ - ள். எறி - வீசாநின்ற, திரை - அலைகளை, சுருட்டும் - மடக்குகின்ற, முந்நீர் - கடலானது, இனிய - இனிதாகிய, தெள் - தெளிந்த, அமிழ்தினோடும் - அமிர்தத்தினோடும், பொறை உயிர்த்து - பெறப்பெற்று, உலகில்வந்த-உலகத்திற்றோன்றிய, பொலன் கொடி அனைய - பொற்கொடியையொத்த, நங்கை - தமயந்தியினது, கறை கெழு - உதிரந்தோய்ந்த, குருதி வை வேல்-சிவந்த கூரியவேல்போன்ற, கண் வலை பட்டு - கண்ணாகிய வலையிலகப்பட்டு, வெம் போர்-வெவ்வியயுத்தத்தில், திறல் கெழு - வலிமைமிக்க, சிங்க ஏறு - நளனாகிய ஆண்சிங்கமானது, சிமிழ்ப்புண்டு - கட்டுப்பட்டு, கிடந்தது இருந்தது, எ - று. அன்று, ஏ-அசை.

க - து. தமயந்தி கண்களாகிய வலைகளில் நளனாகிய சிங்கம் கட்டுப்பட்டிருந்தது என்பதாம்.

திறல்கெழுசிங்கவேறு சிமிழ்ப்புண்டு கிடந்ததென்றதுபோல, "வேட்டுவன் புட்சிமிழ்த்தற்று" என்றார் பிறரும். (௫௬)

மல்லலந் தோளி னானு மழைமதர் நெடுங்க ணாளும்
புல்லுவிட் டொழியி னாவி போன்றிடு மென்ன வெண்ணி
யல்லுநண் பகலும் விள்ளா தணிநலம் பருகி யாங்குச்
செல்வுழி நிகழ்ந்த வெல்லாஞ் செப்புவான் றொடங்கு கின்றேன்.

இ - ள். மல்லல் - வலிபொருந்திய, அம் - அழகிய, தோளினானும் - தோளையுடையநளனும், மழை - குளிர்ச்சிபொருந்திய, மதர் - களிப்பையுடைய, நெடு கண்ணாளும் - நெடிய கண்களையுடைய தமயந்தியும், புல்லுவிட்டு - ஒருவர்க்கொருவர் தழுவுதலைவிட்டு, ஒழியின் - நீங்கின், ஆவி - உயிரானது, போன்றிடும் என்ன - நீங்குமென்று, எண்ணி - நினைத்து, அல்லும் - இராப்பொழுதிலும், நண்பகலும் - பகற்பொழுதிலும், விள்ளாது - நீங்காமல், அணி - அழகினது, நலம் பருகி - நலத்தையுண்டு, ஆங்கு - அவ்விடத்தில், செல்வுழி-செல்லுமிடத்தில், நிகழ்ந்த எல்லாம்-நடந்தனவனைத்தும், செப்புவான்-சொல்ல, தொடங்குகின்றேன் - ஆரம்பிக்கின்றேன், எ - று.

க - து. நளனுந் தமயந்தியு மநுபவித்தவிடத்து நடந்தவை யெல்லாஞ் சொல்லத் தொடங்குகின்றேன் என்பதாம். (௫௭)

திருத்துயி லார மார்பன் சேயரிக் கண்ணி யோடு,
மருத்தியி னுவந்து பைம்பொ னணிநகர்க் கேக வெண்ணி,
விருப்பொடு விதர்ப்பர் கோனுக் குணர்த்தலும் விதர்ப்பன்
காதற், புரிக்குழன் மடந்தை யோடும் வதுவைமண் டபத்
திற் புக்கான்.

இ - ள். திரு துயில்-இலக்குமி தங்குகின்ற, ஆரம் மார்பன்-பதக்கத்தையணிந்த மார்பினையுடைய நளமகாராசன், சேயரி கண்ணியோடும் - தமயந்தியோடும், அருத்தியின் - ஆசையினால், உவந்து - மகிழ்ந்து, பை பொன் - பசியபொன்மயமாகிய, அணி நகர்க்கு - அழகிய மாவிந்த நகர்க்கு, ஏக எண்ணி - போகும்படி நினைத்து, விருப்பொடு - ஆசையுடன், விதர்ப்பர்கோனுக்கு - விதர்ப்பதேசத்தார்க்கரசனாகிய வீமராஜனுக்கு, உணர்த்தலும் - அறிவித்தலும், விதர்ப்பன் - வீமராஜனானவன், காதல் - ஆசையையுடைய, புரி குழல்-கட்டுப்பட்ட கூந்தலையுடைய, மடந்தையோடும் - துணைவியுடன், வதுவை மண்டபத்தில் - விவாகமண்டபத்தில், புக்கான்-புகுந்தான், எ - று.

க - து. நளன் தமயந்தியுடனே தன்னூர்க்குப்போக வெண்ணி வீமனுக் கறிவிக்க, வீமன் தன்மனைவியுடன் கலியாண மண்டபத்துக்கு வந்தான் என்பதாம். (ருஅ)

பொழிகதிர் மணியிற் செய்த புதவுடைக் கடிகொள் வாயில்
குழைமுகம் பொருத வேற்கட் கோதையர் விரைவி னோடி
விழைவொடும் விதர்ப்பர் கோமான் போந்தமை விளம்ப லோ[டும்]
மழவிடை யனையான் போந்து மாமனைத் தழுவி னானே.

இ - ள். பொழி கதிர் - கதிர்களை வீசுகின்ற, மணியின் செய்த - ரத்நங்களாற்செய்த, புதவுடை - கதவையுடைய, கடி கொள் - காவலைக்கொண்ட, வாயில் - வாசற்படியில், குழை முகம் - காதின்முகத்தை, பொருத - மோதிய, வேல் கண் - வேல்போன்ற கண்களையுடைய, கோதையர் - மாதர்கள், விரைவின் ஓடி - விரைந்துபோய், விழைவொடும் - விருப்பத்தோடும், விதர்ப்பர் கோமான்-வீமராஜன், போந்தமை - வந்ததன்மையை, விளம்பலோடும் - சொன்னவளவில், மழவிடை அனையான் - இளவேற்றைபொத்த நளமகாராஜன், போந்து - வந்து, மாமனை - மாமனாரை, தழுவினான் - தழுவிக்கொண்டான், எ - று.

க - து. வீமன் வந்ததைப் பெண்கள் சொல்ல நளன் வீமனைத் தழுவினான் என்பதாம்.

மழைபுறழ் தடக்கை வேந்தன் மனைப்பெருங் கிழமை பூண்ட, தொழுதகு கற்பி னாளைச் சுடர்மணிக் கொம்பி னொல்கி, யெழில்குவிந் தனைய நங்கை யிறைஞ்சலு மெடுத்து மோந்து, விழைவொடு குறங்கில் வைத்து மெய்யுறத் தழுவிக் கொண்டாள்.

இ - ள். மழை உறழ் - மேகத்தை யொத்த, தடம் கை-விசாலம் பொருந்திய கையையுடைய, வேந்தன் - வீமனுடைய, மனை - வீட்டிற்கு, பெரு கிழமை பூண்ட - பெரிய வுரிமையைக்கொண்ட, தொழுதகு - வணங்கத்தக்க, கற்பினாளை - கற்பையுடைய தாருகாசனியை, சுடர் - காந்தியையுடைய, மணி கொம்பின் - ரத்நக்கொம்புபோல், ஒல்கி - வளைந்து, எழில் குவிந்து அனைய - அழகெல்லா மொன்றாய்க் குவிந்ததை யொத்த, நங்கை - தமயந்தியானவள், இறைஞ்சலும் - வணங்கலும், எடுத்து - எடுத்து, மோந்து - மோந்து, விழைவொடு - ஆசையோடு, குறங்கில் வைத்து-துடையின்மேல் வைத்துக்கொண்டு, மெய் உற - மெய்யிலே பொருந்த, தழுவினாள்-தழுவிக்கொண்டாள், எ - று.

க - து. தமயந்தி தன் தாயை வணங்கினவுடன் தாயாகிய தாருகாசனி மகளையெடுத்து முத்தமிட்டுத் தொடையில் வைத்துத் தழுவிக்கொண்டாள் என்பதாம். (சுO)

அன்னைதா டொழுது பின்ன ரலத்தகக் குழம்பு தோய்ந்த பொன்னிதழ்க் கமலஞ் சேப்பப் புணர்முலை தாங்க லாகா [து] மின்னுறழ் மருங்கு தேம்ப மெல்லென வொதுங்கிப் போந்து தன்னுடைத் தாதை பைம்பொற் றாளிணை வணங்கி னாளே.

இ - ள். அன்னை - தாயினது, தாள் தொழுது-பாதத்தை வணங்கி, பின்னர் - பின்பு, அலத்தகம் குழம்பு தோய்ந்த - செம்பஞ்சுக் குழம்பு படிந்த, பொன் - பொன்னை யொத்த, இதழ் - இதழ்களையுடைய, கமலம் - பாததாமரைகள், சேப்ப - சிவக்கவும், புணர் - நெருங்கிய, முலை - ஸ்தனங்களை, தாங்கலாகா - தாங்கமாட்டாத, மின் உறழ் - மின்னலையொத்த, மருங்கு - இடையானது, தேம்ப-வருந்த, மெல்லென - மிருதுவாக, ஒதுங்கி - நடந்து, போந்து - வந்து, தன்னுடை - தன்னுடைய, தாதை-தந்தையாகிய வீமராசனுடைய, பை - பசிய, பொன் - பொன்னையொத்த, தாளிணை - உபயபாதங்களை, வணங்கினள் - இறைஞ்சினாள், எ - று.

க - து. தமயந்தி தன் பிதாவாகிய வீமனை வணங்கினாள் என்பதாம்.

பொன்னிதழ்க் கமலம்-உவமையாகு பெயர். (சுக)

வணங்கிநுண் மருங்கு நோவ வல்லியி னொல்கி நின்ற
சுணங்கிள முலையஞ் சாயற் சுடர்த்தொடி தனையும் வேந்தர்
ணங்கமழ் குருதி வைவே னளனையு நோக்கி நேரா
ருணங்கிய முன்றில் வேந்த னுவகையங் கடலு ளாழ்ந்தான்.

இ - ள். வணங்கி - தொழுது, நுண் - நுட்பமாகிய, மருங்கு - இடையானது, நோவ - வருந்த, வல்லியின் - கொடிபோல, ஒல்கி - அசைந்து, நின்ற - எதிர்நின்ற, சுணங்கு - தேமல்பூத்த, இள - இளமையாகிய, முலை - ஸ்தனத்தையும், அம் - அழகிய, சாயல்-தோற்றத்தையுமுடைய, சுடர் தொடி தனையும் - தமயந்தியையும், வேந்தர் - சத்துருக்களாகிய அரசர்களது, நிணம் - மாமிசம், கமழ்-நாறுகின்ற, குருதி - உதிரந்தோய்ந்த, வை வேல் - கூரிய வேலையுடைய, நளனையும் - நளமகாராசனையும், நோக்கி-பார்த்து, நேரார்-பகைவர், உணங்கிய - வாடியிருக்கின்ற, முன்றில் - முற்றத்தையுடைய, வேந்தன் - வீமராசன், உவகை அம் கடலுள்-சந்தோஷமாகிய கடலினிடத்தில், ஆழ்ந்தான் - முழுகினான், எ - று.

க - ரு. வீமராசன் மகளையு மருமகனையும் பார்த்து மகிழ்ந்தான் என்பதாம்.

வல்லியின் என்பதில் இன் ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. சுடர்த்தொடி-இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். (சு உ)

பண்ணமை கலின மான்றே ராயிர மிரட்டி பாய்மா
வண்ணலங் களிநல் யானை யாயிரத் தறுபத் தொன்பான்
கண்ணகன் விசும்பு பூத்த கற்பகத் தருவி னோடு
மண்ணிழிந் தனைய பேரு ரைம்பதும் வழங்கி னானே.

இ - ள். பண் அமை - சேணமமைந்த, கலினம் - கடிவாளத்தையுடைய, மான் - குதிரைகட்டிய, தேர் ஆயிரம் - ஆயிரந்தேர்களும், இரட்டி பாய்மா - இரண்டாயிரங் குதிரைகளும், அண்ணல் - பெருமையினையும், அம் - அழகினையும், களி - செருக்கினையுமுடைய, நல்-நல்ல, யானை ஆயிரத்து அறுபத்து ஒன்பான் - ஆயிரத்தறுபத்தொன்பது யானைகளும், கண்ணகன் - இடமகன்ற, விசும்பு - தெய்வலோகம், பூத்த - மலர்ந்த, கற்பகம் தருவினோடும் - கற்பக விருட்சங்களுடனே, மண் - பூமியினிடத்து, இழிந்து அனைய - வந்ததையொத்த, பேர் ஊர் ஐம்பது - ஐம்பது பெரிய கிராமங்களையும், வழங்கினான் - கொடுத்தான், எ - று. ஏ - அசை.

க - ரு. வீமராஜன் மகளுக்குத் தேர் ௧000, குதிரை ௨000, யானை ௧0௬௬, ஊர் ௫0 கொடுத்தான் என்பதாம்.

மா னகரச் சாரியைபெற்று மான் என்றாயிற்று. (௬௩)

பொருதிரைப் புணரி யீன்ற பொலன்கொடி யனைய செவ்வி
யரிவைய ரிருபத் தையா யிரவர்நல் லரங்கி லாடும்
வருமுலைப் பவளச் செவ்வாய் வனிதைய ரெழுநூற் றெண்ம
ரிருபது கோடி செம்பொ னினிதினில் வழங்கி னானே.

இ - ள். பொரு-மோதுகின்ற, திரை-அலைகளையுடைய, புணரி-திருப்பாற்கடலானது, ஈன்ற - பெற்ற, பொலன் கொடி - இலக்குமியை, அனைய - ஒத்த, செவ்வி - அழகையுடைய, அரிவையர் இருபத்து ஐயாயிரவர்-இருபத்தையாயிரந் தோழிகளையும், நல்-நல்ல, அரங்கில் - சபையில், ஆடும் - ஆடாநின்ற, வரு - வளர்ந்துவருகின்ற, முலை - ஸ்தனங்களையும், பவளம் - பவளத்தையொத்த, செவ்வாய் - சிவந்தவாயினையுமுடைய, வனிதையர் எழுநூற்று எண்மர்-எழுநூற்றெட்டு நாட்டியப்பெண்களையும், இருபதுகோடி செம்பொன் - இருபதுகோடி செம்பொன்னையும், இனிதினில் - இன்பமாக, வழங்கினான் - கொடுத்தான், எ - று.

க - து. வீமராஜன், தோழிகள் ௨௫000, நாட்டியப்பெண்கள் ௭0௮, பொன் ௨0 கோடியுங் கொடுத்தான் என்பதாம்.

புணரி-கடல்; அது ஈன்ற பொலன்கொடி எனமேல்வருதலால் பாற்கடலுக்காயிற்று. அரிவையர் என்பது பெண்கள் என்னுந்துணையாய் நின்றது, பருவங் குறித்ததன்று. இனிதினில் என்றது அன்போடு என்றபடி. (௬௪)

பொழிகதிர் மணிசெய் கட்டில் புனைமலர்ப் பாயல் பைம்பொ
னிழைபயில் வண்ணப் பேழை யினியசாந் தாற்றி யோடு
நிழறவழ் மணிக்கண் ணாடி நித்தில முகடு வேய்ந்த
வொழுகொளிக் கவரி யின்ன வுலப்பில நல்கி னானே.

இ - ள். பொழி கதிர் - கிரணங்களைப்பொழிகின்ற, மணி செய் - ரத்நங்களாற்செய்த, கட்டில் - கட்டிலும், புனைமலர் பாயல் - அலங்கரிக்கப்பட்ட புட்பசயனமும், பை பொன்-பசியபொன்னாற்செய்த, இழை பயில் - ஆபரணங்கள் வைக்கின்ற, வண்ணம் பேழை-அழகிய பெட்டிகளும், இனிய - இனிமையையுடைய, சாந்தாற்றியோடு-கால் செய்வட்டத்துடன், நிழல் தவழ் - ஒளிதவழ்கின்ற, மணி கண்ணாடி -

ரத்நத்தால் விளிம்புசெய்த கண்ணாடிகளும், கித்திலம்-முத்துக்களால். முகடு வேய்ந்த - முகடுசெய்யப்பட்ட, ஒழுகு ஒளி - மிகுந்த வொளியையுடைய, கவரி - சாமரைகளும், இன்ன - இன்னும் இவைபோன்றனவாகிய, உலப்பில - அளவற்ற பொருள்களை, நல்கினன்-கொடுத்தான், எ - று. ஏ - அசை.

க - து. வீமராஜன் கட்டில்கள், புட்பசயனம், பெட்டிகள், ஆலவட்டம், கண்ணாடி, சாமரை இவை முதலிய பலவுங் கொடுத்தான் என்பதாம். (கூரு)

அல்லியங் கமல நீங்கி யரசரிற் புகுந்து வாழும்
மெல்லியல் பிரிய லாற்று விழைவொடு பலகாற் புல்லி
மல்லலந் தெரியல் வீமன மனைவியர் பலரு மாழ்கி
யெல்லையில் துயரினோடுந் தனித்தனி யிரங்கி னாரே.

க - து. அல்லி - அகவிதழையுடைய, அம் - அழகிய, கமலம் - தாமரைமலரை, நீங்கி-விட்டு, அரசர் இல்-இராஜமனையில், புகுந்து-சேர்ந்து, வாழும் - வாழ்கின்ற, மெல்லியல் - இலக்குமியாகிய தமயந்தி, பிரியல் ஆற்று - பிரிதலையாற்றமாட்டாத, விழைவொடு-ஆசையுடனே, பலகால் - பலதரம், புல்லி - அணைத்துக்கொண்டு, மல்லல்-வளம்பொருந்திய, அம் - அழகிய, தெரியல் - மாலையணிந்த, வீமன்-வீமராஜனுடைய, மனைவியர் பலரும் - தேவிமார் பலரும், மாழ்கி - மயங்கி, எல்லையில் - அளவில்லாத, துயரினோடும் - துன்பத்தோடும், தனித்தனி - தனித்தனியாக, இரங்கினார் - அழுதார்கள், எ - று. ஏ - அசை.

க - து. வீமன் மனைவியர் பலரும், தமயந்தி பிரிவைச் சகியாமல் வருந்தினார்கள் என்பதாம்.

மெல்லியல் என்னும் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். 'அல்லியங் கமல நீங்கி யரசரிற் புகுந்துவாழும்' என்ற விசேடணத்தால் இலக்குமியைக் குறித்தது.()

பெருந்துய ருழந்து வாடும் பிணையனார் தம்மை நோக்கி
விரிந்தபூந் துளவி னோன்பின் விரைமலர்க் கோதை யேக
வருந்திமுன் னுயிர்த்த தெண்ணீர் மறிகடல் வருந்திற் றென்று
றிருந்தவர்க் கிறைவ னான கோதம னுற்றி னானே. [வென்

இ - ள். பெரு துயர் உழந்து - மிகுந்த துன்பத்திலலைந்து, வாடும் - வருந்துகின்ற, பிணை அனார் தம்மை-பெண் மானையொத்த மங்

கையரை, நோக்கி - பார்த்து, விரிந்த - மலர்ந்த, பூ - புட்பத்தையு
டைய, துளவினோன் பின் - துளசிமாலையையுடைய மகாவிஷ்ணுவின்
பின்னே, விரை - வாசனைபொருந்திய, மலர் - தாமரைமலரில் வாசி
மாயிருக்கின்ற, கோதை - இலக்குமியானவள், ஏக-போக, (அதற்கு)
வருந்தி - வருத்தப்பட்டு, முன் உயிர்த்த - முன்னேபெற்ற, தெள்
நீர் - தெளிந்தநீரையுடைய, மறி - புரளாநின்ற, கடல் - பாற்சமுத்தி
ரமானது, வருந்திற்றே என்று - வருத்த முற்றதோவென்று சொ
ல்லி, அருந்தவர்க்கு - அரியதவத்தையுடையவர்க்கு, இறைவனை -
அரசனை, கோதமன் - கௌதமன், ஆற்றினன்-(அவர்களைத்) தே
ற்றினன், எ - று.

க - று. கௌதமர் வீமன் மனைவிகளைத் தேற்றினர் என்ப
தாம். (சுஎ)

அன்னைய ரம்மெ லோதித் தோழியை யருளி னோக்கி
யுன்னினு மிவண்மேற் காத லுளமென வுரைக்கி லேமா
லென்னினு மின்று தொட்டு மின்னுயிர்த் தோழி யல்லை
மின்னனாட் கன்னை நீயே வேண்டுவ புரிதி யென்றார்.

இ - ள். அன்னையர் - தாய்மார்கள், அம் - அழகிய, மெல்-மிரு
துவாகிய, ஓதி - கூந்தலையுடைய, தோழியை-உயிர்ப்பாங்கியை, அரு
ளின் - கிருபையினால், நோக்கி - பார்த்து, உன்னினும் - உன்னைப்
பார்க்கிலும், இவள்மேல் - இந்தத் தமயந்தியின் மீது, காதல்-ஆசை,
உளம் என - உள்ளோமென, உரைக்கிலேம் - சொல்லுகின்றிலேம்,
என்னினும் - ஆனாலும், இன்றுதொட்டும்-இன்றுமுதலாகவும், இன்-
இனிதாகிய, உயிர் தோழி அல்லை - உயிர்ப்பாங்கியல்லை, மின் அனா
ட்கு - மின்னலையொத்த தமயந்திக்கு, அன்னை நீயே - நீயேதாய்,
வேண்டுவ - (அவளுக்கு) வேண்டியவைகளை, புரிதி என்றார் - செய்
யென்று சொன்னார்கள், எ - று.

க - து. தாய்மார்களனைவருந் தமயந்தி தோழியைப் பார்த்து
இன்று தொடங்கித் தமயந்திக்குத் தோழி நீ யல்ல, நீயே தாய், இவ
ளுக்கு வேண்டுவனவற்றைச் செய்யென்றார்கள் என்பதாம். (சுஅ)

மணம்புரிபடலம் முற்றுப்பெற்றது.



நளன்றமயந்தியோடு மாவிந்தநகரம் சேருதல்.

# மீட்சிப்படலம்.

[இப்படலத்தால் நளமகாராஜன் தமயந்தியோடும் தன் னகரத்திற்குப் போதுதல் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மற்றிவை நிகழும் வேலை மகிழ்வொடு மாமன் றன்பால்
வெற்றிகொள் குருதி வைவேல் வேந்தர்கோன் விடைகொண் டேகி,யற்றமில் கேள்வி சான்ற வமைச்சரை யினிதி னோக்கி,
யிற்றைநா ளெழுச்சி யென்ன விமிழ்முர சறைக வென்றான்.

இ - ள். மற்று இவை - பின்பு இக்காரியங்கள், நிகழும் வேலை - நடக்கும்பொழுது, மகிழ்வொடு - சந்தோஷத்துடனே, மாமன்தன் பால் - வீமராஜனிடத்தில், வெற்றி கொள் - செயத்தைக்கொண்ட, குருதி - இரத்தந்தோய்ந்த, வை - கூர்மைபொருந்திய, வேல் - வேலை யுடைய, வேந்தர்கோன் - அரசர்க்கரசனாகிய நளமகாராஜன், விடை கொண்டு ஏகி - உத்திரவு பெற்றுக்கொண்டுபோய், அற்றம் இல் - சோர்வில்லாத, கேள்வி - கல்விகள், சான்ற - நிறைந்த, அமைச்சரை - மந்திரிகளை, இனிதின் நோக்கி - இன்பமாகப் பார்த்து, இற்றை நாள் - இன்றையத்தினம், எழுச்சி என்ன - புறப்படுதலென்று, இமிழ் - சத்தியாநின்ற, முரசு - பேரிகையை, அறைக என்றான் - அடியுங்கோளென்று சொன்னான், எ - று.

க - ரு. நளன் வீமனிடத்து விடைபெற்றுக்கொண்டு மந்திரி களைப்பார்த்து இன்று புறப்படுதலென்று முரசறையச்சொன்னான் என்பதாம். (க)

கலிவிருத்தம்.

அண்ணலங் குருதிவே லரச னேவலிற்
கண்ணகன் முரசெழு கடலி னார்த்தெழ
வெண்ணிட லிடமிலை யென்ன சேமிசூழ்
மண்ணக வரைப்பெலா மலிந்த தானையே.

இ - ள். அண்ணல் - பெருமைபொருந்திய, அம் - அழகிய, குருதி - இரத்தந்தோய்ந்த, வேல் - வேலாயுதத்தையுடைய, அரசன் - நளமகாராசனுடைய, ஏவலின் - உத்தரவினால், கண் அகன் - இட மகன்ற, முரசு - பேரிகையானது, எழு கடலின் - ஏழ்கடலின் ஒலி

யைப்போல, ஆர்த்து எழ - மிகுந்தொலிக்க, எண் - எள்ளை, இட - இடுதற்கு, இடம் இலை என்ன - இடமில்லையென்றுசொல்ல, நேமி சூழ் - சமுத்திரஞ்சூழ்ந்த, மண்ணகம் - பூமியினுடைய, வரைப்பு எலாம் - எல்லையெல்லாம், மலிந்த - நிறைந்தன, தானையே - சேனைகள், எ - று.

க - து. நளனேவலால் முரசறையச் சேனைகள் நிறைந்தன என்பதாம்.

ஏவலின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப்பொருளில் வந்தது. கடல்-முதலாகுபெயர். எண்-எள் என்பதன் திரிசொல். (உ)

நிலவுவெண் கவிகைமே னிழற்றத் தண்மதிக்
கலைநிலாக் குவிந்தன கவரி கால்செய
மலர்தலை யுலகெலாம் புரக்கு மன்னவன்
சிலையுலாந் தமனியத் தேரி லேறினான்.

இ - ள். நிலவு - பிரகாசியாநின்ற, வெண் கவிகை - வெண்கொற்றக்குடையை, மேல் - மேலே, நிழற்ற - பிடிக்க, தண் - குளிர்ச்சி பொருந்திய, மதி - சந்திரனுடைய, கலை - சோடசகலைகளின், நிலா - பிரகாசம், குவிந்தன - குவிந்ததோற்றம்போல், கவரி - சாமரைகள், கால் செய - காற்றைச்செய்ய, மலர்தலை உலகு எலாம் - பரந்தவிடத்தையுடைய உலகமுழுதும், புரக்கும் - இரட்சிக்காநின்ற, மன்னவன் - அரசன், சிலை - மலைபோல், உலாம் - உலாவுகின்ற, தமனியம் - பொன்னாலாகிய, தேரில் - இரதத்தின்மீதில், ஏறினான் - ஏறிக்கொண்டான், எ - று.

க - து. நளன் தேரிலேறினான் என்பதாம். (ங)

கலிகெழு முரசுகண் கறங்கு மோதையாற்
பொலன்முக டுடைந்துமேற் போயிற் றில்லையே
லலர்தலை விசும்பினி லடங்க லாவதே
நிலமிசை யெழுந்துமே னிமிர்ந்த தூளியே.

இ - ள். கலிகெழு - சத்தம்பொருந்திய, முரசு கண் - பேரிகையின் கண்ணானது, கறங்கும் - ஒலிக்கும், ஓதையால் - சத்தத்தினால், பொலன் - அழகுபொருந்திய, முகடு - அண்டமுகடானது, உடைந்து - உடைபட்டு, மேல்போயிற்று இல்லையேல் - மேலண்டங்களில் போகாமற்போனால், அலர்தலை - பரந்தவிடத்தையுடைய, விசும்பினில் - ஆகாசத்தில், அடங்கல் ஆவதே - அடங்குவதாவதா, நிலமி

சை - பூமியின்மீது, எழுந்து - எழும்பி, மேல் - மேலே, நிமிர்ந்த - உயர்ந்த, தூளி - புழுதி, எ - று.

க - து. புழுதிகள் பேரிசைச்சத்தத்தாலண்டமூகடேடைந்து அப்பாற் போகாவிடில் ஆகாயங் கொள்ளுமா என்பதாம்.

போயிற்றில்லையேல் என்பதில் ஏல் எனின் என்பதன்மரூஉ.()

இருங்கடற் றானையி னெழுந்த நுண்டுகள்
பொருங்களி றமிழ்மதம் பொழிந்த தில்லையேற்
கருங்கட லளறெழப் பருகிக் கார்க்குல
மொருங்குவான் பொழியினு மொழிக்க வொண்ணுமே.

இ - ள். இரு - பெருமை பொருந்திய, கடல் தானையின்-சேனா சமுத்திரத்தில், எழுந்த - எழும்பிய, நுண்டுகள் - நுண்ணிய பொடிகள், பொரும் - சண்டை செய்யாநின்ற, களிறு - யானைகள், உமிழ்க்காநின்ற, மதம்-மும்மதத்தையும், பொழிந்தது இல்லையேல்-பொழியாமற்போனால், கரு - கறுத்த, கடல் - சமுத்திரசலத்தை, அளறு எழ - சேறுபட, பருகி - குடித்து, கார் குலம் - மேகக்கூட்டங்கள், ஒருங்கு - ஒருமுகமாய், வான் - ஆகாசத்தினின்று, பொழியினும் - சொரிந்தாலும், ஒழிக்க ஒண்ணுமே - போக்கக்கூடுமோ, எ - று.

க - து. யானைகள் மதம்பொழியாவிடில் மேகங்கள் கடலைமுற்றுங் குடித்துப்பொழியினும் புழுதிகளை ஒழிக்கக்கூடுமோ என்பதாம்.

சுடர்விடு பருமணிச் சூட்ட ராவின்மே
னெடுநிலந் துளக்குற நின்ற வாற்றினாற்
படரிரு விசும்பினிற் பாய்ந்த வல்லது
புடவிமேன் மிதித்தில புரவி வெள்ளமே.

இ - ள். சுடர் - பிரகாசத்தை, விடு - வீசாநின்ற, பரு மணி - பருத்த ரத்நங்கள் பொருந்திய, சூட்டு - சுடிகையுடைய, அராவின் மேல் - ஆதிசேஷன்மீது, நெடு நிலம்-நெடிய பூமி, துளக்குற-அசைவுற, நின்ற ஆற்றினால் - இருந்தபடியால், படர் - விரிந்த, இரு-பெருமை பொருந்திய, விசும்பினில் - ஆகாசத்தில், பாய்ந்தவல்லது - தாவிச்சென்றனவல்லாமல், புடவிமேல் - பூமியின்மீது, மிதித்தில - நடக்கவில்லை, புரவிவெள்ளம்-குதிரைக்கூட்டங்கள், எ-று.ஏ-அசை.

க - து. குதிரைக் கூட்டங்கள் ஆகாயமார்க்கமாய்ப் போயின என்பதாம். (சு)

புதையிருள் சீத்தொளி பொழியுஞ் செங்கதி
ருதயமால் வரையெழ வொளி யிழத்தலான்

மதிபல வாய்வெயின் மறைத்தல் போலுமாற்
கதிர்நிலா முத்தவெண் கவிகை யீட்டமே.

இ - ள். புதை - நிறைந்த, இருள் - இருளை, சீத்து - கெடுத்து, ஒளி - பிரகாசத்தை, பொழியும் - சொரியாநின்ற, செம் கதிர் - சூரியன், உதய மால்வரை எழ - உயர்ந்தவுதயகிரியிலுதிக்க, ஒளி இழத்தலால் - பிரகாசத்தை நீங்குதலால், மதி - சந்திரனானவன், பலவாய் - அனேகரூபமாய், வெயில் - சூரியனை, மறைத்தல்போலும் - மறைத்தலையொக்கும், கதிர் நிலா - நிலவுபோற் கிரணத்தை வீசுகின்ற, முத்தம் - முத்தினாற்செய்த, வெண் - வெளுமைபொருந்திய, கவிகை ஈட்டம் - குடையின் கூட்டங்கள், எ - று. ஆல், ஏ - அசை.

க - து. குடைக்கூட்டங்கள் அநேகசந்திரனை யொத்திருந்தன என்பதாம். (எ)

மழலையங் கிள்ளையும் வளர்த்த பூவையும்
குழைபொரு தடங்கணார் கொண்டு சூழ்வர
விழைவளர் முலையினா ளிளநிலாக் கதிர்
பொழிமணிச் சிவிகையிற் போயி னாளரோ.

இ - ள். மழலை - மழலைச்சொல்லையுடைய, அம் - அழகிய, கிள்ளையும் - கிளிகளும், வளர்த்த - தாம் வளர்த்த, பூவையும் - நாகணவாய்ப்புட்களும், குழை - குண்டலமணிந்த காதுடன், பொரு-போர் செய்யாநின்ற, தடம் - விசாலமாகிய, கணார் - கண்களையுடைய தாதியர்கள், கொண்டு - கையிற்கொண்டு, சூழ்வர-சூழ்ந்துவர, இழை - ஆபரணங்களையணிந்த, வளர் - வளர்ந்துவராநின்ற, முலையினாள்-ஸ்தனங்களையுடைய தமயந்தி, இள நிலா - இளஞ்சந்திரன்போல, கதிர் - கிரணங்களை, பொழி - சொரியாநின்ற, மணி சிவிகையில் - முத்துப் பல்லக்கின்மீது, போயினாள்-ஏறிப்போயினாள், எ-று. அரோ. அசை.

க - து. தமயந்தி பெண்கள் சூழ்ந்துவர இரத்தினச்சிவிகையின்மேற் போயினாள் என்பதாம். (அ)

கதிர்மணி யடைப்பையுங் கால்செய் வட்ட மும்
ததைமயிர்க் கவரியுந் தாங்கி மெல்லென
வதிர்குரற் கிண்கிணி சிலம்பொ டார்ப்பெழ
மதாரி நெடுங்கணா மருங்கு போயினார்

இ - ள். கதிர் - கிரணங்களையுடைய, மணி-ரத்நத்தினாற்செய்த, அடைப்பையும் - தாம்பூலப்பையையும், கால்செய் வட்டமும் - விசிறிகளையும், ததை - நெருங்கிய, மயிர் - மயிரையுடைய, கவரியும் - சாமரைகளையும், தாங்கி - சுமந்து, மெல்லென - மெதுவாக, அதிர் -

அதிர்ந்த, குரல் - சத்தத்தையுடைய, கிண்கிணி-கிண்கிணிகள், சிலம்பொடு-சிலம்புகளுடனே, ஆர்ப்பு எழ - ஆரவாரிக்க, மதர் - மதர்த்த, அரி-செவ்வரிபரந்த, நெடு கணார்-நீண்ட கண்களையுடைய மாதர்கள், மருங்கு-பக்கத்தில், போயினார் - போயினார்கள், எ - று.

க - து. பெண்கள் அடைப்பை ஆலவட்டம் சாமரை இவைகளைத் தாங்கிப் பின்சென்றார்கள் என்பதாம்.

அடை - இலை, அது இங்கு வெற்றிலைக்காயிற்று. (௬)

சாந்தணிந் தோங்கிய தடங்கொள் வெம்முலை
யேந்திழைத் தோழிய ரெண்ணின் மங்கையர்
பூந்தரு நீழலிற் பொன்ன னாரெனக்
கூந்தலம் பிடிமிசைக் குழாங்கொ டேகினார்.

இ - ள். சாந்து - சந்தனத்தை, அணிந்து - தரிக்கப்பெற்று, ஓங்கிய - உயர்ந்த, தடம் கொள் - விசாலத்தைக்கொண்ட, வெம் - விருப்பத்தைத்தரும், முலை - ஸ்தனத்தினிடத்தில், ஏந்து இழை - ஆபரணங்களைத் தாங்கிய, தோழியர் - பாங்கியர்களும், எண்ணில் - எண்ணிக்கையில்லாத, மங்கையர் - ஸ்திரீகளும், பூ-பூவினையுடைய, தரு-கற்பக விருட்சத்தினது, நீழலில்-நிழலில் வாசம்பண்ணுகிற, பொன் அனார் என - இலக்குமியையொத்த அரம்பைமாதர்கள் போல, கூந்தல் - புறமயிரினை யுடைய, அம் - அழகிய, பிடிமிசை - பெட்டையானையின்மேல், குழாம் கொடு - கூட்டங்கொண்டு, ஏகினார் - போயினார்கள், எ - று.

க - து. தோழிமார்களும் பெண்களும் யானைமேலேறிப் போனார்கள் என்பதாம். (௧௦)

கான்பயின் மரைமலர்ச் செல்வி காமுறு
மான்பயி னோக்கியர் மகர யாழிடைத்
தேன்பயி றெள்விளி பாடத் தேரையிற்
கூன்களுஞ் சிந்தொடு குறளுஞ் சென்றவே.

இ - ள். கான் - வாசனை, பயில் பொருந்திய, மரை மலர் - தாமரைமலரில் வாசம்பண்ணுகின்ற, செல்வி - இலக்குமியானவள், காமுறும் - இச்சியாநின்ற, மான் - மான்கள், பயில்-கற்காநின்ற, நோக்கியர் - பார்வையையுடைய மாதர்கள், மகரயாழிடை - மகரவீணையினிடத்தில், தேன் பயில்-தேன்போல் மதுரம்பொருந்திய, தெள்விளி பாட - தெள்விளி யென்னும் ராகத்தைப்பாட, தேரையில் - தேரைபோல், கூன்களும் - கூனரும், சிந்தொடு-அவயவ மற்றவருடன், குறளும் - குள்ளரும், சென்ற - போயினர், எ - று.

க - து. பெண்கள் மகரயாழ்பாடக் கூனரும் அவயவ வீனரும் குள்ளரும் போனார்கள் என்பதாம்.

கூன் சிந்து குறள் என்பன உயர்திணைப்பொருளவேனும் சொல்லாலஃறிணை யாதலின் 'சென்ற' என்றார். (கக)

கொடிகளுங் குடைகளுங் குழுமப் பல்லியங்
கடலுடைந் தாலெனக் கறங்கி யார்த்தெழ
வடிகெழு குருதிவேன் மன்னர் சூழ்வர
நிடதநா டடைந்தன னேமி வேந்தனே.

இ - ள். கொடிகளும் - துவசங்களும், குடைகளும் - கவிகைகளும், குழும - சுற்றிவர, பல்லியம் - நானாவித வாத்தியங்கள், கடல் உடைந்தால் என - சமுத்திர முடைந்துவருதல் போல, கறங்கி ஆர்த்து எழ - குமுறியாரவாரிக்க, வடி கெழு - வடித்தல்பொருந்திய, குருதி - இரத்தந்தோய்ந்த, வேல் - வேலாயுதத்தையுடைய, மன்னர் - அரசர்கள், சூழ் வர - சூழ்ந்துவர, நிடதநாடு அடைந்தனன் - நிடததேசத்தைச் சேர்ந்தான், நேமி - உலகத்தையுடைய, வேந்தன் - நளமகாராசன், எ - று.

க - து. நளன் அரசர்கள் புடைசூழ்ந்துவர நிடதநாட்டைச் சேர்ந்தான் என்பதாம்.

நளமகாராஜன் சக்கரவர்த்தியாதலால் நேமி சக்கரம் எனினுமாம். (கஉ)

அருமறை முனிவரு மமைச்சர் வெள்ளமுங்
குரைகடற் றானையுங் குரவர் கூட்டமு
முரசொலி யதிர்குரன் முகிலி னார்த்தெழ
விருநிலக் கிழவனை யெதிர்கொண் டாரரோ.

இ - ள். அரு - அரிதாகிய, மறை - வேதத்தையுடைய, முனிவரும் - வேதியரும், அமைச்சர் வெள்ளமும் - மந்திரிகளின் கூட்டமும், குரை - சத்தியாநின்ற, கடல் தானையும் - சேனைசமுத்திரமும், குரவர் கூட்டமும் - பெரியோர்கள் கூட்டமும், முரசு ஒலி - பேரிகையின் சத்தமானது, அதிர் குரல்-அதிர்கின்ற குரலையுடைய, முகிலின் - மேகம்போல், ஆர்த்து எழ - ஆரவாரிக்க, இரு - பெரிய, நிலக்கிழவனை - பூமிக்குரிய நளமகாராசனை, எதிர்கொண்டார் - எதிர்கொண்டார்கள், எ - று. அரோ - அசை.

க - து. முனிவர்களும், மந்திரிகளும், சேனைகளும், பெரியோர்களும், நளனுக் கெதிர்வந்தார்கள் என்பதாம். (கங)

அகழியங் கடல்புடை யணிந்து நீனிற
முகிறவழ் மூதெயின் முற்றி யின்னகிற்
புகைகம ழெரிமணிப் பொன்செய் மாடத்தி
னகைநிலா மதிதவழ் நகர மெய்தினான்.

இ - ள். அகழி - கிடங்காகிய, அம் - அழகிய, கடல் - சமுத்திரத்தை, புடை அணிந்து - பக்கத்தில் தரித்து, நீல்நிறம்-நீலநிறம்பொருந்திய, முகில் தவழ் - மேகந்தவழாநின்ற, மூது எயில் - பழமையாகியமதில், முற்றி - சூழ்ந்து, இன் அகில்-இனிய அகிலினது, புகை - புகையானது, கமழ் - பரிமளியாநின்ற, எரி - பிரகாசம்பொருந்திய, மணி - ரத்நத்தினாலும், பொன் செய் - பொன்னாலுஞ்செய்த, மாடத்தின் - உபரிகையின்மீது, நகை - பிரகாசியாநின்ற, நிலா - சந்திரிகையையுடைய, மதி தவழ் - சந்திரன் தவழாநின்ற, நகரம் - மாவிந்த நகரத்தை, எய்தினான் - சேர்ந்தான், எ - று.

க - து. நளன் மாவிந்தநகரத்தைச் சேர்ந்தான் என்பதாம்.

நீலநிறம் என்பது நீனிறம் என நிலைமொழியீறு தொகுத்தலாயிற்று. (கரு)

பொருவருங் கங்கைநீர் நிறைத்துப் பூசுர
ரெரிமணிப் பொற்றசும் பேந்தி முன்வர
விரைகமழ் செழுந்தொடை வீமன்மா தொடுந்
திருவளர் கோயிலிற் செல்வ னெய்தினான்.

இ - ள். பொருவரும் - ஒப்பில்லாத, கங்கை நீர் - கங்காசலத்தை, நிறைத்து - பூரித்து, பூசுரர் - வேதியர்கள், எரி மணி - பிரகாசம் பொருந்திய ரத்ந மழுத்திய, பொன் தசும்பு - பொன்னாற்செய்த பூரண கும்பத்தை, ஏந்தி - தாங்கி, முன் வர - எதிர்வர, விரை - வாசனை, கமழ் - பரிமளியாநின்ற, செழு - செழுமையாகிய, தொடை - மாலையையணிந்த, வீமன் மாதொடும் - வீமராஜன் மகளாகிய தமயந்தியினுடனே, திரு வளர் - இலக்குமி வாசம்பண்ணாநின்ற, கோயிலில் - அரண்மனையில், செல்வன் - நளமகாராசன், எய்தினான் - சேர்ந்தான், எ - று.

க - து. பிராமணர்கள் கங்கையைப் பொற்குடத்திற்கொண்டெதிர்வர நளமஹாராஜன் தமயந்தியுடனே அரண்மனையிற் சேர்ந்தான் என்பதாம். (கசு)

மீட்சிப்படலம் முற்றுப்பெற்றது.

# கலிதோன்றுபடலம்.

[இப்படலத்தால் தமயந்தியின் விவாகத்தைக் கருதிவந்த கலி அவளை நளன் விவாகஞ்செய்தானென்னும் பொறாமையால் அவனை வருந்துறத்த அவனது நகரத்திற்சென்றிக் காலம் பார்த்திருந்தல் சொல்லப்படுகின்றது.]

## கலிவிருத்தம்.

ஈங்கிவ னின்னண மிருப்ப வானிடைப்
பூங்கழல் விண்ணவர் போகு மெல்லையிற்
றீங்குறு படுபழி தீது சூழ்வர
வாங்கவர் முன்கலி யடைந்த தோதுவாம்.

இ-ள். ஈங்கு – மாவிந்த மாநகரத்தில், இவன் – இந்த நளமகாராசன், இன்னணம் – இவ்வாறு தமயந்தியோடு மகிழ்ந்து, இருப்ப – இருக்க, வானிடை – ஆகாசத்தினிடத்தில், பூ – அழகிய, கழல்-வீரகண்டாமணியை யணிந்த, விண்ணவர்-தேவர்கள், போகுமெல்லையில் – போகுஞ்சமயத்தில், தீங்கு உறு-குற்றம்பொருந்திய, படு பழி-படுபழியும், தீது – பொல்லாங்கும், சூழ் வர – சுற்றிக்கொண்டுவர, அவர் முன் – அந்தத் தேவர்களுக்கெதிரில், கலி – கலிபுருஷனானவன், அடைந்தது – வந்ததை, ஓதுவாம் – சொல்லுகிறோம், ஏ – ஈங்கு – அசை.

க-து. நளன் மாவிந்தநகரி லிருக்கத் தேவர்கள் போகும்போது அவர்கள் முன் சனிபகவான் வந்ததைச் சொல்லுவோம் என்பதாம்.

வந்தவெங் கொடுங்கலி தன்னை வான்பட
ரிந்திரன் யாண்டுநீ யேகின் றாயெனச்
சந்தணி முலைத்தம யந்தி மன்றல்கேட்
டந்தமில் வேட்கையா லடைந்துளே னென்றான்.

இ-ள். வந்த – எதிரில் வந்த, வெம் – வெவ்விய, கொடு-கொடுமையையுடைய, கலி தன்னை – கலிபுருஷனை, வான் – தெய்வலோகத்தை நோக்கி, படர்-போகின்ற, இந்திரன்-தேவேந்திரன், யாண்டு – எவ்விடத்துக்கு, நீ – நீ, ஏகின்றாய் என-போகின்றாயென்று கேட்க, சந்தணி – சந்தனத்தை யணிந்த, முலை – ஸ்தனங்களையுடைய, தமய



நளனும்தமயந்தியும்போதுகொய்துபுனல்விளையாட கலிதோன்றுதல்.)

ந்தி - தமயந்தியினது, மன்றல் - கலியாணத்தை, கேட்டு - கேள்விப்பட்டு, அந்தம் இல் - முடிவில்லாத, வேட்கையால் - ஆசையினால், அடைந்துளேன் என்றான் - வந்தேனென்றான், எ - று.

க - து. இந்திரன் சனிபகவானை எங்கே போகின்றாயெனக் கேட்க, அச்சனிபகவான் தமயந்தி விவாகத்திற்குப் போகின்றேனென்றான் என்பதாம். (உ)

என்றலு மமரர்கோன் முறுவ லெய்தியம்
மன்றலுக் கோதனி வந்த திங்கெனு
வென்றிவே னிடதர்கோன் றனக்கு மென்றொடை
துன்றிருங் கூந்தலாள் சூட்டினா ளென்றான்.

இ - ள். என்றலும் - இப்படியென்று சொன்னவளவில், அமரர்கோன் - தேவேந்திரன், முறுவல் எய்தி-சிரித்து, அ மன்றலுக்கோ - அந்தக் கலியாணத்திற்கா, தனி - தனியாய், வந்தது ஈங்கு எனு - இவ்விடத்தில் வந்ததென்று, வென்றி- வெற்றி பொருந்திய, வேல் - வேலையுடைய, நிடதர்கோன் தனக்கு - நளமகாராஜனுக்கு, மெல் தொடை - மிருதுவாகிய மாலையை, துன்று-நெருங்கிய, இரு-பெருமைபொருந்திய, கூந்தலாள் - கூந்தலையுடைய தமயந்தி, சூட்டினாள் என்றான் - அணிந்தாளென்று சொன்னான், எ - று.

க - து. இந்திரன் தமயந்தி நளனுக்கு மாலையிட்டாள் என்றான் என்பதாம். (ங)

விண்ணவ ரனைவரும் வெள்கப் பூந்தொடை
மண்ணகத் தரசனுக் கணியு மாணிழை
யெண்ணமுங் கெடுத்தவட் பிரிப்ப னீண்டெனுக்
கண்ணழல் கதுவவெங் கலியுங் கூறினன்.

இ - ள். விண்ணவர் அனைவரும்-தேவர்கள் யாவரும், வெள்க-வெட்கப்பட, பூ தொடை - புட்பமாலையை, மண்ணகத்து அரசனுக்கு - பூலோகத்து ராஜனுக்கு, அணியும் - தரித்த, மாண் இழை-மாட்சிமை பொருந்திய வாபரணங்களையுடைய பெண்ணினது, எண்ணமும் கெடுத்து - நினைப்பையுங் கெடச்செய்து, அவள் - அவளை, பிரிப்பன் - பிரித்துவிடுவேன், ஈண்டு எனு - இவ்விடத்தென்று, கண் அழல் கதுவ - கண்ணில் நெருப்புப் பொறிபறக்க, வெம் கலியும் - வெவ்விய கலிபுருஷனும், கூறினன் - சொன்னான், எ - று.

க - து. தேவர்கள் வெட்க நளனுக்கு மாலைதரித்த தமயந்தியைப் பிரிப்பேனென்று சனிபகவான் சொன்னான் என்பதாம். (ச)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

*அருந்ததிக் கற்பி னல்லா ளரசிளங் குமரன் றன்னைப்*
*பிரிந்திட வியற்றிப் பின்னர்ப் பெறுவது தீமை யன்றோ,வி*
*ரிந்தநூற் கேள்வி யென்னும் பிறமனை விழைய வுள்ளம்,பொ*
*ருந்திய தெவன்கொல் கல்லாப் புல்லரிற் புகழின் மிக்கோய்.*

இ - ள். அருந்ததி - அருந்ததியையொத்த, கற்பின்-பதிவிரதத்தையுடைய, நல்லாள் - தமயந்தி, அரசிளங்குமரன் தன்னை - இளமைபொருந்திய ராசகுமாரனை நளமகாராசனை, பிரிந்திட இயற்றி-நீங்கும்படி செய்து, பின்னர் - பின்பு, பெறுவது - அந்தமாதைப்பெற்றுக்கொள்வது, தீமை அன்றோ - குற்றமல்லவோ, விரிந்த-பரந்த, நூல் கேள்வி - நூல்விசாரணை, என் ஆம்-யாதுபயனைத்தரும், பிறர் மனை விழைய - பிறர்மனைவியை விரும்ப, உள்ளம் பொருந்தியது எவன் - மனஞ்சம்மதித்தது என்னகாரணம், கல்லா - படியாத, புல்லரில் - மூடரைப்போல, புகழின் மிக்கோய்-கீர்த்தியின் மிக்கவனே, எ - று. கொல் - அசை.

க - து. இந்திரன் நளனைவிட்டுத் தமயந்தியைப்பிரித் தவளைப் பெறுவது குற்றமல்லவா, பிறன்மனைவியை யிச்சிப்பதென்ன என்றான் என்பதாம். (ரு)

*இனையன வமரர் கூற விருகையும் புடைத்து நக்குப்*
*புனைமலர்க் கோதை நல்லார் புணர் முலை குழையப் புல்லி*
*வனைதுகி னெகிழ்க்கு மின்ப வாழ்வினை யன்றி மற்றோர்*
*நினைவரு மின்ப முண்டே னிகழ்த்துதிர் நீவி ரென்றான்.*

இ - ள். இனையன-இப்படிப்பட்டவைகளை, அமரர் கூற-தேவர்கள் சொல்ல, இரு கையும் - இரண்டுகையும், புடைத்து - கொட்டி, நக்கு - சிரித்து, புனை மலர் கோதை நல்லார் - மலரால் அலங்கரிக்கப்பெற்ற கூந்தலையுடைய மாதரது, புணர் முலை - நெருங்கிய முலைகளை, குழைய புல்லி - குழையும்படி தழுவி, வனை - கட்டியிருக்கிற, துகில் - ஆடையை, நெகிழ்க்கும் - அவிழ்க்கின்ற, இன்ப வாழ்வினை அன்றி - காமவின்ப வாழ்வையல்லாது, மற்றோர்-வேறுமொரு நினைவரும் இன்பம் உண்டேல் - நினைத்தற்கரிய வின்பமுண்டாகில், நிகழ்த்துதிர் - சொல்லுங்கோள், நீவிர் என்றான் - நீங்களென்று சொன்னான், எ - று.

க - நு. தேவர்களிவ்வாறுசொல்லச் சனிபகவான் பெண்களின்பத்தைப்பார்க்கிலும் வேறின்பமுண்டானாற் சொல்லுங்களென்றான் என்பதாம்.

அமரர் - இறவாதவர், இறப்பவராகிய தேவரை யிறவாதவரென்றல் கூடுமோவெனின், கற்பகாலத்தளவும் இறவாதிருப்பவராதலால் கூடுமென்க. (௬)

மறைநெறி பிறழக் கூறு மிவனொடும் வாய்மை கூறி
லறநெறி திறம்பு மென்று வமரரும் விசும்பிற் போனார்
தெறுதொழிற் கலியுங் காமஞ் சிதைந்துமீ தூர வேத
நெறிமுறை வழுவல் செல்லா நிடதநா டதனிற் சென்றான்.

இ - ள். மறை நெறி - வேதவழி, பிறழ - மாறுபட, கூறும் - சொல்லும், இவனொடும் - இக்கலியினோடும், வாய்மை கூறில்-உண்மைபேசில், அற நெறி - தருமவழி, திறம்பும் என்று-கெடுமென்று, அமரரும் - தேவர்களும், விசும்பில் போனார் - சொர்க்கத்தைச்சேர்ந்தார்கள்; தெறு - கொல்லாநின்ற, தொழில் - செய்கையையுடைய, கலியும் - கலிபுருஷனும், காமம் - விரகமானது, சிதைந்து - வரம்பு கடந்து, மீதூர-அதிகரிக்க, வேதநெறி முறை-வேதவழியின் முறையானது, வழுவல் செல்லா - மாறுபடாத, நிடத நாடதனில் - நிடத தேசத்தில், சென்றான் - போனான், எ - று.

க - து. தேவர்களிவனுடன்பேசிற் றருமங்கெடுமென்று சுவர்க்கத்திற்குப் போனார்கள்; சனிபகவான் நிடத நாட்டிற்குப்போனான் என்பதாம். (௭)

மல்லலம் பழன வேலி வளங்கெழு நிடத நாட்டி
னல்லலுற் றரிதிற்செல்லுங் கொடுங்கலி யமரர் வேட்ப
வெல்லையில் வேள்வி யாற்றி யருமறை பயில்வோ ரெங்குஞ்
சொல்லிய பதங்கள் கேட்டுத் துணைப்பதம் பெயர்த்தி லானே.

இ - ள். மல்லல் - வளம்பொருந்திய, அம் - அழகிய, பழனம் - கழனிகளையே, வேலி - வேலியாகவுடைய, வளம் கெழு - செல்வம் பொருந்திய, நிடதநாட்டின் - நிடததேசத்தில், அல்லல் உற்று-துன்பமுற்று, அரிதில் செல்லும்-அருமையாகப்போகாநின்ற, கொடு கலி-கொடிய கலியானவன், அமரர் வேட்ப - தேவர்கள் விரும்ப, எல்லையில் - அளவில்லாத, வேள்வி ஆற்றி - யாகத்தைச்செய்து, அரு-அரிதாகிய, மறை பயில்வோர் - வேதப்பிராமணர்கள், எங்கும் - எவ்விடத்திலும், சொல்லிய-சொன்ன, பதங்கள் கேட்டு-வேதபதங்களைக் காதிற்கேட்டு, துணை பதம் - தன்னுடைய வுபய பதங்களை, பெயர்த்திலான் - எடுத்துவைக்கவில்லை, எ - று.

க - ரு. சனிபகவான் நிடதநாட்டில் வேதப்பிராமணர்கள் சொல்லும் வேதவாக்கியங்களைக் கேட்டுத் தன்னிருபதங்களை யெடுத்து வையா திருந்தான் என்பதாம். (அ)

செம்மையிற் றிறம்பல் செல்லா மறைபயில் சிறுவ ணாங்கோர், கைம்மையைக் கலத்த னோக்கிக் களிமகிழ் சிறந்து செல்வான், வம்மினென் றமரர் தம்மை மறையினாற் கூறக் கேளா, வம்மவோ மகமென் றஞ்சி யலக்கணுற் றகன்று போனான்.

இ - ள். செம்மையில்-நன்னெறியில், திறம்பல் செல்லா-மாறுபடாத, மறை பயில் - வேதம்படிக்கின்ற, சிறுவன் - ஒருபிரமசாரி, ஆங்கோர் - அங்கொரு, கைம்மையை - கைம்பெண்ணை, கலத்தல் நோக்கி - புணர்தலைபபார்த்து, களி - செருக்கையுடைய, மகிழ் - சந்தோஷம், சிறந்து - அதிகரித்து, செல்வான் - போகின்றவன், வம்மின் என்று - வாருங்கோளென்று, அமரர் தம்மை - தேவர்களை, மறையினால் - வேதத்தினாலே, கூற-அழைக்க, கேளா-கேட்டு, அம்மவோ - ஓ அம்ம, மகம் என்று - யாகமென்று, அஞ்சி-பயந்து, அலக்கண் உற்று - துன்பமுற்று, அகன்று போனான் - அப்புறம் போயினான், எ - று.

க - ரு. பிரமசாரி கைம்பெண்ணைக் கலந்ததைக் கண்டு செல்லுஞ் சனிபகவான் மற்றோரிடத்தில் வேதத்தினால் தேவர்களை வாருங்களென் றழைக்கக்கேட்டு ஓர் யாகமென்றஞ்சிப் போனான் என்பதாம். (௯)

அருமறை முனிவர் யாரு மோர்கலத் தார்வ மோடும்
பருகிய வாறு நோக்கித் தீவினை பயந்த தென்ன
விரைவினிற் சேற லோடு மறைமொழி கூறும் வேள்விக்
குரியது சோம பான மெனவுள முடைந்து போனான்.

இ - ள். அரு - அரிதாகிய, மறை முனிவர் யாரும் - வேதியர்களெல்லாரும், ஓர் கலத்து - ஒருபாத்திரத்தில், ஆர்வமோடும்-ஆசையுடன், பருகியவாறு நோக்கி - பானம்பண்ணுகின்ற நெறியைப்பார்த்து, தீவினை பயந்தது என்ன - தீமையுண்டாயிற்றென்று, விரைவினில் - சீக்கிரத்தில், சேறலோடும் - போனமாத்திரத்தில், மறைமொழி - வேதவசனத்தை, கூறும் - சொல்லும், வேள்விக்கு - யாகத்துக்கு, உரியது - உரித்தானது, சோமபானம் என - சோமபானயாகமென்று, உளம் உடைந்து - மனங்கலங்கி, போனான் - போயினான், எ - று.

க - து. சனி வேதியர் யாவரு மோர்கலத்திற் பானம்பண்ணுவதைக்கண்டு செல்பவன் யாகத்திற் குரியது சோமபான மென்றஞ்சிப் போனான் என்பதாம். சோமபானம்-மதுபானம். (க0)

நிழல்சுளி களிநல் யானை நிடதர்கோன் மகிழ்ச்சி கூர்ந்து
பழமறைக் கிழவர் யாரும் பரிவொடு கவர்ந்து கொள்ள
விழுநிதி பழனநாடு வேண்டுப வெறுப்ப நாளும்
பொழிதரு புனலை நீந்திப் போக்கரி தென்ன நின்றான்.

இ - ள். நிழல் - தன்னிழலை, சுளி - கோபிக்கிற, களி - செருக்கையுடைய, நல் யானை - நல்லயானையையுடைய, நிடதர்கோன்-நளமகாராசன், மகிழ்ச்சி கூர்ந்து - சந்தோஷமிகுந்து, பழ மறை கிழவர் யாரும் - பழமையாகிய வேதப்பிராமணர்களெல்லாரும், பரிவொடு - ஆசையுடன், கவர்ந்துகொள்ள - பெற்றுக்கொள்ள, விழு நிதி - மேன்மையாகிய திரவியமும், பழனம் - கழனிகளும், நாடு - ஊர்களும், வேண்டுப - வேண்டியவைகளை, வெறுப்ப - வெறுக்கும்படியாக, நாளும் - நாடோறும், பொழி தரு - தத்தம்பண்ணுகிற, புனலை - சலத்தை, நீந்தி-கடந்து, போக்கு அரிது என்ன-போகக்கூடாதென்று, நின்றான் - இருந்தான், எ - று.

க - து. சனிபகவான் நளன் பிராமணர்களுக்குத் தத்தம்பண்ணுநீரை நீந்திப் போகக்கூடாம னின்றான் என்பதாம். (கக)

கலைவலா னொருவன் பொய்மை கட்டுரை யாட னோக்கிக், கொலைபழுத் தொழுகு நெஞ்சங் குழைந்தனன் மகிழ்ந்து செல்வா, னலர்முலை சுமக்க லாற்றா வையநுண் மருங்குற் பேதை, புலவிதீர்ப் பதற்குக் கூறும் பொய்யெனப் புலர்ந்து போனான்.

இ - ள். கலை வலான் ஒருவன்-வித்தையில் வல்லவனொருவன், பொய்மை - பொய்ச்சொல்லை, கட்டுரை ஆடல் - உறுதிமொழியாகச் சொல்லுதலை, நோக்கி - அறிந்து, கொலை - கொல்லுதல், பழுத்து ஒழுகு நெஞ்சம்-முதிர்ந்துபெருகாநின்றமனம், குழைந்தனன்-குழைந்தவனாய், மகிழ்ந்து - சந்தோஷித்து, செல்வான் - போகின்றகலியானவன், அலர் - பரந்த, முலை-ஸ்தனங்களை, சுமக்கல் ஆற்றா - சுமக்கமாட்டாத, ஐயம்-சந்தேகத்தைத்தரும், நுண்-நுட்பம்பொருந்திய, மருங்குல்-இடையையுடைய, பேதை - மடந்தையரது, புலவி - பிணக்கை, தீர்ப்பதற்கு - போக்குதற்கு, கூறும்-சொல்லும், பொய் என-பொய்யென்று, புலர்ந்து - மனம்வாடி, போனான் - போயினான்,

க - து. கல்வியில்வல்லோன் பொய்சொல்லுதலைக்கண்டு செல்லுஞ் சனிபகவான் மாதர்பிணக்கைத் தீர்க்கும் பொய்யென்று வாடிப் போனான் என்பதாம். (கஉ)

கடிமனை யிடங்க டோறுங் கற்புடை மகளி ரீட்டங்
கொடிநெடு வீதி யெல்லாங் கடவுளர் விழவு துன்று
நெடிபடு கான முற்றுந் துறந்துளோர் நெருக்கம் யாண்டு
மடியிட லரிதென் றெண்ணி யல்லலுற் றகன்று போனான்.

இ - ள். கடி - காவலையுடைய, மனை இடங்கடோறும் - வீட்டிடங்களெல்லாம், கற்புடை - பாதிவிரத்தியத்தையுடைய, மகளிர் ஈட்டம் - மாதர் கூட்டங்கள்; கொடி - கொடிகளையுடைய, நெடு - நீண்ட, வீதி எல்லாம் - தெருக்களனைத்திலும், கடவுளர் விழவு - தேவர்திருவிழா, துன்றும் - நெருங்கியிருக்கும்; நெடி - சிள்வண்டுகள், படு - உண்டாகிய, கானம் முற்றும் - காடுமுழுவதும், துறந்துளோர் - முனிவர்களுடைய, நெருக்கம் - கூட்டங்களுள்ளன; (ஆதலால்) யாண்டும் - எவ்விடத்தும், அடியிடல்-அடியெடுத்துவைத்தல், அரிது என்று - அருமையென்று, எண்ணி-நினைத்து, அல்லல் உற்று - துன்பமுற்று, அகன்று போனான் - நீங்கிப்போயினான், எ - று.

க - து. மனைகளெங்குங் கற்புள்ள மாதர் கூட்டத்தாலும், வீதியெங்குந் தேவர் திருவிழாவாலும், காடெங்கும் முனிவர் கூட்டத்தாலும், அடிவைக்க இடமில்லையென்று சனிபகவான் போனான் என்பதாம்.

இந்நகர் வரைப்பில் யாண்டு மெய்துதற் கரிதென் றெண்ணிச், சென்னி வான் றடவு தெய்வச் செழுமலர்ச் சோலை புக்கு, மன்னவ னிழைக்குந் தீமை யாதென மனத்தி னோர்ந்து, துன்னருந் தான்றி மீதிற் சூழ்ச்சியோ டிருக்கு நாளில்.

இ - ள். இ நகர் - இந்த நகரினுடைய, வரைப்பில்-இடத்தில், யாண்டும் - எவ்விடத்தும், எய்துதற்கு அரிது என்று எண்ணி - போகுதற்குக் கூடாதென்று நினைத்து, சென்னி - தலையானது, வான் தடவும் - ஆகாசத்தை யளாவுகிற, தெய்வம் - தெய்வீகமாகிய, செழு - செழித்த, மலர் - புஷ்பத்தையுடைய, சோலை புக்கு - சோலையையடைந்து, மன்னவன் - நளமகாராசன், இழைக்கும் தீமை-செய்யுங்குற்றம், யாது என - எதுவென்று, மனத்தின் ஓர்ந்து - மனதிலாராய்ந்து, துன்ன அரும்-சேரப்படாத, தான்றி மீதில்-தான்றிவிருக்ஷத்தின்மீது, சூழ்ச்சியோடு - ஆலோசனையுடனே, இருக்கும் நாளில் - இருக்கின்றகாலத்தில், எ-று. தான்றி - நிஷித்தம்.

க - து. சனிபகவான் சோலையிற்புகுந்து நளன்செய்யுந் தீமையெதுவென்று நினைத்துத் தான்றிமரத்தின்மே லிருக்கின்றகாலத்தில் என்பதாம். (கச)

கலிதோன்றுபடலம் முற்றிற்று.

# இளவேனிற் படலம்.

[இப்படலத்தால் பற்பலலீலைக்குரிய இளவேனிற்காலத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நமதுசெங் கரங்க டோயி னகைமுக விருந்து செய்யுங், கமலநாண் மலரை வாட்டும் பனியினை முழுதுங் காய்வா, னிமயமால் வரையின் வெம்போர்க் கெழுந்தென வுலகம் போர்த்த, திமிரமேய்ந் துலவும் வெய்யோன் சென்றனன் வடபான் மன்னோ.

இ - ள். நமது - நம்முடைய, செம் கரங்கள் - சிவந்தகிரணங்கள், தோயின் - பொருந்தினால், நகை - பிரகாசியாநின்ற, முகம் - முகத்துடனே, விருந்து செய்யும் - விருந்துசெய்யாநின்ற, கமலம் - தாமரையினது, நாள் - புதிய, மலரை - புஷ்பத்தை, வாட்டும் - வாடப்பண்ணும், பனியினை - பனியை, முழுதும் - முழுமையும், காய்வான் - அழிக்கும்பொருட்டு, இமயம் மால்வரையின் - இமயபர்வதத்தில், வெம் போர்க்கு எழுந்து என - வெவ்விதாகிய யுத்தத்திற் கெழுந்தவன்போல, உலகம் போர்த்த - உலகத்தைமூடிய, திமிரம் மேய்ந்து - இருளையுண்டு, உலவும் வெய்யோன் - உலவுகின்ற சூரியன், வடபால் - வடதுபக்கத்தில், சென்றனன் - போயினான், எ - று. மன், ஓ - அசைகள்.

க - து. உத்தராயணம் பிறந்ததென்பதாம்.

காய்வான் என்பதில் வான் எதிர்காலவினையெச்சவிகுதி. [காய்வான் எழுந்தென என்றல் தற்குறிப்பணி.] (க)

இன்றுணைக் கணவர் நீங்கி யிடருறு மடவார் சோர, மன்றலிற் கொழுநர்ப் புல்லு மடந்தையர் மகிழ்ச்சி கூரக், குன்றிடைப் பிறந்த தென்றற் கொழுந்துமுன் போர்த்த தேமா, மென்றளிர்ப் போர்வை போர்த்து வேனில்வந் திறுத்த தன்றே.

இ - ள். இன் துணை - இனியதுணையாகிய, கணவர் - கொழுநரை, நீங்கி - பிரிந்து, இடர் உறும் - துன்பத்தை யடைகின்ற, மடவார் - மாதர்கள், சோர - சோர்வையடையவும், மன்றலில் - விவாக

த்தின்கண், கொழுநர் புல்லும் - கணவரைத்தழுவும், மடந்தையர் - மாதர்கள், மகிழ்ச்சி கூர - மகிழ்ச்சியை யடையவும், குன்றிடை பிறந்த - பொதியமலையிலுற்பவித்த, தென்றல் கொழுந்து - இளந்தென்றற்காற்றை, முன் - முன்னே, போர்த்த - போர்த்துக்கொண்ட, தேமா - தித்திப்புப்பொருந்திய மாமரத்தினது, மெல் தளிர் - மெல்லிய தளிராகிய, போர்வை போர்த்து - வஸ்திரத்தைப் போர்த்துக் கொண்டு, வேனில் - வேனிற்காலமானது, வந்து இறுத்தது-வந்து தங்கியது, எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. தணந்தவர் துன்புறவும் மணந்தவரின்புறவும் வேனிற் காலம் வந்தது என்பதாம். (உ)

கள்ளுயிர்த் தலரு முல்லைக் கடிமுகை முறுவ றோன்ற, வள்ளிதழ்க் குவளை யுண்கண் மலர்ந்துமாந் தளிர்மென் கை யாக், கிள்ளைமென் குதலை சாற்றிக் கிளரொளி வண்டு பா ணாத், தெள்விளி பாட வேனிற் றிருமகள் சிறந்தா ளன்றே.

இ - ள். கள் உயிர்த்து - தேனைத்தந்து, அலரும் - மலருகிற, முல்லை - முல்லையினது, கடி - வாசனைபொருந்திய, முகை - அரும்புகளாகிய, முறுவல் தோன்ற - பற்கள்தோன்ற, வள் இதழ் - கூர்மையாகிய இதழையுடைய, குவளை - நீலோற்பலங்களாகிய, உண் கண் - மையுண்டகண்கள், மலர்ந்து - விழித்து, மா தளிர் - மாந்துளிர்கள், மெல் - மிருதுவாகிய, கை ஆ-கையாக, கிள்ளை - கிளிப்பிள்ளையின்மொழிகளாகிய, மெல் - மிருதுவாகிய, குதலை - குதலைச் சொற்களை, சாற்றி - பேசி, கிளர் ஒளி - விரிந்தவொளியையுடைய, வண்டு-வண்டுகளே, பாண் ஆ - பாணர்களாக, தெள்விளி பாட - தெள்விளி யென்னும் ராகத்தைப் பாட, வேனில் திருமகள்-வேனிற் காலமாகியபெண், சிறந்தாள்-பொலிவையடைந்தாள், எ-று. அன்று, ஏ - அசைகள்.

க - து. இளவேனிலென்கிற பெண் சிறப்படைந்தாள் என்பதாம். (ங)

பூசல்வண் டார்ப்ப வேனில் போந்தமை குயில்கள் கூறப்
பாசிலை யுகுத்த தேமா பைந்தளி ரீன்ற தோற்றம்
மாசுறு துகிலை நீத்து மகிணர்தம் வரவு கேட்டுக்
கோசிகச் செம்பொ னாடை கொம்பனா ரசைத்தல் போலும்.

இ - ள். பூசல் - போர்செய்தலையுடைய, வண்டு - வண்டுகள், ஆர்ப்ப - ஆரவாரிக்க, வேனில் - வேனிற்காலம், போந்தமை - வந்த

தன்மையை, குயில்கள் கூற - கோகிலங்கள்சொல்ல, பாசு இலை - பழுப்பிலைகளை, உகுத்த - உதிர்த்த, தேமா - தித்திப்பு மாமரங்கள், பை - பசுமை பொருந்திய, தளிர் - தளிர்களை, ஈன்ற தோற்றம் - பெற்றகாட்சியானது, மகிணர்தம் வரவு கேட்டு - புருஷர்களுடைய வரவுகேட்டு, மாசு உறு-குற்றம் பொருந்திய, துகிலை - வஸ்திரத்தை, நீத்து - நீக்கி, கோசிகம் - பட்டாகிய, செம்பொன் - சிவந்தபொன் ஞற்செய்த, ஆடை - வஸ்திரத்தை, கொம்பனூர் - பெண்கள், அசைத்தல் போலும் - கட்டிக்கொள்ளுதலை யொக்கும், எ - று.

க - து. வேனில்வந்ததைக் குயில்களறிவிக்க மாமரந்தளிர்த்த காட்சி கணவர் வருதலைக் கேட்டுப் பெண்கள் பொற்சேலை தரித் தாற்போலும் என்பதாம்.

"மகிழ்நர்" மகிணர் என மருவியது. (ச)

வானுயர் சோலை தோறு முருகுவாய் மடுத்து வீழுந்
தேனொடு சுரும்பும் வண்டும் புதிதுண்டு தெவிட்டி யார்ப்பக்
கானமர் குழலி ஞர்தங் கணவர்பாற் புலவி தீர
வேனில்வேட் குலகம் யாவும் விழவயர்ந் திட்ட வன்றே.

இ - ள். வான் - ஆகாசத்தில், உயர் - உயர்ந்த, சோலைதோறும் - தோட்புகள்தோறும், முருகு - தேனை, வாய்மடுத்து - வாய் வைத்து, வீழும் - விரும்பும், தேனொடு - தேன்வண்டுடனே, சுரும்பும்-ஆண்வண்டும், வண்டும்-பெட்டைவண்டுகளும், புதிது உண்டு-விருந்துண்டு, தெவிட்டி - தெவிட்டெடுத்து, ஆர்ப்ப - ஆரவாரிக்க, கான் - வாசனை, அமர் - பொருந்திய, குழலினூர் - கூந்தலையுடைய மாதர்கள், தம் - தங்கள், கணவர்பால் - புருஷர்களிடத்தில், புலவி தீர - பிணக்குகள் நீங்க, வேனில்-வேனிற்காலத்துக்குரிய, வேட்கு-மன்மதனுக்கு, உலகம் யாவும் - உலகங்களெல்லாம், விழவு அயர்ந் திட்ட-திருவிழாவைச் செய்தன, எ - று. அன்று, ஏ-அசைகள்.

க - நு. மன்மதனுக்கு உலகங்கள்யாவுந் திருவிழா செய்தன என்பதாம். (ரு)

குன்றிடைப் பிறந்த தென்றற் கொழுந்துமேற் படர்ந்த தன்மை, துன்றிருட் பிழம்பு சிக்குங் கனைகதிர்ச் சுடரோனுய, தன்றுணைக் கேள்வ னீங்கி வடபுலஞ் சார்த லோடுந், தென்றிசை யணங்கு மாழாந் துயிர்த்தது சிவணு மாதோ.

இ - ள். குன்றிடை - பொதியமலையினிடத்திலே, பிறந்த - உண்டாகிய, தென்றல் கொழுந்து - இளந்தென்றற்காற்று, மேல் படர்ந்த தன்மை - பூமியின்மீது பரவிய தன்மையானது, துன்று -

நெருங்கிய, இருள் பிழம்பு - இருட்கூட்டத்தை, சீக்கும்-கெடுக்கும், கனை - மிகுந்த, கதிர் - கிரணங்களையுடைய, சுடரோன் ஆய - சூரியனாகிய, தன் துணை - தனக்குத்துணையாகிய, கேள்வன் - புருஷன்; நீங்கி - தன்னைநீங்கி, வடபுலம் - வடதிசையாகிய (பெண்ணை), சார்தலோடும் - அடைந்தமாத்திரத்தில், தென் திசை அணங்கு - தெற்குத்திக்காகிய பெண், மாழாந்து-மயங்கி, உயிர்த்தது - பெருமூச்சு விட்டதை, சிவணும் - ஒக்கும், எ - று.

க - து. தென்றல் வீசியது சூரியன் வடதிசைப்பெண்ணிடத்திற் போனானென்று தென்றிசைப்பெண் பெருமூச்சுவிட்டதுபோலும் என்பதாம்.

தென்றிசை யணங்கென்றமையால் வடபுல வணங்கென்றுங் கொள்ளப்பட்டது. (சு)

பன்மணி வரன்றிச் சாரற் பாணிற வருவி தாழுந்
தென்வரை யினிதி னீன்ற புனிற்றிளங் குழவித் தென்றல்
கன்னலஞ் சிலைக்கை மாரன் காதலர்ப் பிரிந்த மாத
ரின்னுயிர் படுப்ப வேண்டி யியற்றிய பார்வை யாமால்.

இ - ள். பல் மணி - பலரத்நங்களை, வரன்றி - வாரிக்கொண்டு, சாரல் - பக்கத்தில், பால்நிறம் - வெள்ளைநிறமாகிய, அருவி தாழும் - அருவிகள் பாயப்பெற்ற, தென் வரை-பொதியமலை, இனிதின் ஈன்ற - அன்பாகப்பெற்ற, புனிற்றிளம் - மிகவு மிளமைபொருந்திய, குழவி தென்றல் - இளந்தென்றற் காற்றானது, கன்னல் - கரும்பாகிய, அம் - அழகிய, சிலை கை - வில்லைப்பிடித்த கையையுடைய, மாரன் - மன்மதனானவன், காதலர் - நாயகர்களை, பிரிந்த - நீங்கிய, மாதர் - மாதர்களின், இன் உயிர்-இனிய உயிர்களை, படுப்ப வேண்டி - பிடிக்க விழைந்து, இயற்றிய - வரவிட்ட, பார்வையாம் - பார்வையாகும், எ - று.

க - து. தென்றல் வீசியது மன்மதன் நாயகரை நீங்கிய மாதருயிரைப் பிடிக்கவிட்ட பார்வைபோலாம் என்பதாம்.

பார்வையென்பது மிருகங்களைப் பிடிக்க அவ்வவ்வினத்தில் ஒன்றைவளர்த்து வைப்பதாம். (எ)

விண்டொடர் பொதும்பர் தோறும் விரைகமழ் போதில் வீழ்ந்து, வண்டினங் குடைந்து பாட மகரந்த மெழுந்த தோற்றங், கொண்டல்கண் படுக்குந் தேமாங் குயிலின மழைப்பத் தோன்றுந், திண்டிற லனங்கன் சேனை பராக மொத் திருந்த தன்றே.

இ - ள். விண் தொடர் - ஆகாசத்தை யளாவாநின்ற, பொதும்பர் தோறும் - சோலைகள்தோறும், விரை - வாசனை, கமழ் - பரிமளியாநின்ற, போதில் வீழ்ந்து - புட்பத்திலிறங்கி, வண்டு இனம் - வண்டுக் கூட்டங்கள், குடைந்து - மூக்கினுலுழுது, பாட - பண்ணைப் பாட, மகரந்தம் - மகரந்தப்பொடிகள், எழுந்த தோற்றம் - எழும்பிய காட்சியானது, கொண்டல் - மேகங்கள், கண் படுக்கும் - நித்திரைசெய்யும்படியுள்ள, தே மா - தித்திப்பு மாமரத்திலிருக்கிற, குயில் இனம் - குயிற்கூட்டம், அழைப்ப - கூப்பிட, தோன்றும் - வந்த, திண் திறல் அனங்கன் - மிகுந்தவலியையுடைய மன்மதனது, சேனு பராகம் - சேனையினின்றெழும்புகிற புழுதியை, ஒத்திருந்தது - ஒப்பாகியிருந்தது, எ - று.

ந - து. மகரந்தமெழுந்த காட்சியானது மன்மதன் சேனைகளினுலெழும்பும் புழுதியை யொத்திருந்தன என்பதாம். (அ)

காயெரி மணியிற் செய்த கதிர்முலை மகளிர் கூந்த
லாய்மல ருகுத்தல் போலக் குயில்குடைந் தாட வீழ்ந்த
சேயமென் போது போர்த்த திருவநீ ணிலங்கள் யாவும்
பாயலிற் படுத்த செம்பொற் படாமென விளங்கு மன்றே.

இ - ள். காய் - கொளுத்தாநின்ற, எரி - நெருப்பையொத்த, மணியில் செய்த - ரத்நத்திஞற்செய்த ஆபரணத்தினது, கதிர் - பிரகாசம்பொருந்திய, முலை - ஸ்தனங்களையுடைய, மகளிர் - மாதர்களது, கூந்தல் - அளகபாரமானது, ஆய் - ஆராய்ந்த, மலர் உகுத்தல் போல - புஷ்பத்தை உதிர்த்தல்போல, குயில்-கோகிலங்கள், குடைந்தாட - கூத்தாட, வீழ்ந்த - விழுந்த, சேய - சிவந்த, மெல் - மிருதுவாகிய, போது - புஷ்பங்கள், போர்த்த - மூடப்பெற்ற, திருவ - அழகுள்ளனவாகிய, நீள் நிலங்கள் யாவும் - நீண்டநிலங்களெல்லாம், பாயலில் - சயனத்தில், படுத்த - விரித்த, செம் - சிவந்த, பொன் படாம் என - பொன் வஸ்திரத்தைப்போல, விளங்கும் - பிரகாசிக்கும், எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. மலர்கள்விழுந்த நிலங்கள்யாவும் பொற்சீலை விரித்தாற் போல விளங்கும் என்பதாம். (கூ)

தாழ்சினை பூத்த மென்பூந் தண்ணறுஞ் சுண்ண மாடி
வீழ்துணை வருத நோக்கிப் புதுக்கடி மேய தென்று
யாழிசை மிடற்ற செங்கட் கருங்குயி லினிதி னூடிக்
கோழரைக் குமரி வாழைக் குருத்திடை யொளித்த தன்றே.

இ - ள். தாழ் - வளைந்த, சினை - கிளைகளில், பூத்த-புஷ்பித்த, மெல் - மிருதுவாகிய, பூ - புஷ்பத்தினது, தண் - குளிர்ச்சி பொருந்திய, நறு - வாசனையாகிய, சுண்ணம் ஆடி - மகரந்தப்பொடியில் வீழ்ந்து, வீழ்-விரும்பாநின்ற, துணை-புருஷனாகிய ஆண்குயிலானது, வருதல் நோக்கி - வருகிறதைப்பார்த்து, புது கடி - புதுமணத்தை, மேயது என்று - அடைந்ததென்று நினைந்து, யாழ் இசை - வீணையினிசையையொத்த, மிடற்ற - கண்டத்தினையும், செம் கண் - சிவந்த கண்களையுமுடைய, கரு - கரிய, குயில் - பெட்டைக் குயிலானது, இனிதின் ஊடி - இன்பத்தினாலே பிணங்கி, கோழ் - செழிப்பாகிய, அரை - அரையையுடைய, குமரி வாழை - இளவாழையினது, குருத்திடை-குருத்தினிடத்தில், ஒளித்தது - ஒளித்துக்கொண்டது, எ-று. அன்று, ஏ - அசைகள்.

க - ரு. ஆண்குயில் வருதலைக்கண்டு பெண்குயில் வாழைக்குருத்தி லொளித்தது என்பதாம்.

புதுக்கடி என்பதில் நூதனவிவாகம் என்பதும், புதியவாசனை யென்பதும் சிலேடையால் பெறப்பட்டமையால் அதுகண்டு பெட்டைக்குயில் ஊடியதாம் எனக்கொள்க. (கO)

இளவேனிற்படலம் முற்றிற்று.

# பொதுகொய்படலம்.

[இப்படலத்தால் அந்நகரத்திலுள்ள ஆடவரும் யாதரும்
லீலையோடு மலர்களைக் கொய்தல்
சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

இன்ன தன்மைய வின்னிள வேனில்வா
யன்ன பொன்னக ராடவர் யாவரும்
பொன்ன வாமுலைப் பூவையர் தம்மொடுந்
துன்னு நாண்மலர்ச் சோலைசென் றெய்தினார்.

இ - ள். இன்ன தன்மைய - இத்தன்மையவாகிய, இன் - இனிமையாகிய, இளவேனில் வாய் - வசந்தகாலத்தி னிடத்தில், அன்ன பொன் நகர் - அந்த அழகிய நகரத்திலுள்ள, ஆடவர் யாவரும் - புருஷர்களெல்லோரும், பொன்-தேமலானது, அவாம் - விரும்புகின்ற, முலை-ஸ்தனங்களையுடைய, பூவையர் தம்மொடும் - தங்கள் மங்கையரோடுங்கூட, துன்னும் - நெருங்கிய, நாள் மலர் - அன்றலர்ந்த புஷ்பத்தையுடைய, சோலை - சோலையை, சென்று - போய், எய்தினார் - அடைந்தார்கள், எ - று.

க - து. மாவிந்தநகரத்துப் புருஷர்களும் பெண்களும் பூஞ்சாவனத்தில் வந்தார்கள் என்பதாம். (க)

உள்ளங் கொண்டா ரிவரென் றுணர்த்திடப்
புள்ள வாங்கணை வேளிடைப் போதல்போ
லள்ளிலைச் செழுஞ் சோலையி லன்பரைக்
கள்ளுண் கோதையர் கைப்பிடித் தேகினார்.

இ - ள். உள்ளம் - எங்கள் மனத்தை, கொண்டார் - அபகரித்துக்கொண்டார்கள், இவர் என்று - இவர்களென்று, உணர்த்திட - அறிவிக்க, புள் - வண்டுகள், அவாம் - விரும்புகின்ற, கணை - புஷ்பபாணத்தையுடைய, வேளிடை-மன்மதனிடத்தில், போதல்போல் - செல்வதுபோல, அள் - நெருங்கிய, இலை - இலைகளையுடைய, செழு - செழிய, சோலையில் - சோலையினிடத்தில், அன்பரை - கணவர்களை, கள்ளுண் - தேன்பொருந்திய, கோதையர் - பூமாலையை யணிந்த மங்கையர்கள், கை பிடித்து - கையிற் பிடித்துக் கொண்டு, ஏகினார் - போனார்கள், எ - று.

க - து. பெண்கள் புருஷர்கள் கையைப்பிடித்துக்கொண்டு சோலையிற் போனார்கள் என்பதாம்.

கள்ளரை அரசனிடத்துப்பிடித்துக்கொண்டு போய் அவனை... இலக்காக்குவதுபோல ஆடவரைக் காமனுக்கிலக்காக்குதற்கென்க. ()

அணங்கு நோய்செயு மைந்து மலரெனிற்
கணங்கொள் போது கதுவிய பொங்கர்வாய்
மணந்து செல்வதை யன்றி மணந்தவர்த்
தணந்து செல்லுந் தருக்கினர் யாவரே.

இ - ள். ஐந்து மலர் - ஐந்து புஷ்பங்களே, அணங்கு - வருத்தமாகிய, நோய் - துன்பத்தை, செயும் எனில் - செய்யுமேயானால், கணம் கொள் - கூட்டங்கொண்ட, போது - புஷ்பங்கள், கதுவிய - நெருங்கிய, பொங்கர்வாய் - சோலையினிடத்தில், மணந்து - கூடி, செல்வதை அன்றி - போவதையல்லாமல், மணந்தவர் - கூடினவர்களை, தணந்து - பிரிந்து, செல்லும் - போகின்ற, தருக்கினர் - செருக்கையுடையவர்கள், யாவர் - எவர்கள், (ஒருவருமில்லை) எ - று. ஏ-அசை.

க - து. புணர்ந்துபோவதல்லாது புணர்ந்தவரைப் பிரிந்து போவாரில்லை என்பதாம். (ங)

திருவ னார்தங் குழாத்தொடு சென்றத
னரிவை பஞ்சடி யிற்றென் றறிகிலான்
வரைகொண் மார்பினு தைத்த மலரடி
புரைவ தீதென நோக்கினன் போகின்றான்.

இ - ள். திரு அனார் தம் - இலக்குமியையொத்த ஸ்திரீகளுடைய, குழாத்தொடு - கூட்டத்துடன், சென்ற - நடந்த, தன்-தன்னுடைய, அரிவை - நாயகியினது, பஞ்சு-செம்பஞ்சுக்குழம்பூட்டிய, அடி - பாதமானது, இற்று என்று - இன்னதென்று, அறிகிலான் - அறியாதவொருவன், வரை - மலையை, கொள் - உவமைகொண்டிருக்கின்ற, மார்பின் - தனதுமார்பினிடத்தில், உதைத்த - உதைத்த, மலர் அடி - தாமரைமலர்போன்ற பாதக்குறியை,புரைவது - ஒத்திருப்பது, ஈது என - இந்த அடிக்குறியென்று, நோக்கினன் - பார்க்கனாய், போகின்றான் - சென்றான், எ - று.

க-து. தன்னாயகியடி யிஃதென் றறியாதவன் தன்மார்பிலுதைத்த அடிக் கொப்பிஃதென்று பார்த்துப்போனான் என்பதாம். (ச)

மைய கூந்தலோர் மங்கை யசோகினி
லெய்து றாதுயர் போதினை யேறுபு
கொய்து மென்று குறித்தடி வைத்தலுஞ்
செய்ய போது சினைதொறும் பூத்தவே.

இ - ள். மைய கூந்தல் - கறுத்த கூந்தலையுடைய, ஓர் மங்கை - ஒருமங்கையானவள், அசோகினில் - அசோகமரத்தினிடத்தில், எய்துறாது - அடையக்கூடாமல், உயர் - உயரத்திலுள்ள, போதினை - புஷ்பத்தை, ஏறுபு - ஏறி, கொய்தும் என்று - பறிப்போமென்று, குறித்து - நினைத்து, அடி வைத்தலும் - பாதத்தை வைத்தமாத்திரத்தில், செய்ய - சிவந்த, போது - புஷ்பங்கள், சினைதொறும் - கிளைகள்தோறும், பூத்த - மலர்ந்தன, - எ - று.

க - து. ஒருத்தி அசோகமரத்திலேறிக் கால் வைத்தமாத்திரத்தில் மலர்கள் மலர்ந்தன என்பதாம். (ரு)

கோத்த மேகலைக் கோதையர் நோக்கலிற்
பூத்தொசிந்த திலகமென் போதினிற்
றேத் துளிக்கமர் தெள்விளி வண்டினம்
பார்த்த கண்ணிழல் பாய்ந்தன போலுமே.

இ - ள். கோத்த - கோவையிட்ட, மேகலை - மேகலாபரணத்தையுடைய, கோதையர் - மங்கையர்கள், நோக்கலின் - பார்த்தலினால், பூத்து - மலர்ந்து, ஒசிந்த - வளைந்த, திலகம் - மஞ்சாடிமரத்தினுடைய, மெல் - மிருதுவாகிய, போதினில் - புஷ்பத்தில், தேன் துளிக்கு - தேனினது துளிக்கு, அமர் - பொருந்திய, தெள்விளி - தெள்விளிராகத்தைப்பாடுகின்ற, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், பார்த்த - பார்த்ததாகிய, கண் - கண்களினுடைய, நிழல் - சாயல்கள், பாய்ந்தனபோலும் - பரவினபோலும், எ - று.

க - து. மஞ்சாடி மலரைப் பெண்கள் பார்த்தமாத்திரத்தில் வண்டுகள் பார்வைபாய்ந்தாற்போலும் என்பதாம். (சு)

காசு லாமுலைக் கன்னியர் புல்லலும்
பாசி லைக்குரா வின்றபைம் போதினின்
மூசு வண்டின மொய்த்தது வெம்முலைப்
பூசு நானம் பொறித்தது போலுமால்.

இ - ள். காசு உலாம் - ரத்நாபரணங்கள் தங்கிய, முலை - ஸ்தனங்களையுடைய, கன்னியர் - மங்கையர்கள், புல்லலும் - தழுவினவள

வில், பாசு இலை - பசுமைபொருந்திய இலைகளையுடைய, குரவு - குரா மரமானது, ஈன்ற - பெற்ற, பை - பசிய, போதினில் - புஷ்பத்தில், மூசு - நெருங்கிய, வண்டு இனம் - வண்டுக்கூட்டமானது, மொய்த்தது - மொய்த்துக்கொண்டது, வெம் - விருப்பத்தைக்கொடுக்கின்ற, முலை - ஸ்தனங்களில், பூசு - பூசப்பட்ட, நானம் - கஸ்தூரி, பொறித்தது போலும் - பூசியதுபோலும், எ - று. ஆல் - அசை.

க - து. பெண்கள் குராமரத்தைத் தழுவினவளவில் அம்மர மலர் வண்டுக்கூட்டம் மார்பில் மொய்த்தது முலைமேற் கஸ்தூரி பூசியதுபோலும் என்பதாம். (எ)

வஞ்சி நுண்ணிடை மாதர் மிதித்தலிற்
செஞ்செ வேதளி ரீன்ற செயலைக
ளஞ்செஞ் சிறடு தோய்ந்த வரக்கெறி
பஞ்சியுண் டொளிர் பான்மை கடுக்குமே.

இ - ள். வஞ்சி - கொடியையொத்த, நுண் - நுட்பமாகிய, இடை - மருங்கையுடைய, மாதர் - மடவார், மிதித்தலின் - மிதித்தலினால், செஞ்செவே - செம்மையாக, தளிர் - தளிர்களை, ஈன்ற - தந்த, செயலைகள் - அசோகவிருக்ஷங்கள், அம் - அழகிய, செம் - சிவந்த, சிறுஅடி - அம்மடவார்சிற்றடியில், தோய்ந்த - பூசிய, அரக்கு எறி - செந்நிறத்தை வீசாநின்ற, பஞ்சி - செம்பஞ்சியை, உண்டு - சம்மிடத்திற்கொண்டு, ஒளிர் - பிரகாசிக்கிற, பான்மை - தன்மையை, கடுக்கும் - ஒக்கும், எ - று.

க - து. அசோகமரங்கள் பெண்களடிகளின் செம்பஞ்சுக் குழம்பு உண்டாற்போ லிருக்கும் என்பதாம். (அ)

அரவ மேகலை யாயிழை யார்க்குயர்
குரவம் பாவை கொடுத்த கொழுதிமென்
முருகு லாமளி மொய்த்த கடம்பினம்
பரிவி னாடவெண் பந்து கொடுத்தவே.

இ - ள். அரவம் - சத்தத்தையுடைய, மேகலை - மேகலாபரணத்தையணிந்த, ஆய் இழையார்க்கு - மாதருக்கு, உயர் - உயர்ந்த, குரவம் - குராவிருக்ஷம், பாவை - காயாகிய பதுமைகளை, கொடுத்த - கொடுத்தன; கொழுதி - கோதி, மெல் - மிருதுவாகிய, முருகு - தேனினிடத்தில், உலாம் - உலாவுகின்ற, அளி - வண்டுகள், மொய்த்த - நெருங்கிய, கடம்பு இனம் - கடப்பவிருக்ஷங்கள், பரிவின் - விருப்பத்துடனே, ஆட - ஆட, வெள் - வெண்மையாகிய, பந்து - காயாகியபந்தை, கொடுத்த - கொடுத்தன, எ - று.

க - து. குராமரங்கள் மாதர்க்குக் காய்களைப் பதுமைகளாகக் கொடுத்தன, கடப்பமரங்கள் காய்களைப் பந்துகளாகக் கொடுத்தன என்பதாம். (கூ)

மாங்குயிற் குரல் கேட்டு மலருருக்
கோங்க மாதர் குதலையைக் கேட்டலுந்
தேங்கொள் போது சினைதொறும் பூத்தலா
லாங்க தற்கிணை யோகுயி லார்ப்பதே.

இ - ள். மா - மாமரத்திலிருக்கிற, குயில் குரல்-குயிலின்குரலை, கேட்டு - கேட்டு, மலருரு - மலராத, கோங்கம் - கோங்கவிருக்ஷமானது, மாதர் - மடவாருடைய, குதலையை-குதலைச்சொல்லை, கேட்டலும் - கேட்டவளவில், தேம் கொள் - தேனைக்கொண்ட, போது - புஷ்பங்களை, சினைதொறும் - கிளைகள்தோறும், பூத்தலால் - புஷ்பித்தலால், ஆங்கு - அவ்விடத்தில், அதற்கு - அம்மடவார் சொல்லுக்கு, குயில் ஆர்ப்பது - குயில்கூவுவது, இணையோ - ஒப்பாகுமோ (ஆகாது), எ - று.

க - து. குயிலோசையால் மலராத கோங்கு, மாதர் குரலோசையால் மலர்தலால் இவர்கள் குரலுக்குக் குயிலோசை யொவ்வாது என்பதாம். (க0)

காவி லன்புடைக் காளையோர் தார்குழற்
பூவை கண்ணுறு பூந்துகண் மாற்றலு
மாவி யென்ன வருகுறை மாற்றவள்
காவி யங்கட் கடைகள் சிவந்தவே.

இ - ள். காவில் - பூஞ்சோலையில், அன்பு உடை - ஆசையையுடைய, காளை-புருஷனானவன், ஓர்-ஒரு, தார்-மாலையணிந்த, குழல் - கூந்தலையுடைய, பூவை - மனையாளது, கண் உறு - கண்ணிலே படிந்த, பூ துகள் - மகரந்தப்பொடியை, மாற்றலும் - துடைத்த மாத்திரத்தில், ஆவி என்ன - தன்னுயிரைப்போல, அருகு உறை - பக்கத்திலிருந்த, மாற்றவள் - சக்களத்தியினுடைய, காவி - நீலோற்பலத்தை யொத்த, அம் - அழகிய, கண் கடைகள் - கடைக்கண்கள், சிவந்த - சிவந்தன, எ - று.

க - து. நாயகன் ஒரு நாயகி கண்ணில் விழுந்த மகரந்தத்தைத் துடைத்தவளவில் மற்றொரு நாயகி கண்கள் சிவந்தன என்பதாம்.

தன் கணவன் சக்களத்தியிடத்தி னன்பினன் என்றறிந்து கோபித்தாளென்க. [பூந்துகண் மாற்றலாகிய காரணமோரிடத்தும் கண்

சிவத்தலாகிய காரியம் மற்றோரிடத்தும் கூறலால் தொடர்பின்மை யணி.]

வாங்கு விற்கை வரைபுரை தோளினான்
றேங்கொள் வண்டு திளைப்ப வடுவுறுங்
கோங்க ரும்பினை நோக்கியோர் கோல்வளை
வீங்கு வெம்முலை நோக்கலும் வெள்கினாள்.

இ - ள். வாங்கு வில் - வளைந்தவில்லை, கை - கையிலேயுடைய, வரை புரை - மலையையொத்த, தோளினான் - தோளையுடைய ஒரு புருஷன், தேம் கொள் - தேனை யுண்ணுகிற, வண்டு - வண்டுகள், திளைப்ப - பொருந்த, வடுவுறும் - வடுவுண்ட, கோங்கு-கோங்குமரத்தினது, அரும்பினை - அரும்பை, நோக்கி-பார்த்து, ஓர்-ஒரு, கோல்வளை - மடந்தையினது, வீங்கு - பருத்த, வெம் - விருப்பத்தைத்தருகின்ற, முலை - ஸ்தனங்களை, நோக்கலும் - பார்க்குமளவில், வெள்கினாள் - அவள் வெட்கப்பட்டாள், எ - று.

க - து. ஒரு புருஷன் கோங்குமலரில் வண்டுகள் கிண்டிய வடுவைக்கண்டு ஒரு பெண்முலையைப் பார்த்தவளவில் அவள் வெட்கமடைந்தாள் என்பதாம்.

வடுவுண்ட கோங்கரும்பையும் நகக்குறியுண்ட ஸ்தனங்களையும் ஒப்பாக்கிப் பார்க்குமளவில் அது கண்டு நாணினா ளென்க. (கஉ)

கோதை மார்பனோர் கோல்வளை காதினில்
மாதர் நீலம் புனைதலு மாற்றவள்
நோத கும்படி நோக்கிய நோக்கவள்
காதி லும்புனை காவி நிகர்த்தவே.

இ - ள். கோதை - மாலையணிந்த, மார்பன் - மார்பையுடையவொருவன், ஓர் - ஒரு, கோல்வளை - மாதினது, காதினில்-காதிலே, மாதர் - அழகிய, நீலம் - நீலோற்பலத்தை, புனைதலும்-சூட்டியவளவில், மாற்றவள் - சக்களத்தி, நோதகும்படி-நோகும்படி, நோக்கிய - பார்த்த, நோக்கு - பார்வையானவை, அவள் - அச்சக்களத்தியினது, காதிலும் - காதிலேயும், புனை - சூடிய, காவி-நீலோற்பலத்தை, நிகர்த்த - ஒத்திருந்தன, எ - று.

க - து. கணவன் ஒரு நாயகி காதில் நீலோற்பலந் தரித்தவளவில் அவள் சக்களத்தி பார்த்த பார்வைகள் காதிற்புனைந்த நீலோற்பலத்தை ஒத்திருந்தன என்பதாம். (கங)

கோல நாண்மலர் கொய்பவ ளங்கையி
லோலி டுஞ்சுரும் போச்சவும் போகில
மாலு ழந்தும றிந்து விழுவன
நீல வொண்கழங் காட னிகர்க்குமால்.

இ - ள். கோலம் - அழகு பொருந்திய, நாள் மலர் - புதிய புஷ்பங்களை, கொய்பவள் - பறிக்கின்றவளது, அங்கையில் - உள்ளங்கையில், ஒலிடும் - சத்திக்கின்ற, சுரும்பு - வண்டுகள், ஓச்சவும் - ஓட்டவும், போகில - போகின்றிலவாய், மால் உழந்து - மயக்கமுற்று, மறிந்து - மறிபட்டு மறிபட்டு, விழுவன - அக்கையில் விழுகின்றனவாகி, நீலம் - கறுத்த, ஒள் - பிரகாசம்பொருந்திய, கழங்கு ஆடல்-அம்மனை ஆடலை, நிகர்க்கும் - ஒக்கும், எ - று.

க - து. மலர் கொய்பவள் கையில் வண்டுகள் வீழ்பவை நீலப்ந்துகள் ஆடலை யொப்பாகும் என்பதாம். (கச)

போதுகோய்படலம் முற்றிற்று.

# புனல் விளையாட்டுப் படலம்.

[இப்படலத்தால் போது கொய்தவர்கள் பின்பு அக்காலத்துக்கேற்பப் புனலில் விளையாடல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

இணரவிழ் பொதும்பரி னிளைஞர் யாவரும்
புணர்முலை மகளிரும் போது கொய்தபின்
றுணையொடு மடவன மிரியத் தூநிற
மணிதெளித் தனையநீர் வாவி யெய்தினார்.

இ - ள். இணர்-பூங்கொத்துகள், அவிழ்-விரியாநின்ற, பொதும்பரின் - சோலையில், இளைஞர் யாவரும் - யௌவன புருஷர்களெவர்களும், புணர் - நெருங்கிய, முலை - ஸ்தனங்களையுடைய, மகளிரும் - மாதர்களும், போது-புட்பங்களை, கொய்தபின்-பறித்தபின்பு, துணையொடும் - பெட்டையுடனே, மட அனம் - இளவன்னங்கள், இரிய- ஓட, தூ - வெண்மையாகிய, நிறம்-நிறத்தையுடைய, மணி-முத்தை, தெளித்தனைய - பரப்பியதையொத்த, நீர் - சலத்தையுடைய, வாவி - தடாகத்தை, எய்தினார் - அடைந்தார்கள், எ - று.

க - து. வாலிபர்களும் மாதர்களும் தடாகத்திற் சேர்ந்தார்கள் என்பதாம். (க)

வாணெடுங் கண்ணியர் வாவி யெய்தலுஞ்
சேணிடை நேமியம் புட்கள் செல்லுதல்
யாணர்மென் கோங்கரும் பிடைய வீங்கிய
பூண்முலைக் குடைந்தயல் போதல் போன்றதே.

இ - ள். வாள் - வாளையொத்த, நெடு கண்ணியர்-நீண்ட கணையுடைய மாதர்கள், வாவி - தடாகத்தில், எய்தலும்-அடைதலும், சேணிடை - ஆகாயத்தின்கண், நேமியம் புட்கள் - சக்கரவாகப்பக்ஷிகள், செல்லுதல்-போதலானது, யாணர்-புதுமைபொருந்திய, மெல்-மிருதுவாகிய, கோங்கு அரும்பு - கோங்கரும்புகள், இடைய-தோற்றுப்போக, வீங்கிய - பருத்த, பூண் - ஆபரணத்தை யணிந்த, முலைக்கு - ஸ்தனங்களுக்கு, உடைந்து - தோற்று, அயல்-புறத்தே, போதல் - போய்விடுதலை, போன்றது - ஒத்திருந்தது, எ - று.

க - து. பெண்கள் குளத்துட் சென்றவளவில் சகோரங்கள் பற யவை அப்பெண்கள் முலைக்குத் தோற்றுப் போவனபோலு மிருந் தன என்பதாம். (உ)

மங்கையர் செறிதலு மல்கு நீரிடைப்
பங்கயச் செழுமலர் தாழ்தல் பாவையர்
திங்கள்வாண் முகத்தெழிற் குடைந்து தேங்கமழ்
பொங்குதண் புனலிடை யொளித்தல் போலுமால்.

இ - ள். மங்கையர்-மாதர்கள், செறிதலும்-அடைதலும், மல்கு - நிறைந்த, நீரிடை-சலத்தினிடத்தில், பங்கயம்-தாமரையினது, செழு மலர்-செழுமையாகிய புஷ்பங்கள், தாழ்தல் - மூழ்குதல், பாவையர் - மாதர்களுடைய, திங்கள் - பூர்ண சந்திரனையொத்த, வாள் - பிரகா சம் பொருந்திய, முகத்து எழிற்கு-முகத்தினது அழகிற்கு, உடைந்து- தோற்று, தேம் - வாசனை, கமழ் - பரிமளியாநின்ற, பொங்கு - மிகு ந்த, தண் புனலிடை - குளிர்ந்த நீரினிடத்தில், ஒளித்தல்போலும் - ஒளித்துக்கொள்ளுதலை யொக்கும், எ - று.

க - து. தாமரை நீரிற்றாழ்தல் பெண்கள் முகத்துக்கஞ்சி ஒளித் தல்போலும் என்பதாம்.

மங்கையர் இங்குப் பருவங் குறியாது பொதுப்பட மாதரையே குறித்தது. (௩)

வடுவகிர் நெடுங்கணார் வார்கொள் வெம்முலை
குடைபுனல் வாவியுட் குளித்த லிந்திரன்
படர்சிறை யரிவதற் கஞ்சிப் பாய்திரைக்
கடலிடை மால்வரை யொளித்தல் காட்டுமால்.

இ - ள். வடு வகிர்-மா வடுவினது பிளப்பையொத்த, நெடு கணார்- நெடிய கண்களையுடைய மாதர்களது, வார் கொள் - கச்சையணிந்த, வெம் - விருப்பத்தைத்தரும், முலை - ஸ்தனங்கள், குடை - ஆடா நின்ற, புனல் - சலத்தையுடைய, வாவியுள் - தடாகத்தினுள், குளித் தல் - மூழ்குதல், இந்திரன் - தேவேந்திரன், படர் - விரிந்த, சிறை - இறகை, அரிவதற்கு - அறுத்தற்கு, அஞ்சி-பயந்து, பாய்-பாயாநின்ற, திரை - அலையையுடைய, கடலிடை - சமுத்திரத்தினிடத்தில், மால் வரை - உயர்ந்த மலைகள், ஒளித்தல் - ஒளித்துக்கொள்ளுதலை, காட் டும் - காண்பிக்கும், எ - று. ஆல் - அசை.

க - து. பெண்கள் முலைகள் நீரிலிருத்தல் மைநாகபர்வத மொ ளித்தல்போலும் என்பதாம். (௪)

விரைகமழ் சுண்ணமெய் திமிர்ந்து மென்குழற்
றெரியலின் வீக்குபு தெய்வச் சாந்தணி
வரிமுலை தோன்றிட மகளிர் நீந்துத
னிரைமணிக் குடத்தினு னீந்தல் போலுமால்.

இ-ள். விரை கமழ்-வாசனை பரிமளியாநின்ற, சுண்ணம்-சுகந்த ப்பொடிகளை, மெய் திமிர்ந்து-சரீரத்திற் பூசிக்கொண்டு, மெல் குழல்-மிருதுவாகிய கூந்தலை, தெரியலின் வீக்குபு - மாலையினாலே கட்டி, தெய்வம்-தைவிகமாகிய, சாந்து அணி-சந்தனத்தை யணிந்த, வரி-சந்தனக்கோலத்தையுடைய, முலை - ஸ்தனங்கள், தோன்றிட-தோற்ற, மகளிர் - மாதர்கள், நீந்துதல் - நீந்தலானது, நிரை - வரிசையாகிய, மணிக்குடத்தினுல் - ரத்நகும்பத்தினுல், நீந்தல் போலும் - நீந்தலை யொக்கும், எ - று. ஆல் - அசை.

க - து. மாதர்கள் முலைதோன்றும்படி நீந்துதல் குடங்கொண்டு நீந்துதல் போன்றது என்பதாம்.

வீக்குபு செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்.

படவர வல்குலார் முலையிற் பாய்புன
லுடைதிரைக் கரத்தினுற் பொருத லொண்டிறற்
குடமுனி கருங்கடல் குடித்த வாற்றினுற்
புடைதிரண் மணிக்குடம் புடைத்தல் போன்றதே.

இ - ள். படம் அரவு அல்குலார்-பாம்பின் படத்தை யொத்த நிதம்பத்தையுடைய மாதரது, முலையில்-ஸ்தனங்களின்மீது, பாய்-பாயாநின்ற, புனல் - சலமானது, உடை - உடையாநின்ற, திரை கரத்தினுல் - அலையாகிய கையினுல், பொருதல் - மோதுதல், ஒள் திறல் - பிரகாசமாகிய வல்லமையையுடைய, குடமுனி - அகஸ்தியர், கருங் கடல் - கருங்கடலை, குடித்த ஆற்றினுல் - பானம்பண்ணிய நெறியினுல், புடை - பக்கங்களில், திரள் - திரண்ட, மணி குடம் - ரத்நக் குடத்தை, புடைத்தல் போன்றது - அடித்தலை யொத்திருந்தது, எ - று. ஏ - அசை.

க - து. மாதர்கள் முலை அகஸ்தியர் கமண்டலத்தை ஒத்திருந்தது என்பதாம்.

அகத்தியர் குடத்திற் பிறந்தமையால் அவரைக் குடமுனி என்றார்.

சிற்றிடை யொருத்திதன் றிலக வாண்முகக்
தெற்றுநீர் காதல னிறைப்பக் காண்டலு

மற்றது பொறுக்கலா துயிர்த்து மாழ்கிய
முற்றிழை மழைக்கணீர் முகனி றைந்தவே.

இ - ள். சிறு இடை-சிறிய இடையையுடைய, ஒருத்தி தன்-ஒரு மாதினது, திலகம் - திலதப்பொட்டை யணிந்த, வாள் முகத்து-பிரகாசம் பொருந்திய முகத்தினிடத்தில், எற்று - மோதுகின்ற, நீர் - சலத்தை, காதலன் - புருஷன், இறைப்ப - இறைக்க, காண்டலும் - பார்த்தவளவில், அது - அதை, பொறுக்கலாது - பொறுக்கமாட்டாமல், உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, மாழ்கிய - மயங்கிய, முற்றிழை - சக்களத்தியினது, மழை கண் நீர் - குளிர்ச்சிபொருந்திய கண்ணீரானது, முகம்-முகத்தில், நிறைந்த-நிரம்பிய, எ-று. மற்று, ஏ-அசைகள்.

க - து. நாயகன் ஒருநாயகி முகத்திலே நீரையிறைக்கக் கண்டவளவில் மற்றொரு நாயகி யழுதாள் என்பதாம். (எ)

நாள்விழ வயர்ந்தவ ணாணிக் காதலன்
றோளணி சாந்தநீர் தோய்ந்து நீக்கலும்
வாளுகி ருழுதமெய் வடுக்கண் டேங்குறு
மீளவு முளநனி வெள்கி னாளரோ.

இ - ள். நாள் - புதிதாக, விழவு அயர்ந்தவள்-கலியாணம் பண்ணப்பட்டவள், நாணி - வெட்கப்பட்டு, காதலன் - புருஷனது, தோள்அணி - தோள்களினின்றுமணிந்த, சாந்தம் - சந்தனத்தை, நீர் தோய்ந்து - நீரிற்குளித்து, நீக்கலும் - போக்கியவளவில், வாள் - வாள்போன்ற, உகிர் - நகங்கள், உழுத - கிழித்த, மெய் - சரீரத்தில், வடு கண்டு - குறிகளைப் பார்த்து, ஏங்குறு - இரங்கி, மீளவும் - மறுபடியும், உளம் - மனதில், நனி - மிகவும், வெள்கினாள் - வெட்கமுற்றாள், எ - று. அரோ-அசை.

க - து. புதுமணப்பெண் மூழ்கிச் சந்தனத்தை நீக்கினவளவில் கணவன் நகக்குறி தன் மெய்யிற்கண்டு வெட்கினாள் என்பதாம்.

ஏங்குறு செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (அ)

இன்னண மாடுத னோக்கி யெய்திய
மன்னவர் மன்னனு மருங்கு தேய்த்துயர்
பொன்னவி ரிளமுலைப் பூவைதன் னொடுந்
துன்னுநீர்ப் போர்த்தொழில் தொடங்கி னானரோ.

இ - ள். இன்னணம் - இத்தன்மையாக, ஆடுதல் - விளையாடுதல், நோக்கி - பார்த்து, எய்திய - அத்தடாகத்தினிடத்திலே வந்த, மன்னவர் மன்னனும்-அரசர்க்கரசனாகிய நளமகாராசனும், மருங்கு

தேய்த்து - இடையைத்தேய்த்து, உயர் - உயர்ந்த, பொன் அவிர் - தேமல் பிரகாசியாநின்ற, இள-இளமை பொருந்திய, முலை - ஸ்தன ங்களையுடைய, பூவை தன்னொடும்-தமயந்தியினோடும், துன்னு-நெரு ங்கிய, நீர் போர் தொழில் - சலக்கிரீடையை, தொடங்கினன் - ஆரம் பித்தான், எ - று. அரோ - அசை.

க - து. நளன் தமயந்தியினோடு நீர்விளையாடத் தொடங்கினன் என்பதாம்.

பூவை-உவமையாகு பெயர். (கூ)

சுண்ணமென் சிவிறிநீர் தூரக்கு மெந்திர
மெண்ணில தாங்கிவே லனைய வேந்தலைப்
பெண்ணலங் கனிந்தொளிர் பேதை தன்னொடு
மண்ணிய மணியனார் வளைந்திட் டாரரோ.

இ - ள். சுண்ணம் - சுகந்தப்பொடிகளையும், மெல் - மிருதுவா கிய, சிவிறி - துருத்தியையும், நீர் தூரக்கும் எந்திரம் - நீரிறைக்குங் குழல்களையும், எண்ணில - அளவில்லாமல், தாங்கி - எடுத்துக்கொ ண்டு, வேல் அனைய - மன்மதனையொத்த, வந்தலை-நளமகாராசனை, பெண் நலம் - பெண்டன்மை, கனிந்து - பழுத்து, ஒளிர் - பிரகாசி யாநின்ற, பேதை தன்னொடும் - தமயந்தியோடுகூட, மண்ணிய - கழுவிய, மணி அனார்-ரத்நத்தையொத்த பெண்கள், வளைந்திட்டார்- வளைந்துகொண்டார்கள், எ - று. அரோ-அசை.

க - து. பெண்கள் நீர்த்துருத்தி யெடுத்துத் தமயந்தியோடு நள னைச் சூழ்ந்தார்கள் என்பதாம்.

பேதை-பருவங் குறியாது பெண்பொதுவையே குறித்தது. (௬0)

துன்னிருங் கூந்தலார் தூரந்த தாரைகண்
மன்னவன் றோள்களிற் பாய்தல் வானிடை
மின்னினங் காரொடு மிடைந்து மென்புனல்
பொன்னெடுங் குன்றின்மேற் பொழிதல் போன்றதே.

இ - ள். துன்னு - நெருங்கிய, இரு - பெருமை பொருந்திய, கூந்தலார் - கூந்தலையுடைய மாதர்கள், தூரந்த-தூவிய, தாரைகள் - நீர்த்தாரைகள், மன்னவன் - நளமகாராசனுடைய, தோள்களில்-புச ங்களில், பாய்தல் - வீழ்தலானது, வானிடை-ஆகாசத்தி னிடத்தில், மின் இனம் - மின்னற்கூட்டம், காரொடும்-மேகத்துடனே, மிடை ந்து - நெருங்கி, மெல் - மிருதுவாகிய, புனல் - சலத்தை, பொன் நெடு குன்றின்மேல் - நெடிய மகாமேருவின்மீது, பொழிதல் போன் றது - பொழிதலை ஒத்திருந்தது, எ - று. ஏ - அசை.

க-து. பெண்கள் நளன்தோள்மேல் நீரிறைத்தல் மேகம் பொன் மலைமேற் பொழிதல் போன்றது என்பதாம்.

மேருமலை பொன்னானியன்றதாதலால் அதனைப்'பொன்னெடுங் குன்று' என்றார். (கக)

அரசர்கோன் குலிகநீர்த் தாரை யாயிரஞ்
சுரிகுழன் மடந்தையர் முகத்திற் றாவுதன்
முருகவிழ் தாமரை மலரின் மோட்டிளம்
பரிதிசெங் கதிர்க்குழாம் பாய்தல் போன்றதே.

இ - ள். அரசர்கோன்-ராசாதிராசனாகிய நளமகாராசன், குலிக நீர் - இங்குலிகநீரினது, தாரை ஆயிரம் - ஆயிரந்தாரைகளை, சுரி - சுழித்த, குழல் - கூந்தலையுடைய, மடந்தையர் - மாதருடைய, முக த்தில் - முகங்களில், தாவுதல் - இறைத்தலானது, முருகு - தேன், அவிழ் - விரியாநின்ற, தாமரை மலரின் - தாமரைப்புஷ்பத்தினிடத் தில், மோட்டிளம் - மிகுந்த இளமை பொருந்திய, பரிதி - சூரிய னுடைய, செம் கதிர் குழாம் - சிவந்த கிரணக்கூட்டங்கள், பாய்தல்- வீழ்தலை, போன்றது - ஒத்திருந்தது, எ - று. ஏ - ஈற்றசை.

க - து. நளன் பெண்கள் முகத்தில் நீர்த்தாரை தாவுதல் தாம ரைமலரில் சூரியகிரணம் பாய்தல்போன்றது என்பதாம்.

மடந்தையர் பெண்பொது, பருவங் குறித்ததன்று. முருகு மண முமாம். (கஉ)

விரைகமழ் சுண்ணமும் வீசு சாந்தமு
மரசனாண் டெறிதலு மாற்ற லாமையாற்
குரைகடல் குளித்திடு மின்னிற் கோதைய
ருரவுநீர் வாவியி லொளித்திட் டாரரோ.

இ - ள். விரை - வாசனை, கமழ்-பரிமளியாநின்ற, சுண்ணமும்- கந்தப்பொடிகளையும், வீசு - வாசனையை வீசாநின்ற, சாந்தமும் - சந் தனத்தையும், அரசன்-நளமகாராசன், ஆண்டு - அவ்விடத்தில், எறி தலும் - வீசலும், ஆற்றலாமையால் - பொறுக்கமாட்டாமையினால், குரை - சத்தியாநின்ற, கடல் - சமுத்திரத்தில், குளித்திடும் - மூழ்கு கின்ற, மின்னின் - மின்னலைப்போல், கோதையர் - மாதர்கள், உரவு - விரிந்த, நீர்-சலத்தையுடைய, வாவியில் - தடாகத்தில், ஒளித் திட்டார் - ஒளித்துக்கொண்டார்கள், எ - று. அரோ - அசை.

க - து. நளன் கந்தபொடியையுஞ் சந்தனத்தையு மெறிதலுக்குச் சகியாமல் பெண்கள் வாவியி லொளித்தார்கள் என்பதாம்.

வாவி வாபீயென்னும் வடசொற்றிரிபு. (கங

வாமமே கலையினார் வளர்ந்த வெம்முலை
நேமியம் புள்ளென நீருட் காட்டுவார்
காமர்வாண் முகத்தினைக் கமலஞ் சேர்த்தித்தண்
டாமரை யெனமணித் தடத்தின் மூழ்குவார்.

இ - ள். வாமம் - அழகுபொருந்திய, மேகலையினார் - மேகலாபரணத்தையுடைய மாதர்கள், வளர்ந்த - வளர்ந்த, வெம் - விருப்பத்தைத் தராநின்ற, முலை - ஸ்தனங்களை, நேமியம் புள் என - சக்கிரவாக பக்ஷியென்று, நீருள் காட்டுவார் - ஜலத்துக்குள்ளே காட்டுவார்கள்; காமர் - அழகிய, வாள் - பிரகாசம்பொருந்திய, முகத்தினை - முகத்தை, கமலம் சேர்த்தி - தாமரைப் புஷ்பத்துடனே சேர்த்து, தண் - குளிர்ச்சிபொருந்திய, தாமரை என - தாமரைப் பூவென்று சொல்லி, மணி - முத்தையுடைய, தடத்தின் - தடாகத்தில், மூழ்குவார் - மூழ்குவார்கள், எ - று.

க - து. பெண்கள் முலைகளைச் சகோரம்போலக் காட்டுவார்கள், முகத்தைத் தாமரையோடுசேர்த்து மூழ்குவார்கள்என்பதாம்.

மணி - அழகெனினுமாம். (கச)

தோற்றதன் பெரும்படை துளங்கி நாமினி
யாற்றல மெனமல ரடியிற் சேர்தலுங்
கோற்றொடி யலங்கலங் குன்றன் னானொடு
மேற்றன ளெரிமணிச் சிவிறி யேந்தியே.

இ - ள். தோற்ற - தோற்றுப்போன, தன் - தன்னுடைய, பெரு படை - பெரிய சேனைகள், துளங்கி - நடுங்கி, நாம் - நாங்கள், இனி - இனிமேல், ஆற்றலம் என - பொறுக்கமாட்டோமென்று, மலர் அடியில் - தாமரைமலரினையொத்த பாதத்தில், சேர்தலும் - அடையுமளவில், கோற்றொடி - தமயந்தியானவள், அலங்கல் - மாலையணிந்த, அம் - அழகிய, குன்று அன்னானொடும் - மலையையொத்த நளமகாராசனுடனே, எரி - பிரகாசியாநின்ற, மணி - ரத்நத்தாற் செய்த, சிவிறி - நீர் தூற்றுந் துருத்தியை, ஏந்தி - தாங்கி, ஏற்றனள் - எதிர்த்தாள், எ - று.

க - து. தமயந்தி நீர்வீசுந் துருத்திகொண்டு நளனொடு எதிர்த்தாள் என்பதாம்.

கோற்றொடி இரண்டாம் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இதற்கு புள்ளிகளையுடைய வளையலை யணிந்தவள் என்பதுபொருள். (கரு)

ஓவிய ரெழுதரு முருவப் பூங்கொடிக்
கோவைவார் மணிவடக் கொம்மை வெம்முலைத்
தூவினீ ருறுமெனச் சுடர்செய் பூணினு
ளாவியந் துகில்கரந் தமையத் தூவினன்.

இ - ள். ஓவியர் - சித்திரக்காரராலே, எழுத அரும்-எழுதுதற்கரிய, உருவம் - வடிவத்தையுடைய, பூங்கொடி - தமயந்தியினது, கோவை - கோத்திருக்கிற, வார் - நீண்ட, மணி வடம் - முத்துமாலை பணிந்த, கொம்மை - இளமை பொருந்திய, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலை - ஸ்தனங்களில், தூவில் - நீரைத்தூவில், நோவுறும் என - வருந்துவளென்று, சுடர் செய்-பிரகாசிக்கின்ற, பூணினன்-ஆபரணத்தையுடைய நளமகாராஜன், ஆவி - பாலாவியையொத்த, அம் - அழகிய, துகில் - வஸ்திரத்தால், கரந்து-மறைத்து, அமைய - நிறைய, தூவினன் - இறைத்தான், எ - று.

க - து. நளன் தமயந்தியின்மேல் நீரிறைத்தான் என்பதாம். ()

அந்துகி லனைதலி னல்குறு றோன்றுதல்
கந்தடு களிற்றினன் காண வெள்குறூச்
சுந்தரச் சுண்ணநீர் முகத்திற் றூயவன்
சந்தணி தடம்புயந் தழுவி னாளரோ.

இ - ள். அம் துகில் - அழகியவஸ்திரம், நனைதலின் - நனைந்ததில், அல்குல் - நிதம்பமானது, தோன்றுதல் - தோன்றுதலை, கந்து அடு - கட்டுத்தறியை முறிக்காநின்ற, களிற்றினன்-யானையையுடைய நளன், காண - பார்க்க, வெள்குறூ-வெட்கமுற்று, சுந்தரம்-அழகிய, சுண்ணநீர் - கந்தப்பொடிகலந்தநீரை, முகத்தில் தூய் - முகத்திலே யிறைத்து,அவன் - அவ்வரசனுடைய, சந்தணி - சந்தனமணிந்த, தடம் புயம் - பருத்ததோள்களை, தழுவினள் - தழுவிக்கொண்டாள், எ - று. அரோ - அசை.

க - து. தன்னுடைய அவயவங்களை நளன் பார்க்குமளவில் அது கண்டு நாணிய தமயந்தி அவன் பாராமைக்கு அவன் முகத்தில் நீர் தூவியதுமன்றி மடமையால் தழுவினளென்க.

வெள்குறூ செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (கள)

[இனி யிரண்டுபாட்டால் ஜலக்கிரீடை செய்தபின் தமயந்தி யலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

அலர்முலை யம்மருங் ககறு நாமெனக்
கலுழ்வபோற் றண்டுளி காலு மேகலை

நிலவுமிழ் பூணினு ணீக்கி யேர்பெற
விலகிவில் லுமிழ்கலை வீக்கி னளரோ.

இ - ள். அலர் முலை - தமயந்தியினது, அம் மருங்கு - அழகிய இடையை, அகறும் - நீங்குவோம், நாம் என - நாமென்று, கலுழ்வ போல்-அழுகின்றதுபோல், தண் துளி - தண்ணியதுளிகளை, காலும்- சொரியும், மேகலை - மேகலாபரணத்தை, நிலவு - பிரகாசத்தை, உமிழ் - உமிழாநின்ற, பூணினள் - ஆபரணத்தையுடைய தமயந்தி, நீக்கி - அகற்றி, ஏர் பெற - அழகுபெற, விலகி - விட்டுவிட்டு, வில்- பிரகாசத்தை, உமிழ் - கக்காநின்ற, கலை - ஆடையை, வீக்கினள் - கட்டிக்கொண்டாள், எ - று. அரோ - அசை.

க - து. தமயந்தி மேகலையை நீக்கி வேறோ ராடையையுடுத்திக் கொண்டாள் என்பதாம்.

பூணினள் மேகலை நீக்கி கலைவீக்கினளெனக் கூட்டுக. அலர் முலை வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். அடிபரந்தமுலையையுடையவ ளென்பதிதன்பொருள்.

நகைநிலாத் தவழ்ந்தென நானங் கோட்டிய
முகிழ்முலை முன்றிலின் முத்தந் தாங்கின
ளகினறுந் தூமமென் குழலி லம்மலர்ச்
சிகழிகை வேய்ந்தன டிலகந் தீட்டினள்.

இ - ள். நகை - ஒளியையுடைய, நிலா - சந்திரிகை, தவழ்ந்து என-தவழ்ந்ததுபோல, நானம் கோட்டிய - கஸ்தூரியப்பிய, முகிழ் - அரும்பையொத்த, முலைமுன்றிலில் - ஸ்தநப்ரதேசத்தில், முத்தம் - முத்துவடத்தை, தாங்கினள் - தரித்தாள்; அகில் - அகிலினுடைய, நறு தூமம்-நறியபுகை யூட்டிய, மெல் குழலில் - மெல்லிய கூந்தலில், அம் - அழகிய, மலர் சிகழிகை - மலர்மாலையை, வேய்ந்தனள் - தரித் தாள்; திலகம்-திலதப்பொட்டை, தீட்டினள் - எழுதினள், எ - று.

க - து. தமயந்தி முத்துவடமணிந்தாள், மாலைதரித்தாள், திலதமிட்டாள் என்பதாம்.

முகிழ் - கோங்கரும்பு, அன்றித் தாமரையரும்பெனினுமாம்.

களிச்சுரும் பரற்றுதார்க் காளை காமநோய்
தளிர்த்தெழ மடமயிற் சாய றன்னொடுந்
துளிப்புயல் கண்படு சோலை நாப்பணோர்
பளிக்கு மேனிலை மலர்ப்பள்ளி மேவினன்.

இ - ள். களி - களிப்பையுடைய, சுரும்பு - வண்டுகள், அரற்று தார் - சத்தியாநின்ற பூமாலையையுடைய, காளை - நளமகாராசனானவன், காம நோய் - விரகநோயானது, தளிர்த்து எழ-அதிகரிக்க, மடமயில் சாயல் தன்னொடும் - தமயந்தியுடனே, துளி புயல்-துளியையுடைய மேகங்கள், கண் படு - நித்திரை செய்யாநின்ற, சோலை நாப்பண் - சோலைக்கு மத்தியத்தில், ஓர் பளிக்கு மேல் நிலை - ஒரு பளிங்கினாற்செய்த மேலுப்பரிகையில், மலர் பள்ளி - புட்ப சயனத்தில், மேவினான் - சேர்ந்தான், எ - று.

க - து. நளன் விரகமதிகரிக்கத் தமயந்தியுடன் சோலையிற் பளிங்கு மேன்மாடத்து மலர்ப்பள்ளியுட் சேர்ந்தானென்பதாம்.

களிச்சுரும்பரற்று என்கிற விசேடணத்தால் தார் பூமாலைக்காயிற்று. மயிற்சாயல் - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (உ0)

அரிக்குரற் கிண்கிணி சிலம்பொ டார்த்தன
புரிக்குழன் மலர்மழை பொழிந்து பொங்கிய
வரிச்சிறைத் தும்பிபாட் டயர்ந்த மங்கைதன்
திருக்கிளர் முலைநலஞ் செம்ம லுண்ணவே.

இ - ள். மங்கைதன் - தமயந்தியினது, திரு கிளர் - அழகுமிகுந்த, முலை நலம் - ஸ்தனத்தினதின்பத்தை, செம்மல்-நளமகாராசன், உண்ண - அனுபவியாநிற்க, அரி - தவளையினது, குரல் - குரலையொத்த, கிண்கிணி-சதங்கைகள், சிலம்பொடு - சிலம்புடனே, ஆர்த்தன-ஆரவாரித்தன; புரி - கட்டுப்பட்ட, குழல்-கூந்தல், மலர் மழை-புஷ்பவருஷத்தை, பொழிந்து - சொரிந்து, பொங்கிய - மிகுந்தன; வரி - நீண்ட, சிறை - இறகையுடைய, தும்பி-வண்டுகள், பாட்டு அயர்ந்த-பாட்டைப்பாடின, எ - று. ஏ - அசை.

க - து. நளன் தமயந்தியை யனுபவிக்கக் காலில் கிண்கிணி சிலம்புகள் சத்தித்தன, கூந்தலில் வண்டுகள் பாடின என்பதாம். (உக)

ஏந்திள வனமுலை சாட வீர்நறுஞ்
சாந்துதிர்ந் தெதிரெழி றவழு மார்பினான்
பூந்துணர் பொதுளிய பொதும்பர் நாப்பணோர்
வாய்ந்தபூங் கொடியொடு மணந்து வைகினான்.

இ - ள். ஏந்து-ஏந்திய, இள-இளமையாகிய, வனம் முலை-அழகிய ஸ்தனங்கள், சாட - மோத, ஈர்-குளிர்ச்சியும், நறு - வாசனையும்

பொருந்திய, சாந்து உதிர்ந்து-சந்தனமழிந்து, எதிர்-நேராக, எழில் தவழும் - அழகுபொருந்திய, மார்பினன் - மார்பையுடைய நளன், பூந்துணர் - பூங்கொத்துகள், பொதுளிய - நெருங்கிய, பொதும்பர் சோலையினுடைய, நாப்பண் - மத்தியத்தில், ஓர்-ஒப்பற்ற, வாய்ந்த - தனக்குக்கிடைத்த, பூங்கொடியொடு-தமயந்தியினுடனே, மணந்து - கூடி, வைகினன் - இருந்தான், எ - று.

க - து. தமயந்தியுடன் கூடியிருந்தான் என்பதாம்.

பூங்கொடி - உவமையாகுபெயர். (உஉ

புனல்விளையாட்டுப்படலம் முற்றிற்று.

# சூதாடுபடலம்.

[இப்படலத்தால் குறைவின்றிய செல்வத்தை யனுபவிக்கும் நளன் விதிவழியால் அளவிறந்த துன்ப மநுபவித்தற்குக் காரணமாகிய சூதாடல் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

வாம்பரித் தேரி னானு மாழையொண் கண்ணி னாளு
மேம்பலோ டினிது புல்லி யிடைவிடா தொழுகு நாளி
லாம்பலம் போது காட்டு மணிதிகழ் பவளச் செவ்வாய்க்
காம்புறழ் தோளி னாட்குக் கருப்பம்வந் துற்ற தன்றே.

இ - ள். வாம் - தாவாநின்ற, பரி தேரினானும்-குதிரை கட்டிய தேரையுடைய நளமகாராசனும், மாழை - மாவடுவையொத்த, ஒள் - பிரகாசம்பொருந்திய, கண்ணினாளும் - கண்ணையுடைய தமயந்தியும், ஏம்பலோடு - அகமலர்ச்சியுடனே, இனிது புல்லி - இனிமையாகத் தழுவி, இடைவிடாது - நீங்காது, ஒழுகுநாளில் - நடக்கு நாளிலே, ஆம்பல் அம்போது-செவ்வல்லிமலரை, காட்டும்-காட்டுகின்ற, அணி திகழ் - அழகு பிரகாசியாநின்ற, பவளம்-பவளத்தை யொத்த, செவ் வாய் - சிவந்த வாயையும், காம்பு - மூங்கிலை, உறழ் - ஒத்த, தோளினாட்கு - தோளையுமுடைய தமயந்திக்கு, கருப்பம் வந்துற்றது-கர்ப்ப மூண்டாயிற்று, எ - று.

க - று. தமயந்தி கருப்ப மடைந்தாள் என்பதாம். (க)

[இதனால் தமயந்தியின் கருப்பக்குறிகள் சொல்லப்படுகின்றன.]

மெலியுநுண் மருங்கு தோன்ற வேயிளந் தோள்க டேம்ப
நலனுறு செய்ய மேனி பாசொளி நரம்பு காட்ட
வலர்சுணங் கணிந்து வீங்கி யழகுவீற் றிருந்த பொம்மன்
முலைமுகங் கருகிச் செவ்வி முகமதி விளர்த்த தன்றே.

இ - ள். மெலியும் - வாடாநின்ற, நுண் - நுட்பமான, மருங்கு - இடையானது, தோன்ற - காண, வேய் - மூங்கிலையொத்த, இள - இளமையாகிய, தோள்கள் - தோள்கள், தேம்ப-வாட, நலன் உறு - நன்மைபொருந்திய, செய்ய மேனி - சிவந்தவுடம்பு, பாசு ஒளி-பசிய வொளியையுடைய, நரம்பு காட்ட-நரம்புகளைத் தோற்றுவிக்க, அலர்-

அடிபரந்த, சுணங்கு - தேமலை, அணிந்து - தரித்து, வீங்கி-பருத்து, அழகு வீற்றிருந்த - அழகானது தங்கியிருந்த, பொம்மல் - பொலிவை பொருந்திய, முலை முகம் - ஸ்தனங்களின் முகங்கள், கருகி-கறுத்து, செவ்வி-அழகையுடைய,முகம் மதி-முகமாகிய பூர்ணசந்திரன், விளர்த்தது - வெண்மை யடைந்தது, எ - று. அன்று,. ஏ - அசைகள்.

க - து. தமயந்தி யிடைதோன்ற தோள்கள் வாடப் பசிய நரம்பு காண முலைமுகங்கருகி முகம் வெளுத்தது என்பதாம். (உ)

குழைமுகங் கிழித்து நீண்ட கொழுங்கடை மழைக்கட் பேதை, பொழிகதிர்த் திங்கள் காட்டும் வலம்புரி வருந்திப் பொங்கி, யொழுகொளி நிலவு காலு நித்தில முயிர்த்த தென்ன, மழகளி றனைய தோற்ற மாணிளங் குழவி யீன்றாள்.

இ - ள். குழை முகம் - காதின் முகத்தை, கிழித்து - கிழித்து நீண்ட - நீண்டிருக்கிற, செழு-கொழுமையாகிய, கடை - கடையை யுடைய, மழை கண்-குளிர்ச்சி பொருந்திய கண்ணையுடைய, பேதை - தமயந்தியானவள், பொழி - சொரியாநின்ற, கதிர் - கிரணங்களை யுடைய, திங்கள் - சந்திரனைப்போல, காட்டும்-தன்னைத் தோற்றுவிக்கும், வலம்புரி - வலம்புரிச் சங்கமானது, வருந்தி - வருத்தமுற்று, பொங்கி - பிரகாசித்து, ஒழுகு - மிகுந்த, ஒளி - காந்தியையுடைய, நிலவு - சந்திரிகையை, காலும் - கக்காநின்ற, நித்திலம் - முத்தை, உயிர்த்தது என்ன-பெற்றதுபோல, மழ-இளமை பொருந்திய, களிறு அனைய - யானையையொத்த, தோற்றம் - காட்சியையுடைய, மாண் - மாட்சிமையாகிய, இளங்குழவி - இளமை பொருந்திய ஆண் குழந்தையை, ஈன்றாள் - பெற்றாள், எ - று.

க - து. தமயந்தி ஒரு ஆண்பிள்ளையைப் பெற்றாள் என்பதாம்.

மழகளிறனைய என்ற விசேடணத்தால் குழவி ஆண் குழந்தையைக் குறித்தது. (ங)

மழகளி றனைய நம்பி பிறையென வளரு நாளிற் [கள்
கழைபுரை தோளி பின்னோர் கன்னியை யுயிர்த்தாண் மக்
குழலினுங் கனிந்த வந்தீங் குதலைகேட் டுருகி வெய்ய
முழைபுகு சீய மன்ன னுவகையின் மூழ்கி னானே.

இ - ள். மழ - இளமைபொருந்திய, களிறு அனைய - யானையை யொத்த, நம்பி-பிள்ளையானவன், பிறை என-மூன்றாம் பிறைபோல, வளரும்நாளில்-வளர்ந்து வருங்காலத்தில், கழைபுரை-மூங்கிலை யொத்த, தோளி - தோளையுடைய தமயந்தி, பின்-பின்பு, ஓர் கன்னியை-

ஒரு பெண்ணை, உயிர்த்தாள் - பெற்றாள்; மக்கள் - இரண்டு குழந்தைகளுடைய, குழலினும் - வேய்ங்குழலோசையினும், கனிந்த - கனிவாகிய, அம் - அழகிய, தீங்குதலை - தித்திப்புப் பொருந்திய மழலைச் சொல்லை, கேட்டு உருகி-கேட்டுள்ளுருகி, வெய்ய - வெவ்வியதாகிய, முழை - குகையில், புகும் - நுழையாநின்ற, சீயம் அன்னான்-சிங்கத்தையொத்த நளமகாராசன், உவகையில்-சந்தோஷசாகரத்தில், மூழ்கினான் - அழுந்தினான், எ - று. ஏ - அசை.

க - து. பிள்ளை வளர்ந்துவருங்காலையில் தமயந்தி யொருபெண் பிள்ளையைப் பெற்றாள். நளம்காராசனும் மக்களின் குதலையைக் கேட்டு மகிழ்ந்திருந்தான் என்பதாம்.

நம்பி - ஆண்பாற் பெயர். மூழ்கினான் என்பதற்கேற்ப உவகை சந்தோஷசாகர மெனப்பட்டது. (ச)

நிழலுமிழ்ந் துதிரங் காலும் வயிரவா ணிடதர் கோமா
னெழுபுவி வேந்தர் யாரு மிடுதிறை கொணர்ந்தெஞ் ஞான்
றொழுதன ரேத்தி நிற்பத் தொடுகட லுடுத்த ஞால [றுந்
முழுவது மொருகோ லோச்சி முறைவழா தளித்தா னன்றே.

இ - ள். நிழல் - பிரகாசத்தை, உமிழ்ந்து - சொரிந்து, உதிரம் காலும் - ரத்தத்தைக் கக்கும், வயிரவாள்-கூரியவாளையுடைய, நிடதர் கோமான் - நளமகாராசன், எழு புவி - சப்தத்தீவிலுமுள்ள, வேந்தர் யாரும் - அரசரெல்லாரும், இடு திறை-இடாநின்ற கப்பங்களை, கொணர்ந்து - கொண்டுவந்து, எஞ்ஞான்றும்-எந்தநாளும், தொழுதனர்-வணங்கினவராய், ஏத்தி - துதித்து, நிற்ப - நிற்க, தொடு - தோண்டிய, கடல் உடுத்த - சமுத்திரஞ்சூழ்ந்த, ஞாலம் முழுவதும் - உலக முழுமையும், ஒரு கோல் ஓச்சி-ஒரு செங்கோலைச் செலுத்தி, முறை வழாது - கிரமந்தப்பாது, அளித்தான் - ரட்சித்துக்கொண்டுவந்தான், எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. நளன் அரசர் திறைகொடுக்க உலகத்தை யாண்டு வந்தான் என்பதாம்.

தொழுதனர்-முற்றெச்சம். (ரு)

கோவடு குருதி வேலான் கொழுஞ்சுடர் பட்ட காலைச்
சேவடி கழுவ லின்றிச் செல்கடன் கழித்த ஞான்றைக்
காவலற் சேருங் காலங் கருதுபன் னீ ராண்டு
மேவருந் தான்றி யுற்ற வெங்கலி பேயி னானே.

இ - ள். கோ - (சத்துருக்களாகிய) ராசாக்களை, அடு - கொல்லாநின்ற, குருதி - இரத்தந்தோய்ந்த, வேலான் - வேலாயுதத்தையுடைய நளன், கொழு - செழித்த, சுடர் - சூரியன், பட்டகாலை - அஸ்தமித்தபொழுது, சேவடி - சிவந்த பாதங்களை, கழுவலின்றி - கழுவாமல், செய் கடன் - செய்யத்தக்க நித்தியகருமத்தை, கழித்தல் நோக்கி - செய்து முடித்தலைப்பார்த்து, காவலன் - அரசனை, சேரும் காலம் - அடையுங்காலம், (எதுவென்று) கருதுபு - நினைத்து, பன்னீராண்டு-பன்னிரண்டு வருஷம், மேவரும்-அடைதற்கரிய, தான்றி உற்ற - தான்றிமரத்தின்கண்ணிருந்த, வெம் கலி - வெவ்விய கலிபுருடன், மேயினன் சேர்ந்தான், எ - று. (சா)

க - து. நளன் திருவடி கழுவாது செய்த கருமத்தைக் கண்டு தான்றி மரத்திலிருந்து சனிபகவான் அந்நளனைச் சேர்ந்தான் என்பதாம்.

கலிவிருத்தம்.

விட்புலத் தரசரு மேனை வேந்தரும்
வட்கவிம் மன்னவன் மல்லன் மார்பகம்
பெட்புறு மடந்தையைப் பிரிப்பன் யானெனப்
புட்கரன் பாற்கலி போயி னனரோ.

இ - ள். விண் புலத்து - தெய்வலோகத்திலிருக்கும், அரசரும் - இந்திராதிதேவரும், ஏனை வேந்தரும் - பூலோகத்தரசரும், வட்க - நாணமடைய, இ மன்னவன் - இந்த நளனுடைய, மல்லல் - வலிமைபொருந்திய, மார்பகம் - மார்பினிடத்தை, பெட்பு உறும் - விரும்பும், மடந்தையை - தமயந்தியை, பிரிப்பன்-பிரித்துவிடுவேன், யான் என - நானென்று, புட்கரன்பால் - புட்கரராஜனிடத்தில் கலி - கலிபுருஷன், போயினன் - போனான், எ - று. அரோ - அசை.

க - து. சனிபகவான் நளனைவிட்டுத் தமயந்தியைப் பிரிப்பேனென்று புட்கரனிடத்திற் போனான் என்பதாம்.

மடந்தை-பருவங்குறியாது மாது என்னுந் துணையாய்நின்றது.()

வருகலி புட்கரன் வதன நோக்குறாக்
குரைகழ னளனெனுங் கொற்ற வேந்தனே
யொருகுடை நீழலி னுலகங் காத்திட
விருநிலக் கிழமைநீ யிழந்த தென்கொலோ.

இ - ள். வரு கலி - வந்தகலியனனவன், புட்கரன்-புட்கரராஜனது, வதனம் - முகத்தை, நோக்குறா - பார்த்து, குரை கழல் - சத்தி

யாநின்ற வீரக்கழலையணிந்த, நளன் எனும் - நளனென்று சொல்லப்பட்ட, கொற்றம் - வெற்றியையுடைய, வேந்தனே - அரசனே, ஒரு குடைநீழலின் - ஏகச்சத்திராதிபதியாய், உலகம் காத்திட - இவ்வுலகத்தைரக்ஷிக்க, இரு-பெருமைபொருந்திய, நிலம் கிழமை - அரசாட்சியை, நீ - நீ, இழந்தது - கைவிட்டது, என்கொலோ - யாதுகாரணமோ, எ - று.

க - து. சனிபகவான் புட்கரனைப் பார்த்து உலகெலாம் நளன் ஆள நீ அரசாட்சியிழந்த தென்னவென்றான் என்பதாம்.

நோக்குறு - செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (அ)

வாட்டிறல் வேந்தனை மடந்தை தன்னொடுங்
காட்டிடைப் புகுத்திமண் காக்கு மன்னருன்
றாட்டுணை தொழுநறுந் தாம நீண்முடி
சூட்டுவ னினக்கெனச் சொல்லி னானரோ.

இ - ள். வாள் திறல் - வாட்போரில் வெற்றியையுடைய, வேந்தனை - நளராஜனை, மடந்தை தன்னொடும் - மனைவியுடனே, காட்டிடை புகுத்தி - காட்டினிடத்தில் போகச்செய்து, மண் - உலகத்தை, காக்கும் - ரக்ஷிக்காநின்ற, மன்னர் - அரசர்கள், உன்-உன்னுடைய, தாள் துணை - உபயபாதங்களை, தொழ - வணங்க, நறு-வாசனைபொருந்திய, தாமம் - மாலையணிந்த, நீள் முடி - நீண்ட கிரீடத்தை, நினக்கு - உனக்கு, சூட்டுவன் - தரிப்பேன், என - என்று, சொல்லினான் - சொன்னான், எ - று. அரோ - அசை.

க - து. நளனையுந் தமயந்தியையுங் காட்டிற்றுரத்தி உனக்கு முடிசூட்டுவேனென்றான் என்பதாம். (கூ)

சொல்லலுங் களிமகிழ் தூங்கிப் புட்கரன்
கொல்லிய வருதிறற் கூற்று மஞ்சுறு
மல்லடு திண்புய மன்னர் மன்னனை
வெல்லுமா றெங்ஙனம் விளம்பு வாயென்றான்.

இ - ள். சொல்லலும் - இப்படிச் சொன்னவளவில், களி மகிழ் தூங்கி - மிகுந்த மகிழ்ச்சியடைந்து, புட்கரன் - புட்கரராஜன், கொல்லிய - கொல்ல, வரு - வராநின்ற, திறல் - வெற்றியையுடைய, கூற்றும் - யமனும், அஞ்சுறும் - பயப்படும்படியாகிய, மல் அடு - மற்போர்செய்கின்ற, திண் புயம் - திண்ணிய புயத்தையுடைய, மன்னர் மன்னனை - அரசர்க்கரசனாகிய நளனை, வெல்லுமாறு-வெல்லுநெறி,

எங்ஙனம்-எவ்விதம், விளம்புவாய் என்றான்-சொல்லென்று சொன்னான், எ - று.

க - து. புட்கரன் நளனை வெல்லும்வழி சொல்லென்றான் என்பதாம்.

சொல்லிய செய்யியவென்னும் வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம். (௧௦)

எண்ணலை யாதுநா னிழைத்த வஞ்சனை
விண்ணவ ராயினும் விலக்கற் பாலரோ
வண்ணலைச் சூதினாற் படுப்ப னஞ்சனீ
கண்ணுறும் யான்கொடுங் கலியென் றனரோ.

இ - ள். யாதும் எண்ணலை - எவ்வளவும் ஆலோசிக்கவேண்டாம்; நான் இழைத்த-நான் செய்த, வஞ்சனை-கபடத்தை, விண்ணவராயினும் - தேவர்களானாலும், விலக்கற்பாலரோ - நீக்குந்தன்மையை யுடையார்களோ; அண்ணலை-நளனை, சூதினால் படுப்பன் - சூதினாற் செயிப்பேன், நீ அஞ்சல் - நீபயப்படவேண்டாம்; கண் உறும் எதிரேவந்த, யான் - நானும், கொடு - கொடிய, வெம் கலி என்றான் - வெவ்விய கலியனென்று சொன்னான்; எ-று. அரோ-அசை.

க - து. சனி நளனைச் சூதினால் வெல்லுவேனென்றான் என்பதாம்.

விலக்கற்பாலரோ என்கிற வோகாரம் எதிர்மறை.

முழையுறை கொடுவரி யனைய மொய்ம்பினா
னுழையினிற் போதுமென் றுரைத்து வெங்க
மழவிடை யுருக்கொடு நிற்ப வண்சுட
ரிழைதவழ் மார்பினா னிவர்ந்து போயினான்.

இ - ள். முழை - குகையினிடத்தில், உறை - இருக்கா நின்ற, கொடு வரி அனைய-புலியையொத்த, மொய்ம்பினான்-வலிமையுடைய நளமகாராசனது, உழையினில் - இடத்தில், போதும் என்று - போவோமென்று, உரைத்து - சொல்லி, வெம் கலி - வெவ்விய கலியானவன், மழ இடை-இளவேற்றின், உரு கொடு-உருவத்தைக்கொண்டு, நிற்ப - நிற்க, வண் - வளப்பமாகிய, சுடர்-காந்தியையுடைய, இழை தவழ் - ஆபரணமசையாநின்ற, மார்பினான் - மார்பையுடைய புஷ்கரராசன், இவர்ந்து-ஏறிக்கொண்டு, போயினான் - சென்றான், எ-று.

க - து. சனி இடபம்போ லுருக்கொண்டு நிற்கப் புட்கரன் அதன்மேலேறிச் சென்றான் என்பதாம். (௧௨)

உரவுநீர்க் கருங்கட லுலகு காவலன்
குரைகழல் பணிந்துதங் குறைகள் சாற்றுவா
னரசர்கண் டுயிலமை முகிலி னார்ப்புறு
முரசுகண் டுயில்கிலா வாயின் முன்னினான்.

இ - ள். உரவுநீர் - விரிந்தநீரையுடைய, கரு கடல் - கரிய கடலாற் சூழப்பட்ட, உலகு காவலன்-உலகுக்கரசனாகிய நளனது, குரை கழல் பணிந்து - சத்திக்கின்ற வீரக்கழலை யணிந்த பாதத்தை வணங்கி, தம் குறைகள் சாற்றுவான் - தமது குறைகளைச் சொல்வதற்கு, அரசர்-அரசர்கள், கண் துயில-(சமயங்கிடையாமல்)நித்திரைபண்ண, மை முகிலின் - கறுத்த மேகத்தைப்போல, ஆர்ப்புறும் - சப்திக்கா நின்ற, முரசு-பேரிகையானது, கண் துயில்கிலா-நித்திரைசெய்யாத, வாயில் - அரண்மனை வாசலில், முன்னினான் - அடைந்தான் (புஷ்கரராசன்), எ - று.

க - து. புட்கரன் நளன் அரண்மனை வாயிலிற் சென்றான் என்பதாம்.

சாற்றுவான் என்பதில் வான் எதிர்கால வினையெச்சம். (கங)

மன்னவற் கெம்வர வுரைத்தி வாயிலோ
யென்னலு மாங்கவ னெய்திக் கூறலுங்
கொன்னவில் வேலினன் கொணர்க வென்றன
னன்னவன் வருகென வவையி னெய்தினான்.

இ - ள். வாயிலோய் - வாயிற்காவலாளனே, மன்னவற்கு - நளமகாராசனுக்கு, எம் வரவு உரைத்தி - எமதுவரவைச் சொல்லு, என்னலும்-என்று சொல்லலும், ஆங்கவன்-அக்காவலாளன், எய்தி கூறலும் - போய்ச்சொன்னவளவில், கொல் நவில்-கொல்லுதலைச் செய்யாநின்ற, வேலினன் - வேலையுடைய வரசன், கொணர்க என்றனன் - அழைத்துவாவென்று சொன்னான்; அன்னவன் வருக என - அக்காவலாளன் வாவென்று சொல்ல, அவையின் எய்தினான் - சபையில் வந்தான் (புஷ்கரராசன்), எ - று.

க - து. புட்கரன் காவலாளனுக்குச்சொல்ல, அவன் நளனுக்குச் சொல்ல, நளனழை யென்று சொல்ல, அவனழைக்க இவன் வந்தான் என்பதாம். (கச)

கிளைகணா தாகியோர் கவிகை நீழலில்
வளைகட லுலகெலாம் புரக்கு மன்னவன்
றளையவிழ் தாமரைத் தாளில் வீழ்ந்தெழு
மிளவலோ டளவளா யிருக்கு மேல்வையில்.

இ - ள். களைகணதாகி-ஆதாரமாகி, ஓர் - ஒரு, கவிகை-வெண்கொற்றக்குடையினது, நீழலில் - நிழலிலிருந்து, வளை கடல் - சமுத்திரஞ் சூழ்ந்த,உலகு எலாம்-பூவுலகமுழுவதும், புரக்கும்-காப்பாற்றுகின்ற, மன்னவன் - நளமகாராசனுடைய,தளை அவிழ் - முறுக்குகள் விரிந்த, தாமரை - தாமரைப்பூவையொத்த, தாளில்-பாதத்தில், வீழ்ந்து - வணங்கி, எழும் - எழுகின்ற, இளவலோடு - இளையோனாகிய புஷ்கரராசனுடனே, அளவளாய் - ஒருவர்க்கொருவர் கலந்துபேசிக்கொண்டு, இருக்கும் எல்லையில் - இருக்குஞ் சமயத்தில், எ - று.

க - து. நளனும் புட்கரனுங் கலந்து பேசிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் என்பதாம். (கரு)

கொல்சின வாகைவேற் குரிசின் மல்லலேற்
றெல்லுமிழ் மணிக்கொடி யுயர்த்த தென்னென
வல்லடு சூதினி லேற்ற மன்னரை
வெல்கொடி யீதென விளம்பி னனரோ.

இ - ள். கொல் - கொல்லுகின்ற, சினம் - கோபத்தையுடைய, வாகை - வெற்றிபொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, குரிசில் - நளமகாராசனனவன், மல்லல்-பலம்பொருந்திய, ஏற்று - ரிஷபத்தின்மேல், எல்-பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, மணி கொடி - அழகிய கொடியை, உயர்த்தது - பிடித்தது, என் என-என்னவென்று கேட்க, வல் - சொக்கட்டானல், அடு-பொருகின்ற, சூதினில் - சூதாட்டத்தில், ஏற்ற மன்னரை - எதிர்த்த வேந்தரை,வெல்-செயிக்கின்ற,கொடி - துவசம், ஈது என-ஈதென்று, விளம்பினன்-சொன்னன், எ - று. அரோ-அசை.

க - து. நளன் இடபத்தின்மேற் கொடிபிடித்த தென்னவென்று கேட்க, புட்கரன் சூதாட்டத்தி லெதிர்த்த மன்னரை வெல்லுங்கொடியிதுவென்றான் என்பதாம். (கசு)

சொல்லிய வவ்வுரை கேட்டுத் தூமணிக்
கல்லெனப் பணைத்துயர் கலவைத் தோளினன்
வெல்கொடி யுயரிய விடலை சூதினீ
வல்லையே லாடுதும் வருகென் றேதினன்.

இ - ள். சொல்லிய - சொன்ன, அ உரை - அந்தவார்த்தை, கேட்டு - செவியிற்கேட்டு, தூ - பரிசுத்தமாகிய, மணி-இரத்நங்களையுடைய, கல் என - மலையைப்போல, பணைத்து - பருத்து, உயர் - உயர்ந்த, கலவை - கலவைச் சந்தனமணிந்த, தோளினன் - தோள்

கலையுடைய நளன், வெல் கொடி உயரிய-வெல்லாநின்ற கொடியைப் பிடித்த, விடலை - புஷ்கரனே, சூதில் - சூதாட்டத்தில், நீ வல்லையேல்-நீ வல்லமையுடையவனானால், ஆடுதும்-ஆடுவோம், வருக என்று ஓதினான் - வாவென்று சொன்னான், எ - று.

க - து. நளன் சூதாட்டத்தில் நீ வல்லவனானால் ஆடுவோம் வாவென்றான் என்பதாம். (கஎ)

நஞ்சினிற் கொடியவன் புணர்ப்பி னம்மிறை
வஞ்சகச் சூதினின் மனம்வைத் தானென
வஞ்சின ரமைச்ச ரவ்வரசர் கோமகன்
செஞ்சரண் டொழுதிவை செப்பன் மேயினார்.

இ - ள். நஞ்சினில் - விஷத்தைப்பார்க்கிலும், கொடியவன் - பொல்லாதவனாகிய புஷ்கரனது, புணர்ப்பின் - சம்பந்தத்தினால், நம் இறை - நம்முடையவரசன், வஞ்சகம் - கபடமாகிய, சூதினில் - சூதில், மனம் வைத்தான் என - சிந்தைவைத்தானென்று, அஞ்சினர் - பயந்தவராய், அமைச்சர் - மந்திரிகள், அ அரசர் கோமகன் - அந்த நளமகாராசனது, செம் சரண் தொழுது - சிவந்தபாதங்களை வணங்கி, இவை செப்பன் மேயினார் - இவைசொல்லத்தொடங்கினார்கள், எ-று.

க - து. மந்திரிகள் பின்வருமாறு நளமஹாராஜனுக்குச் சொல்லத் தொடங்கினார்கள் என்பதாம்.

அஞ்சினர் - முற்றெச்சம். (கஅ)

சீலநற் றருமமெய் சிதைக்குந் தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்
மாலுறுத் திடுங்கவ றாடன் மன்னகேள்
கோலிழுக் கரசர்தங் கொள்கைத் தென்பவே.

இ - ள். மன்ன கேள் - அரசனேகேள், கவறாடல் - சூதாடலானது, சீலம் - ஒழுக்கத்தையும், நல் தருமம் - நல்லதருமத்தையும், மெய் - சத்தியத்தையும், சிதைக்கும் - கெடுக்கும்; தெள் திரை-தெள்ளியவலையையுடைய, வேலை முற்று - கடலினாற்சூழப்பெற்ற, இரு - பெருமைபொருந்திய, நிலம்கிழமை - அரசாட்சியை, வீழ்த்திடும் - தள்ளிவிடும்; மால் உறுத்திடும்-மயக்கஞ் செய்விக்கும்; கோல் இழுக்கு அரசர்தம்-கொடுங்கோலைச் செலுத்துகிறஅரசர்களது, கொள்கைத்து என்ப - கோட்பாட்டை யுடையதென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள், எ - று. ஏ-அசை.

க - து. நளச்சக்கிரவர்த்தியே! சூதாடுதல் ஒழுக்கத்தையும் தருமத்தையும் சத்தியத்தையும் கெடுக்கும்; அரசாட்சியைத்தள்ளும்; மயக்

கந்தரும்; இது கொடுங்கோல் வேந்தர்செய்கை என்பார்கள் என்பதாம். (கக)

கள்ளுணா விரும்புதல் கழகஞ் சேர்தல்மா
லுள்ளுறப் பிறர்மனை நயத்த லொன்னலர்க்
கெள்ளரு ஞாட்பினு ளிரியல் செய்திடல்
வள்ளியோ யறநெறி வழுக்கு மென்பவே.

இ - ள். கள் உண விரும்புதல் - மதுவைக்குடிக்க இச்சித்தலும், கழகஞ் சேர்தல் - சூதாடுமிடத்தைச்சேர்தலும், மால் உள உற - உள்ளேமயக்கமடைய, பிறர் மனை நயத்தல் - பிறர்மனையாளை விரும்புதலும், ஒன்னலர்க்கு - சத்துருக்களுக்கு, எள் அரு - இகழ்ச்சியில்லாத, ஞாட்பினில் - அமர்க்களத்தில், இரியல்செய்திடல் - பின்னிட்டோடலும், (ஆகிய இவைகளால்) வள்ளியோய் - வரையாதுகொடுக்குமரசனே, அற நெறி - அறத்தின்வழி, வழுக்கும் என்ப - பிறழுமென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள், எ - று. ஏ-அசை.

க - து. அரசனே, கள்ளையிச்சித்தல், சூதாடுமிடத்தைச்சேர்த பிறன்மனையாளை யிச்சித்தல், யுத்தத்திலோடுதல், இவை தருமவழிச்கு இழுக்கென்பர் என்பதாம். (உ0)

ஐயநீ யாடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் குரவினுக் கியைந்த தூதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக் குறுபகை யென்பர் மேலையோர்.

இ - ள். ஐய - ஐயனே, நீ ஆடுதற்கு - நீயாடுகிறதற்கு, அமைந்த - சம்மதித்த, சூது - சூதாட்டமானது, எய்து நல்குரவினுக்கு - தானேவருதற்குரிய தரித்திரத்துக்கு, இயைந்த தூது - நல்லதூதாகும்; வெம் பொய்யினுக்கு - வெவ்வியபொய்க்கு, அரு துணை - நல்லசகோதரமாகும்; புன்மைக்கு - கீழ்த்தொழிலுக்கு, ஈன்ற தாய் - பெற்றதாயாகும்; மெய்யினுக்கு - சத்தியத்துக்கு, உறு பகை என்பர் - மிகுந்த பகையென்று சொல்லுவார்கள், மேலையோர் - பெரியோர்கள், எ-று.

க - து. அரசனே, சூதானது வறுமைக்குத் தூதும், பொய்க்குதவியும், இழிதொழிலுக்குத் தாயும், மெய்க்குப் பகையும் ஆகும் என்பார்கள். (உக)

எள்ளுக சூதினை யிகலி வென்றதூஉங்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவ
ருள்ளுற வமைத்திடு முணவை யோர்கிலாப்
புள்ளின மருந்தின போலு மென்பவே.

இ - ள். என்னுஈ - இகழக்கடவாய், சூதினை - சூதாட்டத்தை; இகலி - பகைத்து, வென்றதூஉம் - செயித்ததும், கள்ளம் - கபடத்தை, மேற்கொடு - மேற்கொண்டு, வலை கரந்து - வலையைமறைத்து, வேட்டுவர்-வேடர்கள், உள்ளுற அமைத்திடும் உணவை-உள்ளேவைத்திருக்கிற இரையை, ஓர்கிலா - அறியாத, புள் இனம் - பறவைக் கூட்டங்கள், அருந்தின - உண்டவை, போலும் - ஒக்கும், என்ப - என்று சொல்லுவார்கள், எ - று. ஏ - அசை.

க - து. அரசனே! சூதாட்டத்தை யிகழ்வீராக என்றார்கள் என்பதாம். (உஉ)

கலைக்கடல் கடந்துளார் கழறுங் கட்டுரை
சிலைத்தழும் பிருந்ததோட் செம்மல் கேட்டுயி
ருலப்பினு மறுக்கிலே னுரைத்த வாய்மைநீர்
விலக்குவ தென்னென விளம்பி னனரோ.

இ - ள். கலை கடல் - அறுபத்துநாலு கலைகளாகிய சமுத்திரத்த, கடந்துளார் - கடந்தமந்திரிகள், கழறும் - சொல்லுகிற, கட்டுரை-உறுதிச்சொல்லை, சிலை தழும்பு இருந்த தோள் செம்மல்-சிலையின் தழும்பு பொருந்திய புசத்தையுடைய நளமகாராசன், கேட்டு - கேட்டு, உயிர் உலப்பினும் - உயிரிறந்துவிட்டாலும், உரைத்த வாய்மை-(யான்) சொன்ன சொல்லை, மறுக்கிலேன் - தடுக்கமாட்டேன்; நீர் விலக்குவது என் என - நீங்கள் விலக்குகிறதென்னென்று, விளம்பினன்-சொன்னான், எ - று. அரோ - அசை.

க - து. நளன் மந்திரிகளை விலக்கவேண்டா மென்றான் என்பதாம. (உஙு)

மன்னவ னியைந்தவை மறுக்க லானென
வின்னலுற் றமைச்சராண் டிருப்ப வெங்கலி
துன்னிய தானுமூழ் துரந்த வாற்றினு
முன்னருஞ் சூதினின் முயல்கின் றனரோ.

இ - ள். மன்னவன் - அரசன், இயைந்தவை - சம்மதித்தவை, மறுக்கலான் என-தடுக்கமாட்டானென்று, இன்னல் உற்று-வருத்தமடைந்து, அமைச்சர் ஆண்டு இருப்ப-மந்திரிகளவ்விடத்தில் பேசாதிருக்க, வெம் கலி துன்னியதானும் - வெவ்வியகலி சேர்ந்ததினாலேயும், ஊழ் - ஊழ்வினையானது, துரந்த ஆற்றினும் - செலுத்தலினாலும், முன்னரும் சூதினில் - நினைத்தற்கரிய சூதாட்டத்தில், முயல்கின்றான் - முயற்சிபடுகின்றான், எ - று. அரோ - அசை.

க - து. நளன் ஊழ்வினையின்படி சூதாட முயற்சி செய்கின்றான் என்பதாம். (உச)

நிழலுமிழ் வயிரவா ணிடதர் கோமக
னொழுகொளிப் பூணினு யொட்டம் யாதென
மழவிடை யதனையான் வைப்ப னீயுமு
னெழுகடன் ஞாலமு மியைக வென்றனன்.

இ - ள். நிழல் - பிரகாசத்தை, உமிழ்-கக்காநின்ற, வயிர வாள் - கூரியவாளையுடைய, நிடதர் கோமகன்-நளமகாராசனுனவன், ஒழுகு ஒளி பூணினுய் - மிகுந்த பிரகாசம் பொருந்திய ஆபரணத்தை யுடைய புஷ்கரனே, ஒட்டம் யாது என-பந்தயம் யாதென்றுகேட்க, மழ விடை அதனை-என்னுடைய இளவேற்றை, யான் - நான், வைப்பன் - பந்தயமாகவைப்பேன்; நீயும் - நீயும், உன் எழு கடல் ஞாலமும் - உனது ஏழுசமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையும், இயைக-வைத்தற்குச் சம்மதி, என்றனன் - புஷ்கரன் சொன்னான், எ - று.

க - து. நளன் பந்தயம் யாதெனக்கேட்க, நான் இடபத்தை வைக்கிறேன், நீ உலகத்தை வை யென்றான் என்பதாம். (உரு)

சூழ்வினைப் புணர்ப்பினாற் சொன்ன வாறியைந்
தாழ்கடற் புவிதொழு மரச னாடவெங்
காழ்மனக் கொடுங்கலி கவற்றின் வண்ணமாய்
வீழ்தலும் புட்கரன் வென்றிட் டானரோ.

இ - ள். சூழ் - சூழ்ந்த, வினை-ஊழ்வினையின், புணர்ப்பினால் - சம்பந்தத்தினால், சொன்னவாறு இயைந்து-அவன் சொன்னபடி சம்மதித்து, ஆழ்-ஆழ்ந்த, கடல் புவி தொழும்-கடலாற் சூழப்பட்ட வுலகம் வணங்கும், அரசன் - நளமகாராசன், ஆட-சூதாட, வெம்-வெவ்விய, காழ் - வயிரம் பொருந்திய, மனம்- மனத்தையுடைய, கொடு கலி - கொடிய கலியானவன், கவற்றின் வண்ணமாய் - சூதின்வடிவமாய், வீழ்தலும்-புரளவும், புட்கரன்-புட்கரராசன், வென்றிட்டான் - செயித்தான், எ - று. அரோ - அசை.

க - து. ஊழ்வினைப்படி நளனைப் புட்கரன் வென்றான் என்பதாம். (உசு)

கழைசுளி புகர்முகக் களிறு தேர்பரி
யிழைதவ ழிளமுலை மகளி ரீட்டிய
விழுநிதிக் குப்பைகள் வேலை சூழ்புவி
முழுவதுந் தோற்றனன் முழவுத் தோளினன்.

இ - ள். கழை சுளி - கரும்பை முறிக்கின்ற, புகர் முகம்-புள்ளி பொருந்திய முகத்தையுடைய, களிறு - யானையும், தேர் - இரதமும், பரி - குதிரையும், இழை - ஆபரணமானது, தவழ் - அசையாநின்ற, இள - இளமைதங்கிய, முலை - ஸ்தனங்களையுடைய, மகளிர் - மாதர்களும், ஈட்டிய - சம்பாதித்த, விழு - மேன்மையாகிய, நிதி குப்பைகள் - திரவியக் குவியலும், வேலை சூழ்-சமுத்திரஞ் சூழ்ந்த, புவி-பூமியும், முழுவதும்-ஆகிய அனைத்தையும், முழவு தோளினன்-மத்தளத்தையொத்த தோளையுடைய நளமகாராசன், தோற்றனன்-தோற்றுவிட்டான், எ - று.

க - து. நளன் யாவும் தோற்றுப்போனான் என்பதாம். (உஎ)

அனைத்தையுந் தோற்றனை யருவி பாய்கவுட்
சினக்களி மால்களி றனைய சீற்றத்தோய்
மனத்திடை நினைக்குவ தென்னை வல்லைநின்
புனக்கொடிக் கியைந்தினிப் பொருதும் யாமென்றான்.

இ - ள். அனைத்தையும் - முழுமையும், தோற்றனை - தோற்றுவிட்டாய்; அருவி - மதசல வருவியானது, பாய் - பாயாநின்ற, கவுள்-கபோலத்தையுடைய, சினம் - கோபம்பொருந்திய, களி - செருக்கையுடைய, மால் - பெருமைபொருந்திய, களிறு அனைய - யானையையொத்த, சீற்றத்தோய்! - கோபத்தையுடைய நளனே; மனத்திடை - மனதினிடத்தில், நினைக்குவது என்னை - ஆலோசிப்பதென்னை; வல்லை - சீக்கிரத்தில், நின் - உன்னுடைய, புனக்கொடிக்கு - மனையாளுக்கு, இயைந்து - பந்தயத்துக் கிசைந்து, யாம் - நாமிருவரும், இனி பொருதும் - இனி ஆடுவோம், என்றான்-என்று சொன்னான், எ - று.

க - து. புட்கரன், நளனே! உன் மனையாளையும் வைத்தாடுகவென்றான் என்பதாம். (உஅ)

'சூதாடுபடலம் முற்றிற்று.

# நகர் நீங்குபடலம்.

[இப்படலத்தாற் சூதிற் றோல்வியடைந்த நளன் தான் பழகிய அந்நகரத்தி லுள்ளாரோடும் வறியவனாய்க் கூடியிருப் பதில் விழையாமல் அந்நகரைவிட்டு நீங்கல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

என்றலு முறுவலித் திசைக்க லாதன
வொன்றுநீ யுரைத்திட லுலங்கொ டோளினாய்
வென்றநின் னகர்வயின் மேவலே னெனாத்
துன்றுகா னகஞ்செலத் துணிதன் மேயினான்.

இ - ள். என்றலும் - என்றுசொன்ன வளவில், முறுவலித்து - சிரித்து, இசைக்கலாதன - சொல்லப்படாதவைகளை, நீ ஒன்றும் உரைத்திடல்-நீயொன்றுஞ்சொல்லாதே; உலம் கொள் தோளினாய்-திரண்ட கல்லையொத்த தோளையுடைய புட்கரனே; வென்ற-செயித்த, நின் நகர்வயின் - உன்னூரினிடத்து, மேவலேன் எனா - இருக்க மாட்டேனென்று, துன்று - நெருங்கிய, கானகம் செல - காட்டினிடத்திலேபோக, துணிதல் மேயினான்-(நளமகாராசன்) நிச்சயித்தான், எ - று.

க - து. நளன் காட்டிற்செல்லத் துணிந்தான் என்பதாம். (க)

வாட்டிறன் மன்னவன் கமல வாண்முக
மீட்டரு மரசிய லிழந்த போதினும்
பாட்டளிக் கூந்தல்வேந் தவையிற் பைந்தொடை
சூட்டிய ஞான்றினுந் துலங்கு கின்றதே.

இ - ள். வாள் - வாட்போரில், திறல் - வல்லமையுடைய, மன்னவன் - நளமகாராசனது, கமலம் - தாமரைப்பூவை யொத்த, வாள் - ஒளிபொருந்திய, முகம்-முகமானது, ஈட்டரும் - சம்பாதித்தற்கரிய, அரசியல் - அரசாட்சியை, இழந்தபோதினும் - இழந்தகாலத்திலும், பாட்டு - இராகங்கள் பாடாநின்ற, அளி - வண்டுகள் மொய்க்கின்ற, கூந்தல் - அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், வேந்து அவையில் - இராசசபையிலே, பை தொடை - பசிய பூமாலையை, சூட்டிய ஞான்றினும் - சூட்டினநாளிற் பார்க்கிலும், துலங்குகின்றது - பிரகாசிக்கின்றது, எ - று. ஏ - அசை.



நளன்தன்பிள்ளைகளை வீமனிடம்அனுப்பித்தான் தமயந்தியோடு நகர்நீங்குதல்.

க - து. நளன்முகம் பொலிவை யடைந்தது என்பதாம். (உ)

சாமரை யிரட்டுன ரடைப்பை தாங்குனர்
தீமுகத் துமிழும்வா ளேந்திச் செல்குன
ரேமுற யாரையும் விலக்கி யேந்தருன்
கோமக ளினிதுறை கோயி லெய்தினன்.

இ - ள். சாமரை இரட்டுனர்-சாமரை வீசுகிறவர்களையும், அடைப்பை தாங்குனர் - தாம்பூலப்பையை யேந்துகிறவர்களையும், தீ - அக்கினியை, முகத்து-(தன்) முகத்தில், உமிழும்-கக்குகின்ற, வாள்-கத்தியை, ஏந்தி - தாங்கி, செல்குனர்-வருகின்றவர்களையும், ஏமுற - மயக்கமுற, யாரையும்-மற்றவர்களையும், விலக்கி-நீக்கி, ஏந்தல் தான்-நளமகாராசன், கோமகள் - தமயந்தி இனிது-இனிமையாக, உறை - வாசம்பண்ணுகிற, கோயில் - அரண்மனையை, எய்தினன் - சேர்ந்தான், எ - று.

க - து. நளன் ஒன்றியாகத் தமயந்தியரண்மனைக்குப் போனன் என்பதாம். (ங)

கற்றையங் கவரியுங் கால்செய் வட்டமுங்
கொற்றவெண் கவிகையு மின்றிக் கோதைவேன்
மற்றடந் தோளினன் வருதல் காண்டலு
முற்றதை யென்கொலென் றுள்ளத் தெண்ணினள்.

இ - ள். கற்றை - தொகுதியா யிராநின்ற, அம்-அழகிய, கவரி - சாமரையும், கால்செய்வட்டமும் - சாந்தாற்றியும், கொற்றம் வெண் கவிகையும் - வெண்கொற்றக் குடையும், இன்றி-இல்லாமல், கோதை வேல் - மாலையணிந்த வேலையுடைய, மல் - வலிமைபொருந்திய, தடம் - பருத்த, தோளினன்-தோளையுடைய நளமகாராசன், வருதல் காண்டலும் - வருதலைப் பார்த்தவளவில், உற்றதை - இப்படிக்கு இவன்வருவதற்கு, என்கொல் என்று-என்னகாரணமென்று, உள்ளத்து எண்ணினள் - மனத்தில் ஆலோசித்தாள், எ - று.

க - து. தமயந்தி நளன் தனித்து வந்ததைக்கண் டாலோசித்தாள் என்பதாம். (ச)

எண்ணிவந் திறைஞ்சிய வெழிற்கொம் பன்னவண்
மண்ணிய மதிநிகர் வதன நோக்குறாப்
புண்ணுழை வேலெனப் புகுந்த யாவையும்
நண்ணலர்க் கடந்தவே னம்பி கூறினன்.

இ-ள். எண்ணி வந்து - இப்படி யாலோசித் தெதிர்வந்து, இறைஞ்சிய - வணங்கிய, எழில் - அழகுபொருந்திய, கொம்பு அன்னவள் - பூங்கொம்பை யொத்த தமயந்தியினது, மண்ணிய-கழுவிய, மதி நிகர் - சந்திரனையொத்த, வதனம் - முகத்தை, நோக்குறா - பார்த்து, புண் - புண்ணினிடத்தில், நுழை - நுழைகின்ற, வேல் என - வேலைப்போல, புகுந்த யாவையும் - தானடைந்தவைகளையெல்லாம், நண்ணலர் - சத்துருக்களை, கடந்த - செயித்த, வேல்-வேலையுடைய, நம்பி - நளமகாராசன், கூறினன் - சொன்னான், எ - று.

க - து. நளன் தமயந்திக்கு நடந்தவற்றைச் சொன்னான் என்பதாம்.

நோக்குறா-செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (ரு)

தாழ்தடக் கையினா னின்ன சாற்றலும்
வீழிவாய் மடமயில் வெய்து யிர்ப்பொடு
மாழ்கினள் வருந்தினள் மழைக்க ணீருகுத்
தூழ்வலி யிதுவென வுள்ளந் தேறினாள்.

இ - ள். தாழ் - முழங்கால்மட்டு நீண்ட, தடம் - விசாலமாகிய, கையினான் - கைகளையுடைய நளமகாராசன், இன்ன - இவைகளை, சாற்றலும் - சொன்னவளவில், வீழி-விழிக்கனியையொத்த, வாய் - அதரத்தையுடைய, மட மயில் - தமயந்தியானவள், வெய்து உயிர்ப்பொடும்-வெவ்விய பெருமூச்சுடனே, மாழ்கினள்-மயங்கினாள்; வருந்தினள்-வருத்தமுற்றாள்; மழை கண்-குளிர்ந்த கண்ணினின்றும், நீர் உகுத்து - நீரைச்சொரிந்து, ஊழ் - ஊழ்வினையினது, வலி-வன்மை, இது என - இதுவென்று, உள்ளம் தேறினாள் - மனந்தெளிந்தாள், எ - று.

க - து. தமயந்தி ஊழ்வினை யென்று நினைத்தாள் என்பதாம்.

இந்திர சேனனென் றிசைக்கும் பேருடை
மைந்தனு மழலைவாய்க் கொடியு மாழ்குறா
துய்ந்திடக் கொண்டுபே ரோசை போயபின்
றந்தைதன் வளநகர் சார்க வென்றனன்.

இ - ள். இந்திரசேனன் என்று - இந்திரசேனனென்று, இசைக்கும் - சொல்லுகின்ற, பேர் உடை-நாமத்தையுடைய, மைந்தனும் - பிள்ளையும், மழலை - மழலைச்சொல்லையுடைய, வாய் - வாயையுடைய, கொடியும் - புதல்வியும், மாழ்குறாது-வருத்தமுறாது, உய்ந்திட-பிழை

த்திருக்க, கொண்டு - உடன்கொண்டு, பேர் ஓசை போய - பெருங் கீர்த்தியையுடைய, நின் - உன்னுடைய, தந்தைதன்-தகப்பனுடைய, வளம் - வளப்பம்பொருந்திய, நகர் - பட்டணத்தை, சார்க என்றனன்-அடையக்கடவை யென்று (நளமகாராசன்)சொன்னான், எ-று.

க - து. நளன், பிள்ளைகளை யழைத்துக்கொண்டு தமயந்தியைத் தன் பிதாவின் வீட்டிற்குப் போவென்றான் என்பதாம். (எ)

உயிர்நிகர் மக்களோ டுலங்கொ டோளினன்
செயிரறு தந்தைபாற் செல்கென் றோதலும்
புயனறுங் கூந்தலாள் புண்ணி னூடெரி
யயினுழைந் தாலென வலமந் தேங்கினாள்.

இ - ள். உயிர் நிகர்-உயிரையொத்த, மக்களோடு - பிள்ளைகளுடனே, உலம் கொள்-திரள்கல்லி னழகைக்கொண்ட, தோளினன் - தோள்களையுடைய நளமகாராசன், செயிர் அறு - குற்றமற்ற, தந்தைபால் - தகப்பனிடத்தில், செல்க என்று ஓதலும் - போகவென்று சொல்லலும், புயல் - மேகத்தையொத்த, நறு - வாசனைபொருந்திய, கூந்தலாள் - அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், புண்ணினூடு - புண்ணினுள், எரி - எரியாநின்ற, அயில் - வேலானது, நுழைந்தால் என - நுழைந்ததுபோல, அலமந்து - மனங்கலங்கி, ஏங்கினாள் - அழுதாள், எ - று.

க - து தமயந்தி மனங்கலங்கினாள் என்பதாம்.

செல்க என்று என்பது செல்கென்று என நிலைமொழியீறு தொகுத்தலாயிற்று. அலமந்து என்பதற்குப் பகுதி அலமா. (அ)

நெடிபடு கானிடைத் தமியை நீங்கிப்போய்ப்
படுபர லமளிமேற் பள்ளி கொள்ளவெங்
கடிநக ரடைந்துமெல் லணையிற் கண்படி
லடியனேற் கிதனினு மறனுண் டாங்கொலோ.

இ - ள். நெடி படு - சிள்வண்டுகளையுடைய, கானிடை-காட்டினிடத்தில், தமியை - தனியாகி, நீங்கிப்போய் - விட்டு நீங்கிப்போய், படு - உறுத்தாநின்ற, பரல் - பரற்கல்லுகளாகிய, அமளி மேல் - அணையின்மீது, பள்ளி கொள்ள-(நீர்) நித்திரைசெய்ய, வெம்-குரூரமாகிய, கடி - காவலையுடைய, நகர் - பட்டணத்தை, அடைந்து - சேர்ந்து, மெல் - மிருதுவாகிய, அணையில் - சயனத்தில், கண்படில் - (நான்) நித்திரைசெய்யில், அடியனேற்கு - அடியேனுக்கு, இதனினும்-இதைப்பார்க்கிலும், அறன் உண்டாங்கொல்-தருமமுண்டோ, எ - று.

க - து. தமயந்தி நீ காட்டிற்போக நான் வீட்டிற்போகுதல் தருமமோ என்றான் என்பதாம். (௯)

என்றவ ளுரைத்தலு மடங்க லேறனான்
மென்றளிர் கவற்றுநின் மெல்லென் சீறடி
கன்றவெம் பரல்படு கானி னேகுதற்
கொன்றுமே லெனதுயி ருய்யுமோ வென்றான்.

இ - ள். என்று - இப்படியென்று, அவள் - அத்தமயந்தியானவள், உரைத்தலும் - சொன்னவளவில், மடங்கல் ஏறு அன்னான் - ஆண்சிங்கத்தையொத்த நளமகாராசன், மெல் தளிர் - மெல்லிய தளிரை, கவற்றும் - வருந்தச்செய்யும், நின் - உன்னுடைய மெல் என் - மிருதுவாகிய, சிறு அடி - சிற்றடிகள், கன்ற - கன்றிப்போக, வெம் - குரூரமான, படு பரல் - மணிபருக்கைக் கல்லுண்டாகிய, கானின் - காட்டில், ஏகுதற்கு - போதற்கு, ஒன்றுமேல் - பொருந்துமாகில் எனது உயிர் - என்னுடைய பிராணன், உய்யுமோ என்றான் - பிழைக்குமோவென்று சொன்னான், எ - று.

க - து. நளன், தமயந்தியே! உன்னடி காட்டில் நடக்க என்னுயிர் பிழையாதென்றான் என்பதாம்.

'மென்றளிர் கவற்றுநின் மெல்லென் சீறடி' என்றமையால் தமயந்தியின் சிற்றடிகள் மெல்லிய தளிரினும் மென்மையுடையன வென்பது பெறப்பட்டது. உய்யுமோ என்ற ஓகாரம் எதிர்மறை. (௧௦)

பொற்பினுக் குறையுளாம் பொன்னங் கொம்பனா
யற்பினிற் பயந்தநம் மக்க ளாயிடை
பெற்பிரிந் துறைகுன ரேனு மெங்ஙன
நிற்பிரிந் தாற்றுவர் நிகழ்த்துவா யென்றான்.

இ - ள். பொற்பினுக்கு - அழகிற்கு, உறையுள் ஆம் - இருப்பிடமாகிய, அம் பொன் கொம்பு அன்னாய் - அழகு பொருந்திய பொற்கொம்பையொத்த தமயந்தியே, அற்பினில் - ஆசையினாலே, பயந்த - பெற்ற, நம் மக்கள் - நம்முடைய பிள்ளைகள், ஆயிடை - அந்தவீமன் வீட்டில், என் பிரிந்து - என்னைவிட்டு நீங்கி, உறைகுனரேனும் - இருப்பாராயினும், எங்ஙனம் - எத்தன்மையாய், நின் பிரிந்து - உன்னை விட்டு நீங்கி, ஆற்றுவர் - பொறுத்திருப்பார்கள், நிகழ்த்துவாய் என்றான் - சொல்லென்று சொன்னான், எ - று.

க - து. தமயந்தியே! பிள்ளைகளென்னைவிட்டிருந்தாலும் உன்னைவிட்டிரார்கள் என்பதாம்.

மக்கட்குத் தந்தையிலுந் தாயாதிகரென்பது இச்செய்யுட் கருத்து. ஆயிடை அகரச்சுட்டு நீண்டு யகரந் தோன்றிற்று. அன்பு அற்பு என வலித்தலாயிற்று. (கக)

கூற்றுறழ் குருதிவேற் குருசில் மக்கடா
மாற்றினு மாற்றலா தருரின் மூழ்கினு
மாற்றருங் கற்பினர் மகிழ்னர் கானசெல
வேற்றுநா டுறைவது விழுமிதோ வென்றாள்.

இ - ள். கூற்று உறழ் - யமனைபொத்த, குருதி - உதிரந்தோய்ந்த, வேல்-வேலாயுதத்தையுடைய, குருசில்-அரசனே, மக்கள் தாம் - பிள்ளைகள், ஆற்றினும் - பொறுத்தாலும், ஆற்றலாது - பொறுக்காமல், அருரில் - துக்கத்தில், மூழ்கினும் - மூழ்கினாலும், மாற்றரும் - பிறரால் கெடுத்தற்கரிய, கற்பினர் - பதிவிரதா தருமத்தையுடைய ஸ்திரீகள், மகிழ்னர் - புருஷர்கள், கான் செல - காட்டிற்போக, வேற்று நாடு உறைவது-வேறுதேசத்திற் போயிருப்பது, விழுமிதோ என்றாள் - மேன்மையுடையதோவென்று (தமயந்தி) சொன்னாள், எ - று.

க - து. கற்புள்ளபெண்கள் நாயகரை விட்டிருத்தல் சிறப்பல்லவென்றாள் என்பதாம்.

'கூற்றுறழ் குருதிவேற் குருசில்' என்றமையால் வேல்கொலைத் தொழிலில் வல்லதென்பதும், அதனையுடைய நளனும் மஹாவீரனென்பதும் தோன்றுகின்றது. தமயந்தி வேலின் கொலைத்தொழில் வன்மையும் நளனதுவீரமும் பகைத்துப் போர்புரிந்த வீரர்களையெல்லாம் கொன்று மணம்புரிந்ததனால் அறிந்தனளாதலால் இவ்வாறு கூறினாள். குரிசில் -- அண்மைவிளி. விழுமிதோவென்னும் ஓகாரம் எதிர்மறை. (கஉ)

விரிகட லமிழ்தமும் வேலை ஞாலமுஞ்
செருமுகத் தழலுமிழ் சிறுகண் யானையு
மெரிமணிக் குப்பையு மெளிதி னெய்தலா
மருமகப் பெறுதன்மற் றரிய தென்பவே.

இ - ள். விரி - பரந்த, கடல் - திருப்பாற் கடலிலுண்டாகிய, அமிழ்தமும் - தேவாமிர்தத்தையும், வேலை - சமுத்திரஞ் சூழ்ந்த, ஞாலமும் - பூமியையும், செரு முகத்து - யுத்தத்தினிடத்திலே, அழல் உமிழ் - நெருப்பையுமிழ்கின்ற, சிறு கண் யானையும் - சிறிய

கண்களையுடைய யானைகளையும், எரி - பிரகாசிக்கின்ற, மணி குப்பையும் - இரத்தினக் குப்பைகளையும், எளிதின் எய்தலாம் - எளிதிலே யடையலாம்; அரு மகவு பெறுதல்-அரிய பிள்ளைகளைப் பெறுதல், அரியது என்ப-அரியதென்று சொல்வார் (பெரியோர்),எ - று. மற்று. ஏ - அசைகள்.

க - து. எல்லாஞ் சம்பாதிக்கலாம், பிள்ளைகளைச் சம்பாதித்தலரிதென்றான் என்பதாம்.

வேலா என்னும் வடசொல்லினீற்றாகாரம் ஐகாரமாய்த்திரிந்து வேலையென்றாயிற்று. (கங)

விம்மிமின் னுழைமருங் கொசிய வீங்கிய
கொம்மைவெம் முலையினாய் குதலை மென்மொழிச்
செம்மைய வருமகப் பெறாத தீமையோர்க்
கிம்மையு மறுமையு மின்ப மில்லையால்.

இ - ள். விம்மி - பருத்து, மின் - மின்னலையொத்த, நுழை நுட்பமாகிய, மருங்கு - இடையானது, ஒசிய - ஒடிந்துபோகும்படி, வீங்கிய - பூரித்த, கொம்மை - இளமைபொருந்திய, வெம் - விருப்பத்தைச்செய்கின்ற, முலையினாய் - ஸ்தனங்களையுடைய தமயந்தியே, குதலை - மழலையாகிய, மெல் மொழி - மிருதுவாகிய சொல்லையுடைய, செம்மைய - நற்குணத்தையுடைய, அரு மக - அரியபிள்ளைகளை, பெறாத-பெற்றுக்கொள்ளாத, தீமையோர்க்கு - குற்றத்தையுடையோர்க்கு, இம்மையும் - இப்பிறப்பிலும், மறுமையும்-மறுபிறப்பிலும், இன்பம் இல்லை - சுகமில்லை, எ - று. ஆல் - அசை.

க - து. நற்பிள்ளைகளைப் பெறாதார்க்கு இருபிறப்பிலு மின்பமில்லை என்பதாம்.

விம்மி வீங்கிய முலையினாய் என வினையும், இம்மையும் மறுமையும் என்பவற்றுள் இல் என்னும் ஏழனுருபு தொக்கது. 'மருங்கொசிய விம்மி வீங்கிய முலை' என்றதனால் முலைப்பூரிப்பின் மிகுதியும் இடைச் சிறுமையும் தோன்றின. (கச)

என்னலும் வணரிருங் கூந்த லேந்திழை
மன்னவை மழலைவாய் மக்க டம்மொடு
மின்னகு பரிதிமேல் வீமன் மாநகர்
தூன் னுதும் யாமெனச் சொல்லி னாளரோ.

இ - ள். என்னலும் - இப்படியென்று அரசன் சொல்லலும், வணர் - வளைந்த, இரு-பெரிதாகிய, கூந்தல்-அளகபாரத்தையுடைய

ஏந்திழை - தமயந்தியானவள், மன்னவ - அரசனே, மழலை வாய் - மழலைச்சொல் பொருந்திய வாயையுடைய, மக்கள் தம்மொடும் - நம்முடைய பிள்ளைகளுடனே, யாம் - நாமிருவரும், மின் நகு - மின்னலைப் பழிக்காநின்ற, பரிதி - சூரியனை யொத்த, வேல் - வேலாயுதத்தையுடைய, வீமன் - வீமராசனுடைய, மா நகர் - பெரிய நகரில், துன்னுதும் - சேர்வோம், என-என்று, சொல்லினள்-சொன்னாள், எ - று. அரோ - அசை.

க - து. தமயந்தி நளனைத் தன் தகப்பன் வீட்டுக்கு வாவென்றாள் என்பதாம்.

ஏந்திழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். மின்னகு பரிதிவேல் என்றமையால் மின்னிலு மிக்க வொளியுள்ளது நளனது வேற்படை யென்றதாயிற்று.()

கோற்றொடி செல்வர்பாற் குறை யிரந்துநின்
றேற்றயின் றுயிர்சுமந் திருத்த லீறிலா
வாற்றலு மானமு மறிவுங் கல்வியு
மாற்றருஞ் சீர்த்தியு மாற்று மென்பவே.

இ - ள். கோல் தொடி-தமயந்தியே, செல்வர்பால்-செல்வத்தையுடையவர்களிடத்தில், குறை இரந்து நின்று - குறையைச் சொல்லியிரந்து நின்று, ஏற்று-வாங்கி, அயின்று-உண்டு, உயிர் சுமந்து இருத்தல் - உயிரைத்தாங்கி யிருத்தலானது, ஈறு இலா - முடிவில்லாத, ஆற்றலும் - வலியையும், மானமும் - அபிமானத்தையும், அறிவும் - அறிவையும், கல்வியும் - வித்தையையும், மாற்றரு-நீக்கப்படாத, சீர்த்தியும் - கீர்த்தியையும், மாற்றும் என்ப-போக்குமென்று பெரியோர் சொல்வார்கள், எ - று. ஏ - அசை.

க - து. நளன் இரந்துண்ட விழிவென்றான் என்பதாம்.

கோற்றொடி-இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். அயின்று என்பதற்குப் பகுதி அயில். (கசு)

மிக்கவெஞ் சமத்திடை வெருவி யோடினர்
ரொக்கறுன் புறத்தணி யுலகில் வாழுனர்
புக்குவேட் டகத்தினி லுண்ணும் புன்மையோர்
மக்களுட் பதடியென் றுரைக்கும் வையமே.

இ - ள். மிக்க - அதிகரித்த, வெம் சமத்திடை - வெவ்விய யுத்தத்தினிடத்தில், வெருவி ஓடினர் - பயந்தோடினவர்களும், ஒக்கல்-

சுற்றத்தார், துன்பு உற-வருத்தமடைய, தனி - தனித்திருந்து, உலகில் - உலகத்தில், வாழுனர் - செல்வத்துடன் வாழ்கின்றவர்களும், புக்கு - போய், வேட்டகத்தினில் - மாமனார் வீட்டில், உண்ணும் புசிக்கின்ற, புன்மையோர் - கீழ்மக்களும், மக்களுள்-மனிதருக்குள், பதடி என்று - பதரென்று, வையம்-உலகம், உரைக்கும்-சொல்லும், எ - று. ஏ - அசை.

ஓடினர் வாழுனர் புன்மையோர் என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. வையம் இடவாகு பெயராய் மக்களுயிரைக் குறித்தது. வையம் சொல்லால் அஃறிணை யாதலால் உரைக்கும் என்றார்.()

என்றலுந் திருவுள மின்னதாகு மேன்
மன்றலந் தெரியலாய் மக்க டம்மைநம்
மின்றிகழ் மானவேல் விதர்ப்பன் மாநகர்
சென்றிடப் பணித்தருளென்று செப்பினாள்.

இ - ள். என்றலும் - இப்படியென்று அரசன் சொன்னவளவில், திருவுளம் - உம்முடைய சித்தம், இன்னது ஆகுமேல் - இத்தன்மையதாகுமானால், மன்றல் - வாசனை பொருந்திய, அம் - அழகிய, தெரியலாய் - மாலையையுடைய அரசனே, மக்கள் தம்மை - பிள்ளைகளை, நம் - நம்முடைய, மின் திகழ் - மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற, மானம் - பெருமைபொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, விதர்ப்பன் - வீமராசனுடைய, மா நகர் - பெரியநகரத்தில், சென்றிட - போக, பணித்தருள் - உத்தரவுகொடு, என்று - இப்படியென்று, செப்பினாள் - தமயந்திசொன்னாள், எ - று.

க - ரு. தமயந்தி பிள்ளைகளைத் தன் தகப்பன் வீட்டிற் சனுப்பிவிடு என்றாள் என்பதாம்.

தண்டலில் பாகனை நோக்கித் தாதுசேர்
வண்டிமிர் தெரியலான் வருந்தி மக்களை
விண்டொடு புரிசைசூழ் விதர்ப்பன் றன்னுழை
கொண்டனை போகெனக் கூறினானரோ.

இ - ள். தண்டல் இல்-நீங்குதலில்லாத, பாகனை-தேர்ப்பாகனை, நோக்கி - பார்த்து, தாது சேர் - மகரந்தஞ் சேர்ந்த, வண்டு இமிர் - வண்டுகள் சப்தியாநின்ற, தெரியலான் - மாலையை யணிந்த நளமகாராசன், வருந்தி - வருத்தமுற்று, மக்களை-பிள்ளைகளை, விண் தொடு - மேகத்தை யளாவாநின்ற, புரிசை சூழ் - மதில் சூழ்ந்த, விதர்ப்பன் தன்னுழை - வீமராசனிடத்தில், கொண்டனை போக என-கொண்டுபோவென்று, கூறினான் - உத்தரவுகொடுத்தான், எ - று. அரோ அசை.

க - து. நளன் தேர்ப்பாகனைப் பார்த்துப் பிள்ளைகளை யழைத்துக்கொண்டு வீமராஜனிடத்திற் போவென்றான் என்பதாம்.

கொண்டனை-முற்றெச்சம். (௧௯)

தழுவிய தாதைதன் முகமுந் தாயர்த
முழுமதி யனையவாண் முகமு நோக்குறா
விழிவழி நீருக விம்மி விம்மிநின்
றழுதனர் கண்டுளோ ரலக்க ணெய்தவே.

இ - ள். தழுவிய - தங்களைத்தழுவிக்கொண்ட, தாதைதன் முகமும் - தகப்பனுடைய முகத்தையும், தாயர்தம் - தாயாரினுடைய, முழு மதி அனைய - பூர்ணசந்திரனைபொத்த, வாள் முகமும் - ஒளி பொருந்திய முகத்தையும், நோக்குறா - பார்த்து, விழி வழி - கண்ணின் வழியிலே, நீர் உக - நீர்சிந்த, விம்மி விம்மி நின்று - தேம்பித் தேம்பி நின்று, கண்டுளோர் - பார்த்தவர்கள், அலக்கண் எய்த - துன்பமுறும்படி, அழுதனர் - அழுதார்கள், எ - று.

க - து. பிள்ளைகள் தாய்தகப்பனைப்பார்த்து அழுதார்கள் என்பதாம்.

நோக்குறா-செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இதற்குப் பகுதி நோக்குறு. (௨0)

அலமரு மக்கட மாக மெங்கணு
முலைவழி யொழுகுபா னனைப்ப மோந்துவாய்
புலர்தரப் பற்பல்காற் புல்லிக் கொண்டு கண்
கலுழ்தரு புனலினாற் கழுவி னாளரோ.

இ - ள். அலமரு - மனங்கலங்காநின்ற, மக்கள் தம்-பிள்ளைகளுடைய, ஆகம் எங்கணும் - சரீரமுழுமையும், முலை வழி - முலையின் வழியால், ஒழுகு - ஒழுகாநின்ற, பால் - பாலானது, நனைப்ப - நனைக்கும்படி, மோந்து - உச்சிமோந்து, வாய் புலர்தர - வாயுலர, பற்பல் கால் - அனந்தந்தரம், புல்லிக்கொண்டு - தழுவிக்கொண்டு, கண் கலுழ்தரு - கண்ணினின்று மொழுகாநின்ற, புனலினால் - சலத்தினால், கழுவினாள் - கழுவினாள், எ - று. அரோ - அசை.

க - து. தமயந்தி பிள்ளைகளைக் கண்ணீரால் கழுவினாள் என்பதாம்.

அலமரல் - மனங்கலங்குதல். (௨௧)

மடவர றன்னையு மதலை வேந்தையும்
படுதுய ரொழிகென வாற்றிப் பாகனுங்

குடலுயிர் பிரித்தென வுவகை மக்களைக்
கொடிநெடுந் தேர்மிசைக் கொண்டு போயினான்.

இ - ள். மடவரல் தன்னையும் - தமயந்தியையும், மதுகை - வலி யையுடைய, வேந்தையும் - நளமகாராசனையும், படு - உண்டாகா நின்ற, துயர் ஒழிக என - துக்கநீங்கக்கடவீரென்று, ஆற்றி - தணி த்து, பாகன் - தேர்ப்பாகன், ஆங்கு - அவ்விடத்தினின்றும், உடல் உயிர் பிரித்து என - உடலையு முயிரையும் வேறு பிரித்ததுபோல், உவகை மக்களை - சந்தோஷத்தைச்செய்யும் பிள்ளைகளை, கொடி;- கொடியையுடைய, நெடு தேர் மிசை-நெடிய தேரின்மீது, கொண்டு- ஏற்றிக்கொண்டு, போயினான்-சென்றான், எ - று.

க - து. பாகன் பிள்ளைகளைத் தேர்மேற் கொண்டுபோனான் என்பதாம்.

மடவரறன்னையும் என்பதில் தன்சாரியை. மடவரல்-இளமை பருவமுடையவள். (உ௨

மிகைப்படு துன்பமும் விழையு மின்பமு
மகத்திடை நிகரென நோக்கு மையனுந்
தகைப்பருந் துயரொடு தளர்ந்து சாம்புமேல்
மகப்பிரி வினுந்துயர் வலிதி யாவதே.

இ - ள். மிகைப்படு - அதிகரித்த, துன்பமும் - துயரத்தையும், விழைபு - இச்சிக்கப்பட்ட, இன்பமும் - இன்பத்தையும், அகத் திடை - மனதில், நிகர் என - ஒப்பாக, நோக்கும்-பார்க்கின்ற, ஐய னும் - நளனும், தகைப்பு அரும் - தடுத்தற்கரிய, துயரொடு - துன் பத்துடன், தளர்ந்து - வருந்தி, சாம்புமேல் - சோர்வானேயானால், மகப்பிரிவினும் - மக்கட்பிரிவிலும், துயர் - துயரில், வலிது-வலிமை யுடையது, யாவது - எது (ஒன்றுமில்லை), எ - று.

க - து. பிள்ளைகளைப் பிரிதலைவிடத் துன்பமில்லை என்பதாம்.

ஐயனும் என்ற உம்மை உயர்வு சிறப்பு. (உ௩)

சிலதியர் பரப்பிய தேங்கொண் மெல்லிதழ்
மலர்மிசை மிதிப்பினும் வருந்து சீறடி
நிலமிசைப் படுபர லுறைப்ப நேரிழை
புலவுவேற் காளைபின் றொடர்ந்து போயினாள்.

இ - ள். சிலதியர் - தோழிகள், பரப்பிய - பரவச்செய்த, தேம் கொள் - வாசனைகொண்ட, மெல் இதழ்-மெல்லிய விதழையுடைய,

மலர்மிசை - புஷ்பத்தின் மீது, மிதிப்பினும் - வைத்தாலும், வருந்து - வருந்துகின்ற, சீறடி - சிறியபாதங்களில், நிலமிசை - பூமியின்மீது, படு - உண்டாகிய, பரல் - பருக்கைகள், உறைப்ப - உறுத்தும்படி, நேரிழை - தமயந்தியானவள், புலவு வேல் - புலாலுற்றத்தையுடைய வேலையேந்திய, காளை-நளனது, பின் தொடர்ந்து-பின்னேதொடர்ந்து, போயினாள் - சென்றாள், எ - று.

க - நு. தமயந்தி நளன்பின்னே போனாள் என்பதாம்.

காளை-உவமையாகுபெயர். (உச)

[இதுமுதல் நாலுபாட்டால் நளனையிழந்தவர் செய்கை சொல்லப்படுகின்றது.]

மடவர றன்னொடு மதுகை வேந்தனைக்
கடிமுர சறாதகோ மறுகிற் காண்டலு
மிடியுறு மரவென வேங்கி யேங்கிநின்
றுடல்வெறுத் துயிருக வுழல்கின் றார்சிலர்.

இ - ள். மடவரல் தன்னொடு - தமயந்தியுடன், மதுகை வேந்தனை - வலியையுடைய நளனை, கடி - சிறந்த, முரசு - பேரிகையினொலி, அறாத - நீங்காத, கோ மறுகில் - அரசர்வீதியில், காண்டலும் - பார்த்தவளவில், இடி உறும் - மேகத்தினொலியைக் கேட்ட, அரவு என - சர்ப்பத்தைப் போல, ஏங்கி ஏங்கி - மிகவுமேக்கமுற்று, நின்று - திகைத்துநின்று, உடல் வெறுத்து - தேகத்தைவெறுத்து, உயிர் உக - உயிர்நீங்கும்படி, சிலர் உழல்கின்றார் - சிலருழல்கின்றனர், எ - று.

க - து. கண்டவர் வருந்தினர் என்பதாம். (உரு)

மண்ணிய மணிவரை யனைய மார்பினன்
பெண்ணலங் கனிந்தவிப் பேதை தன்னொடு
நண்ணருங் கானிடை நடத்தல் காணவோ
கண்ணிணை படைத்தனன் கமலத் தோனென்பார்.

இ - ள். மண்ணிய - கழுவிய, மணி வரை-ரத்நமலையை, அனைய - ஒத்த, மார்பினன் - மார்பினையுடைய நளமகாராசன், பெண்ணலம் கனிந்த - பெண்டன்மை முதிர்ந்த, இப்பேதை தன்னொடும் - இத்தமயந்தியுடனே, நண்ணரும் - போகப்படாத, கானிடை - காட்டினிடத்தில், நடத்தல் காணவோ - போதலைப் பார்க்கவோ, கமலத்தோன் - பிரமன், கண் இணை - இரண்டு நேத்திரங்களை, படைத்

தனன் - (எங்களுக்கு) அமைத்தனன், என்பார் - என்று (சிலர்) சொல்லுவார்கள், எ - று.

க - து. சிலர் இந்தத் துன்பத்தைக் காணவோ பிரமன் எங்களை கண்ணைப் படைத்தான் என்பார்கள் என்பதாம்.

பேதை - பருவங்குறியாது பெண்ணென்னுந் துணையாய் நின்றது. (உ௬)

மல்லடு திணிபுய மன்னர் மன்னவ
னெல்லையி றுயருழந் தேகக் காண்டலு
மொல்லையில் வெடித்துயி ரொழிந்த தில்லையாற்
கல்லினும் வலியதோ கவலு நெஞ்சென்பார்.

இ - ள். மல் - மல்லர்களை, அடு - கொல்லாநின்ற, திணி-பலம் பொருந்திய, புயம் - புசத்தையுடைய, மன்னர் மன்னவன் - அரசர்க்கரசனாகிய நளன், எல்லை இல் - அளவில்லாத, துயர் உழந்து-துன்பமுற்று, ஏக - போக, காண்டலும் - பார்க்கவும், ஒல்லையில் - சீக்கிரத்தில், வெடித்து - மார்புவெடித்து, உயிர் - பிராணனானது, ஒழிந்தது இல்லை - நீங்கியதில்லை; (ஆதலால்) கல்லினும் - கல்லைப்பார்க்கிலும், வலியதோ - வலிமையுடையதா, கவலும் - துன்பப்படும், நெஞ்சு - மனமானது, என்பார் - என்று சிலர் சொல்லுவார்கள், எ-று.

க - து. சிலர் தங்கள் மனதைக் கல்லினும் வலிதென்பார்கள் என்பதாம். (உ௭)

தாயினு மருள்புரி தரணி மன்னவன்
போயினன் கானிடை யென்ற போழ்தினின்
மாய்வுறப் பெற்றிலே மன்னர் மன்னன்பா
லேயபே ரன்பின ரெம்மில் யாரென்பார்.

இ - ள். தாயினும் - தாயைப்பார்க்கிலும், அருள் புரி - உயிர்களிடத்தில் கிருபையைச் செய்கின்ற, தரணி மன்னவன் - உலகத்தையாளு நளன், கானிடை - காட்டினிடத்தில், போயினன் - சென்றான், என்ற போழ்தினில் - என்று சொன்னபொழுதிலே, மாய்வுற பெற்றிலேம் - இறக்கப்பெறவில்லை; (ஆதலால்) மன்னர் மன்னன்பால் - ராசாதிராசனாகிய நளனிடத்தில், ஏய - பொருந்திய, பேரன்பினர் - பேரன்பையுடையவர்கள், எம்மில் - எங்களைப்பார்க்கிலும், யார் - யாவர் (உளர்), என்பார் - என்று (சிலர்) சொல்லுவார்கள், எ - று.

க - து. சிலர் சாவு வரவில்லையேயென விசனப்படுவார்கள் என்பதாம். (உஅ)

[இப்பாட்டால் மந்திரி முதலாயினோர் வருந்துதல் சொல்லப்படுகின்றது.]

அடிதொழு மரசரு மமைச்சர் வெள்ளமு
மடவிய ரனைவரு மைந்த ரீட்டமுங்
கொடிநெடு வீதிவாய்க் குறுகி யெங்கணுங்
கடன்மடை திறந்தெனக் கலுழ்ந்திட் டாரரோ.

இ - ள். அடி தொழும்-பாதத்தை வணங்காநின்ற, அரசரும் - இராசர்களும், அமைச்சர் வெள்ளமும் - மந்திரிக்கூட்டங்களும், மடவியர் அனைவரும் - மாதர்கூட்டங்களும், மைந்தர் ஈட்டமும் - புருஷர்களீட்டமும், கொடி - கொடிகளையுடைய, நெடு வீதிவாய் - நீண்ட வீதியினிடத்தில், குறுகி - வந்து, எங்கணும் - எவ்விடத்தும், கடல் மடை திறந்து என - கடல்மடைதிறந்ததுபோல, கலுழ்ந்திட்டார் - அழுதார்கள், எ - று. அரோ-அசை.

க - து. பலருங் கடலுடைந்தாற்போ லழுதார்கள் என்பதாம்.()

[இப்பாட்டால் அரசனைத்தடுத்தந்த அவன்கோட்பாட்டி விழிவு கூறப்படுகின்றது.]

பொய்யுறு தீமொழி புகல்கி லேனெனு
மையநீ யெம்மையிங் கருளில் வேந்துதன்
கையகப் படுத்தினை கானி லேகினின்
மெய்யினும் பொய்ம்மையே விழுமி தாமென்பார்.

இ - ள். பொய்யுறு - பொய்யாகிய, தீ மொழி - தீயசொல்லை, புகல்கிலேன் எனு - சொல்லமாட்டேனென்று, ஐய - ஐயனே, நீ-நீ, எம்மை - எங்களை, இங்கு - இப்பட்டணத்தில், அருள் இல் - கிருபையில்லாத, வேந்து தன் - அரசனுடைய, கைஅகப்படுத்தினை - கையிற்சேர்த்தவனாய், கானில் ஏகின்-காட்டினிடத்துக்குப்போனால், நின் - உன்னுடைய, மெய்யினும் - சத்தியத்தைப் பார்க்கிலும், பொய்ம்மையே - பொய்யுரையே, விழுமிதாம்-மேன்மையுடையதாம், என்பார் - என்று (சிலர்) சொல்லுவார்கள், எ - று.

க - து. அரசனே! நீ காட்டிற்போகில் மெய்யிலும் பொய் பிரகாசிக்கும் என்றார்கள் என்பதாம்.

வேந்து-பண்பாகுபெயர். தன்-சாரியை. (௩௦)

[இப்பாட்டால் இவ்விடங்களில் பொய்யுரைப்பினும் வழுவல்ல வெனக் கூறப்படுகின்றது.]

இன்னுயி ருய்யுமீங் கென்ற போழ்தினும்
பொன்னவிர் முலையினார் புலந்த காலையும்
முன்னருஞ் சூதினும் பொய்ம்மை மூரிவேற்
கன்னவி றோளினாய் கழற லாமென்பார்.

இ - ள். இங்கு - இவ்விடத்தில், இன் உயிர் - இனியவுயிரானது, உய்யும் - பிழைக்கும்,என்ற போழ்தினும் - என்று சொல்லிய காலத்திலும், பொன் - தேமல், அவிர் - பிரகாசிக்கிற, முலையினார் - முலையையுடையமடவார், புலந்த காலையும் - பிணங்கினகாலத்திலும், முன் அரும் - நினைக்கப்படாத, சூதினும் - சூதாட்டத்திலும், பொய்ம்மை - பொய்யுரையை, மூரி - பலம்பொருந்திய, வேல் - வேலாயுதத்தையேந்திய, கல் நவில் - மலைபோன்ற, தோளினாய் - தோளையுடைய அரசனே, கழறலாம் - சொல்லலாம், என்பார் - என்று செல்லுவார்கள், எ - று.

க - து. உயிர் தப்புவிக்கவும் பெண்கள் பிணக்கிலும் சூதாட்டத்திலும் பொய்சொல்லலாம் என்பார்கள் என்பதாம். (௬௧)

[இப்பாட்டால் தங்களுரையை நளன் கொள்ளாதது கண்டு மந்திரி முதலாயினார் வருத்தமடைந்தாரெனப்படுகின்றது.]

எண்டிசைத் தலைவரு மெழில்கண் டேமுறத்
தொண்டைவாய் மடமயின் மாலை சூட்டுநாள்
புண்டரு கோட்டுவெங் களிற்றிற் போதரல்
கண்டக ணிவற்றையுங் காணு மோவென்பார்.

இ - ள். எண் திசை தலைவரும் - அஷ்டதிக்குப்பாலகரும், எழில் கண்டு - இந்நளனழகைப்பார்த்து, ஏமுற - (இவ்வளவழகு நமக்கில்லையென்று) மயக்கமுறுநிற்க, தொண்டை வாய் - கோவைக்கனியையொத்த அதரத்தையுடைய, மட மயில் - தமயந்தியானவள், மாலை சூட்டு நாள் - சுயம்வரமாலையைச் சூட்டியதினத்தில், புண் தரு - மாமிசம்பொருந்திய, கோட்டு-தந்தங்களையுடைய, வெம் - குரூரமான, களிற்றின்-யானையின்மீது, போதரல் - (நீவிரிருவரும்) கோலம்வருதலை, கண்ட கண் - பார்த்தகண்கள், இவற்றையும் - இக்கொடிய செய்கையையும், காணுமோ என்பார் - பார்க்குமோவென்று (சிலர்) சொல்லுவார்கள், எ - று.

க - து. நளன் சிறப்பைக்கண்ட கண்கள் சிறப்பில்லாமையை யுங் காணலாமோ வென்பார்கள் என்பதாம். (கஉ)

[இப்பாட்டால் நளனிடத் தன்புள்ளவராய்ப் புலம்புகின்ற அனைவர்க்கும் புஷ்கரன் பொறாமையால் கொடியவாக்கினை விதித்தானெனப் படுகின்றது.]

மன்னவ னேகுதற் கிரங்கி மாழ்குனர்
துன்னருங் கானிடைத் தொடர்ந்து செல்குன
ரின்னுயிர் செகுப்பலென் றிசையில் புன்மையோ
னந்நக ரிடைமுர சறைவித் தானரோ.

இ - ள். மன்னவன் - நளமகாராசன், ஏகுதற்கு - காட்டிற்போ வதற்கு, இரங்கி - அழுது, மாழ்குனர்-துன்பப்படுகின்றவர்களையும், துன்னரும் - போகக்கூடாத, கானிடை - காட்டினிடத்தில், தொட ர்ந்து - பின்னே தொடர்ந்து, செல்குனர் - போகின்றவர்களையும், இன் உயிர் - இனியவுயிர்களை, செகுப்பல் என்று - கொல்லுவேனெ ன்று, இசையில்-புகழில்லாத, புன்மையோன்-அற்பனாகிய புஷ்கரன், அ நகரிடை - அந்நகரத்தினிடத்தில், முரசு - பேரிகையை, அறை வித்தான் - அடிப்பித்தான், எ - று. அரோ-அசை.

க - து. புட்கரன் நளனுக் கிரங்கினவரையும் அவன்பின் சே ன்றவரையுங் கொல்வேனென்று பறையறைவித்தான் என்பதாம். ()

வசைபடு மன்னவன் வாய்மை யாலறை
விசிமுர சொலிசெவி வெதும்பக் கேட்டலு
மிசைபடு மன்னவற் கிரங்கி னோரெலா
மசுணமென் புள்ளென வலமந் தேங்கினார்.

இ - ள். வசை படு - அபகீர்த்தியையுடைய, மன்னவன்-புஷ்கர ராசனது, வாய்மையால் - ஆக்கினையால், அறை - அடிக்கப்பெற்ற, விசி - வாரினாலிறுக்கிய,முரசு ஒலி - முரசினுடைய சத்தத்தை,செவி வெதும்ப - காதுகள்வெப்பமுற, கேட்டலும்-கேட்டவளவில், இசை படு மன்னவற்கு - புகழையுடைய நளமகாராசனுக்கு, இரங்கினோர் எலாம் - அழுதவர்களெல்லாரும், அசுணம் என் புள் என - அசுண மென்னும் பக்ஷியைப்போல, அலமந்து - மனஞ்சுழன்று, ஏங்கினார்- துன்பப்பட்டார்கள், எ - று.

க - து. பறையறைவிப்பைக் கேட்டவர்கள் எல்லாரும் விசன மடைந்தார்கள் என்பதாம்.

கொடிய ஒலி கேட்கில் இறப்பது அசுணப்பறவைக் கியல்பாத லின் அது பற்றி அவை இவர்க்கு உவமானமாய்க் கூறப்பட்டது. அலமந்து என்பதற்குப் பகுதி அலமா. (௩௪

[இதுமுதல் இரண்டுபாட்டால் நளன் மந்திரி முதலானோர்க்கு விடைகொடுத்தல் சொல்லப்படுகின்றது.]

வருந்திமுன் போதரு மமைச்சர் வாண்முகம்
புரிந்தன னோக்கிய பொருவில் வாய்மையான்
விரிந்தநூற் கேள்வியீ ரறத்தை வேரொடு
மரிந்தனி ரெற்பிரிந் தாற்ற லாமையால்.

இ - ள். வருந்தி - வருத்தமுற்று, முன் போதரும் - முன்னே போகும், அமைச்சர் - மந்திரிகளுடைய, வாள் முகம் - ஒளிபொருந்திய முகத்தை, புரிந்தனன் - விரும்பினவனாய், நோக்கிய - பார்த்த, பொருவில் - ஒப்பில்லாத, வாய்மையான் - சத்தியத்தையுடைய நளமகாராசன், விரிந்த - பரந்த, நூல் கேள்வியீர் - சாஸ்திரவிசாரணையுடையவர்களே, என் பிரிந்து - என்னைப்பிரிந்து, ஆற்றலாமையால்- பொறுக்கமாட்டாமையினால், அறத்தை - தருமத்தை, வேரொடும் - வேருடனே, அரிந்தனிர் - அறுத்துவிட்டீர்கள், எ - று.

க - து. நளன் மந்திரிகளைப்பார்த்துப் பிரிவாற்றாமலறத்தை விட்டீர்கள் என்பதாம்.

வாய்மையானென்னு மெழுவாய் மேல்வரும் பாட்டில் என்றானென்னும் பயனிலைகொண்டது. புரிந்தனன்- முற்றெச்சம். (௩௫)

மேவருஞ் சூதினிற் றோற்ற மேதினி
யாவதும் வென்றல தாள வெண்ணுதல்
கோவியல் பன்றவ னாணை மேற்கொடு
நீவிரென் வாய்மையை நிறுத்து வீரென்றான்.

இ - ள். மேவரும் - பொருந்துதற்கரிய, சூதினில் - சூதாட்டத்தினாலே, தோற்ற - தோற்றுவிட்ட, மேதினி யாவதும்-உலகமெல்லாவற்றையும், வென்று அல்லது - (நான்) வெற்றிகொண்டல்லாமல், ஆள - ஆளுகிறதற்கு, எண்ணுதல் - நினைத்தல், கோ - அரசர்களுக்கு, இயல்பு அன்று - தருமமன்று; (ஆதலால்) அவன் - அந்த புஷ்கரனுடைய, ஆணை - ஆக்கினையை, மேற்கொடு - ஏற்றுக்கொண்டு, நீவிர் - நீங்கள், என் - என்னுடைய, வாய்மையை - சத்தியத்தை, நிறுத்துவீர் - நிலைநிறுத்துங்கள், என்றான் - என்று சொல்லினான், எ - று.

க - து. நளன் மந்திரிகளைப் புட்கரன் சொற்படி கேளுங்கள் ளன்றான் என்பதாம். (௬௬)

மூளரியால் வெந்தவெங் கானின் மொய்துக
ளளியொடு புலம்பின ரழுத கட்கடைத்
துளியினி லவித்தனர் தொடர வெந்திறற்
களிமதக் களிற்றினன் கானி னேகினான்.

இ - ள். மூளரியால் - அக்கினியினால், வெந்த-நீறுபட்ட, வெம் கானில் - வெவ்விய காட்டினிடத்து, மொய் - நிறைந்த, துகள்-தூட் களை, அளியொடு - இரக்கத்துடன், புலம்பினர் - புலம்பினவராய், அழுத-அழுத, கண் கடை - கண்ணின் கடையிலிருந்து வராநின்ற, துளியினில்-நீர்த்துளியினால், அவித்தனர் - அவித்தவர்களாய், தொ டர-பின்றொடர, வெம் திறல் - குரூரமான வலியையும், களி-செருக் கையும், மதம் - மும்மதத்தையுமுடைய, களிற்றினன் - யானையையு டைய நளமகாராசன், கானில் - காட்டினிடத்தில், ஏகினான் - சென் றான், எ - று.

க - து. அழுவார் கண்ணீர் வெம்புழுதியை நனைக்க நளன் காட் டில் நடந்துபோனான் என்பதாம்.

அவித்தனர்-முற்றெச்சம். (௬௭)

திருகுவெஞ் சினக்கலி செல்வன் பின்றொடர்
பரிசனம் யாவுமெய் பதைத்து மீடர
முருகுறழ் பொற்பினான் முன்ன ரேகிய
வருநெறி தெரிவுறா வஞ்ச மாற்றினான்.

இ - ள். திருகு - மாறுபாட்டையும், வெம் - வெவ்விய, சினம் - கோபத்தையுமுடைய, கலி - கலிபுருஷனானவன், செல்வன் - நளனு டைய, பின் தொடர் - பின்னேபோகின்ற, பரிசனம் யாவும் - ஏவல் செய்வோரெல்லோரும், மெய் பதைத்து-சரீரந்துடித்து, மீடர-திரும் பும்படி, முருகு உறழ்-சுப்பிரமண்ணியரை யொத்த, பொற்பினான் - அழகையுடைய நளமகாராசன், முன்னர் ஏகிய - முன்னே போன, அரு நெறி - அரிய வழியானது, தெரிவுறா - தெரியாத, வஞ்சம் - மாயையை, ஆற்றினான் - செய்தான், எ - று.

க - து. சனியன் சனங்களுக்கு வழிதெரியாமற் செய்தான் என் பதாம்.

முருகு-பண்பாகுபெயர். (௬௮)

ஆற்றுவஞ் சனையினு லழகு வாய்ந்தபொற்
கோற்றொடி தன்னொடுங் கொற்ற மன்னவன்
றோற்றுதல் காண்கிலார் துயர மெய்திநின்
றூற்றெழு கண்ணின ருள்ள மாழ்கினர்.

இ - ள். ஆற்று - கலிசெய்த, வஞ்சனையினால் - மாயையினால், அழகு வாய்ந்த - அழகு பொருந்திய, பொன் கோல் தொடி தன்னொடும்-தமயந்தியோடும், கொற்றம் மன்னவன்-வெற்றிபொருந்திய நளமகாராசன், தோற்றுதல் - தெரிதலை, காண்கிலார் - பார்க்காதவர்களாய், துயரம் - துக்கத்தை, எய்தி - அடைந்து, நின்று - நின்று, ஊற்று - சுரப்பானது, எழு - தோன்றுகின்ற, கண்ணினர்-கண்களையுடைய பரிசனங்கள், உள்ளம் மாழ்கினர் - உள்ளத்தில் மயங்கினார்கள், எ - று.

க - து. சனிபகவான் மாயத்தால் சனங்கள் நளனையுந் தமயந்தியையுங் காணுதவர்களாய்ப் புலம்பினார்கள் என்பதாம். (கசு)

ஆயினு மினிதருள் புரியு மெம்பிரான்
றாயமென் மலரடிச் சுவடு காண்கிலேம்
போயினன் யாண்டெவர் புணர்ப்பி னுயதிம்
மாயமென் றருநெறி மருங்கிற் றேடுவார்.

இ - ள். ஆயினும் - தாயைக்காட்டிலும், இனிது - இனிதாக, அருள் - கிருபையை, புரியும் - செய்கின்ற, எம்பிரான் - எங்களரசனாகிய நளமகாராசனது, தூய - பரிசுத்தமாகிய, மெல் - மெல்லிய, மலர்-தாமரைமலர்போன்ற, அடி சுவடு-அடிக்குறியை, காண்கிலேம் - நாங்கள் காணவில்லை; யாண்டு - எவ்விடத்தில், போயினன்-போயினன், இ மாயம்-இந்த வஞ்சனையானது, எவர் புணர்ப்பின் ஆயது - யார் சம்பந்தத்தினாலுண்டாகியது, என்று - என்று பேசிக்கொண்டு, அரு நெறி - அரியவழியின், மருங்கில்-பக்கங்களில், தேடுவார்-தேடுவார்கள், எ - று.

க - து. சனங்கள் நளனைத் தேடுவார்கள் என்பதாம். (உ0)

தேடினர் புகுமிடந் தெரிய லாமையில்
வாடின ரருநெறி மருங்கி னோர்வழி
கூடின ரின்னுயிர் கூற்றங் கைக்கொள
வீடின ராமென வீழ்ந்து விம்மினர்.

இ - ள். தேடினர்-தேடினவர்கள், புகும் இடம்-அரசன் போனவிடம், தெரியலாமையில் - அறியாதபடியால், வாடினர் - வாடினார்

கள்; அரு நெறி - அரிய வழியினது, மருங்கின்-பக்கத்தில், ஓர் வழி-ஒரு வழியை, கூடினர்-அடைந்தார்கள்; இன் உயிர்-இனிய வுயிரை, கூற்றம் கை கொள-யமன் கொண்டுபோக, வீடினராம் என-இறந்தவர்போல, வீழ்ந்து - நிலத்திலே விழுந்து, விம்மினர் - அழுதார்கள், எ - று.

க - து. சனங்கள் நளனைத் தேடிக்காணாது நிலத்தில் வீழ்ந்தழுதார்கள் என்பதாம். (சக)

கொன்னுனை யலங்கல்வேற் குவவுத் தோளினான்
சென்னெறி கண்களிற் றெரியக் காண்கில
ரின்னலுற் றழுதழு தேங்கி யேங்கியத்
தொன்னக ரடைந்தனர் தொடர்ந்து ளோரெலாம்.

இ - ள். கொல் - கொல்லாநின்ற, நுனை-கூர்மையுடைய, அலங்கல் - வெற்றிமாலையையணிந்த, வேல் - வேலையுடைய, குவவு தோளினான் - திரண்ட தோளையுடைய நளமகாராசன், செல் நெறி-போன வழியை, கண்களில் - நேத்திரங்களில், தெரிய - அறிய, காண்கிலர் - காணாதவர்களாய், இன்னல் உற்று - துன்பமுற்று, அழுது அழுது - புலம்பிப் புலம்பி, ஏங்கி ஏங்கி-மிகவுமேக்கமுற்று, தொடர்ந்துளோர் எலாம் - பின்றொடர்ந்து போனவர்களெல்லோரும், அ தொல் நகர் - அந்த தங்கள் பழைய நகரை, அடைந்தனர் - சேர்ந்தார்கள், எ - று.

க - து. சனங்கள் நளனைக்காணாமல் நகரத்தில் வந்தார்கள் என்பதாம். (சஉ)

[இதுமுதல் ஏழுபாட்டால் நளன் சென்றபின்
அத்தேயத்திலுண்டாகிய செய்கை
சொல்லப்படுகின்றது.]

பறவைகள் குடம்பையுட் பார்ப்ப ருத்தில
கறவைகள் புனிற்றிளங் கன்றுக் கூட்டில
நறவுயிர்த் தலர்கில மலர்க ணாமவே
லிறைவனே கினன்வனத் தென்ற பின்னரே.

இ - ள். நாமம் - அச்சத்தைத் தருகின்ற, வேல்-வேலையுடைய, இறைவன் - நளமகாராசன், வனத்து - காட்டினிடத்தில், ஏகினன் என்ற பின்னர் - போயினனென்ற பின்பு, பறவைகள் - பக்ஷிகள், குடம்பையுள் - கூண்டுக்குள்ளே, பார்ப்பு-தங்குஞ்சுகளை, அருத்தில - இரையூட்டவில்லை; கறவைகள் - பசுக்கள், புனிற்று இளம் கன்றுக்கு - மிகுந்த விளங்கன்றுகளுக்கு, ஊட்டில - பாலுண்ணக்கொடுத்தில;

மலர்கள் - புஷ்பங்கள், நறவு உயிர்த்து - தேனைத்தந்து, அலர்கில - மலரவில்லை, எ - று.

க - து. நளன் காட்டிற்போனு னென்றபின் பறவைகள் குஞ்சுகளுக் கிரைதரவில்லை; பசுக்கள் கன்றுகளுக் கூட்டவில்லை; மலர்கள் மலரவில்லை என்பதாம். (சரு)

வான்மறந் தனதுளி வழங்க லின்னிசைத்
தேன்மறந் தனமட மகளிர் தேங்குழல்
பான்மறந் தனபசுங் குழவி பாய்கவுட்
கான்மத மறந்தன களிநல் யானையே.

இ - ள். வான் - மேகங்கள், துளி வழங்கல் - மழைபெய்தலை, மறந்தன-மறந்துவிட்டன; இன் இசை - இனிய இசையையுடைய, தேன் - வண்டுகள், மட மகளிர் - இளமைபொருந்திய ஸ்திரீகளுடைய, தேம் குழல் - வாசனைபொருந்திய அளகத்தை, மறந்தன-மறந்துவிட்டன; பசு குழவி - இளங்குழந்தைகள், பால்-பாலுண்ணலை, மறந்தன - மறந்துவிட்டன; களி - செருக்கையுடைய, நல் - நல்ல, யானை - யானைகள், பாய் - பெருகாநின்ற, கவுள்-கன்னத்திலுண்டாகிய, கான் மதம்-வாசனை பொருந்திய மதவர்ஷத்தை, மறந்தன-மறந்துவிட்டன, எ - று. ஏ - அசை.

க - து. மழை பெய்யவில்லை; வண்டுகள் பெண்கள் கூந்தலில் மொய்க்கவில்லை; குழந்தைகள் பாலுண்ணவில்லை; யானைகள் மதம் பொழித லொழிந்தன என்பதாம். (சச)

மலர்ப்பசுந் தாழ்குழன் மகளிர் கேள்வர்பாற்
புலத்தலுங் கலத்தலும் பொருந்து றுமையா
லலத்தக மிழந்தன குஞ்சி யந்நலார்
முலைச்சுவ டிழந்தன முழவுத் தோள்களே.

இ - ள். மலர் - புட்பமாலைகளையணிந்த, பசு - பசுமையாகிய, தாழ் - நீண்ட, குழல் - கூந்தலையுடைய, மகளிர் - மாதர்கள், கேள்வர்பால் - கணவரிடத்தில், புலத்தலும் - பிணக்கத்தையும், கலத்தலும் - புணர்ச்சியையும், பொருந்துறுமையால் - அடையாமையால், குஞ்சி - குடுமிகள், அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பை, இழந்தன - நீங்கிவிட்டன; அ நலார் - அந்த மாதருடைய, முலை சுவடு-ஸ்தனத்தின் குறியை, முழவு - மத்தளம்போன்ற, தோள்கள் - புசங்கள், இழந்தன - நீங்கின, எ - று. ஏ - அசை.

க - து. ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் புலவியுங் கலவியு மற்றன என்பதாம்

ஊடல் அது தீர்வதற்குத் தலைவிபாதத்தில் தலைவன் வணங்கில் அப்பொழுது அவள்பாதத்துச் செம்பஞ்சு அவன் குடுமியிற்படும்; புணர்ச்சி யுண்டானால் அவள் ஸ்தனத்தில் எழுதிய சந்தனக்கோல மாடவர் புயத்தில் பதியும். இவை துன்பத்தினால் இன்மையால் 'இழந்தன' என்றார். (சு௫)

அள்ளிலை வேற்கணா ரங்கை மீதுவைத்
தெள்ளரு மென்மொழி பயிற்ற லின்மையால்
வள்ளவா யாரமு துண்ணும் வண்சிறைக்
கிள்ளையுந் தேன்மொழி கிளக்க லற்றவே.

இ - ள். அள்-கூர்மை பொருந்திய, இலை-இலைபோன்ற, வேல் - வேலாயுதத்தை யொத்த, கணார் - கண்களையுடைய ஸ்திரீகள், அம் கைமீது - அழகிய கையின்மீது, வைத்து - வைத்துக்கொண்டு, எள்ளரும் - இகழ்ச்சியில்லாத, மெல் - மிருதுவான், மொழி - சொற்களை, பயிற்றல் இன்மையால் - கற்பிக்காதபடியால், வள்ளவாய் - கிண்ணத்தினிடத்தில், ஆர் - நிறைந்த, அமுது - பாலை, உண்ணும் - குடிக்கும், வண்-வளப்பம்பொருந்திய, சிறை-இறகையுடைய, கிள்ளையும் - கிளிப்பிள்ளையும், தேன் - மதுரமாகிய, மொழி - சொற்களை, கிளக்கல் அற்ற - பேசுதலொழிந்தன, எ - று. ஏ-அசை.

க - து. கிளிகள் பெண்கள் கற்பிக்காமையால் பேசுதலற்றன என்பதாம். (சு௬)

வாம்பரி யிழந்தன வாவு மைங்கதி
யேம்பலின் விழவணி யிழந்த கோமறு
காம்பல்வா யிழந்தன முறுவ லாரகிற்
றீம்புகை யிழந்தன செம்பொன் மாடமே.

இ - ள். வாம் - தாவுகின்ற, பரி - குதிரைகள், வாவும் - தாவாநின்ற, ஐங்கதி - ஐவகை நடையினையும், இழந்தன - நீங்கிவிட்டன; ஏம்பலின் - வருத்தத்துடன், விழவு அணி - உச்சவாலங்காரத்தை, கோ மறுகு - ராசவீதிகள், இழந்த - நீங்கிவிட்டன; ஆம்பல் - செவ்வல்லி மலர்போன்ற, வாய் - ஸ்திரீகளுடைய வாய்கள், முறுவல் - புன்சிரிப்பை, இழந்தன-நீங்கிவிட்டன; ஆர்-நிறைந்த, அகில்-அகிற்கட்டையினது, தீம்-இனிமையாகிய, புகை-புகையை, செம் பொன்-சிவந்த பொன்னாற்செய்த, மாடம் - உபரிகைகள், இழந்தன-நீங்கின, எ - று. ஏ - அசை.

க - து. குதிரைகள் கதியிழந்தன, இராஜவீதி திருவிழா விழந்தன, மாதர்வாய் நகை யிழந்தன, மாடங்கள் புகை யிழந்தன என்பதாம். (சஎ)

பாவல ரிழந்தனர் பரிசி லுண்பலி
தேவரு மிழந்தனர் கலியின் றீமையாற்
காவல னெடிபடு கானி லேகலால்
யாவரு மிழந்தன ரின்ப மென்பவே.

இ - ள். பாவலர்-புலவர்கள், பரிசில்-தியாகத்தை, இழந்தனர் - நீங்கினார்கள்; உண் - உண்ணப்பட்ட, பலி - அவிசை, தேவரும் - தேவர்களும், இழந்தனர் - இழந்துவிட்டார்கள்; கலியின்-கலிபுருஷனுடைய, தீமையால் - பொல்லாங்கினால், காவலன் - நளமகாராஜன், நெடி படு - சில்வண்டையுடைய, கானில்-காட்டில், ஏகலால்-போதலினால், யாவரும் - எல்லோரும், இன்பம் என்ப - இன்பமென்பனவற்றை, இழந்தனர் - நீங்கினார்கள், எ - று. ஏ-அசை.

க - து. பாவலர் தியாக மிழந்தார்கள், தேவர்க ளவியிழந்தார்கள், யாவரு மின்ப மிழந்தார்கள் என்பதாம். (சஅ)

அறந்தலை மயங்கின பொய்ம்மை யார்ந்தன
மறந்தலை யெடுத்தன தீமை மல்கின
திறம்பின மனுநெறி தவங்க டீர்ந்தன
நிறைந்தன வஞ்சனை நேமி யெங்குமே.

இ - ள். நேமி எங்கும் - உலகமெங்கும், அறம் - தருமம், தலை மயங்கின - தலைதடுமாறின; பொய்ம்மை-அசத்தியம், ஆர்ந்தன - நிறைந்தன; மறம் - பாபங்கள், தலை எடுத்தன - வளர்ந்தன; தீமை-துர்நடத்தைகள், மல்கின - நெருங்கின; மனு நெறி-இராசதருமம், திறம்பின - கெட்டன; தவங்கள் - தவசுகள், தீர்ந்தன - நீங்கின; வஞ்சனை - வஞ்சனைகள், நிறைந்தன - நிரம்பின, எ - று.

க - து. தரும நீங்கின, பொய் நிறைந்தன, பாவங்கள் வளர்ந்தன, துன்மார்க்க நிறைந்தன, இராஜதருமங் கெட்டன, தவங்கள் நீங்கின, வஞ்சனை நிரம்பின என்பதாம். (சகூ)

நகர்நீங்குபடலம் முற்றுப்பெற்றது.



நளனும்தமயந்தியும் அன்னத்தாற்சீலையிழந்து இருவருமோர்துகிலுடுத்திநித்திரைசெய்தல்.

# கான்புகுபடலம்.

[இப்படலத்தால் தன்னகரைவிட்டு நீங்கிய நளமகாராசன் பிறர் நகரில் தன்னிலை தப்பிச் செல்வதில் விருப்பமின்றிக் கானகம் புகுதல் சொல்லப்படுகின்றது.]

[இதுமுதல் மூன்றுபாட்டால் நளன் சென்றவிடத் துண்டாகிய சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

களிமயில் குனித்திடக் கால மன்றியுந்
துளிமுகில் பிலிற்றின துணர்த்த பூங்கொடி
முளிசினை தளிர்த்தன முகைத்த பைந்தரு
நளிகடற் றனையா னடந்த கானமே.

இ - ள். நளி - குளிர்ச்சி பொருந்திய, கடல் - சமுத்திரத்தை யொத்த, தானையான் - சேனையையுடைய நளமகாராஜன், நடந்த - சென்ற, கானம் - காட்டினில், களி - களிப்பையுடைய, மயில் - மயில்கள், குனித்திட - கூத்தாட, காலம் அன்றியும் - கார்கால மல்லாமலும், துளி - நீர்த்துளிகளை, முகில் - மேகங்கள், பிலிற்றின - பெய்தன; பூ - பொலிவு பொருந்திய, கொடி - கொடிகள், துணர்த்த - பூங்கொத்துகளை விட்டன; முளி சினை - உலர்ந்த கிளைகள், தளிர்த்தன - துளிர்த்தன; பை - பசுமையாகிய, தரு-விருக்ஷங்கள், முகைத்த - அரும்பின, எ - று.

க - து. நளன் நடந்தகாட்டில் மழைபெய்தன, கொடிகள் தளிர்த்தன, பட்டமரம் வளர்ந்தன என்பதாம். (க)

விள்ளரு மதரிடை வெதும்பும் வெம்பரல்
கள்ளவிழ் மலரெனக் குழைந்து காட்டின
வொள்ளழற் கதிர்சுட வுலரும் வெஞ்சுரம்
வள்ளவாய் மலர்விரி மருதம் போன்றதே.

இ-ள். விள் அரும் - சொல்லுதற்கரிய, அதரிடை - வழியிலே, வெதும்பும்-சுடாநின்ற, வெம் - வெப்பமான, பரல் - மணியாம்பருக்கைகள், கள் - தேனுடன், அவிழ் - விரியாநின்ற, மலர் என - புஷ்பம் போல, குழைந்து - மிருதுவாய், காட்டின - காண்பித்தன; ஒள்-

பிரகாசம் பொருந்திய, அழல் - அழற்றுகின்ற, கதிர் - சூரியகிரணங்கள், சுட-தகிக்க, உலரும் - காய்ந்த, வெம் - வெப்பமாகிய, சுரம் - பாலைநிலமானது, வள்ளம்-கிண்ணம்போல, வாய்-முகத்தையுடைய, மலர் - புட்பங்கள், விரி - விரியாநின்ற, மருதம் - மருதநிலத்தை, போன்றது - ஒத்திருந்தது, எ - று. வ - அசை.

க - து. பருக்கைக் கற்கள் மலரென மிருதுவாயிருந்தன, பாலைநிலம் வயனிலம்போ லிருந்தன என்பதாம். (உ)

ஊறுசெய் தூன்சுவைத் துடம்பு வீக்கிய
வாறலை கள்வரு மளிய ராயினர்
வேறினி யுரைப்பதென் வெருவு மாவொடு
மாறுகொ ளுழுவையு மாற்றந் தீர்ந்தவே.

இ - ள். ஊறு செய்து - கொலைசெய்து, ஊன் - மாமிசத்தை, சுவைத்து - புசித்து, உடம்பு - சரீரத்தை, வீக்கிய - பருக்கச் செய்த, ஆறு அலை - வழியினிடத்திற் பறிக்கின்ற, கள்வரும் - திருடரும், அளியர் ஆயினர் - கிருபையுடையவராயினர்கள்; வேறு - வேறாக, இனி - இனிமேல், உரைப்பது என் - சொல்லுவதென்னை; வெருவும் - அஞ்சாநின்ற, ஆவொடு - பசுக்களுடனே, மாறு கொள் - பகைகொண்ட, உழுவையும் - புலியும், மாற்றம் - பகையை, தீர்ந்த - நீங்கின, எ - று. ஏ - அசை.

க - து. திருடர்கள் கிருபையுள்ளவர்களானார்கள், புலியும் பசுவும் பகைநீங்கின என்பதாம். (ங)

ஆயிடை யுயிர்நிக ரணங்க னொளொடு
மேயதன் னகர்வயின் விசும்பு போழ்ந்துலாங்
காய்கதிர் நுழைகலாக் காவி லாடல்போற்
போயின னழலுமிழ் புலவு வேலினான்.

இ - ள். ஆயிடை - அந்தப்பாலைநிலத்தில், உயிர் நிகர் - தன்னுயிரையொத்த, அணங்கு அனாளொடும் - தெய்வப்பெண்ணையொத்த தமயந்தியுடன், மேய - பொருந்திய, தன் - தன்னுடைய, நகர்வயின் - பட்டணத்தின்கண், விசும்பு - மேகங்களை, போழ்ந்து - பிளந்துகொண்டு, உலாம் - உலாவுகின்ற, காய் - காயாநின்ற, கதிர் - சூரிய கிரணமானது, நுழைகலா - நுழையக்கூடாத, காவில் - சோலையில், ஆடல்போல் - விளையாடல்போல், அழல் - அக்கினியை, உமிழ் - கக்காநின்ற, புலவு - புலால்நாற்றம்பொருந்திய, வேலினான் - வேலையுடைய நளமகாராஜன், போயினன் - நடந்தான், எ - று.

க - து. நளன் மனைவியுடனே சோலையில் விளையாடல்போல் அப்பாலையிற் போனான் என்பதாம். (௪)

அள்ளிலைப் பூணினா னேகு மாற்றிடைக்
கொள்ளைவண் டினமிழி நறவு கூட்டுணும்
வள்ளவாய் மலரவிழ் வாவி யங்கரைப்
புள்ளுருக் கொடுகலி போயி னானரோ.

இ - ள். அள் - நெருங்கிய, இலை - இலைபோன்ற, பூணினான் - ஆபரணங்களையணிந்த நளமகாராசன், ஏகும் - போகாநின்ற, ஆற்றிடை - காட்டுவழியிலே, கொள்ளை - மிகுதியாகிய, வண்டு இனம் - சுரும்புக் கூட்டங்கள், இழி - பெருகாநின்ற, நறவு - தேனை, கூட்டு உணும் - கொள்ளைகொள்ளும்படி யிருக்கின்ற, வள்ளம் - கிண்ணம் போன்ற, வாய் - முகத்தையுடைய, மலர் - புஷ்பங்கள், அவிழ் - விரியாநின்ற, வாவி - தடாகத்தினது, அம் - அழகிய, கரை - கரையினிடத்து, புள் உரு கொடு - அன்னத்தினுருவைக்கொண்டு, கலி - கலியன், போயினான் - சென்றான், எ - று. அரோ - அசை.

க - து. சனிபகவான் அன்னத்தின் வடிவுகொண்டு போனான் என்பதாம். (௫)

வாவியின் மருங்குநன் மணிகள் கோத்தெனத்
தூவியம் பொற்சிறை மென்புட் டோன்றலு
மோவிய ரெழுதரு முருவப் பைங்கொடி
காவியங் கண்ணிணை களிப்ப நோக்கினாள்.

இ - ள். வாவியின் - தடாகத்தினது, மருங்கு-பக்கத்தில், நல் - நல்ல, மணிகள்-முத்துக்களை, கோத்து என-கோவையிட்டதுபோல, தூவி - தூவியெனப்பட்ட, அம் - அழகிய, பொன் - பொற்பிரகாசம் பொருந்திய, சிறை - இறகையுடைய, மெல் - மிருதுவாகிய, புள் - அன்னப்புள்ளானது, தோன்றலும் - காணலும், ஓவியர் - சித்திரக்காரர்கள், எழுத அரு - எழுதுதற்கரிய, உருவம் - வடிவத்தை யுடைய, பை - பசுமையாகிய, கொடி-கொடிபோன்ற தமயந்தியான வள், காவி - நீலோற்பலத்தையொத்த, அம் - அழகிய, கண் இணை - இரண்டுநேத்திரமும், களிப்ப - சந்தோஷிக்கும்படி, நோக்கினாள் - பார்த்தாள், எ - று.

க - து. தமயந்தி அன்னத்தைக் கண்டாள் என்பதாம். (௬)

பன்மலர் கஞலிய பணிகொள் வாவியிற்
பொன்னவிர் கொடுஞ்சிறைப் புள்ளை நோக்குறா

மன்னநம் மணநிலை முடித்த வண்சிறை
யன்னமென் புள்ளினீ தழகு வாய்ந்ததே.

இ - ள். பல் - நானாவிதமான, மலர் - புஷ்பங்கள், கஞலிய நெருங்கிய, பனி கொள் - குளிர்ச்சியைக்கொண்ட, வாவியில் - தடாகத்தில், பொன் - பொன்போல, அவிர் - பிரகாசியாநின்ற, கொடு சிறை - கொடுமையான இறகையுடைய, புள்ளை - அன்னத்தை, நோக்குறு - பார்த்து, மன்ன - அரசனே, நம் - நம்முடைய, மண நிலை - விவாகத்தை, முடித்த - நிறைவேற்றின, வண் சிறை - வளப்பமாகிய இறகையுடைய, அன்னமென் புள்ளின் - தெய்வ அன்னத்தைக்காட்டினும், ஈது - இப்பறவை, அழகு - அழகை, வாய்ந்தது - பொருந்தியது, எ - று. ஏ-அசை.

க - து. தமயந்தி நம்மிருவரையுங் கூட்டிய அன்னத்தைப்பார்க்கிலும் இவ்வன்னம் அழகுள்ளதென்றாள் என்பதாம். (எ)

மற்றுமோ ருயிரென வளர்த்த பூவையுஞ்
சொற்றரு கிள்ளையு மறப்பத் தூமணிப்
பொற்றடந் தோளினாய் பொன்னம் புள்ளினைப்
பற்றிநீ தருகெனப் பணிந்து கூறினாள்.

இ - ள். மற்றும் ஓர் - மற்றொரு, உயிர் என - உயிர்போல, வளர்த்த - வளர்த்த, பூவையும் - நாகணவாய்ப்புள்ளையும், சொல் - மொழிகளை, தரு - சொல்லாநின்ற, கிள்ளையும் - கிளிப்பிள்ளைகளையும், மறப்ப - மறக்கும்படி, தூ - பரிசுத்தமாகிய, மணி - ரத்நவடமணிந்த, பொன் - அழகிய, தடம் - விசாலமாகிய, தோளினாய் - புயத்தையுடைய அரசனே, பொன் - பொன்போன்ற, அம் - அழகிய, புள்ளினை - அன்னத்தை, பற்றி - பிடித்து, நீ தருக என - நீகொடுப்பாயாகவென்று, பணிந்து - வணங்கி, கூறினாள் - சொல்லினாள், எ-று.

க - து. தமயந்தி நளனைநோக்கி அன்னத்தைப் பிடித்துத்தரச் சொன்னாள் என்பதாம். (அ)

ஓர்துகி லிருவரு முடுத்து மற்றையோர்
காரகிற் றீம்புகை கமழு நீவிகொண்
டேர்குடி யிருந்தன விலைகொள் பூணினாய்
வார்சிறைப் புள்ளினை வளைத்து மென்றனள்.

இ - ள். ஓர் துகில் - ஓராடையை, இருவரும் - நாமிரண்டுபேரும், உடுத்து - தரித்துக்கொண்டு, மற்றை ஓர் - மற்றொரு, கார் - கறுத்த, அகில் - அகிற்கட்டையினது, தீம் - இனிமையாகிய, புகை-

தாமம், கமழும் - பரிமளியாநின்ற, நீவி கொண்டு - ஆடையைக்கொண்டு, ஏர்-அழகு, குடி இருந்தன - வாசஞ்செய்வதையொத்த, இலைகொள் - தழைத்தலைக்கொண்ட, பூணினாய் - ஆபரணங்களையுடைய அரசனே, வார் சிறை - நீண்ட இறகையுடைய, புள்ளினை - அன்னத்தை, வளைத்தும் என்றனள்-பிடிப்போமென்று சொன்னாள், எ-று.

க-து. ஒருவஸ்திரத்தை இருவருந் தரித்துக்கொண்டு மற்றொரு வஸ்திரத்தா லன்னத்தைப் பிடிப்போ மென்றாள் என்பதாம். (௯)

கருந்தடங் கண்ணிதன் னுள்ளங் காமுறத்
திருந்துவேற் றடக்கையான் றுகிலிற் சேர்த்தலும்
பொருந்திய துகிலொடும் வஞ்சம் பூண்டெதி
ரிருந்தபுள் ளந்தரத் தெழுந்து போயதே.

இ-ள். கரு - கறுத்த, தடம் - விசாலமாகிய, கண்ணி தன் - கண்களையுடைய தமயந்தியினது, உள்ளம் - மனது, காமுற - இச்சிக்க, திருந்து - திருத்தமாகிய, வேல் - வேலையேந்திய, தடம் - பருத்த, கையான்-கையையுடைய அரசன், துகிலில்-ஆடையில், சேர்த்தலும்-சேர்த்தவளவில், பொருந்திய-தன்மேற்சேர்த்த, துகிலொடும்-ஆடையோடும், வஞ்சம் - கபடத்தை, பூண்டு - கொண்டு, எதிர் இருந்த-எதிரிலிருந்த, புள்-அன்னம், அந்தரத்து-ஆகாசத்தில், எழுந்து-எழும்பி, போயது - போயிற்று, எ - று. ஏ-அசை.

க - து. நளன் சீலையை அன்னத்தின்மேற் போட அன்னஞ் சீலையைக் கொண்டுபோயிற்று என்பதாம். (௧௦)

புனை துகில் கவர்ந்துபைம் பொன்னி றத்தபுள்
பனியிரு விசும்பினிற் பறத்தல் காண்டலு
மனைவித னருந்துயர் நோக்கி மாழ்கினான்
வினைவலி யிதுவென மெலிவு நீக்கினான்.

இ-ள். புனை - தரித்திருந்த, துகில் - ஆடையை, கவர்ந்து-கிரகித்துக்கொண்டு, பை - பசுமையாகிய, பொன் - பொன்போன்ற, நிறத்த - நிறத்தையுடைய, புள்-அன்னமானது, பனி-குளிர்ந்த, இரு-பெருமைபொருந்திய, விசும்பினில் - ஆகாசத்தினில், பறத்தல் - பறந்துபோதலை, காண்டலும் - கண்டவளவில், மனைவி தன் - மனையாளது, அரு துயர் - அரிதான துக்கத்தை, நோக்கி - பார்த்து, மாழ்கினான் - வருந்தினான்; வினை - ஊழ்வினையினது, வலி - உறுதி, இது என - ஈதென்று, மெலிவு - துன்பத்தை, நீக்கினான் - போக்கினான், எ - று.

க - து. நளன் விதிவச மிதுவென்று எண்ணினான் என்பதாம்.

கல்லதர் நடந்துபூங் கமலம் வாட்டிய
மெல்லடி சிவப்புறல் வீழி வாய்மயிற்
கொல்லுமே யெனமன முருகி யுந்தையூர்
செல்லுநீ ணெறியிது வென்று செப்பினான்.

இ - ள். கல் அதர் - மலை வழியில், நடந்து-நடந்து, பூ-அழகிய, கமலம் - தாமரை மலரை, வாட்டிய - கெடுத்த, மெல் அடி - மிருதுவான பாதமானது, சிவப்பு உறல் - சிவத்தல், வீழி-வீழிப்பழம்போன்ற, வாய் - அதரத்தையுடைய, மயிற்கு - மயில்போன்ற தமயந்திக்கு, ஒல்லுமே என-கூடுமோவென்று, மனம்-மனது, உருகி-இளகி, உந்தை-உன்தகப்பனது, ஊர்-குண்டினபுரத்துக்கு, செல்லும்-போகாநின்ற, நீள் - நீண்ட, நெறி - மார்க்கம், இது என்று - இதுவென்று, செப்பினான் - சொன்னான், எ - று.

க - து. நளன் தமயந்திக்கு உன்தகப்ப னூருக்குப் போகும்வழி இதுவென்றான் என்பதாம். (கஉ)

ஆங்கது கேட்டலு மழுது மாழ்கிநொந்
தீங்குநின் னடியனேன் பிழைத்த தியாதுகொல்
பூங்கழற் குரிசிலோய் பொறியி லேன்றனை
நீங்கவோ விவ்வுரை நிகழ்த்தி னாயென்றாள்.

இ - ள். ஆங்கு - அவ்விடத்தில், அது-அந்தச்சொல்லை, கேட்டலும் - கேட்டவளவில், அழுது - புலம்பி, மாழ்கி-வருந்தி, நொந்து - மனநொந்து, ஈங்கு - இவ்விடத்தில், நின் - உனக்கு, அடியனேன் - அடிமைத்திறம் பூண்டயான், பிழைத்தது - குற்றஞ்செய்தது, யாது கொல் - எது; பூ - அழகிய, கழல்-வீரக்கழலையணிந்த, குரிசிலோய் - அரசனே, பொறியிலேன் தனை - அறிவில்லாத என்னை, நீங்கவோ - பிரியவோ, இ உரை - இந்தவசனத்தை, நிகழ்த்தினாய் - சொன்னாய், என்றாள் - என்று (தமயந்தி) சொல்லினாள், எ - று.

க - து. தமயந்தி என்னைவிட்டு நீங்கவோ இப்படிச் சொன்னீரென்றாள் என்பதாம். (கங)

செயிரறு மதிமுகம் பசப்பச் சிந்தைநொந்
தயர்வொடு கண்பனித் தவலங் கோடலை
மயில்லியற் பேதைநிற் பிரிந்து வாழ்வெனே
யுயிர்பிரிந் தாலுட லுய்யு மோவென்றான்.

இ - ள். செயிர் அறு - குற்றமற்ற, மதி - சந்திரனைப்போன்ற, முகம் - வதனமானது, பசப்ப - பசந்துபோக, சிந்தை நொந்து-மன

நொந்து, அயர்வொடு - சோர்வுடனே, கண் பனித்து - கண்ணீர் விட்டு, அவலம் கோடலே-துன்பத்தைக் கொள்ளாதே; மயில் - மயில் போலும், இயல் - சாயலையுடைய, பேதை-தமயந்தியே, நின் பிரிந்து-உன்னைப்பிரிந்து, வாழ்வெனே-வாழ்வேனே; உயிர் பிரிந்தால்-உயிர் நீங்கினால், உடல் - தேகம், உய்யுமோ - பிழைக்குமோ, என்றான் - என்று (நளமகாராசன்) சொன்னான், எ - று.

க - து. நளன் தமயந்தியே உன்னைப்பிரிந்து வாழேனென்றான் என்பதாம். (கச)

முருகுயிர்த் தளியின மூசு பூங்குழற்
கருதரு பெருந்துயர் காண்கி லேனெனாப்
பரிநெடுந் தேரொடும் பரிதி வானவ
னுரவுநீர்க் கருங்கட லொளித்திட் டானரோ.

இ - ள். முருகு - தேனை, உயிர்த்து - பெற்று, அளி இனம் - வண்டுக் கூட்டங்கள், மூசு - மொய்க்காநின்ற, பூ - பூவை யணிந்த, குழல் - கூந்தலையுடைய தமயந்தியினது, கருத அரு - நினைத்தற் கரிய, பெரு துயர் - பெரிதாகிய துன்பத்தை, காண்கிலேன் எனா - பார்க்கமாட்டேனென்று, பரி - குதிரைகட்டிய, நெடும்- நெடிய, தேரொடும்-ரதத்துடனே, பரிதி வானவன் - சூரியதேவன், உரவு நீர்- உவர்நீரையுடைய, கரு கடல் - கறுத்தசமுத்திரத்தில், ஒளித்திட்டான் - மறைந்தான், எ - று. அரோ-அசை.

க - து. சூரியன் அஸ்தமனமாகினான் என்பதாம். (கரு)

மாயிரு ஞாலமும் வானு நுங்கிய
பாயிருட் கங்குலிற் பாவை தன்னொடும்
போயரின் முற்றிய பொலிவின் மண்டப
மேயினனரசர்கோன் விதியின் கொட்பினால்.

இ - ள். மா - மகத்தாகிய, இரு - பெரிய, ஞாலமும் - பூமியையும், வானும் - ஆகாயத்தையும், நுங்கிய - விழுங்கிய, பாய் - பரவிய, இருள் - இருட்டையுடைய, கங்குலில் - இராத்திரியில், பாவை தன்னொடும் - தமயந்தியுடனே, போய் - சென்று, அரில் - தூறுகள், முற்றிய - நிறைந்த, பொலிவு இல் - சிறப்பற்ற,மண்டபம் - ஓர்மண்டபத்தை, அரசர்கோன் - ராசாதிராசனாகிய நளமகாராசன், விதியின் - வினையினது, கொட்பினால் - திரிபினால், மேயினன் - அடைந்தான், எ - று.

க - து. நளன் தமயந்தியுடன் ஓர் மண்டபத்தைச் சார்ந்தான் என்பதாம். (கசா)

இன்னகிற் புகைதவழ்ந் தினிதின் மென்மைய
பன்மல ரமளிமேற் பள்ளி கொள்பவர்
புன்னுனை பரந்தவெம் பொடிகொள் பார்மிசை
மன்னின ரூழினும் வலிது யாவதே.

இ - ள். இன் - இனிதாகிய, அகில் புகை-அகிற்றூமம், தவழ்ந்து - ஊர்ந்து, இனிதின் - இன்பமாய், மென்மைய - மிருதுவாகிய, பல் - நாநாவிதமான, மலர் - புஷ்பம் பரப்பிய, அமளி மேல் - படுக்கையின்மீது, பள்ளி கொள்பவர் - சயனிப்பவராகிய (தமயந்தி நளனிருவரும்), புல் - புல்லினது, நுனி-நுனிகள், பரந்த-பரவிய, வெம்-வெவ்விய, பொடி கொள்-புழுதியைக்கொண்ட, பார்மிசை-பூமியின்மேல், மன்னினர் - படுத்தார்கள், (ஆதலால்) ஊழினும் - ஊழினைக் காட்டிலும், வலிது - வன்மையையுடையது, யாவது - யாது, எ-று. ஏ - அசை.

க - து. மெல்லணையிற் படுத்த நளனுந் தமயந்தியும் புல்லணையிற் படுத்தார்கள் என்பதாம். (கசு

அனிச்சமென் புதுமல ரமளி மேயினும்
பனித்திடு மெய்யெனப் பதைத்து வாடுவேன்
கனிப்படு கிளவிவெம் பொடியிற் கண்படி
லினித்தமி யேனுயி ரெங்ங னுய்யுமே.

இ - ள். அனிச்சம் - அனிச்ச விருக்ஷத்தினது, மெல் - மிருதுவாகிய, புது மலர் - புதிய மலரையுடைய, அமளி - மெத்தையிலே, மேயினும் - படுத்தாலும், மெய்-சரீரமானது, பனித்திடும் என-வருந்துமென்று, பதைத்து - துடித்து, வாடுவேன் - சோர்வேன்; கனிபடு - பழச்சுவைபொருந்திய, கிளவி - வசனத்தையுடைய தமயந்தி, வெம் பொடியில் - வெவ்விய புழுதியில், கண் படில் - நித்திரை செய்யில், இனி - இனிமேல், தமியேன் உயிர்-தனியாகிய என்னுயிர், எங்ஙன் - எப்படி, உய்யும் - பிழைக்கும், எ - று. ஏ - அசை.

க - து. நளன், தமயந்தி புற்புழுதியிலே நித்திரைசெய்ய என்னுயி ரெப்படி பிழைக்கும் என்றான் என்பதாம். (கஅ)

கண்ணகன் புவிக்கெலாங் களைக ணாகிய
தண்மதி நெடுங்குடை விதர்ப்பன் றூர்குழ
னண்ணரு மித்துய ருழந்து நண்ணுமே
லெண்ணின்மற் றியார்துய ரெய்திடா ரென்றான்.

இ - ள். கண் அகல் - இடமகன்ற, புவிக்கு எலாம் - பூமிக்கெல்லாம், களைகண் ஆகிய - ஆதாரமாகிய, தண் - குளிர்ந்த, மதி-சந்தி

ரன்போன்ற, நெடு - நீண்ட, குடை - குடையையுடைய, விதர்ப்பன் - விதர்ப்பதேசத்தையாளும் வீமராசன் ஈன்ற, தார் குழல் - தமயந்தியானவள், நண்ணரும் - பொருந்துதற்கரிய, இ துயர் - இந்தத்துன்பத்தை, உழந்து - வருந்தி, நண்ணுமேல் - அடையுமானால், எண்ணின் - நினைக்குமிடத்தில், யார் - எவர்கள், துயர் - துன்பத்தை, எய்திடார் - அடையார்கள், என்றான் - என்றுசொன்னான், எ - று.

க - து. நளன் துன்பமடையாதவர் யார் என்றான் என்பதாம்.

வளைகட லுலகினின் மன்னர் தாடொழ
வுளையரிப் பைந்தவி சுறையு மெம்பிரான்
முளரியா லெங்கணு முற்று மண்டபத்
தெளியர்போ லிருத்திகொ லென்று விம்மினாள்.

இ - ள். வளை கடல் - சமுத்திரஞ்சூழ்ந்த, உலகினில் - உலகத்தில், மன்னர் - அரசர்கள், தாள்தொழ - பாதத்தில் வணங்க, உளை - புறமயிரையுடைய, அரி - சிங்கந்தாங்கிய, பை - பசுமைபொருந்திய, தவிசு - ஆசனத்தில், உறையும் - இருக்கும், எம்பிரான் - என்கருத்தன், முளரியால் - முட்செடிகளால், எங்கணும் - எவ்விடத்தும், முற்றும் - நிறையப்பெற்ற, மண்டபத்து - மண்டபத்தில், எளியர்போல் - வறியோர்போல், இருத்தி - இருக்கிறாய், என்று - என்றுசொல்லி, விம்மினாள் - அழுதாள், எ - று. கொல் - அசை.

க - து. தமயந்தி நளனைப் பார்த்து ஏழைகளைப்போ லிருக்கிறா யென் றழுதாள் என்பதாம். (௨௦)

தடங்கணீர் துடைத்துமெய் தைவந் தாயிழை
நடுங்கலென் றாற்றிட நள்ளி யாமத்து
மடங்கல்போன் மொய்ம்புடை மன்னர் மன்னவன்
குடங்கைமேற் றுயின்றனள் பொன்னங் கொம்பனாள்.

இ - ள். தடம் - விசாலமாகிய, கண் - கண்ணினின்றுவரும், நீர் - சலத்தை, துடைத்து - மாற்றி, மெய் - தேகத்தை, தைவந்து - தடவிக்கொடுத்து, ஆயிழை - பெண்ணே, நடுங்கல் என்று - அஞ்சாதேயென்று, ஆற்றிட - தேற்ற, நள் இயாமத்து - அர்த்தராத்திரியில், மடங்கல்போல் - சிங்கம்போல், மொய்ம்பு உடை - பலத்தையுடைய, மன்னர் மன்னவன் - அரசர்க் கரசனான நளமகாராசனுடைய, குடங்கைமேல் - அங்கைமீது, பொன் அம் கொம்பு அனாள் - அழகிய பொற்கொம்பையொத்த தமயந்தி, துயின்றனள் - நித்திரை செய்தாள், எ - று.

க - து. தமயந்தி நளன்கைமேல் சிரசைவைத்து நித்திரை செய்தாள் என்பதாம். (௨௧)

கான்புகுபடலம் முற்றுப்பெற்றது.

# பிரிவுறுபடலம்.

[இப்படலத்தால் காடிடத்துச் சென்ற நளமகாராசன் அவ்விடத்தில் தமயந்தி படும் பெருந்துன்பத்தைக் கண்டு சகிக்காதவனாய் அதற்குக் காரணந் தானாகையால் தான்பிரிந்தால் அவள் சிறு துயருடன் அருகிலுள்ள தன் தாய் வீட்டை யடைவாளென் றெண்ணிப் பிரிவுறல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

விண்படு மின்னென மிளிரு மாகமு
மண்படத் துயரொரு வடிவு கொண்டெனக்
கண்படு தோகையை நோக்கிக் காவலன்
புண்படு நெஞ்சொடும் புலம்பி யெண்ணினான்.

இ - ள். விண் படு - மேகத்திலுண்டாகிய, மின் என - மின்னல்போல, மிளிரும் - பிரகாசிக்கும், ஆகமும் - சரீரமும், மண்பட - புழுதியடைய, துயர் - துன்பம், ஒரு வடிவு - ஒருவடிவத்தை, கொண்டென - கொண்டதுபோல, கண் படு - நித்திரைசெய்யாநின்ற, தோகையை - தமயந்தியை, நோக்கி - பார்த்து, காவலன் - நளமகாராசன், புண்படு - புண்பட்ட, நெஞ்சொடும் - மனதுடனே, புலம்பி - அரற்றி, எண்ணினான் - ஆலோசித்தான், எ - று.

க - து. நளன் தமயந்தியைப்பார்த்து அழுது எண்ணினான் என்பதாம். (க)

நண்ணருங் கானெலாந் தொடர்ந்து நண்ணுமேற்
கண்ணினா லிவடுயர் காண லாவதே
பெண்ணருங் கலத்தினைப் பிரியிற் றந்தையூ
ரண்ணிய தவ்வழி யடைந்து வைகுமால்.

இ - ள். நண் அரும் - பொருந்தற்கரிய, கான் எலாம் - காடுமுழுதும், தொடர்ந்து - பின்றொடர்ந்து, நண்ணுமேல் - அடையுமானால், கண்ணினால் - கண்களினால், இவள் - இத்தமயந்தியினது, துயர் - துன்பத்தை, காணலாவதே - பார்க்கக் கூடுமோ; பெண் அரும் கலத்தினை - பெண்களுக்கரிய ஆபரணம் போன்ற இவளை, பிரியில் -



நளன் தமயந்தியைப்பிரிய, அவள்பாம்பின்வாய்ப்பட்டு வெளிப்படல்.

நீங்கில், தந்தை - பிதாவினுடைய, ஊர் - நகரமானது, அண்ணியது- சமீபமாயது; அவ்வுழி - அந்நகரத்தினிடத்து, அடைந்து - சேர்ந்து, வைகும் - இருப்பாள், எ - று. ஆல் - அசை.

க - து. இவளைப் பிரிந்தால் தன் தாய் வீட்டுக்குப் போவாள் என்பதாம். (உ)

விரிமலர்ப் பூங்குழல் விழிக்கி லீங்கிவட்
பிரிகுவ தரிதினிப் பிரிய வெண்ணிலோ
வொருதுகி லாயதித் துகிலை யூறுசெய்
கருவியிங் கேதெனக் கருத்தி னெண்ணினான்.

இ - ள். விரி-மலர்ந்த, மலர் - புட்பத்தை யணிந்த, பூ-பொலிவு பெற்ற, குழல் - கூந்தலையுடைய தமயந்தி, விழிக்கில் - கண்விழித்துக்கொண்டால், ஈங்கு - இவ்விடத்தில், இவள் - இவளை, பிரிகுவது - நீங்குவது, அரிது - கூடாது; இனி-இனிமேல், பிரிய-இவளை நீங்க, எண்ணிலோ - ஆலோசிக்கிலோ, ஒரு துகிலாயது -(இருவர்க்கும்) ஓராடையாயிருக்கின்றது; இ துகிலை - இவ்வஸ்திரத்தை, ஊறு செய் - துணிக்கின்ற, கருவி - ஆயுதம், இங்கு - இவ்விடத்தில், ஏது என - யாதென்று, கருத்தின் - மனதில், எண்ணினான் - ஆலோசித்தான், எ - று.

க - து. தமயந்தி விழித்தால் பிரிதலரிது, வஸ்திரமொன்று, இதை யறுக்கக் கருவியோ இல்லையென் றெண்ணினான் என்பதாம்.

எண்ணிய துணர்ந்திவர்ப் பிரிப்ப முன்னமே
கண்ணிய வஞ்சகக் கலியும் வாளதாய்
நண்ணிமுன் கிடத்தலு மெடுத்து நாமவே
லண்ணலுந் துகினடு வரிந்திட் டானரோ.

இ - ள். எண்ணியது - ஆலோசித்ததை, உணர்ந்து - அறிந்து, இவர் - இவ்விருவரையும், பிரிப்ப - பிரிக்க, முன்னமே - முன்னமே, கண்ணிய-கருதிய, வஞ்சகம்-கபடத்தையுடைய, கலியும்-கலி புருஷனும், வாளதாய் - வாளாகி, நண்ணி - பொருந்தி, முன் - எதிரில், கிடத்தலும்-இருந்த அளவில், எடுத்து-கையிலெடுத்து, நாமம்-அச்சத்தைத்தரும், வேல்-வேலையுடைய, அண்ணலும்-நளனும், துகில்-வஸ்திரத்தை, நடு - மத்தியில், அரிந்திட்டான் - அரிந்தான், எ - று. அரோ - அசை.

க - து. சனி வாள்போ லெதிரிற்கிடக்க நளன் அதையெடுத்து வஸ்திரத்தை யரிந்தான் என்பதாம். (ஙு)

சில்லரி நெடுங்கணாள் தெருளுருவகை
மெல்லெனக் கொடுங்கையி னீக்கி வெய்துயிர்த்
தொல்லையி னுயிர்விடு முடம்பு போன்மென
வல்லலங் கடலிடை யழுந்தி னனரோ.

இ - ள். சில் - சிலவாகிய, அரி - அரிபரந்த, நெடு - நீண்ட, கணாள் - கண்களையுடைய தமயந்தி, தெருளுருவகை - விழிக்காவிதமாய், மெல் என - மிருதுவாக, கொடுங்கையின்-வளைந்த கையினின்றும், நீக்கி - அகற்றி, வெய்து உயிர்த்து - பெருமூச்சு விட்டு, ஒல்லையில் - சீக்கிரத்தில், உயிர்-பிராணனை, விடும்-நீக்கும், உடம்பு போன்மென - தேகத்தைப்போல, அல்லல் கடலிடை - துக்க சமுத்திரத்தில், அழுந்தினன் - முழுகினன், எ - று. அம், அரோ - அசை.

க - ரு. நளன் தமயந்திடைக் கையைவிட்டு நீக்கி யழுதான் என்பதாம்.

குடங்கை - (உள்ளங்கை) என்றும் பாடம்.

எழுமகன் றலினி யென்கொ லாமென
வழுமுயிர் துறந்தென வவச மேற்கொளா
விழுமிவட் காக்கென மெலிந்து தெய்வதந்
தொழுமினை யனபல துன்ப மெய்துமால்.

இ - ள். எழும் - எழுந்திருப்பான்; அகன்றல்-நீங்கினால், இனி-இனிமேல், என்கொல் ஆம் என - என்னவாகுமோவென்று, அழும்-புலம்புவான்; உயிர் துறந்து என - உயிர் நீங்கினவன்போல, அவசம் மேற்கொளா-பரவசத்தை மேற்கொண்டு, விழும்-விழுவான்; இவள்-இவளை, காக்க என - இரக்ஷிக்கவென்று, மெலிந்து - வாடி, தெய்வதம் - வனதேவதைகளை, தொழும்-வணங்குவான்; இனையன-இவை போன்ற, பல - அனேகமான, துன்பம்-துயரங்களை, எய்தும்-அடைவான், எ - று. ஆல்-அசை.

க - து. நளன் எழுவான், அழுவான், விழுவான், தமயந்தியைக் காக்க வனதேவதைகளைத் தொழுவான் என்பதாம். (சு)

செல்லும்வெந் துயரொடுஞ் செல்லக் காலெழா
தொல்லையின் மீளும்வெய் துயிர்க்கு மொண்ணுதல்
கல்லத ரிடைத்தனி யேகிற் பேய்க்கணங்
கொல்லுமென் றுருயிர் குழைந்து சாம்புமால்.

இ - ள். செல்லும் - நடப்பான்; வெம் துயரொடும் - வெவ்விய துக்கத்துடன், செல்ல - நடக்க, கால் எழாது - அடியெழும்பாமல்,

ஒல்லையில்-சீக்கிரத்தில், மீளும் - திரும்புவான்; வெய்து உயிர்க்கும் - பெருமூச்சுவிடுவான்; ஒள் நுதல்-ஒள்ளிய நெற்றியையுடையதமயந்தி, கல் அதரிடை - மலைவழியில், தனி - தனியே, ஏகில் - செல்வாளா ஞல், பேய் கணம்-பிசாசுக்கூட்டங்கள், கொல்லும் என்று-கொன்று விடுமென்று, ஆர் உயிர் - நிறைந்தவுயிர், குழைந்து-குழைவுற்று, சாம்பும் - வாடுவான், எ - று. ஆல் - அசை.

க - நு. நளன் நடப்பான், திரும்புவான், பெருமூச்செறிவான், தமயந்தியைப் பேய் கொல்லுமென்று தளர்வான் என்பதாம்.

[இது தன்மைநவிற்சியணி.] (எ)

ஆயிடை யின்னணம் வருந்தி யன்புகூர்
வேயுறழ் தோளியைப் பிரிந்து வெஞ்சின
மாயவெங் கொடுங்கலி வயத்த னாதலிற்
போயினன் பித்தரிற் பொருவில் வாய்மையான்.

இ - ள். ஆயிடை - அவ்விடத்தில், இன்னணம் - இப்படியாக, வருந்தி-துன்புற்று, அன்பு கூர் - ஆசைமிகுந்த, வேய் உறழ் - மூங்கிலையொத்த, தோளியை - தோளையுடைய தமயந்தியை, பிரிந்து - நீங்கி, வெம் சினம் - வெவ்விய கோபத்தையும், மாயம்-வஞ்சனையும், வெம் - குரூரமான, கொடு - கொடுமையையுமுடைய, கலி - கலியனுக்கு, வயத்தன் ஆதலில்-வசப்பட்டவனாதலால், பொரு இல் - ஒப்பற்ற, வாய்மையான் - சத்தியத்தையுடைய நளன், பித்தரின் - பித்தரைப்போல், போயினன் - போனான், எ - று.

க - து. நளன் பித்தரைப்போல் போனான் என்பதாம். (அ)

நள்ளிருட் போதுவெங் கானி னாமவே
லள்ளிலைப் பூணின னகன்று போதலும்
விள்ளருந் துயரொடு மெலிந்து கண்படும்
பிள்ளைமா னோக்கிதன் செய்கை பேசுவாம்.

இ-ள். நள் இருள் போது-நடுராத்திரியில், வெம் கானில்-வெவ்விய காட்டில், நாமம் வேல்-அச்சத்தைச் செய்யும் வேலையும், அள் - கூர்மைபொருந்திய, இலை - தொங்கலையுடைய, பூணினன் - ஆபரணத்தையுமுடைய நளமகாராசன், அகன்று-நீங்கி, போதலும்-போனவளவில், விள்ள அரும் - நீக்குதற்கரிய, துயரொடு-துன்பத்துடனே, மெலிந்து - நைந்து, கண்படு - நித்திரைசெய்கின்ற, பிள்ளைமான் - மான்கன்று போன்ற, நோக்கி தன் - கண்களையுடைய தமயந்தியினது, செய்கை - நடக்கையை, பேசுவாம் - சொல்லுவாம், எ - று.

க - து. புராணிகர் தமயந்தி செய்கையைச் சொல்லுவாமென்றார் என்பதாம். (௯)

*நீடிய துயில்சிறி துணர்ந்து நேரிழை*
*யாடகத் தொடிக்கையா லணைக்கக் காண்கிலா*
*ளூடினள் பதைத்தன ளுயிர்ப்பு வீங்கின*
*டேடினள் காந்தளஞ் செங்கை நீட்டியே.*

இ - ள். நீடிய துயில் - மிகுந்த நித்திரை, சிறிது உணர்ந்து - கொஞ்சந் தெளிந்து, நேரிழை - தமயந்தி, ஆடகம் தொடி - பொன்னாற்செய்த வளையலணிந்த, கையால் - கைகளால், அணைக்க-தழுவ, காண்கிலாள் - காணாதவளாய், ஊடினள் - பிணங்கினாள்; பதைத்தனள் - துடித்தாள்; உயிர்ப்பு வீங்கினள் - பெருமூச்சுவிட்டாள்; காந்தள்-காந்தள் மலரையொத்த, அம்-அழகிய, செம் கை-சிவந்தகையை, நீட்டி - நீட்டி, தேடினள் - தேடினாள், எ - று. ஏ - அசை.

[இது தன்மைநவிற்சியணி.] (௧௦)

*ஆயிடை காண்கிலா தழுங்கிச் செங்கடை*
*பாயரி நெடுங்கணீ ரருவி பாய்தரத்*
*தூயமென் மலர்க்கர நெரித்துத் துண்ணென*
*வாய்வெரீஇ யால்வயி றதுக்கி மாழ்கினாள்.*

இ - ள். ஆயிடை - அவ்விடத்தில், காண்கிலாது - (நளனைக்) காணாமல், அழுங்கி - வருந்தி, செம் கடை-சிவந்த கடையையுடைய, பாய் - பரவிய, அரி - அரிகளையுடைய, நெடு - நீண்ட, கண் - கண்ணினின்றும், நீர் அருவி - நீர்வெள்ளம், பாய்தர - ஒழுக, தூய - பரிசுத்தமாகிய, மெல் - மிருதுபொருந்திய, மலர் கரம் - தாமரைமலர்போன்ற கைகளை, நெரித்து - நெரித்து, துண் என-திடுக்கென்று, வாய்வெரீஇ - கூச்சலிட்டு, ஆல்-ஆலிலைபோன்ற, வயிறு-வயிற்றை, அதுக்கி - பிசைந்து, மாழ்கினாள் - மயங்கினாள், எ - று.

க - து. தமயந்தி நளனைக்காணாது கண்ணீரொழுகக் கைகளை நெரித்துக் கூச்சலிட்டு வயிற்றைப்பிசைந் தழுதாள் என்பதாம். (௧௧)

*தெளித்தபூம் பள்ளியிற் சிறிது நீங்கினு*
*மளப்பருந் துயரொடு மலைவ மெய்துவேன்*
*றளிப்பெயற் கங்குலிற் றமியண் மாழ்குற*
*வொளித்துநீ தனிவிளை யாடி லுய்வனோ.*

இ - ள். தெளித்த பூ - புஷ்பங்களைப் பரப்பிய, பள்ளியில்-சயனத்தில், சிறிது - கொஞ்சம், நீங்கினும்-விலகினாலும், அளப்பு அருஅளவிடுதற்கரிய, துயரொடும்-துன்பத்துடன், அவலம்-வருத்தத்தை, எய்துவேன் - அடைகின்றயான், தளி பெயல்-பனித்துளி துளிக்கா நின்ற, கங்குலில் - இராத்திரியில், தமியள் - தனித்தவளாய், மாழ்குற - வருந்த, ஒளித்து நீ-நீமறைந்து, தனி-தனியாய், விளையாடில்-விளையாடினால், உய்வனோ - யான் பிழைப்பனோ, எ - று.

க - து. மலரணையிற் பிரியிற் சகியாத நான் நீரொளித்து விளையாடினாற் பிழைப்பனோ என்றாள் என்பதாம். (கஉ)

கோச்சகக்கலிப்பா.

கான்றாருயி ரொழுகக் கண்ணீர் கவுளலைப்ப
வூன்றோய் கணைபட் டுழலும் பிணையொத்தேன்
மான்றே ரரசர் முடியுழுத வார்கழற்காற்
றோன்றாலென் கண்களிப்ப வின்னமுமென் றோன்றிலையே.

இ - ள். கான்று - வெளிப்பட்டு, ஆர் உயிர்-பொருந்தியவுயிர், சோர-நீங்க, கண்ணீர்-கண்ணீரானது, கவுள்-கன்னத்தை, அலைப்ப - அலைக்க, ஊன் தோய் - தசைபடிந்த, கணை பட்டு - அம்புபட்டு, உழலும் - சுழலாநின்ற, பிணை ஒத்தேன்-மானுக்கொப்பானேன்; மான் தேர் - குதிரைகட்டிய தேரையுடைய, அரசர்-அரசருடைய, முடி - கிரீடங்கள், உழுத - படிந்த, வார்-நெடிய, கழல்-வீரக்கழலைத்தரித்த, கால் - பாதத்தையுடைய, தோன்றால்-அரசனே, என்-என்னுடைய, கண் களிப்ப - கண்மகிழ்ச்சியடைய, இன்னமும் - இந்நேரமட்டும், என் - என்னகாரணத்தினால், தோன்றிலை-காணப்படவில்லை, எ-று.

க-து. தமயந்தி, அரசனே! என் கண்களுக் கின்னமுந் தோற்றவில்லையே, என்னகாரண மென்றாள் என்பதாம். (கங)

நேரலார் போரேறே நிடதத்தார் கோமானே
யாரவரை மார்பா வளியே னுயிர்க்குயிரே
காரிருள்வா யான்புலம்பக் கானகத்து விட்டகன்றுஞ்
சாரலையா லின்னு மிதுவோநின் றண்ணளியே.

இ - ள். நேரலார்-பகைவர்க்கு, போர் ஏறே - போர்செய்கின்ற சிங்கமே, நிடதத்தார் - நிடததேசத்தார்க்கு, கோமானே - அரசனே, ஆரம்-முத்துமாலையணிந்த, வரை மார்பா-மலைபோன்ற மார்பையுடையவனே, அளியேன் உயிர்க்கு - ஏழையாகிய என்னுயிர்க்கு, உயிரே-

உயிர்போன்ற நளமகாராசனே, கார் இருள்வாய்-கரிய இருளினிடத்தில், யான் - நான், புலம்ப - புலம்பும்படி, கானகத்து-காட்டினிடத்தில், விட்டு அகன்றும்-என்னை நீங்கியும், இன்னும்-இவ்வளவு காலஞ் சென்ற பின்பும், சாரலை - சேர்ந்தாயில்லை, (ஆதலால்) இதுவோ - இதுதானோ, நின்-உன்னுடைய, தண் அளி - குளிர்ந்தவருள், எ - று. ஆல், ஏ - அசைகள்.

க - று. தமயந்தி நளனைக்குறித்து இதுதானோ தயையென்றாள் என்பதாம். (கச)

நெஞ்ச மெலிவே னினது தடந்தோளுங்
கஞ்ச மலர்முகமுங் காணாது கண்பனிப்ப
மஞ்சுதவழ் வெற்பெறிந்த வச்சிரத்தோ னன்றளித்த
விஞ்சை பயின்று விளையாட் டயருதியோ.

இ - ள். நெஞ்சம் மெலிவேன்-மனம் வாடுகின்ற யான், நினது - உன்னுடைய, தடம் தோளும் - விசாலமாகிய தோள்களையும், கஞ்ச மலர் - தாமரைமலர் போன்ற, முகமும் - வதனத்தையும், காணாது - பாராமல், கண் பனிப்ப - கண்ணீர்விடும்படி, மஞ்சு தவழ்-மேகங்கள் தவழ்கின்ற, வெற்பு - மலைகளின் (சிறகை), எறிந்த - அறுத்த, வச்சிரத்தோன் - வச்சிராயுதத்தை யேந்திய இந்திரன், அன்று - தூது சென்ற அன்று, அளித்த-கொடுத்த, விஞ்சை-வித்தையை, பயின்று - பழகி, விளையாட்டு அயருதியோ - விளையாடுகின்றாயோ, எ - று.

க - று. தமயந்தி நளனைக்குறித்து இந்திரன் கொடுத்த வித்தையால் விளையாடுகின்றாயோ என்றாள் என்பதாம். (கரு)

ஞாலத் திருணடப்ப நாட்கமலம் வாய்நெகிழ
வேலைத் திரைமுகட்டில் வெய்யோ னெழுந்தனனு.
மாலைக் கதிர்வடிவேன் மன்னர் பெருமானே
காலைக் கடவகடன் கழிக்க வாராயே.

இ - ள். ஞாலத்து - பூமியிலுள்ள, இருள் - அந்தகாரமானது, நடப்ப - செல்லவும், நாள் - புதிய, கமலம்-தாமரைமுகைகள், வாய் நெகிழ - மலரவும், வேலை - கடலினது, திரை-அலைகளினது, முகட்டில் - உச்சியில், வெய்யோன் - சூரியன், எழுந்தனன் - உதித்தான்; (ஆதலால்) மாலை - வெற்றிமாலையணிந்த, கதிர் - ஒளிபொருந்திய, வடி-கூரிய, வேல்-வேலாயுதத்தை யேந்திய, மன்னர் பெருமானே - அரசர்க் கரசனாகிய நளமகாராசனே, காலை - உதயத்தில், கடவ-செய்

யத்தக்க, கடன் - நித்திய கருமத்தை, கழிக்க - செய்து முடிக்க, வாராயே - வாராயா, எ - று. ஏ - அசை.

க - து. சூரியனுதயமாகினான், காலக்கருமஞ் செய்ய வாராயோ வென்றாள் என்பதாம். (கசு)

மன்னவனே யிப்பிறப்பிற் கண்டு மணந்திலனே
லின்னமொரு பிறப்பி லானாலு மேழையேன்
றன்னந் தனியே யிருந்துதவ மாற்றியுமுன்
பொன்னகல முள்ளுருகப் புல்லா தொழிவேனோ.

இ - ள். ஏழையேன் - ஏழையாகிய யான், மன்னவனே - நளமகாராசனே, இ பிறப்பில் - இந்த சனனத்தில், கண்டு - (உன்னைக்) கண்டு, மணந்திலனேல் - சேராமற் போவேனானால், இன்னம்-இனிமேல் (வரும் சனனங்களுள்), ஒருபிறப்பில் ஆனாலும் - ஒருசனனத்திலாவது, தன்னந்தனியே இருந்து - தனித்திருந்து, தவம் ஆற்றியும் - தவத்தைச் செய்தாவது, உன்-உன்னுடைய, பொன் அகலம் - அழகுபொருந்திய மார்பை, உள் உருக-உள்ளமுருகும்படி, புல்லாது-தழுவாமல், ஒழிவேனோ - நீங்குவேனோ, எ - று.

க - து. இப்பிறப்பிற் புணராவிடினும் ஒருபிறப்பிற் புணருவேனென்றாள் என்பதாம். (கள)

வாவு மிளமான்காண் மயில்காண் மடப்பிடிகாண்
கூவுங் கரியகுயில்காண்மென் புள்ளினங்கா
ளாவி யெனமேவி யகலேமெனவகன்ற
காவலன்றான் போன வழியெனக்குக் காட்டீரே.

இ - ள். வாவும் - தாவாநின்ற, இளமான்காள் - இளமைதங்கிய மான்களே, மயில்காள் - மஞ்ஞைகளே, மடப்பிடிகாள் - அழகிய பெட்டையானைகளே, கூவும் - கூவுகின்ற, கரிய குயில்காள் - கருங்குயில்களே, மெல் - மென்மையாகிய, புள் இனங்காள் - பறவைக் கூட்டங்களே, ஆவி என - உயிரைப்போல, மேவி - பொருந்தி, அகலேம் என - பிரியோமென்று சொல்லி, அகன்ற-(இப்பொழுது) நீங்கிய, காவலன்றான்-நளமகாராசன், போன வழி - சென்ற வழியை, எனக்கு-என்றனக்கு, காட்டீரே-நீங்கள் காட்டீரா, எ - று.

க - து. மான்களே, மயில்களே, யானைகளே, குயில்களே, பறவைக் கூட்டங்களே, நளமஹாராஜன் போனவழியைக் காட்டீர்களாவென்றாள் என்பதாம். (கஅ)

என்று வுருகி யிருகண்ணீ ராலியுகத்
தன்னாத் தழும்பப் புலம்பித் தமியளாய்
மின்னா ரிடைநுடங்கச் செல்வாள் விறல்வேந்தன் [ள்.
பொன்னா ரடிநோக்கிப் பூங்கொடிபோல் வீழ்ந்தழுதா

இ - ள். என்று - இப்படியென்று, உருகி - மனமுருகி, இரு கண் - இரண்டு கண்களினின்றும், நீர் ஆலி - நீர்த்துளிகள், உக - உதிர, தன் நா - தன்னுடைய நாவானது, தழும்ப - தடிப்புறும்படி, புலம்பி - அரற்றி, தமியளாய் - தனித்தவளாய், மின் - மின்னலின் றன்மை, ஆர் - நிறைந்த, இடை - இடையானது, நுடங்க - துவள, செல்வாள் - நடக்கின்ற தமயந்தியானவள், விறல் - வெற்றிபொருந்திய, வேந்தன் - நளமகாராசனது, பொன் ஆர் - அழகுபொருந்திய, அடி - பாதக்குறியை, நோக்கி - பார்த்து, பூ கொடிபோல் - புஷ்பக்கொடிபோல், வீழ்ந்து - அதில்வீழ்ந்து, அழுதாள் - புலம்பினாள், எ - று.

க - து. தமயந்தி நளனடியைக்கண்டு வீழ்ந்தழுதாள்என்பதாம்.

ஐயன் கமல வடிச்சுவடு காண்டலுமே
வெய்ய துயரவிட மீதூர வாய்புலராச்
செய்ய கமல மலரிற் றிருவனையாள்
கையறவா நெஞ்சங் கலுழா வுயிர்சோர்ந்தாள்.

இ - ள். ஐயன் - நளமகாராசனுடைய, கமல அடி சுவடு - தாமரைமலர்போன்ற பாதக்குறியை, காண்டலும் - கண்டவளவில், வெய்ய - கொடிய, துயர விடம் - துன்பமாகியவிஷம், மீதூர - அதிகரிக்க, வாய் புலரா - வாயுலர்ந்து, செய்ய - சிவந்த, கமல மலரில் - தாமரைப்புஷ்பத்தி லிருக்கின்ற, திரு அனையாள் - இலக்குமியை யொத்த தமயந்தியானவள், கையறவா - செயலற்று, நெஞ்சம் கலுழா - மனங்கலங்கி, உயிர் சோர்ந்தாள் - மூர்ச்சித்தாள், எ - று.

க - து. தமயந்தி மூர்ச்சை யடைந்தாள் என்பதாம். (உ0)

இவ்வாறு துன்பக் கடலி னிடைமூழ்கும்
மைவார் தடங்கண் மடமாதின் செவ்விமுகஞ்
செவ்வான் மதியமெனச் செங்கட் டுளையெயிற்று
வெவ்வா யரவ முருத்து விழுங்கியதே.

இ - ள். இவ்வாறு-இந்தவிதமாய், துன்பம் கடலினிடை - துன்பக்கடலில், மூழ்கும் - அழுந்திய, மை - அஞ்சனமெழுதிய, வார்

நெடிய, தடம் - விசாலமாகிய, கண் - நேத்திரங்களையும், மடம் - அறியாமையையுமுடைய, மாதின் - தமயந்தியினது, செய்வி - அழகு பொருந்திய, முகம் - வதனத்தை, செம் - செவ்வையாகிய, வால் - வெளுத்த, மதியம் என - சந்திரனென்று (எண்ணி), செம் கண் - சிவந்த கண்களையும், துளை எயிற்று - துவாரம் பொருந்திய பற்களையும், வெவ்வாய் - வெவ்விய வாயையுமுடைய, அரவம் - மலைப் பாம்பு, உருத்து - கோபித்து, விழுங்கியது - விழுங்கிற்று, எ - று. ஏ - அசை.

க - து. தமயந்தியை மாலைப்பாம்பு விழுங்கியது என்பதாம். ஈண்டு மதிக்குச் செவ்வை நிறைவெனக் கொள்க. (உக)

நெய்த்தோரின் மூழ்கி நிணம்பருகும் வைவேலோய்
பைத்தோர் கொடுந்தறுகட் பாந்தள் விழுங்கியதா
லெய்த்தே னுயிர்காத்தற் கெய்தா யெனவழுதாள்
மைத்தோய் குவளைமதர் நெடுங்கண் வாணுதலே.

இ - ள். நெய்த்தோரில்-உதிரத்தில், மூழ்கி-குளித்து, நிணம் - மாமிசத்தை, பருகும் - புசிக்காநின்ற, வை - கூர்மைபொருந்திய, வேலோய் - வேலாயுதத்தையுடைய நளமகாராஜனே, பைத்த - படத்தையுடையதாகிய, ஓர் - ஒரு, கொடு தறுகண் - கொடியகோபத்தையுடைய, பாந்தள் - மலைப்பாம்பானது, விழுங்கியது - என்னை விழுங்கியது; எய்த்தேன்-இளைத்த என்னுடைய, உயிர் காத்தற்கு - உயிரைக்காப்பதற்கு, எய்தாய் - வாராயோ, என - என்று, மை தோய் - அஞ்சனந் தோய்ந்து, குவளை - கருநெய்தல்போன்ற, மதர் நெடு கண் - குளிர்ச்சி பொருந்திய நெடிய கண்களையுடைய, வாள் நுதல்-தமயந்தியானவள், அழுதாள்-புலம்பினாள், எ-று. ஏ-அசை.

க - து. தமயந்தி நளனைக்குறித்துப் புலம்பினாள் என்பதாம். ()

பொங்கழல்வெங் கானகத்துப் பூவையழுங் குரல்கேட்
டங்கோர் சிலைக்கை யடல்வேடன் வந்தணுகி
வெங்க ணரவெறிந்து வெவ்வா யிடைநின் றுங்
கொங்கவிழு மென்கூந்தற் கோதைதனை நீக்கினான்.

இ - ள். பொங்கு அழல் - மிகுந்த வக்கினியையுடைய, வெம் - வெப்பமாகிய, கானகத்து - காட்டினில், பூவை - தமயந்தியானவள், அழும் - புலம்புகின்ற, குரல் கேட்டு - சத்தத்தைக்கேட்டு, அங்கு - அவ்விடத்தில், ஓர் - ஒரு, சிலை கை - வில்லைக் கையிலேந்திய, அடல் - பலம்பொருந்திய, வேடன்-வேடனானவன், வந்து அணுகி-

வந்து சேர்ந்து, வெம் கண்-வெவ்விய கண்களையுடைய, அரவு - மலைப்பாம்பை, எறிந்து - பிளந்து, வெம் வாயிடை நின்றும் - வெவ்விய வாயினிடத்தினின்றும், கொங்கு அவிழ்-வாசனை வீசாநின்ற, மெல் கூந்தல் - மென்மையாகிய கூந்தலையுடைய, கோதைதனை - தமயந்தியை, நீக்கினன் - விடுவித்தான், எ-று. ஆல் - அசை.

க - து. வேடன் தமயந்தியைப் பாம்பிலிருந்து விடுவித்தான் என்பதாம்.

பூவை - உவமையாகுபெயர். (உகூ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

வெய்ய வரவின் பகுவாயின் விடுத்த மடமா னெழினோக்கி, மையல் கூர்ந்த நெஞ்சினனாய் வரிவிற் றடக்கை வயவேடன், றொய்யின் முலைமேற் புல்லுதற்குத் தொடரத் துஞ்சா வருங்கற்பின், றையன் முனிந்து நோக்குதலுஞ் சாம்ப ராயிற் றவனுடலே.

இ - ள். வெய்ய - கொடியதாகிய, அரவின் - மலைப்பாம்பினது, பகு வாயின்-பிளப்பாகிய வாயினின்றும், விடுத்த - விடுவிக்கப்பட்ட, மட மான் - தமயந்தியினது, எழில் - அழகை, நோக்கி - பார்த்து, மையல் கூர்ந்த - மோகித்த, நெஞ்சினனாய் - மனமுள்ளவனாய், வரி வில் - நீண்டவில்லை யேந்திய, தடம் கை - விசாலமாகிய கையையுடைய, வயம்-வெற்றிபொருந்திய, வேடன்-வேடனானவன், தொய்யில்-சந்தனக்கோலமணிந்த, முலைமேல்-ஸ்தனத்தின்மேல், புல்லுதற்கு - அணைதற்கு, தொடர - பின்றொடர, துஞ்சா - கெடாத, அரும் - அருமையாகிய, கற்பின் - கற்பினையுடைய, தையல் - தமயந்தியானவள், முனிந்து - கோபித்து, நோக்குதலும் - பார்த்தமாத்திரத்தில், அவன் உடல் - அவ்வேடனுடலம், சாம்பர் ஆயிற்று-நீறாயிற்று, எ-று. ஏ-அசை.

க - து. வேடன் தமயந்தியைப் புணரத் தொடர்ந்தவளவில் தமயந்தி பார்க்க வேடன் எரிந்துபோனான் என்பதாம்.

மடமான் - அடையடுத்த உவமையாகுபெயர். மையல் கூர்ந்த என்பதற்கு காமமயக்க மிகுந்த என்றுரைத்தலுமாம். தையல்-நகை புனையப்பட்டவள். (உ௰)

கற்பி னழலாற் கொடுஞ்சிலைக்கை வேட னுடலங் கரியாக்கிப், பொற்பின் றுறைபோய் நலங்கனிந்த பொன்னழ

பாவை புலம்பெய்தி, வெற்பி னுயர்தோள் வேந்துசெலும் வெங்கான் றுருவி யேகுதலு, மற்பின் முனிவர் தவமியற் றுஞ் சாலை நோக்கி யருகணைந்தாள்.

இ - ள். கற்பின் அழலால் - பாதிவிரத்தியாக்கினியால், கொடு சிலை கை-கொடிய வில்லைக் கையிலேந்திய, வேடன் உடலம்-வேடன் சரீரத்தை, கரி ஆக்கி-சாம்பராக்கி, பொற்பின் துறை போய்-அழகிற் சிறந்து, நலம் கனிந்த-நன்மை மிகுந்த, பொன்னம் பாவை - தமயந்தி யானவள், புலம்பு எய்தி - அழுதுகொண்டு, வெற்பின் - மலைபோல், உயர் - உயர்ந்த, தோள்-புயத்தையுடைய, வேந்து-நளமகாராசன், செலும்-செல்லாநின்ற, வெம் கான் - வெவ்விய காட்டினில், துருவி- தேடிக்கொண்டு, ஏகுதலும் - போகுமளவில், அற்பின் - அன்பினை யுடைய, முனிவர்-முனிவர்கள், தவம் இயற்றும்-தவஞ்செய்யாநின்ற, சாலை - பர்ணசாலையை, நோக்கி - பார்த்து, அருகு - அதனருகில், அணைந்தாள் - சேர்ந்தாள், எ - று.

க - து. தமயந்தி முனிவர்கள் தவச்சாலையிற் சார்ந்தாள் என்பதாம்.

கற்பினழல் - கற்பாகிய அழல் என விரிதலால் இன் அல்வழிச் சாரியை. புலம்பு - துன்பம் எனினுமாம். அன்பு அற்பு என வலித்த லாயிற்று. (உரு)

அடைந்த மாதின் முகநோக்கி யாரை நீவெவ் வழற் கானி, னடந்து தனியே யித்தலையிற் போந்த தென்னை நளின மலர்த், தடங்கண் கலுழ்ந்து புலம்பெய்துந் தன்மை யெவன் கொல் சாற்றுகென, மடந்தை புகுந்த வாறனைத்து முனிவர் கேட்ப வகுத்துரைத்தாள்.

இ - ள். அடைந்த - தம்மிடத்து வந்த, மாதின் - தமயந்தியி னது, முகம்-வதனத்தை, நோக்கி-பார்த்து, யாரை நீ - நீ யார்; வெவ் அழல்-வெவ்விய அழல் பொருந்திய, கானில்-காட்டினில், நடந்து - காலாைடந்து, தனியே - தனிமையாகி, இத்தலையில்-இவ்விடத்தில், போந்தது என்னை - வந்ததென்னகாரணம்; நளினம் மலர் - தாமரை மலர்போன்ற, தடம் கண்-விசாலமாகிய கண்கள், கலுழ்ந்து-கலங்கி, புலம்பு எய்தும் தன்மை - துன்பப்படுதல், எவன் கொல்-என்னகார ணம், சாற்றுக என - சொல்லென்று, முனிவர் கேட்ப-முனிவர்கள் கேட்க, மடந்தை-தமயந்தியானவள், புகுந்த ஆறு அனைத்தும்-நடந்த வையெல்லாம், வகுத்து-பிரித்து, உரைத்தாள்-(அவர்க்குச்) சொல்லி னாள், எ - .

க - து. முனிவர்கள் கேட்கத் தமயந்தி நடந்தவையெல்லாஞ் சொன்னாள் என்பதாம்.

யாரை யென்பதில் ஐ சாரியை. (உசு)

கேட்ட வளவி லுளமுருகிக் கிள்ளை மருட்டும் பனி மொழியாய், வாட்ட மொழிதி நிற்பிரிந்த வடிவே னளனைச் சின்னாளி, னாட்டங் களிப்பக் கண்டுமுன்போ னலம்பெற் றிருத்தி யெனநவிலா, வீட்டுந் தவத்தோர் மறைக்கிழவ ரிருக்கை நோக்கி யேகினரால்.

இ - ள். கேட்ட அளவில்-(இச்செய்தியைக்) கேள்வியுற்றமாத்திரத்தில், உளம் உருகி - மனமுருகி, கிள்ளை - கிளிப்பிள்ளைகளை, மருட்டும் - வெருட்டாநின்ற, பனி மொழியாய் - குளிர்ந்த சொற்களையுடைய தமயந்தியே, வாட்டம் - சோர்வை, ஒழிதி - ஒழித்துவிடு; நின் பிரிந்த - உன்னைப்பிரிந்த, வடி வேல்-கூர்மையுடைய வேலேந்திய, நளனை - நளமகாராசனை, சின்னாளில்-சிலநாளிலே, நாட்டம் களிப்ப - கண்கள் களிப்ப, கண்டு - பார்த்து, முன்போல்-முன்னம்போல, நலம் பெற்று - நன்மையை அடைந்து, இருத்தி என - இருப்பாயாகவென்று, நவிலா - ஆசீர்வதித்து, ஈட்டும் தவத்து - தவஞ்செய்கின்ற, ஓர் - ஒப்பற்ற, மறை கிழவர் - அந்தணர்கள், இருக்கை நோக்கி - தாங்கள் இருக்கும் ஆச்சிரமத்தைச்குறித்து, ஏகினர் - சென்றார்கள், எ - று. ஆல் - அசை.

க - து. முனிவர்கள் ஆசீர்வதித்துப் போனார்கள் என்பதாம்.

நவிலா - செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (உஎ)

பிதிர்ந்த பசும்பொற் றிதலைமுலைப் பெய்பூங் கோதை பிணைபோல்வா, ளெதிர்ந்த வணிகர் வழித்துணையா வேகிக் கதிர்மா மணிவரன்றி, யதிர்ந்து புனல்பாய் பேராற்றங் கரையி னுறையு மரையிருளின், முதிர்ந்த சினத்துப் பிறைக் கோட்டு மூரிக் களிறொன் றணுகியதால்.

இ - ள். பிதிர்ந்த - உதிர்ந்த, பசும் பொன் - பசியபொன்போன்ற, திதலை - தேமலையுடைய, முலை - ஸ்தனங்களையும், பெய் பூ கோதை - மலர்மாலையணிந்த கூந்தலையுமுடைய, பிணை போல்வாள் - மான்போன்ற தமயந்தியானவள், எதிர்ந்த-எதிர்ப்பட்ட, வணிகர் - வர்த்தகர், வழி துணையா - வழித் துணையாக, ஏகி - போய், கதிர் மா மணி - ஒளிபொருந்திய சிறந்த மணிகளை, வரன்றி-வாரிக்கொண்டு,



தமயந்திமுனிவராசீர்வாதத்தால் யானைக்குத்தப்பிச்சேதி[illegible]டைதல்.

அதிர்ந்து - இரைந்து, புனல் - சலமானது, பாய் - பெருகாநின்ற, பேர் ஆற்று கரையில் - பெரிய ஆற்றங்கரையினிடத்தில், உறையும் - வாசஞ்செய்கின்ற, அரை இருளின் - அர்த்தராத்திரியில், முதிர்ந்த - மிகுந்த, சினத்து - கோபத்தையுடையதும், பிறை கோட்டு - பிறை போன்ற கொம்புகளையுடையதுமாகிய, மூரி - வலிமையுடைய, களிறு ஒன்று-ஒருயானையானது, அணுகியது - வந்து நெருங்கிற்று, எ - று. ஆல் - அசை.

க - து. தமயந்தியினிடத்து யானை வந்தது என்பதாம்.

பேராறு-ஒருநதி விசேடம். (உஅ)

அணுகி யாங்குப் புலம்பெய்து மலர்பூங் கோதை மயி லொழிய, வணிக மாக்க ளியாவரையு மதமால் யானை கொன் றேகத், துணைவந் தடைந்தோர் யாவரையுந் தொலைத்து நட ந்த பருஉத்தடக்கை, யிணைவெண் கோட்டுக் களிறென்னை யெற்கொல் லாத தெனக்கலுழ்ந்தாள்.

இ - ள். ஆங்கு - அவ்விடத்தில், அணுகி - வந்தடைந்து, புலம்பு எய்தும்-புலம்பாநின்ற, அலர் பூ கோதை-மலர்ந்த பூமாலையணிந்த அளகபாரத்தையுடைய, மயில் - தமயந்தியானவள், ஒழிய-நீங்கலாக, வணிக மாக்கள் யாவரையும் - வர்த்தகரனைவரையும், மதம்-மும்மதம் பொருந்திய, மால் யானை - பெரிய யானையானது, கொன்று-கொலை செய்து, ஏக - போகாநிற்க, துணை-துணையாக, வந்துஅடைந்தோர் - வந்தடைந்தவராகிய, யாவரையும் - அனைவரையும், தொலைத்து - கொன்று, நடந்த - சென்ற, பருஉ தடம் கை-பருத்து நீண்ட துதிக் கையையும், இணை - இரண்டாகிய, வெள் - வெண்மைபொருந்திய, கோடு - கொம்புகளையுமுடைய, களிறு - யானையானது, என்னை - (துன்பப்படுகின்ற) என்னை, என்-என்னகாரணத்தினால், கொல்லா தது - கொல்லாமற்போயிற்று, என - என்று, கலுழ்ந்தாள் - புலம்பி னாள், எ - று.

க - து. வியாபாரிகளைக் கொன்ற யானை தன்னைக் கொல்ல வில்லையென் றரற்றினாள் என்பதாம்.

மயில் - உவமையாகு பெயர். மால்யானை யென்பதில் மால் மத மயக்கம். கலுழ்தல் - அழுதலுமாம். (உகூ)

சாத லொழிந்த வழிச்செல்வோர் துணையா வுள்ளந் தளர்வெய்திப், பாத மலர்கொப் புளமெய்திப் பனிக்கப் பரல் வெங் கானிறந்து, கோதை வடிவேல் வலனேந்து குவவுத்

திணிதோட் சுவாகுவெனுஞ், சேதி பதிதன் வளநகரிற்
சென்றாள் விதர்ப்பன் சேயிழையே.

இ - ள். சாதல் ஒழிந்த-இறக்காமல் சேடித்து நின்ற, வழி செல்வோர் - வழியிற் செல்லுகின்ற பிராமணர்கள், துணையா - சகாயமாகக்கொண்டு, உள்ளம் தளர்வு எய்தி - மனங்கலங்கி, மலர் பாதம் - மலர்போன்ற பாதங்கள், கொப்புளம் எய்தி-கொப்புளித்து, பனிக்க - நீரொழுக, பரல்-பருக்கைகளையுடைய, வெம் கான் - வெவ்விய வனத்தை, இறந்து - விட்டுநீங்கி, கோதை - வெற்றிமாலையணிந்த, வடி வேல் - கூர்மைபொருந்திய வேலாயுதத்தை, வலன்-வலதுபுறத்தில், ஏந்து - தாங்காகின்ற, குவவு - திரட்சியையும், திணி - வலிமையையுமுடைய, தோள் - புயத்தையுடைய, சுவாகு எனும்-சுவாகுவெனும் பெயரையுடைய, சேதிபதிதன் - சேதிதேசத்தரசனது, வளம் நகரில் - வளப்பம்பொருந்திய பட்டணத்தில், விதர்ப்பன் சேயிழை - தமயந்தியானவள், சென்றாள் - சேர்ந்தனள், எ - று. ஏ-அசை.

க - து. தமயந்தி சேதிபதி நகரத்தைச் சார்ந்தாள் என்பதாம்.

பரல் வெங்கான்-பாலைவனம் எனினுமமையும். (௯௦)

துணிபட் டொழிந்த மென்றுகிலுஞ் சுடர்விட் டொளிர மண்ணாத, மணியிற் றோன்றி மாசடைந்த வடிவும் விரிந்த வார்குழலும், பிணியுற் றுழலு நெஞ்சமுமாய்ப் பித்தேறினர்போற் கோமறுகி, லணுகச் சேதி பதிதாய்கண் டார்கொ லிவளென் றையுற்றாள்.

இ - ள். துணிபட்டு ஒழிந்த - துண்டிடப்பட்ட, மெல் துகிலும் - மெல்லிய ஆடையும், சுடர் விட்டு ஒளிர-ஒளிவிட்டு விளங்கும்படி, மண்ணாத - கழுவாத, மணியில் - இரத்நம்போல, தோன்றி - காணப்பட்டு, மாசு அடைந்த - அழுக்கடைந்த, வடிவும் - உடம்பும், விரிந்த - அவிழ்ந்த, வார் குழலும் - நீண்ட கூந்தலும், பிணி உற்று - துன்பப்பட்டு, உழலும் - கலங்காகின்ற, நெஞ்சமும்-மனமும், ஆய் - (ஆகிய இவைகளையுடையவள்) ஆய், பித்து ஏறினர்போல் - பித்தர்போல், கோ மறுகில் - இராசவீதியில், அணுக-(தமயந்தி) வர, சேதி பதி - சுவாகுவரசனது, தாய் - தாயானவள், கண்டு - (தமயந்தியைக்) கண்டு, ஆர்கொல் இவள் - இந்தப்பெண் யாரோ, என்று - என்று, ஐயுற்றாள் - சந்தேகித்தாள், எ - று.

க - து. சேதிபதி தாயார் தமயந்தியைக் கண்டு இவள் யாரோவென்று சந்தேகித்தாள் என்பதாம்.

துணி - துண்டு. (௯௧)

பொன்னம் பாவை யுடன்முழுதும் புகையுண் டென்னச் சவிமழுங்கு,மின்னுண் மருங்குற் சில்லோதி யணங்கோ வரசர் மடமகளோ, வென்னத் தெருளே னீங்கிவளை யீண்டுக் கொணர்தி ரெனமருங்கில், மன்னு மகளிர் தமைப்பணிப்ப விடைகொண் டவரு மருகணைந்தார்.

இ - ள். பொன் அம் பாவை - பொற்பதுமையானது, உடல் முழுதும்-உடம்பு முழுமையும், புகை உண்டு என்ன - புகையுண்டது போல, சவி மழுங்கும் - ஒளிமழுங்கிய, மின் - மின்னலை யொத்த, நுண் - நுட்பமாகிய, மருங்குல் - இடையையுடைய, சில்லோதி - இப்பெண், அணங்கோ - தெய்வப்பெண்ணோ, அரசர் மடமகளோ - இராசகுமாரத்தியோ, என்ன - என்று, தெருளேன் - தெளியேன்; ஈங்கு - இவ்விடத்தில், இவளை - இப்பெண்ணை, ஈண்டு - சீக்கிரத்தில், கொணர்திர் - கொண்டுவாருங்கள், என - என்று, மருங்கில் மன்னும் - அருகிலுள்ள, மகளிர் தமை - ஸ்திரீகளை, பணிப்ப - (அவ்வரசனது தாயானவள்) சொல்ல, விடை கொண்டு - உத்தரவுபெற்றுக்கொண்டு, அவரும் - அம்மாதர்களும், அருகு - தமயந்தி சமீபத்திலே, அணைந்தார் - வந்தார்கள், எ - று.

க - து. சேதிபதி தாய் இவளை யழையென்று சொல்லப் பெண்களழைக்கப் போனார்கள் என்பதாம்.

சில்லோதி - பொன்வட்டத் தகட்டணியை யணிந்த கூந்தலையுடையவள். (கூஉ)

அடைந்த மாதர் தனிப்போந்த வணங்கின் கமல முக நோக்கிக், கடைந்த மணிச்செப் பெனப்புடைத்துக் கதித்து வீங்கும் வனமுலையாய், படங்கொ ளரவின் முடிகிடந்த பார்தாங் கிறைவன் றனையீன்ற, மடந்தை வருகென் றனளென்ன வான்றோய் மாடத் தினிதடைந்தாள்.

இ - ள். அடைந்த மாதர் - வந்தஸ்திரீகள், தனி போந்த-தனித்துவந்த, அணங்கின்-தமயந்தியினது, கமலம் முகம் நோக்கி-தாமரைமலர்போன்ற முகத்தைப் பார்த்து, கடைந்த - கடைதலிடப்பட்ட, மணி செப்பு என - இரத்தின கும்பங்கள்போல, புடைத்து-அடிபரந்து, கதித்து - பருத்து, வீங்கும் - வளராநின்ற, வனமுலையாய்-அழகிய ஸ்தனங்களையுடைய பெண்ணே, படம் கொள் - படத்தைக்கொண்ட, அரவின் - ஆதிசேடனுடைய, முடி - முடியின்மேல், கிடந்த - இருந்த, பார் - பூமியை, தாங்கு - தரிக்காநின்ற, இறைவன்றனை -

சுவாகுராசனை, ஈன்ற - பெற்ற, மடந்தை - அவனது தாயானவள், வருக என்றனள் - (உன்னை) வரச்சொல்லினள், என்ன - என்று சொல்லாநிற்க, வான் தோய் - ஆகாசமளாவிய, மாடத்து - உபரிகையில், இனிது - இன்பத்தோடு, அடைந்தாள் - (தமயந்தியானவள்) சேர்ந்தாள், எ - று.

க - து. பெண்கள் அழைக்கத் தமயந்தி வந்தாள் என்பதாம். ()

வந்த மடமான் முகநோக்கி வரிவண் டூதப் பொதியவிழ்ந்த, வந்தண் கமல மலர்கவற்றி யழகு வாய்ந்த முகம்பசப்பச், சிந்தை தளர்ந்து தனிபோதற் குற்ற தெவன்கொல் சேயிழையா, யுந்தை யாருன் றலைவனெவ னுன்பேர் யாதிங் குரையென்றாள்.

இ - ள். வந்த - தன்னிடத்து வந்த, மடமான்-தமயந்தியினது, முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து, சேயிழையாய்-பெண்ணே, வரி வண்டு - இசைப்பாட்டினையுடைய வண்டுகள், ஊத-ஒலிக்க, பொதி அவிழ்ந்த - கட்டவிழ்ந்த, அம் தண் கமலம் மலர் - அழகிய குளிர்ந்த தாமரை மலர்களை, கவற்றி - கவலச்செய்து, அழகு வாய்ந்த - அழகு பொருந்திய, முகம்-வதனமானது, பசப்ப-பசலைநிறமடைய, சிந்தை தளர்ந்து - மனந்தளர்ந்து, தனி போதற்கு-தனித்துவருவதற்கு, உற்றது - பொருந்தியது, எவன் - யாது; உந்தை - உன் தகப்பன்,யார்-எவன்; உன் தலைவன் - உன் கணவன், எவன்-யார்; உன் பேர்-உன்னுடைய நாமதேயம், யாது-எது; இங்கு-இவ்விடத்தில், உரை என்றாள் - (அரசன்றாய்) சொல்லென்றாள், எ - று.

க - து. சேதிபதி தாய் தனியே போவதென்ன? உன் தகப்பனார்? உன் கணவனார்? உன்பேரென்ன? சொல்லென்றாள் என்பதாம்.

உந்தை - உன் தந்தை யென்பதன் மரூஉ. (கூ௪)

வீமன் புதல்வி புகழ்படைத வேந்தர் கோமான் மனைக்கிழத்தி நாமம் பகரிற் றமயந்தி யென்பா டன்கோ னண்ணலற்குக் காமர் நிதியுஞ் வளநாடுஞ் சூதினிழந்து கானிடைப்போ[ன். யாமந் தனின்மற் றவட்பிரிய வவளைத் தேடி யீண்டணைந்தே

இ - ள். வீமன் புதல்வி - வீமராசன் மகள், புகழ்-புகழப்பட்ட, படைத்த வேந்தர் கோமான்-நளமகாராசனது, மனை கிழத்தி-மனையாள், நாமம் பகரில் - பேர் கூறுமிடத்து, தமயந்தி என்பாள் - தமயந்தியென்று சொல்லப்படுவாள்; தன் கோன் - அவளது கணவனானவன்,

நண்ணலற்கு-பகைவனுக்கு, காமர் நிதியும்-விரும்பப்படுகின்ற தனங் களையும், வளம் நாடும் - செழித்தநாட்டையும், சூதில் - சூதினில், இழந்து-தோற்றுவிட்டு, கானிடை போய்-வனத்திற்சென்று, யாமந் தனில் - இராத்திரியில், அவள் பிரிய - அவளைப்பிரிய, அவளை-அத் தமயந்தியை,தேடி-தேடிக்கொண்டு, ஈண்டு-இந்நகரில்,அணைந்தேன்-வந்தேன், எ - று. மற்று-அசை.

க - து. நளன் சூதிலே நாடிழந்து தமயந்தியைக் காட்டில் விட் டுப்பிரிய அவளைத்தேடி நான் வந்தேன் என்றாள் என்பதாம். (௲௫)

அனைய மடமா னுயிர்த்தோழி யானென் றுரைப்ப வக மகிழ்ந்து, தனிய ளாகிக் கொடுங்கானிற் றலைவன் பிரியத் தளர்ந்தேங்கும், கனைவண் டிமிருங் கருங்குழலைக் காணு மளவு மிந்நகரி, லினையல் வாழி யிருத்தியென விசைந்தாங் கவளு மிருந்தனளால்.

இ - ள். அனைய மடமான்-அத்தமயந்தியினுடைய,உயிர் தோழி-உயிரையொத்த தோழி, யான் - நான், என்று உரைப்ப-என்று (தம யந்தி) சொல்ல, அகம் மகிழ்ந்து - சந்தோஷித்து, கொடு கானில் - கொடிய காட்டினில், தலைவன் - கணவன்,பிரிய-பிரிந்தேக, தனியள் ஆகி - தனித்தவளாகி, தளர்ந்து - தளர்ச்சியடைந்து, ஏங்கும்-துன் பப்படாநின்ற, கனை - கனைக்கின்ற, வண்டு - வண்டுகள், இமிரும் - சத்தியாநின்ற, கரு குழலை - கரிய கூந்தலையுடைய தமயந்தியை, கா ணும் அளவும் - பார்க்குமளவும், இ நகரில் - இந்த நகரத்தில், இரு த்தி - இருப்பாயாக; இனையல் - வருத்தப்படாதே; வாழி - வாழக் கடவை, என - என்று (அரசன்றாய்) சொல்ல, இசைந்து - (அவள் சொல்லுக்) கிசைந்து, ஆங்கு - அந்நகரத்தில், அவளும் - அந்தத் தம யந்தியும், இருந்தனள் - இருந்தாள், எ - று. ஆல்-அசை.

க - து. தமயந்திக்குத் தோழி தானென்று சொல்லச் சேதிபதி யின் தாய் அவளைக்காணுமளவு மிங்கிருவென விருந்தாள் என்பதாம்.

அகம் - இடவாகுபெயர். (௲௬)

காதல் கூர்ந்து தன்மகளாஞ் சுனந்தைக் கதிர்வாண் முகநோக்கி, மாதர் நோக்கிம் மடவரலை வருந்தா தளித்தி யெனவேலோடு, மேதமின்றி யவள் காப்ப விருந்தாண் மற்றிங் கிதுநிற்க, கோதை வடிவே னளற்குற்ற செய்தி யனைத்துங் கூறுவாம்.

இ - ள். காதல் கூர்ந்து-அன்புசெய்து, தன் மகளாம் சுனந்தை - தன்னுடைய மகளாகிய சுனந்தையினது, கதிர் வாள் - மிகுந்த ஒளி பொருந்திய, முகம் - முகத்தை, நோக்கி - பார்த்து, மாதர் நோக்கு - அழகிய பார்வையையுடைய, இ மடவாலை - இப்பெண்ணை, வருந்தாது-துன்பப்படாமலிருக்கும்படி, அளித்தி-காப்பாய், எனலோடும் - என்று (அரசன்றாய்) சொல்லிய வளவில், ஏதம் இன்றி-பழுதின்றி, அவள் - அச்சுனந்தையானவள், காப்ப-இரக்ஷிக்க, இருந்தாள் - (தமயந்தி) இருந்தனள், இங்கு-இவ்விடத்தில், இது-இச்செய்தி, நிற்க - இருக்க,கோதை வடி வேல்-வெற்றிமாலை யணிந்த கூரியவேலை யேந்திய, நளற்கு - நளமகாராசனுக்கு, உற்ற-பொருந்திய, செய்தி அனைத்தும் - செய்கை யனைத்தையும், கூறுவாம் - சொல்லுவாம், எ - று. மற்று - அசை.

க - து. நூலாசிரியர் தமயந்தி இவ்வாறிருக்க நளன் செய்தியைச் சொல்லுவோமென்றார் என்பதாம். (௩௭

பிரிவுறுபடலம் முற்றிற்று.

# வேற்றுருவமைந்த படலம்.

[இப்படலத்தால் நளமகாராசனுக்கு நாட்டிற் செல்லினும் பிறரறியா திருக்கும்படி வேற்றுருவமைந்தமை சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

கள்ளு யிர்க்குமென் மலர்க்குழற் காமர்பூங் கொடியை
நள்ளி ருட்பொழு தகன்றன னண்ணருங் கானிற்
றள்ளு தற்கருந் துயரொடு போதலுந் தழலு
மொள்ள ழற்புகைக் கொழுந்தெழக் கண்டன னுரவோன்.

இ - ள். உரவோன் - நளமகாராசன், கள் உயிர்க்கும் - தேனைத் தருகின்ற, மெல் மலர் – மெல்லியமலர்களை யணிந்த, குழல்-கூந்தலை யுடைய, காமர் - அழகுபொருந்திய, பூங்கொடியை - தமயந்தியை, நண்ணரும் - அடைதற்கரிய, கானில் – வனத்தில், நள் இருள் பொழுது - நடுராத்திரியில், அகன்றனன் - விட்டுப்பிரிந்தவனாய், தள்ளுதற்கு அரு - ஒழித்தற்கரிய, துயரொடும் - துன்பத்துடனே, போதலும் - செல்லுமளவில், தழலும் - தகிக்காநின்ற, ஒள் அழல் - ஒளி பொருந்திய தீயினது, புகை கொழுந்து – தூமக்கொழுந்து, எழ - எழும்பாநிற்க, கண்டனன் - அதைப்பார்த்தான், எ – று.

க – து. நளன் அக்கினி வளர்ந்தெழக் கண்டான் என்பதாம்.

அகன்றனன்-முற்றெச்சம். (க)

செஞ்சு டர்ச்சிகை வளைதலிற் றெருமர லெய்தி
நஞ்சு யிர்க்கும்வா ளரவொன்று நாமவே லிறைவ
தஞ்ச நீயெனை யளித்தியென் றுரைத்தலுந் தாழா
தஞ்சலஞ்சலென் றடைந்தனன் மடங்கலே றனையான்.

இ - ள். செம் சுடர் சிகை – அக்கினிச்சுவாலையானது, வளைதலின் - சுற்றிக்கொண்டமையால், தெருமரல் எய்தி - மனங்கலங்கி, நஞ்சு உயிர்க்கும் - விஷத்தைத் தருகின்ற, வாள் அரவு ஒன்று – ஒளி பொருந்திய ஒரு கார்க்கோடகனென்னு நாகமானது, நாமம் வேல் - அச்சத்தைத் தருகின்ற வேலையேந்திய, இறைவ - நளமகாராசனே, நீ - நீயே, தஞ்சம்-இரக்ஷகன், எனை - என்னை, அளித்தி - காக்கவே

ண்டும், என்று உரைத்தலும்-என்றுசொல்லியவளவில், தாழாது - தாமதிக்காது, அஞ்சல் அஞ்சல் - பயப்படாதே பயப்படாதே, என்று அறைந்தனன் - என்று சொல்லியவனாய், மடங்கல் ஏறு அனையான் - நளமகாராசன், அடைந்தனன் - அருகிலடைந்தான், எ - று.

க - து. பாம்பு தன்னைக் காப்பாற்றென்ன நளன் பயப்படாதேயென்றான் என்பதாம். (௨)

கனைசெ ழுஞ்சுடர்க் கொழுங்கனல் படர்தலிற் கரிந்து
பனைம றிந்தெனக் கிடந்ததோர் பாந்தளைநோக்க
வனைபொ லன்கழற் குரிசிலோர் மறையவன் முனிவா
னினைவி னுந்தனிப் பெயர்ந்திடு நிலைமையொன் றிலனால்.

இ - ள். கனை - சத்தியாநின்ற, செழு சுடர் - செழித்த சுவாலைகளையுடைய, கொழு கனல் - மிகுந்த காட்டுத்தீயானது, படர்தலில் - சுற்றிக்கொள்வதினால், கரிந்து - கருகி, பனை - பனைமரமானது, மறிந்தென - விழுந்துகிடந்ததுபோல, கிடந்தது - கிடந்ததாகிய, ஓர் பாந்தளை - (கார்க்கோடகனென்னும்) ஒருபாம்பினை, நோக்க - (நளமகாராசன்) பார்க்க, வனை பொலன் கழல் - கட்டப்பட்ட பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த, குரிசில் - நளமகாராசனே, ஓர் மறையவன் - அநாகஸனென்னும் ஒருபிரமஇருஷியினது, முனிவால் - சாபத்தினால், நினைவினும் - நினைப்பினாலும், தனி-தனியாக, பெயர்ந்திடும் தலைமை - நடக்கலாம் எனும் நிச்சயத்தை, ஒன்றிலன்- அடைந்திலேன், எ - று. ஆல் - அசை.

க - து. பாம்பானது, நளனே! அநாகசரிஷி சாபத்தால் நடைபெற்றிலேனென்றது என்பதாம்.

அழலி னின்றெடுத் தையிரண் டடிப்புறத் தகற்றின்
முழுவ லன்பொடு நன்கிழைக் குவலென மொழிந்து
தழற்கட் பாம்புடல் சுருக்கலுந் தழலருள் வரத்தா
லெழுவி னீள்கரத் தாலெடுத் தழற்புறத் திட்டான்.

இ - ள். அழலினின்று எடுத்து - அக்கினியினின் றெடுத்து, ஐயிரண்டடி புறத்து - பத்தடிக்குப் புறத்தில், அகற்றில் - நீக்கிவிடுவையானால், முழு வல் அன்பொடு - நிறைந்த வலிய அன்புடனே, நன்கு இழைக்குவல் - உனக்கு நன்மையைச் செய்வேன், என மொழிந்து - என்று சொல்லி, தழல் கண்-அக்கினிபொருந்திய கண்களையுடைய, பாம்பு - கார்க்கோடகநாகமானது, உடல் சுருக்கலும் - உடம்பைச் சுருக்கிக்கொண்டவளவில், (நளமகாராசனானவன்) தழல்

அருள் வரத்தால்-அக்கினிதேவன் கொடுத்த வரத்தினுல், எழுவில் - தூண்போன்ற, நீள் கரத்தால் - நீண்டகரத்தினுல், எடுத்து - அந்தப் பாம்பை எடுத்து, அழல் புறத்து - தீயினுக்குவெளியில், இட்டான் - விடுத்தான், எ - று.

க - து. நளன் பாம்பையெடுத்துத் தீக்கப்புறம் விடுத்தான் என்பதாம். (ச)

கதமெ ரிக்கணின் றகற்றலுங் கதிரொளி விரிக்கு
மதிர்பொ லன்கழ லரசர்கோன் மெய்யுறத் தீண்டி
முதிர்சி னத்தவா ளரவுதன் முன்னுரு வெடுப்ப
விதுகு லத்துயர் வேந்தனும் வேற்றுரு வமைந்தான்.

இ - ள். கதம் எரிக்கணின்று - சொலிக்கின்ற தீயினின்றும், அகற்றலும் - நீக்கிவிட்டவளவில், கதிர் ஒளி விரிக்கும் - கிரணவொளி வீசாநின்ற, அதிர் - சத்திக்கின்ற, பொலன் கழல் - பொன்னுல் செய்யப்பட்ட வீரக்கழலேயணிந்த, அரசர்கோன் - நளமகாராசனது, மெய் - சரீரத்தில், உற - பொருந்தும்படி, தீண்டி - கடித்து, முதிர் சினத்த - மிகுந்தகோபத்தையுடைய, வாள் அரவு - ஒளிபொருந்திய கார்க்கோடக நாகமானது, தன் - தன்னுடைய, முன் உரு - பழையவுருவத்தை, எடுப்ப - எடுக்க, விதுகுலத்து - சந்திரவம்சத்தில், உயர் - உயர்ந்த, வேந்தனும் - நளமகாராசனும், வேற்று உரு அமைந்தான் - வேற்றுருவடைந்தான்,எ - று.

க - து. பாம்புகடிக்க நளன் வேற்றுருவானுன் என்பதாம். (ரு)

கருணை செய்தெனைப் புரந்தநிற் கடித்தது முன்னை
யுருவு கண்ணுறி லொன்னலர் செகுப்பரென் பதனுற்
பொருவி லோயினி வாகுவ னெனும்பெயர் புனையா
விருது பன்னன்வா ழயோத்திமா நகரினே குதியால்.

இ - ள். கருணை செய்து - கிருபைசெய்து, எனை - என்னை, புரந்த-இரக்ஷித்த, நின் கடித்தது-உன்னைக் கடித்தது, (ஏனெனில்) முன்னை உருவு - பழைய உருவமானது, கண்ணுறில் - காணப்படுமானுல், ஒன்னலர் - சத்துருக்கள், செகுப்பர் - கொல்லுவார்கள், என்பதனுல் - என்னுநினைவினுல், பொருவிலோய் - ஒப்பற்ற நளமகாராசனே, இனி - இனிமேல், வாகுவன் எனும் - பாகுவன் என்றுசொல்லப்பட்ட, பெயர் புனையா - பெயரைத்தரித்துக்கொண்டு, இருதுபன்னன் - இருதுபன்னமகாராசன், வாழ் - அரசாட்சிசெய்யாநின்ற, அயோத்தி மா நகரில் - அயோத்தி யெனப்பட்ட பெருமை பொருந்திய பட்டணத்தில், ஏகுதி - போவாயாக, எ - று. ஆல் - அசை.

க - து. பாம்பு நளனை அயோத்தியில் இருதுபன்னனிடத்திற் போகும்படி சொல்லிற்று என்பதாம். (சு)

ஏந்த லேகியம் மன்னவன் சூதனா யியைந்து
கூந்தன் மாவுளந் தெரிதரு விஞ்சைநீ கொடுப்பி
னாய்ந்த சூதுவெல் விஞ்சைநின் பாலவ னளிக்குஞ்
சாந்த மென்முலைத் தமயந்தி தன்னொடுஞ் சார்வாய்.

இ - ள். ஏந்தல் - நளமகாராசனே, ஏகி-அந்நகரத்திற்சென்று, அ மன்னவன் - அந்த இருதுபன்னனுக்கு, சூதன் ஆ-தேர்ப்பாகனாக, இயைந்து - பொருந்தி, கூந்தல் - புறமயிரினையுடைய, மா - குதிரைகளினது, உளம் - மனதை, தெரிதரும் - அறிகின்ற, விஞ்சை - வித்தையை, நீ கொடுப்பின் - நீ (அவ்வரசனுக்கு) உபதேசிப்பையானால், ஆய்ந்த - பரிசோதிக்கப்பட்ட, சூது - சூதினில், வெல்-வெற்றியைத் தராநின்ற, விஞ்சை - வித்தையை, நின்பால் - உன்னிடத்தி[illegible] அவன் - அவ்வரசன், அளிக்கும் - கொடுப்பான்; (அதன்பிறகு) ச[illegible]ந்தம் - சந்தனக்கோலமணிந்த, மெல் முலை - மிருதுவாகிய ஸ்தனங்களையுடைய, தமயந்தி தன்னொடும் - தமயந்தியோடும், சார்வாய் - கூடுவாய், எ - று.

க - து. பாம்பு, நளனே! குதிரைகளுள்ளமறியும் வித்தையை நீ இருதுபன்னனுக்குக் கொடுத்தால் அவன் சூதுவெல் வித்தையை உனக்குக் கொடுப்பான் என்பதாம்.

ஏந்தல் - அண்மைவிளி; பெருமையிற் சிறந்தவன் என்பது பொருள். (எ)

பின்னர் மன்னநின் பெருநிலக் கிழமையும் பெறுதி
முன்னை மாணுரு வெளிதினிற் பெற்றிட முன்னி
லின்ன பூந்துகில் புனைதியென் றிருதுகி லளித்துத்
தன்னு ருக்கொடு போயது தழல்விழிப் பாந்தள்.

இ - ள். பின்னர் - பின்பு, மன்ன - நளமகாராசனே, நின் - உன்னுடைய, பெரு நிலகிழமையும் - அரசாட்சியையும், பெறுதி - அடைவாய்; முன்னை - முற்பட்ட, மாண் உரு - மாட்சிமைப்பட்டவுருவத்தை, எளிதினில் - வருத்தமின்றி, பெற்றிட முன்னில்-பெற நினைப்பையாகில், இன்ன பூ துகில் - இந்த அழகிய வஸ்திரத்தை, புனைதி என்று - தரித்துக்கொள்ளென்று சொல்லி, இரு துகில்-இரண்டு வஸ்திரங்களை, அளித்து - கொடுத்து, தன் உரு கொடு - தன் பழையவுருவத்தை யெடுத்துக்கொண்டு, தழல் விழி - அக்கினிபோ

ருந்திய கண்களையுடைய, பாந்தள் - கார்க்கோடக நாகமானது, போயது - மறைந்துபோயது, எ - று.

க - து. பாம்பு, நளனே! உன்வடிவுகொள்ள வேண்டில் இந்த வஸ்திரத்தைத் தரியென்று இரண்டுவஸ்திரங் கொடுத்துப் போயிற்று என்பதாம். (அ)

அதிர்பொ லன்கழ லரசர்கோ னவ்வயி னீங்கிப்
பிதிர்சு ணங்கணி வெம்முலைப் பெய்வளைத் தடந்தோள்
மதர்வை நோக்கிதன் வாணகை யெனவுயிர் வருத்துங்
கதிர்செய் நித்திலம் வரன்றெறி திரைக்கடல் கண்டான்.

இ - ள். அதிர் - சத்தியாநின்ற, பொலன் கழல் - பொன்னாற் செய்த வீரக்கழலையணிந்த, அரசர்கோன் - நளமகாராசனானவன், அவ்வயின் நீங்கி - அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, பிதிர் - பிதிர்ந்த, சுணங்கு அணி - தேமலையணிந்த, வெம் முலை - விருப்பத்தைச்செய்கின்ற ஸ்தனங்களையும், பெய் வளை-வளையலையணிந்த, தடம் தோள்-பருத்ததோள்களையுமுடைய, மதர்வை நோக்கிதன் - தமயந்தியினது, வாள் நகை என - ஒளிபொருந்திய தந்தங்கள்போல, உயிர் - உயிரை வருத்தும் - வருத்துகின்ற, கதிர் செய் - ஒளிவிடுகின்ற, நித்திலம் - முத்துக்களை, வரன்று - வாரிக்கொண்டு, எறி - வீசாநின்ற, திரை - அலைகள்பொருந்திய, கடல் - சமுத்திரத்தை, கண்டான் - (நளமகாராசன்) பார்த்தான், எ - று.

க - து. நளன் சமுத்திரத்தைக் கண்டான் என்பதாம்.

மதர்வைநோக்கி-மதர்த்த பார்வையையுடையவள். வரன்றியெறினற்பாலது வரன்றெறியென விகாரமாயிற்று. (கூ)

வஞ்சர் நெஞ்சினாழ் கழியிலோர் மடநடை யன்ன
மஞ்சி றைப்புறத் தாருயிர்ப் பெடையினை யணைத்துக்
கஞ்ச நாண்மலர்ச் சேக்கையிற் கண்படை நோக்கி
நெஞ்ச மாழ்குற நெடிதுயிர்த் தயர்வொடு நின்றான்.

இ - ள். வஞ்சர் - வஞ்சகரது, நெஞ்சின் - மனம்போல, ஆழ் - ஆழ்ந்த, கழியில் - கழிநிலத்தில், ஓர் மட நடை அன்னம் - ஒரு இளவன்னமானது, அம் - அழகிய, சிறை புறத்து - சிறகின்புறத்தினால், ஆர் உயிர் - நிறைந்தவுயிரையொத்த, பெடையினை - பெட்டையன்னத்தை, அணைத்து - தழுவிக்கொண்டு, கஞ்சம் - தாமரையினது, நாள் மலர் - புதியமலராகிய, சேக்கையில் - படுக்கையில், கண்படல் - நித்திரைசெய்வதை, நோக்கி - பார்த்து, நெஞ்சம் - மனமானது, மா

ழ்குற - வருத்தமடைய, நெடிதூஉயிர்த்து - பெருமூச்சுவிட்டு, அயர்வொடும் - சோர்வுடனே, நின்றான் - (நளமகாராசன்) நின்றனன், எ - று.

க - து. நளன் அன்னம் புணர்தலைக்கண்டு சோர்வுடனின்றான் என்பதாம். (௧0)

சுடர்செய் முத்தமு நேமியம் புள்ளுமென் றுகிரு
நெடிது நோக்கிநந் நேரிழை மூரலு முலையும்
வடிவ மைந்தமெல் விரலுமீங் கெய்திய வாற்றாற்
கடலில் வீழ்ந்துயிர் துறந்தன ளெனமனங் கலுழ்ந்தான்.

இ - ள். சுடர் செய் - ஒளிவிடுகின்ற, முத்தமும் - முத்துக்களையும், நேமியம் புள்ளும் - சக்கிரவாகபக்ஷிகளையும், மெல் - மிருதுவாகிய, துகிரும் - பவளங்களையும், நெடிது - நெடுங்காலம், நோக்கி - பார்த்து, நம் - நம்முடைய, நேரிழை - தமயந்தியினது, மூரலும் - தந்தவரிசைகளும், முலையும் - ஸ்தனங்களும், வடிவு அமைந்த-அழகு பொருந்திய, மெல் விரலும் - மெல்லியவிரல்களும், ஈங்கு-இக்கழிநிலத்தில், எய்திய ஆற்றால் - பொருந்தியபடியால், கடலில் - சமுத்திரத்தில், வீழ்ந்து-(தமயந்தியானவள்) விழுந்து, உயிர் துறந்தனள்-இறந்தாள், என - என்றெண்ணி, மனம் கலுழ்ந்தான் - (நளமகாராசன்) மனங்கலங்கினான், எ - று.

க - து. நளன் தமயந்தி அவயவங்களுக்கு உவமானப்பொருள்களைக் கடலிற் கண்டு மனங்கலங்கினான் என்பதாம்.

[அக்கழிநிலத்தில் காணப்பட்ட முத்துமுதலிய உவமானவஸ்துக்களை உவமேயமாக மயங்கினமையால் மயக்கவணி] (௧௧)

ஆவி யன்னதோ ரணங்கினை யரையிரு ணீத்த
பாவி யேன்முக நோக்குறிற் பழிவரு மென்றோ
மேவு சேக்கையிற் குருகிளம் பேட்டினம் வெருவிச்
சேவ லோடகன் றேகுவ தெனமனந் திகைத்தான்.

இ - ள். ஆவி அன்ன - உயிரையொத்த, ஓர் அணங்கினை - ஒப்பற்ற தமயந்தியை, அரை இருள் - அர்த்தராத்திரியில், நீத்த - (தனியாக) விடுத்த, பாவியேன் - பாவியாகியவென்னுடைய, முகம் - முகத்தை, நோக்குறில் - பார்த்தால், பழி வரும்-பாவம்வரும், என்றோ - என்று நினைத்தோ, மேவு - பொருந்திய, சேக்கையில்-படுக்கையிலுள்ள, குருகு - பறவைகளினுடைய, இளம் - இளமைதங்கிய, பேடு இனம் - பெட்டைகளினினமானது, வெருவி-பயந்து, சேவலோடு-

ஆண்பறவைகளோடும், அகன்று - (அவ்விடத்தை விட்டு) நீங்கி, ஏகுவது - போவது, என - என்று, மனம் திகைத்தான் - மதிமயங்கினன், எ - று.

க - து. பறவைகள் நீங்குதலை நளன்கண்டு தன்குற்றத்தை யெண்ணினன் என்பதாம்.

பறவைகள் இயல்பான் மனிதரைக்கண்டேகினும் அதற்கு நளன் தன்குற்றத்தை ஏதுவாக்கினனென்க. அணங்கு உவமையாகுபெயர், பண்பாகுபெயருமாம். [இது தற்குறிப்பணி.] (கஉ)

நவ்வி நோக்கித னகைமதி முகமெனச் சிறந்த
தெய்வ நாண்மலர்ப் போதவிழ் பூந்துக டிமிர்ந்து
கவ்வை வெண்டிரைத் துளியெறி தென்றலங் கன்று
மைதவ ருந்தொறு மெய்பதைத் தாருயிர் தளர்ந்தான்.

இ - ள். நவ்வி - மான்போன்ற, நோக்கி தன் - கண்களையுடைய தமயந்தியினது, நகை - பிரகாசியாநின்ற, மதி - பூர்ண சந்திரனை யொத்த, முகம் என - முகம்போல், சிறந்த - சிறப்பையடைந்த, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, நாள் மலர் - புதிதாக மலர்கின்ற, போது - புஷ்பத்தில், அவிழ் - விரிந்த, பூ துகள் - மகரந்தப்பொடிகளை, திமிர்ந்து - பூசிக்கொண்டு, கவ்வை - ஒலிபொருந்திய, வெள் திரை - வெளிர்த்த சமுத்திர அலைகளினுடைய, துளி - திவலைகளை, எறி - வீசுகின்ற, தென்றல் கன்று - இளந்தென்றலானது, மைதவருந்தொறும் - மேலில் வீசுந்தொறும், மெய்-சரீரமானது, பதைத்து-துடித்து, ஆர் - நிறைந்த, உயிர் - உயிரானது, தளர்ந்தான் - தளரப்பெற்றான், எ - று.

க - து. நளன் தென்றல் வீசலால் தளர்ச்சியடைந்தான் என்பதாம்.

முகத்துக்குவமையாகப் புணர்க்கப்பட்டமையால் மதி பூர்ணசந்திரனைக் குறித்தது. (கங)

இன்ன தன்மையன் வைகலீ ரைந்துபோ யிறப்பக்
கன்னல் வேலியங் கழனியிற் களிச்சுரும் பரற்றும்
பொன்னந் தாமரைப் பொகுட்டின்மேன் மடப்பெடை புல்லி
யன்னங் கண்படு வெள்ளநீ ரயோத்திநா டடைந்தான்.

இ - ள். இன்ன தன்மையன் - இத்தன்மையனாகிய நளமகாராசன், வைகல் ஈரைந்து-பத்துநாள், போய் இறப்ப-நீங்கிப்போக, கன்

னல் வேலி - கருப்பம் வேலி யிடப்பட்ட, அம் கழனியில் - அழகிய வயல்களில், களி சுரும்பு-களிப்பினையுடைய வண்டுகள், அரற்றும் - சத்தியாநின்ற, பொன் அம் - பொன்போலழகிய, தாமரை பொகுட்டின்மேல் - தாமரைப் பூங்கொட்டையில், மடம் பெடை - இளமைதங்கிய பெட்டை யன்னங்களை, புல்லி - தழுவிக்கொண்டு, அன்னம் - அன்னப்பறவைகள், கண் படு-நித்திரை செய்கின்ற, வெள்ளம் நீர் - மிகுந்த நீர்வளமுள்ள, அயோத்தி நாடு - அயோத்திநகரத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ - று.

க - து. நளன் அயோத்தியைச் சார்ந்தான் என்பதாம். (கச)

இருது பன்னனைக் காண்டலு மெத்தொழில் வல்லை
மருவு நாமமென் கூறெனா வாகுவ னென்பே
ருருவ வாம்பரித் தேரினி தூர்குவ னும்ப
ரரும ருந்தென வடுதொழில் புரிவனென் றறைந்தான்.

இ - ள். இருதுபன்னனை - இருதுபன்ன வரசனை, காண்டலும்-(நளன்) கண்டவளவில், எ தொழில்-எச்செய்கையில், வல்லை - நீ திறமையுள்ளவன்; மருவும் - பொருந்திய, நாமம் என்-உன் பெயர் யாது, கூறு என - சொல்லென்று (இருதுபன்னன் கேட்க), வாகுவன் - வாகுவனென்பது, என் பேர்-எனதுபெயராம்; உருவம்-நிறத்தையுடைய, வாம் - தாவாநின்ற, பரி - குதிரைகட்டிய, தேர் - இரதத்தை, இனிது - நன்றாக, ஊர்குவன் - நடத்துவேன்; (அன்றியும்) உம்பர் - தேவர்களினது, அரு மருந்து என - அரிய அமுதம்போல, அடு தொழில்-சமையலை, புரிவன்-செய்வேன், என்று அறைந்தான் என்று (நளமகாராசன்) சொன்னான், எ - று.

க - து. நளன் இருதுபன்னனைக் கண்டு தன்னைச் சாரதித்தொழிலிலுஞ் சமையற் றொழிலிலும் வல்லவனென்றான் என்பதாம்.

வேந்த னவ்வுரை கேட்டலும் வியன்மணி நெடுந்தேர்
கூந்தன் மாவுள மறிந்தனை குறிப்பினார் குதியே
லாய்ந்த செம்பொனே ராயிரம் வைகலு மளிப்ப
லேய்ந்த வென்னிரு பாகரோ டிருத்தியென் றிசைத்தான்.

இ - ள். வேந்தன் - இருதுபன்னராசன், அ உரை - அந்நளன் சொல்லை, கேட்டலும் - கேட்டமாத்திரத்தில், வியன்-பருத்த, மணி - நவரத்தினங்கள் பதித்த, நெடு-நீண்ட, தேர் - தேரிற் கட்டப்பட்ட, கூந்தல் - புறமயிரினையுடைய, மா-குதிரையினது, உளம் அறிந்தனை

மனதை யறிந்தவனாகி, குறிப்பின் - குறிப்பினால், ஊர்குதியேல்-நடத்துகிறவனானால், ஆய்ந்த - குற்றமற்ற, செம்பொன் ஓர் ஆயிரம்-ஓராயிரம்பொன், வைகலும் - நாள்தோறும், அளிப்பல் - கொடுப்பேன்; ஏய்ந்த - பொருந்திய, என் - என்னுடைய, இரு பாகரோடு-இரண்டு சாரதிகளோடு கூட, இருத்தி - இரு, என்று இசைத்தான் - என்று சொன்னான், எ - று.

க - து. இருதுபன்னன் நளனை நாளொன்றுக்கு ஆயிரம் பொன் சம்பளத்தில் வைத்தான் என்பதாம்.

பொன்னென்பது இருபது சின்னப்பணத்தினுக்குத் தொகைப் பேர். இது சேர சோழ பாண்டியர் நாட்டு வழக்கு. அறிந்தனை-முற்றெச்சம். (கசு)

அன்ன வாறுநேர்ந் தலங்குளைப் புரவிமான் றேர்க்கு
மன்ன னாகிய நிடதர்கோன் வைகலும் புலம்பித்
துன்னு கானிடை நீத்தவள் துயர மீக் கூர
வென்ன ளாயின ளோவென விரங்கிவெய் துயிர்ப்பான்.

இ - ள். அன்னவாறு-அப்படியே, நேர்ந்து - சம்மதித்து, அலங்கு - அசைகின்ற, உளை - புறமயிரினையுடைய, புரவி மான்-குதிரை கட்டிய, தேர்க்கு-இரதங்கட்கு, மன்னன் ஆகிய-அதிபனாகிய, நிடதர் கோன் - நளமகாராசனானவன், வைகலும் - நாள்தோறும், புலம்பி - மனமிரங்கி, துன்னு கானிடை-நெருங்கிய காட்டினில், நீத்த அவள்-விடப்பட்ட தமயந்தியானவள், துயரம்-துன்பம், மீக்கூர-அதிகரிக்க, என்னள் ஆயினளோ-எத்தன்மைய ளானாளோ, என - என்று, இரங்கி - புலம்பி, வெய்து - கொடியதாக, உயிர்ப்பான்-பெருமூச்சுவிடுவான், எ - று.

க - து. நளன் தமயந்தியை நினைத்து விசனப்படுவான் என்பதாம். (கஎ)

உயிர்த்து மெய்தளர்ந் துருகிய வேந்தனை யுளத்தி
லயிர்த்தொர் சாரதி யுற்றதை யெவன்கொலென் றறைய
வெயிற்கொ டுங்கதிர் மறைந்துழி வெவ்வழற் கானிற்
பயிர்ப்பில் கோதையைத் தீர்ந்தனன் பரிவிலே னென்றான்.

இ - ள். உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, மெய் தளர்ந்து - சரீரம் வாடி, உருகிய - மனமுருகிய, வேந்தனை - நளமகாராசனை, உளத்தில் - மனத்தில், அயிர்த்து-சந்தேகித்து, ஓர் சாரதி-சீவலனென்னு

மொரு தேர்ப்பாகனுனவன், உற்றதை - (நாள்தோறும்) அடைந்த துன்பத்தை, எவன்கொல் என்று அறைய - என்னவென்று கேட்க, வெயில் - வெய்யிலைச் செய்கின்ற, கொடு கதிர் - சூரியன், மறைந்துழி - அஸ்தமித்தபின்பு, வெவ் அழல்-கொடிய அழல் பொருந்திய, கானில் - காட்டினில், பயிர்ப்பில் - பரிசுத்தையாகிய, கோதையை - பெண்ணை, பரிவு இலேன் - அன்பில்லாத நான், தீர்ந்தனன் - விடுத்தேன், என்ருன் - என்று நளன் சொன்ஞன், எ - று.

க - து. ஓர் சாரதி நளனை என் விசாரப்படுகிருய் யெனா, நளன் தன் மனைவியைக் காட்டில் விட்டே னென்ருன் என்பதாம். (கஅ)

வேற்றுருவமைந்த படலம் முற்றிற்று.

# வீமன் தேடவிட்ட படலம்.

[இப்படலத்தால் வீமராஜன் தமயந்தி நளன் இருவரையும் தேடுதற்கு அதற்கு உரியோரை விடுத்தல் சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

இனைய னாகிய மன்னவ னவ்வுழி யிருப்ப
வனைக ருங்கழல் விதர்ப்பர்கோன் மறையவர்க் கூயென்
றனையை தன்னொடு நளனையுந் தேடிநீர் தந்தா
னினைவ யாவையுந் தருகுவ னெனவவர் நேர்ந்தார்.

இ - ள். இனையன் ஆகிய-இத்தன்மையனாகிய, மன்னவன்-நளமகாராசன், அவ்வுழி - அவ்வயோத்தியில், இருப்ப - இருக்க, வனைகரு கழல் - சிறந்த வீரக்கழலையணிந்த, விதர்ப்பர்கோன்-வீமராசன், மறையவர் - பிராமணர்களை, கூய் - அழைத்து, என் தனயை தன்னொடும் - என் பெண்ணாகிய தமயந்தியையும், நளனையும் - நளமகாராசனையும், தேடி - தேசங்களிற்றேடி, நீர்-நீவீர், தந்தால்-கொடுப்பீராயின், நினைவ யாவையும் - நீர் நினைத்தவை யனைத்தையும், தருகுவன் - கொடுப்பேன், என - என்று சொல்ல, அவர் - அம்மறையவர்கள், நேர்ந்தார் - அதற்குச் சம்மதித்தார்கள், எ - று.

க - து. வீமன் தன் மகளையும் மருமகனையும் கண்டுபிடித்துக் கொடுத்தவர்களுக்கு நினைத்த யாவையுங் கொடுப்பே னென்றான் என்பதாம். (க)

தரங்க வாரிதி சூழ்தரு தகைமைசா லுலக, மொருங்கு தேடியுங் காண்கில ருலப்பிலார் திரிய, வரங்கொள் கேள்வியன் சுவேதனென் றுரைக்குமோர் மறையோன், கருங்கட் பேதையைச் சேதிபன் மனைவயிற் கண்டான்.

இ . ள். தரங்க வாரிதி - அலைகளையுடைய சமுத்திரமானது, சூழ்தரு - சூழ்ந்த, தகைமை சால் - மேன்மைபொருந்திய, உலகம் - பூவுலகம், ஒருங்கு - ஒருங்குபட, தேடியும் - தேடியும், காண்கிலர் - காணாதவராய், உலப்பிலார்-அளவற்றபேர்கள், திரிய - திரியாநிற்க, வரம் கொள் - வரத்தைக்கொண்ட, கேள்வியன் - (சாஸ்திரக்) கேள்

வியையுடைய, சுவேதன் என்று உரைக்கும் - சுவேதனென்று சொல்லப்பட்ட, ஓர் மறையோன் - ஒரு பிராமணன், கரு கண் பேதையை - கரிய கண்களையுடைய தமயந்தியை, சேதிபன் மனையின் - சேதிதேசத்தரசனாகிய சுபாகுவின் வீட்டில், கண்டான் - பார்த்தான், எ - று.

க - து. சுவேதனென்னும் ஓர் பிராமணன் தமயந்தியைச் சேதிபதி யரண்மனையிற் கண்டான் என்பதாம். (உ)

மாசு பூத்தொளி மழுங்குபு மண்ணுறு மணியிற்
றேச ழிந்திடு தெரிவைதன் றிருமுக நோக்கி
யேச லில்லிவட் கோவிவை யெய்துமற் றென்னா
வாசில் கேள்வியோன் கலுழ்ந்தனன் றுயர்க்கட லாழ்ந்தான்.

இ - ள். மாசு பூத்து - அழுக்கடைந்து, ஒளி மழுங்குபு - ஒளி மழுங்கி, மண்ணுறு மணியின் - சாணையிடாத மணிபோல், தேசு அழிந்திடும்-அழகழிந்த, தெரிவைதன் - தமயந்தியினது, திரு முகம் - அழகிய முகத்தை, நோக்கி-பார்த்து, ஏசல் இல்-பழிப்பில்லாத, இவட்கோ - இப்பெண்ணுக்கோ, இவை எய்தும்-இவ்வவத்தைகள் பொருந்தும், என்னா - என்று, ஆசில் - குறையற்ற, கேள்வியோன் - கேள்வியையுடைய சுவேதன், கலுழ்ந்தனன்-கலங்கினவனாகி, துயர் கடல் - துன்பக் கடலில், ஆழ்ந்தான் - மூழ்கினான், எ - று. மற்று - அசை.

க து. சுவேதன் தமயந்தியைக் கண்டு வருந்தினான் என்பதாம்.

அழுவ தென்கொலென் றாயிழை வினவநின் றாதை
முழுவ லன்புடைத் தோழன்யான் மொய்த்தநின் றமருங்
குழுவு நின்னிரு குரவருந் தீங்கில ரென்னத்
தொழுது மைக்கணீர் முலைத்தடம் பெருகமெய் சோர்ந்தாள்.

இ - ள். அழுவது என்கொல்-துன்பப்படுவது என்ன காரணம், என்று - என்று சொல்லி, ஆயிழை - தமயந்தியானவள், வினவ - கேட்க, நின் தாதை-உன் றந்தைக்கு,முழுவல் அன்பு உடை - நிறைந்த அன்புடைய, தோழன் - தோழமையுள்ளவன், யான் - நான்; மொய்த்த - நெருங்கிய, நின் - உன்னுடைய, தமரும் - உறவினரும், குழுவும் - கூட்டத்தவரும், நின் - உன்னுடைய, இரு குரவரும் - தாய்தகப்பன்மாரிருவரும், தீங்கிலர்-கேடிலராயுளர், என்ன-என்று சொல்ல, தொழுது - (அவனைத்) தொழுது, மை கண் நீர் - மை பொருந்திய கண்ணீர், முலை தடம் - முலையினிடத்தில், பெருக - ஒழுக, மெய் - உடம்பு, சோர்ந்தாள்-மெலிந்தாள், எ - று.

க - து. தமயந்தி சுவேதனை ஏனழுகிறாயென, சுவேதன் நான் உன் தகப்பனுடைய தோழனென்றான், தமயந்தியுமழுதாள் என்பதாம்.

ஆயிழை-வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (௬)

கந்த வார்குழற் காரிகை யழுதல்கேட் டிவட்குத்
தந்தை யாரெவற் குரியளித் தளிரியல் தனித்து
வந்த வாறெவ னிவளைநீ யுணர்ந்ததெவ் வாறென்
றந்த ணாளனை வினவினள் சுவாகுவை யளித்தாள்.

இ - ள். கந்தம் - வாசனை பொருந்திய, வார் - நீண்ட, குழல் - கூந்தலையுடைய, காரிகை - தமயந்தியானவள், அழுதல் - துன்பப்படுதலை, கேட்டு - (சுநந்தையால்) கேள்விப்பட்டு (வந்து), இவட்கு-இப்பெண்ணினுக்கு, தந்தை யார் - தகப்பன் யார்; இ தளிரியல் - இப்பெண்ணானவள், எவற்கு உரியள் - எவனுக்கு மனையாள்; தனித்து வந்த ஆறு - தனித்துவந்த கிரமம், எவன் - யாது; இவளை - இப்பெண்ணை, நீ உணர்ந்தது - நீ அறிந்தது, எவ்வாறு என்று - எப்படியென்று, அந்தணாளனை - சுவேதனை, சுவாகுவை அளித்தாள்-சேதிதேசத்தரசனைப் பெற்ற தாயானவள், வினவினள்-கேட்டாள், எ-று.

க - து. சேதிபதி தாய், தமயந்தி அழுதலைக்கேட்டு, இவட்குத் தகப்பனார், கணவனார் என்று பிராமணனைக் கேட்டாளென்பதாம்.()

மாது கேட்டியிம் மடவரல் விதர்ப்பர்கோன் புதல்வி
காத னாயக னிடதர்கோன் காசினி முழுதுஞ்
சூதி னாலிழந் திவளையுங் கானிடைத் துறந்தா
னாத லாலிவட் டேடென விதர்ப்பர்கோ னறைந்தான்.

இ - ள். மாது - அரசனது தாயே, கேட்டி - கேள், இ மடவரல்- இப்பெண், விதர்ப்பர் கோன் - வீமராசனது, புதல்வி - குமாரத்தி; காதல் - அன்பினையுடைய, நாயகன் - (இவட்குக்) கணவன், நிடதர் கோன்-நளமகாராசன்; (அவன்) காசினி முழுதும் - பூமிமுழுவதும், சூதினால் - சூதாட்டத்தால், இழந்து - தோற்றுவிட்டு, இவளையும் - இத்தமயந்தியையும், கானிடை-காட்டினில், துறந்தான்-விடுத்தான்; ஆதலால் - ஆகையால், இவள் - இவளை, தேடு என-தேடுவீரென்று, விதர்ப்பர்கோன்-வீமராசன், அறைந்தான் - உத்தரவு கொடுத்தான், எ - று.

க - து. பிராமணன், அரசியே! இப்பெண் வீமராஜன் மகள், இவள் கணவன் நளன். அவன் சூதாட்டத்தால் நாடிழந்து மனைவி

டைக் காட்டில் விடுத்தான், இவளைத்தேடுமென வீமனுத்தரவு கொடுத்தான் என்பதாம். (கூ)

தேண்டி யெங்கணுங் கண்டிலன் றிருவைநின் மனையிற்
காண்டல் செய்தனன் கன்னலிற் பழுத்தமென் மொழியாண்
மாண்ட பேரெழில் வாணுதல் வயங்கிய மறுவா
லீண்டு ணர்ந்தனன் யானென மறையவ னிசைத்தான்.

இ - ள். எங்கணும்-எவ்விடத்திலும், தேண்டி-தேடி, திருவை - லக்ஷ்மியையொத்த தமயந்தியை, கண்டிலன் - காணாதவனாய், நின் மனையில் - உன் மாளிகையில், காண்டல் செய்தனன் - கண்டேன், கன்னலில் - கரும்பினும், பழுத்த - முதிர்ந்த, மெல் மொழியாள் - இனிய வசனத்தையுடைய இத்தமயந்தியினது, மாண்ட-மாட்சிமைப் பட்ட, பேர் எழில் - மிகுந்த அழகு தங்கிய, வாள் நுதல்-ஒளிபொருந்திய நெற்றியில், வயங்கிய - விளங்கிய, மறுவால் - மற்சையினால், ஈண்டு - இவ்விடத்தில், யான்-நான், உணர்ந்தனன் - (இன்னளென்று) அறிந்தேன், என-என்று, மறையவன்-சுவேதனனவன், இசைத்தான் - சொன்னான், எ - று.

க - து. சுவேதன் தமயந்தியை நெற்றிமற்சையினா லறிந்தேனென்றான் என்பதாம்.

திரு - உவமையாகுபெயர். (எ)

அதுகி ளத்தலு மணிநுதன் மாசினை யகற்றக்
கதிரெ றித்தலிற் கண்வழுக் குற்றன கூச
மதிநு தற்புறத் திலகிய மறுவினை நோக்கித்
ததைம லர்க்குழற் றமயந்தி யிவளென வுணர்ந்தாள்.

இ - ள். அது - அச்செய்தியை, கிளத்தலும்-சொன்னவளவில், அணி நுதல் - அழகிய நெற்றியிலுள்ள, மாசினை - அழுக்கை, அகற்ற - போக்க, கதிர் எறித்தலில் - ஒளிவிடுகின்றமையால், கண் -நேத்திரங்கள்,வழுக்கு உற்றன - சிதறினவைகளாகி, கூச - அஞ்ச, மதிநுதல் புறத்து - பிறைபோன்ற நெற்றியினிடத்து, இலகிய - பிரகாசித்த, மறுவினை - மறுவை, நோக்கி - பார்த்து, இவள்-இப்பெண், ததை மலர் குழல் - நெருங்கிய மலர்களையணிந்த கூந்தலையுடைய,தமயந்தி - தமயந்தியே, என - என்று, உணர்ந்தாள் - (அரசனன்னை) அறிந்தாள், எ - று.

க - து. அரசன் தாய் மறுவினாலே தமயந்தியென் றறிந்தா என்பதாம்.

நுதற்புறத்து என்பதில் புறம் ஏழனுருபு. (அ)

வனைம லர்க்குழன் மங்கைநின் னன்னையும் யானும்
புனைக ருங்கழற் சுதர்மன்றன் புதல்விய ராவே
மெனலு மன்னைத னிணைமலர்ச் சிறடி யிறைஞ்சிக்
கனைக ருங்கடல் கரைபுரண் டாலெனக் கலுழ்ந்தாள்.

இ - ள். வனை மலர் குழல் - பூமாலையணிந்த கூந்தலையுடைய, மங்கை - தமயந்தியே, நின் அன்னையும் - உனது தாயும், யானும் - நானும், புனை - தரிக்கப்பட்ட, கரு - பெருமைதங்கிய, கழல் - வீரக்கழலையணிந்த, சுதர்மன் தன் - சுதர்மராசனுடைய, புதல்வியர் ஆவேம் - புத்திரிகளாவோம், எனலும் - என்று (அரசனன்னை) சொன்னவளவில், அன்னை தன் - அப்பெரியதாயினது, இணை - இணைந்த, மலர் - தாமரைமலரையொத்த, சிறடி - சிற்றடிகளில், இறைஞ்சி - நமஸ்கரித்து, கனை - சத்தியாநின்ற, கரு கடல் - கறுத்த கடலானது, கரை புரண்டால் என - கரைபுரண்டா லதுபோல, கலுழ்ந்தாள் - (தமயந்தி) அழுதாள், எ - று.

க - து. சேதிபதிதாய், தமயந்தியே! உன்தாயும் நானும் சுதர்மன் புத்திரிகள் என்றபோது தமயந்தி யவள் காலில்விழுந் தழுதாள் என்பதாம். (௯)

இன்ன ளென்றெனை யுணர்வதன் முன்னமு மீன்ற
வன்னை யாமென வளித்தனை யன்புமீ தூர
மன்னு மென்னுயிர் மக்களைக் காண்பதற் கெந்தை
பொன்ன கர்க்கெனை விடுத்தியென் றின்னுரை புகன்றாள்.

இ - ள். எனை - என்னை, இன்னள் என்று - இத்தன்மையளென்று, உணர்வதன் முன்னமும் - அறிவதற்கு முன்பும், ஈன்ற - பெற்ற, அன்னையாம் என - தாயாவளென்னும்படி, அன்பு மீதூர - ஆசைமிக, அளித்தனை - இரக்ஷித்தாய்; மன்னும் - அவ்விடத்திற் பொருந்தியிருக்கிற, என் உயிர் மக்களை - என்னுடைய உயிர்போன்ற பிள்ளைகளை, காண்பதற்கு - பார்ப்பதற்கு, எந்தை - என்பிதாவினது, பொன் நகர்க்கு - அழகிய குண்டினபுரத்துக்கு, எனை விடுத்தி - என்னையனுப்பு, என்று - என்று, இன் உரை - இனியசொற்களை, புகன்றாள் - (தமயந்தி) சொன்னாள், எ - று.

க - து. என்னை இன்னாளென் றறியுமுன்னமே அன்னையைப் போலுங் காப்பாற்றினாய், என்மக்களைக் காணவேண்டும், என் பிதாவிடத்துக் கனுப்பென்று தமயந்தி சொன்னாள் என்பதாம். (௧௦)

உரைசெய் மாற்றமோர்ந் துள்ளுயி ருருகுறத் தழுவிக்,
கரைசெய் வேலையிற் கருந்தடங் கண்கணீ ருகுப்ப, வெரிம
ணிப்பொலன் சிவிகையி னிருள்கனிந் தொழுகும், விரை
செய் கோதையை விதர்ப்பர்கோ னகர்வயின் விடுத்தாள்.

இ - ள். உரை செய் மாற்றம் - (தமயந்தி) சொல்லிய வசனத்தை, ஓர்ந்து - அறிந்து, உள் - உள்ளில், உயிர்-பிராணன், உருகுற-உருகும்படி, தழுவி - அணைத்துக்கொண்டு, கரை செய் - கரையைச் செய்யாநின்ற, வேலையில் - சமுத்திரம்போல, கரு - கறுத்த, தடம் - விசாலமாகிய, கண்கள் - நேத்திரங்கள், நீர் - நீரை, உகுப்ப - சொரிய, எரி - பிரகாசிக்கின்ற, மணி - இரத்தினங்கள் பதித்த, பொலன் சிவிகையில் - பொற்பல்லக்கின்மீது, இருள் கனிந்து - இருள் முதிர்ந்து, ஒழுகும் - ஒழுகாநின்ற, விரை செய் - வாசனைபொருந்திய, கோதையை-அளகபாரத்தையுடைய தமயந்தியை, விதர்ப்பர்கோன் - வீமராசனது, நகர்வயின் - குண்டினபுரத்திற்கு, விடுத்தாள் - அனுப்பினாள், எ - று.

க - து. பெரியதாயானவள் தமயந்தியை முத்துச்சிவிகையிலேற்றிக் குண்டினபுரத்துக் கனுப்பினாள் என்பதாம். (கக)

கொள்ளை வண்டினங் கூட்டுணு நறுமலர்க் கோதை
யள்ள லங்கருஞ் சேற்றிடை யரக்கிதழ் விரிந்த
வள்ள வாய்ச்செழுங் கமலமேன் மடவனந் துயில்கூர்
வெள்ள நீர்வயல் விதர்ப்பர்கோ னகரமே யினளால்.

இ - ள். கொள்ளை - மிகுந்த, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், கூட்டு உணும் - (தேனைக்)கொள்ளையிடும்படியாகிய, நறு மலர்-வாசனைபொருந்திய மலர்களையணிந்த, கோதை - கூந்தலையுடைய தமயந்தியானவள், அள்ளல் - குழைந்த, அம் - அழகிய, கரு - கரிய, சேற்றிடை - சேற்றினிலுண்டாகிய, அரக்கு இதழ்-செவ்விதழ்கள், விரிந்த - மலர்ந்த, வள்ளம் வாய்-கிண்ணம்போன்ற வாயையுடைய, செழு - செழித்த, கமலம் மேல்-தாமரைமலரின்மேல், மட அனம்-இளவன்னங்கள், துயில் கூர் - நித்திரை செய்கின்ற, வெள்ள நீர் - நீர்ப்பெருக்கையுடைய, வயல் - கழனிகளையுடைய, விதர்ப்பர்கோன்-விதர்ப்பதேசத்தரசனாகிய வீமராசனது, நகரம் - குண்டினபுரத்தை, மேயினள் - அடைந்தாள், எ - று. ஆல் - அசை.

க - து. தமயந்தி குண்டினபுரத்தைச் சார்ந்தாள் என்பதாம்.

அரக்கு - செந்நிறம். (கஉ)

அழுத வுண்கணு மற்றமெல் லாடையு மலங்கற்
கழுமச் சூட்டுபு கைசெயாக் கருங்குழற் காடும் [ன்
விழியி ேனாக்கலும் விதர்ப்பர்கோன் வெய்துயிர்த் தயர்ந்தா
றழுவி யன்னைய ருறுதுயர் சாற்றலாந் தகைத்தே.

இ - ள். அழுத - அழுகையுற்ற, உண் கணும்-(தமயந்தியினது) மையுண்டகண்களையும், அற்ற - அறுபட்ட, மெல் ஆடையும்-மென்மைபொருந்திய புடவையையும், அலங்கல் - மலர்மாலைகளை, கழும-நிறைய, சூட்டுபு - சூட்டி, கை செயா - முடிக்காத, கரு குழல் காடும் - கரிய கூந்தற்காட்டையும், விதர்ப்பர்கோன் - விதர்ப்பதேசத்தார்க்கரசனாகிய வீமராசனானவன், விழியின் நோக்கலும்-கண்களாற் கண்டமாத்திரத்தில், வெய்து உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, அயர்ந்தான் - சோர்ந்தான்; அன்னையர் - தாய்மார்கள், தழுவி - (தமயந்தியைத்) தழுவிக்கொண்டு, உறு துயர் - அடைந்த துன்பமானது, சாற்றலாம் - (நம்மாற்) சொல்லும்படியான, தகைத்தே - தன்மையையுடையதா, எ - று.

க - து. தமயந்தியை வீமராசன்கண்டு சோர்ந்தான், தாய்மார்கள் தழுவி யழுதார்கள் என்பதாம். (கரு)

காட்டி னள்ளிருட் காலையிற் காவல னீத்த
தீட்டொ ணாவெழிற் றெரிவையைத் தேடினன் கொணர்ந்த
மூட்டு முத்தழன் முறைமையின் வளர்த்திடு சுவேதன்
வேட்ட யாவையுங் கொள்கென வளித்தனன் வீமன்.

இ - ள். காட்டில் - வனத்தில், நள் இருள் காலையில் - நடுராத்திரி காலத்தில், காவலன் - நளமகாராசன், நீத்த - விடுத்த, தீட்ட ஒணா - எழுதக் கூடாத, எழில் - அழகுபொருந்திய, தெரிவையை - தமயந்தியை, தேடினன் - தேடி, கொணர்ந்த - கொண்டுவந்த, மூட்டு - மூட்டப்பட்ட, முத்தழல் - மூன்றக்கினிகளை, முறைமையில்-கிரமத்தினால், வளர்த்திடும் - வளர்க்கா நின்ற, சுவேதன்-சுவேதனென்னும் மறையவன், வேட்ட - விரும்பிய, யாவையும் - எல்லாவற்றையும், கொள்க என - பெற்றுக்கொள்ளென்று, வீமன் - வீமராசன், அளித்தனன் - கொடுத்தான், எ - று.

க - து. வீமராஜன் சுவேதனுக்கு வேண்டியன கொடுத்தான் என்பதாம்.

முத்தழலாவன:— தக்ஷிணாக்கினி, காருகபத்தியம், ஆஹவனீயம் என்பவையாம். (கச)

மக்கள் வாண்முக நோக்கியு மடவர னெஞ்ச
நெக்கு வாடுதல் கண்டநற் றாயுள நெகிழ்ந்து
கக்கு செந்தழற் காலவேற் காதலற் குறுகி
நக்க பூங்கழ னளனையு நாடுகென் றுரைத்தாள்.

இ - ள். மக்கள்-பிள்ளைகளினது,வாள் முகம் - ஒளிபொருந்திய முகத்தை, நோக்கியும் - பார்த்தபின்பும், மடவரல் - தமயந்தியினது, நெஞ்சம் - மனமானது, நெக்கு வாடுதல் - நெகிழ்ந்து வாடுதலை, கண்ட - பார்த்த, நல் தாய்-ஈன்றதாயானவள், உளம் நெகிழ்ந்து - மனமுருகி, கக்கு - கக்கப்பட்ட, செம் தழல் - சிவந்த அக்கினிபொருந்திய, காலன் - யமனையொத்த, வேல் - வேலாயுதத்தையேந்திய, காதலன்-தன்னுயகனாகிய வீமராசனை, குறுகி-கிட்டிநின்று, நக்க பூ கழல் - விளங்குகின்ற அழகிய வீரக்கழலையணிந்த, நளனையும் - நளமகாராசனையும், நாடுக என்று - தேடுகவென்று, உரைத்தாள் - சொல்லினாள், எ - று.

க - து. சாருகாசினி நளனையும் தேடும்படி வீமனுக்குச் சொன்னாள் என்பதாம். (கரு)

ஓட ரிக்கணா ளுரைத்தலு மொற்றரைக் கூவி
யாட கப்பசும் பொலன்கழ னளனைநீ ராய்ந்து
தேடி வம்மினென் றரசர்கோன் றிசைதொறுஞ் செலுத்த
நாடி னாரவர் நளிகடல் வரைப்பெலா நடந்தே.

இ - ள். ஓடு அரி கணாள் - நீண்ட அரிபரந்த கண்களையுடைய சாருகாசினியானவள், உரைத்தலும் - சொன்னமாத்திரத்தில், ஒற்றரை - வேவுகாரரை, கூவி - அழைத்து, ஆடகம் - பொன்னாலாகிய, பசு - பசுமையாகிய, பொலன் - அழகிய, கழல் - வீரக்கழலையணிந்த, நளனை - நளமகாராசனை, நீர் - நீங்கள், ஆய்ந்து-ஆராய்ந்து, தேடி - தேடிப்பார்த்து, வம்மின் - வாருங்கள், என்று - என்றுசொல்லி, அரசர்கோன் - ராஜாதி ராஜனாகிய வீமராஜன், திசைதொறும்-எட்டுத்திக்கிலும், செலுத்த - (அவர்களை) அனுப்ப, அவர் - அவ்வேவுகாரர், நளி - குளிர்ச்சி பொருந்திய,கடல் வரைப்பு எலாம் - சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலமுழுமையும், நடந்து - திரிந்து, நாடினார் - தேடினார்கள், எ - று.

க - து. வீமராஜன் நளனைத் தேடும்படி வேவுகாரர்களுக்குக் கட்டளையிட அவர்கள் தேடினார்கள் என்பதாம். (கக)

துருவு மொற்றரி லொருவன்மீண் டணங்கின்முன் றோன்றி
யரிவை மூதெயி லயோத்திமா நகரினி லடைந்தேன்
புரிக ருங்குழன் மனைவியைப் போக்கினன் புலம்பும்
ஒருவ னிவ்வழி யுண்டுகொ லெனவினு வினனால்.

இ - ள். துருவும் - தேடுகிற, ஒற்றரில் - வேவுகாரருள், ஒரு வன் - பருணாதனென்னு மொருவேவுகாரன், மீண்டு - திரும்பிவந்து, அணங்கின் முன் - தமயந்தியின் முன்னிலையில், தோன்றி - நின்று, அரிவை - இராசகுமாரத்தியே, மூது - பழைய, எயில்-மதில்சூழ்ந்த, அயோத்தி மாநகரினில் - அயோத்தியாபுரியில், அடைந்தேன்-சென் றேன்; புரி - விரும்பப்பட்ட, கரு குழல் - கரியகூந்தலையுடைய, மனை வியை - மனையாட்டியை, போக்கினன் - விடுத்தவனாகி, புலம்பும் - துன்பப்படுகின்ற, ஒருவன் - யாவனாயினு மொருவன், இவ்வழி - இந் தப் பட்டணத்தில், உண்டுகொல் - உளனோ, என - என்று, வினவி னன் - விசாரித்தேன், எ - று. ஆல் - அசை.

க - து. பருணாதனென்னும் வேவுகாரன் தமயந்திமுன் வந்து அயோத்தியில் மனைவியை நீக்கினவனுண்டா வெனக்கேட்டேன் என்பதாம். (கஎ)

ஓகை யோடெனக் கொருவனாங் குளங்கனிந் துருகி
வாகை வெஞ்சிலை யிருதுபன் னற்குயர் மான்றேர்ப்
பாகன் கொய்யுளைப் பரியுளந் தேர்பவ னொருவன்
றோகை யைப்பிரிந் தாரஞ ருழப்பவன் சோர்வான்.

இ - ள். ஓகையோடு - அன்புடனே, எனக்கு - எனக்கு, ஒரு வன் - ஒருமனிதன், ஆங்கு - அவ்வயோத்தி நகரத்தில், உளம் கனி ந்து - மனங்கனிந்து, உருகி - கரைந்து, வாகை - வெற்றிமாலை யணி ந்த, வெம் சிலை-வெவ்விய வில்லையேந்திய, இருதுபன்னற்கு-இருது பன்னவரசனுக்கு, உயர் மான் தேர்-உயர்ந்த குதிரை கட்டிய தேரை நடத்துகின்ற, பாகன் - சாரதியும், கொய்யுளை - கொய்துகட்டிய புறமயிரினையுடைய, பரி - குதிரைகளினது, உளம் - மனதை, தேர் பவன் - அறிபவனும், ஒருவன் - தனித்தவனும், தோகையை - மனை யாளை, பிரிந்து - பிரிவுற்று, ஆர் அஞர் உழப்பவன் - மிகுந்த துன்ப ப்படுகின்றவனும், சோர்வான் - சோர்வையடைகின்றவனும், எ - று.

க - து. அங்கொருவன் இருதுபன்னனுக்குத் தேர்ப்பாகன், மனைவியைப் பிரிந்து சோர்பவன் என்பதாம். (கஅ)

அழலி லாதுண வமிர்தென வடுந்தொழில் புரிவோன்
மழக ளிற்றினன் னடையினன் வாகுவ னென்போ
னெழுவு லாந்திணி தோளின னீங்குள னென்ன
வொழுகு பூங்கொடி மருங்குலா யுணர்ந்தனன் வந்தேன்.

இ - ள். அழல் இலாது - நெருப்பில்லாமல், உணவு - உண்டியை, அமிர்து என - அமுதமென்னும்படி, அடு தொழில் - சமைத்தலை, புரிவோன் - செய்வானும், மழ களிற்றின் - இளமைதங்கிய யானைபோல, நல் நடையினன் - நல்லநடையை யுடையவனும், வாகுவன் என்போன் - பாகுகனென்னும் பெயரையுடையவனும், எழு உலாம் - தூண்போலுலாவுகிற, திணி - வலிமைபொருந்திய, தோளினன் - தோள்களை யுடையவனும் (ஆகிய ஒருவன்), ஈங்கு - இந்தநகரத்தில், உளன் - இருக்கின்றான், என்ன-என்று சொல்ல, ஒழுகு - தேனொழுகுகின்ற, பூ கொடி - புஷ்பக்கொடியையொத்த, மருங்குலாய் - இடையையுடைய தமயந்தியே, உணர்ந்தனன் - இச்செய்தியறிந்தவனாகி, வந்தேன் - இவ்விடம் வந்தேன் (என்றான்), எ - று.

க - து. அக்கினியில்லாது சமைப்பவன் இருக்கிறானென்று கேட்டுவந்தேன் என்றான் என்பதாம்.

உணர்ந்தனன்-முற்றெச்சம். (கக)

## வீமன் றேடவிட்ட படலம் முற்றிற்று.

# கலிநீங்குபடலம்.

[இப்படலத்தால் நளனிடத்தில் பொருந்தி வருத்தியிருந்த கலியன் நளன் அக்ஷவித்தை யறிந்தபின் அவனிடத்தில் நில்லாது விட்டு நீங்குதல் சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

*என்று கூறிய வந்தணற் கிருநிதி வழங்கி*
*நன்று நின்னுரை யின்னமு மயோத்தியி னண்ணி*
*மன்றல் மாலைவே லிருதுபன் னற்குள மகிழ்வ*
*தொன்று கூறுவ துளதென வுரைத்தன்மே யினளால்.*

இ - ள். என்று கூறிய - இப்படியென்று சொல்லிய, அந்தண ற்கு - ஒற்றனாய்ச்சென்ற பருணாதனென்னும் பிராமணனுக்கு, இரு நிதி - மிகுந்த நிதிகளை, வழங்கி-கொடுத்து, நின் உரை - உன் சொற் ள், நன்று - நல்லது; இன்னமும் - மறுபடியும், அயோத்தியில் ண்ணி - அயோத்தி நகரத்திற் பொருந்தி, மன்றல் - வாசனைபொ ருந்திய, மாலை - பூமாலையணிந்த, வேல் - வேலாயுத மேந்திய, இரு பன்னற்கு - இருதுபன்ன மகாராசனுக்கு, உளம் மகிழ்வது-மனங் ளிப்பதாகிய, ஒன்று கூறுவது - ஒன்று சொல்லத்தக்கது, உளது - ண்டு, என - என்று, உரைத்தல் மேயினள் - சொல்லத்தொடங்கி றாள், எ-று. ஆல் - அசை.

க - து. தமயந்தி பிராமணனுக்குப் பொருள் கொடுத்து இருது பன்னனுக்குச் சொல்லவேண்டுவ தொன்றுண்டென்று சொல்லத் தொடங்கினாள் என்பதாம்.

*நாட்ட மூன்றுடை நாயகன் வரத்தினா னங்கை*
*மீட்டுங் கன்னிகை யாயினள் சுயம்வரம் விழைந்தாள்*
*கேட்டு மாநிலக் கிழவரு மவ்வழி யிறுத்தார்*
*பூட்டு வார்சிலை மன்னநீ போதியேற் போவாய்.*

இ - ள். நாட்டம் மூன்று உடை - திரிநேத்திரந்தரித்த, நாய கன் - பரமசிவனது, வரத்தினால் - அனுக்கிரகத்தினால், நங்கை - தம யந்தியானவள், மீட்டும் - மறுபடியும், கன்னிகை ஆயினள்-கன்னிப் பெண்ணாகி, சுயம்வரம் - சுயம்வரத்தை, விழைந்தாள் - விரும்பினாள்;

கேட்டு - அச்செய்தி கேட்டு, மா நிலக் கிழவரும் - அரசர்களும், அவ்வழி - அவ்விடத்தில், இறுத்தார் - வந்தடைந்தார்கள்; பூட்டு-நாணேறிடப்பட்ட, வார் சிலை - நீண்ட வில்லை யேந்திய, மன்ன - இருதுபன்னவரசனே, நீ போதியேல்-நீ போவையானால், போவாய்-(விரைவிற்) போ, எ - று.

க - து. இருதுபன்னனே! தமயந்தி இரண்டாவது சுயம்வரத்தை யிச்சித்தாள், நீ போவையாகிற் போ என்பதாம். (உ)

நாளை நன்மணம் புணர்வது நிடதநா டளிக்குங்
காளை யாருயி ருளன்கொலோ கழிந்தனன் கொல்லோ
வாளி மொய்ம்பினு யென்றுநீ யறைகென வறைந்தாள்
வாளை வென்றரி பரந்துமை தோய்ந்தகண் மடவாள்.

இ - ள். நாளை - நாளைத்தினத்தில், நல் - நல்ல, மணம்-விவாகமானது, புணர்வது - செய்யப்படுவதாம்; நிடதநாடு-நிடததேசத்தை, அளிக்கும் - இரக்ஷிக்காநின்ற, காளை - நளமகாராசனானவன், ஆர் - நிறைந்த, உயிர் - பிராணனானது, உளன் கொலோ - இருக்கப்பெற்றானோ, கழிந்தனன் கொல்லோ - நீங்கப்பெற்றானோ; ஆளி-சிங்கத்தையொத்த, மொய்ம்பினுய் - பலத்தையுடைய இருதுபன்னனே, என்று - என்றுசொல்லி, நீ அறைக என - நீசொல்லென்று, வாளை-வாளாயுதத்தை, வென்று - சயித்து, அரி பரந்து - செவ்வரிபரந்து, மை தோய்ந்த - அஞ்சனம் பொருந்திய, கண்-கண்களையுடைய, மடவாள் - தமயந்தியானவள், அறைந்தாள் - சொன்னாள், எ - று.

க - து. நாளை விவாகமெனச் சொல்லென்று சொன்னாள் என்பதாம். (ங)

சுருதி நூற்றுறை போயவன் றுனைவினி லெய்தி
யிருது பன்னனை யடைந்திவை யாவையு மியம்ப
மருமலர்க்குழன் மன்றல்கேட் டளவுமுள மகிழ்வுற்
றுருவ வாம்பரித் தேர்விடு வாகுவற் குரைப்பான்.

இ - ள். சுருதி நூல் - வேதசாஸ்திரங்களினது, துறை - மார்க்கத்தில், போயவன் - சிறந்தவனாகிய வேதியன், துனைவினில் - சீக்கிரத்தில், எய்தி-(அயோத்தியை) அடைந்து, இருதுபன்னனை-இருதுபன்னராசனை, அடைந்து - நெருங்கி, இவை யாவையும்-இவையனைத்தையும், இயம்ப - சொல்ல, மரு மலர்-வாசனைபொருந்திய மலரையணிந்த, குழல் - கூந்தலையுடைய தமயந்தியினது, மன்றல் - விவாகவார்த்தையானது, கேட்டலும் - கேள்வியுற்ற மாத்திரத்தில், உளம்-

மனமானது, மகிழ்வு உற்று-களிப்புற்று, உருவவாம் - நேராகத்தாவா நின்ற, பரி - குதிரைகட்டிய, தேர் விடும்-தேரைச்செலுத்தாநின்ற, வாகுவற்கு - பாகுகன் என்னுஞ் சாரதிக்கு, உரைப்பான் - சொல்லுவான், எ - று.

க - து. இருதுபன்னன் தேர்ப்பாகனுக்குச் சொல்லுவான் என்பதாம். (௪)

தளரு நுண்ணிடைத் தமயந்தி சுயம்வரம் நாளை
யுளைவ யப்பசும் புரவியி னுள்ளமோர்ந் தனையேற்
றெளியுங் கேள்வியாய் விரைவினிற் செலுத்துக தேரென்
றளிமு ரன்றுபைந் தேனுகர் தாரினு னறைந்தான்.

இ - ள். தளரும் - தளர்ச்சியடையாநின்ற, நுண் இடை-நுட்பமான இடையையுடைய, தமயந்தி - தமயந்தியினது, சுயம்வரம்-சுயம்வரமானது, நாளை - நாளைத்தினத்தில் (நடக்கின்றது); உளை-புறமயிரினையும், வயம் - வெற்றியையுமுடைய, பசு - பசுமையாகிய, புரவியின் - குதிரையினது, உளம் - மனதை, ஓர்ந்தனையேல் - அறிவாயானால், தெளியும் கேள்வியாய் - தெளிவுபெறுங் கேள்வியையுடைய பாகுகனே, விரைவினில் - சீக்கிரத்தில், தேர் - இரதத்தை, செலுத்துக - நடத்துக, என்று - என்று, அளி - வண்டுகள், முரன்று - சத்தித்து, பை தேன் - பசியதேனை, நுகர்-உண்ணும்படியான, தாரினன்-மாலையணிந்த இருதுபன்ன மகாராசன், அறைந்தான்-சொன்னான், எ - று.

க - து. இருதுபன்னன், தேர்ப்பாகனே! நாளை தமயந்திக்குச் சுயம்வரம், சீக்கிரந் தேரைச் செலுத்தென்றான் என்பதாம். (௫)

கேட்ட வாகுவன் கிளியென மிழற்றுதீங் கிளவி
காட்டு ணீத்தது நினைத்தன ளாயினுங் கற்பு
நாட்டு கின்றவ ளித்திறம் புரியுமோ நம்மைக்
கூட்டு தற்கிஃதி ழைத்தன ளாமெனக் குறித்தான்.

இ - ள். கேட்ட - அச்சொல்லைக்கேட்ட, வாகுவன் - வாகுவனென்னும் பெயரினையுடைய நளன், கிளி என - கிளிபோல, மிழற்று - சொல்லப்பட்ட, தீம் கிளவி - மதுரமான சொற்களையுடைய தமயந்தியானவள், காட்டுள்-காட்டினுள், நீத்தது-விடுத்ததை, நினைத்தனள் ஆயினும் - (விரோதமாக) நினைத்தாளானாலும், கற்பு - பாதிவிரத்தியத்தை, நாட்டுகின்றவள் - நிலைநிறுத்துகின்ற அவள், இத்திறம் - இவ்வண்ணமாக, புரியுமோ - செய்வாளோ (செய்யாள், ஆயி

னும்), நம்மை - எம்மை, கூட்டுதற்கு - (தன்னுடன்) கூட்டுதற்கு, இஃது இழைத்தனளாம் - இதைச் செய்தவளாவாள், என - என்று, குறித்தான் - கருதினன், எ - று.

க - து. நளன், தன்னை வரவழைக்க இவ்வாறு செய்தாளென்று நினைத்தான் என்பதாம். (சு)

நொறில்வ யப்பரித் தேர்பண்ணி நொய்தினிற் கொணரா
வெறுழ்வ லித்தடந் தோளினாய் தேர்மிசை யிவரி
னறும லர்ப்பசும் பூந்தொடை விதர்ப்பர்கோ னாட்டி
லுறுவ லிப்பகல் கழிவதன் முன்னென வுரைத்தான்.

இ - ள். நொறில்-வேகமும், வயம்-வெற்றியும்பொருந்திய, பரி-குதிரைகட்டிய, தேர் - இரதத்தை, பண்ணி - அலங்கரித்து, நொய்தினில் - சீக்கிரத்தில், கொணரா-(வாகுகன்) கொண்டு வந்து, எறுழ் வலி-மிகுந்த வலிமைபொருந்திய, தடம் தோளினாய்-பருத்த தோள்களையுடைய இருதுபன்ன வரசனே, தேர்மிசை-தேரினில், இவரில்-ஏறிக்கொள்வையாகில், நறு மலர் - வாசனைபொருந்திய மலர்களைத் தொடுத்த, பசு - குளிர்ந்த, பூ தொடை - அழகிய மாலைகளை யணிந்த, விதர்ப்பர்கோன் - வீமராசனது, நாட்டில் - தேசத்தில், இ பகல் - இன்றையதினம், கழிவதன் முன் - நீங்குவதற்கு முன்னமே, உறுவல் - அடைவேன், என-என்று, உரைத்தான்-சொன்னான், எ - று.

க - து. தேர்ப்பாகனாகிய நளன், தேரைக்கொண்டு வந்து, அரசனே! நீ தேரேறினால் பொழுதுபோமுன் விதர்ப்பதேயத்தில்கொண்டு போய் விடுவேன் என்றான் என்பதாம்.

கொணரா-செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (எ)

என்று கூறலு மிளங்கதிர்ப் பரிதிபோ லிறைவன்
குன்று போலுயர் கொடிஞ்சியந் தேர்மிசைக் கொள்ள
நின்ற யாவரும் வியப்புற நினைவருங் கடுப்பின்
மன்ற லந்தொடை வாகுகன் வாம்பரி விடுத்தான்.

இ - ள். என்று கூறலும் - இப்படிச் சொன்ன மாத்திரத்தில் இளம் கதிர் பரிதிபோல் - பாலசூரியன்போல, இறைவன் - இருதுபன்னவரசன், குன்று போல் - மலைபோல, உயர் - உயர்ந்த, கொடிஞ்சி - மேற்பரப்பையுடைய, அம் தேர்மிசை - அழகிய தேரினில், கொள்ள-ஏறிக்கொள்ள, நின்ற யாவரும்-பார்த்திருந்த அனைவரும்

வியப்பு உற-ஆச்சரியப்பட, நினைவரும்-எண்ணுதற்கரிய, கடுப்பின்-வேகத்தினால், மன்றல் - வாசனைபொருந்திய, அம் தொடை-அழகிய மாலையணிந்த; வாகுகன் - பாகுகனானவன், வாம் பரி - தாவாநின்ற குதிரைகளை, விடுத்தான் - நடத்தினான், எ - று.

க - து. இருதுபன்னன் தேரிலேற நளனாகிய பாகன் தேரை விடுத்தான் என்பதாம். (அ)

விடுத்த வாம்பரி வருந்தலு மெய்த்தவர் தனக்குக்
கொடுத்த விஞ்சையைக் கொய்யுளைப் பரியொடுங் கூறக்
கடுப்பை யாவரு முணர்ந்திலர் கால்விசைத் தோடி
யடுத்த வார்கழல் விதர்ப்பர்கோ னணிகெழு நாட்டில்.

இ - ள். விடுத்த - செலுத்தப்பட்ட, வாம் பரி - தாவாநின்ற குதிரைகள், வருந்தலும் - வருந்துமளவில், மெய் தவர்-முனிவர்கள், தனக்கு கொடுத்த - தனக்குபதேசித்த, விஞ்சையை - மந்திரத்தை, கொய் - கொய்துகட்டிய, உளை - புறமயிரினையுடைய, பரியொடும் - குதிரையோடு, கூற - உபதேசிக்க, கடுப்பை - (தங்கள்) வேகத்தை, யாவரும் - எவரும், உணர்ந்திலர்-அறிந்திலர் (ஆம்படி), கால் விசைத்து - கால்களைவீசி, ஓடி - சென்று, வார் கழல் - நீண்ட வீரக்கழலை யணிந்த, விதர்ப்பர்கோன்-வீமராசனது, அணி கெழும்-அழகு பொருந்திய, நாட்டில் - தேசத்தில், அடுத்த - சேர்ந்தன, எ - று.

க - து. குதிரைகள் விதர்ப்பதேயத்தைச் சார்ந்தன என்பதாம்.

கூந்தன் மாவுள மறிதலிற் சாலிகோத் திரனோ
வாய்ந்த கேள்வியின் மாதலி யோவன்றி நளனோ
வேந்தல் வேற்றுரு வெடுத்தன னோவென வெண்ணி
வேந்தர் வேந்தனு மணிமுடி துளக்கினன் வியந்தான்.

இ - ள். கூந்தல் மா-புறமயிரையுடைய குதிரைகளினது, உளம்-மனதை, அறிதலில் - உணர்வதில், சாலி கோத்திரனோ - சாலிகோத்திர முனிவனோ;(அன்றி) வாய்ந்த கேள்வியின் - பொருந்திய கேள்வியையுடைய, மாதலியோ - இந்திரசாரதியோ; அன்றி-அல்லவாகின், நளனும் - நளமகாராசனாகிய, ஏந்தல்-அரசன், வேறு உரு எடுத்தனனோ - வேறுருவெடுத்து வந்தவனோ, என எண்ணி-என்று சிந்தித்து, வேந்தர் வேந்தனும் - இருதுபன்னராசனும், மணிமுடி - நவரத்தின கிரீடந்தரித்த சிரத்தை, துளக்கினன் - அசைத்து, வியந்தான் - சந்தோஷித்தான், எ - று.

க - து. இருதுபன்னன் சாலிகோத்திரனோ, இந்திரசாரதியோ, களனோ என்றெண்ணி யதிசயித்தான் என்பதாம். (க0)

முத்த வெண்குடை வேந்தர்கோன் முழவுறழ் தடந்தோ
ளுத்த ரீயமந் நெறியிடை வீழ்தலு முணர்ந்து
தத்து வாம்பரி நிறுவியத் துகிறரு கென்னப்
பத்தி யோசனை கடந்தது தேரெனப் பகர்ந்தான்.

இ - ள். முத்தம் வெள் குடை - முத்தினுற் செய்த வெள்ளைக் குடையைத் தரித்த, வேந்தர் கோன் - இருதுபன்ன வரசனவன், முழவு உறழ்-மத்தளத்தை யொத்த, தடம் தோள்-பருத்ததன் தோள் களினின்றும், உத்தரீயம் - அங்கவஸ்திரமானது, அ நெறியிடை - அந்த மார்க்கத்தில், வீழ்தலும் - விழுந்த மாத்திரத்தில், உணர்ந்து - தெரிந்துகொண்டு, தத்துவாம் - தாவியோடுகின்ற, பரி-குதிரைகளை, நிறுவி-நிறுத்தி, அ துகில்-அந்த அங்கவஸ்திரத்தை, தருக என்ன - தாவென்று கேட்க, தேர்-இரதமானது, பத்து யோசனை-பத்துயோசனை தூரம், கடந்தது - கடந்துவந்தது, என - என்று, பகர்ந்தான் - (பாகுகன்) சொன்னன், எ - று.

க - து. இருதுபன்னன், அங்கவஸ்திரம் விழுந்தது எடுவென, சாரதி பத்துயோசனை சென்றது என்றான் என்பதாம். (கக)

இன்ன வாய்மைகேட் டரசனும் வியப்புட னேகப்
பின்னு மையிரு காவத மகன்றதற் பின்னர்
முன்னர்த் தோன்றிய தளியினம் பெடையொடு மூசப்
பொன்னந் தாதுகு பூந்துணர்ப் பொரியரைத் தான்றி.

இ - ள். இன்ன வாய்மை - இத்தன்மையான வசனத்தை, கேட்டு - கேள்வியுற்று, அரசனும்-இருதுபன்னவரசனும், வியப்புடன் - ஆச்சரியத்துடனே, ஏக - போக, பின்னும் - பின்பும், ஐயிரு காவதம் - பத்துக்காவதவழி, அகன்றதன் பின்னர் - சென்றபின்பு, அளி இனம் - வண்டுக்கூட்டங்கள், பெடையொடு - பெட்டை வண்டுகளுடனே, மூச - மொய்க்க, பொன் அம் - பொன்போலழகிய, தாது - மகரந்தப்பொடிகள், உகும் - உதிரப்பெற்ற, பூ துணர் - புஷ்பக்கொத்துகளையும், பொரி அரை-பொருக்கெடுத்த அரையையு முடைய, தான்றி - தான்றிமரமானது, முன்னர் - எதிரில், தோன்றியது - காணப்பட்டது, எ - று.

க - து. தான்றி மரம் எதிரில் காணப்பட்டது என்பதாம். (கஉ)

தான்றி மாமரந் தோன்றலுந் தேரினைத் தகைத்துத்
தோன்று மிம்மரத் திலைகளுந் தொக்கமென் பழனு
மூன்று கோடியே முப்பதிற் றிரண்டென மொழிய
வான்ற கேள்வியோ னெண்ணியற் றாமென வியந்தான்.

இ - ள். தான்றி மா மரம்-பெரிய தான்றிமரமானது, தோன்றலும்-காணப்பட்ட வளவில், தேரினை-இரதத்தை, தகைத்து-(இருதுபன்ன வரசன்) நிறுத்தி, தோன்றும் - காணப்படுகின்ற, இ மரத்து - இந்தமரத்தில், இலைகளும்-இலைகளும், தொக்க மெல் பழனும்-நெருங்கிய மென்மையான பழங்களும், மூன்று கோடியே முப்பதிற்று இரண்டு என - மூன்றுகோடியேயறுபது என்று, மொழிய-சொல்ல, ஆன்ற கேள்வியோன் - நிறைந்த கல்வியையுடைய நளமகாராசன், எண்ணி - அம்மரத்தினிலை முதலியவற்றைக் கணக்கிட்டு, அற்றாம் - நீ சொல்லு மத்தன்மைத்தாம், என - என்றுகூறி, வியந்தான் - (அக் கணக்கறிவினில்) ஆச்சரியப்பட்டான், எ - று.

க - து. இருதுபன்னன் தான்றிமரத்திலைகளுங் கனிகளும் மூன்று கோடியே யறுபது எனச்சொல்ல, சாரதி எண்ணியதிசயித்தான் என்பதாம். (கரு)

இனைய விஞ்சைமற் றெனக்குநீ யளித்தனை யென்னிற்
றுனைவ யப்பரி யுளமுணர் விஞ்சையான் சொல்வன்
வனைபொ லன்கழன் மணிமுடி மன்னவென் றுரைப்ப
வனைய விஞ்சையை வாகுகற் களித்தன னன்றே.

இ - ள். இனைய விஞ்சை - இத்தன்மையாகிய வித்தையை, எனக்கு - என்றனக்கு, நீ அளித்தனை என்னில் - நீகொடுப்பாயானால், துனை - வேகம்பொருந்திய, வயம் - வெற்றிபொருந்திய, பரி-குதிரைகளின், உளம் - மனதை, உணர் விஞ்சை - அறியும் வித்தையை, வனை - கட்டப்பட்ட, பொலன் கழல்-பொன்னாற்செய்த வீரக்கழலையும், மணி முடி - நவரத்னம் பதித்த கிரீடத்தையுந் தரித்த, மன்ன - இருதுபன்னவரசனே, யான் - நான், சொல்வன்-(உனக்குச்) சொல்வேன், என்று உரைப்ப - என்று வாகுகன் சொல்ல, அனைய விஞ்சையை - அந்த வித்தையை, வாகுகற்கு-பாகுகனுக்கு, அளித்தனன்-(இருதுபன்னவரசன்) கொடுத்தான், எ - று.

க - து. சாரதி இந்த வித்தையை எனக்குக்கொடும், குதிரைகளுளத்தை யறியும் வித்தையை உனக்குக்கொடுப்பேனென்றான். இருதுபன்னராசனும் அப்படியே சாரதிக்குக் கொடுத்தான் என்பதாம்.

இந்த வித்தையாவது கணக்குவித்தை, அதுவே அக்ஷவித்தை யாம். (கச)

இருது பன்னனவ் விஞ்சையை வாகுகற் கீய
மருவி நின்றவன் கலிதணந் தேகிவா ளரவ
மெரிசெய் வெவ்விடங் கான்றலி னிதயநெக் குருகி
வெருவி வாய்விடா விடத்தினை யுமிழ்ந்தன னன்றே.

இ - ள். இருதுபன்னன் - இருதுபன்னவரசன், அ விஞ்சையை - அக்கணக்கு வித்தையை, வாகுகற்கு-வாகுகனாகிய நளனுக்கு, ஈய - கொடுக்க, மருவி நின்ற - (நளனை) மருவியிருந்த, வன் கலி - வலிமையுள்ள கலியனவன், தணந்து ஏகி-(நளமகாராசனை) விட்டு நீங்கிப்போய், வாள் அரவம் - ஒளிபொருந்திய கார்க்கோடக நாகமானது, எரி செய் - தகிக்காநின்ற, வெவ் விடம் - கொடிய விடத்தை - கான்றலில் - (தானிருந்த நளனிடத்திற்) கக்கினமையால், இதயம் - மனமானது, நெக்கு உருகி - கரைந்துருகப்பெற்று, வெருவி-பயந்து, வாய்விடா-வாய்விட்டு, விடத்தினை-(கார்க்கோடகனது) விஷத்தை, உமிழ்ந்தனன் - கக்கினான், எ - று. அன்று, ஏ - அசைகள்.

க - து. இருதுபன்னன் வித்தையைப் பாகுகனுக்குக் கொடுக்க, சனி நளனைவிட்டு நீங்கி விஷத்தைக் கக்கினான் என்பதாம். (கரு)

தணந்த வெந்திறற் கலியனைச் சபிக்குவ னென்னாக்
கணங்கொள் வண்டிமிர் தாரினா னுளத்திடைக் கருத
லுணர்ந்த வெங்கலி தமயந்தி யுரைத்தசா பத்தா
லணங்க ராவுமிழ் விடத்தினா லின்றளவ யர்ந்தேன்.

இ - ள். தணந்த - தன்னைப்பிரிந்து நின்ற, வெம் திறல்-வெவ்விய பலத்தையுடைய, கலியனை-கலிபுருஷனை, சபிக்குவன் என்னா - சபிப்பேனென்று, கணம் கொள் - கூட்டங்கொண்ட, வண்டு - வண்டுகள், இமிர் - சத்தியாநின்ற, தாரினான் - மாலையணிந்த நளமகாராசன், உளத்திடை - மனத்தினில், கருதல் - நினைத்தலை, உணர்ந்த - அறிந்த, வெம் கலி - கொடிய கலியனவன், தமயந்தி உரைத்த - தமயந்தி கொடுத்த, சாபத்தால்-சாபத்தினால், அணங்கு-அச்சத்தைத் தருகின்ற, அரா - கார்க்கோடக நாகமானது, உமிழ்-உமிழ்ந்த, விடத்தினால் - விஷத்தால், இன்றளவு - இன்றையமட்டும், அயர்ந்தேன் - சோர்வையடைந்தேன், எ - று.

க - து. தன்னைச்சபிக்க நினைந்த நளன் கருத்தை யறிந்த சனி, தமயந்தி சாபத்தால் நாகம் உமிழ்ந்த விஷத்தால் சோர்வை யடைந்தேன் என்பதாம். (கசு)

இழைத்த தீவினை தணந்தன னின்றுதொட் டுன்பேர்
வழுத்தி னோரையு மருவலன் மன்னவென் றேத்த
வழற்கொ டுஞ்சினந் தணிந்தன னடல்வே லரசன்
குழைத்த தான்றியி லேறினன் கொடியவெங் கலியே.

இ - ள். இழைத்த - செய்யப்பட்ட, தீவினை - கொடுஞ்செய்கைகளை, தணந்தனன் - விட்டு நீங்கினேன்; இன்றுதொட்டு - இன்றைய தினமுதற்கொண்டு, உன் பேர் - உன்னுடைய நாமத்தை, வழுத்தினோரையும் - துதித்தவரையும், மருவலன் - சேரேன்; மன்ன - நளமகாராசனே, என்று ஏத்த - என்று துதிக்க, அடல் - போர் செய்கின்ற, வேல் - வேலையேந்திய, அரசன் - நளமகாராசனானவன், அழல் கொடும் - அக்கினிபோற்கொடிய, சினம் - கோபத்தை, தணிந்தனன் - விடுத்தான்; குழைத்த - தளிர்த்த, தான்றியில் - தான்றிமரத்தில், கொடிய - குரூரனாகிய, வெம் கலி - வெவ்விய கலியனானவன், ஏறினன் - ஏறிக்கொண்டான், எ - று. ஏ - அசை.

க - து. இன்றுதொடங்கி உமதுபேரைச் சொன்னவரையும் பிடித்திலன் என்று துதிக்க, அரசன் கோபம் நீங்கினன்; சனி தான்றி மரத்திலேறினன் என்பதாம். (கஎ)

கலிநீங்கு படலம் முற்றுப்பெற்றது.

# தேவியைக்கண்ணுற்ற படலம்.

[இப்படலத்தால் கலிநீங்கியபின்பு நளமகாராசன் வீமனது குண்டின நகரத்தில் வந்து மூன்றுவருடம் பிரிவுற்ற தனது தேவியாகிய தமயந்தியைக் காண்டல் சொல்லப்படுகின்றது.]

### கலிநிலைத்துறை.

விண்ட மென்மலர் நறவினை விளரியஞ் சுரும்ப
ருண்டு துஞ்சுதார் நிடதர்கோன் றேர்கடி தோட்டி
மண்டு தீம்புன லகழிசூழ் மாமதிற் குடுமிக்
கொண்டல் கண்படு குண்டின புரத்தில்வந் தடைந்தான்.

இ - ள். விண்ட - மலர்ந்த, மெல் மலர் - மெல்லியபுஷ்பங்களது, நறவினை - தேனை, விளரி - விளரியென்னும் பண்ணைப்பாடுகின்ற, அம் சுரும்பர் - அழகிய வண்டுகள், உண்டு - குடித்து, துஞ்சும் - நித்திரைசெய்யும்படியுள்ள, தார் - மாலையையணிந்த, நிடதர் கோன் - நளமகாராசன், தேர் - இரதத்தை, கடிது - விரைவினில், ஓட்டி - செலுத்தி, மண்டு - நிறைந்த, தீம் புனல் - மதுரமான நீரையுடைய, அகழி - அகழியானது, சூழ் - சூழப்பெற்ற, மா மதில்-பெரிய மதில்களுடைய, குடுமி - சிகரத்தில், கொண்டல் - மேகங்கள், கண்படு - நித்திரைசெய்யும்படியுள்ள, குண்டினபுரத்தில் - வீமராசன் பட்டணத்தில், வந்து அடைந்தான் - வந்து சேர்ந்தான், எ-று.

க - து. நளன் தேரோட்டிக் குண்டினபுரத்தில் வந்தான் என்பதாம். (க)

சில்லி யந்தடந் தேர்வரு கம்பலை கேளா
வொல்லை யித்திறந் தேர்விட நளனலா தொருவர்
வல்ல ரோவென மனத்திடை யெண்ணிமற் றனையோ
னல்ல னேனுயிர் துறப்பனென் றுன்னின ளணங்கே.

இ - ள். சில்லி - உருளையையுடைய, அம் தடம் தேர் - அழகிய விசாலமாகிய தேரானது, வரும் - வருகின்ற, கம்பலை - சத்தத்தை, கேளா - கேட்டு, ஒல்லை - சீக்கிரத்தில், இத்திறம் - இவ்வண்ணமாக, தேர் விட - தேரைச்செலுத்த, நளன் அலாது - நளனையல்லாமல்,



இருதுபர்ணன் வீமன்பாலடையதமயந்தி கேசினியென்பவனால் அவன்சாரதியைபரிக்ஷித்தல்.

ஒருவர் - மற்றொருவர், வல்லரோ - திறமையுள்ளவரோ, என - என்று, மனத்திடை - மனத்தில், எண்ணி-சிந்தித்து, அனையோன் - இவன், அல்லனேல் - நளனல்லனாகில், உயிர் துறப்பல் - உயிரை விடுவேன், என்று - என்று, அணங்கு - தமயந்தியானவள், உன்னினள் - எண்ணினாள், எ - று. ஏ - அசை.

க - ரு. தமயந்தி தேர்வருஞ் சத்தங்கேட்டு இவன் நளனல்லா விடில் உயிர்விடுவே னென்றாள் என்பதாம்.

கேளா-செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (உ)

மருவு பாகனைத் தேரொடும் வாயிலி னிறுவி
யிருது பன்னனவ் வீமன்மாட் டேகலு மெதிராப்
புரிவ யாவையும் புரிந்துபல் காவதம் போக்கி
யுருவப் பூணினாய் வந்தமை யெவன்கொலென் றுரைத்தான்.

இ - ள். மருவு பாகனை - பொருந்திய சாரதியை, தேரொடும் - இரதத்தோடும், வாயிலில்-அரண்மனைவாசலில், நிறுவி-நிறுத்தி, இருதுபன்னன் - இருதுபன்னவரசனானவன், அ வீமன்மாட்டு - அந்த வீமராசனிடத்து, ஏகலும் - சென்றவளவில், எதிரா புரிவ யாவையும் - எதிர்வந்து செய்யத்தக்க மரியாதை யனைத்தையும், புரிந்து - செய்து, பல் காவதம் போக்கி - பலகாவத வழியைக்கடந்து, உருவ பூணினாய்-அழகிய ஆபரணத்தையுடைய இருதுபன்ன வரசனே, வந்தமை - (நீ) இவ்விடம் வந்ததன்மை, எவன்கொல் - என்னகாரணமோ, என்று - என்று, உரைத்தான் - வீமராசன் சொன்னான், எ-று.

க - ரு. இருதுபன்னன் வீமனிடத்திற் சென்றவளவில் வீமனெதிர்வந்து உபசாரஞ்செய்து வந்தகாரிய மென்னவென்று கேட்டான் என்பதாம்.

எதிரா-செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (ங)

ஈங்க டைந்தது மன்னநிற் காணிய வெனலும்
வீங்கு தோளினா னினியநன் மொழிபல விளம்பிப்
பாங்கு ளார்தமை யுறையுளொன் றமைக்கெனப் பணிப்ப
ஆங்கு விண்ணவர் நகரினும் விழுமிதொன் றமைத்தார்.

இ - ள். மன்ன - வீமராசனே, ஈங்கு - இந்நகரத்தில், அடைந்தது - வந்தது, நின் காணிய-உன்னைக்காண்பதற்கு, எனலும்-என்று சொல்லிய மாத்திரத்தில், வீங்கு தோளினான்-பருத்தபுசத்தையுடைய

வீமராசனானவன், இனிய - இனிமையான, நல் மொழி-நல்லசொற்களை, பல விளம்பி - பலவாகச்சொல்லி, பாங்கு உளார் தமை-அருகிலுள்ள ஏவலாளரை(ப்பார்த்து),உறையுள் ஒன்று-ஒருவிடுதிவீட்டை, அமைக்க என - அமையுங்களென்று, பணிப்ப - உத்தரவு கொடுக்க, ஆங்கு - அவ்விடத்தில், விண்ணவர் நகரினும் - சொர்க்கத்தைக்காட்டிலும், விழுமிது - மேன்மையதாகிய, ஒன்று - ஒரு விடுதி வீட்டை, அமைத்தார் - (ஏவலாளர்) திட்டஞ்செய்தார்கள், எ - று.

க - து. வீமராஜனே! உம்மைக் காணவந்தே னென்றவளவில், வீமன் ஏவலாளரை விடுதி வீடொன்று அமைக்கச்சொன்னான், அவர்களு மப்படியே யமைத்தார்கள் என்பதாம். (அ)

இருது பன்னன்வேந் தருளினா லவ்வயி னெய்தி, யரசர் யாவருந் தொக்கில ராய்வளைப் பணைத்தோள், விரைசெய்கோதைதன் சுயம்வர மென்னவே தியன்முன், னுரைசெய்மாற்றமற் றென்கொலென் றயிர்த்தன னுறைந்தான்.

இ - ள் இருதுபன்னன்-இருதுபன்னவரசன், வேந்து அருளினால் - வீமனுத்தரவினால், அவ்வயின் - அந்தவீட்டில், எய்தி - அடைந்து, அரசர் யாவரும் - அரசர்கள் எவரும், தொக்கிலர் - வந்துசேர்ந்தனரில்லை; ஆய் வளை - சிறந்தவளையலை யணிந்த, பணை தோள்-மூங்கிலையொத்த தோள்களையும், விரை செய் - பரிமளிக்கின்ற, கோதைதன் - கூந்தலையுமுடைய தமயந்தியினது, சுயம்வரம் என்ன - சுயம்வரமென்று, வேதியன்-பருணாதனென்னும் பிராமணன், முன்-முந்திய தினத்தில், உரை செய் - சொல்லிய, மாற்றம் - வார்த்தை, என்கொல் - எப்படிப்பட்டதோ, என்று - என்று, அயிர்த்தனன் - சந்தேகித்தவனாகி, உறைந்தான் - வாசஞ்செய்தான், எ - று. மற்று-அசை.

க-து. இருதுபன்னன் பருணாதனென்னும் பிராமணன் சுயம்வரமென்று சொன்னதைக்குறித்துச் சந்தேகித்தான் என்பதாம்.

அயிர்த்தனன்-முற்றெச்சம். (கூ)

சாந்த மென்முலைத் தமயந்தி தோழியை நோக்கிப்
போந்த மன்னவன் பொற்றடந் தேரிடைப் பிணித்த
சூந்தன் மாவிடு சாரதி கொற்றவே னளனும்
வேந்த னேயென வுணர்ந்திவண் வருகென விடுத்தாள்.

இ - ள். சாந்தம் - சந்தனக்கோலமணிந்த, மெல் முலை - மெல்லிய முலைகளையுடைய, தமயந்தி - தமயந்தியானவள், தோழியை-

கேசினியென்னுந் தனது பாங்கியை, நோக்கி-பார்த்து, போந்த மன்னவன்-வந்த இருதுபன்னவரசனது, பொன்-அழகிய, தடம்-விசாலமாகிய, தேரினில் - இரதத்தில், பிணித்த - கட்டிய, கூந்தல் மா-புறமயிரினையுடைய குதிரைகளை, விடும் - நடத்துகின்ற, சாரதி - தேர்ப்பாகனானவன், கொற்றம் - வெற்றிபொருந்திய, வேல் - வேலாயுதந்தரித்த, நளனும்-நளனாகிய, வேந்தனோ - அரசனோ (அல்லனோ), என - என்று, உணர்ந்து - அறிந்துகொண்டு, இவண்-இவ்விடத்தில், வருக என - வாவென்றுசொல்லி, விடுத்தாள் - அனுப்பினாள், எ - று.

க - து. தமயந்தி கேசினியாகிய பாங்கியைச் சாரதி நளனோவென் றறிந்து வாவென்றாள் என்பதாம். (கூ)

கொங்கு வாய்மடுத் தினவண்டு கூட்டுணுங் கூந்தற்
றிங்கள் வாண்முகத் தெரிவைதன் னேவலிற் றிறம்பா
மங்கை யெய்திமற் றியாவனீ யெத்தொழில் வல்லை
யிங்கு வந்தவா றென்னென வாகுவ னிசைப்பான்.

இ - ள். கொங்கு - தேனை, வாய்மடுத்து-வாயைவைத்து, இனவண்டு - கூட்டமாகிய வண்டுகள், கூட்டு உணும்-கொள்ளை கொண்டுண்ணப்பெற்ற, கூந்தல் - அளகத்தையும், திங்கள் - சந்திரன்போன்ற, வாள் முகம் - ஒளிபொருந்திய முகத்தையுமுடைய, தெரிவைதன் - தமயந்தியினது, ஏவலில் - உத்தரவினின்றும், திறம்பா - தவறாத, மங்கை - கேசினியானவள், எய்தி - அவ்விடத்திற்சென்று, யாவன் நீ-நீ யார்; எ தொழில் - எந்தத்தொழில்களில், வல்லை - வல்லமையுள்ளவன்; இங்கு - இவ்விடத்தில், வந்த ஆறு - வந்ததன்மை, என் என - எப்படிப்பட்டதென்று கேட்க, வாகுவன் - வாகுவனென்னப்பட்ட நளன், இசைப்பான் - சொல்லுவான், எ - று.

க - து. தோழிசென்று நீ யாவன்? எத்தொழிலில் வல்லவன்? நீ இங்கு வந்தவகையென்ன? என, வாகுகன் சொல்வான் என்பதாம். (எ)

விரிம லர்க்குழற் றமயந்தி சுயம்வரம் வேட்ட
விருது பன்னன்மான் றேர்விடும் வாகுவ னென்பேர்
புரிவல் வெந்தழ லின்றியு மடைத்தொழில் புனலற்
றுருகு பாலையிற் றீம்புன றருவலென் றுரைத்தான்.

இ - ள். விரி - மலர்ந்த, மலர் - மலர்களையணிந்த, குழல் - கூந்தலையுடைய, தமயந்தி - தமயந்தியினது, சுயம்வரம் - சுயம்வரத்தினில், வேட்ட - விருப்பமுற்ற, இருதுபன்னன் - இருதுபன்ன ராஜ

னது, மான் தேர் - குதிரை கட்டிய தேரை, விடும் - நடத்துகின்ற, வாகுவன் - வாகுவன் என்பது, என் பேர் - என்பெயராம்; வெம் தழல் - வெவ்விய அக்கினி, இன்றியும் - இல்லாமலும், மடைத்தொழில் - சமையலை, புரிவல் - செய்வேன்; புனல் அற்று - நீரில்லாமல், உருகு - உருகுகின்ற, பாலையில் - பாலைநிலத்தில், தீ புனல் - மதுரமான சலத்தை, தருவல் - (உண்டுபண்ணிக்) கொடுப்பேன், என்று உரைத்தான் - என்று சொன்னான், எ - று.

க - து. தமயந்தி சுயம்வரத்தை யிச்சித்த இருதுபன்னன் தேர் விடுஞ் சாரதி, அக்கினியில்லாமற் சமைப்பேன், நீரில்லாத பாலையில் நீர் உண்டாக்குவேன் என்றான் என்பதாம். (அ)

இன்ன விஞ்சைக ணளனலா தறிருந ரில்லை
யன்ன வன்றரக் கொண்டனை போலுமவ் வரசன்
மன்னி வாழ்வதெந் நகர்வயின் வகுத்துரை யென்றாள்
பொன்ன வாஞ்சுணங் கரும்பிய புணர்முலைப் பூவை.

இ - ள். பொன் அவாம்-பொன்னும் விரும்புதற்குரிய, சுணங்கு-தேமல், அரும்பிய - உண்டாகிய, புணர் முலை - நெருங்கிய ஸ்தனங்களையுடைய, பூவை - கேசினியானவள், இன்ன விஞ்சைகள் - இத்தன்மைய வித்தைகள், நளன் அலாது - நளனல்லாமல், அறிகுனர் - அறிந்தவர்கள், இல்லை - (ஒருவரும்) இல்லை; அன்னவன் - அந்த நளமகாராசன், தர - கொடுக்க, கொண்டனை போலும் - பெற்றுக்கொண்டாய்போலும்; அ அரசன் - அந்த நளமகாராசன், எ நகர்வயின் - எந்தப் பட்டணத்தில், மன்னி - பொருந்தி, வாழ்வது - சுகித்திருப்பது, வகுத்து - பகுத்து, உரை-(அதைச்)சொல்லு, என்றாள்-என்று வினவினள், எ - று.

க - து. கேசினியானவள் நீ இவ்வித்தையை நளனிடத்துக் கற்றுக்கொண்டாய்போலும்; அந்நளன் எங்கே யிருக்கிறான் சொல்லென்றாள் என்பதாம்.

பூவை - உவமையாகுபெயர். (க)

மேய விஞ்சையோர் நளனொடுங் கற்றிலன் விறல்வேற்
சேய னினி துறைவதிவ் விடமெனத் தெருளேன்
றாய கற்பினர் காதலர் துறப்பினு மற்றோர்
காய கற்பெற நினைவர்கொ லோவென நவின்றான்.

இ - ள். மேய - பொருந்திய, விஞ்சை - வித்தையை, ஓர் - ஒப்பற்று, நளனொடும் - நளமகாராசனிடத்தில், கற்றிலன் - நான் கற்க

வில்லை; விறல் வேல்-வெற்றிபொருந்திய வேலேந்திய, சேய் அனான்-சுப்பிரமணியனை யொத்த நளமகாராசன், இனிது உறைவது - இனிமையோ டிருப்பது, இவ்விடம் - இன்னவிடம், என - என்று, தெருளேன் - அறியேன்; தூய - பரிசுத்தமாகிய, கற்பினர் - கற்பினையுடைய மாதர்கள், காதலர் - கணவர்கள், துறப்பினும் - துறந்துவிட்டாலும், மற்றோர் - வேறொரு, நாயகன் பெற - கணவனையடைய, நினைவர்கொலோ - நினைப்பரோ, என - என்று, நவின்றான் - (நளமகாராசன்) சொன்னான், எ - று.

க - து. நான் நளனிடத்தில் வித்தை கற்றிலன், அவனிருக்குமிடமு மறியேன்; கற்புள்ளமாதர் நாயகர் நீக்கினும் வேறு நாயகரை இச்சிப்பார்களோ என்றான் என்பதாம். (க0)

இன்ன கூறலு மடவரல் கதுமென வேகி
மின்ன னாளுடன் கேட்டன யாவையும் விளம்பி
யன்ன வன்றன துருவலான் மொழிகுவ தனைத்து
முன்னி னம்மிறை மொழிவதே போன்மென மொழிந்தாள்.

இ - ள். இன்ன - இத்தன்மையாக, கூறலும் - சொன்னவளவில், மடவரல் - கேசினியானவள், கதும் என - சரேலென்று, ஏகி-சென்று, மின் அனாளுடன் - தமயந்தியுடன், கேட்டன யாவையும் - கேள்வியுற்ற சங்கதிகளை யெல்லாம், விளம்பி-சொல்லி, அன்னவன் தனது-அந்நளமகாராசனது, உருவு அலான் - வடிவமில்லாத இப்பாகன், மொழிகுவது அனைத்தும்-சொல்வதெல்லாம், முன்னில்-யோசிக்கு மிடத்தில், நம் இறை-நமது நளமகாராசன், மொழிவதே போன்ம் என - சொல்வதைப்போ லிருக்கிறதென்று, மொழிந்தாள் - சொன்னாள், எ - று.

க - து. தோழி கேட்டவையெல்லாந் தமயந்திக்குச் சொல்லி, நம்முடைய அரசனைப்போலவே பேசுகிறானென்றாள் என்பதாம். ()

மொழிதல் கேட்டலு மொய்குழல் வாலரி யுதவி
யழலி லாதிவை யடுவது காண்டியென் றறையக்
குழைகொள் வாண்முகக் கொம்பனா ளவனுழைக் குறுகி
யிழைகொள் பூண்முலை சொற்றவா றிசைத்தன ளீந்தாள்.

இ - ள். மொழிதல்-கேசினி சொல்லியவைகளை, கேட்டலும் - கேள்வியுற்ற மாத்திரத்தில், மொய் குழல் - தமயந்தியானவள், வால்-வெள்ளிய, அரி - அரிசியை, உதவி - கொடுத்து, அழல் இலாது - நெருப்பின்றி, இவை அடுவது - இவ்வரிசிகளைச் சமைப்பதை,

காண்டி என்று - பார்த்துவாவென்று, அறைய - கூற, குழை கொள் - குண்டலமணிந்த, வாள் முகம் - ஒளிபொருந்திய முகத்தையுடைய, கொம்பு அன்னாள்-பூங்கொம்பையொத்த கேசினியானவள், அவன் உழை - அப்பாகனிடத்து, குறுகி - சென்று, இழை கொள்-நூலிழை கொண்ட, பூண்-ஆபரணங்களையணிந்த, முலை - ஸ்தனங்களையுடைய தமயந்தி, சொற்ற ஆறு - சொல்லியபடி, இசைத்தனள் - சொல்லி, ஈந்தாள் - அவ்வரிசியைக் கொடுத்தாள், எ - று.

க - து. தமயந்தி தோழியினிடம்அரிசிகொடுத்துத் தீயில்லாமற் சமைப்பதைக் காணென்று சொல்ல, அவள் அவனிடத்துச் சென்று அரிசியைக் கொடுத்தாள் என்பதாம். (கஉ)

ஈந்த வாலரி பெய்தபொற் குழிசிதீ யின்றி
யாய்ந்த கேள்வியான் றொடுதலு மடிசிலா யமைய
வேய்ந்த பூங்குழல் கண்டுபோய் வெம்முலைப் பொறையாற்
சாய்ந்த நுண்ணிடைத் தமயந்தி தன்னொடு மொழிந்தாள்.

இ - ள். ஈந்த-கொடுத்த, வால் அரி-வெள்ளிய அரிசியானவை, பெய்த - போடப்பட்ட, பொன் குழிசி - பொன்குடத்தை, ஆய்ந்த கேள்வியான் - நளமகாராசன், தொடுதலும் - (கையால்) தொட்ட மாத்திரத்தில், தீ இன்றி - நெருப்பில்லாமல், அடிசிலாய் அமைய - சாதமாயமைய, வேய்ந்த - தரிக்கப்பட்ட, பூ குழல் - பூமாலையணிந்த கூந்தலையுடைய கேசினியானவள், கண்டு - அதைப்பார்த்து, போய் - சென்று, வெம் முலை - விருப்பத்தைத் தருகின்ற ஸ்தனங்களினுடைய, பொறையால் - பாரத்தினால், சாய்ந்த - வணங்கிய, நுண் இடை - நுட்பமான இடையையுடைய, தமயந்தி தன்னொடும் - தமயந்தியுடனே, மொழிந்தாள் - (இவ்வதிசயத்தைச்) சொன்னாள், எ - று.

க - து. அரிசிபோட்ட பொற்பாத்திரத்தை நளன் தொட்டவளவில் சாதமாகத் தோழிகண்டு தமயந்திக்குச் சொன்னாள் என்பதாம்()

அழலு நீருமின் றமிழ்தென வடுதொழில் கேட்டுக்
குழையு நெஞ்சின ளின்னுயிர்க் கொழுநனென் றெண்ணி
விழைவி னோடுதன் மக்களை யவனுழை விடுத்தாண்
மழலை மென்மொழி மக்களு மன்னன்மாட் டடைந்தார்.

இ - ள். குழையும் நெஞ்சினள்-குழைந்த நெஞ்சத்தளாகிய தமயந்தியானவள், அழலும் - நெருப்பும், நீரும் - தண்ணீரும், இன்று - இல்லாமல், அமிழ்து என-அமிர்தம்போல, அடு தொழில் - சமைத்

தலை, கேட்டு-கேள்வியுற்று,(இவன்) இன் உயிர் கொழுநன் - இனிய உயிரையொத்த (நமது) கணவன், என்று எண்ணி - என்று கருதி, விழைவினோடு - ஆசையோடு, தன் மக்களை-தன் புதல்வரை, அவன் உழை - அவனிடத்து, விடுத்தாள் - அனுப்பினாள்; மழலை மெல் மொழி - மெல்லிய மழலை மொழிகளையுடைய, மக்களும் - பிள்ளைகளும், மன்னன்மாட்டு - நளமகாராசனிடத்தில், அடைந்தார் - சேர்ந்தார்கள், எ - று.

க - து. தமயந்தி நாயகனென்றெண்ணி மக்களையனுப்பினாள், அவர்களும் அரசனிடத்திற் சேர்ந்தார்கள் என்பதாம். (கச)

அடைந்த மக்களைக் காண்டலு மழலிடு மெழுகி
னுடைந்த துள்ளநீ ரூற்றிருந் தொழுகின நெடுங்கண்
டொடர்ந்த மும்மல முருக்கிவெம் பவக்கட றொலைபக்
கடந்து ளோர்களுங் கடப்பரோ மக்கண்மேற் காதல்.

இ - ள். அடைந்த - தன்னிடத்து வந்த, மக்களை - புதல்வரை, காண்டலும் - பார்த்தமாத்திரத்தில், அழல் இடும் - தீயிலிட்ட, மெழுகில் - மெழுகுபோல, உள்ளம் - (நளமகாராசன்) மனமானது, உடைந்தது - நெகிழ்ந்தது; நெடு கண் - நெடியகண்கள், நீர் ஊற்றிருந்து - நீர் சுரந்து, ஒழுகின - சொரிந்தன, தொடர்ந்த - சனனங்கடோறு மனுசரித்த, மும்மலம் - ஆணவமாயை காமியமெனு மூன்று மலத்தையும், முருக்கி - கெடுத்து, வெம் - கொடிய, பவம் கடல் - சனனசாகரத்தை, தொலைய - நீங்க, கடந்துளோர்களும் - நீத்தோரும், மக்கண்மேல் - பிள்ளைகண்மேல்வைத்த, காதல் - ஆசையை, கடப்பரோ - ஒழிப்பரோ (ஒழியார்), எ - று.

க - து. மக்களை நளன்கண்டு அழுதான் என்பதாம். (கரு)

மழலை மென்மொழி மக்களைக் காண்டலு மன்ன
னழுது துன்புற லாய்வளைத் தோழிகண் டேகித்
தொழுது சொற்றலுங் கொழுநனு மென்பது துணிந்து
முழுவ லன்புடைத் தாயொடு தந்தைபான் மொழிந்தாள்.

இ - ள். மழலை மெல் மொழி - மெல்லியமழலைச் சொற்களையுடைய, மக்களை - பிள்ளைகளை, காண்டலும் - கண்டவளவில், மன்னன் - நளமகாராசன், அழுது - புலம்பி, துன்புறல் - துன்பப்படுதலை, ஆய் வளை - சிறந்த வளையலை யணிந்த, தோழி - கேசினியானவள், கண்டு-பார்த்து, ஏகி-தமயந்தியினிடத்துச்சென்று, தொழுது - வணங்கி, சொற்றலும் - இச்செய்கையைச் சொன்னவளவில், கொ

மூகன் - (இவன்) நமது கணவன், ஆம் - ஆவன், என்பது - எனப் படுவதை, துணிந்து - (தமயந்தி) நிச்சயித்து, முழுவல் அன்புடை - நிறைந்த அன்பையுடைய, தாயொடு - தாயினால், தந்தைபால் - தகப் பனிடத்தில், மொழிந்தாள் - சொன்னாள், எ - று.

க - நு. அரசன் மக்களைக்கண் டழுதலைத் தோழி தமயந்திக்குச் சொன்னவளவில் நாயகனென்று துணிந்து தமயந்தி தாய்மூலமாய்த் தகப்பனுக்கு அறிவித்தாள் என்பதாம். (கசு)

மழைத்த டங்கணாண் மன்னவன் பணியினால் வேந்தை
யழைத்து வம்மென வாய்வளைத் தோழியை விடுப்பக்
குழைத்த பூங்கொடி யன்னவள் வாருகற் குறுகித்
தழைத்த காதலால் வருகென மன்னனுஞ் சார்ந்தான்.

இ - ள். மழை - குளிர்ச்சியும், தடம் - விசாலமும் பொருந்திய கணாள் - கண்களையுடைய தமயந்தியானவள், மன்னவன் - வீமராச னது, பணியினால் - உத்தரவினால், அழைத்து வம்மென - (சாரதி யை) அழைத்துவாவென்று, ஆய் வளை - சிறந்த வளையல்களையுடைய, தோழியை - கேசினியை, விடுப்ப - அனுப்ப, குழைத்த - தளிர்த்த, பூ கொடி அன்னவள் - புஷ்பக்கொடியை யொத்த கேசினியான வள், வாருகன் குறுகி - வாருகனையடைந்து, தழைத்த காதலால் - மிகுந்த அன்போடும், வருக என - (அரசனுத்தரவின்படி) வாவென் றழைக்க மன்னனும் - நளமகாராசனும், சார்ந்தான் - (அரண்மனை யை) அடைந்தான், எ - று.

க - து. தமயந்தி வீமனுத்தரவால் சாரதியை யழைத்துவா வென்று கேசினியை விடுக்க, அவளழைக்க அரசன் வந்தான் என்ப தாம். (கஎ)

மறுவில் கற்பினள் மானவேல் மன்னவன் வரலுங்
குறைவி லன்பினள் பிழையிலள் கண்படை கொள்வா
ளிறையு நீப்பரு மனைவியை யிருள்படு கானி
லறனி மூக்குறு நளனல தியாவரே யகல்வார்.

இ - ள். மறு இல் - களங்கமில்லாத, கற்பினள் - தமயந்தியான வள், மான வேல் - வலிய வேற்படையேந்திய, மன்னவன் - நள மகாராசன், வரலும் - வந்தமாத்திரத்தில், குறைவு இல் - குறைவில் லாத, அன்பினள் - அன்பையுடையவளும், பிழை இலள் - குற்றமில் லாதவளும், கண்படைகொள்வாள் - நித்திரை செய்கின்றவளுமாகிய, இறையும் - இறைப்பொழுதும், நீப்பரும் - நீத்தற்கரிய, மனைவியை -



நளன் தன் சுயருபத்தோடு தமயந்தியைக் கண்ணுற்றதறிந்த வீமன் களித்தலும் இருதுபன்னன் அசுவவித்தையறிந்து போதலும்.

தமயந்தியை, இருள் படு - இருளுண்டாயிருக்கிற, கானில் - வனத்தில், அறன்-தருமமானது, இழுக்குறு-தவறுத, நளன் அலாது-நளனை யல்லாமல், யாவரே - மற்றவர் யார்தாம், அகல்வார்-பிரிந்துவிடுவார்கள், எ - று.

க - து. தமயந்தி நளன் வந்த மாத்திரத்தில் மனைவியை நீக்குபவர் நளனல்லாமல் யார் உளர் என்றாள் என்பதாம்.

அறனிழுக்குறுநளனென்றது வஞ்சப்புகழ்ச்சி. இதனால் வெறுத்தல் தோற்றுகின்றது. (கஅ)

என்று கண்கணீ ரிடையறு தொழுகிட மாசு
துன்று மேனியுந் துணிபடு மாடையு மாகி
நின்ற மாதினை நோக்கின னெட்டுயிர்ப் பெறிந்து
குன்றி ரண்டென வீங்குதோட் கொற்றவன் கூறும்.

இ - ள். என்று - இப்படியாகச் சொல்லி, கண்கள்-கண்களினின்றும், நீர்-நீரானது, இடையறுது-இடைவிடாமல், ஒழுகிட-பெருக, மாசு துன்று - அழுக்கடைந்த, மேனியும்-வடிவத்தவளும், துணி படு - அறுபட்ட, ஆடையும் - ஆடையையுடையவளும், ஆகி - ஆய், நின்ற - (தன்னெதிரில்) நின்ற, மாதினை-தமயந்தியை, நோக்கினன்-பார்த்தவனாய், நெட்டுயிர்ப்பு எறிந்து - பெருமூச்சுவிட்டு, குன்று இரண்டு என - இரண்டு மலைகள்போல், வீங்கு - பூரித்த, தோள்-தோட்களையுடைய, கொற்றவன் - நளமகாராசனானவன், கூறும் - (இவ்வாறு) சொல்லுவான், எ - று.

க - து. என்று கண்ணீர் சொரிய நின்ற தமயந்தியை நளன் கண்டு சொல்வான் என்பதாம். (கக)

அலர்மு லைப்பசுங் கொடியனை யரையிருட் போதிற்
கலிவ யத்தனாய்க் காட்டிடை நீத்தன னின்னை
நலியும் வெங்கலி தணந்தபின் னண்ணின னின்பான்
மெலியன் மீட்டுமோர் சுயம்வரம் வேட்டதென் னென்றான்.

இ - ள். அலர் - பருத்த, முலை - ஸ்தனங்களையுடைய, பசு - பசுமையாகிய, கொடி அனாய் - கொடியையொத்த தமயந்தியே, அரை இருள் போதில்-அர்த்தராத்திரியில், கலி-கலியனுக்கு, வயத்தன் ஆய் - வசப்பட்டவனாகி, காட்டிடை - வனத்தில், நின்னை - உன்னை, நீத்தனன் - விடுத்தேன்; நலியும் - வருத்துகின்ற, வெம் கலி - வெவ்விய கலியன், தணந்தபின் - பிரிந்து சென்ற பின்பு, நின்பால்-உன்னிடத்தில், நண்ணினன் - வந்தடைந்தேன்; மெலியல் - வருந்தாதே; மீட்

பிம் - மறுபடியும், ஓர் சுயம்வரம்-ஒரு சுயம்வரத்தை, வேட்டது-விரும்பியது, என் - யாதுபற்றி, என்றான் - என்று சொன்னான், எ - று.

க - து. தமயந்தியே! சனியனு னுன்னைக் காட்டில் நீக்கினேன், மறுபடிச் சுயம்வரம் விரும்பியதென்ன? என்றான் என்பதாம். (உ0)

நிடதர் கோவினை யயோத்தியி னேடினன் கண்டேன்
படரு றேலென வந்தொரு மறையவன் பகரக்
கடிதி னெய்துவான் மணவினை யிழைத்தனன் கருத்தி
லடிய னேன்றனை யையுறே லெனமொழிந் தழுதாள்.

இ - ள். நிடதர் கோவினை - நளமகாராசனை, நேடினன்-தேடி, அயோத்தியில்-அயோத்தி நகரத்தில், கண்டேன்-பார்த்தேன்; படர் உறேல் - வருத்தப்படாதே, என - என்று, ஒரு மறையவன் - ஒரு பிராமணன், வந்து - இவ்விடத்தில் வந்து, பகர - சொல்ல, கடிதின் சீக்கிரத்தில், எய்துவான்-உன்னைச்சேரும் பொருட்டு, மணவினை சுயம்வரமென்பதை, இழைத்தனன் - செய்தேன்; கருத்தில்-மனதில், அடியனேன்றனை - அடியாளாகிய வென்னை, ஐயுறேல் என - சந்தேகப்படாதேயென்று, மொழிந்து - சொல்லி, அழுதாள் - (தமயந்தி) புலம்பினாள், எ - று.

க - து. தமயந்தி உம்மைக் காணும்பொருட் டிவ்வாறுசெய்தேன், சந்தேகப்படாதே என் றழுதாள் என்பதாம்.

நேடினன் - முற்றெச்சம். (உக)

முன்னை நல்லுருக் காட்டென முற்றிழை மொழியப்
பன்ன கத்திறை யுதவிய பூந்துகில் பரிவான்
மன்ன ரேறனான் புனைதலு மாணுரு வெய்திக்
கன்னல் வேளினுங் கவினலங் கனிந்திட நின்றான்.

இ - ள். முன்னை - பழைய, நல் உரு-நல்ல உருவத்தை, காட்டு என - காட்டுவாயென்று, முற்றிழை - தமயந்தியானவள், மொழிய - சொல்ல, பன்னகத்து இறை - நாகராசனாகிய கார்க்கோடகன், உதவிய - கொடுத்த, பூ துகில் - அழகிய வஸ்திரங்களை, பரிவால் - ஆசையோடு, மன்னர் ஏறு அனான்-இராசசிங்கமாகிய நளமகாராசன், புனைதலும் - தரித்தமாத்திரத்தில், மாண் உரு-மாட்சிமைப்பட்ட வுருவத்தை, எய்தி - அடைந்து, கன்னல் - கருப்புவில்லைத்தரித்த, வேளினும் - மன்மதனைக்காட்டிலும், கவின் - அழகினது, நலம் - நன்மையானது, கனிந்திட - முதிர, நின்றான்-(நளமகாராசன்) இருந்தான், எ - று.

க - து. தமயந்தி முன்னுருவைக் காட்டென, நளன் காட்டினுன் என்பதாம்.

முற்றிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். (உஉ)

நின்ற மன்னனை நிரைவளைக் கைம்மலர் கூப்பி
மன்ற லங்குழன் மடவரல் வணங்கின ணிற்ப
வென்றி வேலுடை விதர்ப்பர்கோன் விளைந்தமை கேட்டுத்
துன்று தன்கிளை மன்னவர் சூழ்வரப் புகுந்தான்.

இ - ள். நின்ற - எதிரில் நின்ற, மன்னனை - நளமகாராசனை, நிரை - வரிசையாயணிந்த, வளை - வளையலையுடைய, கை மலர்-மலர் போன்ற கைகளை, கூப்பி - குவித்து, மன்றல் - வாசனைபொருந்திய, அம் - அழகிய, குழல் - கூந்தலையுடைய, மடவரல்-தமயந்தியானவள், வணங்கினள் - வணங்கி, நிற்ப - இருக்க, வென்றி - வெற்றிபொருந்திய, வேல் உடை - வேலையுடைய, விதர்ப்பர்கோன் - வீமராசனனவன், விளைந்தமை-நடந்தசெய்திகளை, கேட்டு-கேள்வியுற்று, துன்று - நெருங்கிய, தன் - தன்னுடைய, கிளை - பந்துக்களாகிய, மன்னவர் - அரசர்கள், சூழ்வர - சூழ, புகுந்தான் - (அவ்விடம் வந்து) சேர்ந்தான், எ - று.

க - து. நளனைத் தமயந்தி வணங்கி நிற்க வீமராஜன் வந்தான் என்பதாம். (உ௩)

அன்ன காலையி லகலிரு விசும்பிலோர் வாணி
மன்ன கேட்டியிம் மடவர றன்னைமூ வாண்டு
மின்ன லின்றியா மளித்தனஞ் சுயம்வர மென்று
வுன்னை யிவ்வுழிக் கூட்டுதற் கொண்டொடி யிழைத்தாள்.

இ - ள். அன்ன காலையில் - அந்தச்சமயத்தில், அகல்-அகன்ற, இரு - பெருமை பொருந்திய, விசும்பில் - ஆகாயத்தில், ஓர் வாணி - ஒரு அசரீரிவாக்கு, மன்ன - நளமகாராசனே, கேட்டி-கேள்; இ மடவரல் தன்னை - இத்தமயந்தியை, மூ ஆண்டும் - மூன்று வருஷமளவும், இன்னல் இன்றி - தீங்கில்லாமல், யாம் - நாம், அளித்தனம் - இரக்ஷித்தோம்; சுயம்வரம் என்று - சுயம்வரமென்று சொல்லப்பட்டதை, உன்னை - உன்னை, இவ்வுழி - இவ்விடத்தில், கூட்டுதற்கு - சேர்த்தற்கு, ஒள் தொடி - தமயந்தியானவள், இழைத்தாள் - செய்தாள், எ - று.

க-து. அப்பொழுது ஆகாயவாணி, அரசனே! சந்தேகப்படாதே, தமயந்தி உன்னைக் காணுதற்குச் சுயம்வரஞ் செய்தாள் என்பதாம்.

இதுமுதல் இரண்டுகுளகம். (உ௪)

வடபு லத்தினி னோக்குநர் மாசற விளங்குங்
கடவுண் மீனினுந் தொழுதகு கற்பினார்க் கரசாங்
கொடிம ருங்குலை யையுறா தருளெனக் கூர்வே
னிடதர் கோமகன் மகிழ்வுற நிகழ்ந்ததை யன்றே.

இ - ள். வட புலத்தினில் - வடதிசையில், நோக்குநர் - காண்கின்றவராது, மாசு அற - குற்றமற, விளங்கும்-பிரகாசியாநின்ற, கடவுள் மீனினும் - தெய்வத்தன்மையுள்ள அருந்ததியைக் காட்டிலும், தொழுதகு - மேன்மையாகிய, கற்பினார்க்கு - பதிவிரதைகட்கு, அரசாம் - அரசாகிய, கொடி மருங்குலை - தமயந்தியை, ஐயுறாது-சந்தேகியாமல், அருள் என-திருமைசெய்யென்று, கூர் வேல் - கூர்மை பொருந்திய வேலேந்திய, நிடதர்கோமகன் - நளமகாராசன், மகிழ்வு உற - மனக்களிக்க, நிகழ்ந்தது-(ஆகாசவாணி) உண்டாயிற்று, எ-று. ஐ, அன்று, ஏ - அசைகள்.

க-து. அருந்ததிக்கு மேலான கற்புள்ளவளைச் சந்தேகப்படாமல் திருமைசெய்யென அவ்வசரீரி வாக்குப் பிறந்தது என்பதாம்.

அரசு - பண்பாகுபெயர். கொடிமருங்குல் - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (உரு)

தமர வேலையி னந்தர துந்துமி தழங்க
வமரர் யாவரும் பூமழை பொழிந்துநின் றார்த்தா
ருமிழ்செ ழுங்கதிர் மணிமுடி வீமனு முவந்தான்
குமர னன்னவன் கோல்வளைத் தோளியை யடைந்தான்.

இ - ள். தமரம் - பேரொலியையுடைய, வேலையின்-சமுத்திரம் போல, அந்தரம் - ஆகாசத்தில், துந்துமி - துந்துமி வாத்தியமானது, தழங்க - சத்திக்க, அமரர் யாவரும் - தேவர்களனைவரும், பூ மழை - புஷ்ப வருஷத்தை, பொழிந்து - சொரிந்து, நின்று - நிலைபெற்று, ஆர்த்தார் - துதித்தார்கள்; உமிழ் - கக்கப்பட்ட, செழு - செழுமையாகிய, கதிர் - கிரணங்களையுடைய, மணி முடி - ரத்தின கிரீடத்தையுடைய, வீமனும் - வீமராசனும், உவந்தான்-சந்தோஷித்தான்; குமரன் அன்னவன் - முருகனையொத்த நளமகாராசன், கோல் வளை - அழகிய வளையலையணிந்த, தோளியை-புயத்தையுடைய தமயந்தியை, அடைந்தான் - சேர்ந்தான், எ - று.

க - து. அந்தரதுந்துபி சத்திக்கத் தேவர்கள் பூமாரி பெய்து துதித்தார்கள், வீமன்மகிழ்ந்தான், தமயந்தியை நளனடைந்தான் என்பதாம்.

கோலவளை கோல்வளையென ஈறுதொகுத்தலாயிற்று. (உசு)

மண்க ளித்தது மாதிரங் களித்தன மலர்மேற்
பெண்க ளித்தனள் பேரறங் களித்தன கண்டோர்
கண்க ளித்தன களித்தன கலைவலோர் நெஞ்சம்
விண்க ளித்தன களித்தது வீமன்மா நகரம்.

இ - ள். மண் - பூமியானது, களித்தது-களிப்புற்றது; மாதிரம் - மலைகள், களித்தன - களிப்புற்றன; மலர்மேல் பெண்-இலக்ஷுமி, களித்தனள் - களிப்புற்றனள்; பேர் அறம் - மகத்தான தருமங்கள், களித்தன - களிப்புற்றன; கண்டோர் - பார்த்தவர்களது, கண்-நேத்திரங்கள், களித்தன - களிப்புற்றன; கலை வலோர் - வித்துவான்களுடைய, நெஞ்சம் - மனங்கள், களித்தன - களிப்புற்றன; விண்-விண்ணுலகங்கள், களித்தன - களிப்புற்றன; வீமன் - வீமராசனது, மா - பெரிய, நகரம் - பட்டணமானது, களித்தது - களிப்புற்றது, எ-று.

க - து. சராசரங்களெல்லா மகிழ்ந்தன என்பதாம். (உஎ)

உருவ வொண்கழ னிடதர்கோன் வெளிப்பட லோரா
விருது பன்னனங் கறிந்தபி னவனுழை யெய்தி
யரச நின்னையா னறிந்திடா தியற்றிய வனைத்துந்
திருவு ளங்கொளா தருளெனச் சேவடி தொழுதான்.

இ - ள். உருவம் - அழகையுடைய, ஒள் கழல்-ஒளிபொருந்திய வீரக்கழலையணிந்த, நிடதர்கோன் - நளமகாராசன், வெளிப்படல் - (மறைவினின்றும்) வெளிப்பட்டதை, ஓரா - ஆராய்ந்து, இருதுபன்னன் - இருதுபன்னவரசன், ஆங்கு-அந்நகரத்தில், அறிந்தபின்-தெரிந்துகொண்ட பின்பு, அவனுழை எய்தி - அந்நளனிடத்து வந்து, அரச - நளமகாராசனே, நின்னை - உன்னை, யான் - நான், அறிந்திடாது - அறியாமல், இயற்றிய அனைத்தும் - செய்த குற்றங்களனைத்தையும், திருவுளம் கொளாது-மனத்திற் கொள்ளாமல், அருள் என-கிருபைசெய்ய வேண்டுமென்று, சேவடி - சிவந்த பாதங்களில், தொழுதான் - வணங்கினன், எ - று.

க - து. இருதுபன்னன் நளனிடத்திற் சேர்ந்து யான்செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டுமென்றான் என்பதாம்.

ஓரா-செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகாலவினையெச்சம். ()

செய்ய தாடொழு மன்னனைச் செங்கையாற் றழுவிக்
கொய்யு ளைப்பரி யுளமறி விஞ்சையுங் கொடுத்து
மையின் மாமதி முகமலர்ந் தின்னுரை வழங்கி
யைய னேவவவ் வரசனு மயோத்திநா டடைந்தான்.

இ - ள். செய்ய தாள் தொழும் - சிவந்த பாதத்தில் வணங்கிய, மன்னனை - இருதுபன்னராசனை, செம் கையால் - சிவந்த கைகளால், தழுவி - அணைத்துக்கொண்டு, கொய்யுளை-கொய்து கட்டிய புறமயிரினையுடைய, பரி - குதிரைகளினது, உளம் - மனதை, அறி - அறிவிக்கின்ற, விஞ்சையும் - வித்தையையும், கொடுத்து - உபதேசித்து, மை இல் - களங்கமில்லாத, மா - பெருமைதங்கிய, மதி-சந்திரன்போன்ற, முகம் மலர்ந்து - முகமலர்ச்சி யடைந்து, இன் உரை - இனிய சொற்களை, வழங்கி - சொல்லி, ஐயன் - நளமகாராசன், ஏவ-விடைகொடுக்க, அ அரசனும் - அவ்விருதுபன்ன ராசனும், அயோத்தி நாடு - அயோத்திதேசத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ - று.

க - நு. இருதுபன்னனை நளன்தழுவிக் குதிரை மனமறியும் வித்தையையுங் கொடுத்து விடைகொடுக்க, அவ்விருதுபன்னன் அயோத்தி நகரத்தைச் சேர்ந்தான் என்பதாம். (உக)

தேவியைக்கண்ணுற்ற படலம் முற்றிற்று.

# அரசாட்சிப்படலம்.

[இப்படலத்தால் நளன் தமயந்தியை யடைந்தபின்பு
அவளோடு தனது நிடததேசத்திற் சென்று
புட்கரனை வென்று அரசாட்சி செய்தல்
சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

கொங்குண் வார்குழற் கொம்மைவெம் முலைநலம் பருகித்
திங்க ளொன்றவ ணிருந்தபின் றெண்டிரை யுடுத்த
வங்கண் மாநிலம் புரந்திடு மாமனோ டாய்ந்து
பொங்கு தானையோ டெழுந்தனன் புலவுவேற் குரிசில்.

இ - ள். புலவு — புலால் நாற்றம் நாறுகின்ற, வேல் - வேலையுடைய, குரிசில் - நளமகாராசனனவன், கொங்குண் - வாசனைபொருந்திய, வார் - நீண்ட, குழல் - கூந்தலையும், கொம்மை-திரட்சிபொருந்திய, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலை - ஸ்தனங்களையுமுடைய தமயந்தியினது, நலம் - இன்பத்தை, பருகி-அனுபவித்து, திங்கள் ஒன்று - ஒருமாதம், அவண் - அக்குண்டினபுரத்தில், இருந்தபின் - வாசஞ்செய்தபின்பு, தெள் திரை - தெளிவாகிய அலைகளையுடைய கடலை, உடுத்த — ஆடையாக வுடுத்த, அம் கண் - அழகிய விடத்தையுடைய, மா - பெரிய, நிலம் - பூமியை, புரந்திடும் - ரட்சியாநின்ற, மாமனோடு - மாமனாகிய வீமராசனோடு, ஆய்ந்து - ஆலோசித்து, பொங்கு - பிரகாசியாநின்ற, தானையோடு - சேனையோடு, எழுந்தனன் - பிரயாணப்பட்டான், எ — று.

க — து. நளன் ஒருமாதம் குண்டினபுரத்திலிருந்து சேனையோடு புறப்பட்டான் என்பதாம். (௧)

மழைமு தக்களி யானையுங் கலினவாம் பரியுஞ்
செழும ணித்தடந் தேர்களும் வயவருஞ் செறிய
வெழுக டற்புவி மன்னரு மிறைஞ்சினர் செல்ல
வழுலு யிர்க்கும்வே லரசனு நிடதநா டடைந்தான்.

இ - ள். மழை - மழைபோன்ற, மதம் - மதசலத்தையும், களி - களிப்பையுமுடைய, யானையும் - யானைகளும், கவினம் - கடிவாளத்தையுடைய, வாம் - தாவுகின்ற, பரியும் - குதிரைகளும், செழு - செழித்த, மணி - ரத்தினங்களிழைத்த, தடம் - விசாலமாகிய, தேர்களும் - ரதங்களும், வயவரும் - படைவீரர்களும், செறிய - நெருங்கவும், எழு கடல் - ஏழு சமுத்திரங்கள் சூழ்ந்த, புவி - சப்ததீபங்களிலுள்ள, மன்னரும் - அரசர்களும், இறைஞ்சினர் - வணங்கினவராகி, செல்ல - நடக்கவும், அழல் உயிர்க்கும் - அக்கினியைக் கக்காநின்ற, வேல் - வேலையுடைய, அரசனும் - நளனும், நிடதநாடு - நிடததேசத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ - று.

க - து. நளமகாராஜன் நிடததேயத்தைச் சேர்ந்தான் என்பதாம். (உ)

மூதெ யிற்புறத் திறுத்தபின் மொய்யமர் தொடங்கப்
போதல் செய்கவெம் போர்த்தொழிற் கஞ்சினை யாகிற்
காத லிற்கவ றுடுவான் வருகெனக் கழறித்
தூது போக்கினன் புட்கரன் றனக்குவேற் றோன்றல்.

இ - ள். மூது - பழைய, எயில் புறத்து-மதிலினது புறத்திலே, இறுத்தபின் - இறங்கிய பின்பு, மொய் - நெருங்கிய, அமர்-போரை, தொடங்க - ஆரம்பிக்க, போதல் செய்க - வருவாயாக; வெம்-வெவ்விய, போர் தொழிற்கு - யுத்தச்செய்கைக்கு, அஞ்சினையாகில்-பயப்படுவையேயானால், காதலின்-ஆசையோடு, கவறு ஆடுவான் - சூதாடுதற்கு, வருக - வருவாயாக, என - என்று, கழறி-சொல்லி, புட்கரன் தனக்கு - புட்கரராசனுக்கு, வேல்-வேலையுடைய, தோன்றல்-நளன், தூது - தூதரை, போக்கினன் - விடுத்தான், எ - று.

க - து. நளமகாராஜன், போர்செய்ய வருவாயாகிற் போருக்கு வருக, போர்செய்ய வஞ்சுவையாகிற் சூதாடவருக என்று புட்கரனுக்குத் தூதுவிட்டான் என்பதாம். (ங)

போய தூதுவர் புட்கரற் கித்திறம் புகல
வாயுங் கேள்விநா லமைச்சொடும் வேறிருந் தாய்ந்து
காயும் போரினில் வேறன்மற் றரிதெனக் கருதி
மாய வெங்கவ றுடுவான் வருகென விடுத்தான்.

இ - ள். போய தூதுவர் - (நளனிடத்தினின்றும்)போன தூதுவர், புட்கரற்கு - புட்கரனுக்கு, இத்திறம் - இவ்விதங்களை, புகல -

சொல்ல, ஆயும் - ஆராய்ச்சிசெய்யத் தகுந்த, கேள்வி - கேள்வியை யும், நூல் - தரும சாஸ்திரத்தையுமுடைய, அமைச்சொடும்-மந்திரி யோடும், வேறு இருந்து - தனியே யிருந்து, ஆய்ந்து - ஆலோசித்து, காயும் - கொல்லும், போரினில் - யுத்தத்தில், வேறல் - வெல்லுதல், அரிது என - அரியதென்று, கருதி - நினைத்து, மாயம்-வஞ்சனையோ டுங்கூடிய, வெம் - வெவ்விய, கவறு ஆடுவான்-சூதாடுவதற்கு, வருக என - வருவாயாகவென்று சொல்லி, விடுத்தான் - அனுப்பினான், எ - று.

க - நு. தூதுவர் புட்கரனுக்கு இச்செய்தியைச் சொல்ல, புட் கரன் நளனைச் சூதாட வரச்சொன்னான் என்பதாம்.

அமைச்சு - பண்பாகுபெயர். (௪)

விட்ட தூதுவ ருரைத்தசொற் கேட்டலும் விரிந்து
மட்டு லாந்தொடை மார்பினன் மாநக ரெய்திக்
கட்டு வார்கழற் புட்கர கவறுநா மாடற்
கொட்டம் யாதென வுரைத்தன னுலங்கெழு தோளான்.

இ - ள். விட்ட தூதுவர் - அனுப்பப்பட்ட தூதர்கள், உரைத்த சொல் - சொல்லிய சொற்களை, கேட்டலும் - கேட்டமாத்திரத்தில், விரிந்து - மலர்ந்து, மட்டு உலாம் - தேனொழுகுகின்ற, தொடை - மாலையையணிந்த, மார்பினன் - மார்பையுடைய நளன், மா-பெரிய, நகர் - பட்டணத்தில், எய்தி-அடைந்து, கட்டு-கட்டப்பட்ட, வார் - நீண்ட, கழல் - வீரக்கழலையுடைய, புட்கர-புட்கரனே, கவறு-சூதை, நாம் ஆடற்கு - நாமாடுவதற்கு, ஒட்டம் யாது என - பந்தயம் யாதெ ன்று கேட்க, உலம் கெழு தோளான் - திரள்கல்லையொத்த தோள் களையுடைய வரசன், உரைத்தனன் - சொன்னான், எ - று.

க - து. நளன் பட்டினத்தில் வந்து, புட்கரனே! சூதாடுதற்குப் பந்தயம் யாதெனச் சொன்னான் என்பதாம். (௫)

வயிர வாட்படை மன்னவர் மன்னநீ தோற்பின்
முயலி லாமதி பூத்திடு முழுநெறிக் குவளை
யயர நீண்டகட் டேவியை யளித்தியான் றோற்பி
னுயிரி னோடுநின் னுலகெலாந் தருவனென் றுரைத்தான்.

இ - ள். வயிரம்-கூர்மைபொருந்திய, வாள் படை - வாளாயுதத் தையுடைய, மன்னவர் மன்ன - அரசர்க்கரசனாகிய நளமகாராசனே, நீ தோற்பின் - நீ தோற்றால், முயல் இலா - முயற்கறை யொழிந்த

மதி - சந்திரனிடத்தில், பூத்திடும் - புஷ்பித்த, முழு செறி - முழு செறிப்பையுடைய, குவளை - நீலோற்பலங்கள், அயர - சோர்வை யடைய, நீண்ட கண்-நீண்ட கண்களையுடைய, தேவியை - தமயந்தி யை, அளித்தி - கொடு; யான் தோற்பின் - நான் தோற்றால், உயிரி னோடு - என்னுயிரோடு, நின் உலகு எலாம்-உனது உலகமுழுவதை யும், தருவன் என்று-கொடுப்பேனென்று, உரைத்தான்-சொன்னான், எ - று.

க - து. புட்கரன், நளனே! நீ தோற்றால் உன் பெண்சாதியைக் கொடு, நான் தோற்றால் என்னுயிரோடு உன்னுலகமெல்லாங் கொடு ப்பே னென்றான் என்பதாம். (சு)

அன்ன வாறியைந் தாடலும் புட்கரன் றோற்ப
மன்ன முன்னநீ வென்றதுங் கொடுங்கலி வயத்தா
னின்ன தாருயிர் நேர்ந்தன னெம்பிபா தலினா
றென்ன கர்க்கினி தேகெனப் பணித்தனன் றோன்றல்.

இ - ள். அன்னவாறு - அத்தன்மையாகவே, இயைந்து - சம் மதித்து, ஆடலும் - ஆடுமளவில், புட்கரன்-புட்கரராசன், தோற்ப - தோற்க, மன்ன - புட்கரராசனே, முன்னம் - முன்பு, நீ-நீ, வென் றதும் - செயித்ததும், கொடு - கொடிய, கலி வயத்தால் - கலியினது வசத்தினால் (அன்றி வேறல்ல), எம்பி ஆதலினால் - தம்பியாகையி னாலே, நின்னது - உன்னுடைய, ஆர் - நிறைந்த, உயிர் - உயிரை, நேர்ந்தனன் - கொடுத்தேன்; தொல் நகர்க்கு - பழமையாகிய உனது நகரத்திற்கு, இனிது - இனிதாக, ஏகு என - போவென்று, தோன் றல் - நளன், பணித்தனன் - ஆக்கியாபித்தான், எ - று.

க - து. புட்கரன் தோற்க, நளமகாராஜன் வென்றான். நளனுத் தரவால் புட்கரன் தன்னூருக்குப் போனான் என்பதாம். (எ)

பணிதலைக்கொடு புட்கரன் போதலும் பன்னூற்
கணிதர் சொற்றநல் லோரையிற் கடிநக ரெய்தி
யணிபொ லன்கழன் மன்னவன் விதர்ப்பர்கோ னளித்த
மணிசெய் மேகலை வாணுதற் கொற்றரை விடுத்தான்.

இ - ள். பணி - அந்தவாக்கினையை, தலை கொடு - சிரசின்மீது கொண்டு, புட்கரன் - புட்கரராசன், போதலும் - போயினபின், பல் நூல்-அநேக சாஸ்திரங்களை யுணர்ந்த, கணிதர்-சோதிஷர்களாலே, சொற்ற - சொல்லப்பட்ட, நல் ஓரையில் - நல்லலக்கினத்தில், கடி -

காவலையுடைய, நகர் - பட்டணத்தை, எய்தி-அடைந்து, அணி-அணியப்பட்ட, பொலன் - பொன்னினாற் செய்யப்பட்ட,கழல்-வீரக்கழலையுடைய, மன்னவன் - நளன், விதர்ப்பர் கோன் அளித்த-வீமராசன் பெற்ற, மணி செய் - இரத்நங்களாற் செய்யப்பட்ட, மேகலை-மேகலாபரணத்தையுடைய,வாள் நுதற்கு-ஒளிபொருந்தியநெற்றியையுடைய தமயந்திக்கு, ஒற்றரை - வேவுகாரரை, விடுத்தான் - அனுப்பினான், எ - று.

க - து. நளன் தன்னகரை யடைந்து தமயந்திக்குத் தூதரை விட்டான் என்பதாம். (அ)

ஒற்ற ரேகியவ் விதர்ப்பர்கோன் றன்னுழை யுரைப்ப
வற்ற மில்லென வருபொரு ளாங்கவர்க் களித்துக்
கற்றை வார்குழன் மதர்நெடுங் கண்ணியைக் கணிதர்
சொற்ற வோரையில் விடுத்தனன் றோன்றன்மா நகரில்.

இ - ள். ஒற்றர் - வேவுகாரர், ஏகி - போய், அ விதர்ப்பர் கோன் தன்னுழை - அவ்வீமராசனிடத்தில், உரைப்ப - சொல்ல, அற்றம் இல்லென - மிகுதியான, அரு - அரிய, பொருள் - பொருளை, ஆங்கு - அவ்விடத்தில், அவர்க்கு - அவர்களுக்கு, அளித்து - கொடுத்து, கற்றை - கூட்டமாகிய, வார் - நீண்ட, குழல் - கூந்தலையும், மதர் - மதர்த்த, நெடு - நெடிய, கண்ணியை - கண்களையுமுடைய தமயந்தியை, கணிதர் - சோதிஷர்கள், சொற்ற - சொல்லிய, ஓரையில் - சமயத்தில், தோன்றல் - வீமராசன், மா - பெரிய, நகரில் - நளனது பட்டணத்தில், விடுத்தனன் - விட்டான், எ - று.

க - து. வீமராஜன் தன்மகளை நளமகாராஜன் மாவிந்தமாநகருக் கனுப்பினான் என்பதாம். (க)

வெள்ளத் தானையு மகளிருஞ் சூழ்வர வேந்த
னுள்ளத் தாமரை மலருறை யோடரிக் கண்ணாள்
வள்ளத் தாமரைப் பொகுட்டின்மேல் வண்டுகண் படுக்கு
மள்ளற் றீம்புனற் கழனிசூழ் நிடதநா டடைந்தாள்.

இ - ள். வெள்ளம் தானையும் - பிரவாகம்போன்ற சேனையும், மகளிரும் - மாதர்களும், சூழ் வர - சூழ்ந்து வரும்படி, வேந்தன் - நளமகாராசனது, உள்ளம் - மனமாகிய, தாமரை மலர்-தாமரைப்பூவில், உறை - வாசஞ்செய்கின்ற, ஓடு அரி-செவ்வரிபரந்த,கண்ணாள்-கண்களையுடைய தமயந்தியானவள், வள்ளம் - கிண்ணம்போன்ற,

தாமரை பொகுட்டின்மேல் - தாமரை மலரின்கர்ணிகையில், வண்டு- வண்டுகள், கண் படுக்கும் - நித்திரை செய்யாநின்ற, அள்ளல் - சேற்றையும், தீம் புனல் - மதுரமான சலத்தையுமுடைய, கழனி - வயல்களால், சூழ் - சூழப்பட்ட, நிடதநாடு - நிடதேசத்தை, அடைந்தாள் - சேர்ந்தாள், எ - று.

க - து. தமயந்தி நிடதநாட்டைச் சேர்ந்தாள் என்பதாம். (கo)

நவ்வி நோக்கியர் சூழ்வர நகைநிலா வெறிக்குங்
கொவ்வை வாய்மலர்ப் பூங்குழற் குவிமுலை மடந்தை
தெய்வ நாண்மலர்த் தவிசிழி திருமக ளென்ன
வெவ்வ மில்லதோ ரெரிமணிச் சிவிகைநின் றிழிந்தாள்.

இ - ள். நவ்வி - மான்போன்ற, நோக்கியர் - பார்வையையுடைய மங்கையர், சூழ்வர - சூழ்ந்துவர, நகை - பற்கள், நிலா - நிலாவைப்போல, எறிக்கும் - பிரகாசிக்கின்ற, கொவ்வை - விம்பம்போன்ற, வாய் - அதரத்தையும், மலர் - புஷ்பத்தையுடைய, பூ - அழகிய, குழல் - கூந்தலையும், குவி - குவிந்த, முலை - ஸ்தனங்களையுமுடைய, மடந்தை - தமயந்தியானவள், தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, நாள் - அன்றலர்ந்த, மலர் தவிசு - புஷ்பாசனத்தினின்றும், இழி - இழிகின்ற, திருமகள் என்ன - இலச்குமிபோல், எவ்வம் இல்லது - குற்றமில்லாததாகிய, ஓர் - ஒரு, எரி - பிரகாசிக்கின்ற, மணி சிவிகை நின்று - இரத்நத்தண்டிகையினின்றும், இழிந்தாள் - இறங்கினாள், எ - று.

க - து. தமயந்தி இரத்நச்சிவிகையிலிருந் திழிந்தாள் என்பதாம்.

கொவ்வை - பொருளாகுபெயர். (கக)

பருதி வானவ னெதிர்தலும் பனியிதழ் விரிந்த
முருகு லாநறுந் தாமரை போன்முக மலரா
வருகு நுண்ணிடை யின்னுயிர்க் காதல னம்பொற்
றிருவ நாண்மலர்ச் சேவடி சென்னியிற் றொழுதாள்.

இ - ள். பருதிவானவன் - சூரியனானவன், எதிர்தலும் - தோன்றினவளவில், பனி இதழ் - குளிர்ச்சிபொருந்திய விதழ்கள், விரிந்த - மலர்ந்த, முருகு உலாம் - வாசனை வீசுகின்ற, நறு - நல்ல, தாமரை போல் - தாமரை மலர்போல, முகம் மலரா - முகமலர்ச்சியடைந்து, அருகு - சிறுத்த, நுண் இடை - நுட்பமான விடையையுடைய தம

யந்தி, இன் உயிர் - இனியவுயிர்போன்ற, காதலன் - கணவனாகிய நளனது, அம் - அழகிய, பொன் - பொன்போன்ற, திருவ - செல்வத்தையுடைய, நாள் - புதிய, மலர் சேவடி - தாமரை மலர்போன்ற பாதங்களை, சென்னியின் - சிரசினால், தொழுதாள் - வணங்கினாள், எ - று.

க - து. தமயந்தி நளன்பாதத்தை வணங்கினாள் என்பதாம்.

மலரா - செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (கஉ)

தொழுத மங்கையைச் சுடர்மணித் தடக்கையா லெடுத்துக்
கொழுதி வண்டினங் கூட்டுணுந் தெரியறாழ் மார்பி
னுழுது வெம்முலை குங்குமச் சேற்றிடை யொளிப்பத்
தழுவி னானவ டேம்பிய வின்னுயிர் தளிர்த்தாள்.

இ - ள். தொழுத - வணங்கிய, மங்கையை-தமயந்தியை, சுடர் மணி - பிரகாசம்பொருந்திய ஆபரணத்தை யுடைய, தடம் - நீண்ட, கையால் - கரங்களால், எடுத்து - எடுத்து, கொழுதி - கோதி, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், கூட்டு உணும் - கொள்ளை கொள்கின்ற, தெரியல் - மாலையானது, தாழ் - தொங்குகின்ற, மார்பின் - மார்பினிடத்திலே, உழுது - உழுது, வெம் - விருப்பத்தைத் தருகின்ற, முலை - ஸ்தனங்கள், குங்குமம் சேற்றிடை-குங்குமச் சேற்றில், ஒளிப்ப - ஒளிக்கும்படி, தழுவினான் - ஆலிங்கனஞ் செய்தான்; அவள் - அந்தத் தமயந்தி, தேம்பிய - மெலிந்த, இன் உயிர் - இனியவுயிர், தளிர்த்தாள் - துளிர்த்தாள், எ - று.

க - து. நளன் தமயந்தியைக் கையாலெடுத்து மார்பிலணைத்துத் தழுவினான் என்பதாம். (கங)

திருந்து மாமணிச் செய்குன் றுந் தெளிபுனற் றடமும்
விருந்து வேனிலாற் கெதிரிய விரைமலர்க் காவும்
முருந்து வாணகை முகிழ்முலை மடந்தையோ டாடிப்
பொருந்த விண்ணிடைப் போகமுண் டுவந்தனர் போன்றான்.

இ - ள். திருந்து - திருத்தமாகிய, மா - பெரிய, மணி - இரத்நங்கள்பதித்த, செய்குன்றம் - விளையாட்டு மலைகளிடத்தும், தெளி - தெளிந்த, புனல் - சலத்தையுடைய, தடமும் - வாவிகளிடத்தும், விருந்து - விருந்தாக, வேனிலாற்கு - மன்மதனுக்கு, எதிரிய - தோன்றிய, விரை - வாசனையையுடைய, மலர் - புஷ்பங்களையுடைய,

காவும் - சோலைகளிடத்தும், முருந்து - மயிலிறகினடியை யொத்த, வாள் - ஒளிபொருந்திய, நகை-பற்களையும், முகிழ் - கோங்கரும்பை யொத்த, முலை - தனங்களையுமுடைய, மடந்தையோடு - தமயந்தி யுடனே, ஆடி - விளையாடி, பொருந்த - அமைய, விண்ணிடை - தெய்வலோகத்தில், போகம் - இன்பத்தை, உண்டு - அனுபவித்து, உவந்தனர் - மகிழ்ந்தவர்களை, போன்றான் - ஒத்திருந்தான். எ - று.

க - து. நளன் தமயந்தியோடு புணர்ந்து இந்திரபோக மனுபவித்தவரை ஒப்பானென் என்பதாம். (கரு)

ஆழி சூழ்புவி முழுவது மாழியொன் றுருட்டி
வாழி நல்லறம் புரிந்தரு மகம்பல வாற்றிச்
சூழி மால்வரைப் பிடருறு சுமையொழித் தாறப்
பாழி யம்புயத் துலகெலாம் பரித்தினி திருந்தான்.

இ - ள். ஆழி சூழ் - சமுத்திரஞ் சூழ்ந்த, புவி முழுவதும - பூமி முழுமையும், ஆழி ஒன்று - ஏகசக்ரத்தை, உருட்டி - நடத்தி, நல் அறம் - நல்ல தருமத்தை, புரிந்து - செய்து, அரும் - செய்தற்கரிய, மகம் பல-பலயாகங்களை, ஆற்றி-செய்து, சூழி-முகபடாமணிந்த, மால் - பெரிய, வரை - மலையையொத்த எட்டுத்திக்கு யானைகளும், பிடர் - பிடரியிற்றங்கிய, உறு - மிகுந்த, சுமை - பூமிபாரத்தை, ஒழித்து - நீக்கி, ஆற - இளைப்பாறும்படி, பாழி - வலிபொருந்திய, அம் - அழகிய, புயத்து - தோளினிடத்தில், உலகு எலாம் - உலக முழுவதையும், பரித்து - தாங்கி, இனிது - இனிதாக, இருந்தான் - நளமகாராசனிருந்தான், எ - று. வாழி - அசை.

க - து. நளச்சக்கிரவர்த்தி, நற்றருமங்களையும், யாகாதி கருமங்களையுஞ் செய்து, உலகமெல்லாம் ஒருகுடையிலாண்டு இன்பமடைந்திருந்தான் என்பதாம். (கசு)

அரசாட்சிப்படலம் முற்றுப்பெற்றது.

ஆக படலம் 28-க்கு, (பாயிரமுள்பட) செய்யுள் 1173.

## நைடதம் மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.

உ

சிவமயம்.

# நைடதம்

## செய்யுள் முதற்குறிப் பகராதி.

நைடதம் செய்யுள் முதற்குறிப்பகராதி

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# நைடதச் செய்யுட்களில் வரும்

# அணிகளின் அகராதி.

நைடதச் செய்யுட்களில் வரும்

அணிகளின் அகராதி முற்றிற்று.

நைடதச் செய்யுட்களின்

# யாப்பிலக்கணம்.

| பெயர். | பக்கம். | செய்யுள். | இலக்கணம். |
|---|---|---|---|
| ஆசிரிய விருத்தம். | 1 | 1 | பெரும்பாலு முதற்சீரும் நான்காஞ் சீரும் விளச் சீர்களும், மற்றை நான்கு மாச்சீர்களுமாகிய வடிகளால் வந்த ஆசிரிய விருத்தம். |
| | 3 | 1 | பெரும்பாலு மீற்றுச்சீர்க ளிரண்டு மாச்சீர்களு மற்றைநான்குங் காய்ச் சீர்களுமாகிய வடிகளால்வந்த ஆசிரியவிருத்தம். |
| | 222 | 108 | பெரும்பாலு மூன்றுஞ்சீரும் ஆறுஞ் சீரும் காய்ச்சீர்களும், மற்றை நான்குசீர்களு மாச்சீர்களுமாகி வருகிற அறுசீர்க்கழிநெடிலடி நான்கு கொண்ட ஆசிரியவிருத்தம். |
| | 122 | 1 | பெரும்பாலு முதற்சீரு மூன்றுஞ்சீரு மைந்தாஞ்சீரு மாறுஞ்சீரும் விளச் சீர்களும், மற்றவை மூன்றும் மாச் சீர்களுமாகி வருகிற எழுசீர்க்கழி நெடிலடி நான்குகொண்ட ஆசிரிய விருத்தம். |
| | 245 | 1 | பெரும்பாலும் ஈற்றுச்சீர்விளச்சீரும், ஏனைச்சீர்கள் மாச்சீர்களுமாகி வருகிற எழுசீர்க்கழி நெடிலடி நான்கு கொண்ட ஆசிரியவிருத்தம். |
| கலித்துறை. | 184 | 64 | பெரும்பாலும் இடையிலொரு புளிமாங்கனிச் சீரும் ஏனைய நான்கு மாச்சீர்களுமாகி வருகிற நெடிலடி நான்குகொண்ட கலித்துறை. |

| பெயர். | பக்கம். | செய்யுள். | இலக்கணம். |
|---|---|---|---|
| கலிநிலைத்துறை. | 768 | 1 | பெரும்பாலு முதற்சீரு மீற்றுச்சீரு மாச்சீர்களும் மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய வடிகளால் வந்த கலிநிலைத்துறை. |
| கலிவிருத்தம். | 39 | 18 | பெரும்பாலும் கடைச்சீர் மாச்சீரும், மற்றை மூன்று சீர்களும் விளங்காய்ச்சீர்களுமாகி வருகிற அளவடிகணான்குகொண்ட கலிவிருத்தம். |
| | 53 | 38 | பெரும்பாலு மூன்றுஞ்சீர் மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகி வருகிற அளவடிகள் நான்குகொண்ட கலிவிருத்தம். |
| | 171 | 45 | பெரும்பாலு முதற்சீர் புளிமாச்சீரேனுந் தேமாச்சீரேனும் பெற்று, மற்றை மூன்றும் புளிமாச்சீர்களாகி வருகிற அளவடி நான்குகொண்ட கலிவிருத்தம். |
| கொச்சகக் கலிப்பா. | 200 | 84 | பெரும்பாலும் காய்ச்சீர் நான்குபெற்றுக் கலித்தளைமிக்கு வருகிற அளவடி நான்குகொண்ட தரவுகொச்சகக்கலிப்பா. |

இவைபோல் மற்றும் வருவனவற்றிற்குங்கோள்க.

நைடதச் செய்யுட்களின்

யாப்பிலக்கணம் முற்றிற்று.